# மகாத்மா காந்தி

## நூல்கள்

முதல் தொகுப்பு



*முதல் பதிப்பு : 19, செப்டம்பர், 1957*
*இரண்டாம் பதிப்பு : மார்ச், 1961*
*மூன்றும் பதிப்பு : செப்டம்பர், 1962*
*நான்காம் பதிப்பு : மே, 1965*

[ இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள மகாத்மா காந்தியின் நூல்களுக்கு நவஜீவன் டிரஸ்ட் அனுமதி பெறப்பட்டிருக்கிறது.]



விலை ரூ. 7-50

மாணிக்கம் பிரஸ், அமைந்தகரை, சென்னை - 29



படம் உதவியவர் : A. அருணாசலம்

வாழ்விக்க வந்த காந்தி
மஹாத்மா! நீ வாழ்க!! வாழ்க!!!
—பாரதியார்.

# மகாத்மா காந்தி நூல்கள்

## 1

மகாத்மா காந்தி எழுதிய 'தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்'
'இந்திய சுயராஜ்யம்' ஆகிய இரு நூல்களையும், தென்னுப்
பிரிக்க சத்தியாக்கிரகம் பற்றி மகாத்மா எழுதிய
கட்டுரைகள், செய்த சொற்பொழிவுகள்,
அவருடைய சிறை அனுபவங்கள்,
சிறையிலிருந்து எழுதிய கடிதங்
கள் ஆகியவற்றையும்
கொண்டது.

வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை-2

# காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்

[ தமிழ்நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில் ]

# பதிப்புரை

இன்றைய இந்தியாவை உண்டாக்கியவர் மகாத்மா காந்தி அடிகள். அவருக்கு முன் தோன்றிய ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் முதலியோர் இந்தியாவின் புதிய வாழ்க்கைக்கு நாட்டைப் பக்குவப்படுத்தினர்கள். விவேகானந்த சுவாமிகள் நாடு முழுவதும் கால்நடையாகச் சுற்றி, மக்களின் வறுமையைக்கண்டு கதறிக் கண்ணீர் விட்டார். மகத்தான உணர்ச்சிப்பெருக்கால் தூண்டப்பெற்று, இளைஞர்களைச் சேவைக்கு வரும்படி அறைகூவி அழைத்தார்: 'வறுமையினாலும், மூடநம்பிக்கைகளின் கொடுமையினாலும், கொடுங்கோன்மையினாலும் நசுக்கப்பட்ட நம் நாட்டிலிருக்கும் மக்களுக்காக நாம் ஒவ்வொருவரும் இரவும் பகலும் பிரார்த்தனை செய்வோமாக. தரித்திரத்திலும் அறியாமையிலும் ஆழ்ந்திருக்கும் இக்கோடிக் கணக்கான மக்களுக்காக யார் இரங்குகிறார்கள்? யாரொருவர் ஏழை மக்களின் பொருட்டு நெஞ்சு புண்ணாக வருந்துகிறாரோ அவரை மகாத்மாவென நான் மதிப்பேன். அவர்களுக்காக யாரே வருந்துகிறார்கள்! அவர்கள் ஞானத்தையோ, கல்வியையோ பெற முடியவில்லை. வீடு வீடாகச் சென்று, அவர்களுக்குக் கல்வி புகட்ட முற்படுவோர் யார்? இவ்வேழை மக்களை உங்கள் தெய்வமெனக் கொள்ளுங்கள். அவர்களைப் பற்றியே சிந்தனை செய்யுங்கள்; அவர்களுக்காகவே உழையுங்கள்; அவர்களுக்காகவே பிரார்த்தனை செய்யுங்கள். ஈசுவரன் உங்களுக்கு வழிகாட்டுவானாக!'

இந்த மனம் கசிந்த பிரார்த்தனையின் உருவமாகவே மகாத்மா காந்தி அடிகள் தோன்றியது போல் தென்படுகிறது. காந்தி அடிகள் ஏழை மக்களின் பரிதாப நிலைமையை அல்லும் பகலும் நினைத்து உருகினார். தம் அனைத்தையும் அவர்கள் முன்னேற்றத்திற்காகத் தத்தம் செய்தார். அவர்களுக்கு உழைப்பதற்காகத் தேகம், சுகம் அனைத்தையும் தியாகம் செய்தார். இந்த உணர்ச்சியிலிருந்து அவர் மனத்தில் எல்லை இல்லாத வேகமும், சக்தியும், தூய்மையும் பிறந்தன. சுமார் ஐம்பது ஆண்டுகள் வேறு நினைவின்றி, ஊண் உறக்கமின்றி, நாடு முழுவதும் சுற்றி மக்களைத் தட்டி எழுப்பினார். படித்தவர்கள் இவர் போக்கைக்கண்டு எள்ளி நகையாடினார்கள். பிரிட்டிஷ் அரசாங்கமும், அதன் பின் நின்றவர்களும், இவர் என்ன செய்ய முடியும் என்று கேலி செய்தார்கள். ஆனால்,

இந்தியாவின் மூலே முடுக்கிலிருந்த கோடிக்கணக்கான ஏழை மக்கள் அவரைப் பின்பற்றினுர்கள். இளேஞர்கள் அவருடைய தூய்மையாலும் உணர்ச்சியாலும் உந்தப்பட்டு, அவர் ஆரம்பித்த இயக்கங்களில் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தார்கள். இதன் மூலம் புது இந்தியா உருவெடுத்தது. நம் மேல் கவிந்து நம்மைப் பலவீனப்படுத்திக்கொண்டிருந்த பயம், சிறைக்குப் பயம், அதிகாரத்திற்கும் அவர்கள் கொடுத்த தண்டனேக்கும் பயம், பணக்காரர்களிடத்திலும் கொடுமை செய்பவர்களிடத்திலும் பயம் முதலியன ஒவ்வொன்ருக விலகின. இந்தியா புது உருப்பெற்றது. இந்திய மக்கள் புதியதோர் ஆண்மையையும் சக்தியையும் பெற்றனர். பாரத நாடு இன்று சுதந்திரம் பெற்று, உலகில் மகத்தானதொரு தேசமாக விளங்குகிறதெனில், அந்தப் பெருமை மகாத்மா காந்தி அடிகளேயே சார்ந்ததாகும்.

அவர் இப்பொழுது நம் மத்தியிலிருந்து மறைந்து சுமார் பத்து ஆண்டுகள் ஆகின்றன. நமக்கு வழிகாட்டியாக இருக்க அவர் ஸ்தூலத்தில் நம்முடன் இல்லே. ஆனல், அவர் சொன்ன வாக்குகள், அவர் பேசிய பேச்சுக்கள், எழுதிய எழுத்துக்கள் கஷ்டங்களின் மத்தியிலும் ஒரு பெரிய ஏகாதிபத்தியத்தின் பலத்தையும் பொருட்படுத்தாமல் அவர் சொன்ன ஆண்மை மொழிகள் நமக்கு வழிகாட்டிகளாக இருக்கின்றன. அவை உலகம் உள்ள வரையில், ஏழை மக்களுக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் வெளிச்சம் தருவனவாக இருக்கும். அன்பு நெறியையும் உண்மை மார்க்கத்தையும் பின்பற்ற என்றும் ஊன்றுகோலாக இருக்கும்.

மகாத்மாஜி காலமாவதற்குச் சில வாரங்களுக்கு முன்பு அவருடன் நெருங்கியிருந்தவர்கள் அவரிடம் சென்று, நீங்கள் மறைந்துவிட்டால் நாங்கள் என்ன செய்வோம் என்று அழுது முறையிட்டார்கள். அதற்கு அவர், “நான் இறப்பதைப் பற்றி நீங்கள் கவலேப்படக்கூடாது. நான் இவ்வுலகை நீத்தால் அதை எனக்கு விடுதலேயென ஏற்று நீங்கள் மகிழ வேண்டும். ஆனல், உங்களுக்குச் சொல்ல வேண்டியது ஒன்றுண்டு. எனக்கு நீங்கள் செய்ய வேண்டிய கடமையை உணர வேண்டும். எனக்காகக் கோயில்கள் கட்டவேண்டாம், குளங்கள் வெட்ட வேண்டாம், சாலேகள் அமைக்க வேண்டாம், சிலேகளும் வைக்க வேண்டாம். என் கொள்கைகளே மனத்தில் வைத்து, அவைகளேப் பின்பற்றுங்கள். என் கொள்கைகள் மூலம்தான் நான்

வாழ்கிறேன். அதை மாத்திரம் செய்வீர்களானால், என்பால் மகத்தான அன்பைச் செய்தவர்களாவீர்கள்" என்று உரைத் தருளினர்.

அவர் அவ்வப்போது எழுதிய எழுத்துக்களும் சொன்ன வார்த்தைகளும் நிறைந்த சக்தியுள்ளன. இன்றும், என்றும் அதைப் படிப்போர் மனத்தில் எழுச்சியையும், சக்தியையும், தூய்மையான கருத்துக்களையும் உண்டாக்க வல்லன. இவை, அவர் நமக்கும் உலகிற்கும் கொடுத்த அழியாப் பொக்கிஷம். இவைகளைத் தமிழில் வெளியிடுவது தமிழ் நாட்டிற்கும் தமிழ் மக்களுக்கும் சிறந்த சேவையாகும். காந்தி நினைவு நிதி மன்றத்தார் உதவியாலும், விசேடமாக அதன் தமிழ்நாட்டுக் கிளையின் காரியதரிசியும், சிறந்த தேச பக்தரும், காந்தி பக்தருமான ஸ்ரீ நா. ம. ரா. சுப்பராமன் அவர்களுடைய பேரன்பாலும் இது சாத்தியமாயிற்று.

இதற்காகக் காந்தி நிதியின் தமிழ்நாட்டுக் கிளையின் சார்பில் ஒரு கமிட்டி அமைக்கப்பெற்றது. இவ்வேலையைத் திறம்படச் செய்ய ஸ்ரீ ரா. வேங்கடராஜுலு ஆசிரியர் வேலையை ஏற்றிருக்கிறார். சென்னை சர்க்கார் இதற்கு அலுவலகமாகத் தங்கள் மவுண்ட்ரோடு எஸ்டேட்டில் பழைய கவர்னர் மாளிகையில் இடம் கொடுத்து உதவியிருக்கிறார்கள். இன்னும் எல்லாவிதங்களிலும் இப்பணிக்கு உதவிய அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். காந்தி வாழ்ந்தபோதும் தமிழ் நாடும் தமிழ் மக்களும் அவர் கொள்கைகளில் பெரிதும் ஈடுபட்டுப் பின்பற்றினர்கள். அவருக்குத் தமிழ் மக்கள்பாலிருந்த அன்பு பெரிது. அவர் மறைந்த பிறகு அவர் நூல்களையெல்லாம் திரட்டி வெளியிட தமிழ்நாடே முதலில் முன் வந்திருக்கிறது. இவற்றைச் சுமார் எண்ணூறு பக்கங்கள் கொண்ட பதினைந்து தொகுதிகளில் பொருத்தமான தலைப்புக்களில் வெளியிடத் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது.

மக்கள் சேவைக்கு மகாத்மா காந்தி முதன்முதலில் தம்மை அர்ப்பணம் செய்துகொண்டது தென்னாப்பிரிக்காவில். உலகத்திற்கே ஒரு புதுமையானதான சத்தியாக்கிரக அகிம்சைப் போர் முறையை அவர் கண்டுபிடித்ததும் தென்னாப்பிரிக்காவிலேயே. இந்தியா அடையவேண்டிய சுதந்திரம் இன்னது, அதை அடைவது எவ்விதம் என்பதைப் பற்றிய காந்திஜியின் கருத்து உருவானதும் அங்கேயேயாகும். பின் இந்தியாவில் மகாத்மா நடத்திய விடுதலைப் போராட்டத்திற்கும், கல்வி, பொருளாதாரம்,

சமூக சீர்திருத்தம் போன்றவைகளில் அவர் ஆற்றிய சேவைக்கும் அடிப்படையாக இருந்தது தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரக அனுபவமே. இந்தியாவுக்கு வேண்டிய சுயராஜ்யம் எது, அதை அடைவதற்குச் சரியான வழி என்ன என்பதைக் குறித்து மகாத்மா 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூல் மூலமே 1909-இல் முதன்முதல் தமது கருத்தை வெளியிட்டார். ஆகையால், காந் தீய தத்துவங்களான சத்தியம், அகிம்சை, சத்தியாக்கிரகம் ஆகிய முறைகள் பிறந்த விதத்தை அறிய இந்நூல் மிக முக்கியம். இதை முன்னிட்டே மகாத்மா எழுதிய 'தென்னுப்பிரிக்க சத்தி யாக்கிரகம்', 'இந்திய சுயராஜ்யம்' ஆகிய இரு நூல்களும், அவற் றைச் சேர்ந்த கடிதங்கள், கட்டுரைகள் முதலானவையும் முதல் தொகுப்பாக வெளிவருகின்றன.

இந்நூல்களில் வரும் சம்பவங்கள், பெயர்கள், இடங்கள் முதலியன இக்கால வாசகர்களுக்கு விளங்க உதவியாக இருக் கும் பொருட்டு வேண்டிய இடங்களில் ஆங்காங்கே அடிக்குறிப்பு களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல்களைத் தமிழில் வெளியிடும் உரிமையை எங்களுக்கு அளித்திருக்கும் நவஜீவன் புத்தக வெளியீட்டு நிலையத்தினருக்கு எங்கள் மனமுவந்த நன்றி யைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இந்நூலில் உள்ள படங் களைச் சேகரிப்பதில் உதவியளித்த ஸ்ரீ ஸி. கே. நாராயணசாமி அவர்களுக்கும், இப்படங்களைக் கொடுத்து உதவிய புதுடெல்லி காந்தி ஸ்மாரக் சங்கிரகாலயத்தினருக்கும், இந்திய சர்க்கார் செய்தி இலாகாவுக்கும் எங்கள் நன்றி. பலரும் வாங்கிப் பயன் படுத்த உதவியாக இருக்கும் பொருட்டு அடக்க விலைக்கே இந் நூலை விற்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இவ்வெளியீடு தமிழ் நாட்டு மக்களின் எதிர்கால வளர்ச் சிக்குப் பெரிதும் பயன்படுமென்று நம்புகிறோம். தமிழ் அன்னை இதை ஏற்று அருள்வாளாக. தமிழ் மக்களும் தங்கள் வழக்கமான உதாரகுணத்துடன் இதை அன்புடன் வரவேற்றுப் பயன்படுத் திக் கொள்ளுவார்களாக.

சென்னை, —தி. சு. அவினாசிலிங்கம்
15, செப்டம்பர், 1957

# பொருளடக்கம்



## தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்



## இரண்டாவது பகுதி

## தென்னுப்பிரிக்கா பற்றி மகாத்மா காந்தியின் பேச்சுக்கள், கட்டுரைகள்

## 'ஹிந்த் ஸ்வராஜ்' அல்லது இந்திய சுயராஜ்யம்

## பின் சேர்க்கைப் பகுதி

# படங்களின் விளக்கம்

# தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :

தி. சு. அவினுசிலிங்கம்
நா. ம. ரா. சுப்பராமன்
டாக்டர் ராஜம்மாள் தேவதாஸ்

# முகவுரை

தென்னுப்பிரிக்காவில் இந்திய மக்களது சத்தியாக்கிரகப் போர் எட்டு வருடங்கள் நடந்தது. சத்தியாக்கிரகம் என்ற சொல் அதையொட்டி உண்டாக்கி உபயோகப்படுத்தப்பட்டது. அந்தப் போரின் சரித்திரத்தை நானே எழுத வேண்டுமென்ற விருப்பம் எனக்கு வெகு நாட்களாக இருந்தது. சில விஷயங்களை நான்தான் எழுத முடியும். போரை நடத்தும் தளகர்த்தனுக்குத்தான் ஒவ்வொரு குறிப்பிட்ட செய்கையின் நோக்கமும் தெரியும். சத்தியாக்கிரகத் தத்துவம் ராஜீயத் துறையில் பெரிய அளவில் இப்பொழுதுதான் முதன்முதல் கையாளப்பட்டதாகையால், இத்தத்துவத்தின் வளர்ச்சியைப் பற்றிப் பொதுமக்கள் அறிய வேண்டியது மிகவும் அவசியம்.

ஆனல், இன்று இந்தியாவில் சத்தியாக்கிரகத்தை அனுஷ்டிப்பதற்கு அதிக வாய்ப்பு இருந்து வருகிறது. வீரம்காம்* மாத்திரமே சம்பந்தப்பட்ட சுங்க வரி விஷயத்தில் தொடங்கித் தவிர்க்க முடியாத பல போராட்டங்கள் தொடர்ச்சியாக நடந்துவருகின்றன.

பொதுநல உணர்ச்சிமிக்க வத்வான் தையற்காரரான பாய் மோதிலால் மூலமே எனக்கு வீரம்காம் விஷயத்தில் அக்கறை உண்டாயிற்று. நான் அப்பொழுதுதான் இங்கிலாந்திலிருந்து வந்து சௌராஷ்டிரத்திற்குப் போய்க்கொண்டிருந்தேன். அது *1915*-ஆம் வருடத்தில், நான் மூன்ரும் வகுப்பில் பிரயாணம் செய்தேன். வத்வான் † ஸ்டேஷனில் மோதிலால் சிலருடன் என்னிடம் வந்தார். வீரம்காம் மக்களுக்கு இழைக்கப்பட்டு வந்த துன்பங்களின் சில விவரங்களை உரைத்துவிட்டு, அவர் சொன்னதாவது: "இக்கஷ்டங்களை நீக்குவதற்குத் தயை செய்து ஏதாவது செய்யுங்கள். இதன்மூலம் தாங்கள் பிறந்த நாடாகிய சௌராஷ்டிரத்துக்கு நீங்கள் பெரிய சேவை செய்ததாகும்." அவர் கண்களில் இரக்கமும், திடமும் தென்பட்டன.

"நீங்கள் சிறைக்குப் போகத் தயாராயிருக்கிறீர்களா?" என்று நான் கேட்டேன்.

---

* அகமதாபாத்திலிருந்து 40 மைல் மேற்கிலுள்ளதோர் ஊர்.

† வீரம்காமுக்கு 40 மைல் மேற்கில் உள்ள இடம்.

"தூக்குமரத்திற்கும் போகத் தயாராயிருக்கிறோம்" என்று உடனே பதில் வந்தது.

"சிறையே எனக்குப் போதுமானது. என்னை மத்தியில் கைவிட்டு விடாமல் பார்த்துக்கொள்ளுங்கள்" என்று நான் சொன்னேன்.

"காலந்தான் அதை நிரூபிக்கும்" என்றார் மோதிலால்.

நான் ராஜ்கோட்*டிற்குப் போய் முழு விவரங்களையும் அறிந்து அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து ஆரம்பித்தேன். பகஸ்ராவிலும் மற்ற இடங்களிலும் செய்த பிரசங்கங்களில், அவசியமானால் வீரம்காமில் சத்தியாக்கிரகம் செய்ய மக்கள் தயாராயிருக்க வேண்டுமெனக் குறிப்பிட்டேன். ராஜ விசுவாசமுள்ள ரகசியப் போலீசார், இந்தப் பிரசங்கங்களை அரசாங்கத்திற்கு அறிவித்தனர். இதில் அவர்கள் அரசாங்கத்திற்குச் சேவை செய்ததுடன் தங்களையும் அறியாமல் பொது மக்களுக்கும் சேவை செய்தனர். கடைசியில் லார்டு செம்ஸ்போர்டு†டன் இதைக் குறித்துப் பேசினேன். அவர் இச்சுங்கவரியை எடுத்து விடுவதாகச் சொன்னார். அப்படியே செய்தார். இதற்காக மற்றவர்களும் முயற்சி செய்தார்களென்று எனக்குத் தெரியும். ஆனால், இப்பரிகாரம் கிடைத்ததற்கு முக்கிய காரணம், இதற்காக நிச்சயமாய்ச் சத்தியாக்கிரகம் நடக்கக்கூடும் என்பதேயாகும். இதுவே என் திடமான அபிப்பிராயம்.

இதற்குப் பிறகு இந்தியக் குடியேற்றச் சட்டம் வந்தது. ஒப்பந்தத் தொழிலாளர் முறை ரத்து ஆவதற்குப் பெரும் முயற்சிகள் செய்யப்பட்டன. பொதுமக்கள் கிளர்ச்சியும் அதிகமாக இருந்தது. பம்பாயில் நடந்த கூட்டத்தில், ஒப்பந்த முறை 1917-ஆம் வருடம் மே மாதம் 31-ஆந் தேதியிலிருந்து நிறுத்தப்பட்டு ஆக வேண்டுமென நிர்ணயிக்கப்பட்டது. குறிப்பாய் அந்தத் தேதி எப்படித் தீர்மானிக்கப்பட்டது என்பதைப்பற்றிச் சொல்வதற்கு இது இடமல்ல. இது சம்பந்தமாகப் பெண்கள் பிரதிநிதிக் கூட்டம் ஒன்று வைசிராயைக் கண்டது. அந்தத் தூய சிந்தை வாய்ந்த ஸ்ரீமதி ஜாயிஜீ பெடிட் அவர்கள் பெயரை இங்கே சொல்லாமலிருக்க முடியவில்லை. அவர்கள்தாம் அக்கூட்டத்தை ஏற்பாடு செய்ததாகச் சொல்லலாம். இங்குங்கூடச் சத்தியாக்கிரகத்திற்

* சௌராஷ்டிரத்திலுள்ள ஒரு பட்டணம்.

† லார்டு செம்ஸ்போர்டு, 1916 முதல் 1921-ம் ஆண்டு வரை இந்தியாவில் பிரிட்டிஷ் வைசிராயாக இருந்தார். இவருடைய ஆட்சியிலேயே மாண்டேகு—செம்ஸ்போர்டு அரசியல் சீர்திருத்தம் உருவாயிற்று.

குத் தயாராயிருந்ததனாலேயே வெற்றி உண்டாயிற்று. ஆனால், இதில் பொதுக் கிளர்ச்சியும் அவசியமாயிருந்தது என்பது ஞாபகத்தில் வைக்கத் தக்கது; ஒப்பந்த முறையை நிறுத்தியது, வீரம்காம் சுங்கவரி ரத்தைவிட மிகவும் முக்கியமானது. ரௌலட் சட்டம்* நிறைவேற்றப்பட்டதிலிருந்து லார்டு செம்ஸ் போர்டு தொடர்ச்சியாகப் பல தவறுகளைச் செய்தார். எனினும் அவர் விவேகமுள்ள அதிகாரி என்றே நினைக்கிறேன். ஆனால், எந்த வைசிராய்தான் சிவில் சர்வீஸ் உத்தியோகஸ்தர்களின் வசத்துக்கு உட்படாமல் அதிக காலம் இருந்துவிட முடியும்?†

மூன்றாவதாக, சம்பாரண்‡ போராட்டம் வந்தது. ராஜேந்திர பாபு இதைப்பற்றிய விவரமான வரலாற்றை எழுதியிருக்கிறார்.

---

* ரௌலட் சட்டம்—1919-ல் பிரிட்டிஷ் நீதிபதி ரௌலட் என்பவரின் தலைமையில் நியமிக்கப்பட்ட கமிட்டியின் அறிக்கை செய்த சிபாரிசின் பேரில் தயாரான சட்டங்களாகையால் அவற்றிற்கு ரௌலட் சட்டங்கள் என்று பெயர் வந்தது. முதல் யுத்த காலத்தில் பிரிட்டிஷார் அளித்த வாக்குறுதிகளெல்லாம் நிறைவேற்றப்படாததனால் இந்திய மக்களிடையே விழிப்பும் கொதிப்பும் மிகுந்து இருந்ததால் இந்தியரை வாய் திறக்க விடாமல் செய்வதற்கு வந்த அடக்குமுறைச் சட்டங்களே இவை. இந்த அக்கிரம மசோதாக்கள் 1919 பிப்ரவரியில் முதன் முதல் வெளியாயின. இவற்றில் ஒன்று தாற்காலிகமானது. யுத்த சமாதானமானதும் யுத்த காலத்திலிருந்த இந்திய பாதுகாப்புச் சட்டங்களெல்லாம் ரத்தாகி விடுவதால் ஏற்படக்கூடிய நிலைமையைச் சமாளிப்பதற்கென்று வந்தது அது. இரண்டாவது மசோதா, நாட்டின் கிரிமினல் சட்டத்தில் நிரந்தரமான மாறுதலைச் செய்துவிட வந்தது. பிரசுரிக்க அல்லது விநியோகிக்க என்ற எண்ணத்தின் பேரில் ராஜத்துவேஷமான தஸ்தாவேஜுகளை வைத்திருந்தாலும் போதும். அதைச் சிறைத் தண்டனை அனுபவிக்க வேண்டிய குற்றமாக்குவது இந்த இரண்டாவது மசோதா. இம்மசோதாக்கள் 1919 பிப்ரவரி 6-ந் தேதி இம்பீரியல் சட்டசபை முன்பு கொண்டுவரப்பட்டன. அச்சமயம்தான் மகாத்மா நோய்க்குப் பிறகு அகமதாபாத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார். அப்பொழுதே ரௌலட் கமிட்டி அறிக்கையை அவர் படித்தார். உடனே பக்கத்திலிருந்த ஸ்ரீ வல்லபபாய் பட்டேலிடம், "இச்சட்டங்களை எதிர்க்கும் பிரதிக்ஞையில் கையெழுத்திட ஒரு சிலர் கிடைத்தால், எந்த எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் இம்மசோதாக்கள் சட்டமாக நிறைவேற்றப்படுமானால், உடனே நாம் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க வேண்டும். நான் இவ்விதம் நோயுற்றுக் கிடக்காமலிருந்தால், அதை எதிர்த்து நான் ஒருவனே போராடி மற்றவர்கள் என்னைப் பின்பற்றட்டும் என்றிருப்பேன்" என்றார் மகாத்மா.

இம்பீரியல் சட்டசபையில் தேர்தல் மூலம் வந்த இந்திய மெம்பர்கள் பலமாக எதிர்த்தும் 1919 மார்ச்சில் கிரிமினல் சட்ட (அவசர அதிகார) மசோதா நிறைவேறியது. இரண்டாவது மசோதா மார்ச் 18-ந் தேதி சட்டமாகப் பிரசுரிக்கப்பட்டது.

† இதைப்பற்றி அப்பொழுது மகாத்மா மற்றோரிடத்தில் குறிப்பிடுகையில், "ஆட்சியை நடத்துவோரிடம் நோய் அதிக ஆழத்தில் புகுந்துவிட்டது என்பதற்குச் சந்தேகத்திற் கிடமில்லாததோர் அறிகுறியே இது" என்றார்.

‡ பீஹாரில் வடமேற்குப்புறமாக உள்ளதோர் ஜில்லா. அவுரி சாகுபடிக்குப் பெயர் போனது. வெள்ளைக்கார அவுரித் தோட்ட முதலாளிகளிடம் விவசாயிகள் அதிகத் தொல்லைகளையும் துன்பங்களையும் அனுபவித்து வந்தனர். 1917-ம் ஆண்டு காந்திஜி இங்கே சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்தி விவசாயிகள் கஷ்டத்தைப் போக்கினார்.

இங்கே சத்தியாக்கிரகத்தைச் செய்தே காட்ட வேண்டியிருந் தது. சக்தி வாய்ந்த பாத்தியதைதாரர்கள் எதிர்த்து நின்ற படியால், சத்தியாக்கிரகத்திற்குத் தயாராயிருந்தது மாத்திரம் போதுமானதாயில்லை. சம்பாரண் மக்கள் காட்டிய அமைதி, சரித்திரத்தில் பதியத் தக்கது. தலைவர்கள் திரிகரண சுத்தி யாய் அகிம்சையைப் பின்பற்றியதற்கு நானே சாட்சி. அத னால்தான் இந்த நெடுநாளைய அநீதி ஆறு மாதங்களில் ஒழிந்தது.

அகமதாபாத் மில் தொழிலாளர்களுடைய போராட்டம் நான்காவதாகும். இதன் வரலாறு கூர்ஜரத்திற்கு நன்ருகத் தெரியும். தொழிலாளர்கள் எவ்வளவு அமைதியாக இருந்தார் கள்! தலைவர்களைப் பற்றியோ, நான் ஒன்றுமே சொல்ல வேண் டியதில்லை. எனினும், இதில் ஏற்பட்ட வெற்றி முற்றிலும் பரி சுத்தமானது என்று நான் நினைக்கவில்லை. ஏனெனில், தொழி லாளர் தங்கள் உறுதியில் தளராமல் இருக்கும்படிச் செய்ய நான் மேற்கொண்ட உண்ணுவிரதம் மில் முதலாளிகளை மறைமுகமாக வற்புறுத்துவதாயிற்று. நான் அவர்கள் நட்புறவைப் பெற்றிருந்த படியால், உண்ணுவிரதம் நிச்சயமாய் அவர்களைப் பாதித்திருக் கும். ஆனாலும், இப்போராட்டத்தின் நியாயம் வெளிப்படை யானது. தொழிலாளர்கள் அமைதியான முறையில் போராட் டத்தை நடத்தினல் வெற்றி பெறுவதுடன் தங்கள் முதலாளி களுடைய உள்ளத்தையும் கவரவேண்டும். அவர்கள் திரிகரணங் களிலும் சுத்தமாயில்லாததால் தங்கள் முதலாளிகள் உள்ளத் தைக் கவரவில்லை. நடைமுறையில் அகிம்சையோடிருந்தார்கள் என்ற பெருமை அவர்களுக்கு நிச்சயமாக உண்டு.

ஐந்தாவது, கேடா*வில் நடந்த போராட்டம். சத்தியாக் கிரகத்தில் ஈடுபட்ட அவ்வூர்த் தலைவர்கள் யாவரும் இவ்விஷ யத்தில் பரிசுத்தமாக உண்மையைக் கடைப்பிடித்தார்களென்று நான் சொல்ல முடியாது. நிச்சயமாக அமைதி நிலவியது. மில் தொழிலாளர்களைப் போல் இக்குடியானவர்களின் அகிம்சை யும் மேலெழுந்தவாரியாகவே இருந்தது. ஆதலால் இப்போரி லிருந்து கௌரவத்துடன் மாத்திரம் வெளிவந்தோம். ஆயினும் மக்களிடையே விழிப்பு ஏற்பட்டது. கேடா ஜனங்கள் அகிம்சைத் தத்துவத்தை முழுதும் புரிந்துகொள்ளவில்லை; மில் தொழி லாளர்கள் அமைதியின் உண்மைப் பொருளை உணரவில்லை; ஆதலால் அவர்கள் கஷ்டப்பட நேரிட்டது. ரௌலட் சட்ட சத்தியாக்கிரக சமயத்தில் நான் என் பெருந் தவற்றை ஒப்

* குஜராத்தில் ஒரு ஜில்லா. இங்கே 1918-ல் கடும் பஞ்சம் ஏற்பட்டது.

புக்கொண்டு, நானும் உபவாசமிருந்து மற்றவர்களையும் அப்படிச் செய்யச் சொல்ல வேண்டியதாயிற்று.

ஆருவது போராட்டம் ரௌலட் சட்ட சம்பந்தமானது. அதில் நம்முள்ளிருந்த குறைகள் வெளிப்பட்டன. ஆனல், ஆரம்ப அடிப்படை பலமாகப் போடப்பட்டுவிட்டது. நாம் நம் குறைகளை ஒப்புக்கொண்டு அவைகளுக்காகப் பிராயச்சித்தம் செய்தோம். ரௌலட் சட்டம் வெளிப்பட்டபோதே அது உயிரற்றதா யிருந்தது; கடைசியில் அக்கொடிய சட்டம் ரத்து செய்யப் பட்டது. இப்போராட்டம் நமக்கு ஒரு பெரிய பாடத்தைக் கற்றுக் கொடுத்தது.

ஏழாவது, கிலாபத்*, பஞ்சாப் அநீதிகளுக்காகவும், சுயராஜ்யம் பெறுவதற்காகவும் ஆரம்பிக்கப்பட்ட போராட்டம். அது இன் னும் நடந்துகொண்டு இருக்கிறது. ஒரு தனிச் சத்தியாக்கிரகி யேனும் கடைசிவரைப் போரைத் தொடர்ந்து நடத்துவாரா ஞல் வெற்றி நிச்சயம் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை யிருக்கிறது.

ஆனல், இன்றைய போராட்டம் ஒரு தரும யுத்தத்தின் தன்மையைக் கொண்டது. நாம் அறியாமலே அதற்குத் தயா ரான வகையை முன்னேயே நான் சொல்லி யிருக்கிறேன். வீரம் காம் பிரச்னையை நான் எடுத்துக்கொண்டபொழுது, மற்றப் போர்கள் பின்னல் வருமென்று எனக்குத் தெரியாது. வீரம் காமைப்பற்றியும் தென்னப்பிரிக்காவில் இருக்கும்போது எனக்கு ஒன்றுமே தெரியாது. அதுதான் சத்தியாக்கிரகத்திற்குள்ள அழகு. அது தானகவே ஒருவனிடம் வருகிறது. அவன் அதைத் தேடிச் செல்ல வேண்டியதில்லை. அது, அத்தத்துவத்திற்கே இயல்பாக இருக்கும் ஒரு குணமாகும். அது, மறைப்பதற்கு

---

* கிலாபத்—முதல் உலக யுத்த முடிவில் 1918-ல் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தத்தில் துருக்கியின் சுல்தான கலிபாவின் மத சம்பந்தமான அதிகாரங்களைக் குறைக்கும் யோசனைகள் இருந்தன. இது இந்திய முஸ்லிம்களுக்கு அதிக ஆத்திரத்தை மூட்டியது. இக்காரியம் தங்களுடைய மதத்திற்கே எதிரானது என்றும், பிரிட்டிஷ் சர்க்கார் அளித்த வாக்குறுதியை மீறிய செய்கையாகும் என்றும் முஸ்லிம்கள் கருதினர். இதில் நியாயத் தைக் கோருவதற்காக மௌலான முகம்மது அலியின் தலைமையில் முஸ்லிம்களின் தூது கோஷ்டியொன்று இங்கிலாந்து சென்று பிரிட்டிஷ் சர்க்காரிடம் முறையிட்டது. அப் பொழுது பிரதம மந்திரியாக இருந்த லாயிட் ஜார்ஜ், 1917 மார்ச் 17-ந் தேதி அத்தூது கோஷ்டிக்குப் பதிலளிக்கையில், துருக்கி தனது மத சம்பந்தமான அதிகாரத்தைத் துருக்கி நாட்டின் மீது செலுத்த அனுமதிக்க முடியுமேயன்றி துருக்கியல்லாத மற்ற நாடுகள் மீதும் செலுத்த அனுமதிக்க முடியாது என்ருர். இந்தப் பதில் முஸ்லிம்களி டையே ஆத்திரத்தை அதிகரித்தது. இதன் பயனக இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அப்பொழுது ஒன்றுபட்டுப் போராட்டத்தில் ஈடுபட்டனர். இதுவே கிலாபத் போராட்டம் எனப்பட்டது.

ரகசியங்கள் ஒன்றுமில்லாமல், சூழ்ச்சிக்கும் பொய்க்கும் இட மில்லாமல், தேடாமலே வரும் அறப்போர். சமயப்பற்றுள் ளவன் அதற்கு எப்போதும் தயாராயிருக்கிறான். முன்னதாகவே திட்டம் போட்டுத் தொடங்கும் ஒரு போர், அறப்போர் ஆகாது. அறப்போரில் கடவுள் தாமாகவே திட்டம் போட்டுச் சண்டைகளை நடத்துகிறார். கடவுளின் பேரால்தான் ஓர் அறப் போர் செய்ய முடியும். ஒரு சத்தியாக்கிரகி தனக்கு வேறு கதி யில்லை என்று உணர்ந்து, ஓர் அடிகூட மேலே எடுத்துவைக்க முடியாதவனாய், நான்கு திசைகளிலும் காரிருள் சூழ்ந்திருப்பதாக அவனுக்குத் தோன்றும் சமயந்தான், கடவுள் அவன் துணைக்கு வருகிறார். காலின் தூசுக்கும் எளியவன் என்று தன்னை நினைப்பவனுக்கே கடவுள் உதவி புரிகிறார். பலவீனமானவர் களுக்கும் உதவியற்றவர்களுக்குந்தான் இறைவன் உதவி கிடைக்கும்.

இவ்வுண்மையை நாம் இன்னும் கண்டறிய வேண்டியிருக் கின்றது. ஆதலால், தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகத்தின் சரித்திரம் நமக்கு உதவியாய் இருக்குமென நினைக்கிறேன்.

நமது இன்றைய போராட்டத்தில் நமக்கு இந்நாள் வரை கிடைத்திருக்கும் அனுபவங்களுக்குச் சமமாகச் சொல்லக்கூடி யவை தென்னாப்பிரிக்க சரித்திரத்திலும் இருப்பதை வாசகர்கள் காணலாம். இப்போது நடந்துகொண்டிருக்கும் போரில் சோர் வடைவதற்கு இதுவரை யாதொரு காரணமுமில்லை என்பதும் இச்சரித்திரத்திலிருந்து வாசகர்களுக்குத் தெரியவரும். விடாப் பிடியுடன் நமது திட்டத்தைப் பின்பற்றுவதே வெற்றி பெறுவ தற்கு அவசியமானதாகும்.

இம் முகவுரையை நான் ஜுஹூ*வில் எழுதுகிறேன். இச் சரித்திரத்தின் முதல் முப்பது அத்தியாயங்களை எராவ்டா † சிறை யில் எழுதினேன். நான் சொல்ல, ஸ்ரீ இந்துலால் யாக்ஞிக் அதை அன்புடன் எழுதினார். பின்வரும் அத்தியாயங்களை இனிமேல் எழுத நினைக்கிறேன். சிறையில் ஆதாரத்திற்கு வேண்டிய நூல்கள் எவையும் என்னிடமில்லை. அவற்றை இங்கே கொண்டு வருவதாகவும் உத்தேசமில்லை; ஒரு நீண்ட சரித்திரம் எழுதுவதற்கு எனக்கு அவகாசமுமில்லை; மனமுமில்லை. நம் முடைய இப்போதைய போராட்டத்திற்கு உதவியாயிருக்கும்

---

* பம்பாயைச் சேர்ந்த கடற்கரையோரமான இடம்.

† பூனாவுக்கு அருகில் உள்ளது. தமிழில் எரவாடா என வழக்கிலுமிருக்கிறது.

பொருட்டும், சரித்திராசிரியர்களுக்கு வழிகாட்டியாய் பின்னர் இருக்கும் என்றுமே நான் இந்நூலை எழுதுகிறேன். ஆதாரத்திற்கான நூல்கள் இல்லாமல் எழுதியதனுலே, ஒரு விஷயத்திலாவது தவருகவோ அல்லது மிகைப்படுத்தியோ இதில் சொல்லப்பட்டிருக்கிறதென வாசகர்கள் நினைக்கவேண்டாம்.

ஜுஹு,
*24-4-1924.* **மோ. க. காந்தி**

## முதல் அத்தியாயம்

# இயற்கை வளம்

உலகத்திலுள்ள மிகப் பெரிய கண்டங்களில் ஆப்பிரிக்கா ஒன்று. இந்தியா ஒரு தேசமல்ல, அது ஒரு கண்டமெனச் சொல்லப்படுகிறது. ஆனல், ஆப்பிரிக்காவின் பரப்பை மாத்திரம் கவனித்தால் நான்கு அல்லது ஐந்து இந்தியாக்களை அதிலிருந்து உண்டாக்கலாம். இந்தியாவைப் போல் ஆப்பிரிக்காவும் ஒரு தீபகற்பம். எனவே, தென்னுப்பிரிக்கா மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டிருக்கிறது. ஆப்பிரிக்கா, உலகில் மிகுந்த உஷ்ணமான பகுதியிலிருப்பதாகச் சாதாரணமாக ஓர் எண்ணம் நிலவுகிறது. ஒரு விதத்தில் இது உண்மையே. பூமியின் மத்திய ரேகை ஆப்பிரிக்காவின் மையத்தில் செல்லுகிறது. இந்தியாவி லிருப்பவர்கள், மத்தியரேகை செல்லும் பிரதேசங்களின் வெம் மையை அறியமாட்டார்கள். இந்தியாவின் தென்கோடியில் நாம் அனுபவிக்கும் உஷ்ணம், மத்தியரேகைக்குப் பக்கத்திலிருக்கும் உஷ்ணத்தின் அளவை ஒருவாறு தெரிவிக்கிறது. ஆனல், தென் னுப்பிரிக்காவில் இம்மாதிரி ஒன்றுமில்லை. ஏனெனில், அது மத்திய ரேகையிலிருந்து வெகு தூரத்திலிருக்கிறது. அதன் பல பாகங்களின் தட்ப வெப்ப நிலை ஐரோப்பியர்களும் சௌகரிய மாகக் குடியேறத் தக்கவாறு சுகாதாரமுடையதாகவும், மித மாகவும் இருக்கிறது. ஆனல், இந்தியாவில் அவர்கள் குடியேறு வது என்பது கஷ்ட சாத்தியம். தவிர, திபெத் அல்லது காஷ்மீர் போன்ற உயர்ந்த பீடபூமிகளும் அங்கே இருக்கின் றன. அவை திபெத் மாதிரி பத்து அல்லது பதினுலாயிரம் அடி உயரமில்லை. ஆதலால், வானிலை வறட்சியாகவும், பொறுக் கத்தக்க அளவு குளிருடனும் இருக்கிறது. சில இடங்கள், க்ஷய ரோகம் குணமாவதற்கு மிகவும் ஏற்றவை எனச் சொல்லப்படு கின்றன. அவைகளில் ஒன்று தென்னுப்பிரிக்காவின் பொன் நகரமாகக் கருதப்படும் ஜொஹன்னஸ்பர்க். அவ்வூர் இப்பொழு திருக்குமிடம், ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு, மக்கள் நடமாட் டம் இன்றியும், காய்ந்த புல் அடர்ந்ததாகவும் இருந்தது. ஆனல், தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டபின், வீடுகள் மந்திர ஜாலத்தினல் உண்டானவை போல் ஒன்றன்பின் ஒன்ருகக் கட்டப்பட்டன. இப்போது அங்கே அழகும், உறுதியும் வாய்ந்த

பெரிய கட்டிடங்கள் பல காணப்படுகின்றன. அவ்வூர்த் தன வந்தர்கள், மிகச் செழிப்பான தென்னுப்பிரிக்க பிரதேசங்களி லிருந்தும், ஐரோப்பாவிலிருந்தும் ஒரு செடிக்கு ஒரு கினி வரை கொடுத்து வாங்கி வந்து அங்கே பயிர் செய்திருக்கிருர்கள். இப்பூர்விக சரித்திரத்தை அறியாத ஒரு யாத்திரிகர், அம்மரங் கள் தொன்றுதொட்டு அங்கிருந்து வந்திருப்பனவாகவே நினைத்துவிடுவார்.

தென்னுப்பிரிக்காவின் எல்லா பாகங்களையும் பற்றி விவரிப் பதாக எனக்கு உத்தேசமில்லை. ஆனல், எடுத்துக்கொண்டுள்ள விஷயத்திற்குச் சம்பந்தப்பட்ட பாகங்களைப்பற்றி மாத்திரம் சொல்லுகிறேன். தென்னுப்பிரிக்காவின் ஒரு பாகம் போர்த்து கீசியருக்குக் கீழும், மற்றவை பிரிட்டிஷாருக்குக் கீழும் இருக் கின்றன. போர்த்துகீசியருக்கு உட்பட்ட பாகத்திற்கு டெல கோவா விரிகுடா (Delagoa Bay) என்று பெயர். இந்தியாவி லிருந்து வரும் கப்பல்களுக்கு முதல் துறைமுகம் இதுவே. அதற்குத் தெற்கே போனல் முதல் பிரிட்டிஷ் குடியேற்ற நாடாகிய நேட்டால் பிரதேசத்துக்கு வருகிருேம். அதன் முக்கிய மான துறைமுகம் நேட்டால். ஆனல், அது சாதாரணமாக, டர்பன் என்று தென்னுப்பிரிக்கா முழுதும் வழங்கப்படுகிறது. நேட் டாலிலுள்ள நகரங்களில் டர்பன் பெரியது. பீட்டர்-மாரிட்ஸ்பர்க் என்பது அதன் தலைநகரம். இது டர்பனிலிருந்து உள்நாட்டில் அறுபது மைல் தூரத்தில், இரண்டாயிரம் அடி உயரத்தில் இருக் கிறது. டர்புனின் வானிலை சற்றுக் குளிரா யிருந்தாலும் பம்பாயைப் போன்றதே. நேட்டாலைக் கடந்து நாம் உள்நாட் டில் போனல் டிரான்ஸ்வால் இருக்கிறது. அதன் சுரங்கங்களே, மற்றெல்லாச் சுரங்கங்களைக் காட்டிலும் அதிகத் தங்கத்தை உலகிற்கு அளிக்கின்றன. சில ஆண்டுகளுக்கு முன் அங்கே வயிரச் சுரங்கங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. அவைகளில் ஒன் றிலிருந்து உலகத்திலேயே மிகப் பெரிய வயிரம் எடுக்கப்பட் டது. அந்த வயிரத்திற்கு, அது கண்டுபிடிக்கப்பட்ட சுரங்கத் தின் சொந்தக்காரர் பெயரான 'கல்லினன்' என்னும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் கனம் மூவாயிரம் காரட்டுகள். அதாவது 1–3/4 ராத்தலுக்கதிகமான எடையுடையது. 'கோஹி னூர்' வயிரத்தின் எடை நூறு காரட்டுகள்தான்; ருஷிய அரச வமிச அணிகலத்திலிருந்த 'ஓர்லோப்' வயிரத்தின் நிறை சுமார் இருநூறு காரட்டுகள்தான். ஜொஹன்னஸ்பர்க், தங்கச் சுரங்கங் களுக்குப் பிரதானமானதாகவும், வயிரச் சுரங்கங்களைப் பக்கத்

தில் கொண்டதாகவும் இருந்தபோதிலும், டிரான்ஸ்வாலுக்கு இது தலைநகரமல்ல. அதற்கு முப்பத்தாறு மைல் தூரத்தில் இருக்கும் பிரிட்டோரியா என்பது தலைநகரம். பிரிட்டோரியாவில் உத்தியோகஸ்தர்களையும், ராஜீயவாதிகளையும், அவர்களைச் சார்ந்தவர்களையுமே முக்கியமாகக் காணலாம். ஆதலால் ஜொஹன்னஸ்பர்க்கில் பரபரப்பும் இரைச்சலும் நிறைந்திருக்க, இது அமைதியான இடமாக இருக்கிறது. நிம்மதியான ஒரு கிராமம் அல்லது சிற்றூரிலிருந்து பம்பாய்க்கு வரும் ஒருவன், அந்நகரத்தில் காணும் இரைச்சலையும் பரபரப்பையும் பார்த்து மலைப்புறுவான். அதேபோல் பிரிட்டோரியாவிலிருந்து வரும் ஒருவனுக்கு ஜொஹன்னஸ்பர்க் தோன்றும். ஜொஹன்னஸ்பர்க் வாசிகள் நடப்பதில்லை, ஓடிக்கொண்டே யிருக்கிறார்கள் என்று சொல்லுவது மிகையாகாது. ஒருவருக்கு மற்றொருவரைக் கவனிக்க நேரம் இருப்பதில்லை. ஒவ்வொருவரும் குறைந்த காலத்தில் அதிகச் செல்வத்தை எப்படிச் சேகரிப்பது என்ற நினைவிலேயே மூழ்கியிருக்கின்றனர். டிரான்ஸ்வாலைவிட்டு உள்நாட்டில் மேற்கே செல்வோமானால், **ஆரஞ்சு பிரீ ஸ்டேட்** என்ற **ஆரஞ்சியாவிற்கு** வருகிறோம். அதன் தலைநகரம் **புளும்பாண்டீன்**. அது ஓர் அமைதியான சிற்றூர். டிரான்ஸ்வாலைப் போல் ஆரஞ்சியாவில் சுரங்கங்களில்லை. இங்கிருந்து சில மணி நேரம் ரெயிலில் போனால் தென்னாப்பிரிக்க நாடுகளில் பெரிதான **கேப் காலனி**யின் எல்லையைச் சேருகிறோம். **கேப்டவுன்** என்னும் நகரம் அதற்குத் தலைநகரமாகவும், அதன் பெரிய துறைமுகமாயும் இருக்கிறது. அது 'நன்னம்பிக்கை முனை'யில் இருக்கிறது. அக்காலத்தில் மாலுமிகளின் குறிக்கோள் இந்தியாவிற்குச் செல்லும் வழியைக் கண்டுபிடிப்பதே. இம்முனை கண்டுபிடிக்கப்பட்ட பிறகு, தம் தேசத்தாரால் இந்தியாவிற்கு ஒரு சுலபமான புதிய வழி கண்டுபிடிக்கப்படும் என்ற நம்பிக்கை ஏற்பட்டதால், இம்முனைக்குப் போர்த்துகீசிய அரசர் ஜான் என்பவர் 'நன்னம்பிக்கை முனை' (Cape of Good Hope) என்ற பெயரிட்டார்.

இந்நான்கு பிரிட்டிஷ் பிரதேசங்களைத் தவிர, ஐரோப்பியரின் வருகைக்குமுன் மற்ற ஜாதியார் குடியேறியிருந்த பல பிரதேசங்களும் ஆங்கிலேயரின் பாதுகாப்பின் கீழ் இருக்கின்றன.

தென்னாப்பிரிக்காவின் முக்கியக் கைத்தொழில் விவசாயம். விவசாயத்திற்கு அந்நாடு மிகவும் பொருத்தமானது. சில பாகங்கள் மிகவும் அழகாகவும், செழிப்பாகவும் இருக்கின்றன.

அங்கே பிரதான தானியமான சோளம் அதிகச் சிரமமின்றிப் பயிர் செய்யப்பட்டு வருகிறது. அதுவே நீக்கிரோ வகுப்பாருக்கு முக்கியமான உணவாகும். கோதுமையும் சில இடங்களில் பயிர் செய்யப்படுகிறது. தென்னாப்பிரிக்கா, பழங்களுக்குப் பெயர் பெற்றது. வாழைப்பழம், பப்பாளி, அன்னாசி இவைகளில் பல அருமையான வகைகள் ஏராளமாகப் பயிராவதால், ஏழைகளி லும் மிக ஏழைகளாக இருப்பவர்களுக்குக்கூட, இவை எளிதில் கிடைக்கின்றன. பொறுக்குகிற சிரமந்தான். எல்லோருக்கும் ஏராளமாகக் கிடைக்கக்கூடிய அளவுக்கு அவ்வளவு ஏராளமாய் ஆரஞ்சு, பீச்சு, ஆபிரிகாட் பழங்கள் நேட்டாலிலும் மற்றப் பகுதிகளிலும் உற்பத்தியாகின்றன. கேப் காலனி, திராட்சைக் கும், பிளம்முக்கும் பேர்போனது. வேறெங்கும் இவ்வளவு சிறந்த திராட்சை உற்பத்தியாவதில்லை. பருவ காலத்தில் எந்த ஏழையும் வயிறு நிறையத் தின்னும் அளவுக்கு அவ்வளவு மலிவாகக் கிடைக்கின்றன. இந்தியர் இருக்கும் இடத்தில் மாம் பழம் இல்லாமலிருப்பது அசாத்தியம். இந்தியர்கள் தென்னாப் பிரிக்காவில் மாமரங்கள் வைத்தார்கள். அதனால் மாம்பழங் களும் அதிகமாகக் கிடைக்கின்றன. இவைகளில் சில வகைகள் பம்பாய் உயர்ந்த தினுசு மாம்பழங்களுடன் போட்டியிடத் தக்கவை. காய்கறிகளும் அந்த வளமான நிலத்தில் அதிகமாகப் பயிர் செய்யப்படுகின்றன. பதார்த்தங்களைத் தங்கள் நாட்டுச் சுவையுடன் உண்ணும் ஆவலில் இருக்கும் இந்தியர், இந்தியக் காய்வகைகள் முழுவதையும் பயிரிட்டு வருகிறார்கள்.

கால்நடைகளும் அதிகமாக வளர்க்கப்படுகின்றன. பசுக் களும், எருதுகளும் இந்தியாவிலிருப்பதைவிட நல்ல பருமனாக வும் பலத்துடனும் இருக்கின்றன. பசுவைக் காப்பாற்றுவதாக உரிமை கொண்டாடும் இந்தியாவில் அவை, இந்திய மக்களைப் போலவே மெலிந்து இருப்பதைப் பார்க்க எனக்கு வெட்க முண்டாகின்றது; என் உள்ளம் அடிக்கடி புண்படுகின்றது. தென்னாப்பிரிக்காவின் எல்லாப் பாகங்களிலும் சுற்றியிருக் கிறேன்; உன்னிப்பாகக் கவனித்துமிருக்கிறேன். ஆனால், ஒரு மெலிந்த பசுவையோ அல்லது எருதையோ நான் பார்த்ததாகவே ஞாபகமில்லை.

இந்நாட்டிற்கு எல்லா வளங்களையும் இயற்கை கொடுத்த தோடல்லாமல் இயற்கை வனப்பையும் கொடுத்திருக்கிறது.

டர்பன் காட்சி மிகவும் அழகானது எனக் கருதப்படுகிறது. ஆனால், கேப்டவுனே அதையும்விட அழகானது. மிக உயரமும்

மிகத் தாழ்வுமில்லாத டேபிள் மலையினடியில் கேப்டவுன் இருக்கிறது. தென்னுப்பிரிக்காவை அதிகமாக நேசிக்கும் அறிவமைந்த மாது ஒருவர் தம் கவியில், இம்மலை போல் வேறு எந்த மலையும் ஒப்பற்றதோர் தன்மையை அந்நாட்டிற்கு அளிக்கவில்லை என்று சொல்லுகிருர். இதில் மிகைப்படக் கூறலும் இருக்கிறது என்று தான் நான் நினைக்கின்றேன். ஆனல், அவர் சொன்னதில் ஒன்று மாத்திரம் உண்மையென எனக்குப் பட்டது. டேபிள் மலை, கேப்டவுன் வாசிகளுக்கு ஒரு நண்பன் என்ற பாவத்துடன் இருக்கிறதென அவர் சொல்லுகிருர். அதிக உயரமில்லாததால் அது பயமுண்டாக்குவதாயில்லை. மக்கள் அதைத் தூரத்திலிருந்து கும்பிட்டுக் கொண்டிராமல் அதன்மேல் வீடு கட்டிக்கொண்டு வசிக்கின்றனர். அது கடற்கரையிலேயே இருப்பதால், கடல் தன் பரிசுத்தமான நீரால் மலையின் அடியைக் கழுவியவண்ணம் இருக்கிறது. ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான மக்களின் சந்தடி ஒலிக்கும். அம்மலையெங்கும் சிறியவரும் முதியவரும், ஆண்களும் பெண்களும், பயமின்றி நடமாடுகின்றனர். அதன் உயர்ந்த மரங்களும், நறுமணம் வீசும் பல வண்ண மலர்களும், அம்மலைக்கே சிறந்த அழகைத் தருவதோடு அதைப் பார்ப்பதற்கும் அதில் நடமாடுவதற்கும் சலிப்பே தோன்ருமலும் செய்கின்றன.

கங்கை, யமுனை போன்ற பெரிய ஆறுகள் உள்ளதான பெருமை தென்னுப்பிரிக்காவிற்கு இல்லை. அங்கிருக்கும் சில நதிகளும் சிறியன. ஆறுகளின் நீர் நாட்டின் பல பாகங்களுக்குக் கிடைப்பதில்லை. மேடான பூமிகளுக்கு வாய்க்கால் வெட்டிக் கொண்டு போகமுடியாது. பெரிய நதிகளில்லாதபோது எப்படி வாய்க்கால்கள் இருக்கமுடியும்? பூமியின் மேல்நீர் கிடைக்காத இடங்களிலெல்லாம் பூமியைக் குடைந்து ஊற்றுக்கிணறுகள் வெட்டப்படுகின்றன. பயிர் செய்வதற்கு வேண்டிய நீர், காற்ருலும் நீராவியாலும் இயங்கும் யந்திரங்களால் அக்கிணறுகளிலிருந்து இறைக்கப்படுகிறது. அங்கே விவசாயத்திற்கு அரசாங்கம் அதிக ஆதரவு தருகிறது. அரசாங்கம், குடியானவர்களுக்கு யோசனை சொல்லுவதற்கு விவசாய நிபுணர்களை அனுப்பியும், அவர்களுடைய உதவிக்காகப் புதிய ஆராய்ச்சிகள் நடத்தக்கூடிய மாதிரிப் பண்ணைகளை வைத்தும், நல்ல கால்நடைகளையும் விதைகளையும் கொடுத்தும், அவர்களுக்காகக் குறைந்த செலவில் ஊற்றுக்கிணறுகளை வெட்டியும், கிணறு வெட்டுவதற்கான செலவுகளைக் கொடுத்துப் பல தவணைகளில்

திரும்ப வாங்கிக்கொண்டும் உதவுகின்றது. குடியானவர்களுடைய நிலங்களைக் காப்பாற்றுவதற்கு முள்கம்பி வேலியையும் அரசாங்கத்தார் போடுகின்றனர்.

பூமியின் மத்தியரேகைக்குத் தெற்கில் தென்னுப்பிரிக்காவும், வடக்கில் இந்தியாவும் இருப்பதால், பருவங்கள் இங்கிருப்பதற்கு நேர்மாருக அங்கிருக்கின்றன. உதாரணமாக, நமக்குக் கோடைக் காலமாயிருக்கும்போது, அவர்களுக்குக் குளிர் காலமாக இருக்கும். அங்கே மழை குறிப்பிட்ட காலமில்லாமல் நினைத்தபோது பெய்துகொண்டிருக்கும். சாதாரணமாக வருடத்திற்குச் சராசரி மழை அளவு இருபது அங்குலங்களுக்கு அதிகமாக இராது.

## இரண்டாவது அத்தியாயம்

# சரித்திரம்

சென்ற அத்தியாயத்தில் பொதுவாகச் சொல்லப்பட்ட நிலப் பிரிவுகள் பழைய காலத்தியவை அல்ல. பண்டைக் காலங்களில் தென்னுப்பிரிக்காவில் வசித்து வந்த மக்கள் யார் என்பதைப் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஐரோப்பியர்கள் தென்னுப்பிரிக்காவில் குடியேறியபோது அவர்கள் அங்கே நீக்கிரோக்களைக் கண்டனர். அமெரிக்காவிலிருந்த சில அடிமைகள், தங்களுக்கிருந்த கொடிய அடிமைத்தனத்திலிருந்து தப்பி ஆப்பிரிக்காவில் வந்து குடியேறினர் என்றும், அவர்களுடைய சந்ததியாரே நீக்கிரோக்கள் என்றும் கருதப் படுகிறது.

ஜுலுக்கள், ஸ்வாஜுகள், பசுடோக்கள், பெகவானுக்கள் என்ற பல வகுப்பினர் அவர்களில் உண்டு. அவர்களிடையே பல்வேறு மொழிகள் வழங்குகின்றன. அவர்கள்தாம் ஆப்பிரிக்காவின் பூர்விகக் குடிகள் என்று கருதப்பட வேண்டும். தென்னுப்பிரிக்கா, நீக்கிரோக்களின் தற்கால ஜனத்தொகையைப் போல் இருபது அல்லது முப்பது பங்கு ஜனங்களை எளிதாக ஆதரிக்கத் தக்க அவ்வளவு பெரிய நாடு. கேப்டவுனிலிருந்து டர்பனுக்கு ரெயிலில் ஆயிரத்தெண்ணூறு மைல் தொலைவு. கடல்வழியாகவும் ஆயிரம் மைலுக்குக் குறைவில்லை. தென்னுப்பிரிக்காவின் நான்கு காலனிகளின் மொத்தப் பரப்பு 4,73,000 சதுர மைல்கள். இந் நிலப்பரப்பில் 1914-இல் நீக்கிரோக்களின் ஜனத்தொகை ஐம்பது லட்சம். ஐரோப்பியர்களின் ஜனத்தொகை பன்னிரண்டரை லட்சம்.

நீக்கிரோக்களில் மிக நெடியரும் அழகு வாய்ந்தவர்களும் ஜுலுக்கள். நீக்கிரோக்கள் சம்பந்தமாக 'அழகு' என்ற அடைமொழியை யோசித்துப் பார்த்தே நான் உபயோகித்துள்ளேன். வெள்ளை நிறமும், கூரிய மூக்கும் அழகுக்கு இலக்கணமாக நமக்குத் தோன்றுகின்றன. இந்த மூடநம்பிக்கையை ஒரு கணம் நம் மனத்தை விட்டு அகற்றிவிட்டால், ஜுலுக்களை அழகாகப் படைப்பதில் கடவுள் ஒன்றையும் குறைக்கவில்லை என்பது தென்படும். ஆண்களும், பெண்களும் உயரமாகவும், உயரத்திற்குத் தகுந்தபடி அகன்ற மார்புடனும் இருக்கிறார்கள். அவர்களுடைய

தசைப்பற்று பலமாகவும், உறுதியாகவும் இருக்கின்றது. கால்களிலும் கைகளிலுமுள்ள தசைகள் பருமனுகவும் திரண்டும் இருக்கின்றன. குனிந்தாவது கூனுடனுவது நடக்கும் ஒரு ஜுலு மகன் அல்லது மகளைப் பார்க்கவே முடியாது. உதடுகள் தடித்தும், பருமனுகவுந்தான் இருக்கின்றன. ஆனுல், உடலின் மற்ற உறுப்புக்களுக்குச் சரியாக ஒத்திருப்பதால், அவை விகாரமாயிருக்கின்றன என நான் சொல்லமாட்டேன். கண்கள் உருண்டையாயும், ஒளியுடனும் இருக்கின்றன. மூக்கு, பெரிய முகத்திற்குத் தகுந்தபடி பெரியதாகவும், தட்டையாகவும் இருக்கிறது. தலையின் மேல் இருக்கும் சுருட்டை மயிர், கருங்காலி போல் கறுப்பாயும் பளபளப்பாயும் விளங்கும் உடலை அழகுபட எடுத்துக் காட்டுகின்றது. தென்னப்பிரிக்காவிலுள்ள ஜாதிகளில் யார் மிக அழகானவர்கள் என்று ஒரு ஜுலுவைக் கேட்டால், அவன் தயங்காமல் தன் இனத்தவரையே சுட்டிக் காட்டுவான். இதில் முடிவுக்கு வர அவனுக்குத் திறமை போதாது என்று சொல்லிவிடவும் முடியாது. ஐரோப்பாவில் சாண்டோ முதலியோர் தசைகளைப் பலப்படுத்துவதற்குச் செய்கின்ற முயற்சி எதுவுமின்றி, ஜுலு இயற்கையிலேயே பலமும் அழகும் சேர்ந்த உடலைப் பெற்றிருக்கிருன். பூமத்திய ரேகைக்குப் பக்கத்தில் வசிக்கும் ஜாதிகளின் நிறம் கறுப்பாக இருப்பது இயற்கை விதி. இயற்கையின் அமைப்பு எல்லாவற்றிலும் அழகு இருக்கவே வேண்டுமென்று நாம் நம்பினல், அழகைப்பற்றிய குறுகிய, ஒரு தலைப்பட்சமான எண்ணங்களிலிருந்து விலகுவதோடு, இந்தியாவில் அழகிய சிவப்பு மேனியைத் தவிர மற்ற நிறமுள்ள மேனியில் நாம் கொண்டுள்ள தவருன வெட்கம், அருவருப்பு இவற்றிலிருந்து விடுபட்டவர்களாவோம்.

நீக்கிரோக்கள், மிலாறுகளும் மண்ணும் சேர்த்துக் கட்டிய வட்டமான குடிசைகளில் வசிக்கின்றனர். அக்குடிசைகளுக்கு வட்டமான ஒரே சுவர். உலர்ந்த புல் வேய்ந்த கூரை. அதனுள் ஒரு கம்பம் கூரையைத் தாங்குகின்றது. குனிந்துதான் போகக்கூடிய ஒரு தாழ்ந்த வாயிலே அதற்குண்டு. காற்று வருவதற்கும் அதுதான் வழி. வாயிலில் சாதாரணமாகக் கதவு வைப்பதில்லை. நம்மைப் போலவே நீக்கிரோக்களும் சுவரையும், தரையையும் மண்ணலும் சாணத்தாலும் மெழுகுகிருர்கள். நீக்கிரோக்களால் சதுரமாக எதையும் செய்யமுடியாதெனச் சொல்லுகிருர்கள். வட்டமான சாமான்களைப் பார்ப்பதிலும் செய்வதிலுமே அவர்கள் கண்கள் பழகியிருக்கின்றன. இயற்கையானது, நேர்க்

கோடுகளையாவது, சதுரங்களையாவது போடுவதை நாம் பார்ப்பதில்லை. இயற்கையில் வளரும் இம்மாசற்ற மக்கள் அவளிடமிருந்தே தங்கள் அறிவைப் பெற்றிருக்கின்றனர்.

இடத்திற்கேற்றவாறு குடிசையின் சாமான்களும் எளியனவாகவே இருக்கின்றன. மேஜை, நாற்காலி, பெட்டி இவை போன்ற சாமான்களுக்கு அங்கே இடமில்லை. இந்தக் காலத்திலும் அவை அவர்கள் குடிசைகளில் சாதாரணமாகக் காணப்படுவதில்லை.

ஐரோப்பிய நாகரிகம் வருவதற்குமுன் விலங்குகளின் தோல்களையே அவர்கள் அணிந்துகொண்டிருந்தனர். அவை, ஜமுக்காளம், போர்வை முதலியனவாகவும் படுக்கையாகவும் உபயோகப்பட்டன. இப்பொழுது அவர்கள் போர்வைகளை உபயோகப்படுத்துகிறார்கள். ஆங்கிலேய ஆட்சிக்குமுன் ஆண்களும் பெண்களும் ஏறக்குறைய அம்மணமாகவே நடமாடிக் கொண்டிருந்தார்கள். இப்பொழுதுகூடக் கிராமங்களில் பலர் அப்படியே இருக்கின்றனர். அவர்கள் தங்கள் அரையை ஒரு துண்டுத் தோலால் மூடிக்கொள்ளுகின்றனர். சிலர் இதையும் விட்டு விடுகின்றனர்., இதனால் இம்மக்கள் தங்கள் புலன்களை அடக்க முடியாதென யாரும் எண்ணிவிட வேண்டாம். ஒரு பெரிய சமூகம் குறிப்பிட்ட ஒரு பழக்கத்தைப் பின்பற்றி வரும்போது, அப்பழக்கம் மற்றச் சமூகத்தாருக்குத் தகாதது எனத் தோன்றினாலும், அப்பழக்கம் அவர்களுக்கு யாதொரு கெடுதியும் விளைவிக்காதென்பது முற்றிலும் சாத்தியமே. நீக்கிரோக்களுக்கு ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக்கொண்டிருக்க நேரம் இருப்பதில்லை. அம்மணமாகக் குளித்துக்கொண்டிருக்கும் பெண்களுக்குப் பக்கத்தில் சுகதேவர் போனபோது, அவர் மனம் சபலமற்றிருந்தது; அப்பெண்களுக்கும் யாதொரு மனவிகாரமோ வெட்கமோ தோன்றவில்லை என்று பாகவதம் கூறுகிறது. இதில் இயற்கைக்குப் புறம்பானது எதுவும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. தற்காலத்தில் இந்தியாவில் அம்மாதிரி சந்தர்ப்பத்தில் அவ்வளவு பரிசுத்தமாய் ஒருவரும் இருக்க முடியாதென்றால், அது நம்முடைய இழிவான நிலையைக் காட்டுகின்றதேயொழிய, மக்களைத் தூய்மையடையச் செய்யும் முயற்சிக்கு அது ஒரு வரம்பு கோலுவதாகாது. நம்முடைய அகங்காரந்தான் நீக்கிரோக்களைக் காட்டுமிராண்டிகள் என்று நினைக்கச் செய்கிறது. நாம் நினைக்கின்ற மாதிரி அவர்கள் அவ்வளவு நாகரிகமற்றவர்கள் அல்ல.

நீக்கிரோப் பெண்கள், நகரங்களுக்குப் போகும்போது மார்பிலிருந்து முழங்கால்வரை மூடிக்கொள்ள வேண்டும் என்பது சட்டம். ஆதலால், அவர்கள் உடலை ஒரு துணியால் சுற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. அம்மாதிரித் துணிகள் ஏராளமாகத் தென்னுப்பிரிக்காவில் விற்பதனுல், அவை ஐரோப்பாவிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் ஆயிரக்கணக்காக இறக்குமதி செய்யப்படுகின்றன. ஆண்களும் இடுப்பிலிருந்து முழங்கால்வரை மூடிக்கொள்ள வேண்டும். ஆதலால், பலர் ஐரோப்பாவிலிருந்து வரும் பழைய துணிகளை வாங்கிப் போட்டுக்கொள்ளும் பழக்கத்தைக் கைக்கொண்டிருக்கின்றனர். மற்றவர்கள், கட்டுவதற்கு நாடாவுள்ள ஒருவகை அரைச் சராய்களை அணிகின்றனர். இவை யாவும் ஐரோப்பாவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன.

சோளமும், கிடைக்கக்கூடிய சமயங்களில் மாமிசமும் நீக்கிரோக்களின் முக்கியமான உணவாகும். நல்ல வேளையாக, அவர்களுக்கு வாசனைத் திரவியங்களைப் பற்றியும், மசாலையைப் பற்றியும் ஒன்றும் தெரியாது. உணவில் மசாலை இருந்தாலும் அல்லது மஞ்சள் தென்பட்டாலும் அவர்கள் முகத்தைத் திருப்பிக்கொள்ளுவார்கள்; அவர்களில் மிகவும் நாகரிகமற்றவரென்று கருதப்பட்டவர்களோ அதைத் தொடவும் மாட்டார்கள். ஒரு ராத்தல் வேகவைத்த சோளத்தைக் கொஞ்சம் உப்பிட்டு ஒரே வேளையில் சாப்பிடுவது ஒரு ஜூலுவுக்கு வெகு சகஜம். மாவுக் கஞ்சியைக்கொண்டே அவன் திருப்தியுடன் வாழ்கிறுன். அவனுக்கு மாமிசம் கிடைக்கும்போது, பச்சையாகவோ, வேகவைத்தோ உப்பு மாத்திரம் போட்டுச் சாப்பிடுகிறுன். எந்தப் பிராணியின் இறைச்சியாயிருந்தாலும் அவனுக்கு விலக்கில்லை.

நீக்கிரோ மொழிகளுக்கு அவை பேசப்படும் வகுப்புக்களை ஒட்டிப் பெயர்கள் கொடுக்கப்படுகின்றன. எழுத்து, சமீபத்தில் ஐரோப்பியர்களால் உண்டாக்கப்பட்டது; நீக்கிரோ எழுத்து என ஒன்று கிடையாது. பைபிள்களும் மற்றப் புத்தகங்களும் நீக்கிரோ மொழிகளில் ரோமன் எழுத்துக்களில் பதிக்கப்பட்டிருக்கின்றன. ஜூலு மொழி கேட்க மிகவும் இனிமையானது. பெரும்பான்மையான சொற்கள் நெடில் ஆகாரத்தில் முடிகின்றன. ஆதலால், அம்மொழி காதுக்கு மிருதுவாகவும், இனிமையாகவும் இருக்கிறது. சொற்களில் பொருளும், கவிதையும் இருப்பதாக நான் படித்தும் கேட்டும் இருக்கிறேன். எனக்குத் தெரிய நேர்ந்த சில சொற்களிலிருந்து இதில் உண்மையிருக்

கிறதென்று நினைக்கிறேன். அநேகமாய் எல்லா இடங்களுக்கும் இனிமையும், அழகும் பொருந்திய நீக்கிரோப் பெயர்கள் இருக்கின்றன. அவைகளுக்கு நேரான ஐரோப்பியப் பதங்களைத்தான் கொடுத்திருக்கிறேன். அந்நீக்கிரோப் பெயர்கள் எனக்கு ஞாபகம் இல்லாதது பற்றி வருந்துகிறேன். ஆகையால் இங்கே வாசகர்களுக்கு அவற்றைச் சொல்ல முடியவில்லை.

கிறிஸ்துவப் பாதிரிகளின் அபிப்பிராயப்படி, நீக்கிரோக்களுக்கு, முற்காலத்திலோ இக்காலத்திலோ யாதொரு மதமும் இல்லை. மதம் என்பதைப் பரந்த கருத்தில் எடுத்துக்கொண்டால், மனித அறிவுக்கு எட்டாத ஒரு பரம்பொருளை அவர்கள் நம்பி வழிபடுகிறார்களென்றே சொல்லலாம். அவர்கள் இச்சக்திக்குப் பயப்படவும் செய்கிறார்கள். உடல் அழிவதனால் ஒருவன் முற்றிலும் அழிவதில்லை என்று அவர்கள் லேசாக உணர்ந்திருக்கின்றனர். ஒழுக்கத்தையே மதத்தின் அடிப்படையாக நாம் கொள்ளுவோமானால், நீக்கிரோக்களும் ஒழுக்கத்துடன் இருப்பதால், அவர்களுக்கு மதமும் இருப்பதாகவே சொல்லலாம். வாய்மைக்கும் பொய்மைக்குமுள்ள வித்தியாசம் அவர்களுக்கு மிகத் தெளிவாகத் தெரியும். நீக்கிரோக்கள் தங்கள் பழமையான நிலைமையிலும் அனுஷ்டிக்கும் உண்மையை நாமோ அல்லது ஐரோப்பியர்களோ அவ்வளவிற்கு அனுஷ்டிக்கிறோமா என்பது சந்தேகம். கோயில்களோ, அம்மாதிரி வேறு எதுவோ அவர்களுக்கு இல்லை. மற்ற இனத்தாரைப் போல அவர்களிடத்திலும் பல குருட்டு நம்பிக்கைகள் இருக்கின்றன.

உடல் வலிமையில் உலகத்தில் யாருக்குமே குறைந்தவர்களல்லாத இந்தச் சாதியார், ஓர் ஐரோப்பியக் குழந்தையைப் பார்த்த மாத்திரத்திலேயே பயப்படுகிறார்கள் என்பதை அறிந்து வாசகர்கள் வியப்படைவர். ஒருவன் ஒரு நீக்கிரோவை நோக்கித் துப்பாக்கியால் குறி வைத்தால், ஒன்று, அவன் ஓடியாவது விடுவான்; அல்லது மருண்டுபோய் ஓடும் சக்தியையாவது இழந்து நிற்பான். இதற்குச் சரியான காரணங்கள் உண்டு. மந்திர ஜாலத்தால்தான் ஒரு சில ஐரோப்பியர், தங்களைப் போன்ற பெருந்தொகையினரான, பயங்கரமான சாதியை அடக்கியிருக்கிறார்கள் என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் பதிந்திருக்கின்றது. ஈட்டி, வில், அம்பு இவற்றை உபயோகிக்க அவர்களுக்கு நன்றாகத் தெரியும். இவை இப்பொழுது அவர்கள் கைகளிலிருந்து பிடுங்கப்பட்டிருக்கின்றன. அவர்கள் துப்பாக்கியைப் பார்த்ததுமில்லை; சுட்டதுமில்லை. ஒரு தீக்குச்சிகூட அவசிய

மில்லை; ஒரு விரலை அசைப்பதைத் தவிர வேறொன்றும் செய்வ தில்லை; எனினும் ஒரு சிறிய குழாயிலிருந்து ஓர் ஓசை உடனே கிளம்புகிறது; தீ பறக்கிறது; குண்டு ஒன்று ஒருவனைக் காயம் செய்து ஒரு கணத்தில் கொல்லுகிறது. இது நீக்கிரோக்களுக் குப் புரியாத விஷயம். ஆதலால், அந்தக் கருவியைக் கொண்ட வர்களிடத்தில் நடுநடுங்கிப் பயப்படுகிறார்கள். இக்குண்டுகள் பல, உதவியற்ற, நிரபராதியான நீக்கிரோக்களின் உயிரைப் போக்கியிருப்பதை அவர்களும் அவர்கள் மூதாதைகளும் பார்த் திருக்கின்றனர். இது எப்படி நேரிடுகின்றதென்பது பலருக்கு இன்றும் தெரியாது.

'நாகரிகம்' மெதுவாக நீக்கிரோக்களிடையே பரவி வருகிறது. பக்தியுள்ள பாதிரிகள், தங்களுக்குத் தெரிந்த வகையில் ஏசு நாதரின் உபதேசங்களை அவர்களுக்குச் சொல்லுகிறார்கள்; பள் ளிக்கூடங்களை ஏற்படுத்தி எழுதப் படிக்கக் கற்றுக்கொடுக்கிறார் கள். ஆனால், இதுவரை படிப்பற்றவர்களாகவும் நாகரிகமற்றவர் களாகவுமிருந்து பல தீய பழக்கங்களை அறியாமலேயே இருந்த வர்கள் இப்பொழுது மாசடைந்திருக்கின்றனர். நாகரிகமடைந்த எந்த நீக்கிரோவும் குடிப்பழக்கத்திலிருந்து தப்பியதில்லை. அவ னுடைய பலமான உடல் குடி வசப்பட்டிருக்கும்போது, அவன் பைத்தியம் பிடித்தவனாகவே ஆகி எல்லாவிதமான குற்றங் களையும் செய்கிறான். இரண்டுடன் இரண்டைக் கூட்டினால் நான்கு ஆவது போல் நாகரிகம் மனிதனுடைய தேவையைப் பெருக்கிவிடுவதும் நிச்சயம். அவனுடைய தேவையை அதிகப் படுத்துவதற்கும், உழைப்பின் மதிப்பை அவனுக்குச் சொல்லிக் கொடுப்பதற்கும் தலைவரியும், குடிசை வரியும் அவன்மீது சுமத் தப்பட்டிருக்கின்றன. இவ்வரிகளை விதிக்காவிடில், விவசாயத்தில் ஈடுபட்டுத் தங்கள் பண்ணைகளில் வசிக்கும் இந்தச் சாதியார், தங்கமும் வயிரமும் எடுக்க நூற்றுக்கணக்கான அடி ஆழமுள்ள சுரங்கங்களில் வேலை செய்யப் போகமாட்டார்கள். சுரங்கங் களில் அவர்கள் உழைக்காது போனால் தங்கமும் வயிரமும் பூமிக்குள்ளேயே இருக்கும். இங்ஙனமே அவர்கள் இல்லாவிடில் ஐரோப்பியர்களுக்கு வேலைக்காரர்கள் கிடைப்பதும் கடினமா யிருக்கும். இதன் காரணமாக, சுரங்கங்களில் வேலை செய்யும் ஆயிரக்கணக்கான நீக்கிரோக்கள், மற்ற நோய்களுடன் சுரங்கங் களில் வேலை செய்பவர்களையே தாக்கும் ஒருவித க்ஷயரோகத் தால் (Miner's Phthisis) கஷ்டப்படுகின்றனர். இது உயிருக்கு ஆபத்தானதோர் நோய். இதனால் பீடிக்கப்பட்டவர் குணமடை

வதேயில்லை. தங்கள் குடும்பங்களிலிருந்து பிரிந்து சுரங்கங்களில் இருக்கும் ஆயிரக்கணக்கான மக்கள் புலனடக்கத்துடன் இருக்க முடியுமா என்று வாசகர்களே சிந்திக்கலாம். முடியாததால், அவர்கள் மேக சம்பந்தமான (Venereal) வியாதிகளுக்கு எளிதில் பலியாகின்றனர். இந்த அபாயமான விஷயம் தென்னாப்பிரிக்க ஐரோப்பியருள் இருக்கும் அறிவாளிகள் அறியாததன்று. எல்லாவற்றையும் யோசிக்குமிடத்து, நாகரிகம் இந்தச் சாதியின ரிடம் நல்ல பயனை உண்டாக்கியிருப்பதாகச் சொல்ல முடியா தென்று அவர்களில் சிலர் திடமாக அபிப்பிராயப்படுகின்றனர். இதனால் விளையும் கெடுதல்கள் மேலாகப் பார்ப்பவர்களுக்கும் தெள்ளென விளங்கும்.

எளிமை மிக்க, சூது வாது அற்ற இச்சாதியினர் பரவி இருந்த இப்பெரிய தேசத்திலே சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன் டச்சுக்காரர்கள் குடியேறினார்கள். அவர்களிடம் அடிமைகள் இருந்தனர். சில டச்சுக்காரர்கள், தங்கள் மலேய அடிமை களுடன் ஜாவாவிலிருந்து வந்து இப்பொழுது கேப் காலனி என்று சொல்லப்படும் இடத்தில் புகுந்தனர். இம்மலேயாக்காரர் கள் முஸல்மான்கள். டச்சு ரத்தம் அவர்கள் உடலில் உண்டு. டச்சு மக்கள் குணமும் சிறிது அவர்களிடத்தில் தென்படுகிறது. தென்னாப்பிரிக்கா முழுதும் அவர்கள் பரவியிருக்கின்றனர். கேப் டவுன் அவர்களுடைய கோட்டை போன்றது. அவர்களில் சிலர் இப்பொழுது ஐரோப்பியர்களுக்குக் கீழ் வேலை செய்கின்றனர். மற்றவர்கள் சொந்தத் தொழில்களில் ஈடுபட்டிருக்கின்றனர். மலாய்ப் பெண்கள் நல்ல உழைப்பாளிகள்; புத்திசாலிகளாகவும் இருக்கின்றனர். பொதுவாக, அவர்கள் பழக்கங்களில் சுத்தமா யிருக்கின்றனர். சலவைத் தொழிலிலும், தையல் வேலையிலும் அவர்கள் திறமை உள்ளவர்கள்; ஆண்கள், சிறு வியாபாரங்கள் செய்கிறார்கள். பலர் வாடகைக்குக் குதிரை வண்டி ஓட்டுகின்ற னர். சிலர் உயர்தர ஆங்கிலக் கல்வியும் பெற்றிருக்கின்றனர். கேப் டவுனிலிருக்கும் பெயர் பெற்ற டாக்டர் அப்துல் ரஹிமான் இவர்களில் ஒருவர். கேப் டவுன் பழைய காலனி சட்டசபையில் அவர் ஓர் அங்கத்தினராக இருந்தார். புதிய அரசியல் முறையில் சட்டசபைக்குப் போகும் உரிமையிலிருந்து அவர் விலக்கப் பட்டார்.

டச்சுக்காரர்களைப் பற்றிச் சொல்லும்போது இடையில் மலேயாக்காரர்களைப் பற்றியும் கொஞ்சம் சொன்னேன். டச்சுக் காரர்கள் எப்படி முன்னேறினார்களென்பதைப் பார்ப்போம்.

அவர்கள் தைரியமுள்ள வீரர்களாய் இருந்தது போலவே, தேர்ந்த விவசாயிகளாகவும் இருந்தார்கள். சுற்றுப் பக்கத்திலிருந்த நாடு விவசாயத்திற்கு மிகவும் ஏற்றதெனக் கண்டார்கள். அந்நாட்டுச் "சுதேசி" மக்கள் வருடத்தில் சில நாட்களே வேலைசெய்து சுலபமாகவே வாழ்க்கை நடத்துவதையும் கண்டனர். ஏன் இம்மக்களைத் தங்களுக்காக வேலை செய்யும்படி கட்டாயப்படுத்தக் கூடாது? டச்சுக்காரர்களிடத்தில் துப்பாக்கிகள் இருந்தன. அவர்கள் சூழ்ச்சி மிக்கவர்கள். அவர்களுக்கு, மற்ற விலங்குகளைப் போலவே மனிதர்களை அடக்கவும் பழக்கவும் தெரியும். இங்ஙனம் செய்வதைத் தங்கள் மதக்கோட்பாடு தடுக்கவில்லை என்றும் அவர்கள் நம்பினுர்கள். சிறிதும் ஐயுருமல் தாங்கள் செய்வது நேரிதென்று, அந்நாட்டு மக்கள் உழைப்பைக்கொண்டே டச்சுக்காரர்கள் விவசாயம் செய்யத் தொடங்கினர்.

டச்சுக்காரர்கள் தங்கள் விருத்திக்கு நல்ல பூமிகள் தேடிக் கொண்ட மாதிரியே, அவர்களுக்குப் பின்னர் வந்த ஆங்கிலேயரும் தேடிக்கொண்டிருந்தனர். ஆங்கிலேயரும், டச்சுக்காரரும் தாயாதிகள். அவர்களுடைய குணமும் லட்சியமும் ஒரே மாதிரியாய் இருந்தன. ஒரு சூளையில் உருவாகிய பானைகள் ஒன்ரேடு ஒன்று மோதிக்கொள்ளத்தான் செய்யும். இம்மாதிரியே இவ்விரு நாட்டினரும் தங்கள் நலத்தைப் பெருக்கிக்கொண்டும், நீக்கிரோக்களை அடக்கிக் கொண்டும் வரும் சமயம் ஒருவருக்கொருவர் மோதிக்கொண்டனர். அவர்களுக்குள் சச்சரவுகள் மூண்டு பூசல்களும் ஏற்பட்டன. ஆங்கிலேயர் மஜுபா மலையில் தோல்வியுற்றனர். மஜுபா தோல்வியால் உண்டான புண் பயங்கரத் தோற்றம் கொண்டு *1899* முதல் *1902*-வரை நடந்த போயர் யுத்தத்திற்குக் கொண்டு வந்துவிட்டது. ஜெனரல் கிரோன்ஜே அடைக்கலம் புகுந்தபோது, மஜுபா தோல்விக்குப் பழிவாங்கப்பட்டதாக லார்டு ராபர்ட்ஸ்* விக்டோரியா ராணிக்குத் தந்தி

* பீல்டு மார்ஷல் எர்ல் ராபர்ட்ஸ் (1832—1914)—பிரபலமான ராணுவத்தினர். இந்திய சிப்பாய்க் கலகம் (1857) என்ற இந்தியரின் முதல் சுதந்திரப் போராட்டத்தை அடக்க முற்பட்ட பிரிட்டிஷ் படைகளில் முதன் முதல் இவர் அதிகாரியாஞர். ஆப்கன் போரின் போது காபூலிலிருந்து காண்டகாருக்குப் படைகளை நடத்திச் சென்று அப் போரின் வெற்றியைப் பூர்த்தி செய்தார். 1885 முதல் 1893-வரை இந்தியாவில் பிரதம சேஞதிபதியாக இருந்தார். 1895 முதல் 1899 வரை அயர்லாந்தில் சேஞதிபதியாக இருந்தார். பிறகு 1899 டிசம்பரில் தென்ஞப்பிரிக்காவில் பிரிட்டிஷ் படைகளுக்குத் தளபதியாஞர். அங்கிருந்த மோசமான ராணுவ நிலைமையை முற்றிலும் மாற்றி ஓர் ஆண்டு கழித்து கிச்சனரிடம் ஒப்படைத்தார். 1901-லிருந்து பிரதம சேஞதிபதியாகி 1904-ல் அப்பதவி ரத்து செய்யப்படும்வரை அங்கேயே இருந்தார்

அடித்தார். போயர் யுத்தத்திற்கு முன்னால் இரு தேசத்தாரும் முதலில் மோதிக்கொண்டபோது, டச்சுக்காரர்களில் பலர், பெயரளவுக்கு இருந்த பிரிட்டிஷ் அதிகாரத்தின்கீழ் நிற்கச் சம்மதியாமல் யாருமே புகுந்தறியாத தென்னாப்பிரிக்காவின் உட்புறம் கும்பலாகச் சென்றார்கள். இதுதான் டிரான்ஸ்வாலும், ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டும் தோன்றுவதற்கு ஆதி காரணம்.

இந்த டச்சுக்காரர்கள், தென்னாப்பிரிக்காவில் போயர் என்று வழங்கப் பெற்றார்கள். ஒரு குழந்தை தன் தாயிடத்தில் ஒட்டிக்கொள்வது போல் அவர்கள் தங்கள் மொழியை விடாமல் பற்றி அதைக் காத்தனர். தங்கள் மொழிக்கும், தங்கள் சுதந்திரத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை அவர்கள் மிகவும் தீவிரமாக உணருபவர். பல எதிர்ப்புக்கள் இருந்தபோதிலும் அவர்கள் தங்கள் மொழியை அப்படியே காப்பாற்றி வருகின்றனர். போயர்களுடைய இயல்பிற்கேற்றவாறு, அம்மொழி புது உருவம் கொண்டிருக்கின்றது. அவர்களுக்குத் தங்கள் தாய் நாடாகிய ஹாலண்டுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்ள முடியாததால், சம்ஸ்கிருதத்திலிருந்து பிராகிருதம் உண்டாயிருப்பது போல், டச்சு மொழியிலிருந்து உண்டான ஒரு பாஷையை அவர்கள் பேசத் தொடங்கினார்கள். தங்கள் குழந்தைகள்மீது அனாவசியமாக அதிக பளுவைச் சுமத்த விரும்பாமல், இம்மொழிப் பிரிவுக்கு 'டால்' (Taal) என்ற பெயரிட்டு அழியா உருவம் கொடுத்திருக்கின்றனர். அவர்களுடைய புத்தகங்கள் 'டால்' மொழியில் எழுதப்படுகின்றன. அவர்கள் குழந்தைகள் அதன் மூலம் கற்றுக் கொடுக்கப்படுகிறார்கள். தென்னாப்பிரிக்க யூனியன் சட்டசபையிலிருக்கும் போயர் அங்கத்தினர்களும் இம்மொழியிலேயே எப்பொழுதும் பேச வேண்டுமென உறுதி பூண்டிருக்கின்றனர். தென்னாப்பிரிக்க யூனியன் உண்டாக்கப்பட்ட பிறகு 'டால்' அல்லது டச்சும் ஆங்கிலமும் அரசாங்கத்தாரால் தென்னாப்பிரிக்கா முழுவதிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. அரசாங்க கெஜட்டுகளும், சட்டசபைக் குறிப்புக்களும் இவ்விரு மொழிகளிலும் இருக்க வேண்டும்.

போயர்கள் எளிய வாழ்க்கையில் விருப்பமுள்ளவர்கள். ஒளிப்பாட்டம் அற்றவர்கள்; மதத்தில் பற்றுடையவர்கள். பெரிய விவசாயப் பண்ணைகளுக்கு மத்தியில் அவர்கள் வசிக்கின்றனர். அப்பண்ணைகளின் பரப்பைப்பற்றிய தகவலை சரியானபடி ஊகித்துக்கொண்டுவிட முடியாது. ஒரு பண்ணை

யென்றால் ஒன்றிரண்டு ஏக்கராக்கள், சில சமயங்களில் இன்னும் குறைந்தது என்றுதான் நமக்குத் தெரியும். தென்னப்பிரிக் காவில் ஒரு தனிக் குடியானவனிடத்தில் நூற்றுக்கணக்கான அல்லது ஆயிரக்கணக்கான ஏக்கரா நிலபுலமிருக்கும். அவன் இவையனைத்திலும் உடனே சாகுபடி செய்ய வேண்டுமே என்று கவலைப்படுவதில்லை. யாராவது அவனிடத்தில் இப்படி நிலம் சும்மா இருக்கிறதே என்று கேட்டால், அதற்கு அவன், "அது தரிசாகக் கிடக்கட்டும். இப்பொழுது தரிசாக இருக்கும் நிலத்தை எங்கள் குழந்தைகள் சாகுபடி செய்வார்கள்" என்று சொல்லுவான்.

ஒவ்வொரு போயர் மகனும் நல்ல வீரன். தங்களுக்குள் எவ்வளவு சண்டை இட்டுக்கொண்டாலும், அவர்களுடைய சுதந்திரம் அவர்களுக்கு உயிர் போன்றது; அதற்கு ஆபத்து நேர்ந்தால் யாவரும் ஒன்று சேர்ந்து, ஒரே மனிதன் போல் அதற்காகச் சண்டை செய்வார்கள். சண்டை செய்வது அச்சாதியாரின் குணமாதலால், அவர்களுக்கு இதற்காக அதிக மான கவாத்து தேவையில்லை. **ஜெனரல் ஸ்மட்ஸ்,*** **ஜெனரல் டீ வெட், ஜெனரல் ஹெர்ட்ஸாக்,†** இவர்கள் யாவரும் பெரிய வழக்கறிஞர்களாகவும், விவசாயப் பண்ணை உடையவர்களாக வும் இருப்பதுடன் பெரிய போர் வீரர்களும் ஆவார்கள். **ஜெனரல் போதாவுக்கு** ஒன்பதினாயிரம் ஏக்கர் கொண்ட ஒரு பண்ணை இருந்தது. விவசாயத்தின் நுட்பங்களெல்லாம் அவருக்கு நன்றாகத் தெரியும். சமாதான உடன்படிக்கை நிமித்தம் அவர் ஐரோப்பா சென்றபோது ஆடுகளைப் பற்றித் தெரிந்த நிபுணர் அவரைப் போல் ஐரோப்பாவில் எவரு

---

* பீல்டு மார்ஷல் ஜான் கிறிஸ்டியன் ஸ்மட்ஸ் (1870–1950)—தென்னப்பிரிக்கப் போர் வீரரும் அந்நாட்டுப் பிரபலமான ராஜீயவாதியுமாவார். கேப் காலனியில் பிறந்த அவர், கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் படித்துப் பிறகு வக்கீலானார். தென்னப்பிரிக்கப் போரில் பெயர் பெற்ற போயர் படைத் தலைவராயிருந்தார். ஆனால், பிறகு பிரிட்டிஷா ருடன் நட்புக்குப் பாடுபட்டார். 1910–ல் தென்னப்பிரிக்க யூனியன் ஏற்பட்டதும் போதாவின் சர்க்காரில் பதவி வகித்தார். முதல் உலக யுத்தத்தின்போது இம்பீரியல் யுத்த மந்திரி சபையில் சேர்ந்தார். 1912–1918–ல் தென்னப்பிரிக்க பிரதம மந்திரியாக இருந்தபோது உலக நாடுகள் ஸ்தாபனமான சர்வதேச சங்கம் உருவாவதற்கு அதிக உதவி செய்தார். பின்னால் ஐக்கிய நாடுகள் சங்கத்திலும் தொடர்பு வைத்திருந்தார். 1939 முதல் 1948–வரை தென்னப்பிரிக்காவில் பிரதம மந்திரியாகவும் வெளிநாட்டு மந்தி ரியாகவும் இருந்தார். 1948 பொதுத் தேர்தலில் டாக்டர் மலானின் தலைமையிலிருந்த தேசியக் கட்சியிடம் தோல்வியுற்றார். தாவரங்களைக் குறித்து நல்ல ஆராய்ச்சி செய் திருந்தார்.

† ஜேம்ஸ்பார்மி மன்னிக் ஹெர்ட்ஸாக் (1866—1942)—தென்னப்பிரிக்காவின் தேசியத் தலைவர். 1924–1939 யூனியன் பிரதம மந்திரியாக இருந்தார்.

மில்லை எனச் சொல்லப்பட்டது. ஜனாதிபதி குருகர்* காலமான பின், ஜெனரல் போதா ஜனாதிபதியானார். அவருக்கு ஆங்கிலம் மிகவும் நன்றாகத் தெரியும். எனினும், இங்கிலாந்தில் அரசரையும், மந்திரிகளையும் அவர் சந்தித்தபோது தம் தாய் மொழியிலேயே எப்பொழுதும் பேசினார். இதைச் சரியல்ல வென்று யார் சொல்ல முடியும்? தம்முடைய ஆங்கில ஞானத்தைக் காண்பிப்பதற்காக, ஏன் அவர் தவறு செய்யக் கூடிய நிலைமைக்கு உட்படவேண்டும்? சரியான ஆங்கிலச் சொற்களை யோசிப்பதில் தம் சிந்தனை ஓட்டத்தை ஏன் கெடுத்துக்கொள்ள வேண்டும்? பிரிட்டிஷ் மந்திரிகள், வேண்டுமென்று செய்யாமலேயே கூட, சாதாரணப் பழக்கத்தில் இல்லாத ஓர் ஆங்கிலச் சொற்றொடரை உபயோகிக்கலாம். அவர்கள் என்ன பொருளில் அதை உபயோகித்தனர் என்பது தமக்குத் தெரியாமல் ஒரு தப்பிதமான பதில் கொடுத்துக் குழப் பம் நேரிடலாம். அதனால் அவருடைய லட்சியத்திற்குக் கஷ்டம் ஏற்படும். இவ்வளவு பெரிய தவறை அவர் ஏன் செய்ய வேண்டும்?

போயர்ப் பெண்களும், ஆண்களைப் போலவே தைரியமாக வும் கபடமற்றும் இருக்கின்றனர். போயர்கள், போயர் யுத்தத் தில் தங்கள் ரத்தத்தைச் சிந்தினார்களென்றால், அவர்களுடைய பெண்களின் தைரியமும், அப்பெண்கள் மூட்டிய உற்சாகமுமே அவர்களை அத்தியாகம் செய்யத் தூண்டின எனலாம். அப் பெண்கள் கைம்மை பூணுவதற்கு அஞ்சவில்லை; எதிர்காலத்தைப் பற்றி நினைத்துப் பொழுதை வீணாக்கவும் அவர்கள் விரும்பவில்லை.

போயர்கள் மதப்பற்றுடைய கிறிஸ்துவர்களென்று முன்பே சொல்லியிருக்கிறேன். ஆனால், அவர்களுக்குப் 'புதிய ஏற்பாட்' டில் (New Testament) நம்பிக்கை இருப்பதாகச் சொல்ல முடியாது. உண்மையில், ஐரோப்பாவும் அதை நம்புவதில்லை. மிகச் சிலரே ஏசு கிறிஸ்துவின் சாந்த தருமத்தை அறிந்து அனுசரிக்கிறார்களெனினும், அதில் தங்களுக்கு நம்பிக்கையிருப்ப தாக ஐரோப்பாவில் உரிமை கொண்டாடப்படுகிறது. போயர் களுக்கு அந்தப் 'புதிய ஏற்பாடு' பெயரளவில்தான் தெரியு மென்று சொல்லலாம். பழைய ஏற்பாட்டை (Old Testament)

---

* ஸ்டிபெனஸ் ஜோஹன்னஸ் பாலஸ் க்ருகர் (1824–1904)—போயர் தலைவர். டிரான்ஸ்வாலில் பல வருடங்கள் அரசியல் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டவர். 1883–லிருந்து 1900 வரை ஜனாதிபதியாக இருந்தார்.

அவர்கள் பக்தியுடன் படிக்கிறார்கள்; அதில் வரும் போர் பற்றிய விவரங்கள் அவர்களுக்கு மனப்பாடமாகத் தெரியும். 'கண்ணுக்குக் கண்' 'பல்லுக்குப் பல்' பறிப்பது என்ற மோஸஸின் (Moses) கொள்கையை அவர்கள் முழுவதும் ஒப்புக்கொள்ளுகின்றனர், அதன்படியே நடக்கின்றனர்.

தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்றுவதற்காக, அவர்களைத் துன்பத்தைச் சகிக்கும்படி தங்கள் மதம் சொல்லுகிறது என்று போயர்ப் பெண்கள் அறிந்திருந்தார்கள். ஆதலால், எல்லாக் கஷ்டங்களையும் பொறுமையுடனும் மகிழ்ச்சியுடனும் சகித்தார்கள். அவர்களது மனவுறுதியைக் குலைக்க லார்ட் கிட்சனர்* (Lord Kitchener) தம்மால் இயன்றதை எல்லாம் செய்தார். தனிச் சிறை முகாம்களில் அவர்களை அடைத்து வைத்திருந்தார். அங்கே அவர்கள் சொல்லவொண்ணாத் துன்பங்களையெல்லாம் அனுபவித்தனர். பட்டினியாலும், கடுமையான குளிரிலும் பொசுக்கும் வெயிலிலும் துன்புற்றனர். சில சமயங்களில், குடிவெறியாலோ அல்லது காமவெறியாலோ சுயபுத்தியை இழந்த ஆங்கிலேயச் சைனிகன், பாதுகாப்பில்லாத பெண்களைக் கற்பழிக்கத் தாக்குவான். எனினும், வீரமுள்ள அப்போயர்ப் பெண்கள் உறுதியைக் கைவிடவில்லை. கடைசியில் எட்வர்டு அரசர், தாம் இதை அனுமதிக்க முடியாதென்றும், போயர்களை அடக்குவதற்கு இந்த ஒரு முறைதான் உண்டெனில், இம்மாதிரி சண்டை நடத்துவதற்குப் பதிலாக எவ்விதமான சமாதானமும் நலமாகுமெனத் தாம் நினைப்பதாகவும், யுத்தத்தை விரைவில் முடிவுக்குக் கொண்டு வரும்படியும் லார்டு கிட்சனருக்கு எழுதினார்.

இவர்கள் பட்ட துன்பம் இங்கிலாந்திற்கு எட்டியபொழுது, ஆங்கில மக்களுக்கும் மிகுந்த மனவேதனை உண்டாயிற்று. போயர்களின் ஆண்மையை அவர்கள் பெரிதும் பாராட்டினார்கள். அவ்வளவு சிறிய சமூகத்தார், உலக முழுவதும் பரவியிருக்கும்

* பீல்டு மார்ஷல் லார்டு கிட்சனர் (1850–1916)—இவர் பிரபலமான பிரிட்டிஷ் போர்வீரர். ஜெனரல் கார்டனைக் கொன்றதற்காகச் சூடானைச் சேர்ந்த மதவெறியர்களை 1898-ல் ஓம்துர்மான் என்ற இடத்தில் முறியடித்து வஞ்சம் தீர்த்துக் கொண்டார். தென்னாப்பிரிக்க யுத்த ஆரம்ப காலங்களில் லார்டு ராபர்ட்ஸுக்குப் படையில் உதவி அதிகாரியாக இருந்தார். பின்னர் 1900-ல் அவரே தளபதியானார். 1902 முதல் 1909 வரை இந்தியாவின் பிரதம சேனாதிபதியாக இருந்தார். 1914 ஆகஸ்டில் ஜெர்மனியுடன் போர் மூண்டபோது யுத்த மந்திரியானார். ராணுவத்தைப் பலப்படுத்திப் புகழ்பெற்றார் இவர் 1916 ஜூன் 5-ந் தேதி ரஷியாவுக்கு ''ஹாம்ஷயர்'' என்ற கப்பலில் போய்க்கொண்டிருந்தபோது, எதிரியின் நீர்மூழ்கிக் கப்பல் குண்டால் தாக்குண்டு கப்பலுடன் மூழ்கிவிட்டார்.

தங்கள் ஏகாதிபத்தியத்தோடு சண்டை செய்தது ஆங்கிலேயரின் மனத்தை உறுத்திக்கொண்டிருந்தது. ஆனால், சிறை முகாம்களில் அடைத்து வைக்கப்பட்டிருந்த பெண்களின் துயரெலாம், அப் பெண்கள் மூலமாக அல்ல, அவர்களின் ஆண்கள் மூலமுமல்ல— அவர்களோ யுத்தகளங்களில் வீரத்துடன் அப்பொழுது சண்டை செய்துகொண்டிருந்தனர்—ஆனால் அச்சமயம் தென்னாப்பிரிக்காவில் இருந்த ஒரு சில உயரிய நோக்குடைய ஆங்கில ஆண்கள், பெண்கள் இவர்கள் மூலம், இங்கிலாந்திற்கு எட்டியதும், ஆங்கிலேயர் மனமிரங்கினர். காலஞ்சென்ற ஸர் ஹென்றி காம்பெல்-பான்னர்மான்* (Sir Henry Campbell-Bannerman) ஆங்கில மக்களின் மனத்தை உணர்ந்து யுத்தத்தை எதிர்த்தார். காலஞ் சென்ற மிஸ்டர் ஸ்டெட் (Mr. Stead), கடவுள் ஆங்கிலேயருக்கு இப்போரில் தோல்வியை உண்டாக்க வேண்டுமெனப் பகிரங்கமாகப் பிரார்த்தித்ததுடன் மற்றவர்களையும் பிரார்த்தனை செய்யும்படி சொன்னார். இது ஓர் அருமையான காட்சி. துயரை உண்மையில் தைரியத்துடன் சகித்தால் அது கல்மனத்தையும் கரைத்து விடும். சகிப்பு அல்லது தவத்தின் வலிமை இத்தகையது; இதுவே சத்தியாக்கிரகத்தின் ரகசியம்.

இதன் பயனாக விரீனிகிங் (Vereeniging) சமாதான உடன்பாடு செய்யப்பட்டு, தென்னாப்பிரிக்காவின் நான்கு நாடுகளும் ஓர் ஆளுகையின் கீழ்க் கொண்டுவரப்பட்டன. பத்திரிகை படிக்கும் எல்லா இந்தியர்களுக்கும் இந்தச் சமாதானத்தைப் பற்றித் தெரியும் என்றாலும், அதைப்பற்றிய சில உண்மைகள் பலருக்குத் தெரிந்திரா. சமாதானத்தைத் தொடர்ந்து யூனியன் உடனே ஏற்படுத்தப்படவில்லை. ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு தனிச் சட்டசபை இருந்தது. மந்திரிகள் சட்டசபைக்கு முழுவதும் ஜவாப்தாரிகளாக இருக்கவில்லை. டிரான்ஸ்வாலும், பிரீ ஸ்டேட்டும் கிரௌன் காலனிகள் போல் ஆளப்பட்டன. ஜெனரல் போதாவும் ஜெனரல் ஸ்மட்ஸும் இத்தகைய குறுகிய சுதந்திரத்தில் திருப்தியடைகிறவர்களல்ல. அவர்கள் சட்டசபையிலிருந்து விலகி நின்றனர். அரசாங்கத்துடன் எந்தத் தொடர்பு வைத்துக் கொள்ளவும் மறுத்தனர். ஜெனரல் போதா தம்மை இவ்வளவு பெரியவராக நினைத்துக்கொள்ள வேண்டியதில்லை என்று லார்டு

* சர் ஹென்றி காம்பல் பான்னர்மான்—1905–லிருந்து 1908–வரை பிரிட்டிஷ் லிபரல் கட்சி மந்திரி சபையில் பிரதம மந்திரியாக இருந்தார். தென்னாப்பிரிக்க பிரச்னை தீருவதற்குப் பெரும்பாலும் இவரது முயற்சியே காரணம் எனலாம். இவருடைய மந்திரி சபையில் க்ரே, லாயிட் ஜார்ஜ், ஆஸ்க்வித், மார்லி, சர்ச்சில் போன்ற திறமைசாலிகள் இருந்து பணியாற்றியிருக்கின்றனர்.

மில்னர் குத்தலாக ஒரு பிரசங்கத்தில் சொன்னுர். அவர் இல்லாமலே தேசத்தின் அரசாங்கத்தை நடத்த முடியும் என்று அவர் நினைத்தார். இவ்விதம் லார்டு மில்னர் முடிவு செய்து மாப்பிள்ளையில்லா கல்யாணம் செய்யத் தீர்மானித்தார்.

போயர்களுடைய தீரம், சுதந்திரப் பற்று, தியாகம் இவைகளைப்பற்றிக் குன்ருத பெருமையுடன் எழுதியிருக்கிறேன். ஆனுல், அவர்களுக்கு ஏற்பட்ட சோதனைக் காலங்களில் அவர்களுக்குள் அபிப்பிராய பேதமில்லை என்ருவது, அவர்களில் தைரியம் இல்லாதவர்களே கிடையாது என்ருவது பொருள் படுமாறு நான் சொல்ல நினைக்கவில்லை. லார்டு மில்னர், சுலபமாகத் திருப்தி அடையக்கூடிய போயர்களைக் கொண்ட கட்சி ஒன்றைத் தயார் செய்து, அவர்கள் உதவியைக் கொண்டு சட்டசபையை வெற்றியுடன் நடத்த நினைத்தார். ஒரு நாடகத்தை, அதற்கு ஒரு நாயகன் இல்லாது நடத்திவிட முடியாது. காரியார்த்தமான இந்த உலகத்தில், தான் சமாளிக்க வேண்டியதாயிருக்கும் ஒரு நிலைமையில் நாயகனுக இருக்கும் முக்கிய மனிதனை விட்டுக் காரியங்களை வெற்றியுடன் நடத்த நினைக்கும் அரசாங்க நிர்வாகியைப் பைத்தியக்காரன் என்றே சொல்லவேண்டும். லார்டு மில்னரின் விஷயமும் இவ்வாறே இருந்தது. வாயால் வீருப்புப் பேசினுலும், ஜெனரல் போதாவின் உதவியின்றி டிரான்ஸ்வாலையும், பிரீ ஸ்டேட்டையும் ஆளுவது மிகக் கடினமாயிருந்தது என்றும், இதனுல் கவலையும் பரபரப்பும் அடைந்தவராய்த் தம் தோட்டத்தில் அவர் பல தடவைகளில் காணப்பட்டாரென்றும் சொல்லப்பட்டது. விரீனிகிங் சமாதானத்தைத் தாம் அர்த்தம் செய்துகொண்டபடி. போயர்கள் உள்நாட்டில் பூரண சுயராஜ்யத்திற்கு உரிமையாளர்கள் என்று ஜெனரல் போதா விளக்கமாகத் தெரிவித்தார். அப்படியில்லையானுல் தாம் அவ்வுடன்படிக்கையில் கையெழுத்திட்டிருக்க மாட்டாரென்றும் சொன்னுர். இதற்குப் பதிலாக, இம்மாதிரி வாக்குறுதி ஒன்றும் தாம் கொடுக்கவில்லையென லார்டு கிட்சனர் உரைத்தார். போயர்கள் தங்கள் ராஜபக்தியை நிரூபித்துவிட்டதால், அவர்களுக்குப் படிப்படியாகச் சுயராஜ்யம் கொடுக்கப் படுமென்று அவர் சொன்னுர். இவர்களுக்குள் யார் மத்தியஸ்தம் செய்வது? மத்தியஸ்தம் பிரரேபிக்கப்பட்டாலும் ஜெனரல் போதா அதை ஒப்புக்கொள்ளுவாரென்று எப்படி எதிர்பார்க்க முடியும்? இவ்விஷயத்தைப் பற்றி ஆங்கில அரசாங்கத்தார் வந்த முடிவு, அவர்களுக்குப் பெருமை தரத்தக்கது. ஒப்பந்தத்

திற்கு மெலிந்த கட்சியார் செய்யும் வியாக்கியானத்தை, வலுத்த கட்சியார் ஏற்றுக்கொள்ள வேண்டியதே என்று அவர்கள் ஒப்புக்கொண்டனர். அதுவே நியாயத்திற்கும், உண்மைக்கும் பொருத்தமானது. நான் எதுவேண்டுமென்ருலும் சொல்ல நினைத்திருக்கலாம்; ஆனல், அதைக் கேட்போர் அல்லது படிப்போரைப் பொறுத்தமட்டில், அவர்கள் கொள்ளும் கருத்தையே தெரிவிக்க அது பேசப்பட்டது அல்லது எழுதப்பட்டதென்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நாம் வாழ்க்கையில் இவ்வருமையான நியமத்திலிருந்து அடிக்கடி வழுவிச் செல்கிருேம். பொய்யைவிட அதிகத் தீமை விளைவிக்கத் தக்கதும், உண்மையை முற்றிலும் உரைக்காததுமான வார்த்தைகளை, உண்மைக்குப் பதிலாக உபயோகிப்பதால்தான், நம்முடைய சச்சரவுகள் பலவும் ஏற்படுகின்றன.

இங்ஙனம் உண்மை—இச்சந்தர்ப்பத்தில் ஜெனரல் போதா—வெற்றியடைந்த பிறகு அவர் வேலே செய்ய ஆரம்பித்தார். கடைசியில் எல்லா நாடுகளும் ஒன்ருகச் சேர்க்கப்பட்டு தென்னுப்பிரிக்கா சுய ஆட்சியையும் பெற்றது. அதன் கொடி இப்பொழுது யூனியன் ஜாக் (Union jack). பூகோள படத்தில் பிரிட்டிஷ் நாடு என்பதற்கு அது சிவப்பு நிறத்தில் காண்பிக்கப்படுகிறது. எனினும், தென்னுப்பிரிக்கா பூரண சுதந்திர நாடு என்று சொல்லுவது மிகையாகாது. தென்னுப்பிரிக்க அரசாங்கத்தின் சம்மதமில்லாமல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஒரு செப்புக் காசுகூட அதனிடமிருந்து பெற முடியாது. அது மாத்திரமல்ல; ஆங்கிலக் கொடியான யூனியன் ஜாக்கை எடுத்துவிட்டு, பெயரிலும் பூரண சுதந்திர நாடாக அது விரும்பினல், அதைத் தடுப்பதற்கு ஒன்றுமில்லேயென்றும் ஆங்கில மந்திரிகள் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். இதுவரை போயர்கள் இதைச் செய்யவில்லேயென்ருல் அதற்குப் பலமான காரணங்கள் இருக்கின்றன. போயர் தலேவர்கள் சாமர்த்தியமுள்ள விவேகிகள். தங்களுக்கு ஒருவித நஷ்டமும் இல்லாதபோது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கூட்டுறவில் இருப்பதில் அவர்களுக்கு யாதொரு ஆட்சேபணேயும் தோன்றவில்லே. மற்ருெரு முக்கியமான காரணமும் உண்டு. நேட்டாலில் ஆங்கிலேயர் அதிகம்; கேப் காலனியில் போயர்களே விட அதிகமில்லாவிடினும் அவர்களே ஒரு பெரிய எண்ணிக்கையில் இருக்கின்றனர்; ஜொஹன்னஸ்பர்க்கிலும் ஆங்கிலேயர் அதிகம். இது இங்ஙனம் இருப்பதால் போயர்கள் பூரண சுதந்திரக் குடியரசு ஒன்றைத் தென்னுப்பிரிக்காவில் நிலேநாட்ட

முயற்சி செய்தால், இதன் பயனுக உள்நாட்டுக் கலகங்களும் சண்டைகளும் உண்டாகும். ஆதலால், தென்னுப்பிரிக்கா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் ஒரு நாடாக இருந்து வருகிறது.

தென்னுப்பிரிக்க யூனியனுடைய அரசியல் அமைப்பு தயாரிக்கப்பட்ட விதம் கவனிக்கத் தக்கது. நான்கு காலனி. நாடுகளின் சட்டசபைகளாலும் நியமிக்கப்பட்ட, எல்லாக் கட்சிகளுடைய பிரதிநிதிகளையும் கொண்ட ஒரு தேசீய சபையால் அரசியல் அமைப்பு ஒன்று ஏகமனதாகத் தயாரிக்கப்பட்டது. ஆங்கிலப் பார்லிமெண்ட் அதை முழுதுமே அங்கீகரிக்க வேண்டியிருந்தது. காமன்ஸ் சபையில் ஓர் அங்கத்தினர் அதிலிருக்கும் ஓர் இலக்கண வழுவைச் சுட்டிக்காட்டி, அது திருத்தப்பட வேண்டுமெனத் தெரிவித்தார். தவறில்லாத இலக்கணம் ஓர் அரசாங்கத்தை நடத்துவதற்கு அவசியமில்லை என்றும், பிரிட்டிஷ் மந்திரிகளும், தென்னுப்பிரிக்க மந்திரிகளும் கலந்து அதன் பயனுக அவ்வமைப்பு உண்டாக்கப்பட்டிருக்கிறதென்றும், ஆங்கிலப் பார்லிமெண்டுக்கு அதிலிருக்கும் இலக்கணப் பிழையைத் திருத்தும் அதிகாரங்கூட விடப்படவில்லை என்றும் சொல்லி, காலம் சென்ற சர் ஹென்றி காம்பெல் பான்னர்மான் அத்திருத்தத்தை ஏற்க மறுத்தார். அவ்வரசியல் அமைப்பு ஒரு மசோதாவாகக் கொண்டு வரப்பட்டு, ஆங்கிலப் பார்லிமெண்ட் சபைகள் இரண்டிலும் ஒரு திருத்தமுமில்லாமல் நிறைவேற்றப் பட்டு சட்டமாயிற்று.

இது சம்பந்தமாக இன்னுமொரு விஷயமும் குறிப்பிடத் தக்கது. தென்னுப்பிரிக்க யூனியன் சட்டத்தின் சில பாகங்கள் அர்த்தமற்றனவாய் சாதாரண மக்களுக்குத் தோன்றலாம். அவை அதிகச் செலவுக்குக் காரணமாயிருந்தன. யூனியன் அமைப்பை உண்டாக்கினவர்களுக்கு இது தெரியாமலில்லை. பிழையற்ற ஓர் அமைப்பை உண்டாக்குவது அவர்கள் லட்சியமல்ல; ஆனுல், அவ்வமைப்பை வெற்றியுடன் வேலை செய்யத் தக்கவாறு இணங்கிக் கொடுத்து ஒரு முடிவுக்கு வருவதே அவர்கள் நோக்கமாயிருந்தது. எந்தக் காலனி நாடும் தன் தலைநகரை விட்டுவிடச் சம்மதிக்காததால் அந்த யூனியனுக்கு நான்கு தலைநகரங்கள் இருக்கின்றன. அதேபோல், பழைய தனிச் சட்டசபைகள் எடுக்கப்பட்டபோது, யூனியனிடத்திலிருந்து சில அதிகாரங்கள் பெற்ற மாகாணச் சபைகள் நிறுவப்பட்டன. கவர்னர் பதவிகள் எடுக்கப்பட்ட போதிலும் அவைகளுக்குச் சமமான உத்தியோகஸ்தர்கள்

மாகாண நிர்வாகிகள் என்ற பெயருடன் நியமிக்கப்பட்டனர். நான்கு சட்டசபைகள், நான்கு தலைநகரங்கள். நான்கு கவர்னர்கள் அனுவசியம், வெளி ஆடம்பரம் என்று எல்லோருக்கும் தெரியும். ஆனல், விவேகமுள்ள தென்னுப்பிரிக்க ராஜதந்திரிகள் இவற்றை ஆட்சேபிக்கவில்லை. இவ்வேற்பாடு வெளிப்பகட்டாக இருப்பதுடன், செலவும் இதனல் அதிகமாகிறது. ஆனல், ஒற்றுமையே முக்கியமாயிருந்தது. ஆதலால் வெளியார் குறை கூறுவதைப் பற்றிக் கவனியாமல் தங்களுக்குச் சரியெனத் தோன்றியதைச் செய்து, ஆங்கிலப் பார்லிமெண்டின் சம்மதத்தைப் பெற்றனர்.

தென்னுப்பிரிக்க சரித்திரத்தைச் சுருக்கமாகச் சொல்லியிருக்கிறேன். ஏனெனில், அஃதின்றி மகத்தான சத்தியாக்கிரகப் போரின் உட்கருத்தைத் தெளிவாகச் சொல்லுவது கடினமென எனக்குத் தோன்றிற்று. இந்தியர்கள் எப்படி இத்தேசத்திற்கு வந்தார்கள், சத்தியாக்கிரகம் ஆரம்பிப்பதற்கு முன் தங்கள் இடுக்கண்களை எப்படிச் சகித்தனர் என்பதை இனிப் பார்ப்போம்.

## மூன்ருவது அத்தியாயம்

# தென்னுப்பிரிக்காவிற்கு இந்தியர் வருகை

முன் அத்தியாயத்தில் ஆங்கிலேயர் எப்படி வந்தார்கள் என்பதுபற்றிக் கண்டோம். அவர்கள் நேட்டாலில் குடியேறி ஜூலுக்களிடமிருந்து சில நிலபுலங்களைப் பெற்றனர். நேட்டாலில் முதல்தரமான கரும்பு, தேயிலை, காப்பி முதலியன பயிர் செய்ய முடியுமென அவர்களுக்குத் தோன்றிற்று. அதிக அளவில் அவைகளைப் பயிர் செய்வதற்கு ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் தேவையாயிருக்கும். அங்கே குடியேறிய சொற்ப ஆங்கிலேயரின் சக்திக்கு இது மீறியதாயிருந்தது. முதலில் ஆசை காட்டியும், பின்னல் பயமுறுத்தியும், நீக்கிரோக்களிடம் வேலை வாங்க முயற்சி செய்தார்கள். ஆனல், அடிமை வைத்திருக்கும் பழக்கம் அதற்குள் எடுக்கப்பட்டுவிட்டபடியால் இம் முயற்சி வீணயிற்று. நீக்கிரோவுக்குக் கஷ்டப்பட்டு வேலை செய்து பழக்கமில்லை. வருடத்தில் ஆறு மாதம் வேலை செய்து வருடம் முழுவதையும் அவன் சுலபமாய்க் கடத்திவிடுவான். அப்படியிருக்க அவன் நீண்ட காலத்துக்கு ஒரு முதலாளியின் கீழ் ஏன் கட்டுப்பட்டு இருக்கவேண்டும்? நிலையான தொழிலாளர் இல்லாமல் ஆங்கிலேயர் தங்கள் தோட்டங்களை வைத்து அதிகச் சாகுபடி செய்ய முடியவில்லை. ஆதலால் இந்திய அரசாங்கத்தை அணுகித் தங்களுக்குத் தொழிலாளர்கள் கொடுத்துதவ வேண்டுமெனக் கேட்டனர். அரசாங்கத்தார் அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கவே ஒப்பந்தத் தொழிலாளர்கள் இந்தியாவிலிருந்து நேட்டாலுக்கு முதன்முதல் 1860-ஆம் வருடம் நவம்பர் மாதம் 16-ந் தேதி வந்து சேர்ந்தனர். இது உண்மையாகவே இச்சரித்திரத்தில் ஒரு விதிவசமான நாள். இது இல்லாவிடில் தென்னுப்பிரிக்காவில் இந்தியர் வந்திருக்கமாட்டார்கள்; சத்தியாக்கிரகமும் நடந்திருக்காது; இப்புத்தகமும் எழுதப்பட்டிருக்காது.

இதில் இந்திய அரசாங்கம் செய்தது சரியல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள், நேட்டாலிலிருக்கும் அவர்கள் சகோதரர்கள்

பேரில், தெரிந்தோ தெரியாமலோ, அதிகப் பரிவு காட்டினுர்கள். தொழிலாளர்களின் உரிமைகளேக் காப்பாற்றுவதற்கென ஒப்பந்தங்களில் பல ஷரத்துக்கள் சேர்க்கப்பட்டன என்பது உண்மைதான். அவர்களுடைய உணவுக்கும் ஒரு மாதிரி நல்ல ஏற்பாடும் செய்யப்பட்டது. ஆனுல், ஓர் அயல்நாட்டுக்குச் சென்றிருக்கும் இப்படிப்பட்ட தொழிலாளர்களுக்குக் குறைகள் ஏற்பட்டால், அவைகளே எங்ஙனம் தீர்ப்பது என்ற விஷயத்தில் மாத்திரம் போதுமான கவனம் செலுத்தப்படவில்லே. அவர்களுடைய மதத் தேவைகளேப் பற்றியும், ஒழுக்கத்தைக் காப்பாற்றத்தக்க முறைகளேப் பற்றியும் யோசிக்கப்படவுமில்லே. அடிமைத்தனம் சட்டப்படி ஒழிக்கப்பட்டிருந்தாலும் தங்கள் தொழிலாளர்களே அடிமைகளாக்க வேண்டுமென்ற விருப்பம் முதலாளிகளின் மனத்தை விட்டு அகலாமலிருந்தது. இதை இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் சரியாக ஆலோசிக்கவில்லே. நேட்டாலுக்குப் போன தொழிலாளர்கள் அங்கிருக்கும் காலத்தில் அடிமைகளாவார்கள் என்பதை அவர்கள் உணரவில்லே. ஆனுல், அதை அவர்கள் உணர்ந்திருக்க வேண்டியது அவசியம். இத்தொழிலாளர்கள் நிலேமையை நன்ருகத் தெரிந்து கொண்டிருந்த காலஞ்சென்ற **ஸர் வில்லியம் ஹண்டர் (Sir W. W. Hunter)** இது சம்பந்தமாகக் குறிப்பிடத் தக்க ஒரு சொல்லே உபயோகித்தார். நேட்டாலிலிருக்கும் இந்தியத் தொழிலாளர்களேப் பற்றி எழுதும்போது, அவர்கள் நிலேமை ‘அரை அடிமை வாழ்க்கை’ என அவர் குறிப்பிட்டார். மற்ருெரு சமயம் ஒரு கடிதத்தில், அவர்கள் நிலேமை ‘அடிமை வாழ்வை யொட்டியது’ என விவரித்தார். நேட்டாவில் ஒரு கமிஷன் முன்பு சாட்சியம் கொடுக்கும்போது, அந்நாட்டின் ஐரோப்பியப் பிரமுகரான காலஞ்சென்ற **ஸ்ரீ ஹார்ரி எஸ்கோம்பு (Mr. Harry Escombe)** என்பவரும் அங்ஙனமே ஒப்புக்கொண்டார். இம்மாதிரி சாட்சியங்களுக்கு நேட்டாலேச் சேர்ந்த மற்ற முக்கியமான ஐரோப்பியர்களுடைய வாக்குமூலங்களிலிருந்தும் ஆதாரங்களே எளிதாகச் சேகரிக்கலாம். இந்திய அரசாங்கத்திற்கு இது விஷயமாய் அனுப்பப்பட்ட விண்ணப்பங்களில் இவை பலவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனுல், விதியின்படி நடந்தே தீரும். இத்தொழிலாளர்களே நேட்டாலுக்குக் கொண்டுபோன கப்பல், மகத்தான சத்தியாக்கிரக இயக்கத்தின் வித்திணேயும் எடுத்துச் சென்றது.

இத்தொழிலாளிகள், நேட்டாலுக்கு ஆள்சேர்க்கும் கங்காணி களால் எப்படி ஏமாற்றப்பட்டார்கள்; எப்படி இந்த ஏமாற்றத் தால் தங்கள் தாய்நாட்டை விட்டு அவர்கள் சென்றார்கள்; எப்படி நேட்டாலுக்குப் போன பிறகு உண்மை இவர்களுக்குத் தெரிந்தது; இவர்கள் அங்கிருந்தது, மற்றவர்கள் இவர்களைப் பின்பற்றிச் சென்றது; மதம், ஒழுக்கம் இவற்றின் கட்டுப்பாடு களின் முறிவு; இந்தத் துரதிருஷ்ட மக்களிடையே மடந்தைய ருக்கும் வேசையருக்கும் எந்த வித்தியாசமும் இல்லாமல் போனது என்பவைகளைப் பற்றிக் கூறுவதற்கு இங்கே இட மில்லை.

ஒப்பந்தத் தொழிலாளர்கள் நேட்டாலுக்குப் போன சமா சாரம் மாரிஷஸுக்குக்* (Mauritius) கிடைத்ததும், அவ்விதத் தொழிலாளர்களுடன் சம்பந்தமிருக்கும் வியாபாரிகளும் அவர் களை அங்கே பின்பற்றிச் சென்றார்கள். இந்தியாவிலிருந்து நேட்டாலுக்குப் போகும் வழியிலுள்ள மாரிஷஸில் ஆயிரக்கணக் கான இந்தியர், தொழிலாளர்களும் வியாபாரிகளுமாய் இருக்கின்றனர். மாரிஷஸில் இருந்த ஓர் இந்திய வியாபாரி யான காலஞ்சென்ற சேட் அபுபகர் ஆமத் நேட்டாலில் ஒரு கடை வைக்க நினைத்தார். இந்திய வியாபாரிகளின் சாமர்த் தியத்தைப்பற்றி நேட்டால் ஆங்கிலேயருக்கு அப்பொழுது ஒன்றும் தெரியாது. அவர்கள் இந்திய வியாபாரிகளைப் பொருட்படுத்தவுமில்லை. ஆங்கிலேயர்கள், ஒப்பந்தத் தொழி லாளர்களின் உதவியைக் கொண்டு கரும்பு, தேயிலை, காப்பி முதலிய லாபம் அதிகம் தரக்கூடிய பொருள்களைப் பயிர் செய்ய முடிந்தது. அவர்கள் சர்க்கரையும் செய்தனர். வியக்கத்தக்க வகையில் சிறிது காலத்திற்குள் தென்னுப்பிரிக்காவுக்கு அவசிய மான சர்க்கரை, தேயிலை, காப்பி ஆகியவற்றை ஓரளவு உண் டாக்கிக் கொடுத்தார்கள். தங்களுக்கெனப் பெரிய மாளிகைகள் கட்டிக்கொண்டு, காட்டையும் அழகான தோட்டமாக ஆக்கு வதற்கான பணமும் சம்பாதித்தனர். இச்சந்தர்ப்பத்தில் அபுபகர் சேட் போல உண்மையும், தைரியமும் உள்ள ஒரு வியாபாரி தங் கள் மத்தியில் வருவதை அவர்கள் பொருட்படுத்தவில்லை. அத் துடன் ஓர் ஆங்கிலேயனும் அவரோடு கூட்டாகச் சேர்ந்தான்.

* இந்து மகா சமுத்திரத்தில் மடகாஸ்கருக்கு 500 மைல் கிழக்கிலுள்ள ஒரு தீவு இது. பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்டது. சர்க்கரை உற்பத்திக்குப் பெயர் போன இடம். இதன் விஸ்தீரணம் 720 சதுர மைல்கள். 1952-ஆம் ஆண்டு எடுத்த கணக்குப்படி இதன் ஜனத்தொகை 5 லட்சம்.

அபுபகர் சேட் வியாபாரம் செய்து நிலமும் வாங்கினுர். அவரது செல்வப் பெருக்கைப் பற்றிய சமாசாரம் அவர் சொந்த ஊரான போர்பந்தருக்கும்* அதைச் சுற்றியுள்ள கிராமங்களுக்கும் எட்டியது. மெமன்† வகுப்பாரைச் சேர்ந்த மற்றவரும் இதன் காரணமாக நேட்டால் சென்றனர். சூரத்திலிருந்து போராக்கள் அவர்களைப் பின்பற்றினர். இந்த வியாபாரிகளுக்குக் குமாஸ்தாக்கள் வேண்டியிருந்தது. எனவே, கூர்ஜரம், கத்தியவாரைச் சேர்ந்த ஹிந்து குமாஸ்தாக்களும் அவர்களுடன் சென்றனர்.

இப்படி இரு வகையான இந்தியர் நேட்டாலுக்கு வந்தனர். முதலாவது, சுதந்திரமுள்ள வியாபாரிகளும் அவர்களுடைய சுதந்திரமான வேலைக்காரர்களும்; இரண்டாவது, ஒப்பந்தத் தொழிலாளர்கள். காலக்கிரமத்தில் இத்தொழிலாளர்களுக்குக் குழந்தைகள் உண்டாயின. அக்குழந்தைகள் கூலிகளாயிருக்கக் கடமைப்பட்டவர்களல்லவெனினும் அந்நாட்டின் கடுமையான சட்டங்கள் பலவற்றுல் பாதிக்கப்பட்டனர். அடிமைகளின் குழந்தைகள் அடிமைத்தனத்திலிருந்து எப்படி தப்ப முடியும்? ஐந்து ஆண்டு ஒப்பந்தத்தின்கீழ் இத்தொழிலாளர்கள் நேட்டாலுக்குச் சென்றனர். அக்காலத்திற்குப் பிறகு அவர்கள் கூலி வேலை செய்ய வேண்டிய அவசியமில்லை. சுயேச்சையான தொழிலாளர்களாய் அவர்கள் விருப்பப்படி நேட்டாலிலேயே வேலை செய்யவும், வியாபாரம் செய்யவும் அங்கே குடியேறவும் அவர்களுக்கு உரிமையுண்டு. சிலர் அப்படிச் செய்தனர்; சிலர் தாய் நாட்டுக்குத் திரும்பினர். நேட்டாலிலிருந்த இந்தியர்கள் 'சுதந்திர இந்தியர்கள்' என்று சொல்லப்பட்டார்கள். இவ்வகுப்பின் விசித்திரமான நிலைமையைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். முன் சொல்லப்பட்ட முழுச் சுதந்திரம் பெற்ற இந்தியர்கள் அனுபவித்து வந்த உரிமை யாவும் இவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. உதாரணமாக, இவர்கள் ஓர் இடத்திலிருந்து மற்ருேர் இடத்திற்குப் போக அனுமதி பெறவேண்டும்; இவர்களில் ஒருவர் மணம் செய்து, அந்த மனைவி சட்டப்படி ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமானுல் அவர், 'குடியேறிய இந்தியர்கள் பாதுகாப்பாளர்' என்னும் உத்தியோகஸ்தரிடத்தில் அதைப் பதிவு செய்யவேண்டும். இவ்வாறு இவர்கள் மற்றக் கடுமையான கட்டுப்பாடுகளுக்கும் உட்படுத்தப்பட்டார்கள்.

---

* கத்தியவாரில் உள்ள ஒரு பட்டணமே போர்பந்தர். இதைச் சுதாமாபுரி என்றும் கூறுவதுண்டு. இங்கேதான் மகாத்மா காந்தி பிறந்தார்.

† மெமன், போரா: குஜராத்திலுள்ள இரு முஸ்லிம் வகுப்பினர்.

ஒப்பந்தத் தொழிலாளர்களேயும், சுயேச்சை பெற்ற இந்தியர்களேயும் தவிர நீக்கிரோக்களோடும் தாங்கள் வியாபாரம் செய்ய முடியுமென இந்திய வியாபாரிகள் அறிந்தனர். நீக்கிரோக்கள் ஆங்கில வியாபாரிகளேக் கண்டு அஞ்சினர்கள். ஆகையால், இந்திய வியாபாரிகள் அவர்களுக்கு மிகச் சௌகரியமாக இருந்தனர். ஐரோப்பிய வியாபாரி நீக்கிரோக்களுடன் வியாபாரம் செய்ய விரும்பினன். ஆனல், நீக்கிரோக்கள் அவனிடம் மரியாதையை எதிர்பார்க்க முடியாது. தங்கள் பணத்துக்குத் தகுந்த பொருளே அவன் கொடுத்தாலே அதைப் பெரிய அதிர்ஷ்டமென்று அவர்கள் நினேக்கவேண்டும். நான்கு ஷில்லிங் பெறுமான ஒரு சாமானே வாங்கி அதற்காக ஒரு பவுன் கொடுத்தால் பதினறு ஷில்லிங்குக்குப் பதிலாக நான்கு ஷில்லிங்கே பாக்கி கிடைக்கும்; சில சமயங்களில் அதுவும் கிடைக்காமல் போவதும் உண்டு. சில நீக்கிரோக்கள் இன்னும் அதிகக் கசப்பான அனுபவங்களேப் பெற்றிருக்கின்றனர். அந்த அப்பாவி நீக்கிரோ, பாக்கியைக் கேட்பானுனல், அல்லது தனக்குச் சேர வேண்டியதற்குக் குறைவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று காட்டுவானுனல்,அதற்குப் பதில் வசவே கிடைக்கும். விஷயங்கள் அத்துடன் நின்றுல் அது தனது நல்ல காலமென அவன் நினேத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிடில் திட்டுடன் அடி அல்லது உதையும் கிடைக்கும். எல்லா ஆங்கிலேய வியாபாரிகளும் இம்மாதிரி நடந்துகொண்டார்கள் என்று நான் சொல்லவில்லே. ஆனல், இம்மாதிரி நடப்பவர்களின் தொகை அதிகமென்று பயமின்றிச் சொல்லலாம். இந்திய வியாபாரிகள் நீக்கிரோக்களுடன் நல்லதனமாகப் பேசுவார்கள்; வேடிக்கையாகவும் நடந்துகொள்ளுவார்கள். கடைக்குள் நீக்கிரோ நுழைந்து தான் வாங்கும் சாமானேக் கையில் எடுத்துப் பார்க்க விரும்புவான். இந்திய வியாபாரிகள் இதையெல்லாம் அனுமதிப்பார்கள். பாரமார்த்திக எண்ணத்தால் அவர்கள் இவ்விதம் அனுமதிக்கவில்லே யென்பதும், சொந்த லாபம் கருதியே இவ்விதம் நடந்தார்களென்பதும் உண்மைதான். நீக்கிரோவை ஏமாற்றச் சந்தர்ப்பம் கிடைத்தால், இந்தியனும் அதை விடமாட்டான். ஆனல், நீக்கிரோக்களே அவன் மரியாதையாக நடத்தியது, அவர்களிடத்தில் அவனுக்குச் செல்வாக்கை உண்டாக்கிற்று. தவிர, நீக்கிரோ இந்திய வியாபாரியிடத்தில் எப்பொழுதும் பயப்படவில்லே. இந்திய வியாபாரி, நீக்கிரோவை ஏமாற்ற முயன்று, அது கண்டுபிடிக்கப்பட்ட பிறகு நீக்கிரோக்களிடம் அடி வாங்கியதும் உண்டு. நீக்கிரோக்கள் இந்திய வியாபாரிகளேப் பல தட

வைகளில் திட்டியும் இருக்கின்றனர். இந்தியர்களையும் நீக்கிரோக்களையும் பொறுத்தமட்டில், இந்தியர்களே நீக்கிரோக்களுக்கு அஞ்சினர். இவற்றின் விளைவாக நீக்கிரோக்களின் வியாபாரம் இந்தியர்களுக்கு மிக லாபம் தருவதாக இருந்தது. நீக்கிரோக்கள் தென்னுப்பிரிக்கா முழுதும் இருந்தனர்.

*1880*-ஆம் வருட வாக்கில் டிரான்ஸ்வாலிலும், ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டிலும் போயர் குடியரசுகள் இருந்தன. இவைகளைச் சேர்ந்த நீக்கிரோக்களுக்கு யாதோர் அதிகாரமுமில்லை ; எல்லாம் வெள்ளை மனிதர்களின் விவகாரமாகவே இருந்தது என்பதை நான் சொல்லத் தேவையில்லை. போயர்கள் கபடமும் டம்பமு மற்று நேர்மையுள்ளவராய் இருந்ததால், இந்தியர்களுடன் வியாபாரத் தொடர்பு வைத்துக் கொள்ளுவது தம் மரியாதைக்குக் குறைவென நினைக்கமாட்டார்களென்று இந்திய வியாபாரிகள் கேள்விப்பட்டனர். ஆதலால் பலர் டிரான்ஸ்வாலுக்கும் பிரீ ஸ்டேட்டுக்கும் சென்று அங்கே கடைகளை ஏற்படுத்தினர். அச்சமயத்தில் ரெயில்பாதை இல்லாததால், அவர்கள் அதிக லாபம் சம்பாதித்தனர். அவர்கள் எதிர்பார்த்தது நிறைவேறியது. போயர்களுடனும், நீக்கிரோக்களுடனும் ஏராளமான வியாபாரம் செய்து வந்தனர். இம்மாதிரியே பல இந்திய வியாபாரிகள் கேப் காலனிக்கும் சென்று பொருளீட்டத் தொடங்கினார்கள். இவ்விதம் இந்தியர்கள் நான்கு காலனி நாடுகளிலும் சிறு எண்ணிக்கைகளில் பரவியிருந்தனர்.

பூரண சுதந்திரமுள்ள இந்தியர்களின் தொகை இப்பொழுது நாற்பது முதல் ஐம்பது ஆயிரம்வரை இருக்கும். 'சுதந்திர இந்தியர்கள்' என்று சொல்லப்பட்டவர்கள், அதாவது ஒப்பந்தத்திலிருந்து விடுபட்ட தொழிலாளர்களும் அவர்கள் வழி வந்தவர்களும் சேர்ந்து சுமார் ஒரு லட்சம் பேர் இருப்பார்கள்.

# நான்காவது அத்தியாயம்

# குறைகள்பற்றிய விமரிசனம்

### நேட்டால்

ஐரோப்பிய தோட்டக்காரர்கள் அடிமைகளைத்தான் விரும்பினர்கள். தங்கள் ஒப்பந்தங்களுக்குப் பின் இவர்களுடன் சிறிதளவேனும் போட்டி போடக்கூடிய சுதந்திரம் பெற்ற தொழிலாளர்களை வைத்திருப்பது இவர்களுக்கு லாபகரமாக இல்லை. இந்தியாவில், விவசாயத்திலும் மற்றத் துறைகளிலும் முன்னுக்கு வராதவர்களே ஒப்பந்தத் தொழிலாளர்களாக நேட்டாலுக்குச் சென்றுர்கள் என்பதில் ஐயமில்லை. ஆனல், அவர்களுக்கு விவசாயமும், நிலத்திற்குரிய மதிப்பும் தெரியாதென நினைக்கக் கூடாது. நேட்டாலில் காய் வகைகளை மாத்திரம் பயிர் செய்தால் நல்ல வருமானம் கிடைக்குமென்றும், ஒரு சிறு துண்டு நிலம் இருந்தால் மேலும் வருமானம் கிடைக்குமென்றும் அவர்கள் கண்டனர். ஆதலால், தங்கள் ஒப்பந்தக் காலம் முடிந்த பின்பு பலர், ஏதோ ஒரு தொழில், வியாபாரத்தைச் சிறிய அளவில் வளர்த்து வரலாயினர். இது பொதுவாக நேட்டால் வாசிகளுக்கு லாபம் தருவதாகவே இருந்தது. சரியான விவசாயிகள் இல்லாமையால் பயிர் செய்யப்படாமலிருந்த பலவிதக் காய் வகைகள் இப்பொழுது கிடைத்தன. முன்பு குறைவாகப் பயிரிடப்பட்ட தினுசுகள் இப்பொழுது ஏராளமாகக் கிடைத்தன. இதன் காரணமாகக் காய் வகைகளின் விலை குறைந்தது. ஆனல், இது ஐரோப்பியத் தோட்டக்காரர்களுக்குப் பிடிக்கவில்லை. தங்களுக்கு மட்டுமே தனி உரிமை என்று நினைத்துக்கொண்டிருந்த ஒரு தொழிலில் போட்டி ஏற்பட்டிருப்பதாக அவர்களுக்குத் தோன்றிற்று. ஆகையால், இந்த ஒப்பந்தக் காலம் தீர்ந்த ஏழைக் குடியானவர்களுக்கு எதிரிடையாக ஓர் இயக்கம் ஆரம்பிக்கப் பட்டது. ஒரு பக்கம், ஐரோப்பியர்கள் அதிகமாக இந்தியத் தொழிலாளர்கள் தேவை எனக் கேட்டு, வருபவர்களை எல்லாம் ஏற்றுக் கொண்டிருந்தனர். மற்றொரு பக்கத்தில், ஒப்பந்தம் தீர்ந்த தொழிலாளர்களைப் பலவிதங்களிலும் துன்புறுத்த ஓர் இயக்கமும் ஆரம்பித்திருந்தார்கள் என்பதைக் கேட்டு வாசகர்கள் வியப்பர். இது தொழிலாளர்களின் திறமைக்கும், கடுமையான உழைப்பிற்கும் கிடைத்த பரிசு போலும்!

இவ்வியக்கம் பல உருவங்களைக் கொண்டது. கிளர்ச்சி செய்வோரில் ஒரு பகுதியினர், ஒப்பந்தக் காலம் முடிந்த தொழிலாளர் இந்தியாவுக்குத்திருப்பி அனுப்பப்பட வேண்டுமென்றனர். மேற்கொண்டு செய்யப்படும் ஒப்பந்தங்களில், அவர்கள் மறுபடியும் ஒப்பந்தங்களைப் புதுப்பித்துக் கொள்ளாவிடில் இந்தியாவுக்குக் கட்டாயப்படுத்தித் திருப்பியனுப்பப்படுவதற்கு ஒரு ஷரத்துச் சேர்க்கப்பட வேண்டுமென்றும் சொன்னார்கள். இரண்டாவது பகுதியினர், முதல் ஒப்பந்தக் காலமான ஐந்து வருடங்களுக்குப் பிறகு மறுபடியும் ஒப்பந்தம் செய்துகொள்ளாத தொழிலாளர்களின் பேரில் ஒரு கடுமையான ஆள்வரி போடவேண்டுமென்று கோரினர். (ஆள்வரி என்பது ஒவ்வோர் ஆள் அல்லது நபரின்பேரிலும் போடப்படும் ஒரு வரி). இரு தரப்பினரின் நோக்கமும் ஒன்றே. அதாவது, ஒப்பந்தம் முடிந்த சுதந்திர மக்களை நியாயமாகவோ, அநியாயமாகவோ, எவ்விதத்திலும் நேட்டாலில் இருக்கமுடியாமல் செய்வதேநோக்கமாகும். கிளர்ச்சி வலுக்கவே, நேட்டால் அரசாங்கம் ஒரு கமிஷனை நியமித்தது. இருவிதக் கிளர்ச்சிக்காரர்களும் கேட்டது அக்கிரமமாக இருந்தபடியாலும், ஒப்பந்தத்திலிருந்து விடுதலை பெற்ற தொழிலாளர்கள் இருப்பது பொருளாதார நோக்கிலிருந்து பார்த்தால் பூரா ஜன சமூகத்துக்கும் நன்மை பயப்பதாகவே இருந்தபடியாலும், பாரபட்சமற்ற அந்தக் கமிஷனர்கள் செய்த முடிவு கிளர்ச்சிக்காரர்களுக்கு விரோதமானதாக இருந்தது. ஆதலால், அச்சமயத்தில் கிளர்ச்சியிலிருந்து யாதொரு பயனையும் கிளர்ச்சிக்காரர்கள் அடையவில்லை.

ஆனால், தீ அவிக்கப்பட்டாலும், அது எரிந்த இடத்தில் ஒரு குறி விட்டுச் செல்வதுபோல் இக்கிளர்ச்சி நேட்டால் அரசாங்கத்தார் மனத்தில் சில எண்ணங்களை உண்டாக்கியது. எப்படி வேறுவிதமாக இருக்க முடியும்? நேட்டால் அரசாங்கத்தார் தோட்டக்காரர்களுக்கு வேண்டியவர்களாயிருந்தனர். ஆதலால், அவர்கள் இந்திய அரசாங்கத்திற்கு எழுதி இருவிதக் கிளர்ச்சிக்காரர்களுடைய யோசனைகளையும் அவர்கள் முன்னிலையில் வைத்தனர். ஒப்பந்தத் தொழிலாளர்களை அடிமைகளாகச் செய்யக்கூடிய யாதொரு யோசனையையும் இந்திய அரசாங்கம் உடனே ஏற்றுக்கொள்ளவில்லை. தொழிலாளர்களை ஒப்பந்தங்களின் கீழ்த் தூரநாட்டுக்கு அனுப்புவதற்கு ஒரு முக்கியமான காரணம், அவர்கள் அங்கே ஒப்பந்தக் காலம் முடிந்த பின்பு தங்கள் சக்தியையும், பொருளாதார நிலைமையையும் விருத்தி

செய்துகொள்ளுவதற்கு ஏதுவாகும் என்பதே. நேட்டால் அப்பொழுதும் பிரிட்டனின் நேர் ஆட்சிக்குட்பட்ட காலனியாக (Crown Colony) இருந்தபடியால், குடியேற்ற நாட்டுக் காரியாலயமே அரசாங்க நடவடிக்கைகளுக்குப் பொறுப்பாளியாக இருந்தது. ஆதலால், தன்னுடைய அக்கிரமமான கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்கு இத்திசையிலிருந்து உதவியை எதிர்பார்க்க முடியவில்லை. இக்காரணத்துக்காகவும், இம்மாதிரியான மற்றக் காரணங்களுக்காகவும் பொறுப்பாட்சி அடைவதற்காக ஓர் இயக்கம் ஆரம்பிக்கப்பட்டு, கடைசியில் 1893-ஆம் ஆண்டில் நேட்டால் பொறுப்பாட்சி பெற்றது.

நேட்டால் இப்பொழுது தன் பலத்தை உணரத் தொடங்கியது. இனிமேல் அதனுடைய கோரிக்கைகளில் எதையும் குடியேற்ற நாட்டுக் காரியாலயம் ஒப்புக்கொள்ளுவதில் கஷ்டம் இராது. புதிதாகப் பொறுப்பாட்சி பெற்ற நேட்டால் அரசாங்கத்தின் பிரதிநிதிகள் இந்திய அரசாங்கத்துடன் கலந்து ஆலோசிக்க இந்தியாவுக்கு வந்தனர். ஒப்பந்தத்திலிருந்து விடுபட்ட இந்தியத் தொழிலாளர்கள் ஒவ்வொருவர் பேரிலும் வருடத்துக்கு இருபத்தைந்து பவுன்கள், அதாவது முந்நூற்றெழுபத்தைந்து ரூபாய்கள், ஆள்வரியாகப் போடவேண்டுமென அவர்கள் சொன்னர்கள். எந்த இந்தியத் தொழிலாளியும் இவ்வளவு அதிக வரி கொடுத்து, சுதந்திர மனிதனுக இருக்க முடியாதென்பது வெளிப்படை. அப்பொழுது இந்திய கவர்னர்-ஜெனரலாயிருந்த லார்டு எல்ஜின்* இத்தொகை அதிகமென நினைத்து, முடிவில் வருடத்துக்கு மூன்று பவுன் ஆள்வரிக்கு ஒப்புக்கொண்டார். இந்த ஒப்பந்தத்து விகிதப்படி இது சுமார் ஒரு தொழிலாளியின் ஆறுமாத வருமானமாகும். இவ்வரி தொழிலாளன்பேரில் மாத்திரமல்ல; அவன் மனைவிபேரிலும், பதின்மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட வயதான அவன் பெண்கள்பேரிலும், பதினறு அல்லது அதற்கு மேற்பட்ட வயதுள்ள அவன் பையன்கள்பேரிலும் விதிக்கப்பட்டது. ஒரு மனைவியும் இரு குழந்தைகளும் இராத ஒரு தொழிலாளியைக் காணவே முடியாது. எனவே, சாதாரணமாக ஒவ்வொரு தொழிலாளியும்

* லார்டு எல்ஜின்: 1894-லிருந்து 1898 வரை இந்தியாவில் கவர்னர் ஜெனரலாக இருந்தார். இவர் ஆட்சிக் காலத்தில் இந்தியாவில் பல பகுதிகளில் கடும் பஞ்சமும் பிளேக் நோயும் மூண்டன. மகாராஷ்டிரத் தலைவரான லோகமான்ய திலகர், பிளேக் கமிஷனைக் கண்டித்தும், வீர சிவாஜியின் தினத்தைக் கொண்டாடவும் தீவிர இயக்கம் ஒன்றை ஆரம்பிக்கவே, அரசாங்கம் அவரைக் கைது செய்து, அவருடைய பத்திரிகை வெளியாவதையும் தடுத்துவிட்டது.

வருடத்துக்குப் பன்னிரண்டு பவுன்கள் வரி கொடுக்கவேண்டியிருந்தது. இவ்வரியினுல் ஏற்பட்ட சங்கடங்கள் சொல்லத் தரமல்ல. அவைகளை அனுபவித்தவர்களுக்குத்தான் இது தெரியும்; அவர்களுடைய கஷ்டங்களைப் பார்த்தவர்களுக்குத் தான் இதைப்பற்றிச் சிறிதாகிலும் அறிய முடியும். நேட்டால் அரசாங்கத்தின் இச்செய்கையை எதிர்த்து இந்தியர் பலத்த கிளர்ச்சி செய்தனர். பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும், இந்திய அரசாங்கத்திற்கும் விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டன. ஆனல் அவ்வரி குறைந்ததே தவிர, வேறொரு பயனும் ஏற்படவில்லை. அந்த அப்பாவித் தொழிலாளர்களுக்கு இவ்விஷயத்தில் என்ன தெரியும்? அல்லது அவர்களால் என்ன செய்ய முடியும்? அவர்கள் சார்பாக இக்கிளர்ச்சியைத் தேச பக்தியாலும் பரோபகாரச் சிந்தனையாலும் இந்திய வியாபாரிகளே செய்தனர்.

சுயேச்சையான இந்தியர்கள் நிலையும், இதைவிட மேலாக இருந்துவிடவில்லை. முக்கியமாக, இந்தக் காரணங்களுக்காகவே நேட்டால் ஐரோப்பிய வியாபாரிகள் அவர்களுக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்தனர். இந்திய வியாபாரிகள் நன்ருக நிலைத்துவிட்டனர். நல்ல இடங்களில் நிலம் வாங்கியிருந்தனர். சுதந்திரத் தொழிலாளர்களின் தொகை அதிகமாக ஆக, அவர்களுக்கு வேண்டிய சாமான்களுக்குத் தேவையும் அதிகமாயிற்று. அரிசி, ஆயிரக்கணக்கான மூட்டைகள் இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு, நல்ல லாபத்துக்கு விற்கப்பட்டது. இயற்கையாகவே இவ்வியாபாரத்தின் பெரும் பகுதி இந்தியர் வசம் இருந்தது. தவிர, இந்தியர்களுக்கு ஜூலுவுடன் வியாபாரமும் அதிகமாக இருந்தது. சிறு ஐரோப்பிய வியாபாரிகளுக்கு இது சகிக்க முடியாததாக இருந்தது. நேட்டால் சட்டசபைத் தேர்தலில் வோட்டுப்போட அபேட்சகர்களாக நிற்கவும் இந்தியர்களுக்குச் சட்டப்படி உரிமை உண்டென்று சில ஆங்கிலேயர் இந்திய வியாபாரிகளுக்கு எடுத்துக் காட்டவே, சில இந்தியர்கள் வாக்காளர் ஜாபிதாவில் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொண்டனர். இது, ஐரோப்பிய ராஜீயவாதிகளை இந்தியர்களுக்கு விரோதமான கட்சிகளில் சேரும்படி செய்தது. இந்தியர்களின் கௌரவம் ஓங்கி, அவர்கள் நிலைமை நேட்டாலில் வலுவாகி விட்டால், ஐரோப்பியர்கள் அவர்களுக்குப் போட்டியாக நிற்கமுடியுமா என்று ஐரோப்பிய ராஜீயவாதிகள் பயந்தனர்.

எனவே, சுதந்திர இந்தியர்களைப்பற்றி நேட்டால் அரசாங்கம் எடுத்துக்கொண்ட முதல் நடவடிக்கை, அக்காலத்தில் வாக்காளர் ஜாபிதாவில் முறைப்படி இருந்தவர்களைத் தவிர மற்றெல்லா ஆசியாவாசிகளுக்கும் இருக்கும் வாக்குரிமையை ரத்து செய்வதற்காக ஒரு சட்டத்தை இயற்றத் தீர்மானித்ததே ஆகும். இம்மாதிரி ஷரத்துக்கொண்ட மசோதா ஒன்று 1894-ஆம் ஆண்டில் நேட்டால் சட்டசபையில் கொண்டுவரப்பட்டது. இந்தியர்கள், இந்தியர்கள் என்ற காரணத்தால் வாக்குரிமையிலிருந்து நீக்கப்படவேண்டுமென்ற கொள்கையின் பேரில் அம்மசோதா செய்யப்பட்டிருந்தது. இந்தியர்கள் சம்பந்தமாய் நிறவேற்றுமை உண்டாக்க நேட்டாலில் செய்யப்பட்ட சட்டங்களில் இதுதான் முதல் சட்டமாகும். இந்தியர்கள் இதை எதிர்த்தனர். ஒரே இரவில் விண்ணப்பம் எழுதி, அதில் நானூறு கையெழுத்துக்கள் வாங்கப்பட்டன. அவ்விண்ணப்பம் நேட்டால் சட்டசபைக்குக் கொடுக்கப்பட்ட போது, அச்சபை திடுக்கிட்டது. எனினும், அம்மசோதா நிறைவேற்றப்பட்டது. அப்பொழுது காலனிகளுக்கு மந்திரியாக இருந்த லார்டு ரிப்பனுக்குப்* (Lord Ripon) பத்தாயிரம் கையெழுத்துக்கள் கொண்ட விண்ணப்பம் ஒன்று அனுப்பப்பட்டது. பத்தாயிரம் கையெழுத்துக்களென்ருல், நேட்டாலில் அச்சமயம் இருந்த அநேகமாய் எல்லாச் சுதந்திர இந்தியரின் கையெழுத்துமாகும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் சட்டத்தின் மூலம் நிறவேற்றுமையை ஏற்படுத்த ஒப்புக்கொள்ளாதெனக் கூறி லார்டு ரிப்பன் இம்மசோதாவை நிராகரித்தார். இது இந்தியர்களுக்கு எவ்வளவு பெரிய வெற்றியென்பது வாசகர்களுக்குப் பின்னல் தெரியவரும்.

ஆதலால், நிறவேற்றுமையை எடுத்துவிட்டு மறைமுகமாக இந்தியர்களுடைய வாக்குரிமையை ரத்து செய்வதற்காக, நேட்டால் அரசாங்கத்தார் வேறொரு மசோதா கொண்டுவந்தனர். இதையும் இந்தியர் எதிர்த்தனர். ஆனல், அவ்வெதிர்ப்புப் பயனற்றதாய்ப் போயிற்று. இப்புதிய மசோதா வெவ்வேறு அர்த்தங்கள் கொள்ளும் மாதிரியில் இருந்தது. இதன் அர்த்தத்

* லார்டு ரிப்பன்: 1880-லிருந்து 1884 வரை இந்தியாவின் கவர்னர்-ஜெனரலாகவும் இருந்தார். லார்டு லிட்டன் இயற்றியிருந்த சுதேச மொழிப் பத்திரிகைச் சட்டத்தை இவர் ரத்து செய்தார். ஸ்தல சுய ஆட்சி முறையைப் பட்டணங்கள், கிராமங்கள், தாலுகாக்கள் எங்குமே பரவும்படிச் செய்தார். ஆரம்பக் கல்வியையும் நடுத்தரக் கல்வியையும் அபிவிருத்தி செய்ய முயன்ருர். சர்க்காரில் உயர்தர உத்தியோகங்களை இந்தியருக்கு வழங்க வகை செய்தார். இந்திய மக்களின் நன்மதிப்பைப் பெற்றவர்.

தைத் தெளிவுபடுத்துவதற்காக அதைப் பிரிவீ கௌன்சிலின் (Privy Council) நியாயக் குழுவினரிடம் (Judicial Committee) கொண்டு போகும் நிலையில் இந்தியர்கள் இருந்தனர். ஆனால், அப்படிச் செய்வது நல்லதல்லவென அவர்கள் நினைத்தனர். இம்முடிவில்லாக் கோர்ட்டு விவகாரத்தை விட்டது சரியென நான் இன்றும் நினைக்கிறேன். நிறவேற்றுமையை ஸ்தாபிக்க அனுமதி கொடுக்கப்படாமல் இருந்தது ஒரு சாமான்யமான விஷயமன்று.

ஆனால், தோட்டக்காரர்களும், நேட்டால் அரசாங்கமும் அத்துடன் நிற்பவர்களாயில்லை. இந்தியர்களுடைய ராஜீயச் செல்வாக்கை முளையிலேயே கிள்ளிவிட வேண்டுமென்பது அவர்களுடைய இன்றியமையாத முதல் காரியமாயிருந்தது. ஆனால், அவர்கள் உண்மையில் எதிர்த்தது, இந்தியர்களுடைய வியாபாரத்தையும் சுதந்திரமான இந்தியர்களுடைய குடியேற்றத்தையுந்தான். இந்தியாவிலிருந்து கோடிக்கணக்கான மக்கள் நேட்டாலுக்கு வந்து ஐரோப்பியர்களை அமிழ்த்திவிடுவார்களோ என்ற எண்ணம் அவர்களுக்குப் பயத்தைத் தந்தது. அக்காலத்தில் நேட்டாலின் ஜனத்தொகையினர் 4,00,000 ஜுலுக்களும், 40,000 ஐரோப்பியர்களும், 60,000 ஒப்பந்தத் தொழிலாளர்களும், ஒப்பந்தத்திலிருந்து விடுபட்ட 10,000 தொழிலாளர்களும், 10,000 சுதந்திர இந்தியர்களுமேயாவர். ஐரோப்பியர்களின் பயத்திற்குப் போதுமான காரணங்களில்லை. ஆனால், காரணமில்லாத பயத்துக்கு ஆளானவர்களை வாதத்தால் தெளிய வைப்பது சாத்தியமில்லை. இந்தியா எதையும் செய்ய முடியாமல் இருக்கும் நிலையையும், இந்தியரின் பழக்க வழக்கங்களையும் அவர்கள் சரிவர அறியாமல் இருந்ததனால், இந்தியர்களும் தங்களைப் போலவே துணிவும், வசதியுமுள்ளவர்களென அவர்கள் நினைத்தனர். தங்கள் சிறுபான்மையை ஒப்பிட்டுப் பார்த்து, மிகப் பெரியதாயிருக்கும் இந்திய ஜனத்தொகையைக் கண்டு பயந்தார்களானால், அவர்களைக் குறை சொல்லிப் பயனில்லை. அது எப்படியிருப்பினும், இந்தியர்கள் வாக்குரிமையை ரத்து செய்வதற்காகக் கொண்டுவரப்பட்ட மசோதா வெற்றியுடன் எதிர்க்கப்பட்டதன் காரணமாக, நேட்டால் சட்டசபையில் நிறைவேற்றப்பட்ட மற்ற இரண்டு சட்டங்களும் நிறவேற்றுமையைத் தவிர்த்துத் தங்கள் லட்சியத்தை நேரல்லாத வழியில் அடையவேண்டியிருந்தது. ஆதலால், இந்தியர்களின் நிலைமை எவ்வளவு மோசமாக ஆகியிருக்கக் கூடுமோ அவ்வளவு

மோசமாகிவிடவில்லை. இச்சந்தர்ப்பங்களிலும் இந்தியர்கள் பலமாக எதிர்த்தார்களென்னினும், அச்சட்டங்கள் நிறைவேற்றப் பட்டுவிட்டன.

அவற்றுள் ஒன்று, இந்தியர்களின் வியாபாரத்தின் பேரிலும், மற்றொன்று நேட்டாலில் இந்தியர்களின் குடியேற்றத்தின் பேரிலும் கடுமையான கட்டுப்பாடுகளைச் சுமத்தியது. முதல் சட்டத்தின் சாராம்சம், அச்சட்டப்படி நியமனமான ஓர் உத்தியோகஸ்தரிடம் அனுமதி பெருத எவரும் வியாபாரம் செய்யக்கூடாது என்பது. செயல்முறையில் எந்த ஐரோப்பியனுக்கும் அனுமதி கிடைக்கும். ஆனல், ஓர் இந்தியன் அனுமதி பெறவேண்டுமானல் அவன் படவேண்டிய கஷ்டத்துக்கு அளவில்லை. அவன் வக்கீலை அமர்த்துவதுடன், மற்றச் செலவுகளும் செய்யவேண்டியிருக்கும். இச்செலவு செய்ய முடியாதவர்களுக்கு அனுமதி கிடைக்காது. மற்றச் சட்டத்தின் முக்கிய ஷரத்து, ஓர் ஐரோப்பிய மொழியில் நடக்கும் கல்விப் பரீட்சையில் தேறினவர்களே நேட்டாலுக்குள் வரலாம் என்பது. இது கோடிக்கணக்கான இந்திய மக்களை நேட்டாலுக்கு வராமல் தடுத்தது. மறந்தும் நேட்டால் அரசாங்கத்துக்குத் தவறு இழைக்காமலிருக்கும் பொருட்டு, பின்வருவதை நான் சொல்ல வேண்டும்: அதாவது, இச்சட்டம் நிறைவேற்றப்பட்டதற்கு முன் மூன்று வருடங்களாக நேட்டாலிலிருந்த இந்தியர்கள் தங்கள் மனைவிமாருடனும், வயது ஆகாத குழந்தைகளுடனும் வெளியே போகவும், மேற்கண்ட கல்விப் பரீட்சை இல்லாமல் நேட்டாலுக்குள் வரவும் உதவி செய்யும் பொருட்டு நேட்டால்வாசிகள் என்று உறுதிப் பத்திரம் (சர்டிபிகேட்) அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது.

மேலே சொல்லப்பட்டிருப்பதைத் தவிர, நேட்டாலிலுள்ள ஒப்பந்தத் தொழிலாளர்களும், ஒப்பந்தத்திலிருந்து விடுபட்டவர்களும், அடிக்கடி பல்வேறு சட்டங்களினலும் துன்புற்றனர். தவிர, சட்டங்களில் காணுத பல கஷ்டங்களுக்கும் ஆளாகியிருந்தனர். அவைகளைச் சொல்லி வாசகர்களுக்குச் சிரமம் கொடுக்க வேண்டியது அவசியமில்லை என்று நினைக்கிறேன். விஷயத்தைத் தெளிவாக அறிந்துகொள்ளுவதற்கு அவசியமான விவரங்களை மட்டுமே நான் கொடுக்க நினைத்திருக்கிறேன். தென்னுப்பிரிக்காவின் பல பாகங்களிலுள்ள இந்தியர்களின் நிலைமையைப் பற்றிய சரித்திரம் எழுதுவதற்கு அதிக இடம் வேண்டும். அது இப்புத்தகத்தின் அளவுக்கு மீறியது.

## ஐந்தாவது அத்தியாயம்

# டிரான்ஸ்வாலிலும் மற்ற இடங்களிலும்

நேட்டாலில் உள்ளதுபோலவே மற்றக் காலனிநாடுகளிலும் 1880-ஆம் வருடத்துக்கு முன்னுலேயே இந்தியர்களுக்கு விரோதமான மனப்பான்மை ஏறக்குறைய வளரத் தொடங்கிவிட்டது. கேப் காலனியைத் தவிர மற்ற நாடுகளில், இந்தியர்கள் தொழிலாளர்களாக இருப்பதற்கே தகுதியெனப் பொதுவாக நினைக்கப்பட்டது. ஆனல், சுதந்திரமான இந்தியர்களின் குடியேற்றம் தென்னுப்பிரிக்காவுக்குப் பிரதிகூலமே உண்டாக்கக்கூடியது என்று பல ஐரோப்பியர்கள் உறுதியாக நம்பினர். டிரான்ஸ்வால் ஒரு குடியரசு. இந்தியர்கள், அதன் ஜனுதிபதி முன்னிலையில் தாங்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைச் சேர்ந்த பிரஜைகளென்று சொல்லிக் கொள்ளுவது இகழ்ச்சியை வரவேற்பதாகும். அவர்களுக்கு ஏதாவது குறைகளிருந்தால், அவர்கள் செய்யக் கூடியதெல்லாம், பிரிட்டோரியாவிலிருக்கும் பிரிட்டிஷ் பிரதிநிதிக்குத் தெரியப்படுத்துவதுதான். டிரான்ஸ்வால் சுதந்திரமாயிருக்கும் சமயம் அப்பிரதிநிதி உதவியதுபோல், அது பிரிட்டிஷ் ஆளுகைக்குள்ளேயே வந்துவிட்டபின் இந்தியர்களுக்கு உதவி செய்யக் கூடியவர் ஒருவருமில்லை என்பதுதான் ஆச்சரியமாகும். இந்தியர்களின் சார்பாக ஒரு பிரதிநிதிக்கூட்டம், அப்பொழுது இந்தியா மந்திரியாக இருந்த லார்டு மார்லியைப்* (Lord Morley) பார்த்தது. பொறுப்பாட்சி பெற்ற நாடுகளின் பேரில் பிரிட்டிஷ் அரசாங்கம் அதிகாரம் செலுத்த முடியாதென அவர் தெளிவாகத் தெரிவித்தார். தூது போனவர்களுக்கும் இது முன்னதாகவே தெரிந்ததுதான். பிரிட்டிஷ் அரசாங்கம் அந்நாட்டு மக்களைக் கட்டாயப்படுத்த முடியாது; ஆனல், அவர்களுடன் வாதிக்கலாம்; தருக்கம் செய்யலாம்; தங்கள் கொள்கைகளுக்கு இணங்க நட.க்கும்படி வற்புறுத்தலாம். சில விஷயங்களில் பிரிட்டிஷ் அரசாங்கம், போயர்க் குடியரசிடத்தில் செய்தது போல், தங்கள் குடியேற்ற நாட்டு மக்களிடத்தில்

---

* வைகௌன்ட் ஜான் மார்லி (1838—1923): பிரிட்டிஷ் லிபரல் கட்சியைச் சேர்ந்த அரசியல்வாதி. சிறந்த நூலாசிரியர். 1886-ல் அயர்லாந்து மந்திரியாக இருந்து மீண்டும் 1892-லிருந்து 1895 வரை அதே பதவியை ஏற்று 1905-லிருந்து 1910 வரை இந்தியா மந்திரியாகவும் இருந்தார். க்ளாட்ஸ்டன், வால்டேர், ரூஸ்ஸோ, பர்க், க்ராம்வெல் இவர்களின் வாழ்க்கை வரலாறுகளை எழுதிய பெருமை இவருக்கு உண்டு.

உண்டாகும் பலனைவிடப் பிற நாடுகளிடத்தில் அதிகப் பயன் தரத்தக்கவாறு ஆட்சேபம் செய்யமுடியும். தாய்நாட்டுக்கும் குடியேற்ற நாடுகளுக்கும் இருந்த உறவு கொஞ்சம் இழுத்தாலும் அறுந்துபோகக் கூடிய பட்டு முடிச்சைப் போன்றது. பலாத்காரம் என்பதற்கே இடமில்லையாகையால் அவர்களுடன் கலந்து தன்னுல் இயன்றதைச் செய்வதாக அப் பிரதிநிதிக் கூட்டத்திற்கு அவர் வாக்களித்தார். டிரான்ஸ் வாலின் பேரில் யுத்தம் தொடங்கிய போது அந்நாடு இந்தியர் களை அவகேடாக நடத்தியதும் யுத்தத்திற்கு ஒரு காரணமென லார்டு லான்ஸ்டௌன்* (Lord Lansdowne), லார்டு ஸெல் போர்ன் (Lord Selborne) முதலிய பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் கூறினர்.

அவர்கள் நடத்தியது என்ன என்பதை இப்பொழுது பார்ப்போம். 1881-ஆம் வருடத்தில் இந்தியர் டிரான்ஸ்வாலுக்கு முதலில் வந்தனர்; காலஞ்சென்ற சேட் அபுபகர் பிரிட்டோரியா வில் ஒரு கடை வைத்து, அவ்வூரின் ஒரு முக்கிய வீதியில் நிலமும் வாங்கினுர். மற்ற வியாபாரிகளும் அவரைப் பின்பற்றி னுர்கள். இவர்கள் உயர்வது ஐரோப்பிய வியாபாரிகளுடைய மனத்தில் பொருமையை உண்டாக்கியது. அவர்கள் இந்தியர் களுக்கு விரோதமான கிளர்ச்சியைப் பத்திரிகைகளில் ஆரம்பித் தனர். இந்தியர்கள் நாட்டை விட்டு வெளியே துரத்தப்பட வேண்டுமென்றும், அவர்கள் வியாபாரம் நிறுத்தப்பட வேண்டு மென்றும் வால்க்ஸ்ராட் (Volksraad) என்ற அவர்களுடைய சட்டசபைக்கு விண்ணப்பம் செய்தனர். புதிதாகக் கண்டு பிடித்த இந்நாட்டிலிருந்த ஐரோப்பியருக்கு, தாம் பணக்கார ராகிவிட வேண்டுமென்று பெரும் வேட்கை இருந்தது. நேர்மை இன்னது என்பதோ அவர்களுக்குப் புதிது. தங்கள் விண்ணப் பங்களில் அவர்கள் எழுதிய சில விவரங்கள் கீழே கொடுக்கப் பட்டிருக்கின்றன: "இந்த இந்தியர்களிடத்தில் மனிதர்களுக் கான மரியாதையே இல்லை. அருவருக்கத்தக்க நோய்களால் அவர்கள் பீடிக்கப்பட்டிருக்கின்றனர். ஒவ்வொரு பெண்ணையும் தம் போகத்துக்குரிய பலியாகக் கருதுகின்றனர். பெண் களுக்கு ஆன்மாவே இல்லையென்று அவர்கள் நினைக்கின்ற னர்." இந்நான்கு வாக்கியங்களும் நான்கு பொய்கள். இம்

---

* லார்டு லான்ஸ்டௌன்: 1888-லிருந்து 1894 வரை இந்தியாவின் கவர்னர்-ஜென ரல். 1891-இல் இந்தியாவின் ஜனத்தொகை எடுக்கப்பட்டபோது, முந்திய பத்து வரு டங்களுக்கு முன் இருந்ததைவிட 11 சத விகிதம் அது பெருகியிருப்பது தெரிந்தது. சட்ட சபைகளின் விஸ்தரிப்பு இவர் செய்த முயற்சிகளில் ஒன்ருகும்.

மாதிரி உதாரணங்களைப் பெருக்கிக்கொண்டே போகலாம். அந்த ஐரோப்பியர்களைப் போலவே அவர்கள் பிரதிநிதிகளும் இருந்தனர். அக்கிரமமும், அநியாயமுமான இத்தகைய இயக்கம் தங்களுக்கு விரோதமாகவே நடத்தப்பட்டு வருகிறதென இந்திய வியாபாரிகள் கொஞ்சமேனும் அறியவில்லை. அவர்கள் பத்திரிகைகளைப் படிப்பதில்லை. பத்திரிகைகளில் மூட்டிய கிளர்ச்சியும், விண்ணப்பங்களும் கோரிய பயனை உண்டாக்கின. வால்க்ஸ்ராடில் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டது.

காரியங்கள் எப்படி நடக்கின்றன எனத் தெரிந்தபோது, முக்கியமான இந்தியர்கள் திடுக்கிட்டனர். அவர்கள் ஜனாதிபதி குரூகரைப் பார்க்கச் சென்றனர். அவர் இவர்களைத் தம் வீட்டுக்குள் அனுமதியாமல் வெளி முற்றத்திலேயே நிற்கவைத்தார். அவர்கள் கூறியதைச் சற்றுக் கேட்ட பிறகு அவர் பின் வருமாறு சொன்னார்: ''நீங்கள் இஸ்மேலின் சந்ததியார். ஆதலால் உங்கள் பிறப்பினாலேயே நீங்கள் ஈஸாவின் சந்ததியாருக்கு அடிமைகளாகத் தொண்டு செய்யக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். ஈஸாவின் சந்ததியான நாங்கள் உங்களுக்கு எங்களுடன் சம உரிமை கொடுக்க முடியாது நாங்கள் கொடுக்கும் உரிமைகளைக்கொண்டு நீங்கள் திருப்தி அடையவேண்டும்.''*

ஜனாதிபதி குரூகரின் பதில் துவேஷம் அல்லது கோபத்தால் பிறந்தது எனச் சொல்ல முடியாது. அவர் குழந்தைப் பருவத்திலிருந்து கிறிஸ்துவப் 'பழைய ஏற்பாட்டின்' கதைகளைப் படித்து அவை உண்மையென நம்பியிருப்பவர். இதுபோன்ற தம்முடைய அபிப்பிராயத்தை ஒளிக்காமல் சொல்லும் ஒருவரை நாம் எப்படிக் குறை கூற முடியும்? ஆனால், அறியாமை வெள்ளை மனத்துடன் சேர்ந்திருந்தாலும் கெட்டதையே செய்யும். இதன் பயனாக, 1885-ஆம் ஆண்டில், ஆயிரக்கணக்கான இந்தியர்கள் டிரான்ஸ்வாலை நிரப்பிவிடக் காத்துக்கொண்டிருப்பதாக நினைத்து, வால்க்ஸ்ராடில் மிகக் கடுமையானதோர் சட்டம்

* அப்ரஹாமுக்கு இரு மனைவிகள். மூத்தவளான ஸாராவுக்குப் பிறந்த பிள்ளை ஈஸா. இளையவளான ஹகரின் மகன் இஸ்மேல். ஸாராவுக்கு இளையவளைக் கண்டால் பிடிக்கவில்லை. ஹகர் அடிமைப் பெண். அவளுக்குப் பிறந்த மகன் தன் மகனுடன் சமமாகப் பழகுவதைப் பொருமல், இளையவளையும் அவள் மகன் இஸ்மேலையும் துரத்திவிட அப்ரஹாமைத் தூண்டினாள். அப்ரஹாம் இதைக் குறித்து வேதனைப்பட்டபோது, "ஒரு பெரிய சமூகத்தைத் தோற்றுவிக்கப் போகிறேன். உன் மகன் அதற்கு வித்து ஆவான்" என்று கடவுளின் குரல் வந்தது. அப்ரஹாம் ஹகரையும் இஸ்மேலையும் பீர்ஷீபா என்ற பாலை வெளியில் தனியாக விட்டுத் துயருடன் திரும்பினான். அந்தப் பாலைவனத்திலே பின்னர் மெக்கா நகரம் எழுந்தது. இந்த வரலாறு பைபிளில் பழைய ஏற்பாட்டின் உற்பத்திக் காண்டத்தில் வருகிறது.

வெகு விரைவாக நிறைவேற்றப்பட்டது. இந்தியத் தலைவர்களது வேண்டுகோளின் பேரில் பிரிட்டிஷ் ஏஜெண்டு இவ்விஷயத்தில் தலையிட நேரிட்டது. கடைசியில் இவ்விஷயம் குடியேற்ற நாடுகளின் மந்திரியிடம் போயிற்று. 1885-ஆம் வருடத்து மூன்ருவது சட்டமான இச்சட்டப்படி, அக்குடியரசில் வியாபாரம் செய்வதற்காக இருந்த ஒவ்வோர் இந்தியனும் இருபத்தைந்து பவுன்கள் கொடுத்துப் பதிவு செய்துகொள்ள வேண்டும். இல்லாவிடில் கடினமான தண்டனைக்குள்ளாக வேண்டும். எந்த இந்தியனும் ஓர் அங்குல நிலங்கூட வாங்கி, அந்நாட்டில் பிரஜா உரிமையை அனுபவிக்க முடியாது. டிரான்ஸ்வால் அரசாங்கம் பேச்சினால்கூடச் சமாதானம் சொல்லிவிட முடியாதவாறு அவ்வளவு வெளிப்படையான அநியாயமாக இருந்தது, அச்சட்டம். போயர்களுக்கும் பிரிட்டிஷ்காரர்களுக்கும் லண்டன் கன்வென்ஷன் என்று ஒரு சமாதானம் ஏற்பட்டிருந்தது. அதில் பதினான்காவது பிரிவில் பிரிட்டிஷ் பிரஜைகளின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டிருந்தன. இச்சட்டம் அந்தப் பிரிவுக்கு விரோதமாயிருப்பதாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் ஆட்சேபித்தது. ஆனால், இச்சட்டத்துக்கு வெளிப்படையாகவோ அல்லது உட்கருத்தாகவோ அந்த அரசாங்கம் முன்னமேயே சம்மதம் கொடுத்திருப்பதாகப் போயர்கள் சொன்னார்கள்.

இங்ஙனம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும், போயர் ஆட்சிக்கும் ஒரு தகராறு ஏற்பட்டது. விஷயம் மத்தியஸ்தத்திற்கும் விடப்பட்டது. மத்தியஸ்தருடைய தீர்ப்பு திருப்தி அளிப்பதாக இல்லை. அவர் இரண்டு கட்சிகளையும் திருப்திப்படுத்த முயற்சி செய்தார். ஆதலால் இந்தியர்களே நஷ்டமடைந்தவர்களாயினர். அவர்கள் அடைந்த ஆதாயம்—அப்படி ஆதாயமென்று ஒன்று இருந்தால்—அவர்கள் வேறு வழியில் எவ்வளவு நஷ்டப்படக்கூடுமோ அந்த அளவுக்கு நஷ்டத்திற்குள்ளாகவில்லை என்பதேயாகும். மத்தியஸ்தரின் முடிவுப்படி 1886-ஆம் ஆண்டில் இச்சட்டம் திருத்தப்பட்டது. பதிவுக் (ரிஜிஸ்டிரேஷன்) கட்டணம் இருபத்தைந்து பவுனிலிருந்து மூன்று பவுனாகக் குறைக்கப்பட்டது. இந்தியர்கள் நிலம் வைத்திருக்கக்கூடாதென்று தடுத்த பிரிவு எடுக்கப்பட்டது. அதற்கு மாருக டிரான்ஸ்வால் அரசாங்கம் அவர்கள் குடியிருப்புக்கெனத் தனியே ஒதுக்கி வைக்கும் இடங்களிலும் வீதிகளிலும் இந்தியர்கள், தாவரச் சொத்துக்களுக்குச் சொந்தக்காரர்களாகலாம் என்று ஒரு திருத்தம் சேர்க்கப்பட்டது. திருத்திய சட்டப்

பிரகாரம் அரசாங்கம் யோக்கியமாக நடக்கவில்லை. இந்தியருக்கென்று ஒதுக்கி வைக்கப்பட்ட இடங்களில் கூட நிலம் வாங்கும் சுதந்திரத்தை இந்தியர்களுக்கு மறுத்தனர். இந்தியர் இருந்த எல்லா ஊர்களிலும், ஊருக்குத் தூரத்தில் தண்ணீர் வசதியோ, விளக்குகள் போடும் ஏற்பாடுகளோ, சுகாதாரச் சௌகரியங்களோ இல்லாத அசுத்தமான இடங்கள் இந்தியருக்கெனத் தேர்ந்தெடுக்கப்பட்டன. இவ்விதம் இந்தியர்கள் டிரான்ஸ்வாலின் 'பஞ்சமர்'களானார்கள். இவ்விடங்களுக்கும் இந்தியாவில் தீண்டாதார் சேரிகளுக்கும், உண்மையாகச் சொல்லுமிடத்து, யாதொரு வித்தியாசமுமில்லை. எப்படி பஞ்சமர்களைத் தொடுவதும், சேரிகளுக்குப் பக்கத்தில் இருப்பதும் தங்களை அசுத்தமாக்குமென்று உயர் சாதியார் நினைக்கிறார்களோ, அப்படியே இந்தியர்களுடன் பழகுவதும், அவர்களுக்குப் பக்கத்தில் வசிப்பதும் தங்களை அசுத்தமாக்குமென டிரான்ஸ்வால் ஐரோப்பியர்கள் நினைத்தனர். தவிர இந்தியர்கள், ஒதுக்கிய அவ்விடங்களில் மாத்திரமே வியாபாரம் செய்யவேண்டுமென டிரான்ஸ்வால் அரசாங்கம் மேற்படி சட்டத்திற்கு விளக்கம் செய்தது. சட்டத்தைப்பற்றிய விளக்கம் டிரான்ஸ்வாலின் நீதி ஸ்தலங்களால் செய்யப்படவேண்டியதென மத்தியஸ்தர் முடிவு கூறியிருந்தனர். ஆதலால், இந்திய வியாபாரிகளுடைய நிலைமை மிகவும் சங்கடமாயிருந்தது. எனினும், ஓரிடத்தில் சமரசப் பேச்சுப் பேசிக்கொண்டும் மற்றோர் இடத்தில் நீதிஸ்தலங்களை நாடியும், மூன்றாவது இடத்தில் தங்களுக்கு இருந்த சிறிய செல்வாக்கை உபயோகித்தும், அவர்கள் ஒருவாறு சமாளித்துக் கொண்டு வந்தனர். போயர் யுத்தம் தொடங்குவதற்கு முன்னால் டிரான்ஸ்வாலில் இந்தியர்களுக்கு இவ்விதத் துர்ப்பாக்கியமான. ஆபத்தான நிலைமையே இருந்து வந்தது.

பிரீ ஸ்டேட்டில் இருந்த நிலைமையைப்பற்றி இப்பொழுது கவனிப்போம். அங்கே சுமார் ஒரு டஜன் இந்தியர்கள்தான் கடைகள் வைத்திருப்பார்கள்; அதற்குள் ஐரோப்பியர்கள் ஒரு பலத்த கிளர்ச்சியை ஆரம்பித்தார்கள். வால்க்ஸ்ராடில் ஒரு கண்டிப்பான சட்டத்தை நிறைவேற்றியதும், இந்திய வியாபாரிகளுக்குப் பெயரளவுக்கு நஷ்ட ஈடு கொடுத்துவிட்டு அவர்களை அந்நாட்டைவிட்டு வெளியே தள்ளினார்கள். இந்தியன் எவனும் அந்நாட்டில் எக்காரணத்தைக்கொண்டும் தாவரச் சொத்துக்களுக்குச் சொந்தக்காரனா யிருக்கக்கூடாதென்றும், வியாபாரமும், விவசாயமும் செய்யக்கூடாதென்றும், வாக்குரிமை

பெறக்கூடாதென்றும் அச்சட்டத்தில் கண்டிருந்தது. தனி அனுமதியின்பேரில் கூலியாகவோ, அல்லது ஹோட்டல் வேலைக்காரனுகவோ இந்தியன் அந்நாட்டுக்குள் வந்திருக்கலாம். இந்த அருமையான அனுமதியையும் கேட்பவர்களுக்கெல்லாம் அதிகாரிகள் கொடுக்கவேண்டுமென்ற கட்டாயமில்லை. இதன் காரணமாக மரியாதையுள்ள இந்தியன் இரண்டு தினங்கள் கூட அதிகக் கஷ்டமின்றி அங்கே இருக்க முடியாது. போயர் யுத்த சமயத்தில் சில ஹோட்டல் வேலைக்காரர்களைத் தவிர, பிரீ ஸ்டேட்டில் வேறு இந்தியர் எவருமே இல்லை.

கேப் காலனியில்கூட இந்தியர்களுக்கு விரோதமாகப் பத்திரிகைகளில் கொஞ்சம் கிளர்ச்சி இருந்தது. அங்கே இந்தியர் நடத்தப்பட்ட மாதிரியும் இழிவானதாகவே இருந்தது. உதாரணமாக, இந்தியக் குழந்தைகள் பொதுப் பள்ளிக்கூடங்களில் படிக்கமுடியாது; இந்தியப் பிரயாணிகளுக்கு ஹோட்டல்களில் இடம் கிடைக்காது. ஆனுல், வியாபாரத்தைப்பற்றியும், நிலங்களை வாங்குவதைப்பற்றியும் அங்கே நெடுங்காலம் வரையில் யாதொரு கட்டுத்திட்டங்களும் இல்லாமல் இருந்தன.

இதற்குக் காரணங்களும் இருந்தன. பொதுவாக, கேப் காலனியிலும், குறிப்பாகக் கேப்டவுனிலும், நாம் முன்னுல் கவனித்திருப்பது போல், அங்கே ஜனத்தொகையின் ஒரு நல்ல பகுதியினராக மலேயர் இருந்தனர். மலேயர்கள் முஸல்மான்களாயிருந்ததனுல் கொஞ்ச காலத்தில் இந்திய முஸல்மான்களுடன் பழகி, அவர்கள் மூலம் மற்ற இந்தியர்களுடனும் பழகினுர்கள். தவிர, சில இந்திய முஸல்மான்கள் மலேயப் பெண்களை மணந்தனர். கேப் காலனி அரசாங்கம் எப்படி மலேயர்களுக்கு விரோதமாகச் சட்டம் செய்ய முடியும்? கேப் காலனியே அவர்கள் தாய்நாடு; டச்சு அவர்கள் தாய்மொழியாகவும் இருந்தது. அவர்கள் ஆரம்பத்திலிருந்து டச்சுக்காரர்களுடன் வாழ்ந்து வந்ததால், அவர்கள் பழக்க வழக்கங்களும் டச்சுக்காரர்களைப் போல் இருந்தன. ஆதலால் கேப் காலனிதான் நிறவேற்றுமையால் மிகவும் குறைவாகப் பாதிக்கப்பட்ட பகுதி.

கேப் காலனி குடியேற்ற நாடுகளில் மிகவும் பழமையானது. தென்னுப்பிரிக்காவின் பண்பாட்டின் கேந்திரமாகவும் அது இருந்ததால், அடக்கமும், பெருந்தன்மையும், தாராளப் போக்குமுள்ள பல ஐரோப்பியர்களை அது உருவாக்கியிருக்கிறது. தகுந்த சந்தர்ப்பங்களும், கல்வியும் தந்தால் உயர்ந்த மனிதர்களைத் தோற்றுவிக்க முடியாத இடமோ, இனமோ உலகில்

இல்லையென்பது என்னுடைய அபிப்பிராயம். இம்மாதிரி மக்களைத் தென்னுப்பிரிக்காவின் எல்லாப் பாகங்களிலும் சந்தித்தது எனது நல்ல அதிர்ஷ்டமாகும். கேப் காலனியில் இம்மாதிரி மக்களின் தொகை அதிகம். அவர்களில் பிரசித்தி பெற்றவரும், கல்வியில் மிகச் சிறந்தவருமானவர் மெர்ரிமான் (Mr. Merriman) என்பவர். அவர், கேப் காலனிக்கு *1872*-ஆம் ஆண்டில் பொறுப்பாட்சி கிடைத்த பின் அதிகாரத்துக்கு வந்த முதல் மந்திரி சபையிலும், அதற்குப் பின் வந்த மந்திரி சபைகளிலும் அங்கத்தினராயிருந்ததுமன்றி, *1910*-ஆம் ஆண்டில் தென்னுப்பிரிக்க யூனியன் ஸ்தாபிக்கப்பட்ட போதும் முதன் மந்திரியாக இருந்தார். அவர் தென்னுப்பிரிக்காவின் 'கிளாட்ஸ்டன்' (Gladstone) என்று அழைக்கப்பட்டார். அவருக்குப் பின். மால்டினேக்களும் ஷிரீனர்களும் இருக்கிறார்கள். *1872*-ஆம் வருடத்தில் கேப் காலனியின் பிரதம மந்திரியாக இருந்தவர், ஸர் ஜான் மால்டினே (Sir John Molteno). ஸ்ரீ ஷிரீனர் (Mr. W. P. Shreiner) பெயர் பெற்ற ஒரு வக்கீல். கொஞ்சகாலம் சர்க்கார் வக்கீலாக இருந்து, பிறகு முதன் மந்திரியானவர். அவருடைய சகோதரி, ஆலிவ் ஷிரீனர்* தென்னுப்பிரிக்கா முழுவதும் செல்வாக்குப் பெற்றதோடு, ஆங்கில மொழி பேசப்படுமிடமெல்லாம் நன்கு அறிமுகமான ஆற்றல் மிக்க மாது. 'கனவுகள்' என்ற புத்தகம் எழுதியதிலிருந்து, அப்புத்தகத்தின் ஆசிரியராக அவர் புகழ் அடைந்தார். எல்லா மக்கள்பாலும் அவருக்கிருந்த அன்பு எல்லையற்றது. அவர் கண்களில் அன்பு கனிந்தது. அவர் ஒரு பெரிய குடும்பத்தைச் சேர்ந்த, கற்றறிந்த மாதாக இருந்தபோதிலும், எளிமையான பழக்கங்கள் உடையவர். தம் வீட்டுப் பாத்திரங்களைத் தாமே சுத்தம் செய்துகொள்ளுவார்.

மெர்ரிமான், மால்டினேக்கள், ஷிரீனர்கள் இவர்கள் எப்போதும் நீக்கிரோக்கள் கட்சிக்கு உதவி செய்தனர். அவர்களின் உரிமைகளுக்கு ஆபத்து வந்தபோதெல்லாம் அவர்களைக் காக்கத் திடமுயற்சி செய்தனர். நீக்கிரோக்களுக்கும், இந்தியர்களுக்கும் அவர்கள் வித்தியாசம் பாராட்டினார்களெனினும், இந்தியர்கள்பாலும் அவர்களுக்கு அன்பு உண்டு. நீக்கிரோக்கள் ஐரோப்பியர் வருகைக்கு வெகு காலத்துக்கு முன்னிலிருந்து

---

* க்ரானன் ரைட் ஷிரீனர் என்ற அம்மையார் (1855-1920) புகழ் மிக்க ஒரு தென்னுப்பிரிக்க நாவலாசிரியை. "ஆலிவ் ஷிரீனர்" என்ற புனைபெயரில் அவர் எழுதி வந்தார். தென்னுப்பிரிக்காவில் பஸுடோலான்ட் என்ற பகுதியில் பிறந்தவர் இவர். 'ஆப்பிரிக்கப் பண்ணையின் கதை' என்ற இவரது நாவல் இலக்கிய உலகின் கவனத்தைக் கவர்ந்தது. தென்னுப்பிரிக்காவின் இயற்கை அழகு, அங்கே குடியேறிய டச்சுக்காரர்களின் வாழ்க்கை இவற்றின் அற்புதச் சித்திரங்களை இவருடைய நூல்களில் காணலாம்.

தென்னுப்பிரிக்கவாசிகளாக இருந்தபடியால், ஐரோப்பியர்கள் நீக்கிரோக்களின் இயற்கையான பிறப்புரிமைகளை அபகரிக்கக் கூடாதென்பது அவர்களுடைய வாதம். ஆனல், இந்தியர்களுடைய நியாயமில்லாத போட்டியின் அபாயத்தை அகற்றுவதற்காகச் சட்டம் இயற்றப்படுமானல் அது நியாயமற்றதாகாது என்றும் அவர்கள் நினைத்தனர். எனினும், இந்தியர்கள்பாலும் அவர்கள் மனத்தில் அன்பு இருந்தது; கோகலே, தென்னுப்பிரிக்காவுக்குச் சென்றபோது கேப் டவுன் நகர மன்றத்தில் அவருக்கு அந்நாட்டில் கொடுக்கப்பட்ட முதல் பொது வரவேற்புக் கூட்டத்தில் ஷிரீனர் தலைமை வகித்தார். மெர்ரிமானும் அவரை மரியாதையுடன் நடத்தி இந்தியர்கள் பால் தமக்குள்ள அனுதாபத்தை வெளியிட்டார். மெர்ரிமான் போன்ற வேறு சில ஐரோப்பியர்களும் இருந்தனர். இம்மாதிரியான ஐரோப்பியர்களின் உதாரணமாகவே பிரபலமான இவர்களைக் குறிப்பிட்டிருக்கிறேன்.

கேப் டவுனிலிருந்த பத்திரிகைகளும், தென்னுப்பிரிக்காவின் மற்றப் பாகங்களில் இருந்தவை போல இந்தியருக்கு அவ்வளவு விரோதமானவை அல்ல.

இக்காரணங்களுக்காக இனத்துவேஷம் மற்றப் பாகங்களை விடக் கேப் காலனியில் எப்போதும் குறைவாக இருந்தபோதிலும், மற்ற பகுதிகளில் அடிக்கடி தென்பட்ட இந்தியருக்கு விரோதமான உணர்ச்சி கேப் காலனிக்கும் தொற்றிவிடுவது இயற்கையே. நேட்டாலைப் பார்த்து, அங்கும் குடியேற்றக் கட்டுப்பாட்டுச் சட்டம் ஒன்றும், வியாபாரிகள் லைசென்ஸ் சட்டம் ஒன்றுமாக இரண்டு சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன.

ஆதலால், முன்பு பரக்கத் திறந்திருந்த தென்னுப்பிரிக்காவின் கதவுகள் போயர் சண்டையின்போது இந்தியர்களுக்கு முழுதும் சாத்தப்பட்டு விட்டன என்று சொல்லலாம். டிரான்ஸ்வாலில் மூன்று பவுன் பதிவுக் கட்டணத்தைத் தவிர, குடியேற்றத்துக்கு வேறு கட்டுப்பாடுகள் இல்லை. நேட்டாலும், கேப் காலனியும் தங்கள் துறைமுகங்களை இந்தியர்களுக்குச் சாத்திவிட்டபோது, உள்நாட்டிலிருக்கும் டிரான்ஸ்வாலுக்குப் போவது இந்தியர்களுக்குக் கஷ்டமாயிருந்தது. போர்ச்சுக்கீசியர் துறைமுகமான டெலகோவா பே மூலம் அவர்கள் அங்கே போக முடிந்தது. போர்ச்சுக்கீசியர்களும் ஏறக்குறைய, பிரிட்டிஷாரைப் போலவே நடந்தனர். அதிகக் கஷ்டத்துடனும், துறைமுக உத்தியோகஸ்தர்களுக்கு லஞ்சம் கொடுத்தும் நேட்டால் மூலமும், டெலகோவா பே மூலமும் சில இந்தியர்கள் டிரான்ஸ்வாலுக்குப் போக முடிந்ததென்பதையும் இங்கே சொல்ல வேண்டும்.

## ஆருவது அத்தியாயம்

# ஆரம்பப் போராட்ட விவரம்

இந்தியர்களின் நிலைமையைப் பற்றி முந்திய அத்தியாயங்களில் சொல்லப்பட்டபோது, அவர்களுக்கு விரோதமாகச் செய்யப்பட்ட காரியங்களை அவர்கள் எப்படி சமாளித்து வந்தனர் என்பதைச் சிறிது கண்டோம். சத்தியாக்கிரகத்தின் ஆரம்பத்தைப்பற்றிச் சரியாக அறிந்து கொள்ளுவதற்கு, சத்தியாக்கிரகத்துக்கு முந்திய நாட்களில் இந்தியர்களுடைய உரிமையைப் பாதுகாப்பதற்கு என்ன முயற்சிகள் செய்யப்பட்டன என்பதையும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்.

*1899*–ஆம் ஆண்டுவரை இந்தியர்கள் கட்சியை எடுத்துரைப்பதற்குத் தென்னுப்பிரிக்காவில் சுதந்திரமான, படித்த இந்தியர்கள் எவருமே இல்லை என்றே சொல்லலாம். ஆங்கிலம் தெரிந்த இந்தியர், பெரும்பாலும் குமாஸ்தாக்கள். அவர்களுடைய ஆங்கில ஞானம், அவர்கள் தொழிலுக்கு மாத்திரம் போதுமானதாகவும், விண்ணப்பங்கள் எழுதுவதற்குப் போதுமான ஆற்றல் இல்லாததாகவும் இருந்தது. தவிர, அவர்கள் குமாஸ்தாக்களாயும், தங்கள் நேரத்தை எல்லாம் முதலாளிகளுக்காகச் செலவிட வேண்டியவர்களாயும் இருந்தனர். ஆங்கிலம் தெரிந்த இந்தியர்களில் மற்றொரு வகுப்பார், தென்னுப்பிரிக்காவில் பிறந்தவர்கள். அவர்கள் பெரும்பாலும் ஒப்பந்தத் தொழிலாளர்களின் மக்கள். அவர்களில் இவ்வேலை செய்யும் திறமை யாருக்காவது இருக்கும் பட்சத்தில், அப்படிப்பட்டவர் நியாய மன்றங்களில் மொழிபெயர்ப்பவர்களாக அரசாங்க சேவையில் இருந்தனர். ஆதலால், தங்கள் சகோதரத்துவ உணர்ச்சியை வாயினுல் சொல்லுவதைத் தவிர இந்தியர்களின் கட்சிக்கு வேறொன்றும் செய்ய அவர்களால் இயலவில்லை.

ஒப்பந்தத் தொழிலாளர்களும் ஒப்பந்தத்திலிருந்து விடுபட்டவர்களும் பெரும்பாலும் உத்தரப் பிரதேசத்திலிருந்தும் சென்னை மாகாணத்திலிருந்தும் வந்தவர்கள். சுதந்திர இந்தியர்களாயிருந்த முஸல்மான் வியாபாரிகளும், ஹிந்து குமாஸ்தாக்களும் கூர்ஜரத்தைச் சேர்ந்தவர்கள். மிகச் சில பார்ஸி

வியாபாரிகளும், குமாஸ்தாக்களும் இருந்தனர். தென்னுப்பிரிக்கா முழுமைக்கும் சுமார் முப்பது, நாற்பது பார்ஸிக்காரர்களுக்கு மேல் இல்லை. நான்காவதாக சிந்து மாகாணத்தைச் சேர்ந்தவர்களும் இருந்தனர். இவர்கள் வர்த்தகர்கள். தென்னுப்பிரிக்காவில் இவர்கள் இருநூறு பேர் இருப்பார்கள். சிந்திகள் இந்தியாவுக்கு வெளியே போய் இருந்த இடங்களில் எல்லாம் பட்டு, ஜரிகைச் சாமான்களையும், கருங்காலி, சந்தனம், தந்தம் இவைபோன்ற பொருள்களால் செய்த பெட்டி முதலிய சாமான்களையும் கொண்டுவந்து வியாபாரம் செய்தார்கள். ஐரோப்பியர்கள்தான் இவர்களிடத்தில் அதிகமாக வியாபாரம் செய்து வந்தனர்.

ஒப்பந்தத்துக்குட்பட்ட தொழிலாளர்களை ஐரோப்பியர்கள், 'கூலிகள்' என்று அழைத்தனர். சுமை தூக்குவோர் கூலிகள். இந்தச் சொல்லே மிகவும் அதிகமாக உபயோகப்படுத்தப்பட்டது. அதன் காரணமாக ஒப்பந்தத் தொழிலாளர்களும் தங்களைக் 'கூலி'களென்றே சொல்லிக்கொள்ள ஆரம்பித்தார்கள். நூற்றுக்கணக்கான ஐரோப்பியர்கள், இந்திய வக்கீல்களையும் இந்திய வியாபாரிகளையும், 'கூலி வக்கீல்கள்' என்றும் 'கூலி வியாபாரிகள்' என்றும் கூப்பிட்டார்கள். இந்தச் சொல் அவமரியாதை செய்வது என்றே சில ஐரோப்பியர்களுக்குத் தெரியாது. இகழ்வதற்கும், அவமரியாதை செய்வதற்காகவுமே பலர் இந்தச் சொல்லை உபயோகப்படுத்தினுர்கள். ஆதலால், சுதந்திர இந்தியர்கள் தங்களை ஒப்பந்தத் தொழிலாளர்களிலிருந்து வேறுபடுத்திக்கொள்ள முயற்சி செய்தார்கள். இக்காரணத்துக்காகவும், இந்தியாவில் மாத்திரமே காணப்படும் மற்றும் சில காரணங்களினுலும், ஒரு பக்கம் சுயேச்சையான இந்தியர்களுக்கும், மற்ரெரு பக்கம் ஒப்பந்தத்துக்கு உட்பட்ட தொழிலாளர்களுக்கும், அதிலிருந்து விடுபட்ட தொழிலாளர்களுக்குமிடையே வித்தியாசம் உண்டாக்கப் பிரயத்தனம் செய்யப்பட்டது.

சுதந்திர இந்தியர்கள், முக்கியமாக முஸல்மான் வியாபாரிகள், மேலே கூறப்பட்ட அநீதிகளை எதிர்க்க முன்வந்தனர். ஆனுல், இதில் ஒப்பந்தத் தொழிலாளர்களுடைய உதவியையும், ஒப்பந்தங்களிலிருந்து விடுதலை பெற்ற தொழிலாளர்களுடைய உதவியையும் பெறுவதற்குக் குறிப்பாக யாதொரு முயற்சியும் செய்யப்படவில்லை. ஒருவேளை இவ்வெண்ணம் ஒருவருக்கும் தோன்றியிராமல் இருந்திருக்கலாம்; அல்லது தோன்றியிருந்

தாலும், அவர்களையும் இவ்வியக்கத்தில் சேர்த்துக்கொள்ளுவதால் விஷயம் இன்னும் மோசமாகப் போகுமென்ற பயமும் இருந்திருக்கலாம். சுதந்திர வியாபாரிகளுக்கு விரோதமாகவே இந்த அநீதிகள் செய்யப்பட்டன என்று நினைக்கப்பட்டதாகையால், அவர்களைக் காப்பாற்றுவதற்கு வேண்டிய உபாயங்கள் மட்டும் கையாளப்பட்டன. அவர்களுடைய பிரதிகூலமான நிலைமையையும், ஆங்கிலம் அறியாமையையும்; இந்தியாவிலும் பொது வேலைகளில் அவர்களுக்கு அனுபவம் இல்லாமையையும் யோசித்துப் பார்த்தால், தங்களுக்கு நேரிட்ட கஷ்டங்களைப் போக்கிக்கொள்ள மிக நன்ருகவே அவர்கள் போராடினுர்கள் என்று சொல்லலாம். ஐரோப்பிய வக்கீல்களின் உதவியை நாடி, விண்ணப்பங்கள் தயார் செய்தும், சில சமயங்களில் தங்கள் பிரதிநிதிகளை அனுப்பி அதிகாரிகளைப் பார்த்தும், தங்களால் இயன்றவரை விஷயங்களைச் சீர்திருத்த முயன்றனர். 1893-ஆம் ஆண்டு வரை இம்மாதிரி நடந்தது.

சில முக்கியமான தேதிகளை ஞாபகத்தில் வைப்பது வாசகர்களுக்கு உதவியாக இருக்கும். 1893-ஆம் வருடத்துக்கு முன்பு இந்தியர்கள் ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டிலிருந்து துரத்தப்பட்டார்கள். டிரான்ஸ்வாலில் 1885-ஆம் வருடத்து 3 வது சட்டம் அமலில் இருந்தது. நேட்டாலில் ஒப்பந்தத் தொழிலாளர்களைத் தவிர மற்றவர்களைத் துரத்துவதற்கு வேண்டிய சட்டம் இயற்ற யோசனை செய்யப்பட்டது; இதற்காகப் பொறுப்பாட்சியும் வாங்கியாகிவிட்டது.

1893-ஆம் வருடம் ஏப்ரல் மாதம், தென்னுப்பிரிக்காவுக்குப் போக இந்தியாவிலிருந்து நான் புறப்பட்டேன். குடியேறச் சென்ற இந்திய மக்களின் முன்னைய வரலாற்றைப் பற்றி எனக்கு அப்பொழுது ஒன்றுமே தெரியாது. என் தொழில் முறையிலேதான் நான் அங்கே சென்றேன். தாதா அப்துல்லா என்ற பெயரால் போர்பந்தர் மெமன்களுடைய கம்பெனியொன்று அச்சமயம் டர்பனில் வியாபாரம் செய்துகொண்டிருந்தது. இம்மாதிரியே பெயர் பெற்ற கம்பெனியொன்று இதற்குப் போட்டியாக, தையப் ஹாஜி கான் முகம்மது என்ற பெயரில் பிரிட்டோரியாவில் வியாபாரம் செய்து கொண்டிருந்தது. துரதிர்ஷ்டவசமாய், இவ்விரு கம்பெனிகளுக்குள் ஒரு முக்கியமான தாவா கோர்ட்டில் இருந்தது. போர்பந்தரில் இருந்த தாதா அப்துல்லா கம்பெனியின் பங்காளி ஒருவர், என்னை அமர்த்தித் தென்னுப்பிரிக்காவுக்கு அனுப்பினுல் அவர்கள் தாவாவுக்கு

உதவியாயிருக்குமென நினைத்தார். நான் அப்போதுதான் வக்கீல் ஆனேன்; தொழிலுக்குப் புதியவன். எனினும், நான் அவர்கள் தாவாவைக் கெடுத்து விடுவேன் என்று அவர் பயப் படவில்லை. ஏனெனில், கோர்ட்டில் அந்த தாவாவை நான் நடத்துமாறு அவர் விரும்பவில்லை. ஆனால், அவர்கள் வைத் திருந்த தென்னாப்பிரிக்க வக்கீல்களுக்கு நான் உதவி செய்ய வேண்டுமென்றுதான் விரும்பினார். எனக்குப் புதிய அனுப வங்களில் ஆர்வம் உண்டு. நான் புதிய இடங்களையும் புதிய நாடுகளையும் பார்க்க விரும்பினேன். 'கேசு'கள் கொண்டு வந்து கொடுப்பவர்களுக்குத் தரகு கொடுப்பது என்பது எனக்கு மிகவும் அருவருப்பாக இருந்தது. சௌராஷ்டிரத் தில் தென்படும் சூழ்ச்சிகள் நிரம்பிய சூழ்நிலையில் நான் திணறிக்கொண்டிருந்தேன். இவ்வேலை ஒரு வருடத்துக்குத் தான். இதை ஒப்புக்கொள்ளுவதற்கு எனக்கு ஒரு தடையும் தோன்றவில்லை. நான் நஷ்டப்படுவதற்கும் ஒன்றுமில்லை. ஏனெனில், என்னுடைய பிரயாணச் செலவுகளையும், தென் னாப்பிரிக்காவில் ஏற்படும் செலவுகளையும் தவிர எனக்குச் சம்பளமாக நூற்றைந்து பவுன்களும் கொடுப்பதாகத் தாதா அப்துல்லா கம்பெனியார் ஒப்புக்கொண்டனர். இவ்வேற்பாடு எனக்குத் தந்தை போல் இருந்த காலஞ்சென்ற என் தமையனார் வாயிலாகச் செய்யப்பட்டது. அவர் விருப்பம் எனக்கு ஆணை போன்றது. நான் தென்னாப்பிரிக்காவுக்குப் போவதை அவர் விரும்பினார். எனவே, 1893-ஆம் வருடம் மே மாதத்தில் நான் டர்பன் போய்ச் சேர்ந்தேன்.

நான் பாரிஸ்டராதலால், எனக்குத் தெரிந்தவாறு நல்ல உடை பூண்டு, நான் பெரிய மனிதன் என்ற பாவத்தோடு டர்பனில் இறங்கினேன். ஆனால், சீக்கிரத்திலேயே என் மயக் கம் தெளிந்து விட்டது. என்னை அமர்த்திய தாதா அப்துல்லா வின் கூட்டாளி நேட்டால் எப்படி இருக்கும் என்பதைச் சொல்லி யிருந்தார். ஆனால், நான் அங்கே என் கண்ணால் பார்த்தது, அவர் சொன்னதைப் பொய்யாக்கியது. அவர் பேரில் குற்றம் சொல்லுவதற்கில்லை. அவர் உண்மை நிலைமையை அறியாத கபட மற்ற நேர்மையான மனிதர். நேட்டாலில் இந்தியர்களுக்கு இருந்த கஷ்டம் அவருக்குக் கொஞ்சமும் தெரியாது. மிகுந்த அவமானத்தை உண்டாக்கக்கூடிய நிலைமைகளும், அப்படிப்பட்ட வையாக அவருக்குத் தோன்றவில்லை. ஐரோப்பியர்கள் இந்தியர் களை மிகவும் மானக்கேடாக நடத்தியதை முதல் நாளன்றே கவனித்தேன்.

நான் வந்த இரண்டு வாரங்களுக்குள் எனக்குக் கோர்ட்டில் ஏற்பட்ட அருவருப்பான அனுபவங்களையும், ரெயில் வண்டிகளில் எனக்கு நேர்ந்த கஷ்டங்களையும், வழியில் எனக்குக் கிடைத்த அடிகளையும், ஹோட்டல்களில் தங்க இடம் கிடைப்பதற்காக நான் பட்ட சிரமத்தையும், பல தடவைகளில் இடம் கிடைக்காமல் இருந்ததையும், இங்கே விவரிக்க நான் விரும்பவில்லை. இந்த அனுபவங்கள் எல்லாம் என் மனத்தில் பதிந்து விட்டன என்று சொன்னால் மாத்திரமே போதுமானது. சுயநலத்தாலும், புதுமையைக்காணும் ஆவலாலும் தூண்டப்பட்டு, ஒரு தனி வழக்கு நிமித்தம் நான் அங்கே சென்றிருந்தேன். ஆதலால், முதல் வருடத்தில் அந்த அநீதிகளைப் பார்த்துக்கொண்டும், அவைகளுக்கு உட்பட்டும் இருந்தேன். பிறகு என் கடமை என்ன என்ற உணர்ச்சி என் மனத்தில் பிறந்தது. என் சுயநலத்தைப் பற்றிய வகையில், தென்னாப்பிரிக்கா எனக்கு நன்மை விளைவிக்காது எனக் கண்டேன். என்னை அவமதிக்கும் ஒரு நாட்டில் பணம் சம்பாதிப்பதிலோ அல்லது வசிப்பதிலோ எனக்கு விருப்பம் இல்லாதது மட்டுமல்ல, எனக்கு அதிக வெறுப்பாகவும் இருந்தது. நான் ஒரு சங்கடத்தில் மாட்டிக்கொண்டிருந்தேன். இரண்டு வழிகளே எனக்கு இருந்தன. ஒன்று, எனக்குத் தெரிவிக்கப்படாத சில விஷயங்கள் எனக்கு இப்பொழுது தெரிகின்றன என்ற காரணத்தைக் காட்டி, தாதா அப்துல்லா கம்பெனியாரிடம் நான் செய்துகொண்டிருந்த ஒப்பந்தத்திலிருந்து விடுதலை செய்து கொண்டு இந்தியாவுக்குத் திரும்புவது. இல்லாவிட்டால், எல்லாக் கஷ்டங்களையும் சகித்துக்கொண்டு என் ஒப்பந்தத்தை நிறைவேற்றுவது. மாரிட்ஸ்பர்க் ஸ்டேஷனில் ரெயிலிலிருந்து ஒரு போலீஸ்காரன் என்னை வெளியே தள்ளிவிட்டான். ரெயில் போன பிறகு, மிகுந்த குளிரில் நடுங்கிக்கொண்டு, பிரயாணிகள் தங்கும் அறையில்தான் உட்கார்ந்துகொண்டிருந்தேன். என் சாமான்கள் என்னவாயின என்றும் எனக்குத் தெரியாது. மறுபடியும் அவமானப்படுத்தப்பட்டுத் தாக்கப்படலாம் என்ற பயத்தால் அவைகளைப் பற்றி விசாரிக்கவும் எனக்குத் தைரியம் வரவில்லை. தூங்கலாம் என்பதற்கும் வழி ஏது? சந்தேகம் என் மனத்தில் குடிகொண்டது. இரவில் வெகு நேரத்திற்குப்பின், இந்தியாவுக்குத் திருப்பி ஓடுவது கோழைத்தனம் என்ற முடிவுக்கு வந்தேன். நான் ஏற்றுக் கொண்டதை நிறைவேற்றியே தீரவேண்டும்; அவமானங்களையும் அடிகளையும் பொருட்படுத்தாமல் நான் பிரிட்டோரியாவுக்குச் சென்றே தீரவேண்டும். பிரிட்டோரியா என்னுடைய

இலக்காக இருந்தது. அங்கேதான் வழக்கு நடந்து வந்தது. என் வேலையுடன், முடியுமானல் இந்த அநீதிகளை ஒழிக்கச் சில முறைகளையும் கைக்கொள்ளுவதெனத் தீர்மானித்தேன். இந்தத் தீர்மானம் என் மனத்திற்குச் சற்று அமைதியையும் பலத்தையும் கொடுத்தாலும், எனக்குத் தூக்கம் மாத்திரம் வரவில்லை.

அடுத்த நாள் காலை தாதா அப்துல்லா கம்பெனிக்கும், ரெயில்வே கம்பெனியின் நிர்வாக உத்தியோகஸ்தருக்கும் தந்தி அடித்தேன். இருவரிடத்திலிருந்தும் பதில்கள் வந்தன. தாதா அப்துல்லாவும், அச்சமயத்தில் நேட்டாலில் இருந்த அவர் கூட்டாளி சேட் அப்துல்லா ஹாஜி ஆதம் ஜவேரியும் கண்டிப்பான நடவடிக்கை எடுத்துக்கொண்டிருந்தார்கள். பல ஊர்களிலிருந்த தங்கள் இந்திய ஏஜண்டுகளுக்கும் என்னைக் கவனித்துக்கொள்ளும்படி தந்தி அடித்திருந்தார்கள். ரெயில்வே கம்பெனியின் நிர்வாக உத்தியோகஸ்தரையும் போய்ப் பார்த்தார்கள். மாரிட்ஸ்பர்க் இந்திய வியாபாரிகள், தந்தி கிடைத்து என்னைப் பார்க்க வந்தார்கள். தாங்கள் எல்லோருக்குமே இம்மாதிரி மோசமான அனுபவங்கள் இருந்திருக்கின்றன என்றும், ஆனல் அவைகளுக்குப் பழக்கப்பட்டுப் போய்விட்டதால் தாங்கள் அவைகளைப் பொருட்படுத்தவில்லை என்றும் சொல்லி என்னைச் சமாதானம் செய்ய முயன்றார்கள். சாதாரணமாக, வியாபாரத்திற்கு மானத்தைப் பார்த்தால் முடியாது. ஆதலால், பணத்தைப் பெற்றுக்கொள்ளுவது போல் அவமானத்தைப் பெற்றுக்கொள்ளுவதையும் அவர்கள் தங்கள் கொள்கையாகக் கொண்டிருந்தனர். எப்படி முக்கிய வாயில்கள் மூலம் ரெயில்வே நிலையத்திற்குள் இந்தியர்கள் போக முடியவில்லையென்றும், டிக்கட்டுகள் வாங்குவது தங்களுக்கு எவ்வளவு கடினமாயிருந்ததென்றும் அவர்கள் எனக்குச் சொன்னர்கள். அன்றிரவே பிரிட்டோரியாவுக்குப் புறப்பட்டேன். எல்லோருடைய உள்ளத்தையும் சோதனை செய்யும் இறைவன் என் உறுதியையும் நன்ருகப் பரீட்சை செய்தான். நான் பிரிட்டோரியாவுக்குப் போகும் வழியில் இன்னும் அதிக அவமானத்தையும் அடிகளையும் பெற்றேன். ஆனல், இவை எல்லாம் என் தீர்மானத்தையே உறுதிப்படுத்தின.

இவ்விதம் 1893-ஆம் வருடத்தில் தென்னுப்பிரிக்காவிலிருந்த இந்தியர்களின் நிலைமையைப்பற்றி எனக்கு நிறைந்த அனுபவம் கிடைத்துவிட்டது. ஆனல், பிரிட்டோரியாவிலிருந்த இந்தியர்களுடன் இவ்விஷயத்தைப்பற்றிப் பேசியதற்குமேல் நான் வேறென்றும் செய்யவில்லை. கம்பெனியின் வழக்கைப் பார்த்துக்

கொண்டு, அதே சமயத்தில் தென்னுப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு இருக்கும் குறைகள் சம்பந்தமான விஷயத்தையும் மேற்கொள்ளுவது அசாத்தியமென எனக்குத் தோன்றிற்று. இரு விஷயங்களையும் ஒன்ருகச் செய்வது இரண்டையும் கெடுப்பதாகும். *1894*-ஆம் ஆண்டு வந்தது. நான் டர்பனுக்குத் திரும்பி, இந்தியாவுக்குப் போக ஆயத்தமானேன். தாதா அப்துல்லா எனக்குப் பிரிவு உபசாரம் நடத்தினர். அச்சமயம் யாரோ ஒருவர் 'நேட்டால் மெர்க்குரி'யின் ஒரு பிரதியை என் கையில் கொடுத்தார். நான் அதைப் படித்தேன். அதிலிருந்த நேட்டால் சட்டசபை நடவடிக்கைகளின் விவரமான அறிக்கையில் 'இந்தியர்கள் வாக்குரிமை' என்ற தலைப்பின்கீழ்ச் சில வரிகள் இருந்ததைக் கண்டேன். நேட்டால் அரசாங்கத்தார் இந்தியர்கள் வாக்குரிமையை ரத்து செய்வதற்காக ஒரு மசோதா கொண்டு வரும் தறுவாயில் இருந்தனர். இது, அவர்களுக்கிருந்த சிறிய உரிமைகளையும் நீக்குவதன் ஆரம்பமாகும். அச்சமயத்தில் செய்யப்பட்ட சொற்பொழிவுகள் அரசாங்கத்தின் எண்ணத்தைத் தெளிவாக்கின. அங்கிருந்த வியாபாரிகளுக்கும், மற்றவர்களுக்கும் அந்தச் செய்தியை வாசித்துக் காட்டி, எனக்குத் தெரிந்த வரையில் அப்போதிருந்த நிலைமையைப்பற்றியும் சொன்னேன். முழு விவரங்களும் என்னிடம் இல்லை. தங்கள் உரிமைகளின் பேரில் செய்யப்பட்ட எதிர்ப்புக்களை இந்தியர்கள் பலமாகத் தடுக்க வேண்டுமென நான் சொன்னேன். அவர்கள் அதற்கு ஒப்புக்கொண்டனர்; ஆனல் தனிமையாகத் தாங்கள் இப்போராட்டத்தை நடத்த முடியாதென்று சொல்லி என்னை அங்கேயே இருக்கும்படி வற்புறுத்தினர்கள். நான் சுமார் ஒரு மாதம் அதிகமாக அங்கே இருக்க இசைந்தேன். அதற்குள் போராட்டம் முடிவடைந்துவிடும். சட்டசபையில் ஆஜர் செய்யப்படுவதற்காக அன்றிரவு ஒரு விண்ணப்பம் எழுதினேன். நடவடிக்கைகளைத் தாமதிக்குமாறு கேட்டுக்கொண்டு அரசாங்கத்துக்கும் ஒரு தந்தி அடிக்கப்பட்டது. சேட் ஹாஜி ஆதம் தலைமையின் கீழ் உடனே ஒரு கமிட்டியை ஏற்படுத்தி அவர் பேரால் தந்தி அடிக்கப்பட்டது. அதன் காரணமாக அம்மசோதாவின் நடவடிக்கை இரண்டு நாட்கள் ஒத்தி வைக்கப்பட்டது. அவ்விண்ணப்பந்தான் இந்தியர்களால் தென்னுப்பிரிக்க சட்டசபைக்கு அனுப்பப்பட்ட விண்ணப்பங்களில் முதலாவது. இம்மசோதாவின் பிந்திய வரலாற்றை நான்காவது அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறேன். இவ்விண்ணப்பம் இந்த மசோதாவைத் தோற்கடிக்கவில்லை யெனினும் ஒரு விதமான உணர்ச்சியை

நிச்சயமாக இது உண்டாக்கிற்று. இம்மாதிரிக் கிளர்ச்சிகளில் தென்னுப்பிரிக்க இந்தியர்களுக்கு இதுதான் முதல் அனுபவம். சமூகம் முழுவதிலும் ஒரு புதிய உற்சாகம் மூண்டது. ஒவ்வொரு நாளும் கூட்டங்கள் நடந்தன. நாளுக்கு நாள் அவைகளுக்கு அதிகமான பேர்கள் வந்து கொண்டிருந்தனர். தேவைக்கு அதிக மாகவே தொகையும் வசூலாயிற்று. பல தொண்டர்கள் நகல் கள் தயார் செய்வதிலும், கையெழுத்துக்கள் வாங்குவதிலும், இம்மாதிரியான மற்ற வேலைகள் செய்வதிலும் யாதோர் ஊதிய மும் பெருது உதவி செய்தனர். மற்றும் சிலர், இங்ஙனம் வேலை செய்ததோடு பணமும் கொடுத்தார்கள். விடுதலை பெற்ற ஒப்பந்தத் தொழிலாளர்களின் மக்கள் உற்சாகத்துடன் இவ் வியக்கத்தில் சேர்ந்தனர். அவர்களுக்கு ஆங்கிலம் தெரியும்; அவர்கள் கையெழுத்தும் அழகாக இருக்கும். நகல் எடுப்பதை யும், மற்ற வேலைகளையும் இரவு பகல் மனம் சலிக்காமல் செய் தனர். ஒரு மாதத்திற்குள் பத்தாயிரம் கையெழுத்துக்கள் கொண்ட விண்ணப்பம் ஒன்று லார்டு ரிப்பனுக்கு அனுப்பப் பட்டது. நான் உடனே செய்யவேண்டுமென்றிருந்த வேலையும் முடிந்தது.

நான் இந்தியா திரும்புவதற்கு அனுமதி கேட்டேன். ஆனுல், இக்கிளர்ச்சி இந்தியர்கள் மனத்தில் மிகுந்த ஊக்கத்தை உண் டாக்கியிருந்ததால், அவர்கள் என்னைப் போக விடவில்லை. அவர் கள் சொன்னுர்கள்: ''நம்மைக் கடைசியாக அழித்துவிடுவதற் குக் கையாளப்படப்போகும் முறையில் இது முதல் படியெனத் தாங்களே எங்களுக்கு எடுத்துரைத்தீர்கள். குடியேற்ற நாட்டு மந்திரி நம் விண்ணப்பத்துக்கு அனுகூலமான பதில் கொடுப்பா ரென யார் சொல்ல முடியும்? தாங்கள் எங்கள் உற்சாகத்தைப் பார்த்தீர்கள். நாங்கள் வேலை செய்வதற்குச் சம்மதித்துத் தயா ராகவும் இருக்கிருேம். எங்களிடத்தில் பணமும் இருக்கிறது. ஆனுல், ஒரு வழிகாட்டி இல்லாது போனுல், இதுவரை செய்த சிறிய முயற்சியும் வீணுகும்; ஆதலால், இங்கிருப்பது தங்கள் கடமையென நினைக்கிருேம்''. இந்தியர்களுடைய நலன்களைக் காப் பாற்றுவதற்கு நிரந்தரமான ஸ்தாபனம் ஒன்று அமைப்பது நன் றெனஎனக்கும் தோன்றியது. ஆனுல், நான் எங்கு, எப்படி இருப்பது? எனக்கு ஒழுங்காகச் சம்பளம் கொடுத்துவர முன்வந் தார்கள். ஆனுல், நான் அதற்குக் கண்டிப்பாய் மறுத்துவிட்டேன். பொது வேலைக்கு ஒருவன் அதிகமாகச் சம்பளம் வாங்கலாகாது. தவிர நான் இவ்வேலையைப் புதிதாகச் செய்பவன். எனக்கு அப்

பொழுது இருந்த எண்ணப்படி, சாதாரணமாக, பாரிஸ்டர்கள் இருக்கும் முறையில், சமூகத்துக்கு மதிப்பு ஏற்படும் வகையில் நான் வாழவேண்டுமென நினைத்தேன். அதற்கு அதிகம் செலவாகும். என்னுடைய செலவுக்கு, பொதுஜனங்களிடமிருந்து வசூல் செய்து காரியங்களை நடத்தும் ஒரு ஸ்தாபனத்தை எதிர்பார்த்திருப்பது தவறெனத் தோன்றியது. இதனால் வேலை செய்யும் என் திறமும் குறைக்கப்படும். இதற்காகவும், இம்மாதிரியான மற்றக் காரணங்களுக்காகவும், பொது மக்களுக்காகச் செய்யும் வேலைக்கு ஊதியம் பெறக் கண்டிப்பாய் மறுத்துவிட்டேன். ஆனால், அவர்களில் முக்கியமான வியாபாரிகள் எனக்குத் தங்கள் வழக்குகளைக் கொடுத்து, என்னை அமர்த்துவதற்காகப் 'பீசு'களும் கொடுப்பார்களானால், நான் இருக்கத் தயாரெனக் கூறினேன். நான் ஒரு வருடத்துக்கு அமர்த்தப்படலாம். இம்மாதிரி நாங்கள் ஒரு வருட காலம் இருக்கலாம்; அதன் பயனைப் பார்த்து இரு தரத்தாருக்கும் சம்மதமாயிருந்தால் இவ்வேற்பாட்டின்படியே பின்னும் நடக்கலாம். இந்த யோசனையை எல்லோரும் மனமார ஏற்றுக்கொண்டனர்.

நேட்டால் சுப்ரீம் கோர்ட்டின் அட்வகேட்டாக ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு நான் விண்ணப்பம் செய்தேன். கறுப்புச் சாதியைச் சேர்ந்த பாரிஸ்டர்கள் சட்டப்படி வக்கீல்களாகக் கூடாது என்ற ஒரு காரணத்தின் பேரிலேயே நேட்டால் வக்கீல்கள் சங்கம் என் விண்ணப்பத்தை எதிர்த்தது. முன் அரசாங்க வக்கீலாயும், அதற்குப் பின் நேட்டால் முதன் மந்திரியாயும் இருந்த பெயர் பெற்ற வக்கீல் காலஞ்சென்ற எஸ்கோம்பு என் வக்கீலாக இருந்தார். இம்மாதிரி விண்ணப்பங்களை முக்கியமான பாரிஸ்டர்கள் பணம் வாங்கிக்கொள்ளாமல் ஆஜர் செய்து வாதிக்க வேண்டுமென்பது வழக்கமாயிருந்தது. எஸ்கோம்பும் அங்ஙனமே என்னுடைய கட்சியை எடுத்துப் பேசினர். அவர் எனக்கு வேலை கொடுக்கும் வியாபாரிகளுக்கும் பெரிய வக்கீலாயிருந்தார். கோர்ட்டார், வக்கீல்கள் சங்கத்தின் ஆட்சேபத்தை நிராகரித்து என் சார்பில் தீர்ப்புக் கொடுத்தனர். வக்கீல்கள் சங்கத்து ஆட்சேபம், அவர்கள் விரும்பாமலேயே என்னைப் பிரபலத்துக்குக் கொண்டு வந்தது. தென்னாப்பிரிக்கப் பத்திரிகைகள் வக்கீல்கள் சங்கத்தைப் பரிகாசம் செய்தன; சில என்னைப் பாராட்டவும் செய்தன.

தாற்காலிகமாக ஏற்படுத்தப்பட்ட கமிட்டி ஸ்திரமாக்கப்பட்டது. இந்திய தேசீயக் காங்கிரஸ் கூட்டம் எதற்கும் நான்

போனதில்லே. அதைப்பற்றிப் படித்திருந்தேன். இந்தியாவின் பெரியாரான தாதாபாய்* அவர்களேப் பார்த்திருக்கிறேன். அவரிடம் எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. ஆதலால், நான் ஒரு காங்கிரஸ் பக்தனுக இருந்ததுடன், அப்பெயரைப் பரவச் செய்யவும் விரும்பினேன். அனுபவமில்லாமல் இருந்ததால், ஒரு புதுப் பெயரைக் கண்டுபிடிக்க நான் முயற்சி செய்ய விரும்பவில்லே. அவ்வாறு செய்ய முயன்ருல், பிழை செய்துவிடுவேனே என்ற பயமும் இருந்தது. ஆகையால், தங்கள் ஸ்தாபனத்துக்கு 'நேட்டால் இந்தியர் காங்கிரஸ்' என்று பெயரிடும்படிச் சொன்னேன். இந்திய தேசீயக் காங்கிரஸைப்பற்றி எனக்குத் தெரிந்த சில விஷயங்களே அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். எப்படியோ 1894-ஆம் ஆண்டு மே மாதத்தில் நேட்டால் இந்தியர் காங்கிரஸ் ஸ்தாபிக்கப்பட்டது. இந்தியக் காங்கிரஸுக்கும், நேட்டால் காங்கிரஸுக்கும் இதுதான் வித்தியாசம். அதாவது நேட்டால் இந்தியர் காங்கிரஸ் வருட முழுவதும் வேலே செய்தது; வருடம் ஒன்றுக்கு மூன்று பவுனுக்குக் குறையாமல் சந்தாக் கொடுப்பவர்கள்தாம் அங்கத்தினர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டார்கள். மூன்று பவுனுக்கு அதிகமான தொகைகள் நன்றியுடன் வாங்கிக் கொள்ளப்பட்டன. ஒவ்வோர் அங்கத்தினரிடமும் அவரால் கொடுக்கக்கூடிய அளவு அதிகத் தொகை வசூல் செய்ய முயற்சி செய்யப்பட்டது. சுமார் ஆறு அங்கத்தினர்கள் வருடத்துக்கு இருபத்துநான்கு பவுன்கள் கொடுத்தனர். பன்னிரண்டு பவுன்கள் கொடுத்தவர்கள் அதிகமாயிருந்தனர். ஒரு மாதத்தில் சுமார் முந்நூறு அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டனர். அவர்களில் ஹிந்துக்களும், முஸல்மான்களும், பார்ஸிகளும், கிறிஸ்தவர்களும் இருந்ததைத் தவிர, நேட்டாலுக்கு வந்திருந்த இந்தியாவின் பல மாகாணத்தாரும் இருந்தனர். முதல் வருடம் முழுவதும் வேலே வெகு மும்முரமாக நடந்தது. பணக்கார வியாபாரிகள் வெகு தூரத்திலுள்ள கிராமங்களுக்குத் தங்கள்

---

* தாதாபாய் நௌரோஜி—1825-ம் ஆண்டு பிறந்தார். 1845-ல் எல்பின்ஸ்டன் கல்லூரியில் ஆசிரியர். குஜராத்தி பத்திரிகை ஒன்றைச் சில காலம் நடத்தினுர். 1867-ல் கிழக்கு இந்தியச் சங்கத்தை ஏற்படுத்தினுர். லண்டன் பல்கலேக் கழகத்தின் குஜராத்தி ஆசிரியராக இருந்தார். 1874-ல் பரோடா திவான். 1885-ல் பம்பாய் சட்டசபையின் அங்கத்தினர். 1886, 1892-இல் பார்லிமெண்டு அங்கத்தினர். 1886, 1892, 1906 இந்த ஆண்டுகளில் காங்கிரஸ் மகா நாடுகளுக்குத் தலேமை வகித்தார். 1905-ல் பார்லிமெண்டு தேர்தலில் தோற்றுப்போனுர். பல நூல்களே இயற்றினுர். 'வறுமையும், பிரிட்டிஷாருக்கே தகாத ஆட்சி முறையும்' என்ற அவருடைய நூல் பிரபலமானது. 1907-ல் இங்கிலாந்து சென்று 1917-ல் இறந்தார். இந்தியாவின் 'மாபெரும் முதியவர்' என்று எல்லோரும் மரியாதையுடன் இவரை அழைத்தனர்.

வண்டிகளிலேயே சென்று, புது அங்கத்தினர்களைச் சேர்த்துச் சந்தாவும் வசூல் செய்தனர். எல்லோரும் கேட்டவுடனே கொடுத்துவிடுவதில்லை. சிலருக்கு விஷயங்களைப் போதிக்க வேண்டியிருந்தது. இப்போதனை ஒருவித ராஜீயப் பயிற்சியாக இருந்ததுடன், மக்களுக்குத் தங்கள் நிலைமையைப்பற்றிய உண்மையையும் தெரிவித்தது. குறைந்தது மாதத்திற்கு ஒரு முறை காங்கிரஸ் கூட்டம் நடக்கும். அதில் விவரமான கணக்குகள் கொடுக்கப்பட்டுக் கூட்டத்தால் ஒப்புக்கொள்ளப்படும். அவ்வப் போதைய விஷயங்கள் எடுத்துரைக்கப்பட்டு, கூட்டங்களின் நடவடிக்கைகளைப் பதிவு செய்யும் குறிப்புப் புத்தகத்தில் பதிவும் செய்யப்படும். அங்கத்தினர்கள் பல கேள்விகளைக் கேட்டனர். புது விஷயங்கள் யோசிக்கப்பட்டன. இவற்றால் ஏற்பட்ட அனுகூலம் என்னவெனில், இம்மாதிரிக் கூட்டங்களில் எப்போதும் பேசியறியாத பலர் பேசிப் பழகினர். இவையெல்லாம் புது அனுபவங்களாயிருந்தன. சமூகத்தில் மிகுந்த ஊக்கம் உண்டாயிற்று. இச்சமயத்தில் இந்தியர் வாக்குரிமையை ரத்து செய்யும் மசோதாவை லார்டு ரிப்பன் நிராகரித்த செய்தி கிடைத்தது. இது, அவர்கள் ஊக்கத்தையும், தன்னம்பிக்கையையும் பெருக்கிற்று.

வெளிக் கிளர்ச்சியுடன் சமூகத்திற்குள் செய்யவேண்டிய சீர்திருத்தங்களும் மேற்கொள்ளப்பட்டன. இந்தியர்களின் பழக்கங்களைக் காட்டியே ஐரோப்பியர்கள் தென்னாப்பிரிக்கா முழுதும் இந்தியர்களுக்கு விரோதமாய்க் கிளர்ச்சி செய்தனர். இந்தியர்கள் அசுத்தமானவர்களென்றும், உலோபிகள் என்றும் அவர்கள் எப்போதும் வாதித்தனர். இந்தியர்கள் வியாபாரம் செய்த இடத்திலேயே குடியிருந்தனர். அவர்கள் வாழும் குடிசைகள் விகாரமானவை. தங்களுடைய சுகத்திற்காகவும் அவர்கள் செலவு செய்யமாட்டார்கள். சுத்தமாகவும், தாராளமாகவும் வாழும் ஐரோப்பியர்கள், தங்கள் பல தேவைகளுடன், இம்மாதிரி அசுத்தமும் கையழுத்தமும் உடைய மக்களுடன் எப்படிப் போட்டி போட முடியும்? ஆதலால், வீட்டுச் சுகாதாரம், உடலைச் சுத்தமாய் வைத்திருத்தல், குடியிருக்கும் வீடும் வியாபாரத்திற்குக் கடையும் தனித்தனியாய் இருக்கவேண்டிய தன் அவசியம், நல்ல நிலைமையிலுள்ள வியாபாரிகள் தங்கள் நிலைமைக்குத் தக்கவாறு இருக்க வேண்டியதன் அவசியம்—இவ் விஷயங்களைப் பற்றிக் காங்கிரஸ் கூட்டங்களில் பிரசங்கங்கள் செய்யப்பட்டன ; தருக்கங்கள் நடத்தப்பட்டன ; சீர்திருத்தும்

முறைகளும் சொல்லப்பட்டன. கூட்ட நடவடிக்கைகள் குஜராத்தி மொழியில் நடத்தப்பட்டன.

இவ்விதம் இந்தியர்கள் எவ்வளவு ராஜீயக் கல்வியையும், தங்கள் வாழ்க்கையில் பயன் தரக்கூடிய போதனைகளையும் பெற்ருர்கள் என்பதை வாசகர்கள் உணரலாம். ஒப்பந்தங்களிலிருந்து விடுபட்ட தொழிலாளர்களின் குழந்தைகள் – நேட்டாலில் பிறந்தவர்கள் – ஆங்கிலம் பேசினுர்கள். இவர்களுடைய நன்மைக்காகக் காங்கிரஸின் ஆதரவின்கீழ் **'நேட்டால் இந்தியர்கள் கல்விச் சங்கம்'** அமைக்கப்பட்டது. இதன் அங்கத்தினர்கள் ஒரு சிறிய தொகையைச் சந்தாவாகக் கொடுத்தனர். இவ்விளைஞர்கள் கூடுவதற்கு ஓர் இடம் ஏற்படுத்துவதும், தாய் நாட்டைப்பற்றி இவர்களுக்கு உரைத்து அதன்பால் அன்பை உண்டாக்குவதும், இச்சங்கத்தின் முக்கிய நோக்கங்களாயிருந்தன. சுதந்திர இந்தியர்கள் இவர்களைத் தம் நெருங்கிய உறவினர்களாய்க் கருதினுர்கள் என்று இவர்கள் மனத்தில் உணர்த்துவதும், இவர்களை மதிக்க வேண்டுமென்ற உணர்ச்சியைச் சுதந்திர இந்தியர்கள் மனத்தில் உண்டாக்குவதும் இச்சங்கத்தின் கருத்தாக இருந்தது. காங்கிரஸிடத்திலிருந்த பணம், அதன் செலவு போக மிச்சப்படும் அளவுக்கு நிறைய இருந்தது. இந்த மிச்சத்தைக் கொண்டு நிலம் விலைக்கு வாங்கப்பட்டது. அந்நிலத்திலிருந்து இந்நாள் வரை வருமானம் வந்து கொண்டிருக்கிறது.

நான் வேண்டுமென்றே இந்த விவரங்களையெல்லாம் தெரிவித்திருக்கிறேன். ஏனெனில், இவைகளை அறியாமல், எப்படிச் சத்தியாக்கிரகம் தானுகவே கிளம்பிற்று என்பதையும், எப்படி இந்தியர்கள் இயற்கையாகவே அதற்குத் தயாராகிவிட்டார்கள் என்பதையும் வாசகர்கள் அறிய முடியாது. காங்கிரஸுக்கு எப்படிக் கஷ்டங்கள் ஏற்பட்டன, எவ்விதம் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் அதை எதிர்த்தனர், எப்படி இவ்வெதிர்ப்புக்களால் பாதிக்கப்படாமல் அது தப்பியது என்ற சிறப்பு மிக்க அதன் பிந்திய வரலாற்றை நான் வேண்டுமென்றே இங்கே கூருது விட வேண்டியிருக்கிறது. ஆனுல், ஒன்றை மட்டும் எழுதியே தீர வேண்டும். மிகைப்படுத்திக் கூறுவது என்னும் பழக்கத்திலிருந்து சமூகத்தைக் காப்பாற்றுவதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. அவர்களுடைய குறைபாடுகளை அவர்களுக்குத் தெரியப்படுத்துவதற்கும் முயற்சி செய்யப்பட்டது. ஐரோப்பியர்களின் வாதங்களில் இருந்த உண்மையும் ஒப்புக்

கொள்ளப்பட்டது. ஐரோப்பியர்களுடன் சமமாகவும், சுயமரியாதையுடனும் ஒத்துழைக்கக்கூடிய வாய்ப்புக்கள் யாவும் சந்தோஷத்துடன் உபயோகித்துக் கொள்ளப்பட்டன. இந்திய இயக்கத்தைப்பற்றிய செய்திகள், அவை பிரசுரிக்கத்தக்க அளவு பத்திரிகைகளுக்கு அனுப்பப்பட்டன. இந்தியர்கள் நியாயமின்றிப் பத்திரிகைகளால் தாக்கப்பட்ட சமயங்களில், அப்பத்திரிகைகளுக்கு மறுப்புக்களும் அனுப்பப்பட்டன.

டிரான்ஸ்வாலிலும், நேட்டால் இந்தியர் காங்கிரஸ் போன்ற, ஆனால் இத்துடன் சம்பந்தப்படாத, ஒரு தனி ஸ்தாபனம் இருந்தது. அதன் அமைப்பில் சில வேறுபாடுகளும் இருந்தன; அதைப்பற்றி இங்கே சொல்ல வேண்டிய அவசியமில்லை. இவ்விரண்டினின்றும் வேறுபட்ட அமைப்புடன் கேப் காலனியிலும் இம்மாதிரி ஸ்தாபனம் ஒன்று இருந்தது. எனினும், இம்மூன்று ஸ்தாபனங்களின் வேலைகளும் ஏறக்குறைய ஒன்றாகவே இருந்தன.

1895–ஆம் வருடத்து மத்தியில் நேட்டால் காங்கிரஸின் முதல் ஆண்டு நிறைவேறிற்று. நான் வக்கீலாகச் செய்த வேலை என் கட்சிக்காரர்களுக்குத் திருப்தியளித்தது. நான் நேட்டாலில் இருக்கும் காலமும் நீண்டது. சமூகத்தின் சம்மதத்தின் பேரில், 1896-இல் ஆறு மாதங்களில் திரும்பும் நோக்கத்தோடு இந்தியாவுக்குச் சென்றேன். நான் அக்காலத்தை இந்தியாவில் கழிப்பதற்குள், உடனே திரும்பும்படி நேட்டாலிலிருந்து எனக்கு ஒரு தந்தி கிடைத்தது. நான் அங்ஙனமே திரும்பினேன். 1896–97-ம் வருடத்திய விவரங்களைச் சொல்ல ஒரு தனி அத்தியாயம் வேண்டும்.

## ஏழாவது அத்தியாயம்

# ஆரம்பப் போராட்டத்தின் விவரம்

(தொடர்ச்சி)

இங்ஙனம், நேட்டால் இந்தியர் காங்கிரஸ் ஸ்திரமாக்கப் பட்டது. அநேகமாய் ராஜீய வேலை செய்துகொண்டே சுமார் இரண்டரை வருடங்கள் நேட்டாலில் கழித்தேன். தென்னுப் பிரிக்காவில் நான் இன்னும் அதிக காலம் இருக்கவேண்டுமானல் என் குடும்பத்தை இந்தியாவிலிருந்து அழைத்து வந்துவிட வேண்டுமென எனக்குத் தோன்றிற்று. தாய்நாட்டுக்குக் கொஞ்ச காலம் சென்று, நேட்டாலிலும் தென்னுப்பிரிக்காவின் மற்றப் பாகங்களிலும் இருக்கும் இந்தியர்களுடைய நிலைமையைப் பற்றி இந்தியத் தலைவர்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றும் நினைத் தேன். காங்கிரஸ் எனக்கு ஆறு மாதம் விடுமுறை அனுமதித்தது. எனக்குப் பதிலாக நேட்டாலில் பெயர் பெற்ற வியாபாரி யாக இருந்த காலஞ்சென்ற ஆதம்ஜி மியான்கான், நானிருந்த இடத்தில் காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். அவர் மிகுந்த திறமையுடன் தம் கடமைகளைச் செய்தார். அவருக்குச் சுமா ரான ஆங்கில ஞானமும் உண்டு. அது பழக்கத்தால் விருத்தியு மாயிற்று. சாதாரணமாகக் குஜராத்தியும் கற்றிருந்தார். முக் கியமாய் ஜுலுக்களிடத்தில் அவருக்கு வியாபாரத் தொடர்பு இருந்ததால், ஜுலு மொழியும் ஜுலு பழக்க வழக்கங்களும் அவருக்கு நன்ருகத் தெரிந்திருந்தன. அவர், சாந்தமும் அன் பும் பொருந்திய சுபாவமுள்ளவர். அதிகமாகப் பேசமாட்டார். பொறுப்பான அலுவல்களை நிர்வகிப்பதில் சத்தியம், பொறுமை, சகிக்கும் தன்மை, திடம், மனத்தெளிவு, தைரியம், பொது அறிவு முதலியன, வெறும் படிப்பு அல்லது ஆங்கில ஞானத்தைவிட முக்கியமானவை என்பதைக் காட்டவே நான் இவ்விவரங்களையெல்லாம் எழுதியிருக்கிறேன். இந்தப் பண்பு கள் இல்லாவிடில், அதிகப் படிப்பும் பொது வேலைக்குப் பயன் படாது.

*1896*-ஆம் ஆண்டு மத்தியில் நான் இந்தியாவுக்குத் திரும்பி னேன். ஒப்பந்தத் தொழிலாளர்கள் கல்கத்தாவிலிருந்தும் கப் பல்களில் அனுப்பப்பட்டார்கள். எனவே, நேட்டாலிலிருந்து

புறப்படும் கப்பல்கள் பம்பாயைவிடக் கல்கத்தாவுக்குப் போகக்கூடியவையே மிகச் சுலபமாகக் கிடைத்தன. ஆகையால், நான் கல்கத்தாவுக்குப் போகும் கப்பல் ஒன்றில் ஏறினேன். கல்கத்தாவிலிருந்து பம்பாய்க்குச் செல்லும்போது வழியில் ரெயில் தப்பி அலஹாபாத்தில் ஒரு நாள் தங்கவேண்டியிருந்தது. என் வேலை அங்கே ஆரம்பித்தது. 'பயனியர்' (Pioneer) பத்திரிகையைச் சேர்ந்த ஸ்ரீ செஸ்னீயைக் கண்டேன். அவர் என்னுடன் மிகவும் மரியாதையோடு பேசினார். ஆனால், தென்னாப்பிரிக்க வெள்ளைக்காரர்கள் பக்கமே தம் அனுதாபம் இருப்பதாக ஒளிக்காமல் சொன்னார். எனினும், நான் ஏதாவது எழுதினால், அதைப் படித்துத் தமது பத்திரிகையில் கவனிப்பதாக வாக்களித்தார். இதுவே எனக்குப் போதுமானதாக இருந்தது.

இந்தியாவிலிருந்தபோது, தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியரின் நிலைமையைப்பற்றி ஒரு துண்டுப் பிரசுரம் எழுதினேன். அது அநேகமாய் எல்லாப் பத்திரிகைகளிலும் கவனிக்கப்பட்டது. அப்பிரசுரம் இரண்டாவது தடவையும் பதிப்பிக்கப்பட்டது. இந்தியாவின் பல பாகங்களிலும் சுமார் ஐயாயிரம் பிரதிகள் வழங்கப்பட்டன. ஸர் பெரோஜ்ஷா மேத்தா*, ஹைகோர்ட் ஜட்ஜுகளான பத்ருதீன் தயாப்ஜீ†, மகாதேவ் கோவிந்த

* ஸர் பெரோஜ்ஷா மேத்தா—காங்கிரஸின் ஆரம்ப காலத்திலிருந்து அதனுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அதன் கொள்கைகளையும் வேலைத் திட்டங்களையும் அமைப்பதில் முக்கியமான பங்கு கொண்டவர்களில் ஒருவர். 1890–ல் கல்கத்தாவில் நடந்த ஆறாவது காங்கிரஸிற்கு இவர் தலைமை வகித்தார். "பிரதிநிதிகளைக் கொண்ட ஆட்சி என்பது கிழக்கத்திய பண்புக்கும் கிழக்கத்திய மனப்போக்கிற்கும் பொருத்தமானதல்ல" என்று லார்டு சாலிஸ்பரி கூறியதை ஸர் மேத்தா பலமாகக் கண்டித்ததோடு, "முனிசிபாலிடிகளுக்குப் பிறப்பிடமே கிழக்குத்தான். ஸ்தல ஸ்தாபன ஆட்சி, கிழக்கு எவ்வளவு புராதனமானதோ அவ்வளவு புராதனமானது" என்று ஸ்ரீ சிஸ்ஹோம் ஆன்ஸ்டே கூறியதை ஆதாரமாகக் காட்டினார். ஸர் மேத்தா பல ஆண்டுகள் காங்கிரஸிற்குள் முக்கியமான சக்தியாக விளங்கினார். கமிட்டிகள், தூது கோஷ்டிகள் ஆகியவற்றில் அவருக்கு நிச்சயம் இடம் அளிக்கப்பட்டு வந்தது. 1907 சூரத் காங்கிரஸில் மிதவாதிகளின் முக்கிய பலமாக அவர் விளங்கினார். பிறகு அவ்வளவு பிரபலமாக இல்லை. 1909 இல் லாகூரில் நடந்த காங்கிரஸுக்கு இவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோதிலும் ஆறு நாட்களுக்கு முன்னால் ராஜிநாமாச் செய்துவிட்டார்.

† ஸ்ரீ பத்ருதீன் தயாப்ஜி தீவிரமான காங்கிரஸ்வாதி. 1887–இல் சென்னையில் நடந்த மூன்றாவது காங்கிரஸ் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். பிறகு இவர் பம்பாய் ஹைகோர்ட்டு நீதிபதியாக நியமிக்கப்பட்டுவிட்டதால், காங்கிரஸின் இருபதாவது மகாநாடு 1904–இல் பம்பாயில் நடந்த வரையில், இவருக்கும் காங்கிரஸுக்கும் தொடர்பு இல்லை. ஆனால், அந்த பம்பாய் காங்கிரஸில் பங்கெடுத்துக்கொண்டார். 1906-இல் காலமானார்.

ரானடே* முதலிய தலைவர்களைப் பம்பாயிலும், லோகமான்ய திலகரையும் அவரைச் சார்ந்தவரையும் ஆசார்ய பாண்டார்க்கார், கோபால கிருஷ்ண கோகலேயையும், அவரைச் சார்ந்தவர்களை யும் பூனுவிலும் பார்க்கும் பாக்கியத்தை இச்சமயத்தில்தான் பெற்றேன். பம்பாய், பூனு, சென்னை இவ்விடங்களில் பிரசங் கங்கள்† செய்தேன். இச்சம்பவங்களைப் பற்றி விவரமாக எழுத எனக்கு உத்தேசமில்லை.

இப்புத்தகத்தின் விஷயத்துக்கு அதிகப் பொருத்தமில்லா விடினும், பூனுவின் புனித ஞாபகத்தை இங்கே எழுதாமல் இருக்க முடியவில்லை. சர்வஜனிக் சபை லோகமானியரால் நிர் வகிக்கப்பட்டது. கோகலே 'தக்காண சபை'யுடன் சம்பந்தப் பட்டிருந்தார். நான் முதலில் திலக் மகராஜரை‡ப் பார்த்தேன். நான் பூனுவில் ஒரு கூட்டம் கூட்ட எண்ணியதைப்பற்றி அவரு டன் பேசியபோது, நான் கோபால் ராவைப் பார்த்தாயிற்று என

* மகாதேவ கோவிந்த ரானடே, அக்காலத்தில் காங்கிரஸில் மிக முக்கியமானவர். பொதுவாக இவரை நீதிபதி ரானடே என்றே அழைத்து வந்தனர். நீதிபதியாக இருந்ததால் இவரைக் காங்கிரஸ்காரர் என்று சொல்ல முடியாதெனினும் உள்ளுக்குள் அவரே காங்கிரஸில் முக்கியமான சக்தியாக விளங்கினர். இவர் சிறந்த படிப்பாளி; பொருளாதார நிபுணர்; சரித்திராசிரியர். இவர் எழுதிய ''மராட்டியர் ஆட்சியின் எழுச்சி'', ''இந்தியப் பொருளாதாரக் கட்டுரைகள்" என்ற நூல்கள் பிரபலமானவை. சமூக சீர்திருத்த வேலைகளில் தீவிரமாகப் பங்குகொண்டார். நாட்டில் பிளேக் நோய் தோன்றியபோது இவர் செய்த அருமையான சேவை என்றும் மறக்க முடியாதது. 1909-இல் காலமானர்.

†காந்திஜி 1896 அக்டோபர் 26-ஆந் தேதி சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் செய்த பிரசங்கம் இந்நூலில் 441-ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

‡ 'லோகமான்யர்' என்று இந்திய மக்களால் அன்போடு அழைக்கப்பட்டு வந்த பால கங்காதர திலகர், பம்பாய் மாகாணத்தில் ரத்னகிரி என்ற இடத்தில் 1856 ஜூலையில் ஓர் ஏழைப் பள்ளியாசிரியரின் மகனுய்ப் பிறந்தார். சிறு வயதிலேயே சம்ஸ் கிருதத்தில் அவருக்கு நல்ல தேர்ச்சியுண்டு. பூனுவில் பி. ஏ. படித்துப் பிறகு சட்டமும் கற்ருர். சிறு வயது முதலே சமூக சேவையில் நாட்டமுள்ள திலகர், ''கேசரி'' என்ற மராட்டிய வாரப் பத்திரிகையை ஆரம்பித்தார். அக்காலத்தில் இந்நாட்டில் வேறு எந்தப் பத்திரிகைக்கும் இருந்தறியாத செல்வாக்கு ''கேசரி''க்கு இருந்தது. கோலாப் பூர் அரசாங்கத்தின் அட்டுழியங்களை அம்பலப்படுத்தியதற்காகச் சிறைப்பட்டார். அவர் மீது மக்களுக்கு மதிப்பு அதிகமாயிற்று. இந்திய தேசீய காங்கிரஸின் ஆரம்பக் (1885) கூட்டத்திலும் பிந்திய கூட்டங்களிலும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் தயவுக்குக் கெஞ்சி மனுச் செய்துகொள்ளும் போக்கைப் பலமாகக் கண்டித்தார். "சுதந்திரம் எனது பிறப்புரிமை; அதை அடைந்தே தீருவேன்" என்று முழங்கினர். 1896, 1897-ஆம் ஆண்டுகளில் இந்தியாவில் பஞ்சமும் நோயும் தாண்டவமாடியபோது சர்க்காரின் போக்கைத் திலகர் பலமாகக் கண்டித்ததோடு மக்களின் துயரங்களைப் போக்க அரிய சேவையும் செய்தார். 1897 ஜூனில் சித்பவான் என்ற இடத்தில் ஒரு வாலிபர் இரு பிரிட்டிஷ் அதிகாரிகளைக் கொன்றுவிட்டார். இக்கொலைகளுக்கும் திலகருக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை என் நிருபிக்கப்பட்டும் அவருக்கு 18 மாதச் சிறைத் தண்டனை விதித் தனர். மிதவாதிகள் கையிலிருந்துவந்த காங்கிரஸைத் தீவிரப் போராட்டக் காங்கிரஸாக

அவர் என்னைக் கேட்டார். அவர் யாரைக் கூறுகிறார் என்பது எனக்கு விளங்கவில்லை. ஆதலால், நான் கோகலேயைப் பார்த்தேனா, அவரை எனக்குத் தெரியுமா என மறுபடியும் என்னைக் கேட்டார்.

''நான் இன்னும் அவரைப் பார்க்கவில்லை. நான் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவரைப் பார்க்கவே உத்தேசம்'' என்று பதில் சொன்னேன்.

"உமக்கு இந்திய ராஜீய விஷயங்களைப்பற்றி அதிகம் தெரியாதுபோல் தோன்றுகிறது'' என்றார் லோகமான்யர்.

''நான் இங்கிலாந்திலிருந்து திரும்பிய பிறகு கொஞ்ச காலந் தான் இந்தியாவில் இருந்தேன். அப்போது ராஜீய விஷயங்கள் என் சக்திக்கு மீறியன என்று நினைத்தபடியால், நான் அவைகளில் சம்பந்தப்படவில்லை" என்றேன்.

லோகமான்யர் சொன்னார்: ''அப்படியானால் உமக்கு நான் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். பூனாவில் இரண்டு கட்சிகள் இருக்கின்றன. ஒன்று சர்வஜனிக் சபையைச் சார்ந்தது; மற்றொன்று தக்காண சபையைச் சார்ந்தது.''

"இதைப்பற்றி எனக்குக் கொஞ்சம் தெரியும்'' என்று பதில் சொன்னேன்.

லோகமான்யர் பின்வருமாறு சொன்னார்: ''இங்கே ஒரு கூட்டம் கூட்டுவது எளிது. உம் விஷயத்தை இங்கிருக்கும் எல்லாக் கட்சிகளின் முன்பாகவும் கூறி, எல்லோருடைய உதவியையும் பெறுவது என்பது உமது நோக்கமென நினைக்கிறேன். உமது எண்ணம் எனக்குப் பிடித்தமாயிருக்கிறது. சர்வஜனிக் சபையின் அங்கத்தினர் ஒருவர் உமது கூட்டத்தில் தலைமை வகித்தால், தக்காண சபை அங்கத்தினர் எவரும் அதற்கு வர மாட்டார்கள். அங்ஙனமே தக்காண சபை அங்கத்தினர் ஒருவர் தலைமை வகித்தால், சர்வஜனிக் சபை அங்கத்தினர்கள் வர மாட்டார்கள். ஆதலால், தலைவராக இருக்க, எந்தக் கட்சியிலும் சேராத ஒருவரை நீர் கண்டுபிடிக்க வேண்டும். நான்

---

1906-இல் சூரத் மகாநாட்டில் மாற்றிய பெருமை திலகருக்கே உண்டு. அக்கூட்டத்தில் அவர் தலைமீது செருப்புகள் விழுந்தும் அவர் அசையாமல் பொறுமையுடன் இருந்தார்.

பின்னர் 1908-இல் வங்காளத்தில் இரு பிரிட்டிஷ் பெண்கள்மீது ஒரு வாலிபன் குண்டு வீசிக் கொன்றதைக் ''கேசரி" பத்திரிகையில் திலகர் பாராட்டி எழுதினார். இதற்காக 6 வருட தண்டனை அடைந்து பர்மாவில் மாந்தலே சிறையில் கிடந்து அவதியுற்றார். 1919 அமிர்தசரஸ் காங்கிரஸில் மகாத்மா காந்தி பிரவேசித்த காலம் வரையில் காங்கிரஸில் திலகர் முதன்மை வகித்து வந்தார். அடுத்த ஆண்டு ஆகஸ்டில் காலமானார்.

இவ்விஷயத்தில் ஒரு யோசனை சொல்லுவதைத் தவிர, வேறொரு உதவியும் செய்ய முடியாது. உமக்கு ஆசார்ய பாண்டார்க் காரைத் தெரியுமா? உமக்குத் தெரியாதபோதிலும், அவரைப் பார்க்க வேண்டும். அவர் பொது மனிதரெனக் கருதப்படுகிறார். அவர் ராஜீய விஷயங்களில் கலப்பதில்லை. ஆனால், அவரை உம்முடைய கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும்படி நீர் செய்ய லாம். இதைப்பற்றி, கோகலேயிடத்திலும் பேசி அவருடைய யோசனையையும் கேளும். அநேகமாக அவரும் இதே யோசனையைத்தான் சொல்லுவார். ஆசார்ய பாண்டார்க்கார் போன்ற ஒருவர் தலைமை வகித்தால் இரு தரத்தாரும் ஒரு நல்ல கூட்டம் கூட்டுவதற்கு முயற்சி செய்வார்கள். எப்படியாயினும் நீர் எங்கள் முழு உதவியையும் எதிர்பார்க்கலாம்.''

பிறகு கோகலேயை*ப் பார்த்தேன். நான் முதல் தடவை யாக அவரைப் பார்த்த அளவிலேயே, எப்படி அவர்பால் காதல் கொண்டேன் என்பதைப்பற்றி வேறோர் இடத்தில் எழுதியிருக் கிறேன். அதை அறிய விரும்புவோர், 'எங் இந்தியா'வையோ, (*1921 ஜூலை 13*) அல்லது 'நவஜீவனை'யோ (*1921 ஜூலை 28*) பார்க்க.† லோகமான்யர் எனக்குச் சொன்ன யோசனை கோக லேக்கும் பிடித்தது. ஆதலால், பெருமை தங்கிய ஆசார்ய ரைக் கண்டேன். நேட்டாலில் இந்தியருக்குச் செய்யப்பட்ட கொடுமைகளின் விவரத்தை அவர் கவனித்துக் கேட்டுவிட்டு, பின்வருமாறு சொன்னார்: "நான் சாதாரணமாகப் பொதுவாழ் வில் ஈடுபடுவதில்லை. தவிர, எனக்கு வயதாகிவிட்டது. ஆனால், நீங்கள் சொன்னவை என்னை மிகவும் கலக்கிவிட்டன. எல்லாக் கட்சிகளின் உதவியையும் நாடும் உங்கள் எண்ணமும் எனக் குப் பிடித்திருக்கிறது. நீங்கள் இளையவராக இருப்பதுடன்

---

* ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலேயைக் காந்திஜி தமது ராஜீய குருவாகக் கொண்டு அவ்விதமேகூறியும் வந்தார். அப்பொழுது காந்திஜி 'மகாத்மா' என்று அழைக் கப்படுவதில்லை. ஆனால், கோகலேயை "மகாத்மா கோகலே" என்று கூறினர் என்றால் அவர்மீது காந்திஜிக்கு இருந்த அளவுகடந்த மதிப்பு நன்கு தெளிவாகும். கோகலே தென்னுப்பிரிக்காவுக்குச் சென்றிருந்து, அங்கே இந்தியர் நடத்திய போராட்டத்தின் வெற்றிக்கு எவ்விதம் பேருதவியாக இருந்தார் என்பதைக் குறித்து. காந்திஜியே இந் நூலில் தெளிவாக எழுதியிருக்கிறார். ஸ்ரீ கோகலே 1909-இல் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸில் சத்தியாக்கிரகத்தைப் பற்றியும் அதன் தத்துவத்தையும் விளக்கிப் பேசினர். ஸ்ரீ கோகலேயின் வாழ்க்கை வரலாற்றைக் குறித்து, 1912-இல் தென்னுப்பிரிக்காவில் தாம் நடத்தி வந்த "இந்தியன் ஒபீனியன்" என்ற பத்திரிகையில் காந்திஜி எழுதி யிருந்த விவரம் இந்நூலில் தனியாகப் பின்னால் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ கோக லேயை முதன் முதலில் சந்தித்தது, அவருடன் ஒரு மாதம் இருந்தது ஆகியவைகளைக் குறித்து காந்திஜி எழுதியிருக்கும் விவரங்களை அவருடைய "சுய சரிதை"யில் காணலாம்.

† காந்திஜியின் இக்கட்டுரையும் இத்தொகுதியில் தனியாகப் பிற்பகுதியில் சேர்க் கப்பட்டிருக்கிறது.

இந்திய ராஜீய நிலைமையை அறியாதவருமாக இருக்கிறீர்கள். உங்களுடைய வேண்டுகோளுக்கு நான் இசைந்ததாக இரண்டு கட்சியினருக்கும் சொல்லுங்கள். கூட்டம் ஏற்பாடு செய்ததைப் பற்றி அவர்களில் ஒருவரிடமிருந்து செய்தி கிடைத்தால், நான் நிச்சயமாய் வந்து தலைமை வகிக்கிறேன்." பூனாவில் கூட்டம் இனிது நடைபெற்றது. இரு கட்சித் தலைவர்களும் வந்து என் விஷயத்தை ஆதரித்துப் பேசினார்கள்.

பின், நான் சென்னைக்குப் போனேன். அங்கே ஸர். (அப்பொழுது ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருந்த) சுப்பிரமணிய ஐயர், ஸ்ரீ பி. ஆனந்தாச்சார்லு*, 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியராயிருந்த ஸ்ரீ ஜி. சுப்பிரமணியம்† 'மதராஸ் ஸ்டாண்டர்ட்' பத்திரிகை ஆசிரியராயிருந்த ஸ்ரீ பரமேசுவரன் பிள்ளை, பேர்பெற்ற வக்கீலான ஸ்ரீ பாஷ்யம் ஐயங்கார், ஸ்ரீ நார்ட்டன் ஆகியோரைப் பார்த்தேன். பெரிய கூட்டம் ஒன்றும் நடத்தப்பட்டது. சென்னையிலிருந்து கல்கத்தா சென்றேன். அங்கே சுரேந்திரநாத் பானர்ஜி, மகாராஜா ஜோதீந்திர மோஹன் டாகுர், 'இங்கிலீஷ்மான்' ஆசிரியரான காலஞ்சென்ற சாண்டர்ஸ் ஆகியோரைக் கண்டேன். அவ்விடத்தில் ஒரு கூட்டம் கூட்ட ஏற்பாடு செய்து கொண்டிருக்கும்பொழுது, என்னை உடனே திரும்பி வரும்படி நேட்டாலிலிருந்து ஒரு தந்தி கிடைத்தது. இது 1896-ஆம் ஆண்டு நவம்பரில். தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களுக்கு விரோதமான ஓர் இயக்கம் ஆரம்பிக்கப்பட்

---

* ஸ்ரீ பி. ஆனந்தாச்சார்லு (1843–1908) சென்னையில் பிரபல வக்கீலாக விளங்கி, பல பொதுநல இயக்கங்களில் ஈடுபட்டவர். 1884–இல் இவருடைய முயற்சியாலேயே சென்னை மகாஜன சபை ஸ்தாபனம் உருவெடுத்தது. 'பீபிள்ஸ் பிரெண்ட்' என்ற ஆங்கில மாதப் பத்திரிகையைச் சில காலம் நடத்தினர். சென்னையில் பல பொது ஸ்தாபனங்களில் தலைமை வகித்து வந்தார். நாகபுரியில் கூடிய ஏழாவது காங்கிரஸ் மகாநாட்டின் தலைவராக இருந்தார். பல சிறந்த நூல்களை ஆங்கிலத்திலும் தம் தாய்மொழியான தெலுங்கிலும் எழுதினர். ஹிந்தியே தேசத்தின் பொதுமொழியாக இருக்கவேண்டுமென்று தம் கருத்தை 1899–இல் வெளியிட்டார். வைசிராய் பிரதிநிதி சபையில் மெம்பராயிருந்து 1903–இல் விலகிக் கொண்டார். 1908–இல் சென்னையில் காலமானர்.

† "ஹிந்து", "சுதேசமித்திரன்" பத்திரிகைகளை ஆரம்பித்தவர் ஸ்ரீ ஜி. சுப்பிரமணிய ஐயரே. இவரைப் பொதுவாக 'ஆசிரியர் சுப்பிரமணிய ஐயர்' என்றே கூறுவதுண்டு. 1894–இல் காங்கிரஸ் மகாநாடு நடந்தது முதல் அதில் தீவிர பங்குகொண்டார். அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகளை ஆணித்தரமாகக் கண்டித்து வந்தார். 1901–இல் கல்கத்தா காங்கிரஸில் பேசுகையில், "மிருகம் போல இருந்து சாவதுதானா இந்திய விவசாயியின் வாழ்க்கை?" என்று கேட்டதோடு, இருபது கோடி மக்கள் எவ்விதம் அரைப்பட்டினியாகக் கிடந்து அவதியுறுகின்றனர் என்பதையும் வீரத்துடன் எடுத்துக் காட்டி முழங்கினர். ஒவ்வொரு காங்கிரஸிலும், இந்தியா வறுமைப்பட்டுக் கொண்டு போவதை எடுத்துக் கூறியும் வந்தார். பேச்சிலும் எழுத்திலும் அஞ்சா வீரரான இவர் சிறைத் தண்டனையையும் அனுபவிக்க நேர்ந்தது.

டிருக்க வேண்டும் என முடிவு செய்தேன். ஆதலால், கல்கத்தா வேலையை முடிக்காமல் விட்டுவிட்டு, பம்பாய் சென்று அங்கிருந்து எனக்குக் கிடைத்த முதல் கப்பலில் என் குடும்பத்துடன் புறப்பட்டேன். 'கோர்லண்ட்' என்னும் கப்பலைத் தாதா அப்துல்லா கம்பெனியார் வாங்கி, போர்பந்தருக்கும் நேட்டாலுக்கும் கப்பல் ஓட்டும் மிகத் துணிவான தொழிலை மேற்கொண்டிருந்தனர். பெர்ஷியன் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனிக்குச் சொந்தமான 'நாடேரி' என்னும் கப்பல் பம்பாயிலிருந்து நேட்டாலுக்கு அதற்குப் பின்னால் உடனே புறப்பட்டது. இரண்டு கப்பல்களிலும் மொத்தப் பிரயாணிகள் சுமார் எண்ணூறு பேர் இருப்பார்கள்.

இந்தியாவில் நடந்த கிளர்ச்சி, இந்தியப் பத்திரிகைகள் கவனிக்கும்படியான அளவுக்கும், ராய்ட்டர் இங்கிலாந்துக்குத் தந்தியடிக்கும் அளவுக்கும், முக்கியத்துவம் பெற்றது. இது எனக்கு நேட்டால் போய்ச் சேர்ந்ததும் தெரிந்தது. இங்கிலாந்திலிருந்த ராய்ட்டரின் பிரதிநிதி, இந்தியாவில் நான் செய்த பிரசங்கங்களை மிகைப்படுத்திய சங்கிரகம் அடங்கிய சுருக்கமான தந்தி ஒன்றை தென்னாப்பிரிக்காவுக்கு அனுப்பியிருந்தார். இது ஓர் அசாதாரண அனுபவம் அல்ல. இம்மாதிரி மிகைப்படுத்தல் எல்லாச் சமயங்களிலும் மனப்பூர்வமாகச் செய்யப்படுவதில்லை. துவேஷமும், மாறான கருத்துக்களும் நிறைந்திருப்பதோடு வேலையும் அதிகமாயிருப்பவர்கள், மெலெழுந்தவாரியாய் ஒன்றைப் படிக்கின்றனர். பிறகு அதன் சங்கிரகத்தைத் தயார் செய்யும்போது, சில சமயங்களில் அதில் தங்கள் கற்பனைகளையும் வெளிப்படுத்திவிடுகின்றனர். இச்சங்கிரகமும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு மாதிரி அர்த்தம் செய்யப்படுகிறது. ஒருவரும் நினைக்காமலேயே தவறாகத் திருத்திக் கூறிவிடுவது இங்ஙனம் நடந்துவிடுகிறது. இதுவே பொதுக் காரியங்களிலுள்ள ஆபத்தும் குறைபாடுமாகும்.

இந்தியாவில் இருந்தபோது நான் நேட்டால் ஐரோப்பியரைக் கண்டித்திருந்தேன். ஒப்பந்தத்திலிருந்த தொழிலாளர்களின் மேல் விதித்திருந்த மூன்று பவுன் வரியைப் பலமாகக் கண்டித்துப் பேசியிருந்தேன். தமது எஜமானனால் தாக்கப்பட்ட ஓர் ஒப்பந்தத் தொழிலாளியான சுப்பிரமணியம் என்பவருடைய துயரங்களைப் பற்றி விவரித்தேன். அவருடைய காயத்தை நான் பார்த்திருந்தேன். அவர் தாவாவும் என் கையில் இருந்தது. நேட்டால் ஐரோப்பியர்கள் என்

பிரசங்கங்களின் கருத்துக்களைத் தவறாகக் காட்டின சுருக்கத்தைப் படித்துவிட்டு, என்மீது மிகுந்த கோபம் கொண்டனர். ஆனால், இதில் வியக்கத்தக்க உண்மை என்னவெனில், நான் நேட்டாலில் எழுதியது, இந்தியாவில் நான் எழுதியதையும் பேசியதையும்விட அதிகக் கடுமையாகவும் விவரமாயும் இருந்தது என்பதே. இந்தியாவில் செய்த பிரசங்கங்களில் நான் எதையும் கொஞ்சங்கூட மிகைப்படுத்திக் கூறவே இல்லை. அதற்கு மாறாக, ஒரு சம்பவத்தைப் பிறர் ஒருவருக்கு விவரித்தால், அவர் நாம் சொல்ல நினைப்பதைவிட அதிகமாக ஊகித்துக்கொண்டுவிடுகிறார் என்பது அனுபவத்தில் எனக்குத் தெரியும். ஆதலால், உண்மை நிலையையும் குறைத்தே, தென்னாப்பிரிக்காவிலிருந்த நிலைமையைப் பற்றி இந்தியாவில் பேசியிருந்தேன். ஆனால், நான் நேட்டாலில் எழுதியதை மிகச் சில ஐரோப்பியர்களே படிப்பார்கள்; அதனினும் மிகச் சிலரே அதைக் கவனிப்பார்கள். ஆயினும், நான் இந்தியாவில் செய்த பிரசங்கங்கள், அல்லது எழுதிய கட்டுரைகளின் நிலைமை வேறு. ஆயிரக்கணக்கான ஐரோப்பியர்கள் ராய்ட்டர் அனுப்பிய சுருக்கத்தை வாசிப்பார்கள். தவிர, ஒரு விஷயம் உண்மையில் முக்கியமில்லாததாக இருந்தாலும், அது ராய்ட்டர் தந்தி மூலம் வெளியிடப்பட்டால், இல்லாத புதியதொரு முக்கியத்துவம் அதற்கு ஏற்படுகிறது. ஆதலால் இந்தியாவில் நான் செய்த வேலை அவ்வளவு அதிகமாக மதிக்கப்பட்டதென நேட்டால் ஐரோப்பியர்கள் நினைத்தனர். இதனால் ஒப்பந்தக் கூலி முறை முடிவடைந்துவிட நேரிடுமென்றும், இதன் விளைவாக நூற்றுக் கணக்கான ஐரோப்பியத் தோட்டக்காரர்கள் நஷ்டமடைய நேரிடுமென்றும் எண்ணினர். தவிர இந்தியர் முன்னிலையில் தாங்கள் தூற்றப்பட்டதாகவும் கருதினர்.

இங்ஙனம் நேட்டால் ஐரோப்பியர்கள் ஆத்திரத்தோடிருந்த சமயத்தில், 'கோர்லண்ட்' கப்பலில் என் குடும்பத்துடன் நான் திரும்பி வருவதையும், அதில் 300 அல்லது 400 இந்தியர்கள் இருப்பதையும் அதே சமயத்திலேயே பின்னால் வந்துகொண்டிருக்கும் 'நாடேரி' என்ற கப்பலிலும் அதே தொகை இந்தியர்கள் வருவதையும் கேள்விப்பட்டனர். இதனால் அவர்கள் ஆத்திரம் இன்னும் அதிகமாகி உள்ளிருந்த குமைச்சல் வெடித்து வெளியே வந்தது. நேட்டால் ஐரோப்பியர்கள், பெரிய கூட்டங்களைக் கூட்டினார்கள். அவர்களுள் முக்கியமானவர்கள், அநேகமாய் எல்லோருமே, அவைகளுக்கு வந்திருந்தனர். பொதுவாக இந்தியப் பிரயாணிகளும், குறிப்பாக நானும் அதிகமாகக் கண்டிக்கப்பட்டோம். 'கோர்லண்ட்', 'நாடேரி' ஆகிய இக்

கப்பல்களின் வருகை, நேட்டாலின் பேரில் படையெடுப்பு என்றும் சொல்லப்பட்டது. நான் அந்த 800 இந்தியர்களைக் கொண்டு வந்திருப்பதாகவும், நேட்டாலைச் சுதந்திர இந்தியர்களால் நிரப்பி விடுவதற்கு இது என்னுடைய முதல் முயற்சி என்றும் அக்கூட்டங்களில் பேசியவர்கள் கூறினர். இரு கப்பல்களின் பிரயாணிகளும் நானும் நேட்டாலில் இறங்காமல் தடுக்கப்பட வேண்டுமென ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஆனால், இப்படி செய்ய அரசாங்கம் சம்மதிக்கவில்லையானல், அல்லது அவர்களால் செய்ய முடியவில்லை என்ருல், இக்கூட்டத்தில் நியமிக்கப்பட்ட கமிட்டியார், சட்டத்தையும் கவனியாமல், பலாத்காரத்தால் இந்தியர்களை இறங்காமல் தடுத்துவிட வேண்டும் என்ற முடிவுக்கும் வந்தனர். இரு கப்பல்களும் அன்றைய தினமே டர்பன் வந்து சேர்ந்தன.

இந்தியாவில் 1896-ஆம் வருடத்தில்தான் பிளேக் முதலில் தோன்றியது என்பது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கலாம். குடியேறுகிறவர்களைக் கட்டுப்படுத்தும் சட்டம் அன்று வரை செய்யப்படாததால், எங்களை இறங்கவிடாமல் தடுப்பதற்கு முயற்சி செய்வதில் நேட்டால் அரசாங்கத்திற்குக் கஷ்டமிருந்தது. மற்றப்படி அவர்கள் அனுதாபம் முழுதும் அந்த ஐரோப்பியக் கமிட்டியின் சார்பில்தான். அரசாங்க நிர்வாக சபையில் ஓர் அங்கத்தினராயிருந்த காலஞ்சென்ற எஸ்கோம்பு இக் கமிட்டியின் நடவடிக்கையில் பிரதானமாக விளங்கினுர். இவர்தான் அவர்களைத் தூண்டிவிட்டவரும். ஒரு கப்பலில் தொற்று நோய் ஏற்பட்டாலும், அல்லது ஒரு கப்பல் தொற்று நோய் இருக்கும் ஒரு துறைமுகத்திலிருந்து வந்திருந்தாலும், சில நாட்கள் வரையில் அதைத் தனித்து நிறுத்தி வைக்கவேண்டும் என்று ஒரு சட்டம் எல்லாத் துறைமுகங்களிலும் அமலில் இருக்கிறது. இக்கட்டுப்பாடு, சுகாதார நோக்கத்துடன், அத்துறைமுகத்தின் சுகாதார உத்தியோகஸ்தரின் உத்தரவின் பேரில்தான் செய்யப்படவேண்டும். ராஜீய காரியத்திற்காக மேற்கண்ட சட்டத்தை நேட்டால் அரசாங்கத்தார் துஷ்பிரயோகம் செய்து அமலுக்குக் கொண்டுவந்தனர். கப்பலில் தொற்று நோய் எதுவும் யாருக்கும் இல்லாவிடினும், இரு கப்பல்களும் சாதாரண காலத்துக்கு அதிகமாக, அதாவது இருபத்து மூன்று தினங்கள் தாமதப் படுத்தி நிறுத்தி வைக்கப்பட்டன. 'கோர்லண்டி'ன் சொந்தக்காரராயும், 'நாடேரி'யின் ஏஜெண்டுகளாயு மிருந்த தாதா அப்துல்லா கம்பெனியார் அதிகமாகத் தொந்தரவு செய்யப்

பட்டனர். அக்கப்பல்களின் பிரயாணிகளைத் திருப்பிக்கொண்டு போகும்படி சில ஆசை வார்த்தைகளைச் சொன்னார்கள். அங்ஙனம் செய்ய அவர்கள் மறுத்தால், அவர்கள் வியாபாரத்துக்கு அழிவு நேரிடுமென்றும் பயமுறுத்தினர். ஆனால், அக்கம்பெனியின் கூட்டாளிகள் பயங்காளிகளல்ல. தாங்கள் நாசமாக்கப்பட்டாலும் கவலையில்லையென அவர்கள் சொல்லிவிட்டார்கள். முடிவுவரை போராடித் தீருவதேயொழிய, திக்கற்ற அந்த நிரபராதிகளான பிரயாணிகளைத் திருப்பியனுப்பும் குற்றத்தைச் செய்யும்படித் தங்களை மிரட்டி விட முடியாதென்று அவர்கள் கூறிவிட்டனர். தேசபக்தி தங்களுக்கும் இருக்கிறது என்றனர். அக்கம்பெனியின் நெடுநாளைய வக்கீலான எப். ஏ. லாப்டனும் தைரியசாலியே.

அதிர்ஷ்டவசமாக, காலஞ்சென்ற ஹைகோர்ட்டு ஜட்ஜு நானுபாய் ஹரிதாஸ் அவர்களின் சகோதரர் மகனுகை காலஞ் சென்ற மன்சுக்லால் ஹீராலால் நாஜர் என்னும் சூரத்திலிருந்து வந்த காயத்த குலமகனும், அதே சமயத்தில் ஆப்பிரிக்கா வந்து சேர்ந்தார். அவரை எனக்குத் தெரியாது; அவர் அங்கே வருவதும் எனக்குத் தெரியாது. 'நாடேரி', 'கோர்லண்டு' கப்பல்களில் வந்த பிரயாணிகளை நான் அழைத்து வரவில்லை என்பதை நான் சொல்லத் தேவையில்லை. அவர்களில் பலர் பழைய தென்னுப்பிரிக்கவாசிகள். பலர் டிரான்ஸ்வாலுக்குப் போகிறவர்கள். இப்பிரயாணிகளுக்கும் ஐரோப்பியக் கமிட்டி யாரால் பயமுறுத்தும் அறிக்கைகள் விடுவிக்கப்பட்டன. கப்பல் களின் அதிகாரிகள் இவ்வறிக்கைகளைப் பிரயாணிகளுக்கு வாசித்துக் காண்பித்தனர். நேட்டால் ஐரோப்பியர்கள் இந்தியர் களுக்கு எத்தகைய ஆபத்தையும் இழைக்கத் தயாராயிருக் கும் ஆத்திரத்தில் இருக்கிருர்களென்றும், இந்த எச்சரிக்கை யைக் கவனியாது இந்தியப் பிரயாணிகள் நேட்டாலில் இறங்கப் பிரயத்தனம் செய்வார்களானல், இக்கமிட்டியார் துறைமுகத் துக்கு வந்து, எல்லா இந்தியர்களையும் கடலில் தள்ளிவிடுவார்க ளென்றும், அவ்வறிக்கைகளில் விளக்கமாய் எழுதப்பட்டிருந்தது. 'கோர்லண்டி'லிருந்த பிரயாணிகளுக்கு நான் இவ்வறிக்கையின் அர்த்தத்தை விளக்கினேன். ஆங்கிலம் தெரிந்த பிரயாணி யொருவர் 'நாடேரி'யிலிருந்த பிரயாணிகளுக்கும் விளக்கினர். இரு கப்பல்களின் பிரயாணிகளும் திரும்பிப் போகக்கண்டிப்பாய் மறுத்துவிட்டனர். பலர் டிரான்ஸ்வாலுக்குப் போவதாகவும், சிலர் பழைய நேட்டால் வாசிகளெனவும், எல்லோருக்கும் அங்கே இறங்கும் உரிமை சட்டப்படி உண்டென்றும், தங்களுக்குள்ள

இந்த உரிமையைப் பரீட்சை செய்வதற்காகக் கமிட்டியாரின் மிரட்டலைக் கவனியாமல் இறங்கத் தீர்மானித்திருப்பதாகவும் அவர்கள் சொன்னூர்கள்.

நேட்டால் அரசாங்கத்திற்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. நியாயமில்லாத ஒரு தடையை எவ்வளவு காலம் அமலில் வைத்திருக்க முடியும்? இருபத்து மூன்று நாட்கள் கழிந்துவிட்டன. தாதா அப்துல்லா கம்பெனியாரும், பிரயாணிகளும் தளராமல் உறுதியுடன் இருந்தனர். இருபத்துமூன்று தினங்களுக்குப்பின் கப்பல்கள் துறைமுகத்துக்குள் வர அனுமதிக்கப்பட்டன. இதற்கிடையில் கோபங்கொண்டிருந்த ஐரோப்பியர் கமிட்டியை எஸ்கோம்பு சாந்தப்படுத்தினூர். ஒரு கூட்டத்தில் அவர் சொன்னூர்: "டர்பன் ஐரோப்பியர் புகழத்தக்க விதத்தில் ஒற்றுமையையும் தைரியத்தையும் காண்பித்திருக்கின்றனர். உங்களால் இயன்றதையெல்லாம் நீங்கள் செய்தீர்கள்; அரசாங்கமும் உங்களுக்கு உதவி செய்தது. இந்தியர்கள் 23 தினங்கள் இறங்க முடியாமல் தாமதிக்கப்பட்டார்கள். உங்கள் எண்ணங்களையும் பொது உணர்ச்சியையும் போதுமான அளவு வெளியிட்டிருக்கிறீர்கள். இது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மனத்தில் அழுத்தமாகப் பதிந்து, தக்க பயனை விளைவிக்கும். உங்கள் செய்கை நேட்டால் அரசாங்கத்தின் போக்கைச் சுலபமாக்கியிருக்கிறது. ஓர் இந்தியப் பிரயாணியையாவது இறங்க முடியாதபடி நீங்கள் பலாத்காரம்செய்து தடுப்பீர்களானூல், நீங்கள் உங்கள் நலன்களுக்கே தீங்கு விளைவித்துக் கொள்ளுவதுடன், அரசாங்கத்தையும் ஒரு சங்கடமான நிலைமைக்கு உள்ளாக்கினவர்களாவீர்கள். அப்படி செய்தும் இந்தியர்கள் இறங்கவிடாது தடுக்க உங்களால் முடியாது. அப்பிரயாணிகள் பேரிலும் குறை சொல்ல முடியாது. அவர்களில் பெண்களும் குழந்தைகளும் இருக்கின்றனர். அவர்கள் பம்பாயிலிருந்து புறப்பட்டபோது, உங்கள் உணர்ச்சிகளைப் பற்றி அவர்களுக்குக் கொஞ்சமும் தெரியாது. ஆதலால், நீங்கள் கலைந்து போய், அவர்களைத் தடுக்காமலிருக்கும்படி நான் கேட்டுக்கொள்ளுகிறேன். எதிர்காலக் குடியேற்றத்தைக் கட்டுப்படுத்துவதற்கு தக்க அதிகாரத்தைச் சட்டசபையிலிருந்து நேட்டால் அரசாங்கத்தார் பெறுவார்களென நான் உறுதி கூறுகிறேன்." இது எஸ்கோம்பினுடைய பிரசங்கத்தின் சுருக்கமாகும். கூட்டத்தார் ஏமாற்றம் அடைந்தனர். ஆனூல், நேட்டால் ஐரோப்பியர்களிடத்தில் அவருக்கு அதிகச் செல்வாக்கு இருந்தது. அவருடைய சொல்லுக்கிணங்கி அவர்கள் கலைந்து சென்றனர். இரு கப்பல்களும் துறைமுகத்துக்குள் வந்தன.

மற்றவர்களுடன் நானும் இறங்கவேண்டாமென்றும், மாலை வரை காத்திருக்கும்படிக்கும், அப்போது என்னைப் பத்திரமாய் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போவதற்காகப் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டை அனுப்புவதாகவும், ஆனால் என் குடும்பத்தார் எப்போது வேண்டுமானாலும் இறங்கலாமென்றும், எனக்கு எஸ்கோம்பு செய்தி அனுப்பியிருந்தார். இது சட்டப்படி செய்யப்பட்ட உத்தரவல்ல. ஆனால், என்னைச் சூழ்ந்திருக்கும் அபாயத்தை எனக்கு எச்சரிப்பதோடு, இறங்க என்னை அனுமதிக்காமலிருப்பதற்கும் கப்பல் அதிகாரிக்குச் சொன்ன ஒரு யோசனையுமாகும் இது. பலாத்காரம் செய்து என்னை இறங்காமல் தடுப்பதற்குக் கப்பல் அதிகாரிக்கு அதிகாரமில்லை. எனினும், இந்த யோசனையை ஏற்பது என்ற முடிவுக்கு வந்தேன். என் குடும்பத்தை என் வீட்டிற்கு அனுப்புவதற்குப் பதிலாக என் பழைய நண்பரும் கட்சிக்காரருமான பார்ஸி ருஸ்தம்ஜி அவர்கள் வீட்டிற்கனுப்பி, அங்கே வந்து அவர்களைச் சந்திப்பதாகவும் சொன்னேன். பிரயாணிகள் இறங்கியபின், தாதா அப்துல்லா கம்பெனியின் வக்கீலும் என் நண்பருமான ஸ்ரீ லாப்டன் வந்து என்னைச் சந்தித்தார். நான் ஏன் இன்னும் இறங்கவில்லையென அவர் என்னைக் கேட்டார். நான் அவருக்கு ஸ்ரீ எஸ்கோம்பின் கடிதம்பற்றிச் சொன்னேன். மாலைவரையில்காத்திருந்து, கள்வன் அல்லது குற்றவாளி போல் ஊருக்குள் நுழைவது தமக்குப் பிடித்தமில்லையென்றும், எனக்குப் பயமில்லாவிடில் அப்பொழுதே அவருடன் புறப்படும்படிக்கும், சந்தடியில்லாமல் இருவரும் ஊருக்குள் போய்விடலாமென்றும் அவர் சொன்னார். நான் பதில் சொன்னேன்: ‘‘நான் பயப்படுவதாக நினைக்கவேண்டாம். நான் ஸ்ரீ எஸ்கோம்பின் யோசனையை ஒப்புக்கொள்ளுவது உசிதமா, இல்லையா என்பதுதான் கேள்வி. இவ்விஷயத்தில் கப்பலின் அதிகாரிக்கு ஏதாவது பொறுப்பு இருக்கின்றதா என்பதையும் கவனிக்க வேண்டும்.’’ ஸ்ரீ லாப்டன் புன்னகை செய்து கூறினார்: ‘‘ஸ்ரீ எஸ்கோம்பின் யோசனையை நீங்கள் அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்கு அவர் உங்களுக்கு என்ன செய்திருக்கிறார்? தீய நோக்கம் எதுவுமில்லாது, அன்பால்தான் அவர் இவ்விதம் கூறியிருக்கிறார் என்று நீங்கள் நம்புவதற்கு என்ன காரணம் இருக்கிறது? ஊரில் என்ன நடந்திருக்கிறதென்பதும், அதில் ஸ்ரீ எஸ்கோம்புக்கு என்ன சம்பந்தமிருக்கிறதென்பதும் உங்களைவிட எனக்கு அதிகமாய்த் தெரியும்.’’ நான் தலையை அசைத்து, அவரை மத்தியில் தடுத்தேன். ஸ்ரீ லாப்டன் பின்னும் சொன்னார்: ‘‘மிகவும் நல்ல நோக்-

கத்தின் பேரிலேயே அந்த யோசனையைக் கூறியிருப்பதாகவே வைத்துக்கொள்ளுவோம். எனினும், அவர் யோசனைப்படி நடந்தால், நீங்கள் அவமதிக்கப்பட்டவராவீர்கள் என்பது என் திடமான அபிப்பிராயம். ஆதலால், நீங்கள் தயாராயிருந்தால், இப்பொழுதே என்னுடன் வரும்படி நான் சொல்லுவேன். கப்பல் அதிகாரி நம் மனிதர். அவர் பொறுப்பு நம் பொறுப்பாகும். அவர் தாதா அப்துல்லாவுக்குத்தான் ஜவாப்தாரி. இப்போராட்டத்தில் அவர்கள் மிகுந்த தைரியத்தைக் காட்டியிருப்பதால், அவர்கள் இவ்விஷயத்தில் என்ன நினைப்பார்களென்பது எனக்குத் தெரியும்.'' இதற்கு நான், ''அப்படியானல் நாம் போவோம். நான் தயார் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. நான் செய்ய வேண்டியதெல்லாம், என்னுடைய தலைப்பாகையை அணிந்து கொள்ளுவதே. கப்பல் அதிகாரிக்குச் சொல்லிவிட்டு, நாம் புறப்படுவோம்'' என்றேன். நாங்கள் கப்பல் அதிகாரியிடத்தில் விடை பெற்றோம்.

ஸ்ரீ லாப்டன், டர்பனில் வயது முதிர்ந்தவரும் பெயர் பெற்ற வக்கீலும் ஆவார். நான் இந்தியாவுக்குத் திரும்புவதற்கு முன் அவருடன் நெருங்கிப் பழகியிருந்தேன். கஷ்டமான வழக்குகளில் அவர் யோசனையைப் பெறுவதுடன், பல தடவைகளில் எனக்குப் பெரிய வக்கீலாக அவரை வழக்குகளில் அமர்த்தியுமிருந்தேன். அவர் தீரமும் திடகாத்திரமும் உள்ளவர்.

டர்பனின் முக்கிய வீதிவழியாகவே நாங்கள் போகவேண்டும். நாங்கள் புறப்படும்போது மாலை சுமார் 4-30 மணியிருக்கும். சற்று மப்பு மந்தாரமாகவும் இருந்தது; சூரியன் தென்படவில்லை. ருஸ்தம்ஜீ சேட்டின் வீட்டிற்கு நடந்து செல்லக் குறைந்தது ஒரு மணி ஆகும். சாதாரணமாக ரேவுத் துறையில் காணப்படும் கூட்டமே அப்பொழுது அங்கிருந்தது. நாங்கள் தரையில் இறங்கியதும், சில பையன்கள் எங்களைப் பார்த்தனர். இந்தியரில் நான் ஒருவனே ஒருவகையான தலைப்பாகையை அணிபவன். எனவே, என்னை உடனே அடையாளம் தெரிந்துகொண்டு, 'காந்தி', 'காந்தி', 'அவனை அடியுங்கள்', 'அவனை வளைத்துக் கொள்ளுங்கள்' என்று பலவாருக உரக்கக் கூவிக்கொண்டு, எங்கள் பக்கம் வந்தனர். சிலர் எங்கள்பேரில் சிறு கூழாங்கற்களை எறிந்தனர். சில வயதான ஐரோப்பியர்களும் இந்தப் பையன்களுடன் சேர்ந்துகொண்டனர். படிப்படியாகக் கலகக்காரர்களின் கூட்டம் அதிகமாயிற்று. நாங்கள் நடந்து செல்வதில் அபாயம் இருப்பதாக ஸ்ரீ லாப்டன் நினைத்தார். ஆதலால்

ஒரு ரிக்ஷாவைக் கூப்பிட்டார். மனிதனால் இழுக்கப்படும் வண்டியில் உட்காருவது எனக்கு வெறுப்பாக இருந்தது. நான் ரிக்ஷாவில் அதற்குமுன் ஏறியதில்லை. ஆனால், அப்போது ரிக்ஷாவை உபயோகப்படுத்துவது என் கடமையென நினைத்தேன். கடவுள் ஒருவனைக் காப்பாற்ற நினைத்துவிட்டால், அவன் தவறிவிடவேண்டுமென்று நினைத்தாலும் தவறிவிடமாட்டான் என்பதை, என் வாழ்க்கையில் ஐந்து ஆறு தடவைகளில் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். நான் தவறிவிடவில்லையெனில், அந்தப் பெருமை எனக்குரியதன்று. இந்த ரிக்ஷாக்கள் ஜுலுக்களால் இழுக்கப்படுகின்றன. அந்த வயதுவந்த ஐரோப்பியர்களும் பையன்களும், அந்த ரிக்ஷாக்காரன் என்னை ரிக்ஷாவில் உட்காரவிடுவானானால் அவனை அடிப்பதுடன் ரிக்ஷாவையும் துகளாக்கிவிடுவதாகப் பயமுறுத்தினார்கள். ரிக்ஷாக்காரன் 'கா' (முடியாது என்று பொருள்) என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். இங்ஙனம் ரிக்ஷாவில் சவாரி செய்யும் அவமானத்திலிருந்து காப்பாற்றப்பட்டேன்.

நாங்கள் போக வேண்டிய இடத்துக்கு நடந்து போவதைத் தவிர இப்போது வேறு வழியில்லை. ஒரு கூட்டம் எங்களைப் பின்தொடர்ந்தது. நாங்கள் போகப் போகக் கூட்டமும் அதிகமாகிக்கொண்டு வந்தது. நாங்கள் மேற்கு வீதியைச் சேர்ந்தபோது கூட்டம் மிகப் பெரிதாகிவிட்டது. கட்டமைந்த ஓர் ஆள் ஸ்ரீ லாப்டனைப் பிடித்து என்னிடத்திலிருந்து இழுத்துக்கொண்டு போய்விட்டான். ஆதலால் அவர் என்னுடன் வரக்கூடிய நிலையில் இல்லை. கூட்டத்திலிருந்தவர்கள் என்னைத் திட்டினர்; கல்லையும் கைக்குக் கிடைத்ததையெல்லாம் எடுத்து என்மீது வீசவும் ஆரம்பித்தனர். என் தலைப்பாகையைப் பிடுங்கிக் கீழே எறிந்தனர். அதற்குள் ஒரு முரடன் வந்து, என் முகத்தில் அறைந்து என்னை உதைத்தான். நான் பிரக்ஞையற்று விழப்போகும் சமயம் பக்கத்திலிருந்த ஒரு வீட்டின் கிராதியைப் பிடித்துக்கொண்டேன். கொஞ்சம் மூச்சு வாங்கிப் பிரக்ஞை வந்தபின் என் வழியே நடந்தேன். உயிரோடு வீடு போய்ச் சேருவோம் என்ற நம்பிக்கை அநேகமாய் எனக்கில்லை. ஆனால், அப்போதுங்கூட, எனது உள்ளம் என்னை அடித்தவர்களை நிந்திக்கவில்லை என்பது எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது.

நான் இங்ஙனம் போய்க்கொண்டிருந்தபோது, டர்பன் போலீஸ் சூப்பரிண்டெண்டின் மனைவி எதிர்ப்பக்கத்திலிருந்து வந்துகொண்டிருந்தார். நாங்கள் ஒருவரையொருவர் நன்

ருக அறிவோம். அவர் தைரியமான மாது. வானம் மூடிக்கொண்டு சூரியன் அத்தமனமாகும் சமயமாக இருந்தபோதிலும் என்னைக் காப்பாற்றுவதற்காகத் தம்முடைய குடையைத் திறந்து பிடித்துக்கொண்டு என்னுடன் நடக்க ஆரம்பித்தார். ஐரோப்பியர் ஒரு மாதை அவமானம் செய்யமாட்டார்கள். அதுவும் மிகுந்த செல்வாக்குடைய தங்கள் முதிய போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டின் மனைவியைக் கொஞ்சமும் அவமதிக்கமாட்டார்கள்; அவரைக் காயப்படுத்தவும் மாட்டார்கள். என்னை அடிக்கும்போது அவர்மீது படாமலிருக்கப் பார்த்துக் கொள்ள வேண்டும் அல்லவா? ஆதலால் அவர் என்னுடன் வந்தபிறகு நான் பட்ட அடிகள் பலமானவை அல்ல. அதற்குள் நான் தாக்கப்பட்டதை அறிந்து போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட் சில போலீஸ்காரர்களை என் பாதுகாப்புக்காக அனுப்பினர். போலீஸ்காரர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டனர். வழியிலேயே போலீஸ் ஸ்டேஷன் இருந்தது. நான் அங்கே சென்றபோது போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட் எங்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். நான் தங்குவதற்குப் போலீஸ் ஸ்டேஷனில் இடம் கொடுப்பதாக அவர் சொன்னர். ஆனல், நான் அதை வந்தனத்துடன் மறுத்துவிட்டுச் சொன்னேன். "நான் கோரிய இடத்துக்குப் போகவேண்டும்; டர்பன்வாசிகளின் நியாயத்தன்மையிலும், என்னுடைய கட்சியின் உண்மையிலும் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. என் பாதுகாப்புக்காகப் போலீஸ்காரர்களை அனுப்பியதற்கு நான் உங்களிடம் நன்றியுள்ளவனயிருக்கிறேன். ஸ்ரீமதி அலெக்ஸாண்டர் அவர்களும் என்னைப் பாதுகாப்பதில் பெரும் உதவி செய்திருக்கின்ருர்."

வேறு தொந்தரவு இல்லாமல் ருஸ்தம்ஜீ வீடு போய்ச் சேர்ந்தேன். நான் அங்கே சேர்ந்தபோது மாலையாகிவிட்டது. ருஸ்தம்ஜீ சேட்டுடனிருந்த 'கோர்லண்டு' கப்பலின் வைத்திய உத்தியோகஸ்தரான டாக்டர் தாடிபர்ஜார் எனக்கு வைத்தியம் செய்ய ஆரம்பித்தார். என் காயங்களைப் பரிசோதித்தார். காயங்கள் அதிகம் இல்லை. ஓர் ஊமைக் காயமே அதிக வலியைத் தந்தது. ஆனல், எனக்கு அப்பொழுதும் அமைதியாக இருக்கும் பாக்கியம் இல்லை. ஆயிரக்கணக்கான ஐரோப்பியர் ருஸ்தம்ஜீ வீட்டுக்கு முன்னல் கூடிவிட்டார்கள். இரவானதும் காலிகளும் சேர்ந்துகொண்டனர். என்னை அவர்களிடத்தில் ஒப்படைக்காவிட்டால் என்னுடன் ருஸ்தம்ஜீயையும் அவர் வீட்டையும் எரித்துவிடுவதாகச் சொல்லியனுப்பினர்கள்.

ருஸ்தம்ஜீ இதற்கெல்லாம் பயந்துவிடக்கூடிய இந்தியர் அல்ல. சூப்பரிண்டெண்டெண்ட் அலெக்ஸாண்டருக்கு விஷயம் இப்படியிருக்கிறதெனத் தெரிய வந்தபோது, சில ரகசியப் போலீஸாருடன் வந்து கூட்டத்தில் அவர் கலந்துகொண்டார். ஒரு விசுப்பலகையைக் கொண்டுவரச் சொல்லி, அதன்மேல் ஏறி நின்ருர். இங்ஙனம் கூட்டத்துடன் பேசுகிற சாக்கின் பேரில், ஒருவரும் ருஸ்தம்ஜீ வீட்டின் கதவை உடைக்காமலும், உள்ளே நுழையாமலும், ருஸ்தம்ஜீ வீட்டு வாயிலைத் தம் வசமாக்கிக்கொண்டார். முன்னமேயே தகுந்த இடங்களில் ரகசியப் போலீஸாரையும் வைத்திருந்தார். அங்கே வந்ததும், இந்திய உடை அணிந்து, இந்தியன்போலிருக்க முகத்தில் வர்ணம் பூசிக்கொண்டு, ஓர் இந்திய வியாபாரியின் வேடம் பூண்ட தமக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர் ஒருவரை, என்னைப் பார்த்துக் கீழ்க்கண்ட செய்தியை எனக்கு அறிவிக்கும்படி சொல்லியிருந்தார்: "நண்பரையும், அவர் விருந்தாளிகளையும், சொத்துக்களையும், உங்கள் குடும்பத்தையும் காப்பாற்ற விரும்பினுல், நீங்கள் ஓர் இந்தியப் போலீஸ்காரன்போல வேடம் தரித்து, ருஸ்தம்ஜீயின் கிடங்கு வழியாக வெளிவந்து, என் ஆளுடன் கூட்டத்தில் ஒருவருக்கும் தெரியாமல் நுழைந்து, போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்விட வேண்டும். வீதியின் மூலையில் உங்களுக்காக ஒரு வண்டி காத்துக் கொண்டிருக்கிறது. இந்த ஒரு வழியில்தான் உங்களையும் மற்றவர்களையும் என்னுல் காப்பாற்ற முடியும். கூட்டம் அதிக ஆவேசம் கொண்டிருப்பதால், நான் அதைச் சமாளிக்க முடியாமல் இருக்கிறேன். என் யோசனைப்படி உடனே நடக்காவிடில் கூட்டம் ருஸ்தம்ஜீ வீட்டைத் தகர்த்துவிடும் என அஞ்சுகிறேன். இதனுல் எவ்வளவு உயிர்ச் சேதம், பொருட் சேதம் ஆகுமென்று நான் சொல்ல முடியாது."

நிலைமையை உடனே நான் அறிந்தேன். வெகு விரைவில் போலீஸ்காரன் வேடங் தரித்து ருஸ்தம்ஜீ வீட்டைவிட்டு வெளியேறினேன். அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தரும் நானும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்தோம். இச்சமயத்தில் பேசியும், பாடியும் அலெக்ஸாண்டர் கூட்டத்தைச் சந்தோஷப்படுத்திக்கொண்டிருந்தார். நான் போலீஸ் ஸ்டேஷன் போய்ச் சேர்ந்தது தெரிந்ததும், வேடிக்கையை விட்டு உண்மையாகவே கேட்டார்.

"உங்களுக்கு என்ன வேண்டும்?"

"எங்களுக்கு காந்தி வேண்டும்."

"அவரை என்ன செய்வீர்கள்?"

"அவரை நாங்கள் எரிப்போம்."

"அவர் உங்களுக்கு என்ன கெடுதி செய்திருக்கிருர்?"

"அவர் எங்களை இந்தியாவில் தூற்றியதைத் தவிர இந்தியரைக் கொண்டு நேட்டாலை நிரப்ப விரும்புகிருர்."

"அவர் வெளியே வராவிடில் என்ன?"

"அப்படியானுல் வீட்டைக் கொளுத்திவிடுவோம்."

"அவர் மனைவி மக்களும் இங்கே இருக்கின்றனர். தவிர வேறு பெண்களும் ஆண்களுங் கூட இருக்கின்றனர். பெண்களையும், குழந்தைகளையும் எரிப்பதற்கு உங்களுக்கு வெட்கமில்லையா?"

"இதன் பொறுப்பு உங்கள் பேரிலேயே இருக்கிறது. எங்களை இவ்விஷயத்தில் உதவியற்றவராகச் செய்தால் நாங்கள் என்ன செய்ய முடியும்? நாங்கள் வேறெவரையும் துன்புறுத்த விரும்பவில்லை. நீங்கள் காந்தியை எங்களிடத்தில் ஒப்படைக்காவிட்டால், நாங்கள் அவரைப் பிடிக்கும்போது மற்றவர்களுக்குத் தீங்கு நேரிட்டால் அதற்காக எங்களைக் குறை சொல்லுவது நியாயமாகுமா?"

சூப்பரிண்டெண்டெண்ட் சிரித்துக்கொண்டு, நான் ருஸ்தம்ஜீ வீட்டைவிட்டு வெளியேறிக் கூட்டத்தைக் கடந்து வேறு இடத்துக்குப் போய்விட்டதாகச் சொன்னுர். கூட்டம் உரக்கச் சிரித்தது. "இது பொய், இது பொய்" என்றும் கூச்சலிட்டது.

சூப்பரிண்டெண்டெண்ட் சொன்னுர்: "நீங்கள் உங்கள் பழைய போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டை நம்பமாட்டீர்களானுல், உங்களுக்குள்ளேயே மூவர் அல்லது நால்வரைக்கொண்ட ஒரு கமிட்டியை நியமித்துக்கொள்ளுங்கள். மற்றவர்கள் வீட்டுக்குள் நுழையமாட்டீர்களென்றும், கமிட்டியார் காந்தியை வீட்டில் கண்டுபிடிக்காவிட்டால் நீங்கள் சமாதானமாய்க் கலைந்து போவீர்களென்றும் வாக்குறுதி தரவேண்டும். இன்று நீங்கள் ஆத்திரம் அடைந்தீர்கள். போலீஸ்காரர்களுக்கும் கீழ்ப்படியவில்லை என்ருல், அது உங்கள் மரியாதையைப் பாதிக்குமேயொழியப் போலீஸ்காரர்களைப் பாதிக்காது. ஆதலால், போலீஸ்காரர்கள் உங்களிடத்தில் ஒரு தந்திரம் செய்தனர். நீங்கள் நாடிய பொருளை உங்கள் மத்தியிலிருந்து போலீஸ்காரர்கள் வேருேர் இடத்துக்குக் கொண்டு போனுர்கள். நீங்கள் தோற்றுப்போய்

விட்டீர்கள். போலீஸ்காரர்கள் உங்களாலேயே நியமிக்கப் பட்டவர்கள். அவர்கள் தங்கள் கடமையைத்தான் செய்திருக் கின்றனர்.''

சூப்பரின்டெண்டெண்ட் அக்கூட்டத்தில் மிகுந்த வினயத் துடனும், உறுதியுடனும் பேசினர். ஆதலால் கூட்டம் அவர் கேட்ட வாக்குறுதியைக் கொடுத்தது. ஒரு கமிட்டி ஏற்படுத்தப் பட்டது. அக்கமிட்டி ருஸ்தம்ஜீ வீடு முழுவதும் தேடிவிட்டு, சூப்பரிண்டெண்டெண்ட் சொன்னது சரியென்றும், தாங்கள் தோற்றுப்போனதாகவும் கூட்டத்துக்குத் தெரிவித்தார்கள். கூட்டம் ஏமாற்றம் அடைந்தது. ஆனாலும் அவர்கள் சொன்னபடி யாதொரு விஷமமும் செய்யாமல் கலைந்தனர். இது 1897-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13-ஆம் தேதி நடந்தது.

கப்பல்கள் துறைமுகத்திற்குள் விடப்பட்ட அன்றைய தினம் காலையில் டர்பன் பத்திரிகை நிருபர் ஒருவர் என்னைக் கப்பலில் கண்டார். அவர் எல்லா விவரங்களையும் என்னிடம் கேட்டார். என்பேரில் சுமத்தப்பட்ட எல்லாக் குற்றங்களுக்கும் அவருக்குத் திருப்தியாகும்படிப் பதில் சொல்லுவது எளிதாக இருந்தது. நான் கொஞ்சமும் மிகைப்படுத்திச் சொல்லவில்லையென்று அவருக்கு விவரமாகக் காண்பித்தேன். நான் செய்ததெல்லாம் என் கடமையையே. நான் அதைச் செய்யாமல் இருந்திருந்தால், நான் மனிதன் என்ற பெயருக்குத் தகுதியுள்ளவனாக மாட்டேன். இவையெல்லாம் அடுத்த நாள் பத்திரிகைகளில் வெளிவந்தன. ஐரோப்பியர்களில் அறிவாளிகள், தங்கள் குற்றத்தை ஒப்புக் கொண்டனர். பத்திரிகைகள், நேட்டால் ஐரோப்பியர்களின் நோக்கத்துக்கே அனுதாபம் காட்டின. எனினும், நான் செய்த தையும் முழுதும் ஆதரித்தன. இது எனது நல்ல பெயரையும், இந்திய சமூகத்தின் நன்மதிப்பையும் உயர்த்தியது. இந்தியர் ஏழைகளாயினும் கோழைகளல்லவென்றும், இந்திய வியா பாரிகள் தங்கள் சுயமரியாதைக்காகவும், தேசத்துக்காகவும் நஷ்டத்தையும் கருதாது உழைக்கத் தயாராயிருக்கிறார்கள் என் றும் இது நிரூபித்துக் காட்டியது.

இங்ஙனம் இந்திய சமூகத்தார் கஷ்டப்பட நேரிட்டாலும், தாதா அப்துல்லா கம்பெனியார் பெருத்த நஷ்டமடைந்த போதி லும் இதன் இறுதிப் பயன் முற்றிலும் நன்மையாகவே இருந்த தென நான் நினைக்கிறேன். தன் பலத்தைப் பரீட்சை செய் வதற்குச் சமூகத்துக்கு ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. இதனால் அவர்களுடைய தன்னம்பிக்கையும் அதிகமாயிற்று. எனக்கும்

மிக அருமையான அனுபவமும் கிடைத்தது. நான் அந்நாளை நினைக்கும்போதெல்லாம், கடவுள் சத்தியாக்கிரக அனுஷ்டானத்துக்கு என்னைத் தயார் செய்துகொண்டிருந்தார் என்றே எனக்குத் தோன்றுகிறது.

நேட்டால் சம்பவத்தின் பயன் இங்கிலாந்திலும் காணப் பட்டது. குடியேற்ற நாட்டு மந்திரியாயிருந்த சேம்பர்லேன், என்னைத் தாக்கியவர்களின் பேரில் நடவடிக்கைகள் எடுத்து எனக்கு நியாயம் வழங்கும்படி நேட்டால் அரசாங்கத்துக்குத் தந்தியடித்தார்.

நேட்டால் அரசாங்கப் பிரதம வக்கீலாயிருந்த ஸ்ரீ எஸ் கோம்பு என்னைக் கூப்பிட்டனுப்பினர். ஸ்ரீ சேம்பர்லேனின் தந்தியைப்பற்றி என்னிடம் சொன்னர். நான் அடிபட்டதைப் பற்றித் தம் வருத்தத்தைத் தெரிவித்தார். காயம் அதிகமில்லாத தைப்பற்றித் தமது சந்தோஷத்தையும் தெரிவித்தார். பின்னும் சொன்னர்: "தங்களையோ, தங்கள் சமூகத்தில் வேறு யாரை யுமோ துன்புறுத்த வேண்டுமென நான் விரும்பவேயில்லை என்று உறுதி கூறுகிறேன். தங்களுக்குத் தீங்கு உண்டாகலாமென்று பயந்து தங்களைக் கப்பலிலிருந்து இரவில் இறங்கும்படிச் சொல்லியனுப்பியிருந்தேன். தங்களுக்கு என் யோசனை பிடிக்க வில்லை. ஸ்ரீ லாப்டனின் ஆலோசனையை ஏற்றுக்கொண்ட தற்கு நான் தங்களைக் கொஞ்சமும் குறை கூறவில்லை. உங்க ளுக்குச் சரியெனத் தோன்றுவதைச் செய்ய உங்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு. ஸ்ரீ சேம்பர்லேன் கேட்டிருப்பதை நேட்டால் அரசாங்கம் முழுதும் ஏற்றுக்கொள்ளுகிறது. சட் டத்தை மீறியவர்கள் தண்டிக்கப்பட வேண்டுமென்றே நாங்க ளும் விரும்புகிருேம். தங்களைத் தாக்கினவர்களைத் தாங்கள் அடையாளம் கண்டுபிடிக்க முடியுமா?"

நான் பின்வருமாறு பதில் உரைத்தேன்: "ஒருவர் அல்லது இருவரை நான் அடையாளம் கண்டுபிடிக்க முடியலாம். ஆனல், என்னைத் தாக்கினவர்களின் பேரில் வழக்குத் தொடர வேண்டா மென்று நான் தீர்மானித்திருக்கிறேன் என்பதை, மேலே பேசு வதற்கு முன்னல் தங்களுக்குத் தெரிவிக்க வேண்டும். அவர்கள் தப்புச் செய்திருக்கிருர்களென எனக்குத் தோன்றவில்லை. அவர்களுக்குக் கிடைத்த சமாசாரம், அவர்களின் தலைவர்கள் மூலம் வந்தது. அது தப்பா அல்லது சரியா என்று அவர்கள் சீர்தூக்கிப் பார்ப்பார்கள் என்று எதிர்பார்ப்பது மிகையாகும். அவர்கள் என்னைப்பற்றிக் கேட்டதெல்லாம் உண்மையாயிருந்

தால், அவர்கள் பொறுமையை இழந்து கோபத்தால் எனக்குத் தீங்கிழைக்க நினைப்பது இயற்கைதானே? நான் அதற்காக அவர்களைக் குறை கூறவில்லை. ஆவேசம் கொண்ட கூட்டங்கள் எப்போதும் இம்மாதிரி நியாயம் தீர்த்துக்கொள்ள முயலு கின்றன. இதற்கு நான் எவரையாவது குறை கூற வேண்டு மென்றால், ஐரோப்பியர்கள் கமிட்டியையும், உங்களையும், அதன் மூலம் நேட்டால் அரசாங்கத்தையும்தான் குறை கூறவேண்டும். ராய்ட்டர் ஒரு செய்தியைத் திரித்து அனுப்பியிருக்கலாம். ஆனால், நான் நேட்டாலுக்கு வருவது உங்களுக்குத் தெரிந்த போது, இந்தியாவில் நான் செய்த வேலை சம்பந்தமாக உங்களுக் கிருந்த சந்தேகங்களைப் பற்றி என்னைக் கேட்டு அறிவது உங்களுடைய கடமையும், அக்கமிட்டியின் கடமையுமாகும். நான் சொல்லுவதைக் கேட்ட பிறகு உங்களுக்கு உசிதமெனத் தோன்றுவதைச் செய்திருக்கலாம். இப்பொழுது நான் உங்கள் மீதோ, கமிட்டியின் மீதோ, என்னைத் தாக்கியதற்காக வழக்குத் தொடர முடியாது. முடிந்தாலும் நான் கோர்ட்டில் பரிகாரம் தேடமாட்டேன். நேட்டால் ஐரோப்பியர்களின் நலன்களைப் பாதுகாக்கத் தங்களுக்குத் தோன்றிய நடவடிக்கைகளைத் தாங் கள் எடுத்தீர்கள். அது ஒரு ராஜீய விஷயம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ஒரு பெரிய சமூகமாக விளங்கும் இந்தியர் கள், ஐரோப்பியர்களுக்குக் கொஞ்சமும் தீங்கு செய்யாமல், தங்கள் சுயமரியாதையையும், உரிமைகளையும் காப்பாற்ற விரும்பு கிறார்களென்று நான் உங்களுக்கும், மற்ற ஐரோப்பியர்களுக் கும் ராஜீயத் துறையில் உங்களுடன் போர் செய்து தெளிவு படுத்த வேண்டியிருக்கிறது.''

எஸ்கோம்பு சொன்னார்: ''தாங்கள் சொல்லுவது எனக்கு நன்றாய் விளங்குகிறது. நான் அதைப் பாராட்டுகிறேன். தங் களைத் தாக்கினவர்கள் மீது வழக்குத் தொடரத் தங்களுக்குச் சம்மதமில்லை என்று தாங்கள் கூறக் கேட்பேன் என்று நான் எதிர்பார்க்கவில்லை. வழக்குத் தொடர்ந்திருந்தால் அதனால் எனக்குக் கொஞ்சமும் வருத்தம் உண்டாகி இராது. தாங்கள் வழக்குத் தொடராமலிருக்கும் தீர்மானத்தை வெளியிட்ட பிறகு இத் தன்னடக்கத்தின் மூலம் தாங்கள் இவ்விஷயத்தில் சரியான முடிவுக்கு வந்திருப்பது தவிர, தங்கள் சமூகத்துக்கும் பெரிய சேவை செய்தவர்களாவீர்கள். தங்களைத் தாக்கினவர்கள் மீது வழக்குத் தொடரத் தாங்கள் மறுத்ததால் நேட்டால் அரசாங்கத் தையும் ஒரு சங்கடமான நிலைமையிலிருந்து காப்பாற்றினீர்கள்.

தாங்கள் விரும்பினல் தங்களைத் தாக்கினவர்களைப் பிடிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யும். ஆனல், இது ஐரோப்பியர்கள் மனத்தில் ஆத்திரத்தை உண்டாக்கிப் பலவிதப் பேச்சுக்களுக்கும் இடம் தரும். இதை எந்த அரசாங்கமும் விரும்பாது. வழக்குத் தொடருவதில்லை என்று தாங்கள் முடிவான தீர்மானம் செய்திருந்தால், தாங்கள் அவ்வித விருப்பத்தைத் தெரிவித்து எனக்கு ஒரு கடிதம் எழுதவேண்டும். நம்முடைய பேச்சுக்களின் சுருக்கத்தை ஸ்ரீ சேம்பர்லேனுக்கு அனுப்பி நான் எனது அரசாங்கத்தைக் காப்பாற்றிக்கொள்ள முடியாது. தங்கள் கடிதத்தின் சுருக்கத்தை நான் அவருக்கு அனுப்பவேண்டும். அக்கடிதத்தை உடனே எழுதித் தரும்படி நான் கேட்கவில்லை. தங்கள் நண்பர்களுடன் ஆலோசியுங்கள். ஸ்ரீ லாப்டன் அவர்களுடனும் யோசியுங்கள். இவ்வாலோசனைகளுக்குப் பிறகு, வழக்குத் தொடராமலிருப்பது என்ற தங்கள் முந்திய தீர்மானத்தையே கொண்டிருந்தீர்களானல், எனக்குக் கடிதம் எழுதுங்கள். ஆனல், தங்கள் கடிதத்தில், தங்கள் பொறுப்பின் பேரிலேயே நீங்கள் தங்களைத் தாக்கினவர்கள் மீது வழக்குத் தொடர மறுத்ததாகத் தெளிவாக எழுதவேண்டும். அப்போதுதான் நான் அதை உபயோகிக்க முடியும்.''

நான் சொன்னேன்: ''என்னை இது சம்பந்தமாய் நீங்கள் கூப்பிட்டனுப்பினீர்களென்று எனக்குத் தெரியாது. இவ்விஷயமாய் நான் ஒரு நண்பரிடத்திலும் கலக்கவில்லை; இப்போதும் கலக்க விரும்பவில்லை. நான் ஸ்ரீ லாப்டன் அவர்களுடன் கப்பலை விட்டு இறங்கிப் போகத் தீர்மானித்தபோது, எனக்குத் தீங்கு நேரிட்டாலும் வருந்தக்கூடாது என்று என் மனத்தில் முடிவு செய்திருந்தேன். ஆதலால், என்னைத் தாக்கினவர்கள் மீது வழக்குத் தொடருவதென்பது நினைக்க முடியாதது. என்னைப் பொறுத்தமட்டில் இது தருமநெறியைப் பற்றியதோர் விஷயம். இத்தன்னடக்கச் செய்கையின் மூலம் நான் என் சமூகத்துக்கும், எனக்கும் சேவை செய்தவனுவேன் என்று உங்களைப்போலவே நானும் நினைக்கிறேன். ஆதலால் இதன் பொறுப்பை என்மேல் ஏற்றுக்கொண்டு, தாங்கள் கேட்ட கடிதத்தை இங்கே, இப்பொழுதே கொடுக்க நினைத்திருக்கிறேன்.''

அவரிடத்தில் ஒரு காகிதம் வாங்கி, அவர் விரும்பியபடி அதில் எழுதி அவர் கையில் கொடுத்தேன்.

## எட்டாவது அத்தியாயம்

# இங்கிலாந்தில் நடந்த வேலை

எவ்விதம் இந்தியர்கள் தங்கள் நிலைமையைச் சீர்படுத்த முயற்சி செய்து, தங்கள் கௌரவத்தையும் அதிகமாக்கிக் கொண்டார்கள் என்பதை வாசகர்கள் முந்திய அத்தியாயங்களில் கண்டிருப்பார்கள். தங்களுக்குள்ளேயே பலத்தை அதிகப்படுத்துவதற்கான முயற்சி செய்ததுடன், இந்தியாவிலும் இங்கிலாந்திலும் தங்களுக்குக் கிடைக்கத்தக்க உதவியையும் நாடினார்கள். இந்தியாவில் செய்த வேலையைப்பற்றிக் கொஞ்சம் எழுதியிருக்கிறேன். இங்கிலாந்தில் உதவி பெறுவதற்கு நாங்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளையும் சொல்ல வேண்டியிருக்கிறது. முதலில் இந்திய தேசீயக் காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டியுடன் சம்பந்தம் ஏற்படுத்திக்கொள்ளுவது அவசியமாக இருந்தது. ஆதலால், வாரத்திற்கொருமுறை கடிதங்கள் முழு விவரங்களுடன் இந்தியப் பெரியாரான தாதாபாயிக்கும், அக் கமிட்டியின் தலைவரான *ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கும் எழுதப்பட்டன. விண்ணப்பங்களின் பிரதிகள் அனுப்ப வேண்டிய சமயங்களில் கமிட்டியின் தபால் முதலிய செலவுகளுக்காகக் குறைந்தது பத்துப் பவுனும் அனுப்பப்பட்டது.

தாதாபாய் நௌரோஜீ அவர்களைப் பற்றிய புனித நினைவு ஒன்றை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். அவர் அக்கமிட்டியின் தலைவர் அல்லர். எனினும் முதலில் அவருக்குப் பணம் அனுப்பி, அதை அவர் கமிட்டியின் தலைவருக்கு எங்கள் சார்பில் அனுப்புவது என்பது எங்களுக்குச் சரியான முறையெனத் தோன்றியது. ஆனால், தாதாபாய் முதல் தடவையிலேயே அவருக்கு அனுப்பப்பட்ட தொகையைத் திருப்பியனுப்பி, கமிட்டிக்கு அனுப்ப வேண்டிய எல்லாத் தொகைகளும், கடிதங்களும் ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு நேராக அனுப்பப்பட வேண்டுமென யோசனை சொன்னார்.

---

* ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் (1836-1918) ஆங்கிலேயர்; 1836-ல் இங்கிலாந்தில் பிறந்தவர். இந்தியாவில் ஜில்லா மாஜிஸ்ட்ரேட், நீதிபதி, இன்னும் பல சர்க்கார் உத்தியோகங்களைப் பார்த்தவர். 1885–ல் வேலையை ராஜிநாமா செய்து ஸ்ரீ ஹியூம் அவர்களோடு காங்கிரஸ் மகாசபை ஏற்படுவதற்கு ஒத்துழைத்தார். 1889–லும் 1910–லும் காங்கிரஸ் மகாநாட்டின் தலைவர். காங்கிரஸுக்கும் முஸ்லிம் லீக்குக்கும் ஒற்றுமை ஏற்பட மிகப் பாடுபட்டவர். பல நூல்களின் ஆசிரியர். உடல் நலம் குன்றி 1918–ல் காலமானார்.

அவர் தம்மாலியன்ற எல்லா உதவியையும் நிச்சயமாய்ச் செய்வதாக அறிவித்தார். ஆனல், ஸர் வில்லியம் வெட்டர் பர்ன் மூலம் கமிட்டியுடன் நாங்கள் சம்பந்தம் வைத்துக் கொண்டால்தான், கமிட்டியின் கௌரவம் அதிகமாகும் என்ருர். தாதாபாய் மிக்க வயோதிகம் அடைந்திருந்தபோதிலும், கடிதம் எழுதுவதில் மிக ஒழுங்காக இருந்தார். குறிப்பாக எழுதுவதற்கு ஒன்றுமே இல்லாவிடினும், கடிதம் வந்து சேர்ந்ததைக் குறித்து உற்சாகம் ஊட்டக்கூடிய சில வார்த்தைகளுடன் மறு தபாலிலேயே பதில் எழுதுவார். இம்மாதிரிக் கடிதங்களையும் அவர் தாமாகவே எழுதுவதுடன், அவைகளுக்குத் தம் நகல் புத்தகத்தில் நகல்களும் வைத்திருப்பார்.

எங்கள் ஸ்தாபனத்துக்கு 'காங்கிரஸ்' என்ற பெயர் கொடுத்திருந்த போதிலும் எங்கள் குறைகளை ஒரு கட்சியைச் சேர்ந்த விஷயமாக நாங்கள் நினைக்கவில்லை என்று முன்னோர் அத்தியாயத்தில் காண்பித்திருக்கிறேன். ஆதலால் தாதா பாயிக்குத் தெரிந்தே மற்றக் கட்சிகளைச் சேர்ந்த கனவான் களுக்கும் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொண்டிருந்தேன். அவர்களில் முக்கியமானவர்கள் ஸர் மன்கர்ஜி பவ்நகரியும், ஸர் வி. வி. ஹண்டரும் ஆவர். ஸர் மன்கர்ஜி அப்பொழுது பார்லிமெண்டு அங்கத்தினராயிருந்தார். அவர் எல்லாச் சமயங் களிலும் முக்கியமான யோசனைகளைச் சொல்லி அரிய உதவி செய்து வந்தார். ஆனல், தென்னுப்பிரிக்காவில் இந்தியப் பிரச்னையின் முக்கியத்துவத்தை இந்தியர் அறிவதற்கு முன்னரே எவராவது நன்ருக அறிந்திருந்து அவர்களுக்கு மதிப்பான உதவியும் செய்திருந்தார் என்று சொன்னல் அவர், ஸர் வில்லியம் வில்ஸன் ஹண்டர்தான். அவர் 'டைம்ஸ்' பத்திரிகையின் இந்தியப் பிரிவுக்கு ஆசிரியராயிருந்தார். அவருக்கு அதைப் பற்றி நாங்கள் முதலில் எழுதியதிலிருந்து, அவர் எங்கள் விஷயத்தை உண்மையாகவும் தெளிவாகவும் அப்பத்திரிகை யில் எழுதிக்கொண்டிருந்தார். தமது சொந்த முறையில் பல கனவான்களுக்கு எங்கள் கட்சியை ஆதரித்துக் கடிதங் கள் எழுதியிருக்கிருர். முக்கியமான விஷயங்கள் வந்தபோது அநேகமாய் ஒவ்வொரு வாரமும் எங்களுக்குக் கடிதம் எழுதிக் கொண்டிருப்பார். அவருடைய முதற் கடிதத்தின் சாராம்சம் பின்வருமாறு: "அவ்விடத்திய நிலைமையைக் கேட்க எனக்கு வருத்தமாயிருக்கிறது. நீங்கள் மரியாதையாகவும், சமாதான மாகவும், மிகைபடச் சொல்லாமலும் உங்கள் போரை நடத்திக்

கொண்டு வந்திருக்கிறீர்கள். இவ்விஷயத்தில் என்னுடைய அனுதாபம் முழுதும் உங்கள் பக்கத்திலேயே இருக்கிறது. உங்களுக்கு நியாயம் வழங்குவதற்குப் பகிரங்கமாகவும், தனிப் பட்ட முறையிலும் என்னுலியன்ற அளவு நான் உதவி செய் கிறேன். ஓர் அணுவளவுகூட நாம் இவ்விஷயத்தில் விட்டுக் கொடுக்க முடியாதென்பது நிச்சயம். நீங்கள் கேட்பது மிக வும் நியாயமாயிருப்பதால், பாரபட்சமற்ற எவரும் அதைக் குறைக்கச் சொல்லமாட்டார்கள்.'' 'டைம்'ஸில் அவர் எழுதிய முதல் கட்டுரையில் இந்தக் கடிதத்திலிருந்தபடியே எழுதி யிருந்தார். வாழ்க்கை முழுதும் அவர் இந்தப் போக்குட னேயே இருந்து வந்தார். அவர் இறப்பதற்குச் சில நாட் களுக்கு முன், இந்தியப் பிரச்னையைப் பற்றித் தொடர்ச்சி யாகக் கட்டுரைகள் எழுதக் குறிப்புக்கள் தயார் செய்து வைத்திருந்ததாக ஸ்ரீமதி ஹண்டர் ஒரு கடிதத்தில் எழுதி யிருந்தார்.

ஸ்ரீ மன்சுக்லால் நாஜர் என்பவருடைய பெயரை முன் அத்தி யாயத்தில் சொல்லியிருக்கிறேன். இந்திய சமூகத்தின் சார் பில் நிலைமையை விவரமாக எடுத்துரைப்பதற்காக இந்தக் கனவான் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார். எல்லாக் கட்சி அங்கத்தினர்களுடனும் ஒத்து வேலை செய்யும்படி அவருக்குச் சொல்லப்பட்டது. அவர் இங்கிலாந்தில் இருந்தபோது ஸர் வி. வி. ஹண்டர், ஸர் மன்கர்ஜி பவ்நகரி, இந்திய தேசீய காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டியார் ஆகியவர்களுடன் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார். இம்மாதிரியே, இந்தியன் சிவில் சர்விஸிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்ட உத்தியோகஸ்தர்க ளுடனும், இந்தியா மந்திரி ஆபீசுடனும், குடியேற்ற நாட்டு மந்திரி ஆபீசுடனும் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தார். இங்ஙனம் எல்லா இடங்களிலும் முயற்சிகள் செய்யப்பட்டன. இதன் வெளிப்படையான பயன் யாதெனில், வெளிநாடுகளில் இந்தியர் களின் நிலைமையைப் பற்றிய விஷயம் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு மிக முக்கியமான பிரச்னையாகத் தோன்றியது. இது குடியேற்ற நாடுகளில் நன்மையையும், தீமையையும் உண்டாக்கிற்று. அதா வது, இந்தியர்கள், குடியேறியிருந்த எல்லா நாடுகளிலும் தங் கள் நிலைமையின் முக்கியத்துவத்தை அவர்கள் உணர்ந்தனர்; இந்தியர்களினுல் தங்கள் செல்வாக்குக்கு ஆபத்து நேரிடுமோ வென ஐரோப்பியர்கள் நினைத்தனர்.

## ஒன்பதாவது அத்தியாயம்

# போயர் யுத்தம்

போயர் யுத்தம் ஆரம்பமானபோது தென்னாப்பிரிக்க இந்தியர்களுடைய நிலைமை என்ன என்பதையும், அதைச் சீர் படுத்துவதற்கு எம்முறைகள் கையாளப்பட்டன என்பதையும் முந்திய அத்தியாயங்களில் வாசகர்கள் கவனித்திருப்பார்கள்.

டாக்டர் ஜேம்ஸன், தங்கச் சுரங்கங்களின் சொந்தக்காரர்களுடன் செய்திருந்த சதியாலோசனையை அனுசரித்து, ஜொஹன்னஸ்பர்க்கை *1899*-ஆம் வருடத்தில் தாக்கினார். தாங்கள் ஜொஹன்னஸ்பர்க்கைக் கைப்பற்றிய பிறகுதான் போயர் அரசாங்கத்திற்கு இதைப்பற்றி தெரியவருமெனச் சதியாலோசனைக்காரர்கள் நினைத்தனர். டாக்டர் ஜேம்ஸனும், அவர் சகாக்களும் இங்ஙனம் எதிர்பார்த்ததில் பெரிய தவறு செய்தனர். சதி கண்டுபிடிக்கப்பட்டுவிட்டாலும், யுத்தப் பயிற்சியில்லாத போயர் விவசாயிகள், குறிபார்த்துச் சுடுவதில் ரொடீஷியாவில் (**Rhodesia**) பயிற்சி பெற்ற தங்கள் முன் எதுவும் செய்ய முடியாது என்று நினைத்ததிலும் அவர்கள் மற்றொரு தவறு செய்தனர். ஜொஹன்னஸ்பர்க்கின் ஜனத்தொகையில் பெரும் பகுதியார் தங்களைச் சந்தோஷத்துடன் வரவேற்பார்களென்றும் அவர்கள் எதிர்பார்த்திருந்தனர். இதிலும் டாக்டர் ஜேம்ஸன் எதிரிச் சேனையைச் சரியாகக் கணக்கிடவில்லை. ஜனாதிபதி குருகர்* எல்லா விஷயங்களையும் முன்னமேயே அறிந்திருந்தார். அவர் மிகுந்த யோசனை செய்து சாமர்த்தியமாக ரகசியத்துடன் டாக்டர் ஜேம்ஸனைச் சந்திக்கத் தயார் செய்து, அதே சமயம் மற்றச் சதிகாரர்களையும் கைது செய்ய ஏற்பாடு செய்தார். ஆதலால், டாக்டர் ஜேம்ஸன் ஜொஹன்னஸ்பர்க்குக்கு அருகில் வந்து சேருவதற்கு முன்பே, போயர்களால் துப்பாக்கி

---

* இதே ஜனாதிபதி குருகர் பின்னால் நாடு கடத்தப்பட்டு ஐரோப்பாவில் வாழ்ந்து காலமானார். வெள்ளையரல்லாதவர்கள் விஷயத்தில் குருகர் கொண்டிருந்த மனப்போக்கை அறிந்துகொள்ளுவதும் முக்கியமாகும். அக்காலத்தில் காந்திஜியின் நெருங்கிய சகாவாகத் தென்னாப்பிரிக்காவிலிருந்து சேவை செய்து வந்த ஸ்ரீ ஹெச். எஸ். எல். போலக், குருகரைப் பற்றிப் பின்னால் ஓர் இடத்தில் குறிப்பிடுகையில், "கறுப்பு மனிதர்கள், புத்திசாலித்தனமான குரங்குகளைவிட எந்த விதத்திலும் சிறந்தவர்களல்ல; வெள்ளைக்காரர்களுடன் அவர்களுக்குச் சமத்துவமான சுதந்திரமே கூடாது என்று சொல்வதில் ஹிட்லர் வகையினரே குருகரும்'' எனக் கூறினர். போயர் யுத்தத்தில் காந்திஜி போயருக்கு விரோதமாகப் பிரிட்டிஷ் தரப்பில் சேர்ந்ததற்கு வெள்ளையரல்லாரிடம் குருகர் கொண்டிருந்த மனப்போக்கும் ஒரு காரணமாக இருந்திருக்கக்கூடும்.



1906-இல் ஜோஹன்னஸ்பர்க்கில் பாரிஸ்டர் காந்திஜி. லண்டன் சைவ உணவு சங்கத்தின் சின்னத்தை மேல்சட்டையில் அணிந்துகொண்டிருக்கிறார்.



1900-ல் ஜோஹன்னஸ்பர்க்கில்
மகாத்மா காந்தி பாரிஸ்டராக தொழில் நடத்தியபோது.

வெடியுடன் வரவேற்கப்பட்டார். டாக்டர் ஜேம்ஸனின் கூட்டம், தங்களை எதிர்த்த சேனையுடன் போர் செய்யும் நிலைமையில் இல்லை. இம்மாதிரியே ஜொஹன்னஸ்பர்க்கில் கலகம் உண்டாகாமல் தடுப்பதற்குப் பூரணமான ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. எவருக்கும் தங்கள் தலையைத் தூக்கத் தைரியமில்லை. ஜொஹன்னஸ்பர்க் லட்சாதிபதிகள் ஜனாதிபதி குருகரின் செயலைக் கண்டு திடுக்கிட்டுப் போயினர். அவர் செய்த நேர்த்தியான ஏற்பாடுகளின் காரணமாக இந்த ஆக்கிரமிப்பு, ஆட்களிலும் பொருளிலும் மிகக் குறைந்த சேதத்துடன் தடுக்கப்பட்டது.

டாக்டர் ஜேம்ஸனும், நண்பர்களான தங்கச் சுரங்கங்களின் சொந்தக்காரர்களும், காலதாமதமின்றிக் கைது செய்யப்பட்டு விசாரணைக்கு நிறுத்தப்பட்டனர். சிலருக்குத் தூக்கு தண்டனை கிடைத்தது. குற்றவாளிகளில் பலர் லட்சாதிபதிகள். ஆனால், இவர்கள் பட்டப்பகலில் ஆக்கிரமிப்புக் குற்றம் செய்ததால் பிரிட்டிஷ் அரசாங்கம் இவர்களுக்காக ஒன்றும் செய்ய முடியவில்லை. ஜனாதிபதி குருகர் திடீரென மிக முக்கியமானவராகி விட்டார். குடியேற்ற நாடுகளின் மந்திரியாயிருந்த சேம்பர்லேன்* குற்றவாளிகளெனத் தீர்மானிக்கப்பட்ட இப்பணக்காரர்களின் சார்பாக அவர்களுக்குக் கிருபை செய்யும்படி பணிவாக ஒரு தந்தி யடித்திருந்தார். ஜனாதிபதி குருகர் தம் காரியங்களில் கைதேர்ந்தவர். தென்னாப்பிரிக்காவில் உள்ள நாட்டினர் எவருமே தம் சுயேச்சையை அசைக்கக்கூடும் என்ற பயமே அவருக்குக் கிடையாது. டாக்டர் ஜேம்ஸனும், அவர் நண்பர்களும் செய்த சதியாலோசனை மிக

---

* ஜோசப் சேம்பர்லேன் (1836–1914) இவர் சிறந்த பிரிட்டிஷ் லிபரல் கட்சி அரசியல்வாதி. பர்மிங்ஹாமில் திருகு ஆணி தொழிற்சாலையை ஆரம்பித்து பெரும் பணக்காரரானார். 1876–இல் பார்லிமெண்ட் மெம்பரானார். ஸ்ரீ கிளாட்ஸ்டனின் கீழ் பல பதவிகளை வகித்தார். அயர்லாந்தின் குடியரசுக் கிளர்ச்சி சம்பந்தமாக லிபரல் கட்சியில் பிளவு ஏற்பட்டபோது லிபரல் யூனியனிஸ்டுக் கட்சியில் முக்கியஸ்தராக விளங்கினார். பிரதம மந்திரி லார்டு ஸாலிஸ்பரியின் கீழ் 1895–ல் காலனிகள் மந்திரியானார். இப்பதவி வகித்ததன் காரணமாகப் பிரபலமானார். போயர் யுத்தத்தைச் சமாளிக்க வேண்டிய பொறுப்பு இவருக்கு ஏற்பட்டது. இவருடைய கட்சிக்கு வெளியிலிருந்தவர்கள், போயர் போர்ச் சங்கடத்திற்குப் பொறுப்பாளியே இவர்தான் எனப் புகார் கூறினர். 1908–இல் ஓர் அளவுக்குப் பாதுகாப்புத் தீர்வை விதிப்பது அவசியம் என வற்புறுத்தி பிரிட்டனில் பரபரப்பை உண்டாக்கிவிட்டார். இக்கொள்கையை வற்புறுத்தியதால் காலனி மந்திரி பதவியையும் ராஜிநாமாச் செய்தார். பின்னர், நோய்வாய்ப்பட்டதால் பார்லிமெண்டு வேலையிலும் அவரால் ஈடுபட முடியாது போயிற்று. இவருடைய மூத்த மகனான ஆஸ்டின் சேம்பர்லேனே இரண்டாவது மகா யுத்த ஆரம்பகாலத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்து ஹிட்லருடன் மூனிக் ஒப்பந்தம் செய்துகொண்டவர்.

நல்ல திட்டமென்றே அவர்களுக்குத் தோன்றியபோதிலும் ஜனுதிபதி குருகருக்கோ அது ஓர் அறிவற்ற செயல் என்றே தோன்றிற்று. ஆதலால் சேம்பர்லேனின் பணிவான வேண்டு கோளுக்கு அவர் இணங்கினுர். அக்குற்றவாளிகளின் பேரிலிருந்த தூக்குதண்டனையை நிறைவேற்ருமல் விட்டுவிட்டதையும் தவிர அவர்களுக்கு முழு மன்னிப்புக் கொடுத்து விடுதலையும் செய்தார்.

ஆனல், காரியங்கள் இப்படியே நீண்டகாலம் போய்க் கொண்டிருக்க முடியாது. ஜேம்ஸன் ஆக்கிரமிப்பு ஒரு கொடிய வியாதியின் சிறிய அறிகுறியென ஜனுதிபதி குருகருக்குத் தெரியும். ஜொஹன்னஸ்பர்க் லட்சாதிபதிகள் தங்களுக்கு ஏற்பட்ட அவமானத்திற்கு வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவதற்குத் தங்களாலியன்ற சக்தி அனைத்தையும் உபயோகப்படுத்தாமல் இருக்கமாட்டார்கள். தவிர, எந்தச் சீர்திருத்தங்களுக்காக ஜேம்ஸனின் ஆக்கிரமிப்பு செய்யப்பட்டதாகச் சொல்லப்பட் டதோ, அச்சீர்திருத்தங்களும் செய்யப்படவில்லை. ஆதலால் அந்த லட்சாதிபதிகள் சும்மாயிருப்பார்களென எதிர்பார்க்க முடியாது. தென்னுப்பிரிக்காவுக்கு பிரிட்டிஷ் ஹைகமிஷன ராயிருந்த லார்டு மில்னருக்கு* அவர்கள் கோரிக்கைகளின் பேரில் முழு அனுதாபம் இருந்தது. சேம்பர்லேனும் கூட, ஜேம்ஸன் முதலியோர்பேரில் ஜனுதிபதி குருகர் காட்டிய பெருந்தன்மையைப் பாராட்டியபோதிலும். சீர்திருத்தத்தின் அவசியத்தைப் பற்றி அறிவுறுத்தியிருந்தார். யுத்தம் தவிர்க்க முடியாதென எல்லோரும் நம்பினுர்கள். உட்லாண்டர்களின் (Uitlanders)† கோரிக்கைகள் முடிவில் டிரான்ஸ்வாலில் போயர் களின் செல்வாக்கை அழிக்கும் நோக்கத்துடனிருந்தன. கடைசியில் யுத்தம் வருமென இரு தரப்பாருக்கும் தெரியும். ஆதலால் இருவரும் அதற்குத் தயார் செய்துகொண்டிருந் தனர். அவர்களுக்கிடையில் உண்டான வாய்ச்சண்டை குறிப் பிடற்பாலது. ஆயுதங்களுக்காகவும், யுத்த மருந்துகளுக்காக வும் ஜனுதிபதி குருகர் உத்தரவு செய்தபோது, தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகத் தென்னுப்பிரிக்காவுக்குள்

---

* வைகௌன்ட் ஆல்பிரெட் மில்னர் (1854-1925) பிரிட்டிஷ் சாம்ராஜ்ய அரசியல் வாதி; 1897–லிருந்து 1905 வரை தென்னுப்பிரிக்காவில் பணியாற்றி அதன் சரித் திரத்தை உருவாக்கப் பங்கெடுத்துக்கொண்டவர். 1918–ல் முதல் உலக மகாயுத்தத்தின் போது மந்திரிப் பதவியில் இருந்தார். அதன் பின்னர், 1919-லிருந்து 1921 வரை காலனிகள் மந்திரியாகப் பதவி வகித்தார்.

† உட்லாண்டர் - தென்னுப்பிரிக்காவில் மற்ற வெள்ளையரைக் குறிக்கும் சொல்.

பிரிட்டிஷ் சேனைகளைக் கொண்டுவர நேரிடுமென்று பிரிட்டிஷ் ஏஜெண்டு எச்சரிக்கை செய்தார். பிரிட்டிஷ் சேனைகள் தென்னுப்பிரிக்காவுக்கு வந்தபோது, ஜனுதிபதி குருகர் பிரிட்டிஷாரைப் பரிகாசம் செய்து, தம் யுத்த ஏற்பாடுகளைத் தொடர்ந்து நடத்தினுர். இங்ஙனம் ஒரு கட்சி மற்றொரு கட்சியின் செய்கைகளைக் குறைகூறித் தங்களைப் பலப்படுத்திக் கொண்டிருந்தன.

தம் ஏற்பாடுகளெல்லாம் முடிந்த பிறகு, அதற்கு மேலும் தாமதிப்பது விரோதிகள் கையில் வலுவில் சிக்குவதாகும் என்று ஜனுதிபதி குருகர் கண்டார். பிரிட்டிஷாரிடம் ஏராளமான ஆள் பலமும் இருந்தது. ஆகையால், அவர்கள் மெதுவாக யுத்தத்துக்குத் தயார் செய்துகொண்டு, அதே சமயத்தில் உட்லாண்டர்களின் குறைகளைத் தீர்க்கும்படி ஜனுதிபதி குருகரைக் கேட்டு வந்து, இங்ஙனம் அவர் குறைகளைத் தீர்க்காததாலேயே தாங்கள் யுத்தம் செய்யாமலிருக்க முடியவில்லை என்று உலகத்துக்குக் காட்ட, தங்களுக்கு ஏற்ற நேரம் வரும் வரை காத்திருக்க அவர்களால் முடியும். அதன் பிறகு, போயர்கள் எதிர்த்து நிற்க முடியாதபடி அவ்வளவு பெரிய ஏற்பாட்டுடன் யுத்தத்தில் புகுந்துவிடுவார்கள். அப்போது போயர்கள் பிரிட்டிஷார் சொல்லுவதை அவமானத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கும். பதினெட்டு வயதிலிருந்து அறுபது வயது வரையுள்ள போயர் மகன் ஒவ்வொருவனும் யுத்த முறையில் தேர்ந்தவனுயிருந்தான். விரும்பினுல் போர் செய்யப் பெண்களும் திறமையுடையவர்கள். மதக்கொள்கைகள் புகட்டும் சக்தி யாவும் அவர்களுக்குத் தேசீய சுதந்திரத்தின் பேரிலும் இருந்தது. இவ்வளவு வீரமுள்ள மக்கள், ஓர் உலக ஏகாதிபத்தியம் இழைக்கும் அவமானங்களுக்குப் பணிந்தே போகார்.

ஜனுதிபதி குருகர் முன்னமேயே ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டுடன் ஓர் ஒப்பந்தம் செய்திருந்தார். இரண்டு போயர் குடியாட்சிகளும் ஒரே விதமான கொள்கையைப் பின்பற்றின. பிரிட்டிஷ் கோரிக்கைகளைப் பூரணமாகவோ, அல்லது உட்லாண்டர்களைத் திருப்தி செய்யும் அளவாகவோகூட ஒப்புக்கொள்ளும் எண்ணம் ஜனுதிபதி குருகருக்குக் கொஞ்சமும் இல்லை. ஆதலால், யுத்தம் தடுக்க முடியாததாயிருக்க, பிரிட்டிஷார்களுக்கு இன்னும் அதிக அவகாசம் கொடுப்பது, அவர்கள் பலப்படுவதற்கு இடம் கொடுத்ததாகும் என்று இரு குடி

யரசுகளும் நினைத்தன. எனவே, ஜனதிபதி குருகர், லார்ட் மில்னருக்கு இறுதி எச்சரிக்கை அனுப்பி, டிரான்ஸ்வால், பிரீ ஸ்டேட் எல்லைகளில் சேனைகளைத் திரட்ட ஆரம்பித்தார். இதன் பலன் முன்கூட்டியே தெரிந்ததுதான். பிரிட்டன் போன்ற ஓர் உலக ஏகாதிபத்தியம், மிரட்டலை ஏற்றுக்கொண்டு சும்மா இருந்துவிடாது. இறுதி எச்சரிக்கையில் குறிப்பிட்டிருந்த காலம் கழிந்தது. போயர்கள் வாயுவேகமாகச் சென்று லேடிஸ்மித், கிம்பர்லி, மேபிகிங் இவ்விடங்களை முற்றுகை செய்தனர். இங்ஙனம் 1899-ஆம் வருடத்தில் இப்பெரிய யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தியர்களைப் போயர்கள் இழிவாக நடத்தியது, இந்த யுத்தத்திற்கு ஒரு காரணமென பிரிட்டிஷார்கள் சொன்னர்கள் என்பது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும்.

இச்சந்தர்ப்பத்தில் தென்னுப்பிரிக்க இந்தியர்கள் என்ன செய்ய வேண்டுமென்ற கேள்வி பிறந்தது. போயர்களில் ஆண் மக்கள் எல்லாரும் யுத்தத்தில் சேர்ந்தனர். வக்கீல்கள் தங்கள் வழக்குகளையும், விவசாயிகள் தங்கள் விவசாயத்தையும், வியாபாரிகள் தங்கள் வியாபாரத்தையும், வேலைக்காரர்கள் தங்கள் வேலைகளையும் துறந்துவிட்டுச் சென்றனர். தென்னுப்பிரிக்க பிரிட்டிஷார்கள், போயர்களைப் போன்று இந்த அளவில் யுத்தத்தில் சேரவில்லை. எனினும் கேப் காலனி, நேட்டால், ரொடீஷியாவிலிருந்த பல சிவிலியன்கள் தொண்டர்களாகத் தம்மைப் பதிவு செய்துகொண்டனர். பல பிரபல வியாபாரிகளும், வக்கீல்களும் அங்ஙனமே செய்தார்கள். நான் வக்கீல் உத்தியோகம் செய்துவந்த கோர்ட்டில் அப்போது கொஞ்ச வக்கீல்களைத்தான் கண்டேன். அநேகமாய் முக்கியமான வக்கீல்களெல்லாம் யுத்த வேலையில் ஈடுபட்டிருந்தனர். இந்தியர்கள் பணம் சேர்ப்பதற்கு மாத்திரமே தென்னுப்பிரிக்காவுக்குச் சென்றூர்களென்றும், பிரிட்டிஷாருக்கு அவர்கள் ஒரு சுமையே என்றும் குற்றம் சாட்டப்பட்டது. மரத்துக்குள் இருக்கும் புழு அதைக் குடைந்து பொந்து ஆக்குவது போல், இந்தியர்கள் அவர்களைக் கொண்டு தின்று கொழுப்பதற்கே தென்னுப்பிரிக்காவில் இருந்தனர் என்றூர்கள். தேசத்தின்பேரில் படையெடுக்கப்பட்டு, தங்கள் வீடுகள் கொள்ளையடிக்கப்பட்டாலும் இந்த இந்தியர்கள் கொஞ்சமும் உதவி செய்யமாட்டார்கள் என்றனர். இந்நிலைமையில் பிரிட்டிஷார்கள் விரோதிகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதோடு, இந்தியர்களையும் காப்பாற்ற

வேண்டியிருக்கிறது என்றார்கள். இந்தியர்களின்பேரில் இவ்வாறு சுமத்தப்பட்ட இக்குற்றச்சாட்டை நாங்கள் ஆழ்ந்து யோசித்தோம். அக்குற்றச்சாட்டில் உண்மையில்லை என்று நிரூபிப்பதற்கு இது தக்க தருணமென எங்கள் எல்லோருக்கும் தோன்றியது. ஆனல், மற்றொரு பக்கத்தில் கீழ்க்கண்ட அபிப்பிராயங்களும் சிலரால் எடுத்துரைக்கப்பட்டன:

"பிரிட்டிஷார்களும் போயர்களைப் போலவே நமக்குக் கொடுமை செய்கின்றனர். டிரான்ஸ்வாலில் நாம் கஷ்டங்களுக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறோமென்றால் நேட்டாலிலும் கேப் காலனியிலும் நம் நிலைமை அதைவிடச் செம்மையாக இருந்துவிடவில்லை. ஏதாவது வித்தியாசம் இருந்தாலும் அது அளவில் மாத்திரம்தான். நாம் ஏறக்குறைய அடிமைச் சமூகமாகவே இருக்கிறோம். போயர்கள் போன்ற ஒரு சிறு தேசத்தார், தாங்கள் உயிர் வாழ்வதற்காகப் போர் செய்துவரும் சமயத்தில், நாம் ஏன் அவர்களை அழிப்பதற்குக் கருவிகளாக இருக்கவேண்டும்? கடைசியாக காரியார்த்த நோக்கத்திலிருந்து பார்த்தாலும், போயர்கள் தோற்றுப் போவார்களென எவரும் நிச்சயமாய்ச் சொல்லிவிட முடியாது அவர்கள் வென்றால், நம்மைப் பழிக்குப் பழி வாங்காமல் விடமாட்டார்கள்."

மேற்கண்ட வாதத்தை எங்களில் ஒரு வலுத்த கட்சியார் எடுத்துரைத்தனர். நான் அதை ஏற்றுக்கொண்டு, அதைப்பற்றி யோசித்துப் பார்த்தேன். அது எனக்குச் சரியெனத் தோன்றவில்லை. எனக்குள்ளேயும், சமூகத்துக்கும் அதைக் கீழ்க்கண்டபடி மறுத்துரைத்தேன் :

"பிரிட்டிஷ் குடிகள் என்ற ஹோதாவில்தான் நாம் தென்னுப்பிரிக்காவில் இருக்கிறோம். நாம் கொடுத்த ஒவ்வொரு விண்ணப்பத்திலும் அந்த வகையிலேயே நம் உரிமைகளை வற்புறுத்தியிருக்கிறோம். நாம் பிரிட்டிஷ் குடிகள் என்று பெருமை கொண்டிருக்கிறோம். அதைக் குறித்து நாம் பெருமைப்படுகிறோம் என்று நம்மை ஆளுபவர்களையும், உலகத்தையும் நம்பச் செய்துமிருக்கிறோம். நாம் பிரிட்டிஷ் பிரஜைகளாயிருப்பதால் நம்மை ஆளுபவர்கள் நம் உரிமைகளைப் பாதுகாப்பதாகச் சொல்லுகிறார்கள் நமக்கு உள்ள ஒரு சில உரிமைகளையும் நாம் பிரிட்டிஷ் குடிகளாயிருப்பதாலேயே அடைந்திருக்கிறோம். இங்கே நம்மை இழிவாக நடத்துகிறார்கள் என்ற காரணத்துக்காக, பிரிட்டிஷாரும் நாமும் அழியும் தறுவாயில் இருக்கும்போது, கைகட்டிக்கொண்டு நாம் பார்த்துக் கொண்டிருப்பதால் அது நம் சமூகத்தின் கௌர

வத்துக்கு ஏற்றதாகாது. இச்சமயத்தில் ஒதுங்கியிருப்பதால் ஏற்படும் இக்குற்றம் நம்முடைய கஷ்டங்களை அதிகப்படுத்தத் தான் செய்யும். நாம் தவறென நம்பும் நம்மேல் சுமத்தப்பட்டிருக்கும் குற்றச்சாட்டுகள் தவருனவை என்று எடுத்துக் காட்டுவதற்கு நாம் நாடாமலே ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அதை நழுவ விடுவோமானுல், நம்மாலேயே நாம் குற்றவாளிகளெனக் கருதப்படுவோம். அதன் பிறகு ஆங்கிலேயர் நம்மை முன்னைவிட மோசமாக நடத்தி ஏளனம் செய்தார்களானுல் அதில் வியப்படைவதற்கொன்றுமில்லை. தவறு முழுவதும் அப்போது நம்மேல் இருக்கும். நம்மேல் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள் உண்மையல்லவென்றும், அவை முற்றிலும் நிருபிக்கப்பட முடியாதவை என்றும் சொல்வது நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளுவதாகும். நாம் ஏகாதிபத்தியத்தில் அடிமைகளாயிருக்கிறோம் என்பது உண்மையே. எனினும், ஏகாதிபத்தியத்துக்குள்ளிருந்து கொண்டே இதுவரை நம் நிலைமையை உயர்த்த முயற்சி செய்திருக்கிறோம். அதுவே இந்தியாவில் நம் தலைவர்கள் கொள்கையாகவும், நம் கொள்கையாகவும் இருந்து வந்திருக்கிறது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அங்கத்தினராக இருந்து நமது சுதந்திரத்தையும் நலத்தையும் அடைய நாம் விரும்பினுல் நம்மாலியன்ற வழிகளில் பிரிட்டிஷாருக்கு இந்த யுத்தத்தில் எல்லா உதவிகளும் செய்வதன் மூலம் அவற்றை அடைய நமக்கு இது ஒரு நல்ல தருணம். நியாயம், போயர்கள் பக்கத்தில் இருக்கிறதென்று வெகுவாக ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஆனுல், ஒவ்வொரு தனிப் பிரஜையும் எல்லா விஷயங்களிலும் தன்னுடைய அபிப்பிராயத்தைப் புகுத்த நினைக்கலாகாது. அரசாங்கத்தார் எல்லாச் சமயங்களிலும் சரியாக நடவாதிருக்கலாம். எனினும், பிரஜைகள் அந்த ராஜாங்கத்தின் கீழிருக்கும் வரை, அதே ராஜாங்கத்தோடு ஒத்துழைத்து அதன் காரியங்களுக்கு ஆதரவு அளிப்பது அவர்கள் கடமையாகும்.

"பிரஜைகளில் ஒரு வகுப்பார், அரசாங்கத்தின் செய்கை தங்கள் மதக் கொள்கைப்படி அதருமமென நினைத்தால், அதற்கு உதவியையோ அல்லது தடையையோ செய்வதற்கு முன் தம் உயிர் போவதாயினும் அவ்வரசாங்கம் அச்செய்கையைச் செய்யாமலிருக்கும்படி திருப்ப முயல வேண்டும். நாம் இதைப் போன்று ஒன்றும் செய்யவில்லை. அம்மாதிரி தரும சம்பந்தமான நெருக்கடி நம் முன் இல்லை. இம்மாதிரி பரந்த காரணங்களுக்

காக நாம் இந்த யுத்தத்திலிருந்து ஒதுங்கியிருக்க வேண்டு மென்று ஒருவரும் சொல்லவுமில்லை. ஆதலால் பிரஜைகளாகிய நமது சாதாரண கடமை, யுத்தத்தின் நியாய அநியாயத்தைப் பற்றி விசாரணை செய்வதன்று; ஆனால், யுத்தம் ஆரம்பித்து விட்ட பிறகு நம்மாலியன்ற உதவியைச் செய்வதேயாகும். கடைசியில் போயர்கள் வென்றால் - போயர்களுக்கு வெற்றி, சாத்தியம்தான் - நம் நிலைமை முன்னைவிட மோசமாகுமென்றும் அவர்கள் நம்மேல் கொடுமையாகப் பழி வாங்குவார்களென்றும் சொல்லுவது, தீரம் மிகுந்த அந்தப் போயர்களுக்கும் சரி, நமக்கும் சரி நீதியாகாது. அப்படி ஏற்படக்கூடும் என்று சிறிது நினைப்பதும்கூட, நம் கோழைத்தனத்தின் அறிகுறியாக ஆவதுடன், நமது ராஜ பக்திக்கும் மாசு விளைவிப்பதாகும். யுத் தத்தில் இங்கிலாந்து தோற்றுப் போய்விட்டால் தனக்கு என்ன நேரிடுமென்று ஆங்கிலேயன் எவனும் கணமேனும் நினைப்பானா? யுத்தத்தில் சேரவிருக்கும் ஒருவன் தனது ஆண் மையைப் பறி கொடுக்காமல் இவ்விதமான வாதம் செய்யவே முடியாது.''

நான் *1899*–ஆம் வருடத்தில் மேற்கண்டபடி வாதித்தேன். இன்னும் அவைகளை மாற்றுவதற்கு எந்தவிதக் காரணமும் காண்கிலேன். அதாவது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் அப் போதிருந்த நம்பிக்கை எனக்கு இன்றும் இருந்தால், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கீழ் நமக்குச் சுதந்திரம் கிடைக்கும் என்ற நம்பிக்கை அப்போதிருந்தது போலவே எனக்கு இப் போதுமிருந்தால், இன்றும் அதே வாதத்தை, சொல்லுக்குச் சொல் அப்படியே, தென்னாப்பிரிக்காவிலும், அம்மாதிரி சந் தர்ப்பங்களில் இந்தியாவிலும் சொல்லுவேன்; தென்னாப்பிரிக் காவிலும், அதற்குப் பின் இங்கிலாந்திலும் இவ்வாதத்தை மறுக்க பலர் முயற்சி செய்ததாகக் கேள்வியுற்றேன். எனினும், என்னுடைய அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளுவதற்கு யாதொரு காரணத்தையும் நான் காணவில்லை. என்னுடைய இன் றைய அபிப்பிராயங்களுக்கும் இப்புத்தகத்தில் வரும் விஷயங் களுக்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லை என்பதை அறிவேன். ஆனால், இங்கே அதைப்பற்றி சொல்லியதற்கு இரண்டு சரியான காரணங்கள் உள்ளன. முதலாவதாக, இப்புத்தகத்தை அவசரமாய்ப் படிக்கும் வாசகர்கள், அதைப் பொறுமையாகவும் கவனமாகவும் படிப்பார்கள் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. மேற்கண்ட அபிப்பிராயங்களுக்கும் என்னுடைய இன்றைய

நடவடிக்கைகளுக்கும் பொருத்தம் காண்பதும் அந்த வாசகர் களுக்குக் கடினமாகவே இருக்கும். இரண்டாவதாக, மேற் கண்ட வாதங்களின் அடிப்படையான தத்துவம் சத்தியாக்கிர கம்; அதாவது உண்மையை வலியுறுத்தல். ஒருவன், தான் உண்மையாய் இருக்கிறபடியே வெளிக்குத் தோன்றவும் வேண்டும் என்பதும், அதன்படியே நடக்க வேண்டுமென்பதும் இந்நெறியை அனுஷ்டிப்பதில் கடைசிப் படி அன்று; அது முதற்படியே ஆகும். இம்மாதிரி அடிப்படையின்றி ஆன்மிக வாழ்வை நடத்துவது அசாத்தியம்.

நமது கதைக்குத் திரும்புவோம். என்னுடைய வாதங்கள் பலருக்குச் சரியெனத் தோன்றின. இவ்வாதங்களை எடுத்துரைத் தது நான் ஒருவன் மாத்திரமே என்று வாசகர்கள் நினைக்கக் கூடாது. இவ்வபிப்பிராயங்களை நான் வெளியிடுவதற்கு முன் னும், நம் பங்கு உதவியை யுத்தத்தில் செய்ய வேண்டுமெனப் பல இந்தியர் நினைத்திருந்தனர். ஆனல், இந்தப் பயங்கரமான யுத்தமாகிய புயல் அடித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் இந்தியர்களின் சக்தி குன்றிய வார்த்தைகளைக் காது கொடுத் துக் கேட்பவர் யார் என்ற கேள்வி பிறந்தது. நாம் கொடுக்க முன்வந்திருக்கும் இவ்வுதவிக்கு ஏதாவது மதிப்புக் கொடுப்பார் களா? எங்களில் எவரும் போர்க் கருவி ஒன்றையும் உப யோகித்துப் பழகியதில்லை. போர் முனையில் நேராக ஈடுபடாத வர் செய்ய வேண்டிய சேவைக்கும் பயிற்சி வேண்டியதா யிருந்தது. அணி வகுத்து நடக்கவும் எங்களில் ஒருவருக்கும் தெரியாது. ஒருவன் தன் சாமான்களைத் தன் தோள் மீது தூக்கிக் கொண்டு நெடுந்தூரம் நடப்பது எளிதான காரியமல்ல. தவிர வெள்ளைக்காரர்கள் எங்களைக் 'கூலி'களென அவமானம் செய்து இழிவாக நடத்துவார்கள். இதையெல்லாம் எப்படிச் சகிப்பது? நாம் சேவை செய்ய முன்வந்தாலும் அரசாங்கம் அதை ஏற்றுக் கொள்ளும்படி எப்படிச் செய்வது? கடைசியில் நாங்கள் ஒரு முடிவுக்கு வந்தோம். எங்கள் சேவையை ஒப்புக் கொள்ளும்படிச் செய்வதற்குச் சிரத்தையுடன் முயற்சி செய்ய வேண்டும். அனுபவம், அதிக வேலை செய்யக் கற்றுக் கொடுத்துவிடும்; மனம் இருந்தால் சேவை செய்வதற்குத் தகுந்த சக்தியைக் கடவுள் கொடுப்பார்; கொடுத்த வேலையை எப்படிச் செய்வதென்று கவலைப்படாமல், எங்களால் இயன்ற வரை செய்யப் பயிற்சி பெறவேண்டும்; சேவை செய்யத் தீர்மானித்தபின் உயர்ந்த வேலை அல்லது தாழ்ந்த வேலை என்ற



1889-1900 இல் நடந்த போயர் போரில் சேவைசெய்த இந்திய மருத்துவப்படை.
இப்படத்தில் நடுவரிசையில் இடமிருந்து ஐந்தாவதாக வீற்றிருப்பவரே காந்திஜி.



1906இல் ஜுலு 'கலக'த்தின் போது சேவை செய்த காயம்பட்டோரைத் தூக்கிச்செல்லும் இந்தியப் படையின் தலைவரான காந்திஜியும் அப்படையின் மற்றும் பல முக்கியஸ்தர்களும். இரண்டாவது வரிசையில் நடுவில் வீற்றிருக்கிறார் காந்திஜி.

வித்தியாசம் பாராட்டக் கூடாது; அவமரியாதை செய்யப்பட்டாலும், அதையும் சகித்துக் கொள்ள வேண்டியதே என்று முடிவு செய்தோம்.

எங்கள் சேவை ஒப்புக்கொள்ளப்படுவதில் பல பெரிய கஷ்டங்கள் ஏற்பட்டன. அக்கதை ரசமானது. ஆனால், அதைச் சொல்லுவதற்கு இது இடமன்று. எங்களில் தலைவராயிருந்தவர்கள், காயம் பட்டவர்களுக்கும் நோயாளிகளுக்கும் பணிவிடை செய்வதில் பயிற்சி பெற்று, உடல் தகுதிக்கான பத்திரம் வாங்கி, அரசாங்கத்துக்கு ஒரு விண்ணப்பம் அனுப்பினோம். இவ் விண்ணப்பமும், அரசாங்கம் குறிப்பிடும் எவ்வகையான சேவையைச் செய்யவும் நாங்கள் தயாரெனக் காட்டிய ஆர்வமும் மிக நல்ல அபிப்பிராயத்தை உண்டாக்கின. இதற்கு அரசாங்கத்தார் எங்களுக்குத் தங்கள் வந்தனத்தைத் தெரிவித்தனர். ஆனால், எங்கள் சேவையை அப்பொழுதிற்கு ஏற்க மறுத்தனர். இதற்கு மத்தியில் போயர்கள் ஒரு பெருவெள்ளம் போல் முன்னேறினர்கள். அவர்கள் டர்பனுக்கு வந்துவிடுவார்களென்ற பயம் இருந்தது. காயம்பட்டவர்களும், இறந்தவர்களும் எங்கே பார்த்தாலும் குவியல் குவியலாகக் கிடந்தனர். சேவை செய்ய எங்களை அனுமதிக்குமாறு நாங்கள் விடாமல் கேட்டுக்கொண்டிருந்தோம். கடைசியாக, ஓர் இந்திய மருத்துவப்படை ஏற்படுத்துவதற்கு அனுமதி அளிக்கப்பட்டது. ஆஸ்பத்திரிகளில் பெருக்கும் வேலை, தோட்டி வேலை இவற்றைச் செய்ய எங்கள் சம்மதத்தை நாங்கள் தெரிவித்திருந்தோம். ஆதலால், மருத்துவப்படை யோசனை எங்களுக்குப் பூரணமாகப் பிடித்திருந்தது என்பதில் ஆச்சரியமில்லை. சுதந்திர இந்தியர்களும், ஒப்பந்தத்திலிருந்து விடுபட்ட இந்தியர்களும் பொறுத்தமட்டில் சேவை செய்ய முன்வருவதாக நாங்கள் முதலில் அறிவித்திருந்தோம். ஆனால், ஒப்பந்தத்துக்கு உட்பட்ட இந்தியர்களையும் மற்றவர்களுடன் சேர அனுமதிப்பது நலமெனப் பிறகு சொன்னோம். அரசாங்கத்துக்கு அச்சமயத்தில் ஆட்கள் அவ்வளவு பேரும் வேண்டியிருந்தபடியால், அவர்கள் ஒப்பந்தத் தொழிலாளர்களின் எஜமானர்களைத் தங்களுடைய ஆட்களுக்கு யுத்தத்தில் சேருவதற்கு அனுமதி அளிக்குமாறு கேட்டனர். இவ்விதம் சுமார் 1,100-இந்தியர் கொண்ட பெரியதோர் அற்புதமான படை டர்பனிலிருந்து யுத்தகளத்துக்குப் புறப்பட்டது. நாங்கள் புறப்படும்போது, முன்னமேயே வாசகர்களுக்குத் தெரிந்திருப்பவரான அப்போது நேட்டால் ஐரோப்பியத் தொண்டர்களுக்குத்

தலைவராயிருந்த எஸ்கோம்பின் பாராட்டுதலையும் ஆசீர்வாதத்தையும் பெற்றோம்.

இவை யாவும் ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு வியப்பைத் தந்தன. இந்தியர்கள் யுத்தத்தில் பங்கெடுத்துக் கொள்ளுவார்களென்று எவரும் எதிர்பார்க்கவில்லை. ஆங்கிலேயர் ஒருவர் முக்கியமான பத்திரிகையொன்றில் இந்தியர்களைப் புகழ்ந்து ஒரு பாட்டு எழுதினர். அதற்கு, 'என்ன இருந்தாலும் நாம் எல்லோரும் ஏகாதிபத்தியத்தின் மக்களே' என்பது பல்லவியாக இருந்தது.

எங்கள் மருத்துவப் படையில் சுமார் முந்நூறு, ஒரு சமயம் நானூறு பேர், ஒப்பந்த வேலை செய்த இந்தியர்கள் இருந்தனர். இவர்கள் சுதந்திர இந்தியர்களின் முயற்சியால் சேர்க்கப்பட்டிருந்தனர். சுதந்திர இந்தியர்களில் முப்பத்தேழு பேர்கள் தலைவர்களெனக் கருதப்பட்டனர். ஏனெனில், இவர்கள் பேரால் தான் அரசாங்கத்திற்கு விண்ணப்பம் அனுப்பப்பட்டது; இவர்களே மற்றவர்களை ஒன்ருகத் திரட்டியவர்கள். தலைவர்களில் பாரிஸ்டர்களும், கணக்குப் பார்ப்போரும் இருந்தனர்; மற்றவர்கள் கொத்தர்கள், தச்சர்கள் இவர்கள் போன்ற கைத்தொழில் செய்பவர்கள் அல்லது சாதாரணத் தொழிலாளர்கள். ஹிந்துக்களும், முஸல்மான்களும், சென்னைவாசிகளும், வடநாட்டவரும், எல்லா வகுப்பாரும், மதத்தினரும் அதில் காணப்பட்டனர். அதில் வியாபாரி ஒருவரும் இல்லை. ஆனுல், வியாபாரிகள் அதிகமாகப் பணம் கொடுத்தனர். படையின் தேவைகள் சிலவற்றை யுத்தத்தில் கொடுக்கப்படும் படியைக் கொண்டு பெற முடியவில்லை. இத்தேவையைத் திருப்தி செய்தால் அவர்களுடைய கஷ்டமான யுத்த வாழ்க்கைக்குக் கொஞ்சம் சௌகரியம் ஏற்படும்; வியாபாரிகள் இச்சௌகரியத்தைச் செய்து கொடுக்க ஏற்றுக் கொண்டிருந்தனர். எங்கள் வசத்தில் இருந்த காயம் பட்டவர்களுக்கு மிட்டாய், சிகரெட்டுகள் போன்ற சாமான்களைக் கொடுத்துச் சந்தோஷம் ஊட்டுவதற்கான உதவிசெய்தனர். நாங்கள் ஊருக்குப் பக்கத்தில் இருந்தபோதெல்லாம் அந்த அந்த ஊர் வியாபாரிகள் எங்கள் சௌகரியங்களைக் கவனிக்கத் தங்களால் இயன்றதைச் செய்தனர்.

இப்படையில் சேர்ந்த ஒப்பந்தத் தொழிலாளர்கள் அந்தத் தொழிற்சாலையிலிருந்து வந்த ஆங்கில மேஸ்திரிகளின் கீழ் இருந்தனர். ஆனுல், அவர்கள் வேலையும் எங்கள் வேலையைப் போன்றதே. நாங்கள் யாவரும் ஒன்ருக இருக்கப்போவதால், அவர்

களுக்கு அது அதிக சந்தோஷத்தை அளித்தது. படையின் நிர்வாகம் இயல்பாகவே எங்கள் கைக்கு வந்தது. இவ்விதம் இப்படைக்கு 'இந்தியர்கள் படை' என்ற பெயர் கொடுக்கப் பட்டு, இது ஆற்றிய சேவையால் சமூகத்திற்குப் புகழ் கிடைத்தது. உண்மையில் ஒப்பந்தத் தொழிலாளர்கள் படையில் சேர்க்கப்பட்டதன் கௌரவம் இந்தியர்களுக்கு உரிய தன்று. அது நியாயமாகத் தோட்டக்காரர்களையே சேர வேண்டியது. ஆனால், படையை நடத்திக் காட்டிய நிர்வாகத் திறமைக்கு ஏற்ற கௌரவம் இந்திய சமூகத்தாருக்கே உரியது. இது, ஜெனரல் புல்லராலும் (General Buller)* அவருடைய அறிக்கையில் ஒப்புக்கொள்ளப்பட்டது.

எங்களை ஆரம்ப சிகிச்சையில் பயிற்றுவித்த டாக்டர் பூத் வைத்திய உத்தியோகஸ்தராய் எங்கள் படையில் சேர்ந்து கொண்டார். அவர் தெய்வ பக்தியுள்ள ஒரு பாதிரி. அவர் வேலை இந்திய கிறிஸ்தவர்களிடத்திலேயே முக்கியமாயிருந்த போதிலும், அவர் எல்லா வகுப்பு இந்தியர்களிடத்திலும் தாராளமாகப் பழகிக்கொண்டிருந்தார். முன் சொன்ன முப்பத் தேழு தலைவர்களில் அநேகமாய் எல்லோரும் அவரிடத்திலேயே தங்கள் பயிற்சியைப் பெற்றனர்.

ஓர் ஐரோப்பிய மருத்துவப்படையும் இருந்தது. இரண்டும் சேர்ந்தாற்போல் ஒரே இடத்தில் வேலை செய்து கொண் டிருந்தன.

நாங்கள் அரசாங்கத்துக்குச் சேவை செய்ய முன்வந்த போது, ஒரு நிபந்தனையும் கேட்கவில்லை. ஆனால், அரசாங்கம் அதை ஒப்புக்கொண்டு எழுதிய கடிதம், துப்பாக்கி சுடும் இடத்திற்குள் சேவை செய்ய வேண்டியதில்லை என்ற விலக்கை எங்களுக்கு அளித்தது. அதாவது, சேனையுடன் இருந்த நிரந்தர மருத்துவப்படை, சிப்பாய்கள் காயம் படப்பட அவர்களை, யுத்தம் நடக்கும் எல்லைக்கு வெளியே நெடுந்தூரம் எடுத்துக்

---

*ஜெனரல் ஸர் புல்லர் (1839–1908) பல போர்களில் ஈடுபட்டு விருதுகள் பெற்றவர். சீன யுத்தம், அஷாந்திப் போர், ஜூலு யுத்தம், எகிப்தியப் போர், சூடான் யுத்தம் ஆகியவைகளில் ஈடுபட்டுப் பெயர்பெற்றார். 1887-இல் அயர்லாந்தின் உதவி மந்திரியாக இருந்தார். போயர் யுத்தம் ஆரம்பமானதும் அங்கே பிரிட்டிஷ் படைகளின் தளபதியாகப் பதவி ஏற்றார். ஆனால், இவருடைய படைகள் தோல்வியடைந்து வந்ததால் லார்டு ராபர்ட்ஸ் பிரதம தளபதியானார். பிறகு போயர்களிடமிருந்து லேடிஸ்மித்தை ஜெனரல் புல்லர் மீட்டதோடு அதை அடுத்து யுத்தத்தில் பல கட்டங்களில் தீவிரமாகப் போரை நடத்தினார். இங்கிலாந்திற்குத் திரும்பியதும் ஒரு விருந்தில் அவர் பேசியது மேலதிகாரிகளுக்கு அதிருப்தியை உண்டாக்கியதால் அரைச் சம்பளத்துடன் உத்தியோகத்திலிருந்து அவர் விலகவேண்டியதாயிற்று.

கொண்டு வரவேண்டும். தாற்காலிகமான ஐரோப்பிய, இந்திய மருத்துவப்படைகள், லேடிஸ்மித்திலிருக்கும் ஜெனரல் ஒயிட்டை (General White)* விடுவிக்க ஜெனரல் புல்லர் செய்யவிருக்கும் முயற்சிகளுக்கு உதவியாக உண்டாக்கப்பட்டன. நிரந்தரப் படை சிகிச்சை செய்யக்கூடியதற்கு அதிகமாகக் காயம் பட்டவர்கள் தொகை லேடிஸ்மித்தில் இருக்குமென எதிர்பார்க்கப்பட்டது. இரு சேனைகளும் யுத்தம் செய்துகொண்டிருந்த பிரதேசத்தில், யுத்தகளத்துக்கும் தலைமை ஆஸ்பத்திரிக்கும் சரியான ரஸ்தாக்கள் இல்லை. ஆதலால், சாதாரணப் போக்குவரத்துச் சாதனங்கள் மூலம் காயம்பட்டவர்களை எடுத்துக் கொண்டு போவது அசாத்தியம். தளத்தின் ஆஸ்பத்திரி எப்போதும் ஒரு ரெயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்திலும், யுத்த களத்திலிருந்து ஏழிலிருந்து இருபத்தைந்து மைல் தூரத்திலும் இருந்தது.

எங்களுக்குச் சீக்கிரத்தில் வேலை கிடைத்தது; அவ்வேலையும் நாங்கள் எதிர்பார்த்ததைவிடக் கடினமாயிருந்தது. காயம் பட்டவர்களை ஏழு அல்லது எட்டு மைல்கள் தூக்கிக்கொண்டு போவது எங்கள் சாதாரண தினசரி வேலை. ஆனால், சில சமயங்களில் அதிகமாகக் காயம்பட்ட சிப்பாய்களையும், உத்தியோகஸ்தர்களையும் இருபத்தைந்து மைல் தூரமும் தூக்கிக் கொண்டு போக வேண்டியிருந்தது. எங்கள் நடை காலை எட்டு மணிக்கு ஆரம்பிக்கும். வழியில் மருந்துகள் கொடுக்கப் பட வேண்டும். மாலை ஐந்து மணிக்குத் தளத்தின் ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர வேண்டும். இது உண்மையில் மிகக் கடினமான வேலையே. ஒரு தடவைதான் நாங்கள் காயம்பட்டவர்களை ஒரே நாளில் இருபத்தைந்து மைல் தூக்கிக் கொண்டு போக வேண்டியிருந்தது. யுத்த ஆரம்பத்தில் பிரிட்டிஷ் சேனைக்குத் தோல்விக்குப் பின் தோல்வியாக ஏற்பட்டு அதிகமான பேர்களுக்குக் காயம் ஏற்பட்டது. ஆதலால், எங்களை யுத்தம் நடக்கும் இடத்திற்குக் கொண்டு போகாமல் இருக்கும் எண்ணத்தை விட்டுவிட வேண்டிய நிர்ப்பந்தம் உத்தியோகஸ்தர்களுக்கு உண்டாயிற்று. அப்பேர்ப்பட்ட அவசியம் நேரிட்டபோது, எங்களுக்கு விஷயத்தை எடுத்துச் சொன்னர்

---

*பீல்டு மார்ஷல் ஸர் ஜார்ஜ் ஒயிட் (1835–1912) போயர் யுத்தத்தில் லேடிஸ்மித் என்ற இடத்தை எதிரிகளிடம் பிடிபடாதவாறு காக்க தீரமாகப் போராடியவர். சிப்பாய்க் கலகம் என்ற முதல் இந்திய சுதந்திரப் போரில் பிரிட்டிஷ் படைகளை நடத்திச்சென்ருர் பர்மாவிலும், எகிப்திலும், பிரிட்டிஷ் அதிகாரியாக இருந்தார். இந்தியாவிலும் சேனுதிபதியாக இருந்தார். போயர் யுத்தத்திற்குப் பிறகு ஜிப்ரால்டர் கவர்னரானுர்.

கள். ஒப்பந்தப்படி நாங்கள் யுத்தம் நடக்கும் இடத்தில் சேவை செய்வதிலிருந்து தவிர்க்கப்பட்டிருக்கிறோம் என்றும், நாங்கள் அவ்வாபத்துக்குட்படத் தயாராயில்லாவிடில் எங்களைப் பலவந்தப்படுத்தும் எண்ணம் ஜெனரல் புல்லருக்கு இல்லையென்றும், ஆனால், இவ்வேலையை நாங்களாகவே ஏற்றுக்கொண்டால் அது பெரிதும் பாராட்டப்படுமென்றும் எங்களுக்கு அறிவிக்கப்பட்டது. அவ்வபாய எல்லையில் புக நாங்கள் அதிக ஆவலாயிருந்தோம்: அதற்கு வெளியில் இருக்க நாங்கள் எப்போதும் விரும்பியதில்லை. ஆதலால், நாங்கள் இச்சந்தர்ப்பத்தை வரவேற்றோம். ஆனால், எங்களில் எவருக்கும் குண்டினால் காயமோ, வேறெவ்விதமான காயமோ ஏற்படவில்லை.

மகிழ்வூட்டும் பல அனுபவங்கள் இப்படைக்கு ஏற்பட்டன. அவைகளைப் பற்றி நான் இங்குக் கூறப் புகவில்லை. எனினும், ஒன்றைச் சொல்லவே வேண்டும். பழகத் தெரியாதவர்களெனக் கருதப்பட்ட ஒப்பந்தத் தொழிலாளர்களையும் கொண்ட எங்கள் படை, ஐரோப்பியத் தாற்காலிக மருத்துவப்படையின் அங்கத்தினர்களுடனும், ஐரோப்பியச் சிப்பாய்களுடனும் பழகிய போது, அவர்கள் எங்களை இழிவுபடுத்தியதாகவோ, மரியாதையின்றி நடத்தியதாகவோ எங்களில் எவருக்கும் தோன்றவில்லை. இத்தாற்காலிக ஐரோப்பியப் படையில், யுத்தத்திற்கு முன் இந்தியர்களுக்கு விரோதமான கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்த தென்னாப்பிரிக்க ஐரோப்பியர்கள் இருந்தனர். அவர்களுடைய அக்கிரமங்களை இந்தியர்கள் மறந்து, அவர்கள் துன்பப்படும் காலத்தில் அவர்களுக்கு உதவி செய்ய முன்வந்திருக்கிறார்கள் என்பது அந்நேரத்திலாவது அவர்கள் உள்ளத்தை உருக்கி இருக்கும். நாங்கள் ஆற்றிய வேலையைப் பற்றி ஜெனரல் புல்லர் தம் அறிக்கையில் குறிப்பிட்டிருந்தாரென முன்னமேயே சொல்லியிருக்கிறேன். யுத்தப் பதக்கங்களும் முப்பத்தேழு தலைவர்களுக்கு அளிக்கப்பட்டன.

லேடிஸ்மித்தை விடுவிப்பதற்கான ஜெனரல் புல்லரின் உபாயங்கள் முடிந்ததும், அதாவது இரண்டு மாத காலத்தில், எங்கள் படையும், ஐரோப்பியர் படையும் கலைக்கப்பட்டன. யுத்தம், அதற்குப் பின் நெடுநாள் நடந்தது. மீண்டும் சேருவதற்கு நாங்கள் எப்பொழுதும் தயாராயிருந்தோம். எங்கள் படையைக் கலைத்த உத்தரவில், பெரிய அளவில் யுத்தம் செய்ய அவசியம் நேரிட்டால், எங்கள் சேவையை நிச்சயமாய் அரசாங்கம் உபயோகப்படுத்திக்கொள்ளுமெனக் கண்டிருந்தது.

பார்க்கப்போனல், தென்னுப்பிரிக்க இந்தியர்கள் யுத்தத்தில் செய்த இவ்வுதவி அப்படி அதிகமல்ல. இதில் ஒருவரும் உயிர் இழக்கவில்லே. எனினும், உதவியாய் இருக்கவேண்டுமென்ற உண்மையான விருப்பங்கூட எதிர்த் தரப்பில் உணர்ச்சியை உண்டாக்கியே தீரும். அதுவும் அந்த உதவி எதிர்பாராததாக இருந்தால், அதிகமாகப் பாராட்டப்படும். இந்தியர்கள் பேரிலிருந்த இந்நல்ல உணர்ச்சி, யுத்தம் நீடித்தவரை இருந்தது.

இந்த அத்தியாயத்தை முடிப்பதற்கு முன் குறிப்பிடத்தக்க ஒரு சம்பவத்தை இங்கே எழுதவேண்டும். லேடிஸ்மித்தை போயர்கள் கைப்பற்றியிருந்தபோது, அங்கே ஆங்கிலேயரைத் தவிரச் சில தனி இந்தியர்களும் இருந்தனர். அவர்களில் சிலர் வியாபாரிகள்; மற்றவர்கள் ரெயில் பாதைகளிலும், ஆங்கிலேயரிடமும் வேலே செய்து வந்த ஒப்பந்தத் தொழிலாளர்கள். அவர்களில் ஒருவர் பாபு சிங். லேடிஸ்மித்தில் ராணுவத் தலைமையில் இருந்த உத்தியோகஸ்தர், நகரவாசிகள் ஒவ்வொருவருக்கும் பலவாறுன கடமைகளேக் குறிப்பிட்டிருந்தார். இவைகளில் எல்லாவற்றிலும் மிகவும் அபாயகரமானதும், பொறுப்பானதுமான வேலே, 'கூலி' என அழைக்கப்பட்ட பாபு சிங்குக்குக் கொடுக்கப்பட்டது. போயர்கள் லேடிஸ்மித்துக்குப் பக்கத்திலுள்ள ஒரு குன்றின்மீது வெகு தொலேவு சென்று குண்டுகள் தாக்கக் கூடிய பீரங்கிகளே வைத்திருந்தனர். இதனல் பல கட்டடங்களும் உயிர்களும் சேதமாயின. பீரங்கியிலிருந்து வரும் குண்டு தூரத்தில் இருக்கும் ஒரு பொருளேத் தாக்குவதற்கு ஓரிரண்டு நிமிஷமாகும். முற்றுகை செய்யப்பட்டிருப்பவர்களுக்கு குறுகிய நேரத்துக்குள் செய்தி கிடைத்தாலும், குண்டுகள் ஊருக்குள் விழுமுன் மறைவான இடத்தில் பதுங்கித் தங்களேக் காப்பாற்றிக்கொள்ள முடியும். இப்பீரங்கிகள் வேலே செய்யும் காலம் முழுதும், பாபு சிங் ஒரு மரத்தின்மேல் உட்கார்ந்து கொண்டு அக்குன்றையே கவனமாகப் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும். பீரங்கிகள் சுடுவதால் உண்டாகும் மின்னலேக் கண்ட கணமே அவர் ஒரு மணி அடிக்க வேண்டும். இம்மணி ஓசையைக் கேட்டு, அக்கொடிய குண்டு வருவதை அறிந்து லேடிஸ்மித்வாசிகள் உடனே ஓடிப் பதுங்கித் தங்களேக் காப்பாற்றிக்கொள்ளுவார்கள்.

லேடிஸ்மித்தில் இருந்த ராணுவ உத்தியோகஸ்தர் பாபு சிங்கின் மதிப்பிற்குரிய சேவையைப் புகழ்ந்து பேசுங்கால், ஒரு தடவைகூட மணி அடிக்கத் தவருமல் அவ்வளவு சிரத்தையுடன்

அவர் வேலை செய்தார் எனச் சொன்னார். அவருடைய உயிர் எந்த நேரத்திலும் ஆபத்துக்குட்பட்டிருந்தது என்பதைக் கூற வேண்டிய அவசியமில்லை. அவருடைய வீரத்தைப்பற்றிய விவரம் நேட்டாலுக்குத் தெரியவந்தது. அப்பொழுது இந்தியாவில் வைசிராயாக இருந்த லார்ட் கர்ஸனின்* காதுகளுக்கும் கடைசியாக எட்டியது. அவர் பாபு சிங்குக்குப் பரிசளிப்பதற்காக ஒரு காஷ்மீர் துப்பட்டா அனுப்பி, இப்பரிசளிப்பு மிக ஆடம்பரமாக நடத்தப் படவேண்டுமென நேட்டால் அரசாங்கத்திற்கு எழுதினார். இக் கடமை டர்பன் மேயர் வசம் ஒப்புவிக்கப்பட்டது. அவர் டவுன் ஹாலில் இதற்காக ஒரு கூட்டம் கூட்டினார். இவ்விஷயம் நமக்கு இரண்டு பாடங்களைப் போதிக்கிறது. முதலாவது, ஒருவன் பார்வைக்கு எவ்வளவு தாழ்மையாகவும், பயனற்றவனாகவும் தோன்றிய போதிலும் அவனை நாம் அலட்சியம் செய்துவிடக் கூடாது. இரண்டாவது, ஒருவன் எவ்வளவு கோழையாயிருப்பினும் தக்க சந்தர்ப்பம் ஏற்பட்டால் அவன் மகாவீரனாக மாறக்கூடும்.

---

* லார்டு கர்ஸன் - மார்க்விஸ் ஆப் கெடில்ஸ்டன் (1859-1925) — திறமையும் அகம்பாவமும் வாய்ந்த அரசியல் நிபுணர். இந்தியாவில் வைசிராயாக இருந்த காலத்தில் வங்காளப் பிரிவினையை உண்டாக்கி இந்தியரிடையே பெருங் கொந்தளிப்பை உண்டாக்கி விட்டவர். யாத்திரிகர் என்றும், நூலாசிரியர் என்றும் தம் இள வயதிலேயே பிரக்கியாதி அடைந்தவர். 1898–இல் இந்தியாவின் வைஸ்ராயாக வந்தார். மத்திய ஆசியா, கீழ்நாடுகள் இவைகளைப்பற்றிய அரசியல் விவகாரங்களில் தேர்ந்தவர். இந்தியாவின் வடமேற்கு எல்லையைப் பலப்படுத்த வடமேற்கு மாகாணத்தை நிறுவினார். அரசாங்கம் நிலவரியை உயர்த்தும் நோக்கத்தை இவர் ஆதரிக்கவே நாட்டில் பலத்த எதிர்ப்பு இவருக்கு ஏற்பட்டது.

தொல்பொருள்களைக் காக்கும் இலாகா இவரது முயற்சியினாலேயே தோன்றியது. அதற்காக ஒரு சட்டமும் இயற்றினார். 1905-இல் இவர் வங்காள மாகாணத்தை இரு கூறாக்கி, அஸ்ஸாம், கீழ் வங்காளம் என்று பிரித்தபோது, நாடெங்கும் பலத்த கிளர்ச்சி மூண்டது, இதனால் ஆங்கில ஆட்சி முறைக்கே எதிர்ப்பு அதிகமாயிற்று. கடைசியில் நிர்வாக விஷயமாக இவருக்கும் சேனைத் தலைவர் லார்டு கிட்சனருக்கும் ஏற்பட்ட மனவேற்றுமையினால், இவர் 1905–இல் தம் பதவியை ராஜிநாமா செய்ய வேண்டியதாயிற்று.

1919 – 1924 வரை இவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் வெளிநாட்டு மந்திரியாக இருந்து, முதல் உலக மகாயுத்தத்திற்குப் பிறகு நடந்த முக்கிய கூட்டங்களில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டு பணியாற்றினார்.

## பத்தாவது அத்தியாயம்

# யுத்தத்துக்குப் பின்னர்

யுத்தத்தின் மிகவும் முக்கியமான கட்டம் 1900-ஆம் வருடத்தில் முடிந்தது. லேடிஸ்மித், கிம்பர்லி, மேபிகிங் இவை விடுவிக்கப்பட்டிருந்தன. பார்டிபர்கில் (Paardeburg) ஜெனரல் குரோன்ஜி சரணுகதியடைந்தார். போயர்கள் வசமிருந்த பிரிட்டிஷ் நாடுகள் திரும்பிப் பெறப்பட்டன. லார்ட் கிட்சனர் டிரான்ஸ்வாலேயும், ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டையும் பிடித்து வெற்றி கண்டார். அங்கு மிங்கும் ஒளிந்திருந்து தாக்கும் சண்டைகள்தான் நடந்து கொண்டிருந்தன.

தென்னுப்பிரிக்காவில் என் வேலே இப்போது முடிந்ததென நான் நினைத்தேன். ஒரு மாதத்துக்கு அங்கே இருப்பதென்று ஆரம்பத்தில் கருதியதற்குப் பதிலாக ஆறு வருடங்கள் தங்கி விட்டேன். நாங்கள் எதிர்காலத்தில் எம்மாதிரி வேலே செய்ய வேண்டுமென்று தெளிவாக நிர்ணயிக்கப்பட்டு விட்டது. எனினும், இந்திய சமூகத்தின் உளமார்ந்த சம்மதமின்றி நான் தென்னுப்பிரிக்காவை விட முடியவில்லே. இந்தியாவில் பொது வேலேயை மேற்கொள்ள நினைத்திருக்கிறேன் என்று என்னுடைய சகாக்களுக்குச் சொன்னேன். தென்னுப்பிரிக்காவில் சுயநலத்திற்குப் பதிலாகப் பொதுச் சேவை என்ற பாடத்தைக் கற்றேன். அச்சேவை செய்யச் சந்தர்ப்பங்களுக்காக ஆவலுடன் இருந்தேன். ஸ்ரீ மன்சுக்லால் நாஜரும், ஸ்ரீ கானும் அங்கிருந்தார்கள். தென்னுப்பிரிக்காவில் பிறந்து வளர்ந்த சில இந்திய இளேஞர்கள் இங்கிலாந்துக்குச் சென்று பாரிஸ்டர்களாய் திரும்பியிருந்தனர். இச்சந்தர்ப்பங்களில் நான் இந்தியாவுக்குத் திரும்புவது தவருகாது. நான் அங்ஙனம் அவர்களுக்குச் சொல்லியபோது, ஒரு நிபந்தனேயின் பேரில்தான் நான் இந்தியாவுக்குத் திரும்ப அனுமதியளித்தனர். அதாவது தென்னுப்பிரிக்காவில் எதிர்பாராத நிலேமை ஏதாவது ஏற்பட்டு அதற்காக நான் வருவது அவசியமானுல், இந்திய சமூகம் எந்நாளிலும் என்னேக் கூப்பிடலாம்; நானும் உடனே போகவேண்டும். அப்படி வந்தால் என்னுடைய பிரயாணச் செலவுகளேயும், தென்னுப்பிரிக்காவில் நான் இருப்பதால் நேரிடும் செலவுகளேயும் அவர்கள் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டார்கள். இந்த

ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டு நான் இந்தியாவுக்குத் திரும்பி னேன்.

முக்கியமாக கோகலே அவர்களின் யோசனையைப் பெற்றுப் பொதுவேலையில் ஈடுபடுவதற்காகவும், இரண்டாவது பொதுவேலையுடன் என் பிழைப்பிற்காகவும் நான் பம்பாயில் தொழில் நடத்தத் தீர்மானித்தேன். நான், அலுவலகத்தை அங்கே திறந்தபின் கொஞ்சம் வேலையும் கிடைக்க ஆரம்பித்தது. தென்னாப்பிரிக்காவில் எனக்கு நெருங்கிய சம்பந்தம் இருந்த காரணத்தால், அந்நாட்டிலிருந்து திரும்பிய வியாபாரிகள் மாத்திரமே எனக்கு வழக்குகளைக் கொடுத்தார்கள். அதனால் என்னுடைய தேவைக்குப் போதியதை விடச் சற்று அதிகமே கிடைத்தது. ஆனால், அமைதியான வாழ்வு எனக்கு இந்தப் பிறப்பில் இல்லை. நான் பம்பாயில் இரண்டு, மூன்று மாதங்கள் தான் இருந்திருப்பேன். அதற்குள், நிலைமை மோசமாயிருந்த தென்றும், ஸ்ரீ சேம்பர்லேன் அங்கே சீக்கிரத்தில் வரப்போவ தாகவும், நான் அங்கே இருப்பது அவசியமென்றும் தென்னாப் பிரிக்காவிலிருந்து ஒரு தந்தி கிடைத்தது.

நான் என் பம்பாய் அலுவலகத்தையும் வீட்டையும் மூடி விட்டுக் கிடைத்த கப்பலில் தென்னாப்பிரிக்காவுக்குப் புறப்பட் டேன். இது 1902-ஆம் வருடத்து இறுதியில். 1901-ஆம் வரு டத்து இறுதியில் இந்தியாவுக்குத் திரும்பி 1902-ஆம் வருடத்து மார்ச்சு மாதத்தில் பம்பாயில் என்னுடைய அலுவலகத்தைத் திறந்திருந்தேன். தந்தியில் முழு விவரங்கள் இல்லை. டிரான்ஸ் வாலில் தொந்தரவு இருக்குமென ஊகித்தேன். நான்கு அல்லது ஆறு மாதங்களுக்குள் இந்தியாவுக்குத் திரும்பிவிட முடியுமென்று நினைத்ததால், என் குடும்பத்தை இங்கே விட்டுவிட்டே தென்னாப்பிரிக்கா சென்றேன். டர்பன் சேர்ந்து எல்லாவற்றை யும் கேட்டதும் நான் பிரமித்துப் போனேன். யுத்தத்துக்குப் பிறகு தென்னாப்பிரிக்கா முழுதிலும் இந்தியர்களின் நிலைமை சீர்படுமென எங்களில் பலர் நினைத்திருந்தோம். அதுவும் லார்டு லான்ஸ்டவுன், லார்டு செல்போர்ன் முதலிய உயர்ந்த அதிகாரி கள், யுத்தம் ஆரம்பிப்பதற்கு ஒரு காரணம் போயர்கள் இந்தியர்களை மோசமாக நடத்தியதுதான் என்று கூறியிருந்த தால், டிரான்ஸ்வாலிலும், பிரீ ஸ்டேட்டிலும் நாங்கள் தொந் தரவை எதிர்பார்க்கவேயில்லை. டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் நாடானால், இந்தியர்களுடைய குறைகள் எல்லாம் உடனே தீர்ந்துவிடுமெனப் பிரிட்டோரியாவில் இருந்த பிரிட்டிஷ்

ஏஜெண்டு என்னிடத்தில் பல தடவைகளில் சொல்லியிருந்தார். டிரான்ஸ்வால் இப்பொழுது பிரிட்டிஷ் ஆளுகைக்குள் வந்து விட்டதால், இந்தியர்களுக்கு விரோதமாகப் போயர் குடியாட்சியில் செய்யப்பட்டிருந்த பழைய சட்டங்களை அமல் நடத்த முடியாதென ஐரோப்பியர்களும் நம்பினார்கள். இந்த நம்பிக்கை அதிகமாகப் பரவியிருந்தது. யுத்தத்துக்கு முன் இந்தியர்களுக்கு நிலம் விற்காமல் இருந்தவர்களும், இப்போது வெளிப்படையாக இந்தியர்களுக்கு விற்க ஒப்புக்கொண்டனர். பல இந்தியர்கள் இவ்விதம் புது ஏலங்களில் நிலங்கள் வாங்கினார்கள். ஆனால், கிரயப் பத்திரங்களைப் பதிவு செய்வதற்காக ரெவின்யூ உத்தியோகஸ்தரிடத்தில் கொடுத்தபோது, அவர் 1885-ஆம் வருடத்தின் மூன்றாவது சட்டத்தைக் காட்டிப் பத்திரங்களைப் பதிவு செய்ய மறுத்தார். இவைகளையெல்லாம் டர்பனில் இறங்கியதும் அறிந்தேன். ஸ்ரீ சேம்பர்லேன் முதலில் டர்பனுக்கு வருவாரென்றும், டர்பன் நிலைமையை அவருக்கு முதலில் எடுத்துரைக்க வேண்டுமென்றும் தலைவர்கள் சொன்னார்கள். இது முடிந்ததும், நான் அவரைப் பின் தொடர்ந்து டிரான்ஸ்வாலுக்குச் செல்லவேண்டும் என்றனர்.

நேட்டாலில் ஒரு பிரதிநிதிக் கூட்டம் ஸ்ரீ சேம்பர்லேனைக் கண்டது. இந்தியப் பிரதிநிதிகள் சொன்னதை அவர் மரியாதையுடன் கேட்டுக்கொண்டார். அவர்கள் எடுத்துரைத்த விஷயங்களைப்பற்றி நேட்டால் அரசாங்கத்துடன் கலப்பதாக வாக்களித்தார் சேம்பர்லேன். நேட்டாலில் யுத்தத்துக்கு முன் உண்டாக்கப்பட்ட சட்டங்கள் சீக்கிரத்தில் மாற்றப்படுமென நான் எதிர்பார்க்கவில்லை. இச்சட்டங்கள் யாவை என்பது முன் ஓர் அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றது.

யுத்தத்துக்கு முன் எந்த இந்தியனும் எச்சமயத்திலும் டிரான்ஸ்வாலுக்குள் போக முடியுமென்று வாசகர்களுக்குத் தெரியும். அம்மாதிரி இப்போது இல்லையெனக் கண்டேன். எனினும் இக்கட்டுப்பாடுகள் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்கும் பொதுவாக இருந்தன. அதிகத் தொகையினர் ஒரே சமயத்தில் டிரான்ஸ்வாலுக்குச் சென்றுவிட்டால், போதுமான அளவு உணவும் உடையும் கிடைக்காத நிலையில் அப்பிரதேசம் அன்று இருந்தது. ஏனெனில், யுத்தத்துக்குப் பிறகு எல்லாக் கடைகளும் திறக்கப்பட்டுவிடவில்லை. கடையில், இருப்பு வைக்கப்பட்டிருந்த சரக்குகளைப் போயர் அரசாங்கம் அவை எவர்களுக்குப் பாத்தியப்பட்டவை என்பதைப்பற்றி யாதொரு

யோசனையுமின்றி, தனக்குச் சொந்தமாக ஆக்கிக்கொண்டது. ஆதலால் இக்கட்டுப்பாடுகள் தாற்காலிகமானவை என்றும், எனவே பயப்படுவதற்கு யாதொரு காரணமும் இல்லையென்றும் நான் நினைத்தேன். ஆனால், ஓர் ஐரோப்பியன் அனுமதிச் சீட்டு வாங்குவதற்கும், ஓர் இந்தியன் அதை வாங்குவதற்கும் வித்தியாசம் இருந்தது. இதனால் சந்தேகமும் பயமும் உண்டாயின. தென்னாப்பிரிக்காவின் பல துறைமுகங்களில் அனுமதிச்சீட்டு ஆபீசுகள் ஏற்படுத்தப்பட்டன. கேட்ட மாத்திரத்தில் ஓர் ஐரோப்பியனுக்கு அனுமதிச் சீட்டுகள் கிடைத்துவிடும். ஆனால், இந்தியர்களுக்காக என்று ஓர் ஆசிய இலாகா டிரான்ஸ்வாலில் அமைக்கப்பட்டது. இத்தனி இலாகா உண்டாக்கப்பட்டது ஒரு புதிய மாறுதல். இந்தியர் முதலில் அவ்விலாகாவின் தலைவரிடம் விண்ணப்பிக்க வேண்டும். இவ்விண்ணப்பங்களின் பேரில் அனுகூலமாக உத்தரவு கிடைத்தால், அவர்கள் டர்பனிலோ அல்லது மற்ற எந்தத் துறைமுகத்திலுமோ அனுமதிச் சீட்டுக்களைப் பெறலாம்.

இம்முறைப்படியே நானும் செல்ல வேண்டுமானால், சேம்பர்லேன் டிரான்ஸ்வாலை விட்டுச் செல்வதற்கு முன்னால் எனக்கு அனுமதிச்சீட்டுக் கிடைக்காது. டிரான்ஸ்வாலிலிருந்த இந்தியர்களால் எனக்காக ஓர் அனுமதிச் சீட்டுப் பெற முடியவில்லை. அது அவர்கள் சக்திக்கு மீறியதாகும். ஆதலால் என்னுடைய டர்பன் நண்பர்கள் மூலமே நான் ஓர் அனுமதிச்சீட்டுப் பெற முடியுமென நம்பினார்கள். எனக்கு அனுமதிச்சீட்டுக் கொடுக்கும் உத்தியோகஸ்தரைத் தெரியாது. ஆனால், டர்பன் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டை எனக்குத் தெரியுமாதலால், அனுமதிச்சீட்டு ஆபீசுக்கு என்னுடன் வரும்படி அவரைக் கேட்டேன். அவர் ஒப்புக்கொண்டு, அவசியமான உத்திரவாதங்களைக் கொடுத்தார். நான் 1893-இல் ஒரு வருடமே டிரான்ஸ்வாலில் இருந்தேன் என்ற காரணத்தின்பேரில் ஓர் அனுமதிச்சீட்டு வாங்கிக்கொண்டு பிரிட்டோரியா போய்ச் சேர்ந்தேன்.

பிரிட்டோரியாவின் அப்போதைய நிலைமை பயங்கர அறிகுறியையே காட்டியது. ஆசிய இலாகா, இந்தியர்களைத் துன்புறுத்தும் ஒரு பயங்கரமான யந்திரமேயொழிய வேறல்ல எனக் கண்டேன். அதன் உத்தியோகஸ்தர்கள், இந்தியாவிலிருந்து தென்னாப்பிரிக்காவுக்கு வந்த சேனையோடு யுத்தத்தின்போது வந்தவர்கள். தங்கள் அதிர்ஷ்டத்தைப் பார்க்க

லாம் என்ற எண்ணத்தில் தென்னுப்பிரிக்காவில் குடியேறிய சுயநலக்காரர்கள் அவர்கள். அவர்களில் சிலர் ஊழல் மிகுந்தவர்கள். அந்த உத்தியோகஸ்தர்களில் இருவர் லஞ்சம் வாங்கியதற்காக, அவர்கள் மீது கோர்ட்டுகளில் நடவடிக்கைகளும் நடந்தன. ஆனுல், ஜூரிகள் அவர்கள் குற்றவாளிகளல்லவெனத் தீர்ப்புக் கூறிவிட்டார்கள். எனினும் அவர்கள் செய்த குற்றத்தைப் பற்றிச் சந்தேகமில்லையாதலால், அவர்கள் பின்பு உத்தியோகத்திலிருந்து நீக்கப்பட்டனர். பட்சபாதச் செயல்கள் எங்கும் தென்பட்டன. இவ்விதம் ஒரு தனி இலாகா உண்டாக்கப்பட்டது. இருக்கும் சுதந்திரத்தைத் தடுப்பதற்கென்றே இருந்தபடியால், தாங்கள் இருக்க வேண்டிய அவசியம் உள்ளதைக் காட்டுவதற்காகவும், தாங்கள் கடமையைக் கண்டிப்பாய் ஆற்றுவதைக் காட்டுவதற்காகவும், உத்தியோகஸ்தர்கள் இயல்பாகவே அவ்வப்போது புதிய கட்டுப்பாடுகளையே உண்டாக்கும் நோக்குடையவர்களாயினர். இவ்விஷயத்திலும் அங்ஙனமே ஏற்பட்டது.

நான் முதலில் இருந்தே என் வேலையை ஆரம்பிக்க வேண்டியிருப்பதைக் கண்டேன். டிரான்ஸ்வாலுக்குள் எப்படி சமாளித்து வந்து சேர்ந்தேன் என்பது ஆசியா இலாகாக்காரர்களுக்கு உடனே விளங்கவில்லை. என்னை நேரில் கேட்க அவர்களுக்குத் தைரியமில்லை. நான் திருட்டுத்தனமாய் அந்நாட்டிற்குள் வந்திருக்கமாட்டேன் என்று அவர்கள் கருதினுர்களென நினைக்கிறேன். எனக்கு எப்படி அனுமதிச்சீட்டுக் கிடைத்ததென்பது பற்றி அவர்கள் வேறு வழிகளில் தகவல்களைப் பெற்றனர். பிரிட்டோரியாவிலிருந்து ஒரு பிரதிநிதிக் கூட்டம் ஸ்ரீ சேம்பர்லேனைக் காணத் தயார் செய்தது. இவருக்குக் கொடுக்கப்பட வேண்டிய விண்ணப்பத்தை நான் எழுதினேன். ஆனுல், ஆசிய இலாகா என்னைப் பிரதிநிதிக் கூட்டத்திலிருந்து விலக்கிவிட்டது. நான் அவர்களுடன் போக முடியாதபடி தடுக்கப்பட்டால், பிரதிநிதிக் கூட்டம் சேம்பர்லேனைப் போய்க் காணக்கூடாதென இந்தியத் தலைவர்கள் கருதினர். ஆனுல், நான் இக்கருத்தை ஆதரிக்கவில்லை. எனக்கு ஏற்பட்ட அவமரியாதையை நான் பொருட்படுத்தக் கூடாதென்றும், அவர்களும் அதை மறந்துவிட வேண்டுமென்றும் சொன்னேன். விண்ணப்பம் தயாராக இருந்தது; அதை ஸ்ரீ சேம்பர்லேனுக்குச் சமர்ப்பிக்க வேண்டிய அவசியம் இருந்தது. அச்சமயத்தில் அங்கிருந்த ஜார்ஜ் காட்பிரே (George Godfrey) என்னும் ஓர் இந்திய

பாரிஸ்டருக்கு, அவ்விண்ணப்பத்தை வாசித்துக் கொடுக்கும் கடமை அளிக்கப்பட்டது. அப்பிரதிநிதிக் கூட்டம் சேம்பர் லேனைக் கண்டது. சம்பாஷணையின்போது என்னுடைய பெயர் சொல்லப்பட்ட சமயத்தில், "நான் காந்தியை முன்னமேயே டர்பனில் கண்டேன். ஆதலால், டிரான்ஸ்வாலின் நிலைமையைப் பற்றி, அதன் உள்ளூர்வாசிகளிடமிருந்து நேராக அறியும் பொருட்டு, அவரை இங்கே பார்க்க மறுத்தேன்" என்றார் அவர். இச்சொல் தீயில் எண்ணெய் வார்த்தது போல் ஆகும் என்பதே என் கருத்து. ஸ்ரீ சேம்பர்லேன், ஆசிய இலாகாக்காரர்கள் சொல்லிக் கொடுத்தபடி ஒப்புவித்தார். இதன் மூலம் இந்தியாவிலிருக்கும் பழக்கம் தென்னாப்பிரிக்காவுக்குள் கொண்டுவருவதற்கு முயற்சி செய்யப்பட்டது. பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் எப்படிச் சம்பாரணில் உள்ள பம்பாய் வாசிகளை அந்நியரென நினைக்கிறார்களென்பது எல்லோருக்கும் தெரியும். இதன்படி பார்த்தால் டர்பனிலிருந்த எனக்கு டிரான்ஸ்வாலின் நிலைமையைப் பற்றி எப்படித் தெரியும்? இங்ஙனம் ஆசிய இலாகாக்காரர்கள் ஸ்ரீ சேம்பர்லேனுக்குச் சொல்லிக் கொடுத்தனர். நான் டிரான்ஸ்வாலில் இருந்ததும் அப்படி அவ்விடத்தில் நான் இருக்கவில்லையென்றாலும் அவ்விடத்திய இந்தியர்களின் நிலைமையை நான் நன்கு அறிந்தவன் என்பதெல்லாம் அவருக்குக் கொஞ்சமும் தெரியாது போயிற்று. இவ்விஷயத்தில் ஒரே ஒரு பொருத்தமான கேள்விதான் உண்டு. டிரான்ஸ்வாலைப்பற்றிய முழு விவரங்கள் யாருக்குத் தெரியும் என்பதுதான் அது. என்னை இந்தியாவிலிருந்து அவ்வளவு தூரம் வருமாறு கேட்டதன்மூலம், இக்கேள்விக்குத் தங்களை பொறுத்த மட்டில் இந்தியர்கள் முன்னமேயே விடைதந்துவிட்டனர். ஆனால், நியாயத்தை ஆதாரமாகக் கொண்ட வாதங்கள் அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு ஏறுவதில்லையென்பது ஒரு புதிய அனுபவமல்ல. சேம்பர்லேன் முற்றிலும் இம்மனிதர்களின் வசப்பட்டிருந்தார். தவிர, ஐரோப்பியர்களைச் சந்தோஷப்படுத்துவதில் அவர் அதிக ஆவல் கொண்டிருந்தார். எனவே, அவர் எங்களுக்கு நியாயம் வழங்குவாரென்பதில் எங்களுக்குக் கொஞ்சமும் நம்பிக்கையில்லை. எனினும், பராக்காகவோ அல்லது சுயமரியாதை பாதிக்கப்பட்டது என்ற உணர்ச்சியினாலோ, பரிகாரம் கிடைப்பதற்கான நியாயமான முறை எதையும் விட்டுவிடாமல் இருப்பதற்காகவே பிரதிநிதிக் கூட்டம் அவரைக் கண்டது.

1894-ஆம் வருடத்தில் ஏற்பட்டதைவிட மோசமான குழப்பம் இப்போது எனக்கு ஏற்பட்டது. ஒரு வகையில் பார்த்தால், சேம்பர்லேன் தென்னுப்பிரிக்காவை விட்டுச் சென்ற பிறகு நான் இந்தியாவுக்குத் திரும்பலாமெனத் தோன்றிற்று. இன்னும் ஒரு வகையில் கவனித்தால் நிலைமை வேறுவிதமாயிருந்தது. தென்னுப்பிரிக்க இந்தியர்களுக்கு நேரிடக்கூடிய ஆபத்துக்களை அறிந்திருந்தும், இந்தியாவில் இன்னும் அதிக அளவில் சேவை செய்யலாம் என்ற வீண் எண்ணத்தோடு நான் இந்தியாவுக்குத் திரும்பியிருந்தால், இதுவரை நான் பெற்றிருந்த சேவை செய்யும் உணர்ச்சி மழுங்கிவிடும் என்று எனக்குத் தெளிவாகப் புலப்பட்டது. இதனுல் என் வாழ்நாள் முழுதும் தென்னுப்பிரிக்காவில் இருக்க வேண்டி நேரிட்டாலும், எங்களைக் கவிந்து கொண்டிருக்கும் மேகங்கள் கலையும் வரையிலாவது, அல்லது அவை வெள்ளமாகப் பெய்து, அதை எதிர்க்க நாங்கள் முயற்சி செய்திருந்தும் பயன்படாமல் எங்களை அது அடித்துக்கொண்டு போகும் வரையிலாவது, அங்கிருக்கவேண்டுமென நான் நினைத்தேன். இவ்விதம் இந்தியத் தலைவர்களிடத்திலும் சொன்னேன். 1894-ஆம் வருடத்தைப் போலவே இப்பொழுதும் வக்கீல் தொழில் மூலம் என் செலவைச் சமாளிக்க நினைத்திருப்பதாகவும் தெரிவித்தேன். சமூகத்தைப் பொறுத்தவரை அது விரும்பியதும் இதுவேதான்.

டிரான்ஸ்வால் கோர்ட்டுகளில் வக்கீல் தொழிலை நடத்த எனக்கு அனுமதி அளிக்கும்படி உடனே விண்ணப்பம் செய்தேன். இங்கும் வக்கீல் சங்கத்தார் என் விண்ணப்பத்தை எதிர்ப்பார்கள் என்ற பயம் கொஞ்சம் இருந்தது. ஆனுல், அதற்குக் காரணம் இல்லாமல் போயிற்று. நான் சுப்ரீம் கோர்ட்டு வக்கீலாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டு, ஜொஹன்னஸ்பர்க்கில் அலுவலகத்தையும் திறந்தேன். டிரான்ஸ்வாலிலுள்ள எல்லாவிடங்களையும்விட ஜொஹன்னஸ்பர்க்கிலேயே அதிக இந்தியர் இருந்தனர். ஆதலால் பொதுத்தொண்டு, என் சம்பாதனை இவ்விரு நோக்கிலிருந்து ஜொஹன்னஸ்பர்க்கில் தங்குவது பொருத்தமாயிருந்தது. ஆசிய இலாகாவின் ஊழல்பற்றி கசப்புத் தரக்கூடிய அனுபவம் எனக்குத் தினந்தோறும் கிடைத்துக்கொண்டிருந்தது. டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்தியச் சங்கத்தார் இந்நோய்க்குப் பரிகாரம் கண்டுபிடிப்பதிலேயே முழு முயற்சியும் செய்ய நேர்ந்தது. 1885-ஆம் வருடத்திய 3-வது சட்டத்தை ரத்து செய்வதென்பது வெகுதூர லட்சியமாக

ஆகிவிட்டது. ஆசிய இலாகா என்ற உருவில் எங்களை அடித்துக்கொண்டு போய் விடுவதாயிருந்த இப்பெரு வெள்ளத்திலிருந்து காத்துக்கொள்ளுவதே உடனடியான வேலையாயிருந்தது. லார்டு மில்னர், அங்கே வந்திருந்த லார்டு செல்போர்ன், அப்போது டிரான்ஸ்வால் உதவி லெப்டினன்ட் கவர்னராயிருந்தவரும், பிறகு சென்னை கவர்னராக இருந்தவருமான ஸர் ஆர்தர் லாலி ஆகியோரையும், அவர்களுக்குக் கீழிருந்த உத்தியோகஸ்தர்களையும், இந்தியப் பிரதிநிதி கோஷ்டி கண்டது. நான் அரசாங்க உத்தியோகஸ்தர்களை அடிக்கடி பார்த்துக்கொண்டிருந்தேன். இங்குமங்கும் சில சிறிய பரிகாரங்கள் கிடைத்தன. ஆனால், இவையெல்லாம் வெறும் ஒட்டு வேலைகளாகவேயிருந்தன. தன்னுடைய பொருள் முழுதும் திருடர்களால் கொள்ளையடிக்கப்பட்ட ஒருவன், அத்திருடர்களிடத்தில் கெஞ்சிக் கேட்டு, மிகக் குறைந்த மதிப்புள்ள ஒரு பொருளைப் பெற்றால் அதனால் அவனுக்கு என்ன திருப்தி ஏற்படுமோ அதே திருப்தியையே நாங்கள் பெற்று வந்தோம். இக்கிளர்ச்சியின் பயனாகத்தான், நான் முன் குறிப்பிட்டிருந்தபடி, வேலையிலிருந்து நீக்கப்பட்ட உத்தியோகஸ்தர்கள்மீது கோர்ட்டுகளில் வழக்குத் தொடரப்பட்டது.

இந்தியர்களின் குடியேற்றத்திற்கு விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் சம்பந்தமாய் எங்களுக்கு இருந்த சந்தேகம் சரியாகிவிட்டது. ஐரோப்பியர்களுக்கு இப்போது அனுமதிச் சீட்டுகள் அவசியமில்லை. ஆனால், இந்தியர்களிடத்திலோ அவை இன்னும் கேட்கப்பட்டன. முன்னிருந்த போயர் அரசாங்கம், அவர்கள் ஆசியாவாசிகளுக்கு விரோதமாய் செய்திருந்த கொடிய சட்டத்தை, எப்பொழுதும் கண்டிப்பாய் அமல் நடத்தவில்லை. அவர்களுடைய தயாள மனப்பான்மை அன்று இதற்குக் காரணம். அவர்களுடைய நிர்வாகம் சரியானபடி இருக்கவில்லை. ஒரு நல்ல உத்தியோகஸ்தனுக்கு, தன்னுடைய நல்ல தன்மையைக் காட்டுவதற்குப் போதிய வசதி போயர் அரசாங்கத்தின் கீழ் இருந்தது போல் பிரிட்டிஷ் அரசாங்கத்தின்கீழ் இல்லை. பிரிட்டிஷ் அரசியல் அமைப்பு பழமையானது; வளைந்து கொடுக்காதது. அதன்கீழ் உத்தியோகஸ்தர்கள் யந்திரங்கள் போல் வேலை செய்யவேண்டியிருக்கிறது. அவர்கள் சுதந்திரமாகச் செயல் புரிவதை, படிப்படியாக வைக்கப்பட்டிருந்த கண்காணிப்பு தடுக்கிறது. ஆதலால், பிரிட்டிஷ் அரசியல் அமைப்பின்கீழ் அரசாங்க நோக்கம் தாராளமானதாக இருந்தால்,

மக்கள் இந்தத் தாராளத்தினுல் அதிக அனுகூலத்தை அடை கிருர்கள். அதற்கு மாருக அவர்கள் நோக்கம் அடக்கி வைப் பதாகவும் கண்டிப்பானதாகவும் இருந்தால், மக்கள் அவர்களின் கொடுமையின் காரணமாக அதிகக் கஷ்டத்தை அடைகின்ற னர். முன்னுல் இருந்த போயர் குடி ஆட்சிகள் போன்றவைகளில் அரசியல் அமைப்புக்களில் விஷயம் இதற்கு மாருக இருக்கும். ஒரு நல்ல சட்டத்தின் முழுப் பயனையும் குடிகள் அடைவதும், அடையாமல் இருப்பதும், அதைப் பரிபாலனம் செய்ய ஏற்படுத் தப்பட்ட உத்தியோகஸ்தர்களேப் பொறுத்தவை. இவ்விதம் டிரான்ஸ்வாலில் பிரிட்டிஷார்களின் அதிகாரம் ஸ்தாபிக்கப்பட்ட பிறகு, இந்தியர்களுக்கு விரோதமான சட்டங்களேயெல்லாம் நாளுக்கு நாள் அதிகக் கண்டிப்பாய் அமல் நடத்த ஆரம்பித்த னர். தப்பித்துக்கொள்ளக்கூடிய வழிகள் இராமல் செய்து விட்டனர். ஆசிய இலாகா அதன் வேலேயைக் கடுமையாகவே செய்து தீருமென முன்னமேயே கண்டோம். ஆதலால், பழைய சட்டங்கள் ரத்து செய்யப்படும் என்பதற்கே இடமில்லே. அனுபவத்தில் அவைகளுடைய கடுமையை எப்படிக் குறைப்ப தென்று ஆராய்ந்து, முயற்சி செய்வது ஒன்றே இந்தியர்கள் செய்யக்கூடியது.

இப்போது ஒரு விஷயம் முன்னுடியே அவசியம் ஆலோசனே செய்யப்பட வேண்டும். அதை இவ்விடத்தில் ஆலோசனே செய்தால் இந்தியர்களின் கட்சியையும், இதற்குப் பின் ஏற்பட்ட நிலேமையையும் எளிதாகத் தெரிந்துகொள்ள முடியும். டிரான்ஸ் வாலிலும், நேட்டாலிலும் பிரிட்டிஷ் ஆட்சி ஸ்தாபிக்கப்பட்ட வுடனே, பிரஜைகளின் உரிமைகளேக் கட்டுப்படுத்தும் பழைய சட்டங்களின் ஜாபிதாவையும், பிரிட்டிஷ் அரசியல் அமைப்பின் தன்மைக்கு விரோதமாயிருக்கும் சட்டங்களின் ஜாபிதாவையும் தயார் செய்வதற்கு ஒரு கமிட்டியை லார்டு மில்னர் நியமித் தார். இந்தியர்களுக்கு விரோதமான சட்டங்கள் இவ்வகையில் தெளிவாகச் சேர்க்கப்பட்டிருக்கலாம். ஆனுல், இக் கமிட்டியை நியமிப்பதில் லார்டு மில்னரின் நோக்கம், இந்தியர்களுடைய குறைகளே நிவர்த்திப்பது அல்ல; பிரிட்டிஷார்களுடைய குறையை மாத்திரமே நிவர்த்திப்பதாக இருந்தது. மறைமுக மாகப் பிரிட்டிஷாரை நெருக்கிக்கொண்டிருந்த சட்டங்களேக் கூடுமானவரை விரைவாக ரத்து செய்ய விரும்பினுர். கமிட்டி யார் வெகு சீக்கிரத்தில் தங்கள் அறிக்கையை வெளியிட்டனர். பிரிட்டிஷார்களேப் பிரதிகூலமாய்ப் பாதித்த சிறியவையும்

பெரியவையுமான பல சட்டங்கள் பேனுவின் ஒரு கீற்றலால் ரத்து செய்யப்பட்டுவிட்டன.

அதே கமிட்டி இந்தியர்களுக்கு விரோதமான சட்டங்களின் ஜாபிதா ஒன்றையும் தயார் செய்தது. அவை ஒரு புத்தக உருவில் பிரசுரம் செய்யப்பட்டன. ஆசிய இலாகாக்காரர்கள் சுலபமாக உபயோகிப்பதற்கு, அல்லது தங்கள் அபிப்பிராயப்படி துஷ்பிரயோகம் செய்வதற்கு இது ஒரு கையடக்கமான புத்தக மாயிற்று.

இந்தியர்களுக்கு விரோத்மான சட்டங்கள், இந்தியர்களுக் கென்று பெயர் குறிப்பிடப்படாமல், அவர்களுக்கு மாத்திரம் என்றில்லாமல், எல்லாப் பிரஜைகள் மீதும் பிரயோகம் செய்யக் கூடியனவாக இருந்தன. ஆனல், அவைகளை அமல் நடத்துவது அதிகாரிகளின் கையில் விடப்பட்டிருந்தாலும், அல்லது அச் சட்டங்கள் எல்லாப் பிரஜைகளுக்கும் பொதுவான கட்டுப் பாடுகள் செய்திருந்து, இந்தியர்கள்பால் மாத்திரம் குறிப்பாய்க் கடுமையாக நடத்தக் கூடுமானுலும், சட்டம் செய்வோரின் நோக்கம் இம்மாதிரிச் சட்டங்களின் மூலமும் கைகூடியிருக்கும். எனினும், அச்சட்டங்கள் பொதுச் சட்டங்களாகவே யிருக்கும். ஒருவரும் அச்சட்டங்களை நிறைவேற்றுவதால் அவமானத்துக்கு உள்ளாகமாட்டார்கள். அப்போதிருக்கும் வெறுப்புணர்வு நாளடைவில் குறைந்தால், அச்சட்டங்களை மாற்றவேண்டிய அவசியம் இராது. ஆனல், அச்சட்டங்கள் கொஞ்சம் தாராள மாகப் பரிபாலிக்கப்பட்டால், அதுவே கஷ்டப்படும் சமூகத்தின் குறைகளை நீக்கப் போதுமானதாயிருக்கும். இந்தியர்களின் பெயரைக் குறிப்பாய்ச் சொல்லாத சட்டங்களைப் பொதுச் சட்டங்களெனச் சொல்லலாம்; குறிப்பாய்ச் சொன்ன சட்டங் களைக் குறிப்பான அல்லது நிற (சாதி) வேற்றுமைச் சட்டங்க ளென்றும் சொல்லலாம். அவை நிற வித்தியாசத்தின் காரண மாகக் கறுப்பு அல்லது மாநிற சாதியர்பேரில், ஐரோப்பியரைவிட அதிகமான கட்டுப்பாடுகள் செய்வதால், 'நிறத் தடையை' ஸ்தாபிப்பவையாகும்.

அமலிலிருந்த சட்டங்களில் ஒன்றை உதாரணமாக எடுத்துக் கொள்ளுவோம். நேட்டாலில் நிறைவேற்றப்பட்டு, அதற்குப் பின் பிரிட்டிஷ் அரசாங்கத்தினரால் நிராகரிக்கப்பட்ட இந்தியர்கள் வோட்டு உரிமைகளை ரத்து செய்த முதல் சட்டம், ஆசியாவாசி களுடைய உரிமைகளை ஆசியாவாசிகளாக இருந்த காரணத் திற்காகவே ரத்து செய்தது. இம்மாதிரிச் சட்டம் மாற்றப்

பட வேண்டுமானுல், பெரும்பான்மையான மக்கள் மனத்தில் ஆசியாவாசிகள் பேரில் விரோதம் இல்லாமல் இருந்தால்மட்டும் போதாது; உண்மையில் சிநேகமாகவும் இருக்கத் தக்க மாதிரி, பொதுஜன அபிப்பிராயம் மாறும் அளவுக்குப் பிரசார மும் செய்யப்பட வேண்டும். சட்டம் உண்டாக்கிய நிறத் தடையை இவ்விதமான சிநேக பாவத்தை உண்டாக்குவதா லேயே ஒழிக்க முடியும். சாதி அல்லது வகுப்பு வேற்றுமைச் சட்டத்திற்கு இது ஒரு உதாரணம். மேற்குறிப்பிடப்பட்டிருக்கிற சட்டம் வாபீசும் வாங்கப்பட்டு, அதற்குப் பதிலாக இரண் டாவது சட்டம் ஒன்று நிறைவேற்றப்பட்டது. அது பொதுவான தாக இருந்தபோதிலும், அதே நோக்கத்தையே கொண்டிருந் தது. இன வித்தியாசம் மாத்திரமே எடுக்கப்பட்டது. அதன் ஷரத்துக்களில் ஒன்றின் சாராம்சம் பின் வருமாறு: "பார்லி மெண்டு வோட்டுரிமை முறையின் பேரில், ஜனங்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்குள்ள அரசியல் ஸ்தாபனங் களை இதுவரை பெருத தேசங்களைச் சேர்ந்தவர்கள் எவரும், நேட்டால் வோட்டர்கள் ஜாபிதாவில் சேர்த்துக்கொள்ளப்படலா காது." இந்தியர்கள் அல்லது ஆசியாவாசிகள் என்று இங்கே குறிப்பிடப்படவில்லை. இந்தியா, பார்லிமெண்டு வோட்டுரிமை முறையின்பேரில் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி களையுடைய அரசியல் அமைப்பைப் பெற்றிருக்கிறதா, இல்லையா என்பதுபற்றி வக்கீல்களுக்குள் அபிப்பிராய பேதம் இருக்கலாம். ஆனுல், வாதத்துக்காக, இந்தியா 1894-ஆம் வருடத்திலும். இப் பொழுதுங்கூட, பார்லிமெண்டு உரிமை பெறவில்லையென வைத் துக்கொள்ளுவோம். எனினும், நேட்டால் வோட்டர்கள் ஜாபிதா அதிகாரி, இந்தியர்கள் பெயரை அந்த ஜாபிதாவில் சேர்த்தால், அவர் செய்தது சட்டத்துக்கு விரோதமான காரியம் என எவரும் திடீரெனச் சொல்ல முடியாது. பிரஜைகளுக்கு உரிமைகள் உண் டெனச் சாதாரணமாக நம்பப்படுகிறது. ஆகையால், அப்பொழு துள்ள அரசாங்கத்திற்கு விரோத மனப்பான்மை 'இராதிருக்கும் வரை, மேற்கண்ட சட்டம் இருந்தாலும். இந்தியர்களின் பெயர் வோட்டர்கள் ஜாபிதாவில் சேர்க்கப்படலாம். அதாவது, இந்தியர்கள் பேரில் இருந்த துவேஷம் குறைந்து, அரசாங்கத் திற்கு இந்தியர்களுக்குத் தீங்கு செய்யும் விருப்பம் இராவிடில் சட்டத்தைக் கொஞ்சமும் மாற்ருமலேயே இந்தியர்களின் பெயர்களை வோட்டர்கள் ஜாபிதாவில் சேர்த்துக்கொள்ளமுடியும். இது ஒரு பொதுச் சட்டத்தினுல் உண்டாகும் அனுகூலமாகும். தென்னுப்பிரிக்காவில் அமலில் இருந்த, முன் அத்தியாயங்

களில் சொல்லப்பட்ட சட்டங்களிலிருந்து, இம்மாதிரி பல உதாரணங்களைக் கொடுக்க முடியும். ஆதலால், கூடியவரை வகுப்புச் சட்டங்களைக் குறைவாக உண்டாக்குவதே புத்திசாலித் தனமான கொள்கையாகும். அவைகளை முழுதும் தவிர்ப்பது அதனினும் மேன்மையாகும். ஒரு தடவை ஒரு சட்டம் நிறை வேற்றப்பட்டால் அது ரத்து செய்யப்படுவதற்கு முன் பல கஷ்டங்களை எதிர்க்க வேண்டியிருக்கும். பொதுஜன அபிப் பிராயம் அதிகமாக அறிவுறுத்தப்பட்டால்தான், ஒரு தேசத் தில் அமலில் இருக்கும் சட்டங்களை ரத்து செய்ய முடியும். எந்த அரசியல் அமைப்பின் கீழ்ச் சட்டங்கள் அடிக்கடி மாற்றப் படுகின்றனவோ அல்லது ரத்து செய்யப்படுகின்றனவோ அந்த அரசியல் அமைப்பை ஸ்திரமானதாகவோ அல்லது நன்ருக அமைக்கப்பட்டிருப்பதாகவோ சொல்ல முடியாது.

டிரான்ஸ்வாலில் ஆசியாவாசிகளுக்கு விரோதமாக இயற்றப் பட்ட சட்டங்களிலிருந்த விஷயத்தை இப்பொழுது நன்ருக அறிய முடியும். அவை எல்லாம் நிற வேற்றுமையையே முக்கியமாகக் கொண்ட சட்டங்கள். ஆசியாவாசிகள், ஆசியாவாசிகள் என்ற காரணத்தால் வோட்டு செய்ய முடியாது; தங்களுக்காக அரசாங் கத்தாரால் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த இடங்களுக்கு வெளியே அவர்கள் நிலம் வாங்க முடியாது. இச்சட்டங்கள் சட்டப் புத் தகங்களிலிருந்து எடுக்கப்படும்வரை, அதிகாரிகள் இந்தியர் களுக்காக ஒன்றும் செய்ய முடியாது. இம்மாதிரி பொதுவான தாக இல்லாத சட்டங்களுக்குத்தான் லார்டு மில்னரின் கமிட்டி ஒரு ஜாபிதா தயார் செய்ய முடியும். இவைகள் பொதுச் சட்டங்களாய் இருந்து, குறிப்பாய் ஆசியாவாசி களுக்கு விரோதமாயில்லாமல், ஆனல் அனுபவத்தில் அவர் களுக்கு விரோதமாக நடத்தப்பட்டிருந்தபோதிலும், அவை முன்னமேயே மற்றவைகளுடன் ரத்து செய்யப்பட்டிருக்கும். புதிய சட்டசபைகள் அவைகளை ரத்து செய்யும்வரை, அச்சட் டங்களை அமுல் நடத்துவதைத் தவிரத் தாங்கள் வேருென்றும் செய்ய முடியாதென்றும், இவ்விஷயத்தில் தங்களால் எதுவும் ஆகாது என்றும் அதிகாரிகள் வாதித்திருக்கவும் முடியாது.

இச்சட்டங்களின் நிர்வாகம் ஆசிய இலாகாவின் கைக்குப் போனபோது, அந்த இலாகாக்காரர்கள் அவைகளை மிகவும் கண்டிப்பாய் அமல் நடத்த ஆரம்பித்தார்கள். இச்சட்டங்கள் அமல் நடத்தத்தக்கவையாக இருக்கவேண்டுமானல், இச்சட்டங்

களிலிருந்து தப்பித்துக் கொள்ளக்கூடிய வழி ஆசியாவாசி களுக்கு அனுகூலமானதாக ஏதாவது, வேண்டுமென்றே அல்லது தெரியாமலோ விடப்பட்டிருந்தால், அதை மூடியாக வேண்டும். இதற்காக அரசாங்கத்தாருக்கு இன்னும் அதிக அதிகாரம் வேண்டும். இது மிகத் தெளிவாகவும் நேரியதாகவுமே தோன்று கிறது. இச்சட்டங்கள் கேடு செய்வனவாக இருந்தால் இவற்றை ரத்து செய்துவிடவேண்டும்; அல்லது சரியானவையாகவே இருந் தால், இவைகளிலுள்ள குறைகளை நீக்கியாக வேண்டும். இச் சட்டங்களை அமல் நடத்தும் கொள்கையை மாத்திரம் மந்திரிகள் மேற்கொண்டனர். சென்ற யுத்தத்தில் இந்தியர்கள் பிரிட்டி ஷார்களுடன் தோளோடு தோள் நின்று, தங்கள் உயிரையும் கொடுக்க முன்வந்திருந்தனர். ஆனால், அது மூன்று அல்லது நான்கு வருடங்களுக்கு முந்திய பழங் கதை ஆகிவிட்டது. பிரிட் டோரியாவிலிருந்த பிரிட்டிஷ் ஏஜெண்டு, இந்தியர்கள் சார்பாக இதற்காகப் போராடினர். ஆனால், அது பழைய ஆட்சிக் காலத்தில் நடந்தது. இந்தியர்களுக்கு இருந்த குறைகளும் யுத்தத்திற்கு ஒரு காரணமாக அப்பொழுது எடுத்துரைக்கப் பட்டிருந்தன; ஆனால், அது உள்நாட்டின் நிலைமையை அறியாத ராஜீயவாதிகளால் முன்யோசனை இராமல் செய்யப் பட்ட காரியம் எனச் சொல்லப்பட்டது.

ஆசியாவாசிகளுக்கு விரோதமாக முன்னிருந்த போயர் அரசாங்கத்தினரால் செய்யப்பட்டிருந்த சட்டங்கள், போது மான அளவு கண்டிப்பானவையாகவும் ஒழுங்காகவும் இல்லையென அந்நாட்டு உத்தியோகஸ்தர்கள் வெளிப்படையாகச் சொன்னர் கள். இந்தியர்கள் தங்கள் விருப்பம்போல் டிரான்ஸ்வாலுக்கு வந்து, தாங்கள் விரும்பிய இடங்களில் வியாபாரம் செய்வார் களானல், அதனல் பிரிட்டிஷ் வியாபாரிகளுக்கு மிகுந்த நஷ்டம் உண்டாகும். இவைகளும், இவை போன்ற மற்ற வாதங்களும், ஐரோப்பியர்களுக்கும், மந்திரி சபையில் அவர்கள் பிரதிநிதி களாயிருந்தவர்களுக்கும் மிக முக்கியமாகத் தென்பட்டன. எப்படியானுலும் சரி, அதிகச் செல்வத்தைக் குறைந்த காலத் திற்குள் சேர்த்துவிட வேண்டும் என்ற தீவிரத்தில் அவர்கள் எல்லோரும் இருந்தனர். அவ்விதம் இருக்க இந்தியர் தங்களுடன் பங்குக்கு வருவதை அவர்கள் எப்படி சகிப்பார்கள்? பார் வைக்கு நியாயமே போன்று தோன்றும்படி செய்வதற்காக ராஜீயக் கொள்கையின் உதவியை நயவஞ்சகம் நாடியது. வெளிப்படையான சுயநலமே கொண்ட ஒரு வியாபாரத்தை

யொட்டிய வாதம் அறிவுள்ள தென்னுப்பிரிக்க ஐரோப்பியர்களுக்குத் திருப்தி அளிக்காது. அசல் அநியாயத்திற்கு ஆதரவான பெரிய வாதங்களைக் கண்டுபிடிப்பதிலேயே மனித அறிவு சந்தோஷம் அடைகிறது. தென்னுப்பிரிக்க ஐரோப்பியர்களும் இந்த விதிக்கு விலக்கானவர்கள் அல்ல. ஜெனரல் ஸ்மட்ஸும் மற்றவர்களும் கீழ்க்கண்ட வாதங்களை எடுத்துரைத்தனர்:

"தென்னுப்பிரிக்கா, மேலைநாட்டு நாகரிகத்தின் பிரதிநிதியாக இருக்கிறது. இந்தியா, கீழ்நாட்டுக் கலாசாரத்திற்குக் கேந்திரமாக இருக்கின்றது. இவ்விரு நாகரிகங்களும் சேர்ந்திருக்க முடியாதென்று இக்காலத்திய அறிவாளிகள் அபிப்பிராயப்படுகின்றனர். ஒன்றுக்கொன்று போட்டியாக விளங்கும் இவ்விரு நாகரிகங்களைச் சேர்ந்த மக்கள், சிறிய தொகுதிகளாகச் சந்தித்த போதிலும் அதன் பயன் யுத்தமே. மேல் நாட்டு நாகரிகம், எளிய வாழ்வுக்கு விரோதமானது. கீழ் நாட்டு நாகரிகமோ, அதை ஒரு பிரதானமான நற்குணமெனக் கருதுகிறது. ஒன்றுக்கொன்று முரணுன இவ்விரு நோக்குகளைச் சமரசமாக இணைப்பது எப்படி? இவைகளின் தராதரங்களை மதிப்பிட்டுச் சமரசம் செய்துகொண்டு போவதென்பது, செயல்முறையில் நடத்தவல்ல ராஜீயவாதிகளின் வேலையல்ல. மேல்நாட்டு நாகரிகம் நல்லதாக இருக்கலாம், அல்லது நல்லதல்லாததாகவும் இருக்கலாம். எனினும், மேல்நாட்டார் அதையொட்டி இருக்க விரும்புகின்றனர். அந்நாகரிகத்தைக் காப்பாற்ற அவர்கள் என்றும் தளராத முயற்சி செய்து வந்திருக்கின்றனர். அதற்காக இரத்தத்தைச் சிந்தியிருக்கின்றனர். அந்நாகரிகத்திற்காக அவர்கள் பெரிய இன்னல்களையும் அனுபவித்திருக்கின்றனர். ஆதலால், அவர்கள் தங்களுக்காக ஒரு புதிய வழியைக் கண்டுபிடிக்க முயற்சி செய்வதற்கான காலம் கடந்துவிட்டது. இதைக் கொண்டு யோசித்துப் பார்த்தால், இந்தியப் பிரச்னை வியாபாரப் பொருமை அல்லது இன வெறுப்பைப் பற்றியது என்று நினைத்துவிட முடியாது. இப்பிரச்னை, தங்களுடைய சொந்த நாகரிகத்தைக் காத்துக் கொள்ள வேண்டுமென்பதுதான். அதாவது, தாங்கள் வாழ வேண்டும் என்ற உயர்ந்த உரிமையை அனுபவிப்பதும், அதற்கேற்ற கடமையைச் செய்வதுமேயாகும். சில பிரசங்கிகள் இந்தியர்களிடத்தில், குறைகள் கண்டுபிடித்து, ஐரோப்பியர்களுக்கு ஆத்திரமூட்ட முயற்சி செய்ய விரும்பலாம். ஆனல்,

ராஜீய அறிஞர்கள், இந்தியர்களிடமுள்ள குணங்களும், தென்னுப்பிரிக்காவிலே குறைகளாகக் கருதப்பட வேண்டு மெனச் சொல்லுகின்றனர். அவர்களுடைய எளிமை, பொறுமை, விடா முயற்சி, சிக்கனம், மறுமையில் நம்பிக்கை ஆகிய இக் குணங்களுக்காக இந்தியர்கள் தென்னுப்பிரிக்காவில் வெறுக் கப்படுகின்றனர். மேற்கு நாட்டினர் துணிவுள்ளவர்களாகவும், பொறுமை யற்றவர்களாகவும், பொருளைப் பற்றிய தம் தேவை களை அதிகப்படுத்துவதிலும் அவற்றைப் பெற்றுத் திருப்தி கொள்ளுவதிலுமே மனம் செலுத்துபவர்களாயும், இன்பமே நாடுபவர்களாயும், உடல் உழைப்பைக் குறைத்துக்கொள்ளுவ தில் விருப்பமுள்ளவர்களாயும், தாராளமாகச் செலவு செய்யும் பழக்கமுள்ளவர்களாயும் இருக்கின்றனர். ஆதலால், ஆயிரக் கணக்கான கீழ்நாட்டு மக்கள் தென்னுப்பிரிக்காவில் குடியேறி விட்டால், போட்டியில் மேல்நாட்டார் தோல்வியுறுவர் என்று அவர்கள் அஞ்சுகின்றனர். தென்னுப்பிரிக்காவிலிருக்கும் மேல் நாட்டு மக்கள் தற்கொலை செய்து கொள்ளுவதற்குத் தயாரா யிருக்கவில்லை. அவர்கள் தலைவர்களும் அவர்கள் அம்மாதிரி கஷ்ட நிலைமைக்கு வர விடமாட்டார்கள்.''

ஐரோப்பியர்களில் உயர்ந்த பண்புடையார் உரைத்த வாதங்களைப் பாரபட்சமின்றிச் சுருக்கமாகச் சொல்லியிருக் கிறேன் என்றே நம்புகிறேன். நான் இவ்வாதங்களைப் போலித் தத்துவங்கள் என்று வருணித்து இருக்கிறேன். அதன் மூலம் அவை காரணமற்றவை என்று நான் சொல்ல விரும்பவில்லை. உல கத்து நோக்கத்திலிருந்து, அதாவது சுயநல நோக்கத்திலிருந்து பார்த்தால், அவைகளுக்கு அதிக ஆதாரங்கள் இருக்கின்றன. ஆனல், தத்துவம் என்ற நோக்கத்தோடு பார்த்தால், அவை கலப்பற்ற பாசாங்குகளேயாகும். பட்சபாதமில்லாத எந்த மனிதனும் இம்முடிவுகளை ஒப்புக்கொள்ள முடியாது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். இவ்வாதங்களை எடுத்துரைத்தவர்கள் தங்களுடைய நாகரிகத்தைக் காட்டுவது போல், அவ்வளவு திக்கற்ற நிலைமையில் எந்தச் சீர்திருத்தக் காரனும் தன்னுடைய நாகரிகத்தைக் காட்டமாட்டான். மேல் நாட்டார் கீழ்நாட்டாருடன் தாராளமாகப் பழகினல், பாய்ந்து வரும் பிரவாகம் மணலை அடித்துக்கொண்டு போவதைப் போல், கீழ்நாட்டு நாகரிகம் அழிந்துவிடுமென்று, எனக்குத் தெரிந்தவரை, எந்தக் கீழ்நாட்டு அறிவாளியும் பயந்ததில்லை. கீழ்நாட்டு மனநிலையை நான் அறிந்தவரை, கீழ்நாட்டு நாகரிகம் பயப்படாமலிருப்பது மாத்திரமல்லாமல், மேல்நாட்டு நாகரி

கத்துடன் தாராளமாகப் பழகுவதைச் சந்தோஷத்துடன் வரவேற்குமென்றே எனக்குத் தோன்றுகிறது. இதற்கு மாறான சந்தர்ப்பங்கள் கீழ்நாடுகளில் காணப்படுமானால், அவை நான் மேலே சொல்லியிருக்கும் கருத்தைப் பாதிப்பதில்லை. ஏனெனில், பல உதாரணங்களை இதற்கு ஆதாரமாக எடுத்துச் சொல்ல முடியும். அது எப்படியிருப்பினும், வன்மையே நியாயத்திற்கு மேற்பட்டது என்பது மேல்நாட்டு நாகரிகத்தின் அடிப்படையென மேல்நாட்டு அறிவாளிகள் கூறுகின்றனர். அதனால்தான் அந்நாகரிகத்தின் பிரதான புருஷர்கள் மிருக பலத்தை அதிகப்படுத்துவதில் தம் காலத்தின் பெரும் பகுதியைச் செலவிடுகின்றனர். தங்கள் உலகரீதியான தேவைகளைப் பெருக்கிக்கொள்ளாத இனத்தினர் அழிந்தே போவார்களெனவும் மேல்நாட்டு அறிவாளிகள் உறுதியாக உரைக்கின்றனர். இத்தத்துவங்களைப் பின்பற்றியே மேல்நாட்டார் தென்னாப்பிரிக்காவில் குடியேறி, ஜனத்தொகையில் மிக அதிகமானவர்களான தென்னாப்பிரிக்க சுதேசிகளை அடக்கி ஒடுக்கியிருக்கின்றனர். யாதொரு தீங்குமே செய்யாத இந்திய மக்களைக் கண்டு அவர்கள் பயப்படுவார்கள் என்று நினைப்பது நகைப்புக்கிடமானதொன்றாகும். ஐரோப்பியர்கள் இந்தியர்களிடத்தில் பயப்படுவதில்லை. தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் வெறும் தொழிலாளர்களாக மாத்திரமே வேலை செய்துகொண்டிருந்தால் இந்தியாவிலிருந்து குடியேற வரும் மக்களுக்கு விரோதமாய் இக்கிளர்ச்சி ஆரம்பிக்கப்பட்டிராது என்ற உண்மை ஒன்றே இதை நிரூபிக்கப் போதுமான சிறந்த அத்தாட்சியாகும்.

இதிலுள்ள உண்மையான விஷயம் வியாபாரமும் நிறத் துவேஷமுந்தான். இந்தியர்களுடைய வியாபாரம், சிறு ஐரோப்பிய வியாபாரிகளைப் பாதித்துவிட்டது என்றும், மாநிறச் சாதியார்பேரில் வெறுப்பு ஐரோப்பிய மனோபாவத்தின் முக்கிய அம்சமாகிவிட்டதென்றும், ஆயிரக்கணக்கான ஐரோப்பியர்கள் தாங்கள் எழுதியிருப்பவை மூலமே ஒப்புக்கொண்டிருக்கின்றனர். எல்லோருக்கும் சமத்துவ உரிமை என்ற தத்துவம் சட்டப்படி ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் அமெரிக்காவிலுங்கூட, உயர்ந்த மேல் நாட்டுக் கல்வி பெற்றவரும், சிறந்த குணமுள்ள கிறிஸ்தவரும், மேல்நாட்டு நாகரிகத்தை முழுதும் உட்கொண்டவருமான புக்கர் டி. வாஷிங்டன்* போன்ற ஒருவர், ஜனாதிபதி

*புக்கர் டி. வாஷிங்டன் (1858—1915)—அமெரிக்க நீக்கிரோக்களின் கல்வி, சமூக அபிவிருத்திக்காக அரும்பாடுபட்டு வெற்றி கண்ட நீக்கிரோ தலைவர். இவர்

ரூஸ்வெல்டின்* கொலு முன்பு வருவதற்குத் தகுதியுடையவரல்ல ரெனக் கருதப்பட்டார். ஒருவேளை இன்றும் அங்கே அப்படியே கருதப்பட்டும் வரலாம். அமெரிக்க நீக்கிரோக்கள் மேல்நாட்டு நாகரிகத்தை ஏற்றுக்கொண்டு இருக்கின்றனர். அவர்கள் கிறிஸ்தவ மதத்தைத் தழுவியவர்கள். ஆனல், அவர்கள் தோலின் கறுப்பு நிறமே அவர்கள் குற்றமாயிருக்கின்றது. அமெரிக்க வடக்கு மாகாணங்களில் அவர்கள் மிகவும் இழிவாக நடத்தப் படுகின்றனர். தெற்கு மாகாணங்களிலோ, குற்றம் செய்ததாக வெறும் சந்தேகத்தின்பேரிலும், அவர்கள் சித்திரவதை செய்யப் பட்டு உயிருடன் கொளுத்தப்படுகின்றனர்.

ஆதலால் மேற்கண்ட 'தத்துவபூர்வமான' வாதத்தில் அதிக உண்மை எதுவுமில்லை என்பதை வாசகர்கள் காண

---

வெள்ளைக்காரத் தந்தைக்கும் நீக்கிரோ தாய்க்கும் பிறந்தவர்; பரம ஏழை இவர் பிறக்கும்போது அமெரிக்காவில் நீக்கிரோக்கள் அடிமையாகவே இருந்தனர். இவர் சிறு பிள்ளையாக இருக்கும்போதுதான் நீக்கிரோக்களுக்கு விடுதலை கிடைத்தது. இளம் வயதில் படிக்க வசதியில்லாது உப்புச் சுரங்கங்களிலும் நிலக்கரிச் சுரங்கங் களிலும் வயிற்றுப் பிழைப்புக்காகக் கூலி வேலை செய்துவந்தார். பிறகு கல்வி ஆர்வத்தில் அதிகச் சிரமப்பட்டு 500 மைலுக்கு அப்பால் இருந்த ஹாம்டனை அடைந் தார். நீக்கிரோவானதால் வழியில் தங்கவும் யாரும் இடம் தரவில்லை. பின்னுல் தமது வாழ்க்கை வரலாற்றைப் பற்றி இவர் எழுதிய ''அடிமைத்தனத்திலிருந்து மேலே'' என்ற நூலில், ''என் தோலின் நிறத்தின் பலன் என்ன என்பதைப்பற்றி எனது முதல் அனுபவம் இதுவே'' என்று கூறியிருக்கிருர். இவ்வளவு துன்பப்பட்டு ஹாம்டன் கல்வி ஸ்தாபனத்தை அடைந்தும், இவருக்கு அங்கே படிக்கப் புத்தகத் திற்குப் பதில் வேலை செய்யத் துடைப்பமே கிடைத்தது. எனினும் விடாமுயற்சியால் பள்ளியில் மாணவராகிப் படித்து பிறகு பட்டதாரியானுர். பின்னர் பல பட்டங் களையும் பெற்று, நீக்கிரோக்களின் கல்விக்காக அலபாமாவில் டஸ்ககி என்ற இடத்தில் ஒரு கல்வி ஸ்தாபனத்தை அமைத்தார். பிறகு அந்த ஸ்தாபனம் பிரபலமாயிற்று; இவரும் புகழ் பெற்ருர். அமெரிக்காவில் பல இனத்தினரிடை யேயும் ஒற்றுமையை உண்டாக்கப் பாடுபட்டார். ''பேனுவால் எழுதுவதைப் போலவே நிலத்தில் உழுவதிலும் அதிக கௌரவம் இருக்கிறது என்பதை அறியாத வரையில் எந்த இனமும் சுபிட்சமடைய முடியாது'' என்பதை வற்புறுத்தி வந்தார். இன ஒற்றுமையிலும் இதில் சமரசத்திலுமே இவர் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்த தால் நீக்கிரோக்களின் கட்சியைப் பலமாக வற்புறுத்த இவர் தவறிவிட்டார் என்ற புகாரும் பிற்காலத்தில் இவர் மீது இருந்தது. இவர் எழுதிய ''அடிமைத்தனத்தி லிருந்து மேலே" என்ற நூல் உலகின் பல மொழிகளிலும் வெளியாகி யிருக்கிறது.

* ஜனுதிபதி தியோடர் ரூஸ்வெல்ட் (1858—1919)—இரண்டாவது உலக யுத்தத்தின்போது அமெரிக்க ஜனுதிபதியாக இருந்த பிராங்க்ளின் டெலானே ரூஸ்வெல்டின் தந்தையே தியோடர் ரூஸ்வெல்ட். 1901 முதல் 1909-வரை ஜனுதி பதியாக இருந்தார். ஸ்பெயின் – அமெரிக்க யுத்தத்தில் இவர் செய்த தீரச் செயல்கள் இவருக்குப் பெரும் புகழை உண்டாக்கின. 1900–இல் அமெரிக்க உதவி ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர். ஆனல், ஜனுதிபதி மாக்கின்லி அடுத்த ஆண்டு கொலையுண்டதால் இவர் ஜனுதிபதியானுர். சமாதானத்தை உண்டாக்கு வதில், முக்கியமாக, ரஷ்யாவுக்கும் ஜப்பானுக்கும் சமாதானம் செய்துவைத்ததில் இவர் எடுத்துக்கொண்ட முயற்சிக்காக இவருக்கு 1906–இல் நோபல் பரிசு வழங்கினுர்கள்.

லாம். ஆனல், விவாதங்களை எடுத்துரைப்போர் யாவரும் கபட உணர்ச்சியுடனேயே சொல்லுகிறார்களென முடிவு செய்ய லாகாது. அவர்களில் பலர் அவை சரியானவையென உண்மை யாகவே நினைக்கின்றனர். அவர்கள் நிலைமையில் நாம் இருந்தால், நாமும் இம்மாதிரி வாதங்களையே கூறியிருக்கக்கூடும். அவரவர் அறிவு அவரவர் ஒழுக்கத்திற்கு ஏற்ப அமையும் என்ற இந்தியப் பழமொழி ஒன்றுண்டு. நம்முடைய வாதங்கள் நம்முடைய மனோ பாவத்தின் பிரதிபிம்பம் என்று அறியாதவர்கள் யார்? நம் முடைய வாதங்கள் மற்றவர்களுக்கு ஏற்காவிடில், நாம் அதிருப்தி அடைந்து பொருமையுற்று, கோபமும் அடைகிறோம் என்பதைக் கவனியாதவர்கள் யார்?

நான் தீர யோசித்து இவ்விஷயத்தை மிக நுண்ணிதாக விவரித்திருக்கிறேன். ஏனெனில், வாசகர்கள் எல்லாவிதமான நோக்குகளையும் அறிய வேண்டுமென்றும், இதுவரை இவ்வாறு அறிந்திராத வாசகர்கள் பல்வேறு நோக்குகளை அறிந்து பாராட்டும் பழக்கத்தைப் பெற வேண்டுமென்றும் நான் விரும்புகிறேன். இம்மாதிரியான பரந்த மனமும் பொறுமை யும் சத்தியாக்கிரகத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளுவதற்கும், அதைச் செயலில் கொண்டு வருவதற்கும் இன்றியமையாதன. இக்குணங்கள் இராவிடில் சத்தியாக்கிரகத்தை அனுசரிப்பது அசாத்தியம். ஒரு புத்தகம் எழுத வேண்டும் என்பதற்காக நான் இப்புத்தகத்தை எழுதவில்லை; தென்னாப்பிரிக்க சரித் திரத்தின் ஒரு பகுதியை எழுதுவதும் எனது நோக்க மன்று. இப்புத்தகம் எழுதுவதில் என் நோக்கம் என்ன வெனில், எந்தச் சத்தியாக்கிரகத்திற்காக நான் உயிர் வாழ்கின் றேனோ, எதற்காக நான் உயிர் வாழ விரும்புகிறேனோ, எதற்காக நான் இறக்கவும் தயாராயிருக்கிறேன் என்று நினைக் கின்றேனோ அந்தச் சத்தியாக்கிரகம் எப்படி ஆரம்பமாயிற்று, எப்படிப் பெரிய அளவில் அது அனுசரிக்கப்பட்டது என்பதை நம் தேசமக்கள் அறியுமாறு செய்வதேயாகும். இதை அறிந்து சத்தியாக்கிரகத்தைத் தெரிந்து தங்களால் இயன்ற அல்லது விருப்பமுள்ள அளவுக்கு அனுபவத்தில் இந்திய மக்கள் நிறை வேற்றலாம்.

இனி நம் கதையைத் தொடருவோம். இந்தியர் புதிதாக டிரான்ஸ்வாலுக்குள் வராமல் தடுக்கவும், முன்பே வந்திருக்கும் இந்தியர்கள் வெறுப்படைந்து நாட்டைவிட்டுத் தாமே வெளியே போய்விடுவதற்குக் கொடுமைகளை அவர்களுக்குச் செய்யவும்

நாட்டைவிட்டு வெளியே போகாவிட்டாலும் அவர்களை அடிமைகள் போன்ற நிலைமைக்குத் தாழ்த்திவிடவும் பிரிட்டிஷ் அதிகாரிகள் தீர்மானித்தார்களெனக் கண்டோம். தென்னுப் பிரிக்காவின் பெரும் ராஜதந்திரிகளாகக் கருதப் பட்ட சிலர், இந்தியர்களை விறகு பிளப்பவர்களாயும், தண்ணீர் தூக்குகிறவர்களாயுந்தான், அதாவது தாழ்ந்த வேலை செய்யும் வேலைக்காரர்களாயுந்தான் தங்கள் நாட்டில் வைத்திருக்க முடியுமெனப் பல தடவைகளில் சொல்லியிருக்கின்றனர். ஆசியா இலாகா உத்தியோகஸ்தர்களில் லயனல் கர்டிஸ் என்று ஒருவர் இருந்தார். இவர் இப்போது இந்தியாவில் இரட்டை ஆட்சியின் பிரசாரகரெனப் பெயர் பெற்றவர். அப்பொழுது இளைஞராக இருந்த இவர், லார்டு மில்னரின் நம்பகமான ஆள். எல்லா விஷயங்களையும் சாஸ்திரீய முறைப்படிச் செய்வதாகவே அவர் உரிமை கொண்டாடினர். ஆனல், பெருந் தவறுகளைச் செய்யும் தன்மையர். அவர் செய்த அத்தகைய ஒரு தவற்ருல் ஜொஹன்னஸ்பர்க் முனிஸிபாலிடிக்கு 1,400 பவுன் நஷ்டம் உண்டாயிற்று. இந்தியர்கள் புதி தாக வருவது நிறுத்தப்பட வேண்டுமானல், அதற்காகச் செய்ய வேண்டிய முதல் காரியம், தென்னுப்பிரிக்காவில் முன்னல் இருந்த இந்தியர்கள் எல்லோரையும் பதிவு செய்யும் படி செய்ய வேண்டும் என்று அவர் யோசனை கூறினர். அப் படிச் செய்தால், எவரும் ஆள் மாருட்டம் செய்து நாட்டிற்குள் ரகசியமாய் நுழைய முடியாது. யாராவது திருட்டுத்தனமாக நுழைந்தாலும், அவர்களை எளிதில் கண்டுபிடித்து விடலாம். டிரான்ஸ்வாலில் பிரிட்டிஷ் ஆட்சி ஸ்தாபிக்கப்பட்ட பிறகு கொடுக்கப்பட்ட அனுமதிச் சீட்டுகளில், அச்சீட்டு வாங்குவோரின் கையெழுத்து, அல்லது படிக்காதவரா யிருந்தால், அவர் கைப் பெருவிரல் முத்திரை இருந்தது. அனுமதிச் சீட்டில், அதை வைத்திருப்போருடைய படமும் சேர்க்கப்பட வேண்டுமென அதற்குப் பின் யாரோ ஒருவர் யோசனை கூறினர். இதற்காகச் சட்டம் செய்ய வேண்டியது அவசியமில்லாததால், அதிகாரிகளது உத்தரவின் மூலம் இது நிறைவேற்றப்பட்டது. ஆதலால், இந்தியத் தலைவர்களுக்கு இப்புது மாறுதல் உடனே தெரியவில்லை. இப்புதிய ஏற்பாடு கள் அவர்கள் கவனத்துக்கு வந்தபோது, அவர்கள் அதிகாரி களுக்கு விண்ணப்பங்கள் அனுப்பினர்கள். தம் சமூகத்தின் சார்பாகப் பிரதிநிதிகளை அனுப்பி அதிகாரிகளையும் கண்டனர். கீழ்க்கண்டவாறு அரசாங்கத்தின் வாதம் இருந்தது : ஒருவித

மான கட்டுப்பாடுமின்றி இந்தியர்களை அந்நாட்டிற்குள் வர அரசாங்கம் அனுமதிக்க முடியாது. ஆதலால் எல்லா இந்தியர்களும் ஒரேவிதமான அனுமதிச் சீட்டுகளைப் பெற்றிருக்க வேண்டும். அனுமதிச் சீட்டுகளுடைய உண்மையான ஆட்களைத் தவிர வேறு எவரும் நாட்டிற்குள் அதன் மூலம் வருவது முடியாதபடி செய்யக்கூடிய விவரங்கள் அனுமதிச் சீட்டுகளில் காணப்பட வேண்டும் என்றார்கள். நாங்கள் இவ்வனுமதிச் சீட்டுகளை வாங்கச் சட்டப்படி கட்டுப்பட்டவர்களல்ல. எனினும், சமாதானக் காப்பு அவசரச் சட்டம் அமலில் இருக்கும்வரை, அவைகளை வாங்கும்படி அரசாங்கம் எங்களைக் கட்டாயப்படுத்தலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம். தென்னுப்பிரிக்காவிலிருந்த சமாதானக் காப்பு அவசரச் சட்டம், இந்தியாவிலிருந்த இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தைப் போன்றது. இந்தியாவில் இந்தியப் பாதுகாப்புச் சட்டம், அவசியத்திற்கு அதிகமான காலம், மக்களைத் துன்புறுத்துவதற்காக வைக்கப்பட்டிருந்தது போலவே தென்னுப்பிரிக்காவிலும் இச்சட்டத்தின் தேவை தீர்ந்துபோன பிறகும் இந்தியர்களை இம்சிப்பதற்காக அமலில் வைக்கப்பட்டிருந்தது. ஐரோப்பியர்களைப் பொறுத்தமட்டில், அச்சட்டம் அமலில் இல்லையென்றே சொல்லலாம். இப்போது அனுமதிச்சீட்டுகள் வாங்க வேண்டுமானல், அவைகளில் சில அங்க அடையாளங்களும் இருக்க வேண்டும். ஆதலால், கல்வி இராதவர் தங்கள் பெருவிரல் குறியை வைக்க விடுவதில் தவறில்லை. அனுமதிச் சீட்டுகளில் புகைப்படங்கள் சேர்க்கப்பட வேண்டும் என்பது எனக்குப் பிடிக்கவேயில்லை. முஸல்மான்களுக்கு அப்படிச் செய்வதற்கு மத சம்பந்தமான ஆட்சேபணைகள் இருந்தன.

இந்திய சமூகத்திற்கும் அதிகாரிகளுக்கும் நடந்த பேச்சுவார்த்தையின் பலனாக, இந்தியர்கள் தங்கள் பழைய அனுமதிச் சீட்டுகளுக்குப் பதிலாகப் புதிய அனுமதிச் சீட்டுகளை வாங்கவும், புதிதாக வரும் இந்தியர்கள் இப்புது மாதிரி அனுமதிச்சீட்டுகள் வாங்க வேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இவ்வாறு செய்ய இந்தியர்கள் சட்டப்படி கட்டுப்பட்டிராவிட்டாலும், அவர்கள் தாங்களாகவே மறுபடியும் பதிவு செய்துகொள்ள ஒப்புக்கொண்டனர். இதனால், புதிய கட்டுப்பாடுகள் விதிக்கப்படாமல் இருக்குமென இந்தியர்கள் எதிர்பார்த்தனர். நியாயமில்லா முறைகளில் புதிய இந்தியர்களை நாட்டிற்குள் கொண்டுவர இந்தியர்கள் விரும்பவில்லை என எல்

லோருக்கும் தெளிவாக இதன் மூலம் காட்டவும் நினைத்தனர். புதிதாக வருபவர்களையும் துன்பப்படுத்துவதற்காகச் சமாதானப் பாதுகாப்பு அவசரச் சட்டம் இனிமேல் உபயோகப் படுத்தப் படாதென்றும் நம்பினுர்கள். அநேகமாய் எல்லா இந்தியர்களும் இவ்விதம் தங்கள் பழைய அனுமதிச்சீட்டுகளைப் புதிதாக மாற்றிக்கொண்டனர். இது ஒரு சிறிய காரியமல்ல. சமூகத்தினர் அனைவரும் ஒருமுகமாக, தாங்கள் சட்டப்படி செய்யக் கட்டுப்பட்டிராத இம்மறு பதிவை, வெகு துரிதமாகச் செய்து முடித்தனர். அவர்களுடைய உண்மை, சாமர்த்தியம், பெருந்தன்மை, விவேகம், அடக்கம் முதலியவைகளை இது நிரூபித்தது. தவிர, டிரான்ஸ்வாலில் அமலிலிருந்த எந்தச் சட்டத்தையும் எவ்வகையிலும் மீறி நடக்க இந்திய சமூகம் விரும்பவில்லை என்பதையும் இது காண்பித்தது. இவ்விதம் அரசாங்கத்திடம் மரியாதையுடன் நடந்தால், அரசாங்கமும் தங்களுக்கு மரியாதை காண்பித்து தங்களை நன்ருக நடத்துமெனவும், புதிய உரிமைகளையும் தங்களுக்குக் கொடுக்குமெனவும் எதிர்பார்த்தனர். ஆனுல், டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் அரசாங்கம், இம்மரியாதை மிகுந்த செய்கைக்கு எப்படிப் பரிசளித்தார்கள் என்பதை அடுத்த அத்தியாயத்தில் கவனிப்போம்.

## பதினொன்றாவது அத்தியாயம்

# பெருந்தன்மைக்குப் பரிசு–கறுப்புச்சட்டம்

மறு பதிவு முடிந்தபோது 1906-ஆம் வருடம் முடிந்து கொண்டிருந்தது. 1903-ஆம் வருடத்தில் மறுபடியும் டிரான்ஸ் வாலுக்கு வந்து, அந்த வருடத்து மத்தியில் ஜொஹன்னஸ் பர்க்கில் என்னுடைய காரியாலயத்தைத் திறந்தேன். ஆசியாக்காரர் இலாகாவின் தொந்தரவுகளைத் தடுப்பதிலேயே இரண்டு ஆண்டுகள் கழிந்தன. மறுபதிவைச் செய்து கொண்டது அரசாங்கத்திற்குத் திருப்தி யளிக்குமென நாங்கள் எல்லோரும் எதிர்பார்த்தோம்; பிறகு சமூகம் சமாதானமாக வாழ விடப்படுமென்றும் நம்பினோம். ஆனால், அதுதான் இல்லை. வாசகர்களுக்கு லயனல் கர்டிஸைப்பற்றி முன்பே சொல்லி இருக்கிறேன். இந்தியர்கள் தங்கள் பழைய அனுமதிச் சீட்டுகளுக்குப் பதிலாகப் புதிய பதிவுச் சர்டிபிகேட்டுகளை வாங்கியதனாலேயே ஐரோப்பியர்களின் நோக்கம் கைகூடிவிடவில்லை என்று இந்தக் கனவான் நினைத்தார். பரஸ்பர சம்மதத்தின் பேரில் பெரிய காரியங்கள் சாதிக்கப் பட்டன என்பது அவருக்குப் போதுமானதாயில்லை. இவைகளுக்குச் சட்டத்தின் மூலம் வலிவு வேண்டுமென்றும், இப்படி இருந்தால்தான் இவைகளுக்கு உள்ள அடிப்படையான கொள்கையை என்றென்றும் காக்கமுடியுமென்றும் இவர் அபிப் பிராயப்பட்டார். தென்னாப்பிரிக்கா முழுதும் ஒரு பலமான உணர்ச்சியை உண்டாக்கி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் மற்றப் பகுதிகளும் பின்பற்ற ஒரு நல்ல உதாரணமாக இருக்க வேண்டுமென்று இந்தியர்கள்மீது சில கட்டுத்திட்டங்களை விதிக்க வேண்டுமென்றும் இவர் விரும்பினார். இந்தியர்களுக்குத் தென்னாப்பிரிக்காவில் எந்தப் பகுதியிலும் இடம் இருக்கும்வரை டிரான்ஸ்வால் பத்திரமாக இருக்கும் என்று இவர் கருதவில்லை. தவிர, பரஸ்பர சம்மதத்தின்மேல் ஏற்பட்ட மறு பதிவு இந்திய சமூகத்தின் மதிப்பை அதிகப்படுத்திற்று. ஆனால், ஸ்ரீ கர்டிஸ் அந்த மதிப்பைத் தாழ்த்துவதிலேயே எண்ணம் கொண்டிருந்தார். இந்தியர்களுடைய அபிப்பிராயமும் இருக்கவேண்டும் என்பதை இவர் பொருட்படுத்தவில்லை. எங்களைப் பயமுறுத்தி, கடுமையான சட்டங்களின் ஆதரவுடன் கூடிய வெளிக்கட்டுப்பாடுகளுக்குப் பணியும்படி செய்ய

அவர் விரும்பினர். ஆதலால் 'ஆசியாவாசிகள் மசோதா' ஒன்றைத் தயார் செய்தார். அது சட்டமாகச் செய்யப்பட்டாலொழிய, முன்னமேயே இருக்கும் சட்டங்களைக் கொண்டு இந்தியர்கள் டிரான்ஸ்வாலுக்குள் திருட்டுத்தனமாய் வருவதையோ, அனுமதி வாங்காதிருப்போரை நாட்டைவிட்டு வெளியேற்றிவிடவோ முடியாதென்றும் அரசாங்கத்திற்குச் சொன்னர். ஸ்ரீ கர்டிஸின் வாதங்களை அரசாங்கம் உடனே ஏற்றுக்கொண்டது. சட்டசபையில் கொண்டுவர ஆசியாக்காரர் சட்டத் திருத்த அவசரச் சட்ட நகல் ஒன்று டிரான்ஸ்வால் அரசாங்க கெஜட்டிலும் பிரசுரிக்கப்பட்டது.

இந்த அவசரச் சட்டத்தைப்பற்றி விவரமாகக் கவனிப்பதற்குமுன், ஒரு முக்கியமான சம்பவத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லுவது நலம். சத்தியாக்கிரக இயக்கத்துக்கு நானே கர்த்தாவாயிருந்தபடியால், வாசகர்கள் என் வாழ்க்கையில் சில சம்பவங்களை நன்ருகத் தெரிந்து கொள்ளுவது அவசியம். இம்மாதிரி இந்தியர்கள் பேரில் டிரான்ஸ்வாலில் புதிய இடையூறுகளையும் சுமத்த முயற்சி செய்யப்பட்ட சமயம், நேட்டாலில் ஜூலுக் 'கலகம்' கிளம்பிற்று. இக்கிளர்ச்சியைக் 'கலகம்' என்று சொல்லுவது சரியா என்று சந்தேகித்தேன்; இப்போதும் சந்தேகிக்கிறேன். ஆனல் நேட்டாலில் அது எப்போதும் இப்படியே சொல்லப்பட்டு வருகிறது. போயர் யுத்தத்தைப் போலவே இப்பொழுதும், பல நேட்டால் ஐரோப்பியர்கள் சேனையில் தொண்டர்களாய்ச் சேர்ந்தனர். நானும் ஒரு நேட்டால் வாசியே என்று கருதப்பட்டதால், என்னல் இயன்ற சிறிய சேவையை நான் செய்ய வேண்டுமென நினைத்தேன். ஆதலால் சமூகத்தின் அனுமதி பெற்று, சேனைகளுடன் சேவை செய்வதற்காகக் காயம்பட்டவர்களை டோலியில் தூக்கும் படைக்குழு ஒன்றைச் சேர்த்து அரசாங்கத்திற்குச் சேவை செய்ய முன்வந்தேன். என் சேவை ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆதலால், என் குடும்பத்தை நேட்டாலில் இருக்கும் போனிக்ஸுக்கு அனுப்பினேன். என்னுடைய சகாக்களான ஊழியர்கள் அங்கே குடியேறியிருந்தனர். 'இந்தியன் ஒப்பினியன்' என்னும் பத்திரிகையும் அங்கிருந்தே பிரசுரம் செய்யப்பட்டு வந்தது.

இருபது அல்லது இருபத்தைந்து பேர்களைக் கொண்ட ஒரு சிறிய குழுவினருடன் நான் சேனையில் சேர்ந்தேன்.



1906இல் போனிக்ஸ் குடியிருப்பிலுள்ளவருடன் காந்திஜியும் ஸ்ரீமதி கஸ்தூரிபாயும்



1909-ல் காந்திஜி லண்டன் சென்றிருந்தபோது எடுத்த படம்.

இச்சிறு குழுவிலும் இந்தியாவின் பல மாகாணத்தவர்களும் இருந்தனர். இக்குழுவுக்கு ஒரு மாதம் தீவிரமாக வேலை இருந்தது. எங்களுக்கு அப்பொழுது கிடைத்த வேலைக்காக, நான் எப்பொழுதும் கடவுளுக்கு நன்றியுள்ளவனாவேன். நாங்கள் கவனிக்காது போயிருந்தால், காயம்பட்ட ஜுலுக்கள் கவனிப்பார் அற்றுக் கிடந்திருப்பார்களென்பதைக் கண்டோம். அவர்கள் காயங்களுக்குச் சிகிச்சை செய்ய எந்த ஐரோப்பியனும் உதவி செய்யமாட்டான். மருத்துவப்படையின் பொறுப்பை வகித்திருந்த டாக்டர் சாவேஜ் மிகவும் இரக்கமுள்ளவர். காயம் பட்டவர்களை ஆஸ்பத்திரிகளுக்கு எடுத்துக்கொண்டு போன பிறகு, அவர்களுக்குச் சிகிச்சை செய்வது எங்கள் வேலையன்று. ஆனால், அது எங்களுக்குக் கொடுத்திருந்த வேலைகளில் சேர்ந்திருந்தாலும் அல்லது சேராமலிருந்தாலும், எங்களாலியன்ற அனைத்தும் செய்யும் விருப்பம் கொண்டே நாங்கள் யுத்தத்தில் சேர்ந்திருந்தோம். ஜுலுக்களுக்குச் சிகிச்சை செய்யுமாறு ஐரோப்பியர்களைத் தாம் தூண்ட முடியவில்லை. என்றும், அவர்களை அங்ஙனம் செய்யக் கட்டாயப்படுத்துவது தமது சக்திக்கு மீறியது என்றும், நாங்கள் இவ்வருள் பணியை ஏற்றுக்கொண்டால், அதற்கு அவர் மிகவும் நன்றியுடையவராய் இருப்பாரென்றும், அந்த நல்ல டாக்டர் எங்களிடத்தில் சொன்னார். இச்சேவை செய்ய நாங்கள் மிகவும் மகிழ்வுடன் இணங்கினோம். ஐந்து, ஆறு நாட்கள் வரையில் கவனிக்கப்படாததால் தாங்க முடியாத நாற்றம் எடுத்துப்போன பல ஜுலுக்களின் காயங்களை நாங்கள் சுத்தம் செய்ய வேண்டியிருந்தது. இவ்வேலையை நாங்கள் விரும்பினோம். அந்த ஜுலுக்களுக்கு எங்களுடன் பேசத் தெரியவில்லை. ஆனால், அவர்கள் செய்கைகளிலிருந்தும் கண் பார்வையிலிருந்தும், தங்களைக் காப்பாற்றுவதற்காகக் கடவுள் எங்களை அனுப்பியிருக்கிறார் என அவர்கள் நினைப்பதாக எங்களுக்குத் தோன்றியது.

நாங்கள் ஒப்புக்கொண்டு சேர்ந்த வேலை மிகவும் கடினமாயும் இருந்தது. அம்மாதத்தில் சில சமயங்களில் தினத்திற்குச் சுமார் நாற்பது மைல்கள் வரை நடக்க வேண்டியிருந்தது.

ஒரு மாதத்திற்குப்பின் இப்படைக் குழு கலைக்கப்பட்டது. இதன் வேலையைப்பற்றி ராணுவ அறிக்கையில் பாராட்டுக்கள் இருந்தன. அவர்களுக்குக் கொடுப்பதற்கெனவே குறிப்பாகச் செய்யப்பட்ட பதக்கங்கள் குழுவின் அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் பரிசளிக்கப்பட்டன. கவர்னர் வந்தனம் தெரிவித்து

ஒரு கடிதம் எழுதியிருந்தார். அக்குழுவின் மூன்று சார்ஜெண்டு களும் குஜராத்திகளாயிருந்தனர். அவர்கள், உமயா சங்கர் மன்சாராம் ஷேலத், சுரேந்திர பாபுபாய் மேத், ஹரிசங்கர் ஈசுவர் ஜோஷி ஆவர். இம்மூவரும் மிகவும் அழகான உடல் அமைப்பு உள்ளவர்கள். மூவரும் மிகவும் கஷ்டப்பட்டு வேலே செய்தனர். மற்ற இந்தியர்களின் பெயர்களை இப்போது ஞாபகத்திற்குக் கொண்டுவர முடியவில்லை. ஆனால், அவர்களில் ஒருவர் பட்டாணி யர் என்று நன்ருக ஞாபகம் இருக்கிறது. நாங்கள் பெரிய பளு வைத் தூக்கிக் கொண்டு அவருடன் சேர்ந்து நடப்பதைக் கண்டு அவர் மிகுந்த ஆச்சரியப்பட்டார்.

நீண்ட காலமாக என் மனத்தில் லேசாக இருந்துகொண் டிருந்த இரண்டு எண்ணங்கள், நான் இக்குழுவினருடன் சேர்ந்து வேலே செய்துகொண்டிருந்தபோது ஊன்றிப் பதிந்தன. முதலாவது, தன்னுடைய வாழ்நாள் முழுவதும் பொது வேலே யில் கழிக்க விரும்பும் ஒருவன், பிரம்மச்சரிய வாழ்வை மேற் கொள்ள வேண்டும். இரண்டாவதாக, ஏழ்மையைத் தன் வாழ் நாள் முழுவதும் தன் மாருத நண்பனுக ஏற்றுக்கொள்ள வேண்டும். மிகத் தாழ்ந்த கடமைகளையும் ஏற்கவேண்டும். பெரிய ஆபத்துக்களுக்கும் துணிய முடியாதபடி தடை செய்யும் யாதொரு தொழிலேயும் அவன் மேற்கொள்ளலாகாது.

நான் இக்குழுவில் சேவை செய்துகொண்டிருந்த போதே, என்னை உடனே டிரான்ஸ்வாலுக்குத் திரும்பி வரும்படி கேட்டுப் பல கடிதங்களும் தந்திகளும் எனக்குக் கிடைத்தன. ஆதலால் யுத்தத்திலிருந்து திரும்பிய பிறகு, என் நண்பர்களை போனிக்ஸில் சந்தித்துவிட்டு, உடனே ஜோஹன்னஸ்பர்க் போய்ச் சேர்ந்தேன். அங்கே முன் சொல்லப்பட்டிருக்கிற அவசரச் சட்டத்தின் நகலேப் படித்துப் பார்த்தேன். இந்த அவசரச் சட்டம் பிரசுரம் செய்யப்பட்டிருந்த 1906-ஆம் வருடம் ஆகஸ்டு மாதம் 22-ஆம் தேதி அரசாங்கத்தின் விசேஷ கெஜெட்டை, காரியாலயத்திலிருந்து வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போனேன். ஒரு நண்பரோடு வீட்டுக்குப் பக்கத்தி லிருந்த ஒரு குன்றுக்குச் சென்றேன். அவசரச் சட்டத்தின் நகலே 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகைக்காகக் குஜராத்தியில் மொழிபெயர்க்கத் தொடங்கினேன். அவசரச் சட்டத்தின் பிரிவு களை ஒன்றன்பின் ஒன்ருகப் படிக்கும்போது நான் நடுங்கி னேன். இந்தியர்கள்பால் வெறுப்பைத் தவிர அதில் வேருென் றையும் நான் காணவில்லை. இந்த அவசரச்சட்டம் நிறைவேற்றப்

பட்டு, இந்தியர்கள் இதைப் பேசாமல் ஏற்றுக்கொண்டுவிட்டால், இது தென்னுப்பிரிக்காவிலிருக்கும் இந்தியர்களை முற்றிலும் நாசமாக்குமென எனக்குத் தோன்றிற்று. இது அவர்களுக்கு வாழ்வா அல்லது சாவா என்ற பிரச்னை என நான் தெளிவாகக் கண்டேன். விண்ணப்பங்களும் முறையீடுகளும் பயனற்றுப் போனபோதிலும், சமூகம் கைகளைக் கட்டிக்கொண்டு சும்மா உட்கார்ந்திருந்துவிடக் கூடாது எனவும் கண்டேன். இம் மாதிரிச் சட்டத்துக்குக் கீழ்ப்படிவதைக் காட்டிலும் இறப்பது மேலாகும். ஆனுல், நாம் எப்படி இறப்பது? ஒன்று வெற்றி, இன்றேல் சாவு; இந்த இரண்டில் ஒன்றைத் தவிர வேறு இல்லை. இதில் துணிந்து எதன்படி நாம் செய்வது? உட்புக முடியாத சுவர் ஒன்று குறுக்கே நிற்பதுபோல் இருந்தது. நான் அதன் மூலம் என் வழியை அறிந்துகொள்ள முடியவில்லை. என்னை இவ்வளவு அதிகமாகத் திடுக்கிடும்படி செய்துவிட்ட மசோதாவின் விவரங்களை நான் வாசகர்களுக்குத் தெரிவிக்கவே வேண்டும். அதன் சுருக்கம் வருமாறு :

டிரான்ஸ்வாலில் குடியிருக்கும் உரிமை பெற்ற ஒவ்வோர் இந்திய ஆணும் பெண்ணும், எட்டும், அதற்கு மேற்பட்ட வயதுமான குழந்தைகளும், ஆசியாவாசிகளின் பதிவாளரிடத்தில் அவன் அல்லது அவள் பெயரைப் பதிவு செய்து, அப்பதிவுக்கு அத்தாட்சியைப் பெறவேண்டும்.

பதிவு செய்துகொள்ள விண்ணப்பம் செய்வோர், தங்கள் பழைய அனுமதிச் சீட்டுகளைப் பதிவாளரிடத்தில் ஒப்படைத்து, விண்ணப்பங்களில் தங்கள் பெயர், முகவரி, சாதி, வயது முதலிய விவரங்களைக் குறிப்பிட வேண்டும். பதிவாளர் விண்ணப்பம் செய்வோருடைய உடம்பிலிருக்கும் முக்கியமான குறிகளை எழுதிக்கொள்வதுடன், அவர்களுடைய எல்லா விரல்களின் ரேகை முத்திரைகளையும் எடுக்க வேண்டும். குறிப்பிடப்பட்ட ஒரு தேதிக்கு முன் இவ்விதம் பதிவு செய்துகொள்ள விண்ணப்பம் தராத ஒவ்வோர் இந்தியரும், டிரான்ஸ்வாலில் குடியிருக்கும் சுதந்திரத்தை இழந்துவிடுவார். விண்ணப்பம் செய்யத் தவறினுல், அது சட்டப்படி ஒரு குற்றமாகவும் கருதப்படும். விண்ணப்பம் செய்யத் தவறியவர்கள், கோர்ட்டாருக்குத் தோன்றியபடி, அபராதம் விதிக்கப்படலாம்; சிறைக்கு அனுப்பப்படலாம்; அல்லது நாட்டுக்கு வெளியே கடத்தப்படலாம். பெற்றேர்கள் தங்கள் மைனர் (வயதாகாத) குழந்தைகளின் சார்பில் விண்ணப்பம் செய்து, விரல் முத்திரைகள்

முதலியன கொடுப்பதற்காக அவர்களைப் பதிவாளரிடம்கொண்டு வரவேண்டும். பெற்றோர்கள் இப்பொறுப்பை நிறைவேற்றத் தவறினல், மைனர்கள் (வயது வராதவர்கள்) 16 வயதானதும் தாமே இப்பொறுப்பை நிறைவேற்ற வேண்டும். தவறினல் பெற்றோர்களுக்குக் கொடுக்கக்கூடிய தண்டனைக்கு இவர்களும் உரியவர்களாவர்; விண்ணப்பதாரர்களுக்குக் கொடுக்கப்படும் பதிவுச் சர்டிபிகேட்டுகள், எச்சமயத்திலும் எங்கே கேட்கப்பட்டாலும், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் முன் ஆஜர் செய்யப் படவேண்டும். சர்டிபிகேட்டை ஆஜர் செய்யத் தவறினல் அது ஒரு குற்றமாகக் கருதப்பட்டு, அதற்காக அபராதம் விதிக்கப் படலாம்; அல்லது சிறைக்கு அனுப்பப்படலாம். பொதுச் சாலைகளில் நடந்து போய்க்கொண்டிருக்கும் எவரும் தன்னுடைய சர்டிபிகேட்டைக் காட்டுமாறு கேட்கப்படலாம். சர்டிபிகேட்டுகளைச் சோதனை செய்வதற்காகப் போலீஸ் உத்தியோகஸ்தர்கள் தனிப்பட்டவர் வீட்டினுள்ளும் நுழையலாம். வெளியூர்களிலிருந்து டிரான்ஸ்வாலுக்குள் நுழையும் இந்தியர்கள், அப்பொழுது சேவை செய்து கொண்டிருக்கும் இன்ஸ்பெக்டர் முன்னிலையில் தங்கள் சர்டிபிகேட்டுகளை ஆஜர் செய்ய வேண்டும். சர்டிபிகேட்டு பெற்றிருப்பவர்கள் தங்கள் காரியமாய்க் கோர்ட்டுக்குப் போயிருந்தால், கோர்ட்டுகளில் கேட்கப் பட்டால், இச்சர்டிபிகேட்டுகளை ஆஜர் செய்ய வேண்டும். வியாபார அல்லது சைக்கிள் லைசென்சுகள் வாங்கும் ரெவின்யூ ஆபீசுகளிலும் இவை ஆஜர் செய்யப்பட வேண்டும். அதாவது ஓர் இந்தியர், அரசாங்க அலுவலகத்திடம், அதனல் ஆகக் கூடியதைத் தனக்குச் செய்யும்படி கேட்டால், அவருடைய வேண்டுகோளைப் பூர்த்தி செய்வதற்குமுன், அவருடைய சர்டிபிகேட்டைப் பார்க்க வேண்டுமென உத்தியோகஸ்தர் கேட்கலாம். சர்டிபிகேட்டுகளை ஆஜர் செய்ய மறுத்தாலோ அல்லது சட்டத்தில் கண்ட விவரங்கள் அல்லது உடற் குறிகளைப் பதியவைக்க மறுத்தாலோ, அவை குற்றங்களாகக் கருதப்பட்டு மறுத்தவர்களுக்கு அபராதம் போடப்படலாம்; அல்லது அவர்கள் சிறைக்கு அனுப்பப்படலாம்.

இம்மாதிரியான ஒரு சட்டத்தை, சுதந்திரமான மனிதருக்கு விரோதமாக உலகில் எந்தப் பகுதியிலும் இயற்றி இருப்பதாக நான் கேள்விப்பட்டதே இல்லை. நேட்டாலில் இருக்கும் ஒப்பந்தத் தொழிலாளர்கள் ஒரு கண்டிப்பான அனுமதிச் சீட்டு முறைக்கு உட்படுத்தப்படுகிறார்களென்பது எனக்குத் தெரியும். ஆனல்,

இரங்கத்தக்க இம்மக்களைச் சுதந்திரமான மக்கள் என்று சொல்ல முடியாது. எனினும், முன் விவரித்திருக்கிற சட்டங்களை அவசரச் சட்டத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால், அவர்கள் உட்படுத்தப்பட்டிருக்கும் சட்டங்கூட அவ்வளவு கடுமையானதன்று எனக் கூறவேண்டும். அவசரச் சட்டங்களில் விதிக்கப்பட்டிருக்கும் தண்டனையை, அவர்கள் அனுபவித்துவரும் சட்டங்களில் கூறப்பட்டிருக்கும் தண்டனையுடன் ஒப்பிட்டால், பிந்தியது வெறும் கொசுக்கடி போன்றது என்றே சொல்லலாம். லட்சக்கணக்கான சொத்துக்களுடைய வியாபாரி ஒருவர், நாடு கடத்தப்பட்டு, இந்த அவசரச் சட்டத்தின் மூலம் அவர் முற்றிலும் அழிக்கப்பட்டு விடலாம். அவைகளின் சில ஷரத்துக்களை மீறியதற்காக எப்படிச் சிலர் நாட்டைவிட்டு வெளியே கடத்தப்பட்டனர் என்பதைப் பொறுமையுள்ள வாசகர்கள் பின்னர் அறிவார்கள். குற்ற பரம்பரையினர் எனச் சிலருக்கு விரோதமாகச் செய்யப்பட்டிருக்கும் சில கொடுமையான சட்டங்கள் இந்தியாவில் இருக்கின்றன. அவைகளுடன் இந்த அவசரச் சட்டத்தைச் சுலபமாக ஒப்பிடலாம். அச்சட்டங்களைவிட இது கொடுமையில் குறைந்ததன்று. அவசரச் சட்டத்தில் வற்புறுத்தப்பட்ட கைவிரல் ரேகை முத்திரை தென்னாப்பிரிக்காவிலேயே கண்டறியாத புதுமை. இதைப்பற்றிக் கொஞ்சம் தெரிந்துகொள்ளுவதற்காக, ஹென்றி என்ற போலீஸ் உத்தியோகஸ்தர் எழுதிய ஒரு புத்தகத்தை வாசித்தேன். சட்டப்படி குற்றவாளிகளிடத்திலிருந்துதான் விரல் ரேகை முத்திரை வாங்கப்படுகிறதென அப்புத்தகத்திலிருந்து எனக்குத் தெரிய வந்தது. ஆதலால், விரல் முத்திரையைக் கட்டாயம் கொடுக்க வேண்டும் என அவசரச் சட்டத்திலிருப்பதைக் கண்டு நான் திடுக்கிட்டேன். பெண்களும், பதினாறு வயதிற்குக் குறைந்த குழந்தைகளும் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்பதும், இதுவரை யாதொரு சட்டத்திலும் இல்லாமல், முதன் முதல் இந்த அவசரச் சட்டத்தில் காணப்பட்டது.

அடுத்த நாள் தலையாய இந்தியர்களின் சிறு கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. அவர்களுக்கு அவசரச் சட்டத்தைச் சொல் சொல்லாகப் பிரித்து எடுத்துரைத்து விளக்கிக் காட்டினேன். என்னைத் திடுக்கிடச் செய்தது போலவே அது அவர்களையும் திடுக்கிடச் செய்தது. அவர்களில் ஒருவர் கோபம் அடைந்து சொன்னதாவது: ‘‘யாராவது வந்து என் மனைவியிடத்தில் சர்டிபிகேட் கேட்பானாயின், நான் அவனை அவ்

விடத்திலேயே சுட்டுவிட்டு அதன் விளைவுகளை ஏற்றுக்கொள்ளு வேன்.'' நான் அவரைச் சாந்தப்படுத்தி, கூட்டத்திடம் பின் வருமாறு சொன்னேன்: ''இது மிகவும் நெருக்கடியானதொரு சந்தர்ப்பம். இந்த அவசரச் சட்டம் நிறைவேற்றப்பட்டு நாம் இதை ஒப்புக்கொண்டுவிட்டால், தென்னுப்பிரிக்கா முழுதும் இம்மாதிரி சட்டங்கள் நிறைவேற்றப்படும். தென்னுப் பிரிக்காவில் இருக்கும் நம்மை வேரோடு அழித்துவிடும் எண்ணத் துடன் இது கொண்டு வரப்பட்டிருக்கிறதென்றே எனக்குப் படுகிறது. இத்துடன் இது நிற்காது. ஆனுல், இது நம்மை இந்நாட்டிலிருந்து துரத்துவதற்காகச் செய்யப்படும் முதல் வேலை ஆகும். ஆதலால் நம் பொறுப்பு, டிரான்ஸ்வாலிலிருக்கும் பத்து அல்லது பதினையாயிரம் இந்தியர்களைக் காப்பாற்றுவ தோடு மாத்திரம் நிற்காமல், தென்னுப்பிரிக்காவிலிருக்கும் இந்திய சமூகம் முழுவதையும் பாதுகாக்க வேண்டியதாகிறது. தவிர, நாம் இச்சட்டத்தில் மறைந்திருக்கும் எல்லாப் பொருள் களையும் நன்ருக அறிவோமானுல், இந்தியாவின் மானத்தைக் காப்பாற்றும் கடமையும் நம்பால் இருப்பதை உணர்வோம். ஏனெனில், இந்த அவசரச் சட்டம் நம்மை மாத்திரமன்றி, நம் தாய் நாட்டையும் அவமதிப்பதாகும். நிரபராதிகளான மக்கள் தாழ்த்தப்படுவதிலேதான் அவமானம் இருக்கிறது. இம்மாதிரி சட்டம் நம்மீது சுமத்தப்படுவதற்கு நாம் தவறு எதுவும் செய்திருப்பதாக யாராலும் சொல்ல முடியாது. நாம் நிரப ராதிகள். ஒரு நிரபராதியான இந்தியருக்கு இழைக்கப்பட்ட அவமானம், நம் தேசம் முழுதிற்கும் இழைத்த அவமான மாகும். ஆதலால், அவசரப்பட்டு, பொறுமை இழந்து, கோபமுறு வதில் பயனில்லை. அக்கோபம் நம்மை இச்சட்டத்தின் கொடு மையிலிருந்து காப்பாற்ருது. ஆனுல், இச்சட்டத்தை எதிர்க்கக் கூடிய முறைகளை அமைதியாகவே யோசித்து, ஒரே முகமா யிருந்து, அதனுல் வரும் கஷ்டங்களையும் சகித்து, அம்முறை களைக் கொண்டு செலுத்துவோமானுல் கடவுள் நமக்கு உதவி செய்வாரென்பது நிச்சயம்.''

அங்கே வந்திருந்தவர்கள் எல்லோரும் நிலைமை எவ்வளவு மோசமாகியிருக்கிறது என்பதை உணர்ந்தனர். ஒரு பொதுக் கூட்டம் கூட்டவேண்டுமென்றும், அதில் பல தீர்மானங்கள் பிரேரேபித்து நிறைவேற்றப்பட வேண்டுமென்றும் தீர்மானம் செய்யப்பட்டது. யூதர்கள் நாடக அரங்கு ஒன்று இதற்காக வாடகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது.

## பன்னிரண்டாவது அத்தியாயம்

# சத்தியாக்கிரகத்தின் உதயம்

1906-ஆம் வருடம் செப்டெம்பர் மாதம் 11-ஆம் தேதி கூட்டம் நடந்தது. டிரான்ஸ்வாலின் பல பாகங்களிலிருந்தும் பிரதிநிதிகள் அதற்கு வந்திருந்தனர். தீர்மானங்கள் செய்ய நான் உதவி செய்திருந்தபோதிலும் அவற்றின் முழுப் பொருளையும் நானே அப்பொழுது அறியவில்லை என்பதை ஒப்புக்கொள்ளவே வேண்டும். எவை எந்த விதமான முடிவுகளுக்கு நம்மைக் கொண்டுவிடும் என்பதையும் நான் அளந்து பார்க்கவில்லை. பழைய எம்பயர் அரங்கு முழுதும் ஜனங்கள் நிறைந்திருந்தனர். ஏதோ அசாதாரணமான காரியமொன்று செய்ய வேண்டும் அல்லது நடக்கும் என்று எதிர்பார்த்தார்களெனக் கூட்டத்திலிருந்த ஒவ்வொருவர் முகத்திலும் புலனாகியது. டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்திய சங்கத்தின் தலைவரான ஸ்ரீ அப்துல் கனி தலைமை வகித்தார். அவர் டிரான்ஸ்வாலின் மிகப் பழைய இந்திய வாசிகளில் ஒருவர். பெயர் பெற்ற மாமத் காசம் கம்ருதீன் கம்பெனியின் ஜோஹன்னஸ்பர்க் கிளை ஆபீசின் கூட்டாளியும் நிர்வாகியும் ஆவார். தீர்மானங்கள் எல்லாவற்றிலும் முக்கியமானது, பிரசித்திபெற்ற அந்த நான்காவது தீர்மானமாகும். இந்தியர்களுடைய எதிர்ப்புக்கு விரோதமாய் அவசரச்சட்ட மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்டால், இந்தியர்கள் அதற்குக் கீழ்ப்படியமாட்டார்கள் என்றும், கீழ்ப்படியாததால் வரும் எல்லாத் தண்டனைகளையும் ஏற்றுக்கொள்ளுவார்களென்றும் அத்தீர்மானம் கூறியது.

அத்தீர்மானத்தின் பொருளைக் கூட்டத்துக்கு நான் எடுத்துரைத்தேன். அங்கே கூடியிருந்தவர்கள் பொறுமையுடன் கேட்டார்கள். கூட்டத்தின் நடவடிக்கை ஹிந்தியிலும், குஜராத்தியிலும் நடந்தது. ஆதலால், கூட்டத்திலிருக்கும் எவருக்கும் அது விளங்காமலிராது. ஹிந்தி தெரியாத தமிழர்களுக்காகவும் தெலுங்கர்களுக்காகவும், அவர்களுடைய மொழிகளில் விளக்கமாய் எடுத்துச் சொல்லுவதற்குத் தமிழ், தெலுங்கு உரையாளர் இருந்தனர். அத்தீர்மானத்தை முறைப்படி பிரேரேபித்து, ஆமோதித்துப் பலர் பேசினார்கள். அவர்களில் ஒருவர் சேட் ஹாஜி ஹபீப்; இவரும் அனுபவம் வாய்ந்த ஒரு பழைய தென்னாப்பிரிக்கவாசி. இவர் மிகவும், மனவெழுச்சி

யுடன் பேசினுர். இவர் அதிகமான உணர்ச்சி வசப்பட்டிருந்தார். இத்தீர்மானத்தைக் கடவுள் சாட்சியாகச் செய்ய வேண்டுமென்றும், அவமானம் இழைக்கும் இந்தச் சட்டத்திற்குக் கோழைத்தனமாய் என்றுமே கீழ்ப்படிந்துவிடக் கூடாதென்றும் சொன்னுர். இச்சட்டத்திற்குத் தாம் எப்பொழுதும் கீழ்ப்படியமாட்டாரென்று கடவுள் சாட்சியாகச் சொல்லுவதாகக் கூறி மற்றவர்களையும் அப்படியே செய்யும்படி கேட்டுக்கொண்டார். மற்றவர்களும் கடுமையாகவும் கோபத்துடனும் பேசி அத்தீர்மானத்தை ஆதரித்தனர். சேட் ஹாஜி ஹபீப் தம்முடைய உரையில் பிரதிக்ஞையை எடுத்துக்கொள்ளும் சமயம் நான் திடுக்கிட்டு விழிப்படைந்தேன். அப்பொழுதுதான் என்னுடைய பொறுப்பையும், சமூகத்தினுடைய பொறுப்பையும் நான் முழுதும் அறிந்தேன். சமூகம் இதற்குமுன் பல தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறது. பல தீர்மானங்களை அதிக யோசனையின் பேரிலோ, அல்லது புதிய அனுபவத்தின் பேரிலோ அது திருத்திக்கொண்டிருக்கிறது. நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் எல்லோராலும் அனுசரிக்கப்படாதவையும் பல உண்டு. தீர்மானங்களை மாற்றுவதும், தீர்மானங்களை ஒப்புக்கொண்டவர்கள் அவைகளை அனுசரிக்காமலிருப்பதும் இவ்வுலகமெங்கும் வாழ்க்கையில் சாதாரண அனுபவங்களாகும். ஆனுல், இம்மாதிரி தீர்மானங்களில் எவரும் கடவுளின் பெயரைப் புகுத்துவதில்லை. உண்மையில் ஒரு தீர்மானத்திற்கும், கடவுள் பெயரால் மேற்கொள்ளப்பட்ட ஒரு பிரதிக்ஞைக்கும் யாதொரு வித்தியாசமும் இருக்கக் கூடாது. அறிவாளி ஆலோசித்து ஒரு தீர்மானத்தை மேற்கொள்ளுவானுனுல், மயிரிழையும் அதினின்று பிறழான். ஒரு தீர்மானம், கடவுள் சாட்சியாகச் செய்யப்பட்ட ஒரு சபதத்தைப்போல் அவ்வளவு மதிப்புடையதாகவே அவனுக்கு இருக்கும். ஆனுல், உலகம் இத்தத்துவங்களைக் கவனிப்பதில்லை. ஒரு சாதாரணத் தீர்மானத்திற்கும், கடவுள் பெயரால் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதாக மக்கள் நினைக்கின்றனர். ஒரு சாதாரணத் தீர்மானத்தைச் செய்தவர், தாம் அதினின்றும் வழுவும்போது, தாம் குற்றம் செய்ததாக நினைத்து வெட்கப்படுவதில்லை. ஆனுல், தாம் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞையினின்றும் பிறழும்போது, அவர் தாமே வெட்கப்படுவது அல்லாமல், சமூகத்தாலும் பாவியெனக் கருதப்படுகிறுர். இந்த நினைவில் மாத்திரமே இருக்கும் வித்தியாசம், மனிதன் மனத்தில் எவ்வளவோ ஆழமாக ஊன்றியிருக்கிறது. இதனுல் ஒரு நியாயாதிபதியின் முன் ஒருவன் பிரதிக்ஞை

செய்து சொல்லும் விஷயம் பொய் என்று நிரூபிக்கப்பட்டுவிட்டால், அவன் சட்டப்படி குற்றம் செய்ததாகக் கருதப்பட்டு, கண்டிப்பான தண்டனையையும் அடைகிறுன்.

இந்த எண்ணங்கள் என் மனத்தில் நிறைந்திருந்ததால் புனிதமான பிரதிக்ஞைகளின் அனுபவங்களைப் பெற்று, அவைகளினுல் பயனையும் நான் அடைந்திருந்ததால், பிரதிக்ஞையைப் பற்றிச் சேட் ஹாஜி ஹபீப் சொல்லியபோது திடுக்கிட்டேன். அதனுல் ஏற்படக்கூடிய விளைவுகளை ஒரு கணத்தில் நினைத்துப் பார்த்தேன். தடுமாற்றம் போய் அதற்குப் பதிலாக எனக்கு உற்சாகமே உண்டாயிற்று. கூட்டத்திற்குப் போனபோது பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ருே, மற்றவர்களைப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளும்படி சொல்ல வேண்டுமென்ருே எனக்கு எண்ணமில்லாவிடினும், சேட் அவர்களின் யோசனையை நான் மகிழ்ச்சியுடன் ஆதரித்தேன். ஆனுல், அதே சமயத்தில் ஒரு பிரதிக்ஞையினுடைய எல்லா விளைவுகளையும் பொது ஜனங்களுக்கு எடுத்துச் சொல்வதுடன், பிரதிக்ஞை என்ருல் என்ன என்பதைத் தெளிவாக விளக்கிக் காட்ட வேண்டுமென்றும் எனக்குத் தோன்றிற்று. அவற்றை அறிந்த பிறகும் அவர்கள் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதற்குத் தயாராயிருந்தால், அப்பொழுது பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளும்படி அவர்களைத் தூண்டலாம். இல்லாவிடில் கடைசிச் சோதனைக்கு இன்னும் அவர்கள் தயாராகவில்லை என்று நாம் அறிந்துகொள்ள வேண்டும். ஆதலால் சேட் ஹாஜி ஹபீபின் யோசனையில் அடங்கியிருக்கும் எல்லாப் பொருள்களையும் கூட்டத்திற்கு எடுத்துரைப்பதற்குத் தலைவரின் அனுமதி கேட்டேன். அவர் அனுமதி அளிக்கவே நான் எழுந்து பேசினேன். நான் அப்பொழுது சொன்னதை, நினைவிருக்கும்வரை, கீழே குறிப்பிட்டுள்ளேன்:

"இந்தத் தீர்மானத்திற்கும், இதுவரை நாம் நிறைவேற்றியிருக்கும் மற்றெல்லாத் தீர்மானங்களுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் இருக்கிறது என்பதையும், தீர்மானம் செய்யும் விதத்திலும் ஒரு பெரிய வேறுபாடு இருக்கிறது என்பதையும் இக்கூட்டத்திற்கு விளக்கிக் காட்ட நான் விரும்புகிறேன். நாம் இப்பொழுது செய்யும் தீர்மானம் மிகவும் முக்கியமானது. ஏனெனில், நாம் தென்னுப்பிரிக்காவில் வாழ்வது, இதை முழுதும் நாம் அனுசரிப்பதைப் பொறுத்திருக்கிறது. தீர்மானம் செய்யும் விதத்தைப் பற்றி நமது நண்பர் சொல்லியது எவ்வளவு புதுமையானதாக இருக்கிறதோ அவ்வளவு புனிதமாகவும் இருக்கிறது.

இவ்விதத்தில் தீர்மானத்தைக் கூட்டத்தில் நிறைவேற்ற வேண்டுமென்ற எண்ணத்துடன் நான் கூட்டத்திற்கு வரவில்லை. அதன் பெருமை சேட் ஹாஜி ஹபீப் அவர்களுக்கு உரியது; அதற்குரிய பொறுப்பும் அவர்பால் உள்ளது. இதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன். அவருடைய யோசனையை நான் மிகவும் மெச்சுகிறேன். நீங்களும் அதை ஏற்றுக்கொள்ளுவீர்களானால், அவருடைய பொறுப்பில் நீங்களும் பங்கெடுத்துக் கொள்ளுபவர்களாவீர்கள். இப்பொறுப்பு என்னவென்று நீங்கள் அறிய வேண்டும். சமூகத்துக்கு ஆலோசகனாகவும் அதன் ஊழியனாகவும் நான் இருப்பதால், அதை விவரமாக எடுத்துரைப்பது என்னுடைய கடமையாகும்.

''ஹிந்து மதம், இஸ்லாம் என்று நம் மதங்களின் பெயர்களில் வித்தியாசம் இருந்தபோதிலும், நாம் எல்லோரும் ஒரே கடவுளையே நம்புகிறோம். கடவுள் பெயரால், அல்லது அவரைச் சாட்சியாகக்கொண்டு ஒரு சபதம் செய்வது அல்லது பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவது என்பது விளையாட்டான விஷயமன்று. பிரதிக்ஞை எடுத்துக்கொண்டபிறகு அதற்கு விரோதமாக நடந்தோமானால், நாம் கடவுள் முன்னிலையிலும் மனிதர் முன்னிலையிலும் குற்றம் செய்தவர்களாவோம். ஒரு மனிதன் மனப்பூர்வமாகவும் புத்திபூர்வமாகவும் ஒரு பிரதிக்ஞை எடுத்துக்கொண்ட பிறகு அதனின்றும் தவறுவானானால், அவன் தனது மனிதத்தன்மையை இழக்கிறான் என்பது எனது சொந்த அபிப்பிராயம். ஒரு செப்புக்காசின் மேல் பாதரசத்தைத் தடவி அதை வெள்ளி போல் காட்டினால், அக்காசு மதிப்பற்றுப் போவதோடு, அது கண்டுபிடிக்கப்பட்டால் அதன் சொந்தக்காரனையும் தண்டனைக்குள்ளாக்குகிறது. அம்மாதிரியே ஒருவர் விளையாட்டாகப் பிரதிக்ஞை செய்து, பிறகு அதனின்றும் தவறினால் அவர் மனிதருள் பதராகி, இம்மையிலும் மறுமையிலும் தண்டனை அடையத் தக்கவராகிறார். இம்மாதிரி ஆழ்ந்த கருத்துள்ள ஒரு பிரதிக்ஞையைச் சேட் ஹாஜி ஹபீப் உங்களிடத்தில் பிரயோகிக்க விரும்புகிறார். குழந்தைகள் என்றோ அல்லது அறிவில்லாதவர்கள் என்றோ சொல்லத் தக்க எவரும் இக்கூட்டத்தில் இல்லை. நீங்கள் எல்லோரும் வயதுவந்தவர்கள்; உலக அனுபவம் பெற்றவர்கள். உங்களில் பலர் பிரதிநிதிகளாயிருக்கிறீர்கள். உங்கள் கடமைகளை அதிக அளவிலும், குறைந்த அளவிலும் செய்து வந்திருக்கின்றீர்கள். ஆதலால் இங்கிருப்பவர் எவரும், தாங்கள் பிரதிக்ஞைகள் செய்யும் போது, விவரம் தெரியாமல் செய்ததாகச் சாக்குப்போக்குச் சொல்ல முடியாது.

''பிரதிக்ஞைகளையும், சபதங்களையும் ஒரு சில சந்தர்ப்பங்களில்தான் எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது எனக்குத் தெரியும். அடிக்கடி பிரதிக்ஞைகள் எடுத்துக்கொள்ளும் ஒருவர் தவறி விடுவது நிச்சயம். தென்னுப்பிரிக்காவிலிருக்கும் இந்திய சமூகத்தின் சரித்திரத்தில் பிரதிக்ஞைகள் எடுத்துக் காண்பிக்க வேண்டிய நெருக்கடியான ஒரு சந்தர்ப்பத்தை நான் நினைக்க முடியுமெனில், அந்நெருக்கடியான சந்தர்ப்பம் நிச்சயமாய் இதுவே. பொறுப்பான நடவடிக்கைகளை மிகுந்த ஜாக்கிரதையுடனும் அவசரப்படாமலும் மேற்கொள்ளுவது அறிவுடைமை யாகும். ஆனுல், ஜாக்கிரதைக்கும், அவசரப்படாமல் இருப்பதற்கும் எல்லை உண்டு. அவைகளை நாம் கடந்துவிட்டோம். அரசாங்கம் தங்கள் யோக்கியப் பொறுப்பு முழுவதையும் கைவிட்டு விட்டனர். நம்மைச் சுற்றி யிருக்கும் ஆபத்தை எதிர்த்து, நாம் நமக்குள்ள அனைத்தையும் தியாகம் செய்ய முன்வராமல், கையைக் கட்டிக்கொண்டு சும்மா பார்த்துக் கொண்டிருப்போமானுல், நம்முடைய தகுதியின்மையையும் கோழைத்தனத்தையும் வெளிப்படுத்தியவர்களாவோம். ஆதலால் பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ளுவதற்கு ஏற்றது இச் சந்தர்ப்பம் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனுல், பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதற்கு அவசியமான மனுேதிடமும், சக்தியும் இருக்கின்றனவா என்று நம்மில் ஒவ்வொருவரும் சிந்தித்துப் பார்த்து முடிவு செய்ய வேண்டும். இம்மாதிரித் தீர்மானங்களைப் பெரும்பான்மையோரின் வோட்டுக்களால் நிறைவேற்ற முடியாது. பிரதிக்ஞைகள் எடுத்துக்கொள்ளுவோர்தாம் இதற்குக் கட்டுப்பட்டவர்களாவார்கள். பிறர்பால் விளைவைக் காணும் நோக்கத்துடன் பிரதிக்ஞைகளை எடுத்துக்கொள்ளுவது கூடாது. இந்நாட்டு அரசாங்கம், பிரிட்டிஷ் அரசாங்கம் அல்லது இந்திய சர்க்காரிடம் இத்தீர்மானம் எதை ஊன்றுவிக்கும் என்று யாவரும் நினைத்துப் பார்க்கலாகாது. ஒவ்வொருவரும் தங்களுடைய உள்ளத்தையே பரிசோதித்துக் கொள்ள வேண்டும். தமக்கு இப்பிரதிக்ஞையைக் கொண்டு செலுத்துவதற்குப் போதுமான சக்தி இருக்கிறது என்று தங்களுடைய மனச்சாட்சி அறிவுறுத்தினுல்தான் அவர்கள் பிரதிக்ஞை செய்ய வேண்டும்; அப்போதுதான் அவர்கள் பிரதிக்ஞைக்குப் பலன் ஏற்படும்.

''இப்போது இதன் விளைவுகளைப் பற்றிச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். எல்லாம் நன்மையாகவே முடியு

மானுல், இந்தியர்களில் பெரும்பான்மையோர் இச்சட்டத்தை எதிர்ப்பதாகப் பிரதிக்ஞை செய்து, அப்பிரதிக்ஞை செய்வோர் எல்லோரும் தங்களுக்குத் தாங்களே உண்மையாகவும் நடந்து கொள்ளுவார்களானுல், இந்த அவசரச் சட்டம் நிறைவேற்றப்படாமலே போகலாம்; அல்லது நிறைவேற்றப்பட்டாலும் சீக்கிரத்தில் அது ரத்து செய்யப்படலாம். ஒரு வேளை நாம் கஷ்டப்பட வேண்டி யிருக்காமல் போகலாம். ஆனுல், ஒரு பக்கம் பிரதிக்ஞை செய்துகொள்ளும் ஒவ்வொருவரும் எதிர்காலத்தில் மிகுந்த நம்பிக்கை உடையவராக இருக்க வேண்டும்; மற்றொரு பக்கம் எக்கஷ்டங்களுக்கும் தயாராகவும் இருக்க வேண்டும். ஆதலால்தான் நமது இப்போதைய போராட்டத்தில் நமக்கு நேரக்கூடிய துன்பத்தின் அளவை இங்கே உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இங்கே கூடியிருக்கும் மூவாயிரம் பேரும் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதாக வைத்துக்கொள்ளுவோம். மீதியிருக்கும் பத்தாயிரம் இந்தியர்கள் இத்தகைய பிரதிக்ஞை செய்துகொள்ளுவதில்லை என்றும் வைத்துக்கொள்ளுவோம். ஆரம்பத்தில் நாம் ஏளனத்திற்கு உள்ளாவோம். தவிர, இப்பொழுது எச்சரிக்கை செய்யப்பட்டிருந்தாலும் பிரதிக்ஞை செய்து கொள்ளுவோரில் சிலர் அல்லது பலர் ஆரம்பச் சோதனையிலேயே பலவீனம் அடைந்துவிடவும் கூடும். நாம் சிறைக்குப் போக வேண்டியிருக்கலாம். அங்கே நாம் அவமதிக்கப்படலாம். நாம் பசியால் வாட நேரிடலாம்; மிகுந்த வெயிலிலும் குளிரிலும் துன்புற நேரலாம்; கடினமான வேலைகளை நாம் செய்யவேண்டி இருக்கும். முரட்டுச் சிறைச்சேவகர்களால் நமக்கு சவுக்கடி கொடுக்கப்படவும் கூடும். அதிகமான அபராதங்களைப் போட்டு, நம் சொத்துக்களை ஜப்தி செய்துவிடலாம். இச்சட்டத்தை எதிர்ப்பவர்கள் மிகச் சிலராகவே இருந்தால் அச்சொத்துக்கள் ஏலம் போடப்படலாம். இன்று செல்வந்தர்களாக இருக்கும் நாம், நாளை மிக ஏழைகளாக்கப்படலாம். நாம் நாடு கடத்தப்படலாம். பசிப் பிணி முதலிய கொடுமைகளால் சிறையில் கஷ்டப்பட்ட காரணத்தால் நம்மில் பலர் நோய்வாய்ப்படலாம்; அதனுல் மரித்தும் போகக்கூடும். சுருங்கச் சொல்லின், நாம் ஊகிக்கக் கூடிய எல்லாவிதமான துன்பங்களையும் அனுபவிக்க நேரிடலாம். ஆதலால், நாம் இவற்றையும் இவற்றிற்கும் மோசமானவற்றையும் சகிக்கவேண்டிவரும் என்பதை நினைத்தே பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளுவதுதான் விவேகமாகும். யாராவது ஒருவர் இப்

போராட்டம் எப்பொழுது, எப்படி முடியுமென்று என்னைக் கேட்டால், சமூகம் முழுதும் ஆண்மையுடன் இச்சோதனையைச் சமாளித்து நிற்பார்களானால், முடிவு சமீபத்தில் இருக்கிறதெனச் சொல்லுவேன். நம்மில் பலர் கஷ்டத்தில் பின்தங்கி விடுவார்களானால் போராட்டம் நீடிக்கும். ஆனால், ஒன்று மட்டும் நான் நிச்சயமாகக் கூறமுடியும். ஒரு சிறு தொகையினராவது தாங்கள் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞையில் உண்மையுடன் இருக்கும் காலம்வரை இப்போருக்கு ஒரே ஒரு முடிவுதான் காண முடியும்; அதுதான் வெற்றி.

"என்னுடைய சொந்தப் பொறுப்பைப்பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். இப்பிரதிக்ஞை செய்வதால் நேரிடக்கூடிய ஆபத்துக்களைக் குறித்து உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேனென்றால், அதே சமயத்தில் உங்களைப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளும்படியும் சொல்லுகிறேன். இவ்விஷயத்தில் எனக்குரிய பொறுப்பும் எனக்கு நன்றாகத் தெரியும். இங்கிருப்பவர்களில் பெரும்பான்மையோர் உற்சாகத்தினாலோ அல்லது ஆத்திரத்தாலோ இப்பிரதிக்ஞையை எடுத்துக் கொள்ளலாம். ஆனால், அவர்கள் சோதனை வரும்போது பல வீனம் அடையலாம். இப்போரில் கடைசிவரை எதிர்ப்பதற்கு ஒரு சிறு தொகையினரே மீதமாக இருக்கவும்கூடும். அப்பொழுதுங்கூட என் போன்றவர்களுக்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, செத்தாலும் சாவதேயன்றி இச்சட்டத்திற்குப் பணிந்து விடுவதில்லை என்பதுதான் அது. மற்றெல்லோரும் இப்போரிலிருந்து விலகினாலும், அது நேரிடக்கூடியதல்ல. இக்கஷ்டங்களை எதிர்க்க என்னைத் தனியே விட்டு விட்டாலும், நான் என்னுடைய பிரதிக்ஞையினின்று பிறழமாட்டேன் என்பது நிச்சயம். தயை செய்து என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். நான் இதை அகம்பாவத்தினால் சொல்லவில்லை. ஆனால், உங்களை, முக்கியமாக மேடைமேல் இருக்கும் தலைவர்களை உஷார் செய்கிறேன். நான் உங்களுடன் மரியாதையுடன் ஒன்றைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதாவது மற்றவர்களால் கைவிடப்பட்டுத் தன்னந்தனியாக நிற்க நேர்ந்தாலும், உறுதியாக நிற்கும் மனோதிடமும், சக்தியும் உங்களுக்கு இல்லாவிடில், நீங்கள் இப்பிரதிக்ஞையை எடுத்துக்கொள்ளாமல் இருப்பதைத் தவிர, தீர்மானம் இக்கூட்டத்தின் முன்னிலையில் முடிவு செய்ய வைக்கப்படுவதற்கு முன், கூட்டத்தினர் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ள ஆரம்பிப்பதற்கு முன்னால்,

தீர்மானத்திற்கு உங்கள் ஆட்சேபத்தைத் தெரிவித்துவிட வேண்டும். இத்தீர்மானத்தை நிறைவேற்றுவதில் நீங்கள் உதவி அளிக்கக் கூடாது; இப்பிரதிக்ஞையை நாம் ஒரு கூட்டமாய் எடுத்துக் கொண்டாலும், ஒருவர் அல்லது பலர் இதினின்றும் பிறழுவதும், மற்றவர்களை அவர்களுடைய பொறுப்பிலிருந்து விடுவிக்காது. ஒவ்வொருவரும் தங்கள் முழுப் பொறுப்பையும் உணர வேண்டும். அதன் பிறகு தான் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ள வேண்டும். மற்றவர்களுடைய அபிப்பிராயங்களைக் கருதாமல், ஒவ்வொருவரும் இம்முடிவுக்கு வரவேண்டும். மற்றவர்கள் எது செய்தாலும், அவரவர் இறக்க நேரினும், தங்களுடைய பிரதிக்ஞையில் உண்மையுடன் இருக்க வேண்டும் என்பதை உணர வேண்டும்.''

நான் இவ்விதம் பேசிவிட்டு என் இடத்தில் உட்கார்ந்தேன். கூட்டம் பூரண அமைதியுடன் என்னுடைய ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டது. மற்றத் தலைவர்களும் பேசினுர்கள். ஒவ்வொருவரும் தங்கள் பொறுப்பைப் பற்றியும், கூட்டத்திற்கு வந்திருப்பவர்களின் பொறுப்பைப் பற்றியும் பேசினுர்கள். அக்கிராசனுதிபதி எழுந்தார். அவரும் நிலைமையைத் தெளிவாக்கினுர். கடைசியில் கூட்டத்தில் இருந்தவர்கள் எல்லோரும் எழுந்து நின்று, மேல் தூக்கிய கைகளுடன் அந்த அவசரச் சட்ட மசோதா சட்டமாக்கப்பட்டால் அதற்குப் பணிந்து விடுவதில்லையெனக் கடவுளின் சாட்சியாகப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டனர். அக்காட்சியை நான் என்றும் மறக்க முடியாது. நான் இதை எழுதும்போதும், அது என் மனக்கண் முன் நிற்கிறது. சமூகத்தினிடையே அளவு கடந்த உற்சாகம் இருந்தது. அதற்கு அடுத்த நாளே அவ்வரங்கில் ஒரு விபத்து ஏற்பட்டு, அதன் காரணமாக அது முழுதும் தீயால் நாசமாகி விட்டது. மூன்ருவது நாள் நண்பர்கள் தீயைப்பற்றிய சமாசாரத்தை எனக்கு வந்து சொன்னுர்கள். இது நல்ல சகுனமென்றும் சமூகத்தைப் பாராட்டினர். அந்த அவசரச் சட்டத்துக்கும் கொட்டகைக்கு ஏற்பட்ட முடிவே ஏற்படுமென்று அது தெரிவித்ததென்றும் கருதினர். அம்மாதிரி சகுனங்களால் நான் என்றும் பாதிக்கப்பட்டதில்லை. ஆதலால், தற்செயலாக நடந்துவிட்ட இச்சம்பவங்களுக்கு நான் அதிக மதிப்புக் கொடுக்கவில்லை. அது சமூகத்தின் மனோதிடத்துக்கும் நம்பிக்கைக்கும் ஓர் அறிகுறியென நினைத்து அதை இங்கே குறிப்பிடுகிறேன். மக்களுடைய இவ்விரண்டு

உயர்ந்த குணங்களும் நிரூபிக்கப்பட்டன என்பதற்கான சான்று களை வரும் அத்தியாயங்களில் காண்பீர்கள்.

இப்பெரிய கூட்டத்திற்குப் பிறகு சமூக ஊழியர்களும் சும்மா இருக்கவில்லை. எல்லா இடங்களிலும் கூட்டங்கள் கூட்டப்பட்டன. ஒவ்வோர் இடத்திலும் இச்சட்டத்தை எதிர்ப்பதற்காகப் பிரதிக்ஞைகள் வாங்கப்பட்டன. 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையில், அப்போது இந்தக் கறுப்பு அவசரச் சட்டத்தைப் பற்றியே பிரதானமாக விவாதிக்கப் பட்டது.

இவ்வேலைகள் ஒருபுறம் இருக்க, மற்றொருபுறம், அந்நாட்டு அரசாங்கத்தைச் சந்தித்துப் பேச ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஒரு பிரதிநிதிக் கூட்டம் குடியேற்ற நாட்டு மந்திரியா யிருந்த ஸ்ரீ டன்கனைக் கண்டது. அவரிடத்தில் மற்ற விஷயங்களைப் பற்றிக் கூறியதோடு இப்பிரதிக்ஞைகளைப் பற்றியும் சொல்லப்பட்டது. அப்பிரதிநிதிக் கூட்டத்தின் ஓர் அங்கத்தினரான சேட் ஹாஜி ஹபீப் பின்வருமாறு சொன்னார்: "உத்தியோகஸ்தன் ஒருவன் வந்து என் மனைவியின் விரல் ரேகை முத்திரைகளை எடுக்க யத்தனிப்பானாகில், அப் பொழுது நான் என்னை அடக்கிக் கொண்டு சும்மா இருக்க முடியாதென்பது நிச்சயம். நான் அவனை அங்கேயே கொன்று நானும் இறப்பேன்" என்றார். மந்திரி கொஞ்ச நேரம் அவரை உற்றுப் பார்த்துவிட்டு பிறகு சொன்னார்: "இந்த அவசரச் சட்டத்தைப் பெண்கள்பேரில் உபயோகப்படுத்து வதன் உசிதத்தைப்பற்றி அரசாங்கத்தார் புனராலோசனை செய்து கொண்டிருக்கின்றனர். பெண்களைப்பற்றிய ஷரத்து எடுக்கப்படுமென நான் இப்பொழுதே உங்களுக்கு உறுதி கூற முடியும். இவ்விஷயத்தில் உங்களுக்கு இருக்கும் உணர்ச் சியை அரசாங்கத்தினர் அறிந்துகொண்டனர். அவர்கள் அதற்கு மதிப்பளிக்க விரும்புகின்றனர். ஆனால், மற்ற ஷரத் துக்கள் சம்பந்தமாக, அரசாங்கம் உறுதியாய் இருக்க முடிவு செய்திருக்கிறது. பிடிவாதமாகவே இருக்கும் என்று சொல்ல நான் வருந்துகிறேன். நீங்கள் நன்றாக யோசனை செய்து இச் சட்டத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென ஜெனரல் போத்தா*

* ரைட் ஹானரபில் ஜெனரல் லூயி போத்தா (1869–1919) போயர் யுத்தத்தில் டிரான்ஸ்வால் படையினரை நடத்திய போயர் சேனாதிபதி. 1907–இல் டிரான்ஸ்வா லுக்குப் பார்லிமென்டரி ஆட்சி ஏற்பட்டபோது, அந்நாட்டின் முதலாவது பிரதமராக

விரும்புகிருர். ஐரோப்பியர்கள் வாழ்வதற்கு இது அவசிய மென அரசாங்கம் நினைக்கிறது. அவசரச் சட்டத்தின் நோக் கங்களை அனுசரித்து, விவரங்களில் மாற்றங்களுக்கு நீங்கள் யோசனை சொன்னுல், அவை நிச்சயமாக அரசாங்கத் தினுல் கவனிக்கப்படும். உங்களுக்கு நான் சொல்லும் யோசனை என்னவெனில். இச்சட்டத்திற்கு ஒப்புக்கொண்டு, விவரங் களில் சிறு மாறுதல்களைச் செய்யும்படி கேட்பதே உங்களுக்கு நன்மை பயக்கும் என்பதே.'' மந்திரியிடத்தில் நடந்த விவா தத்தின் விவரங்களையெல்லாம் நான் இங்கே எழுதவில்லை. அவ்வாதங்கள் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கின்றன. அவ்வாதங்களும் அதே போன்றவையே. ஆனுல், மந்திரி அவைகளை வேறு வார்த்தைகளில் எடுத்துரைத்தார். அது தான் வித்தியாசம். அவருடைய அபிப்பிராயம் வேறு வித மாக இருந்தபோதிலும், பிரேரேபிக்கப்பட்டிருக்கும் அச்சட்டத் திற்குக் கீழ்ப்படிவது அசாத்தியமெனச் சொன்னதோடு, பெண் களை அதன் ஷரத்துக்களின் பிரயோகத்திலிருந்து நீக்க அர சாங்கம் கொண்ட எண்ணத்திற்காக வந்தனமும் அளித்துப் பிரதிநிதிக் கூட்டம் திரும்பியது.

பெண்கள் இச்சட்டத்திலிருந்து நீக்கப்பட்டது சமூகத் தின் கிளர்ச்சியின் முதல் பயனு அல்லது அரசாங்கம் புனரா லோசனையின் பேரில் நிர்வாகத்தில் வரக்கூடிய அசௌகரியங் களை உத்தேசித்துச் செய்யப்பட்ட இணக்கமா என்று சொல் லுவது கடினம். இந்தியர்களின் கிளர்ச்சியைக் கருதாமலே சுயேச்சையாகவே தாங்கள் பெண்களை அச்சட்டத்தின் பிர யோகத்தினின்று நீக்கியதாக அரசாங்கம் உரிமை கொண்டா டியது. இது எப்படியாவது இருக்கட்டும். இந்திய சமூகத் தாரோ, அக்கிளர்ச்சிக்கும் விலக்கலுக்கும் சம்பந்தம் இருப்ப தாகத் தாங்கள் மனத்தில் சந்தேகமின்றி ஸ்தாபித்துக் கொண் டனர். இதனுல் அவர்களுடைய போராட்ட உற்சாகம் அதிக மாயிற்று.

---

இருந்தார். அதே வருடம் இங்கிலாந்தில் நடந்த சாம்ராஜ்ய மகாநாட்டில் கலந்து கொண்டார். 1910-இல் தென்னுப்பிரிக்க யூனியன் நாடுகளின் முதல் பிரதமராக நியமனம் பெற்ருர். முதல் உலக யுத்தம் மூண்டபோது, யூனியன் படைக்குத் தலைவராகி ஜெர்மனிக்குச் சொந்தமான ஆப்பிரிக்கப் பகுதிகள் சிலவற்றைக் கைப்பற் றினுர். 1919-இல் நடந்த சமாதானக் கூட்டத்திலும் முக்கியமான பங்கு எடுத்துக் கொண்டார்.

எங்கள் இயக்கத்திற்கு என்ன பெயர் கொடுப்பதென எங்களில் யாருக்கும் தெரியவில்லை. அப்போது 'சாத்விக எதிர்ப்பு' என்னும் சொல்லை உபயோகித்து எங்கள் இயக்கத்தைக் குறிப்பிட்டிருந்தேன். அப்பெயர் கொடுத்தபோது 'சாத்விக எதிர்ப்பின்' முழு அர்த்தத்தையும் நான் புரிந்துகொண்டிருக்க வில்லை. ஒரு புதுத் தத்துவம் பிறந்திருக்கிறது என்பதை மட்டுமே நான் அறிந்தேன். போராட்டம் முன்னேறிக் கொண்டிருந்தபோது, 'சாத்விக எதிர்ப்பு' (Passive Resistance) என்ற சொற்றொடர் குழப்பத்தை உண்டாக்கியது. இப்பெரிய போராட்டம் ஓர் ஆங்கிலப் பெயரால் மாத்திரம் வழங்கப்படுவது வெட்கமாகத் தோன்றிற்று. தவிர, பாஸிவ் ரெஸிஸ்டன்ஸ் என்ற அந்நியநாட்டுச் சொற்றொடரைச் சமூகத்தில் எல்லோராலும் உபயோகப்படுத்த முடியவில்லை. ஆதலால், எங்கள் போருக்கு மிகவும் நல்ல பெயரைக் கண்டு பிடிக்கும் வாசகருக்கு ஒரு சிறு பரிசு அளிக்கப்படுமென 'இந்தியன் ஒப்பினிய'னில் பிரசுரம் செய்யப்பட்டது. பலவிதமான யோசனைகள் கூறப்பட்டன. இப்போராட்டக் கருத்துக்கள் 'இந்தியன் ஒப்பினிய'னில் முழுதும் எடுத்துரைக்கப்பட்டிருந்தன. இப் பரிசுக்குப் போட்டி போட்டவர்களிடத்தில் தங்கள் ஆராய்ச்சிக்கு அடிப்படையாக இருக்கப் போதுமான ஆதாரங்கள் இருந்தன. ஸ்ரீ மகன்லால் காந்தி இதில் போட்டி போட்டவர்களில் ஒருவர். 'சத்கிரஹ' என்ற வார்த்தையை அவர் சொன்னார். 'ஒரு நல்ல விஷயத்தில் உறுதி' என்பது அதற்குரிய பொருள். அவ்வார்த்தை எனக்குப் பிடித்தமாயிருந்தது. ஆனால், நான் எதிர்பார்த்த முழுக் கருத்தையும் அது தெரிவிக்கவில்லை. ஆதலால் அதைச் 'சத்தியாக்கிரகம்' என்று திருத்தினேன். 'ஸத்யம்' என்னும் வார்த்தையில் அன்பு என்னும் பொருள் மறைந்து நிற்கிறது; 'ஆக்ரஹ' என்றால் உறுதி. உறுதி, சக்தியை உண்டாக்குவதால், சக்தி என்ற அர்த்தத்துடன் விளங்குகிறது. இவ்விதம் இந்திய இயக்கத்தைச் 'சத்தியாக்கிரகம்' என்று கூற ஆரம்பித்தேன். அதாவது, உண்மையிலிருந்தும், சத்தியத்திலிருந்தும், அல்லது அகிம்சையிலிருந்தும் பிறந்த சக்தி என்பது அதன் பொருள். பாஸிவ் ரெஸிஸ்டன்ஸ் என்னும் சொற்றொடரின் பிரயோகத்தை அதிலிருந்து விட்டுவிட்டேன். ஆங்கிலக் கட்டுரைகளில் அவ்வார்த்தையை அதிகமாக விலக்கி, அதற்குப் பதிலாக, 'சத்தியாக்கிரகம்' என்னும் சொல்லையோ, அல்லது அதற்குத் தகுந்த வேறு ஆங்கிலச் சொற்களையோ உபயோகித்தோம். இதுதான் சத்தி

யாக்கிரகம் என்று சொல்லப்பட்ட இயக்கத்தின் ஆரம்பம். அதற்குப் பெயராக உபயோகப்படுத்தப்பட்ட வார்த்தையின் ஆரம்பமும் இதுவே. நாம் நம் சரித்திரத்தில் மேலே தொடர்வதற்கு முன் சாத்விக எதிர்ப்புக்கும் சத்தியாக்கிரகத்துக்கு முள்ள வித்தியாசத்தை அறிவது நலம். அதுவே அடுத்த அத்தியாயத்தின் விஷயமாகும்.

## பதின்மூன்ருவது அத்தியாயம்

# சத்தியாக்கிரகமும் சாத்விக எதிர்ப்பும்

இயக்கம் முன்னேற முன்னேற ஆங்கிலேயர்களுங்கூட அக்கறையுடன் அதைக் கவனிக்கத் தொடங்கினர்கள். டிரான்ஸ்வால் ஆங்கிலப் பத்திரிகைகள், சாதாரணமாக ஐரோப்பியர்களேயும் கறுப்புச் சட்டத்தையும் ஆதரித்து எழுதினலும், பிரபல இந்தியர்களின் கட்டுரைகளேயும் அவை விரும்பி வெளியிட்டன. இந்தியர்கள் அரசாங்கத்திடம் எடுத்துரைத்த விஷயங்களேயும் முழுவதுமோ அல்லது சுருக்கமாகவோ பிரசுரித்தன. சில சமயங்களில் இந்தியர்களுடைய முக்கியமான கூட்டங்களுக்குத் தங்கள் நிருபர்களேயும் அனுப்பின. அங்ஙனம் அனுப்பாத சமயங்களில், நாங்கள் அனுப்பிய சுருக்கமான அறிக்கைகளுக்கும் இடம் தந்தன.

இந்தச் சௌகரியங்கள் சமூகத்துக்குப் பயன் அளிக்கத் தக்கவையே. இயக்கம் வளர்ந்து வரவே, சில முக்கியமான ஐரோப்பியர்களும் இயக்கத்தில் அக்கறை காட்டத் தொடங்கினர்கள். இவர்களில் ஒருவர் ஹோஸ்கன் (Mr. Hosken). இவர் ஜொஹன்னஸ்பர்க்கைச் சேர்ந்த பெரிய தனவந்தர்களில் ஒருவர். இவருக்கு நிறத்துவேஷம் என்பது எப்பொழுதும் கிடையாது. ஆனல், சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்ட பிறகு இந்தியப் பிரச்னையில் இவருக்கு ஊக்கம் அதிகமாயிற்று. ஜெர்மிஸ்டன் என்பது ஜொஹன்னஸ்பர்க்கைச் சேர்ந்தாற் போலுள்ள ஓர் ஊர். அவ்வூரினரான ஐரோப்பியர்கள் என் பிரசங்கத்தைக் கேட்க விரும்புவதாகத் தெரிவித்தார்கள். ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. என்னேயும், நான் ஆதரிக்கும் இயக்கத்தையும் அறிமுகம்செய்து பேசும்போது ஸ்ரீ ஹோஸ்கன் பின்வருமாறு சொன்ஞர்: ''தங்கள் குறைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளுவதற்கான மற்றெல்லா வழிகளும் பயனற்றுப் போனதால், டிரான்ஸ்வால் இந்தியர்கள் சாத்விக எதிர்ப்பைக் கைக்கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு வோட்டுரிமை இல்லே. எண்ணிக்கையில் அவர்கள் மிகச் சிறிய தொகையினர். அவர்கள் பலவீனமாக இருப்பதுடன், அவர்களிடத்தில் ஆயுதங்களும் இல்லே. ஆதலால் பலமற்றவர்களின் ஆயுதமான சாத்விக எதிர்ப்பை அவர்கள் கைக்கொண்டிருக்கின்றனர்.'' இம்மொழிகள் என்னே

வியப்படையும்படி செய்தன. இதன் காரணமாக, நான் செய்ய விருந்த சொற்பொழிவு முற்றிலும் வேறுவகையாகத் திரும்பியது. ஸ்ரீ ஹோஸ்கன் கூறியதை மறுத்து, எங்களுடைய சாத்விக எதிர்ப்பை 'ஆன்ம சக்தி' என்று விவரித்தேன். 'சாத்விக எதிர்ப்பு' என்ற சொற்றொடரைப் பிரயோகம் செய்வது ஒரு விபரீதமான பொருளுக்கு இடங் கொடுக்கக்கூடு மென்பதை அக்கூட்டத்தில் கண்டேன். விஷயங்களைத் தெளிவாக்குவதற்காக அக்கூட்டத்திற்கு முன் சொன்ன வாதத்தை விவரித்து, சாத்விக எதிர்ப்புக்கும், ஆன்ம சக்திக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக் காட்ட முயற்சி செய்கிறேன்.

'சாத்விக எதிர்ப்பு' என்ற சொற்றொடர் எப்போது, யாரால் முதலில் ஆங்கிலத்தில் உபயோகப்படுத்தப்பட்டதென எனக்குத் தெரியாது. ஆனால், ஆங்கில மக்களில், ஒரு சிறுபான்மையோர், கொடிய சட்டம் ஒன்றை அங்கீகரிக்காத சமயமெல்லாம், அச்சட்டத்தை எதிர்த்துப் புரட்சி செய்வதற்குப் பதிலாகச் சாந்தமான அல்லது அமைதியான வழியில், அச்சட்டத்திற்குக் கீழ்ப்படிய மறுத்தனர். அப்படிக் கீழ்ப்படியாததனால் ஏற்படும் தண்டனையை, தங்கள்மீது ஏற்றுக்கொள்ளுவர். பிரிட்டிஷ் பார்லிமெண்டு சில ஆண்டுகளுக்கு முன் கல்விச் சட்டத்தை நிறைவேற்றியபோது, 'நான்கன்பர்மிஸ்ட்'டுகள்* (Non-Conformist), டாக்டர் கிளிப்போர்டு என்பவர் தலைமையின் கீழ், சாத்விக எதிர்ப்பைக் கைக்கொண்டனர். வோட்டுரிமை பெறுவதற்காக ஆங்கில மாதர் நடத்திய பெரிய இயக்கமும் சாத்விக எதிர்ப்பு என்று சொல்லப்பட்டது. இவ்விரண்டு உதாரணங்களைக் கொண்டே, சாத்விக எதிர்ப்பு பலவீனர்கள் அல்லது வோட்டுரிமை இல்லாதவர்களுடைய ஆயுதம் என்று ஹோஸ்கன் விவரித்தார். டாக்டர் கிளிப்போர்டுக்கும், அவர் நண்பர்களுக்கும் வோட்டுரிமையிருந்தது; ஆனால், அவர்கள் பார்லிமெண்டில் சிறுபான்மையோராயிருந்ததால், கல்விச் சட்டம் நிறைவேற்றப்படுவதைத் தடுக்க அவர்களால் முடியவில்லை. அதாவது, அவர்கள் எண்ணிக்கையில் பலவீனர்களா யிருந்தனர். தங்கள்

---

* நான்கன்பர்மிஸ்ட் (Non-Conformist) அல்லது இங்கிலீஷ் கிறிஸ்தவ சமயக் கோட்பாடுகளுக்கு உடன்படாதார். 1662-இல் ஆக்ட் ஆப் யூனிபார்மிடி என்ற சட்டம் அமலுக்கு வருமுன் இவர்களுக்கு 'ப்யூரிடன்ஸ்' (Puritans-தூய கோட்பாட்டினர்) என்ற பெயர் உண்டு. பதினேழாம் நூற்றாண்டில் ஆங்கில அரசாங்கத்தினர் இவர்கள்மீது பல முறை கடுமையான நடவடிக்கைகளை எடுத்துத் துன்புறுத்தினர். பின்னர் உரிய கௌரவத்துடன் இவர்களை நடத்தினர். பாப்டிஸ்டுகளும், பிரெஸ்பிடீரியன்களும் இவர்களைச் சேர்ந்தவர்களே.

லட்சியத்தை அடைவதற்கு அவர்கள் ஆயுதங்களை உபயோகப் படுத்துவதில் வெறுப்புக் கொண்டவர்களல்ல. ஆனால், ஆயுதத்தின் பலத்தால் வெற்றி அடைய முடியும் என்ற நம்பிக்கை அவர்களுக்கில்லை. ஒழுங்காக அமைந்த ஆட்சி நடக்கும் ஒரு நாட்டில், பொது மக்களுக்குரிய உரிமைகளைப் பெறுவதற்காக அடிக்கடி ஆயுதங்களை உபயோகப்படுத்துவது அவ்வியக்கத்தின் நோக்கத்தையே தோற்கடித்துவிடும். தவிர, அது அனுபவத்தில் சாத்தியமானதாகவே இருந்தாலும், சில 'நான்கன்பர்மிஸ்ட்டுகள்' பொதுவாக ஆயுதம் கையாளுவதை ஆட்சேபிப்பவர்கள். பெண்களுக்கு வோட்டுரிமை இல்லை; அவர்களும் எண்ணிக்கையிலும், உடல் உறுதியிலும் பலவீனர்கள். இவ்விதம் அவர்களுடைய உதாரணமும், ஹோஸ்கனுடைய அபிப்பிராயங்களுக்கு ஆதரவு அளித்தது. பெண்கள் வோட்டுரிமை பெற ஆரம்பிக்கப்பட்ட இயக்கம் (Suffragist movement) பலாத்காரத்தை உபயோகிப்பதை விலக்கவில்லை. சில பெண்கள் கட்டடங்களைக் கொளுத்தினார்கள்; ஆண்களையும் தாக்கினார்கள். அவர்கள் யாரையும் கொல்லப் பார்த்தனர் என்று நான் நினைக்கவில்லை. ஆனால், சந்தர்ப்பம் கிடைத்தபோது அவர்கள் ஆண்களை அடிக்கப் பார்த்தனர். இவ்வாறு அவர்களை வருத்த நினைத்தார்கள்.

ஆனால், இந்தியர்களின் இயக்கத்தில் எவ்விதச் சந்தர்ப்பத்திலும் மிருக பலத்துக்குச் சிறிதேனும் இடமில்லை. எவ்வளவு அதிகமாகக் கஷ்டப்பட்டாலும் சத்தியாக்கிரகிகள் ஒருபொழுதும் பலாத்காரத்தை உபயோகப்படுத்தவில்லை என்பதையும், மிருக பலத்தைச் சரியானபடி உபயோகிக்கக்கூடிய வாய்ப்பு அவர்களுக்கு இருந்தபோதிலும், அவர்கள் அதை உபயோகப் படுத்தவில்லை என்பதையும், மேலே போகப் போக நம் வாசகர்கள் அறிவார்கள். இந்தியர்கள் வோட்டுரிமை இன்றி வலிவற்றவராய் இருந்தபோதிலும், இவைகளுக்கும் சத்தியாக்கிரக இயக்கத்திற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இந்தியர் ஆயுதங்களும், வோட்டுரிமையும் பெற்றிருந்தாலும் அவர்கள் சத்தியாக்கிரகம் செய்திருப்பார்கள் என்று சொல்லுவதற்கில்லை. அவர்களுக்கு வோட்டுரிமை இருந்திருந்தால், ஒருவேளை சத்தியாக்கிரகம் அனுஷ்டிப்பதற்கு யாதோர் அவசியமுமே நேர்ந்திருக்காது. அவர்களிடத்தில் ஆயுதம் இருந்திருந்தால், அவர்களைப் பகைத்துக் கொள்ளுவதற்கு முன் எதிரிகள் பன்முறை யோசித்துப் பார்த்திருப்பார்கள். ஆதலால்,

ஆயுதங்களைப் பெற்றிருக்கும் மக்களுக்குச் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டிய சந்தர்ப்பங்கள் மிகச் சிலவே இருக்கும் என்பதை உணரலாம். இந்திய இயக்கத்தின் திட்டத்தைப் போடுவதில், ஆயுதம் கொண்டு எதிர்ப்பது சாத்தியம் என்பது பற்றியோ வேறு விதத்தைப்பற்றியோ யோசிப்பதற்கு இடம் அளிக்கப்படவில்லை என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியும் என் பதே நான் குறிப்பிட விரும்புவது. சத்தியாக்கிரகம் என்பது வெறும் (கலப்பற்ற) ஆன்ம சக்தி என்பது தெளிவு. ஆயுதப் பிர யோகம் அல்லது பலாத்காரம் அல்லது மிருகபலம் உப யோகப்படுத்துவதற்கு எந்த அளவிற்கு, எப்பொழுது இடம் இருக்கின்றதோ, அப்பொழுதெல்லாம், அவ்வளவிற்கு ஆன்ம சக்திக்கு வாய்ப்புக் குறைந்துவிடும். பலாத்காரமும் ஆன்மசக்தி யும் ஒன்றுக்கொன்று முரணுனவை என்பது என்னுடைய அபிப்பிராயம். சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்ட சமயத் திலும் இம்முரண்பாட்டை நான் முற்றிலும் உணர்ந்திருந்தேன்.

இவ்வபிப்பிராயங்கள் நேரானவையா, தவருனவையா என்று யோசிக்க நாம் இங்கே நிற்க வேண்டியதில்லை. சாத்விக எதிர்ப்புக்கும் சத்தியாக்கிரகத்துக்கும் உள்ள வித்தியாசத்தை இங்கே குறிப்பிடுவதே நம் வேலையாகும். இவ்விரண்டிற்கும் அடிப்படையான ஒரு பெரிய வித்தியாசம் இருப்பதையும் கண்டோம். இதை அறியாமல் தங்களைச் சாத்விக எதிர்ப்புக் காரர்கள் அல்லது சத்தியாக்கிரகிகள் என்று சொல்லிக்கொள்ளு பவர்கள், இவ்விரண்டும் ஒன்றெ்ன நினைத்தால், இரண்டிற்கும் குறை ஏற்பட்டு, இதனுல் எதிர்பாராத தீமைகளுக்கு இடம் உண்டாகலாம். தென்னுப்பிரிக்காவில் நாங்கள் ‘சாத்விக எதிர்ப்பு’ என்னும் சொற்ருெடரை உபயோகப்படுத்தியதன் விளைவு என்னவெனில், எங்களைப் பாராட்டிய மக்கள், பெண்கள் வோட்டுரிமை வாதிகளுக்கு இருந்த துணிவு, தியாகம் போன்ற குணங்களும் எங்களிடம் தென்பட்டதற்காக மெச்சியதன்று. பெண்கள் வோட்டுரிமை வாதிகளைப் போல நாங்களும், மக்களுக்கும் பொருள்களுக்கும் சேதம் விளைவிக்கக் கூடியவர்களென்று தவருகக் கருதப்பட்டதேயாம். ஸ்ரீ ஹோஸ் கன் போன்ற தாராளம் மிக்க ஒரு நண்பரும் எங்களைப் பலவீனர்களென நினைத்தார். சிந்தனைக்குரிய வலிமை எத் தகையதெனில், ஒரு மனிதன் தன்னைப்பற்றி எவ்வாறு நினைக்கிருனே அவ்வாறே முடிவில் ஆகிருன். நாம் பலவீனர் களென்றும், உதவியில்லாதவர்களென்றும், இதனுலேயே சாத்

விக எதிர்ப்புச் செய்கிறோமென்றும், நம் மனத்தில் இடைவிடாமல் நினைத்து, மற்றவர்களையும் அங்ஙனமே நினைக்கச் செய்வோமானால், இந்த எதிர்ப்பு நமக்கு எப்போதும் பலத்தை உண்டாக்காது. சாத்விக எதிர்ப்பு பலவீனர்களின் ஆயுதமென நினைத்து, சீக்கிரத்திலே அதைக் கைவிட்டுவிடுவோம். அதற்கு மாறாக, நாம் சத்தியாக்கிரகிகளாக இருந்து சீக்கிரத்திலேயே சக்தி படைத்தவர்களென நம்பிச் சத்தியாக்கிரகம் செய்வோமானால், இரண்டு தெளிவான விளைவுகள் அதிலிருந்து தோன்றும். நாம் பலமுள்ளவர்கள் என்ற எண்ணத்தை வளர்த்துக்கொள்ளுவதால் நாளுக்கு நாள் அதிக பலம் அடைகிறோம். நமக்குள்ள சக்தி அதிகமாக ஆகச் சத்தியாக்கிரகத்தின் வலிமையும் வளர்கிறது. அதை விட்டுவிடுவதற்கு ஒரு சந்தர்ப்பத்தை ஒருபொழுதும் தேடிக்கொண்டிருக்கவும் மாட்டோம்.

தவிர, சாத்விக எதிர்ப்பில் அன்பிற்கு இடமில்லை. அதற்கு மாறாகச் சத்தியாக்கிரகத்தில் துவேஷத்திற்கு இடமில்லாமலிருப்பதோடு சத்தியாக்கிரகத்தின் ஆதார தத்துவத்துக்கே அது விரோதமாகவும் ஆகிறது. சாத்விக எதிர்ப்பில் தகுந்த தருணம் ஏற்பட்டால் ஆயுதப் பிரயோகத்துக்கு இடம் உண்டு. ஆனால், மிகவும் அனுகூலமான சந்தர்ப்பங்களிலும்கூடச் சத்தியாக்கிரகத்தில் பலாத்காரம் விலக்கப்பட்டிருக்கிறது. சாத்விக எதிர்ப்பு பலாத்காரத்தின் உபயோகத்திற்கான தயாரிப்பென்றே பல சமயங்களிலும் கருதப்படுகிறது. ஆனால், சத்தியாக்கிரகத்தை எப்பொழுதும் அப்படி உபயோகப்படுத்த முடியாது. ஆயுதத்தின் பிரயோகத்துடன் சேர்ந்தே சாத்விக எதிர்ப்பும் செய்யப்படலாம். சத்தியாக்கிரகமும் மிருகபலமும் ஒன்றுக்கொன்று எதிர்மறையாக இருப்பதால் இவ்விரண்டும் சேர்ந்திருக்க முடியாது. மிகவும் நெருங்கிய உறவினரிடமும், அன்பர்களிடத்திலும் சத்தியாக்கிரகம் செய்யப்படலாம். அவர்கள் அன்பர்களாக இருப்பதுபோய், விரோதிகளானால் ஒழியச் சாத்விக எதிர்ப்பு இவ்விதம் அவர்களிடம் செய்யமுடியாது. சாத்விக எதிர்ப்பில் எதிரியைத் துன்பப்படுத்த வேண்டுமென்ற எண்ணமும், அதோடு அங்ஙனம் செய்தால் ஏற்படும் கஷ்டங்களைச் சகிக்கத் தயாராக இருக்க வேண்டுமென்ற தன்மையும் எப்பொழுதும் காணப்படுகின்றன. ஆனால், சத்தியாக்கிரகத்தில் பகைவனுக்குத் தீமை செய்ய வேண்டுமென்ற எண்ணம் சிறிதளவும் இல்லை. தான் துன்பங்களுக்கு உட்படுவதன்

மூலம் எதிரியை வெல்லலாம் என்பதையே சத்தியாக்கிரகம் சித்தாந்தமாகக் கொண்டிருக்கிறது.

இவ்விரண்டு சக்திகளுக்கும் உள்ள வித்தியாசம் இவையே. முன் சொல்லப்பட்டிருக்கிற சாத்விக எதிர்ப்பிற்குரிய குணங்கள், அல்லது நீங்கள் அப்படி நினைத்தால் குற்றங்கள், அப்பெயரால் வழங்கும் ஒவ்வோர் இயக்கத்திலும் காணப்படுகின்றன என நான் சொல்ல விரும்பவில்லை. ஆனால், சாத்விக எதிர்ப்பு நடத்திய பல விஷயங்களில் இக்குறைகள் காணப்பட்டிருக்கின்றன என்று நிரூபிக்கலாம். சாத்விக எதிர்ப்புச் செய்தவர்களில் தலையாயவர் ஏசு கிறிஸ்து என்று சொல்லப்படுகிறது. ஆனால், அவர் விஷயத்தில் அந்தச் சாத்விக எதிர்ப்பைச் சத்தியாக்கிரகம் என்றே கொள்ளவேண்டும். சாத்விக எதிர்ப்புக்களின் சரித்திரத்தில் அக்கருத்துடைய சாத்விக எதிர்ப்புக்கள் பல தோன்றவில்லை. அவைகளில் ஒன்று டால்ஸ்டாயால் குறிப்பிடப்பட்டிருக்கிற ருஷிய தேசத்து டௌகோபார் (Doukhobars)* இயக்கம். கிறிஸ்துவ மதத்தின் ஆரம்ப காலத்தில் ஆயிரக்கணக்கான கிறிஸ்து பக்தர்கள் கொடுமைகளைப் பொறுமையுடன் சகித்ததற்குச் சாத்விக எதிர்ப்பு என்ற சொற்றொடர் உபயோகப்படுத்தப்படவில்லை. ஆதலால், அவர்களைச் சத்தியாக்கிரகிகள் என்ற பிரிவில் சேர்ப்பேன். அவர்களுடைய செய்கை சாத்விக எதிர்ப்பே என்று சொல்லப்படுமானால், சாத்விக எதிர்ப்பு சத்தியாக்கிரகம் என்ற அர்த்தத்தையே கொள்ளுகிறது. மக்கள் சாதாரணமாகச் சாத்விக எதிர்ப்பு என்னும் ஆங்கிலச் சொற்றொடரால் எந்தக் கருத்தைக் கொண்டிருக்கின்றனரோ, அதிலிருந்து சத்தியாக்கிரகம் அடிப்படையாக மாறுபட்டிருக்கிற தென்பதை இந்த அத்தியாயத்தில் எடுத்துக் காட்டுவது எனது நோக்கமாகும்.

---

*டௌகோபார்: ஆன்மப் போரில் வல்லவர்கள் என்பது இதன் பொருள். 18–ஆம் நூற்றாண்டில் ருஷ்யாவில் தோன்றிய ஒரு சமயக் குழுவினர் இவர்கள். இவர்களுடைய சமயக்குரவர் பீட்டர் வெரிகின். கிறிஸ்துவின் கடவுள் தன்மையை மறுப்பவர்; சுவிசேஷச் செய்திகளை உருவகப் பொருளில் கொள்ளுவோர்; எந்தவிதமான அதிகாரத்துக்கும் உட்படாதவர். இறைவன் முன்பு எவரும் சமம் என்று கருதுபவர். ஜார் கால ருஷிய அரசாங்கம் இவர்களைக் கொடுமையாக நடத்தியது. டால்ஸ்டாய், இவர்களைத் தம் நண்பரெனப் போற்றினார். ருஷிய அடக்குமுறையிலிருந்து தப்ப கனடாவிலுள்ள ஸஸ்கட்சிவானில் குடியேறினர். அங்கே கனடா சமுதாயத்துடன் கலந்துவிட்டனர். அவர்கள் பயின்ற சில சாதனைகள் – அம்மணமாக இருத்தல், குழந்தைக் கல்வி. இவை சம்பந்தமாக அரசாங்கத்துக்கும் இவர்களுக்கும் இடையே மனத்தாங்கல் மூண்டது.

சாத்விக எதிர்ப்பின் தன்மைகளைப்பற்றிச் சொல்லும் போது, அதை அனுசரிப்போர்மீது நியாயமின்றிக் குறை சொல்லாமல் இருக்கும் பொருட்டு, நான் ஓர் எச்சரிக்கை விடுக்க வேண்டி யிருக்கிறது. சத்தியாக்கிரகிகள் என்று தங்களைச் சொல்லிக்கொள்ளும் எல்லோருக்கும், சத்தியாக்கிரகத்தின் தன்மைகள் என்று நான் விவரித்துள்ள எல்லா நற்பண்புகளும் பொருந்தியிருக்கின்றன என்று நான் உரிமை கொண்டாட வில்லை. சத்தியாக்கிரகிகள் என்று கூறிக்கொள்ளும் பலர், சத்தியாக்கிரகத்தின் தத்துவங்களுக்கு முற்றிலும் புதுமையான வர்கள் என்பதையும் நான் அறியாதவனல்ல. சத்தியாக்கிரகம் பலவீனர்களுடைய ஆயுதம் என்று பலர் நினைக்கின்றனர். அதை ஆயுதத்தோடு கூடிய எதிர்ப்புக்குத் தயார் செய்யும் முறையென மற்றவர்கள் சொல்லியிருக்கின்றனர். சத்தியாக்கிரகிகள் இப் பொழுது இருக்கின்ற மாதிரியை விவரிப்பது என்னுடைய நோக்கமல்ல. ஆனல், சத்தியாக்கிரகத்தின் உட்பொருளையும், உண்மைச் சத்தியாக்கிரகிகளின் குணதிசயங்களையும் எடுத்துரைப்பதே என்னுடைய நோக்கமென்று இங்கே மறுபடியும் சொல்ல விரும்புகிறேன்.

டிரான்ஸ்வாலில் இந்தியர்களின் இயக்கத்தைக் குறிப்பதற்காகவும், அது சாதாரணமாகச் சொல்லப்படும் சாத்விக எதிர்ப்போடு குழப்பப்படாமல் இருப்பதற்காகவும் நாங்கள் ஒரே சொல்லுடைய ஒரு பெயரைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. அக்காலத்தில் அப்பெயரின் பொருளுக்கு அடிப்படையாகக் கருதப்பட்ட பல தத்துவங்களையும் இவ்வத்தியாயத்தில் காட்ட முயன்றுள்ளேன்.

பதினென்காவது அத்தியாயம்

# இங்கிலாந்துக்குத் தூது

கறுப்புச் சட்டத்தைத் தடுப்பதற்கு, அந்நாட்டு அரசாங கத்திற்கு விண்ணப்பம் செய்தல் முதலிய அவசியமான நடவடிக்கைகள் யாவும் டிரான்ஸ்வாலிலேயே செய்யப்பட்டன. பெண்களைப் பாதிக்கும் ஷரத்தை எடுத்துவிட்டு, அவசரச் சட்டத்தின் மற்றப் பிரிவுகள் அனைத்தும் முன் இருந்த உருவிலேயே சட்டசபையில் நிறைவேற்றப்பட்டன. இந்திய சமூகத்தினருக்கு மனவெழுச்சி மிகுந்திருந்தது. தங்களுக்குள்ளிருந்த கட்சிபேதங்களைப் போக்கிவிட்டு, அவசரச் சட்டத்தை எதிர்ப்பதில் ஒருமுகமாயிருந்தனர். எவரும் மனம் தளர்ந்திருக்கவில்லை. எனினும், சட்டப்படி பரிகாரம் கிடைக்கக்கூடிய முறைகள் யாவற்றையும் முதலில் முயற்சி செய்து பார்த்துவிட வேண்டும் என்ற தீர்மானத்தையே இன்னும் அனுசரித்தோம். டிரான்ஸ்வால் இன்னும் பிரிட்டனின் நேர் ஆட்சிக்கு உட்பட்டதாயிருந்தது. அதன் சட்டங்களுக்கும், ஆளுகைக்கும் பிரிட்டிஷ் அரசாங்கமே ஜவாப்தாரியாக இருந்தது. ஆதலால் அதன் சட்டசபையால் நிறைவேற்றப்படும் மசோதாக்களுக்கு அரசர் அனுமதி பெற வேண்டுமென்பது வெறும் ராஜாங்க முறை மாத்திரமன்று. சில சமயங்களில் பிரிட்டிஷ் அரசியல் அமைப்புக்குப் பொருத்தமின்றி இருந்தால் அம்மசோதாக்கள் நிராகரிக்கப்பட வேண்டுமென்ற மந்திரிகளின் யோசனையின்பேரில், அவைகளுக்கு அரசர் தம் சம்மதத்தைக் கொடுக்காமல் இருக்கலாம். அதற்கு மாருக, பொறுப்பாட்சி பெற்ற ஒரு காலனி நாட்டில், சட்டசபைகள் நிறைவேற்றிய மசோதாக்களுக்கு அரசருடைய சம்மதம் என்பது அநேகமாய் வெறும் சம்பிரதாயமாக மட்டுமே இருக்கும்.

இங்கிலாந்துக்கு ஒரு தூது கோஷ்டியை அனுப்ப வேண்டுமெனில், இந்திய சமூகத்தார் தங்கள் முழுப் பொறுப்பையும் நன்ருக உணரவேண்டுமென நான் உரைத்தேன். இந்த நோக்கத்தைக் கொண்டு மூன்று யோசனைகளை எங்கள் சங்கத்தின் முன்னர் வைத்தேன். முதலாவது, எம்பயர் கொட்டகையில் நடந்த கூட்டத்தில் முன்னமேயே நாங்கள் எடுத்துக்கொண்டிருந்த பிரதிக்ஞைகளை, மறுபடியும் முக்கியமான இந்தியர்

களிடமிருந்து தனித்தனியாக வாங்கவேண்டும். ஏனெனில், சிலர் சந்தேகம் அல்லது பலவீனத்துக்கு இடம் கொடுத்திருந்தால், இதன் மூலம் அது தெரிந்துவிடும். இந்த யோசனைக்கு ஆதரவாக நான் சொன்ன காரணங்களில் ஒன்று யாதெனில், தூதுகோஷ்டிக்குச் சத்தியாக்கிரகம் என்னும் பக்கபலம் இருப்பின், அவர்கள் நம் சமூகத்தின் தீர்மானத்தை இந்தியா மந்திரிக்கும், குடியேற்ற நாடுகள் மந்திரிக்கும் பயமின்றித் தைரியத்துடன் தெரிவிக்க முடியும் என்பதே. இரண்டாவதாக, பிரதிநிதிகளின் செலவுக்கான ஏற்பாடுகளை முன்னமேயே செய்துவிட வேண்டும். மூன்றாவதாக, தூதுகோஷ்டியில் அதிகபட்சம் இத்தனை பேர் இருக்க வேண்டும் என்பதை நிச்சயிக்க வேண்டும்; அதிக அங்கத்தினர் இருந்தால் அதிக வேலை செய்ய முடியும் என்ற தப்பபிப்பிராயத்தைத் திருத்தவும், சமூகத்துக்கு ஒரே நினைவுடன் சேவை செய்ய முன்வரவேண்டுமே யொழிய வெறும் கௌரவத்துக்காகப் பிரதிநிதிகளாயிருக்க முன்வரக் கூடாதென்பதைத் தெளிவாக்கவும் நான் இந்த யோசனைகளைக் கொண்டுவந்தேன்.

இந்த மூன்று யோசனைகளும் ஒப்புக்கொள்ளப்பட்டன. கையெழுத்துக்களும் வாங்கப்பட்டன. பலர் பிரதிக்ஞைகளில் கையெழுத்திட்டனர். ஆனால், கூட்டத்தில் வாயால் ஒப்புக்கொண்டவர்களிலும் சிலர், பிரதிக்ஞைகளில் கையெழுத்திடத் தயங்கியதைப் பார்த்தேன். ஒருவர் ஒருதரம் பிரதிக்ஞை செய்துகொண்டால், பிறகு நூறுதரம் பிரதிக்ஞை செய்துகொள்ளுவதற்கும் தயங்க வேண்டிய அவசியமில்லை. எனினும், உள்ளூற எடுத்துக்கொண்ட பிரதிக்ஞைகளில் மக்கள் பலவீனம் அடைவதும், வாயால் செய்த பிரதிக்ஞையை எழுத்து மூலம் செய்யத் தடுமாறுவதும் சாதாரண அனுபவம். தூதுகோஷ்டியின் செலவுக்குத் தேவையான பணமும் சேகரிக்கப்பட்டது.

தூதுகோஷ்டியின் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பது தான் மிகவும் கடினமானதாயிருந்தது. நான் போக வேண்டியது அவசியம். ஆனால், என்னுடன் மேலும் யார் போவது? இதில் ஒரு முடிவுக்கு வரக் கமிட்டிக்கு அதிக நேரம் பிடித்தது. பல இரவுகள் கழிந்தன. சங்கங்களில் சாதாரணமாக இருக்கும் கெட்ட வழக்கங்களின் அனுபவங்கள் யாவும் எங்களுக்கு ஏற்பட்டன. என்னைத் தனியாகப் போகும்படிச் சொல்லி, சிலர் இத்தீராச் சிக்கலைத் தீர்க்க முயன்றனர். ஆனால், நான் கண்டிப்பாய் அதை மறுத்துவிட்டேன். தென்னாப்பிரிக்காவில் ஹிந்து-

முஸ்லிம் பிரச்னை இல்லையென்றே கூறலாம். ஆனல், இவ்விரு வகுப்பாருக்குள் அபிப்பிராய பேதமில்லையென்று சொல்ல முடியாது. இந்த அபிப்பிராய வேற்றுமை என்றும் அதிகமாகித் தீவிரம் அடையாமல் இருந்ததற்குத் தென்னுப்பிரிக்காவிலிருந்த விசேஷ நிலைமையே ஒரு காரணமாக இருக்கலாம். தலைவர்கள் அன்புடனும் நேர்மையுடனும் உழைத்து, தங்கள் சமூகத்துக்கு இவ்விஷயத்தில் சிறந்த உதாரணமாயிருந்து காண்பித்ததே இதற்கு முக்கிய காரணமெனச் சொல்ல வேண்டும். ஒரு முஸல்மான் என்னுடன் போகவேண்டுமென்றும், அங்கத்தினர்கள் இருவருக்கு அதிகமாக இருக்கக்கூடாதென்றும் நான் கூறினேன். இந்திய சமூகம் முழுவதற்குமே நான் பிரதிநிதியாக இருந்ததால் தங்களுடைய கோரிக்கைகளைப் பாதுகாப்பதற்கு ஒரு ஹிந்து பிரதிநிதி இருக்க வேண்டுமென ஹிந்துக்கள் கூறினர். சிலர், ஒரு கொங்கணி முஸல்மான், ஒரு மெமன், ஒரு படிதார், ஓர் அனுவாலா முதலியோர் இருக்க வேண்டுமென்றுகூடச் சொன்னர்கள். கடைசியில் உண்மை நிலைமையை யாவரும் உணர்ந்தனர். ஸ்ரீ ஹெச். ஓ. அலியும், நானும்-ஆக இருவர் மாத்திரம் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டோம்.

ஸ்ரீ ஹெச். ஓ. அலியைப் பாதி மலேயாக்காரர் எனக் கொள்ளலாம். அவர் தந்தை இந்திய முஸல்மான். அவர் தாய் மலேயாக்காரர். அவரது தாய்மொழி டச்சு என்றே சொல்ல வேண்டும். அவர் ஆங்கிலமும் நன்ருய்க் கற்றிருந்ததால் டச் அளவு ஆங்கிலத்திலும் நன்ருகப் பேசுவார். பத்திரிகைகளுக்கு வியாசம் எழுதும் முறையையும் அறிந்திருந்தார். டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்தியர் சங்கத்தில் அவர் அங்கத்தினராக இருந்ததுடன், வெகு காலமாகப் பொதுவேலைகளில் ஈடுபட்டிருந்தார். ஹிந்துஸ்தானியில் நன்ருகப் பேசும் திறனும் அவருக்கு இருந்தது.

இங்கிலாந்து போய்ச் சேர்ந்ததும், நாங்கள் வேலை செய்ய ஆரம்பித்தோம். மந்திரியிடம் சமர்ப்பிக்க இங்கிலாந்துக்குப் போகும் வழியில், கப்பலில் ஒரு விண்ணப்பம் தயார் செய்திருந்தோம். அதை அச்சிட்டோம். லார்டு எல்ஜின் குடியேற்ற நாடுகளின் மந்திரி; லார்டு மார்லி இந்தியா மந்திரி. தாதாபாய் நவ்ரோஜியைச் சந்தித்து, அவர்மூலம் இந்திய தேசீய காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டியையும் நாங்கள் சந்தித்தோம். எங்கள் விஷயத்தை அவர்கள் முன்னிலையில் வைத்தோம்.

தாதா பாய் நவ்ரோஜி சொல்லியபடி, எல்லாக் கட்சிகளின் ஒத்துழைப்பையும் பெற நாங்கள் விரும்புவதையும் தெரிவித்தோம். அக்கமிட்டி எங்கள் அபிப்பிராயத்தை அங்கீகரித்தது. ஸர் மன்கர்ஜி பாவ்நக்ரியையும் கண்டோம். அவரும் எங்களுக்கு அதிக உதவியாக இருந்தார். அவரும் தாதாபாயும், எங்களை லார்டு எல்ஜினுக்கு அறிமுகம் செய்துவைக்கப் பாரபட்சமற்ற பிரபல ஆங்கிலோ-இந்தியர் ஒருவருடைய உதவியை நாடும்படி சொன்னார்கள். ஸர் மன்கர்ஜி சிலரைக் குறிப்பிட்டார். அவர்களுள் ஸர் லெப்பல் கிரிப்பின் ஒருவர். ஸர் வி. வி. ஹண்டர் அப்பொழுது உயிருடன் இல்லை. அவர் இருந்திருந்தால், தென்னாப்பிரிக்காவில் இந்தியர்களின் நிலைமைபற்றி அவர் நன்கு அறிந்தவரானதால், அவரே இத் தூதுகோஷ்டிக்குத் தலைமை வகித்திருப்பார்; அல்லது செல்வாக்குள்ள லார்டு சபை அங்கத்தினர் ஒருவரை அவ்விதம் வகிக்கச் செய்திருப்பார்.

ஸர் லெப்பல் கிரிப்பினை நாங்கள் கண்டோம். அக்காலத்து இந்திய ராஜீய இயக்கங்களுக்கு அவர் விரோதமாக யிருந்தார். ஆனால், இவ்விஷயத்தில் அவருக்கு மிகவும் அனுதாபம் உண்டாயிற்று. மரியாதைக்காக அல்லாமல், எங்கள் கட்சியின் நியாயத்திற்காகவும், உண்மைக்காகவும் எங்கள் தூதுக்குத் தலைமை வகிக்க ஒப்புக்கொண்டார். தஸ்தாவேஜுகள் அனைத்தையும் படித்து, விஷயத்தை அறிந்துகொண்டார். மற்ற ஆங்கிலோ-இந்தியர்களையும், பார்லிமெண்டு சபை அங்கத்தினர்களையும், மற்றும் நாங்கள் பார்க்க முடிந்த பிற முக்கியஸ்தர்களையும் கண்டு பேசினோம். தூதுகோஷ்டி லார்டு எல்ஜினைக் கண்டது. அவர் எல்லாவற்றையும் கவனமாய்க் கேட்டுக்கொண்டு, தமது அனுதாபத்தைச் சொல்லி, தம் கஷ்டங்களையும் தெரிவித்து, தம்மால் இயன்றதையெல்லாம் செய்வதாக வாக்குறுதி அளித்தார். அதே தூதுகோஷ்டி ஸ்ரீ மார்லியையும் கண்டது. அவரும் தம் அனுதாபத்தைத் தெரிவித்தார். அவர் சொன்ன பதிலின் சுருக்கத்தை முன்னமேயே கொடுத்திருக்கிறேன். ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் உதவியினால் இந்திய விஷயங்களைப்பற்றிக் கவனிக்கும் காமன்ஸ் சபைக்கமிட்டியின் கூட்டமொன்று காமன்ஸ் சபைக் கட்டடத்தின் ஒரு பகுதியில் கூட்டப்பட்டது. அவர்கள் முன்னிலையிலும், எங்களால் முடிந்தவரை எங்கள் கட்சியை எடுத்துரைத்தோம். அப்பொழுது ஐரிஷ் கட்சிக்குத் தலைவரா யிருந்த ஸ்ரீ ரெட்மண்டையும் கண்டோம். சுருங்கச் சொல்லுமிடத்து, இன்ன கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதைக்

கவனிக்காமல் நாங்கள் எத்தனை பார்லிமெண்டு அங்கத்தினர் களைப் பார்க்கக் கூடுமோ அத்தனை பேரையும் பார்த்தோம். இந்திய தேசீய காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டி அதிக உதவியாக யிருந்தது. ஆனால், ஆங்கில வழக்கப்படி, ஒரு குறிப்பிட்ட கட்சி யில் சேர்ந்திருந்து, ஒரு குறிப்பிட்ட அபிப்பிராயம் உள்ளவர்கள் மாத்திரமே அக்கமிட்டியில் சேருவார்கள். இக்கமிட்டியுடன் யாதொரு சம்பந்தமும் இல்லாத பலரும், எங்களுக்குத் தம்மால் இயன்ற உதவி அனைத்தையும் செய்தனர். இவர்கள் எல்லோரை யும் சேர்த்து நிரந்தரக் கமிட்டி யொன்றை அமைக்கத் தீர்மானித் தோம். எங்கள் நன்மைகளைக் கவனித்து வருவதற்கு இது மிகவும் உபயோகப்படும். இக்கருத்து எல்லாக் கட்சிகளில் இருப்பவர்களுக்கும் பிடித்திருந்தது.

ஒரு ஸ்தாபனத்தின் வேலையைச் செய்யும் பொறுப்பு பெரும் பாலும் அதன் காரியதரிசியின்மீதே விழும். காரியதரிசி, அந்த ஸ்தாபனத்தின் நோக்கங்களில் முழு நம்பிக்கை யுள்ளவராக இருப்பதோடு, அநேகமாய் தம் முழு நேரத்தையும் அந்நோக் கங்கள் வெற்றி அடைவதற்காகச் செலவிட்டு உழைக்கத் தயாராக இருக்க வேண்டும். இத்துடன் வேலை செய்யும் திறமை யும் வேண்டும். முன்பு என்னிடத்தில் தொழில் பழகிக் கொண் டிருந்து, அப்பொழுது வக்கீல் தொழிலுக்காக லண்டனில் படித்துக்கொண்டிருந்த ஸ்ரீ எல். டபிள்யூ. ரிட்ச் என்ற தென் னுப்பிரிக்கவாசி ஒருவரிடம் இக்குணங்கள் யாவும் பொருந்தி யிருந்தன. அவர் இங்கிலாந்தில் இருந்தார். இவ்வேலையை ஏற்றுக்கொள்ள விருப்பமும் அவருக்கு இருந்தது. தென்னுப் பிரிக்கா பிரிட்டிஷ் இந்தியன் கமிட்டியை அமைக்க நாங்கள் முன் வந்தோம்.

இங்கிலாந்திலும் மற்ற மேல்நாடுகளிலும், என் அபிப் பிராயப்படி மிகவும் அநாகரிகமான ஒரு வழக்கம் உண்டு. விருந்து வைத்து இயக்கங்களை ஆரம்பித்து வைப்பதே அது. நவம்பர் மாதம் 9-ஆம் தேதியில் மான்ஷன் ஹவுஸில், பிரிட்டிஷ் பிரதம மந்திரி அவ்வருடத்திய திட்டத்தையும், எதிர்காலத் தைப்பற்றிய தம்முடைய ஹேஷ்யங்களையும் தெரிவித்து ஒரு முக்கியமான பிரசங்கம் செய்கிறார். ஆதலால், அது எல்லோரு டைய கவனத்தையும் ஈர்க்கும். மற்றவர்களுடன் மந்திரிகளும் லண்டன் நகரின் லார்டு மேயர் நடத்தும் விருந்துக்கு அழைக்கப் படுகின்றனர். விருந்துச் சாப்பாடு முடிந்ததும் மதுபானம் வழங்கப்படும். வந்திருப்போர் அனைவரும் 'விருந்தாளியின்

நலத்துக்கும், உபசரிப்பவர் நலத்துக்காகவும்' என்று கூறிக் குடிக்கின்றனர். இந்தத் தெம்பான விஷயத்தின் இடையே பிரசங்கங்களும் நிகழும்; பிரிட்டிஷ் மந்திரி சபைக்கு வாழ்த்துக் கூறப்படுகிறது. அவ்வாழ்த்துக்குப் பதில் கூறுகையில் பிரதம மந்திரி, நான் முன் குறிப்பிட்டபடி முக்கியமான பிரசங்கத்தைச் செய்கிறார். பொதுவாகவும் சரி, தனிப்பட்டும் சரி, எவரிடம் முக்கியமான விஷயங்களைப் பேச வேண்டியிருக்கின்றதோ அவர், வழக்கப்படி விருந்துக்கு அழைக்கப்படுகிறார். விருந்து நடக்கும்போதோ அல்லது விருந்து முடிந்த பிறகோ குறிப்பிட்ட விஷயம் பேசப்படும். நாங்களும் இவ் வழக்கத்தை அனுசரிக்க வேண்டி யிருந்தது. ஒரு தடவையல்ல, பல தடவைகளில் இப்படிச் செய்தோம். எனினும், இறைச்சியையும் மதுவையும் நாங்கள் ஒருபோதும் தொட்டதில்லை. இங்ஙனம் எங்களுக்கு ஆதரவு அளிப்பவர்களில் முக்கியமானவர்களை நாங்கள் விருந்துக்கு அழைத்தோம். சுமார் நூறுபேர் சாப்பிட ஏற்பாடாகி இருந்தது. இந் நண்பர்களுக்கு வந்தனம் கூறி, அவர்களிடமிருந்து விடை பெற்றுக்கொள்ளுவதுடன், நிரந்தரக் கமிட்டியொன்று அமைப்பதே எங்கள் விருந்தின் நோக்கம். இதிலும் உணவுக்குப்பின் வழக்கம் போல் பிரசங்கங்கள் நடந்தன. அக்கமிட்டியும் அமைக்கப்பட்டது. இதன் மூலம் எங்கள் இயக்கத்திற்கு விளம்பரம் கிடைத்தது.

சுமார் ஆறு வாரம் இங்கிலாந்தில் தங்கிய பிறகு தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்பினோம். நாங்கள் *மெடீராவைச் சேர்ந்தபோது, ரிட்ச் இடமிருந்து எங்களுக்கு ஒரு தந்தி கிடைத்தது. டிரான்ஸ்வால் ஆசியாவாசிகள் அவசரச்சட்டத்தை அமலுக்குக் கொண்டுவரும் விஷயமாய் மேற்கொண்டு எந்த யோசனைக்கும் இடமிராமல் அதற்குச் சம்மதம் தருமாறு அரசருக்குத் தாம் ஆலோசனை கூற முடியாதென லார்டு எல்ஜின் தெரிவித்தாரென அதில் கண்டிருந்தது. இதனால் நாங்கள் அடைந்த ஆனந்தத்திற்கு அளவேயில்லை. கப்பல் மெடீராவிலிருந்து கேப் டவுனுக்குப் போவதற்குப் பதினான்கு

---

* அட்லாண்டிக் சமுத்திரத்தில், வடமேற்கு ஆப்பிரிக்கா ஓரமாக இருக்கும் தீவு. போர்ச்சுகீசியர்களுக்குச் சொந்தம். 315 சதுர மைல்கள் பரப்புடையது. 1950-இல் இதன் ஜனத்தொகை 2,69,179. திராட்சை ரசம், சர்க்கரை, கனி வகைகள் இங்கே கிடைக்கும். விடுமுறைக்கு ஏற்ற உறைவிடம். ஐரோப்பாவிலிருந்து தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லும் கப்பல்கள் இதன் வழியாகத்தான் போகவேண்டும்.

தினங்களாயின. இந்நாட்களை நாங்கள் மிகவும் சந்தோஷமாகக் கழித்தோம். மற்றக் குறைகளின் பரிகாரத்தைப் பற்றியும் மனக்கோட்டை கட்டிக்கொண்டிருந்தோம். ஆனல், கடவுளின் ஆக்ஞையை யார் கண்டார்கள்? இப்படி எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கட்டிய மனக்கோட்டைகளெல்லாம் எப்படி அடியோடு தகர்ந்து அழிந்தன என்பதை அடுத்த அத்தியாயத்தில் கவனிப்போம்.

ஆனல், இந்த அத்தியாயத்தை முடிப்பதற்கு முன் இரண்டொரு புனிதமான நினைவுகளைப்பற்றியும் நான் குறிப்பிட வேண்டும். இங்கிலாந்தில் ஒவ்வொரு நிமிடத்தையும் நாங்கள் பயன்படுத்திக்கொண்டோம். அதிகமான சுற்றறிக்கைகள் முதலியவைகளை எங்களால் தனியே பட்டுவாடா செய்ய முடியவில்லை. எங்களுக்கு வெளி உதவி அவசியமாயிற்று. பணத்தால் நிச்சயமாய் இவ்வுதவியைப் பெறலாம். ஆனல், பணத்தால் விலைக்கு வாங்கிய உதவி, சுயவிருப்பத்தால் கொடுக்கப்படும் தூய சேவைக்கு ஈடாகாது என்பது என்னுடைய நாற்பது வருடத்து அனுபவமாகும். அதிர்ஷ்ட வசமாக, தாங்களே வலிய முன்வந்து உதவியவர் பலர் இருந்தனர். இங்கிலாந்துக்குப் படிக்கச் சென்றிருந்த பல இளைஞர்கள் எங்களைச் சுற்றிக் கொண்டனர். சிலர், யாதொரு பலனையும் புகழையும் எதிர்பாராமல் இரவும் பகலும் எங்களுக்கு உதவி செய்தனர். விலாசங்கள் எழுதுவதாயிருந்தாலும் சரி, அல்லது தபால் தலைகள் ஒட்டுவது, அல்லது கடிதங்களைத் தபாலில் கொண்டுபோய்ப் போடுவது இதுபோல் எந்தப் பணியையும் தங்கள் கௌரவத்திற்குக் குறைவானதென்று எவரும் மறுத்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. ஸைமண்ட்ஸ் என்னும் ஆங்கிலேயர், இவர்கள் எல்லோரையும் மிஞ்சிவிட்டார். கடவுளுக்குப் பிரியமானவர்கள் இளமையிலேயே இறந்துவிடுகின்றனர்; அங்ஙனமே அந்த உதாரமிக்க ஆங்கில மகனும் இறந்தார். நான் அவரை முதலில் தென்னுப்பிரிக்காவில் சந்தித்தேன். அவர் இந்தியாவுக்கும் போயிருக்கிறுர். 1897-ஆம் வருடத்தில் அவர் பம்பாயில் இருந்தபோது, பிளேக்கினல் பீடிக்கப்பட்ட இந்தியர்களுக்குப் பயமின்றிச் சிகிச்சை செய்தார். தொற்றுநோயால் வாதைப்படுகிறவர்களுக்குச் சிகிச்சை செய்யும்போது மரணத்துக்கும் அஞ்சாமல் இருப்பது அவருடைய உயர்ந்த பண்புகளில் ஒன்று. சாதி அல்லது நிறவேற்றுமை அறவே அவருக்கு இல்லை. சுயேச்சையான சுபாவமுள்ளவர். சிறுபான்மையோரிடத்திலேயே

எப்போதும் உண்மை காணப்படுமென அவர் நம்பினர். அவருடைய இந்நம்பிக்கைதான் அவரை ஜொஹன்னஸ்பர்க்கில் என்பால் சேர்த்தது. என் கட்சி பெரும்பான்மையோரைக் கொண்டதாகத் தமக்குத் தோன்றும்போது எனக்குச் செய்யும் உதவியை நிறுத்தி விடுவதாகப் பல தடவைகளில் வேடிக்கையாக அவர் என்னிடத்தில் சொல்லியிருக்கிருர். ஏனெனில், சத்தியம்கூடப் பெரும்பான்மையோரின் கைகளில் பழுதுபட்டு விடுகிறது என்பது அவர் அபிப்பிராயம். அவர் அதிகம் படித்தவர். ஜொஹன்னஸ்பர்க்கின் லட்சாதிபதிகளில் ஒருவரான ஸர் ஜார்ஜ் பர்ராருக்கு அவர் செயலாளராக இருந்தார். சுருக்கெழுத்து எழுதுவதில் திறமை வாய்ந்தவர். நாங்கள் இங்கிலாந்திலிருந்த சமயம் அவரும் அங்கிருக்க நேர்ந்தது. அவர் எங்கிருந்தாரென எனக்குத் தெரியாது. ஆனல், பொது வேலை சம்பந்தமாய் எங்கள் பெயர் பத்திரிகைகளில் வெளியானதன் மூலம், இப்பெருந்தகையான ஆங்கிலேயர் எங்களைக் கண்டு பிடித்தார். தம்மால் இயன்ற அனைத்தும் எங்களுக்குச் செய்து தாம் உதவ விரும்புவதாகத் தெரிவித்தார். ''நீங்கள் விரும்பினல், உங்கள் பணியாள் போலவும் சேவை செய்யத் தயாராயிருக்கிறேன். உங்களுக்கு ஒரு சுருக்கெழுத்து எழுதுபவர் அவசியமெனில், அதற்கு என்னைப் போன்ற ஒருவனைக் காண்பது அரிதெனத் தங்களுக்கே தெரியும்" என்ருர். இவ்விரு வித உதவியும் எங்களுக்குத் தேவையே. இந்த ஆங்கிலேயர், இரவும் பகலும் எங்களுக்காக யாதோர் ஊதியமும் இன்றி உழைத்தாரென நான் சொன்னல் அது மிகையாகாது. இரவு பன்னிரண்டு அல்லது ஒரு மணி வரை அவர் எப்போதும் 'டைப்' அடிக்கும் யந்திரத்தில் வேலை செய்துகொண்டிருப்பார். மற்றவர்களுக்குத் தகவல்களை அறிவிக்கச் செல்லும்போதும், தபாலுக்குக் கடிதங்களை எடுத்துச் செல்லும் சமயத்திலும் புன்சிரிப்பே ஸைமண்ட்ஸின் உதடுகளில் தவழ்ந்து கொண்டிருக்கும். அவருடைய மாத வருமானம் நாற்பத்தைந்து பவுன்கள். தம் நண்பர்களுக்கும், மற்றவர்களுக்கும் உதவி செய்வதில் அவ்வளவையும் அவர் செலவு செய்து வந்தார். அவருக்கு வயது சுமார் முப்பது இருக்கும். அவருக்கு மணமாகவில்லை; மணம் செய்துகொள்ளாமலே வாழ்நாள் முழுதும் இருக்க விரும்பினர். ஏதாவது கொஞ்சம் சம்பளமாக வாங்கிக் கொள்ளும்படி அவரை நான் வற்புறுத்தினேன். ஆனல், அதை ஏற்கக் கண்டிப்பாய் மறுத்து, ''நான் இச்சேவைக்கு ஊதியம் பெற்ருல், என் கடமையைச் செய்யத் தவறியவனுவேன்'' என்று சொல்லிவிட்டார். கடைசி நாள் இரவு, நாங்கள் எங்கள்

வேலையை முடித்து, பயணத்துக்குத் தயார் செய்துகொண் டிருந்தபோது, அவர் மூன்று மணி வரை விழித்திருந்தது எனக்கு ஞாபகம் இருக்கிறது. மறுநாள் எங்களைக் கப்பலில் ஏற்றிய பிறகே பிரிந்து சென்றார். வேதனை தரும் ஒரு பிரிவு அது. பிறருக்கு உபகாரம் செய்யும் தன்மை கறுப்புத்தோல் போர்த்த வருக்கு மாத்திரமே உரியது அன்று என நான் பல தடவைகளில் அனுபவத்தில் கண்டிருக்கிறேன்.

பொது வேலை செய்ய விழையும் இளைஞர்களின் நன்மைக் காக ஒன்றை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். தூது கோஷ்டி யின் கணக்குகளைச் சரியாக வைப்பதில், கப்பலில் சோடா முதலியவைகளுக்காகச் செய்த அற்பச் செலவுக்கும் ரசீதுகளை நாங்கள் விடாமல் சேர்த்திருந்தோம் என்பதையே குறிப்பிடு கிறேன். அங்ஙனமே தந்தி ரசீதுகளையும் வைத்திருந்தோம். விவரமான கணக்கு வைக்கும்போது சில்லறைச் செலவுகள் என்ற பெயரில் எதையும் நாங்கள் எழுதியதாக ஞாபகமில்லை. சாதாரணமாக, சில்லறைச் செலவு என்பது எங்கள் கணக் கில் கிடையாது. அப்படி ஏதாவது கணக்கில் காணப்பட் டாலும், மாலையில் கணக்கு எழுதும்போது விவரங்கள் மறந்து போன சில பென்னிகள் அல்லது ஷில்லிங்குகள் கொண்ட செலவுதான் இவ்வகையில் எழுதப்பட்டிருக்கும்.

நல்லது கெட்டதை அறியும் வயது வந்ததிலிருந்து, நாம் டிரஸ்டிகள் அல்லது பொறுப்பிற்கு உரியவராகிறோம். இந்த உண்மையை இந்த வாழ்க்கையில் தெளிவாகக் கவனித்திருக் கிறேன். பெற்றோர்களோடு இருக்கும்வரை, நம்மிடத்தில் நம்பிக் கொடுக்கப்பட்டிருக்கிற பணத்திற்கோ அல்லது காரியங் களுக்கோ அவர்களுக்குக் கணக்குக் கொடுத்தாக வேண்டும். அவர் களுக்கு நம் நேர்மையைக் குறித்து நம்பிக்கையிருந்து, நம்மிடத் தில் கணக்குக் கேட்காமல் இருக்கலாம். ஆனால், அது நம் பொறுப் பைக் குறைத்துவிடுவதில்லை. நாம் சுயேச்சையான குடும் பஸ்தராகும்போது, குடும்பப் பொறுப்பு நமக்கு ஏற்படுகிறது. நம் சம்பாதனைக்கு நாம் ஏகபோகச் சொந்தக்காரர்களல்ல. நம் குடும்பத்தவர்களும் நம்முடன் சேர்ந்து அதை அனுபவிக்க வேண்டியவர்களாயிருக்கின்றனர். அவர்களை முன்னிட்டு நாம் ஒவ்வொரு தம்படிக்கும் கணக்கு வைக்க வேண்டும். சொந்த வாழ்க்கையிலே நமக்கு இவ்வளவு பொறுப்பு இருக்கிறதென் றால், பொது வாழ்க்கையில் அது இன்னும் அதிகமாகிறது. தாங்கள் ஹரிச்சந்திரனைப் போல் சந்தேகத்துக்கு இடமில்லாத

வர்களென நினைத்து, தங்களிடத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கும் காரியங்கள் செய்யவோ அல்லது பணத்திற்கு விவரமான கணக்கு எழுதவோ தாங்கள் கடமைப்பட்டவர்களல்ல வென்று கருதும், பொது வேலைகளில் ஈடுபட்டு தொண்டு செய்ய வரும் பொது ஜன ஊழியர்களில் சிலரை நான் கவனித்திருக்கிறேன். இது முற்றிலும் அறிவீனமாகும். ஏனெனில், கணக்குகள் வைப் பதற்கும் நம்பிக்கை அல்லது அவநம்பிக்கைக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. கணக்குகள் வைப்பது ஒரு தனிக் கடமை யாகும். நேர்மையாக வேலை செய்வதற்கு அது மிக அவசிய மானது. நாம் சேவை செய்யும் ஸ்தாபனத்தைச் சேர்ந்த பிரதானமான அங்கத்தினர்கள், மரியாதைக்காகவோ அல்லது அச்சத்தினுலோ நம்மிடத்தில் கணக்குகளைக் கேட்காமலிருந் தால், அவர்களும் குற்றம் செய்தவர்களே ஆவார்கள். சம்பளம் பெறும் ஒரு வேலைக்காரன், அவன் செய்த வேலைக்கும் அவன் செலவு செய்த பணத்துக்கும் கணக்கு வைக்கக் கடமைப்பட் டிருக்கிறுனென்றுல், தொண்டனுக வேலை செய்ய முன்வருபவன், கணக்கு வைக்க இன்னும் அதிகமாகக் கடமைப்பட்டவ னுகிறுன். ஏனெனில், அவன் வேலையே அவனுக்கு வெகுமதியாக இருக்கிறது. இது மிகவும் முக்கியமான ஒரு விஷயம். பல ஸ்தாபனங்களில் இது சாதாரணமாகப் போதுமான அளவு கவனிக்கப்படுவதில்லை என்று எனக்குத் தெரியுமாகையால், நான் இவ்விஷயத்தைப்பற்றி இங்கே அதிகமாகக் கூறத் துணிந்தேன்.

பதினைந்தாம் அத்தியாயம்

# கோணல் முறை

மெட்ராவில் எங்களுக்குக் கிடைத்த தந்திக்கு அதிக மதிப்புக் கொடுத்துவிட்டோம் என்பதை நாங்கள் கேப்டவுனில் இறங்கியதும், அதைவிட அதிகமாக ஜொஹன்னஸ்பர்க்கை அடைந்ததும் கண்டோம். இத்தந்தியை அனுப்பியிருந்த ஸ்ரீ ரிட்ச் இதற்கு ஜவாப்தாரி அல்ல. இம்மசோதா நிராகரிக்கப்பட்டதைப்பற்றி தாம் கேள்வியுற்றதையே அவர் தந்தியடித்திருந்தார். நான் முன்கூறியபடி, டிரான்ஸ்வால் அச்சமயத்தில், அதாவது 1906-ஆம் வருடத்தில், பிரிட்டிஷ் சர்க்காரின் நேர் நிர்வாகத்திற்குட்பட்ட காலனியாக இருந்தது. அத்தகைய காலனிகளுக்கு இங்கிலாந்தில் பிரதிநிதிகள் இருந்தனர். குடியேற்ற நாடுகளின் நலன்கள் பற்றிய எல்லா விஷயங்களிலும், குடியேற்ற நாட்டு மந்திரிக்கு யோசனை சொல்வது அப்பிரதிநிதிகளின் கடமைகளில் ஒன்று. தென்னாப்பிரிக்காவின் பிரபல வக்கீலான ஸர் ரிச்சர்டு சாலமன் அப்போது டிரான்ஸ்வாலின் பிரதிநிதியாக அங்கிருந்தார். அவருடன் ஆலோசித்து லார்டு எல்ஜின் கறுப்புச்சட்டத்தை நிராகரித்துவிட்டார். 1907-ஆம் வருடம் ஜனவரி மாதம் முதல் தேதியன்று டிரான்ஸ்வாலுக்குப் பொறுப்பாட்சி கொடுக்கப்பட வேண்டியிருந்தது. பொறுப்பாட்சி கிடைத்த பிறகு டிரான்ஸ்வாலில் ஏற்படுத்தப்படும் சட்டசபையில் இதைப் போன்றதொரு சட்டம் நிறைவேற்றப்படுமானால் அதற்கு அரசர் அங்கீகாரம் மறுக்கப்பட மாட்டாது என லார்டு எல்ஜின், ஸர் ரிச்சர்டு சாலமனுக்கு உறுதி கொடுத்திருந்தார். ஆனால், டிரான்ஸ்வால், பிரிட்டனின் நேர் ஆட்சிக்குட்பட்ட காலனியாக இருக்கும்வரை, பிரிட்டிஷ் அரசாங்கம் நேராகவே இவ்வகுப்புச் சட்டங்களுக்கு ஜவாப்தாரியெனக் கருதப்படும். நிறவேற்றுமை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அடிப்படையான கொள்கைகளுக்கு மாருக இருப்பதால் இச்சட்டத்தை நிராகரிக்கும்படி அரசருக்கு அவர் யோசனை சொல்லாமல் இருக்க முடியவில்லை.

இச்சட்டம் பெயரளவில் நிராகரிக்கப்பட்டு, அதே சமயத்தில் டிரான்ஸ்வால் ஐரோப்பியர்கள் தங்கள் விருப்பம்போல் நடக்க முடியுமானல், அவ்வளவு நல்ல ஏற்பாட்டுக்கு ஸர் ரிச்சர்டு சாலமன் ஆட்சேபணை செய்ய யாதொரு காரணமும்

இல்லை. நான் இதை கோணல் முறை என்று சொல்லியிருக்கிறேன். ஆனால், நியாயமாக அதற்கு இன்னும் அதிகக் கடுமையான பெயரும் கொடுக்கலாம். பிரிட்டிஷ் அர்சாங்கம் தங்கள் நேர் நிர்வாகத்திற்குட்பட்ட காலனிகளின் சட்டங்களுக்கு ஜவாப்தாரியா யிருக்கின்றது. அதன் அரசியல் அமைப்பில் சாதி அல்லது நிறம் காரணமாக வேற்றுமை பாராட்ட இடமில்லை; அதுவரை நலமே. பொறுப்பாட்சி அடைந்திருக்கும் நாடுகளின் சட்டசபைகள் நிறைவேற்றும் சட்டங்களைப் பிரிட்டிஷ் அரசாங்கம் திடீரென்று நிராகரிக்க முடியாதென்பதும் எவருக்கும் விளங்கும். ஆனால், குடியேற்ற நாடுகளின் ஏஜெண்டுகளுடன் தனியாய்க் கூடிப்பேசி, ஏகாதிபத்தியத்தின் அரசியல் அமைப்புக்கு வெளிப்படையாகவே மாறாக இருக்கும் மசோதாக்களுக்கு, அவை நிறைவேற்றப்படுவதற்கு முன்னமேயே அரசர் சம்மதம் தருவதாக வாக்களிப்பது பிரிட்டிஷ் அரசியலையே பகிரங்கமாக மீறுவதாகும். நம்பிக்கைத் துரோகமும், ஒருவர் உரிமைகளைக் கொள்ளை அடிப்பதோடு அவர்களுக்கு அநியாயம் செய்வதும் அல்லாமல் இது வேறு என்ன? உண்மையைச் சொல்லுமிடத்து, லார்டு எல்ஜின், டிரான்ஸ்வால் ஐரோப்பியர்களுக்கு, அவர்கள் இந்தியர்களுக்கு விரோதமாகச் செய்துவந்த காரியங்களுக்குத் தமது வாக்குறுதியின் மூலம் உற்சாகம் அளித்தார். அவர் அப்படிச் செய்ய விரும்பினால் இந்தியர் தூதுகோஷ்டியிடம் அதைத் தெளிவாகச் சொல்லியிருக்கவேண்டும். உண்மையில் பொறுப்பாட்சி அனுபவிக்கும் குடியேற்ற நாடுகளில் சட்டங்கள் இயற்றப்படும் பொறுப்பிலிருந்து சாம்ராஜ்ய சர்க்கார் தப்ப முடியாது. அந்நாடுகளும் பிரிட்டிஷ் அரசியல் அமைப்பின் அடிப்படையான கொள்கைகளை ஒப்புக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, அந்நாடு எதுவும் சட்டபூர்வமாக அடிமைகளை வைத்துக்கொள்ளுவதென்பதை இனிமேல் அனுசரிக்க முடியாது. லார்டு எல்ஜின், கறுப்புச் சட்டத்தை, அடாத சட்டம் என்று நிராகரித்திருந்தால், அந்தக் காரணத்தின் பேரில்தான் அவர் அதை நிராகரிக்க முடியும். பொறுப்பாட்சி கிடைத்த பிறகும் டிரான்ஸ்வால் இம்மாதிரி அக்கிரமமான சட்டத்தைச் செய்ய முடியாதென்றும், அப்படிச் செய்ய அது நினைத்திருந்தால் பொறுப்பாட்சியைப் போன்ற உயர்ந்த அந்தஸ்தை அதற்குக் கொடுப்பதற்கு முன், பிரிட்டிஷ் அரசாங்கம் மறுபடியும் தீர யோசிக்கவேண்டி நேரிடுமென்றும் ஸர் ரிச்சர்டு சாலமனுக்கு அறிவுறுத்தவேண்டியதே லார்டு எல்ஜினின் கடமையாகும். அல்லது, இந்தியர்களுடைய உரி

மைகள் சரியாகப் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நிபந்தனை யின் பேரில்தான் பொறுப்பாட்சி கொடுக்கப்படுமென ஸர் ரிச்சர்டு சாலமனுக்கு அவர் சொல்லியிருக்கவேண்டும். இத் தகைய நேர்மையான வழியில் நடப்பதற்கு மாருக அவர், இந்தியர்களுக்கு உதவி செய்வதுபோல் வெளிக்குக் காண்பித்து, அதே சமயத்தில் உண்மையில் ரகசியமாக டிரான்ஸ்வால் சர்க் காருக்கு உதவியாக, தாம் நிராகரித்த அதே சட்டத்தை மறுபடி யும் டிரான்ஸ்வால் அரசாங்கம் நிறைவேற்றுவதற்கான தைரியம் கொடுத்தார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பின்பற்றிய வஞ்சக முறை இது ஒன்று மாத்திரம் அன்று; இது முதலாவதுமன்று. மேலெழுந்தவாரியாக அதன் சரித்திரத்தைப் படிப்போருக்கும் இம்மாதிரி நிகழ்ச்சிகள் எளிதில் தென்படும்.

ஆதலால், பிரிட்டிஷ் அரசாங்கமும் லார்டு எல்ஜினும் எங் களிடத்தில் செய்த தந்திரத்தைப் பற்றியே ஜொஹன்னஸ் பர்க்கில் மக்களிடை எங்குமே பேச்சு. தென்னுப்பிரிக்காவில் எங்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றம் மெடீராவில் எங்களுக்கு உண் டான மகிழ்ச்சியைப்போல் அதிகமாகவே இருந்தது. எனினும், இந்த வஞ்சகத்தால் உடனடியாக உண்டான பயன் யாதெ னில், நம் சமூகத்தினர் முன்னைவிட உற்சாகம்கொண்டனர். பிரிட்டிஷ் சர்க்காரின் உதவியின்றி நம் போராட்டத்தை நடத்த வேண்டியிருப்பதுபற்றி நாம் ஒருபோதும் பயப்படக் கூடாதென ஒவ்வொருவரும் சொன்னர்கள். இச்சட்டத்தை எதிர்ப்பதாக நாங்கள் கடவுளின் பெயரால் சத்தியம் செய்திருந்தோம். அக்கடவுளிடத்திலிருந்தும், நம் இடத்தி லிருந்துந்தான் உதவியை எதிர்பார்க்க வேண்டும். நமக்கு நாம் உண்மையுள்ளவர்களாய் மட்டும் இருப்போமானல் கோணல் முறையும் உரிய காலத்தில் நேராகும்.

பொறுப்பாட்சி டிரான்ஸ்வாலில் ஸ்தாபிக்கப்பட்டது. புதுச் சட்டசபையில் நிறைவேற்றப்பட்ட முதல் காரியம் சர்க் காரின் வரவுசெலவுத் திட்டம். இரண்டாவதாக, ஆசியாவாசி கள் பதிவுச்சட்டம் நிறைவேறியது. காலத்தை அனுசரித்து மாற்றப்பட வேண்டிய தேதித் திருத்தமொன்று இதன் ஒரு பிரிவில் செய்யப்பட்டதைத் தவிர, மற்றப்படி இது முந்திய அவசரச் சட்டத்தின் நேர் நகலாகவே யிருந்தது. 1907-ஆம் வருடம் மார்ச்சுமாதம் 21-ஆம் தேதி நடந்த சட்டசபைக் கூட்டத்திலேயே மிகத் துரிதமாக இதை நிறைவேற்றினர்.

அவசரச் சட்டம் நிராகரிக்கப்பட்டது யாவும் கனவு என மறந்தாயிற்று. இந்தியர்கள் வழக்கம்போல விண்ணப்பங்கள் முதலியன கொடுத்தனர். ஆனல், அவைகளை யார் கவனிப்பார்கள்? அச்சட்டம் 1907-ஆம் வருடம் ஜூலை மாதம் முதல் தேதியிலிருந்து அமலுக்கு வருமெனப் பிரகடனம் செய்யப்பட்டது. ஜூலை மாதம் 31-ஆம் தேதிக்குள் இந்தியர்கள் பதிவுக்கு விண்ணப்பம் செய்யவேண்டுமென சொல்லப்பட்டது. அச்சட்டத்தை அமலுக்குக் கொண்டு வருவதில் காலதாமதமானதற்குக் காரணம், இந்தியர்களுக்கு உபகாரம் செய்யவேண்டுமென்பதற்காக அல்ல; ஆனல், அவ்விஷயத்தின் அவசியத்தைக் குறித்தே சிறிது தாமதம் செய்தனர். முறைப்படி அச்சட்டத்திற்கு அரசர் அனுமதி வருமுன் சிறிதுகாலம் கழிய வேண்டும். அச் சட்டத்தில் கண்ட நமூனக்களைத் தயார் செய்வதற்கும், அனுமதிச் சீட்டுகள் கொடுக்கும் ஆபீசுகளைப் பல இடங்களில் திறப்பதற்கும் சிறிது காலமாகும். ஆதலால் இத்தாமதம் டிரான்ஸ்வால் அரசாங்கத்தின் சொந்த சௌகரியத்திற்காகவே செய்யப்பட்டது.

## பதினாருவது அத்தியாயம்

# அகமத் முகம்மத் காச்சலியா

தூது கோஷ்டி இங்கிலாந்துக்குப் போய்க்கொண்டிருந்த போது, தென்னாப்பிரிக்காவில் குடியேறியிருந்த ஓர் ஆங்கிலேயருடன் ஆசியாவாசிகளுக்கு விரோதமான சட்டத்தைப் பற்றிப் பேச நேர்ந்தது. நாங்கள் எந்த நோக்கத்துடன் இங்கிலாந்து போகிறோம் என்பதை நான் அவருக்குச் சொன்ன போது அவர், 'நாயின் கழுத்துப்பட்டையை ஒழிப்பதற்காக நீங்கள் லண்டன் போகிறீர்கள் எனக் கருதுகிறேன்' என்று சொன்னார். இதன் மூலம் அவர் டிரான்ஸ்வால் அனுமதிச் சீட்டை நாயின் கழுத்துப்பட்டைக்கு ஒப்பிட்டார். இப்படிச் சொல்லியதில் அவர் இந்தியர்கள்பால் தமக்குள்ள வெறுப்பையும் அவர்கள் அவமானம் அடைவதில் தமக்குள்ள சந்தோஷத்தையும் காண்பித்தாரா, அல்லது இவ்விஷயத்தில் தமக்கிருந்த அதிக மனக்கஷ்டத்தை வெளிப்படுத்தினாரா என்று எனக்கு அப்போது விளங்கவில்லை; இப்போதும் தெரியவில்லை. ஒருவருடைய உரைகளை அவருக்கு அநீதி செய்யும்வகையில் பொருள் கொள்ளலாகாது என்பது நல்விதி. அதன்படி அவர் அலங்காரச் சொற்களைத் தம் மனக்கஷ்டத்தை வெளிப்படுத்தவே உபயோகப் படுத்தினாரென்று நான் நினைக்கிறேன். அது எப்படியிருந்த போதிலும், டிரான்ஸ்வால் அரசாங்கம் நாயின் கழுத்துப் பட்டையை இந்தியர்கள் கழுத்தில் போட ஒரு பக்கம் ஆயத்தம் செய்துகொண்டிருந்தது. மற்றொரு பக்கம், இந்தியர்கள் அந்த அரசாங்கத்தின் குரூர முறையை எதிர்க்கத் தயாராவதுடன், இந்நாய்க் கழுத்துப்பட்டையை என்றென்றும் அணியாமல் இருக்கத் தாங்கள் செய்த தீர்மானத்தைப் பலப்படுத்தக் கூடிய வழிகளை வகுத்துக்கொண்டிருந்தனர். இங்கிலாந்திலும் இந்தியாவிலுமுள்ள நண்பர்களுக்குக் கடிதம் எழுதி அப்போதைக்கப்போது ஏற்படும் நிலைமையைப்பற்றி அவர்களுக்குத் தெரிவித்துக்கொண்டுதானிருந்தோம். ஆனால், 'ஒரு சத்தியாக்கிரகப் போராட்டம் வெளி உதவியை வெகுவாக நம்பியிருப்பதன்று. உள் பரிகாரங்களே அதிகப் பயனைத் தரும். ஆதலால், சமூகத்தைச் சேர்ந்த எத்தரத்தவரையும் போராட்டத்திற்குத் தகுதி உள்ளவராக்குவதில் தலைவர்கள் முழு நேரமும் ஈடுபட்டிருந்தனர்.

இப்போராட்டத்தை எந்த ஸ்தாபனத்தின் மூலம் நடத்துவ தென்பது, எங்களுக்கு முண்டதோர் முக்கியமான கேள்வி. டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்தியர்கள் சங்கத்தில் அதிகமான உறுப்பினர்களிருந்தனர். அது நிறுவப்பட்ட காலத்தில் சத்தி யாக்கிரகம் பிறக்கவே இல்லே. அநீதியான சட்டங்களே முன்பு அது எதிர்த்திருக்கின்றது. இனியும் ஒன்று அல்லது பல அநியாயச் சட்டங்களேயும் அது எதிர்த்தே ஆகவேண்டும். கொடிய சட்டங்களே எதிர்ப்பதைத் தவிர ராஜீய, சமூகத் துறைகளிலும் பல காரியங்களே அது செய்து வந்தது. மேலும் அச்சங்கத்தின் எல்லா உறுப்பினர்களும் கறுப்புச் சட்டத்தைச் சத்தியாக்கிரகத்தினுல் எதிர்ப்பதற்குப் பிரதிக்ஞை செய்து கொள்ளவில்லே. சத்தியாக்கிரகப் போராட்டத்துடன் இணே வதாக இருந்தால், அச்சங்கத்துக்கு ஏற்படக்கூடிய வெளித் தீங்குகளேயும் நாம் கவனிக்க வேண்டும். டிரான்ஸ்வால் அரசாங் கம், இப்போராட்டத்தை ராஜாங்கத்திற்கு விரோதமான தென்றும், இதை நடத்தும் ஸ்தாபனங்கள் அனைத்தும் சட்ட விரோதமான ஸ்தாபனங்களென்றும் தீர்மானித்தால் என்ன செய் வது? சத்தியாக்கிரகிகளல்லாத உறுப்பினர்களின் நிலேமை அப் போது என்ன ஆகும்? சத்தியாக்கிரகம் என்ற எண்ணமே குருத்து விடாதபோது, சேர்க்கப்பட்ட நிதிகளின் நிலேமை என்ன ஆகும்? இவையெல்லாம் மிக முக்கியமான விஷயங்கள். கடைசியாக, நம்பிக்கை யில்லாமையாலோ அல்லது பலவீனத் தாலோ அல்லது வேறு எக்காரணத்தாலோ இப்போரில் சேராதவர்களின்மீது எந்த விதமான விரோத எண்ணங்களும் கொள்ளாமலிருப்பதோடு முந்திய நட்புறவு குறையாமலிருக்க வேண்டுமென்றும், சத்தியாக்கிரகப் போரைத் தவிர மற்றெல்லா விஷயங்களிலும் அவர்களுடன் சேர்ந்து உழைக்க வேண்டு மென்றும், சத்தியாக்கிரகிகள் திடமான கருத்துக் கொண் டிருந்தனர்.

இக்காரணங்களேயெல்லாம் முன்னிட்டு இப்பொழுதிருந்த ஸ்தாபனங்கள் எதன் சார்பிலும் சத்தியாக்கிரகப் போராட் டத்தை நடத்தக்கூடாதென்ற முடிவுக்கு இந்திய சமூகத்தினர் வந்தனர். தங்களாலியன்ற எல்லா உதவியையும் செய்து, சத்தியாக்கிரகத்தைத் தவிர மற்றெல்லா முறைகளேயும் கையாண்டு இக்கறுப்புச் சட்டத்தை இப்போதுள்ள ஸ்தாபனங் கள் எதிர்க்கலாம். சத்தியாக்கிரகத்தின் மூலம் போராட்டம் நடத்துவதற்காகச் ‘சாத்விக எதிர்ப்புச் சங்கம்’ என்ற ஸ்தாப

னம் சத்தியாக்கிரகிகளால் ஆரம்பிக்கப்பட்டது. இந்த ஆங்கிலப் பெயரிலிருந்து அதுவரை - அதாவது இச்சங்கம் ஏற்படுத்தப்பட்டபோது - ‘சத்தியாக்கிரகம்’ என்ற சொல் கண்டுபிடிக்கப்படவில்லை என்பதை வாசகர்கள் அறியலாம். இவ்வேலைக்காக ஒரு புது ஸ்தாபனம் நிறுவியதன் விவேகத்தைப் பிற்காலத்திய அனுபவம் நிரூபித்துவிட்டது. அப்போதிருந்த ஸ்தாபனங்கள் சத்தியாக்கிரகத்துடன் சேர்க்கப்பட்டிருந்தால், சத்தியாக்கிரக இயக்கம் முன்னேறி இராது. பலர் இப் புதிய சங்கத்தில் உறுப்பினராய்ச் சேர்ந்துகொண்டனர். சமூகமும் அதற்குத் தாராளமாய்ப் பணம் கொடுத்து உதவியது.

பணமில்லை என்ற குறையால் எந்த இயக்கமும் நின்றுவிடவில்லை; அல்லது தளர்ச்சியடையவுமில்லை என்பதை அனுபவத்திலிருந்து நான் அறிந்திருக்கிறேன். லௌகிகமான எந்த இயக்கமும் பணமின்றி நடந்துவிடுமென்பது இதன் பொருளன்று. ஆனால், உண்மையும், நல்ல தன்மையுமுள்ளவர்கள் தலைமையிலிருந்தால் வேண்டிய தொகைகள் வந்தே தீருமென்பது இதன் பொருள். அதிகப்படியான பணம் கிடைத்தாலும் ஓர் இயக்கம் வீழ்ச்சியடைவதுண்டு என்பதையும் நான் கண்டிருக்கிறேன். ஆதலால், ஒரு பொது ஸ்தாபனம் அதன் பணத்திலிருந்து வரும் வட்டியால் நடத்தப்பட்டால், அதைப் பாவமென்று சொல்லமாட்டேன். ஆனால் அது மிகவும் தவறான முறை என நிச்சயமாய்ச் சொல்லுவேன். எல்லாப் பொது ஸ்தாபனங்களுக்கும் பொது ஜனங்களே பாங்கியாக இருக்கவேண்டும். பொதுஜனங்கள் விருப்புக்கு மீறி ஒரு நாள்கூட அவை இருக்கக்கூடாது. அதிக முதல் சேர்க்கப்பட்டு, அதற்கு வரும் வட்டியைக் கொண்டு நடத்தப்படும் ஸ்தாபனங்கள் பொதுஜன அபிப்பிராயத்திற்கு இணங்கும் தன்மையை இழந்து பொறுப்பற்றனவாய்த் தங்கள் இஷ்டப்படியெல்லாம் நடக்கின்றன. நிரந்தரமான நிதிகளினால் நிர்வகிக்கப்படும் பல சமூக, மத சம்பந்தமான ஸ்தாபனங்களின் சீர்கேடுகளைக் குறித்து விவரித்துக்கொண்டு போவதற்கு இது இடமன்று. எல்லோருக்குமே எளிதில் விளங்கும் வகையில் இது அவ்வளவு சாதாரணமாகக் காணப்படுகிறது.

நாம் நம் விஷயத்திற்குத் திரும்ப வேண்டும். அலசிப் பார்த்துத் தருக்கம் செய்துகொண்டிருப்பது என்பது வக்கீல்களிடத்திலும், ஆங்கிலம் படித்தவர்களிடத்திலும் மட்டுமே காணப்படும் தனிச் சிறப்பன்று. தென்னுப்பிரிக்காவிலிருந்த

படிப்பில்லாத இந்தியர்களுங்கூட நுட்பமான வித்தியாசங்களைக் கண்டுபிடித்து, அழகாகத் தருக்கம் செய்யக்கூடியவர்கள் என்பதை நான் கண்டேன். பழைய எம்பயர் மண்டபத்தில் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞை, பழைய அவசரச் சட்டம் நிராகரிக்கப்பட்டதால் நிறைவேறிவிட்டதென்று சிலர் வாதித்தனர். அப்போதிருந்து பலவீனமுற்றவர்கள் இவ்வாதத்தின் கீழ் மறைந்துகொள்ள முயன்றனர். இவ்வாதத்தில் வலிமை இல்லாமல் இல்லை. எனினும், அச்சட்டத்தை சட்டத்திற்காகவன்று, அதன் அடிப்படையிலிருக்கும் தீயக் கொள்கைக்காக எதிர்ப்பது என்று நினைத்தவர்கள் மனத்தில் இந்த வாதம் பதியவில்லை. எனினும், க்ஷேமத்தைக் கருதியும், சமூகத்தின் ஊக்கத்தை அதிகப்படுத்துவதற்காகவும், தளர்ச்சி ஏற்பட்டிருந்தால் அதன் அளவைக் கண்டுபிடிப்பதற்காகவும், அச்சட்டத்தை எதிர்க்கும் பிரதிக்ஞையை மற்றொரு தரம் எடுத்துக்கொள்ளுவது அவசியமெனத் தோன்றிற்று. ஆதலால் கூட்டங்கள் எல்லாவிடங்களிலும் கூட்டப்பட்டு, அப்போதைய நிலைமை எடுத்துரைக்கப்பட்டு, அப்பிரதிக்ஞையும் புதிதாக எடுத்துக்கொள்ளப்பட்டது. சமூகத்தில் உற்சாகம் எப்பொழுதும் போல் மிகுந்தே காணப்பட்டது.

இதற்கிடையில் முக்கியமான ஜுலை மாதத்தின் முடிவும் மெதுவாக நெருங்கி வந்தது. அம்மாதத்தின் கடைசி நாளில் டிரான்ஸ்வாலுக்குத் தலைமை நகரான பிரிட்டோரியாவில் இந்தியர்களின் பெரிய கூட்டமொன்றைக் கூட்டத் தீர்மானித்திருந்தோம். மற்ற இடங்களிலிருந்தும் பிரதிநிதிகள் கூட்டத்துக்கு வரும்படி அழைக்கப்பட்டிருந்தனர். பிரிட்டோரியா மசூதியின் வெளி மைதானத்தில் கூட்டம் கூட்டப்பட்டிருந்தது. சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்ட பிறகு, எந்தக் கட்டடமும் போதாது என்ற அளவுக்கு அதிகமான மக்கள் எங்கள் கூட்டங்களுக்கு வந்தனர். டிரான்ஸ்வாலின் மொத்த இந்தியர் ஜனத்தொகை 13,000-பேர்களுக்கு அதிகம் இராது. அவர்களில் 10,000-பேர்களுக்கு மேல் ஜொஹன்னஸ்பர்க்கிலும் பிரிட்டோரியாவிலும் இருந்தனர். பத்தாயிரம் பேர்கள் மொத்தம் கொண்ட ஒரு ஜனத்தொகையிலிருந்து, ஒரு பொதுக்கூட்டத்திற்கு இரண்டாயிரம் பேர் வந்தால், அதுவே பெரிதும் திருப்தி தரும் விஷயம் என உலகில் எங்கும் சொல்லப்படும். வேறு எந்த நிலைமையிலும் ஒரு பெருவாரியான ஜன சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்துவது அசாத்தியம்.

போராட்டம் உள்வலிமையையே முழுவதும் எதிர்பார்த்து இருக்கும்போது, ஜனக் கட்டுப்பாடின்றி அது நடக்கவே முடியாது. ஆதலால், இவ்வியக்கத்தின் கூட்டங்களுக்கு இவ்வளவு அதிகப் பேர்கள் வருவது சேவை செய்த ஊழியர்களுக்கு வியப்பாகத் தோன்றவில்லை. தொடக்கத்திலிருந்தே பொதுக் கூட்டங்களை வெளியிடங்களில் நடத்த அவர்கள் தீர்மானித்திருந்தார்கள். இதன் மூலம் செலவு வெகுவாகத் தவிர்க்கப்பட்டது. மேலும் இடம் கிடைக்காத குறையால் கூட்டத்துக்கு வந்த எவரும் ஏமாற்றத்துடன் திரும்பிப் போகவேண்டியும் இராது. இக்கூட்டங்கள் பெரும்பாலும் ஆர்ப்பாட்டமின்றி அமைதியாகவே இருந்தன. கூட்டத்தார் எல்லாவற்றையும் கவனத்துடன் கேட்டனர். மேடைக்குத் தூரத்திலிருந்தவர்களுக்கு ஒருவர் பேசுவது சரியாகக் கேட்கவில்லையெனில், பிரசங்கம் செய்வோரை உரக்கப் பேசும்படி கேட்பார்கள். இக்கூட்டங்களில் நாற்காலிகள் இல்லை என்று வாசகர்களுக்குச் சொல்லவேண்டிய அவசியமில்லை. எல்லோரும் தரையில் உட்கார்ந்தனர். தலைவர், பிரசங்கம் செய்பவர், இரண்டொரு நண்பர்கள் இவர்கள் உட்காரப் போதுமான ஒரு சிறிய மேடை அமைக்கப்பட்டு, ஒரு சிறிய மேஜையும், சில நாற்காலிகளும், அதன்மீது போடப்பட்டிருக்கும்.

பிரிட்டிஷ் இந்தியர்கள் சங்கத்துக்கு, மற்றொருவருக்குப் பதிலாக அப்போது தலைவர் பதவி ஏற்றிருந்த ஸ்ரீ யூசப் இஸ்மெயில் மியான் இக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கினர். கறுப்புச் சட்டத்தின் கீழ் அனுமதிச் சீட்டுகள் வாங்கவேண்டிய காலம் நெருங்க நெருங்க இந்தியர்களிடையே உற்சாகம் இருந்தபோதிலும், அவர்கள் மனத்தில் இயல்பாகவே கவலை உண்டாயிற்று. ஆனல், டிரான்ஸ்வால் அரசாங்கத்தின் பலம் முழுதும் தம் பக்கம் இருப்பினும், ஜெனரல் போத்தாவும் ஜெனரல் ஸ்மட்ஸும் பின்னும் அதிகக் கவலையுடனேயே இருந்தார்கள். வெறும் பலாத்காரத்தால் மட்டும் ஒரு சமூகம் முழுவதையும் தன் இச்சைக்குப் பணியும்படிச் செய்ய எவரும் விரும்பமாட்டார். ஆதலால் ஜெனரல் போத்தா, எங்களுக்குப் புத்திமதி சொல்லுவதற்காக ஸ்ரீ வில்லியம் ஹோஸ்கனை இக்கூட்டத்திற்கு அனுப்பியிருந்தார். முந்திய அத்தியாயம் ஒன்றில் இவரைப்பற்றி வாசகர்கள் தெரிந்துகொண்டிருக்கிருர்கள். கூட்டம் அவரை அன்புடன் வரவேற்றது. அவர் பின்வருமாறு சொன்னர்: ‘‘நான் உங்கள் நண்பன் என்பது உங்க

ளுக்குத் தெரியும்; இவ்விஷயத்தில் என் அனுதாபங்கள் உங்கள் சார்பில்தான் என்று நான் சொல்லவேண்டிய அவசிய மில்லை. என்னால் முடியுமானால், உங்கள் கோரிக்கைகளுக்கு இணங்கும்படி எதிர்க்கட்சியாரிடம் சென்று நான் மகிழ்வுடன் வேலை செய்வேன். டிரான்ஸ்வால் ஐரோப்பியர்களுக்கு உங்கள் சமூகத்தின்பேரில் இருக்கும் விரோதத்தைப் பற்றி நான் உங்களுக்கு எடுத்துரைக்க வேண்டியதில்லை. ஜெனரல் போத்தா என்னை இங்கே அனுப்பியிருக்கிறார். தாம் சொல்ல விரும்பும் செய்தியை என் மூலம் இக்கூட்டத்திற்கு அவர் அனுப்பியிருக்கிறார். உங்கள்பால் அவருக்கு மதிப்பு உண்டு; அவர் உங்கள் உணர்ச்சிகளையும் அறிந்தவர். ஆனால் ஏதும் செய்ய இயலாதவராய்த் தாம் இருப்பதாகச் சொல்லுகிறார். டிரான்ஸ்வாலிலுள்ள ஐரோப்பியர்கள் அனைவரும் இம்மாதிரிச் சட்டம் வேண்டுமென்று ஒரே மனமாய்க் கேட்கின்றனர்; அவருக்கும் அது அவசியமெனத் தோன்றுகிறது. டிரான்ஸ்வால் அரசாங்கத்திற்கு எவ்வளவு பலமிருக்கிறதென்று இந்தியர்களுக்கும் நன்றாகத் தெரியும். இச்சட்டம் பிரிட்டிஷ் சர்க்காரால் மறுபடியும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்தியர்கள் தங்களால் இயன்றதை யெல்லாம் செய்து, மனிதத் தன்மையுடன் நடந்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எதிர்ப்புத் தோற்றுப்போய், சட்டமும் நிறைவேறி விட்டதால், அதற்குக் கீழ்ப்படிவதன் மூலம் இந்தியர்கள் தங்கள் ராஜ விசுவாசத்தையும், சமாதானப் பற்றுதலையும் காட்டவேண்டும். பதிவுச் சட்டம் சம்பந்தமாகச் செய்யப்படும் விதிகளில் சிறு மாறுதல்கள் செய்யப்படுவதற்காக ஏதாவது சொல்லுவீர்களானால், அவைகளை மிகவும் சிரத்தையுடன் ஜெனரல் ஸ்மட்ஸ் கவனிப்பார். ஜெனரல் போத்தாவின் சொற்படி நீங்கள் நடக்க வேண்டுமென்பதே, நான் உங்களுக்குக் கூறக்கூடிய யோசனையும். 'இச்சட்ட சம்பந்தமாக டிரான்ஸ்வால் அரசாங்கம் மிகவும் கண்டிப்புடன் இருக்கிறது. அதை எதிர்ப்பது உங்கள் தலையைச் சுவரின்மீது முட்டிக்கொள்ளுவதைப் போன்றதாகும். பயனற்ற எதிர்ப்பால் உங்கள் சமூகம் அழிந்துவிடவோ, அல்லது அனாவசியமாகத் துன்பத்தை வருவித்துக் கொள்ளவோ கூடாதென்றும் நான் விரும்புகிறேன்." இப்பிரசங்கத்தைச் சொல்லுக்குச் சொல் நான் கூட்டத்துக்கு மொழிபெயர்த்தேன். அதன் பிறகு நானும் பேசி, கூட்டத்தினர் ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்று எச்சரிக்கை செய்தேன். ஹோஸ்கன் மகிழ்ச்சி ஆரவாரத்துக்கிடையே திரும்பினார்.

இந்தியப் பேச்சாளர்கள் கூட்டத்தில் பேசும் நேரம் பிறகு வந்தது. இவர்களில் ஒருவர் காலஞ்சென்ற அகமத் முகம்மது காச்சலியா. அவர் இந்த அத்தியாயத்தின் கதாநாயகர் மட்டுமல்ல, இப்புத்தகத்தின் கதாநாயகரும் ஆவார். கட்சிக் காரராகவும், மொழிபெயர்ப்பாளராகவுமேதான் எனக்கு அவரைத் தெரியும். இதற்கு முன், அவர் பொதுவேலையில் முன்னணியில் வந்து உழைத்ததில்லை. பழக்கத்துக்கு வேண்டிய அளவு சிறிது ஆங்கில ஞானம் அவருக்கிருந்தது. அதைக் கொண்டு பழக்கத்தால் அபிவிருத்தி செய்துகொண்டிருந்ததால் தம்முடைய நண்பர்களை ஆங்கில வக்கீல்களிடத்தில் அழைத்துக் கொண்டு போகும்போது தாமே மொழிபெயர்ப்போராய் இருப்பதுண்டு. மொழிபெயர்ப்பது அவர் தொழிலன்று; நண்பர் என்ற முறையிலேயே, அவர் இவ்வேலையைச் செய்துவந்தார். அவர் முதலில் ஜவுளிகளைத் தெருக்களில் கூவி விற்றுக்கொண்டிருந்தார். அதற்குப் பிறகு தம் சகோதரருடன் கூட்டாகச் சிறிய அளவில் வியாபாரம் செய்யத்தொடங்கினர். அவர் ஸுரடி மெமன் வகுப்பைச் சேர்ந்தவர்; தம் வகுப்பினருள் அவருக்கு மிகுந்த செல்வாக்கிருந்தது. அவருக்குக் குஜராத்தி மொழி ஓரளவு தெரியும். இருந்தபோதிலும், அதையும் பழக்கத்தினல் அதிகமாக விருத்தி செய்துகொண்டார். அவர் மிகக் கூர்மையான அறிவு உள்ளவர். எனவே, எதையும் எளிதில் கிரகித்துக்கொள்ளுவார். பல தடவைகளில் நான் வியப்புறும் வண்ணம் சட்ட சம்பந்தமான கஷ்டங்களையும் அவர் வெகு சுலபமாகத் தீர்த்தார். வக்கீல்களுடன் சட்டங்களைப் பற்றி வாதம் செய்யவும் அவர் அஞ்சமாட்டார். பல தடவைகளில் அவருடைய வாதங்கள், வக்கீல்களும் மரியாதையுடன் கவனிக்கத் தக்கவாறு இருந்தன.

தைரியம், உறுதி இவற்றில் காச்சலியாவை மிஞ்சக் கூடியவர் தென்னாப்பிரிக்காவிலோ அல்லது இந்தியாவிலோ நான் கண்டதேயில்லை. அவர் தமக்குள்ள அனைத்தையும் சமூகத்திற்காகத் தியாகம் செய்தார். எப்போதும், சொன்ன சொல் தவருதவர். அவர் ஆசாரமுள்ள முஸ்லிமான். ஸுரடி மெமன் மசூதிக்கு ஒரு தர்மகர்த்தாவாகவும் இருந்தார். எனினும், ஹிந்துக்களையும் முஸல்மான்களையும் சமமாகவே பாவித்து வந்தார். காரணமின்றி அல்லது நியாயமின்றி அவர் ஹிந்துக்களுக்கு விரோதமாய் ஒருபோதும் மதவெறியோடு முஸல்மான்கள் சார்பில் பேசியதாக எனக்கு ஞாபகமில்லை.

பயமோ, பாரபட்சமோ இல்லாதவராகையால், அவசிய மான சமயங்களிலெல்லாம் ஹிந்துக்களிடமோ அல்லது முகம் மதியர்களிடமோ அவர்களிடம் உள்ள குறைகளை எடுத்துக் காட்டுவதில் ஒருபோதும் அவர் தயங்கியதில்லை. அவருடைய எளிமையும், அடக்கமும், எல்லோரும் பின்பற்றத் தக்கவை. பல வருடங்கள் அவருடன் சேர்ந்து பழகியதிலிருந்து, காச்சலியா போன்றவரைத் தம்முடன் கொண்டிருப்பதற்காக எந்தச் சமூக மும் பெருமை கொள்ளாமல் இருக்க முடியாது என்பது என் னுடைய திடமான அபிப்பிராயம்.

அக்கூட்டத்தில் பேசியவர்களில் காச்சலியாவும் ஒருவர். அவர் செய்தது மிகச் சிறியதொரு பிரசங்கமே. அவர் பேசிய தாவது: "கறுப்புச்சட்டம் என்னவென்பதும், அதன் விளைவு என்னவென்பதும், ஒவ்வோர் இந்தியருக்கும் தெரியும். நான் ஹோஸ்கன் பேசியதைக் கவனமாய்க் கேட்டேன். நீங்களும் அப்படியே கேட்டிருக்கிறீர்கள். அவருடைய பேச்சு என்னு டைய தீர்மானத்தை உறுதிப்படுத்தியே இருக்கிறது. டிரான்ஸ் வால் அரசாங்கம் எவ்வளவு சக்தி வாய்ந்ததென நமக்குத் தெரியும்; ஆனால் இம்மாதிரிச் சட்டங்கள் செய்வதைவிட அதிகமாய் எதையும் அது செய்ய முடியாது. அது நம்மைச் சிறைக்குள் போடும்; நமது சொத்துக்களைப் பறிமுதல் செய்யும்; நம்மை இந்நாட்டைவிட்டு வெளியேற்றிவிடும், அல்லது தூக்கில் போடும். இவற்றையெல்லாம் நாம் மகிழ்ச்சியுடன் சகிக்கலாம். ஆனால் இச்சட்டத்தை மாத்திரம் நாம் சகிப்பது அசாத்தியம்." இதைப் பேசும்போது காச்சலியா மிகுந்த உணர்ச்சிக்கு வசப் பட்டுவிட்டார் என்பதை நான் கவனித்தேன். அவர் முகம் சிவந்தது. ரத்தம் குபீரென எழுந்ததால், அவர் கழுத்திலும் தலை யிலும் நரம்புகள் விம்மி இருந்தன. அவர் உடல் நடுங்கிற்று. தம் வலது கைவிரல்களைத் தம் தொண்டையின்பேரில் வைத்துக் கொண்டு, அவர் இடிமுழக்கத்தில் பேசினார். "நான் தூக்கில் இடப் படலாம்; ஆனால் இச்சட்டத்திற்குக் கீழ்ப்படியமாட்டேன் என்று கடவுள் பெயரால் சத்தியம் செய்கிறேன். இக்கூட்டத்திலிருக் கும் ஒவ்வொருவரும் அம்மாதிரிச் செய்யவேண்டுமென நான் விரும்புகிறேன்." இப்படிச் சொல்லி அவர் தம் இடத்தில் அமர்ந் தார். அவர் தொண்டையின் பேரில் கைவிரல்களை வைத்தபோது மேடையின்மேல் உட்கார்ந்திருந்த சிலர் புன்முறுவல் செய்தனர்; நானும் அவர்களுடன் சேர்ந்து புன்முறுவல் செய்தேன் என்று எனக்கு ஞாபகம். காச்சலியா சேட் தம்முடைய வீரவாசகங்கள்

முழுமையும் செயலில் காட்டுவாரா என ஐயம் கொண்டேன். இப்போதும், அதைப் பற்றி நினைக்கும் ஒவ்வொரு சமயமும், நான் அன்று சந்தேகம் கொண்டதற்காக வெட்கப்படுகிறேன். அப்போரில் ஒரு கணமும் பின் வாங்காமல் தங்கள் பிரதிக்ஞையை எழுத்துவிடாமல் காப்பாற்றிய பல இந்தியர்களின் முன்னணியில் காச்சலியா எப்போதும் இருந்தார்.

அவர் பேசும்போது கூட்டம் ஆரவாரம் செய்தது. பிரபலமடையாத இவ்வீரரைப் பலருக்கு நேராகத் தெரியுமாதலால், அவர்கள் என்னைவிட அவரை நன்ருக அறிந்திருந்தார்கள். காச்சலியா தம் மனத்தில் உறுதியாகப் பட்டதைச் சொல்லுவாரென்றும், சொன்னபடி நடப்பாரென்றும் அவர்களுக்குத் தெரியும். மற்றும் சிலரும், ஆவேசமாகப் பேசினர். அவருடைய பிந்திய வாழ்க்கைக்கு அவர் பேச்சு ஒரு தீர்க்கதரிசனம் போல் அமைந்த காரணத்தாலேயே அவருடைய பிரசங்கத்தை மாத்திரம் இங்கே குறிப்பிட்டிருக்கிறேன். ஆவேசமாகப் பேசிய ஒவ்வொருவரும் முடிவான பரீட்சையில் திடமாய் நிற்கவில்லை. போராட்டம் முடிந்த நான்கு வருடங்களுக்குப் பிறகு, கடைசி வரை சமூகத்திற்குச் சேவை செய்து கொண்டிருந்து, 1918-ஆம் வருடத்தில் இப்பெரியார் உயிர் நீத்தார்.

வேறு இடத்திலும் குறிப்பிடுவதற்குச் சந்தர்ப்பம் இராதாகையால் காச்சலியாவைப்பற்றிய ஒரு பழைய சம்பவத்தைச் சொல்லி இந்த அத்தியாயத்தை முடித்துக் கொள்ளுவேன். டால்ஸ்டாய் பண்ணையைப்பற்றி வாசகர்கள் பின்னுல் அறிவார்கள். அங்கே சத்தியாக்கிரகிகளின் குடும்பங்கள் பல வசித்துக்கொண்டிருந்தன. மற்றவருக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கும் பொருட்டும் எளிமையும் சேவையும் பொருந்திய வாழ்க்கையில் வளரும் பொருட்டும், சேட் தம்முடைய பத்து அல்லது பன்னிரண்டு வயதுப் பையன் அலியைக் கல்வி கற்க அங்கே அனுப்பியிருந்தார். அவருடைய உதாரணத்தினுல்தான் மற்ற முஸல்மான்களும் தங்கள் பிள்ளைகளை டால்ஸ்டாய் பண்ணைக்கு அனுப்பினர். அலி அடக்கம், தெளிவு, உண்மை, நேர்மை ஆகிய குணங்களுடைய பையன். தந்தைக்கு முன்னமேயே பையனைக் கடவுள் தம்மிடத்தில் கூட்டிக்கொண்டார். அவன் பிழைத்திருந்தால் சிறந்த தந்தைக்கேற்ற தகுதிவாய்ந்த புதல்வனுக விளங்கியிருப்பா னென்பதில் எனக்கு எவ்வித ஐயமும் இல்லை.

## பதினேழாவது அத்தியாயம்

# உட்பிளவு

1907-ஆம் வருடம் ஜூலை மாதம் 1-ஆம் தேதி வந்தது. அன்று அனுமதிச் சீட்டுகள் கொடுக்கப்படும் ஆபீசுகள் திறக்கப் பட்டன. அனுமதிச்சீட்டு ஆபீசுகளுக்குப் போகும் பாதை களில் தொண்டர்களை நிறுத்தி, அவைகளைப் பகிரங்கமாக மறியல் செய்யச் சமூகத்தார் தீர்மானித்தனர். இத்தொண் டர்கள் அங்கே வரும் கோழை இந்தியர்களிடம் அவர்களுக்காக விரிக்கப்பட்டிருக்கும் வலையைப் பற்றிச் சொல்லி எச்சரிக்கை செய்யவேண்டும். தொண்டர்களுக்கு அடையாளங்கள் கொடுக் கப்பட்டன. அனுமதிச் சீட்டு வாங்கிச் செல்லும் எந்த இந்தியரிடமும் அவர்கள் மரியாதைக் குறைவாக நடக்கக் கூடாதென்று அவர்களுக்குக் குறிப்பாய் சொல்லப்பட்டது. அவர்கள், அவர் பெயரைக் கேட்கவேண்டும். அவர் அதைச் சொல்ல மறுத்தாலும், எவ்விதத்திலும் பலாத்காரமோ அல்லது அவமரியாதையோ செய்யக்கூடாது. அனுமதிச் சீட்டு ஆபீசு களுக்குப் போகும் ஒவ்வோர் இந்தியருக்கும், கறுப்புச் சட்டத் துக்குக் கீழ்ப்படிவதால் ஏற்படக்கூடிய குறைகள் அனைத்தும் விவரமாக எழுதப்பட்டிருந்த ஓர் அச்சுக் கடிதத்தைக் கொடுத்து அதை விளக்கியும் சொல்லவேண்டும். போலீஸாரிடத்திலும் அவர்கள் தகுந்த மரியாதையுடன் நடந்து கொள்ளவேண்டும். போலீஸார் அவர்களைத் திட்டினாலும் அடித்தாலும் அவர்கள் பொறுமையுடன் சகிக்கவேண்டும். போலீஸாரின் கொடுமை களைச் சகிக்க முடியவில்லையெனில், அவ்விடத்தை விட்டு அகல வேண்டும். போலீஸார் கைது செய்தால், சந்தோஷமாகக் கைதாக உடன்படவேண்டும். இப்படிப்பட்ட சம்பவம் ஜொஹன்னஸ்பர்க்கில் நேர்ந்தால், அது என் கவனத்துக்குக் கொண்டு வரப்படவேண்டும். மற்ற இடங்களிலோ, அவ்விடத் திய காரியதரிசிகளுக்குத் தெரிவித்து, அதற்குமேல் அவர்கள் உத்தரவுகளைப் பெறவேண்டும். மறியல் குழு ஒவ்வொன்றுக்கும் ஒரு தலைவன் உண்டு. ஒரு குழுவிலுள்ளவர்கள் தலைவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும்.

இத்தகைய அனுபவம் சமூகத்திற்கு ஏற்பட்டது, இது தான் முதல் தடவை. பன்னிரண்டு வயதுக்கு அதிகமான

பையன்கள் மறியல் தொண்டர்களாக எடுத்துக்கொள்ளப் பட்டனர். ஆதலால் 12-வயதுக்குமேல் 18-வயதுக்குட்பட்ட இளைஞர்கள் பலர், தொண்டர்களாகப் பதிவு செய்து கொண் டனர். ஆனுல், அவ்வூரில் வேலை செய்யும் ஊழியர்களுக்குத் தெரியாத எவரும் தொண்டர்களாக எடுத்துக்கொள்ளப்பட வில்லை. இத்தகைய முன்ஜாக்கிரதை ஏற்பாடுகளைத் தவிர, ஒவ்வொரு பொதுக்கூட்டத்திலும் மற்ற விதங்களிலும், எல் லோருக்கும் ஒன்று அறிவிக்கப்பட்டது. அனுமதிச் சீட்டுகள் வாங்க விரும்பும் யாராவது, மறியல் செய்பவர்களைக் கண்டு பயப்படுவார்களானுல், தம்மை அனுமதிச்சீட்டு ஆபீசுக்கு அழைத்துக்கொண்டு போகவும், அங்கிருந்து கூட்டிக்கொண்டு வரவும் ஒரு தொண்டர் வேண்டுமென்று உள்ளூரில் ஊழியர் களிடத்தில் கூறி, அவ்வுதவியைப் பெறலாம் என்று பொது ஜனங்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. சிலர் இவ்வுதவியையும் பெற்றுர்கள்.

தொண்டர்கள் எல்லா இடங்களிலும் அளவில்லா உற்சாகத் துடன், எப்போதும் சுறுசுறுப்பாகவும் வெகு ஜாக்கிரதை யாகவும் தம் கடமைகளைச் செய்தனர். பொதுவாக, போலீ ஸாரால் அதிகத் தொந்தரவு எதுவுமில்லை. சில சமயங்களில் தொந்தரவுகள் நேர்ந்தபோது, தொண்டர்கள் அவைகளைப் பொறுமையுடன் சகித்தனர். தொண்டர்கள் தங்கள் சேவை யுடன், தமாஷையும் கலந்துகொண்டனர். இதில் போலீஸாரும் சில சமயங்களில் சேர்ந்துகொண்டனர். தொண்டர்கள் தங்கள் பொழுதைப் போக்குவதற்குப் பலவித விளையாட்டுக்களில் ஈடுபட்டனர். பொதுப்பாதையைத் தடுத்துக்கொண்டிருந்ததாக அவர்கள் ஒருதடவை கைது செய்யப்பட்டனர். ஒத்துழை யாமை, சத்தியாக்கிரகப் போரின் ஒரு பகுதியாக இல்லை யாதலால், அவர்கள் கோர்ட்டுகளில் எதிர்வாதம் செய்தனர். எதிர்வாதத்திற்காக ஏற்படுத்தப்பட்டிருந்த வக்கீல்களுக்குப் பொதுநிதியிலிருந்து சாதாரணமாகப் பணம் கொடுக்கப்படுவ தில்லை. தொண்டர்கள் நிரபராதிகளெனக் கோர்ட்டாரால் விடுதலை செய்யப்பட்டனர். இது தொண்டர்களின் உணர்வைப் பின்னும் தட்டி எழுப்பியது.

அனுமதிச் சீட்டுகள் வாங்க விரும்பிய இந்தியர்கள், தொண்டர்களின் பலாத்காரங்களிலிருந்தும், முரட்டுத்தனத்தி லிருந்தும் தப்பினுர்கள் எனினும், தொண்டரல்லாத சிலர் இவ் வியக்க சம்பந்தமாகக் கிளம்பி, அனுமதிச்சீட்டு வாங்க விரும்பு

கிறவர்களைப் பலாத்காரம் செய்வதாகவும், வேறு விதமான தீங்கு செய்வதாகவும் பயமுறுத்தினர்கள் என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். இது மிகவும் வருந்தத்தக்க காரியம். இப்பலாத்கார முயற்சிகள் கண்டுபிடிக்கப்பட்டதும், இவைகளைப் போக்குவதற்கு மும்முரமான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. இது அடியோடு நின்று போகாத போதிலும், பயமுறுத்துவது இதன் காரணமாக அநேகமாய் நின்றது. இம்மிரட்டல்கள் ஓர் உணர்ச்சியை உண்டாக்கின. எனக்குத் தெரிந்தவரையில் அந்த அளவுக்கு அது, நமது கட்சிக்குத் தீங்கு செய்தது. மிரட்டப்பட்டவர்கள் உடனே அரசாங்கத்தின் உதவியை நாடி, அதைப் பெற்றனர். இங்ஙனம் விஷம் சமூகத்துக்குள் புகுத்தப்பட்டது. சிறிதே பலவீனமாயிருப்பவர்கள் பின்னும் பலவீனர்களானார்கள். இவ் விஷத்தின் தீவிரம் அதிகமாயிற்று; ஏனெனில், பலவீனர்களாக இருப்பவர்கள் எப்போதும் பழிக்குப் பழி வாங்குவதில் விருப்ப முள்ளவர்கள்.

இந்த மிரட்டல்கள் அதிகப் பயனை விளைவிக்கவில்லை. ஆனால் ஒரு பக்கத்தில் பொதுமக்கள் அபிப்பிராயத்தின் சக்தி யும், தொண்டர்கள் மூலம் தங்கள் பெயர் சமூகத்துக்குத் தெரிந்துவிடுமென்ற பயமும், பலமான தடைகளாக இருந்தன. கறுப்புச் சட்டத்துக்குக் கீழ்ப்படிதல் சரியென நினைத்த எந்த ஒரு தனி இந்தியரும் இருந்ததாக நான் அறியேன். அதற்குக் கீழ்ப்படிந்தவர்கள், கஷ்டங்களைத் தாங்க முடியாததாலும் தாம் பண நஷ்டத்திற்குத் தயாராயில்லாததாலும், அவ்விதம் செய்தனர். ஆதலால் அவர்கள் தங்கள் செய்கைக்காக தாங் களே வெட்கினர். இவ்வெட்கமும், பெரிய இந்திய வியாபாரி களின் மனஸ்தாபத்தால் வியாபாரம் கெட்டுப் போய்விடு மென்ற பயமும் சேர்ந்து அவர்களை நெருக்கின. இந்தியர் களில் முக்கியமான சிலர் இவ்விரு கஷ்டங்களிலிருந்து விடுபட ஒரு வழி கண்டுபிடித்தனர். ஓர் உத்தியோகஸ்தர் இரவு ஒன்பது அல்லது பத்து மணிக்கு மேல் ஒரு தனிப்பட்டவரின் வீட்டிற்கு வந்து அவர்களைச் சந்தித்து, அவர்களுக்கு அனுமதிச் சீட்டுகள் கொடுக்கவேண்டுமென அனுமதிச் சீட்டு ஆபீசுடன் ஏற்பாடு செய்துகொண்டனர். அப்படிச் செய்தால் தாங்கள் அச்சட்டத்துக்குக் கீழ்ப்படிந்தது, கொஞ்ச காலத்திற் காவது ஒருவருக்கும் தெரியாமலிருக்குமென அவர்கள் நினைத் தனர். தாம் தலைவர்களாயிருந்தபடியால், மற்றவர்கள் தம்மைப்

பின்பற்றுவார்களென்றும், இதன் மூலம் தங்கள் வெட்கத்தின் பளு குறையுமென்றும் அவர்கள் எதிர்பார்த்தனர். அப்புறம் அவர்கள் விஷயம் வெட்டவெளிச்சத்துக்கு வந்தாலும் பரவாயில்லை.

தொண்டர்கள் மிகவும் கண்காணிப்பாக இருந்தனர். ஒவ்வொரு கணமும் நடந்தவைகளையெல்லாம் சமூகத்துக்குத் தெரியப்படுத்தி வந்தனர். சத்தியாக்கிரகிகளுக்குச் சமாசாரம் தெரிவிக்கக்கூடியவர்களில் சிலர், அனுமதிச் சீட்டு ஆபீசிலேயே இருந்தனர். மற்றவர்கள், தாங்களும் பலவீனர்களாக இருந்தாலும், தலைவர்கள் தங்கள் மானத்தைத் தாங்களே குலைத்துக்கொள்ளுவதைப் பொருதவராய், அவர்கள் உறுதியுடனிருந்தால் தாங்களும் உறுதியுடனிருக்கலாமே என்று நினைத்து, சத்தியாக்கிரகிகளுக்கு விஷயங்களைச் சொல்லி விடுவார்கள். ஒரு கடையில், ஒரு நாள் இரவு, சிலர் அனுமதிச் சீட்டுகள் வாங்கப் போகிருர்களென்று சமூகத்திற்குச் சமாசாரம் எட்டியது. அவர்களைத் திருத்தச் சமூகத்தார் முதலில் முயற்சி செய்தனர். அந்தக் கடையை மறியலும் செய்தனர். ஆனல் மனிதனுடைய பலவீனம் நீண்ட காலம் மூடிவைக்கும் விஷயமன்று. சில முக்கியமான மனிதர்கள் இம்மாதிரி இரவு பத்து அல்லது பதினெரு மணிக்கு அனுமதிச் சீட்டுகள் வாங்கினுர்கள். இவ்விதம் சமூகத்திற்குள் ஒரு பிளவு ஏற்பட்டது. அடுத்த நாளே சமூகம் அவர்களின் பெயர்களைப் பகிரங்கப்படுத்தியது. ஆனல் வெட்கத்துக்கும் ஓர் எல்லையுண்டு. சுயநலத்தைப் பற்றிய எண்ணங்கள் வெட்கத்தையும் விரட்டி, மக்களை நேர்வழியினின்று பிறழவும் செய்கின்றன. சுமார் ஐந்நூறுபேர் அனுமதிச் சீட்டுகள் வாங்கினர். கொஞ்ச காலத்துக்கு அனுமதிச் சீட்டுகள் தனி வீடுகளில் கொடுக்கப்பட்டன. ஆனல் வெட்க உணர்ச்சி மறைய, சிலர் பகிரங்கமாகவும் ஆசியா ஆபீசுக்குப் போய் அனுமதிச் சீட்டுகளைப் பெற்று வந்தனர்.

## பதினெட்டாவது அத்தியாயம்

# முதல் சத்தியாக்கிரகக் கைதி

தங்களால் இயன்ற முயற்சி யனைத்தையும் செய்தும், பதிவு செய்ய விரும்பும் இந்தியர்கள் 500-பேர்களுக்கு அதிகமாகக் கிடைக்கவில்லை என்பதை ஆசியா இலாகா கண்டதும் எவரை யாவது கைது செய்யத் தீர்மானித்தனர். ஜெர்மிஸ்டன் என்னும் ஊரில் பல இந்தியர்கள் இருந்தனர். பண்டிதர் ராமசுந்தரர் அவர்களில் ஒருவர். அவர் தீரமிக்க தோற்றமுடையவர். பேச்சு வன்மையும் பெற்றவர். அவருக்குச் சில சம்ஸ்கிருத சுலோகங்கள் மனப்பாடமாகத் தெரியும். வட இந்தியாவிலிருந்து வந்தவராதலால், துளசிதாஸ் ராமாயணத்திலிருந்த சில ஈரடி (தோஹா) நான்கடிப் பாட்டுக்களையும் (சௌபாய்) அறிந்திருந்தார். அவர் பண்டிதரென அழைக்கப்பட்டதால், அவருக்குப் பொதுஜனங்களிடையே சற்று மதிப்பும் இருந்தது. பல இடங்களிலும் அவர் விறுவிறுப்பான பிரசங்கங்கள் செய்தார். ஜெர்மிஸ்டனில் விஷமக்கார இந்தியர் சிலர், ராமசுந்தரர் கைது செய்யப்பட்டால் பல இந்தியர்கள் அனுமதிச் சீட்டுகளை வாங்கிவிடுவார்கள் என்று ஆசியா இலாகாவுக்குக் குறிப்பிட்டனர். அவ்வுத்தியோகஸ்தர்கள் இதற்கு மயங்கிவிட்டனர். ஆதலால், ராமசுந்தரர் கைது செய்யப்பட்டார். இது போன்ற விஷயத்தில் இது முதலாவதாக இருந்தபடியால், அரசாங்கத்தினரும் இந்தியரும் பரபரப்புற்றனர். முன்னாள் வரை ஜெர்மிஸ்டனில் உள்ள சில நல்ல மக்களுக்கு மட்டுமே தெரிந்தவரான ராமசுந்தரர், ஒரே கணத்தில் தென்னாப்பிரிக்கா முழுவதும் புகழெய்தினார். பிரபலஸ்தர் ஒருவர் விசாரணைக்கு நின்றால் எவ்வாறோ, அவ்வாறே எவர் கவனமும் அவர்பால் சென்றது. இதற்காக அரசாங்கம் விசேஷமான ஏற்பாடுகள் எவையும் செய்திருக்க வேண்டியதே இல்லை. ஆனால் அமைதி நிலவுவதற்காக விசேஷ பந்தோபஸ்துகள் செய்திருந்தனர். கோர்ட்டிலும் ராமசுந்தரர் ஒரு சாதாரண கைதியைப் போல் நடத்தப்படாமல், சமூகத்தின் பிரதிநிதியாக மரியாதையுடன் நடத்தப்பட்டார். விசாரணையின்போது அவரைக் காண ஆர்வத்துடன் வந்த இந்தியர்கள் பலர், கோர்ட்டில் நிரம்பிவிட்டனர். ராமசுந்தரருக்கு ஒரு மாதம் வெறுங்காவல் சிறையெனத் தண்

ஞல் ஒரு பயனுமில்லை. சமூகத்தின் உண்மையான பலத்தையும் பலவீனத்தையும் வாசகர்கள் நன்ருக அறிவதற்காக, ஒரு ராமசுந்தரர் மாத்திரமல்ல, அப்படிப்பட்டவர் பலர் இருந்தார்களெனினும், இவர்கள் எல்லோரிடமிருந்தும் இயக்கம் அனுகூலத்தையே அடைந்தது என்று மட்டும் சொல்லுவது போதுமானது.

வாசகர்கள் ராமசுந்தரரை இகழ்ச்சியாக நினைக்காமலிருப்பார்களாக. எல்லா மனிதர்களிடத்திலும் குறைகள் இருக்கின்றன. ஒருவனிடத்தில் மற்றவர்களைவிட அதிகமான குறைகள் காணப்பட்டால், மக்கள் அவனை இடித்துரைப்பது வழக்கம். ஆனுல், அது நியாயமல்ல. ராமசுந்தரர் வேண்டுமென்றே பலவீனத்திற்குள்ளாகவில்லை. மனிதன் தன் சுபாவத்தை மாற்றலாம், அதை அடக்கிக்கொள்ளலாம்; ஆனுல் அதை வேரோடு களைந்தெறிய முடியாது. கடவுள் அவனுக்கு அவ்வளவு சுதந்திரம் கொடுக்கவில்லை. சிறுத்தை தனது தோலில் இருக்கும் புள்ளிகளை மாற்ற முடியுமானுல், மனிதன் தனது ஆன்மிக அமைப்பின் தனித் தன்மைகளையும் மாற்றமுடியும். ராமசுந்தரர் ஓடிவிட்டாலும், தம் குறைகளுக்காக அவர் வருந்தியிருக்க மாட்டார் என யார் சொல்ல முடியும்? அல்லது, அவர் ஓடியதே, தம் குறைகளுக்காக அவர் வருத்தப்பட்டதற்கு ஒரு பலமான அத்தாட்சியல்லவா? தமது குற்றங்களுக்காக அவர் வருத்தப்படவில்லையெனில், அவர் ஓடவேண்டிய அவசியமில்லை. ஓர் அனுமதிச் சீட்டு வாங்கி, கறுப்புச் சட்டத்திற்குக் கீழ்ப் படிந்து, சிறைக்குப் போவதினின்றும் தப்பியிருக்கலாம். தவிர, அவர் விரும்பியிருந்தால், ஆசியா இலாகாவின் ஒரு கருவியாக இருந்து, தம் நண்பர்களுக்குத் தப்பான வழிகளைக் காட்டி, அரசாங்கத்தின் நன்றிக்கு உரியவராகியிருக்கலாம். அவர் மேற்கண்டபடியெல்லாம் செய்வதற்கு மாருக, தம் குறைகளுக்காக வருத்தமுற்று, சமூகத்திடம் தம் முகத்தைக் காட்டாமல் இவ்வகையிலும் சமூகத்திற்குச் சேவை செய்தார் என்று, நாம் ஏன் தாராள மனத்தோடு அவரைப்பற்றிப் பேசக் கூடாது?

## பத்தொன்பதாவது அத்தியாயம்

# 'இந்தியன் ஒப்பினியன்'

சத்தியாக்கிரகப் போரில் உள்ளும் புறமும் கையாளப்பட்ட எல்லா ஆயுதங்களேயும்பற்றி நான் வாசகர்களுக்குச் சொல்ல நினைத்திருக்கிறேன். ஆதலால், தென்னுப்பிரிக்காவில் இன்று வரை பிரசுரம் செய்யப்பட்டு வரும் 'இந்தியன் ஒப்பினியன்' (இந்தியர்கள் கொள்கை) என்ற வாரப் பத்திரிகையை அவர்களுக்கு அறிமுகம் செய்கிறேன். தென்னுப்பிரிக்காவில் இந்தியர்களுக்குச் சொந்தமான அச்சகம் ஒன்றை முதன் முதல் ஆரம்பித்த பெருமை, ஸ்ரீ மதன்ஜித் வியவஹாரிக் என்ற கூர்ஜர கனவானுக்குரியது. கஷ்டப்பட்டு அந்த அச்சகத்தைச் சில வருடங்கள் நடத்தியபிறகு, ஒரு பத்திரிகையையும் வெளியிட நினைத்தார். காலஞ் சென்ற மன்சுக்லால் நாஜரையும் என்னேயும் கலந்தாலோசித்தார். டர்பனிலிருந்து பத்திரிகை வெளியிடப்பட்டது. மன்சுக்லால் நாஜர் சம்பளமின்றிப் பத்திரிகாசிரியராக இருக்க முன்வந்தார். ஆரம்பத்திலிருந்து பத்திரிகை நஷ்டத்தில் நடந்தது. கடைசியில் ஒரு பண்ணே வாங்கி, அதில் எல்லா ஊழியர்களேயும் குடிபுகுத்தி, அவர்களுக்கும் பொதுநல ஸ்தாபனம் ஒன்று ஏற்படுத்தி, அப்பண்ணேயிலிருந்து பத்திரிகையைப் பிரசுரம் செய்யத் தீர்மானித்தோம். இதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பண்ணே டர்பனுக்குப் பதின்மூன்று மைல்கள் தூரத்தில் ஓர் அழகான குன்றின்மேல் இருக்கிறது. பக்கத்திலிருக்கும் ரெயில்வே நிலயம் அந்தத் தோட்டத்திலிருந்து மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. அதற்கு போனிக்ஸ் (**Phoenix**) என்று பெயர். அப்பத்திரிகை இப்போதும் 'இந்தியன் ஒப்பினியன்' என்ற பெயரிலேயே நடந்து வருகிறது. முதலில் அது ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, தமிழ் ஆகிய மொழிகளில் வெளியாயிற்று. ஆனல் ஹிந்தியும் தமிழும் பிறகு நிறுத்தப்பட்டன. ஏனெனில், அவைகளினுலுண்டான சிரமங்கள் அதிகமாயின. அப்பண்ணேயில் குடியேற விரும்பியவர்களில், ஹிந்தி, தமிழ் ஆசிரியர்கள் எங்களுக்குக் கிடைக்கவில்லே. ஹிந்தி, தமிழ்ப் பத்திரிகைகளேப் போதுமான அளவு கண்காணிக்க முடியாமல் இருந்தது. சத்தியாக்கிரகப் போர் தொடங்கிய போது, ஆங்கிலத்திலும் குஜராத்தியிலும் இப்பத்திரிகை பிரசுரமாயிற்று. அப்பண்ணேயில் குடியேறியவர்களில் குஜராத்

தியரும், ஹிந்துஸ்தானியரும், தமிழரும், ஆங்கிலேயரும் இருந்தனர். மன்சுக்லால் நாஜரின் அகால மரணத்திற்குப் பிறகு ஆசிரியர் பதவியை ஹெர்பர்ட் கிட்சின் (Herbert Kitchin) என்ற ஆங்கில நண்பர் ஒருவர் ஏற்றுக்கொண்டார். அதற்குப் பிறகு ஹென்றி எல். எஸ். போலக் (H. L. S. Polak) நெடுங் காலமாகப் பத்திரிகாசிரியராய் இருந்தார். நாங்கள் சிறையில் இருந்தபோது காலஞ்சென்ற ஜோஸப் டோக்கும் (Joseph Doke) பத்திரிகாசிரியர் வேலை பார்த்து வந்தார். இப்பத்திரிகை மூலம் ஒவ்வொரு வாரத்திய செய்திகளேயும் சமூகத்தினரிடையே பரப்பி வர முடிந்தது. குஜராத்தி தெரியாத இந்தியர்களுக்கு, பத்திரிகையின் ஆங்கிலப் பிரதி இயக்கத்தைப் பற்றித் தெரிவித்துக்கொண்டிருந்தது. இந்தியா, இங்கிலாந்து, தென்னுப்பிரிக்கா இவ்விடங்களிலிருந்த ஆங்கிலேயர்களுக்கு 'இந்தியன் ஒப்பினியன்' வாரம் ஒருமுறை வரும் ஒரு செய்திக் கடிதமாக இருந்தது. உள்பலத்தையே முக்கியமாய் நம்பியிருக்கும் ஒரு போராட்டத்தை, ஒரு பத்திரிகையின்றிச் சரியானபடி நடத்திவிட முடியாதென நம்புகிறேன். 'இந்தியன் ஒப்பினியன்' மூலம் செய்ததுபோல் அவ்வளவு சுலபமாகவும், வெற்றியுடனும் உள்நாட்டு இந்திய சமூகத்திற்கு விஷயங்களே எடுத்துக் காட்டவும், உலக முழுவதுமிருக்கும் இந்தியர்களுக்குத் தென்னுப்பிரிக்காவில் நடக்கும் விஷயங்களேப் பற்றித் தெரிவித்துக் கொண்டிருக்கவும் வேறு எந்த முறையிலும் முடிந்திருக்காது என்பது எனது அனுபவமாகும். ஆதலால் 'இந்தியன் ஒப்பினியன்' நிச்சயமாய் எங்கள் போராட்டத்தில் மிகவும் பயனுள்ளதும், சக்தி வாய்ந்ததுமான கருவியாக அமைந்தது.

போராட்டம் நடத்தும்போதும், அதன் பயனுகவும் இந்திய சமூகத்தில் மாறுதல்கள் தோன்றியது போலவே, 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையும் மாறுபாடு அடைந்தது. ஆரம்பத்தில் அதில் விளம்பரங்கள் போட ஏற்றுக்கொண்டிருந்தோம். அச்சகத்தில் மற்றவர்கள் வேலேகளேயும் ஊதியத்திற்குச் செய்து வந்தோம். இம்மாதிரி வேலேக்கு, எங்களில் மிகத் தேர்ந்தவர்கள் சிலரை ஒதுக்க வேண்டியிருந்ததைக் கவனித்தேன். விளம்பரங்களேப் பிரசுரம் செய்வதற்கு ஏற்றுக்கொண்டிருந்ததால், எதை ஏற்பது அல்லது எதை நிராகரிப்பது என்பது பற்றிய சங்கடம் எப்போதும் வந்துகொண்டிருந்தது. ஓர் ஆட்சேபகரமான விளம்பரத்தை மறுக்க விரும்பினுலும், அதை ஏற்றுக்கொள்ளும் நிர்ப்பந்தம் ஏற்படலாம். ஏனெனில், விளம்பரம் செய்பவர்

சமூகத்தின் பிரதானமான ஒருவராயிருந்து அவருடைய விளம்பரம் மறுத்தளிக்கப்பட்டால், அதனால் அவர் வருத்தப்பட நேரிடலாம். சிறந்த ஊழியர்களில் சிலரை, விளம்பரங்களை வாங்குவதற்காகவும், விளம்பரம் செய்தவர்களிடம் நின்ற நிலுவைகளை வசூல் செய்வதற்காகவும் ஒதுக்கி வைக்கவேண்டியிருந்தது. விளம்பரங்கள் பெறுவதற்காக விளம்பரம் செய்பவர்களை முகஸ்துதி செய்ய வேண்டியும் இருந்தது என்பதைப்பற்றி இங்கே சொல்லவேண்டிய அவசியமில்லை. தவிர, லாபம் கிடைக்கின்றது என்ற காரணத்திற்காகப் பத்திரிகை நடத்தப்படாமல், சமூகத்துக்குச் சேவை செய்ய வேண்டுமென்ற பரிசுத்த நோக்கத்துடனேயே நடத்தப்படுமானால், அச்சேவை சமூகத்தின்பேரில் பலவந்தமாகச் சுமத்தப்படலாகாது; சமூகம் விரும்பினால்தான் அச்சேவை செய்ய வேண்டுமென்ற பரிசுத்த நோக்குடனேயே நடத்தப் படவேண்டும் என்ற கருத்து எங்களுக்கு உயர்ந்ததெனத் தோன்றிற்று. அப்பத்திரிகை வெளியுதவியின்றி நடக்கத் தக்கவாறு அவ்வளவு அதிகமாகச் சந்தாதாரர்கள் சமூகத்திலிருந்து முன்வருவார்களானால், அதுவே சமூகம் பத்திரிகையின் சேவையை விரும்புகிறது என்பதற்குத் தெளிவான சாட்சியமாகும். சேவையின் பெயரால் சில வியாபாரிகளிடத்தில் போய் பத்திரிகைக்கு விளம்பரங்களைத் தருமாறு யாசிப்பதை விடப் பொதுவாகச் சமூகத்தை அணுகி, தங்கள் பத்திரிகையை நீடித்து நடத்துவதற்கு அவர்கள் செய்யவேண்டிய கடமையை அவர்களுக்கு எடுத்துச் சொல்லுவது எல்லா விதத்திலும் எல்லோருக்கும் நல்லதெனக் கடைசியாகத் தோன்றியது. இக்காரணங்களுக்காக எங்கள் பத்திரிகையில் விளம்பரங்களைப் போடுவதை நிறுத்திவிட்டோம். இதனால் ஒரு திருப்திகரமான பலன் உண்டாயிற்று. விளம்பரங்கள் தேடுவதில், தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்தியிருந்தவர்கள், இப்பொழுது பத்திரிகையை அபிவிருத்தி செய்வதில் தங்கள் உழைப்பை உபயோகப்படுத்தினார்கள். சமூகத்தினர், பத்திரிகை தமக்கே சொந்தமானதென உணர்ந்தனர். ஆதலால் அதை நடத்துவதற்குத் தங்களுக்குள்ள பொறுப்பையும் உணர்ந்தார்கள். அவ்விஷயத்தில் ஊழியர்களுக்கு இருந்த கவலையும் ஒழிந்தது. இப்போது, சமூகத்திற்குப் பத்திரிகை தேவையாக இருக்கும் வரை, தங்களாலியன்ற முழுச் சேவையும் பத்திரிகைக்குச் செய்வதே அவர்களுடைய ஒரே கடமையாய் இருந்தது. எந்த இந்தியரையும் ‘இந்தியன் ஒப்பினியனு’க்கு சந்தாதாரராகும்படி கேட்க அவர்கள் இப்போது வெட்கப்படவில்லை. அங்ஙனம்

செய்வது தங்கள் கடமை என நினைத்தனர். பத்திரிகையின் உள் பலத்திலும், தன்மையிலும் ஒரு மாறுபாடு உண்டாயிற்று. அது எல்லோரும் கவனிக்க வேண்டிய ஒரு சக்தியாகவும் விளங்கியது. சாதாரணமாக 1200 முதல் 1500 வரை இருந்த சந்தாதாரரின் தொகை நாளுக்குநாள் ஏறிக்கொண்டே வந்தது. சந்தா விகிதத்தை உயர்த்தவேண்டி நேரிட்டது. எனினும், போராட்டம் தீவிரமாக இருந்த சமயம் சுமார் 3500 சந்தாதாரர்கள் இருந்தனர். 'இந்தியன் ஒப்பினியனை'த் தென்னுப்பிரிக்காவில் படிக்கக் கூடிய இந்தியர்கள் சுமார் 20,000 பேர் இருப்பார்கள். ஆதலால் சுமார் 3000 பிரதிகள் செலவாவது மிகவும் திருப்திகரமான தென்றே சொல்லவேண்டும். குறிப்பிட்ட காலத்தில் பத்திரிகை ஜொஹன்னஸ்பர்க்கில் கிடைக்காவிட்டால், இதைப்பற்றிப் புகார்கள் என்னிடத்தில் வந்து குவிந்துவிடும். இந்த அளவுக்குச் சமூகம் இப்பத்திரிகையைத் தனதாகவே செய்துகொண்டது. சாதாரணமாக இப்பத்திரிகை ஜொஹன்னஸ்பர்க்கில் ஞாயிற்றுக்கிழமை காலை வந்து சேரும். பத்திரிகை கைக்குக் கிடைத்ததும், அதன் குஜராத்திப் பிரிவை ஆரம்பத்திலிருந்து கடைசி வரைப் படிப்பதை முதற் காரியமாய்க் கொண்டிருந்தவர்கள் பலரை எனக்குத் தெரியும். கூட்டத்தில் ஒருவர் அதைப் படிப்பார். மற்றவர்கள் அவரைச் சுற்றிலும் உட்கார்ந்துகொண்டு கேட்பார்கள். அப்பத்திரிகையைப் படிக்க விரும்பியவர்கள் யாவரும், சந்தா கொடுக்கச் சக்தியுள்ளவர்களாயில்லை. ஆதலால் அவர்கள் சிலர் ஒன்ருகச் சேர்ந்து ஒரு பத்திரிகையை வாங்குவார்கள்.

விளம்பரங்களை நிறுத்தியது போலவே, அதே காரணங்களுக்காக எங்கள் அச்சகத்தில் பிறரை வேலைக்கு எடுத்துக்கொள்ளுவதையும் நிறுத்திவிட்டோம். எழுத்துக் கோப்பவர்களுக்கு இப்போது கொஞ்சம் அவகாசம் இருந்தது. அது புத்தகங்கள் பிரசுரம் செய்வதில் உபயோகப்படுத்தப்பட்டது. இங்கும் லாபம் சம்பாதிக்கும் எண்ணம் இல்லையாதலாலும், புத்தகங்கள் போராட்டத்தின் முன்னேற்றத்திற்காகவே பதிப்பிக்கப்பட்டனவாகையாலும், அவைகளுக்கு நல்ல விற்பனை இருந்தது. இவ்விதம் பத்திரிகையும், அச்சகமும் போராட்டத்திற்கு உதவி செய்தன. சத்தியாக்கிரகம் சமூகத்தில் நாளாவட்டத்தில் வேரூன்றிப் பதியப் பதிய, சத்தியாக்கிரக நோக்கத்தில் பத்திரிகையும், ஒழுக்கத்தில் அச்சகமும் உயர்ந்தன என்பது தெளிவாகத் தென்பட்டது.

## இருபதாவது அத்தியாயம்

# தொடர்ந்து பலர் கைது

ராமசுந்தரரைக் கைது செய்ததனால் அரசாங்கத்தார் யாதொரு பலனையும் பெறவில்லை என்பதைப் பார்த்தோம். அதற்கு மாறாக, இந்திய சமூகத்தின் உற்சாகம் வேகமாக உயர்வதையே அவர்கள் கண்டனர். ஆசியாக்காரர் இலாகா உத்தியோகஸ்தர்கள், 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையை வெகு கவனத்துடன் படித்து வந்தார்கள். நன்கு யோசித்தே இவ்வியக்கத்திலிருந்து ரகசியம் என்பது அறவே விலக்கப் பட்டிருந்தது. நண்பர்களாயிருந்தாலும் சரி, விரோதிகளாய் இருந்தாலும் சரி, நடுநிலைமையில் இருப்பவராயினும் சரி, இந்திய சமூகத்தின் பலம் அல்லது குறைகளை அறிய விரும் பும் ஒவ்வொருவருக்கும் 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகை ஒரு பகிரங்கப் புத்தகமாக இருந்தது. எவரும் தப்பிழைக்க முடி யாததும், தந்திரத்திற்கும் ஏமாற்றுதலுக்கும் சிறிதேனும் இடமில்லாததும், வெற்றிக்குப் பலமொன்றையே உத்தரவாத மாகக் கொண்டதுமான இவ்வியக்கத்தில், ஒளிப்பாட்டத்திற்கோ ரகசியத்திற்கோ இடமில்லை என்பதைப் பொதுஜன ஊழியர்கள் தொடக்கத்திலேயே அறிந்திருந்தனர். ஆதலால் தொடக்கத் திலிருந்தே ரகசியத்திற்கு இடங் கொடுக்கப்படவில்லை. குறைகள் என்ற பிணி ஒழிக்கப்பட வேண்டுமானால், முதலில் அவை என்ன என்பதைச் சரியாகக் கண்டுபிடித்துப் போது மான அளவு அதை விளம்பரப்படுத்த வேண்டும். சமூ கத்தின் நன்மைக்கு இது அவசியம். 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையின் கொள்கை இதுவே என்பதை அதிகாரிகள் தெரிந்துகொண்டதும் இப்பத்திரிகை, அவர்களுக்கு இந்திய சமூகத்தின் அக்காலத்திய சரித்திரத்தைக் காட்டும் ஒரு சரியான கண்ணாடியாயிற்று. சில குறிப்பிட்ட தலைவர்கள் வெளியில் இருக்கும்வரை இயக்கத்தின் பலத்தை எவ்விதத்தி லும் குறைக்க முடியாதென்று அவர்கள் நினைக்க ஆரம்பித்தனர். ஆதலால், மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் ஆஜராக வேண்டுமென 1907-ஆம் வருடம் கிறிஸ்துமஸ் வாரத்தில் சில முக்கியஸ்தர் களுக்கு அறிவிப்பு வந்தது. உத்தியோகஸ்தர்கள் செய்த இச் செய்கை மிகவும் மரியாதையான காரியம் என்று ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அவர்கள் விரும்பியிருந்தால் இத்

தலைவர்களை வாரண்டுகள் மூலம் கைது செய்திருக்கலாம். இதற்குப் பதிலாக அறிவிப்புக்களை ஜாரி செய்தனர். இது அவர்கள் மரியாதையைக் காட்டியதற்கு ஓர் அத்தாட்சியோடு நில்லாமல், தலைவர்களும் கைதியாவதற்குச் சம்மதப் பட்டும் தயாராகவும் இருந்தார்கள் என்பதையும் காட்டியது. இங்ஙனம் அறிவிப்பு ஜாரி செய்யப்பட்டவர்கள், ஆஜராகும் படி குறிப்பிடப்பட்டிருந்த தேதியில், அதாவது 1907-ஆம் வருடம் டிசம்பர் மாதம் 28-ஆம் தேதியன்று, கோர்ட்டு முன்னிலையில் ஆஜரானர்கள். சட்டப்படி அவர்கள் பதிவு செய்து கொள்ள மனுப் போடாததால், அவர்களை ஏன் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் டிரான்ஸ்வாலை விட்டு வெளியே போகும்படி உத்தரவு செய்யக்கூடாதென்பதற்கு அவர்கள் காரணம் காட்ட வேண்டும் என்று அந்த அறிவிப்பில் கண்டிருந்தது.

இவர்களில் ஸ்ரீ குவின் (Mr. Quinn) என்பவரும் ஒருவர். ஜோஹன்னஸ்பர்க்கிலிருந்த சீன தேசத்தினருக்கு அவர் தலைவர். அங்கே சீனர்கள் ஏறத்தாழ முந்நூறு நானூறு பேர் இருந்தனர். அவர்களில் பெரும்பான்மையோர் வியாபாரிகள்; சிலர் விவசாயிகள். இந்தியா, விவசாயத்திற்குப் பேர்போனது. ஆனல் இந்தியாவிலிருக்கும் நாம், சீன தேசத்தாரைப்போல் விவசாயத்தில் அவ்வளவு முன்னேறவில்லை என்றே நினைக்கிறேன். அமெரிக்காவிலும், மற்றத் தேசங்களிலும் விவசாயம் அடைந்திருக்கும் முன்னேற்றம் சொல்லத் தரமன்று. ஆனல், அது இன்னும் பரீட்சார்த்த நிலைமையில்தான் இருக்கிறதென நான் கருதுகிறேன். ஆனல், அதற்கு மாருகச் சீன இந்தியாவைப் போலவே ஒரு பழமையான நாடு; ஆதலால் இந்தியாவையும் சீனவையும் ஒப்பிடுதலே பயனைத் தரத்தக்கதாக இருக்கும். ஜோஹன்னஸ்பர்க்கில் சீனர்களுடைய விவசாய முறைகளைக் கவனித்திருக்கிறேன். அவர்களுடன் இவ்விஷயத்தைப் பற்றிப் பேசியும்இருக்கிறேன். இதிலிருந்து சீனர்கள் நம்மைவிட அதிகப் புத்திக் கூர்மையும் சுறுசுறுப்பும் உள்ளவர்கள் என்ற துணிபே எனக்கு ஏற்பட்டது. நிலம் பயன்படாதென நினைத்துப் பல சமயங்களில் நாம் தரிசாகப் போட்டு விடுகிறோம். ஆனல், சீனர்களுக்கு நிலத்தின் தரம் பற்றிய நுட்பமான ஞானமிருப்பதன் காரணமாக, அந்த நிலத்தில் நல்ல பயிர்களைச் சாகுபடி செய்து விடுகின்றனர்.

கறுப்புச் சட்டம் இந்தியர்களைப் போலவே சீனர்களையும் பாதித்தது. ஆதலால், அவர்களும் இந்தியர்களுடன் இச்சத்தி

யாக்கிரகப் போராட்டத்தில் கலந்துகொண்டனர். எனினும், ஆரம்பத்திலிருந்து கடைசிவரை, இரு சமூகங்களினுடைய முயற்சிகளும் ஒன்றுக்கொன்று ஒன்றி இருக்கவில்லை. ஒவ்வொரு சமூகமும் அதனதன் சொந்த ஸ்தாபனத்தின் மூலம் வேலை செய்தது. இவ்வேறுபாடு ஒரு நன்மையை உண்டாக்கியது. அதாவது, இவ்விரு சமூகங்களும் அதனதன் முறைப்படி காரியங்களைச் செய்து வந்தவரையில், ஒரு சமூகம் மற்றொன்றுக்கும் உறுதுணையாக இருந்தது. ஆனால் ஒன்று பலவீனம் அடைந்தால், அது மற்றொன்றினுடைய கட்டுப்பாட்டையும், தன்னம்பிக்கையையும் பாதிக்காமலிருக்கும்; அல்லது அடியோடு அழிவிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ளவும் முடியும். சீனர்களுடைய தலைவர் அவர்களுக்குத் துரோகம் செய்ததால், சீனர்களில் பலர் கடைசியில் தவறிவிட்டனர். சீனர்களின் தலைவர் வெறுக்கத் தக்க இச்சட்டத்திற்குப் பணியவில்லை. ஆனால், தம் வசத்திலிருந்த கணக்குப் புத்தகங்களையும் பணத்தையும் சீனர்கள் சங்கத்திற்கு ஒப்படைக்காமல் அவர் ஓடிப்போய் விட்டாரென ஒருநாள் காலை எனக்கு ஒருவர் வந்து சொன்னார். தலைவர் இல்லாத சமயத்தில் அவரைப் பின்பற்றுவோர் போராட்டத்தில் நீடித்து நிற்பது கடினம். அதிலும் தலைவர் தம் மானத்தைப் பறிகொடுத்து விட்டார் என்னும்போது, அவரைப் பின்பற்றுவோருக்கு ஏற்படும் அதிர்ச்சி இன்னும் அதிகமாகவே இருக்கும். கைது செய்வதென்பது ஆரம்பமானபோது சீனர்கள் மிகுந்த உற்சாகத்துடன் இருந்தனர். அவர்களில் எவரும் அனுமதிச் சீட்டுகள் வாங்கவில்லை. ஆதலால் அவர்கள் தலைவரான ஸ்ரீ குவின்னும் இந்தியர்களுடன் கோர்ட்டில் ஆஜராகும்படி எச்சரிக்கை செய்யப்பட்டார். கொஞ்ச காலமேனும் ஸ்ரீ குவின் மிகவும் உபயோகமான வேலை செய்து வந்திருந்தார்.

சிறைப்பட்டவர்களில் முதல் கோஷ்டியிலிருந்த சில முக்கியமான இந்தியர்களில் ஒருவரை இங்கே வாசகர்களுக்கு அறிமுகம் செய்ய விரும்புகிறேன். அவர் ஸ்ரீ தம்பி நாயுடு என்பவர். அவர் சென்னை மாகாணத்திலிருந்து மாரிஷஸ் தீவிற்குச் சென்று குடியேறின தமிழ்த் தாய்தந்தையருக்குப் பிறந்த மகன். அவர் ஒரு சாதாரண வியாபாரி. அவர் பள்ளிப் படிப்புப் பெற்றதில்லையென்றே சொல்லலாம். ஆனால் பரந்த அனுபவமே அவருக்கு ஆசானாக அமைந்தது. இலக்கணத் திருத்தமா யில்லாவிடினும், ஆங்கிலத்தில் நன்றாகப் பேசவும் எழுதவும் அவருக்குத் தெரியும். இதே மாதிரி தமிழ் ஞானமும்

பெற்றிருந்தார். ஹிந்தியில் பேசவும், பிறர் பேசினுல் தெரிந்து கொள்ளவும் கூடிய ஆற்றலும் அவருக்கு இருந்தது. தெலுங்கும் அவருக்குக் கொஞ்சம் தெரியும். ஆனுல் இம்மொழிகளை எழுதப் படிக்க அவருக்குத் தெரியாது. தவிர மாரிஷஸில் வழங்கி வந்த ஒருவகைக் கொச்சைப் பிரஞ்சுமொழி இனத்தைச்சேர்ந்த கிரியோல்* மொழியும் அவருக்கு நன்ருகத் தெரியும். நீக்கிரோக்கள் பாஷையும் அவருக்குத் தெரியும் என்று சொல்ல வேண்டும். இவ்வளவு பாஷைகளைப் பழக்கத்திற்குப் போதுமான அளவு அறிந்திருந்தது, தென்னுப்பிரிக்க இந்தியர்களுக்கு ஓர் அருங் காரியமல்ல. அவர்களில் நூற்றுக்கணக்கான பேர்கள் இவ்வெல்லாப் பாஷைகளையும் ஒருவாறு அறிந்திருந்தனர். அதிகச் சிரமம் இல்லாமலேயே அவர்கள் இத்தனைப் பாஷைகளையும் கற்றிருந்தனர். பிற பாஷை ஒன்று போதனு மொழியாக இருப்பதனுல் மூளைக்கு ஏற்பட்டுவிடும் களைப்பு அவர்களுக்கு ஏற்படாமல் அவர்கள் ஞாபக சக்தி தீவிரமாக இருந்ததே இதற்குக் காரணம். இப்பல்வேறு மொழிகளைப் பேசுவோருடன் பேசுவதாலும். கூர்ந்து கவனிப்பதாலும், இம்மொழிகளின் ஞானத்தை அவர்கள் பெறுகின்றனர். இது அவர்கள் மூளைக்கு அதிக பாரமாகவும் இருப்பதில்லை; அதற்கு மாருக, மனப்பயிற்சி அவர்களுடைய அறிவையும் இயற்கை முறையிலேயே அபிவிருத்தி செய்கிறது. தம்பி நாயுடுவும் இம்மாதிரியே நுண்ணிய அறிவையும், புதிய விஷயங்களையுங்கூட அதிக சீக்கிரத்தில் கிரகிக்கும் சக்தியையும் பெற்றிருந்தார். எந்த நேரத்திலும் அவருக்குத் தாராளமாகப் பேச வரும் வார்த்தைகள் ஆச்சரியப்படத் தக்கவை. அவர் இந்தியாவைப் பார்த்ததே யில்லை. எனினும், தாய் நாட்டின்பேரில் எல்லையற்ற அன்பு கொண்டிருந்தார். தேச பக்தி அவருடைய ரத்தத்துடன் கலந்து ஓடிக் கொண்டிருந்தது எனச் சொல்லலாம். அவருடைய திடச்சித்தம் அவர் முகத்திலேயே பிரதிபலித்தது. வலுவான உடலும், அலுப்புத் தட்டாத சக்தியும் பெற்றிருந்தார். கூட்டங்களில், தலைமை வகிப்பதாயிருந்தாலும் சரி, அவைகளில் முன்னின்று காரியம் நடத்துவதா யிருந்தாலும் சரி, அல்லது கூலிபோல் வேலை செய்வதா யிருந்தாலும் சரி, எல்லா இடங்களிலும் அவர் முதன்மையாய் விளங்கினர். நடுத் தெரு வழியே சுமைகளைச்

* கிரியோல்: ஆப்பிரிக்காவிலிருந்து வராத, வெஸ்ட் இண்டீஸ், ஸ்பானிஷ் அமெரிக்காவில் இருக்கும் நீக்கிரோக்களுக்குப் பிறந்தவர்களைக் குறிக்கும் சொல். இவர்கள் பேசும் மொழிக்கும் கிரியோல் என்றே பெயர்.

சுமந்து செல்வதற்கும் அவர் கூச்சப்பட மாட்டார். அவர் வேலை செய்ய ஆரம்பித்தால், இரவும் பகலும் அவருக்கு ஒன்றே. சமூகத்திற்காகத் தன்னுடைய சகலத்தையும் தியாகம் செய்ய முன் வருவதில் அவருக்கு இணையாக எவரும் இலர். ஆண்மை மிக்க அவருக்கு அவசர புத்தியும், கோபமும் மாத்திரம் இல்லாமலிருந்தால், அவர் காச்சலியாவுக்குப் பின் டிரான்ஸ்வால் இந்தியருடைய தலைவராகச் சுலபமாக விளங்கியிருக்கலாம். டிரான்ஸ்வால் போராட்டம் நடந்துகொண்டிருந்தபோது அவருக்குள்ள முன்கோபம் யாதொரு கெட்ட பயனையும் விளைவிக்கவில்லை; அவருடைய மதிக்கவொண்ணு நற்குணங்கள் மணிகள் போல் பிரகாசித்தன. ஆனல், அவருடைய முன்கோபமும் அவசர புத்தியும் அவருக்குப் பெரிய விரோதிகளாகப் பின்னல் விளங்கி அவருடைய நற்குணங்களை மழுங்கச் செய்தன எனப் பிறகு நான் கேள்விப்பட்டேன். அது எப்படியாயினும் தம்பு நாயுடுவைத் தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகச் சரித்திரத்தின் முன்னணியில் நின்ற ஒருவராகவே எப்பொழுதும் கருத வேண்டும்.

மாஜிஸ்டிரேட், ஒவ்வொரு வழக்கையும் தனித்தனியாக விசாரித்து, சிலரை நாற்பத்தெட்டு மணி நேரங்களுக்குள்ளும், இன்னும் சிலரை ஏழு தினங்களுக்குள்ளும், மற்றவர்களைப் பதினன்கு தினங்களுக்குள்ளும், டிரான்ஸ்வாலை விட்டு வெளியேறிவிட வேண்டுமென உத்தரவிட்டார்.

இக்கால வரையறை 1908-ஆம் வருடம் ஜனவரி மாதம் 10-ஆம் தேதியன்று தீர்ந்தது. அன்றைய தினம் தண்டனையைப் பெற்றுக்கொள்ளுவதற்காக நாங்கள் கோர்ட்டில் ஆஜராகும்படி அறிவிக்கப்பட்டோம்.

எங்களில் எவரும் எதிர்வாதம் செய்வதாக இல்லை. சட்டப்படி பதிவு அத்தாட்சியுடையவர்கள் என்று மாஜிஸ்டிரேட்டுக்குத் திருப்தி ஏற்படாததால் டிரான்ஸ்வாலை விட்டு ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் வெளியேறிவிட வேண்டுமென்று உத்தரவிடப்பட்டிருந்தோம். அந்த உத்தரவை மீறி நடந்தோம் என்ற குற்றச்சாட்டிற்கு நாங்கள் யாவரும் குற்றவாளிகள் என்றே ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது.

ஒரு சிறிய வாக்குமூலம் கொடுப்பதற்கு நான் அனுமதி கேட்டேன். அனுமதி கொடுக்கப்பட்ட பிறகு, நான் சொன்னதாவது: "என்னுடைய வழக்கை, எனக்குப் பின் வரும் மற்ற

வர்கள் வழக்குகளிலிருந்து தனித்துக்காட்ட ஒரு வித்தியாசம் செய்யப்பட வேண்டும். பிரிட்டோரியாவில் எனது நாட்டுச் சகோதரர்களுக்கு மூன்று மாதக் கடுங்காவல் தண்டனையுடன் அதிகமான தொகை அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினல் மேலும் மூன்றுமாதக் கடுங்காவலும் விதிக்கப்பட்டிருப்பதாக இப்பொழுதுதான் கேள்விப்பட்டேன். இம்மக்கள் குற்றத்தைச் செய்தவர்களானல், நான் அதைக் காட்டிலும் பெரிய குற்றத்தைச் செய்தவனுவேன்." ஆதலால், மிகக் கடினமான தண்டனையையே எனக்கு விதிக்குமாறு நான் கேட்டுக்கொண்டேன். ஆனல், மாஜிஸ்டிரேட் என்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. இரண்டுமாத வெறுங்காவல் தண்டனையை எனக்கு விதித்தனர். நான் அடிக்கடி வக்கீலாகத் தோன்றியிருந்த அக்கோர்ட்டிலேயே நான் குற்றவாளியாக நின்றது எனக்குக் கொஞ்சம் சங்கடமாகவே இருந்தது. ஆனல், அங்ஙனம் இருந்தது வக்கீலாயிருந்ததைவிட மிக அதிக மரியாதையானதென நான் கருதினேன் என்பதும், குற்றவாளிகள் நிற்கும் பெட்டிக்குள் நுழைவதற்கு நான் கொஞ்சமேனும் பின்னடையவில்லை என்பதும் எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது.

கோர்ட்டில் நூற்றுக்கணக்கான இந்தியர்களும், வக்கீல் சகோதரர்களும் என் முன் இருந்தனர். தண்டனை கொடுக்கப்பட்ட பின்பு உடனே நான் போலீஸ் காவலில் அங்கே தனியாக இருந்தேன். அப்போலீஸ்காரன், கைதிகளுக்காகப் போடப்பட்டிருந்த ஒரு பெஞ்சிமீது உட்காரும்படி எனக்குச் சொல்லிக் கதவைச் சாத்திவிட்டு வெளியே போய்விட்டான். என் மனம் பரபரப்படைந்தது ; ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினேன். வீடு, நான் தொழில் நடத்தி வந்த கோர்ட்டுகள், அந்தப் பொதுக்கூட்டம் இவையெல்லாம் கனவு போல மறைந்தன. 'இப்பொழுது நான் ஒரு கைதி. இந்த இரண்டு மாதங்களில் என்னவெல்லாம் நடக்குமோ? என் தண்டனைக்காலம் முழுமையும் நான் சிறையில் இருக்கவேண்டியிருக்குமா? மக்கள், அவர்கள் வாக்களித்திருந்தபடி அதிகத் தொகையில் சிறைக்குச் செல்ல முன்வருவார்களானல், தண்டனை முழுவதையும் அனுபவிக்க வேண்டியிருக்காது என்பது நிச்சயம். ஆனல் அவர்கள் சிறைகளை நிரப்பத் தவறினல் இரண்டு மாதங்கள் இரண்டு யுகங்கள் போலக் கடினமாகவே இருக்கும்.'—இவ்வெண்ணங்கள், வாயால் வெளியிடும் மிகக் குறுகிய நேரத்தில் என் மனத்துள் எழுந்தன. அவை என்னை வெட்கத்துள் ஆழ்த்தின.

என்னே என் தற்பெருமை! சிறைகளை அரசனுடைய விடுதிகளாகவும், கறுப்புச் சட்டத்துக்குக் கீழ்ப்படியாததால் நேரிடும் இன்னலைப் பூரண இன்பமாகவும், அதைத் தடுக்க எல்லாவற்றையும் ஈந்து உயிரையும்கூடத் தியாகம் செய்வதே மேன்மையான ஆனந்தமென்றும் மக்களுக்கு எடுத்துச் சொல்லியவன் நான்! அந்த ஞானமெல்லாம் இன்று எங்கே ஓடி ஒளிந்தன? இந்த இரண்டாவது எண்ணத்தின் ஓட்டம் எனக்கு உற்சாகம் கொடுக்கும் மருந்துபோல் இருந்தது. நான் என்னுடைய மடமையைக் கண்டு சிரிக்க ஆரம்பித்தேன். மற்றவர்களுக்கு எம் மாதிரிச் சிறைத்தண்டனை கொடுக்கப்படும், அவர்கள் என்னுடன் சிறையில் வைக்கப்படுவார்களா என்பதுபற்றியும் சிந்திக்கலானேன். ஆனால், போலீஸ் உத்தியோகஸ்தர் கதவுகளைத் திறந்து தம்மைப் பின்தொடரும்படி சொன்னது என் சிந்தனையைக் கலைத்தது. நான் அவர் பின் சென்றேன். அவர் என்னை முன்னால் போகும்படிச் செய்து எனக்குப் பின் வந்து, கைதிகளை ஏற்றிச் செல்லும் ஒரு மூடின வண்டிக்கு என்னை அழைத்துப் போய் அதில் உட்காரும்படி சொன்னார். நான் ஜோஹன்னஸ்பர்க் சிறைக்குக் கொண்டு போகப்பட்டேன்.

சிறையில் என்னுடைய சொந்த உடைகளைக் களைந்துவிடுமாறு சொன்னார்கள். கைதிகள் சிறையில் அம்மணமாக்கப்படுவது எனக்குத் தெரியும். ஒருவருடைய சுயமரியாதைக்கும் மத சம்பிரதாயங்களுக்கும் விரோதமாக இல்லாதவரையில், சிறை விதிகளுக்கு நாங்களே கீழ்ப்படிந்து நடப்பதாக எல்லோரும் தீர்மானித்திருந்தோம். நான் அணிந்துகொள்ளுவதற்கெனக் கொடுக்கப்பட்ட உடைகள் மிகவும் அழுக்கு மலிந்து இருந்தன. எனக்கு அவைகளை அணியவே விருப்பமில்லை. அவைகளை அணிவதென்று சற்று மன வருத்தத்துடனேயே சமாதானம் செய்துகொண்டேன். அதிகாரிகள் என்னுடைய பெயரையும், விலாசத்தையும் தாக்கல் செய்துகொண்ட பிறகு, என்னை ஒரு பெரிய கொட்டடிக்குக் கொண்டு போயினர். கொஞ்ச நேரத்திற்குள் என் தோழர்கள் என்னுடன் வந்து சேர்ந்தனர். அவர்கள் சிரித்துக்கொண்டே வந்து, தங்களுக்கும் எனக்கு விதித்தது போன்ற தண்டனையே கிடைத்ததென்றும், என்னைக் கொண்டுபோன பிறகு என்ன நடந்தது என்றும் சொன்னார்கள். என்னுடைய வழக்கு முடிந்தவுடன், இந்தியர்கள், சிலர் கொதிப்பு அடைந்தவர்களாய், கறுப்புக்கொடிகளைக் கையில் ஏந்தி ஊர்வலம் வந்ததாகவும், போலீஸார்

அந்த ஊர்வலத்தைக் கலைத்து அதைச் சேர்ந்தவர்களில் சிலரை நையப் புடைத்ததாகவும் தெரிய வந்தது. எங்கள் எல்லோரையும் ஒரே சிறையில், ஒரே கொட்டடியில் வைக்கப்பட்டது குறித்து நாங்கள் மகிழ்வெய்தினேம்.

எங்கள் அறைக் கதவு ஆறு மணிக்குப் பூட்டப்பட்டது. கம்பிக் கதவு அல்ல, கெட்டிக் கதவாகவே இருந்தது. சுவரில் உயரத்தில் காற்று வருவதற்காகச் சிறிய துவாரம் ஒன்று இருந்தது. ஆதலால், ஓர் இரும்புப் பெட்டியில் பூட்டப்பட்டிருந்தது போன்ற உணர்ச்சி எங்களுக்கு ஏற்பட்டது.

ராமசுந்தரரை நடத்தியதுபோல் அவ்வளவு நல்ல உபசரிப்புடன் சிறை அதிகாரிகள் எங்களை நடத்தவில்லை என்ருல் அதில் ஆச்சரியமில்லை. ராமசுந்தரர் முதல் சத்தியாக்கிரகக் கைதி. அவரை எப்படி நடத்துவதென்று அதிகாரிகளுக்கு அப்பொழுது ஒன்றும் தெரியாமல் இருந்தது. எங்கள் தொகை சற்றுப் பெரிதாக இருந்ததுடன், மேலும் பலரைக் கைது செய்யும் நோக்கம் அதிகாரிகளுக்கு இருந்தது. ஆதலால், நீக்கிரோக்களுக்கென ஒதுக்கப்பட்டிருந்த இடத்தில் நாங்கள் வைக்கப்பட்டிருந்தோம். தென்னுப்பிரிக்காவில் கைதிகளை வெள்ளையர்கள், கறுப்பு மனிதர்கள் அதாவது, நீக்கிரோக்கள் என்று இரு வகையாகத்தான் பிரித்திருந்தனர். நீக்கிரோக்களுடன் இந்தியர்களைச் சேர்த்துவிட்டனர்.

கடுங்காவல் தண்டனை விதிக்கப்படாத கைதிகளுக்குத் தங்களுடைய உடைகளையே அணிந்துகொள்ளும் உரிமை உண்டென்றும், அவர்கள் அவ்வுரிமையை அனுபவிக்காவிடில், வெறுங்காவல் கைதிகளுக்கென வைக்கப்பட்டிருக்கும் உடைகள் அவர்களுக்கு அளிக்கப்படுமென்றும் மறுநாள் காலை கண்டோம். எங்களுடைய சொந்த உடைகளை அணிவது சரியல்லவென்றும், சிறை உடைகளை அணிவதே சரியென்றும் நாங்கள் தீர்மானம் செய்து, எங்கள் தீர்மானத்தை அதிகாரிகளுக்குத் தெரிவித்தோம். ஆதலால், கடுங்காவல் தண்டனை அளிக்கப்படாத நீக்கிரோக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் உடைகள் எங்களுக்குக் கொடுக்கப்பட்டன. ஆனல், வெறுங்காவல் விதிக்கப்பட்ட நீக்கிரோக்கள் எப்பொழுதும் அதிகம் இருப்பதில்லை. ஆதலால், வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்ட இந்தியர்கள் அதிகமாக வர ஆரம்பித்ததும் வெறுங்காவல் கைதிகளின் உடைகள் போதவில்லை. இவ்விஷயத்தில் கண்டிப்பாக இருக்க இந்தியர்கள் விரும்பவில்லை யாதலால் கடுங்காவல்

கைதிகளுக்கென வைக்கப்பட்டிருந்த உடைகளை யாதொரு தடங்கலுமின்றி ஏற்றுக்கொண்டனர். பின்னர் வந்தவர்களில் சிலர், கடுங்காவல் கைதிகளின் உடைகளை அணிவதைவிடத் தங்களுடைய சொந்த உடைகளையே அணிய விரும்பினர்கள். இது முறையல்ல வென்று நான் நினைத்தேன். ஆனால், இவ் விஷயத்தில் அவர்கள் சரியான முறைப்படி நடக்க வேண்டு மென்று நான் கட்டாயப்படுத்த விரும்பவில்லை.

இரண்டாவது, மூன்ருவது நாட்களிலிருந்து சத்தியாக் கிரகக் கைதிகள் அதிகத் தொகையில் வர ஆரம்பித்தார்கள். அவர்கள் எல்லோரும் தாங்களே வலியக் கைதிகளானர்கள். அவர்கள் பெரும்பாலும் தெருக்களில் சாமான்கள் விற்பவர்கள். தென்னுப்பிரிக்காவில் சாமான்கள் விற்கும் ஒவ்வொருவரும், கறுப்பு மனிதராயிருந்தாலும் சரி, வெள்ளையராயிருந்தாலும் சரி, ஓர் அனுமதிச் சீட்டு வாங்கி அதை எப்பொழுதும் தம்முடன் கொண்டுபோக வேண்டும்; போலீஸார் கேட்கும்போது காண் பிக்க வேண்டும். சாதாரணமாக ஒவ்வொரு நாளும் யாராவது ஒரு போலீஸ்காரன் அனுமதிச் சீட்டைப் பார்க்கக் கேட்பான். அதை வைத்திராதவர்களைக் கைது செய்வான். நாங்கள் கைது செய்யப்பட்ட பின் இந்திய சமூகம் சிறைகளை நிரப்பத் தீர்மானித்தது. தெருக்களில் சாமான் விற்போர்கள் இதில் சிறப்பாக விளங்கினர். அவர்கள் கைதியாவது மிகவும் சுலபம். அவர்கள் அனுமதிச் சீட்டுகளைக் காண்பிக்க மறுத்தால், அதுவே அவர்கள் கைதியாவதற்குப் போதுமானது. இம்மாதிரி ஒரே வாரத்தில் சத்தியாக்கிரகக் கைதிகள் நூறுக்குமேல் பெருகினர். ஒவ்வொரு நாளும் சிலர் வருவது நிச்சயமாதலால், நாங்கள் பத்திரிகையின்றியே தினசரி சமாசாரங்களை அறிந்து வந்தோம். சத்தியாக்கிரகிகள் பெருந் தொகைகளில் கைது செய்யப்பட்ட பின்பு, மாஜிஸ்டிரேட்டுகள் பொறுமை யிழந்த காரணத்தாலோ, அல்லது நாங்கள் நினைத்தபடி அரசாங்கத்தினிடமிருந்து அவர்கள் அம்மாதிரி உத்தரவு பெற்ற காரணத்தாலோ, சத்தி யாக்கிரகிகளுக்குக் கடுங்காவல் தண்டனையும் கொடுத்தனர். நாங்கள் அப்போது சந்தேகித்தது சரியென இன்றும் நினைக் கிறேன். ஏனெனில், முதலில் கொடுக்கப்பட்ட வெறுங்காவல் தண்டனைகளைக் கணக்கிடாவிட்டால், வெகு காலம் நடந்த அப்போராட்டத்தில் அதற்குப் பிறகு ஒருவருக்குக்கூட வெறுங் காவல் தண்டனை கொடுக்கப்பட்டதில்லை எனத் தெரிந்தது. பெண்களுக்குக்கூடக் கடுங்காவல் தண்டனையே கொடுக்கப்

பட்டது. மாஜிஸ்டிரேட்டுகள், அனைவரும் இவ்விதம் ஒரே மாதிரி உத்தரவைப் பெருமல், தற்செயலாகவே ஆண், பெண் இருபாலருக்கும் எல்லாச் சமயங்களிலும் கடுங்காவல் தண்டனையே விதித்தார்கள் என்ருல் அது வியப்பிற்குரிய விஷயம் என்றே கொள்ளவேண்டும்.

ஜொஹன்னஸ்பர்க் சிறையில் கடுங்காவல் தண்டனை விதிக்கப்படாத கைதிகளுக்குக் காலையில் சோளக்கஞ்சி கிடைத்தது. அதில் உப்பு இருக்காது. ஒவ்வொரு கைதிக்கும் உப்புத் தனியாகக் கொடுக்கப்பட்டது. பகற்பொழுதில் நான்கு அவுன்சு சாதமும், நான்கு அவுன்சு ரொட்டியும், ஓர் அவுன்சு நெய்யும், கொஞ்சம் உப்பும் அக்கைதிகளுக்குக் கொடுக்கப் பட்டன. மாலையில் சோளக்கஞ்சியும், கொஞ்சம் கறிகாயும். கறிகாய் முக்கியமாக உருளைக்கிழங்கே; அது சிறியதாயிருந்தால் இரண்டும், பெரியதாயிருந்தால் ஒன்றும் கொடுக்கப்படும். எங்களில் யாருக்கும் இந்த உணவு திருப்தி அளிக்கவில்லை. சாதம் குழையச் சமைக்கப்பட்டிருக்கும். இந்தியச் சிறைகளில் மசாலாச் சாமான்கள் அனுமதிக்கப்படுகின்றன என்று சொல்லி, சிறை வைத்திய உத்தியோகஸ்தரை மசாலாச் சாமான்களைக் கேட்டோம். இதற்கு, ''இது இந்தியா அல்ல. சிறை உணவை ருசி உள்ளதாகச் செய்ய முடியாது. ஆதலால் மசாலாக்களை அனுமதிக்க முடியாது'' என்ற கண்டிப்பான பதில் கிடைத்தது. சிறை உணவில் தசைகளை வளர்க்கக்கூடிய சக்தி இல்லை என்ற காரணத்தைக் காட்டி நாங்கள் பருப்பு வேண்டுமெனக் கேட்டோம். இதற்கு, ''கைதிகள் மருத்துவ ரீதியான வா்தங்கள் செய்யக்கூடாது. வாரத்திற்கு இருமுறை சோளத்திற்குப் பதிலாக வேகவைத்த மொச்சை கொடுக்கப்படுவதால், உங்களுக்கு தசை வளர்க்கும் உணவும் கிடைக்கிறது'' என்று சிறை டாக்டர் பதில் சொல்லிவிட்டார். ஒரு வாரத்தில் அல்லது இரண்டு வாரங்களில் வெவ்வேறு சமயங்களில் உட்கொள்ளும் பலவிதமான உணவுகளிலிருந்தும் அவசியமான சத்துக்களை எடுத்துக்கொள்ளும் சக்தி மனித வயிற்றுக்கு உண்டென்ருல் டாக்டரின் வாதம் சரியாயிருக்கலாம். உண்மையில் எங்கள் சௌகரியத்தைக் கவனிக்க அவருக்குக் கொஞ்சமும் எண்ணமில்லை. எங்கள் உணவை நாங்களே சமையல் செய்துகொள்ளச் சிறை சூப்பரிண்டெண்டெண்ட் அனுமதி அளித்தார். தம்பி நாயுடுவை எங்கள் முதல் சமையல்காரராகத் தேர்ந்தெடுத்தோம். இந்த வகையில் எங்கள் சார்பாக அவர் பல தடவை

களில் சண்டை போட வேண்டியிருந்தது. எங்களுக்குக் கொடுக் கப்பட்ட காய் வகை, சட்டப்படி கிடைக்க வேண்டியதை விடக் குறைவாக இருந்தால், அவர் எங்களுக்குக் கிடைக்க வேண்டியது முழுதும் கொடுக்கப்பட வேண்டுமெனக் கண்டிப்புச் செய்து வாங்குவார். காய்கறி சமையல் செய்யும் நாட்கள் வாரத்தில் இரண்டே. அந்நாட்களில் இரண்டு முறை சமையல் செய்வோம். மற்ற நாட்களில் பகல் உணவு மட்டுமே நாங்கள் ஆக்க அனுமதிக்கப்பட்டோமாதலால், ஒருதரந்தான் சமையல் செய்வோம். எங்கள் உணவை நாங்களே ஆக்க ஆரம்பித்த பிறகு எங்களுக்குக் கொஞ்சம் சௌகரியம் ஏற்பட்டது.

இந்தச் சௌகரியங்களை அடைய முடிந்ததோ இல்லையோ, நாங்கள் ஒவ்வொருவரும் எங்கள் சிறைவாசத்தைப் பூரண ஆனந்தத்துடன் கழிப்பதெனத் தீர்மானம் செய்திருந்தோம். சத்தியாக்கிரகக் கைதிகளின் தொகை படிப்படியாக நூற் றைம்பதுக்கு மேலாகிவிட்டது. நாங்கள் எல்லோரும் வெறுங் காவல் கைதிகளாதலால் எங்களுடைய கொட்டடிகள் முதலியவை களைச் சுத்தமாக வைத்துக் கொள்ளுவதைத் தவிர எங்களுக்கு வேறு வேலை கிடையாது. வேலை செய்வதற்காகச் சூப்பரிண்டெண் டெண்டைக் கேட்டோம். அதற்கு அவர், "உங்களுக்கு நான் வேலை கொடுக்க முடியாமைக்கு வருந்துகிறேன். ஏனெனில், உங்களுக்கு வேலை கொடுத்தால் நான் குற்றஞ் செய்தவனாகக் கருதப்படுவேன். ஆனால், நீங்கள் இருக்கும் இடத்தைச் சுத்த மாய் வைத்திருப்பதில் உங்கள் காலத்தை எவ்வளவு வேண்டு மானாலும் செலவு செய்யலாம்" என்று சொன்னார். கடுங்காவல் தண்டனை அடைந்திருந்த நீக்கிரோக் கைதிகள்கூட சாதாரண வேலைகளுடன் கவாத்தும் செய்வதை நாங்கள் கவனித்ததால் எங்களுக்கும் கவாத்து போன்ற உடற்பயிற்சி தரும்படி கேட் டோம். அதற்கு, "உங்கள் வார்டருக்குக் காலமிருந்து உங்க ளுக்குக் கவாத்துப் பயிற்சி கொடுத்தால், அதற்கு நான் ஆட்சேபிக்கமாட்டேன். அவர் அதிகமான வேலை செய்ய வேண்டியிருக்கின்றது. எதிர்பாராத வண்ணம் அதிகத் தொகை களில் நீங்கள் வந்தது அவர் வேலையை இன்னும் கடினமாக்கி யிருக்கின்றது. ஆதலால் அவரைக் கட்டாயப்படுத்தவும் மாட் டேன்" என்று சூப்பரிண்டெண்டெண்ட் சொல்லிவிட்டார். அந்த வார்டர் நல்லவர். ஆதலால் இந்த நிபந்தனைகளுடன் கூடிய அனுமதியே அவருக்குப் போதுமானது. ஒவ்வொரு நாள் காலையிலும் மிகுந்த உற்சாகத்துடன் எங்களுக்குக் கவாத்து

சொல்லித்தர ஆரம்பித்தார். எங்கள் கொட்டடிகளுக்கு முன்னிருந்த சிறிய முற்றத்தில் நாங்கள் கவாத்து செய்யவேண்டியிருந்தது, ரங்கராட்டினம் சுற்றி வருவதுபோல் இருந்தது. கவாத்து முடிந்து வார்டர் சென்றதும் நவாப்கான் என்ற எங்களைச் சேர்ந்த ஒரு பட்டாணியர் கவாத்தைத் தொடர்ந்து நடத்தினர். கவாத்தில் உத்தரவு கொடுக்க உபயோகப்படுத்தும் ஆங்கில வார்த்தைகளை அவர் வேடிக்கையான மாதிரியில் உச்சரிப்பது எங்களுக்குச் சிரிப்பை உண்டாக்கும். 'ஸ்டான்ட் அட் ஈஸ்' (Stand at ease) என்பதை 'ஸன்ட் லீஸ்' என்று சொன்னர். அது என்ன ஹிந்துஸ்தானி வார்த்தை என்று எங்களுக்குத் தெரியவே இல்லை; ஆனல், பின்னர் அது ஹிந்துஸ்தானி அல்ல, நவாப்கானின் ஆங்கிலந்தான் என்று விளங்கிற்று.

## இருபத்தொன்ருவது அத்தியாயம்

# முதல் ஒப்பந்தம்

இவ்விதம் சுமார் இரண்டு வாரம் சிறையில் இருந்தோம். அப்பொழுது புதிதாக வந்தவர்கள், அரசாங்கத்துடன் சமரசத் திற்குச் சில பேச்சுக்கள் நடந்துகொண்டிருக்கின்றன என்று செய்தி கொண்டுவந்தார்கள். இரண்டு மூன்று தினங்களுக்குப் பின் ஜொஹன்னஸ்பர்க்கில் நடந்து வரும் ஒரு தினசரிப் பத்தி ரிகையான 'டிரான்ஸ்வால் லீடர்' பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ ஆல்பர்ட் கார்ட்ரைட் என்னைப் பார்க்க வந்தார்.

அக்காலத்தில் ஜொஹன்னஸ்பர்க்கில் நடந்துவந்த எல்லாத் தினசரி பத்திரிகைகளும் ஏதாவது ஒரு தங்கச்சுரங்க ஐரோப்பிய முதலாளியைச் சேர்ந்ததாக இருந்தது. ஆனல், இப்பணக்காரர் களின் பாத்தியதைகளுக்கு ஊறு உண்டாகும் விஷயங்களைத் தவிர, மற்றெல்லாப் பொது விஷயங்களிலும் இப்பத்திரிகையின் ஆசிரியர்களுக்குத் தங்கள் சொந்த அபிப்பிராயத்தை வெளியிடு வதற்கு யாதொரு தடையுமில்லை. நற்பெயரும் சாமர்த்தியமும், உள்ளவர்கள் தாம் பத்திரிகை ஆசிரியர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். உதாரணமாக, 'டெய்லி ஸ்டார்' பத்திரிகையின் ஆசிரி யர் முன்பு லார்டு மில்னரின் அந்தரங்கக் காரியதரிசியாக இருந் தவர். பிறகு ஸ்ரீ பக்கிலுக்குப் பதிலாக அவர் ஆங்கில 'டைம்ஸ்' பத்திரிகையின் ஆசிரியர் பதவியை ஏற்றுக்கொள்ளுவ தற்கு இங்கிலாந்து சென்ருர். 'டிரான்ஸ்வால் லீட'ரின் ஆசிரிய ரான ஸ்ரீ ஆல்பர்ட் கார்ட்ரைட் பரந்த நோக்கமும், மிகுந்த திறமை யும் உள்ளவர். அவர் அநேகமாய் எல்லாச் சமயங்களிலும் தமது பத்திரிகையில் இந்தியர்களின் கட்சியையே ஆதரித்து வந்தார். அவரும் நானும் நல்ல நண்பர்களானேம். நான் சிறைக்குச் சென்ற பிறகு, அவர் ஜெனரல் ஸ்மட்ஸைப் பார்த்தார். ஜெனரல் ஸ்மட்ஸ் அவருடைய மத்தியஸ்தத்தை வரவேற்ருர். ஸ்ரீ கார்ட்ரைட் அதன் பிறகு இந்தியத் தலைவர்களைப் பார்த்தார். அவர்கள், "எங்களுக்குச் சட்ட திட்டங்களைப் பற்றி ஒன்றும் தெரியாது. காந்திஜி சிறையில் இருக்கும்வரை சமாதானத்தைப் பற்றிப் பேசவும் எங்களால் முடியாது. எங்களுக்குச் சமாதானம் வேண்டும். ஆனல், எங்கள் தரத்தார் சிறையிலிருக்கும்போது அரசாங்கத்திற்குச் சமாதானம் வேண்டுமெனின், நீங்கள் காந்தி

யைக் காணவேண்டும். அவர் ஒப்புக்கொள்ளும் எவ்வித ஏற்பாட்டுக்கும் நாங்கள் சம்மதிக்கிறோம்" என்று சொன்னார்கள்.

இவ்விதம் ஸ்ரீ கார்ட்ரைட் என்னைப் பார்க்க வந்தார். தம்முடன் ஜெனரல் ஸ்மட்ஸால் எழுதப்பட்ட அல்லது அங்கீகரிக்கப்பட்ட சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்துக்களைக் கொண்டு வந்தார். அந்தத் தஸ்தாவேஜில் எழுதப்பட்டிருந்த தெளிவில்லாத பாஷை எனக்குப் பிடிக்கவில்லை. எனினும் ஒரு மாறுதல் செய்து, அதில் கையெழுத்து இடுவதற்குத் தயாராயிருந்தேன். சிறைக்கு வெளியில் இருக்கும் இந்தியர்களின் சம்மதம் அவசியம் கிடைக்குமென்று வைத்துக்கொண்ட போதிலும் சிறைக்குள் இருக்கும் என் சகாக்களுடைய சம்மதமின்றி நான் கையெழுத்திட முடியாதென ஸ்ரீ கார்ட்ரைட்டுக்குத் தெரிவித்தேன்.

அச்சமாதானப் பேச்சின் முக்கிய அம்சங்களாவன: இந்தியர்கள் ஒரு சட்டத்தின் கீழல்லாமல், தாங்களே பதிவு செய்துகொள்ள வேண்டும்; இப்புதிய சர்டிபிகேட்டுகளில் வேண்டிய விவரங்களை இந்திய சமூகத்துடன் கலந்து அரசாங்கம் நிர்ணயிக்க வேண்டும். இந்தியர்களில் பெரும்பான்மையோர் தாங்களாகவே பதிவு செய்துகொண்டார்களானால், அரசாங்கத்தார் கறுப்புச் சட்டத்தை ரத்து செய்வதுடன் சுயேச்சையாகச் செய்யப்பட்ட பதிவுகளைச் சட்டபூர்வமாக்கச் சர்க்கார் ஏற்பாடுகளைச் செய்யும். அரசாங்கம் கறுப்புச் சட்டத்தை ரத்து செய்வதற்கு வேண்டிய நிபந்தனை என்னவென்பது ஒப்பந்தத்தில் அவ்வளவு தெளிவாக இல்லை. ஆதலால், எந்த விதச் சந்தேகத்திற்கும் இடமில்லாதிருக்க என் கருத்திற்கிணங்க மாறுதல் செய்யவேண்டுமெனச் சொன்னேன்.

இச்சிறு மாறுதலும் ஸ்ரீ கார்ட்ரைட்டுக்குப் பிடிக்கவில்லை. "இந்த நகலை முடிவானதாக ஜெனரல் ஸ்மட்ஸ் நினைக்கிறார். நானும் இதை ஆமோதித்திருக்கிறேன். எல்லோரும் மறுபடியும் பதிவு செய்துகொண்டால், கறுப்புச் சட்டம் கட்டாயம் ரத்து செய்யப்படுமென்று நான் உங்களுக்கு உறுதிகூற முடியும்'' என்று அவர் சொன்னார்.

நான் இதற்குப் பதில் சொன்னேன். "சமாதானம் ஏற்பட்டாலும், ஏற்படாவிட்டாலும், உங்கள் அன்புக்கும் உதவிக்கும் நாங்கள் என்றும் கடமைப்பட்டிருக்கிறோம். அவசியமில்லாத மாறுதல் எதையும் நகலில் செய்யும்படி நான் சொல்ல விரும்ப மாட்டேன். அரசாங்கத்தின் கௌரவத்தை நிலைநிறுத்தக்

கூடிய சொல் பிரயோகங்களை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், அவற்றின் பொருள்பற்றிய சந்தேகம் ஏற்படும் இடங்களில் நான் அவசியம் சொல் திருத்தங்களைக் குறிப்பிட வேண்டும். இரண்டு தரத்தாருக்குள் ஒரு சமரசம் ஏற்பட வேண்டுமானால், ஒப்பந்த நகலை மாற்றும் சுதந்திரம் இரு தரத்தாருக்கும் இருக்கவேண்டும். இந்நகல் நிபந்தனைகளே முடிவானவை எனச் சொல்லி ஜெனரல் ஸ்மட்ஸ் எங்களுக்கு இறுதி நிபந்தனை இட வேண்டியதில்லை. கறுப்புச் சட்டம் என்ற உருவத்தில் இந்தியர்களுக்கு விரோதமாய் அவர் முன்னமேயே ஆயுதத்தை நீட்டியிருக்கிறார். இரண்டாவது முறை அவ்வாறு செய்வதனால் அவர் என்ன லாபம் அடையக்கூடும்?''

இவ்வாதத்திற்கு எதிராக ஸ்ரீ கார்ட்ரைட் ஏதும் சொல்வதற்கில்லை. என்னுடைய யோசனையை ஜெனரல் ஸ்மட்ஸ் முன்னிலையில் வைப்பதாக வாக்களித்தார்.

என்னுடைய சிறைச்சாலைத் தோழர்களுடன் கலந்து யோசனை செய்தேன். அவர்களுக்கும் நகலின் சொற்கட்டுப் பிடிக்கவில்லை. ஆனால், ஜெனரல் ஸ்மட்ஸ் என்னுடைய திருத்தத்தை ஒப்புக்கொண்டால் அவர்களும் இந்தச் சமரசத்திற்கு உடன்படுவதாகச் சொன்னார்கள். வெளியில் இருப்பவர்களின் சம்மதத்திற்காகக் காத்திருக்காமல் தகுந்த சமாதானம் எதையும் நான் ஒப்புக்கொள்ள வேண்டுமெனச் சிறைக்குள் புதிதாக வந்தவர்கள் வெளியிலிருக்கும் தலைவர்களிடமிருந்து செய்தி கொண்டு வந்திருந்தனர். லீயிங் குவின்னையும், தம்பு நாயுடுவையும் நகலில் என்னுடன் கையெழுத்திடச் செய்து, அதை ஸ்ரீ கார்ட்ரைட்டின் கையில் சேர்ப்பித்தேன்.

இரண்டாவது அல்லது மூன்றாவது நாள், அதாவது 1908-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ஆம் தேதி ஜோஹன்னஸ்பர்க் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டாயிருந்த ஸ்ரீ வெர்னன், ஜெனரல் ஸ்மட்ஸைச் சந்திப்பதற்காக என்னைப் பிரிட்டோரியாவுக்கு அழைத்துக்கொண்டு போனார். ஜெனரல் ஸ்மட்ஸிடத்தில் நான் வெணது பேசினேன். ஸ்ரீ கார்ட்ரைட்டுக்கும் தமக்கும் இடையே நடந்தவற்றை அவர் எனக்குத் தெரிவித்தார். நான் கைது செய்யப்பட்ட பிறகும் இந்திய சமூகத்தார் திடமாக நின்றதைப் பற்றிப் பாராட்டிப் பேசி மீண்டும் சொன்னார்: ''உங்கள் ஜனங்களிடத்தில் நான் எப்பொழுதும் துவேஷம் கொள்ளவே முடியாது. நானும் பாரிஸ்டர் என்று

உங்களுக்குத் தெரியும். அந்தக் காலத்தில் என்னுடன் சில இந்திய மாணவர்கள் படித்தார்கள். ஆனல், என்னுடைய கடமையை நான் செய்தே தீரவேண்டும். ஐரோப்பியர்கள் இச்சட்டத்தை வேண்டுமென்கின்றனர். இவர்கள் அநேகமாய் போயர்கள் அல்ல, ஆங்கிலேயர்கள் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள். நகலில் நீங்கள் செய்த திருத்தத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நான் ஜெனரல் போத்தாவிடத்திலும் கலந்தாலோசித்தேன். உங்களில் பெரும் பகுதியோர் சுயேச்சையாகவே பதிவு செய்துகொண்டவுடனே, ஆசியாச் சட்டத்தை (கறுப்புச் சட்டம்) ரத்து செய்வதாக நான் உறுதி கூறுகிறேன். இந்தச் சுயேச்சைப் பதிவை சட்டமாக்குவதற்கு மசோதா தயார் செய்யும்போது உங்கள் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளுவதற்காக உங்களுக்கு ஒரு நகல் அனுப்புகிறேன். இத்தொந்தரவு மறுபடியும் ஏற்பட வேண்டுமென்று நான் விரும்பவில்லை. மேலும் உங்கள் மக்களுடைய உணர்ச்சிகளுக்கு நான் மரியாதை தர விரும்புகிறேன்.''

இப்படிச் சொல்லி ஜெனரல் ஸ்மட்ஸ் எழுந்தார். ''நான் எங்கே போவது; மற்றக் கைதிகளைப் பற்றிய நிலை என்ன?'' என்று வினவினேன்.

அதற்கு ஜெனரல் ஸ்மட்ஸ் நகைத்துச் சொன்ஞர்: ''இந்தக் கணமே நீங்கள் விடுதலை பெற்றிருக்கிறீர்கள். மற்ற கைதிகளை நாளை காலை விடுதலை செய்யும்படி சிறை அதிகாரிகளுக்கு டெலிபோன் மூலம் சொல்லுகிறேன். அதிகமான கூட்டங்கள், ஊர்வலங்கள் முதலிய ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட வேண்டாமென நான் உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஏனெனில், அதனுல் அரசாங்கத்துக்கு இக்கட்டான நிலை நேரிடும்.''

நான் பதில் சொன்னேன்: ''கூட்டம் நடத்த வேண்டுமென்பதற்காகக் கூட்டம் எதுவும் நடத்தப்படாதென நீங்கள் நிச்சயமாக நம்பலாம். ஆனல், இந்த ஒப்பந்தம் எப்படி செய்யப்பட்டது, அதனுடைய தன்மையும் அளவும் என்ன, அது எங்கள் பொறுப்பை எப்படி அதிகப்படுத்தி யிருக்கின்றது என்ற விஷயங்களை எங்கள் சமூகத்திற்கு எடுத்துரைக்க நான் கூட்டங்கள் கூட்டத்தான் வேண்டும்.''

''அப்பேர்க்கொத்த கூட்டங்கள் எத்தனை வேண்டுமென்ருலும் நடத்திக்கொள்ளுங்கள். இவ்விஷயத்தில் என் விருப்பத்தை நீங்கள் தெரிந்துகொண்டதே போதுமானது'' என்ருர் ஜெனரல் ஸ்மட்ஸ்.

அப்பொழுது மாலை ஏழு மணி. என்னிடத்தில் ஒரு காசு கூட இல்லை. ஜெனரல் ஸ்மட்ஸின் காரியதரிசி ஜொஹன்னஸ்பர்க் போவதற்கு ரயில் சத்தம் எனக்குக் கொடுத்தார். பிரிட்டோரியாவில் தங்கி அங்குள்ள இந்தியருக்கு இவ்வொப்பந்தத்தைத் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை. தலைவர்களெல்லாம் எங்கள் தலைமையிடமாகிய ஜொஹன்னஸ்பர்க்கில் இருந்தனர். ஜொஹன்னஸ்பர்க்குக்குப் போக இன்னும் ஒரே ஒரு வண்டி தானிருந்தது; அது எனக்குக் கிடைத்தது.

## இருபத்திரண்டாவது அத்தியாயம்

# எதிர்ப்பும் தாக்குதலும்

நான் இரவு ஒன்பது மணிக்கு ஜொஹன்னஸ்பர்க் போய்ச் சேர்ந்தேன். நேராகத் தலைவர் யூசுப் மியான் வீட்டிற்குச் சென்றேன். நான் பிரிட்டோரியாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டது அவருக்குத் தெரியுமாதலால், அவர் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். எனினும், காவலாளிகள் எவருமின்றி என்னைக் கண்டது அவர்களுக்குச் சந்தோஷ மட்டுமன்று ஆச்சரியமாயுமிருந்தது. உடனே கூட்டம் போட வேண்டுமென்று அவர்களிடம் நான் சொன்னேன். குறுகிய கால அழைப்பிற்குள் சாத்தியமான வரை ஜனங்களைத் திரட்டவேண்டும் என்றேன். தலைவரும், மற்ற நண்பர்களும் அதற்கு ஒப்புக்கொண்டார்கள். இந்தியர்கள் பெரும்பாலும் ஒரே இடத்தில் வசித்து வந்தபடியால், கூட்டத்தைப் பற்றி அவர்களுக்குத் தெரிவிப்பது அவ்வளவு கடினமாக இல்லை; தலைவருடைய வீடு மசூதிக்கு அருகில் இருந்தது. கூட்டங்களைச் சாதாரணமாக மசூதியைச் சேர்ந்த மைதானத்தில் வைப்பது வழக்கம். எனவே, கூட்டத்திற்காகச் செய்யவேண்டிய ஏற்பாடுகள் அதிகமில்லை. மேடையின் மேல் ஒரு விளக்கு வைத்தால் போதும். அன்றிரவே சுமார் 11 அல்லது 12 மணிக்குக் கூட்டம் நடந்தது. குறுகிய கால அறிவிப்பையும், இரவின் பிந்திய நேரத்தையும் பொருட்படுத்தாமல் சுமார் 1,000 பேர் வந்திருந்தார்கள்.

கூட்டத்திற்கு முன்பே, ஒப்பந்தத்தின் ஷரத்துக்களைப் பற்றி அங்கே கூடியிருந்த தலைவர்களுக்குச் சொல்லி யிருந்தேன். ஒரு சிலர் ஒப்பந்தத்தை எதிர்த்தார்கள். ஆனால், நான் சொன்ன விவரங்களைக் கேட்ட பிறகு எல்லோரும் நிலைமையைப் புரிந்து கொண்டார்கள். எனினும், அனைவருக்கும் ஒரே ஒரு சந்தேகம் இருந்தது. ‘‘ஜெனரல் ஸ்மட்ஸ் நம்மை ஏமாற்றி விட்டால் என்ன செய்வது? கறுப்புச் சட்டம் அமலுக்குக் கொண்டு வரப்படாமல் இருக்கலாம். ஆனால், கழுத்தின் மேல் கத்தி போல் அது எப்பொழுதும் தொங்கிக் கொண்டே இருக்குமே. அதே சமயத்தில், நாம் வலியப் போய்ப் பதிவு செய்து கொண்டால், நாம் அறிந்திருந்தும் நம்முடைய விரோதிகளின் கைக்குள் அகப்பட்டுக்

கொள்ளுவதுடன், இந்தச் சட்டத்தை எதிர்ப்பதற்கு நம்மிட முள்ள மிகச் சக்தி வாய்ந்த ஆயுதத்தையும் சரண்புகச் செய்த வர்களாவோம். எனவே, இந்த ஒப்பந்தம் எப்படி இருக்க வேண்டும் என்ருல், முதலில் கறுப்புச் சட்டம் ரத்து செய்யப் பட வேண்டும்; பிறகு நாம் வலியப்போய் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்பதே.''

எனக்கு இந்த வாதம் பிடித்தது. இந்த அபிப்பிராயத்தை வெளியிட்டவர்களுடைய அறிவும், திடமும் எனக்குப் பெருமை அளித்தன. இத்தகைய அரிய பண்பில் ஊறியவர் களே சத்தியாக்கிரகிகள் என்பதையும் கண்டேன். அவர்களி டம் நான் சொன்னேன்: "நீங்கள் சொல்லுவது மிகவும் சரி. அதை நாம் மிகவும் கவனமாக ஆராய்ந்தும் பார்க்க வேண்டியதே. இந்தச் சட்டத்தை ரத்து செய்த பிறகும் நாம் பதிவு செய்து கொள்ளுவதைப் போல் சிறந்தது வேருென்றுமில்லை. ஆனல், அப்படி யிருந்தால் அது இரு சாராரும் விட்டுக் கொடுத்ததன் மூலம் உண்டான சமரசமாக இருக்க முடியாது. சமரசம் என் பது, இரு தரத்தாரும் அடிப்படைக் கொள்கையைத் தவிர, பிற விஷயங்களில் முடிந்தவரையில் விட்டுக் கொடுப்பதேயாகும். நாம் இந்தக் கறுப்புச் சட்டத்திற்கு உட்பட மாட்டோம். அது சம்பந்தமான, நமக்குச் சாதாரணமாக ஆட்சேபணைக்கு இட மிராத சிறு விஷயங்களைக்கூட, இப்பொழுது செய்ய முடியாது என்பது நமது கொள்கை. இந்தக் கொள்கையை நாம் என்ன நேர்ந்தாலும் கடைப்பிடித்தே யாகவேண்டும். அரசாங்கத்தின் கொள்கையோ, டிரான்ஸ்வாலுக்குள் இந்தியர்கள் சட்ட விரோதமாகச் செல்வதைத் தடுப்பதற்கு அங்க அடையாள விவரங்களடங்கிய, பிறருக்கு மாற்ற முடியாத, அனுமதிச் சீட்டுகளை இந்தியர்கள் பலர் வாங்கும்படிச் செய்து, அதன் மூலம் ஐரோப்பியர்களின் மனத்திலிருந்து பயத்தை நீக்கி, அவர்களுடைய சந்தேகங்களையும் போக்கவேண்டுமென்பதே யாகும். அரசாங்கம் தங்களளவில் இதை ஒருபோதும் விட்டுக் கொடுக்க முடியாது இன்றளவும் நாம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளின் மூலம் அரசாங்கத்தின் கொள் கையை நாமும் ஒப்புக் கொண்டவர்களாவோம். எனவே, எதிர்க்க வேண்டுமென நாம் நினைத்தாலும், வேறு புதுக் கார ணங்களிருந்தா லொழிய, இதை நாம் எதிர்க்க முடியாது. நம் முடைய போராட்டம், கறுப்புச் சட்டத்தால் நம் சமூகத்திற் குண்டான அவமானத்தைப் போக்குவதற்கே யன்றி, இந்தக்

கொள்கையைத் தவிர்ப்பதற்காக அல்ல. ஆதலால், நம்மிடத்திலே இப்பொழுது தோன்றி யிருக்கும் புதியதும், வன்மை மிக்கதுமான சக்தியைப் புதியதோர் பயனை அடைவதற்கு உபயோகிப்பது நம்மைப் போன்ற சத்தியாக்கிரகிகளுக்கு நேர்மையன்று. எனவே, நாம் இந்த ஒப்பந்தத்தை நியாயமாக ஆட்சேபிக்கவும் முடியாது. இந்தச் சட்டம் ரத்தாகும் வரையில், நமது ஆயுதத்தைச் சரண்புகச் செய்துவிடலாகாது என்ற வாதத்திற்குச் சுலபமாக இது மறுமொழி தருகிறது. சத்தியாக்கிரகி, அச்சம் என்பதற்கே முழுக்குப் போட்டவன். ஆதலால், அவன் தன் பகைவனிடம் நம்பிக்கை வைக்கவும் ஒரு போதும் அஞ்சமாட்டான். எதிரி இருபது தடவை அவனை ஏமாற்றி யிருந்தாலும், இருபத்தோராவது தடவையும் அவன் நம்பத் தயாராக இருப்பான். ஏனெனில், மனிதருடைய நல்ல இயல்பில் நம்பிக்கை வைப்பது அவனுடைய தருமத்தின் சாரமாகும். சர்க்காரை நம்புவதன் மூலம் நாம் அவர்கள் கைக்குள் சிக்கியவர்களாவோம் என்பது, சத்தியாக்கிரகத்தின் கொள்கைகளை நன்கு புரிந்து கொள்ளாததையே காட்டும். நாம், வலியவே பதிவு செய்து கொண்டபிறகு, சர்க்கார் அந்தச் சட்டத்தை ரத்து செய்யாமல் நம்மை ஏமாற்றுகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அதற்குப் பிறகு நாம் சத்தியாக்கிரகம் செய்ய முடியாதா ? அவர்கள் கேட்கும்போது, நம் பதிவுச் சீட்டைக் காட்ட மறுத்தால், நாம் பதிவு செய்து கொண்டது பயனற்றுப் போய்விடும். அப்பொழுது, பதிவு செய்து கொண்ட நமக்கும், கள்ளத்தனமாக டிரான்ஸ்வாலுக்குள் நுழைபவர்களுக்கும் உள்ள வித்தியாசத்தைச் சர்க்காரால் கண்டுபிடிக்க முடியாது. ஆகையால், சட்டம் அமலில் இருந்தாலும், இல்லாவிட்டாலும், நம்முடைய ஒத்துழைப்பின்றிச் சர்க்கார் கட்டுத்திட்டங்களை நம்மீது அமல் நடத்த முடியாது. சட்டம் இருப்பதன் அர்த்தமென்னவெனில், அதன் மூலம் சர்க்கார் விதிக்கும் கட்டுப்பாடுகளை ஏற்றுக்கொள்ள நாம் மறுத்தால், தண்டனைக்கு உட்படவேண்டியவர்களாவோம் என்பதுதான். சாதாரணமாகத் தண்டனையைப் பற்றிய பயமே, மக்களை அந்தக் கட்டுதிட்டங்களுக்குப் பணியும்படி செய்கிறது. இதில் சத்தியாக்கிரகிக்கும் மற்றவர்களுக்கும் வித்தியாசம் இருக்கிறது. சத்தியாக்கிரகி ஒரு கட்டுப்பாட்டிற்குத் தானுகவே உட்படுகிருனே யன்றி, தண்டனை பயத்தால் அன்று. சமூகத்திற்கு அது நல்லது என்ற உணர்ச்சியால்தான் உட்படுகிருன். பதிவு செய்து கொள்ளுவதில் நம்முடைய நிலைமையும் அவ்வாறே

இருக்கிறது. சர்க்கார் எவ்வளவு படுமோசமாக நம்பிக்கைத் துரோகம் செய்தாலும், அதனுல் நாம் பாதிக்கப்படமாட்டோம். இந்த நிலைமையை நாமே உண்டாக்கிக் கொண்டிருக்கிருேம். இதை மாற்றுவதும் நம்மால்தான் முடியும். சத்தியாக்கிரகம் என்ற ஆயுதம் நம் வசம் இருக்கும் வரையில், நமக்கு அச்சமென்பதில்லை; சுதந்திரமாக இருக்கிருேம். பிற்காலத்தில் நமது சமூகம் இன்றுள்ளது போல் அவ்வளவு பலங் கொண்டதாக இராதென எவராவது நினைத்தால், அவர்கள் சத்தியாக்கிரகிகள் அல்லவென்றும், சத்தியாக்கிரகத்தின் பொருளை உணராதவர்கள் என்றும்தான் கூறுவேன். சமூகத்தில் இப்பொழுது இருக்கும் சக்தி உண்மையான சக்தியல்லவென்ருல், அது நிமிஷத்தில் பொங்கி அடங்கும் நுரையைப் போலும், மதுவின் போதையைப் போலும் தாற்காலிகமான எழுச்சியே என்ருல், உண்மைநிலை அப்படி இருப்பின், நாம் வெற்றிக்குத்தகுதியில்லாதவர். நாம் வெற்றியடைந்தாலும் அதன் பயன் நம் கையை விட்டு நழுவிவிடும். சர்க்கார் முதலில் சட்டத்தை ரத்து செய்து, அதற்குப் பின் நாம் பதிவு செய்து கொள்ளுவதாக வைத்துக் கொள்ளுவோம். பின்னர், சர்க்கார் மறுபடியும் அதே சட்டத்தை மீண்டும் அமலுக்குக் கொண்டு வந்து நம்மைப் பதிவு செய்யும்படிக் கட்டாயப்படுத்தினுல், அதை யாரால் தடுக்க முடியும்? நம்முடைய பலத்தைப் பற்றி இன்று நமக்குச் சந்தேகம் இருப்பின், அப்பொழுதும் நாம் அதே நிலைமையில் தான் இருப்போம். ஆதலால் இந்த ஒப்பந்தத்தை எந்த வகையில் கவனித்தபோதிலும், நமது சமூகத்திற்கு இந்த சமரசத்தின் மூலம் லாபமே யொழிய, நஷ்டம் உண்டாகாது. நமது அடக்கத்தையும், நியாயப் போக்கையும் நமது எதிரிகள் அறியும்போது அவர்கள் எதிர்ப்பையாவது விட்டுவிடுவார்கள் அல்லது குறைக்கவாவது செய்வார்கள் என்பது எனது அபிப்பிராயம்.''

ஒப்பந்தத்திற்கு எதிராகப் பேசிய ஒன்றிரண்டு பேர்களை இவ்விதம் நான் முற்றிலும் திருப்தி செய்ய முடிந்தது. ஆனுலும், அந்த நள்ளிரவுக் கூட்டத்தில் வரவிருக்கும் சண்டமாருதமான எதிர்ப்பை நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அக்கூட்டத்தில், ஒப்பந்தத்தின் ஷரத்துக்கள் அனைத்தையும் விவரித்துப் பின்வருமாறு பேசினேன் :

''இந்த ஒப்பந்தத்தின் மூலம் சமூகத்தின் பொறுப்பு மிகவும் அதிகமாகி யிருக்கிறது. நாம் சுயமாகப் பதிவு

செய்து கொள்ளுவதன் மூலம், கள்ளத்தனமாகவோ அல்லது மோசடியாகவோ, ஓர் இந்தியனைக்கூட டிரான்ஸ்வாலுக்குள் கொண்டுவர நாம் விரும்பவில்லை என்பதை நாம் காண்பிக்க வேண்டும். நம்மில் ஒருவர் பதிவு செய்து கொள்ளவில்லை என்றால்கூட, அவர் தற்சமயம் தண்டிக்கப்படா விட்டாலும், நமது சமூகம் இந்த ஒப்பந்தத்தை ஒப்புக் கொள்ளவில்லை என்பதுதான் அதன் பொருளாகும். இந்த ஒப்பந்தத்தை நீங்கள் ஒப்புக்கொள்ளுவதைக் காட்டுவதற்கு அறிகுறியாக நீங்கள் உங்கள் கைகளைத் தூக்கவேண்டும். ஆனால், அது மாத்திரம் போதாது. புதிதாகப் பதிவு செய்து கொள்ளுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் தயாரானவுடன், இங்கே கை தூக்கிய ஒவ்வொருவரும் உடனே பதிவுச் சீட்டுகள் வாங்க வேண்டும். ஏன் பதிவு செய்துகொள்ளக் கூடாது என்று நம் சகோதரர்களுக்கு எத்தனை பேர்கள் முன்பு கூறினேமோ அத்தனை பேரும், இப்பொழுது ஏன் பதிவு செய்துகொள்ள வேண்டும் என்று சமூகத்திற்கு எடுத்துரைக்க முன்வரவேண்டும். இங்ஙனம் ஒப்பந்தத்தின் நம்முடைய பாகத்தை நாம் சரியாக நிறைவேற்றிய பிறகுதான் நம்முடைய வெற்றியின் உண்மைப் பலனை நாம் பெற முடியும்.''

நான் என் பேச்சை முடித்த உடனே, ஒரு பட்டாணிய நண்பர் எழுந்து நின்று சரமாரியாகச் சில கேள்விகளைக் கேட்கத் தொடங்கினர்: "ஒப்பந்தத்தின் கீழ் பத்து விரல்களின் ரேகைகளையும் முத்திரை வைக்க வேண்டுமா?"

''ஆம் என்றும், இல்லை என்றுமே இதற்குப் பதில் சொல்லவேண்டும். நாம் எல்லோரும் பத்து விரல்களின் ரேகைகளையும் சிறிதும் தயக்கமின்றி முத்திரை வைக்கவேண்டுமென்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். ஆனால், எவருக்கேனும் இங்ஙனம் செய்வது மனச்சாட்சிக்கு விரோதமாகத் தோன்றினாலும், தங்களுடைய சுயமரியாதைக்கு இது இழுக்கு என்று எண்ணினாலும் அவர்கள் அம்முத்திரை வைக்கவேண்டியதில்லை.''

''நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?''

''நான் பத்து விரல் ரேகையை முத்திரை வைக்கத் தீர்மானித்துள்ளேன். மற்றவர்கள் அப்படிச் செய்யவேண்டுமென யோசனை கூறிவிட்டு, நான் மாத்திரம் கொடுக்காமல் இருக்க முடியாது.''

"இந்தப் பத்து விரல் ரேகை முத்திரை கொடுப்பதைப் பற்றி நீங்கள் மிகத் தீவிரமாக எழுதிக் கொண்டிருந்தீர்கள். பயங்கரக் குற்றவாளிகளிடம்தான் இப்படி வாங்கப்படுவது வழக்கம் என்றும் நீங்கள்தான் எங்களுக்குச் சொன்னீர்கள். முக்கியமாக இதை முன்னிட்டே போராட்டமும் என்று கூறி யவரும் நீங்களே. அவையனைத்தும் இன்று நீங்கள் கொண்டுள்ள போக்குடன் எப்படிப் பொருந்தும்?"

"முன்பு விரல் ரேகை முத்திரையைப் பற்றி எழுதியதை யெல்லாம் இப்பொழுதும் நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். இந்தியாவில் குற்றங்கள் செய்யும் ஜாதியாரிடமிருந்துதான் விரல் ரேகை முத்திரைகள் வாங்கப்படுகின்றன என்று இப்போதும் சொல்லுகிறேன். கறுப்புச் சட்டத்தின் காரணமாக, விரல் முத்திரை மாத்திரமல்ல, ஏன், கையெழுத்துப் போடுவது கூடப் பாவமான காரியம் என்று முன்பு சொன்னேன்; இன் றும் சொல்லுகிறேன். நம்மிடம் விரல் முத்திரைகளைக் கேட் டதைப் பற்றி நான் பலமாக அன்று கண்டித்துப் பேசினேன். அங்ஙனம் செய்தது அறிவுடைமை என்று நம்புகிறேன். நமது சமூகத்தைத் தட்டி யெழுப்பி, நமக்கு நேர்ந்திருக்கும் ஆபத் தான நிலைமையைச் சுட்டிக் காட்டுவதற்குக் கறுப்புச் சட்டத்தி லுள்ள திடுக்கிட வைப்பதான கைவிரல் ரேகை வாங்கும் இந்தப் புதிய அம்சத்தைக் குறிப்பிடுவது, நாம் ஏற்கனவே ஒப்புக்கொண்டிருந்த சிறு விஷயங்களைப் பற்றிக் கூறுவதை விட அதிக உதவியாக இருந்தது. நமது சமூகத்தினரும் இதனால் நிலைமையை உடனே புரிந்து கொண்டார்கள் என்று அனுபவமும் காட்டியது. ஆனால், இப்பொழுது நிலைமை மாறி யிருக்கிறது. நேற்று எது நமது சமூகத்திற்கு விரோதமான குற்றமாக இருந்திருக்குமோ அது, மாறுபட்டிருக்கும் இன்றைய நிலைமையில், ஒரு பெரிய மனிதனின் சின்னமாக இருக் கிறது என்பதை இப்பொழுது நான் அழுத்தமாகக் கூற விரும்புகிறேன். நான் உங்களுக்குக் கும்பிடு போடவேண்டும் என்று என்னை நீங்கள் பலாத்காரப்படுத்த விரும்பி, நானும் அதற்குப் பணிந்திருந்தால், பொதுமக்களின் மதிப்பிலும், உங்கள் பார்வையிலும், என் எண்ணத்திலுங்கூட, நான் தாழ்ந்தவ னுவேன். ஆனல், நான் உங்களைச் சகோதரர், நண்பர் எனக் கருதி நானுகவே வணங்கினுல், அது எனது பணியையும் பெருந் தன்மையையும் காட்டுவதாகும். ஆண்டவன் சந்நிதி முன்னும் அது நேர்மையாகும். அதுபோல்தான் நான் இன்று நம்

சமூகத்தை விரல் ரேகை முத்திரை கொடுக்கும்படிச் சொல்லுகிறேன்.''

''நீங்கள் 15,000 பவுனுக்காக ஜெனரல் ஸ்மட்ஸிடம் நமது சமூகத்திற்குத் துரோகம் செய்திருக்கிறீர்கள் என்று நாங்கள் கேள்விப்படுகிறோம். நாங்கள் விரல் முத்திரைகளை ஒருபோதும் கொடுக்கமாட்டோம்; மற்றவர்களையும் கொடுக்க விடமாட்டோம். அல்லா சாட்சியாக நான் சத்தியம் செய்கிறேன். எவனொருவன் இங்ஙனம் பதிவு செய்துகொள்ளுவதற்கு முதலில் செல்கிறானோ அவனைக் கொன்றுவிடுவேன்.''

''பட்டாணிய நண்பர்களின் உணர்ச்சிகளை நான் புரிந்து கொண்டேன். வேறு எவரும், நம் சமூகத்தின் நலத்தை நான் விற்றிருக்கக்கூடும் என்று நம்பவில்லை என்பது என் உறுதி. விரல் முத்திரை கொடுக்கமாட்டோம் என்று சத்தியம் செய்து கொண்டவர்களிடம் அது கேட்கப்படமாட்டாது என்று நான் முன்னமேயே சொல்லியிருக்கிறேன். இங்ஙனம் விரல் முத்திரை கொடுக்காமல் பதிவு செய்துகொள்ள விரும்பும் பட்டாணியருக்கோ, மற்றவருக்கோ என்னுலியன்ற உதவியைச் செய்கிறேன். அவர்கள் தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமாக எதுவும் செய்யாமல் பதிவுச் சீட்டுகளைப் பெறுவதற்கு வழி செய்வேன் என்று உறுதி கூறுகிறேன். எனினும், இந்த நண்பர் கொலை செய்வதாக பயமுறுத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. ஒருவரைக் கொல்வதாக ஆண்டவன்பேரில் ஆணையிடுவதும் தவறு என்று நான் நினைக்கிறேன். இங்ஙனம் அவர் செய்த சபதம் திடீரென ஏற்பட்ட கோபத்தால் பிறந்தது என்று நினைக்கிறேன். அது எப்படியிருப்பினும் அவர் தாம் சொன்னதுபோல் நடத்தினுலும், நடத்தாது போனுலும், ஒப்பந்தத்திற்குப் பொறுப்பு வகிக்கும் நான், சமூகத்தின் சேவகன் என்ற முறையில், விரல் ரேகை முத்திரை கொடுப்பதற்கு முதலில் செல்வது கடமையாகும். அங்ஙனம் செய்ய ஆண்டவன் என்னை அனுமதிக்குமாறு பிரார்த்திக்கிறேன். மரணம், அனைவருக்கும் ஆண்டவன் விதித்துள்ள முடிவாகும். நோயால் அல்லது மற்ற காரணங்களால் இறப்பதைவிட, ஒரு சகோதரனுடைய கையால் மாள்வது எனக்கு வருத்தம் தராது. இந்நிலையில் என்னைக் கொன்றவன்பேரில் எனக்கு வெறுப்பும், கோபமும் தோன்ருமலிருந்தால், அது எனக்கு நிரந்தர நன்மையை உண்டாக்கும். என்னைக் கொன்றவனும் பின்னுல், முற்றிலும் களங்கமே இராத என் மனத்தை உணருவான்'' என்றேன்.

இந்தக் கேள்விகள் ஏன் எழுந்தன என்று விளக்குவது ஒரு வேளை அவசியமாக இருக்கலாம். கறுப்புச் சட்டத்திற்கு உட்பட்டவர்களுக்கு விரோதமாக எப்படிப்பட்ட துவேஷ உணர்ச்சிகளும் இல்லையெனினும், அவர்களுடைய செயல் பொது மேடைகளிலும், 'இந்தியன் ஒப்பினியன்' போன்ற பத்திரிகைகளிலும் தெளிவாக, பலமாகக் கண்டிக்கப்பட்டன. ஆகையால், அவர்களுக்கு வாழ்க்கை மிகவும் சங்கடமானதாக இருந்தது. சமூகத்தில் பெரும்பகுதி, இவ்வளவு உறுதியாக நின்று, சர்க்காரையும் சமரசத்திற்கு உடன்படச் செய்யும் அளவிற்கு தங்கள் வலிமையைக் காட்ட முடியுமென்று அவர்கள் நினைக்கவேயில்லை. ஆனால், சிறையில் 150-க்கு மேற்பட்ட சத்தியாக்கிரகிகள் ஏற்கனவே இருந்ததையும், சமரசத்தைப் பற்றிப் பேச்சு நடந்ததையும் கண்ட 'கருங்காலி'களுக்கு இது தாங்க முடியவில்லை. அவர்களில் சிலர் சமரசம் ஏற்படக்கூடாது என்று விரும்பியதோடு, ஒப்பந்தம் ஏற்பட்டாலும் அதைத் தகர்ப்பது என்றும் எண்ணினர்கள்.

டிரான்ஸ்வாலில், சுமார் ஐம்பதுக்குட்பட்ட பட்டாணியரே இருந்தனர். அவர்களில் சிலர் போயர் யுத்தத்தின்போது சிப்பாய்களாக வந்தவர்கள். மற்ற இந்திய, ஐரோப்பிய சிப்பாய்களைப் போல் அங்நாட்டிலேயே தங்கலாயினர். இவர்களில் சிலர் என்னுடைய கட்சிக்காரர்கள். இதோடு இவர்கள் எனக்கு அறிமுகமானவர்களே. பட்டாணியர்கள் சூது வாதற்றவர், எதையும் எளிதில் நம்பும் கபடமற்ற சாதியினர். தைரியம் அவர்கள் பிறவிப் பண்பு. கொல்வதும், கொல்லப்படுவதும் அவர்களுக்குச் சாதாரண விஷயங்கள். அவர்கள் யாரிடமாவது கோபம் கொண்டால் அவனை நன்ருக அடித்து விடுவார்கள்; கொன்றும் விடுவார்கள். யார், எவர் என்று யோசிக்கவும் மாட்டார்கள். தங்கள் உடன்பிறந்தவர்களாயிருப்பினும் இப்படித்தான் நடந்து கொள்ளுவார்கள். டிரான்ஸ்வாலில் வசித்து வந்த பட்டாணியர்களுடைய தொகை மிகச் சிறிதெனினும், அவர்களுக்குள்ளேயே அடிக்கடி இம்மாதிரி பூசல்கள் வருவதுண்டு. அச்சமயங்களிலெல்லாம் அவர்களிடையே சமாதானம் செய்து வைப்பது என் வேலையாக இருந்தது. ஒருவன் தனக்குத் துரோகம் செய்துவிட்டான் என்னும் போது ஒரு பட்டாணியனுக்கு உண்டாகும் கோபம் அடக்க ஒண்ணுதது. நியாயத்தைத் தீர்த்துக்கொள்ளுவதற்குஎதிரியிடம் இம்சை முறையைத்தான் கையாளுகிருன். இப்பட்டாணியர், சத்தியாக்கிரகப்

போராட்டத்தில் முழு மனத்துடன் கலந்து கொண்டனர். அவர்களில் ஒருவராகிலும் கறுப்புச் சட்டத்திற்கு உட்படவில்லே. அவர்களேத் தவருன வழியில் செல்லும்படிச் செய்து விடுவது, மிகவும் எளிது. கை விரல் ரேகைகளேப் பற்றி அவர்கள் மனத்தில் சந்தேகங்களே எழுப்பி அவர்களுக்கு ஆத்திரத்தை மூட்டிவிடுவது சாத்தியம். இந்த ஒரே எண்ணம் அதாவது, நான் லஞ்சம் வாங்கியிருந்தாலொழிய விரல் ரேகையைக் கொடுக்கும்படி ஏன் கேட்கவேண்டும் என்ற ஒன்றே, பட்டாணியரின் மனத்தைக் கலேப்பதற்குப் போதுமானதாக இருந்தது.

டிரான்ஸ்வாலில் இன்னெரு விதமான இந்தியக் கூட்டத்தாரும் இருந்தனர். அவர்கள் அனுமதிச் சீட்டு இல்லாமல் கள்ளத்தனமாக டிரான்ஸ்வாலில் நுழைந்தவர்கள். மற்றவர்களே போலி அனுமதிச்சீட்டுடனே அல்லது அனுமதிச்சீட்டு இன்றியோ கொண்டு வருவதில் அக்கறை உடையவர்கள் இவர்கள். சமரச ஒப்பந்தம் தங்கள் காரியங்களுக்குப் பிரதி பலமாக முடியும் என்பது இக்குழுவினருக்கும் தெரியும். போராட்டம் இருந்த வரையில் யாரும் அனுமதிச்சீட்டைக் காட்டவேண்டிய அவசியம் இல்லாமலிருந்தது. இவர்கள் தங்கள் திருட்டு வியாபாரத்தைப் பயமின்றி நடத்தியதோடு சிறைக்குச் செல்வதிலிருந்தும் சுலபமாகத் தப்பித்துக் கொண்டு வந்தனர். போராட்டம் நீடித்து நடப்பது இவர்களுக்கு நன்மையாக இருந்தது. ஆகவே, இந்தக் குழுவினரும் பட்டாணியரைத் தூண்டி விட்டிருக்கலாம். பட்டாணியர் திடீரென்று ஏன் ஆவேசம் கொண்டனர் என்பது வாசகர்களுக்கு இப்போது புலனுகும்.

எனினும், பட்டாணியருடைய கேள்விகளேக் கூட்டத்தில் யாரும் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லே. ஒப்பந்த விஷயமாக வோட்டெடுக்கும்படி நான் கூட்டத்திலிருந்தவர்களேக் கேட்டேன். தலேவரும் மற்ற பெரியோரும் உறுதியுடன் இருந்தனர். பட்டாணியருடன் பேச்சுப் போர் முடிவடைந்ததும், தலேவர் ஒப்பந்தத்தின் தன்மையைப் பற்றியும் அதனே ஆதரிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றியும், விவரமாகப் பேசி விட்டுக் கூட்டத்தின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள முன் வந்தார். அங்கே வந்திருந்த இரண்டு பட்டாணியரைத் தவிர மற்ற யாவரும் ஒப்பந்தத்தை ஆமோதித்தனர்.

நான் விடியற்காலே சுமார் 2 அல்லது 3 மணிக்கு வீடு திரும்பினேன். சீக்கிரமே எழுந்து சிறைக்குச் சென்று மற்றவர்

களையும் விடுதலை பெறச் செய்ய வேண்டியிருந்ததால், சிறிது நேரம் தூங்கலாம் என்பதற்கும் இடமே இல்லை. சிறைச்சாலை அதிகாரிக்கு டெலிபோன் மூலம் அவசியமான உத்தரவு வந்திருந்தபடியால் அவர் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தார். சத்தியாக்கிரகக் கைதிகள் அனைவரும் ஒரு மணி நேரத்தில் விடுதலையாயினர். தலைவரும் மற்ற இந்தியரும், அவர்களை வரவேற்க வந்திருந்தனர். சிறையிலிருந்து நாங்கள் அனைவரும் நேராகக் கூட்டம் நடக்க இருந்த இடத்திற்குச் சென்றோம். அங்கே இரண்டாவது கூட்டம் ஒன்று அப்போது நடந்தது. அன்றும், அதற்கடுத்த இரு தினங்களும் விருந்து உபசாரங்களிலும், சமூகத்திற்கு ஒப்பந்தத்தைப் பற்றி எடுத்துக் கூறுவதிலும் கழிந்தன. நாளாக ஆக ஒப்பந்தத்தின் விளைவுகள் தெளிவாகி வந்தன. அதே சமயத்தில் மற்றொரு பக்கத்தில் அதுபற்றிய தப்பபிப்பிராயங்களும் வலுக்க ஆரம்பித்தன. இந்தத் தப்பான அபிப்பிராயங்கள் ஏற்படுவதற்கு முக்கிய காரணங்களைப் பற்றி நாம் ஏற்கெனவே கவனித்திருக்கிறோம். அதுவுமல்லாமல் நாங்கள் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு எழுதியிருந்த கடிதம் ஒன்றும் தவறான கருத்தை உண்டுபண்ண ஏதுவாக இருந்தது. இப்படி எழுதப்பட்ட பல ஆட்சேபணைகளைச் சமாளிப்பதில் நான் பட்ட கஷ்டங்கள், போராட்டம் நடந்துகொண்டிருந்தபோது நான் பட்ட துன்பத்தைவிட மிகவும் அதிகம். போராட்டம் நடந்து கொண்டிருந்த நாட்களில் உண்டான கஷ்டங்கள், நமக்கும் நம்முடைய பகைவனுக்கும் உள்ள தொடர்பைப் பற்றியவை. அவற்றைச் சுலபமாக வென்றுவிடலாம். ஏனென்றால், எல்லோருக்கும் பொதுவான ஆபத்தைச் சமாளிப்பது எப்படி என்பதே முக்கியமாகி விடுவதால், நமக்குள்ளே இருக்கும் வேற்றுமைகள், பயங்கரமான பூசல்கள் யாவும் ஒதுக்கி வைக்கப்படுகின்றன அல்லது அவற்றிற்கு முக்கியத்துவம் இல்லாமற் போய்விடுகிறது. ஆனால், போராட்டம் முடிவடைந்ததும் உள்ளே புகைந்து கொண்டிருக்கும் பொறாமைகள் மறுபடியும் வெளிப்பட்டு விடுகின்றன. எதிரிக்கும் நமக்குமுள்ள வேறுபாடுகளில் நல்லபடியான முடிவுக்கு வந்துவிட்டாலும், பலர் ஒப்பந்தத்தில் சுலபமாகக் குற்றங் குறைகளைக் காணும் வேலையில் இறங்குகிறார்கள். ஒரு ஜனநாயக அமைப்பில், எல்லோருடைய கேள்விகளுக்கும், அவர்கள் பெரியோராயினும், சிறியோராயினும், பதில் தருவதுதான் முறை. நண்பர்களிடையே உண்டாகும் போராட்டங்களையும், தவறான கருத்துக்களையும் தீர்க்க முயலும்போது ஒருவருக்குக் கிடைக்கும் படிப்பினை

ஓர் எதிரியுடன் போராட நேரும்போதுகூடக் கிடைப்ப தில்லே. எதிரியுடன் போராடும்போது ஒரு விதமான போதை யும், உற்சாகமும் உண்டாகின்றன. ஆனல், நண்பர்களுக் கிடையே வித்தியாசங்களும் தவருன கருத்துக்களும் உண்டா வது அபூர்வமான, எப்பொழுதோ ஏற்படுகிற விஷயமாகை யால் அவை மிகவும் துன்பம் தருவனவாக இருக்கின்றன. ஆயினும், அந்த மாதிரி சந்தர்ப்பங்களில்தான் ஒருவருடைய உறுதி உண்மையான சோதனைக்கு உள்ளாகிறது. என்னுடைய அனுபவம் எவ்வித விதி விலக்குமின்றி அப்படித்தான் இருந் திருக்கின்றது. அத்தகைய கடுஞ் சோதனைகளைக் கடந்து வந்த போதுதான் ஆன்மிக விஷயங்களில் பெரிய பலன்களை அடைந் திருக்கிறேன் என்று நம்புகிறேன். போராட்டம் நிகழ்ந்து கொண் டிருந்தபோது அதன் உண்மையான தன்மையை உணராத பலர், ஒப்பந்தம் ஏற்பட்ட காலத்திலும் அதற்குப் பிறகும் அதை முற்றிலும் புரிந்துகொண்டனர். பலமான எதிர்ப் பெல்லாம் பட்டாணியரிடம் மட்டுமே இருந்து வந்தது; மற்றவர்களிடம் இந்த எதிர்ப்பு பரவவில்லை.

வலியச் சம்மதித்துச் செய்து கொண்ட புது ஏற்பாட்டின் படி புதிதாகப் பதிவுப் பத்திரங்களைத் தருவதற்கு ஆசியாக் காரர்களின் பதிவாளர் உடனே தயாரானர். அந்தப் பதிவுப் பத்திரங்களின் முறையே முற்றிலும் மாறி இருந்தது. சத்தியாக் கிரகிகளிடம் யோசனை கேட்டு அது தயாரிக்கப்பட்டிருந்தது.

1908-ஆம் ஆண்டு பிப்ரவரி 10-ஆம் தேதி காலை எங்களில் சிலர் பதிவுப் பத்திரங்களைப் பெறுவதற்குப் போகத் தயாரா னேம். பதிவு வேலையை எவ்வளவு விரைவில் முடிக்க முடியுமோ அவ்வளவு விரைவில் முடிக்க வேண்டியதன் அத்தி யாவசியத்தைக் குறித்துச் சமூகத்திற்கு நன்ருக எடுத்துக் கூறப் பட்டிருந்தது, ஆரம்பத்தில் ஏற்படக்கூடிய கூச்சத்தைத் தவிர்க் கவும், பதிவு சம்பந்தப்பட்ட அதிகாரிகள் தங்கள் கடமைகளை மரியாதையுடன் செய்கிருர்களா என்று பார்க்கவும், பொது வாக எல்லா ஏற்பாடுகளேயும் மேற்பார்க்கவும், தலைவர்களே முதல் நாளில் தங்கள் பத்திரங்களை முதலில் வாங்கவேண்டு மென்றும் முடிவாகி யிருந்தது.

என் காரியாலயத்திற்குச் சென்றேன். சத்தியாக்கிரகச் சங்கத்தின் காரியாலயமும் அதுதான். அங்கே மீர் ஆலமும் அவருடைய கூட்டாளிகளும் வெளியில் நிற்பதைக் கண்டேன்.

மீர் ஆலம் என் பழைய கட்சிக்காரருள் ஒருவர். அடிக்கடி தம் காரியங்களிலெல்லாம் என் யோசனையையே நாடுபவர். டிரான்ஸ்வாலில் அநேக பட்டாணியர், தொழிலாளர் பலரைக் கூலிக்கு அமர்த்தி, வைக்கோல் அல்லது நார் மெத்தைகளைத் தைத்து விற்று நல்ல லாபம் சம்பாதித்தனர். மீர் ஆலமும் அவர்களில் ஒருவர். ஆறடி உயரமும் பெரிய பலமான உடற்கட்டும் கொண்டவர். என் காரியாலயத்திற்கு வந்தால் வழக்கமாக உள்ளே போய் உட்காருவார். ஆனல் அன்று தான், முதல் தடவையாக அவர் வெளியில் நின்றுகொண் டிருந்தார். அவர் கண்கள் என் கண்களைச் சந்தித்தன. பார்த்ததும் எனக்கு வணக்கம் தெரிவிக்கும் அவர் அன்று அப்படிச் செய்யவில்லை. நான் அவருக்கு வணக்கம் கூறி னேன். அவரும் பதில் வணக்கம் தெரிவித்தார். எப்போதும் போல், ''நீங்கள் சுகமா?'' என்று கேட்டேன். நலமாக இருப் பதாகப் பதில் அளித்தார் என்றே எனக்கு ஞாபகம். ஆயி னும் என்றுமுள்ள புன்சிரிப்பு அவர் முகத்தில் அன்று இல்லை. கோபம் தெறிக்கும் அவர் கண்களைக் கண்டேன்; அதைக் கவனத்தில் வைத்துக்கொண்டேன். ஏதோ நடக்கப் போகி றது என்றும் நினைத்தேன். காரியாலயத்திற்குள் நுழைந்தேன். தலைவர் ஸ்ரீ யூசுப் மியானும் இதர நண்பர்களும் வந்தனர். நாங்கள் அனைவரும் ஆசியாக்காரர்கள் காரியாலயத்திற்குப் போகப் புறப்பட்டோம். மீர் ஆலமும், அவர் கூட்டாளிகளும் எங்களைப் பின்தொடர்ந்தனர்.

பத்திரப் பதிவுக் காரியாலயம் என் காரியாலயத்தில் இருந்து ஒரு மைலுக்குக் குறைவான தூரத்திலிருந்த வான் பிராண்டிஸ் சதுக்கத்தில் இருந்தது. போகும் வழியில் பெரிய ரஸ்தாக்களைக் கடக்கவேண்டும். வான் பிராண்டிஸ் தெரு வின் வழியாக மெஸர்ஸ் அர்னட் கிப்ஸனின் கட்டடத்திற்கு வெளியில் வந்தோம். பதிவுக் காரியாலயத்திலிருந்து இன்னும் மூன்று நிமிட நடை தூரமே. மீர் ஆலம் என்னை அழைத்து ''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''பத்து விரல் ரேகை முத்திரைகளைத் தந்து பதிவுப் பத் திரத்தை வாங்கிக் கொள்ளப் போகின்றேன். நீங்களும் என்னு டன் வந்தால் இரண்டு பெருவிரல் முத்திரைகளை மாத்திரமே தந்து பத்திரத்தை உங்களுக்கு முதலில் வாங்கிக் கொடுத்து விட்டுப் பிறகு எல்லா விரல் முத்திரைகளையும் கொடுத்து எனக்கு வாங்கிக்கொள்ளுவேன்'' என்று பதிலளித்தேன்.

நான் கடைசி வாக்கியத்தை முடிக்கு முன்னமே பின்புறத்திலிருந்து என் தலையில் ஒரு தடி அடி விழுந்தது. உடனே, 'ஹரே, ராமா!' (கடவுளே) என்ற வார்த்தைகளுடன் தரையில் அப்படியே பிரக்ஞையற்று விழுந்தேன். பிறகு என்ன நடந்தது என்பது தெரியாது. ஆனுல், மீர் ஆலமும் அவருடைய கூட்டாளிகளும் என்னை மேலும் அடித்தனர்; உதைத்தனர். அவற்றில் சில என்மீது விழாதபடி யூசுப் மியானும் தம்பு நாயுடுவும் தடுத்தனர். இதன் விளைவாக அவர்களும் தாக்குண்டனர். அங்கே ஏற்பட்ட சப்தத்தைக் கேட்டு அவ்வழியாகச் சென்று கொண்டிருந்த ஐரோப்பியர் சிலர் நெருங்கினர். மீர் ஆலமும் அவருடைய கூட்டாளிகளும் ஓட்டமெடுத்தனர். ஆனுல், ஐரோப்பியர்கள் அவர்களைப் பிடித்துவிட்டனர். அதற்குள் போலீஸார் வந்து அவர்களைக் கைது செய்தனர். ஸ்ரீ ஜே. சி. கிப்ஸனுடைய சொந்தக் காரியாலயத்திற்கு நான் எடுத்துச் செல்லப்பட்டேன். எனக்குச் சுய உணர்வு மீண்டும் வந்த போது ஸ்ரீ டோக்* குனிந்து என்னைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டேன். "எப்படி இருக்கிறீர்கள்?" என்று அவர் கேட்டார்.

"நான் சரியாகவே இருக்கிறேன். ஆனுல், பற்களிலும் விலாவிலும் வலி இருக்கிறது. மீர் ஆலம் எங்கே?" என்றேன்.

"மற்றவர்களுடன் அவரும் கைது செய்யப்பட்டார்."

"அவர்கள் விடுதலை செய்யப்பட வேண்டும்."

"அதெல்லாம் சரிதான். ஆனுல், தாங்கள் இங்கே ஓர் அந்நியரின் காரியாலயத்தில் இருக்கிறீர்கள். உதட்டிலும் கன்னங்களிலும் ரத்தவிளாராகி விட்டன. உங்களை வைத்திய சாலைக்கு அழைத்துச் செல்லப் போலீஸார் தயாராயிருக்கின்றனர். ஆனுல், தாங்கள் என் வீட்டுக்கு வந்தால் என் மனைவியும் நானும் எங்களால் இயன்ற அளவு உங்கள் சௌகரியங்களைக் கவனித்துப் பணிவிடை செய்வோம்."

"ஆம். தயை செய்து என்னைத் தங்கள் வீட்டுக்குக் கொண்டு போங்கள். போலீஸாரின் அழைப்புக்கு என் நன்

---

*பூஜ்யர் ஜோசப் ஜே. டோக்கின் வரலாற்றைப் பற்றி காந்திஜியே இந்நூலில் விவரமாகக் கூறியிருக்கிருர். காந்தியடிகளின் வாழ்க்கையையும் தத்துவங்களையும் பற்றி முதன் முதல் புத்தகம் எழுதியவர் ஸ்ரீ டோக்கே. 'மோ. க. காந்தி – தென்னுப்பிரிக்காவில் ஓர் இந்திய தேசபக்தர்' என்பது அவர் எழுதி 1907–இல் வெளியிட்ட நூல்.

றியைத் தெரிவித்து, நான் தங்களுடன் போக விரும்புவதாகக் கூறிவிடுங்கள்."

ஆசியாக்காரர்களின் பதிவு அதிகாரியான ஸ்ரீ சாம்னியும் இந்தச் சமயத்தில் அங்கே வந்து சேர்ந்தார். ஸ்மித் தெருவில் இருந்த இந்த நல்ல பாதிரியாரான டோக் அவர்களின் வீட்டிற்கு என்னை ஒரு வண்டியில் கொண்டு போயினர். அங்கே ஒரு டாக்டரை வரவழைத்தார்கள். அதற்கு முன் நான் ஸ்ரீ சாம்னியிடம், "நான் தங்கள் காரியாலயத்திற்கு வந்து என் பத்து விரல் ரேகை முத்திரைகளைத் தந்து பதிவுப் பத்திரத்தை முதலாவதாகப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று விரும்பினேன். ஆனால், ஆண்டவன் சித்தம் வேறாக இருந்து விட்டது. எனினும், இப்போது அந்த தஸ்தாவேஜுகளைத் தாங்கள் இங்கே கொண்டு வந்து நான் உடனே பதிவு செய்து கொள்ள அனுமதிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். எனக்கு முன்னால் யாரையும் பதிவு செய்ய விடமாட்டீர்கள் என்று நம்புகிறேன்" என்றேன்.

"அதற்கென்ன அவசரம்? டாக்டர் விரைவில் இங்கே வருவார். தாங்கள் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். எல்லாம் சரியாகிவிடும். நான் மற்றவர்களுக்குப் பத்திரங்கள் தர ஆரம்பிக்கிறேன். ஆனால், தங்கள் பெயரை ஜாபிதாவில் முதலாவதாகப் பதிவு செய்துகொள்ளுகிறேன்" என்றார்.

"அப்படியல்ல, நான் உயிருடன் இருந்து, ஆண்டவனுக்கும் சம்மதம் இருந்தால், முதல் பத்திரத்தை நானே பெற்றுக் கொள்ளுவதெனப் பிரதிக்ஞை பூண்டிருக்கிறேன். அதனால்தான் இப்போதே, இந்த இடத்திற்கே, தஸ்தாவேஜுகளைக் கொண்டு வர வேண்டுமென்று வற்புறுத்துகின்றேன்" என்றேன்.

அதன்பேரில் ஸ்ரீ சாம்னி, தஸ்தாவேஜுகளைக் கொண்டு வரப் போய்விட்டார்.

நான் செய்ய வேண்டியிருந்த இரண்டாவது காரியம், என்னைத் தாக்கிய குற்றத்திற்கு மீர் ஆலத்தையும், ஏனையோரையும் நான் பொறுப்பாக்கவில்லை. எக்காரணத்தை முன்னிட்டும் அவர்களைத் தண்டிக்க நான் விரும்பவில்லை. எனக்காகவாவது அவர்களை விரைவில் விடுதலை செய்வார்கள் என்று நம்புகிறேன் என்று அட்டர்னி ஜெனரலுக்குத் தந்தி கொடுக்கவேண்டியதாகும். ஆனால், ஜொஹன்னஸ்பர்க்கிலிருந்து ஐரோப்பியர்கள் அட்டர்னி ஜெனரலுக்குக் கண்டிப்பான கடிதமொன்றை எழுதியிருந்தனர். குற்றவாளிகளைத் தண்டிப்பதுபற்றி காந்தி

யின் அபிப்பிராயம் எதுவானாலும் அதைத் தென்னாப்பிரிக்காவில் அமலுக்குக் கொண்டு வரக்கூடாது என்று எழுதிவிட்டனர். காந்தி எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாதிருக்கலாம்; ஆனால் அந்தத் தாக்குதல் ஒரு தனிப்பட்ட இடத்திலல்லாமல் பலபேர் நடமாடும் பொதுச்சாலையில் நடந்திருப்பதால் அது பொதுமக்களுக்குச் செய்ததோர் குற்றமாகும் என்றும் அறிவித்தார்கள். பல ஆங்கிலேயரும் சாட்சி கூறக் கூடிய நிலையிலிருப்பதால் எதிரிகள்மீது வழக்குத் தொடரத்தான் வேண்டும் என வற்புறுத்தினர். அதன்பேரில் அட்டர்னி ஜெனரல், மீர் ஆலத்தையும் அவரது கூட்டாளிகளில் ஒருவரையும் மறுபடியும் கைது செய்தார். அவர்கள் மூன்று மாதக் கடுங்காவல் தண்டனையும் அடைந்தனர். சாட்சிகூற என்னை மாத்திரம் அழைக்கவில்லை.

ஆனால், நோயாளியின் அறையில் நடந்ததைத் திரும்பக் கவனிப்போம். ஸ்ரீ சாம்னி வெளியே சென்றிருந்தபோது டாக்டர் த்வெயிட்ஸ் அங்கே வந்தார். அவர் என்னைப் பரிசோதித்து மேல் உதட்டிலும் கன்னத்திலும் இருந்த காயங்களைத் தைத்தார். விலாவில் தடவவேண்டிய மருந்தைக் கூறிவிட்டு தையல்களை அகற்றும் வரையில் நான் பேசக்கூடாது என்றும் சொன்னார். திரவ உணவுகளை மாத்திரமே சாப்பிடலாம் என்றார். எந்தக் காயமும் ஆபத்தானதாக இல்லை என்றும், ஒரு வாரத்தில் நான் படுக்கையிலிருந்து எழுந்து என் காரியங்களைக் கவனிக்க முடியுமென்றும், ஆனால் இரண்டு மாதங்களுக்கு உடலுக்கு ஆயாசம் தரும் வேலை எதுவும் செய்யாமல் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்றும் கூறிச் சென்றார்.

ஆகவே, என் பேச்சுக்குத் தடை ஏற்பட்டது. ஆனால், என் கைகளை நான் உபயோகிக்க முடியும். சமூகத்திற்குத் தலைவர் மூலமாக பின்வரும் சிறு குறிப்பை எழுதி அதைப் பிரசுரத்திற்கு அனுப்பினேன் :

‘டோக் தம்பதிகளின் சகோதர வாஞ்சையோடு கூடிய பராமரிப்பில் நான் சுகமாக இருக்கிறேன். விரைவில் என் கடமைகளைச் செய்வதில் ஈடுபட முடியும் என நம்புகிறேன்.

‘தாங்கள் செய்வது இன்னதென்றறியாமலேயே இந்தக் காரியத்தைச் செய்தவர்கள் செய்திருக்கிறார்கள். நான் தவறு செய்கிறேன் என்று நினைத்தார்கள். அதற்காகத் தங்களுக்குத் தெரிந்த ஒரே வழியில் அவர்கள் நிவாரணத்தையும் தேடிக்கொண்டார்கள். ஆகவே, அவர்களுக்கு விரோதமாக எவ்வித நடவடிக்கையும் எடுக்கலாகாது என்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

'ஒரு முஸ்லிமோ அல்லது முஸல்மான்களோ என்னை இப்படித் தாக்கினர் என்பதற்காக ஹிந்துக்கள் ஒருவேளை மனவேதனையடையலாம். அப்படியாயின் அவர்கள், தங்களைப் படைத்த ஆண்டவன் முன்னிலையிலும், உலகத்தின் முன்பும் தவறு செய்தவர்களாவர். அதற்கு மாறாக, இன்று சிந்திய ரத்தம், நம் இரு சமூகங்களையும் ஒருபோதும் பிரிக்க முடியாதபடி இணைப்பதாகுக. அதுவே என் மனப்பூர்வமான பிரார்த்தனை. ஆண்டவன் அதற்கு அருள் செய்வானாக.

'தாக்கப்பட்டிருந்தாலும் சரி, தாக்குதல் இல்லையானாலும் சரி, நான் கூறும் ஆலோசனை ஒரே மாதிரியானதே. ஆசியாக்காரர்களில் பெரும்பாலோர் விரல் ரேகை முத்திரைகளைத் தர வேண்டும். மனச்சாட்சியைப் பொறுத்த ஆட்சேபங்கள் இருப்பவர்களுக்குச் சர்க்கார் விதி விலக்களிப்பார்கள். அதற்கு மேலும், நாம் அவர்களை ஏதேனும் கேட்போமாயின், அது சிறுபிள்ளைத்தனமாகும்.

'சத்தியாக்கிரகத்தின் தன்மையைச் சரியாக உணர்ந்துவிட்டால், கடவுளை அன்றி வேறு எதற்கும் அஞ்சாத தன்மையை மக்களுக்கு அது ஊட்டும். எந்தக் கோழைத்தனமும், நிதான புத்தியுமுள்ள இந்தியர்கள் தம் கடமையைச் செய்வதிலிருந்து தடுத்துவிடக் கூடாது. வலியப் பதிவு செய்து கொண்டால் சட்டத்தை ரத்து செய்வதாகச் சர்க்காரிடமிருந்து வாக்குறுதி கிடைத்த பின்பு, ஒவ்வொரு நல்ல இந்தியனும் தன்னால் முடிந்த அளவு சர்க்காருக்கும் காலனிக்கும் உதவி செய்வது புனிதமான கடமையாகும்.'

ஸ்ரீ சாம்னி தஸ்தாவேஜுகளுடன் திரும்பியதும் நான் என் விரல் ரேகை முத்திரைகளைத் தந்தேன். ஆனால், அதில் வேதனை இல்லாமலில்லை. அப்போது ஸ்ரீ சாம்னியின் கண்களில் நீர் ததும்புவதைக் கண்டேன். நான் அடிக்கடி அவரைக் குறித்துக் கடுமையாக எழுதவேண்டியிருந்தது. ஆனாலும் சம்பவங்கள் மனிதனுடைய உள்ளத்தை எப்படி இளகச் செய்துவிடும் என்பதை இது எனக்குக் காட்டியது.

இவையனைத்தும் ஒரு சில நிமிடங்களுக்குள் நடந்துவிட்டன என்பதை வாசகர்கள் சுலபமாக ஊகித்துக்கொள்ளலாம். ஸ்ரீ டோக்கும் அவர் மனைவியும், நான் பூரண ஓய்வுடனும் மன அமைதியுடனும் இருக்கவேண்டுமென்பதில் மிகச் சிரத்தையுடன் இருந்தனர். தாக்குதலுக்குப் பிறகு என் மனத்தின் போக்கைக் கண்டு வருத்தமுற்றனர். அது என்

உடல்நிலையைப் பாதிக்குமென்றும் பயந்தனர். ஆகவே, அவர்கள் என் படுக்கை அருகிலிருந்தவர்களை யெல்லாம் சைகைகளாலும், குறிகளாலும் வெளியேற்றிவிட்டு, நான் எதையும் எழுதவோ, செய்யவோ கூடாதென்றும் கேட்டுக்கொண்டனர். நான் அவர்களிடம் எழுத்தின் மூலமாக ஒன்று கேட்டுக் கொண்டேன். நான் அமைதியாகப் படுக்க உதவுவதற்கு அவர்களுடைய மகள் ஆலிவ் என்ற சிறுமி, எனக்கு மிகவும் பிடித்தமான ஆங்கில கீதமாகிய 'அருள் ஒளியே வழிகாட்டிடு'* (Lead, Kindly Light) என்ற பாடலைப் பாட வேண்டுமென்று கோரினேன். ஆலிவ் அப்பொழுது சிறு பெண். ஸ்ரீ டோக் என் வேண்டுகோளைப் பெரிதும் விரும்பிப் புன்சிரிப்புடன் ஏற்றுக் கொண்டு சைகையால் ஆலிவை அழைத்துக் கதவருகில் நிற்கச் சொல்லித் தாழ்ந்த குரலில் பாடச் சொன்னுர். இப்பொழுது கூட இச்சொற்களை வரையச் சொல்லும்போது அந்தக் காட்சி என் கண்முன் வந்து நிற்கிறது. ஆலிவின் இனிய பாட்டு என் காதில் எதிரொலித்துக்கொண்டிருக்கிறது.†

---

* மகாத்மாவுக்கு மிகவும் பிடித்த இவ்வழகிய தோத்திரப்பாடலை இயற்றியவர் கார்டினல் ஜான் ஹென்றி நியூமான் என்பவர் (1801–1890). ஆக்ஸ்போர்டில் கல்வி பயின்று கிறிஸ்தவ சமய ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் கடைசியில் கத்தோலிகக் கொள்கைக்குத் திரும்பியவர். பர்மிங்ஹாமுக்கு அருகில் எட்க்பாஸ்டன் என்ற இடத்தில் செயின்ட் பிலிப் நேரி மரபைச் சேர்ந்த மடாலயத்தில் வாழ்நாள் முழுவதும் தங்கி பல அருமையான சமய நூல்களை எழுதினுர். இவருடைய 'அபொலோஜியா ப்ரோ வீடா ஸுவா' என்ற லத்தீன் நூல், சமயம் பற்றிய இவரது பரந்த அறிவை வெளிப்படுத்துகிறது.

† "அருள் ஒளியே வழிகாட்டிடு" என்ற கீதத்தைப் பாடச்சொல்லிக் கேட்பதில் காந்திஜிக்கு எவ்வளவு ஆர்வமும் ஆனந்தமும் இருந்தன என்பதைக் குறித்து பூஜ்யர் டோக்கின் குமாரி ஆலிவ் ஸி. டோக் பின்னுல் எழுதிய ஒரு கட்டுரையில் வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்:

"காயங்களுக்குக் கட்டுக் கட்டப்பட்டு படுக்க வைக்கப்பட்டிருந்த ஸ்ரீ காந்தி அமைதியாகத் தூங்கட்டும் என்பதற்காக விளக்குகள் அணைத்து வைக்கப்பட்டன. ஆனுல், நானும் என் தாயாரும் 'அருள் ஒளியே வழிகாட்டிடு' என்ற கீதத்தைத் தமக்காகப் பாடவேண்டுமென்று அவர் முதலில் கோரினுர். எனவே, அவர் படுத்திருந்த அறையின் கதவுக்கு வெளிப்பக்கத்தில் இருந்துகொண்டு மெல்லிய குரலில் பாடினேம். இப்பாடலே அவருக்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னரும் இன்பம் தருவதாக இருந்து வந்திருக்கிறது. 1927–இல் காந்திஜி சபர்மதி ஆசிரமத்தில் இருந்தபோது எனக்கு எழுதிய ஒரு கடிதத்தில் இச்சம்பவத்தைக் குறித்து எழுதுகையில், "அப்பாடலை, நீ பாடக் கேட்பதை நான் எவ்வளவு ஆவலாக விரும்புகிறேன்! அந்தக் காட்சி உனக்கு நினைவில்லாமலிருக்கலாம். எனக்கு நினைவிருக்கிறது; நான் ஓவியக்காரனுக இருந்தால் அந்த நினைவை இன்றும் அப்படியே ஓவியமாகத் தீட்டிவிடுவேன்" என்று எழுதியிருந்தார். அச்சம்பவத்திற்குப் பின்னர் தமது இரு இளைய குமாரர்களாகிய ராமதாஸையும், தேவதாஸையும் சில அழகான கிறிஸ்தவ கீதங்களைப் பாடக் கற்றுக் கொள்ளுவதற்காக வாரத்தில் இருமுறை என்னிடம் அனுப்பி வந்தார்."

நான் இந்த அத்தியாயத்தில் விஷயத்திற்குப் பொருத்தம் இல்லாத பலவற்றைச் சேர்த்திருப்பதாக நினைக்கிறேன்; வாசகர்களுக்கும் அவ்வாறே தோன்றலாம். ஆனால், இந்த அத்தியாயத்தை இன்னும் ஒரு நினைவைக் குறிப்பிடாமல் முடிக்க முடியாது. ஏனெனில் அது விட்டுவிட முடியாத அவ்வளவு புனிதமான ஞாபகம். டோக் குடும்பத்தினர் எனக்குச் செய்த சேவையை நான் எங்ஙனம் விவரிக்க முடியும்?

ஸ்ரீ ஜோசப் டோக் (Mr. Joseph Doke) பேப்டிஸ்ட் என்ற கிறிஸ்தவ மரபைச் சேர்ந்த ஒரு பாதிரியார். அப்போது அவருக்கு வயது நாற்பத்தாறு. அவர் தென்னாப்பிரிக்காவுக்கு வருவதற்கு முன், நியூஜிலாந்துக்குச் சென்றிருந்தார். இந்தத் தாக்குதல் நிகழ்வதற்கு ஏறத்தாழ ஆறு மாதங்களுக்கு முன்பு அவர் எனது காரியாலயத்துக்கு வந்து தமது பெயர் அச்சடித்த சீட்டை என்னிடம் அனுப்பினர். அவர் பெயருக்கு முன்பு பூஜ்ய (Rev.) என்ற பதத்தைக் கண்டதும், மற்றப் பாதிரியார்களைப் போலவே இவரும் என்னைக் கிறிஸ்தவ மதத்தில் சேர்க்க முயற்சிக்கவோ அல்லது இந்தப் போராட்டத்தைக் கைவிடும்படி புத்தி கூறவோ, இல்லையேல் எங்கள் இயக்கத்திற்கு ஆதரவான அனுதாபம் தெரிவித்துவிட்டுப் போகவோ வந்திருக்கவேண்டுமென்றே நான் தவருக நினைத்துக் கொண்டேன். ஸ்ரீ டோக் என் அறைக்குள் வந்தார். நாங்கள் சில நிமிடங்கள்தான் உரையாடியிருப்போம். அதற்குள் நான் அவரை எவ்வளவு தவருக மதிப்பிட்டு விட்டேன் என்பதை உணர்ந்து வருந்தி என் மனத்திற்குள்ளேயே அதற்காக மன்னிப்பும் கேட்டுக்கொண்டேன். போராட்டத்தைப் பற்றிச் செய்தித் தாள்களில் வெளியிடப்பட்ட விவரங்கள் அனைத்தும் அவருக்கு நன்ருகத் தெரிந்திருந்தன. அவர், “தயை செய்து இந்தப் போராட்டத்தில் என்னை உங்கள் நண்பனுகப் பாவித்துக் கொள்ளுங்கள். தங்களுக்கு என்னுலான உதவியைச் செய்வதை என் மதக் கடமையாக நான் கருதுகிறேன். நான் ஏசுநாதரின் வாழ்க்கையிலிருந்து ஏதாவது படிப்பினை கற்றிருந்தால் அது, மிகவும் பளுவான சுமையைத் தாங்கிக் கொண்டிருப்பவர்களின் பளுவைப் பகிர்ந்து அவர்கள் சுமையைச் சற்றுக் குறைக்க வேண்டும் என்பதே ஆகும்” என்று சொன்னர். நாங்கள் அவ்விதம் ஒருவருக்கொருவர் அறிமுகமானேம். பிறகு நாளுக்கு நாள் எங்களுக்குள் பரஸ்பர அன்பும், நெருங்கிய தொடர்பும் வளரத்தொடங்கின.

ஸ்ரீ டோக்குடைய பெயர் இந்தத் தொகுதியில் அடிக்கடி வரும். ஆனால், டோக் குடும்பத்தினர் என்னை எவ்வளவு அன்புடனும் சிரத்தையுடனும் கவனித்து வந்தார்கள் என்பதை விவரிக்கும் முன்னர் வாசகர்களுக்கு அவரை அறிமுகப் படுத்தும் வாயிலாக சிலவற்றைக் கூறுவது அவசியமாகிறது.

இரவும் பகலும், குடும்பத்தில் யாராவது ஒருவர், என்னைக் கவனித்துக் கொண்டு வருவார். நான் அங்கிருந்த வரையில் அவர்கள் வீடு, வருவோரும் போவோரும் தங்கும் சத்திரத்தைப் போல் ஆகிவிட்டது. என் சுகத்தைப்பற்றி விசாரிக்க இந்தியர் எத்தரத்தினரும் அந்த இடத்திற்குக் கூட்டம் கூட்டமாகத் திரண்டு வரலாயினர். என்னைப் பார்ப்பதற்கு டாக்டர் அனுமதி தந்த பிறகு, அழுக்குத் துணியும், அழுக்குச் செருப்பு மணிந்து கையில் குடையுடனிருந்த எளிய அங்காடிக் கடைக்காரர் முதற்கொண்டு, டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்திய சங்கத்தின் தலைவர் வரை, பலர் வந்தனர். ஸ்ரீ டோக், அனைவரையும் ஒரே மரியாதையுடனும், மதிப்புடனும் தம் வரவேற்பறையில் வரவேற்பார். நான் டோக் குடும்பத்தினருடன் தங்கி இருந்த நாட்களில், அவர்களுடைய நேரமெல்லாம் எனக்குப் பணிவிடை செய்வதிலும், என்னைக் காண வந்த நூற்றுக் கணக்கானவர்களை உபசரிப்பதிலுமே கழிந்தது. இரவு நேரத்திலுங்கூட ஸ்ரீ டோக், இரண்டு மூன்று தடவையாவது எனது அறையில் மெதுவாக எட்டிப் பார்ப்பார். அவர்களுடைய அன்பு மிக்க ஆதரவில் இருந்த வரையில், அது என் வீடு அல்ல என்ற எண்ணமோ அல்லது என்னுடைய நெருங்கிய உறவினர் டோக் குடும்பத்தினரை விட என்னை நன்ருகக் கவனித்திருக்க முடியுமென்ற நினைவோ சிறிதேனும் என் மனத்தில் உண்டாகவில்லை.

இவ்வாறு பகிரங்கமாக இந்தியருடைய போராட்டத்திற்கு ஆதரவு தந்ததற்காகவும், என்னை அவர்களுடைய வீட்டில் வைத்திருந்ததற்காகவும், ஸ்ரீ டோக் கஷ்டங்களுக்கு ஆளாகவில்லை என்று எண்ணிவிடக் கூடாது. ஸ்ரீ டோக் ஒரு பேப்டிஸ்ட் ஆலயத்தின் பொறுப்பை வகித்து வந்தார். அந்தக் கோயிலுக்கு வரும் ஐரோப்பியர்களின் உதவியைக் கொண்டே அவர் ஜீவனம் நடத்தி வந்தார். அவர்கள் எல்லோருமே முற்போக்கு எண்ணங்களுள்ளவர்களல்ல. மற்ற ஐரோப்பியர்களிடையே இருந்ததைப் போலவே இந்தியர் மீது வெறுப்பும்

இருந்தது சிலருக்கு. ஆனால், ஸ்ரீ டோக் அதையெல்லாம் பொருட்படுத்தவில்லை. இந்தச் சங்கடமான விஷயத்தைப் பற்றி எங்கள் நட்பின் தொடக்கத்திலேயே நான் அவரிடம் பேசியிருக்கிறேன்.

அவர், "என் அருமை நண்பரே! ஏசுநாதரின் மதத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? தாம் நம்பிய ஒரு விஷயத்திற்காகச் சிலுவையில் சந்தோஷமாக ஏறியவரும், உலகம் எவ்வளவு விசாலமானதோ அவ்வளவு விசாலமான அன்புகொண்டவருமான அவரைப் பின்பற்றும் எளியேனாகவே என்னை எண்ணிக்கொள்ளுகிறேன். கிறிஸ்துவை ஐரோப்பியர்களுக்கு என் வாழ்க்கையின் மூலம் நான் உண்மையாகவே காட்ட வேண்டுமானால், உங்களுடைய போராட்டத்தில் பகிரங்கமாக நான் பங்கெடுத்துக் கொள்ளத்தான் வேண்டும். இதற்காக என்னைத் தண்டிப்பதற்கென்று ஐரோப்பியர் என்னை நிராகரித்து விடுவார்கள் என்று நீங்கள் பயப்படுகிறீர்களா? அப்படி அவர்கள் என்னைத் தள்ளிவிட்டாலும் நான் அவர்களைக் குறை கூறக் கூடாது. அவர்களிடமிருந்து எனக்கு ஜீவனம் கிடைக்கின்றது என்பது உண்மையே. ஆயினும், வெறும் வயிற்றுப் பிழைப்புக்காக நான் அவர்களுடன் தொடர்பு வைத்திருக்கிறேனென்றோ அல்லது அவர்கள்தான் என்னைக் காப்பாற்றுகிறார்களென்றோ நீங்கள் நினைக்கக்கூடாது. என்னைக் காப்பாற்றுகிறவர் கடவுள். எல்லாம் வல்ல இறைவனின் கருவிகளே அவர்கள். மத சம்பந்தமான என் சுதந்திரத்தில் அவர்கள் யாரும் தலையிடக்கூடாதென்பது, அவர்களுக்கும் எனக்கும் உள்ள தொடர்பில் எழுத்தில் இராத நிபந்தனைகளில் ஒன்றாகும். ஆகையால், எனக்காகக் கவலைப்படுவதை விட்டொழியுங்கள். இந்தப் போராட்டத்தில் நான் உங்களுடன் எனக்குரிய ஸ்தானத்தை வகிப்பது இந்தியர்களைத் திருப்தி செய்வதற்காக அன்று; என் கடமையை நான் செய்வதற்கேயாம். எனினும் நான் இந்த விஷயத்தைப்பற்றி என் மேல் அதிகாரியிடம் முழுவதும் பேசியிருக்கிறேன். இந்தியருக்கும் எனக்குமுள்ள தொடர்பை அவர் அங்கீகரிக்காவிட்டால் வேலையிலிருந்து நீங்கிவிட எனக்கு அனுமதி தந்து, வேறொரு பாதிரியாரை நியமித்துக் கொள்ளலாமென்றும் அவரிடம் நான் குறிப்பாகச் சொல்லியும் இருக்கிறேன். ஆனால், அவரோ, நான் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்று கேட்டுக்கொண்டதுடன் எனக்கு உற்சாகமூட்டும் சில வார்த்தை

களையும் கூறினர். மேலும், எல்லா ஐரோப்பியர்களும் உங்கள் இனத்தவர்மீது வெறுப்புக் கொண்டிருக்கிறார்களென்று நீங்கள் கருதக்கூடாது. உங்களுடைய துன்பங்களைக் குறித்துப் பகிரங்கமாக எதுவும் சொல்லாமலேயே அனுதாபங் காட்டு பவர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதைப்பற்றி உங்களுக்குத் தெரியாதிருக்கும். ஆனால், நான் இருக்கும் நிலைமையில் அது எனக்குத் தெரியாமல் இருக்கமுடியாது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்களா?'' என்றார்.

அவர் இவ்வளவு தெளிவாக எடுத்துரைத்த பின்னர் நான் மறுபடியும் அதைப்பற்றிப் பேசியதே இல்லை. பின்னர் ஸ்ரீ டோக் ரொடீஷியாவில் தமது புனித கைங்கரியத்தில் ஈடுபட்டிருந்த சமயம், சத்தியாக்கிரகப் போராட்டம் நிற்காமல் நடந்து கொண்டிருக்கையில் மரணமடைந்தார். அந்தச் சமயத்தில் பேப்டிஸ்ட்டுகள் தங்கள் ஆலயத்தில் ஒரு கூட்டம் கூட்டி என்னையும், காலஞ் சென்ற ஸ்ரீ காச்சலியா போன்ற மற்ற இந்தியர்களையும் அதற்கு அழைத்திருந்தனர். என்னை அதில் பேசும்படியும் கேட்டுக்கொண்டனர்.*

சுமார் பத்துத் தினங்களுக்குப் பிறகு, நடமாடுவதற்கு நான் ஓரளவு பலம் பெற்றவுடன், அந்தத் தெய்விகக் குடும்பத்தினரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டேன்†. பிரிவு எனக்கும் அவர்களுக்கும் பெரும் துயரையே தந்தது.

---

* பூஜ்யர் டோக்கின் மரணத்திற்குப் பிறகு அவருக்காக நடந்த பிரார்த்தனைக் கூட்டத்திற்குக் காந்திஜி சென்றிருந்ததைப் பற்றியும், அங்கே அவர் பேசியதைக் குறித்தும் ஸ்ரீ டோக்கின் குமாரர் ஸ்ரீ ஸி. எம். டோக் எழுதியிருப்பதாவது :

''1913 ஆகஸ்டு 15-ந் தேதி ரொடீஷியாவில் காலமான என் தந்தையாரின் ஞாபகார்த்தப் பிரார்த்தனைக் கூட்டத்திற்காக டர்பனிலிருந்து காந்திஜி ஜொஹன்னஸ்பர்க்குக்கு வந்து பிளீன் தெருவிலிருந்த பேப்டிஸ்ட் சர்ச்சில் நடந்த பெருங்கூட்டத்தில் கலந்துகொண்டது எனக்கு இன்னும் நினைவிருக்கிறது. பெரும் போராட்டத்தின்போது தம் நண்பர் இந்திய சமூகத்திற்காகச் செய்த பெருந் தொண்டைப்பற்றி மிகுந்த துக்கத்துடன் அக்கூட்டத்தில் காந்திஜி பேசினர். ''பூரணமான தன்னலத் தியாகமே ஸ்ரீ டோக்கின் வாழ்க்கை. படைத்தவருக்கே சகலத்தையும் அவர் அர்ப்பணம் செய்து விட்டார். ஆண்டவனின் சேவைக்காக அவர் கீர்த்திவாய்ந்த நல்ல உடலுடன் இனி எழுவார்'' என்றார்.

† தாக்குண்டதால் ஏற்பட்ட காயங்கள் சீக்கிரத்தில் ஆருமலிருந்தபோது எவ்விதம் மண் பற்றுப் போட்டுக்கொண்டு காந்திஜி குணம் கண்டார் என்பதைக் குறித்து பூஜ்யர் டோக்கின் குமாரர் ஸ்ரீ ஸி. எம். டோக் பின்னுல் எழுதிய கட்டுரை ஒன்றில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் :

''அவருடைய காயங்கள் சீக்கிரத்தில் ஆறவில்லை. அவர் பொறுமையை இழந்துவிட்டார். சுத்தமான களிமண்ணை அடை போலத் தம் முகத்தில் பற்றுகப் போட்டால் புண் சீக்கிரத்தில் ஆறிவிடும் என்று என் தந்தையிடம் கூறினர். எனவே, மேல் மண்ணை வெட்டி எடுத்துவிட்டு, சுத்தமான அடிமண்ணைக் கொண்டுவர ஒரு மண்

## இருபத்து மூன்ருவது அத்தியாயம்

# ஐரோப்பிய ஆதரவு

போராட்டத்தில் இந்தியர்களுடைய கட்சியைத் தீவிரமாக ஆதரித்து வந்த உயர் பதவியிலிருந்த ஐரோப்பியர்களின் தொகை அதிகமானதால் இங்கே அவர்களனைவரையும் ஒருங்கே வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தி வைப்பது பொருத்தமாகும். அவ்விதம் செய்துகொண்டால் பின்னல் இந்தச் சரித்திரத்தில் அவர்கள் பெயர்கள் வரும்போது அவை வாசகர்களுக்குப் புதியனவாக இரா. நானும் அவர்களை அறிமுகப்படுத்துவதற்காக இந்த உரையை இடையிடையே நிறுத்தவேண்டிய அவசியமும் ஏற்படாது. அவர்கள் பெயரை நான் கூறிக் கொண்டு வரும் முறை, அவர்கள் அளித்த சேவையின் தன்மையைக் கொண்டோ அல்லது அவர்களைப்பற்றிப் பொது மக்களுக்குள்ள மதிப்பின்படியோ அமைந்ததன்று. நான் அந்த நண்பர்களைச் சந்தித்துப் பழகிய கால ஒழுங்கின்படியும், போராட்டத்தில் பல பகுதிகளில் அவர்கள் இந்தியர்களுக்கு உதவி செய்த சந்தர்ப்பங்களின்படியும் அவர்களைப்பற்றிச் சொல்லுகிறேன்.

முதலாவது பெயர் ஸ்ரீ ஆல்பர்ட் வெஸ்ட். போராட்டத்திற்கு முன்பிருந்தே இந்திய சமூகத்தினருடன் இவர் தொடர்பு கொண்டிருந்தார். அதற்கு முன்ளுலிருந்து என்னுடன் நட்புக் கொண்டிருந்தார். ஜொஹன்னஸ்பர்க்கில் என் காரியாலயத்தை நான் ஆரம்பித்தபோது என் மனைவி என்னுடன் இல்லை. *1903*-ஆம் வருடத்தில் தென்னுப்பிரிக்காவிலிருந்து

---

வெட்டி, கூடையுடன் நான் அனுப்பப்பட்டேன். இம்மண்ணை ஒரு காலியான இடத்தில் அப்பொழுது வெட்டி எடுத்தேன். அதே இடத்தில் ஒரு யூதர் ஆலயம் இன்று எழும்பியிருக்கிறது. மண்ணைப் பிசைந்து அடைபோல் செய்தோம். என் தாயார் அதைப் பற்ருகப் போட்டார். என்ன நடந்திருக்கிறது என்பதைக் கண்டதும் டாக்டருக்கு வந்த கோபம் இன்றும் நினைவிருக்கிறது. தம் பொறுப்பைக் கைகழுவிவிடப் போவதாகவும் டாக்டர் மிரட்டினுர். ஆனல், ஸ்ரீ காந்தி குணமடைந்து இரண்டு நாட்களில் எங்கள் வீட்டுத் தாழ்வாரத்தில் சாய்வு நாற்காலியில் உட்காரத்தொடங்கிவிட்டார். அந்த நாற்காலி இன்னும் எங்கள் வீட்டிலிருக்கிறது. 'மகாத்மா காந்தி நாற்காலி' என்றே அதை இப்பொழுதும் சொல்லி வருகிருேம்.''

இதே சம்பவத்தைப் பற்றிக் கூறும் இவருடைய சகோதரி ஆலிவ் டோக், இந்த வைத்தியத்தைத் தாம் மறக்கவே இல்லை என்றும், மத்திய ஆப்பிரிக்காவில் அதைத் தாம் கையாண்டு பலருடைய உயிரைக் காப்பாற்றியிருப்பதாகவும் கூறுகிருர்.

எனக்குத் தந்தி வந்ததும், நான் திடீரென்று, ஓர் ஆண்டிற்குள் திரும்பிவிடலாம் என்ற நம்பிக்கையுடன் இந்தியாவை விட்டுக் கிளம்பியது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். ஜொஹன்னஸ்பர்க்கில் நான் காலையும் மாலையும் தவருமல் சைவச் சாப்பாட்டு விடுதிக்குச் சென்று சாப்பிட்டு வந்தேன். அங்கே ஸ்ரீ வெஸ்ட்டும் அடிக்கடி வருவது வழக்கம். ஆகவே அதனுல் எங்களுக்குள் பழக்கம் ஏற்பட்டது. அப்போது அவர் மற்ரெரு ஐரோப்பியருடன் கூட்டாக ஓர் அச்சுக்கூடத்தை நடத்தி வந்தார். *1904*-இல் ஜொஹன்னஸ்பர்க்கிலிருந்த இந்தியர்களிடையே ஒரு பயங்கரமான பிளேக் நோய் பரவியது. நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதில் நான் முழுவதும் ஈடுபட்டிருந்தபடியால், சாப்பாட்டு விடுதிக்கு நான் ஒழுங்காகப் போக முடிவதில்லை. அப்படி நான் சென்றபோதிலும் மற்றவர்கள் அங்கே வருவதற்கு முன்னரே போய்விட்டுத் திரும்பிவிடுவேன். என்னை அணுகும் ஆபத்து மற்றவர்களுக்கு நேராமல் இருப்பதற்காகவே அவ்வாறு செய்து வந்தேன். ஸ்ரீ வெஸ்ட், நோயாளிகளை நான் பராமரித்து வருவதைக் குறித்துப் பத்திரிகைகளில் படித்திருந்தார். இரண்டு நாட்கள் தொடர்ந்து என்னை அங்கே காணுதபடியால் அவர் மிகக் கவலையுற்ருர். மூன்ரும் நாள் காலை ஆறு மணிக்கு நான் வெளியே போகத் தயாராகுமுன்னமே ஸ்ரீ வெஸ்ட் வந்து கதவைத் தட்டினுர். கதவைத் திறந்தபோது மலர்ந்த முகத்துடன் அவர் நிற்பதைக் கண்டேன்.

"உங்களைக் காண நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். உங்களை உணவு விடுதியில் காணுது போகவே கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். நான் உங்களுக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமா என்பதைச் சொல்லுங்கள்'' என்ருர்.

''நோயாளிகளுக்கு நீங்கள் பணிவிடை செய்ய முடியுமா?'' என்று நான் விளையாட்டாகக் கேட்டேன்.

''ஏன் முடியாது? நான் தயார்'' என்ருர்.

அதற்குள் நான் என் திட்டங்களை யோசனை செய்து கொண்டு, ''உங்களிடமிருந்து வேறு எந்தப் பதிலையும் நான் எதிர்பார்த்திருக்க முடியாது. ஆனுல், ஏற்கனவே நோயாளிகளுக்குப் பணி செய்யப் பலர் இருக்கிருர்கள். மேலும், நான் அதைவிடக் கடினமான வேலை உங்களுக்குத் தர நினைக்கிறேன். மதன்ஜித், இங்கே பிளேக் நிவாரண வேலையில் இருக்கின்ற

படியால் 'இந்தியன் ஒப்பினியன்' அச்சுக்கூடத்தைக் கவனிப்பதற்கு ஒருவருமில்லை. நீங்கள் டர்பனுக்குச் சென்று, அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டால், அது உண்மையாகவே பெரிய உதவியாக இருக்கும். ஆனால், நான் அதற்காகத் தங்களுக்குப் பெரிய ஊதியம் எதுவும் தர முடியாது. மாதம் பத்து பவுனும், லாபம் ஏதாவது கிடைத்தால் அதில் பாதியுமே என்னால் கொடுக்க முடியும்'' என்று சொன்னேன்.

“அது கொஞ்சம் கடினமான வேலைதான். அதற்கு என் கூட்டாளியின் அனுமதியைக் கேட்கவேண்டும். அதோடு வசூலிக்க வேண்டிய கடன்கள் சில உண்டு. ஆயினும் பாதகமில்லை. என்னுடைய முடிவான பதிலுக்காக மாலை வரை தாங்கள் பொறுப்பீர்களா?'' என்றார்.

''ஆம், ஆறு மணிக்குப் பூங்காவில் சந்திப்போம்'' என்றேன். அப்படியே சந்தித்தோம். ஸ்ரீ வெஸ்ட், தமது கூட்டாளியின் அனுமதியைப் பெற்றார். கடன்களை வசூல் செய்யும் வேலையை என்னிடம் விட்டுவிட்டு அடுத்த நாள் மாலை ரெயிலில் டர்பனுக்குப் புறப்பட்டு விட்டார். ஒரு மாதத்திற்குள் அவரிடமிருந்து வந்த செய்தியில், அச்சகம் லாபகரமானதாக இல்லாததுடன் உண்மையில் நஷ்டம் அடைந்து வரும் வியாபாரமாக இருப்பதாகவும் கண்டிருந்தது. வசூலாக வேண்டிய பாக்கி அதிகமாக இருந்தது. கணக்குப் புத்தகங்களும் சரியாக வைக்கப்படவில்லை. சந்தாதாரர்களின் பெயர் விலாசம் பற்றிய ஜாபிதா கூடச் சரியாக இல்லை. மற்றவைகளிலும் நிர்வாகம் ஒழுங்காக இல்லை. இவற்றை யெல்லாம் குறை கூறுவதற்காக ஸ்ரீ வெஸ்ட் எழுதவில்லை. தாம் லாபத்தைக் கருதாதபடியால், எடுத்த காரியத்தைக் கைவிடப்போவதில்லை என்று உறுதி கூறியதுடன், பத்திரிகைப் பிரசுரத்திற்குச் செலவாகும் பணத்தை அதன் விற்பனையிலிருந்தே சம்பாதித்துக்கொள்ள நீண்ட காலம் ஆகும் என்றும் தெளிவாக எனக்குப் புரியவைத்தார்.

ஸ்ரீ மதன்ஜித், ஜொஹன்னஸ்பர்க்கில் பத்திரிகைக்குச் சந்தாதாரர்களைச் சேர்க்கும் பொருட்டும், அச்சக நிர்வாகத்தைப் பற்றி என்னுடன் கலந்து பேச நினைத்தும் வந்திருந்தார். ஒவ்வொரு மாதமும் பெரிய நஷ்டத்தை நான் ஈடு செய்ய வேண்டியிருந்தபடியால் அதில் நான் இன்னும் எவ்வளவு நஷ்டப்பட வேண்டியிருக்கும் என்பதை ஓரளவுக்குத் திட்டமாக அறிய விரும்பினேன். மதன்ஜித்திற்கு அச்சுத் தொழில் எந்த விதமான

அனுபவமும் இல்லாதபடியால், அனுபவம் வாய்ந்த ஒருவரை அவருடன் சேர்த்துவிடுவது நலமென நான் தொடக்கத்தி லிருந்தே எண்ணி வந்தேன். அதற்குள் பிளேக் தொற்று நோய் பரவவே, மதன்ஜித் அந்த நெருக்கடியைச் சமாளிக்கத் தகுந்தவ ராகையால் நோயாளிகளைக் கவனிக்கும் வேலையைத் தந்தேன். ஸ்ரீ வெஸ்ட்டுடைய எதிர்பாராத உதவியை ஏற்று, அவர் தாற் காலிகமாகத் தொற்று நோய் நிற்குமட்டுமன்று, அவர் அங்கே போய் எப்பொழுதுமே இருக்க வேண்டுமெனக் கூறினேன். அத ஞல்தான் பத்திரிகையின் எதிர்காலத்தைப்பற்றி மேலே குறிப் பிட்ட அறிக்கையை அவர் அனுப்ப வேண்டியதாயிற்று.

கடைசியாகப் பத்திரிகையும் அச்சகமும் எப்படி போனிக் ஸுக்குக் கொண்டு போகப்பட்டு, ஸ்ரீ வெஸ்ட்டுக்கு பத்து பவுனுக்குப் பதிலாக முப்பது பவுன் மாதப் படி கொடுக்கப் பட்டது என்பதை வாசகர்கள் அறிவார்கள். இந்த மாறுதல்கள் அனைத்தையும் ஸ்ரீ வெஸ்ட் முழுதும் ஒப்புக்கொண்டார். தமக் காகும் செலவுகளைச் சமாளிக்கக் கொஞ்சம்கூட அவர் கவலைப் பட்டதை நான் கண்டதே இல்லை. சமய ஆராய்ச்சியில் தீவிரம் இல்லாதவராயினும், அவரிடம் ஆழ்ந்ததோர் தார்மிக உணர்வு இருப்பதைக் கண்டேன். அவர் முற்றிலும் சுயேச்சையான இயல்பினர். பல விஷயங்களைப்பற்றியும் தாம் நினைத்ததை அப்படியே சொல்லுவதற்கும், கண்டதைக் கண்டவாறு எடுத் துரைப்பதற்கும் அவர் தயங்கமாட்டார். மிகவும் எளிய பழக் கங்கள் உள்ளவர். நாங்கள் முதலில் சந்தித்தபோது அவருக்கு மணமாகவில்லை. மிகவும் தூய வாழ்க்கை நடத்தி வந்தார் என்பதை நான் அறிவேன். சில ஆண்டுகளுக்குப் பின்னர் தம் பெற்ருேரைக் காண இங்கிலாந்துக்குச் சென்றபோது மணம் செய்துகொண்டு திரும்பினர். என் ஆலோசனைப்படியே தம் முடன் தம் மனைவியையும், மாமியாரையும், மணமாகாத சகோதரியையும் அழைத்துவந்தார். அவர்கள் அனைவரும் மிக எளிய முறையில் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். போனிக்ஸிலிருந்த இந்தியர்களுடன் எல்லா விதத்திலும் சகோதர அன்புடன் பழகினர்கள். கன்னி ஆடா வெஸ்ட்டுக்கு (தேவிபகின் என்று அவரை நாங்கள் அழைத்து வந்தோம்) அப்போது முப்பத்தைந்து வயது. இன்னும் மணமாகவில்லை. தெய்வ பக்தியுடன் வாழ்க்கையை நடத்திவருகிருர். போனிக் ஸில் முதன் முதல் வந்தவர்களுக்கு அவரும் மிக உயர்ந்த பணியாற்றி வந்திருக்கிருர். சிறு குழந்தைகளைப் பார்த்துக்



1910 இல் டால்ஸ்டாய் பண்ணையில் காந்திஜியும் கால்லென்பாக்கும், இப்பண்ணையில் முதன்முதலில் குடியேறியவர்களும்.



போனிக்ஸ் குடியிருப்பில் காந்திஜியும் அவருடைய சகாக்களும்.

கொள்ளுவது, அவர்களுக்கு ஆங்கிலம் கற்றுத் தருவது, பொதுச் சமையலறையில் சமைப்பது, வீடுகளைச் சுத்தம் செய்வது, வரவு செலவுக் கணக்கைக் குறித்து வைப்பது, அச்சகத்தில் எழுத்துக் கோப்பது ஆகிய பல வேலைகளை அவ்வப்பொழுது செய்து உதவினார். தமக்கு வரும் வேலை எதுவாக இருந்தாலும் அதைச் செய்வதற்கு அவர் தயங்கியதே கிடையாது. அவர் இப்போது போனிக்ஸில் இல்லை. அதற்குக் காரணம், நான் இந்தியா விற்குத் திரும்பியதிலிருந்து அவருடைய மிகக் குறைவான செலவுக்குக்கூட அச்சகத்தார் பணம் கொடுக்க முடியாமற் போய்விட்டதுதான். ஸ்ரீ வெஸ்ட்டின் மாமியாருக்கு அப்போது வயது எண்பதுக்கு மேல் இருக்கும். அவர்களுக்குத் தையல் வேலையில் திறமை அதிகம் உண்டு. அதைக்கொண்டு தையல் வேலை செய்து போனிக்ஸ்-குடியிருப்பு இந்தியருக்கு அவர் உதவி செய்தார். போனிக்ஸில் எல்லோரும் அவரைப் 'பாட்டி' என்று அன்புடன் அழைத்து, அவரைத் தங்களுக்கு உண்மையி லேயே உறவினராகவும் கருதினார்கள். ஸ்ரீமதி வெஸ்ட்டைப்பற்றி நான் எதுவும் சொல்லத் தேவையில்லை. ஒரு முறை போனிக்ஸ் குடியிருப்பைச் சேர்ந்த பலர் சிறையில் இருந்தபோது வெஸ்ட் குடும்பத்தினர், மகன்லால் காந்தியுடன் சேர்ந்து, அந்த ஸ்தாப னத்தின் நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் எடுத்துக் கொண் டனர். அச்சகத்தையும், பத்திரிகையையும் ஸ்ரீ வெஸ்ட் கவ னித்து வந்ததுடன், நானும் மற்றவர்களும் இல்லாத சமயத்தில், டர்பனிலிருந்து கோகலேக்கு அனுப்ப வேண்டிய தந்திகளையும் அனுப்பி வந்தார். ஸ்ரீ வெஸ்ட்டும் கைது செய்யப்பட்டபோது, கோகலே மிகவும் பதறிப்போய் (ஆனால், அவர் உடனே விடுதலை ஆனார்) ஸ்ரீ ஆண்ட்ரூஸையும், பியர்ஸனையும் அனுப்பி வைத்தார்.

அடுத்தபடியாக ஸ்ரீ ரிட்ச் என்பவரைப் பார்ப்போம். அவ ரைப்பற்றி நான் முன்பே எழுதியிருக்கிறேன். போராட்டத் திற்கு முன்பு அவர் என் காரியாலயத்தில் சேர்ந்தார். பிறகு என் பணி கிடைக்காதபோது எனக்குப் பதிலாக இருந்து தொழிலை நடத்துவதற்காகச் சட்டம் பயில இங்கிலாந்து சென்றார். லண்ட னில் இருந்த தென்னாப்பிரிக்க பிரிட்டிஷ் இந்தியக் கமிட்டியை நடத்தும் முக்கிய கர்த்தாவாக அவர் விளங்கினார்.

மூன்றாவதானவர் ஸ்ரீ போலக். ஸ்ரீ வெஸ்ட் என்பவரைப் போலவே இவரது நட்பும் எனக்குச் சாப்பாட்டு விடுதியில் எதிர் பாராதவிதமாகக் கிடைத்தது. அவரைப் போலவே இவரும் 'டிரான்ஸ்வால் கிரிட்டிக்' என்ற பத்திரிகையின் உதவி ஆசிரியர்

பதவியை விட்டுவிட்டு, 'இந்தியன் ஒப்பினிய'னில் சேர்ந்தார். அவர் போராட்டம் சம்பந்தமாக எங்ஙனம் இந்தியாவிற்கும் இங்கிலாந்துக்கும் போக வேண்டியிருந்தது என்பது எல்லோருக்கும் தெரியும். ஸ்ரீ ரிட்ச் இங்கிலாந்துக்குச் சென்றபோது ஸ்ரீ போலக்கைப் போனிக்ஸிலிருந்து ஜோஹன்னஸ்பர்க்குக்கு வருமாறு நான் அழைத்தேன். ஆரம்பத்தில் அவர் என்னிடம் வேலை பயின்று, பிறகு முழுத் தகுதி பெற்ற வக்கீலானர். அதன் பிறகு மணம் செய்துகொண்டார். ஸ்ரீமதி போலக்கை இந்தியாவில் இருப்பவர்கள் நன்கு அறிவார்கள். அவர் தம் கணவரது வழியில் ஒருபோதும் குறுக்கிடாமல் இருந்ததுடன், போராட்டத்தில் அவருக்கு முழுத் துணையாகவும் இருந்தார். அவர்கள் இருவரும் ஒத்துழையாமை இயக்க விஷயத்தில் எங்களுடன் ஒத்துப்போகவில்லை. எனினும், இந்தியாவுக்குத் தங்களால் இயன்ற சிறந்த சேவையை இன்னும் செய்துகொண்டு வருகிறார்கள்.

அடுத்தபடியாக ஸ்ரீ ஹெர்மன் காலன்பாக்* என்பவரைச் சொல்லவேண்டும். அவரையும் போராட்டத்திற்கு முன்பே எனக்குத் தெரியும். அவர் ஒரு ஜெர்மானியர். மகாயுத்தம் வராதிருந்தால் அவர் இப்போது இந்தியாவில் இருந்திருப்பார். ஆழ்ந்த உணர்ச்சிகளும், பரந்த அனுதாபங்களும், குழந்தையைப் போன்ற எளிமையும் வாய்ந்தவர். அவர் கட்டடச் சிற்பத்தைத் தொழிலாகக் கொண்டவர். எனினும், எந்த வேலையையும், அது எவ்வளவு இழிவாக இருப்பினும் தமது கௌரவத்திற்குக் குறைவானதெனக் கருதாதவர். ஜோஹன்னஸ்பர்க்கிலிருந்த என் குடித்தனத்தை எடுத்துவிட்ட பிறகு நான் அவருடன் தங்கியிருந்தேன். ஆனல், வீட்டுக்காகும் செலவில் என் பங்கைக் கொடுக்க நான் விரும்பினல் அவர் மிகவும் வருந்துவார். அத்துடன் அவரது வீட்டுச் செலவு அதிகமாகக் குறைவதற்கு நான் காரணமாக இருந்ததாகவும் சொல்லுவார். அதுவும் உண்மையே. ஆனல், எனக்கும் ஐரோப்பிய நண்பர்களுக்குமிடையே இருந்த சொந்தத் தொடர்புகளைப்பற்றி விவரிக்க இது இடமில்லை.

* உலகமே கைவிட்டாலும் தான் மாத்திரம் காந்திஜியை என்றுமே விட்டுப் பிரிவதில்லை என்ற திடமான பிரதிக்ஞைகொண்டு தென்னுப்பிரிக்காவில் மகாத்மாவுடன் இருந்து பணியாற்றிய ஜெர்மன் யூதர் ஹெர்மன் காலன்பாக், இந்தியாவுக்கு வந்து தாமும் மகாத்மாவுடன் ஒரு குடும்பம்போல வாழவேண்டும் என அதிக ஆர்வம் கொண்டிருந்தார். 1944–இல் மகாத்மா நோயுற்றிருந்த காலத்தில்கூட அவருக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருந்த காலன்பாக் சில மாதங்களில் இறந்துவிட்டார்.

ஜொஹன்னஸ்பர்க்கிலிருந்த சத்தியாக்கிரகக் கைதிகளின் குடும்பங்களை ஒரே இடத்தில் குடிவைக்க நாங்கள் தீர்மானித்தபோது, கால்லன்பாக் தம்முடைய பெரிய பண்ணையை வாடகை இல்லாமல் கொடுத்தார். அதைப்பற்றிப் பின்னர் கவனிப்போம். கோகலே ஜொஹன்னஸ்பர்க்குக்கு வந்த போது அவர் தங்குவதற்காக ஸ்ரீ கால்லன்பாக்கின் வீட்டில்தான் சமூகத்தினர் ஏற்பாடு செய்திருந்தனர். இதனை அப்பெரியாரும் விரும்பினார். கோகலேயை வழியனுப்புவதற்கு ஜான்ஜிபார்* வரையில் கால்லன்பாக் என்னுடன் வந்தார். போலக்குடன் இவரும் கைது செய்யப்பட்டுச் சிறைத் தண்டனையையும் அனுபவித்தார். கடைசியாக கோகலேயைக் காண்பதற்காக நான் இங்கிலாந்து சென்றபோது, கால்லன்பாக்கும் என்னுடன் இருந்தார். ஆனால், நான் இந்தியா திரும்பியபோது, யுத்தத்தின் காரணமாக என்னுடன் இந்தியாவுக்கு வர அவருக்கு அனுமதி கிடைக்கவில்லை. மற்ற எல்லா ஜெர்மானியர்களையும் போலவே இவரும் இங்கிலாந்தில் சிறை வைக்கப்பட்டார். யுத்தம் முடிந்தவுடன் இவர் ஜொஹன்னஸ்பர்க்குக்குத் திரும்பி, மீண்டும் தம் தொழிலை ஆரம்பித்தார்.

கன்னி ஸோஞ்சா ஷிலெஸின் என்ற பெயருடைய பெருந்தன்மைவாய்ந்த பெண்மணியை இப்போது நான் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். அவருடைய குணத்தைப் பற்றி ஸ்ரீ கோகலே கூறிய கருத்தை நான் இங்கே குறிப்பிடாமல் இருக்கமுடியாது. அவர், மனிதருடைய குணங்களை மதிப்பிடுவதில் அற்புதமான ஆற்றல் மிக்கவர். நான் அவருடன், டெலகோவா விரிகுடாவிலிருந்து ஜான்ஜிபார் வரையில் சென்ற கப்பல் பிரயாணத்தின்போது அமைதியாகப் பேசப் பல வாய்ப்புக்கள் கிடைத்தன. கோகலே தென்னாப்பிரிக்காவிலிருந்த இந்திய, ஐரோப்பியத் தலைவர்களுடன் பழகியிருந்தார். அச்சமயம் முக்கியஸ்தர்களாக இருந்தவர்களின் பண்புகளைப் பற்றி அவர் நுணுக்கமாக ஆராய்ந்து பேசி வந்தபோது, கன்னி ஷிலெஸினுக்கு மற்றவர்களைவிட முக்கிய ஸ்தானம் அளித்துப் பேசியது எனக்கு நன்றாக ஞாபகத்திற்கு வருகிறது. "கன்னி ஷிலெஸினிடம் நான் கண்ட தூய்மையையும், ஒரே

* ஜான்ஜிபார்-கிழக்கு ஆப்பிரிக்காவிற்கருகிலுள்ள ஒரு தீவு. கப்பல் துறைமுகம். அடிக்கடி பூகம்பங்களால் சேதம் அடைந்திருக்கிறது. கிராம்பு, தேங்காய் கொப்பரை அங்கே உண்டாகும் பொருள்கள். 222 சதுர மைல் பரப்புடையது. 1951-இல் இதன் ஜனத்தொகை 37,870.

உறுதியான கடமை யுணர்ச்சியையும், பெருந் திடசித்தத்தையும் வேறு யாரிடமும் காண்பதரிது. கைம்மாறு எதுவும் கருதாமல் அவர் இந்தியருக்காக அனைத்தையும் தியாகம் செய்தது கண்டு நான் திகைத்துப் போனேன். இந்தப் பண்புகள் எல்லாவற்றுடன் அவருடைய மகத்தான திறமையையும் சக்தியையும் சேர்த்துப் பார்க்கும்போது அவரை உங்களுடைய இயக்கத்திற்கு ஒரு விலைமதிக்கவொண்ணுத செல்வமென்றே சொல்ல வேண்டும். நீங்கள் அவரை மிகவும் போற்றி அன்புடன் வைத்துக்கொள்ளவேண்டுமென்று நான் சொல்லத் தேவையில்லையெனினும் அதைச் சொல்லுகிறேன்'' என்ருர் கோகலே. என்னுடன் கன்னி டிக் என்ற ஸ்காட்லாந்து பெண்மணி ஒருவர் சுருக்கெழுத்தினராக வேலை செய்யவந்தார். தூய்மைக்கும் நம்பகத்திற்கும் சிறந்த எடுத்துக்காட்டாக இருந்தார் அவர். என் வாழ்க்கையில் எத்தனையோ கசப்பான அனுபவங்களைக் கண்டிருந்த போதிலும், உயர்ந்த குணமும் சீலமும் வாய்ந்த பல இந்தியர்களும், ஐரோப்பியர்களும் எனக்கு நண்பர்களாக வாய்த்தது என் பாக்கியமாகும். மணமானதும் கன்னி டிக், என்னை விட்டுப் பிரிந்து போய்விட்டார். அப்போது ஸ்ரீ கால்லன்பாக், என்னிடம் கன்னி ஷிலெஸினை அறிமுகப்படுத்தி, ''இந்தப் பெண்ணின் தாய் இவளை என்னிடம் ஒப்படைத்திருக்கிருர். இவள் உண்மையும், புத்திக் கூர்மையும் வாய்ந்தவள். எனினும், குறும்பும் துறுதுறுப்பும், பதற்றமும் உள்ளவள். சில சமயங்களில் மரியாதைக் குறைவாகவும் நடந்துகொண்டு விடுவாள். உங்களால் இவளை வைத்துச் சமாளிக்க முடியுமானுல் வைத்துக்கொள்ளுங்கள். வெறும் சம்பளத்திற்காக மட்டும் நான் இவளை உங்களிடம் விட்டுப் போகவில்லை'' என்று சொன்னுர். நான் ஒரு நல்ல சுருக்கெழுத்தாளருக்கு மாதம் 20 பவுன் வரை சம்பளம் கொடுக்கத் தயாராக இருந்தேன். ஆனுல், கன்னி ஷிலெஸினின் திறமையைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. ஸ்ரீ கால்லன்பாக் அவருக்கு முதலில் மாதம் 6 பவுன் தந்தால் போதுமென்று சொன்னுர். நானும் ஒப்புக்கொண்டேன். கன்னி ஷிலெஸினும் விரைவில் தன் குறும்பு அம்சங்களை என்னிடம் காட்ட ஆரம்பித்தார். ஆனுல், ஒரு மாதத்திற்குள் என் உள்ளத்தை வென்றுவிட்டார். அவர் எந்த நேரமாயினும், இரவு பகல் என்று பாராமல் உழைக்கத் தயாராக இருந்தார்.

கடுமையானது அல்லது செய்ய முடியாதது என்று அவருக்கு எதுவுமே கிடையாது. அப்போது அவருக்கு வயது

பதினறுதான். எனினும், என் கட்சிக்காரர்கள், என்னுடன் உழைத்து வந்த சத்தியாக்கிரகிகள் அனைவர் மனத்தையும் தன்னுடைய சூது வாதற்ற தன்மையினுலும், சேவை செய்ய வேண்டுமென்ற ஆர்வத்தினுலும் கவர்ந்துவிட்டார். இந்த இளம் பெண், விரைவில் எனது காரியாலயத்தில் மட்டுமே யல்லாமல் இயக்கம் முழுவதற்குமே நன்னடத்தை நிலவுவதற்கு உத்தரவாதியாகவும் காவலாளியாகவும் விளங்கினர். நாங்கள் நினைத்திருந்த ஏதாவது ஒரு வழியின் நியாயத்தையும் நேர்மையையும்பற்றி அவருக்குச் சந்தேகம் வரும்போதெல்லாம் என்னுடன் தாராளமாகத் தருக்கம் செய்வார் ; அதைப்பற்றித் தனக்குப் பூரணமாக நம்பிக்கை வரும் வரையில் சும்மா இருக்கமாட்டார். சேட் காச்சலியாவைத் தவிர, மற்ற எல்லாத் தலைவர்களும் சிறையில் இருந்தபொழுது கன்னி ஷிலெஸினுடைய பொறுப்பில் ஏராளமான பணமும் கணக்குகளும் இருந்தன. பலதரப்பட்ட மனப்போக்குடைய ஊழியர்களை வைத்து நடத்த வேண்டிய பொறுப்பும் அவருக்கு இருந்தது. அந்தச் சமயத்தில் சேட் காச்சலியாகூட அவருடைய உதவியை நாடி அவர் ஆலோசனையைக் கேட்பதுண்டு. அப்போது ஸ்ரீ டோக் பொறுப்பில், ‘இந்தியன் ஒப்பினியன்’ இருந்தது. பழுத்த திறமைவாய்ந்த அந்த நிபுணர்கூட ‘இந்தியன் ஒப்பினிய’னுக்காகத் தாம் எழுதும் கட்டுரைகளை இப்பெண் பார்த்த பிறகே அனுப்பச் சொல்லுவார். அவர் ஒரு முறை என்னிடம், ‘‘கன்னி ஷிலெஸின் அங்கில்லாமலிருந்தால் என் வேலையைப் பற்றி எனக்கே திருப்தி ஏற்பட்டிருக்க முடியாது. அவர் செய்த உதவியின் மதிப்பை நான் எவ்வளவு பாராட்டினுலும் போதாது. பல தடவைகளில் அவர் எடுத்துக்காட்டிய திருத்தங்களையும், சேர்க்கைகளையும் அவை தகுதியானவை என்று உணர்ந்து ஏற்றுக் கொண்டிருக்கிறேன்’’ என்று சொன்னர். பட்டாணியரும், படேல்களும், முன்னல் ஒப்பந்தக் கூலிகளாக இருந்தவர்களும், இந்தியர்களில் எல்லா வகுப்பினரும், வயதினரும், அவரைச் சூழ்ந்து கொண்டு அவர் புத்திமதியை நாடி அவர் யோசனையைப் பின்பற்றினர். தென்னுப்பிரிக்காவில் இருந்த ஐரோப்பியர்கள் பொதுவாக, இந்தியர்கள் இருந்த ரெயில் பெட்டிகளில் பயணம் செய்வதில்லை. டிரான்ஸ்வாலிலோ அப்படிச் செய்வதற்கு தடையும் விதிக்கப்பட்டிருந்தது. ஆயினும், கன்னி ஷிலெஸின் வேண்டுமென்றே மற்றச் சத்தியாக்கிரகிகளைப் போல் இந்தியர்களுக்காக இருந்த மூன்ருவது வகுப்புப் பெட்டியில் உட்கார்ந்து கொண்டு, அதில் குறுக்கிடும் ரெயில்வே அதிகாரிகளை எதிர்ப்ப

தும் உண்டு. கன்னி ஷிலெஸின் ஒரு நாள் கைது செய்யப்படுவார் என்று நான் பயந்தேன். அவரும் அதை எதிர்பார்த்தார். அவருடைய திறமையும், சத்தியாக்கிரகிகளுடன் அவருக்கிருந்த செல்வாக்கும், இயக்கத்தின் நுட்பங்களைப்பற்றி அவர் நன்ருக அறிந்திருந்ததும் டிரான்ஸ்வால் சர்க்காருக்குத் தெரிந்தன. ஆயினும் அவரைக் கைது செய்வதில்லை என்ற கொள்கையையும், ஒரு பெண்ணுக்குத் தரும் மரியாதையையும் அனுசரித்துக் கைது செய்யாமல் இருந்துவிட்டனர். கன்னி ஷிலெஸின் தனது மாத ஊதியமாகிய ஆறு பவுனை அதிகமாக்கும்படி கேட்கவோ, விரும்பவோ இல்லை. அவருடைய தேவைகளில் சில எனக்குத் தெரிய வந்தபோது நானே அவருக்குப் பத்து பவுன் தர ஆரம்பித்தேன். அதையும் அவர் மிகவும் தயக்கத்துடன் ஏற்றுக்கொண்டு அதற்கு மேற்கொண்டு எதுவும் வேண்டாம் என மறுத்துவிட்டார். "எனக்கு அதிகம் வேண்டியதில்லை. என் தேவைக்கு வேண்டியதற்கு அதிகமாக நான் எதையாவது எடுத்துக்கொண்டால், உங்களிடம் இருக்கும் எந்தக் கொள்கை என்னைக் கவர்ந்ததோ அந்தக் கொள்கைக்கே நான் துரோகம் செய்வதாகும்" என்று சொல்லி என் வாயை அடைத்துவிட்டார். கன்னி ஷிலெஸின் எதுவரை படித்திருந்தார் என்று வாசகர்கள் ஒருவேளை கேட்கலாம். அவர் கேப் சர்வகலாசாலையில் இண்டர்மீடியட் பரீட்சையில் தேறியிருந்தார். சுருக்கெழுத்து முதலியவற்றில் டிப்ளோமாவும் முதல் வகுப்பில் பெற்றிருந்தார். போராட்டம் முடிந்ததும் பல்கலைக்கழகப் பட்டம் பெற்று இப்பொழுது டிரான்ஸ்வாலில் சர்க்கார் பெண்கள் பள்ளி ஒன்றில் தலைமை ஆசிரியை பதவி வகித்துக்கொண்டிருக்கிருர்.*

---

* காந்திஜியிடம் அதிக பக்தியுள்ள காரியதரிசியாகத் தென்னுப்பிரிக்காவிலிருந்த கன்னி ஷிலெஸின், 1942-இல் சிறைப்பட்ட மகாத்மா, நோயுடன் 1944-இல் விடுதலையாகிய பிறகு அவருக்கு எழுதியிருந்த கடிதத்தைக் குறித்து ஸ்ரீ பியாரிலால் "மகாத்மா காந்தி-கடைசிக் கட்டம்" என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிருர். அம்மாது காந்திஜிக்கு எழுதியதாவது: "நீங்கள் கஷ்டப்படுவதற்காக வருந்துகிறேனெனினும் நீங்கள் நோயுற்றிருந்ததற்காக நான் அதிகக் கவலையை அடைந்துவிடவில்லை. ஏனெனில், இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்னுல் நீங்கள் பிரிந்துவிடமாட்டீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. உண்மையிலேயே நீங்கள் மாத்திரம் விரும்புவீர்களானுல் உங்களுக்கு 125 வயதாகும் வரையில் நீங்கள் வாழ்வீர்கள் என்பதில் எனக்குச் சிறிதளவும் சந்தேகமே இல்லை."

பிறகு சான்பிரான்சிஸ்கோ சமாதான மகாநாட்டில் காந்திஜியைச் சந்தித்து அங்கிருந்து அவருடனேயே தானும் இந்தியாவுக்கு வரலாம் என்று எதிர்பார்த்துக்கொண்டு இருப்பதாகவும் அப் பெண்மணி எழுதினுர். "சமாதான மகாநாட்டுக்குத் தங்களுடன் வர, காரியதரிசிகள் போதவில்லையென்ருல் போகும் வழியில் இப்படியே வாருங்கள், நானும் உடன் வருகிறேன்" என்றும் எழுதினுர்.

ஹெர்பர்ட் கிட்சின் என்பவர், பளிங்குபோல் மாசற்ற உள்ளம் வாய்ந்த ஓர் ஆங்கிலேய மின்சார நிபுணர். அவர் போயர் போரின்போது எங்களுடன் வேலை செய்துகொண்டிருந்தார். சிறிது காலம், 'இந்தியன் ஒப்பினியன்' ஆசிரியராகவும் இருந்தார். அவர், வாழ்க்கை முழுவதும் பிரம்மசாரியாகவே இருந்தார்.

நான் இதுவரையிலும் குறிப்பிட்டு வந்துள்ளவர்கள் என்னுடன் நெருங்கிப் பழகியவர்கள். அவர்களை டிரான்ஸ்வாலிலுள்ள ஐரோப்பியப் பிரமுகர்கள் என்று சொல்லிவிட முடியாது. எனினும், அந்த ஐரோப்பிய வகுப்பினரும் எங்களுக்கு அதிக உதவியாக இருந்தனர். அவர்களில் மிகவும் செல்வாக்கு வாய்ந்தவர் ஸ்ரீ ஹோஸ்கன் என்பவர். அவர் தென்னுப்பிரிக்காவில் வர்த்தகக் குழுக்களின் முன்னுள் தலைவராகவும், டிரான்ஸ்வால் சட்டசபையின் அங்கத்தினராகவும் இருந்தார். அவரைப்பற்றி வாசகர்களுக்கு ஏற்கனவே அறிமுகமாகியிருக்கிறது; அவர் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு ஆதரவு காட்டிய ஐரோப்பியர்கள் கமிட்டியின் தலைவராகவும் இருந்தார். போராட்டத்தின் மும்முர நிலையில், சத்தியாக்கிரகிகளுக்கும் சர்க்காருக்கும் இடையே தொடர்பு கொள்ளுவதற்கே இடம் இல்லாதிருந்தது. அதற்குக் காரணம், சத்தியாக்கிரகிகள் நேர்முகமாகச் சர்க்காருடன் தொடர்புகொள்ளும் கொள்கையை ஆட்சேபித்தார்கள் என்பது அல்ல. தன்னுடைய சட்டங்களை மீறுகிறவர்களிடம் சர்க்கார் இயற்கையாகவே கலந்தாலோசிக்காது என்பதனுலேயே சர்க்காருடன் நேரடித் தொடர்பு இல்லாது போயிற்று. அந்தச் சமயத்தில் இந்தக் கமிட்டி, இந்தியருக்கும் சர்க்காருக்கும் மத்தியஸ்தம் செய்வதாக அமைந்தது.

---

இதற்குப் பதிலளித்த மகாத்மா, "நான் தென்னுப்பிரிக்காவுக்கு வருவதற்கோ, அமெரிக்கா போவதற்கோ எவ்விதச் சந்தர்ப்பமும் இருப்பதாக நினைக்கவில்லை. ஆனுல், நான் வந்தாலும் வராவிட்டாலும் ஒரு நாள் நீங்கள் இங்கே வந்து உங்கள் மீத நாட்களை இந்தியாவில் கழிப்பீர்கள் என எதிர்பார்க்கிறேன்" என்று எழுதினுர். அடுத்த கடிதத்தில், "நீங்களும் நானுமில்லாமலேயே சான்பிரான்சிஸ்கோ சமாளித்துக் கொண்டது என்பதைக் கண்டிருப்பீர்கள். ஆனுல், நீங்கள் ஒரு நாள் இங்கே வருவீர்கள் என நினைக்கிறேன். 125 வருடங்களைப் பற்றிய கதையை எழுதலாம் என நம்பியிருக்கிறேன். நான் அதை எழுதும்வரை பொறுமையாக இருங்கள்" என்றும் மகாத்மா எழுதினுர். இதற்குப் பதிலளித்த அப்பெண்மணி, "அந்தப் பதிப்பின் ஒரு பகுதியையாவது தொகுக்கும் உதவியாசிரியர் பணிசெய்யும் பாக்கியம் எனக்குக் கிட்டும் என்றே நம்புகிறேன்" என எழுதினுர். ஆனுல், அவர் மகாத்மாவின் வாழ்நாளில் இந்தியாவுக்கு வரவேயில்லை.

தும் உண்டு. கன்னி ஷிலெஸின் ஒரு நாள் கைது செய்யப்படுவார் என்று நான் பயந்தேன். அவரும் அதை எதிர்பார்த்தார். அவருடைய திறமையும், சத்தியாக்கிரகிகளுடன் அவருக்கிருந்த செல்வாக்கும், இயக்கத்தின் நுட்பங்களைப்பற்றி அவர் நன்ருக அறிந்திருந்ததும் டிரான்ஸ்வால் சர்க்காருக்குத் தெரிந்தன. ஆயினும் அவரைக் கைது செய்வதில்லை என்ற கொள்கையையும், ஒரு பெண்ணுக்குத் தரும் மரியாதையையும் அனுசரித்துக் கைது செய்யாமல் இருந்துவிட்டனர். கன்னி ஷிலெஸின் தனது மாத ஊதியமாகிய ஆறு பவுனை அதிகமாக்கும்படி கேட்கவோ, விரும்பவோ இல்லை. அவருடைய தேவைகளில் சில எனக்குத் தெரிய வந்தபோது நானே அவருக்குப் பத்து பவுன் தர ஆரம்பித்தேன். அதையும் அவர் மிகவும் தயக்கத்துடன் ஏற்றுக்கொண்டு அதற்கு மேற்கொண்டு எதுவும் வேண்டாம் என மறுத்துவிட்டார். "எனக்கு அதிகம் வேண்டியதில்லை. என் தேவைக்கு வேண்டியதற்கு அதிகமாக நான் எதையாவது எடுத்துக்கொண்டால், உங்களிடம் இருக்கும் எந்தக் கொள்கை என்னைக் கவர்ந்ததோ அந்தக் கொள்கைக்கே நான் துரோகம் செய்வதாகும்" என்று சொல்லி என் வாயை அடைத்துவிட்டார். கன்னி ஷிலெஸின் எதுவரை படித்திருந்தார் என்று வாசகர்கள் ஒருவேளை கேட்கலாம். அவர் கேப் சர்வகலாசாலையில் இண்டர்மீடியட் பரீட்சையில் தேறியிருந்தார். சுருக்கெழுத்து முதலியவற்றில் டிப்ளோமாவும் முதல் வகுப்பில் பெற்றிருந்தார். போராட்டம் முடிந்ததும் பல்கலைக்கழகப் பட்டம் பெற்று இப்பொழுது டிரான்ஸ்வாலில் சர்க்கார் பெண்கள் பள்ளி ஒன்றில் தலைமை ஆசிரியை பதவி வகித்துக்கொண்டிருக்கிருர்.*

---

* காந்திஜியிடம் அதிக பக்தியுள்ள காரியதரிசியாகத் தென்னுப்பிரிக்காவிலிருந்த கன்னி ஷிலெஸின், 1942-இல் சிறைப்பட்ட மகாத்மா, நோயுடன் 1944-இல் விடுதலையாகிய பிறகு அவருக்கு எழுதியிருந்த கடிதத்தைக் குறித்து ஸ்ரீ பியாரிலால் "மகாத்மா காந்தி—கடைசிக் கட்டம்" என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிருர். அம்மாது காந்திஜிக்கு எழுதியதாவது: "நீங்கள் கஷ்டப்படுவதற்காக வருந்துகிறேனெனினும் நீங்கள் நோயுற்றிருந்ததற்காக நான் அதிகக் கவலையை அடைந்துவிடவில்லை. ஏனெனில், இந்தியா சுதந்திரமடைவதற்கு முன்னுல் நீங்கள் பிரிந்துவிடமாட்டீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. உண்மையிலேயே நீங்கள் மாத்திரம் விரும்புவீர்களானுல் உங்களுக்கு 125 வயதாகும் வரையில் நீங்கள் வாழ்வீர்கள் என்பதில் எனக்குச் சிறிதளவும் சந்தேகமே இல்லை."

பிறகு சான்பிரான்சிஸ்கோ சமாதான மகாநாட்டில் காந்திஜியைச் சந்தித்து அங்கிருந்து அவருடனேயே தானும் இந்தியாவுக்கு வரலாம் என்று எதிர்பார்த்துக் கொண்டு இருப்பதாகவும் அப் பெண்மணி எழுதினர். "சமாதான மகாநாட்டுக்குத் தங்களுடன் வர, காரியதரிசிகள் போதவில்லையென்ருல் போகும் வழியில் இப்படியே வாருங்கள், நானும் உடன் வருகிறேன்" என்றும் எழுதினர்.

ஹெர்பர்ட் கிட்சின் என்பவர், பளிங்குபோல் மாசற்ற உள்ளம் வாய்ந்த ஓர் ஆங்கிலேய மின்சார நிபுணர். அவர் போயர் போரின்போது எங்களுடன் வேலை செய்துகொண்டிருந்தார். சிறிது காலம், 'இந்தியன் ஒப்பினியன்' ஆசிரியராகவும் இருந்தார். அவர், வாழ்க்கை முழுவதும் பிரம்மசாரியாகவே இருந்தார்.

நான் இதுவரையிலும் குறிப்பிட்டு வந்துள்ளவர்கள் என்னுடன் நெருங்கிப் பழகியவர்கள். அவர்களை டிரான்ஸ்வாலிலுள்ள ஐரோப்பியப் பிரமுகர்கள் என்று சொல்லிவிட முடியாது. எனினும், அந்த ஐரோப்பிய வகுப்பினரும் எங்களுக்கு அதிக உதவியாக இருந்தனர். அவர்களில் மிகவும் செல்வாக்கு வாய்ந்தவர் ஸ்ரீ ஹோஸ்கன் என்பவர். அவர் தென்னாப்பிரிக்காவில் வர்த்தகக் குழுக்களின் முன்னாள் தலைவராகவும், டிரான்ஸ்வால் சட்டசபையின் அங்கத்தினராகவும் இருந்தார். அவரைப்பற்றி வாசகர்களுக்கு ஏற்கனவே அறிமுகமாகியிருக்கிறது; அவர் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு ஆதரவு காட்டிய ஐரோப்பியர்கள் கமிட்டியின் தலைவராகவும் இருந்தார். போராட்டத்தின் மும்முர நிலையில், சத்தியாக்கிரகிகளுக்கும் சர்க்காருக்கும் இடையே தொடர்பு கொள்ளுவதற்கே இடம் இல்லாதிருந்தது. அதற்குக் காரணம், சத்தியாக்கிரகிகள் நேர்முகமாகச் சர்க்காருடன் தொடர்புகொள்ளும் கொள்கையை ஆட்சேபித்தார்கள் என்பது அல்ல. தன்னுடைய சட்டங்களை மீறுகிறவர்களிடம் சர்க்கார் இயற்கையாகவே கலந்தாலோசிக்காது என்பதனாலேயே சர்க்காருடன் நேரடித் தொடர்பு இல்லாது போயிற்று. அந்தச் சமயத்தில் இந்தக் கமிட்டி, இந்தியருக்கும் சர்க்காருக்கும் மத்தியஸ்தம் செய்வதாக அமைந்தது.

---

இதற்குப் பதிலளித்த மகாத்மா, "நான் தென்னாப்பிரிக்காவுக்கு வருவதற்கோ, அமெரிக்கா போவதற்கோ எவ்விதச் சந்தர்ப்பமும் இருப்பதாக நினைக்கவில்லை. ஆனால், நான் வந்தாலும் வராவிட்டாலும் ஒரு நாள் நீங்கள் இங்கே வந்து உங்கள் மீத நாட்களை இந்தியாவில் கழிப்பீர்கள் என எதிர்பார்க்கிறேன்" என்று எழுதினார். அடுத்த கடிதத்தில், "நீங்களும் நானுமில்லாமலேயே சான்பிரான்சிஸ்கோ சமாளித்துக் கொண்டது என்பதைக் கண்டிருப்பீர்கள். ஆனால், நீங்கள் ஒரு நாள் இங்கே வருவீர்கள் என நினைக்கிறேன். 125 வருடங்களைப் பற்றிய கதையை எழுதலாம் என நம்பியிருக்கிறேன். நான் அதை எழுதும்வரை பொறுமையாக இருங்கள்" என்றும் மகாத்மா எழுதினார். இதற்குப் பதிலளித்த அப்பெண்மணி, "அந்தப் பதிப்பின் ஒரு பகுதியையாவது தொகுக்கும் உதவியாசிரியர் பணிசெய்யும் பாக்கியம் எனக்குக் கிட்டும் என்றே நம்புகிறேன்" என எழுதினார். ஆனால், அவர் மகாத்மாவின் வாழ்நாளில் இந்தியாவுக்கு வரவேயில்லை.

ஸ்ரீ ஆல்பர்ட் கார்ட்ரைட்டை நான் முன்பே வாசகர்களுக்கு அறிமுகம் செய்திருக்கிறேன். பூஜ்யர் சார்லஸ் பிலிப்ஸ் என்பவரும் ஸ்ரீ டோக்கைப் போலவே எங்களுடன் சேர்ந்துகொண்டு உதவிசெய்தார். ஸ்ரீ பிலிப்ஸ் டிரான்ஸ்வாலில் காங்கிரிகேஷனல் சபைக்குக் குருவாக இருந்தார். அவருடைய சிறந்த மனைவியாரும் எங்களுக்கு அதிக சேவைகள் செய்தார்கள். மூன்ருவது பாதிரியாரான பூஜ்யர் ட்யூட்னி டிரூ, ஜுஹம்பான்டீனின் தினசரிப் பத்திரிகையான 'பிரெண்ட்'டின் ஆசிரியப் பதவியை ஏற்பதற்காக மதத் தொடர்புடைய வேலைகளைத் துறந்தவர். இவர் ஐரோப்பியரின் கடுமையான எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் தம்முடைய தினசரியின் மூலமாய் இந்தியர்களின் இயக்கத்தை ஆதரித்தார். தென்னுப்பிரிக்காவின் சிறந்த பேச்சாளர்களில் இவரும் ஒருவர். 'பிரிட்டோரியா நியூஸ்' என்ற பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீ வியர் ஸ்டென்ட் என்பாரும் அவரைப் போலவே தாமாகவே முன்வந்து உதவி செய்தார்.

ஒரு முறை பிரிட்டோரியாவின் நகர மண்டபத்தில்,மேயரின் தலைமையில், இந்திய இயக்கத்தைக் கண்டனம் செய்வதற்காகவும், கறுப்புச் சட்டத்தை ஆதரிப்பதற்காகவும் ஐரோப்பியர்களின் பெருங்கூட்டம் ஒன்று நடந்தது. அப்பொழுது ஸ்ரீ வியர் ஸ்டென்ட் ஒருவர் மாத்திரமே, இந்தியர்களுக்கு எதிராக இருந்த பெருவாரியான ஐரோப்பியர்களை எதிர்த்துப் பேசினுர். உட்காரும்படி தலைவர் இட்ட கட்டளையைக்கூட மீறி உட்கார மறுத்தார். ஐரோப்பியர்கள் அவர் மீது கை வைப்பதாகவும் பயமுறுத்தினர். அவர் அசையாத உறுதியுடன் சிங்கத்தின் வீரியத்தோடு நின்ருர். கடைசியாக நிறைவேற்ற இருந்த தீர்மானத்தை நிறைவேற்ருமலேயே கூட்டம் கலைந்துவிட்டது.

எந்தச் சங்கத்திலும் முறைப்படி சேராவிடினும், எங்களுக்கு உதவி செய்ய இருந்த எந்த வாய்ப்பையும் தவறவிடாமல் சேவை செய்த இன்னும் பல ஐரோப்பியர்களின் பெயர்களையும் இங்கே குறிப்பிட முடியும். ஆனுல், மூன்று பெண்மணிகளைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறிவிட்டு இந்த அத்தியாயத்தை முடிக்க நினைக்கிறேன். அவர்களில் ஒருவர், லார்டு ஹாப்ஹவுஸ் என்பவரின் புதல்வியான கன்னி ஹாப்ஹவுஸ். அவர் போயர் யுத்தம் தென்னுப்பிரிக்காவில் நடந்துகொண்டிருந்தபோது லார்டு மில்னரின் விருப்பத்திற்கு மாருக டிரான்ஸ்வாலை அடைந்து, எவருடைய உதவியுமின்றித் தனியாகப் போயர்ப்

பெண்களின் இடையே நடமாடி, லார்டு கிட்சனர், தம்முடைய புகழ்பெற்ற - உண்மையில் மிகக்கேடான - 'சிறை முகாம்களை' டிரான்ஸ்வாலிலும், பிரீ ஸ்டேட்டிலும் அமைத்தபோது, அவர்களை உறுதியாக நிற்கும்படி ஊக்குவித்தார். போயர் யுத்தத்தைப் பொறுத்தவரையில் ஆங்கிலேயரின் கொள்கை முழுவதும் அநியாயமானது என்று அவர் உறுதியாக நம்பினார். காலஞ்சென்ற ஸ்ரீ ஸ்டெட்டைப் போல இவரும், அந்த யுத்தத்தில் இங்கிலாந்து தோல்வி அடைய வேண்டுமென்று இறைவனிடம் பிரார்த்தனை செய்தார். இவ்விதம் போயர்களுக்காக சேவை செய்த இவர், போயர்கள் தங்களுக்கு இழைக்கப்பட்ட அநியாயத்தை தமது சக்திகளையெல்லாம் திரட்டிச் சமீபத்தில் எதிர்த்திருந்தும், இப்பொழுது தங்கள் மடமையினால் ஏற்பட்ட பகை காரணமாக இந்தியர்களுக்கு விரோதமாக அநியாயம் செய்வதை அறிந்ததும் மிகவும் அதிர்ச்சி அடைந்தார். போயர்களுக்கு அவர்பால் மிகுந்த மதிப்பும் அன்பும் இருந்தன. ஜெனரல் போத்தாவிடம் அவருக்கு நெருங்கிய நட்பு இருந்தது. போயர்களிடம் கறுப்புச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டிய அவசியத்தைக் குறித்துத் தம்மால் ஆன அளவு சிபாரிசும் செய்தார்.

இரண்டாவது பெண்மணி கன்னி ஆலிவ் ஷிரீனர் என்பவர். நான் ஏற்கெனவே அவரைக் குறித்து முந்திய அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறேன். தென்னாப்பிரிக்காவின் உள்ளத்தைக் கவர்வதான ஒரு பெயர் ஷிரீனர் என்பது.ஆகவே, கன்னி ஷிரீனருக்கு மணமானபோது, தென்னாப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியர்கள் மத்தியில் ஷிரீனர் என்ற பெயர் மறந்து போய்விடாமல் இருக்க வேண்டும் என்பதற்காக இவர் கணவர் இவர் பெயரையே தாமும் வைத்துக் கொண்டார். இது போலிக் கௌரவத்திற்காக அல்ல. ஏனெனில், கன்னி ஷிரீனர் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகப் படித்திருந்தாரோ அவ்வளவுக்கவ்வளவு தம் பழக்க வழக்கங்களில் எளிமையும், உள்ளத்தில் பணிவும் கொண்டிருந்தார். அவருடன் நெருங்கிப்பழகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. தம்முடைய நீக்கிரோ வேலைக்காரர்களுக்கும் தமக்கும் எந்த விதமான வித்தியாசமும் இருப்பதாக அவர் கருதியதில்லை. 'கனவுகள்' என்ற நூலுக்கும் மற்றும் பல புத்தகங்களுக்கும் ஆசிரியை அவர். சமைக்கவோ, பாத்திரங்களைக் கழுவவோ, துடைப்பத்தைப் பிடிக்கவோ எப்பொழுதும் அவர் தயங்கியதில்லை. அத்தகைய

உடல் உழைப்பு, தம்மைப் பாதிப்பதற்குப் பதிலாகத் தம் இலக்கியத் திறமையை ஊக்குவித்து மொழியிலும் எண்ணத்திலும் நிறைவையும் நிதானத்தையும் தந்ததாக அவர் நினைத்திருந்தார். தென்னுப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியரிடம் தமக்குள்ள செல்வாக்கின் முழுப் பலத்தையும் இந்தத் திறமை வாய்ந்த அம்மையார், இந்திய இயக்கத்திற்காக உதவினுர்.

மூன்ருவதான பெண்மணி, தென்னுப்பிரிக்காவில் ஒரு பழங் குடும்பத்தைச் சேர்ந்தவரான கன்னி மால்டினே என்பவர். அவரும் வயது முதிர்ந்தவர். தம்மால் முடிந்த அளவிற்கு இந்தியருக்கு உதவி செய்தார்.

ஐரோப்பியர்கள் காட்டிய இத்தனை அனுதாபமும் என்ன பயனை அளித்தது என்று வாசகர்கள் கேட்கலாம். அவர்கள் தந்த ஆதரவினுல் விளைந்த பயன்களை விவரிப்பதற்காக இந்த அத்தியாயம் எழுதப்படவில்லை. மேலே விளக்கியிருக்கும் அந்த நண்பர்களில் சிலர் ஆற்றிய பணியே, கிடைத்த பலனுக்கு ஓர் அளவு சான்று பகரும். இயக்கத்தின் பலன் இயக்கத்திலேயே அடங்கியிருப்பது என்பதே சத்தியாக்கிரகத்தின் தன்மையாகும். தன்னுதவி, தியாகம், கடவுளிடம் பக்தி ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது, சத்தியாக்கிரகம். உதவி செய்த ஐரோப்பியர்களின் பெயர்களைக் குறிப்பிட்டிருப்பதன் நோக்கம், அவர்கள்பால் சத்தியாக்கிரகிகளுக்குள்ள நன்றியைக் காட்டுவதேயாகும். அவர்களைப் பற்றிக் குறிப்பிடாமல் போனுல், இந்தச் சரித்திரம் உண்மையில் நிறைவற்றதாகும். விவரமான முழுப் பெயர்ப் பட்டியலையும் தர நான் முயற்சி செய்யவில்லை. ஆனுல், ஒரு சிலரை மட்டும் குறிப்பிட்டதன் மூலம் இந்தியரின் நன்றியை எல்லோருக்கும் அறிவித்துள்ளேன். இரண்டாவதாக, சுத்தமான மனத்துடன் செய்யப்படும் எல்லா வேலைகளும், பயனை அளித்தே தீரும். அவற்றின் பலன் நம் கண்களுக்குத் தெரிந்தாலும் சரி, தெரியாது போனுலும் சரி, இந்த நம்பிக்கை சத்தியாக்கிரகி என்ற வகையில் எனக்கு உண்டு. கடைசியாகவும் முக்கியமாகவும், சத்தியத்தோடு கூடிய எல்லா இயக்கங்களும், தாமாகவே எல்லா வகையிலும் களங்கமற்றதும் தன்னலமற்றதுமான உதவியைத் தம்முள் ஐக்கியமாக்கிக் கொள்ளுகின்றன என்பதைக் காட்ட முயன்றிருக்கிறேன். இது தெளிவாகவில்லை என்ருல் மீண்டும் இதை நான் தெளிவாக்க விரும்புகிறேன். போராட்

டத்தின்போது ஐரோப்பிய ஆதரவைச் சம்பாதிப்பதற்காக எடுத்த முயற்சி, அதை முயற்சி என்று கொள்ளும் பட்சத்தில், சத்தியத்தை விட்டுப் பிறழாமல் சத்தியத்தையே கடைப்பிடிக்கும் முயற்சியே அது என்று சொல்லவேண்டும். வேறு விதமான முயற்சி எதுவும் எடுக்கப்படவில்லை. இயக்கம் ஐரோப்பிய நண்பர்களைக் கவர்ந்ததென்றால், அதன் இயல்பான சக்தியே அதற்குக் காரணமாகும்.

## இருபத்து நான்காவது அத்தியாயம்

# உள்ளுக்குள் மேலும் சங்கடங்கள்

இருபத்திரண்டாவது அத்தியாயத்தில் எங்களில் உள்ளுக்குள் இருந்த கஷ்டங்களைப் பற்றி ஓரளவுக்கு அறிந்திருக்கிறோம். நான் ஜொஹன்னஸ்பர்க்கில் தாக்கப்பட்டபோது என் குடும்பத்தினர் போனிக்ஸில் வசித்து வந்தபடியால் அவர்களுக்கு என்னைப்பற்றிய கவலை ஏற்பட்டது இயற்கையே. ஆனால், போனிக்ஸிலிருந்து ஜொஹன்னஸ்பர்க் வருவதற்குப் பிரயாணத்திற்கு வேண்டிய பணத்தை அவர்களால் சமாளிக்க முடியாமல் இருந்தது. ஆகவே, நான் சுகம் அடைந்த பின்னர் அவர்களைப் போய்ப் பார்ப்பது அவசியமாயிற்று.

என் வேலை விஷயமாக, நான் அடிக்கடி டிரான்ஸ்வாலுக்கும் நேட்டாலுக்கும் போய் வருவதுண்டு. நேட்டாலிலிருந்த நண்பர்களின் கடிதங்களிலிருந்து, ஒப்பந்தத்தைப் பற்றி நேட்டாலிலும் முற்றிலும் தவறான கருத்து இருந்தது என்பதை அறிந்திருந்தேன். ஒப்பந்தத்தைப்பற்றிப் பாதகமாகக் குற்றஞ்சாட்டி எழுதப்பட்ட கடிதங்கள், 'இந்தியன் ஒப்பினியன்' விலாசத்திற்கு ஒரு கற்றை வந்திருந்தன. சத்தியாக்கிரகப் போராட்டம் டிரான்ஸ்வால் இந்தியர்களை மட்டிலுமே பொறுத்ததாக இருந்ததெனினும், நேட்டால் இந்தியரின் அனுதாபத்தையும் ஆதரவையும் நாங்கள் அவசியம் தேடத்தான் வேண்டும். டிரான்ஸ்வால் போராட்டத்தை வெறும் உள்ளூர் விஷயமாகக் கருதுவதற்கில்லை. டிரான்ஸ்வாலிலுள்ள இந்தியர், உண்மையாகவே தென்னாப்பிரிக்காவில் உள்ள எல்லா இந்தியர்கள் சார்பாகவும் போராடிக்கொண்டிருந்தனர். அக்காரணத்தாலும் நான் டர்பனுக்குப் போய் அங்கே இருந்துவந்த தவறான கருத்துக்களை அகற்றுவது மிகவும் அவசியமாயிற்று. ஆகவே, டர்பனுக்குப் போகவேண்டிய முதல் வாய்ப்புக் கிடைத்ததும் நான் புறப்பட்டேன்.

டர்பனில் இந்தியர்களின் பொதுக்கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. நான் கூட்டத்தில் தாக்கப்படலாமென்றும், ஆகையால் நான் அதற்குப் போகக்கூடாது என்றும், போனாலும் என்னைப் பாதுகாத்துக் கொள்ளத் தகுந்த ஏற்பாடுகளுடன் செல்லவேண்டுமென்றும் முன்னதாகவே சில நண்பர்கள்

என்னிடம் எச்சரித்திருந்தார்கள். இந்த இரண்டில் எதையும் செய்யக்கூடிய நிலையில் நான் இல்லை. தன் எஜமானன் அழைக்கும்போது, பயத்தால் பதில் கொடுக்கத் தவறும் ஒருவன், ஓர் 'ஊழியன்' என்ற பெயருக்கே தகுதியற்றவனாகிறான். எஜமானனின் தண்டனைக்குப் பயந்தாலும் அப்பெயர் அவனுக்குத் தகுதியில்லை. சேவைக்கென்றே மேற்கொண்டிருக்கும் பொது ஜனத் தொண்டு கத்தி முனைமேல் நடப்பதைப் போன்றது. புகழ்ச்சியை ஏற்கத் தயாராக இருக்கும் ஊழியன் இகழ்ச்சிக்குப் பயந்து ஓடமாட்டான். ஆகவே, நான் குறிப்பிட்ட நேரத்தில் கூட்டத்திற்குச் சென்றேன். ஒப்பந்தம் எப்படி ஏற்பட்டது என்பதை விவரித்துக் கூறியதோடு கூட்டத்தினர் கேட்ட கேள்விகளுக்கும் பதில் அளித்தேன். கூட்டம் இரவு எட்டு மணிக்கு நடந்தது. கூட்ட நடவடிக்கை முடியும் தறுவாயில் பட்டாணியர் ஒருவர் பெரிய தடியுடன் மேடைக்கு ஓடி வந்தார். அதே சமயத்தில் விளக்குகளும் அணைக்கப்பட்டன. நான் உடனே நிலைமையை உணர்ந்தேன். தலைமை தாங்கிய சேட் தாவுத் முகமது மேஜை மேல் ஏறி நின்று அந்தக் குழப்பத்தை அடக்க முயன்றார். மேடையில் இருந்தவர்களில் சிலர் என்னைக் காக்கும் பொருட்டு என்னைச் சூழ்ந்து கொண்டனர். தாக்குதல் ஏற்படக்கூடுமென்று எதிர்பார்த்துப் பயந்த நண்பர்கள், அதனால் விளையக்கூடிய எதற்கும் தயாராக வந்திருந்தனர். அவர்களில் ஒருவர் தம் பையில் கைத் துப்பாக்கி வைத்திருந்தார். அதை எடுத்து வெற்று வேட்டு ஒன்றும் சுட்டார். அதற்குள் கலகத்திற்குக் காரணமான குழப்பம் சூழ்வதைக் கண்ட பார்ஸி ருஸ்தம்ஜி, கடும் வேகத்துடன் போலீஸ் நிலையத்திற்குச் சென்று, சூப்பரிண்டெண்டெண்ட் அலெக்ஸாண்டருக்குத் தெரிவித்தார். அவர் ஒரு போலீஸ் படையை அனுப்பி வைத்தார். கூட்டத்தினூடே போலீஸ்காரர்கள் எனக்கு வழி செய்து என்னைப் பார்ஸி ருஸ்தம்ஜியின் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

மறுநாள் காலையில் பார்ஸி ருஸ்தம்ஜி டர்பனில் இருந்த பட்டாணியர்கள் எல்லோரையும் ஒன்றுகூட்டி, என்மேல் அவர்களுக்கு இருந்த குறைகளை என்னிடம் முறையிடும்படி கேட்டார். நான் அவர்களைச் சந்தித்துச் சமாதானம் செய்ய முயற்சி செய்தேன். ஆனால், அதில் நான் வெற்றி பெறவில்லை. நான் சமூகத்திற்குத் துரோகம் செய்துவிட்டதாக அவர்களுக்கு ஏற்கனவே மனத்தில் நன்றாகப் பதிந்துவிட்டது. அந்த

விஷத்தை அகற்றும் வரையில் அவர்களிடம் விவாதிப்பதில் பயன் இல்லை. சந்தேகம் என்ற புற்றுநோயை விவாதத்தினுலும் விளக்கங்களினுலும் போக்க முடியாது.

அன்றே டர்பனிலிருந்து போனிக்ஸுக்குப் புறப்பட்டுச் சென்றேன். முந்திய இரவு என்னைப் பாதுகாத்த நண்பர்கள், என்னைத் தனியாகப் போக விடுவதற்கு விரும்பாமல் தாங்களும் என்னுடன் போனிக்ஸுக்கு வருவதாக அறிவித்தனர். நான் அவர்களிடம், "நீங்கள் என்னையும் மீறிவந்தால், நான் அதைத் தடுக்க முடியாது. ஆனுல், போனிக்ஸ் ஒரு காடு. அங்கே வசிப்பவர்கள் நாங்கள் மட்டுந்தான். நாங்கள் உங்களுக்காக உணவுகூட அளிக்க முடியாமல் இருந்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டேன். அந்த நண்பர்களில் ஒருவர், "அது எங்களைப் பயமுறுத்திவிடாது. எங்களைக் கவனித்துக் கொள்ள எங்களுக்கு நன்ருகத் தெரியும். நாங்கள் போர் செய்யும் போக்குடன் இருப்பதால் உங்களுடைய பண்டகசாலையிலிருந்து திருடுவதை யார் தடுக்கமுடியும்?" என்று பதில் அளித்தார். ஆகவே, நாங்கள் சந்தோஷமான ஒரு கோஷ்டியாக போனிக்ஸ் சென்ருேம்.

இப்படித் தாமே வந்த பாதுகாப்பாளர்களின் தலைவர் ஜாக் முதலி. இவர் நேட்டாலில் பிறந்த தமிழர். அங்கே நன்ருகப் பயிற்சி பெற்ற குஸ்திக்காரர் என்று இந்தியரிடையே பெயர் பெற்றவர். தென்னுப்பிரிக்காவில் குஸ்தி வித்தையில் வெள்ளையரிலோ, கறுப்பு மனிதரிலோ அவருக்கு இணையாக எவருமே இல்லை என்றே அவரும், அவருடைய சகாக்களும் நம்பினர்.

மழை பெய்யும்போது தவிர மற்றச் சமயங்களிலெல்லாம் திறந்த வெளியில் படுத்து உறங்குவது தென்னுப்பிரிக்காவில் பல ஆண்டுகளாக என் வழக்கம். இப்போது அந்தப் பழக்கத்தை மாற்றிக்கொள்ள நான் தயாராக இல்லை. அதனுல் தாமே வந்த காவலாளர், இரவெல்லாம் எனக்குக் காவல் இருக்கத் தீர்மானித்தனர். அவர்களுடைய நோக்கத்திலிருந்து அவர்களுடன் வேடிக்கையாகப் பேசி அவர்களைத் திருப்ப முயற்சி செய்தேன். என்னைக் காக்க அவர்கள் இருக்கின்றனர் என்ற உணர்ச்சி ஏற்படுவதே என் பலவீனம் என்பதை நான் ஒப்புக்கொண்டு தான் ஆகவேண்டும். அவர்களுடைய காவல் இராமலிருந்தால் நான் அவ்வளவு கவலையற்றுத் தூங்கியிருக்க முடியுமாவென்றும் வியந்தேன். ஒரு சிறு ஓசைகூட என்னைத் திடுக்கிடச்

செய்து எழுப்பியிருக்கும். ஆண்டவனிடம் எனக்கு உறுதியான நம்பிக்கை இருக்கிறதென்று நம்புகிறேன். பல ஆண்டுகளாக, மரணம் என்பது வாழ்க்கையில் ஒரு பெரிய மாறுதலே தவிர வேறெதுவும் இல்லையென்றும், அது எப்பொழுது நேரினும் வரவேற்க வேண்டுமென்ற கருத்தையும் என் அறிவுக்கு எட்டியவாறு ஒப்புக் கொண்டு வந்திருக்கிறேன். மரண பயம் உட்பட எல்லா பயங்களேயுமே என் மனத்திலிருந்து அடியோடு ஒழித்துவிடுவதற்காகப் பெருமுயற்சியை யோசித்தே செய்திருக்கிறேன். ஆயினும், பலநாட்களாகக் காணுமலிருந்த ஒரு நண்பனேச் சந்திக்கப் போகிரேம் என்ற நினைப்பு ஒருவருக்கு எந்தவித ஆனந்தத்தை அளிக்குமோ அதே போன்ற மகிழ்ச்சி, வரப் போகும் மரணத்தைப் பற்றி நினைக்கும்போது, பல சந்தர்ப்பங்களில் என் வாழ்க்கையில் ஏற்படவில்லை என்பது என் நினைவுக்கு வருகிறது. ஆகவே, பலத்துடன் இருக்க வேண்டும் என்று மனிதன் என்னதான் முயற்சிகளைச் செய்தும் பல சமயங்களிலும் பலவீனமாகவே இருக்கிருன். புத்தியளவில் நின்று உள்ளத்தின் ஆழத்தில் ஊடுருவாத அறிவு, வாழ்க்கை அனுபவங்களின் நெருக்கடியான சமயங்களுக்குப் பயனற்றுப் போகிறது. மேலும், ஒருவர் வெளியிலிருந்து உதவியைப் பெற்று அதை ஏற்றுக்கொண்டு விடும்போது, உள்ளுக்குள்ளிருந்த ஆன்ம பலம் ஆவியாகப் பறந்துவிடுகிறது. ஆகையால், அத்தகைய மயக்குகளுக்கு உள்ளாகாமல் சத்தியாக்கிரகி எப்பொழுதும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

நான் போனிக்ஸில் இருந்தபோது ஒரு காரியம் செய்தேன். ஒப்பந்தத்தைப்பற்றி நிலவிய தப்பபிப்பிராயங்களைப் போக்கும் வகையில் அதிகமாக எழுதினேன். 'இந்தியன் ஒப்பினி' யனில் வெளியிட, ஒப்பந்தத்தைப் பற்றி, இருவருக்கிடையே நடந்ததாக, ஒரு கற்பனை உரையாடலை வரைந்தேன். அதில் ஒப்பந்தத்தைப் பற்றிய சாதக பாதகங்களை நுட்பமாக அலசிவிளக்கி இருந்தேன். இந்த உரையாடல் ஒரு நல்ல பயனை விளைவித்தது என்றே நம்புகிறேன். டிரான்ஸ்வால் இந்தியர் கொண்ட தப்பபிப்பிராயம் தொடர்ந்து இருந்து வந்தால், உண்மையில் ஆபத்தான பலனை உண்டாக்கியிருக்கும். ஆனல், அவர்கள் ஒப்பந்தத்தைக் குறித்து நீண்ட காலம் தப்பபிப்பிராயம் கொண்டிருக்கவில்லை என்பது தெரிய வந்தது. ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளுவதா அல்லது தள்ளிவிடுவதா என்பது டிரான்ஸ்வால் இந்தியரையே பொறுத்தது. அவர்களும், அவர்களுடைய தலை

வனும் ஊழியனுமாகிய நானும் கடுஞ்சோதனைக்கு உட்பட்டிருந்தோம். இறுதியில் தாமாகவே பதிவு செய்துகொண்டுவிடாத இந்தியர் எவருமே இல்லை. பதிவு செய்ய மனுச் செய்தவர்களின் தொகை அதிகமாக இருந்தபடியால் அதிகாரிகள் கடினமாக வேலை செய்ய வேண்டியதாயிற்று. மிகக் குறைந்த காலத்திற்குள் இந்தியர் ஒப்பந்தத்தில் தங்கள் பங்கைப் பூர்த்தி செய்து விட்டனர். சர்க்கார் கூட இதை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. தப்பபிப்பிராயம் மிகவும் கடுமையாகவே இருந்ததெனினும், ஓர் அளவுக்குத்தான் அது இருந்தது என்பதை நான் காண முடிந்தது. பட்டாணியர்களில் சிலர், தங்கள் இஷ்டம்போல் பலாத்காரத்தில் இறங்க ஆரம்பித்துவிட்டதால், பரபரப்பு அதிகமாக இருந்தது. ஆனல், அப்படிப்பட்ட பலாத்காரமான குழப்பத்தைப் பாகுபடுத்திப் பார்க்கும்பொழுது, பல சமயங்களில், அவை அடிப்படையில் ஆதாரம் இல்லாதவைகளாகவே ஆகிவிடுகின்றன. அதுபோல், அவை அநேகமாகத் தாற்காலிகமானவையாகவும் இருக்கின்றன. ஆயினும், பலாத்காரத்தைக் கண்டதும் நாம் தைரியத்தை இழந்துவிடுவதால், இன்று உலகில் அது ஒரு சக்தியாக இருக்கிறது. ஆனல், இதைப் பற்றி நாம் அமைதியாக ஆலோசித்தோமானல், அப்படிப் பயப்படுவதற்கு எந்தவிதக் காரணமும் இல்லை என்பது புலனாகும். மீர் ஆலமும் அவருடைய நண்பர்களும் என்னைக் காயப்படுத்தியதற்குப் பதிலாக என் உடலையே அழித்திருந்ததாகவே வைத்துக் கொள்ளுவோம். அவர்களுடைய நோக்கிலிருந்தே அவர்கள் வேறுவிதமாக நடந்துகொண்டிருக்க முடியாது என்று சமூகம் கருதி, கலக்கமும் பரபரப்பும் இன்றித் தவறிழைத்தவர்களை மன்னித்துவிடுகிறது என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்படிப்பட்ட உயர்ந்த நோக்கு, சமூகத்திற்குத் தீங்குக்குப் பதிலாகப் பெரிய நன்மையையே விளைத்திருக்கும்; எல்லா மனஸ்தாபங்களும் மறைந்திருக்கும். தவருன வழியில் சென்று தாங்கள் செய்துவிட்ட குற்றங்களைக் குறித்து மீர் ஆலத்திற்கும் அவருடைய நண்பர்களுக்கும் கண் திறந்திருக்கும். என்னைப் பொறுத்த வரையில், சத்தியாக்கிரக மார்க்கத்தில் சென்றுகொண்டிருக்கும் போதே, அதாவது சத்தியத்தைப் பின்பற்றும்போதே, தான் தேடாமலே மரணத்தை அடைவதைவிடச் சிறந்தது வேறு எதுவும் ஒரு சத்தியாக்கிரகிக்கு இருக்க முடியாது. பகைமைக்கே இடம் அளிக்காததும், தன்னிடத்தில் உறுதியைக் கைவிடாததும், மற்றவர் உதவியை எதிர்பார்த்து ஒருவர் நிற்க வேண்டிய அவசியம் இராததும், ஒரு வீரன் இறந்துபடினும் அவனுடைய

மரணம் சோர்வை உண்டாக்குவதற்குப் பதிலாகப் போராட்டத்தை இன்னும் வலுவாக்கும் வகையில் எல்லோருமே தலைவர்களாகவும், எல்லோருமே தொண்டர்களாகவும் காரியங்களை நடத்துவதுமான இவையெல்லாம் சத்தியாக்கிரக இயக்கம் போன்ற ஒரு போராட்டத்தில்தான் உண்மையில் இருக்க முடியும்.

சத்தியாக்கிரகத்தில் தூயதும், அடிப்படையானதுமான தன்மை இத்தகையது. அதன் உண்மையை நாம் நடைமுறையில் உணர்வதில்லை. ஏனெனில், நம்மில் எவரும் துவேஷத்தை விட்டொழிக்கவில்லை. நடைமுறையில் அனுசரிப்பதில் சத்தியாக்கிரக ரகசியத்தை எல்லோரும் புரிந்துகொள்ளவில்லை. பலர் சுய புத்தியின்றி ஒரு சிலரைப் பின்பற்றி விடுகின்றனர். மேலும், டால்ஸ்டாய் கூறியபடி, சத்தியாக்கிரகக் கொள்கையைப் பொது ஜன அல்லது ஒரு கூட்டத்தினர் இயக்கமாக அனுசரிக்கப்படும் முதல் முயற்சியே டிரான்ஸ்வால் போராட்டம். முற்றிலும் பொது மக்களைக் கொண்ட சத்தியாக்கிரக இயக்கம் முன்னர் நடந்திருப்பதற்குச் சரித்திரச் சான்று இருப்பதாக எனக்குத் தெரியாது. இதில் சரித்திரம்பற்றிய அறிவு எனக்குக் குறைவாகையால் இதில் எவ்விதத் திட்டமான முடிவுக்கும் நான் வருவதற்கில்லை. ஆனால், சரித்திர மேற்கோள்களைக் கொண்டு நாம் செய்ய வேண்டியது எதுவுமில்லை. சத்தியாக்கிரகத்தின் அடிப்படைக் கொள்கைகளை நாம் ஒப்புக்கொள்ளும்போது, அதன் விளைவுகள் என்று நான் விவரித்துள்ளவை, பகலை இரவு தொடர்வதைப் போல் கண்டிப்பாகத் தொடர்வதைக் காணலாம். இதைப் பின்பற்றுவது கடினம் அல்லது முடியாத காரியம் என்று கூறி, மதிக்க வொண்ணாத இந்தச் சக்தியை நிராகரித்து விடுவது சரியாகாது. உலகில் பல்லாயிரக்கணக்கான வருடங்களாக மிருக பலமே ஆட்சி செய்து வந்திருக்கிறது. அதன் விளைவுகளை மனித சமுதாயம் அனுபவித்து வந்திருப்பது எவருக்கும் தெளிவாகிய விஷயம். எதிர்காலத்தில் அதனால் எந்த நன்மையும் வரக்கூடுமென்பதற்கான நம்பிக்கையும் இல்லை. இருளிலிருந்து ஒளி பிறக்குமேயானால் பகைமையிலிருந்து அன்பும் வெளிப்பட முடியும்.

# இரண்டாவது பகுதி

[தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரக வரலாற்றை எழுதி வந்த மகாத்மா காந்திக்கு இடையில் எழுத முடியாது போயிற்று. பின்னர் இந்த வரலாற்றின் இரண்டாம் பகுதியை எழுத ஆரம்பித்தபோது 'நவஜீவன்' பத்திரிகையில் மற்றோர் முன்னுரையுடனும் தொடங்கினர். 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரக' நூலின் ஹிந்திப் பதிப்பில் காணும் இந்த முகவுரையும் இதில் கொடுக்கப்பட்டிருக்கிறது.]

# இரண்டாவது பகுதியின் முடிவுகள்

தென்னாப்பிரிக்காவில் நிகழ்ந்த சத்தியாக்கிரக இயக்கத்தின் வரலாற்றைத் தொடர்ந்து எழுத இயலாததற்குக் காரணம், நான் அனுஷ்டித்துவரும் உண்ணாவிரதம் முதலியவை தாம் என்பது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கும். அந்தத் தொடரை, மறுபடியும் இந்த இதழிலிருந்து தொடங்குகிறேன். இனி இப்பணியைத் தடையின்றி நிறைவேற்றிவிடலாமென்று நம்புகிறேன்.

இந்த வரலாற்றுத் தொடரைப்பற்றிய பழம் நினைவுகளைச் சிந்திக்கும்போது, எனக்கு ஓர் உண்மை புலப்படுகிறது. இன்றைக்கு உள்ள நிலைமைக்கும், அன்று அங்கிருந்த நிலைமைக்கும் பல அம்சங்களில் ஒற்றுமையைக் காண்கிறேன். இன்றைக்கு இங்கே ஏற்பட்டுள்ள சூழ்நிலையால் பெறும் அனுபவத்தையே, சிறு அளவில் நான் அப்போது தென்னாப்பிரிக்காவில் பெற்றேன். ஆரம்பத்தில் ஏற்படும் இதே உற்சாகம், தீவிரமான துடிப்பு, இடையில் இதே நிராசை, விருப்பமின்மை, கூட்டாளிகளுடன் ஏற்படும் இதே சச்சரவு, மனத்தாங்கல், வெறுப்பு - எல்லாமே அங்கும் ஏற்பட்டன. இருந்தாலும், தீவிரமான கடமையுணர்வு நிறைந்த சில தொண்டர்களிடத்தில் குன்றாத சிரத்தை, உறுதிப்பாடு, தியாக உணர்ச்சி, பொறுமை முதலிய சக்திகள் இயக்கத்திற்கு உறுதுணையாக இருந்தன. இப்படியே எதிர்பார்த்ததும், எதிர்பாராததுமாகப் பல இடையூறுகள் வந்து போய்க்கொண்டிருந்தன. இந்தியாவில் சுதந்திரப் போராட்டத்தின் இறுதிக் கட்டத்திற்கு நாம் இன்னும் வரவில்லை. அந்த நிலையை எட்ட நம் தீவிர முயற்சிகள் பல மீதி இருக்கின்றன. அந்தக் கடைசிக் கட்டத்தின் நிலையைப் பற்றிய அனுபவம் எனக்குத் தென்னாப்பிரிக்காவில் ஏற்பட்டிருக்கிறது, அதே நிலையை ஆவலுடன் இங்கும் எதிர்பார்க்கிறேன்; வெற்றி பெற முடியும் என்கிற நம்பிக்கையும் இருக்கிறது. தென்னாப்பிரிக்காவில் நடந்த போராட்டத்தின் இறுதிக் கட்டத்தைப்பற்றி வாசகர்கள் விரைவிலேயே தெரிந்துகொள்ளுவார்கள். அந்தப் போராட்டத்தின்போது எதிர்பாராத பெரும் உதவிகள் எப்படி வலியக் கிடைத்தன, மக்களிடம் எவ்விதம்

உற்சாகம் இயற்கையாகவே வளர்ந்தது, பின்னர், இந்தியர்கள் எப்படி முழு வெற்றியும் பெற்றுர்கள் - இந்த அரிய தகவல்களை வாசகர்கள் அடுத்த இதழ்களில் தெரிந்து கொள்ளலாம்.

தென்னுப்பிரிக்காவில் நம் போராட்டம் வெற்றி யடைந்ததைப் போலவே இங்கும் நம்முடைய இயக்கம் வெற்றி பெறுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். என் நம்பிக்கைக்கு அடிப்படை, தவத்திலும், சத்தியத்திலும், அகிம்சையிலும் எனக்குள்ள திடமான சிரத்தைதான். சத்தியத்தைக் கடைப்பிடிக்கிறவர்களுக்கு உலகத்தின் எல்லாச் செல்வங்களும் தாமே வந்தடையக் காத்திருக்கின்றன. தெய்வத்தின் சாந்நித்தியம்கூட அவர்களுக்குச் சுலபம்தான். அகிம்சையைக் கைக்கொண்டவர்களிடம் வெறுப்பு, பகை எதுவும் நிற்காது. இவ்விரு உண்மைகளையும் நான் மனப்பூர்வமாக ஆராதிக்கிறேன். மேலும், கஷ்டங்களைச் சகித்துக்கொள்ளும் ஆற்றல் பெற்றவர்களுக்கு, எந்தக் காரியமும் செய்ய இயலாதது என்பது கிடையாது. இந்த அடிப்படை உண்மையை உபாசிப்பவன் நான். இம்மூன்று சிறப்பான தன்மைகளையும் நான் எவ்வளவோ தொண்டர்களிடத்தில் காண்கிறேன். அவர்களுடைய சாதனை பயனற்றதாக ஒருபோதும் ஆவதில்லை. இது நான் கண்ட அனுபவம்; இதில் விதிவிலக்கென்பதே ஏற்பட்டதில்லை.

ஆனல், 'தென்னுப்பிரிக்காவில் போராட்டத்திற்குப் பிறகு கிடைத்த முழு வெற்றிக்கு என்ன அர்த்தம்? இந்தியர்கள் முன்பு எப்படி இருந்தார்களோ அப்படியேதான் பிறகும் இருந்திருக்கிறுர்கள். இதில் முழு வெற்றி என்று பெருமைப் பட்டுக்கொள்ள என்ன இருக்கிறது?' என்று யாராவது கேட்கலாம். இவ்விதம் கேட்பவர் தம் அறியாமையை வெளிப் படுத்துகிறுர் என்றுதான் சொல்ல வேண்டும். தென்னுப்பிரிக் காவில், அத்தகைய போராட்டம் நடந்திராவிட்டால், இன்று அங்கே மட்டுமல்ல, ஆங்கிலேயர் வசமுள்ள குடியேற்ற நாடுகளில் எதிலும் இந்தியர் வாழமுடியாமல் போயிருக்கும்; இந்தக் கொடுமையை ஏன் என்று கேட்க நாதி இருக்காது. இருந்தாலும், இதைத் திருப்திகரமான சமாதானமென்றோ, பதிலென்றோ கருதமுடியாது. இருந்தாலும், நம் வாதத்திற்குச் சாதகமான அளவுக்கு இதில் உண்மை இருக்கிறது. தென்னுப்பிரிக்காவில், நம்மவர்கள் அவ்விதம் போராடாமல் இருந்தாலோ, அல்லது வெறும் பேச்சுவார்த்தைகள், தூது

கோஷ்டிகள், வேண்டுகோள்கள் மூலம் நாம் அந்தப் பிரச்னையை அணுகியிருந்தாலோ, இன்று ஏற்பட்டிருக்கும் சாதகமான நிலைகூட அப்போது ஏற்பட்டிருக்காது என்பது மட்டும் நிச்சயம். ஆனால், இந்த வாதமும் உண்மை நிரம்பியது என்று சொல்லிக்கொள்ள முடியாது. மேலும், வெறும் யுக்தி வாதங்களையும், ஊகங்களையும் பக்கபலமாகக் கொள்ளும்போது அவை முற்றிலும் நேர்மையானவை என்று எப்படிச் சொல்லமுடியும்? ஊகித்துச் சொல்லுவதற்கு எல்லாருக்குந்தான் உரிமை இருக்கிறது. பதில் சொல்லுவது, கண்டனம் செய்வது எல்லாம் யுக்திவாதத் திறனைப் பொறுத்தவை. எந்தச் சாதனத்தின் மூலம் ஒரு பொருளை அடைகிறோமோ, அதைக் காப்பாற்றவும் அதே சாதனம்தான் பயன்படும்.

மகாபாரதத்தில் ஒரு சம்பவம். அர்ஜுனன் மகாவீரன் தான். சிவபிரானையே தோற்கடித்தவன்; கௌரவர்களின் கொற்றத்தை ஒடுக்கியவன். அப்பேர்ப்பட்டவன், கண்ணபிரானுடைய உதவி இல்லாமல் காட்டுவழியாகச் செல்லும்போது, திருடர்கள் கூட்டத்தைக்கூடத் தன் ‘காண்டீவ’ வில் கொண்டு தோற்கடிக்க முடியவில்லை! இதே நிலைதான் தென்னாப்பிரிக்க இந்தியர்களுக்கும். அவர்கள் போராட்டம் இன்னும் முடிவடையவில்லை. எந்தச் சத்தியாக்கிரக பலத்தால் அவர்கள் இன்று ஓரளவு வெற்றி பெற்றிருக்கிறார்களோ, அந்த வழியை மறந்தார்களானால், இதுவரை பெற்ற முன்னேற்றத்தையும் இழக்க நேரிடும். சத்தியாக்கிரகம்தான் அவர்களுக்குச் சாரதி மாதிரி வழிகாட்டியாக உதவுவது. போராட்டத்திற்கு வலுவளித்து, வெற்றிப் பாதையில் முன்னேறச் செய்யும் தகுதி அதற்குப் பூரணமாக உண்டு.

‘நவஜீவன்’
5, ஜூலை, 1925

—மோ. க. காந்தி

## இருபத்தைந்தாவது அத்தியாயம்

# ஜெனரல் ஸ்மட்ஸின் நம்பிக்கைத் துரோகம் (?)

உள்ளுக்குள்ளிருந்த கஷ்டங்களைப்பற்றி வாசகர்கள் ஓரளவு பார்த்தார்கள். அவற்றைப் பெரும்பாலும் நான், என் வாழ்க்கை வரலாற்றை ஒட்டியே விவரிக்கும்படி நேர்ந்தது. சத்தியாக்கிரக சம்பந்தமாக எனக்கிருந்த தொந்தரவுகளே சத்தியாக்கிரகிகளுடைய கஷ்டங்களுமானபடியால் அங்ஙனம் செய்வதைத் தவிர்க்க முடியவில்லை. இப்பொழுது நாம் வெளி நிலைமையைக் கவனிப்போம்.

இந்த அத்தியாயத்தின் தலைப்பை, ஏன் இந்த அத்தியாயத்தையே எழுதுவது எனக்கு வெட்கமாக இருக்கிறது. ஏனெனில், இது மனித இயல்பின் வக்கிரம்பற்றியதாக இருக்கிறது. 1908-இலேயே ஜெனரல் ஸ்மட்ஸ் தென்னாப்பிரிக்கத் தலைவர்களில் அதிகத் திறமை வாய்ந்தவராகக் கருதப்பட்டார். இன்றோ, அவர் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலும் உலகிலும் அரசியல்வாதிகளில் உயர்ந்த இடம் பெற்றிருக்கிறார். அவருடைய அரும் பெரும் திறமைகளைப் பற்றி எனக்குச் சந்தேகமேயில்லை ஜெனரல் ஸ்மட்ஸ் வழக்கறிஞர் என்ற முறையில் எவ்வளவு திறமை வாய்ந்தவரோ, அவ்வளவு திறமை வாய்ந்த ஜெனரலாகவும் நிர்வாகியாகவும் இருந்தார். தென்னாப்பிரிக்காவில் எத்தனையோ அரசியல்வாதிகள் வந்து போயிருக்கின்றனர். ஆனால், 1907-ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை சர்க்காரின் நிர்வாகம் அநேகமாக இவர் கையிலேயே தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. இன்றும் அந்த நாட்டில் இவர் ஓர் ஒப்பற்ற ஸ்தானத்தை வகிக்கிறார். நான் தென்னாப்பிரிக்காவை விட்டு வந்து ஒன்பது ஆண்டுகள் ஆகிவிட்டன. தென்னாப்பிரிக்க மக்கள் இப்போது ஜெனரல் ஸ்மட்ஸின் பெயருக்கு என்ன அடைமொழி தந்து அழைக்கிறார்களென்பது எனக்குத் தெரியாது. அவரது கிறிஸ்துவப் பெயர் ஜான் என்பது. தென்னாப்பிரிக்காவில் அவரை 'ஒல்லி ஜான்னி' (Slim Janny) என்று அழைப்பார்கள். ஜெனரல் ஸ்மட்ஸைக் குறித்து ஜாக்கிரதையாக இருக்கவேண்டுமென்று பல ஆங்கில நண்பர்கள் என்னிடம் கூறியிருக்கிறார்கள். ஏனெனில், அவர் மிகவும் தந்திரமானவரென்றும், சந்தர்ப்பவாதி

யென்றும், அவருடைய வார்த்தைகள் அவருக்கு மட்டுந்தான் புரியுமென்றும், இரு தரப்பாரும் தத்தமக்குச் சாதகமானதெனப் பொருள் செய்யக் கூடியனவாக அவை, பல சமயங்களில் இருக்கு மென்றும் சொன்னர்கள். தக்க சமயம் வரும்போது இரு கட்சி யினருடைய வியாக்கியானங்களையும் ஒதுக்கிவிட்டு, அவற்றிற்கும் புதிய வியாக்கியானத்தைப் புகுத்தி அதை நிறைவேற்றிச் சாதுரி யமான வாதங்களால் ஆதரிப்பார்; தாங்கள் தான் தவருக வியாக்கியானம் செய்து விட்டதாகவும், ஜெனரல் ஸ்மட்ஸ் அர்த்தம் செய்ததுதான் சரி என்றும் இரு கட்சியினரும் நினைக் கும்படியும் செய்து விடுவார். இப்போது நான் விவரிக்கப் போகும் சம்பவங்கள் நிகழ்ந்தபோது ஜெனரல் ஸ்மட்ஸ் எங்களை ஏமாற்றியதாக நாங்கள் நினைத்தோம்; சொன்னேம். இந்திய சமூகத்தின் கருத்தின்படி அந்த நிகழ்ச்சியை ஒரு நம்பிக்கை மோசமாகவே இன்றுகூட நான் காண்கிறேன். ஆயினும், இச் சொல் தொடருக்குப் பிறகு நான் ஒரு கேள்விக்குறியை வைத் திருக்கிறேன். ஒரு வேளை ஜெனரலுடைய செய்கை வேண்டு மென்றே செய்த நம்பிக்கைத் துரோகமாக இருந்திராது என்ப தற்காகவே அவ்வாறு செய்திருக்கிறேன். ஏமாற்ற வேண்டு மென்ற நோக்கம் இல்லாமல் இருக்குமானல், அதை நம்பிக் கைத் துரோகம் என விவரிப்பதற்கில்லை. ஜெனரல் ஸ்மட்ஸைப் பற்றிய சென்ற கால நிகழ்ச்சிகளைத் தூரத்திலிருந்து பாரபட்ச மில்லாமல் பார்க்கும்போது, *1913–14*–ஆம் ஆண்டுகளில் என் அனுபவம் கசப்பாக இருக்கவில்லை. இன்றும் அவை கசப்பாகத் தோன்றவில்லை. இந்தியர்களுடன் *1908*-ஆம் ஆண்டில் ஜெனரல் ஸ்மட்ஸ் நடந்துகொண்ட விதத்தில் மனமறிய நம்பிக்கைத் துரோகம் இழைத்த குற்றத்திற்கு அவர் ஆளாகவில்லை என்பது சாத்தியமாகவும் இருக்கலாம்.

ஜெனரல் ஸ்மட்ஸுக்கு நியாயத்தைச் செய்வதற்கும், நான் இந்த அத்தியாயத்தில் கூறப்போகும் அவருடைய பெயர் சம்பந்தமாக நான் உபயோகித்துள்ள 'நம்பிக்கைத் துரோகம்' என்ற சொற்றெடர் நியாயம் என்பதைக் காட்டுவதற்கும் இப்படி முன்னுரையாகச் சில வார்த்தைகள் எழுதுவது அவசியம்.

டிரான்ஸ்வால் அரசாங்கத்திற்குத் திருப்தி ஏற்படும் வகை யில் இந்தியர்கள் எப்படித் தாமாகவே பதிவு செய்து கொண் டார்கள் என்பதைச் சென்ற அத்தியாயத்தில் கண்டோம். அரசாங்கம் இப்போது கறுப்புச் சட்டத்தை ரத்துச் செய்தாக

வேண்டும். அப்படிச் செய்துவிட்டால் அத்துடன் சத்தியாக்கிரகப் போராட்டமும் முடிவு பெறும். நாட்டில் இந்தியருக்கு விரோதமாக இருந்த எல்லாச் சட்டங்களும் ஒருங்கே தீர்ந்துவிடும் என்ருே, இந்தியரின் கஷ்டங்களுக்கெல்லாம் நிவாரணம் அளித்துவிடும் என்ருே இது பொருள்படாது. அவற்றிற்காக இந்தியர்கள் சட்ட ரீதியான கிளர்ச்சியைத் தொடர்ந்து நடத்திக்கொண்டுதான் இருக்க வேண்டும். சத்தியாக்கிரகம், கறுப்புச்சட்டம் என்ற உருவில் தோன்றிய ஒரு புதிய தீய நிமித்தத்தைக் காட்டும் மேகத்தைக் கலைப்பதற்கு மாத்திரமே செலுத்தப்பட்டது. கறுப்புச் சட்டத்தை இந்தியர்கள் ஏற்றுக்கொண்டிருப்பார்களேயானல், அது அவர்களை அவமானத்துக்கு உள்ளாக்கி, முதலில் டிரான்ஸ்வாலிலும் பிறகு தென்னுப்பிரிக்கா முழுவதிலும் அவர்கள் இல்லாமல் அற்றுப் போவதற்கு வழியைச் செய்திருக்கும். ஆனல், ஜெனரல் ஸ்மட்ஸ், கறுப்புச் சட்டத்தை ரத்துச் செய்வதற்குப் பதிலாக வேருெரு புதிய நடவடிக்கையை எடுத்தார். அவர், சட்டப் புத்தகத்தில் கறுப்புச் சட்டத்தை நீக்காமல் அப்படியே வைத்துக்கொண்டு, தாமாகவே செய்யப்பட்ட பதிவுகளையும், கறுப்புச்சட்டத்தின் ஷரத்துக்களின்படி சர்க்காரால் குறிப்பிட்ட தேதிக்குப்பின் தரப்பட்ட பத்திரங்களையும் செல்லுபடி ஆக்கவும், தாமாகவே பதிவு செய்யப்பட்ட பத்திரங்கள் கறுப்புச் சட்டத்தின் அமலுக்குள் வராதபடியும், 'ஆசியாக்காரர்களின் பதிவுக்காக மேலும் ஷரத்துக்கள் உண்டாக்குவதும்' ஆகிய அம்சங்கள் கொண்ட புதிய மசோதா ஒன்றைச் சட்டசபைக்குக் கொண்டு வந்தார். ஆகவே, ஒரே நோக்கத்தைக் கொண்ட இரு சட்டங்கள் ஒரே சமயத்தில் அமலுக்கு வந்தன. புதிதாக வரும் இந்தியர்களும், பதிவுக்காகப் பின்னல் மனுப்போட்டவர்களும் அதன் காரணமாக இன்னும் கறுப்புச் சட்டத்திற்கு உட்படவேண்டியிருந்தனர்.

அந்த மசோதாவைப் படித்தபோது நான் மிகவும் திகைத்துப் போய்விட்டேன். சமூகத்திற்கு எப்படி முன்னின்று பதில் சொல்லுவது என்று தெரியவில்லை. அந்த நள்ளிரவுக் கூட்டத்தின்போது என்னைக் கடுமையாகக் குற்றம் சாட்டிப் பேசிய பட்டாணிய நண்பருக்கு இது மகிழ்ச்சியைத் தருவதாகும். ஆனல், இந்த அதிர்ச்சி சத்தியாக்கிரகத்தின்மீது எனக்குள்ள நம்பிக்கையை அசைப்பதற்குப் பதிலாக அதை இன்னும் வலுவாக்கியது என்றே நான் சொல்லிக்கொள்ள வேண்டும். நான், எங்கள் கமிட்டியைக் கூட்டிப் புதிய நிலை

மையை விவரித்தேன். அங்கத்தினர் சிலர், "பார்த்தீர்களா? நீங்கள் யார் எதைச் சொன்னுலும் அப்படியே நம்பிவிடுகிறீர்கள் என்று நாங்கள் உங்களுக்கு அடிக்கடி கூறியிருக்கிறோம். உங்களுடைய சொந்த வாழ்க்கையில் மாத்திரம் அப்படிச் செய்தால் அது யாரையும் பாதிக்காது. ஆனுல், பொதுக் காரியங்களில் நீங்கள் இப்படி எல்லோரையும் நம்புவது சமூகத்தைத் துன்பத்திற்கு உட்படுத்துகிறது. அவர்களை முன்னுல் ஊக்கிய அதே உணர்ச்சியை மீண்டும் எழுப்புவது மிகவும் கஷ்டமாக இருக்கும். இந்தியர்களிடையே சட்டெனத் தோன்றும் வெள்ளத்தைப் போன்ற இந்த உற்சாகத்தை, அது உச்ச நிலையில் இருக்கும் போதே பயன்படுத்தவேண்டும். நம் இந்தியர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே! தாற்காலிகமான இந்த எழுச்சியை நீங்கள் பயன்படுத்தத் தவறினுல் வேறு வழியே உங்களுக்குக் கிடையாது" என்று குத்திக் காட்டினர்.

அவர்களுடைய குத்தலான வார்த்தைகளில் கசப்பு இல்லை. வேறு சில சந்தர்ப்பங்களிலும் என்னிடம் அப்படி பேசியிருக்கிருர்கள். நானும் புன்சிரிப்புடன், "சரிதான். நான் எதையும் எளிதில் நம்பி விடுகிறேன் என்று நீங்கள் கூறுவது எனக்கே உரித்தான குணம். அது வெறும் நம்புவ்துமட்டுமல்ல; ஆனுல், ஆழ்ந்த விசுவாசமுமாகும். நாம் ஒவ்வொருவரும், நீங்களுந்தான், நானுந்தான், நம்முடன் இருப்பவர்களை நம்புவது கடமையாகும். அப்படி நான் மற்றவர்களை நம்புவது உண்மையாகவே தவறு என்று ஒப்புக்கொண்டாலும், என் குணங்களுடன் என்னை நீங்கள் ஏற்றுக்கொள்ளுவது போலவே, என் குறைகளுடனும் ஏற்றுக் கொள்ளவேண்டும். ஆனுல், சமூகத்தின் உற்சாகம் தாற்காலிகமாகப் பொங்கி அடங்குவது போன்றது என்பதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. நீங்களும் நானும் சமூகத்தின் அங்கத்தினர்கள் என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். என்னுடைய உற்சாகத்தை நீங்கள் அங்ஙனம் ஒரு குறை என்று சொன்னுல், என்னை அவமதிப்பதற்காகச் சொன்னதென்று கொள்ளுவேன். இப்படி நீங்கள் அமைக்கும் பொது விதிக்கு உங்களையும் விலக்காகவே கருதுகிறீர்கள் என்று நான் எண்ணுகிறேன். அப்படி இல்லையென்ருல், சமூகத்தில் மற்றவர்களும் உங்களைப் போலவே பயங்கொள்ளிகள் என்று நினைப்பதான ஓர் அநீதியைச் செய்தவர்களாவீர்கள். நம்முடையதைப் போன்ற பெரிய போராட்டங்களில் ஏற்றமும் இறக்கமும் தோன்றுவதும் இயல்பு. எதிராளிக்கும் உங்களுக்கும் எவ்வளவுதான் தெளிவான

உடன்பாடு இருப்பினும், அவன் வாக்கு மீறுவதை யார்தான் தடுக்க முடியும்? நம்மில் பலர், மற்றவர்களுக்குப் பணத்திற்காகப் பத்திரம் எழுதித் தருகிறார்கள். ஒரு மனிதன் ஒரு தஸ்தாவேஜில் தன் கையெழுத்தைப் போடுவதைவிட வேறு எதுதான் தெளிவாகவும் ஐயமற்றதாகவும் இருக்கக்கூடும்? ஆயினும், அவர்களுக்கு எதிராக வழக்குகள் தொடர வேண்டிய அவசியங்கள் எழுகின்றன. அவர்கள் வழக்குகளைப் பலவித சாட்சியங்களைக் கொண்டு எதிர்ப்பதும் சகஜமாக இருக்கின்றது. டிக்ரியும், சொத்து ஜப்தியும் பெறுவதற்கு முடிவிலே எவ்வளவோ நேரமும், பணமும், முயற்சியும் வீணாகின்றன. ஆகவே, அப்படிப்பட்ட படுமோசமான செயல்கள் மீண்டும் நடக்காது என யார்தான் உத்தரவாதம் கொடுக்க முடியும்? ஆகவே, நமக்கு முன்னால் இருக்கும் பிரச்னையைப் பொறுமையுடன் தீர்க்கும்படி நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். போராட்டத்தை மீண்டும் துவக்க வேண்டின் நாம் என்ன செய்யவேண்டும், அதாவது ஒவ்வொரு சத்தியாக்கிரகியும் மற்றவர்களுடைய நடத்தையைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் என்ன செய்யக்கூடும் என்பனபற்றி நாம் ஆலோசிக்க வேண்டும். என்னைப் பொறுத்த அளவில் நாம் நமக்கு உண்மையாக இருந்தால் மற்றவர்களும் அப்படியே இருப்பார்கள் என்று நினைக்கிறேன். அப்படி அவர்கள் பலவீனமடைவதாக இருந்தாலும் நம் உதாரணத்தைப் பார்த்தாவது சரியாவார்கள் என்று நம்புகிறேன்.''

போராட்டத்தை மீண்டும் தொடங்குவதுபற்றி ஐயம் கொண்டு நல்ல நோக்கத்துடன் குறை சொன்ன நபர்களைச் சமாதானப்படுத்த இது போதுமென்று நம்புகிறேன். இதே சமயத்தில் ஸ்ரீ காச்சலியா தம்முடைய உறுதியைக் காட்டி முன் வர ஆரம்பித்தார். ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் நன்றாக யோசித்து ஒரு முடிவுக்கு வந்து, தம் எண்ணங்களைச் சுருங்கக் கூறி, அவற்றைக் கடைசிவரையிலும் கடைப்பிடித்தார். கடைசி முடிவைப்பற்றிக் கொஞ்சமாவது ஐயமோ, பலவீனமோ அவர் காட்டியதாக ஒரு சந்தர்ப்பங்கூட என் நினைவில் இல்லை. யூசுப் மியான், சங்கடங்களுக்கு இடையே தலைமையைத் தொடர்ந்து வகிக்கத் தயாராக இல்லாத ஒரு நிலைமை வந்தது. நாங்கள் அனைவரும் ஒரே மனதாகக் காச்சலியாவை எங்கள் தலைவராக ஏற்படுத்திக் கொண்டோம். அதுமுதல் கடைசி வரையிலும் தமது பொறுப்பான பதவியைச் சற்றும் தளராமல் அவர் வகித்தார். அவருடைய நிலையில் மற்றவர்கள் இடிந்து போய்விடுவார்கள்

ஆனுல், எத்தனையோ துன்பங்களை அவர் அச்சமின்றிச் சகித்தார். போராட்டம் முன்னேறியபோது, சிலருக்குச் சிறைக்குப் போவது எளிதான காரியமாகவும், மிகவும் தேவையான ஓய்வைப் பெறும் வழியாகவும் இருந்த நிலை ஒன்று வந்தது. அந்தச் சமயத்தில் வெளியிலிருந்து எல்லா விஷயங்களையும் நுணுக்கமாகக் கவனிப்பதிலும், பல ஏற்பாடுகளைச் செய்வதிலும், பலதரப்பட்ட மனிதர்களையும் வைத்துச் சமாளிப்பதிலும் அளவற்ற கஷ்டங்கள் இருந்தன.

பின்பு காச்சலியாவுக்குக் கடன் கொடுத்த ஐரோப்பியர்கள் அவரை ஒரு கண்ணியால் பிடிப்பது போல் பிடித்தனர். பல இந்திய வியாபாரிகள் தங்கள் வியாபாரத்திற்காக ஐரோப்பியக் கம்பெனிகளையே முழுவதும் எதிர்பார்த்திருந்தனர். அவர்கள் விற்பனை செய்யும் லட்சக் கணக்கான ரூபாய்கள் பெறுமான சரக்குகளைத் தம் சொந்த ஜாமீன்மீது கடனுகப் பெற்றனர். இந்திய வியாபாரிகளிடம் ஐரோப்பியர்கள் இவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தது, இந்திய வியாபாரத்தின் நாணயத்துக்கும், உண்மைக்கும் சிறந்த சான்ருகும். காச்சலியாவும் அதன்படி பல ஐரோப்பியக் கம்பெனிகளுக்குப் பெருந்தொகைகள் கடன்பட்டிருந்தார். நேராகவும், மறைமுகமாகவும் சர்க்காரால் தூண்டப்பட்டு அந்தக் கம்பெனிக்காரர்கள் கடன்களை உடனே திருப்பித் தருமாறு அவரைக் கேட்டனர். காச்சலியா சத்தியாக்கிரக இயக்கத்தை விட்டுவிட்டால் உடனே பணத்தைத் திருப்பித் தரும்படி வற்புறுத்தவில்லை என்றும் தெரிவித்தார்கள். ஆனுல், அப்படிச் செய்யாவிட்டால் சர்க்கார் அவரை எந்த நேரத்திலும் கைது செய்யக்கூடுமாதலால் தங்கள் பணத்தை இழக்க நேரிடும் என்று அஞ்சியதால் பணத்தைத் திருப்பித் தரவேண்டுமென்று கேட்டார்கள். காச்சலியா உடனே தைரியமாகத் தாம் இந்தியப் போராட்டத்தில் கலந்துகொள்ளுவது தம் சொந்த விஷயம் என்றும், அதற்கும் தம் வியாபாரத் தொழிலுக்கும் எவ்வித மான சம்பந்தமும் இல்லை என்றும் பதில் அளித்தார். தமது சமயக் கொள்கை, சமூகத்தின் கௌரவம், தம் சுயமரியாதை யாவும் போராட்டத்துடன் ஒன்றியவை எனக் கருதினுர். தமக்கு ஆதரவளித்த கம்பெனிக்காரர்களுக்கு நன்றி கூறி, அந்த ஆதரவுக்கோ அல்லது தம் தொழிலுக்கோ அனுவசியமான முக்கியத்துவத்தைத் தர மறுத்துவிட்டார். தாம் உயிருடன் இருக்கும் வரையில் அவர்கள் தனக்குக் கடன் தந்த பணம் தம்மிடம் பத்திரமாக இருக்குமென்றும், எப்படியாயினும் முழுவதையும் திருப்பித்

தருவதாகவும், தமக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் அவருடைய சரக்கு இருப்பும், கணக்கில் தமக்கு வரவேண்டியதாக இருக்கும் தொகையும் அவர்களுக்குக் கிடைக்குமென்றும், ஆகவே அவர்கள் முன்போலவே நம்பிக்கை வைக்கவேண்டு மென்றும் விரும்பினர். இது முற்றிலும் நியாயமான கோரிக்கை. காச்சலியாவுடைய உறுதியும், அந்த வியாபாரிகள் அவரை நம்ப வேண்டியதற்கு வேறொரு காரணமாக இருந்தது. ஆனாலும், இம்முறை அவர்களை நம்பச் செய்வதில் இதுவும் வெற்றி பெறவில்லை. நாம் உண்மையாகவே தூங்கும் ஒருவனை எழுப்பலாம்; ஆனால், தூங்குவதாகப் பாசாங்கு செய்துகொண்டு விழித்திருப்பவனை எழுப்பவே முடியாது. அதே மாதிரிதான் காச்சலியாவைக் காரணமில்லாமல் நெருக்கும் ஒரே நோக்கத்தைக் கொண்டிருந்தனர் அந்த ஐரோப்பிய வியாபாரிகள். மற்றபடி அவர்கள் பணம் முழுவதும் பத்திரமாகவே இருந்தது.

1909-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 22-ஆம் தேதி என் காரியாலயத்தில் கடன் தந்தவர்களின் கூட்டம் ஒன்று நடந்தது. நான் அவர்களிடம், அவர்கள் காச்சலியாவை நெருக்குவது அரசியல் சம்பந்தப்பட்டது என்றும், அது வியாபாரிகளுக்குத் தகாது என்றும் தெள்ளத் தெளியக் கூறினேன். அது அவர்களுக்குக் கோபத்தை வருவித்தது. நான் காச்சலியா சேட்டின் வரவு செலவுக் கணக்கை அவர்களிடம் காட்டிப் பணம் முழுவதும் கிடைத்துவிடும் என்று நிருபித்தேன். மேலும், கடன் கொடுத்தவர்கள் காச்சலியாவினுடைய தொழிலை வேறு யாருக்காவது விற்கும்படி விரும்பினால் அவர் தம் சரக்குகளையும் கடன்களையும் வாங்குவோரிடம் சேர்ப்பிக்கத் தயாராக இருந்தார். இதுவும் அவர்களுக்குச் சரிப்படாவிட்டால் அவர்கள் காச்சலியாவின் கடையிலிருந்த சரக்கை வாங்கின விலைக்கு எடுத்துக்கொண்டு, அதற்கு மேற்பட்டு ஏதாவது கடன் இருந்தால், அவருக்கு வெளியிலிருந்து வரவேண்டிய பணங்களைக் குறித்துள்ள கணக்குகளைக் கொண்டு பாக்கியைப் பூர்த்திசெய்துகொள்ளலாம். இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொள்ளுவது ஐரோப்பியர்களுக்கு எவ்விதத்திலும் நஷ்டமாக இருக்க முடியாது என்பதை வாசகர்கள் காணலாம். நான் முன்னால் பல சந்தர்ப்பங்களில் அதிக நெருக்கடியில் சிக்கிய பல கட்சிக்காரர்களுக்கு இத்தகைய ஏற்பாடுகளைச் செய்திருக்கிறேன். ஆனால், இந்தச் சந்தர்ப்பத்தில் வியாபாரிகள் நியாயத்தை நாடவில்லை. காச்சலியாவைப் பணிய வைப்பதில் முனைந்திருந்தார்கள். காச்சலியா

பணியவில்லை. அவருடைய சொத்துக்கள் அவருடைய கடன்களை விட அதிகமாக இருப்பதைக் காட்டியும், அவருக்கு விரோத மாக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு அவர் திவால் ஆகிவிட்ட தாகப் பிரகடனம் செய்யப்பட்டது.

இப்படித் திவாலானது அவருடைய குலத்திற்குக் களங்க மாகத் தோன்றுவதற்கு மாருக அவருக்கு முற்றிலும் கௌர வத்தையே தந்தது. சமூகத்தில் அவருக்கு இருந்த மதிப்பை இது உயர்த்தியது. எல்லோரும் அவருடைய தைரியத்தையும் உறுதியையும் பாராட்டினுர்கள். ஆனல், அப்படிப்பட்ட வீரத்தை நாம் காண்பது அரிது. தெருவில் போகும் மனிதனுக்கு, திவா லாகியதால் மூண்ட அவமானமும் மதிப்பும் அலங்காரமாக எப்படி மாற முடியுமென்பது புரியாது. ஆனல், காச்சலியா உடனே அதை உணர்ந்தார். திவாலாகக் கூடும் என்ற அச் சத்தினுலேயே எத்தனையோ இந்திய வியாபாரிகள் கறுப்புச் சட்டத்திற்கு உட்பட்டனர். காச்சலியாவும் விரும்பியிருந்தால் திவாலாவதைத் தவிர்த்திருக்கலாம்; போராட்டத்திலிருந்து விலகுவதால் அன்று; அந்தக் கேள்வியே எழவில்லை. தமக்கு இந்தத் துன்பத்தில் மகிழ்ச்சியுடன் உதவக்கூடிய பல இந்திய நண்பர்களிடம் கடன் வாங்குவதால் தம்முடைய வியாபாரத் தைக் காப்பாற்றியிருக்க முடியும். ஆனல், அப்படிக் காப்பாற்று வது அவருக்குத் தகுதியானதாக இருந்திருக்காது. என்றைக் காவது ஒரு நாள் சிறையில் தள்ளப்படுவதான ஆபத்தை எல்லாச் சத்தியாக்கிரகிகளுடன் அவரும் உணர்ந்திருந்தார். ஆகவே, ஒரு சத்தியாக்கிரகி ஐரோப்பியர்களிடம் பட்ட கடனை ரத்துச்செய்ய மற்ற சகா சத்தியாக்கிரகிகளிடமிருந்து கடன் வாங்குவது அவருக்குச் சரியென்று பட்டிருக்காது. அவர்களு டைய நண்பர்களிடையே, உதவி தரக்கூடிய 'கருங்காலி'களும் இருந்தனர். அவர்களில் ஓரிருவர் உதவி செய்வதற்கும் முன் வந்தனர். ஆனல், அவர்களுடைய உதவியை ஏற்றுக்கொள்ளு வதைவிட வெறுக்கத் தகுந்த அந்தச் சட்டத்திற்கு உட்படுவதே விவேகமான காரியம் என்று ஒப்புக்கொண்டுவிடலாம். ஆதலால், அவர்கள் கொடுக்க முன்வந்த உதவியை ஏற்க மறுப்பதென முடிவு செய்துகொண்டோம்.

நாங்கள் மற்ருென்று யோசித்தோம். காச்சலியா, தாம் திவாலாகியதற்கு இடம் தந்தால், அது மற்றவர்களுக்குத் தப் பித்துக்கொள்ள ஒரு பாதுகாப்பாக ஆகிவிடும். எல்லா விஷயத் திலும் இராது போனலும், திவாலாகும் பெரும்பான்மையான

வர்கள் விஷயத்தில் கடன் தந்தவர்கள் இதனால் நஷ்டம் அடையக் கூடும். ஒரு பவுனில் 10 ஷில்லிங் கிடைத்தாலும் சந்தோஷப் படக்கூடியவன், 15 ஷில்லிங் கிடைத்தாலோ அதை 20 ஷில்லிங் காகவே மதிப்பான். ஏனெனில், தென்னாப்பிரிக்காவில் பெரிய வர்த்தகர்கள் பொதுவாக $6\frac{1}{4}$ சதவிகிதம் லாபம் பெறுவ தில்லை; 25 சதவிகிதமே லாபம் பெறுகின்றனர். ஆகையால், 15 ஷில்லிங் கிடைத்தாலும் பூராவும் கடன் செலுத்தப்பட்டதாகக் கருதுவர். ஆனால், கடன்பட்டவரின் சொத்திலிருந்து பவுனில் 20 ஷில்லிங் பெறுவது என்றுமே அபூர்வமாகையால் கடனாளி யைத் திவாலாகச் செய்வதில் கடன் கொடுத்தவர் ஆர்வம் கொள்ளவில்லை. ஆகவே, காச்சலியா திவால் ஆனார் என்பது வெளியானவுடனே தங்களிடம் கடன் வாங்கியிருந்த மற்றச் சத்தியாக்கிரக வியாபாரிகளை ஐரோப்பியர் மிரட்டாமல் இருப் பார்கள் என நினைக்க இடமிருந்தது. உண்மையில் நடந்ததும் அதுவேதான். ஒன்று காச்சலியா போராட்டத்தை விட்டுவிட வேண்டும்; அல்லது தங்கள் கடன் முழுவதையும் திருப்பித் தர வேண்டும் என்று ஐரோப்பியர் வற்புறுத்த விரும்பினர். ஆனால், அவர்களுடைய இந்த இரண்டு எண்ணங்களுள் எதுவும் ஈடே ராமல் போனதோடு அவர்கள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறான பயனே விளைந்தது. ஒரு கண்ணியமான இந்திய வியாபாரி, தாம் திவாலாகத் துணிந்த இந்த முதல் வழக்கு அவர்களைத் திடுக் குறச் செய்து, பின்னால் என்றென்றும் அவர்களை வாயடைக்கச் செய்துவிட்டது. கடன் தந்தவர்கள், ஒரு வருடத்திற்குள் காச் சலியா சேட்டின் வியாபாரக் கையிருப்பிலிருந்து தொகையைப் பவுனுக்கு 20 ஷில்லிங் விகிதம் பூராவும் பெற்றனர். எனக்குத் தெரிந்தவரை, தென்னாப்பிரிக்காவில் திவாலான கடனாளியின் சொத்திலிருந்து கடன் தந்தவர்கள் முழுத் தொகையையும் பெற்றது இதுவே முதல் சம்பவமாகும். இவ்வாறு போராட்டம் நடந்து கொண்டிருக்கும் போதுகூடக் காச்சலியாவிற்கு ஐரோப்பிய வியாபாரிகளிடத்தில் பெருமதிப்பு இருந்தது. அவர் போராட்டத்தை முன்னின்று நடத்துவதையும் பொருட் படுத்தாமல், எவ்வளவு சரக்குகள் வேண்டுமானாலும் முன் முதலாகத் தர அவர்கள் தயாராக இருந்தனர். ஆனால், காச் சலியாவுக்கு நாளுக்கு நாள் பலம் வளர்வதோடு போராட் டத்தை நடத்தும் ஆற்றலைப்பற்றிய அறிவும் வளரலாயிற்று. போராட்டம் எவ்வளவு நாட்கள் நீடிக்கும் என்பதை இச்சம யத்தில் ஒருவராலும் சொல்லமுடியாது. ஆகவே திவாலா நடவடிக்கைகளுக்குப் பிறகு, போராட்டம் தொடர்ந்து நடந்து

கொண்டிருக்கும் வரையில், சேட் வியாபாரத்தில் அதிகம் ஈடு படாமல், தமது அன்றாட தேவைக்கு வேண்டியது கிடைக்கும் அளவுக்கு வர்த்தகம் செய்வதே போதுமென்று தீர்மானித்தார். ஆகவே, ஐரோப்பிய வியாபாரிகளின் உதவி எதையும் அவர் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

இந்தச் சம்பவங்கள் அனைத்தும், காச்சலியா சேட்டின் வாழ்க்கையில் மேலே குறிப்பிட்ட கமிட்டிக் கூட்டத்திற்குப் பின் உடனடியாக நிகழ்ந்தவையல்ல என்று நான் இங்கே கூற வேண்டிய அவசியமில்லை. கதையின் தொடர்ச்சிக்காக அவற்றை இங்கே விவரித்தேன். காலக்கிரமப்படி போராட்டம் மீண்டும் தொடங்கி (*10*, செப்டம்பர், *1908*) சில காலத்திற்குப் பிறகு காச் சலியா, கமிட்டியின் தலைவரானார். இதற்கு ஐந்து மாதங்களுக் குப் பின்னரே அவர் திவாலாகிய விஷயம் நிகழ்ந்தது.

திரும்பவும் கமிட்டிக் கூட்டத்திற்கு வருவோம். கூட்டம் முடிந்ததும் நான் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு எழுதினேன். அவரு டைய புதிய மசோதா சமரச உடன்பாட்டை மீறுவதாகும் என்று கூறி, சமரசம் ஏற்பட்ட ஒரு வாரத்திற்குள் ரிச்மண்டில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து பின்கண்ட மேற்கோளை யும் குறிப்பிட்டேன்: ‘இந்தியர்களின் இரண்டாவது எதிர்வாதம், சட்டம் ரத்தானாலொழிய தாங்கள் பதிவு செய்யப்போவதே இல்லை என்பது......நாட்டில் பதிவு செய்யாத ஆசியாக்காரர் ஒருவர் இருக்கும் வரையில், சட்டம் ரத்தாகாது என்று அவர் களுக்குச் சொல்லுகிறேன்...நாட்டிலுள்ள ஒவ்வோர் இந்தியனும் பதிவு செய்து கொள்ளும் வரையில் சட்டம் ரத்தாகாது’ என் பதே அது. அரசியல் வாதிகள், தங்களைச் சங்கடத்தில் மாட்டக் கூடிய கேள்விகளுக்கு பதிலே தரமாட்டார்கள். அப்படித் தந்தா லும் சுற்றி வளைத்துப் பேசுவார்கள். இந்தக் கலையில் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார் ஜெனரல் ஸ்மட்ஸ். அவருக்கு எத்தனை முறை எழுதினால்தான் என்ன, எத்தனை சொற்பொழிவுகள் நிகழ்த்தினால்தான் என்ன, அவர் பதில் கூறத் தயாராக இல்லை. ஏனெனில், எது செய்தாலும் அவரை எதனாலும் வெளியே இழுக்க முடியாது. கடிதங்களுக்குப் பதில் எழுதுவது கடமை என்ற மரியாதைகூட ஜெனரல் ஸ்மட்ஸைக் கட்டுப்படுத்தாது. ஆகவே, என் கடிதங்களுக்குத் திருப்திகரமான பதில் எதையும் நான் பெறவில்லை.

எங்களுக்கு மத்தியஸ்தராக இருந்த ஆல்பர்ட் கார்ட் ரைட்டை நான் சந்தித்தேன். அவர் மிகவும் திடுக்குற்று, “உண்

மையாகவே இந்த மனிதரைப் புரிந்துகொள்ள என்னல் முடிய வில்லே. அவர் ஆசியச் சட்டத்தை ரத்து செய்வதாக வாக்கு தந்தது எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது. நான் என்னல் முடிந்ததைச் செய்கிறேன். ஆனல், ஜெனரல் ஸ்மட்ஸ் ஒரு நிலே யில் நின்றுவிட்டால் நாம் செய்யக் கூடியது எதுவுமில்லே என்பது உங்களுக்குத் தெரியும். பத்திரிகையில் வெளியாகும் கட்டுரை களே அவர் பொருட்படுத்தவேயில்லே. ஆகவே, நான் உங்களுக்கு அதிக உதவியாக இருக்க முடியாதென்று அஞ்சுகிறேன்'' என்று கூறினர். ஸ்ரீ ஹோஸ்கனேயும் நான் சந்தித்தேன். அவரும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு எழுதினர். ஆனல், திருப்திகரமாக இல்லாத பதில்தான் கிடைத்தது. நான், 'இந்தியன் ஒப்பினிய' னில் 'மோசடி' என்ற தலேப்பில் கட்டுரைகள் எழுதினேன். ஆனல், எதற்கும் அசையாத அந்த ஜெனரலின் எதிரே அவை என்ன செய்யும்? ஒரு தத்துவ அறிஞரைப் பற்றியோ அல்லது கல்நெஞ்சனேப் பற்றியோ எவ்வளவு கசப்பான வார்த்தைகளே வேண்டுமானலும் உபயோகிக்கலாம். ஆனல், அவை பயன்தரா. அவர்கள் தாங்கள் கோலிய பாதையிலிருந்து பிறழமாட்டார் கள். இந்த இரண்டு ரகத்தில், ஜெனரல் ஸ்மட்ஸ் எதைச் சேர்ந்தவரென்பது எனக்குத் தெரியாது. ஆனல், அவருடைய போக்கில் ஒருவகையான தத்துவம் இருக்கின்றது என்பதை நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நான் அவருக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருந்த போதும், அவரைத் தாக்கிப் பத் திரிகைகளில் எழுதியபோதும், அவரை ஓர் இதயமற்ற மனித ராகவே நான் எடுத்துக் காட்டியது ஞாபகம் இருக்கிறது. ஆனல், இது போராட்டம் தொடங்கிய புதிதில்; இரண்டாவது வருடந்தான். போராட்டம் இன்னும் எட்டு ஆண்டுகள் நடக்க வேண்டியிருந்தது. அப்போது ஜெனரல் ஸ்மட்ஸை சந்திக்க எனக்குப் பல சந்தர்ப்பங்கள் கிடைத்தன. அப்பொழுது நடந்த பேச்சுக்கள் மூலமாக தென்னுப்பிரிக்காவில் ஜெனரல் ஸ்மட்ஸின் தந்திரத்தைப் பற்றிப் பொதுவாக இருந்த அபிப்பிராயம் அவர் பக்கம் நியாயம் கூறுவதாக இல்லே என்பதைப் பன்முறை உணர்ந்தேன். ஆனல், இரு விஷயங்களேக் குறித்து நிச்சயமான உறுதி எனக்கு உண்டு. முதலாவது, அரசியலில் சில நேர்மை யான கொள்கைகள் அவருக்கு இருந்தன. இரண்டாவது, அவ ருடைய அரசியல் கொள்கையில் தந்திரத்திற்கும், சில வேளே களில் உண்மை பிறழ்வுக்கும் இடம் இருந்தது.

## இருபத்தாருவது அத்தியாயம்

# போராட்டத்தை மீண்டும் துவக்குதல்

நாங்கள், ஜெனரல் ஸ்மட்ஸை ஒப்பந்தத்தில் தமது பாகத்தை நிறைவேற்றுமாறு தூண்ட ஒரு பக்கம் முயற்சி செய்து கொண்டிருந்தோம். மறு பக்கம், சமூகத்தினருக்குப் போராட்டத்தைப் பற்றி விளக்குவதில் உற்சாகத்துடன் ஈடுபட்டிருந்தோம். எல்லா இடங்களிலும் போராட்டத்தை மீண்டும் துவக்குவதற்கும், சிறை செல்வதற்கும் ஜனங்கள் தயாராக இருப்பதைக் கண்டோம். எங்கும் கூட்டங்களை நடத்திச் சர்க்காருக்கும் எங்களுக்கும் இடையே நடந்த கடிதப்போக்குவரத்து மூலம் நடந்த விஷயங்களை விளக்கினோம். 'இந்தியன் ஒப்பினிய'னில் வெளியான வாரக் குறிப்புக்கள் இந்தியர்களுக்கு அன்ருட நிகழ்ச்சிகளை உரிய காலத்தில் தெரியப்படுத்தின. தாமாகவே பதிவு செய்துகொள்ளுவதால் பின்னுல் தோல்வி அடைய நேரிடுமென்று அவர்கள் எச்சரிக்கப்பட்டனர். இவ்வளவுக்குப் பிறகும் கறுப்புச் சட்டம் ரத்தாக்கப்படாவிட்டால் பத்திரங்களை எரிப்பதற்குத் தயாராயிருக்குமாறு சொன்னேம். இவ்வாறு சர்க்காருக்கு பயமின்றி சமூகம் உறுதியுடன் இருப்பதையும் சிறைக்குப் போகத் துணிந்திருப்பதையும் காட்ட வேண்டுமென்று அவர்கள் எச்சரிக்கப்பட்டார்கள். கொளுத்தி விடுவதற்காக ஒவ்வோர் இடத்திலிருந்தும் பதிவுப் பத்திரங்கள் திரட்டப்பட்டன.

முன் அத்தியாயத்தில் குறிக்கப்பட்டுள்ள புதிய சட்டத்தைச் சட்டசபை நிறைவேற்றி வைக்கப் போகும்போது இந்தியர்கள் சார்பாக ஒரு மனு கொடுக்கப்பட்டுப் பயனில்லாமல் போயிற்று. கடைசியாகச் சத்தியாக்கிரகிகள் சர்க்காருக்கு 'இறுதி எச்சரிக்கை' ஒன்றை அனுப்பினர்கள். இறுதி எச்சரிக்கை என்ற சொற்ருெடரைச் சத்தியாக்கிரகிகள் உபயோகிக்கவில்லை. சமூகத்தினர் தமக்கு விடுத்துள்ள தீர்மானத்தைச் சுட்டி ஜெனரல் ஸ்மட்ஸ் தமக்கு வந்த கடிதத்தை அவ்வாறு குறிப்பிட்டார். "சர்க்காருக்கு இத்தகைய வெருட்டலை (பயமுறுத்தலை) அனுப்பிய மக்களுக்குச் சர்க்காருக்குள்ள சக்தியைப் பற்றிக் கொஞ்சங்கூடத் தெரியாது. குழப்பக்காரர்கள் ஒரு சிலர், ஜனங்களைத் தூண்டுவதற்கு இதைச் செய்கிருர்களே என்றுதான் வருந்துகிறேன். ஏழை இந்தி

யர்கள், அவர்களுடைய பசப்புப் பேச்சுக்களுக்கு மயங்கிப் போனால் முடிவில் அழிந்தே போய்விடுவார்கள் என்று நான் வருந்துகிறேன்" என்றார் ஜெனரல். இது விஷயமாகப் பத்திரிகை நிருபர் எழுதியபடி, டிரான்ஸ்வாலில் சட்டசபையின் பல அங்கத்தினர்கள் இந்த 'இறுதி எச்சரிக்கை'யைக் கண்டு கொதித்தெழுந்து, ஜெனரல் ஸ்மட்ஸ் புகுத்திய சட்டத்தை உணர்வு கொண்டு ஏகமனதாக நிறைவேற்றி வைத்தார்கள்.

'இறுதி எச்சரிக்கை' என்று கூறப்பட்ட இதன் சுருக்கமாவது: 'இந்தியர்களுக்கும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கும் ஏற்பட்டிருந்த உடன்பாட்டில், இந்தியர்கள் தாமாகவே பதிவு செய்து கொண்டால், அத்தகைய பதிவைச் செல்லத்தக்கதாக்க ஆசியாச் சட்டத்தை ரத்துசெய்யும் ஒரு மசோதாவைச் சட்டசபையில் அவர் கொண்டு வந்தாக வேண்டுமென்பது தெளிவாகிறது. ஆகவே, இந்தியர்கள் சர்க்காரின் திருப்திக்கேற்றபடி தாமாகவே பதிவு செய்து கொண்டார்கள் என்பது விளக்கம். ஆகவே, ஆசியாச் சட்டம் ரத்து செய்யப்பட வேண்டுமென்பதும் யாவரும் நன்கறிந்த விஷயம். ஜெனரல் ஸ்மட்ஸுக்குச் சமூகத்தினர் எத்தனையோ கடிதங்கள் எழுதியும், தங்களுடைய குறைகளைப் போக்கிக் கொள்ளுவதற்குச் சட்ட ரீதியாக முடியுமான நடவடிக்கைகள் எடுத்தும் இதுகாறும் பயன்படாமல் போயிற்று. சட்டசபையில் இந்த மசோதா விவாதிக்கப்படும்போது சமூகத்தவர்களிடையே ஏற்பட்டுள்ள அதிருப்தியையும் தீவிர உணர்ச்சியையும் சர்க்காருக்குத் தெரிவிப்பது தலைவர்களுடைய கடமையாகும். ஒப்பந்தத்தின் ஷரத்துக்களின்படி ஆசியாச் சட்டம் ரத்தாகாவிட்டால், அதைப்பற்றிச் சர்க்காரின் முடிவைக் குறிப்பிட்ட தேதிக்குள் இந்தியர்களுக்கு அறிவிக்காது போனால், இந்தியர்கள் சேகரம் செய்திருக்கும் பதிவுப் பத்திரங்கள் கொளுத்தப்படுமென்றும், அதனால் ஏற்படும் பலாபலன்களைத் தாழ்மையுடனும், உறுதியுடனும் அனுபவிக்கத் தயாராக இருக்கிறார்கள் என்பதையும் கூற வருந்துகிறோம்.'

இந்தக் கடிதத்தை ஓர் 'இறுதி எச்சரிக்கை'யாகக் கொண்டதற்கு ஒரு காரணம், பதில் வருவதற்கு அதில் ஒரு கால வரையற்ற கொடுக்கப்பட்டிருந்ததே. மற்றுமொரு காரணம், ஐரோப்பியர்கள் இந்தியர்களைக் காட்டுமிராண்டிகளெனக் கருதியிருந்ததாகும். இந்தியர்களைத் தங்களுக்குச் சரிசமம் என்று கருதியிருந்தால், இந்தக் கடிதத்தை முற்றிலும்

மரியாதையானதாக மதித்து, இதில் கவனம் செலுத்தியிருப்பார்கள். இந்தியர்கள் நாகரிகமற்ற மனிதர்களென இவர்கள் கருதியது ஒன்றே, இந்தியர்கள் இக்கடிதத்தை எழுதப் போதிய காரணமாக அமைந்தது. இந்தியர்கள், ஒன்று தாங்கள் நாகரிகமற்றவர் என்பதை ஒப்புக்கொண்டு இந்த அடக்குமுறைக்கு உட்படவேண்டும். அல்லது, தாங்கள் நாகரிகமற்றவர்கள் என்னும் குற்றச்சாட்டை மறுப்பதற்குத் தீவிர நடவடிக்கைகளாவது எடுக்கவேண்டும். அந்த நடவடிக்கையின் முதற்படியே இந்தக் கடிதம். இந்தக் கடிதத்திற்கு வலிவாக, செய்தே தீருவது என்ற ஓர் இரும்பான உறுதி இல்லாமல் போயிருந்தால் அது துடுக்குத்தனமெனக் கருதப்பட்டு இந்தியர்கள் யோசனையற்ற முட்டாள்களெனத் தம்மை நிருபித்துக் கொண்டிருப்பார்கள்.

நாகரிகமற்றவர்கள் என்னும் குற்றச்சாட்டு. *1906*-ஆம் வருடமே சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை கொண்டபோதே மறுதளிக்கப்பட்டிருக்கிறதே என்று வாசகர் ஒருவேளை எடுத்துக் காட்டலாம். அப்படியானால். இந்தக் கடிதத்திற்கு நான் இவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பதிலும், அதிலிருந்து குற்றச்சாட்டு மறுக்கப்பட்ட தேதியைக் குறிப்பிடுவதிலும், புதுமை ஒன்றும் இல்லை. அப்படிப் பார்க்கும்போது இது உண்மைதான். ஆனால், சற்று ஆழ்ந்து யோசித்துப் பார்க்கையில் அந்த மறுப்பு உண்மையாகவே, இந்தக் கடிதத்துடனேயே ஆரம்பமானது எனத் தெரியவரும். சத்தியாக்கிரகப் பிரதிக்ஞை தற்செயலாக வந்ததென்பதையும், அதற்குப் பின் சிறைவாசம் யாவும் தடுக்க முடியாத உடன் விளைவு என்பதையும் நினைவில் கொள்ள வேண்டும். அப்போது சமூகம் அதற்குத் தெரியாமலேயே மதிப்பில் ஓங்கியது. இந்தக் கடிதம் எழுதப்பட்டபோது முழு விஷயமும் அறிந்ததான ஓர் உயரிய கௌரவம் தமக்கு உண்டென்ற எண்ணம் நிச்சயமாக இருந்தது. இப்பொழுதும் சரி, முன்பும் சரி, நோக்கம் என்னவோ கறுப்புச் சட்டத்தை ரத்தாக்க வேண்டும் என்பதே. ஆனால், பிரயோகித்த சொல் நடையிலும், தேர்ந்த வேலை முறைகளிலும், மற்றவைகளிலும் மாறுதல் இருந்தது. ஓர் அடிமை தன் ஆண்டைக்கு வணங்குவதிலும் ஒரு நண்பன் தன் நண்பனுக்கு வணங்குவதிலும், வணக்கம் செலுத்தும் விதம் ஒன்றேயானாலும், இரண்டிற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. இந்த நோக்கத்திலிருந்து பார்க்கும் ஒருவர், அடிமை யார், நண்பன் யார் என்பதை உடனே தெரிந்துகொள்ளுவார்.

அந்த 'இறுதி எச்சரிக்கை' அனுப்பப்பட்டபோதே எங்களுக்குள் அதிக விவாதம் நடந்தது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் பதில் வரவேண்டுமென்று சொல்லுவது திமிர் என்றுதானே கருதப்படும்? அது சர்க்கார் மனத்தைக் கல்லாக்கி, ஷரத்துக்களை அவர்கள் ஏற்றுக் கொள்ளுவதாயிருப்பினும் அவற்றை நிராகரிக்கும்படி தூண்டாதா? சர்க்காருக்குச் சமூகத்தின் தீர்மானத்தை மறைமுகமாகத் தெரிவித்துக் கொண்டால் போதாதா? இந்த யோசனைகளையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்தபின்பு, நாங்கள் எங்களுக்குச் சரியெனப் பட்டதையே செய்யவேண்டுமென்ற முடிவுக்கு ஒரே மனதாக வந்தோம். அவமரியாதையாக நடந்ததான குற்றத்திற்கும், அந்த எரிச்சலால் சர்க்கார் நமக்கு அளிக்க இருந்ததையும் மறுக்கும் சங்கடத்திற்கும் ஆளாகவேண்டும். நாம் எவ்விதத்திலும் மனிதர்கள் என்ற முறையில் நாம் குறைந்தவர்கள் அல்ல என்றும், துன்பத்தை எத்தனை நாளானாலும் சகிக்கக்கூடிய ஆற்றல் நம்மிடம் உண்டு என்றும் நாம் நம்பினால், தயக்கமின்றி ஒரு நேரான வழியை மேற்கொள்ள வேண்டியதுதான்.

ஒருவேளை இப்போது நாங்கள் மேற்கொண்ட நடவடிக்கைகளில் ஒரு புதுமையும் மேன்மையும் இருப்பதை வாசகர்கள் தெரிந்துகொள்ளலாம். சட்டசபையிலும், வெளியே ஐரோப்பிய வட்டாரங்களிலும் இந்தச் சிறப்பு எதிரொலித்தது. சிலர், இந்தியர்களை அவர்களுடைய துணிவுக்காகப் பாராட்டினார்கள். வேறு சிலர், மிகவும் கோபம் கொண்டு இந்தியர்களுடைய அகம்பாவத்திற்காக அவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கவேண்டுமென்றனர். இரு தரப்பினரும் இந்தியர்களுடைய இயக்கத்தின் புதுமையைத் தம் வகையில் ஒப்புக்கொண்டனர். முதலில் ஆரம்பித்தபோது புதுமையாக இருந்ததான சத்தியாக்கிரக இயக்கத்தைவிடப் பெரும் பரபரப்பை இந்தக் கடிதம் உண்டுபண்ணியது. காரணம் தெளிவானதே. சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தபோது, இந்தியர்களால் செய்யவல்லது என்ன என்று ஒருவருக்கும் தெரியாது. ஆகவே, அத்தகைய கடிதமோ அல்லது அதில் அமைந்திருந்த பாணியோ அந்த ஆரம்ப நிலைக்கு உகந்ததாக இருந்திருக்காது. ஆனால் இப்போதோ, சமூகம் அக்கினி பரீட்சையில் தேர்ந்துவிட்டது. தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளைப் போக்கிக்கொள்ளவும், அம்முயற்சியில் தோன்றக்கூடிய இன்னல்களைச் சகித்துக்கொள்ளவும், இந்தியருக்கு வன்மை இருந்ததையும் எல்லோரும் கண்டுவிட்டனர். ஆகவே, 'இறுதி எச்சரிக்கை' எழுதப்பட்டிருந்த சொல்நடை இயல்பாகவே தோன்றியதாகும். இது சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவாறே ஏற்பட்டதாகும்.

## இருபத்தேழாவது அத்தியாயம்

# பதிவுப் பத்திரங்களுக்கு எரியூட்டல்

சட்டசபையில் புது ஆசியா சட்டம் நிறைவேற்றப்படும் தினத்தன்றே, 'இறுதி எச்சரிக்கை'யின் கால வரம்பு முடிவடைய இருந்தது. குறிப்பிட்ட நேரத்தைக் கடந்து இரண்டு மணி நேரம் சென்ற பிறகு, பத்திரங்களைத் தீக்கு இரையாக்கும் பொது விழா நடத்துவதற்காக ஒரு கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. சர்க்காரிடமிருந்து சாதகமான பதில், எதிர்பாராதபடி கடைசி நேரத்தில் வந்தாலும், கூட்டம் பயனற்றதாகப் போகாது. ஏனென்றால், சர்க்காரின் சாதகமான முடிவைச் சமூகத்துக்கு அறிவிக்க அந்தக் கூட்டத்தினை உபயோகித்துக் கொள்ளலாம் என்று சத்தியாக்கிரகக் கமிட்டியார் கருதினார்கள்.

ஆயினும், 'இறுதி எச்சரிக்கை'க்குச் சர்க்கார் பதிலே தராது என்றுதான் கமிட்டியினர் நினைத்திருந்தனர். நாங்கள் எல்லோரும் கூட்டத்திற்குச் சற்று முன்னதாகவே சென்றிருந்து, சர்க்காரிடமிருந்து பதில் ஏதாவது தந்தி மூலம் வந்தால் அதை உடனே அக்கூட்டத்திற்குக் கொண்டுவந்து தர ஏற்பாடுசெய்திருந்தோம். கூட்டம் ஜொஹன்னஸ்பர்க்கில் *1908*-ஆம் ஆண்டு ஆகஸ்டு *16*-ஆம் தேதி மாலை *4* மணிக்கு ஹமீதியா மசூதியைச் சேர்ந்த மைதானத்தில் நடந்தது. எல்லா வகுப்புகளையும் சேர்ந்த இந்தியர்களும் துளிக்கூட இடம் விடாமல் அங்கே நிரம்பிவிட்டனர். தென்னாப்பிரிக்காவிலுள்ள நீக்கிரோக்கள், தங்கள் உணவை நாலு கால்கள்மீது நிற்கும் வாணாய்களிலிருந்து எடுத்துச் சாப்பிடுவது வழக்கம். இருந்ததில் பெரிய அளவான இத்தகைய வாணாய் ஒன்றை இந்திய வியாபாரி ஒருவர் கடையிலிருந்து வாங்கி, மைதானத்தின் ஒரு மூலையில் எழுப்பிய மேடைமீது பத்திரங்களைக் கொளுத்துவதற்கென வைத்திருந்தனர்.

கூட்ட நிகழ்ச்சி ஆரம்பமாக இருந்த சமயம், ஒரு தொண்டர் சைக்கிளில் சர்க்கார் அனுப்பிய தந்தியுடன் வந்தார். அந்தத் தந்தியில், சர்க்கார் இந்தியச் சமூகத்தின் தீர்மானத்திற்கு வருந்துவதாகவும், தங்கள் செயல் முறையை மாற்ற இயலாமையைத் தெரிவிப்பதாகவும் கூறப்பட்டிருந்தது. கூடியிருந்த மக்களிடம் அதைப் படித்தபோது பத்திரங்களைக் கொளுத்தும் வாய்ப்பு கைநழுவி விடாது என்ற மகிழ்ச்சியினால் குதூகலப்

படுவதுபோல் கூட்டத்தினர் அதை வரவேற்றனர். 'இறுதி எச்சரிக்கை'க்கு சர்க்கார் உடன்பட்டிருந்தால் இந்த எரியூட்டல் நடக்காது போயிருக்கும். ஆனல், இப்போது சர்க்காருடைய பதிலை அத்தகைய கரகோஷத்துடன் வரவேற்க கூட்டத்தி லிருந்த ஒவ்வொரு நபரையும் எந்த உணர்ச்சி தூண்டியதென் பதைத் தெரிந்துகொள்ளாமல், அப்படி அவர்கள் மகிழ்ச்சியை வெளிக்காட்டியது சரியா, தவரு என்பதைப் பற்றித் திட்டமான அபிப்பிராயம் கூறுவது சிரமமான காரியம். எனினும், இது மட்டும் கூறலாம். அதாவது, அவர்களுடைய மகிழ்ச்சி ஆரவாரம் கூட்டத்தில் பரவிய உற்சாகத்தின் ஓர் அடையாளமாக இருந் தது. இந்தியர் இப்போது தங்களுக்குள்ள சக்தியைப்பற்றி ஓரளவு உணர்ந்திருந்தனர்.

கூட்டம் ஆரம்பமாயிற்று. தலைவர் கூட்டத்தை உஷார் செய்து, நிலைமையையும் விவரித்தார். தகுதியான தீர்மானங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஒப்பந்தம் சம்பந்தமாகத் தொடர்ந்து நடந்து வந்த சமரசப் பேச்சு நடவடிக்கைகளின் பல கட்டங் களைப் பற்றி நான் விளக்கியதோடு. "பத்திரத்தைக் கொளுத்தும் படி தந்து விட்டு, இப்போது திரும்பப் பெற வேண்டுமென எந்த இந்தியராகிலும் விரும்பினல் அவர் முன்னல் வந்து பெற்றுக் கொள்ளட்டும்" என்று கூறினேன். "பத்திரங்களைக் கொளுத்து வது மட்டுமே குற்றம் ஆகிவிடாது; சிறை செல்ல விரும்புகிறவர் களுக்குச் சிறைத் தண்டனையையும் அளிக்காது. பத்திரங்களைக் கொளுத்துவதால் நாம் கறுப்புச் சட்டத்திற்கு ஒருபோதும் உட்படுவதில்லை என்பதையும், பத்திரங்காட்டும் அதிகாரத் தையுங்கூட விட்டுவிடுகின்ருேம் என்பதையும் நாம் நிறை வேற்றும் இந்தத் தீர்மானத்தின் மூலம் வெளிப்படுத்துவதாகும். ஆனல், இன்று இங்கே பொசுங்கிச் சாம்பலாகும் பத்திரங் களின் நகலை, நாளை எவர் வேண்டுமானலும் வாங்கிக்கொள்ள லாம். இங்கே யாராகிலும் அப்படிப்பட்ட கோழைத்தனமான செயல்களைச் செய்ய நினைத்துக்கொண்டிருந்தாலும், அல்லது இந்தக் கஷ்டத்தைச் சகிக்கத் தங்களுக்குச் சக்தி உண்டா என்று சந்தேகப்பட்டாலும், அவர்கள் தங்கள் பத்திரங்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள இன்னும் நேரம் இருக்கிறது. அவற் றைத் திருப்பிக் கொடுக்க முடியும். இப்போது, அவற்றைத் திரும்பப் பெறுவதற்காக யாரும் வெட்கப்பட வேண்டியதில்லை. அப்படிப் பெற்றுக்கொள்ளுவதனல் ஒருவிதமான தைரியத் தையே அவர்கள் காட்டுவதுமாகும். ஆனல், பின்னர்ப் பத்திரங்

களின் நகலைப் பெற்றுக்கொள்ளுவது அவமானம் மட்டுமல்ல, சமூகத்தின் சீரிய நலன்களுக்குத் தீங்காகவும் முடியும். இது ஒரு நீண்ட நாள் போராட்டமாக இருக்கப்போகிறதென்பதை நாம் மீண்டும் கவனத்தில் வைத்துக்கொள்ளுவோம். நம்மில் சிலர், முன்வைத்த காலைச் சற்றுப் பின் வாங்கி விட்டனர் என்பது தெரியும். அந்த அளவுக்குப் போர்முனையில் இருப்பவரின் பொறுப்பு இன்னும் அதிகமாகியிருக்கிறது. இவை அனைத்தையும் நீங்கள் நன்ருக யோசனை செய்து பார்த்த பிறகே இன்று நாம் முனைந்துள்ள காரியத்தில் இறங்கலாம். இது தான் நான் கூறும் புத்திமதி'' என்றேன்.

நான் பேசிக்கொண்டிருந்தபோதே, "எங்களுக்குப் பத்திரங்களைத் திருப்பவேண்டாம், அவற்றைக் கொளுத்துங்கள்" என்று பல குரல்கள் எழுந்தன. கடைசியாக, இந்தத் தீர்மானத்தை எதிர்க்க யாராவது விரும்பினல் அவர்கள் முன் வரலாமென்று கூறினேன். ஒருவரும் எழுந்திருக்கவில்லை. மீர் ஆலம்கூட இந்தக் கூட்டத்திற்கு வந்திருந்தார். தாம் முன்பு என்னைத் தாக்கியது மிகவும் தவருன காரியம் என்று அவர் கூட்டத்தில் அறிவித்து, சுய விருப்பத்துடன் பத்திரத்தைக் கொள்ளாததால் தமது மூலப்பத்திரத்தைக் கொளுத்தும்படி தந்தார். கூட்டத்தினரும் பெருமகிழ்ச்சி அடைந்தனர். நான் அவர் கையைப் பிடித்து அதை ஆனந்தத்துடன் அழுத்தி, அவரிடம் விரோதமோ, கோபமோ என் மனத்துள் கொண்டிருக்கவில்லை என அவருக்கு உறுதி கூறினேன்.

கமிட்டியிலும் ஏற்கனவே கொளுத்தப்படுவதற்காக 2,000-க்கு மேற்பட்ட பத்திரங்கள் வந்து சேர்ந்திருந்தன. அவையனைத்தையும் வாணுக்குள் போட்டு எண்ணெய் ஊற்றி, ஸ்ரீ யூசுப் மியான் தீ வைத்தார். கூடியிருந்த அத்தனை பேரும் எழுந்து, இந்த எரிமூட்டும் படலம் முடியும் வரை இடையருத மகிழ்ச்சி ஆரவாரத்தால் அந்த இடத்தையே கலகலப்பாக்கினர். இதுகாறும் பதிவுப்பத்திரங்களை வெளியே எடுக்காதிருந்த சிலர், மேடையருகே அவைகளை ஏராளமாகக் கொண்டு வந்தனர்; அவையும் தீக்கு இரையாயின. அவர்களுள் ஒரு நண்பரை, கடைசி நேரம்வரை பத்திரத்தைக் கொடுக்காமல் இருந்ததற்குக் காரணம் வினவியபோது, தருணம் பார்த்துத் தரத் தாம் இருந்ததாகவும், அப்படிச் செய்தால், பார்ப்பவர்களுக்கும் உணர்வு வருமென்றும் அவர் பதில் கூறினர். மற்ருெருவர், மனம் விட்டுத் தனக்குத் தைரியமில்லை யென்றும்,

இந்தப் பத்திரங்களை நெருப்பில் இடமாட்டார்கள் என்றும் தாம் நினைத்ததாகவும், பத்திரங்களை எரிப்பதைப் பார்த்துப் பத்திரத்தை வைத்துக்கொண்டு தன்னால் சும்மா இருக்க முடியவில்லையென்றும், இதனால் மற்றவர்களுக்கு நேரப் போவதுதானே தனக்கும் நேருமென்று எண்ணியதாகவும் சொன்னார். இத்தகைய கரவு இராத மனப்பான்மை இந்தப் போராட்டத்தில் அடிக்கடி நேர்ந்த அனுபவங்களாகும்.

இந்தக் கூட்டத்திற்கு வந்திருந்த ஆங்கிலப் பத்திரிகை நிருபர்களை இந்தக் காட்சிகள் மிகவும் கவர்ந்துவிட்டதால் தம் பத்திரிகைகளில் இந்த நிகழ்ச்சியை நன்றாக வருணித்து எழுதி யிருந்தனர். 'லண்டன் டெய்லி மெயில்' பத்திரிகையின் ஜொஹன்னஸ்பர்க் நிருபர், அந்தப் பத்திரிகைக்கு இதைக் குறித்து விவரமான வருணனை ஒன்று அனுப்பி இருந்தார். அதில் அவர், இந்தியர்கள் நடத்திய இந்த எரியூட்டலைப் போஸ்டன் தேயிலைக் கோஷ்டியின் நிகழ்ச்சியோடு* ஒப்பிட்டிருந்தார். அமெரிக்காவில் பல்லாயிரக் கணக்கிலிருந்த பலமுள்ள ஐரோப்பியருக்கு எதிராக பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் முழு சக்தியும் ஆவேசத்துடன் பாய்ந்தது. இங்கே தென்னாப்பிரிக்காவிலோ, எந்த உதவியும் இராத 13,000 இந்தியர்கள், பலமிக்க டிரான்ஸ்வால் சர்க்காருக்குச் சவால் விட்டிருக்கின்றனர். அதைப் பார்க்கையில் அந்நிருபரின் வருணனை, இந்தியருக்கு நியாயத்தைச் செய்ததாக நான் கருதவில்லை. இந்தியர்களுக்கு இருந்த ஒரே ஆயுதம், அவர்களுடைய லட்சியத்தின் நேர்மையும் கடவுளிடத்தில் உள்ள அசையாத நம்பிக்கையுமே ஆகும். நெறி பிறழாதவர்களுக்கு இது அமோகமான வலிமையும், போதுமான ஆயுதமேயானாலும் அதை உணராத சாதாரண மனிதனுக்கே, 13,000 இந்தியர்கள் எந்த ஆயுதமுமின்றி எதிர்ப்பது, தகுந்த ஆயுத பலத்துடனிருந்த அமெரிக்க, ஐரோப்பியர்கள் எடுத்துக்கொண்ட நடவடிக்கையின் எதிரே துச்சமாகத் தோன்றும். கடவுள் எளியவரின் பக்கம் நிற்பதால், உலகம் அவர்களை நகைத்தால்தான் என்ன!

---

* மூன்றாம் ஜார்ஜ் காலத்தில் பிரிட்டிஷ் பார்லிமெண்டு விதித்த கடுமையான வரி, அமெரிக்க மக்களிடையே கிளர்ச்சியை மூட்டியது. 1773 டிசம்பர் 16-ஆம் தேதி தேயிலையுடன் வந்த கப்பலில் சிலர் புகுந்து, தேயிலையைக் கடலில் கொட்டினர். இதுவே 1775, 1783-இல் நடந்த அமெரிக்கச் சுதந்திரப் போராட்டத்தின் பூர்வாங்கமாகும்.

## இருபத்தெட்டாவது அத்தியாயம்

# புதிய தகராறைக் கிளப்புவதாகக் குற்றச்சாட்டு

கறுப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்ட அதே ஆண்டில் ஜெனரல் ஸ்மட்ஸ், டிரான்ஸ்வாலில் குடியேற்றக் கட்டுப்பாட்டுச் சட்டம் என்ற மற்றொரு மசோதாவைச் சட்டசபையின் மூலமாக அமலுக்குக் கொண்டுவந்தார் (1907-ஆம் வருட 15-வது சட்டம்.) அது வெளிப்பார்வைக்குப் பொதுப்படையாகத் தோன்றினும் முக்கியமாக இந்தியர்களை பாதிப்பதையே குறியாகக் கொண்டிருந்தது. இந்தச் சட்டம், நேட்டாலில் அதேபோல் இருந்த மற்றொரு சட்டத்தைப் பொதுவாகப் பின்பற்றியிருந்தது. ஆனால், கல்விப் பரீட்சைகளில் தேறினாலும் ஆசியச் சட்டப்படி பதிவுக்குத் தகுதியற்றவர்களைக் குடியேற்றத் தடைக்கு உட்படச் செய்தது. ஆகவே, அது மறைமுகமாக ஓர் இந்தியன் கூட புதிதாக நுழைய முடியாதபடி தடுக்கும் கருவியாயிற்று.

தங்களுடைய உரிமைகளுக்கு விரோதமாக எழுந்த இந்தப் புதிய ஆக்கிரமிப்பைத் தடுப்பது இந்தியர்களுக்கு முழுவதும் அவசியமாயிற்று. ஆனால், சத்தியாக்கிரகப் போராட்டத்திற்கு இதுவும் ஓர் அடித்தளமாக இருக்கவேண்டுமா என்ற பிரச்னை எழுந்தது. எப்போது, எந்த விஷயங்களுக்காகச் சத்தியாக்கிரகம் தொடுக்கவேண்டும் என்பதைப்பற்றி முடிவுசெய்து கொள்ளுவதில் சமூகம் எந்தக் கட்டுப்பாட்டிற்கும் உட்படவேண்டியதில்லை. ஆனால், இதைத் தீர்மானிக்கும்போது மக்கள் விவேகத்தின் வரம்பை மீறக்கூடாது என்பதும், தங்கள் சக்தியை நன்கு தெரிந்துகொண்டிருக்கவேண்டும் என்பதும் மிக அவசியம். நினைத்தபொழுதெல்லாம், கண்ட சந்தர்ப்பங்களிலும் சத்தியாக்கிரகம் செய்வது துராக்கிரகமாகிவிடும். தனக்குள்ள சக்தியைத் தெரிந்துகொள்ளாமல் எவராவது சத்தியாக்கிரகத்தை மேற்கொண்டு பிறகு தோல்வியுற்றால், அவர் தம்மை இழிவாக்கிக் கொள்ளுவதுடன் நிகரற்ற ஆயுதமாகிய சத்தியாக்கிரகத்தைத் தம் மடமையால் இகழ்ச்சிக்குக் கொண்டுவந்து விட்டவருமாவார்.

சத்தியாக்கிரகக் கமிட்டியினர், இந்தியர்களின் சத்தியாக்கிரகம் கறுப்புச் சட்டத்திற்கு விரோதமாகச் செலுத்தப்பட்ட

தென்பதை அறிவர். அதனுல் கறுப்புச் சட்டம் ரத்தானுல் குடியேற்றக் கட்டுப்பாட்டுச் சட்டமும், ஏற்கனவே நான் குறிப்பிட்டுள்ளபடி, தன் விஷத்தை இழந்துவிடும் என்பதையும் கண்டனர். ஆயினும், குடியேற்றச் சட்டத்திற்கு எதிராக ஒரு தனி இயக்கம் அவசியமில்லை என்ற எண்ணத்துடன் இந்தியர்கள் அதைப்பற்றி நடவடிக்கை எதுவும் எடுக்காவிட்டால், அவர்களுடைய செயலின்மை எதிர்காலத்தில் தங்களுடைய குடியேற்றத் தடுப்பிற்கு முற்றிலும் சம்மதம் தந்ததாகப் பொருள் பட்டுவிடும். ஆகையால், குடியேற்றச் சட்டத்தையும் எதிர்த்தேயாகவேண்டும். அதையும் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமா என்பதுதான் ஒரு கேள்வி. சத்தியாக்கிரகப் போராட்டம் நடந்துகொண்டிருக்கையில் தங்கள் உரிமைகளைப் பாதிப்பதான புதிய தாக்குதல்களையும் சத்தியாக்கிரகத்துடன் சேர்த்துக்கொள்ளுவதே தங்கள் கடமை என்பது தான் சமூகத்தினருடைய கருத்து. அப்படிச் செய்வதற்குத் தங்களுக்கு வலிமை இல்லை என்று அவர்கள் கருதினுல் அது முற்றிலும் வேறு விஷயமாகும். குடியேற்றச் சட்டத்தை அப்படியே விட்டுவிடுவதற்குத் தங்களுடைய சக்தியின்மையோ அல்லது சக்திக்குறைவோ சாக்குப்போக்காக இருக்கக்கூடாது; ஆகவே, அந்தச் சட்டமும் சத்தியாக்கிரகப் போராட்டத்திற்கு இலக்காக அமைய வேண்டுமென்ற முடிவுக்கு தலைவர்கள் வந்தனர்.

ஆகவே, சர்க்காருடன் இந்த விஷயத்தைப்பற்றிக் கடிதத் தொடர்பு வைத்துக்கொள்ளப்பட்டது. இதனுல், சட்டத்தில் ஒரு மாறுதலை இயற்ற ஜெனரல் ஸ்மட்ஸை எங்களால் தூண்டிவிட முடியாது. ஆனுல், அது சமூகத்தின்மீது-உண்மையாகக் கூறுமிடத்து என்மீது-பழி கூறுவதற்கு ஒரு புதிய பற்றுக்கொம்பாக அவருக்கு ஆயிற்று. பகிரங்கமாக எங்களுக்கு உதவி செய்தவர்களைத் தவிர ஐரோப்பியர்களில் பலரும் எங்களுடைய இயக்கத்திற்கு ரகசியமாக அனுதாபம் காட்டினர் என்பது ஜெனரல் ஸ்மட்ஸுக்கு நன்ருகத் தெரியும். முடிந்தால் அவர்கள் கொண்டிருந்த அனுதாபத்தைப் போக்கிவிடவேண்டுமென்று அவர் விரும்பியது இயல்புதானே. ஆகவே, நான் ஒரு புதிய தகராறைக் கிளப்புவதாக என்மீது அவர் குற்றஞ்சாட்டினுர். தமக்குத் தெரிந்த அளவு என்னைப்பற்றி அவர்களுக்குத் தெரிந்திராதென, எங்களுக்குப் பக்கபலமாக நின்றவர்களிடம் நேரிடையாகவும் கடிதம் மூலமாகவும் தெரிவித்தார். அவர் சற்று விட்டுக்கொடுத்

தால் நான் தலைக்குமேல் ஏறிவிடுவேன் என்றுதான் அவர் ஆசியச் சட்டத்தை ரத்து செய்யவில்லையாம்! சத்தியாக்கிரகம் ஆரம்பித்தபோது புதிதாகக் குடியேறப் போகிறவர்களைப்பற்றி எவ்விதமான கேள்வியுமே எழவில்லையாம். இப்போது அவர் டிரான்ஸ்வாலின் நலத்தைக் கருதி மேலும் புதிதாக இந்தியர்கள் நுழைவதைத் தடுப்பதற்குச் சட்டம் ஏற்படுத்தும்பொழுது, அதற்காகவும் சத்தியாக்கிரகம் ஆரம்பிப்பதாக நான் பயமுறுத்து கிறேனும். இந்தத் தந்திரத்தை இனிமேல் தம்மால் சகிக்க முடியாது என்றும், என்னுல் முடிந்ததைச் செய்துகொள்ளலாம் எனவும், இதனுல் இந்தியர்கள் அனைவரும் அழிந்துபோவார்கள் என்றும், ஆனுல், தாம் என்னவோ ஆசியச் சட்டத்தை ரத்து செய்யப் போவதில்லை என்றும் டிரான்ஸ்வால் சர்க்காரும் இந்தியர்களைப் பற்றி மேற்கொண்டுள்ள தம் கொள்கையை விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்றும் எழுதினுர்; கூறினுர். இந்த நியாயமான நோக்கத்திற்கு எல்லா ஐரோப்பியரின் ஆதரவும் அரசாங்கத்திற்கு வேண்டும் என்றும் கோரினுர்.

கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் இந்த வாதம் எவ்வளவு நியாயமற்றது, நெறியற்றது என்பது புலனுகும். குடியேற்றக் கட்டுப்பாட்டுச் சட்டம் போன்றது எதுவுமே இதுவரை இல்லாமலிருந்தபோது, இந்தியர்களோ அல்லது நானே அதை எப்படி எதிர்ப்பது? ஜெனரல் ஸ்மட்ஸ், 'தந்திரம்' என்று குறிப்பிடும் என் காரியங்களைப்பற்றித் தமக்கு நல்ல அனுபவம் உண்டென்று நயமாகப் பேசினுர். ஆனுல், அதற்கு ஆதரவாக ஓர் உதாரணத்தைக்கூட அவரால் காட்டமுடியவில்லை. நான் இத்தனை வருடங்களாகத் தென்னுப்பிரிக்காவில் இருந்தவன். அவர் சொல்லும் 'தந்திர'த்தை நான் கையாண்டதாக எனக்கு ஞாபகமில்லை. இன்னும், மேற்கொண்டு சொல்லப்போனுல், நான் என் வாழ்விலேயே தந்திரத்தின் உதவியை ஒருபோதும் நாடியதில்லை. இதைக் கொஞ்சங்கூடத் தயக்கமின்றிக் கூறுவேன். தருமநெறிப்படி தந்திரம் தவறுனதுமட்டுமன்று, அரசியல் முறைப்படியும் உசிதமற்றது என்று நான் நினைக்கிறேன். ஆகவே, நடைமுறையிலும்கூட அதன் உபயோகத்தை நான் எப்பொழுதுமே தடுத்திருக்கிறேன். என்னைக் காத்துக் கொள்ளவேண்டிய தேவை எனக்குச் சிறிதுமில்லை. யார் பொருட்டு இதை நான் எழுதுகிறேனே அந்த வாசகர்கள் எதிரில் என்னைக் காத்துக்கொள்ளுவதாயிருந்தால் நான் வெட்கிப் போவேன். நான் தந்திரம் எதுவும் அறியாதவன் என்று அவர்

களுக்கு இப்பொழுதுகூட தெரியாதிருக்குமானல் என்னுடைய தற்காப்பின் பொருட்டு நான் என்ன எழுதினலுங்கூட அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படாது. சத்தியாக்கிரகப் போராட்டத்தின்போது எங்களுக்கு எதிர்ப்பட்ட துன்பங்களைப் பற்றியும் இடுக்கண் நிரம்பியிருந்தாலும், இறுக்கமான குறுகிய பாதையிலிருந்து இந்தியர்கள் மயிரிழை தவறிவிட்டாலும் இந்த இயக்கத்திற்கு நேரிடக் கூடிய ஆபத்தைப்பற்றியும் வாசகர்களுக்குத் தெரிவிக்கவே இச்சில வரிகளை எழுதினேன். இருபது அடி உயரத்தில் கட்டிய கயிற்றின்மேல் நடப்பவன், கவனத்தை எல்லாம் கயிற்றின்மீதே செலுத்த வேண்டும். அப்படிச் செய்யும் போது அவன் சற்றுப் பிசகிப்போனலும், அவன் விழுவது எந்தப் பக்கமாயிருந்தாலும் அவனுக்குக் கிட்டுவது மரணந்தானே! தென்னப்பிரிக்காவில் சத்தியாக்கிரகத்தைப் பற்றி எனக்கு ஏற்பட்ட இந்த எட்டு வருட அனுபவம், கயிற்றுமீது நடப்பவனைவிட, முடியுமானல் அதிகமாகவும், ஒரு சத்தியாக்கிரகி தன் நினைவை ஒரே குறியில் நிறுத்தவேண்டுமென்பதை உணர்த்தியிருக்கிறது. ஜெனரல் ஸ்மட்ஸ், இந்தக் குற்றச்சாட்டை என்மீது நண்பர்கள் முன்னலேயே சுமத்தினர். அவர்கள் என்னை நன்கு அறிவார்கள். ஆகவே, குற்றச்சாட்டு ஜெனரல் ஸ்மட்ஸ் விரும்பியதற்கு மாறான பலனையே விளைவித்தது. அவர்கள் என்னையோ இந்த இயக்கத்தையோ விட்டுக் கொடுக்காமல் இருந்ததுடன் எங்களை ஆதரிப்பதில் இன்னும் அதிகமான உற்சாகம் கொண்டனர். இந்தியர்களும், பிறகு சத்தியாக்கிரக இயக்கத்துடன் குடியேற்றச் சட்டத்திற்கும் இந்தச் சத்தியாக்கிரக முறையைப் பிரயோகிக்காமல் இருந்தால் அளவிலாத துன்பத்துக்கு உட்பட வேண்டியிருந்திருக்கும் என்று கண்டுகொண்டனர்.

பெருக்கல் விதி எல்லா நேர்மையான போராட்டத்திற்கும் பொருத்தமாகும் என்பதை என்னுடைய அனுபவம் கற்பித்திருக்கிறது. ஆனல், சத்தியாக்கிரகத்திலோ அது ஒரு மாருத அடிப்படை உண்மையாகிவிடுகிறது. கங்கை ஆறு போகப் போக, பல கிளை நதிகள் அதனுள் பாய்கின்றன. ஆகவே, நதி முகத்துவாரத்தில் அது மிகவும் அகலமாகி, இரு கரையும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. நதியில் படகில் செல்லும் ஒருவருக்கு அது எங்கே முடிகிறது, கடல் எங்கே துவங்குகிறது என்று தெரிந்துகொள்ளவும் முடிவதில்லை. அதேமாதிரி சத்தியாக்கிரகப் போராட்டம் முன்னேறும்பொழுது, மற்ற பல சக்திகள் அதன் பெருக்கை அதிகரித்து வைப்பதால் அது நோக்கிச் செல்லும் பலன்

களிலும் தொடர்ந்த வளர்ச்சியே உண்டாகின்றது. இது உண்மையாகவே தவிர்ப்பதற்கரிது; சத்தியாக்கிரகத்தின் முதல் கொள்கைகளுடன் இணைக்கப்பட்டதாகும். ஏனெனில், சத்தியாக்கிரகத்தில் குறைந்த அளவே அதிக அளவுமாகும். அதுவே மேற்கொண்டும் குறைக்கமுடியாத அளவாக இருப்பதால், பின் வாங்குவது என்பதே அதில் இல்லை. முன்னேறுவது ஒன்றே அதற்குரிய சலனமாகும். மற்றப் போராட்டங்களில் நேர்மையாக இருக்கும்பொழுதுகூட, வேண்டப்படும் உரிமைகள், பின்னுல் குறைத்துக்கொள்ளக்கூடியவாறு சற்று அதிகமாகவே வைக்கப்படுகின்றன. ஆகவே பெருக்கல் விதி அவற்றுக்கெல்லாம் அடியோடு பொருத்தமாவதில்லை. ஆனுல், சத்தியாக்கிரகத்தைப்போல் மிகக் குறைந்த அளவே மிக உயர்ந்த அளவாகவும் இருக்கும் போராட்டத்தில் பெருக்கல் விதி எங்ஙனம் வேலை செய்கிறது என்பதை நான் விளக்கவேண்டும். கங்கை நதி, அதில் சேரும் கிளை ஆறுகளைத் தேடிக்கொள்ளுவதற்காகத் தன் வழியை விட்டு விலகுவதில்லை. அதைப்போலவே சத்தியாக்கிரகியும் கத்தி முனை போன்று கூர்மையானதான தன் பாதையை விட்டு விலகுவதில்லை. ஆனுல், கங்கை நதி முன்னேறிச் செல்லச் செல்லக் கிளை ஆறுகள் தாமாகவே கங்கையை அடைவது போல் சத்தியாக்கிரக நதியிலும் நடக்கின்றது. சத்தியாக்கிரகத்தில் குடியேற்றச் சட்டமும் சேர்க்கப்பட்டதைக் கண்டு, சத்தியாக்கிரகத்தின் கொள்கைகளை உணராத டிரான்ஸ்வாலைச் சார்ந்த இந்தியர் சிலர், இந்தியருக்கு விரோதமாக இருக்கும் மொத்தச் சட்டங்களையும் அங்ஙனமே பாவிக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். மேலும் சிலர், டிரான்ஸ்வால் போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போதே தென்னுப்பிரிக்காவில் உள்ள இந்தியர்கள் அனைவரையும் திரட்டி நேட்டால், கேப் காலனி, ஆரஞ்சு ப்ரீ ஸ்டேட் முதலிய இடங்களில் இந்தியருக்கு விரோதமாக அமலிலுள்ள எல்லாச் சட்டங்களையும் எதிர்த்துச் சத்தியாக்கிரகம் நடத்த வேண்டுமென்ற கருத்தைத் தெரிவித்தனர். இவ்விரு யோசனைகளும் கொள்கையை மீறுவனவாகும். சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்தபோது நமது நோக்கத்திலேயே இல்லாத ஒரு நிலைக்கு இத்தகைய வாய்ப்பைக் கொண்டு வருவது யோக்கிய மற்ற செயலாகும் என்று நான் தெளிவாகக் கூறினேன் நாம் இப்போது எவ்வளவு பலமுள்ளவர்களாக இருந்த போதிலும், இந்தப் போராட்டம் எந்தக் கோரிக்கை நிமித்தம் ஆரம்பிக்கப்பட்டதோ அது நிறைவேற்றப்பட்டதும் முடிவடைய வேண்டியதே. நாங்கள் இந்தக் கொள்கையை நடைமுறையில் கடைப்

பிடிக்காமல் இருந்தால் வெற்றி கொள்ளுவதற்குப் பதிலாக யாவற்றையும் தோற்று எங்கள் சார்பாகப் பெற்ற அனுதாபம் அனைத்தையும் இழந்திருக்க வேண்டியிருக்கும் என்று நான் நிச்சயமாகச் சொல்லுவேன். அதற்கு மாறாகப் போராட்டம் நடந்துகொண்டிருக்கும்போது எதிராளியே புது இடைஞ்சல் களை உண்டாக்கினால், அவை தாமாகவே போராட்டத்தில் சேர்க்கப்படும். ஒரு சத்தியாக்கிரகி தன்னுடைய கொள்கைக் குத் துரோகம் செய்யாமல் இருந்துகொண்டு தன் வழியில் போய்க்கொண்டிருக்கையில் இடைஞ்சல் குறுக்கிட்டால் அவற் றைப் புறக்கணிக்க முடியாது. எதிராளி, ஒரு சத்தியாக்கிரகி அல்ல. சத்தியாக்கிரகத்தைச் சத்தியாக்கிரகம் எதிர்ப்பது முடியாத காரியம். ஆகவே, குறைந்த அளவு, உயர்ந்த அளவு என்ற எல்லைக்கு எதிராளி கட்டுப்பட்டவனல்ல. எனவே, அவன் விரும்பினால், புதுப் பிரச்னைகளை எழுப்பிச் சத்தியாக்கிரகி யைப் பயமுறுத்த முயற்சிக்கலாம். ஆனால், சத்தியாக்கிரகி அச்சமென்பதையே துறந்தவன். சத்தியாக்கிரகத்தின் மூலமே பின்னால் நேரிடப்போவதும், முன்னால் இருந்தவையுமான துன்பங் களை எதிர்த்துப் போராடி எல்லாக் கஷ்ட நஷ்டங்களிலும் தனது பிடியை விடாமல் இருக்க அது உதவிசெய்யுமென்று நம்பு கிறான். ஆகவே, சத்தியாக்கிரகப் போராட்டம் எதிராளியால் நீடிக்கப்படும்பொழுது எதிராளிதான் நஷ்டம் அடைகிறான். சத் தியாக்கிரகிக்கு லாபம் உண்டாகும். போராட்டத்தின் பிற்பகுதி களில் இந்த நியதி வேலை செய்வதை வேறு உதாரணங்களைக் கொண்டு நாம் காணலாம்.

## இருபத்தொன்பதாவது அத்தியாயம்
# ஸோராப்ஜி ஷபுர்ஜி அடஜானியா

சத்தியாக்கிரகம் இப்போது குடியேற்றச் சட்டத்தையும் வளைத்துக்கொண்டபடியால், டிரான்ஸ்வாலில் கல்வி கற்ற இந்தியர்கள் நுழையும் உரிமையைச் சத்தியாக்கிரகிகள் பரிசோதிக்கவேண்டியதாயிற்று. கமிட்டி, ஒரு சாதாரண இந்தியரைக்கொண்டு இந்தப் பரிசோதனையை நடத்தக்கூடாது என்று தீர்மானம் செய்தது. புதுச் சட்டத்தின்படி சமூகத்தினர் அதனைப் புரிந்துகொண்ட எல்லா வகையிலும், குடியேறத் தடுக்கப்பட்ட ஓர் இந்தியர், டிரான்ஸ்வாலுக்குள் நுழைந்து சிறைக்குப் போக வேண்டுமென்பதே கருத்து. அதன் மூலமாகச் சத்தியாக்கிரகம், தன்னடக்கத்தை வித்தாகக் கொண்டு வளர்ந்து வரும் தனிச் சக்தி வாய்ந்தது என்பதை நாங்கள் காட்டவேண்டியிருந்தது. ஐரோப்பிய மொழி பயிலாத அல்லது தெரியாத எவருமே குடியேற்றத் தடைக்குட்பட்டவர் என்று அச்சட்டத்தின் ஒரு பிரிவில் ஷரத்து கண்டிருந்தது. ஆகவே, கமிட்டியினர் ஆங்கிலம் தெரிந்த, டிரான்ஸ்வாலுக்கு முன்பு சென்றிராத ஓர் இந்திய நபர் அங்கே புகவேண்டுமென்று கருதினர். இதன் பொருட்டுப் பல இளம் இந்தியர்கள் விருப்பத்துடன் முன்வந்தனர். அவர்களில் ஸோராப்ஜி ஷபுர்ஜி அடஜானியா தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஸோராப்ஜி ஒரு பார்ஸி. தென்னாப்பிரிக்கா முழுவதும் பார்ஸிகள் நூற்றுக்கு மேற்பட்டு இருப்பார்களோ என்னவோ, இந்தியாவில் நான் பார்ஸிகளைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துக்களையே தென்னாப்பிரிக்காவிலும் கொண்டிருந்தேன். உலகத்தில் சில ஆயிரம் பேரே பார்ஸிகள்* இருப்பார்கள். இந்தச் சிறிய சமூகம் பல காலமாகத் தன்னுடைய கண்ணியத்தைக் காத்து வருகிறது. தன்னுடைய சமயக் கொள்கைகளை விடாமல் இருக்கிறது. தான தருமம் செய்வதில் உலகத்திலேயே தனக்கு இணையில்லை என்று நிரூபித்திருக்கிறது. இவை யாவும் அவர்களுக்குரிய பண்பைத்தான் புகழ்ந்து கூறுகின்றன. ஆனால்,

---

* பார்ஸி: ஜோர்வாஸ்தரின் சந்ததியார். அக்கினியைக் கடவுளாக வழிபடுவோர். தம் சொந்த நாடாகிய பாரசிகத்திலிருந்து (இரான்) இந்தியாவில் குடியேறினார்கள். வாணிபத்துறையில் சிறந்தவர்கள். இச்சிறு சமூகத்தாருள் பலர் பெரிய தனவந்தர்கள்; கொடைவள்ளல்கள்.

ஸோராப்ஜியோ பத்தரை மாற்றுத் தங்கமென நின்ருர். அவர் போராட்டத்தில் சேர்ந்தபோது அவரைப்பற்றி எனக்கு அதிக மாகத் தெரியாது. சத்தியாக்கிரகத்தில் கலந்துகொள்ளும் விஷயமாக அவர் எழுதிய கடிதங்கள் என் மனத்தில் அவரைப் பற்றி நன்மதிப்பை உண்டாக்கின. பார்ஸிகளின் மகத்தான குணநலன்களில் நான் மிக்க பிரியம் கொண்டவன். அவர்கள் சமூகத்திற்குரிய குறைபாடு என்ன என்பது எனக்குத் தெரியாது. ஆகவே, ஸோராப்ஜி நெருக்கடி சமயங்களில் நிலைபிறழாமல் நிற்பாரோ மாட்டாரோ என்று நான் சந்தேகப்பட்டேன். இதற்கு மாருக ஒருவர் தம்மைப் பற்றித் தாமே உறுதி கூறும்பொழுது என் சந்தேகங்களைப் பொருட்படுத்துவது என் வழக்கமேயில்லை. ஆகவே, கமிட்டியினரிடம் ஸோராப்ஜியின் வார்த்தையை ஏற்றுக் கொள்ள நான் சிபாரிசு செய்தேன். ஸோராப்ஜியும் கடைசியில் முதல்தரச் சத்தியாக்கிரகியாக விளங்கினர். நெடுநாள் சிறை வாசம் செய்தவருள் ஒருவர் என்பது மட்டுமன்று; சத்தியாக் கிரகப் போராட்டத்தைப்பற்றி ஆழ்ந்த ஆராய்ச்சியும் செய்தவர் அவர். ஆகவே, யாவரும் மரியாதையுடன் அவருடைய கருத் துக்களை ஏற்றுக் கொண்டனர். உறுதி, அறிவு, அன்பு, நிதானம் ஆகிய இவை அவருடைய யோசனைகளில் எப்போதும் விளங் கும். அவர் ஓர் அபிப்பிராயத்தை ஏற்படுத்திக்கொள்ளுவதிலும் ஏற்கனவே கொண்டுள்ள அபிப்பிராயத்தை மாற்றுவதிலும், அவ சரப்படமாட்டார். வகுப்பு வேற்றுமையின் குறுகிய மனப் பான்மை இராத உண்மையான பார்ஸியாக அவர் இருந்தது போலவே, உண்மை இந்தியருமாகவும் விளங்கினர். போராட்டம் முடிந்ததும், யாராவது ஒரு நல்ல சத்தியாக்கிரகி இங்கிலாந்து சென்று வக்கீல் தொழில் பயிலுவதற்கு டாக்டர் மேத்தா ஓர் உபகாரச் சம்பளம் வழங்கினர். அதற்கு ஏற்ற ஆளைத் தேர்ந் தெடுப்பது என் பொறுப்பாயிற்று. அதற்குத் தகுதி வாய்ந்த வர்கள் இரண்டு மூன்று பேர்களே இருந்தனர். பழுத்த அறி விலும், சீர்தூக்கிப் பார்க்கும் நுட்பத்திலும், மதிப்பு முதிர்ச்சி யிலும் எவரும் ஸோராப்ஜிக்கு இணையாகார் என்று நண்பர்கள் நினைத்தபடியால் அவரே தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் தென் னுப்பிரிக்காவுக்குத் திரும்பியதும் என் ஸ்தானத்தை ஏற்றுச் சமூகத்தினர்க்குச் சேவை செய்யவேண்டுமென்பதே அதன் நோக்கம் ஆகும். ஸோராப்ஜி சமூகத்தினரின் ஆசியுடன் இங்கி லாந்துக்குச் சென்று திரும்பி உரியகாலத்தில் தொழிலில் ஈடு பட்டார். அவர் ஏற்கனவே தென்னுப்பிரிக்காவில் கோகலே யுடன் பழகியவர். இங்கிலாந்தில் அவருடன் இன்னும் நெருங்

கிப் பழக முடிந்தது. ஸோராப்ஜி, கோகலேயைக் கவர்ந்துவிட்டார். கோகலே இந்தியாவுக்குத் திரும்பும்போது அவரை இந்திய ஊழியர் சங்கத்தில் (Servants of India Society) சேரும் படி கேட்டுக்கொண்டார். இங்கிலாந்தில் ஸோராப்ஜி மாணவர்களிடையே செல்வாக்கு மிகுந்தவரானுர். பிறர் துயரைத் தம் துயரமாகவே பாவித்தார். இங்கிலாந்தில் நாகரிகப் பகட்டாலும், ஆடம்பரங்களாலும் அவருடைய உள்ளம் கறைபடவில்லை. இங்கிலாந்துக்குச் சென்றபோது அவருக்கு வயது முப்பதுக்குமேல் இருக்கும்: ஆங்கில மொழியில் ஓரளவுக்குப் பழக்கம் இருந்தது. மனிதனுடைய விடாமுயற்சியின் முன்பு கஷ்டங்கள் பறந்து போகின்றன. ஸோராப்ஜி ஒரு மாணவனுக்குரிய தூய வாழ்வை நடத்திப் பரீட்சைகளிலெல்லாம் தேர்வு பெற்றுர். என்னுடைய காலத்தில் வக்கீல் பரீட்சைகள் சுலபமாக இருந்தன. இக்காலத்திய வக்கீல்கள் அப்போதைவிட மிகவும் கடினமாகப் படிக்கவேண்டியிருக்கிறது. ஆனல், ஸோராப்ஜிக்குத் தோல்வி என்பதே என்னவென்று தெரியாது. இங்கிலாந்தில் மருத்துவப் படை நிறுவப்பட்ட போது அதில் முதன் முதலாக ஈடுபட்டவர்களில் அவரும் ஒருவர்; அதில் கடைசி வரையிலும் தொண்டாற்றியவர்களில் ஒருவராகவும் இருந்தார். இந்தப் படையினரும் சத்தியாக்கிரகம் தொடுக்க வேண்டியிருந்தது. அப்போது பல உறுப்பினர்கள் பின்வாங்கினர். ஆனல், ஸோராப்ஜி விட்டுக்கொடுக்காதவர்களின் தலைமையில் நின்றுர். மருத்துவப் படையினர் இயக்கிய சத்தியாக்கிரகமும் வெற்றி கொண்டதென்பதை இங்கே குறிப்பிடுகிறேன்.

இங்கிலாந்தில் வக்கீலாக அனுமதிக்கப்பட்டதும் ஸோராப்ஜி ஜொஹன்னஸ்பர்க் திரும்பி, வக்கீல் தொழில் நடத்தவும், சமூகத் தொண்டு புரியவும் ஆரம்பித்தார். தென்னுப்பிரிக்காவிலிருந்து எனக்கு வந்த ஒவ்வொரு கடிதத்திலும் ஸோராப்ஜியைப் பற்றிய புகழ்ச்சியே நிறைந்திருந்தது. அவர் எப்போதும் போலவே தம் பழக்க வழக்கங்களில் எளியவராகவும், டம்பம் சிறிதளவேனும் இல்லாமலும் இருந்தார். அவர் ஏழை, பணக்கார்ர்கள் எல்லோருடனும் நன்கு பழகியிருந்தார். ஆனல், கடவுள் கருணை மிகுந்தவராக இருப்பது போலவே கொடுமையும் உடையவராக இருக்கின்றுர். ஸோராப்ஜி 'காலப்பிங் தைஸிஸ்' என்ற நோய்வாய்ப்பட்டுச் சில மாதங்களில், தம்பால் அன்பைச் சொரிந்த இந்தியர்களைத் துயரில் ஆழ்த்திவிட்டு இறந்தார். இவ்வாறு ஆண்டவன் இக்குறுகிய

காலத்தில் மிகவும் முக்கியமானவர்களான காச்சலியாவையும் ஸோராப்ஜியையும் சமூகத்தினர் இழந்து நிற்கும்படி செய்தார். அவர்கள் இருவரில் யார் சிறந்தவர் என்று என்னைச் சொல்லும்படி கேட்டால் நான் தீர்ப்புக் கூறுவது முடியாத காரியம். உண்மையில் இருவருமே தத்தம் துறையில் தலைசிறந்து விளங்கியவர்கள். காச்சலியா ஒரு நல்ல முஸல்மான்; அவர் ஒரு நல்ல இந்தியராகவும் இருந்தார். அதேபோல் ஸோராப்ஜியும் ஒரு நல்ல பார்ஸிக்காரர்; அவர் ஒரு சிறந்த இந்தியராகவும் இருந்தார்.

ஆகவே, குடியேற்றத் தடைச் சட்டத்தின் கீழ்த் தேசத்தில் இருக்கத் தமக்குள்ள உரிமையைச் சோதிக்கத் தாம் நினைத்திருப்பதை முன்னதாகவே சர்க்காரிடம் ஸோராப்ஜி அறிவித்துவிட்டு, டிரான்ஸ்வாலுக்குள் புகுந்தார். சர்க்கார் இதை எதிர்பாராததால், பகிரங்கமாக எல்லையைக் கடந்து தேசத்திற்குள் புகுந்த ஸோராப்ஜியை என்ன செய்வதென்று அவர்களால் ஒரு முடிவுக்கு வர இயலவில்லை. குடியேற்றத் தடைச் சட்ட அதிகாரி அவரை நன்கு அறிந்திருந்தார். ஸோராப்ஜி அவரிடம் தாம் தீரத்தெளிந்தே சட்டத்தைச் சோதிக்கும் நிமித்தம் டிரான்ஸ்வாலில் நுழைவதாகவும், தம்மை ஆங்கில மொழியிலேயே விசாரணை செய்யவோ அல்லது கைது செய்யவோ விருப்பம்போலச் செய்யுமாறும் கூறிவிட்டார். ஸோராப்ஜிக்கு ஆங்கிலம் தெரிந்திருப்பதால் அவரை விசாரணை செய்ய வேண்டிய கேள்வியே எழவில்லை யென்றும், அவரைக் கைது செய்வதற்குக் கட்டளை யில்லையென்றும், ஸோராப்ஜி உள்ளே புகலாம் என்றும், சர்க்கார் விரும்பினால் அவர் போகுமிடத்தில் அவரைக் கைது செய்யலாம் என்றும் பதில் அளித்தார் அதிகாரி.

ஆகவே, நாங்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக ஸோராப்ஜி ஜொஹன்னஸ்பர்க்கை அடைந்தார். நாங்கள் அவரை வரவேற்றோம். எல்லை நிலையமாகிய வோல்க்ஸ்ரஸ்டுக்கு அப்பால் ஓர் அங்குலங்கூட முன்னேறச் சர்க்கார் அவரை விடுவார்கள் என்று நாங்கள் யாருமே நம்பவில்லை. நன்கு ஆலோசித்து, பயமின்றி நாம் காலை முன்வைக்கும்போது சர்க்கார் நம்மைத் தடுக்க ஆயத்தமாக இருப்பதில்லை. இவ்வாறு அடிக்கடி நேருகிறது. இதற்குக் காரணம், சர்க்காரின் இயல்பென்றே சொல்ல வேண்டும். ஒரு சர்க்கார் அதிகாரி பொதுவாக ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் முன் கூட்டியே ஆய்ந்து அதற்கேற்ப ஆயத்தங்கள்

செய்துகொள்ளும் அளவிற்குத் தமது இலாகாவை அமைத்துக் கொள்ளுவதில்லை. மேலும் ஒன்று அல்ல, பல காரியங்களை ஒரே அதிகாரி ஒரே சமயத்தில் கவனிக்க வேண்டியிருப்பதால் கவனத்தைப் பலவற்றிலும் செலுத்தும்படி நேரிடுகிறது. மூன்றாவதாக, தாம் அதிகாரி என்ற செருக்கில் திளைத்திருப்பதால் எது வந்து நேரினும் அதைச் சமாளிப்பது தமக்கு ஒரு குழந்தை விளையாட்டைப் போலாகும் என்று அந்த அதிகாரி அலட்சியமாகக் கவலையற்றும் இருக்கலாம். இதற்கு மாறாக ஒரு பொதுத் தொண்டனுக்கோவெனில், தன்னுடைய இலட்சியமும் அதை அடையும் மார்க்கமும் நன்கு தெரியும். அவனுக்குத் தெளிவான திட்டங்கள் இருக்குமாயின், அவற்றைச் சாதிக்க அவன் முற்றிலும் தயாராக இருக்கிறான். இரவும் பகலும் அவனுடைய சிந்தனையெல்லாம் அவன் நடத்த இருக்கும் வேலையைப் பற்றியதாகவே இருக்கும். ஆகவே, அவன் உறுதியுடன் நேர் வழியில் சென்றால் சர்க்காரை அவன் முந்துவான். பல இயக்கங்கள் வெற்றிபெறாமல் தோல்வியுறுவதன் காரணம், சர்க்காருடைய அதிகார வன்மையால் அன்று; இயக்கத் தலைவர்களுக்கு மேற்சொன்ன ஆற்றல்கள் இல்லாத குறையினாலேயேதான்.

மொத்தத்தில், சர்க்காரின் கவனிப்பின்மையாலோ அல்லது அவர்கள் ஏதோ எண்ணத்துடன் இருந்ததாலோ, ஸோராப்ஜி ஜொஹன்னஸ்பர்க்கை அடைந்தார். அங்கிருந்த அதிகாரிக்கு அந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்யவேண்டுமென்று தெரியவில்லை. மேலதிகாரிகளிடமிருந்து உத்தரவும் அவருக்குக் கிடைக்கவில்லை. ஸோராப்ஜியின் வருகை எங்களுடைய உற்சாகத்தைப் பன்மடங்காக்கியது. இளைஞர்கள், சர்க்கார் தோற்றுப் போயினரென்றும், விரைவில் உடன்பாட்டுக்கு வருவார்கள் என்றுங்கூட நினைத்தார்கள். ஆனால், அவர்கள் விரைவில் தங்கள் தவற்றை உணர்ந்தனர். இளைஞர்கள் பலர் அக்கறையாக இயக்கத்தில் ஈடுபட்டால்தான் இந்த ஒப்பந்தத்தைப் பெற முடியும் என்பதையும் உணர்ந்தார்கள்.

ஸோராப்ஜி ஜொஹன்னஸ்பர்க்கில் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டிடம் தம்முடைய வருகையை அறிவித்து, புதுக் குடியேற்றச் சட்டப்படி தமக்கு ஆங்கிலம் தெரிந்திருந்தபடியால் டிரான்ஸ்வாலில் இருக்கத் தமக்கு உரிமையுண்டு என்பதையும், அதன் பொருட்டு அந்த அதிகாரி விரும்பினால் சோதிப்பதற்குத் தாம் உட்படத் தயாராக இருப்பதாகவும்

தெரிவித்தார். அவர் எழுதிய அக்கடிதத்திற்கு ஒரு பதிலும் கிடைக்கவில்லை. ஒரு வேளை சில தினங்களுக்குப் பிறகு பதில் 'சம்மன்' உருவத்தில் வந்திருக்கும்.

1908-ஆம் வருடம் ஜுலை 8-ஆம் தேதி ஸோராப்ஜியின் வழக்கு நீதி மன்றத்திற்கு வந்தது. நீதி மன்றத்தில் வழக்கைக் கவனிக்க இந்தியர்கள் ஏராளமாகக் கூடிவிட்டனர். வழக்குத் தொடருமுன் அங்கிருந்த இந்தியர்களைக் கொண்டு நாங்கள் அந்த இடத்திலேயே ஒரு கூட்டம் நடத்தினேம். அப்போது ஸோராப்ஜி, எல்லா ஆபத்துக்களையும் துன்பங்களையும் எதிர்த்து வெற்றி கிடைக்க எத்தனை முறை வேண்டுமானலும் சிறை செல்லத் தாம் தயாராக இருப்பதாக ஓர் ஆவேசச் சொற் பொழிவாற்றினர். இதற்கிடையே நான் ஸோராப்ஜியுடன் நன்ருகப் பழக வாய்ப்புக் கிடைத்தது. நிச்சயமாக அவர் சமூகத்திற்குக் கௌரவம் கொண்டு வருவார் என்று உறுதியாக எண்ணியிருந்தேன். உரிய காலத்தில் மாஜிஸ்டிரேட் வழக்கை எடுத்தார். நான் ஸோராப்ஜியின் சார்பில் வாதாடி அவருக்கு விடுத்த 'சம்மன்' தவருக இருந்தபடியால் அவரை உடனே விடுதலை செய்யுமாறு கேட்டேன். அரசாங்க வழக்கறிஞர் எதிர் வாதம் செய்தார். ஆனல், 9-ஆம் தேதி கோர்ட்டார் என் வாதத்தை ஆமோதித்து ஸோராப்ஜியை விடுதலை செய்தனர். ஆனல், ஸோராப்ஜிக்கு உடனே அடுத்த நாள் வெள்ளிக்கிழமை-1908-ஆம் ஆண்டு ஜுலை 10-ஆம் தேதி-நீதி மன்றத்தின் முன் வரும்படி எச்சரிக்கை பிறப்பிக்கப்பட்டது.

10-ஆம் தேதி யன்று மாஜிஸ்டிரேட், ஸோராப்ஜியை டிரான்ஸ்வாலிலிருந்து ஏழு நாட்களுக்குள் வெளியேறும்படி கட்டளையிட்டார். நீதிமன்றக் கட்டளை வழங்கப்பட்டதும். ஸோராப்ஜி, சூப்பரிண்டெண்ட் ஜே. ஏ. ஜி. வெர்னனிடம், வெளியேறுவதற்குத் தமக்கு விருப்பமில்லை என்பதை அறிவித்தார். அதன்படியே, அவர் மாஜிஸ்டிரேட் உத்தரவை அலட்சியம் செய்த குற்றச்சாட்டுடன் மறுபடியும் 20-ஆம் தேதி நீதிமன்றத்திற்குக் கொண்டுவரப்பட்டார். ஒரு மாதக் கடுங்காவல் தண்டனை அவருக்கு விதிக்கப்பட்டது. ஆயினும், ஏற்கனவே அங்கிருந்த இந்தியர்களைச் சர்க்கார் சிறை செய்யவில்லை. ஏனெனில் கைது செய்வது அதிகமாக ஆக இந்தியர்களின் உணர்ச்சியும் பொங்குவதை அவர்கள் கண்டார்கள். சில வேளைகளில் சட்ட விதியின் சில குறைபாடுகளால் இந்தியர்கள்மீது தொடுத்த

வழக்குகளை வாபஸ் செய்து அவர்களை விடுவித்தனர். இது சமூகத்தினருக்கு இருந்த உற்சாகத்தை இரு மடங்காக்கியது. சர்க்கார் சட்டசபையின் மூலம் தனக்கு வேண்டிய சட்டங்களை யெல்லாம் இயற்றிச் சாதித்துக்கொண்டது. பல இந்தியர்கள் தம் பதிவுப் பத்திரங்களை எரித்துவிட்டனர். எனினும், நாட்டில் இருக்கத் தங்கள் உரிமையைத் தாங்கள் பதிவு செய்து கொண்ட தன் மூலம் நிரூபித்துக்கொண்டனர். ஆகவே, சிறைக்கு அனுப்பு வதற்கென்றே அவர்கள்மீது வழக்குத் தொடருவதில் அர்த்தம் எதுவும் இருப்பதாகச் சர்க்கார் காணவில்லை. சர்க்கார் எதுவும் செய்யாமல் இருப்பதைக் கண்டு, தம் சக்திகளை வெளியிட வழியின்றித் தாமாகவே இந்தியர்கள் அடங்கிவிடுவார்கள் என்று அரசாங்கம் நினைத்தது. இது அரசாங்கத்தின் தவருன மதிப்பீடு ஆகும். இந்தியர்கள் அரசாங்கத்தின் பொறுமையைச் சோதிக் கப் புதிய முறைகளைக் கையாள ஆரம்பித்தனர். சர்க்காரின் பொறுமைக்கு விரைவில் முடிவும் ஏற்பட்டது.

முப்பதாவது அத்தியாயம்

# சேட் தாவூது முகமது முதலியோர் பிரவேசம்

அரசாங்கம் செயலின்மையால், தங்களைச் சளைக்க அடிக்கக் காலதாமதமாக்கும் தந்திரங்களைக் கையாண்டதைக் கண்டு மேற் கொண்டும் நடவடிக்கையைத் தாங்கள் எடுக்க வேண்டிய அவசி யத்தை இந்தியர்கள் உணர்ந்தனர். துன்பப்பட சக்தி இருக் கும் வரை ஒரு சத்தியாக்கிரகிக்குக் களைப்பு ஏற்படுவதே இல்லை. ஆகவே, சர்க்காரின் திட்டங்களைக் கவிழ்க்கக்கூடிய நிலையில் இந்தியர்கள் இருந்தனர்.

டிரான்ஸ்வாலில் குடியேறக் கூடிய பழைய உரிமைகளைக் கொண்ட பல இந்தியர்கள் நேட்டாலில் இருந்தனர். வியாபார நிமித்தம் அவர்கள் டிரான்ஸ்வாலில் புகவேண்டிய அவசியம் இல்லை. ஆனல், நுழைவதற்கு அவர்களுக்கு உரிமை உண்டு எனச் சமூகத்தினர் கருதினர். அவர்களுக்கு ஆங்கிலம் பற்றிய அறிவும் ஓரளவு இருந்தது. மேலும், ஸோராப்ஜி போன்ற கல்வி கற்ற இந்தியர்கள் டிரான்ஸ்வாலில் நுழைவதால் சத்தியாக்கிரகக் கொள்கைக்குச் சிதைவு நேராது. ஆகவே, இரு வகையான இந் தியர்கள் டிரான்ஸ்வாலில் நுழைவதெனத் தீர்மானித்தோம். ஏற் கனவே தேசத்தில் குடியேறி இருந்தவர்கள் ஒரு சாரார்; ஆங் கிலம் கற்றவர்கள் மற்ருெரு சாரார்.

அவர்களில் சேட் தாவூது முகமதுவும், பார்ஸி ருஸ்தம்ஜியும் பெரிய வர்த்தகர்கள். சுரேந்திர மேத், பிராக்ஜி கந்துபாய் தேசாய், ரத்தன்ஸி மூல்ஜி ஸோதா, ஹரிலால் காந்தி ஆகியோர் படித்தவர்கள். தம் மனைவி மிகவும் ஆபத்தான நிலையில் நோயுற் றிருந்ததையும் பொருட்படுத்தாமல் தாவூது சேட் வந்தார்.

சேட் தாவூது முகமதை வாசகருக்கு அறிமுகப்படுத்த விரும்புகிறேன். அவர் நேட்டால் இந்தியர் காங்கிரஸின் தலைவர். தென்னுப்பிரிக்காவிற்கு வந்த பழைய இந்திய வியாபாரிகளில் ஒருவர். அவர் சூரத்தைச் சார்ந்த ஒரு ஸுன்னிவோரா இஸ்லா மிய மரபினர். சமயத்திற்கேற்றபடி நடக்கும் சாதுரியத்தில் அவருக்கு இணையாகத் தென்னுப்பிரிக்காவில் ஒரு சில இந்தி

யரையே நான் பார்த்திருக்கிறேன். விஷயங்களை நன்ருகப் புரிந்து கொள்ளுவதில் அவருக்குச் சிறந்த திறமை இருந்தது. அவருக்குப் படிப்பு அதிகம் இல்லையெனினும், ஆங்கிலம், டச்சு முதலிய மொழிகளை நன்கு பேசுவார். ஐரோப்பிய வியாபாரிகளிடையே கொண்டிருந்த வர்த்தக நடவடிக்கைகளில் மிகவும் சமர்த்தர். அவருடைய தாராள குணம் நாடறிந்த விஷயம். தினமும் ஐம்பது விருந்தினராவது அவருடன் சாப்பிடுவார்கள். இந்தியர் நிதி வசூலுக்குப் பொருள் வழங்கியவர்களுள் அவர் முக்கியமானவர். அவருக்கு விலையிலா மாணிக்கம் போல் ஒரு மகன் இருந்தான். குண விசேஷத்தில் தகப்பனுரையும் மிஞ்சியவன். அவ்விளை ஞனின் உள்ளம் பளிங்கைப் போல மிகவும் சுத்தமானது. அவனது ஆர்வங்களுக்குக் குறுக்கே தாவூது சேட் ஒருபோதும் நின்றதில்லை. உண்மையாகவே தந்தை, தனயனிடத்தில் பக்தி செலுத்தினுர் என்று கூறினுல் மிகையாகாது. அவர், தம்மிடத்தி லுள்ள குறை எதுவும் பையனிடம் தோன்றக்கூடாது என்ற நோக்கத்துடன் கல்வி பயில அவனை இங்கிலாந்திற்கு அனுப் பினுர். ஆனுல் தாவூது சேட், மதிக்க வொண்ணுத செல்வமான இம்மைந்தனை அவனுடைய நல்ல இளமைப் பருவத்தில் இழந்து நின்ருர். தைஸிஸ் நோய் ஹுஸேனைப் பலி கொண்டது. இந்தத் துயரின் புண் என்றுமே அவருக்கு ஆறவில்லை. ஹுஸேனுடைய மறைவுடன், அவன்பால் இந்தியர்கள் வைத்திருந்த நம்பிக்கை களும் மறைந்தன. அவன் மிகவும் உண்மை வாய்ந்த பையன். ஹிந்துக்களும் முஸல்மான்களும் அவனுக்கு இடது, வலது கண் களைப் போன்றவர்கள். தாவூது சேட்கூட இப்போது நம்மிடையே இல்லை. காலனுடைய வலைக்குள் சிக்காதவர்கள் யார்தாம் இருக் கின்றனர்?

நான் ஏற்கனவே பார்ஸி ருஸ்தம்ஜியை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறேன். இந்தச் சரித்திரத்தை நான் எழுதும்போது, எவ்விதக் குறிப்புக்களையும் பார்க்காமல் இதை எழுதுவதால், இந்த ‘ஆசியப் படையெடுப்’பில் கலந்து கொண்ட பல நண்பர்களின் பெயர்களை விட்டிருக்கலாம். அவர்கள் என்னை மன்னிப்பார்கள் என்று நம்புகின்றேன். சில பெயர்களுக்கு அழியாப் புகழ் தரவேண்டுமென்று நான் இந்த அத்தியாயத்தை எழுதவில்லை. சத்தியாக்கிரகத்தின் ரகசி யத்தை விவரிக்கவும், அது வெற்றி பெற்ற விதத்தைக் காட்டவும், அதன் பாதையில் குறுக்கிட்ட இடையூறுகள் என்னவென்பதையும், அவை எப்படி அகற்றப்பட்டன என்ப

தையும் விளக்க வேண்டியே எழுதுகிறேன். நான் பெயர்களைக் குறித்துள்ள சில இடங்கள் கூட, எப்படி தென்னுப்பிரிக்காவில் படிக்காதவர்கள் என்று கருதப்பட்ட மனிதர்களும் சிறந்த சேவை செய்து விளங்கினர் என்பதையும், எப்படி வியாபாரிகள், கல்வி கற்றவர்கள், மற்றவர்கள் யாவரும் தங்கள் கடமைகளைச் செய்தனர் என்பதையும் எடுத்துக் காட்டுவதற்கேயாம். உயர்ந்த தகைமையுடைய ஒரு மனிதரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது புகழப்படுவது அவரல்ல; அவருடைய தகுதிக்குரிய குணங்களே.

தாவூது சேட், டிரான்ஸ்வால் எல்லையைத் தம்முடைய சத்தியாக்கிரகப் படையுடன் அடைந்தபோது, சர்க்கார் அவரைச் சந்திக்கத் தயாராயிருந்தனர். சர்க்கார் அத்தனை பெரிய சேனையை டிரான்ஸ்வாலில் நுழைய விட்டிருந்தால், ஏளனத்துக்கு அல்லவோ அது ஆளாகும். ஆகவே, அவர்களைக் கைது செய்வது அவசியமாயிற்று. அவர்கள் கைது செய்யப்பட்டு 1908-ஆம் வருடம் ஆகஸ்டு 10-ஆம் தேதி மாஜிஸ்டிரேட் முன்னிலையில் கொண்டு வரப்பட்டனர். அவர், அவர்களை டிரான்ஸ்வாலை விட்டு ஏழு நாட்களுக்குள் வெளியேறும்படி கட்டளையிட்டார். அவர்கள் அக்கட்டளைக்குக் கீழ்ப்படியாது மீறினர். அவர்கள் 28-ஆம் தேதி பிரிட்டோரியாவில் மீண்டும் கைது செய்யப்பட்டு விசாரணையின்றியே வெளியே கடத்தப்பட்டனர். அவர்களோ, 31-ஆம் தேதி மீண்டும் டிரான்ஸ்வாலுக்குள் புகுந்தனர். கடைசியாகச் செப்டம்பர் 8-ஆம் தேதி வோல்க்ஸ்ரஸ்டில் 50 பவுன் அபராதம் அல்லது மூன்று மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டனர். அவர்கள் சிறை செல்வதையே விரும்பித் தண்டனையை ஏற்றுக்கொண்டனர் என்பதைச் சொல்லவேண்டியதில்லை.

டிரான்ஸ்வால் இந்தியர்கள் இப்போது மிகுந்த உற்சாகத்துடன் இருந்தார்கள். நேட்டாலிலுள்ள தங்கள் நாட்டினரை விடுவிக்க அவர்களால் இயலாது போனல், சிறை புகுவதில் தாமும் அவர்களுக்குச் சமமாகப் பங்கு எடுத்துக்கொண்டே ஆகவேண்டுமென்று சிறை புகுவதற்கான வழிகளை வகுத்துக் கொண்டிருந்தார்கள். தாங்கள் மனமாரக் கோரியதை அடைய அவர்களுக்குப் பல வழிகள் இருந்தன. குடியேறிய இந்தியனுக்கு, தன்னுடைய பதிவுப் பத்திரத்தைக் காட்டாமல் வியாபாரம் செய்ய அனுமதிச்சீட்டு கிடைக்காது. அப்படி அனுமதிச்சீட்டு இல்லாமல் வியாபாரம் செய்வது குற்றமாகும்.

மேலும் யாராவது நேட்டாலிலிருந்து டிரான்ஸ்வாலுக்குள் புக வேண்டுமானுல் பதிவுப் பத்திரத்தைக் காட்டவேண்டும். அப்படி காட்டுவதற்குப் பத்திரம் இல்லாவிடில் அவன் கைது செய்யப் படலாம். பதிவுப் பத்திரங்கள் ஏற்கனவே கொளுத்தப்பட்டு விட்டபடியால் இதில் பாதை தெளிவானதாக இருந்தது. இந்தியர்கள் இந்த இரு முறைகளையும் பயன்படுத்திக் கொண்டார்கள். சிலர் அனுமதிச் சீட்டின்றித் தெருவில் கூவி வியாபாரம் செய்தனர். மற்ற பேர் பதிவுப் பத்திரம் இல்லாமல் டிரான்ஸ்வாலுக்குள் நுழைந்தபோது, பதிவுப் பத்திரம் காட்டாமல் போகவே கைது செய்யப்பட்டனர்.

இயக்கம் இப்பொழுது முழு வேகத்துடன் சென்றுகொண்டிருந்தது. ஒவ்வொருவரும் சோதனையில் இருந்தனர். நேட்டாலில் சேட் தாவூது முகமதுவின் உதாரணத்தை மற்ற இந்தியர்களும் பின்பற்றினர். ஜொஹன்னஸ்பர்க்கிலும் பலர் கைது செய்யப்பட்டனர். விரும்பினுல் யாரும் கைதாகக்கூடிய நிலைக்கு விஷயங்கள் வந்தன. சிறைச்சாலைகளில் கைதிகள் நிரம்பினர். நேட்டாலிலிருந்து 'படை எடுத்தவர்'களுக்கு மூன்று மாதச் சிறைவாசமும், டிரான்ஸ்வால் வியாபாரிகளுக்கு நான்கு தினங்கள் முதல் மூன்று மாதம் வரை நீடிக்கும் சிறைத் தண்டனைகளும் விதிக்கப்பட்டன.

அப்படிச் சிறையை நாடியவர்களில் நம் 'இமாம் சாகிப்' என்ற இமாம் அப்துல் காதர் பவாஜிரும் ஒருவர். அனுமதியில்லாமல் வியாபாரம் செய்ததற்காக அவருக்கு 1908-ஆம் ஆண்டு 21-ஆம் தேதி நான்கு நாட்கள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. இமாம் சாகிபின் உடல் நிலை மிகவும் நொய்மையாக இருந்தபடியால் அவர் கைதாவதற்கு ஆசைப்படுவதைக் கண்டு மக்கள் பரிகசித்தனர். அவர், ஒரு வேளை சமூகத்தின் பெயருக்கு இழுக்குக் கொண்டுவந்து விடுவாரோ என்ற அச்சத்தால் அவரைச் சேர்க்கலாகாது எனச் சிலர் என்னிடம் வந்து கேட்டுக்கொண்டனர். நான் அந்த எச்சரிக்கையைப் பொருட்படுத்தவில்லை. இமாம் சாகிபின் பலத்தையோ, பலவீனத்தையோ மதிப்பிடுவது என்னுடைய வேலையன்று. இமாம் சாகிபு வெறுங்காலோடு நடந்தறியாதவர். சுகவாழ்வில் விருப்பம் உடையவர். மலாயா மாதொருத்தியை மனைவியாகக் கொண்டவர். எல்லாச் சௌகரியங்களும் அவர் வீட்டில் நிறைந்திருந்தன. வெளியில் குதிரை வண்டியில் போய்

வருபவர். இவை யாவும் உண்மைதான். ஆனால், அவர் மனத்துள் இருப்பதை யார்தாம் புகுந்து பார்க்க முடியும்? அவர் சிறையிலிருந்து விடுதலையானதும் மீண்டும் சிறை சென்றார். அங்கே உண்மைச் சிறைவாசியாக இருந்து தமக்கு இட்ட கடும் வேலைகளைச் செய்த பிறகே உணவு உட்கொள்ளுவார். வீட்டில் நிதமும் புதுப் பண்டங்களும் ருசியான பலகாரங்களும் உண்ணும் அவர், சிறையில் தரும் கூழை உட்கொண்டு அதற்காக ஆண்டவனுக்குத் தம் நன்றியைச் செலுத்துவார். அவர் தோல்வி காணாது இருந்தது மட்டுமல்ல, தம் பழக்கங்களிலும் எளிமையை மேற்கொண்டார். கைதியாக இருந்தபோது அவர் கற்களை உடைத்தார்! தோட்டி வேலை செய்தார். மற்றக் கைதிகளுடன் வரிசையில் நின்றார். போனிக்ஸில் அவர் தண்ணீர் சுமந்து வருவார். அச்சுக்காக எழுத்துக்களைக் கோப்பார். போனிக்ஸ் ஆசிரமத்தில் இருந்த அனைவரும் எழுத்துக்களை அச்சில் கோக்கும் கலையைக் கற்றுகவேண்டும். இமாம் சாகிபும் இக்கலையைத் தம் சக்திக்கு ஏற்றவாறு கற்று அறிந்தார். இப்போது இந்தியாவில் தம்மாலான பணி செய்து வருகிறார்.

ஆனால், அவரைப் போன்று சிறையில் ஆன்மத் தூய்மை அடைந்தவர்கள் பலர் இருந்தனர். கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகப் பட்டதாரியான ஜோஸப் ராயப்பன் என்பவர் ஒரு பாரிஸ்டரும் ஆவார். அவர் ஒப்பந்தச் சீட்டுடன் குடியேறின தொழிலாளிப் பெற்றோருக்குப் பிறந்தவர்; முழுவதும் ஐரோப்பிய வாழ்க்கை முறையைத் தழுவியவர்; வீட்டில்கூடக் காலில் எதையும் அணியாமல் நடக்கமாட்டார். இமாம் சாகிபாவது பிரார்த்தனைக்கு முன்பு கால் கழுவி வெறுங்காலுடன்தான் பிரார்த்தனை செய்வார். ராயப்பன் தம் சட்டப் புத்தகங்களை எறிந்துவிட்டுக் காய்கறிக் கூடையைத் தலையில் தூக்கிச் சுமந்து, அனுமதியில்லாத வியாபாரி என்று கைது செய்யப்பட்டுச் சிறைத் தண்டனை பெற்றார். "நான் மூன்றாவது வகுப்பில் பிரயாணம் செய்யவேண்டுமா?" என்று ராயப்பன் கேட்டார். "நீர் முதல் அல்லது இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்தால் நான் மற்றவர்களை எங்ஙனம் மூன்றாவது வகுப்பில் போகச் சொல்ல முடியும்?" என்று நான் அளித்த பதில் ராயப்பனுக்குத் திருப்தியைத் தந்தது. பதினாறு வயதுள்ள பையன்களும் சிறைக்குச் சென்றனர். மோஹன்லால் மஞ்சி கிலானி என்பவனுக்கு வயது பதினான்குதான்.

இந்தியர்களைத் துன்புறுத்துவதற்கான முறைகள் அனைத்தையும் சிறையதிகாரிகள் கையாண்டனர். ஒன்றையாவது விடவில்லை. அவர்களுக்குத் தோட்டி வேலையைத் தந்தனர். இந்தியர்கள் முகமலர்ச்சியுடன் அதனைச் செய்தனர். கற்களை உடைக்க உத்தரவு போட்டபோது, அல்லா அல்லது ராமா என்ற பெயர்களை உச்சரித்துக்கொண்டு உடைத்தனர். குளங்களை வெட்டுவதும், மண்வெட்டியால் கருங்கல் பூமியைக் கொத்துவதுமான சிரமம்மிக்க வேலைகள் அவர்களுக்கு இடப்பட்டன. வேலை செய்வதால் அவர்களுடைய கைகள் காய்த்துப் போயின. வேலையின் கடுமையைத் தாங்காமல் சிலர் மயக்கமுற்றனர். ஆனால், தோல்வியுறுவது என்பது இன்னதென்பதை அவர்கள் அறியார்கள்.

சிறையில் இவர்களுக்குள்ளே சண்டையோ, பொறாமையோ இல்லை என்று நினைத்துவிடக்கூடாது. உணவு விஷயம், எப்போதுமே சச்சரவுகள் மூள்வதற்கு வித்தாகும். ஆனால், உணவைப்பற்றிய சச்சரவுகள் ஏற்படாதபடி நாங்கள் தடுத்துக்கொண்டோம்.

நான் மீண்டும் கைது செய்யப்பட்டேன். ஒரு சமயத்தில் வால்க்ஸ்ரஸ்ட் சிறையில் எழுபத்தைந்து இந்தியர்கள் இருந்தனர். எங்கள் உணவை நாங்களே சமைத்துக்கொண்டோம். கிடைத்த உணவைச் சரியானபடி பகிர்ந்து கொடுக்கும் திறமை எனக்கு மட்டுமே இருந்தபடியால், நானும் சமையற்காரனானேன். என்னுடன் இருந்தவர்கள் என்பால் கொண்டிருந்த அன்பினால், சர்க்கரைகூட இல்லாமல், நான் அரைகுறையாய்ச் சமைத்த கஞ்சியை எவ்வித முணுமுணுப்பின்றியும் உட்கொண்டனர்.

மற்றக் கைதிகளிடமிருந்து என்னைப் பிரித்துவிட்டால், அது எனக்கும் அவர்களுக்கும் சரியான தண்டனையாக இருக்குமென்று சர்க்கார் நினைத்தனர். ஆகவே, என்னைப் பிரிட்டோரியா சிறைக்குக் கொண்டுபோய், அங்கே ஆபத்து விளைவிக்கக்கூடிய கைதிகளுக்காக ஒதுக்கப்பட்டிருந்த ஒரு தனியறையில் என்னை அடைத்தனர். உடற்பயிற்சிக்காக ஒரு நாளைக்கு இரு முறை மட்டும் வெளியே அழைத்துச் சென்றனர். இந்தியர்களுக்கு நெய், வால்க்ஸ்ரஸ்டைப் போன்று பிரிட்டோரியாச் சிறையிலும் தருவது இல்லை. ஆனால், இங்கே நாங்கள் சிறையில் பட்ட கஷ்டங்களை விவரிக்கப்போவதில்லை.

அதைப்பற்றி அறிய விரும்புவோர் தென்னுப்பிரிக்காவில் என் சிறை அனுபவங்களைப்பற்றி நான் எழுதியிருக்கும் வரலாற்றி லிருந்து தெரிந்துகொள்ளலாம்.*

ஆயினும், இந்தியர்கள் தோல்விக்குட்பட மறுத்தனர். சர்க்காருக்கு இதனல் கலக்கம் ஏற்பட்டது. எத்தனை இந்தியர் களைத்தான் சிறைக்கு அனுப்பமுடியும்? மேலும், அது செல வையும் அதிகரிப்பதாகும்; ஆகவே, நிலைமையைச் சமாளிக்கக் கூடிய மற்ற முறைகளை ஆராயத் தொடங்கினர்.

* இச்சிறை அனுபவங்களைப்பற்றி காந்திஜி எழுதியிருப்பதையும் இந்நூலில் பின் சேர்க்கைப் பகுதியில் காணலாம்.

## முப்பத்தொன்ருவது அத்தியாயம்

# நாடு கடத்தல்

வெறுக்கத்தக்கதான அச்சட்டங்கள் மூன்று வித தண்டனைகளுக்கு இடம் தந்தன. அபராதம், சிறைவாசம், நாடு கடத்தல் ஆகியவையே அவை. இந்த மூன்று தண்டனைகளேயும் ஒருங்கே விதிக்கவும், அதிக பட்சத் தண்டனைகளை விதிக்கவும் எல்லா நீதிமன்றங்களுக்கும் மாஜிஸ்டிரேட்டுகளுக்கும் அதிகாரம் தரப்பட்டிருந்தது. முதலில் நாடு கடத்தல் எனப்படுவது, 'குற்றவாளி'யை டிரான்ஸ்வாலின் எல்லையைக் கடந்து நேட்டால், ஆரஞ்சு ப்ரீ ஸ்டேட் அல்லது போர்த்துக்கீசியக் கிழக் காப்பிரிக்காவின் எல்லைகளில் கொண்டுபோய் விட்டுவிடுவதாக இருந்தது. உதாரணமாக, நேட்டாலிலிருந்து உள்ளே வந்த இந்தியர்கள், வால்க்ஸ்ரஸ்ட் ஸ்டேஷனின் எல்லையைத் தாண்டி எக்கதி வேண்டுமானாலும் ஆகட்டும் என்று விடப்பட்டார்கள். இங்ஙனம் நாடு கடத்தப்படுவது ஒரு கேலிக் கூத்தாகவே இருந்தது. அதனால் ஏற்பட்ட அசௌகரியம் ஒன்றுமில்லை. இந்தியர்கள் அதைரியப்படுவதற்கு மாருக, மேலும் உற்சாகமே கொண்டனர்.

ஆகவே, இந்தியர்களைத் துன்புறுத்த அரசாங்கம் ஒரு புதிய முறையைக் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. சிறைகளனைத்தும் ஏற்கனவே நிரம்பி நெருக்கம் அதிகமாகி விட்டது. இந்தியர்களை இந்தியாவுக்கு நாடு கடத்திவிட்டால், அவர்கள் தங்கள் கொள்கைகளை விட்டு நழுவிச் சரணுகதி அடைவார்கள் என நினைத்தது, சர்க்கார். இந்த நம்பிக்கைக்கு ஓரளவு ஆதாரமும் இருந்தது. அதன்படியே ஒரு பெரிய இந்தியக் கூட்டம் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டது. அப்படி அனுப்பப்பட்ட இந்தியர்கள், பல பெரிய கஷ்டங்களுக்கெல்லாம் உட்படவேண்டியதாயிற்று. கப்பலில் அரசாங்கம் கொடுத்ததைத் தின்பது தவிர உணவுக்கான வேறு ஏற்பாடுகள் எவையுமில்லை. அனைவரும் கடைசித் தரப் பிரயாணிகளாக அனுப்பப்பட்டனர். மேலும், அவர்களில் சிலருக்குத் தென்னுப்பிரிக்காவில் வியாபாரம், நிலம் முதலிய சொத்துக்கள், குடும்பங்கள் இருந்தன. வேறு சிலர் கடன்பட்டும் இருந்தனர். தங்களுக்

குள்ள அனைத்தையும் இழந்துவிட்டு முழுவதும் திவாலாகி விடுவதற்கு எவர்தாம் விரும்புவர்?

இத்தனை இடைஞ்சல்கள் இருந்தும், இந்தியர்கள் பெரும் பாலும் உறுதியுடன் இருந்தனர். ஆனால் பலர், தளர்ச்சியுற்றுக் கைதாகும் விருப்பத்தை அடக்கிக்கொண்டனர். ஆனால், கொளுத்தப்பட்ட பதிவுப் பத்திரங்களின் நகல்களை மீண்டும் வாங்கிக்கொள்ளக்கூடிய அளவுக்கு அவர்கள் தளர்ந்துவிட வில்லை. மீண்டும் பதிவு செய்துகொள்ளும்படி ஒரு சிலர் பயமுறுத்தப்பட்டனர்.

என்றாலும், எதற்கும் அஞ்சாத வீரர்களும் ஏராளமாக இருந்தனர். தூக்குமேடையின் மீதுகூட மலர்ந்த முகத்துடன் ஏறக்கூடிய தைரியம் வாய்ந்த கலங்கா நெஞ்சினர் அவர்கள் என்பது என் நம்பிக்கை. அவர்கள் தங்கள் உயிரையே துச்ச மாகக் கருதியபடியால், தங்கள் சொத்துக்களையும் அதைவிடக் குறைவாகவே நினைத்தனர்.

ஆனால், இந்தியாவுக்குக் கடத்தப்பட்ட பலர், இயக்கத் தில் வெறும் நம்பிக்கையின் பேரில் சேர்ந்த சாதாரண எளிய மக்களே ஆவார்கள். இங்ஙனம் இவர்கள் கடுமையாக வதைக்கப் படுவது யாராலும் தாங்கமுடியாததுதான். ஆனால், இவர்களுக்கு உதவி செய்யக்கூடிய வழியைக் கண்டுபிடிப்பதுதான் எங்களுக்கு மிகக் கஷ்டமாக இருந்தது. எங்களிடம் இருந்த பணமோ மிகக் குறைவு. அதிலும் பணவுதவி கொடுக்க ஆரம்பித்தால் போராட்டத்தையே இழக்கக்கூடிய ஆபத்தும் இருந்தது. பண ஆசை காட்டி ஒரு நபர்கூட இயக்கத்தில் சேர அனுமதிக்கப்பட வில்லை. அப்படிச் செய்திருந்தால் சுயநலத்தைக் கருதி வந்த ஆட்களால் இயக்கம் நசுக்கப்பட்டிருக்கும். ஆயினும், அப்படி நாடு கடத்தப்பட்டவர்களுக்கு எங்களுடைய அனுதாபத்தினால் அவர்களுக்கு உதவி செய்வது கடமை என்று உணர்ந்தோம். சகோதர உணர்ச்சியும், இனிய அன்பான வார்த்தைகளும் செய்யக்கூடிய அளவுக்கு, பணம் ஏதும் செய்யாது என்று என்னுடைய அனுபவத்திலிருந்து கண்டிருக்கிறேன். பணம் வேண்டுமென்று விரும்பும் ஒருவன், வேறொரு மனிதனிடமிருந்து அனுதாபம் இன்றிப் பணத்தைப் பெறுவானாகில், காலப் போக்கில் பணவுதவி செய்பவனை அவன் விட்டே தொலைப்பான். அதற்கு மாறாக அன்பினால் வெல்லப்பட்ட ஒருவன், தனக்கு அன்பு காட்டிய ஒருவனின் எல்லையில்லாத் துன்பத்தையும் அவனுடன் சகிக்கத் தயாராயிருப்பான். ஆகவே, நாடு கடத்தப்

பட்டவர்களுக்கு நாங்கள் அன்பினால் செய்யக்கூடியது அனைத்தையும் செய்யத் தீர்மானித்தோம். இந்தியாவில் அவர்களுக்குச் சரியான ஏற்பாடுகள் செய்யப்படும் என்ற வாக்குறுதி தந்து அவர்களைத் தேற்றினோம். அவர்களில் பலர் முன்னால் ஒப்பந்தத் தொழிலாளிகளாக இருந்தவர்கள். எனினும், இந்தியாவில் அவர்களுக்கு உறவினரே கிடையாது என்பதையும் வாசகர்கள் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். சிலர் தென்னாப்பிரிக்காவில் பிறந்தவர்கள். ஆகவே, அவர்கள் எல்லோருக்கும் இந்தியா ஒரு புதிய அந்நிய நாடாகத்தோன்றியது. திக்கற்ற அவர்களைத் தங்கள் காரியங்களைத் தாமே பார்த்துக்கொள்ளும்படி விட்டுவிடுவது கொடுமையிலும் கொடுமையாகும். ஆகவே, வேண்டுவன செய்யப்படுமென நாங்கள் அவர்களுக்கு உறுதி தந்தோம். ஆனால், இதுமட்டும் எப்படிப் போதும்? அவர்களுக்குத் துணையாகவும் வழிகாட்டியாகவும் யாராவது அனுப்பப்பட்டாலொழிய அவர்களுக்கு ஆறுதல் ஏற்படாது. இதுதான் நாடு கடத்தப்படும் முதல் தொகுதி. அவர்களை ஏற்றிச் செல்லும் கப்பல் புறப்படுவதற்கு ஒரு சில மணிநேரமே இருந்தது. உடன் செல்வதற்கு ஆளைத் தேர்ந்தெடுக்க நேரங்கூட இல்லை. நான் என்னுடன் உழைத்தவரான பி. கே. நாயுடுவை அழைத்து, "இந்த ஏழைச் சகோதரர்களை இந்தியாவுக்கு அழைத்துச் செல்ல முடியுமா?" எனக் கேட்டேன்.

"ஏன் முடியாது?" என்றார் அவர்.

"கப்பல் இப்போதே புறப்படப் போகிறதே!"

"புறப்படட்டுமே."

"உம்முடைய உடைக்கும் உணவுக்கும் என்ன செய்வீர்?"

"நான் இப்போது அணிந்திருக்கும் உடையே போதுமானது; உணவுக்கோவெனில் கப்பலில் பார்த்துக்கொள்ளுகிறேன்."

இது எனக்கு மனத்திற்குகந்த ஒரு பெரிய ஆச்சரியமாக இருந்தது. நாங்கள் இவ்விதம் பேசியது பார்ஸி ருஸ்தம்ஜி வீட்டில். அவ்விடத்திலேயே நான் நாயுடுக்காகக் கொஞ்சம் துணிகளையும் விரிப்புகளையும் சேகரித்துக் கொடுத்து அவரை அனுப்பி வைத்தேன்.

"பத்திரமாக இரும்! இந்தச் சகோதரர்களை வழியில் நன்றாகப் பார்த்துக்கொள்ளும். முதலாவது அவர்கள் நலனைக் கவனித்துக்கொண்ட பிறகே உம் சௌகரியத்தைக்

கவனிக்கவேண்டும். நான் சென்னையிலுள்ள ஸ்ரீ நடேசனுக்குத்* தந்தி தருகிறேன். நீர் அவர் கூறுகிறபடி செய்யும்.''

''நான் ஓர் உண்மை வீரன் என்பதைக் காட்ட முயற்சி செய்வேன்'' என்று கூறிக்கொண்டே பி. கே. நாயுடு கப்பல் துறைமுகத்துக்குச் சென்றார். 'இத்தகைய வீரர்கள் இருந்தால் வெற்றி நிச்சயம்' என்று நான் எனக்குள்ளேயே சொல்லிக் கொண்டேன். தென்னாப்பிரிக்காவில் பிறந்த நாயுடு, இதற்கு முன் இந்தியா சென்றதில்லை. ஸ்ரீ நடேசனுக்கு ஒரு சிபாரிசுக் கடிதத்தை அவரிடம் கொடுத்ததுடன் ஒரு தந்தியையும் உடனடியாக அனுப்பினேன்.

அந்த நாட்களில் ஸ்ரீ நடேசன் ஒருவர்தான் வெளி நாடுகளிலிருந்த இந்தியர்களுடைய துன்பங்களை ஆராய்ந்தவர்; மதிப்பிற்குரிய உதவியாளர்; அவர்களுடைய விஷயங்களை நன்கு எடுத்துச் சொல்பவர். இப்படிப்பட்டவர் இந்தியாவில் அப்போது ஸ்ரீ நடேசன் ஒருவரே என்றும் சொல்லலாம். எனக்கும் அவருக்கும் கடிதத் தொடர்பு உண்டு. வெளியேற்றப்பட்டவர்கள் சென்னை சேர்ந்தபோது அவர்களுக்கு ஸ்ரீ நடேசன் முழு உதவியையும் செய்தார். அவர்கள் மத்தியில் நாயுடுவைப் போன்ற ஒரு திறமைசாலி இருக்கவே பணியாற்றுவது அவருக்கு இலகுவாகியது. அவர் உள்ளூரிலேயே நிதி திரட்டினார். நாடு கடத்தப்பட்டவர்கள், தாங்கள் வெளியேற்றப்பட்டதை நினைத்து ஒரு கணம்கூட வருந்த அவர் விடவில்லை.

டிரான்ஸ்வால் சர்க்கார் நடத்திய இந்த நாடு கடத்தல் முறை மிகக்கொடுமையானதும், சட்டவிரோதமுமாகும். சர்க்கார் அடிக்கடி வேண்டுமென்றே தாங்கள் விதித்த சட்டங்களைத் தாங்களே மீறுகின்றனர் என்பது மக்களுக்குப் பொதுவாகத் தெரிவதில்லை. நெருக்கடி ஏற்படும்பொழுது புதுச் சட்டங்களை இயற்ற அவகாசம் இருப்பதில்லை. ஆகவே, சர்க்கார் தங்கள் சட்டங்களையே தகர்த்துத் தங்கள் விருப்பம்போல் செய்கிறார்கள். பின்னர் அவர்கள் புதிய சட்டம் இயற்றலாம்; அல்லது தாங்கள் சட்டத்தை மீறுவதை மக்கள் மறக்கும்படியும் செய்யலாம்.

ஸ்தல சர்க்காரின் இந்தச் சட்ட விரோதமான போக்கை எதிர்க்க இந்தியர்கள் ஒரு மகத்தான கிளர்ச்சியை ஆரம்பித்தார்கள். இந்தச் சட்ட விரோதமான போக்கைப்பற்றி இந்தியாவிலும் விரோதமான அபிப்பிராயங்கள் ஏற்பட்டுவிடவே, தினங்

---

* சென்னையில் ''இந்தியன் ரெவியூ'' ஆசிரியராயிருந்த ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் அக்காலத்தில் காந்திஜியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். காந்திஜியின் தென்னாப்பிரிக்கப் பிரசங்கங்கள், போராட்ட வரலாறு முதலியவற்றைத் தொகுத்து முதன் முதலில் வெளியிட்டவரும் இவரே.

தோறும் ஏழை இந்தியர்களை வெளியேற்றிக் கொண்டிருப்ப தென்பது சர்க்காருக்குச் சங்கடமாக இருந்தது. இந்தியர்கள் இந்த நாடு கடத்தலுக்கு விரோதமாகச் சட்ட ரீதியாகத் தம்மால் இயன்ற முயற்சிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டதோடு சில அப்பீல்களில் வெற்றியும் பெற்றனர். எனவே, இந்தியாவுக்கு வெளியேற்றும் வழக்கத்தைக் கடைசியில் சர்க்கார் நிறுத்த வேண்டியதாயிற்று.

ஆனால், நாடு கடத்தும் கொள்கை சத்தியாக்கிரகப் 'படை' யைப் பாதிக்காமல் போகவில்லை. இந்தியாவுக்குக் கடத்தப் படுவோம் என்பதற்குப் பயப்படாமல் இருந்துவிட எல்லோரா லும் முடியவில்லை. ஆகவே, மேலும் பலர் படையை விட்டு விலகிப் போயினர். உண்மையான வீரர்கள் மட்டிலும் தங்கினர்.

சமூகத்தினரின் உற்சாகத்தைக் குலைப்பதற்குச் சர்க்கார் இந்த ஒரு வழியை மட்டுமே மேற்கொள்ளவில்லை. நான் முந்திய அத்தியாயத்தில் குறிப்பிட்டபடி, சர்க்கார் சத்தியாக்கிரகிகளுக் குக் கஷ்டம் கொடுக்கத் தங்களால் முடிந்ததையெல்லாம் செய் தனர். கல் உடைப்பது போன்ற பல கடுமையான வேலைகளுக்கு அவர்களை உட்படுத்தினர். ஆனால், இத்துடன் நிற்கவில்லை. முதலில் எல்லாக் கைதிகளையும் ஒரே இடத்தில் வைத்திருந் தனர். ஆனால், இப்போது சர்க்கார் அவர்களைப் பிரித்துவைக்கும் கொள்கையை மேற்கொண்டு, ஒவ்வொரு சிறையிலும் அவர்களைப் பாடாய்ப்படுத்தினர். டிரான்ஸ்வாலில் குளிர்காலம் மிகவும் கடுமையாக இருக்கும். காலை வேளையில் வேலை செய்யும்போது கை உறைந்து போய்விடும். ஆகவே, குளிர்காலம் கைதிகளுக்கு மிகவும் கஷ்டத்தைத் தந்தது. அவர்களில் சிலரை யாரும் போய்ப் பார்க்கக்கூட முடியாதபடி சாலை முகாம்களில் அவர்களை வைத் திருந்தனர். அந்தச் சத்தியாக்கிரகிகளுள் பதினெட்டு வயதுள்ள சுவாமி நாகப்பன் என்பவர் ஒரு வாலிபர். அவர் சிறைச்சாலைச் சட்டங்களையெல்லாம் ஒழுங்காக மேற்கொண்டு தனக்கு இடப் பட்ட வேலைகளை ஒழுங்காகச் செய்து வந்தார். விடியற்காலங் களில் அவரைச் சாலைகளில் வேலை செய்ய அழைத்துச் சென்ற தால் நிமோனியா காய்ச்சல் கண்டு, விடுதலையான பிறகு (7 ஜூலை, 1909) மரணமடைந்தார். சாகுந் தறுவாயில், அவரு டைய கடைசி மூச்சுவரையில் போராட்டம் ஒன்றைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்ததாக அவர் அருகிலிருந்த கூட்டாளிகள் கூறினார்கள். அவர் சிறைக்குச் சென்றதைப்பற்றிக் கொஞ்சங் கூட வருத்தப்படவில்லை; தன்னுடைய தேசத்திற்காக ஒரு நண்பனைத் தழுவுவதுபோல் மரணத்தைத் தழுவினார். நாகப்பன்

நம்முடைய மதிப்பின்படி 'படிப்பு' இல்லாதவர். ஆங்கிலத்தையும் ஜுலு மொழியையும் பழக்கத்தால் அறிந்து பேசுவார். ஒருவேளை ஆங்கிலமும் கொஞ்சம் எழுதவும் தெரிந்திருக்கக் கூடும். எந்த விதத்திலும் அவர் கல்வி கற்றவரல்ல. இருந்தும், அவரிடம் தைரியம், பொறுமை, தேசபக்தி, மரண பரியந்தம் கைவிடாத உறுதி ஆகியவை இருந்ததோடு இன்னும் அவரிடத்தில் நாம் எதிர்பார்த்தது எதுதான் இல்லை? சத்தியாக்கிரகம், உயரிய கல்வி கற்றவர்கள் பலர் அதில் சேராதிருந்தும், வெற்றியுடன் நடந்துகொண்டுதான் இருந்தது. நாகப்பன் போன்ற வீரர்கள் இராதுபோனால் அது எவ்வாறு முடிந்திருக்குமோ?

நாகப்பன் சிறையில் கொடுமையாக நடத்தப்பட்டு இறந்தது போலவே நாடு கடத்தலினால் மூண்ட துன்பங்கள் நாராயணசாமியின் முடிவுக்குக் காரணமாயின (16 அக்டோபர் 1910). ஆயினும், சமூகத்தினர் குலைவுறவில்லை. கோழைகள் மட்டுமே நழுவினர். அவர்களும் தங்களால் இயன்றதைச் செய்திருந்தனர். அவர்களை நாம் வெறுப்பதற்கில்லை. சாதாரணமாக முன்னேறிச் செல்வோர், பின்னால் நழுவுவோரைப் பார்த்துத் தாங்கள்தாம் தைரியசாலிகள் என்று நினைத்துக்கொண்டு ஏளனம் செய்வதுண்டு. ஆனால், விஷயம் அநேகமாக மாறானதாகவே இருக்கும். ஐம்பது ரூபாய் கொடுக்கச் சக்தியுள்ள ஒருவர் இருபத்தைந்து ரூபாயையும், ஐந்து ரூபாயே தரச் சக்தியுள்ள மற்றொருவர் ஐந்து ரூபாயையும் முழுவதுமே கொடுப்பதாயிருந்தால், ஐந்து ரூபாய் கொடுத்தவரே ஐந்து பங்கு அதிகமாகத் தருபவரைவிட தாராள உள்ளம் படைத்தவர். ஆனால் சாதாரணமாக ஐந்து ரூபாய் தந்தவரைவிட இருபத்தைந்து ரூபாய் தந்தவரைத்தான் தாராளமுடையவராகத் தவறான கருத்துடன் உயர்த்திப் பாராட்டுவது வழக்கம். அதே மாதிரி பலவீனத்தால் பின்வாங்கும் ஒருவர், தம்மால் இயன்றதைச் செய்திருப்பாராகில், முழு மனத்தையும் போராட்டத்தில் வைக்காமல் முன்னேறிச் செல்லும் மற்றவரைவிட அவரே உயர்ந்தவர் ஆவார். ஆகவே, இயக்கம் தங்களால் சமாளிக்க முடியாத அளவு கடுமையாக இருந்ததால், நழுவியவர்களும் சமூகத்திற்குத் தொண்டு புரிந்தவர்களே ஆவார்கள். எங்களுடைய பொறுமையையும், தைரியத்தையும் மேலும் சோதனை செய்யுங் காலம் இப்போது வந்தது. ஆனால், டிரான்ஸ்வாலில் இந்தியர்கள், பின்வாங்குபவர்களாக இல்லை. முனைந்த காரியத்தில் உறுதியுடன் நிலை கொண்டிருந்த வீரர்கள், தங்களிடமிருந்து எதிர்பார்த்த தொண்டிற்கு ஏற்புடையவராக இருந்தனர்.

இவ்வாறு நாளுக்கு நாள் இந்தியர்களுக்குச் சோதனை பன்மடங்கு கடுமையாகிக் கொண்டு வந்தது. சமூகத்தினர் காட்டிய வலிமைக்கு ஏற்றாற்போல் சர்க்காரும் மேலும் மேலும் கொடுமையை இழைக்கலாயினர். ஆபத்து விளைவிக்கக்கூடிய கைதிகளையும், வழிக்குக் கொண்டுவரச் சர்க்கார் நினைக்கும் குற்றவாளிகளையும் அடைப்பதற்கான தனிச் சிறைகள் எப் போதும் உண்டு. டிரான்ஸ்வாலிலும்அத்தகையன சில இருந்தன. டீப்குலுப் சிறை அவற்றில் ஒன்று. அதில் கைதிகளிடமிருந்து கடுமையான வேலைகள் வாங்கப்பட்டதுடன், அதோடு அதன் அதிகாரியும் கொடூரமானவர். ஆயினும், அங்கும் தங்களுக்கு இடப்பட்ட வேலையை இந்தியர்கள் வெற்றிகரமாகச் செய்து வந்தனர். ஆனால், அவர்கள் வேலை செய்யத் தயாராக இருந்த போதிலும், தங்களை அதிகாரி அவமதிப்பதைச் சகிக்க முடியாத வர்களாய் உண்ணுவிரதம் மேற்கொண்டனர். ஒன்று, அந்த அதிகாரியைச் சிறைச்சாலையிலிருந்து நீக்கவாவது வேண்டும் அல்லது வேறொரு சிறைக்குத் தங்களையாவது மாற்ற வேண்டும்; அதுவரை தாங்கள் உணவே கொள்ளப்போவதில்லை என்று கண்டிப்பாகத் தெரிவித்தார்கள். இது முழுவதும் நியாயமான வேலை நிறுத்தம். இதில் ஈடுபட்டவர்கள் மிகவும் யோக்கிய மானவர்கள்; மறைமுகமாகக்கூட உணவைக் கொள்ளுபவர்கள் அல்ல. இந்தியாவில் இத்தகைய சம்பவம் ஏற்பட்டால் பொது மக்களிடையே கிளர்ச்சி தோன்றியிருக்கும். ஆனல், இதனல் எதுவும் டிரான்ஸ்வாலில் பயன் உண்டாக்க வழியில்லை என்பதை வாசகர்கள் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். மேலும், டிரான்ஸ்வாலில் சிறைச் சட்டங்கள் மிகவும் கண்டிப்பானவை. இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில்கூட வெளியிலிருப்போர் கைதி களைக் கண்டு பேச முன் வரவில்லை. ஒரு சத்தியாக்கிரகி, சிறைக் குச் சென்ற பின்பு பொதுவாகத் தானே தனக்கு வேண்டுவன வற்றைச் செய்து கொள்ள வேண்டும். போராட்டம், எளிய வர்களுக்காக, எளியவர்களின் இயக்கமாக நடத்தப்பட்டது. ஆகவே, உண்ணுவிரதம் இருப்போர் மேற்கொண்டிருந்த பிரச் னையில் ஆபத்து நிறைந்து இருந்தது. எனினும், அவர்கள் உறுதியாக இருந்து ஏழு தினங்கள் பட்டினிக்குப் பிறகு தங்களை வேறு சிறைக்கு மாற்றிக் கொள்ளுவதில் வெற்றி கொண்டனர். அந்த நாளிலே உண்ணுவிரதம் அபூர்வம். ஆகவே, இந்தச் சத்தியாக்கிரகிகள் இதில் முன்னேடிகள் என்ற முறையில் நமது தனி மதிப்புக்குரியவர்கள். (நவம்பர், 1910)

## முப்பத்திரண்டாவது அத்தியாயம்

# இரண்டாவது தூதுகோஷ்டி

இவ்வாறு சத்தியாக்கிரகிகள் சிறையில் அடைக்கப்பட்டனர்; அல்லது நாடு கடத்தப்பட்டனர். சில சமயம் அமைதி நிலவும்; மற்ருெரு சமயம் கடும் புயலாக மாறும். ஆனல், இரு தரத்தினருக்கும் ஒருவாறு பலம் குறைய ஆரம்பித்தது. சிறைக்கு அனுப்புவதால் சத்தியாக்கிரகத் தீரர்களை அடக்க முடியாதென்பதையும், வெளியேற்றுவதால் தாங்கள் ஓர் அவகேடான நிலைமைக்கு வருவதையும் சர்க்கார் உணர்ந்தது. மேலும், கோர்ட்டில் தொடரப்பட்ட சில வழக்குகளிலும் சர்க்காருக்குத் தோல்வியே. இந்தியரோ ஒரு பலமான போராட்டத்தை நடத்தக்கூடிய நிலையில் இல்லை. அதற்குப் போதிய சத்தியாக்கிரகிகளும் இல்லை. சில இந்தியர்கள் போராட்டத்தினல் களைத்திருந்தனர். மற்றுஞ் சிலர் தோல்வி மனப்பான்மையுடன் தீவிர சத்தியாக்கிரகிகளை முட்டாள்கள் என நினைத்தனர். 'முட்டாள்களோ' எனில், தாங்கள் புத்தியுள்ளவர்கள் என்பதை உணர்ந்து, ஆண்டவனிடத்திலும், தங்கள் நோக்கத்திலும், தாங்கள் மேற்கொண்ட மார்க்கங்களிலும் முழு நம்பிக்கை வைத்திருந்தனர்; சத்தியம் பெரிது, அதுவே கடைசியில் வெல்லும் என்ற உறுதியைக் கொண்டிருந்தனர்.

இடையில், தென்னுப்பிரிக்க அரசியலில் தொடர்ந்து மாறுதல்கள் தோன்றின. பிரிட்டிஷாரும் போயர்களும், அந்தச் சிறு கண்டத்திலுள்ள பல்வேறு காலனிகளை ஒன்ருக இணைத்துப் பெரிய அந்தஸ்தைப் பெற விரும்பினர். ஜெனரல் ஹெர்ட்ஜாக், பிரிட்டிஷாரிடமிருந்து அறவே பிரிந்துவிடுவதை விரும்பினர். மற்றவர்கள், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துடன் பெயரளவில் ஒரு தொடர்பு வைத்துக்கொள்ள விரும்பினர்கள். முழுவதும் பிரிந்து போவதற்கு ஆங்கிலேயர் ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள். அவர்கள் கோரும் பெரிய அந்தஸ்தை பிரிட்டிஷ் பார்லிமெண்டின் மூலமாகத்தான் சம்பாதிக்க முடியும். ஆகவே, போயர்களும் தென்னுப்பிரிக்காவிலிருந்த ஆங்கிலேயரும், தம்முடைய கோஷ்டி ஒன்றை இங்கிலாந்துக்கு அனுப்பி பிரிட்டிஷ் மந்திரிசபையின் முன்பு தங்களுடைய குறையைச் சமர்ப்பிப்பது என்று தீர்மானித்தனர்.

காலனிகளை ஐக்கியப்படுத்துவதனுல், முன்னதைவிட தங்களுக்கு வரப்போகும் பிந்திய நிலைமை மோசமாக இருக்கும் என்று இந்தியர் கண்டனர். இந்தியர்களை அடக்குவதில் எல்லாக் காலனிகளும் எப்பொழுதும் விருப்பம் கொண்டிருந்தன. அவை ஒன்று சேர்ந்தால் அவர்களுடைய மனப்பான்மை இந்திய சமூகத்திற்கு மிகுந்த தீமை விளைவிக்கும் என்பதையும் உணர்ந்தனர். தாங்கள் எழுப்பும் சிறு குரல் பிரிட்டிஷ், போயர் சிங்கங்களின் பெரிய கர்ஜனையால் மழுங்கி விடும் என்று உணர்ந்திருந்தும், எந்த வழியையும் ஆராயாமல் விடுவதில்லை என்று நினைத்து, இங்கிலாந்துக்கு மீண்டும் ஒரு கோஷ்டியை அனுப்ப இந்தியர் தீர்மானித்தனர். அந்தச் சமயத்தில் போர்பந்தரிலிருந்து வந்த மெமன் மரபைச் சேர்ந்தவரான சேட் ஹாஜி ஹபீப் என்பவரைத் தூது கோஷ்டியில் என்னுடைய சகாவாக நியமித்தனர். அந்த சேட் டிரான்ஸ்வாலில் நெடுங்காலம் வியாபாரம் செய்துவந்தவர். பரந்த அனுபவமும் உடையவர். அவருக்கு ஆங்கிலக் கல்வியில் பயிற்சியில்லை. எனினும், ஆங்கிலம், டச்சு, ஜூலு ஆகிய பிறமொழிகளில் சிறிது பழக்கம் இருந்தது. அவரை ஒரு முழுச் சத்தியாக்கிரகி என்று சொல்லமுடியாதெனினும் அவருடைய அனுதாபங்கள் சத்தியாக்கிரகிகளின் சார்பாக இருந்தன. கேப்டவுனை விட்டு 1909-ஆம் ஆண்டு ஜூன் 23-ஆம் தேதி புறப்பட்டு இங்கிலாந்துக்கு எங்களை ஏற்றிச் சென்ற எஸ். எஸ். கெனில்வொர்த் காஸில் என்ற கப்பலில், ஸ்ரீ மெர்ரிமேன் என்ற தென்னுப்பிரிக்க அரசியல்வாதி ஒருவர் எங்களுடன் பயணம் செய்தார். காலனிகளை ஒன்றுபடுத்தும் நோக்கத்துடன் அவர் சென்றுகொண்டிருந்தார். ஜெனரல் ஸ்மட்ஸ் முதலியோர் ஏற்கனவே இங்கிலாந்தில் இருந்தனர். நேட்டாலில் இருந்த இந்தியர்களின் கோஷ்டி ஒன்றும், தங்கள் குறைகளைச் சமர்ப்பிக்க இங்கிலாந்துக்கு வந்திருந்தது.

இச்சமயத்தில், காலனிகளின் மந்திரியாக லார்டு கிருவும், இந்திய மந்திரியாக லார்டு மார்லியும் இருந்தனர். நாங்கள் பலரைச் சந்தித்தோம். பல விவாதங்கள், பேச்சுகள் நடந்தன. காண முடிந்த பார்லிமெண்டின் இரு சபை உறுப்பினரையும், பத்திரிகாசிரியர்களில் எவரையும் நாங்கள் சந்திக்காமல் விடவில்லை. லார்டு ஆம்ப்தில் என்பார் எங்களுக்கு மதிக்கவொண்ணுத உதவி செய்தார். அவர், ஸ்ரீ மெர்ரிமேன், ஜெனரல் போத்தா ஆகியோரைச் சந்தித்தார்; இறுதியில் ஜெனரலிடமிருந்து ஒரு செய்தியையும் கொண்டு வந்தார். “ஜெனரல் போத்தா, இவ்விஷ

யத்தில் உங்களுக்கு இருக்கும் உணர்ச்சிகளை மெச்சிப் பேசினர். உங்கள் சிறு வேண்டுகோள்களுக்கும் இணங்கத் தயாராக இருக்கிருர். ஆனல், ஆசியச் சட்டத்தை ரத்து செய்யவோ குடியேறுபவர்களைத் தடுக்கும் விதியை மாற்றவோ அவர் சம்மதிக்கவில்லை. நாட்டின் சட்டத்திலுள்ள நிறத்தடையை அகற்றவும் அவர் மறுக்கிருர். இன பேதத்தை அமலில் வைப்பது ஜெனரலின் கொள்கை. அவர் அதை நீக்க நினைத்தாலும் தென்னுப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியர் அவருக்குச் செவி சாய்க்க மாட்டார்கள். ஜெனரல் ஸ்மட்ஸும், ஜெனரல் போத்தாவைப் போலவே கருதுகிருர். இதுவே அவர்களுடைய கடைசி முடிவும் சலுகையும் ஆகும். அதற்கு மேலும் நீங்கள் கேட்பீர்களே யானல், உங்களுக்கும் உங்கள் ஜனங்களுக்கும் துன்பத்தைத் தான் வரவழைத்துக் கொள்ளுவீர்கள். ஆகவே, நீங்கள் போயர் தலைவர்களுடைய இந்தப் போக்கை அனுசரித்துத் தீர யோசனை செய்த பிறகே எதையும் செய்யுங்கள். ஜெனரல் போத்தா இதை உங்களிடம் கூறி உங்கள் பொறுப்பையும் காட்டச் சொன்னர்'' என்ருர்.

இந்தச் செய்தியைத் தந்த பிறகு, லார்டு ஆம்ப்தில், "ஜெனரல் போத்தா, நீங்கள் கேட்டவைகளை யெல்லாம் ஏறக் குறைய ஏற்றுக்கொண்டார். இந்த நடைமுறை உலகத்தில் நாம் எப்போதும் பரஸ்பரம் விட்டுக் கொடுப்பது அவசியம். நாம் விரும்புவதையெல்லாம் பெற்றுவிட முடியாது. ஆகவே இத்துடன் நீங்கள் இந்தப் பிரச்னையை முடித்து விடும்படி நான் உங்களை மிகவும் கேட்டுக்கொள்ளுகிறேன். கொள்கைக்காகப் போராடுவது உங்கள் விருப்பமெனில், அதைப் பின்னர் செய்துகொள்ளலாம். சேட் அவர்களும் நீங்களும் யோசனை செய்து உங்களுக்குச் சௌகரியமானபோது பதில் அனுப்புங்கள்'' என்று கூறினர்.

இதைக் கேட்டபோது, நான் ஹாஜி ஹபீபை நோக்கினேன். அவர், "சமாதானம் செய்யவந்த கோஷ்டியின் சார்பாக, ஜெனரல் போத்தா தரும் சலுகையை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன் என்று அவரிடம் சொல்லுங்கள். நாம் கேட்ட சலுகைகளை அவர் தருவதாயின் தற்போதைக்கு நமக்குத் திருப்தியே. பிறகு கொள்கைக்காகப் போராடுவோம். நமது சமூகம் இனிமேலும் துன்பப்பட நான் விரும்பவில்லை. சமூகத்தில் பெரும்பான்மையினர் என்னைப் பிரதிநிதியாகக் கொண்டு இருக்கும் கட்சியினர். சமூகத்தின் செல்வத்தின் பெரும்பகுதியும் அவர்களிடமே இருக்கிறது'' என்ருர்.

சேட் சொன்னவற்றைச் சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்துக் கூறிவிட்டு, சத்தியாக்கிரகிகள் சார்பாக நான் கூறினேன். "தாங்கள் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு நாங்களிருவரும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். எண்ணிக்கையிலும், பண இருப்பிலும், பலத்த ஒரு பகுதியினருக்குத் தாம் பிரதிநிதி என்று என் சகா கூறுவது சரியே. நான் யாருக்காகப் பரிந்து பேசுகின்றேனே அந்த இந்தியர்கள் வறியவர்கள்; எண்ணிக்கையிலும் குறைந்தவர்கள். ஆனல், அவர்கள் மரணம் வரையிலும் மாருத உறுதியுடையவர்கள். அவர்கள் குறைகளின் நிவாரணத்திற்காக மட்டுமல்ல, கொள்கைக்காகவும் போராடுகின்றனர். இரண்டிலொன்றைக் கைவிடுவது அவசியமேயானல், அவர்கள் முந்தியதைத் தூக்கி எறிந்துவிட்டுப் பிந்தியதற்காகப் போராடுவார்கள். ஜெனரல் போத்தாவின் சக்தி எங்களுக்குத் தெரியும். ஆனல், எங்கள் பிரதிக்ஞைக்கு அதைவிட அதிகமான மதிப்பைத் தருகிறோம். அதைக் கடைப்பிடிக்க நாங்கள் கடைசி வரையிலும் எந்த ஆபத்தையும் எதிர்க்கத் தயார். எங்களுடைய சீரிய தீர்மானத்தை நாங்கள் கைக்கொண்டால், எந்த ஆண்டவன் பேரால் அதை மேற்கொண்டோமோ அந்த ஆண்டவன் அதை நிறைவேற்றி வைப்பான் என்ற நம்பிக்கையினல் பொறுமையாக இருப்போம்.

"தங்களுடைய நிலைமையை நான் நன்கு புரிந்துகொள்ளுகிறேன். தாங்கள் எங்களுக்காக அதிகம் செய்திருக்கிறீர்கள். இப்பொழுது தாங்கள் ஒரு சிறு எண்ணிக்கையினரேயான சத்தியாக்கிரகிகளுக்கு ஆதரவை அளிக்காதுபோனல் அதற்காகத் தங்களை நாங்கள் தவருக நினைக்கமாட்டோம். தாங்கள் எங்கள் மேல் காட்டிய அன்பின் நன்றியை நாங்கள் என்றும் மறவோம். ஆனல், தங்கள் புத்திமதியை நாங்கள் ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு மன்னிப்பீர்கள் என்று நம்புகிறோம். தாங்கள் நிச்சயமாக ஜெனரல் போத்தாவிடம், எப்படி நானும் சேட்டும் அவர் தருவதை ஏற்றுக்கொண்டோமென்று கூறி, சத்தியாக்கிரகிகள் குறைந்த அளவினராக இருப்பினும் தம் உறுதியைக் கடைப்பிடித்தே தீருவார்கள் என்றும், அவர்கள் மேற்கொண்ட துன்பத்தின் மூலம் ஜெனரலின் மனத்தை உருக்கிக் கடைசியில் ஆசியச் சட்டத்தை ரத்து செய்விக்க முடியும் என்று நம்புகிருர்கள் என்றும் அறிவிப்பீர்கள்" என்றும் கூறினேன்.

லார்டு ஆம்ப்தில் மறுமொழியாகக் கூறியதாவது: "நான் உங்களைக் கைவிடுவேன் என்று நீங்கள் நினைக்கக் கூடாது.

நானும் பெருந்தன்மையாக நடக்கவேண்டும். ஆங்கிலேயர், தாம் மேற்கொண்ட வேலையை உடனே கைவிட்டுவிட இணங்கு பவர்கள் அல்லர். உங்களுடைய போராட்டம் நேர்மையானது. அதை நீங்கள் தூய்மையான ஆயுதங் கொண்டு நடத்துகிறீர்கள். ஆகவே, நான் எங்ஙனம் உங்களைக் கைவிடமுடியும்? ஆனால், என்னுடைய சிரமமான நிலைமையை நீங்கள் ஊகித்துக்கொள்ள முடியும். துன்பம் இருப்பின் அதை நீங்களேதான் சகித்துக் கொள்ளவேண்டும். ஆகவே, இந்நிலைமையில் சாத்தியமானதான ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ள உங்களுக்குப் புத்தி சொல்லுவது எனது கடமையாகிறது. ஆனால், துன்பப்படப்போகிற நீங்களோ, கொள்கைக்காக எவ்வளவு வேதனையையும் அனுபவிக்கத் தயா ராக இருக்கும் பொழுது, நான் உங்களுக்கிடையே தடையாக வராமல் இருப்பதுடன் உங்களைப் பாராட்டவும் வேண்டும். ஆகவே, நான் உங்கள் கமிட்டியின் தலைவனாகத் தொடர்ந்து இருந்து என்னாலானவரையில் உங்களுக்கு உதவி செய்வேன். ஆனால், நான் லார்டுகள் சபையில் ஓர் இளைய உறுப்பினன் என்பதையும், எனக்கு அதிகச் செல்வாக்குக் கிடையாது என் பதையும் நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆயினும், எனக்கு இருக்கும் சிறிய செல்வாக்கும் உங்கள் சார்பாக இடையறாமல் உபயோகிக்கப்படும் என்பது திண்ணம்.''

தைரியம் தரும் இந்த வார்த்தைகள் எங்கள் இருவரையும் மகிழ்வித்தன.

இந்தப் பேட்டியில் மகிழ்ச்சி தரும் ஒரு விஷயத்தை வாசகர்கள் உணராமல் இருந்திருக்க முடியாது. நான் முன்பு கூறியபடி, எனக்கும் சேட் ஹாஜி ஹபீபுக்கும் மாறுபாடான கருத்துக்கள் இருந்தும், எங்களுக்கிடையே இருந்த பரஸ்பரமான நட்பினாலும், நம்பிக்கையாலும், சேட் தம்முடைய மாறான அபிப்பிராயங்களை என் வாயிலாகத் தெரிவிக்கத் தயங்கவில்லை. தம் கட்சி வாதத்தை லார்டு ஆம்ப்தில்லிடம் சமர்ப்பிக்கச் சேட் என்னையே முழுவதும் நம்பி இருந்தார்.

இந்த அத்தியாயத்தைச் சற்றுப் பொருத்தமில்லாத ஒரு பகுதியுடன் முடிக்கப் போகிறேன். இங்கிலாந்தில் நான் தங்கி யிருந்தபொழுது அராஜகவாதிகளான இந்தியர்கள் அநேகருடன் 1908-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பேச நேர்ந்தது. எஸ். எஸ். கில்டோனன் காஸில் என்ற கப்பலில் நான் பிரயாணம் செய்தபோது எழுதியதும், பின்னர் 'இந்தியன் ஒப்பினிய'னில்

பிரசுரமானதுமான ‘இந்திய சுயராஜ்யம்’* (Indian Home Rule) என்ற சிறு புத்தகம், அவர்களுடைய விவாதங்களுக்குப் பதிலளிக்கவேண்டிய நிமித்தத்திலிருந்தும், தென்னுப்பிரிக்காவில் அதே போன்று அபிப்பிராயங்கள் கொண்டிருந்த இந்தியர்களின் கஷ்டங்களை நீக்க முயற்சி செய்ததிலுமிருந்தும் உருவெடுத்த தாகும். அப்புத்தகத்திலுள்ள முக்கிய அம்சங்களைப் பற்றி லார்டு ஆம்ப்திலிடமும் கலந்து ஆலோசித்தேன். முன்ன தாகவே என் நோக்கங்களை வெளிக்குக் காட்டாமல், அவ ருடைய பெயரையும் உதவியையும் தென்னுப்பிரிக்காவில் என் பணிக்காக நான் தவருக உபயோகித்துக் கொண்டேனென்று அவர் துளியும் நினைக்காமல் இருப்பதற்காகவே அங்ஙனம் செய்தேன். லார்டு ஆம்ப்திலிடம் பேசியது என் ஞாபகத்தில் என்றும் பதிந்துள்ளது. தம் குடும்பத்தினர் ஒருவர் நோயுற்று இருந்த நிலையிலும் என்னைச் சந்திக்க அவருக்குச் சமயம் இருந்தது. நான் ‘இந்திய சுயராஜ்ய’த்தில் வெளியிட்ட என் கருத்துக்களுக்கு அவர் ஒத்துப்போகாதிருந்தும் எங்கள் போராட்டத்திற்குக் கடைசிவரை ஆதரவு தந்தார். அவருக்கும் எனக்கும் இடையே எப்போதும் நெருங்கிய சிநேக மனப் பான்மை இருந்துவந்தது.

---

* காந்திஜி குறிப்பிடும் ‘இந்திய சுயராஜ்யம்’ என்ற நூலும் இப்புத்தகத்திலேயே பின்னல் தனியான ஒரு பகுதியாக சேர்க்கப்பட்டிருக்கிறது.

## முப்பத்து மூன்ருவது அத்தியாயம்

# டால்ஸ்டாய் பண்ணே-1

இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்த தூதுகோஷ்டியினர் நல்ல செய்தி கொண்டு வரவில்லை. ஆனல், லார்டு ஆம்ப்தில் லிடம் நாங்கள் பேசிய பேச்சுக்களைக் கொண்டு எங்கள் சமூகத் தினர் என்ன முடிவுக்கு வருவார்கள் என்பதைக் குறித்து நான் கவலைப்படவேயில்லை. கடைசி வரையில் யார் எங்களுடன் இருப்பார்கள் என்பது எனக்குத் தெரிந்திருந்தது. சத்தியாக் கிரகத்தைப் பற்றிய என் கருத்துக்கள் முதிர்ச்சி அடைந்தன. அதன் உயர்வையும், பரந்த அடிப்படையையும் நான் தெளி வாகத் தெரிந்து கொண்டுவிட்டேன். ஆதலால் என் மனத்தில் கவலை ஏதும் இருக்கவில்லை. 'இந்திய சுயராஜ்யம்' என்ற புத்தகம் சத்தியாக்கிரகத்தின் உன்னதத் தன்மையை வெளிப் படுத்துவதற்காகவே எழுதப்பட்டது. சத்தியாக்கிரகத்தின் சக்தியில் எனக்கிருந்த நம்பிக்கைக்கு அது ஓர் அளவு கோலாக விளங்கியது. எங்கள் கட்சியில் போருக்குத் தயா ராக இருந்தவர்களின் எண்ணிக்கையைக் குறித்து நான் கவலைப்படவேயில்லை.

ஆனல், எங்கள் நிதி நிலைமையைப் பற்றி நான் கவலை கொள்ளாமல் இருக்க முடியவில்லை. பல நாள் நீடிக்கும் ஒரு போராட்டத்தை நிதியின்றி நடத்தமுடியாது. பொருளின்றிப் போராட்டத்தை நடத்தமுடியும் என்பதையும், பணமே பல தடவைகளில் நேர்மையான இலட்சியத்திற்காகத் தொடுக்கும் போராட்டத்தைக் கெடுத்துவிடலாம் என்பதையும், சத்தியாக் கிரகிக்கோ, மோக்ஷத்தை நாடுபவருக்கோ, அவர்களுடைய முக்கிய தேவைக்குமேல் கடவுள் அதிகமாகக் கொடுப்பதில்லை என்பதையும் நான் இப்போது அறிந்திருப்பதுபோல் அப் பொழுது தெளிவாக உணரவில்லை. ஆனல், அப்பொழுதுகூட ஆண்டவனிடத்தில் எனக்கு நம்பிக்கை இருந்தது. அவன் அருள் என்னைக் கைவிடாமல் அப்பொழுது எனக்கு இருந்த சோர்வி லிருந்து காப்பாற்றியது. நான் தென்னப்பிரிக்காவில் இறங்கி யதும், எங்கள் தூதுகோஷ்டி வெற்றி பெறவில்லை என்று அங்கிருந்த இந்தியருக்கு அறிவிக்கவேண்டிய சங்கடம் ஒருபுறம்

இருந்தும், மறுபுறத்தில் ஆண்டவன் எங்கள் பணக் கஷ்டத்தை நிவர்த்தி செய்து உதவினான். நான் கேப்டவுனில் கால் வைத்ததும், (பின்னர் ஸர்) ரத்தன்ஜி ஜாம்ஷெட்ஜி டாடா அவர்கள் சத்தியாக்கிரக நிதிக்கு ரூ. 25,000 அளித்திருப்பதாகத் தந்தி வந்தது. இந்தத் தொகை எங்களுடைய உடனடியான தேவைகளுக்குப் போதுமானதாக இருந்தது. நாங்கள் மேற்கொண்டு சென்றோம். ஆனால், முற்றிலும் மனத்தூய்மையையும் தன்னம்பிக்கையையும் ஆதாரமாகக் கொண்டு சத்தியத்தின் சார்பில் போராடுவதான சத்தியாக்கிரக இயக்கத்தை நடத்த இந்த அல்லது இதைவிடப் பெருவாரியான நன்கொடை மட்டும் போதாது. ஒழுக்கம் என்ற முதல் இல்லாவிட்டால் சத்தியாக்கிரகப் போராட்டம் சாத்தியமில்லாது போகும். மனிதர் வாழாத ஒரு மாளிகை பாழடைந்து காணப்படுவதுபோல், எவ்வளவு பொருள் படைத்தவனாக இருந்தும் ஒழுக்கமற்றவன் பாழாகி விடுகிறான். இந்தப் போராட்டம் எவ்வளவு காலம் நீடிக்கும் என்று எவராலும் சொல்லமுடியாது என்பதைச் சத்தியாக்கிரகிகள் கண்டார்கள். ஒரு பக்கம் இம்மியளவும் விட்டுக் கொடுக்கக் கூடாது என்ற தீர்மானத்துடன் போயர் படைத்தலைவர்கள் இருந்தார்கள். மறுபக்கம், வெற்றிகாணும்வரையில் போராடுவது, இன்றேல் மரணம் என்ற விரதத்துடன் ஒரு சில சத்தியாக்கிரகிகள் இருந்தார்கள். ஆயிரக்கணக்கில் ஒரே மிதியால் நசுக்கி விடக்கூடிய யானைக்கும் எறும்புக்குமான சண்டைபோல் இது இருந்தது. சத்தியாக்கிரகிகளால் தங்கள் போராட்டத்திற்கு ஒரு கால வரையறை வைக்கமுடியாது. ஒரு வருடமானாலும் அல்லது பல வருடங்களானாலும் அவர்களுக்கு எல்லாம் ஒன்றே. அவர்களைப் பொறுத்தவரை போரை நடத்துவதுதான் அவர்கள் வெற்றி. போராட்டம் அவர்களைச் சிறைக்குள் தள்ளலாம்; நாட்டிலிருந்து வெளியேறச் செய்யலாம். அங்கிலையில் அவர்கள் குடும்பங்களின் கதி என்னவாகும்? அடிக்கடி சிறைக்குச் செல்லும் ஒருவரை யாரும் வேலைக்கு வைத்துக்கொள்ள விரும்பமாட்டார்கள். அவர் விடுதலையாகி வந்தாலும் தம்மையும் தம்மைச் சார்ந்தவர்களையும் காப்பாற்றுவது எப்படி? அவர் எங்கே குடியிருப்பது? வீட்டு வாடகை எங்கிருந்து வரும்? சத்தியாக்கிரகி தன் தினசரி உணவுக்காகக் கவலைப்பட நேர்ந்தால் அவனை மன்னிக்க வேண்டியதும் அவசியம்தான். தானும் பட்டினியிருந்து, தனது அருமையான மனைவி மக்களையும் அதே துன்பத்திற்கு உள்ளாக்கிவிட்டு ஓர் போராட்டத்தில் மனமார ஈடுபடுபவர்கள் உலகத்தில் அதிகம் பேர் இருக்கமுடியாது.

இதுவரையில் சிறை சென்ற சத்தியாக்கிரகிகளின் குடும்பங்களை, அவரவர் அவசியத்திற்கு ஏற்றபடி பிரதிமாதமும் பண உதவியின் மூலம் பராமரித்து வந்தோம். எல்லோருக்கும் ஒரே அளவு தொகை கொடுக்க இயலாது. ஐந்து குழந்தைகளுள்ள ஒருவரையும், குடும்பப் பொறுப்பு இல்லாத ஒரு பிரம்மசாரியையும் ஒரே மாதிரி நடத்த முடியாது; அல்லது 'எங்கள் சேனைக்குப் பிரம்மசாரிகளை மாத்திரமே சேர்ப்பதென்பதும் முடியாது. எனவே, ஒவ்வொரு குடும்பத்திற்கும் குறைந்த அளவு தேவையான தொகை என்னவென்று கேட்டு, அவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைத்து வந்தோம். இந்த முறையில் மோசடிக்கு இடம் இருந்தது; சில போக்கிரிகள் அதைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்ளவும் கூடும். யோக்கியமான வேறு சிலர், தாங்கள் முன்பு இருந்து பழகிவிட்ட வாழ்க்கைத் தரத்தின்படி குடும்பம் நடத்த இந்த உதவியை எதிர் பார்த்தார்கள். அப்படிக் கொடுத்தால் இயக்கத்தை அதிக நாள் நடத்தமுடியாது என்பது எனக்குப் புலனாயிற்று. தகுதியுள்ளவர்கள் போதுமான அளவு பெருதுபோவதும், வேறு சிலர் இந்த நிலைமையைத் தவறாகப் பயன்படுத்தி அதிகம் பெற்றுவிடுவதுமாகிய சங்கடங்கள் இருந்தன. இப்பிரச்னையைத் தீர்க்க ஒரே ஒரு மார்க்கந்தான் இருந்தது; அதாவது, எல்லாக் குடும்பங்களையும் ஒரே இடத்தில் வைத்து ஒரு கூட்டுறவுச் சமுதாயத்தில் அவர்களை அங்கத்தினர்களாயிருக்கச் செய்வது. அப்படிச் செய்வதால் மோசடியும் இருக்காது; அநீதியும் ஏற்படாது; பொதுப் பணமும் மிச்சமாகும். சத்தியாக்கிரகிகளின் குடும்பத்தாரும் ஒருவரோடொருவர் சேர்ந்து எளிய வாழ்க்கை நடத்தக் கற்றுக்கொள்ளுவார்கள். பல மாகாணங்களிலிருந்து வந்த, பல மதங்களையும் அனுசரிக்கும் இந்தியர்கள் அனைவரும் ஒன்றாக வாழக்கூடிய வாய்ப்பையும் பெறுவார்கள்.

ஆனால், இத்தகைய குடியிருப்புக்கு ஏற்ற இடம் எங்கே கிடைக்கும்? நகரத்தில் குடியிருப்பு, ஒவ்வொரு சிறு விஷயத்திற்கும் அல்லலுறும்படியாக இருக்கும். நகரத்தில் இருந்தால் சாப்பாட்டிற்கு ஆகிற செலவு வீட்டு வாடகைக்கும் ஆகும். தவிர, நகர வாழ்க்கையின் பல கவர்ச்சிகளுக்கிடையே எளிய வாழ்க்கையும் சாத்தியமாய் இராது. மேலும், நகரங்களில் பல குடும்பங்கள் சேர்ந்து தம் வீட்டிலேயே பயன்படக்கூடிய கைத்தொழில்களை நடத்துவதற்கேற்றதாயுள்ள இடமும் கிடைக்காது.

எனவே, நகரத்திலிருந்து அதிகத்தொலைவும் இல்லாமல், மிக அருகிலும் இல்லாமல் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்பது தெளிவாயிற்று. 'இந்தியன் ஒப்பினியன்' என்ற பத்திரிகை அச்சிடப்பட்டு வந்த போனிக்ஸ் என்ற இடம் அருகில்தான் இருந்தது. அங்கே கொஞ்சம் விவசாயமும் நடந்து வந்தது. மற்றும் பல வழிகளிலும் போனிக்ஸில் மற்ற பல வசதிகளும் இருந்தன. ஆனால், அது ஜோஹன்னஸ்பர்க்கிலிருந்து 300 மைல் தொலைவுக்கு அப்பால் இருந்தது. அங்கே செல்ல முப்பது மணி நேரமாகும். அவ்வளவு தூரம் அவர்களை அழைத்துச் சென்று திருப்பிக் கொண்டு வருவது என்பது மிகவும் கஷ்டமும் செலவுமான விஷயமாகும். சத்தியாக்கிரகிகளின் குடும்பங்கள் தங்கள் இருப்பிடத்தைவிட்டு அவ்வளவு தூரம் போகத் தயாராக இருக்கமாட்டார்கள். அவர்கள் தயாராக இருந்தாலும் அவர்களையும், விடுதலையான சத்தியாக்கிரகிகளையும் அவ்வளவு தூரம் அனுப்புவது அசாத்தியமென்று தோன்றியது.

எனவே, தேவையாகும் இடம் டிரான்ஸ்வாலுக்குள்ளேயும் ஜோஹன்னஸ்பர்க்குக்கு அருகிலேயும் இருக்கவேண்டும். ஸ்ரீ கால்லன்பாக் அவர்களை வாசகர்கள் முன்னமேயே 'அறிவார்கள். அவர் ஆயிரத்து நூறு ஏக்கர் கொண்ட ஒரு பண்ணையை விலைக்கு வாங்கி அதைச் சத்தியாக்கிரகிகளின் உபயோகத்திற்காக வாடகையுமின்றி அளித்தார் (30-5-1910). அந்தப் பண்ணையில் சுமார் ஆயிரம் கனி தரும் மரங்கள் இருந்தன. மலையடிவாரத்தில் சுமார் ஆறு பேர் தங்கக்கூடிய ஒரு சிறிய விடுதியும் இருந்தது. இரண்டு கிணறுகளிலிருந்தும் ஒரு சுனையிலிருந்தும் தண்ணீர் கிடைத்தது. லாலி என்ற ரெயில்வே ஸ்டேஷன் அதற்கு ஒரு மைலிலும், ஜோஹன்னஸ்பர்க் அங்கிருந்து இருபத்தொன்று மைல் தூரத்திலும் இருந்தன. அந்தப் பண்ணையில் வீடுகள் கட்டுவது என்றும், சத்தியாக்கிரகிகளின் குடும்பங்களை அங்கே குடிபுகச் செய்வது என்றும் முடிவு செய்தோம்.

முப்பத்து நான்காவது அத்தியாயம்

# டால்ஸ்டாய் பண்ணை-2

பண்ணையில் ஆரஞ்சு, ஆப்ரிகாட், பிளம் ஆகிய பழங்கள் நிறைய இருந்தன. பருவ காலத்தில் சத்தியாக்கிரகிகள் அனைவரும் வயிறுார உண்டு அதற்கு மேலும் மிகுந்தும் இருந்தன.

சுனை எங்கள் இருப்பிடத்திலிருந்து சுமார் ஐந்நூறு கஜ தூரத்தில் இருந்தது. எனவே, காவடி மூலம் தண்ணீரைக் கொண்டு வரவேண்டியிருந்தது.

வீட்டு வேலைக்காக மாத்திரமல்ல, கூடுமானவரை தோட்டம் அல்லது கட்டட வேலைக்கும் கூலியாட்களை அமர்த்தக் கூடாதென்று வற்புறுத்தி வந்தோம். ஆகவே, சமையலிலிருந்து தோட்டி வேலை வரை எல்லாவற்றையுமே எங்கள் கையாலேயே செய்து வந்தோம். குடியிருப்பு சம்பந்தமாக, ஆரம்பத்திலிருந்தே பெண்களுக்கும் ஆண்களுக்கும் தங்குவதற்குத் தனித் தனியாக இடம் ஏற்பாடு செய்வது என்று முடிவு செய்திருந்தோம். ஆகையால் வீடுகள், ஒன்றுக்கொன்று இடையில் போதிய தூரம் விட்டு இரண்டு வரிசையாகக் கட்டடங்களைக் கட்ட வேண்டியதாக இருந்தது. தற்போதுக்கு பத்துப் பெண்களுக்கும் 60 ஆண்களுக்கும் இடம் ஏற்பாடு செய்தால் போதுமென்று முதலில் நினைத்தோம். இவற்றைத் தவிர ஸ்ரீ கால்லன்பாக்குக்கு ஒரு வீடும், அதன் பக்கத்தில் ஒரு பள்ளிக்கூடமும், தச்சுப் பட்டடை, செருப்புத் தைத்தல் ஆகியவற்றிற்காக ஒரு கட்டடமும் எழுப்பவேண்டியிருந்தது.

குடிபுகுந்தவர்கள் குஜராத், தமிழ் நாடு, ஆந்திரா, வட இந்தியா ஆகிய இடங்களிலிருந்து வந்தவர்கள். அவர்களில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகியோர் இருந்தனர். சுமார் நாற்பது பேர் இளம் வயதினர்; இரண்டு மூன்று பேர் வயது முதிர்ந்தோர்; ஐந்து பெண்கள்; சுமார் முப்பது குழந்தைகள்; அவர்களில் நான்கைந்து பேர் சிறுமியர்.

கிறிஸ்தவர்களும் மற்றப் பெண்களும் மாமிச உணவு கொள்பவர்கள். இந்தப் பண்ணையில் மாமிச உணவை விலக்குவது

நல்லதென்று ஸ்ரீ கால்லன்பாக்கும் நானும் நினைத்தோம். ஆனல், மாமிச உணவு தவருனது என்று கருதாதவர்களும், சிறு வயதிலிருந்தே இந்த வகை உணவைச் சாப்பிடும் பழக்கத்தைக் கொண்டுள்ளவர்களுமான இவர்கள், தங்கள் கஷ்ட காலத்தில் பண்ணைக்கு வந்திருக்கும்போது தாற்காலிகமாகவாயினும் புலால் உணவை விட்டுவிடும்படி எப்படிச் சொல்லுவது? ஆனல், அவர்களுக்குப் புலால் உணவை வழங்கினல் செலவு அதிகமாகாதா? மேலும் மாட்டிறைச்சியைச் சாப்பிடுபவர்களுக்கு அதையும் தரவேண்டுமா? அப்படியானல் எத்தனைச் சமையல்கள் தனித் தனியாகச் செய்வது? இதில் என் கடமை என்ன? இந்தக் குடும்பங்களுக்குப் பொருளுதவிக்காக ஏற்பாடு செய்யக் காரணமாயிருந்த நான், மாட்டிறைச்சி, ஆட்டிறைச்சி சாப்பிடுபவர்களுக்கும் ஆதரவு கொடுத்திருந்தேன். புலால் சாப்பிடுபவர்களுக்கு உதவி அளிக்க முடியாது என்ற விதியை நான் ஏற்படுத்துவதாயிருந்தால், சைவ உணவு உண்பவர்களைக் கொண்டு மாத்திரமே சத்தியாக்கிரகப் போராட்டத்தை நடத்த நேர்ந்திருக்கும். எல்லாப் பகுதியினரையும் சேர்ந்த இந்தியர்களுக்காக இவ்வியக்கம் நடத்தப்படுவதால், அங்ஙனம் செய்வது மதியீனமாகவும் இருக்கும். எனவே இங்கிலையில் என்னுடைய கடமை எது என்பதை அறிய அதிக நேரமாகவில்லை. கிறிஸ்தவர்களும் முஸ்லிம்களும் மாட்டிறைச்சியைக் கேட்டால் கூட அதையும் கொடுக்க வேண்டியதுதான். புலால் உண்பதால் அவர்களைப் பண்ணைக்குள் அனுமதிக்க மறுப்பது முற்றிலும் நடவாத விஷயம்.

ஆனல், அன்பு இருக்குமிடத்தில் ஆண்டவனும் இருக்கிருன். முற்றிலும் சைவமான சமையலைச் செய்ய முன்னமேயே முஸல்மான் நண்பர்கள் எனக்கு அனுமதி தந்திருந்தார்கள். கிறிஸ்தவ சகோதரிகளை - அவர்களுடைய கணவன்மாரோ அல்லது மக்களோ சிறையில் இருந்தனர்—நான் இப்பொழுது அணுக வேண்டியிருந்தது. சிறைக்குச் சென்று இருக்கும் கிறிஸ்தவ நண்பர்களை எனக்கு நன்ருகத் தெரியும். அவர்கள், இதுபோன்ற பல தடவைகளில் சைவ உணவே கொள்ள இசைந்திருந்தார்கள். ஆனல், அவர்கள் இல்லாமல் நான் அவர்கள் குடும்பங்களுடன் நெருங்கிப் பழகியது இதுதான் முதல் தடவையாகும். அங்கிருந்த இடவசதிக் குறைவையும், அசௌகரியமான பொருள் நிலையையும், சைவ உணவில் எனக்கிருந்த நம்பிக்கையையும் சகோதரிகளுக்கு எடுத்துச்சொன்னேன். அதே சமயத்தில்,

அவர்கள் விரும்பினல் மாட்டு மாமிசம் ஏற்பாடு செய்வதாகவும் உறுதி கூறினேன். அந்தச் சகோதரிகள் மாமிசம் இல்லா திருக்க அன்புடன் இசைந்தார்கள். சமையல் வேலை அவர் களிடம் ஒப்படைக்கப்பட்டது. மற்ருெருவர் துணையுடனே அல்லது தனியாகவோ நான் அவர்களுக்கு உதவியாக இருக்க வேண்டுமென்றும் தீர்மானம் செய்யப்பட்டது. நான் இருந்தது, அவர்களுக்கிடையே சிறு சண்டைச் சச்சரவுகளை நீக்கியது. உணவு, சாத்தியமான அளவு எளிமையானதாக இருக்க ஏற்பாடு செய்யப்பட்டது. சாப்பாடு எத்தனை தடவை எந் தெந்தவேளைகளில் என்பவையும் குறிக்கப்பட்டன. ஒரே சமையல் இருக்கவேண்டியது என்றும், எல்லோரும் ஒரே பந்தியில் சாப்பிட வேண்டியதென்றும் திட்டமாயிற்று. ஒவ்வொருவரும் தங்கள் பாத்திரங்களையும் மற்றவைகளையும் தாங்களே சுத்தம் செய்துகொள்ள வேண்டியது. பொதுப் பாத்திரங்களை முறை போட்டுக்கொண்டு சுத்தம் செய்யவேண்டியது. சத்தியாக் கிரகிகள் டால்ஸ்டாய் பண்ணையில் நீண்ட காலம் தங்கியிருந்தார் கள். ஆனல், பெண்களோ ஆண்களோ மாமிச உணவைக் கேட்க வில்லை என்பதை நான் கூறவே வேண்டும். மதுபானமும், பீடி சிகரெட்டுகளும் முற்றிலும் விலக்கப்பட்டிருந்தன.

நான் முன்பு குறிப்பிட்டிருந்தபடி, கூடுமானவரை கட்டடம் கட்டுவதைக்கூட நாங்களே மேற்கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தோம். அந்த வேலையில் எங்களுக்குச் சிற்பியாக இருந்தவர் ஸ்ரீ கால்லன்பாக். அவர் ஓர் ஐரோப்பியக் கொற் றனை அழைத்து வந்தார். நாராயணதாஸ் தமனியா என்ற குஜராத்தித் தச்சர் ஒருவர். இலவசமாக வேலை செய்ய வலிய முன்வந்ததுடன் குறைந்த கூலிக்கு மற்ற தச்சர்களையும் அழைத்து வந்தார். பண்ணையில் இருந்தவர்கள் தாங்களே கூலி வேலை அனைத்தையும் செய்தனர். எங்களில் கைத்திறமை யுள்ள ஒரு சிலர், உண்மையாகவே அற்புதங்கள் எனக் கருதும் படி வேலை செய்தனர். விஹாரி என்ற சிறந்த சத்தியாக்கிரகி தச்சு வேலைகளில் பாதியைச் செய்தார். சிங்கம் போன்ற தம்பி நாயுடு சுகாதாரத்தைக் கவனித்துக் கொண்டதுடன் ஜொஹன் னஸ்பர்க் சென்று சாமான்கள் வாங்கிவரும் வேலையையும் மேற் கொண்டார்.

இப்பண்ணையை அடைந்தவர்களில் ஒருவரான பிராக்ஜி கந்துபாய் தேசாய் வாழ்வில் அசௌகரியம் என்பதையே அறியாதவர். ஆனல், பண்ணைக்கு வந்த பிறகு கடுமையான

குளிரிலும் அதிக வெப்பத்திலும், மழையிலும் அவர் இருக்க வேண்டியதாயிற்று. ஆரம்பத்தில் கட்டட வேலை நடக்கும் போது சுமார் இரண்டு மாதங்களுக்குக் கூடாரங்களில் இருந்தோம். வளைவுத் தகடுகளைக் கொண்டு கட்டப்பட்டதால் கட்டடங்கள் முடிவதற்கு அதிக நாட்கள் ஆகவில்லை. மரமும் வேண்டிய அளவுகளில் கிடைத்தது. நாங்கள் செய்யவேண்டியிருந்ததெல்லாம் அளவுக்கு வேண்டியபடி துண்டித்துக் கொள்ளுவதே. அதிகமான கதவு, ஜன்னல்களை வைக்கவில்லை. இதனால் தான் பல கட்டடங்களை அவ்வளவு சீக்கிரத்தில் கட்ட முடிந்தது. ஆனால், இந்த வேலை பிராக்ஜியின் மெல்லிய உடம்புக்குக் கடுமையானதாக இருந்தது. சிறையில் செய்த வேலையைவிடப் பண்ணையிலிருந்த வேலை கடுமையானதுதான். ஒரு நாள் உஷ்ணத்தையும் அலுப்பையும் தாங்க முடியாமல் பிராக்ஜி மயக்கம் போட்டு விழுந்துவிட்டார். ஆனால், பிராக்ஜி இதற்காக அஞ்சிப் பின்வாங்குபவர் அல்ல. தம் உடலுக்கு நல்ல பயிற்சி கொடுத்ததுமல்லாமல் எங்களில் மிக வன்மை பொருந்தியவர்களுக்குச் சமமான வேலை செய்யும் சக்தியையும் கடைசியில் பெற்றார்.

பாரிஸ்டர்களுக்குரிய மமதை இல்லாதவர், பாரிஸ்டர் ஜோசப் ராயப்பன். கடுமையான வேலை செய்ய அவரால் முடியாது. பளுவான சாமான்களை ரெயிலிலிருந்து கொண்டு வருவதும், அவற்றை வண்டியில் ஏற்றி இழுப்பதும் அவருக்குக் கடினமான வேலைகள். எனினும், அவரால் இயன்ற அனைத்தும் செய்தார்.

டால்ஸ்டாய் பண்ணையில் பலவீனர்கள், பலசாலிகளானர்கள். உழைப்பு எல்லோருக்கும் சக்தியை உண்டாக்கும் 'டானிக்' போல ஆயிற்று.

ஒவ்வொருவரும் ஜொஹன்னஸ்பர்க் நகரத்திற்கு ஏதாவது ஒரு காரிய நிமித்தம் போகவேண்டியிருந்தது. குழந்தைகள் வெறும் வேடிக்கைக்காகவே போக விரும்பினர்கள். நானும், அலுவல்களைக் கவனிக்க அங்கே போகவேண்டியிருந்தது. எனவே, எங்கள் சமூகத்தில் பொது வேலைக்காகப் போவோர் ரெயிலில் மூன்ரும் வகுப்பில்தான் போகலாம் என விதி செய்யப்பட்டது. யாராவது உல்லாசப் பிரயாணம் போக விரும்பினல், அவர்கள் வீட்டில் தாமாகவே தயாரித்த உணவை எடுத்துக்கொண்டு நடந்துதான் போகவேண்டும்.

உணவுக்காக எவரும் நகரத்தில் பணம் செலவு செய்யக் கூடாது. இப்படிப்பட்ட கட்டுப்பாடுகள் இல்லாமற்போனல், கிராமத்தில் குடியேறினதால் மிச்சமாக்கப்பட்ட பணம், ரெயிலுக்கும் உல்லாச உணவுக்கும் செலவாகியிருக்கும். கையில் எடுத்துச் சென்ற உணவும் மிக எளிமையானது. தீட்டாத கோதுமையை அரைத்துத் தவிடு போகாத மாவினல் வீட்டிலேயே செய்த ரொட்டி, நிலக்கடலைத் துவையல், தித்திப்பு ஆரஞ்சுப் பச்சடி ஆகியவைதான் உணவு. கோதுமையை மாவாக அரைக்கக் கையினல் சுற்றப்படும் ஓர் இரும்பு இயந்திரத்தை வாங்கியிருந்தோம். நிலக்கடலைத் துவையல், வறுத்த நிலக்கடலையால் செய்யப்பட்டது. இது சாதாரண வெண்ணெயை விட நான்கு மடங்கு மலிவாக இருந்தது. பண்ணையில் ஏராளமான ஆரஞ்சுகள் கிடைத்தன. பசும்பாலை நாங்கள் அதிகமாக உபயோகப்படுத்தவில்லை. புட்டிப் பாலைக் கொண்டே சமாளித்து வந்தோம்.

ஜொஹன்னஸ்பர்க்குக்குப் போக விரும்பியவர்கள் வாரத்திற்கு ஒன்று அல்லது இரண்டு தடவை நடந்தே சென்று, அன்றே திரும்பினர். நான் முன் சொல்லியுள்ளபடி அங்கே போக இருபத்தோரு மைல்கள், வர இருபத்தோரு மைல்களாகும். நடப்பது என்ற ஒரு விதியினலேயே நூற்றுக்கணக்கான ரூபாய்கள் மீதமாக்கப்பட்டன. நடந்து போனவர்களுக்கும் அது நன்மையைச் செய்தது. சிலர் நடக்கும் பழக்கத்தைப் புதிதாகப் பெற்றனர். இங்ஙனம் நடந்து செல்கிறவர்கள் காலையில் இரண்டு மணிக்கே எழுந்து இரண்டரை மணிக்குப் புறப்பட வேண்டும். அவர்கள் ஜொஹன்னஸ்பர்க்குக்குச் செல்ல ஆறு அல்லது ஏழு மணி நேரமாகும். இந்தப் பிரயாணத்திற்கான குறைந்த நேர அளவு நான்கு மணி பதினெட்டு நிமிடங்கள்.

இந்தக் கட்டுப்பாட்டினல் பண்ணையில் இருந்தவர்கள் மிக்க கஷ்டப்பட்டதாக வாசகர்கள் நினைத்துவிடக்கூடாது. அதற்கு மாருக இந்த விதி மகிழ்வுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பலாத்காரத்தின் மூலம் ஒருவரைக்கூட அங்கே வைத்திருக்கமுடியாது. அங்கிருந்த இளைஞர்கள் பண்ணை வேலைகளையும், நகரத்திற்குச் சென்று வருவதையும் நன்ருக அனுபவித்தார்கள். வேலை செய்யும்போது அவர்களுடைய குறும்புகளைத் தடுப்பது கடினம். அவர்கள் சந்தோஷமாகச் செய்யக்கூடியதற்குமேல் வேலை கொடுக்கப்படவில்லை. அவர்கள் செய்த

வேலை தரத்திலோ, அளவிலோ எந்த விதத்திலும் திருப்தியற்ற தாக எனக்குத் தெரியவில்லை.

எங்கள் சுகாதார ஏற்பாடுகளைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லவேண்டும். பண்ணையில் அதிகம் பேர் இருந்தபோதிலும் அழுக்கோ, குப்பையோ எங்கும் காணப்படவில்லை. குப்பைகள், அவற்றிற்கென அகழ்ந்த குழியில் போட்டு மூடப்பட்டன. ரஸ்தாவின்மேல் தண்ணீர்விட அனுமதிக்கப்படவில்லை. கழிவு நீர் முழுவதையும் வாளிகளில் சேகரித்துச் செடிகளுக்குப் பாய்ச்சினேம். உணவு, காய்கறிக்கழிவுகள் எருவாகப் பயன் படுத்தப்பட்டன. மலஜலம் கழிப்பதற்காக வீட்டிற்கருகில் ஒன்றரை அடி சதுரக் குழிகள் தோண்டப்பட்டு உபயோகிக்கப் பட்டன. அவற்றை மண்ணுல் மூடியதால் கெட்ட நாற்றம் எதுவும் வெளிவரவில்லை. ஈக்களும் வருவதற்கு இடமில்லை. அந்த இடத்தில் மலக்கழிவு புதைக்கப்பட்டதாக ஒருவரும் நினைக்க முடியாதவாறு இருந்தது. இதன் மூலம் அசுத்தத்தைத் தவிர்த்ததும் அல்லாமல் அந்த அசுத்தத்தையே பண்ணைக்கும் மதிப்பிட முடியாத எருவாக மாற்றவும் முடிந்தது. மலஜலம் மாத்திரம் சரியாகப் பயன்படுத்தப்பட்டால் அதன் மூலம் லட்சக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள எரு கிடைப்ப துடன் பல நோய்களிலிருந்தும் நாம் பாதுகாக்கப்படுவோம். நம்முடைய கெட்ட பழக்கங்களால் நம்முடைய புனித நதி களின் கரைகளை அசுத்தமாக்கி, ஈக்கள் பெருக உதவி செய்து, மலத்தின் மேல் அமர்ந்த அந்த ஈக்களே நாம் குளித்தபின் நம்மேலும் உட்கார்ந்து நம் உடம்பை அசுத்தமாக்க இடங் கொடுக்கிறேம். ஒரு சிறு மண்வெட்டியின் மூலம் இப்பெரிய கேட்டினின்று நம்மைக் காப்பாற்றிக் கொள்ளலாம். கண்ட இடங்களிலெல்லாம் மலஜலம் கழிப்பதும், சளி சிந்துவதும், எச்சில் துப்புவதும் கடவுள்பாலும் சமூகத்தின்பாலும் நாம் செய்யும் துரோகமாகும். மற்றவர்களுடைய நன்மையை நாம் கவனிப்பதேயில்லை என்பதை அது புலப்படுத்துகிறது. காட்டில் வாழ்ந்தாலும் தன் மலத்தை மறைத்து மூடாதவனுக்குக் கடுந் தண்டனை விதிப்பதுதான் நியாயமாகும்.

பண்ணையில் நிறையக் கைத்தொழில்களை உண்டாக்கி அதன் மூலம் பணம் மீதம் செய்து, கடைசியில் அந்தக் குடும்பங் களைத் தங்கள் செலவுக்குத் தாங்களே போதுமான அளவு சம்பாதிக்கும்படி செய்வதே எங்கள் நோக்கமாகும். இங்ஙனம்

செய்துவிட்டால் டிரான்ஸ்வால் சர்க்காரோடு எத்தனைக் காலம் வேண்டுமென்றாலும் போராடலாம்.

ஜோடுகள் வாங்குவதற்காகக் கொஞ்சம் பணம் செலவு செய்ய வேண்டியிருந்தது. உஷ்ணப் பிரதேசத்தில் ஜோடு அணிவது கெட்டது. ஏனெனில் வியர்வை அனைத்தும் பாதங்களில் உறிஞ்சப்பட்டு அவற்றை மிருதுவாக்குகின்றன. வட இந்தியாவைப் போல் டிரான்ஸ்வாலில் மேல் ஜோடுகளுக்கு அவசியம் ஏற்படவில்லை. ஆனால், கல், முள் முதலியவற்றிலிருந்து பாதுகாப்பு வேண்டியிருந்தது. ஆகையால், செருப்புத் தைக்கக் கற்றுக்கொள்ளத் தீர்மானித்தோம். 'டிராப்பிஸ்ட்டுகள்' என்ற ஜெர்மன் கத்தோலிக்க சந்நியாசிகளின் மடமொன்று பைன் டவுனுக்கருகில் மாரியன்ஹில் என்ற இடத்தில் இருந்தது. அங்கே, இத்தகைய கைத்தொழில்கள் கற்றுத் தரப்பட்டன. ஸ்ரீ கால்லன்பாக் அங்கே சென்று செருப்புத் தைக்கும் தொழிலைக் கற்றுவந்து எனக்குச் சொல்லித் தந்தார். நான் மற்றவர்களுக்கு அதைக் கற்பித்தேன்*. இவ்வாறு பல இளைஞர்கள் செருப்புத் தைக்கக் கற்றுக்கொண்டார்கள். அவற்றை நண்பர்களுக்கு விற்க ஆரம்பித்தோம். என்னுடைய சீடர்களில் பலர் என்னைவிட நன்றாக அத்தொழிலைச் செய்தார்கள் என்று நான் கூறவேண்டிய அவசியமில்லை. அங்கே நாங்கள் ஆரம்பித்த மற்றொரு கைத்தொழில் தச்சு வேலையாகும். பண்ணையில் நாங்கள் ஓர் ஊரையே நிறுவியதால், பெஞ்சுகளிலிருந்து பெட்டிகள் வரை, பெரியனவும் சிறியனவுமான பல சாமான்களைச் செய்யவேண்டியிருந்தது. நான் முன்னே குறிப்பிட்ட தன்னல

---

* டால்ஸ்டாய் பண்ணையில் கையினால் செய்யப்பட்ட செருப்பை, ஜெனரல் ஸ்மட்ஸுக்கு காந்திஜி அனுப்பிய சம்பவத்தைக் குறித்து ஸ்ரீ ஹென்றி எஸ்.எல். போலக் பின்னால் வருமாறு எழுதியிருக்கிறார்: "காந்தி–ஸ்மட்ஸ் ஒப்பந்தத்திற்கு அறிகுறியாக, ஜெனரல் ஸ்மட்ஸ் காட்டிய அன்பிற்குப் பதிலாக டால்ஸ்டாய் பண்ணையில் கையினால் செய்யப்பட்ட ஒரு ஜதை செருப்புக்களை, என் மூலமும் தம்முடைய உற்சாகமுள்ள காரியதரிசி கன்னி சோன்யா ஷிலெஸின் மூலமும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு அனுப்பிவைத்தார். பிரிட்டோரியாவுக்கு அருகிலுள்ள இரேனியிலுள்ள தம் பண்ணையில், தம் வழியில் எளிய வாழ்க்கையையே நடத்திவந்தவரான ஜெனரல் ஸ்மட்ஸ், அந்தச் செருப்புக்களை நன்கு பயன்படுத்தி வந்ததோடு, அதற்கு அடையாளமாக அவற்றை 25 ஆண்டுகளுக்குப் பிறகு காந்திஜிக்கே திருப்பி அனுப்பினார்."

காந்திஜி அன்பளிப்பாக தமக்குச் செருப்புக்கள் அனுப்பியதைக் குறித்து ஜெனரல் ஸ்மட்ஸ் தாம் பின்னால் எழுதிய கட்டுரை ஒன்றில் வருமாறு கூறியிருக்கிறார்:

"காந்திஜி சிறையில் எனக்காக அதிகப் பயனுள்ளதான ஒரு ஜதை செருப்புக்களைத் தயாரித்து விடுதலையானதும் எனக்கு அன்பளிப்பாக அனுப்பினார். அப்படிப்பட்ட ஒரு பெரிய மகாபுருஷனின் செருப்புக்களில் அடிவைக்க நான் கொஞ்சமும் அருகதை இல்லாதவன் என்று உணர்ந்தபோதிலும், பல ஆண்டுகளாக அந்த செருப்புக்களை உபயோகித்து வருகிறேன்."

மற்ற தச்சர்கள், பல மாதங்கள் எங்களுக்கு உதவி செய்தார்கள். ஸ்ரீ கால்லன்பாக் தலைவராக இருந்து ஒவ்வொரு கணமும் தமக்குள்ள சிறந்த ஆற்றலை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்.

பண்ணையிலிருந்த பிள்ளைகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் மிக அவசியமானதாக இருந்தது. எங்களுக்கு இதுதான் அனைத்திலும் கஷ்டமான வேலையாக ஆயிற்று. கடைசி வரையில் இதில் நாங்கள் பூரண வெற்றி பெறவில்லை. பாடம் கற்பிக்கும் பணியை ஸ்ரீ கால்லன்பாக் அவர்களும், நானுமே முக்கியமாக ஏற்கவேண்டியதாக இருந்தது. பிற்பகலில்தான் பள்ளிக்கூடம் நடத்த முடிந்தது. அதற்குள் காலையிலிருந்த அலுவல்களால் நாங்களும் குழந்தைகளும் மிகவும் அலுப்புற்றுப் போவோம். எனவே, ஆசிரியர்களும் மாணவர்களும் பல சமயங்களில் தூங்கி விழுந்துகொண்டிருப்பார்கள். சில வேளைகளில் விழிகள்மீது தண்ணீர் தெளித்துக்கொண்டும் விளையாட்டின் மூலமாகவும் அவர்களையும் எங்களையும் சுறுசுறுப்பாக்கிக் கொள்ளப் பார்ப்போம். சில சமயங்களில் இதுவும் வீணுகிவிடும். உடம்புக்கு ஓய்வு தேவையாக இருந்தது. அதை மறுத்தால் முடிவதில்லை. இது ஒரு கஷ்டம். இதைத் தவிர வேறு பல கஷ்டங்களும் இருந்தன. இந்தத் தூக்கக் கலக்கங்களிலும் வகுப்புக்கள் நடந்து வந்தன. பள்ளிக்கு வந்த பிள்ளைகள் குஜராத்தி, தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளில் பேசுபவர்கள். அவர்களுக்கு எதைச் சொல்லிக் கொடுப்பது? எப்படிச் சொல்லிக் கொடுப்பது? இம்மொழிகள் மூலமே நான் பாடங்கள் சொல்லிக் கொடுக்க ஆவலாக இருந்தேன். எனக்குக் கொஞ்சம் தமிழ் தெரியும்; தெலுங்கு வராது. இந்த நிலையில் ஓர் ஆசிரியர் என்ன செய்ய முடியும்? ஆசிரியர்களாகச் சில இளைஞர்களைப் பயன்படுத்த முயற்சி செய்தேன். அந்தப் பரீட்சை நிறைவேறவில்லை. பிராக்ஜியின் சேவையை நாடினேம். சில குழந்தைகள் குறும்புத்தனமும் சோம்பலுமே கொண்டிருந்தனர். புத்தகங்களுக்கும் அவர்களுக்கும் ஆகிவரவில்லை. இத்தகைய மாணவர்களுடன் ஓர் ஆசிரியர் என்ன செய்ய முடியும்? மேலும், எங்களால் முறையாகவும் ஒழுங்காகவும் பாடம் சொல்லிக் கொடுக்க முடியவில்லை. சில சமயங்களில் ஸ்ரீ கால்லன்பாக்கும் நானும் ஜொஹன்னஸ்பர்க்குக்குச் செல்லவேண்டியுமிருந்தது.

சமய போதனை மற்றொரு கஷ்டமான பிரச்னையாக இருந்தது. முஸல்மான்கள் குரானைப் படிக்கவும், பார்ஸிகள் அவெஸ்தா வேதம் படிக்கவும் நான் விரும்பினேன். அங்கே ஒரு கோஜா

குழந்தை இருந்தது. அதன் சமயத்தைப்பற்றி ஒரு சிறு நூலைப் போதிக்கும் பொறுப்பை அதன் தந்தையார் என்னிடத்தில் விட்டிருந்தார். இஸ்லாமைப்பற்றியும் ஜோர்வாஸ்தரின் சமயத் தைப்பற்றியும் உள்ள புத்தகங்களை நான் சேகரித்தேன். எனக்குப் புரிந்த அளவுக்கு ஹிந்து மதத்தின் அடிப்படைக் கோட்பாடுகளையும் நானே எழுதினேன். அது என் குழந்தை களுக்காகவா அல்லது டால்ஸ்டாய் பண்ணையிலிருந்தவர் களுக்காகவா என்பதைக் குறித்து இப்போது எனக்கு ஞாபக மில்லை. நான் எழுதியிருந்த அந்தத் திரட்டு இப்போது என்னிடம் இருந்தால் என் ஆன்மிக வளர்ச்சியில் அதை ஒரு மைல்கல்லாகக் கருதி இந்தச் சரித்திரத்துடன் சேர்த் திருப்பேன். என் வாழ்க்கையில் இது போன்ற பல குறிப்புக் களை நான் எறிந்தோ அல்லது எரித்தோ இருக்கக்கூடும். இதற் காக நான் வருந்தவில்லை. அவைகளையெல்லாம் வைத்திருந்தால், அவை மிகப் பெரிய சுமையாக இருந்திருக்கும்; அதனால் செலவு மாகும். என்னைப்போல் வறுமையை விரதமாகக் கொண்ட வர்கள், அவற்றைப் பல பெட்டி, பேழைகளில் பத்திரப்படுத்தி வைப்பதும் மிகவும் கஷ்டமான காரியம்.

ஆனால், பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுத்த அனுபவம் பயனில்லாமல் போகவில்லை. குழந்தைகள் சமய துவேஷங் களிலிருந்து காப்பாற்றப்பட்டு, ஒருவர் மற்றொருவருடைய சம யத்தையும் பழக்க வழக்கங்களையும் பரந்த மனத்துடன் பார்க்கக் கற்றுக்கொண்டார்கள். உடன் பிறந்தார் போல் அன்புடன் சேர்ந்து வாழப் பழகிக்கொண்டார்கள். பரஸ்பர சேவை, மரியாதை, உழைப்பு முதலியவற்றையும் தெரிந்து கொண்டார்கள். சில குழந்தைகள் பின்னால் செய்த காரியங்களை நான் அறிந்தவரையில், டால்ஸ்டாய் பண்ணைக் குழந்தைகளுக்குக் கிடைத்த கல்வி வீணாகப் போகவில்லை என்பதை நான் உணர்ந் தேன். அக்கல்வி போதனை பூரணமாக அமையவில்லை. குறை களோடு கூடியதாகவே இருந்தாலும், ஆலோசனையோடு கூடிய மத ஆராய்ச்சியாக அது அமைந்தது. டால்ஸ்டாய் பண்ணை யைப்பற்றி எனக்கு ஏற்பட்ட இனிய நினைவுகளில் கல்வி புகட்டும் இந்த அனுபவமும் மிக முக்கியமானதொன்று. இந்த நினைவுகளைக் கூற வேறோர் அத்தியாயமும் அவசியமாகிறது.

## முப்பத்தைந்தாவது அத்தியாயம்

# டால்ஸ்டாய் பண்ணை-3

டால்ஸ்டாய் பண்ணையைப்பற்றிச் சில நினைவுகளைக் கோத்து இவ்வத்தியாயத்தில் சொல்லப் போகிறேன். அவை ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதனவாகத் தோன்றலாம். அதற்காக வாசகர்கள் என்னை மன்னிப்பார்களாக.

இவ்வளவு வேற்றியல்பு கொண்ட குழந்தைகள் இருக்கும் ஒரு வகுப்புக்குக் கல்வி புகட்ட எனக்கு ஏற்பட்ட அனுபவம் எந்த ஆசிரியருக்கும் கிடைத்தே இராது. அந்த வகுப்பில் ஏழு வயதிலிருந்து இருபது வயது வரையுள்ள பையன்களும், சுமார் பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதுள்ள சிறுமிகளும் இருந்தனர். சில பையன்கள் முரட்டுத்தனமும் குறும்புத்தனமும் உடையவர்கள்.

இவ்வளவு தாறுமாறான ஒரு கூட்டத்திற்கு என்ன சொல்லித் தருவது? எல்லோருக்கும் ஏற்றாற்போல் நான் எப்படி இருப்பது? எந்த மொழியில் நான் அவர்கள் அனைவரிடத்தும் பேசுவது? தமிழ், தெலுங்குக் குழந்தைகளுக்குத் தாய்மொழியுடன் கொஞ்சம் ஆங்கிலம் அல்லது டச்சு பாஷையும் தெரியும். நான் அவர்களுடன் ஆங்கிலத்தில்தான் பேச முடியும். வகுப்பினை நான் இரண்டு பகுதிகளாகப் பிரித்தேன். பாடத்திட்டத்தில் நல்ல கதை சொல்லுவதற்கும் படிப்பதற்கும் முக்கியத்துவம் தந்தேன். அவர்கள் ஒருவருக்கொருவர் பழகி நட்புக்கொண்டு சேவை உணர்ச்சியை வளர்த்துக்கொள்ள வேண்டுமென்றும் நினைத்தேன். தவிர, சரித்திரம், பூகோளம், கணக்கு முதலியவற்றில் கொஞ்சம் பொது அறிவும் புகட்ட வேண்டியதாக இருந்தது. எழுதவும் கற்பிக்கப்பட்டது. பிரார்த்தனையில் நாங்கள் பாடிய பஜனைப் பாடல்களும் பாடங்களில் சேர்க்கப்பட்டன. தமிழ்ப் பிள்ளைகளையும் அவற்றைக் கற்றுக் கொள்ளும்படிச் செய்ய முயன்றேன்.

வகுப்பில் ஆண்களும் பெண்களும் தாராளமாகப் பழகினார்கள். டால்ஸ்டாய் பண்ணையில் நடத்திய பள்ளிக்கூடத்தில்தான் என்னுடைய இந்த ஆண்-பெண் கூட்டுக்கல்வியைப் பற்றிய ஆராய்ச்சி மிகத் துணிவுடன் செய்யப்பட்டது.

அந்தப் பள்ளிக்கூடத்தில் அன்று நான் இருபாலாருக்கும் தடையின்றிப் பழகக் கொடுத்த சுதந்திரத்தையும் சந்தர்ப்பத்தையும் இன்று நான் குழந்தைகளுக்குக் கொடுக்கவே மாட்டேன். அப்போது என் மனம், இப்போது இருப்பதைவிடக் கபடமற்று இருந்ததாக நான் பல தடவைகளில் நினைப்பதுண்டு. ஒரு வேளை, அது என் அறிவின்மையின் காரணமாக இருக்கலாம். அதற்குப் பிறகு எனக்குப் பல கசப்பான அனுபவங்கள் ஏற்பட்டன. சில சமயங்களில் கடுஞ்சோதனைகளுக்கும் ஆளாகியிருக்கிறேன். மிகப் பரிசுத்தமானவர்கள் என்று நான் நினைத்திருந்தவர்கள், உண்மையில் கெட்டவர்களாகத் தெரிய வந்தது. எனது மன ஆழத்திலேயே கெட்ட குணங்களும் வேரூன்றி இருந்ததைக் கண்டிருக்கிறேன். பயங்காளித்தனமும் என்னை ஆட்கொண்டிருந்தது.

ஆனாலும், நான் செய்த பரிசோதனையைப்பற்றி வருத்தப் படவில்லை. அதனால் தவறு ஏதும் நிகழவில்லை என்பதற்கு என் மனச்சாட்சியே சான்று. ஆனால், மிகச் சூடான பாலைக் குடித்துச் சூடுபட்ட குழந்தை, குளிர்ந்த நீர்மோரையும் ஊதிக் குடிப்பது போல், நான் இப்போது அதிக ஜாக்கிரதையாக இருக்கிறேன்.

ஒருவன், தைரியத்தையோ அல்லது நம்பிக்கையையோ மற்றவர்களிடம் கடன் வாங்கமுடியாது. பகவத்கீதை அறிவிப்பது போல் சந்தேகமுள்ள மனிதன் அழிவுக்கு இலக்காகிறான். டால்ஸ்டாய் பண்ணையில் என் நம்பிக்கையும் தைரியமும் உச்ச நிலையில் இருந்தன. அந்த நிலையை நான் மீண்டும் எய்தும்படி அருள் செய்ய இறைவனிடம் பிரார்த்தனை செய்துகொண்டிருக்கிறேன். ஆனால், அப்பிரார்த்தனை இதுவரை அவர் செவிக்கு எட்டவில்லை. ஏனெனில், இம்மாதிரி இறைவனிடம் வேண்டிக்கொள்ளுவோரின் எண்ணிக்கைக்கு அளவு இராது. ஓர் ஆறுதல்தான் உண்டு; அதாவது, ஆண்டவனிடம் எத்தனை பேர்கள் முறையிடுகிறார்களோ அத்தனை காதுகள் அவருக்கு உண்டு என்பதுதான். ஆதலால் நான் அந்த வரத்திற்கு ஏற்புடையவனாகும்பொழுது அதைப் பெறுவேன் என்ற உறுதியும், ஆண்டவன்பேரில் பூரண நம்பிக்கையும் எனக்கு இருக்கின்றன.

என்னுடைய பரிசோதனை பின்வருமாறு: குறும்புத்தனம் நிறைந்த பையன்களையும் பரிசுத்தமான பெண்களையும் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் குளிக்க அனுப்பினேன். தன்

னடக்கத்தைப்பற்றி அவர்களுக்கு எடுத்துரைத்திருக்கிறேன். அவர்களுக்கு என் சத்தியாக்கிரகக் கொள்கைகளும் நன்கு தெரியும். தாய் போன்ற அன்புடன் நான் அவர்களை நேசித்தேன் என்பது எனக்கும் தெரியும்; அவர்களும் அறிவார்கள். குளிக்கும் சுனை, சமையல் அறையிலிருந்து சற்றுத் தொலைவில் இருந்ததும் வாசகருக்கு ஞாபகம் இருக்கலாம். குழந்தைகள் குளிப்பதற்காக ஒரே இடத்தில் சந்திக்க அனுமதித்துவிட்டு பரிசுத்தமாக இருப்பார்கள் என்று எதிர்பார்த்தது அறியாத்தனமா? ஓர் அன்னை, தன் பெண்ணைக் கண்காணிப்பதுபோல் என் கண்கள் அப்பெண்களை விட்டு அகலாமல் கவனித்துக் கொண்டேயிருக்கும். எல்லாப் பையன்களும் எல்லாப் பெண்களும் ஒன்ருகக் குளிக்கப்போகும் நேரம், திட்டம் செய்யப்பட்டிருந்தது. அவர்கள் சேர்ந்து ஒன்ருகப் போனுர்கள் என்பதில்தான் கொஞ்சம் பாதுகாப்பு இருந்தது. தனியாகப் போவதற்கு ஒருபோதும் அனுமதி தரப்படவில்லை. சாதாரணமாக நானும் அந்த வேளையில் சுனை இருக்குமிடத்தில் இருப்பேன்.

நாங்கள் எல்லோரும் வெளித்தாழ்வாரத்தில் உறங்குவோம். பையன்களும் சிறுமிகளும் என்னைச் சுற்றிலும் படுத்துக்கொள்ளுவார்கள். ஒரு படுக்கைக்கும் மற்ருெரு படுக்கைக்கும் இடையில் மூன்றடிகூட இருக்காது. படுக்கும் ஒழுங்கிலும் கொஞ்சம் கவனம் செலுத்தப்பட்டது. ஆனுல், இந்த மாதிரி பாதுகாப்பும் ஓர் அழுக்கு மனத்தினிடம் பயனற்றுப் போகும். அப்பிள்ளைகளின், பெண்களின் கௌரவத்தை ஆண்டவனே காப்பாற்றினுன் என்பதை நான் இப்போது உணர்கிறேன். இப்படிப் பழக விடுவதில் கெட்ட பயன் ஒன்றும் விளையாது என்ற நம்பிக்கையில் நான் அப்பரீட்சை செய்தேன். என்மேல் வைத்திருந்த அளவற்ற நம்பிக்கையால் அவர்கள் தாய் தந்தையரும் இதற்கு அனுமதித்தார்கள்.

ஒரு நாள் ஒரு வாலிபன் இரு பெண்களை தவருன முறையில் கேலி செய்தது, அப்பெண்கள் மூலமோ அல்லது வேறு குழந்தைகள் மூலமோ எனக்குத் தெரியவந்தது. அச்செய்தி என்னை நடுங்கச் செய்தது. நான் விசாரித்ததில் அது உண்மை என்று உணர்ந்தேன். அவ்வாலிபனைக் கூப்பிட்டுக் கண்டித்தேன். ஆனுல், அது போதாதல்லவா? இங்ஙனம் எந்தப் பெண்ணையும் எவரும் தவருன கண்களுடன் பார்க்காதிருப்பதற்கு எச்சரிக்கையாகவும், பெண்களுக்குத் தங்களுடைய பரிசுத்தத்தை எவரும் எதிர்க்கமுடியாது என்ற தைரியம் வருவதற்கு அறிகுறியாகவும் அப்பெண்கள் மேனியில் ஏதாவது சின்னங்கள் இருக்க

வேண்டுமென்று விரும்பினேன். ஸ்ரீராமனிடமிருந்து பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் பிரிந்து இருந்த சீதையை, அவள் தூய்மையின் காரணத்தால் காம, குரோதம் மலிந்த ராவணன் தொடக்கூட முடியவில்லையல்லவா? இந்தப் பெண்களுக்கு ஒரு பாதுகாப்பாக இருக்கவும், அதே சமயத்தில் பாபியின் கண்கள் சுத்தப்படவும், என்ன விதமான குறியை அவர்கள் பூண்டுகொள்ள வேண்டும்? இப்பிரச்னையைப் பற்றி இரவு முழுதும் நான் உறக்கமின்றிச் சிந்தித்துக்கொண்டு இருந்தேன். காலையில் எழுந்ததும், அப்பெண்களின் அழகான நீண்ட முடியை நான் வெட்டிவிட அனுமதிக்கும்படி மெதுவாகக் கேட்டுக்கொண்டேன். பண்ணையில் நாங்களே ஒருவருக்கொருவர் முடிவெட்டிக்கொண்டு க்ஷவரமும் செய்துகொள்ளுவது உண்டு. ஆதலால் எங்களிடம் முடிவெட்டும் கருவியும் கத்தரிக்கோலும் இருந்தன. முதலில் அப்பெண்கள் நான் சொன்னதற்கு இசையவில்லை. முன்னமேயே பண்ணையில் இருந்த முதிய பெண்களுக்கு இதைப்பற்றிச் சொல்லியிருந்தேன். அவர்களுக்கு என் கருத்துத் தெரியும். ஆயினும் முதலில் முடி வெட்டுதலை அவர்களால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. கடைசியில் என் சொல்லை ஆதரித்தார்கள். அச்சிறுமிகள் இருவரும் பெருந்தன்மையுள்ளவர்கள். பாவம், ஒருத்தி இப்போது இல்லை; அவள் மிகவும் புத்திக் கூர்மையுள்ளவள். மற்றவள், இப்போது குடித்தனம் நடத்தி வருகிறாள். அவர்கள் இசைந்ததும், இக்கட்டுரையை எழுதும் இந்தக் கைகளே அவர்கள் தலைமயிரை வெட்ட ஆரம்பித்தன. பிறகு என் செய்கையின் கருத்தை வகுப்பில் விளக்கிக் காட்டினேன். அதன் மூலம் பெரிய பயன் விளைந்தது. அதற்குப் பிறகு தவறான கேலி வார்த்தை எதுவும் என் காதில் விழவில்லை. மயிர் வெட்டப்பட்ட அப்பெண்களுக்கும் நஷ்டம் ஒன்றும் இல்லை. அவர்களுக்கு இதன் மூலம் எவ்வளவு லாபம் என்பதை யாரே அறிவார்? அந்த வாலிபர்கள் இந்தச் சம்பவத்தை இன்னும் மனத்தில் வைத்திருக்கிறார்கள் என்றும், தம் கண்களைப் பாபம் செய்வதினின்றும் காப்பாற்றிக்கொள்ளுகிறார்கள் என்றும் நம்புகிறேன்.

இப்பரிசோதனைகளைப் பற்றி நான் எழுதுவது, மற்றவர்கள் பின்பற்றுவதற்காக அல்ல. அப்படிப் பின்பற்றிவிடும் ஆசிரியர்கள் மிகுந்த ஆபத்துக்குள்ளாவார்கள். எவ்வளவு தூரம் ஒருவன் இவ்விஷயங்களில் செல்லமுடியும் என்பதையும், சத்தியாக்கிரகத்தின் தூய்மையையும் காட்டுவதற்காகவே இதை

நான் எழுதுகிறேன். இத்தூய்மையே வெற்றிக்கு நிச்சயமான உத்தரவாதம். இவ்விதமாகப் பரிசோதனைகளை ஆரம்பிக்கு முன் ஓர் ஆசிரியர், அந்தக் குழந்தைக்குத் தாயும் தந்தையுமாய் இருந்து, எந்த விதமான விளைவுகளுக்கும் தயாராகவும் இருக்கவேண்டும். மிகக் கடுமையான தவந்தான், இங்ஙனம் செய்ய அவரைத் தகுதியுள்ளவராக்கும்.

நான் செய்த இந்தக் காரியம் பண்ணையின் வாழ்க்கை முழுவதையும் பாதிக்காமல் இல்லை. எங்கள் செலவுகளை எவ்வளவு குறைக்கமுடியுமோ அவ்வளவு குறைப்பது எனத் தீர்மானித்திருந்தபடியால் எங்கள் உடைகளையும் மாற்றிக் கொண்டோம். நகரங்களில் சத்தியாக்கிரகிகள் உட்பட இந்தியர்கள் அனைவரும் ஐரோப்பிய உடை அணிவார்கள். பண்ணையில் இருக்கும்போது இவ்வளவு உடை அவசியமாய் இருக்கவில்லை. நாங்கள் எல்லோரும் கூலியாட்கள் ஆகி விட்டோம். ஆகவே, கூலி வேலை செய்வோரின் உடையையே அணியலானோம். ஆனால், ஐரோப்பிய முறையில், அதாவது காற்சட்டையும் சர்ட்டும் அணிந்துகொண்டோம். இவை சிறையில் உள்ளவர்களுக்குக் கொடுத்திருந்த உடையைப் பார்த்துத் தைக்கப்பட்டு இருந்தன. முரடான நீலத்துணியிலிருந்து மலிவான இந்த உடைகள் தைக்கப்பட்டன. பண்ணையிலிருந்த பெண்களுக்குத் தையல் வேலை நன்ருகத் தெரியும். அவர்கள் தையல் வேலைப்பொறுப்பு முழுவதையும் ஏற்றுக்கொண்டார்கள்.

சாதாரணமாக எங்கள் உணவு சாதம், பருப்பு, வியஞ்சனம், ரொட்டி, எப்போதாவது தரப்படும் குழம்பு ஆகியவற்றைக் கொண்டிருந்தது. சிறையில் கைதிகளுக்குக் கொடுப்பதுபோல் இவை ஒரே பாத்திரத்தில் பரிமாறப்பட்டன. பண்ணையிலேயே நாங்களே மரத்தினுல் கரண்டிகள் செய்து கொண்டோம். ஒரு நாளுக்கு மூன்று வேளை உணவு. காலையில் ஆறு மணிக்கு ரொட்டியும் கோதுமைக் காப்பியும்*, பகல்

* தேயிலை, காப்பி, கோக்கோவுக்குப் பதிலாக அருந்தக்கூடிய ஒரு சத்துள்ள தீங்கற்ற பானம் இது. பின்வரும் முறைப்படி இதைத் தயாரிக்கும்போது, அதிகமாகக் காப்பி அருந்தும் ரசிகர்கள்கூட இதற்கும் அசல் காப்பிக்குமுள்ள வித்தியாசத்தைக் காணத் தவறியிருக்கிருர்கள். நன்ருகச் சுத்தம் செய்யப்பட்ட முழுக் கோதுமையைச் சிவந்து கருகும்வரை வறுக்க வேண்டும். பிறகு அதைப் பொடியாக்கவேண்டும். ஒரு கோப்பையில் ஒரு கரண்டிப்பொடியை விட்டுக் கொதிக்கும் நீரை ஊற்ற வேண்டும். வேண்டுமானுல் அடுப்பின்மீது ஒரு நிமிடம் வைத்துப் பாலும் சர்க்கரையும் ருசிக்கு ஏற்றவாறு சேர்த்துப் பரிமாறலாம். பாலும் சர்க்கரையும் இல்லாமலும் பருகலாம். (சுகாதாரத்தைப்பற்றி ஆசிரியரின் குஜராத்திப் புத்தகத்தின் 5–ஆம் அத்தியாயத்திலிருந்து அறிக—'இந்தியன் ஒப்பினியன்' (XI-10 8th March, 1913)

பதினொரு மணிக்குச் சாதம், பருப்பு, வியஞ்சனங்கள்; மாலை ஐந்தரை மணிக்குக் கோதுமை அடையும் பாலும் அல்லது ரொட்டியும் கோதுமைக் காப்பியும் பரிமாறப்பட்டன. மாலை உணவுக்குப் பின் ஏழு அல்லது ஏழரை மணிக்குப் பிரார்த்தனை. பிரார்த்தனையின்போது பஜனைப் பாடல்கள் பாடப்பட்டன. ராமாயணத்திலிருந்தும், இஸ்லாம் பற்றிய புத்தகங்களிலிருந்தும் சில சமயங்களில் வாசகங்கள் படிக்கப்பட்டன. ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி மொழிகளில் பஜனை நடத்தப்பட்டது. சில சமயங்களில் ஒவ்வொரு மொழியிலிருந்தும் ஒரு பஜனைப் பாடலும் வேறு சில வேளைகளில் ஒரே பஜனைப் பாடலும் இருந்தன. எல்லோரும் ஒன்பது மணிக்கு உறங்கச் செல்வோம்.

பண்ணையில் பலர் ஏகாதசி விரதத்தை அனுஷ்டித்தார்கள். ஸ்ரீ பி. கே. கொத்தவால் என்பவர் உபவாசம் மேற்கொள்ளுவதில் அதிக அனுபவம் உள்ளவர். அவருடன் சிலர் சதுர்மாச விரதத்தையும் அனுஷ்டித்தார்கள். அதே சமயத்தில் ரம்ஜானும் வந்தது. எங்களுடன் சில முஸ்லிம் வாலிபர்களும் இருந்தார்கள். அவர்களையும் உபவாசங்களை அனுஷ்டிக்கத் தூண்ட வேண்டுமென்று தோன்றிற்று. அவர்கள் மாலையிலும் அதிகாலையிலும் உணவருந்த ஏற்பாடு செய்யப்பட்டது. மாமிசம் கிடையாது. அதை எவரும் கேட்கவுமில்லை. அவர்களுக்காகவே எங்களில் சிலரும் தினம் மாலையில் ஒரு நேரம் மாத்திரம் உண்டு, உபவாசம் இருந்து வந்தோம். சாதாரணமாகச் சூரியன் அஸ்தமிக்குமுன் எங்கள் மாலை உணவு முடிந்துவிடும். எனவே, முஸ்லிம் பிள்ளைகள் தங்கள் உணவை ஆரம்பிக்கும் பொழுது மற்றவர்கள் முடித்து விடுவார்கள். இந்த முஸ்லிம் பிள்ளைகள் பட்டினியில் இருந்த போதிலும் வேறு எவர்க்கும் எந்த விதமான தொந்தரவும் கொடுக்காமல் மிக மரியாதையாக நடந்து கொண்டார்கள். முஸ்லிமல்லாத மற்றவரும்கூட அவர்களுடன் பட்டினியிருந்தது ஒரு நல்ல உணர்ச்சியை உண்டாக்கிற்று. மதத்தின் காரணமாக ஹிந்துப் பிள்ளைகளுக்கும் முஸ்லிம் பிள்ளைகளுக்கும் இடையே ஒரு சண்டையோ, மனத்தாங்கலோ இருந்ததாக எனக்கு ஞாபகம் இல்லை. அதற்கு மாறாக அவர்கள் தம் மதத்தில் பற்றுடையவராக இருந்தபோதிலும் மற்றவர்களை மிக்க மரியாதையுடன் நடத்தி அவரவர் மதாசாரங்களைப் பின்பற்றுவதில் ஒருவருக்கொருவர் உதவியும் செய்து கொண்டார்கள்.

நாங்கள் நகரத்திலிருந்து வெகு தூரத்தில் இருந்தபோதிலும் நோய்களை எதிர்ப்பதற்குள்ள சாதாரண சிகிச்சை முறைகள்

கூடக் கையில் வைத்திருக்கவில்லை. அக்காலத்தில் பிள்ளைகளின் கபடமற்ற தன்மையில் எனக்கு எவ்வளவு நம்பிக்கை இருந்ததோ அவ்வளவு நம்பிக்கை இயற்கை வைத்தியத்திலும் இருந்தது. நாங்கள் மிக எளிமையான வாழ்க்கை வாழ்ந்து வந்தபடியால் எங்களுக்கு நோய்களே வரமுடியாது என்று நினைத்தேன். அப்படி வந்தாலும் அதைப் போக்கிக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கையும் எனக்கு இருந்தது. நான் சுகாதாரத்தைப்பற்றி எழுதியிருக்கும் நூல், எனக்கு அந்நாள் இருந்த நம்பிக்கையையும் ஆராய்ச்சிக் குறிப்புக்களையும் அடிப்படையாகக் கொண்டதாகும். எனக்கு நோயே வராது என்று கர்வத்துடன் நான் இருந்தேன். எல்லா விதமான நோய்களையும் மண், தண்ணீர் சிகிச்சையினுலும், உபவாசம் அல்லது உணவு மாறுதலாலும் தீர்க்கமுடியும் என்று நான் நினைத்தேன். பண்ணையில் நேர்ந்த எந்த நோய்க்கும் நாங்கள் டாக்டரைக் கூப்பிடவுமில்லை. வட இந்தியாவிலிருந்து வந்த எழுபது வயதுள்ள வயோதிகர் ஒருவர், இருமல் ஈளையினுல் கஷ்டப்பட்டுக்கொண்டு இருந்தார். அவரை, உணவு மாற்றத்தாலும் தண்ணீர்ச் சிகிச்சையினுலுமே நான் குணப்படுத்தினேன். ஆனுல், இப்போது எனக்கு அந்தத் தைரியம் இல்லை. இரண்டு கடுமையான நோய்கள் எனக்குக் கண்டதிலிருந்து இந்தவிதமான பரிசோதனைகள் செய்ய எனக்கு யாதோர் உரிமையும் இல்லை என நினைக்கிறேன்.

நாங்கள் பண்ணையில் இருந்துகொண்டிருக்கும்பொழுது கோகலே அவர்கள் தென்னுப்பிரிக்காவுக்கு வந்தார்கள். அவர்களுடைய பிரயாணத்தைப்பற்றி வேருேர் அத்தியாயத்தில் விவரிக்க இருக்கிறேன். ஆனுல், இங்கே சந்தோஷமும் கசப்பும் கலந்ததான ஒரு நினைவை மாத்திரம் எழுதுகிறேன். பண்ணையில் எங்கள் வாழ்க்கையைப் பற்றி வாசகர்களுக்கு இப்போது ஓரளவு தெரிந்திருக்கும். பண்ணையில் கட்டில்களே இல்லை. அதனுல் ஸ்ரீ கோகலே அவர்களுக்காக ஒரு கட்டிலைக் கடன் வாங்கி வந்தோம். அவர் தனியாகச் சௌகரியம்போல் இருக்க ஓர் இடங்கூட இல்லை. உட்காருவதற்கு எங்கள் பள்ளியிலிருந்த பெஞ்சுகளைத் தவிர வேறு ஆசனங்களும் இல்லை. வசதிகள் குறைவாக இருந்தும், அவருக்கு உடல்நலக் குறைவு இருந்தும், அவரைப் பண்ணைக்கு அழைக்கவேண்டுமென்ற ஆசையை விட முடியவில்லை. அவர்தான் பண்ணைக்கு வராமல் எப்படிப்போவார்? அவர் ஓர் இரவுக்கு இந்த அசௌகரியங்களைச் சகித்துக்கொள்ள

முடியும் என்றும், ஸ்டேஷனிலிருந்து பண்ணைக்கு உள்ள ஒன்றரை மைல் தூரம் நடக்க முடியும் என்றும் நான் மடத்தனமாய் நினைத்தேன். அவருடைய எளிமையான தன்மையாலும், என்மேல் வைத்திருந்த நிறைந்த நம்பிக்கையாலும், நான் இந்தச் சிரமங்களை முன்னமேயே சொல்லியிருந்தபோதிலும் அவற்றைப்பற்றிச் சற்றும் யோசிக்காமல் அவர் வர ஒப்புக்கொண்டார். ஆனால், விதி குறுக்கிட்டது; அன்று ஒரே மழை. நான் திடீரென்று வேறு எந்த ஏற்பாடும் செய்ய முடியவில்லை. என் அறிவற்ற அன்பால் நான் அவருக்கு அன்று கொடுத்த கஷ்டத்தை என்றும் மறக்க முடியாது. கஷ்டத்தைத் தாங்க முடியாமல் அவருக்குக் குளிர் வந்துவிட்டது. அவரைச் சமையல் அறைக்கும், சாப்பாட்டுக்கூடத்திற்கும் அழைத்துச் செல்ல முடியவில்லை. ஸ்ரீ கால்லன்பாக்கின் அறையில் அவர் தங்க ஏற்பாடு செய்திருந்தோம். உணவை அவருடைய அறைக்குக் கொண்டு வருமுன் ஆறிவிடும். நான் அவருக்கென்று தனியாக ஒரு ரசம் தயாரித்து இருந்தேன். கொத்தவால், அவருக்கெனத் தனியாக ரொட்டி செய்திருந்தார். ஆனால், இவற்றைச் சுடச்சுட அவருக்கு எடுத்துச் செல்ல முடியவில்லை. எங்களால் இயன்ற அளவு சமாளித்துக் கொண்டோம். கோகலே ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. ஆனால், அவருடைய முகத்திலிருந்து நான் எத்தகைய தவறு செய்தேன் என்பதை உணர்ந்து கொண்டேன். நாங்கள் அனைவரும் தரையில் படுத்துக்கொள்ளும் விஷயம் தெரிந்ததும் அவர், தமக்காக வைத்திருந்த கட்டிலை அப்புறப்படுத்திவிட்டு தம்முடைய படுக்கையையும் தரையின் மேல் விரித்துக்கொண்டார். இரவு முழுதும் எனக்கு வருத்தமாக இருந்தது. கோகலே, தம் வாழ்க்கையில் ஒரு விதியை அனுசரித்து வந்தார். அது எனக்குத் தவறெனப் பட்டது. அதாவது வேலைக்காரரைத் தவிர வேறு எவரையும் தமக்குப் பணிவிடை செய்ய அவர் விடுவதில்லை. இந்தப் பிரயாணத்தின்போது அவருடைய வேலைக்காரன் உடன் வரவில்லை. அவருடைய கால்களை வருடுவதற்கு எங்களை அனுமதிக்க வேண்டுமென்று நானும் ஸ்ரீ கால்லன்பாக்கும் மிகவும் வருந்திக் கேட்டுக்கொண்டோம். அவர் எங்களைத் தொடவும் விடவில்லை. பாதி வேடிக்கையாகவும் பாதி கோபமாகவும் அவர் சொன்னார்: "நீங்கள் மாத்திரம் கஷ்டப்படப் பிறந்திருப்பதாகவும், என்னைப் போன்றவர்கள் உங்களைப் போன்றவர்களால் செல்லம் கொடுத்துக் கெட்டுப் போகப் பிறந்திருப்பதாகவும் நீங்கள் நினைப்பதாகத் தெரிகிறது.

உங்கள் விடாப்பிடிக்கு நீங்கள் இன்று தண்டனை அனுபவித்தே ஆகவேண்டும். நீங்கள் என்னைத் தொட விடமாட்டேன். நீங்கள் மாத்திரம் வெளியே போய் மலஜலம் கழிக்கவேண்டும். எனக்கோ என்றால் ஒரு 'கம்மோடு' (மலங்கழிக்கும் கலயம்) வைக்கிறீர்கள். அதை நான் உபயோகப்படுத்துவேனு? நான் எத்தனைக் கஷ்டம் அனுபவிக்க நேரிடினும் உங்கள் கர்வத்தை அடக்குவேன்"—இவ்வார்த்தைகள் இடிபோல் விழுந்து என்னையும் ஸ்ரீ கால்லன்பாக்கையும் வருத்தின. ஸ்ரீ கோகலே முகத்தில் மட்டும் புன்சிரிப்பு உலவியது. அது ஒன்றுதான் எங்களுக்கு ஆறுதல் அளித்தது. அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய உண்மை* மகத்துவத்தை அறியாது 'தவறுதலாலேனும் அன்பின் பெருக்காலேனும்' பல சமயங்கள் வருத்தப்படுத்தினன். ஆனல், ஸ்ரீ கிருஷ்ணர் இந்த நிகழ்ச்சிகளை மனத்தில் வைத்ததில்லை. ஸ்ரீ கோகலேயும் எங்கள் சேவையை ஏற்றுக்கொள்ளாவிடினும் நாங்கள் சேவை செய்ய முன்வந்ததை மனத்தில் வைத்திருந்தார். மொம்பாசாவிலிருந்து அவர் எழுதிய அன்பு நிறைந்த கடிதம் என் இதயத்தில் இன்றும் பதிந்து இருக்கின்றது. எல்லாக் கஷ்டங்களையும் இன்முகத்துடன் பொறுத்துக்கொண்டார். ஆனல், அவர் கடைசி வரையில் எங்களால் செய்யக்கூடியதான சேவையை ஏற்றுக்கொள்ளவில்லை. எங்கள் கையிலிருந்து உணவு முதலியவைகளைப் பெறுவதை மட்டும் அவரால் தடுக்க முடியவில்லை; தடுக்கவும் வழியில்லை.

மறுநாள் காலை அவர் எங்களுக்கும் ஓய்வு கொடுக்கவில்லை, தாமும் ஓய்வு எடுத்துக்கொள்ளவில்லை. புத்தக வடிவில் நாங்கள் பிரசுரிக்க நினைத்திருந்த அவருடைய சொற்பொழிவுகளனைத்தையும் திருத்தினர். அவர் ஏதாவது எழுத வேண்டுமானல் குறுக்கும் நெடுக்கும் நடந்துகொண்டே அவ்விஷயத்தைப் பற்றிச் சிந்திப்பது வழக்கம். ஒரு சிறு கடிதம் அவர் எழுத வேண்டியிருந்தது. அதை முடித்து விடுவாரென்று நினைத்தேன். அதைப்பற்றி நான் அவரைக் கேட்டபோது அவர் உபதேசமாகச் சொன்னர்: "என்னுடைய பழக்க வழக்கங்களைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. நான் ஒரு சிறு காரியத்தைக்கூட அவசரப்

---

* பகவத்கீதை பதினென்றும் அத்தியாயம் 41-வது பாடலைப் பார்க்கவும். அது வருமாறு: "இப்படிப்பட்ட நின் பெருமையை அறியாமல், நின்னைத் தோழனென்று கருதித் துடிப்புற்று 'ஏ கண்ணு, ஏ யாதவா, ஏ தோழா' என்று தவறுதலாலேனும் அன்பாலேனும் நான் சொல்லி இருப்பதைப் பொறுக்கும்படி வேண்டுகிறேன்."

பட்டுச் செய்ததில்லை. முதலில் அவ்விஷயத்தின் அடிப்படைக் கருத்தைப்பற்றி யோசிப்பேன். அதை எந்த ரீதியாக எழுதுவது என்பதை ஆலோசித்த பிறகுதான் எழுதத் தொடங்குவேன். நான் செய்கிறபடி எல்லோரும் செய்தால் எவ்வளவு பெரும் நேரம் மிச்சமாகும்! அப்பொழுது அரைகுறை யோசனைகளி லிருந்து பிறந்த கருத்துக்கள் பலவற்றிலிருந்து தேசம் தப்பிப் பிழைக்கும்.''

ஸ்ரீ கோகலே விஜயத்தைக் குறித்து வருணனையிராத, டால்ஸ் டாயின் பண்ணையைப்பற்றிய நினைவுகள் பூர்த்தியானவை என்று எப்படிச் சொல்ல முடியாதோ அப்படியே ஸ்ரீ கால்லன் பாக் அவர்களுடைய குணம், நடத்தை முதலியவற்றைப் பற்றியும் எழுதாமல் விட்டாலும் அவை குறையாகவே நிற்கும். அவர் எங்ஙனம் எங்களில் ஒருவராகவே வாழ்ந்து வந்தார் என்ப தைப் பார்க்கும்போது ஆச்சரியமாக இருக்கும். ஸ்ரீ கோகலே சாதாரண விஷயங்களில் கவர்ச்சி கொள்ளாதவர். ஸ்ரீ கால்லன் பாக்கின் வாழ்க்கையில் ஏற்பட்டிருந்த புரட்சிகரமான மாறுதல் களைப் பார்த்து அவர்கூட வியப்புற்றார். கால்லன்பாக் செல்வத் தில் பிறந்து, கஷ்டம் என்பதையே அறியாமல் வளர்ந்தவர். உண்மையில் வாழ்க்கையை நன்றாக அனுபவிக்க வேண்டுமென் பதே அவருடைய வேதமாக இருந்தது. வாழ்க்கையில் பெறக் கூடிய இன்பங்கள் யாவற்றையும் அனுபவிப்பதையே தமது தரும மாகக் கொண்டிருந்தவர். உண்மையில் அந்த இன்பங்களையெல் லாம் அனுபவித்தார். செல்வத்தால் அடையக்கூடிய அனைத்தை யும் அவர் பெறுவதற்குத் தயங்கியதில்லை.

இத்தகைய ஒருவர் டால்ஸ்டாய் பண்ணையிலிருந்து, இந்தியர்களோடு தாமும் ஒருவராய்ப் பழகி வாழ்ந்து வந்தது சாமானியமான விஷயமல்ல. இது இந்தியர்களுக்கு ஒரு மகிழ்ச் சியைத் தந்த அதிசயம். ஐரோப்பியர்களில் சிலர் அவரைப் பைத்தியக்காரன் அல்லது முட்டாள் என்று நினைத்தார்கள். மற் றவர் அவரது தியாக உணர்ச்சியைப் போற்றினார்கள். கால்லன் பாக் தம் தியாகத்தைக் கஷ்டமாகவே கருதவில்லை. அவர், முன்பு அனுபவித்திருந்த இன்பங்களுக்கு மேலாகப் பண்ணை வாழ்க்கை யில் சந்தோஷம் பெற்றார். எளிமையான பண்ணை வாழ்க்கை யின் இன்பத்தைப்பற்றி அவர் மற்றவர்களுக்கு விவரிக்கும் போது ஆனந்தத்தால் பரவசமாகிவிடுவார். கேட்பவர்களுக்குக் கூட தாங்களும் அப்படி இருக்க வேண்டுமென்று தோன்றும். இளையோர், முதியோர் எல்லோரிடமும் அவர் மிக்க அன்புடன்

கலந்து பழகினர். கொஞ்ச நேரம் அவரை விட்டுப் பிரிந்திருப்பதும் அவர்களுக்குக் கஷ்டமாக இருக்கும். கனி தரும் மரங்களேப் பயிர் செய்வதில் அவருக்கு அதிகப் பிரியம். ஆதலால் தோட்ட வேலையைத் தம் உல்லாசப் பொழுது போக்காக ஏற்றுக்கொண்டார். தினமும் காலையில் பழ மரங்களேப் பேணுவதில் குழந்தைகளேயும் பெரியோர்களேயும் ஈடு படும்படி செய்வார். அவர்களே நன்ருக வேலை செய்யப் பழக்குவார். அவருடைய இனிமையான குணமும், சிரித்த முகமும் எல்லோரையும் அவருடன் வேலை செய்ய ஆசைப்படும்படி செய்தன. காலை இரண்டு மணிக்கு ஜொஹன்னஸ்பர்க்கிற்கு ஏதாவது ஒரு கோஷ்டி செல்லுமேயானுல் ஸ்ரீ கால்லன்பாக்கும் எப்போதும் இவர்களில் ஒருவராக இருப்பார்.

ஸ்ரீ கால்லன்பாக் அவர்களும் நானும், அகிம்சை, அன்பு, சத்தியம், சமய தத்துவங்கள் போன்ற அடிப்படையான உண்மைகளேப்பற்றி அடிக்கடி சர்ச்சை செய்வது உண்டு. பாம்பையும் அது போன்ற ஜந்துக்களேக் கொல்வது பாவம் என்று நான் சொன்னபோது மற்ற ஐரோப்பிய நண்பர்களேப் போலவே அவரும் திடுக்கிட்டார். ஆனுல், கடைசியில் அதன் தத்துவ உண்மையை ஒப்புக்கொண்டார். எங்கள் பழக்கத்தின் தொடக்கத்திலிருந்தே தம் அறிவுக்குச் சரியென்று பட்டதை வாழ்க்கையில் பின்பற்றுவது தம் கடமையென உணர்ந்திருந்தார். எனவே, தம்முடைய வாழ்க்கையில் மகத்தான மாறுதல்களே அவர் எவ்விதத் தயக்கமுமின்றி செய்துகொள்ள முடிந்தது. பாம்பு அல்லது அவை போன்ற மற்ற ஜந்துக்களேக் கொல்வது தவறென்ருல் அவற்றின் நட்பை நாம் உண்டாக்கிக் கொள்ள வேண்டுமென்று அவர் நினேத்தார். அதனுல் பாம்பின் இனங்களேப்பற்றிய பாகுபாடுகளேத் தெரிவிக்கக் கூடிய புத்தகங்களேச் சேகரித்தார். எல்லாப் பாம்புகளும் விஷமுடையன அல்லவென்பதையும், சில இனங்கள் பயிர்களுக்குப் பாதுகாப்பாக இருந்தன என்பதையும், அவர் அவற்றைக்கொண்டு தெரிந்துகொண்டார். பலவிதப் பாம்புகளே அடையாளம் தெரிந்துகொள்ள எங்களுக்கும் கற்றுக் கொடுத்தார். கடைசியில் பண்ணேயில் நடமாடிய ஒரு பெரிய நாகப்பாம்பைப் பிடித்து வளர்த்து வந்தார். அதற்குத் தம் கையாலேயே தினமும் உணவு கொடுப்பார். நான் அவரிடத்தில் மெதுவாக வாதாடினேன்: “நீங்கள் இந்தப் பாம்பைச் சிநேகப்பான்மையில் வளர்த்து வந்தாலும், உங்கள் பிரியத்தில் பயமும் கலந்திருப்பதால், உங்கள் நட்பை அந்த

நல்ல பாம்பு தெரிந்து கொள்ளாமலே போய்விடக்கூடும். அது மாத்திரம் சுதந்திரமாக இருக்குமேயானால், எனக்கும் சரி உங்களுக்கும் சரி, அதனுடன் விளையாடத் தைரியம் வருமா? அந்த மாதிரி ஒரு தைரியத்தைத்தானே நாம் அடைய வேண்டும்? ஆதலால் நீங்கள் இப்பாம்பை நட்பினால் வளர்த்து வந்தாலும் இதை அடக்குவதில் உண்மை அன்பு இருக்க முடியாது. நம்முடைய நடத்தை, பாம்பு புரிந்துகொள்ளுகிற மாதிரி இருக்க வேண்டும். விலங்குகள், மற்ற இனங்கள் தம்மிடம் நேசத்துடன் இருக்கின்றனவா அல்லது அச்சத்துடன் இருக்கின்றனவா என்பதை உடனே தெரிந்துகொள்ளுவதை நாம் தினமும் காண்கிறோம். தவிரவும், இந்த நல்ல பாம்பை விஷமுள்ளதல்லவென்று நினைக்கிறீர்கள். ஆனால், இதன் பழக்க வழக்கங்களைத் தெரிந்துகொள்ளுவதற்காக நீங்கள் இதை இப்படி சிறை செய்திருக்கிறீர்கள். உண்மையான அன்பு செலுத்துவதாயிருந்தால் இப்படிச் சுயதிருப்திக்கு இடம் தரக்கூடாது.''

என்னுடைய விவாதத்தின் உண்மை, ஸ்ரீ கால்லன்பாக் மனத்தில் பட்டது. ஆனாலும், உடனேயே அந்த நல்ல பாம்பை விடுதலை செய்ய அவருக்கு மனம் வரவில்லை. நான் அவரை வற்புறுத்தவுமில்லை. எனக்கும் அந்த நல்ல பாம்பின் வாழ்க்கையில் சிறிது அக்கறை பிறந்தது. குழந்தைகளுக்கோவெனில், நிரம்ப குதூகலம் அதனிடத்தில். அதை ஒருவரும் தொந்தரவு செய்யாதபடி பார்த்துக்கொண்டோம். ஆனால், அந்தப் பாம்பு தப்பியோட வழி பார்த்துக்கொண்டிருந்தது. கூண்டின் கதவு திறந்து இருந்ததோ அல்லது பாம்புதான் அதைத் திறந்ததோ தெரியாது. ஒரு நாள் ஸ்ரீ கால்லன்பாக் அந்த நண்பனைப் பார்க்கச் சென்றபோது கூண்டு காலியாக இருந்தது. அவருக்கும் எனக்கும் இதனால் சந்தோஷம். இந்தப் பரிசோதனையின் விளைவாகப் பாம்புகளைப்பற்றி நாங்கள் அடிக்கடி பேசிக்கொள்ளுவோம். ஆல்பிரக்ட் என்ற ஏழை, வயோதிக ஜெர்மானியர் ஒருவரை ஸ்ரீ கால்லன்பாக் பண்ணைக்கு அழைத்து வந்தார். அவருக்குக் கூன் அதிகமானதால் தடியின்றி நடக்கமுடியாது. அந்த ஆல்பிரக்ட் நிறையத் தைரியம் வாய்ந்தவர். நன்கு கற்றறிந்தவராதலால் அவருக்கு ஆழ்ந்த கருத்துள்ள விஷயங்களில் ஈடுபாடு உண்டு. ஓர் இந்தியராகவே கலந்து எங்களுடன் பழகினார். பாம்புகளுடன் அச்சமின்றி விளையாடவும் ஆரம்பித்தார். சிறு குட்டிப் பாம்புகளைப் பிடித்து வந்து தம் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு ஆட்டுவார். நாங்கள் மட்டும் டால்ஸ்டாய் பண்ணையில் நீடித்திருந்தால் அவருடைய விளையாட்டுக்கள் எவ்வளவு தூரம் போயிருக்குமோ?

இந்த ஆராய்ச்சியின் முடிவினுல் பாம்புகளைப்பற்றி நாங்கள் முன்புபோல் அவ்வளவு அதிகம் பயப்படுவதில்லை. அதனுல் பண்ணையிலிருந்த அனைவரும் பாம்புக்குப் பயப்படவில்லை என்ருே அவற்றைக் கொல்லத் தடை இருந்தது என்ருே நினைத்துவிடக் கூடாது. ஒரு காரியம் செய்யும்போது அதில் பலாத்காரம் அல்லது பாவம் இருக்கிறது என்று நம்புவது ஒரு விஷயம். அந்த நம்பிக்கையைக் கடைப்பிடித்து நடப்பது என்பது மற்ருெரு விஷயம். வாழ்க்கையை இழக்க விரும்பாதவன் ஒருவன், பாம்புகளைக் கண்டு அஞ்சுவானே யானுல், ஆபத்து நேரும்போது அவன் அதைக் கொல்வதை தவிர்க்க முடியாது. பண்ணையில் நிகழ்ந்த சம்பவம் ஒன்று எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. பண்ணையில் பாம்புகள் நிறைந்திருந்தன என்பதை வாசகர்கள் அறிந்திருக்கிருர்கள். அதற்குக் காரணம், பண்ணை நெடுநாட்களாக மனிதசஞ்சாரமே இல்லாமல் பாழாய்க் கிடந்ததுதான். ஒரு நாள் காலனன் பாக்கின் அறையில், பிடிக்கவும் துரத்தவும் முடியாத நிலையில் ஒரு பாம்பு இருந்தது. அதைக் கண்ட மாணவன் ஒருவன் என்னை அங்கே அழைத்துச் சென்று என்ன செய்வதென்று யோசனை கேட்டான். அதைக் கொல்வதற்கு என் அனுமதியை நாடினுன். என்னைக் கேட்காமலே அவன் அதைக் கொன்றிருக்கலாம். ஆனுல், பண்ணையில் இருந்த மாணவர்களோ மற்றவர்களோ, இம்மாதிரி விஷயங்களில் என்னைக் கேட்காமல் ஒன்றும் செய்வதில்லை. அந்தப் பாம்பைக் கொல்ல அனுமதிப்பது என் கடமை என்று நினைத்து அம்மாணவனுக்கு அதைக் கொல்ல அனுமதி தந்தேன். அவ்வனுமதி கொடுத்தது தவறு என்று இதை எழுதும் இப்போதுகூட நான் நினைக்கவில்லை. அதை என் கையால் பிடித்துப் பண்ணையில் இருப்பவர்களுக்குத் தீங்கு நேராத வண்ணம் அகற்றி விடக்கூடிய தைரியம் எனக்கில்லை. அத்தகைய தைரியத்தை நான் இன்றளவும் பெறவுமில்லை.

பண்ணையில் சத்தியாக்கிரகிகள் வருவதும் போவதுமாக இருந்தார்கள் என்று சொல்லத் தேவையில்லை. இவர்களில் சிலர், சிறைக்குப் போகச் சித்தமாக இருப்பவர்கள்; மற்றவர் சிறை மீண்டவர்கள். ஒரு தடவை, இரண்டு சத்தியாக்கிரகிகள் மாஜிஸ்டிரேட்டால் தங்கள் சொந்த ஜாமீனில் விடப்பட்டுப் பண்ணைக்கு வந்திருந்தார்கள். அடுத்த நாள் காலை தங்கள் தண்டனையை ஏற்கக் கோர்ட்டில் அவர்கள் ஆஜராக வேண்டியிருந்தது. அவர்கள் பேச்சில் ஈடுபட்டிருந்தபடியால் ரெயில் வரும் நேரம் நெருங்கிவிட்டதை மறந்து போயினர்.

அவர்கள் ரெயிலைப் பிடிக்க முடியுமா என்பது சந்தேகமாகி விட்டது. இரண்டு பேரும் நல்ல உடற்பயிற்சி பெற்று உடற் கட்டு வாய்ந்த இளைஞர்கள். அவர்கள் தம் முழுச்சக்தியையும் பயன்படுத்தி, வழியனுப்பும் எங்களைச் சேர்ந்த சிலருடன் ஓடினார்கள். நாங்கள் வழியில் இருக்கும்போதே, ஸ்டேஷனுக்குள் ரெயில் வண்டி நுழைவதன் சீட்டிச்சப்தம் எங்களுக்குக் கேட்டது. அது புறப்படுவதான இரண்டாம் சீட்டி கேட்டபோது, ஸ்டேஷன் கட்டடத்தை அடைந்துவிட்டோம். அந்த இளைஞர்கள் மேலும் வேகமாக ஓடவே, நான் பின்தங்கி விட்டேன். ரெயில் புறப்பட்டுவிட்டது. நல்ல வேளையாக ஸ்டேஷன் அதிகாரி இவர்கள் ஓடிவருவதைக் கண்டு ரெயிலை நிறுத்தியபடியால் இவர்கள் அதில் ஏற முடிந்தது. நான் ஸ்டேஷனை அடைந்த போது அவருக்கு என் நன்றியைத் தெரிவித்தேன். இதிலிருந்து இரண்டு கருத்துக்கள் தெளிவாயின. ஒன்று, சத்தியாக்கிரகிகள் சிறைக்குச் செல்வதிலும், தாங்கள் கொடுத்த வாக்கைக் காப் பாற்றுவதிலும் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்கள் என்பது. இரண்டாவது, சத்தியாக்கிரகிகளுக்கும், ஸ்தல உத்தியோகஸ் தர்களுக்கும் சிநேகமான தொடர்பு ஏற்பட்டிருந்தது என்பது. அந்த இளைஞர்கள் ரெயிலைப் பிடிக்காமல் இருந்திருந்தால் மறு நாள் கோர்ட்டில் ஆஜராகி இருக்கமுடியாது. அவர்களிடம், கோர்ட்டார் வேற்று ஜாமீனோ அல்லது பணத்தொகையோ கட்டக் கேட்கவில்லை. அவர்கள் நாணயமான நபர்கள் என்ற நம்பிக்கையின் பேரில் சொந்த ஜாமீனில் விடுதலை செய்திருந் தார்கள். சத்தியாக்கிரகிகள் தாங்களே சிறைக்குச் செல்ல முன்வந்தாலும், அவர்களுக்கிருந்த நாணயத்தைக் கருதி மாஜிஸ்டிரேட்டுகள் அவர்களிடம் வேறு ஜாமீன் கேட்பதை அவசியமாகக் கருதாத ஒரு மதிப்பை சம்பாதித்திருந்தனர். ஆதலால் அந்த இளைஞர்கள், ரெயிலைத் தவற விடக்கூடாது என்று நினைத்துக் காற்றைப்போல் கடுமையான வேகத்துடன் ஓடி ரெயிலைப் பிடித்தார்கள். சத்தியாக்கிரக இயக்கத்தின ருக்கு ஆரம்பத்தில் உத்தியோகஸ்தர்கள் நிறையத் துன்பம் இழைத்தார்கள். சிறையதிகாரிகள் அவர்களைக் கடுமையாக நடத்தினார்கள். ஆனால், இயக்கம் வலுக்க வலுக்க உத்தி யோகஸ்தர்கள் கடுமையைக் குறைத்துச் சில சமயங்களில் மரியாதைகூடக் காட்டினார்கள். அதிகமாகப் பழகின இடங் களில், நான் குறிப்பிட்ட அந்த ஸ்டேஷன் மாஸ்டரைப்போல் உதவி செய்யவும் முன்வந்தார்கள். தங்களுக்குச் சௌகரியங்கள் கிடைப்பதற்காகச் சத்தியாக்கிரகிகள், உத்தியோகஸ்தர்

களுக்கு ஏதாவது லஞ்சம் கொடுத்தார்களோ என்று வாசகர்கள் நினைக்கக்கூடாது. சட்டத்தை மீறி எந்தச் சௌகரியத்தையும் பெற அவர்கள் என்றும் நினைத்ததில்லை. மரியாதையுடன் வசதிகள் அளிக்கப்பட்டபோது அவற்றை ஏற்றுக்கொண்டார்கள். ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் விரும்பினால், சட்ட வரம்புகளை மீறாமலேயே பிரயாணிகளைப் பலவிதங்களில் துன்புறுத்த முடியும். அத்தகைய துன்பங்களுக்கு எதிராகப் புகார் எதுவும் செய்யவும் முடியாது. உத்தியோகஸ்தர்கள் நல்லவராக இருந்தால் சட்டத்தை மீறாமலேயே வசதிகளும் செய்து கொடுக்க முடியும். அத்தகைய வசதிகளனைத்தும் எங்களுக்கு லாலி என்ற ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து கிடைத்தன. சத்தியாக்கிரகிகள் தந்த மரியாதை, பொறுமை, துன்பங்களை அனுபவித்துக் கொள்ளுவதிலுள்ள ஆற்றல் ஆகிய பண்புகளே அதற்குக் காரணம்.

சம்பந்தமில்லாத ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிடுவது தவறாகாது. சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாகவே சமயம், பொருளாதாரம், சுகாதாரம் இவற்றின் நோக்கிலிருந்து உணவு பற்றிய பரிசோதனைகளும் எனக்குப் பிடித்த விஷயங்களாகும். உணவு சீர்திருத்தப் பரிசோதனை மனப்பான்மை இன்னும் என்னை விடவில்லை. ஆகவே, என்னைச் சுற்றி இருப்பவர்கள் இந்தச் சோதனைகளின் பலாபலன்களை அனுபவிக்க வேண்டியிருந்தது. இத்துடன் நோய்களுக்கு எவ்வித மருந்துமின்றி, மண், தண்ணீர் போன்ற இயற்கைப் பொருள்களால் சிகிச்சை செய்வதுமுண்டு. நான் பாரிஸ்டராக இருந்தபோது என்னுடைய கட்சிக்காரர்கள், தங்கள் குடும்பத்தினரில் ஒருவரைப் போல் என்னைப் பாவித்து அன்புடன் பழகி வந்தார்கள். தங்கள் சுக துக்கங்களை என்னிடம் வந்து சொல்லுவார்கள். என்னுடைய இயற்கைச் சிகிச்சை முறையில் பிடிப்புள்ளவர்கள் என் யோசனைகளையும் கேட்க வருவார்கள். இந்த வகையான நோயாளிகள் சிலர் டால்ஸ்டாய் பண்ணைக்கும் வருவதுண்டு. இவர்களில் ஒருவர், வட இந்தியாவிலிருந்து முன்னால் ஒப்பந்தக் கூலியாட்களில் ஒருவராக வந்திருந்த லுட்டாவன் என்பவர். எழுபது வயதிற்கு மேற்பட்ட இந்த வயோதிகர், நீடித்த காலமாக இருமல், ஈளை ஆகியவற்றால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். வைத்தியர்கள் தந்த சூர்ணங்களையும், டாக்டர் சொன்ன மருந்துகளையும் நெடுநாட்களாகச் சாப்பிட்டு வந்தார். அந்தக் காலத்தில், நான்

கையாண்டு வந்த சிகிச்சை முறையில் எனக்கு எல்லையில்லாத நம்பிக்கை இருந்தது. ஆதலால், அவர், பண்ணையில் இருந்து கொண்டு நான் சொல்லும் நிபந்தனைகளை யெல்லாம் ஏற்றுக் கொண்டால், சிகிச்சை செய்து குணப்படுத்த அல்ல, ஆனால் என் முறைகளைப் பரீட்சை செய்வதாகச் சொன்னேன். லுட்டா வன் அதற்கு இணங்கினர். அவர் அதிகமாக உபயோகப்படுத் திக் கொண்டிருந்த புகையிலையை விட்டு விட வேண்டுமென்பது அந்த நிபந்தனைகளில் ஒன்று. அவரை இருபத்துநான்கு மணி நேரம் பட்டினி கிடக்க வைத்தேன். ஒவ்வொரு நாளும் நடுப் பகலில் வெயிலில் தொட்டியில் இடுப்பு வரையில் தண்ணீரில் உட் கார வைத்து 'கூனி ஸ்நானம்' செய்யும் முறையை ஆரம்பித்தேன். அப்போது வெயில் அதிகம் இல்லை. கொஞ்சம் அரிசி, ஆலிவ் எண்ணெய், தேன், கஞ்சி, ஆரஞ்சு அல்லது திராட்சைப் பழம், கோதுமைக் காப்பி இவையே அவருக்கு உணவு. உப்பும், மசா லாப் பொருள்களும் முழுதும் விலக்கப்பட்டன. லுட்டாவன் நான் இருந்த கட்டடத்திலேயே உள்ளறையில் படுத்துக்கொண்டிருந் தார். ஒவ்வொருவருக்கும் விரித்துக்கொள்ள ஒரு கம்பளியும், போர்த்துக்கொள்ள ஒரு போர்வையும், தலைக்கு ஒரு மரக்கட் டையும் கொடுக்கப்பட்டிருந்தன. ஒரு வாரம் சென்றது. லுட்டா வன் உடம்பில் கொஞ்சம் தெம்பு வந்தது; இருமலும் ஈளையும் குறைந்தன. ஆனல், பகலைவிட இரவில் காசம் வந்தது. அவர் மறைவாகப் புகை பிடித்திருக்கக்கூடும் என்று சந்தேகித்து அவரைக் கேட்டேன். லுட்டாவன் 'இல்லை' என்ருர். இரண்டு தினங்கள் கழிந்தன. அதன் பிறகும் அபிவிருத்தி இல்லாததால், அவரை ரகசியமாகக் கவனிக்கத் தீர்மானித்தேன். எல்லோரும் தரையில் படுத்திருந்தார்கள். அங்கே பாம்புகள் அதிகம் இருந் தன. ஆதலால் ஸ்ரீ கால்லன்பாக் என்னிடம் ஒரு மின்சாரக் கைவிளக்குக் கொடுத்திருந்தார்; தாமும் ஒன்று வைத்திருந்தார். எனக்கருகில் அதை வைத்துக்கொண்டே உறங்குவது வழக்கம். ஒரு நாள் படுக்கையில் விழித்துக்கொண்டே படுத்திருக்கத் தீர்மானித்தேன். வெளித் திண்ணையில் கதவுக்கருகில் என் படுக்கை இருந்தது. லுட்டாவன் உள்ளறையில் கதவுக் கருகில் படுத்துக் கொண்டிருந்தார். நள்ளிரவில், அவர் இருமு வது கேட்டது. ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக் குடிக்க ஆரம்பித்தார். நான் மெல்ல அவர் படுக்கைக்கருகில் சென்று 'டார்ச்' விளக்கை அடித்தேன். லுட்டாவன் யாவற்றையும் புரிந்துகொண்டபடியால் அவருக்குப் பயம் உண்டாயிற்று. புகை குடிப்பதை நிறுத்திவிட்டு எழுந்து என் காலைப் பிடித்துக்

கொண்டு, "நான் மிகப் பெரிய தவறு செய்து விட்டேன். உங்களையும் ஏமாற்றிவிட்டேன். இனிமேல் புகை பிடிப்பதே இல்லை. தயை செய்து மன்னியுங்கள்" என்று சொல்லித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டார். "புகை பிடிக்காமல் இருப்பது உமக்குத் தான் நன்மை யளிக்கும்" என்று நான் சமாதானம் சொன்னேன். என்னுடைய கணக்குப்படி அவர் அதற்குள் குணமாகியிருக்க வேண்டும். அதற்கு மாறாக நோய் இன்னும் தொடர்ந்திருந்தபடியால் அவர் ரகசியமாய்ப் புகை பிடித்திருக்க வேண்டுமென்று சந்தேகப்பட்டேன். அதன் பிறகு அவர் புகை பிடிப்பதை விட்டு விட்டார். அவரது ஈளையும் இருமலும் இரண்டு தினங்களில் குறைந்து, ஒரு மாதத்தில் பூரணமாகக் குணமாகிவிட்டன. அதற்குமேல் நிறைந்த பலம் பெற்று, எங்களிடமிருந்து விடை பெற்றுச் சென்றார்.

ஸ்டேஷன் மாஸ்டருடைய இரண்டு வயதான பையனுக்கு டைபாய்டு ஜுரம் வந்தது. என்னுடைய சிகிச்சை முறைகளைப்பற்றி அவரும் அறிந்திருந்தபடியால், என்னுடைய யோசனையை நாடிவந்தார். முதல் நாள் நான் குழந்தைக்கு ஓர் உணவும் தரவில்லை. இரண்டாவது நாளிலிருந்து அரை வாழைப் பழத்தை நன்றாகப் பிசைந்து, அத்துடன் அரைக்கரண்டி ஆலிவ் எண்ணெயையும் ஆரஞ்சுப்பழ ரசத்தின் சில துளிகளையுமே கொடுத்து வந்தேன். இரவு வேளைகளில் குழந்தையின் வயிற்றின் மேல் குளிர்ந்த மண்பற்றுத் தடவி வந்தேன். இதிலும் என் வைத்தியமுறை பலித்தது. ஒரு வேளை டைபாய்டு ஜுரம் என்று டாக்டர் கூறியது தவறாக இருந்திருக்கலாம்.

இம்மாதிரிப் பல பரிசோதனைகளை நான் பண்ணையில் செய்திருக்கிறேன். ஒன்றிலேனும் தவறியதாக எனக்கு நினைவில்லை. ஆனால், இன்று நான் அதே முறைகளைக் கையாளத் துணியமாட்டேன். டைபாய்டு ஜுரத்தின்போது வாழைப்பழத்தையும் ஆலிவ் எண்ணெயையும் கொடுப்பதற்கு இன்று அஞ்சுவேன். 1918-இல் எனக்கே வயிற்றுளைச்சல் கண்டது. அதைச் சுகப்படுத்த என்னால் முடியவில்லை. அதற்குக் காரணம், என் மேல் எனக்கிருந்த நம்பிக்கைக் குறைச்சலா, அல்லது சீதோஷ்ண மாறுதலால் தென்னாப்பிரிக்காவில் பலித்த வைத்தியம் இந்தியாவில் பலிக்காமல் போனதா என்று என்னால் இன்றுவரையிலும் சொல்ல முடியவில்லை. ஆனால், இது மாத்திரம் தெரியும்; வீட்டு வைத்தியமும், டால்ஸ்டாய் பண்ணையில் நாங்கள் நடத்திய எளிய வாழ்க்கையுமே பொதுப்பணத்தில் இரண்டு, மூன்று,

லட்சம் ரூபாய்களை மிச்சப்படுத்தின. அங்கே குடியேறியவர்கள் ஒவ்வொருவரும், தாங்கள் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதிக் கொள்ளக் கற்றுக் கொண்டனர். சத்தியாக்கிரகிகளுக்கு அடைக்கலம் புகத் தூய இடம் கிடைத்தது. ஆகையால், அங்கே பொய்க்கோ, பாசாங்கிற்கோ துளியேனும் வழியில்லை. பதரிலிருந்து தானியம் சுத்தமாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இது வரை நான் விவரித்துள்ள உணவுப் பரிசோதனைகள், முக்கியமாக சுகாதார நோக்கத்துடன் செய்யப்பட்டன. ஆனால், என் விஷயத்தில் அனைத்திலும் முழுவதும் ஆன்மிகத் தன்மையதான ஒரு சோதனையை மேற்கொண்டேன்.

சைவ உணவு கொள்ளும் நமக்குப் பாலைப் பருக உரிமையுண்டா என்ற பிரச்னையைப்பற்றி நான் அடிக்கடி ஆழ்ந்து தீர யோசித்தும், விரிவாகப் படித்தும் இருக்கிறேன். ஆனால், பண்ணையில் நான் வசித்து வந்த காலத்தில் என் கையில் கிடைத்த புத்தகத்திலிருந்தோ, பத்திரிகையிலிருந்தோ, கல்கத்தாவில் பசுக்களிலிருந்து கடைசிச் சொட்டுவரைப் பாலைக் கறந்து அவற்றைக் கொடுமைக்கு உள்ளாக்குதலைப் பற்றியும், 'பூக்கா' என்ற குரூரமான செயலைப் பற்றியும் படித்தேன். ஒரு முறை நான் ஸ்ரீ கால்லன்பாக்கிடம், பால் குடிக்கவேண்டியது அவசியமா என்பதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில், இந்தக் கொடிய பழக்கத்தைக் கூறினேன். பால் குடிப்பதைத் தவிர்ப்பதால் விளையும் மற்றப் பல ஆன்மிகப் பயன்களை எடுத்துக்காட்டி, முடிந்தால் நாமும் பாலை விட்டுவிடுவது நல்லது என்று சொன்னேன். ஸ்ரீ கால்லன்பாக் நான் சொன்னவற்றை மிகவும் ஆதரித்தபடியால் பாலைத் தவிர்க்கும் பரிசோதனையை ஆரம்பிக்க, எப்போதுமுள்ள தம்முடைய வீர உணர்ச்சியோடு தயாரானார். அன்றே நானும் அவரும் பால் குடிப்பதை விட்டுவிட்டோம். ஏற்கனவே நாங்கள் எங்கள் உணவில் சமைத்த பண்டங்களையும் அகற்றியிருந்தபடியால், முடிவில் எங்கள் உணவு உலர்ந்த அல்லது புதிய பழங்களைக் கொண்டதாகவே இருந்தது. இந்தப் பரிசோதனையின் பிந்திய வரலாற்றைப் பற்றியோ அல்லது இது எப்படி முடிந்ததென்றோ நான் இங்கே கூறப் போவதில்லை. ஆனால், ஒன்று மாத்திரம் சொல்ல விரும்புகிறேன். முழுவதும் பழத்தையே கொண்ட உணவினால் அந்த ஐந்து வருட காலத்தில், எனக்குப் பலவீனமோ, நோயோ வந்ததே இல்லை. மேலும், அதே காலத்தில் உடலுழைப்புக்கு வேண்டிய பலமும் எனக்கு நிறைய இருந்தது. ஒரு நாள் ஐம்பத்தைந்து மைல்கள் கூட என்னால்

நடக்க முடிந்தது. நாளொன்றுக்கு நாற்பது மைல்கள் நடப்பது எனக்குச் சகஜம். இந்தப் பரிசோதனை உயர்ந்த ஆன்மிகப் பயன்களை அளித்தது என்று திண்ணமாக நம்புகிறேன். என்னுடைய பழ உணவை நான் விடுவதற்கும் மாற்றிக்கொள்ளுவதற்கும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது எனக்கு என்றுமே வருத்தம் தரும் விஷயமாகும். இன்றும், இந்த முதிய வயதில்கூட, எனக்கு அரசியல் வேலைகள் மாத்திரம் இல்லாமல் இருந்திருந்தால், என் உடம்புக்கு ஆபத்து நேர்வதாக இருந்தாலும், அந்த உணவு விளைவிக்கக் கூடிய ஆன்மிகப் பயன்களை மேற்கொண்டு ஆராய்வதற்காக அதைத் திரும்பவும் மேற்கொள்ளுவேன். டாக்டர்களுக்கும் வைத்தியர்களுக்கும் ஆன்மிக நோக்கமே இராதது எனக்கு எப்பொழுதுமே முட்டுக்கட்டையாக நின்றிருக்கிறது.

ஆனால், நான் இப்பொழுது முக்கியமான இனிய நினைவுகள் அடங்கிய இந்த அத்தியாயத்தை முடித்துவிட வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட ஆபத்தான ஆராய்ச்சிகள், சுயத்தூய்மையையே முக்கிய சாரமாகக்கொண்ட போராட்டத்தில்தான் இடம் பெறமுடியும். இறுதிப் போராட்டத்திற்கான தவத்திற்கும், ஆன்மிகச் சுத்தம் பெறுவதற்கும், டால்ஸ்டாய் பண்ணை ஒரு நிலையமாக விளங்கியது. டால்ஸ்டாய் பண்ணை இல்லாமல் இருந்தால், போராட்டத்தை எட்டு வருடங்கள் நடத்தியிருக்க முடியுமா? எங்களுக்கு அதிகமான தொகையைத் திரட்டியிருக்க முடியுமா? போராட்டத்தின் கடைசிப் பகுதியில் கலந்து கொண்ட ஆயிரக் கணக்கான பேர் தங்கள் பங்கை ஆற்றியிருப்பார்களா என்பதும் எனக்குச் சந்தேகம். டால்ஸ்டாய் பண்ணையை நாங்கள் உலகு அறிய விளம்பரப்படுத்தவில்லை. ஆயினும், தகுதியுள்ள எந்த ஸ்தாபனமும் பொதுமக்கள் ஆதரவைக் கவரத்தான் செய்யும். டால்ஸ்டாய் பண்ணையில் இருந்தவர்கள், தாங்கள் செய்ய முடியாததொரு பணியை, தாங்கள் கஷ்டமெனக் கருதும் காரியத்தைச் சாதித்தனர் என்பதை இந்தியர்கள் கண்டனர். பொதுமக்கள் அதனிடம் கொண்டிருந்த நம்பிக்கை, *1913*-இல் இயக்கத்தைப் பெரிய அளவில் மீண்டும் தொடங்கியபோது, அதற்கு மிகவும் உதவியாகயிருந்தது. இந்த ஆதரவு என்ன பயனைத் தந்தது, எப்போது தந்தது என்பதை ஒருவராலும் சொல்ல முடியாது. அப்படி மறைந்து கிடக்கும் சிறந்த சக்திகளும், ஆண்டவன் அருளும் காலம் வரும்போதுதான் புலனுகும் என்பதைப் பற்றி எனக்குச் சிறிதேனும் சந்தேகமில்லை; வாசகர்களுக்கும் ஐயம் இருக்கவேண்டாம்.

## முப்பத்தாறுவது அத்தியாயம்

# கோகலேயின் சுற்றுப்பிரயாணம்

இப்படியாகச் சத்தியாக்கிரகிகள் டால்ஸ்டாய் பண்ணையில் தங்கள் வாழ்க்கையை நல்ல சந்தர்ப்பத்தில் நடத்தியதோடு எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய கஷ்டங்களுக்கு ஈடு கொடுக்கத் தங்களைத் தயார் செய்துகொண்டும் இருந்தார்கள். போராட்டம் எப்பொழுது முடியும் என்று அவர்களுக்குத் தெரியாது. இதைப்பற்றி அவர்கள் கவலைப்படவும் இல்லை. அவர்கள் கொண்டிருந்தது ஒரே ஒரு பிரதிக்ஞை. அது கறுப்புச் சட்டத்திற்கு உட்படுவது இல்லை என்பதும், அப்படி உட்பட மறுப்பதனால் விளையக்கூடிய துன்பம் எதுவாயினும் சகிப்பது என்பதுமாகும். போர் செய்பவனுக்குப் போரே வெற்றியாகும். ஏனெனில், அதிலேயே அவன் ஆனந்தம் பெறுகிறான். போரை நடத்துவது எப்படி அவன் பொறுப்போ, அதேபோல் வெற்றியோ, தோல்வியோ, இன்பமோ எதுவும் தன்னைப் பொறுத்தது என்ற துணிவில் அவன் போரில் இறங்குகிறான். வேதனை அல்லது தோல்வி என்ற சொற்களை அவனுடைய அகராதியில் காண முடியாது. பகவத் கீதை கூறுவதுபோல், இன்பமும் துன்பமும், வெற்றியும் தோல்வியும் அவனுக்குச் சமமே.

அவ்வப்போது சத்தியாக்கிரகிகள் ஓரிருவர் சிறைக்குச் சென்றுகொண்டிருந்தனர். சிறைக்குப் போகச் சந்தர்ப்பம் இல்லாதபோது யாராவது பண்ணையில் நடந்து வந்த வெளி வேலைகளைக் கண்டால், அங்கே சத்தியாக்கிரகிகள் வசிக்கின்றனர் என்றோ, அவர்கள் போராட்டத்திற்காகத் தயாராகிக் கொண்டிருக்கின்றனர் என்றோ யாரும் நம்பமாட்டார்கள். எதையுமே சந்தேகிக்கும் பேர்வழி யாராவது பண்ணைக்கு வர நேர்ந்தால், அவர் நண்பரானால் எங்கள்மீது இரக்கம் கொள்ளுவார்; குற்றங் கண்டுபிடிப்பவரானால், எங்களைக் குறை கூறுவார். "இந்தப் பயல்கள் சோம்பேறிகள் ஆகிவிட்டனர். உண்டு விட்டு இந்தத் தனியான இடத்தில் வசிக்கிறார்கள். சிறைக்குச் செல்வதில் இவர்களுக்குச் சலிப்பு ஏற்பட்டு விட்டது. அதனால்தான் நகரச் சந்தடிகளுக்கப்பாலுள்ள இப்பழத் தோப்பில் சுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்" என்று கூறுவார். குறைகூறும் இப்பேர்வழிக்கு, ஒரு

சத்தியாக்கிரகி, ஒழுக்க தருமத்தை மீறிச் சிறைக்குச் செல்ல முடியாதென்றும், அவனுடைய சாந்தமும் தன்னடக்கமுமே போருக்கு அவனை ஆயத்தம் செய்வனவாகு மென்றும், மனித உதவியை எதிர்பாராமல் ஆண்டவன் ஒருவனையே அவன் அடைக்கலமென நம்பியிருக்கிருன் என்றும் எங்ஙனம் விவரிப்பது? கடைசியாக அங்கே யாரும் எதிர்பார்க்காத நிகழ்ச்சிகள் மூண்டன. ஆண்டவன்தான் செய்தானே என்னவோ? அங்ஙனமே எதிர்பாராத உதவியும் வந்தது. கொஞ்சமும் நினைத்திராதபடி சோதனை வந்தது. கடைசியில் எளிதில் எவரும் தெரிந்துகொள்ளும்படி தெளிவாக வெற்றியும் கிட்டிற்று.

கோகலேயையும் மற்றத் தலைவர்களையும், தென்னுப்பிரிக்கா வுக்கு வந்து, அங்கே இந்தியாவிலிருந்து குடியேறியவர்கள் படும் துன்பங்களை நேரடியாகக் கண்டு ஆராயுமாறு நான் வேண்டியிருக்கிறேன். ஆனல், அவர்களில் ஒருவராகிலும் வருவாரா என்று நான் ஐயப்பட்டேன். ஸ்ரீ ரிட்சும், இந்தி யத் தலைவர்களில் யாரையாவது அந்த உபகண்டத்திற்கு வரவழைக்க முயற்சி செய்துகொண்டிருந்தார். ஆனல், போராட் டத்தின் வேகம் அடங்கியிருக்கும்போது யார்தாம் போகத் துணிவர்? 1911-இல் கோகலே இங்கிலாந்தில் இருந்தார். தென்னுப்பிரிக்காவில் நடந்த போராட்டத்தைக் கவனித்து வந்தார். இந்தியச் சட்டசபையில் விவாதங்களைத் தொடங்கி (1910-ஆம் வருடம் பிப்ரவரி 25-ஆம் தேதி) நேட்டாலுக்குத் தொழிலாளர்களைக் குடியேற்றத் திரட்டுவதைத் தடுக்கும் வண்ணம் ஒரு தீர்மானத்தையும் கொண்டுவந்து நிறைவேற்றி யும் வைத்தார். அந்தக் காலம் முழுவதும் நான் அவருடன் கடித வாயிலாகத் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தேன். இந்தியா மந்திரியுடன் கலந்து பேசி, தாம் தென்னுப்பிரிக்கா வுக்குச் சென்று நேராக விஷயங்களை அறிந்துகொள்ள விரும்புவ தாகத் தெரிவித்தார். மந்திரியும், கோகலே மேற்கொண்ட காரியத்துக்குச் சம்மதம் அளித்தார். கோகலே, தமக்கு ஆறு வாரச் சுற்றுப்பிரயாணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறும், தாம் தென்னுப்பிரிக்காவை விட்டுப் புறப்படவேண்டிய கடைசி தேதியைக் குறித்தும் எனக்கு எழுதியிருந்தார். எங்கள் மகிழ்ச் சிக்கு அளவேயில்லை. இதற்கு முன்பு தென்னுப்பிரிக்காவுக்கு இந்தியத் தலைவர் ஒருவர்கூட வந்தது இல்லை. ஏன், இந்தியா விற்கு வெளியே இந்தியர் குடியேறிய எந்த இடத்திற்குமே,

அவர்கள் நிலைமையைப் பரிசீலனை செய்யும்பொருட்டு ஒருவரும் சென்றதில்லை. ஆகவே, கோகலேயைப் போன்ற ஒரு பெரிய தலைவருடைய வருகையின் முக்கியத்துவத்தை நாங்கள் உணர்ந்து, அரசர்களும் பொறாமை கொள்ளும் முறையில் அவருக்கு வரவேற்புத் தரவும், தென்னாப்பிரிக்காவின் பிரபல நகரங்களுக்கெல்லாம் அவரை அழைத்துச் செல்லவும் தீர்மானித்தோம். சத்தியாக்கிரகிகளும் மற்ற இந்தியர்களும் ஒரே மனத்தினராய் மகிழ்ச்சியுடன் வரவேற்புக்காக மகத்தான ஏற்பாடுகளைச் செய்ய முனைந்தார்கள். அந்த ஏற்பாடுகளில் கலந்துகொள்ளும்படி ஐரோப்பியர்களும் அழைக்கப்பட்டார்கள். பொதுவாக அவர்களும் வரவேற்பு விழாவில் கலந்துகொண்டார்கள். எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் நகர மண்டபங்களில் பொதுக் கூட்டங்கள் நடத்துவதென்றும், அவற்றிற்கு நகர மேயர்களே, சம்மதம் இருந்தால் தலைமை வகிக்க வேண்டுமென்றும் தீர்மானித்தோம். ரெயில் பாதையிலுள்ள முக்கிய ஸ்டேஷன்களையெல்லாம் அலங்கரிக்கும் வேலையையும் மேற்கொண்டோம். பெரும்பாலும், அதற்கு வேண்டிய அனுமதிகளையும் பெற்றோம். சாதாரணமாக அப்படி அனுமதி தருவது வழக்கமல்ல. ஆனால், எங்களுடைய மகத்தான ஏற்பாடுகள் அதிகாரிகளைக் கவர்ந்தன. எங்களிடத்தில் அவர்கள் எவ்வளவு அனுதாபம் காட்ட முடியுமோ அவ்வளவும் காட்டினார்கள். உதாரணமாக ஜொஹன்னஸ்பர்க்கில் மாத்திரமே, பார்க் ஸ்டேஷனில் ஸ்ரீ காலன்பாக் அவர்களால் உருவாக்கப்பட்ட ஒரு பெரிய அலங்கார வாசல் உட்பட, அழகுகள் செய்வதற்கு எங்களுக்கு இரு வாரங்கள் ஆயின.

தென்னாப்பிரிக்கா எப்படி இருக்கும் என்று கோகலேக்கு ஓரளவு இங்கிலாந்திலேயே தெரிந்திருந்தது. கோகலேயின் பெரிய பதவி, சாம்ராஜ்யத்தில் அவருடைய ஸ்தானம் முதலியவற்றைப்பற்றி இந்தியா மந்திரி விளக்கி யூனியன் சர்க்காருக்கு எழுதியிருந்தார். ஆனால், அவருடைய கப்பல் பிரயாணத்திற்கும், கப்பலில் நல்ல இடத்திற்கும் ஏற்பாடு செய்வதுபற்றி யார் அக்கறைகொள்ளுவார்கள்? கோகலேயின் உடல்நிலை அவ்வளவு சரியாக இல்லாதபடியால் சௌகரியமான அறையும், தனியாக இருப்பதற்கு வசதியும் அவசியமாகும். கப்பல் கம்பெனி அதிகாரிகள், அத்தகைய வசதியுள்ள அறை கிடையாதென்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்கள். நன்றாக ஞாபகம் இல்லை; கோகலே அவர்களோ அல்லது அவருடைய நண்பர் ஒருவரோ இதை இந்தியா மந்திரி காரியாலயத்

திற்கு அறிவித்தனர். கப்பல் கம்பெனி நிர்வாகிகளுக்கு இந்தியா மந்திரி காரியாலயத்திலிருந்து ஒரு கடிதம் அனுப்பப்பட்டது. முன்னல் வசதியான அறையே இல்லை என்று மறுத்த நிலை மாறிப் போய் உடனே சிறந்த அறை அவருக்குத் தரப்பட்டது. இந்த ஆரம்பத் தீமையிலிருந்து நன்மையே பிறந்தது. கோகலேயை நன்கு கவனிக்கும்படி கப்பல் தலைவனுக்கும் உத்தரவு கொடுக்கப்பட்டது. அதன் மூலமாக கோகலேக்குத் தென்னுப்பிரிக்க கப்பற் பிரயாணம் சந்தோஷமாகவும், சௌகரிய மாகவும் அமைந்தது. கோகலே எவ்வளவு ஆழ்ந்த சிந்தனை யுடன் இருப்பாரோ அவ்வளவு சிரிப்புடனும் குதூகலத்துடனும் இருப்பார். கப்பலில் ஏற்பாடு செய்திருந்த விளை யாட்டுக்கள், பொழுதுபோக்குகள் அனைத்திலும் தாராள மாகக் கலந்துகொண்டு தம்முடன் வந்த பிரயாணிகளுடன் நன்கு பழகினர். பிரிட்டோரியாவில் யூனியன் சர்க்கார் அவரைத் தங்கள் விருந்தாளியாகத் தங்கச் செய்யவும், அவர் பிரயாணம் செய்வதற்குச் சர்க்காருடைய ரெயில்வே சலூன் வண்டியை அவர் உபயோகிக்கவும் ஏற்பாடு செய்ய முன்வந்தார்கள். என்னைக் கலந்துகொண்ட பின்பே அவற்றை அவர் ஏற்றுக்கொண்டார்.

கோகலே, *1912*-ஆம் வருடம் அக்டோபர் *22*-ஆம் தேதி கேப் டவுனில் வந்து இறங்கினர். நான் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே அவருடைய உடல்நிலை நொய்விதாக இருந்தது. அவர் பத்திய உணவையே கொண்டிருந்தார். அதிகமான உழைப்பைத் தாளாதவர். நான் அவருக்கு முதலில் போட்டிருந்த திட்டம் அவரால் சமாளிக்க முடியாததாய் இருந்தது. எனவே, முடிந்தவரை அதைக் குறைத்துவிட்டேன். மாறுதல் செய்ய இயலாதுபோனல் முன்பு போட்டிருந்த திட்டப்படியே தாம் செய்வதாகக் கோகலே கூறினர். அவரைக் கேட்காமல் கடுமையான திட்டம் வகுத்ததைப்பற்றி மிகவும் வருந்தினேன். திட்டத்தில் கொஞ்சம்தான் மாற்ற முடிந்தது. அவருக்குத் தனியாக இருக்க வசதி அவசியம் என்பதை நான் அறிந்து கொள்ளவில்லை. அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதில் மிகுந்த சிரமம் ஏற்பட்டது. நோயாளிகளையும் முதியோர்களையும் நன்கு கவனிக்கும் அனுபவமும் ஆர்வமும் இருந்தபடியால், என்னுடைய தவற்றை உணர்ந்தவுடன், அவருக்கு அமைதியும் தனிமையும் கொடுக்கக்கூடிய விதத்தில் எல்லா ஏற்பாடுகளையும் மாற்றிவிட்டேன் என்பதைத் தாழ்மையுடன் கூறிக்கொள்ளுவது

உண்மையை முன்னிட்டு அவசியமாகிறது. அவர் பிரயாணம் முழுவதும் அவருடைய காரியதரிசியாக இருந்தேன். அவருக்குத் தொண்டாற்றியவர்கள் — அவர்களில் ஸ்ரீ கால்லன்பாக்கும் ஒருவர்—வெகு ஜாக்கிரதையுடன் அவருக்குச் சேவை செய்தார்கள். உதவி இல்லை என்பதால், கோகலேக்கு வேறு எந்த விதமான அசௌகரியமோ தொந்தரவோ இருந்துவிட வில்லை. கேப்டவுனில் கூட்டம் பெரியதாக இருக்கும் என்பது தெளிவாயிற்று. ஷிரீனர் குடும்பத்தாரைப்பற்றி நான் ஏற்கனவே எழுதி யிருக்கிறேன். புகழ் வாய்ந்த இக்குடும்பத்தினரின் தலைவரான செனட்டார் டபிள்யூ. பி. ஷிரீனர் அவர்களை அக்கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும்படி கேட்டுக்கொண்டேன். அவரும் அதற்கு இசைந்தார். அக்கூட்டத்திற்குப் பல இந்தியர்களும், ஐரோப்பியர்களும் வந்திருந்தனர். தென்னுப்பிரிக்க இந்தியர்கள்பால் அனுதாபம் தெரிவித்து ஷிரீனர் கோகலேயை இன்னுரைகள் மூலம் வரவேற்றூர். கோகலே சுருக்கமாகவும், ஆழ்ந்த துணிவும், கண்டிப்பும், மரியாதையும் கூடியதுமான சொற்பொழிவு ஆற்றினர். அது இந்தியர்களுக்கு மகிழ்ச்சியை அளித்தது; ஐரோப்பியர்களையும் கவர்ந்தது. உண்மையில் அவர் தென்னுப்பிரிக்காவில் அடி வைத்த அன்றே தென்னுப்பிரிக்காவிலுள்ள பலதரப்பட்ட மக்களின் உள்ளங்களையும் கொள்ளை கொண்டுவிட்டார்.

கேப் டவுனிலிருந்து ஜொஹன்னஸ்பர்க்குக்குப் போக கோகலே ரெயிலில் இரண்டு நாட்கள் பிரயாணம் செய்யவேண்டும். டிரான்ஸ்வாலில்தான் போர்க்களம். கேப் டவுனிலிருந்து செல்லும்போது, டிரான்ஸ்வாலின் முதலாவது பெரிய எல்லை ஸ்டேஷன் கிளர்க்ஸ்டார்ப். இந்த இடங்களிலெல்லாம் இந்தியர்கள் மிகுதியாகத் திரண்டிருந்தனர். ஆகவே, கோகலே கிளர்க்ஸ்டார்ப்பிலும், இடையிலிருந்த போட்செம்ஸ்ட்ரூம், குருகர்ஸ்டார்ப் என்ற ஸ்டேஷன்களிலும் வண்டியை நிறுத்திக் கூட்டங்களில் பேசவேண்டி இருந்தது. எனவே, கிளர்க்ஸ்டார்ப்பிலிருந்து தனி ரெயிலில் புறப்பட்டார். மேற்கூறிய இடங்களில் அந்த அந்த நகர மேயர்கள் கூட்டங்களுக்குத் தலைமை வகித்தார்கள். எந்த ஸ்டேஷனிலும் இரண்டு மணி நேரத்திற்கு மேல் ரெயில் நிற்கவில்லை. ஜொஹன்னஸ்பர்க்குக்கு உரிய நேரத்தில் ரெயில் போய்ச் சேர்ந்தது. ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் கூட்டம் நடத்துவதற்கென்று மேடை போடப்பட்டு, விலை உயர்ந்த ரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டிருந்தன. ஜொஹன்

னஸ்பர்க் நகர மேயரான ஸ்ரீ எல்லிஸ் மற்ற ஐரோப்பியர்களுடன் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். அவர் கோகலேக்கு அந்தப் 'பொன் நகர'த்தில் உபயோகித்துக்கொள்ளத் தம் மோட்டாரைக் கொடுத்தார். ஸ்டேஷனிலேயே கோகலேக்கு உபசார பத்திரம் ஒன்று வாசித்துத் தரப்பட்டது. உபசார பத்திரங்கள் எல்லா இடங்களிலும் கொடுக்கப்பட்டன. ஜொஹன்னஸ்பர்க் பத்திரம் இருதய வடிவமுள்ள ராண்டு (Rand) பொன் தகட்டில் பொறிக்கப்பட்டு ரொடீஷியத் தேக்கு மரச்சட்டம் போடப்பட்டிருந்தது. அந்தத் தகட்டில், இலங்கையுடன் இந்தியா படமும், இரு பக்கங்களில் தாஜ்மஹாலும், இந்தியக் காட்சியொன்றும் பொறிக்கப்பட்டிருந்தன. மரச்சட்டத்திலும் இந்தியக் காட்சிகள் அழகாகச் செதுக்கப்பட்டிருந்தன. வந்தவர்களை அறிமுகம் செய்தல், உபசார பத்திரம் வாசித்தல், படிக்க நேரமில்லாத மற்றப் பத்திரங்களை ஏற்றுக்கொள்ளுதல், கோகலே தரும் பதில் ஆகிய நிகழ்ச்சிகள் அனைத்தும் இருபது நிமிடங்களில் முடிந்துவிட்டன. உபசார பத்திரம் மிகச் சுருக்கமாக இருந்தது. அதைப் படிப்பதற்கு ஐந்து நிமிடங்களாயின. கோகலேயின் பதிலுரை ஐந்து நிமிடங்களுக்குமேல் போகவில்லை. தொண்டர்கள் தம் வேலைகளை நன்ருகச் செய்தனர். மேடையிலிருந்த இடவசதிக்கு மேல் ஆட்கள் அங்கே இல்லை. எங்கும் அமைதி நிலவியது. வெளியே கூட்டம் அதிகமாக இருந்தபோதிலும், உள்ளே போகவும், வெளியே வரவும் யாதொரு சிரமமும் இருக்கவில்லை.

ஜொஹன்னஸ்பர்க்கிலிருந்து ஐந்து மைல் தூரத்தில் ஒரு மலையுச்சியில் கட்டப்பட்டிருந்த ஸ்ரீ கால்லன்பாக்கிற்குச் சொந்தமான அழகான வீட்டில் கோகலே தங்கியிருந்தார். அங்கிருந்த இயற்கைக் காட்சிகளும் சூழ்நிலையும் கண்ணுக்கினியவையாகவும், சாந்தி தருவனவாகவும், சாதாரண வீடானாலும் கலையழகு கூடியதாகவும் இருக்கவே அந்த இடத்தைக் கோகலே மிகவும் விரும்பினர். கோகலேயைச் சந்திக்க வருவோரைப் பார்ப்பதற்காக நகரத்தில் ஒரு தனிக் காரியாலயம் வாடகைக்கு அமர்த்தப்பட்டது. அதில் கோகலேக்காக ஒரு தனி அறையும், வருபவர்களுடன் பேசுவதற்காக ஓர் அறையும், அவர்கள் காத்திருப்பதற்காக ஓர் அறையும் ஆக மூன்று அறைகள் இருந்தன. நகரத்தில் இருந்த சில முக்கியமானவர்களைக் காண்பதற்காக கோகலே அழைத்துச் செல்லப்பட்டார். கோகலே அங்கிருந்த ஐரோப்பியத் தலைவர்களில்

சிலரைச் சந்தித்துப் பேசி அவர்களுடைய கருத்துக்களை முற்றிலும் தெரிந்துகொள்ளுவதற்காக ஒரு தனிக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. இவற்றைத் தவிர கோகலேயைக் கௌரவிப்பதற்காக ஒரு பெரிய விருந்தும் நடந்தது. அதற்கு நூற்றைம்பது ஐரோப்பியர்கள் உட்பட நானூறு பேர் அழைக்கப்பட்டிருந்தனர். விருந்துச் செலவுகளைச் சமாளிப்பதற்காக, அழைக்கப்பட்டிருந்த இந்தியர்களுக்கு டிக்கட் ஒன்று ஒரு கினி (சுமார் ரூ. 15) வீதம் விற்கப்பட்டது. பரிமாறின உணவு முழுவதும் சைவமாகவும், மதுபானம் இல்லாமலும் இருந்தது. சமையல் முழுவதையும், தாமாகவே விரும்பி உழைக்க முன்வந்த தொண்டர்கள் கவனித்துக்கொண்டார்கள். அதைப்பற்றி இங்கே முழுவதும் விவரிப்பது கடினம். தென்னுப்பிரிக்காவில் ஹிந்துக்களும், முஸல்மான்களும் ஒன்ருகக் கலந்து சாப்பிடுவதற்கு எவ்விதக் கட்டுப்பாடுகளும் இல்லை. ஆனுல், சைவ உணவு உண்பவர்கள் மாத்திரம் மாமிசம் உண்பதில்லை. அங்கிருந்த இந்தியர்களில் சிலர் கிறிஸ்தவர்கள். மற்றவர்களுடன் நடந்துகொள்ளுவது போலவே அவர்களுடனும் நெருங்கிப் பழகினேன். அவர்கள் பெரும்பாலும் அங்கே குடியேறிய ஒப்பந்தத் தொழிலாளர்களின் சந்ததியினர். அவர்களில் பலர் ஹோட்டல்களில் பணிவிடை செய்து ஜீவனம் நடத்தினர். அவர்கள் உதவியால்தான் சுமார் பதினைந்து வகைப் பதார்த்தங்கள் கொண்ட ஒரு பெரிய விருந்திற்கு ஏற்பாடு செய்ய முடிந்தது. அநேக இந்தியர்களுடன் ஒரே மேஜையில் உணவு கொள்ள உட்கார்ந்ததும், மதுபானமே இல்லாத முழுச் சைவ உணவைச் சாப்பிட்டதும் தென்னுப்பிரிக்காவிலிருந்த ஐரோப்பியர்களுக்கு ஆச்சரியம் தரும் ஒரு புது அனுபவமே. இந்த மூன்று விஷயங்களும், அவர்களில் பலருக்குப் புதுமையாகவும், இரண்டு விஷயங்கள் எல்லோருக்குமே புதுமையாகவும் இருந்தன.

இந்தக் கூட்டத்தில் கோகலே மிக முக்கியமானதும் நீண்டதுமான தமது ஆப்பிரிக்கச் சொற்பொழிவை நிகழ்த்தினுர். இந்தப் பேச்சைத் தயாரிக்கும்போது எங்களை முழுப் பரிசோதனைக்கும் உள்ளாக்கினுர். உள்ளூர் மக்களுடைய கருத்துக்களை அலட்சியம் செய்யாமலிருப்பதும், அவர்களைத் தம்மால் முடிந்த அளவுக்குத் திருப்தி செய்ய முயற்சிப்பதுமே, அவர் தம் வாழ்நாள் முழுவதும் கையாண்டு வந்திருந்த கொள்கை என்ருர். ஆதலால், என் நோக்கின்படி அவர் என்ன சொல்ல

நான் விரும்புகிறேன் என்பதைக் கேட்டார். அதை நான் கடிதத்தில் எழுதித் தரவேண்டுமென்றும், அதில் ஒரு வார்த்தையையாகிலும் கருத்தையாகிலும் உபயோகித்துக் கொள்ளாதுபோனால் நான் தவருக நினைக்கக்கூடாதென்றும், மிகச் சுருக்கமாகவோ மிக விரிவாகவோ அது இருக்கலாகாது என்றும், ஆனல் எதைப் பற்றியும், சிறு விஷயத்தைக் கூட, விட்டுவிடக் கூடாதென்றும் கூறினர். கோகலே, என் நகலில் நான் உபயோகித்த சொற்களையோ கருத்துக்களையோ உபயோகித்துக் கொள்ளவில்லை என்று நான் உடனேயே கூறிவிடலாம். ஆங்கில மொழியில் வல்லுநரான கோகலே, என்னுடைய சொற் பிரயோகத்தைப் பயன்படுத்துவாரென்று நான் எதிர்பார்த்திருக்கவே முடியாது. கோகலே என் கருத்துக்களைக் கூட உபயோகித்தாரென்று நான் சொல்லமுடியாது. ஆனல், அவர் என் கருத்துக்குரிய முக்கியத்துவத்தை ஏற்றுக்கொண்டிருந்தபடியால், தம்முடைய பேச்சில் அதை எப்படியாவது சேர்த்திருப்பாரென்று நான் எண்ணிக் கொண்டேன். பிறர் ஒருவருடைய கருத்துக்கள் கலந்து இருந்தனவா இல்லையா என்று சொல்ல முடியாதபடி, கோகலே சிந்தித்துச் சொன்ன விஷயங்கள் அமைந்திருந்தன. கோகலேயின் எல்லாப் பேச்சுக்களையும் நான் கேட்டுக்கொண்டு இருந்தேன். ஆனல், அவற்றில் எதிலேனும் அவர் ஒரு கருத்தைச் சொல்லாமல் விட்டிருந்தால் நன்ருக இருந்திருக்கும் என்ரே, அல்லது ஓர் உரிச்சொல்லை நீக்கியிருக்கலாமென்ரே நான் நினைத்ததாக ஞாபகம் இல்லை. கோகலேயின் பேச்சுக்களில் இருந்த தெளிவும், துணிபும், சீர்நடையும், அவருக்கிருந்த சளையாத உழைப்பினலும் சத்தியத்தின் மேல் அவருக்கு இருந்த பற்றுதலினலும் தோன்றியவை எனலாம்.

ஜொஹன்னஸ்பர்க்கில், இந்தியர்கள் மட்டுமே கொண்ட மாபெருங் கூட்டத்தை நாங்கள் நடத்தவேண்டி இருந்தது. அத்தகைய கூட்டங்களில், தாய்மொழியில் அல்லது இந்திய தேசீய மொழியாகிய இந்துஸ்தானியில்தான் பேசவேண்டும் என்று நான் எப்போதுமே வற்புறுத்தியது நலமாய்ப் போயிற்று. அதனல் தென்னாப்பிரிக்காவில் இருந்த இந்தியர்களுக்கிடையே நான் ஒற்றுமை உணர்ச்சியையும், நெருங்கிய தொடர்புகளையும் ஏற்படுத்த முடிந்தது. ஆகவே, இந்தியர்கள் மத்தியில் கோகலே அவர்களும் இந்துஸ்தானியில் பேசவேண்டுமென்று நான் ஆசைப்பட்டேன். இந்த விஷயத்தைப் பற்றிக் கோகலேயின் கருத்துக்களை நான் அறிந்திருக்கிறேன். அரைகுறை ஹிந்தியில் அவர் பேச விரும்பமாட்டார். ஆகவே, அவர் ஆங்கிலத்தில்

அல்லது மராட்டி மொழியில்தான் பேசுவார். தென்னுப்பிரிக்காவில் மராட்டி பேசுவது இயற்கையாகத் தோன்ருது. அப்படிப் பேசினலும், சபையில் இருக்கும் வட இந்திய, குஜராத்தி நபர்களுக்காக இந்துஸ்தானியில் மொழிபெயர்த்துக்கூறி ஆக வேண்டும். அப்படியானல், அவர் ஆங்கிலத்தில் பேசுவதற்குத் தடை ஏன்? அதிர்ஷ்டவசமாக, கோகலே அவர்கள் மராட்டியில் பேச நிச்சயமாக ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு வாதமும் என்னிடம் இருந்தது. ஜொஹன்னஸ்பர்க்கில் பல கொங்கணி முஸல்மான்களும், சில மகாராஷ்டிர ஹிந்துக்களும் இருந்தனர். அவர்கள் அனைவரும், கோகலே தங்கள் தாய்மொழியில் பேசுவதைக் கேட்க ஆவலுடன் இருந்தனர். அவரை மராட்டி மொழியில் பேச வேண்டிக்கொள்ளும்படி என்னை ஏற்கனவே கேட்டுமிருந்தனர். கோகலே அவர்களிடம், அவர் மராட்டியில் பேசினல் இவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைவார்கள் என்றும், அவர் மராட்டியில் பேசுவதை நான் இந்துஸ்தானியில் மொழி பெயர்ப்பதாகவும் கூறினேன். இதைச் சொன்னதும் அவரால் சிரிப்பை அடக்க முடியவில்லை. சிரித்துக் கொண்டே, "உமக்குள்ள இந்துஸ்தானி பழக்கத்தை நான் நன்ருக அளந்து வைத்திருக்கிறேன். அதைக் குறித்து நான் உம்மை அதிகமாகப் பாராட்டுவதற்கு இல்லாதபோது, நீர் மராட்டி மொழியை இந்துஸ்தானியில் மொழிபெயர்ப்பதற்கு முன்வந்திருக்கிறீர். மராட்டி மொழியைப் பற்றி இவ்வளவு ஆழ்ந்த அறிவை எங்கிருந்து பெற்றீர் என்று நான் தெரிந்துகொள்ளலாமா?" என்று கேட்டார். நான் பதில் கூறினேன்: "இந்துஸ்தானியில் எனக்குள்ள அறிவேதான் மராட்டியிலும் உண்டு. மராட்டி மொழியில் என்னல் ஒரு வார்த்தைகூடப் பேச இயலாது. ஆனல், எனக்கு நன்ருக அறிமுகமாகியுள்ள ஒரு விஷயத்தைப்பற்றித் தாங்கள் மராட்டி மொழியில் பேசப்போகும் கருத்துக்களின் சாராம்சத்தைக் கிரகித்துக்கொள்ள முடியும் என்ற தைரியம் எனக்கு உண்டு. ஜனங்களிடம் எந்த வகையிலும் நான் உங்கள் வார்த்தைகளைத் தவருகப் பொருள்படுத்திக் காட்டமாட்டேன் என்பதை நீங்கள் பார்ப்பீர்கள். மராட்டி மொழியில் நன்ருகத் தேர்ச்சி பெற்றுள்ள வேறு சிலரும் இங்கே இருக்கிருர்கள். மொழி பெயர்ப்பதற்கு அவர்களை வைத்துக்கொள்ளலாம். ஆனல், அந்த ஏற்பாடு உங்களுக்குப் பிடிக்காது. ஆகையால் தயை செய்து என்னை மன்னித்துக்கொண்டு மராட்டியில் பேசுங்கள். கொங்கணி நண்பர்களைப் போலவே, நானும் உங்கள் மராட்டிப் பேச்சைக் கேட்க ஆவலாக இருக்கிறேன்."

"நீங்கள் நினைத்ததை எப்பொழுதுமே சாதித்துக்கொள்ளு வீர்கள்" என்ருர் கோகலே. "உங்கள் தயவில் இருப்பதால் எனக்கு வேறு வழி கிடையாது" -கோகலே இப்படிச் சொல்லிக் கொண்டே என் வேண்டுகோளுக்கு இசைந்தார். அந்த இடத் திலிருந்து ஜான்ஜிபார் வரையிலும் இதைப்போன்ற கூட்டங்களில் மராட்டியிலேயே பேசினுர். நான் அவர்களுக்கென்று தனியாக அமர்த்தப்பட்ட மொழிபெயர்ப்பாளனுக இருந்தேன். இலக்கண இலக்கிய அமைப்புடன் பரிபூரண ஆங்கிலத்தில் பேசுவதைவிட முடிந்தபோதெல்லாம் தாய்மொழியில் அல்லது இலக்கணப் பிழையுள்ள அரைகுறை இந்தியில் பேசுவது உசிதமானது என்ற கருத்திற்கு கோகலே அவர்களை ஒப்புக்கொள்ளும்படி செய்ய என்னுல் முடிந்ததோ, இல்லையோ, அது எனக்குத் தெரியாது. ஆனுல், இதுமட்டும் தெரியும். என்னைத் திருப்தி செய்யும் பொருட்டாவது அவர் தென்னுப்பிரிக்காவில் மராட் டியில் பேசினுர். சில சொற்பொழிவுகள் முடிந்ததும், அவருக்கும் அந்தப் புது முயற்சியின் விளைவுகள் திருப்தியைத் தந்தன என்பதை நான் காண முடிந்தது. கொள்கையைப் பாதிக்காத வரையில், தம்மைப் பின்பற்றுபவர்களின் விருப் பத்திற்கு இணங்குவதில் மதிப்புண்டு என்பதை கோகலே தென்னுப்பிரிக்காவில் பல சந்தர்ப்பங்களில் காட்டினுர்.

முப்பத்தேழாவது அத்தியாயம்

# கோகலேயின் சுற்றுப்பிரயாணம்

(முடிவு)

கோகலே ஜொஹன்னஸ்பர்க்குக்குப் பிறகு நேட்டாலைப் பார்த்துவிட்டுப் பிரிட்டோரியாவுக்குப் போனார். அங்கே 'டிரான்ஸ்வால் ஹோட்ட'லில் அவர் தங்க யூனியன் சர்க்கார் ஏற்பாடு செய்திருந்தார்கள். அங்கேதான் ஜெனரல் ஸ்மட்ஸ், ஜெனரல் போத்தா ஆகியோர் உட்பட மற்றச் சர்க்கார் மந்திரிகளை அவர் சந்திப்பதாக இருந்தது. ஒவ்வொரு நாளும் காலையில் அல்லது அவர் விரும்பினால் முந்திய நாள் மாலையில், குறிப்பிட்ட நாளுக்காக வகுத்திருந்த திட்டங்களின் விவரத்தை அவரிடம் கூறுவது என் வழக்கம். யூனியன் மந்திரிகளுடன் ஏற்பாடாகியிருந்த பேட்டி மிகவும் முக்கியமான விஷயம். பேட்டிக்கு நான் கோகலேயுடன் போகக்கூடாதென்ற முடிவுக்கு வந்திருந்தோம்; நான் வருவதாகச் சொல்லவுமில்லை. நான் கூட இருப்பது, கோகலேக்கும் மந்திரிகளுக்குமிடையே ஒரு தடையாக இருக்கும்; நானும் என்னைச் சேர்ந்த இந்தியர்களும் செய்த தவறுகள் என்று அவர்கள் நினைத்ததை, கோகலேயிடம் தாராளமாக அவர்கள் பேசுவதற்கு இடைஞ்சலாகவும் இருக்கும். மேலும் எதிர்காலக் கொள்கைகளைப் பற்றி அவர்கள் ஏதாவது சொல்ல விரும்பினால் அதையும் மனத்தைத் திறந்து பேச முடியாமலுமிருக்கும். ஆகவே, இந்தக் காரணங்களால் கோகலே தனியாகத்தான் போகவேண்டும். அது அவர்மேல் சுமத்திய பொறுப்பை அதிகரித்தது. கோகலே, விஷயங்களைக் கூறுவதில் தெரியாமல் ஏதாவது தவறு இழைத்துவிட்டால் என்ன செய்வது? அல்லது முன்கூட்டியே அவருடைய கவனத்திற்குக் கொண்டுவரப்படாத ஏதாவதொரு விஷயத்தைக் குறித்து மந்திரிகள் அவரிடம் முதல் முறையாகக் கேட்டு அவர் அதைப்பற்றி ஒன்றுமே கூறமுடியாமற் போய்விட்டால் என்ன செய்வது? அல்லது பொறுப்பான தலைவர்கள் அருகில் இல்லாத சமயத்தில், இந்தியர்கள் சார்பாக ஏதாவதொரு விரும்பப்படாத ஏற்பாட்டை ஒப்புக்கொள்ளும்படி அவரைச் செய்துவிட்டால் என்ன செய்வது? ஆனால், கோகலே இந்தக் கஷ்டங்களையெல்லாம் உடனே தீர்த்துவிட்டார்.

இந்தியர்கள் அன்றுவரை எந்த நிலைமையில் இருந்து வந்திருக்கிறார்கள் என்பதுபற்றி ஒரு குறிப்பு தயார் செய்யும்படியும், எவ்வளவு தூரம் போக இந்தியர்கள் தயாராக இருக்கிறார்கள் என்பதை எழுதித் தருமாறும் என்னை அவர் கேட்டார். பேட்டியின்போது நான் கொடுத்த குறிப்புகளுக்கு அப்பாற்பட்ட கேள்வி ஏதாவது எழுந்தால், அதைப் பற்றித் தமக்கு ஒன்றும் தெரியாது என்று கூறிவிடுவதாகவும் கூறினர். அதைப்பற்றி அவர் கவலைப்படவில்லை. நான் குறிப்புக்களைத் தயார் செய்யும் வேலையும், அவர் அதைப் படிப்பதுந்தான் பாக்கியாக இருந்தன. எனினும், நான்கு காலனிகளில், பதினெட்டு வருடமாக நிகழ்ந்துவந்த இந்திய சரித்திரத்தின் மாறுதல்களை பத்து, இருபது பக்கங்களுக்குக் குறைவாக எழுதுவது முடியாத காரியம். அதை கோகலே பார்ப்பதற்கும் நேரமில்லை. படித்த பின்பும் எங்களிடம் பல கேள்விகளைக் கேட்க அவர் விரும்புவார். ஆனல், கோகலேக்கு எவ்வளவு கூர்மையான ஞாபகசக்தி இருந்ததோ அவ்வளவு கடுமையான முயற்சியுடன் வேலை செய்யக்கூடிய அளவிலா ஆற்றலும் இருந்தது. அந்த இரவு முழுவதும் அவர், தாமும் விழித்திருந்து பிறரையும் விழிக்கவைத்து எல்லாக் குறிப்புக்களையும் நன்ருகத் தெரிந்து கொண்டார். தாம் சரியாக அனைத்தையும் புரிந்து கொண்டதை நிச்சயப்படுத்திக்கொள்ளுவதற்காக மீண்டும் ஒருமுறை இக்குறிப்புக்கள் முழுவதையும் பார்த்துக்கொண்டார். கடைசியில் திருப்திஅடைந்தார். அப்பால் எனக்கு ஒரு விதமான பயமும் ஏற்படவில்லை.

மந்திரிகளுடன் கோகலேயின் பேட்டி சுமார் இரண்டு மணி நேரம் நடந்தது. அவர் திரும்பியபோது, "நீங்கள் இந்தியாவிற்கு ஒரு வருடத்திற்குள் திரும்பிவிடவேண்டும். எல்லாம் முடிந்துவிட்டது. கறுப்புச்சட்டம் ரத்தாகிவிடும். குடியேற்றச் சட்டத்தில் இருந்த நிறத்தடையும் நீக்கப்படும். மூன்று பவுன் வரியும் அகற்றப்படும்" என்று கூறினர். "எனக்கு இதைப் பற்றிச் சந்தேகம் அதிகம். இந்த மந்திரிகளைப்பற்றி எனக்குத் தெரிந்த அளவு உங்களுக்குத் தெரியாது. எப்பொழுதும் எதிலும் நம்பிக்கை கொள்ளுபவனுகிய எனக்கு உங்களுடைய நம்பிக்கை மிகவும் பிடித்திருக்கிறது. ஆனல், அடிக்கடி ஏமாற்றம் அடைந்திருப்பதால் இவ்விஷயத்தில் உங்களைப்போல் எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனல், எனக்குப் பயமும் இல்லை. நீங்கள் மந்திரிகளிடமிருந்து இந்த உறுதியைப் பெற்று வந்ததே எனக்குப் போதும். அவசியம் ஏற்படும்போது போராடுவதும், எங்கள்



டர்பனில் லார்ட்ஸ் கிரவுண்டு என்ற இடத்தில் கோகலேக்கு வரவேற்பு நடந்தது. டர்பன் வரவேற்புக் கமிட்டி உறுப்பினர்களுடன் கோகலே, காந்திஜி, கால்லென்பாக் முதலியவர்கள் இருக்கின்றனர்.



1914 ஜூலையில் காந்திஜியும் கஸ்தூரிபாயும்.

போராட்டம் நேர்மையானது என்று காட்டுவதும் என் கடமை. உங்களிடம் அவர்கள் கொடுத்த வாக்குறுதி, எங்கள் கோரிக்கையில் உள்ள நியாயத்தை நிரூபிப்பதாகும். இதற்கு மேலும் போராட வேண்டியது அவசியமானல், எங்கள் உற்சாகமும் இரட்டிப்பாகும். ஆனல், இன்னும் ஒரு வருடத்திற்குள், மேலும் பல இந்தியர்கள் சிறை செல்வதற்கு முன்னல் இந்தியாவிற்கு நான் திரும்பமுடியும் என்று நினைக்கவில்லை'' என்று பதில் கூறினேன்.

கோகலே, ''நான் உங்களிடம் கூறியவை நடந்தே தீரும். ஜெனரல் போத்தா, சுறுப்புச் சட்டம் ரத்தாகும் என்றும், மூன்று பவுன் வரி நீக்கப்படும் என்றும் எனக்கு வாக்களித்திருக்கிருர். நீங்கள் பன்னிரண்டு மாதங்களுக்குள் இந்தியாவிற்குத் திரும்பவேண்டும். உங்கள் சாக்குப் போக்குகளை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன்'' என்ருர்.

நேட்டாலுக்கு விஜயம் செய்தபோது கோகலே, டர்பனிலும் மாரிட்ஸ்பர்க்கிலும், இன்னும் பல இடங்களிலும் பல ஐரோப்பியர்களைச் சந்தித்தார். கிம்பர்லியில் வயிரச் சுரங்கங்களைப் பார்வையிட்டார். அங்கும், டர்பனிலும் வரவேற்புக் குழுக்கள் அவருக்கு பொது விருந்துகளை ஏற்பாடு செய்திருந்தன. அவற்றிற்குப் பல ஐரோப்பியர்களும் வந்திருந்தனர். இந்திய ஐரோப்பிய உள்ளங்களை ஒருங்கே கவர்ந்த கோகலே, தென்னுப்பிரிக்காவை விட்டு *1912*-ஆம் வருடம் நவம்பர் மாதம் *17*-ஆம் தேதி புறப்பட்டார். அவருடைய விருப்பப்படி நானும் ஸ்ரீ கால்லன்பாக்கும் ஜான்ஜிபார் வரையில் அவருடன் போனேம். கப்பலில் அவருக்குத் தகுந்த உணவிற்கு ஏற்பாடு செய்திருந்தோம். இந்தியாவிற்குப் போகும் வழியில் அவருக்கு டெலகோவா விரிகுடா, இன்ஹம்பேன், ஜான்ஜிபார் முதலிய துறைமுகங்களில் அமோகமான வரவேற்புகள் நடந்தன.

கப்பலில் இந்தியாவைப்பற்றியும், தாய் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமையைப்பற்றியுமே பேசினேம். கோகலே வாயிலிருந்து வந்த ஒவ்வொரு வார்த்தையிலும் அவருடைய மேன்மையான உணர்ச்சியும், உண்மையும், நாட்டுப்பற்றும் ஒளிர்ந்தன. கப்பலில் அவர் கலந்துகொண்ட விளையாட்டுகளில்கூட, வெறும் சந்தோஷ விருப்பத்தைக் காட்டிலும் தேச உணர்ச்சியும், சிறப்புமே அவருடைய நோக்கமாக இருந்ததை நான் கண்டேன். சிறந்ததாக இருக்க வேண்டும் என்பதே அங்கும் அவர் நோக்கமாக இருந்தது.

கப்பலில் நாங்கள் மனமாரப் பேசி அளவளாவிக்கொள்ளப் போதிய அவகாசம் கிடைத்தது. அந்தப் பேச்சுக்களின் மூலமாகக் கோகலே, என்னை இந்தியாவின் சேவைக்காகத் தயார் செய்தார். இந்தியாவில் இருந்த தலைவர்கள் அனைவருடைய பண்புகளையும் ஆராய்ந்து எனக்கு எடுத்துக்காட்டினர். அவர் காட்டியது மிகவும் சரியாகவே இருந்தது. அந்தத் தலைவர்களுடைய குணங்களைப்பற்றிக் கோகலே கொண்டிருந்த மதிப்பிற்கும், அவர்களைப்பற்றிய என் சொந்த அனுபவத்திற்கும் சிறிதும் வேற்றுமையே தென்படவில்லை.

தென்னுப்பிரிக்காவில் கோகலேயின் சுற்றுப்பிரயாணத்தின் விளைவாக என் உள்ளத்திலிருந்த பல புனிதமான நினைவுகளை நான் இங்கே எழுதலாம். ஆனல், சத்தியாக்கிரகத்தைப் பற்றிய ஒரு சரித்திரத்துடன் அவற்றிற்குத் தொடர்பில்லாததால், எழுத விருப்பம் இருந்தும் நான் அடக்கிக்கொள்ளத்தான் வேண்டும். ஜான்ஜிபாரில் கோகலேயை விட்டுப் பிரிந்தது எனக்கும் ஸ்ரீ கால்லன்பாக்குக்கும் ஆருத்துயரத்தை அளித்தது. ஆனல், மனிதரிடையேயுள்ள மிக அந்நியோந்நிய பந்தமும் கடைசியில் முடிவுக்குத்தான் வரவேண்டும் என்ற உண்மையை உணர்ந்தவர்களாய் ஒருவாறு தேறினேம். அவருடைய தீர்க்கதரிசனம் பலிக்குமென்றும், நாங்கள் ஒரு வருடத்தில் இந்தியாவுக்குச் செல்லமுடியுமென்றும் நம்பினேம். ஆனல், நாங்கள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை.

எனினும், தென்னுப்பிரிக்காவுக்குக் கோகலேயின் விஜயம் எங்கள் தீர்மானத்தை மேலும் உறுதியாக்கியது. போராட்டம் மீண்டும் மும்முரமாகத் தொடங்கியபோது, அவர் சுற்றுப்பிரயாணத்தின் விளைவையும் முக்கியத்துவத்தையும் மிகவும் தெளிவாக உணரலானேம். கோகலே தென்னுப்பிரிக்கா வந்து யூனியன் மந்திரிகளைச் சந்திக்காமல் இருந்திருந்தால், மூன்று பவுன் வரியை நீக்கவேண்டுமென்பது எங்கள் போராட்டத்தில் ஓர் அம்சமாக வந்திராது.

கறுப்புச் சட்டத்துடன் சத்தியாக்கிரகப் போராட்டம் நின்றிருக்குமானல், மூன்று பவுன் வரி நீக்கத்திற்காக வேறொரு புதிய போராட்டத்தை துவங்குவது அவசியமாக இருந்திருக்கும். அது இந்தியர்களுக்கு எல்லையற்ற துன்பத்தைத் தந்திருக்கும். மீண்டும் ஒரு புதிய கஷ்டமான போராட்டத்துக்காக அவர்கள் தயாராக இருப்பார்களா என்பது சந்தேகமாகவே இருந்திருக்கும். சுதந்திர இந்தியர்கள் இந்த வரியை

நீக்க முயற்சி செய்வது அவசியமாக இருந்தது. அதற்காகச் சட்ட ரீதியாக எடுத்த முயற்சிகள் யாவும் பலன் இல்லாமல் போய் விட்டன. 1895-ஆம் வருடத்திலிருந்து அந்த வரி செலுத்தப்பட்டு வந்திருக்கிறது. தவருன விஷயம் ஒன்று படுமோசமானதாக இருந்தாலும், அது நீண்ட காலத்துக்குத் தொடர்ந்து வந்திருக்கு மானல், மக்கள் அதற்குப் பழகிப் போய் விடுகிருர்கள். பிறகு அதை எதிர்ப்பது அவர்கள் கடமை என்ற உணர்ச்சியை அவர் களிடம் தட்டி எழுப்புவதும், அது தவருனது என்று உலகத்துக்கு நிரூபித்துக் காட்டுவதும், மிகவும் கடினமாகப் போய் விடு கின்றன. கோகலேக்கு மந்திரிகள் தந்த வாக்குறுதிகள் மூலம், சத்தியாக்கிரகிகள் செல்லவேண்டிய வழி தெளிவாயிற்று. தங்கள் வார்த்தையின்படி சர்க்கார் வரி ரத்து செய்யவேண்டும். இல்லே யேல் வாக்குத் தவறுவது, போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதற்குப் போதிய காரணமாகும். இதுவேதான் நடந்தது. ஒரு வருடத்திற்குள் சர்க்கார் அந்த வரியை ரத்து செய்யாமல் இருந்ததுமட்டுமல்லாமல், அதை நீக்கவே முடியாதென்று பல வார்த்தைகளில் பிரகடனமும் செய்தார்கள்.

கோகலேயின் சுற்றுப்பிரயாணம், இந்த மூன்று பவுன் வரியை எதிர்ப்பதை எங்கள் சத்தியாக்கிரகத்தின் குறிக்கோளாகச் செய்ய உதவியதோடல்லாமல், தென்னுப்பிரிக்கப் பிரச்னேகள் விஷயத்தில் அவர் ஒரு பெரிய நிபுணர் என்பதை மற்றவர்கள் ஒப்புக்கொள்ளும்படியும் செய்தது. தென்னுப்பிரிக்காவில் இருந்த இந்தியர்களேப்பற்றி அவர் நேர்முகமாகத் திரட்டிக்கொண்ட அறிவுக்கு நிறைய மதிப்பிருந்தது. இப்போது தாய்நாடு என்ன நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதை அவர் நன்கு உணர்ந்து, இந்தியாவிலும் நன்ருக எடுத்துக்கூற முடிந்தது. போராட்டத்தை மீண்டும் ஆரம்பித்தபோது சத்தியாக்கிரக நிதிக்கு இந்தியா தாராளமாகப் பொருள் தந்து உதவியது. லார்டு ஹார்டிஞ்சும் தமது 'ஆழ்ந்த, தீவிர' அனுதாபத்தின் மூலமாகச் சத்தியாக் கிரகிகளே உற்சாகப்படுத்தினர் (டிசம்பர் 1913). ஸ்ரீமான்கள் ஆண்ட்ரூஸூம் பியர்ஸனும் இந்தியாவிலிருந்து தென்னுப்பிரிக்கா வுக்கு வந்தனர். கோகலே தென்னுப்பிரிக்காவுக்கு வந்து, இத் தகைய முயற்சிகள் எடுக்கவில்லே என்ருல், இவையெல்லாம் நடந்திரா.

மந்திரிகள் வாக்கு மீறியதையும், அதன் விளேவுகளேயும் அடுத்த அத்தியாயத்தில் காணலாம்.

## முப்பத்தெட்டாவது அத்தியாயம்

# வாக்கு மீறியது

சத்தியாக்கிரகப் போரை நடத்தும்போது இந்தியர்கள், தம் கொள்கைகளில் இடம் பெருத வழிகளை மேற்கொள்ளாதபடி மிகவும் கவனமாக இருந்தார்கள். சர்க்காரின் மீது நியாயம் இல்லாமல் எந்த அனுகூலத்தையும் பயன்படுத்திக் கொள்ளக் கூடாதென்பதையும் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்திருந்தார் கள். உதாரணமாக, கறுப்புச் சட்டம் டிரான்ஸ்வாலிலுள்ள இந்தி யர்களை மட்டுமே பாதித்தபடியால் போராட்டத்திற்கு டிரான்ஸ் வாலிலுள்ள இந்தியர்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டார்கள். நேட்டால், கேப் காலனி ஆகிய இடங்களிலிருந்து சத்தியாக்கிரகி களைச் சேர்க்க எவ்வித முயற்சியும் எடுக்காமல் இருந்ததுடன், டிரான்ஸ்வாலுக்கு வெளியிலிருந்து போராட்டத்தில் சேர்த்துக் கொள்ளும்படி வந்த விண்ணப்பங்களையும் மரியாதையாக மறுத்து விட்டார்கள். போராட்டம், பிரஸ்தாபச் சட்டம் ரத்தா வதற்கான ஒரு வரம்பிற்குள் கட்டுப்பட்டிருந்தது. இந்தக் கட்டுப் பாட்டை ஐரோப்பியர்களோ, இந்தியர்களோ உணர்ந்துகொள்ள வில்லை. ஆரம்ப நிலைகளில் இந்தியர்கள், கறுப்புச் சட்டத்திற்கு அப்பாற்பட்ட குறைகளையும் போராட்டத்தில் சேர்க்கவேண்டு மென்று அடிக்கடி கேட்டுக்கொண்டு வந்தார்கள். அப்படிப் பட்ட செயல் சத்தியத்தை மீறுவதாகுமென்றும், சத்தியம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டுள்ள ஓர் இயக்கத்தில் இப்படி நினைப்பதுகூடத் தவறு என்றும் பொறுமையாக அவர் களுக்கு நான் விளக்கி வந்தேன். ஒரு தூய்மையான போராட் டத்தில் ஈடுபட்டிருப்பவர்கள், ஆரம்பத்தில் ஏற்படுத்தியிருந்த குறிக்கோளிலிருந்து, போராட்டத்தின்போது தங்களுக்குப் பலம் அதிகரித்திருந்தாலும் மீறிப் போகக்கூடாது. அதேபோல் தங்கள் சக்தி குன்றிப் போவதாக இருந்தாலும் மேற்கொண்ட குறிக் கோளைக் கைவிடவுங்கூடாது. இந்த இருதரப்பட்ட கொள்கை தென்னாப்பிரிக்காவில் முழுவதும் கடைப்பிடிக்கப்பட்டது. ஏற்கனவே நாம் பார்த்தபடி, போராட்டம் துவங்கிய போது குறிக்கோளை நிர்ணயம் செய்ய ஏதுவாயிருந்த சமூகத்தின் சக்தி, எதிர்பார்த்த அளவிற்கு இல்லை.

எனினும், எஞ்சியிருந்த சில சத்தியாக்கிரகிகள் மட்டும் கடைசி வரையிலும் உறுதியுடன் அசையாமல் இருந்தார்கள். அப்படித் தனியாக நின்று துன்பங்களை சமாளித்துப் போராடுவது சுலபமாக இருக்கலாம். ஆனால், அதிகமான பலம் பெற்ற பிறகு தங்கள் நோக்கத்தை அதிகரித்துவிடாமல் இருப்பது என்பது அதைவிடக் கடினமானது. இதற்குத் தன்னடக்கத்தை முன்னைவிட அதிகமாகக் கையாள வேண்டும். இதைப்போன்ற மயக்குகள் தென்னாப்பிரிக்காவில் எங்களை அடிக்கடி ஆட்கொள்ளப் பார்த்தன. ஆனால், ஒரு தடவைகூட அவற்றிற்கு நாங்கள் பணிந்துவிடவில்லையென்று நான் உறுதியாகச் சொல்லமுடியும். ஆகையால், நான் பல தடவைகளில், 'ஒரு சத்தியாக்கிரகிக்கு ஒரே ஒரு நோக்கந்தான் உண்டு. அவன் அதிலிருந்து பின்வாங்கவோ, முன் செல்லவோ அல்லது அதைப் பெருக்கவோ குறைக்கவோ முடியாது' என்று கூறியிருக்கிறேன். ஒரு மனிதன் தனக்கென அமைத்துக்கொள்ளும் தரங்களைக் கொண்டே உலகமும் அவனை மதிக்கிறது. சத்தியாக்கிரகிகள் இந்தச் சீரிய கொள்கைகளைப் பின்பற்றுவதைச் சர்க்கார் கண்டபொழுது, தங்களுக்கு எவ்விதமான கொள்கையும் கட்டுப்பாடும் இல்லாமல் இருந்தபோதிலும், சத்தியாக்கிரகிகள் தம் கொள்கைகளை மீறியதாகக் குற்றம் சாட்டியபோதிலும், சத்தியாக்கிரகிகளின் நடத்தைகளை அந்தக் கொள்கைகளைக் கொண்டே அளக்க ஆரம்பித்தார்கள். கறுப்புச் சட்டத்திற்குப் பிறகு இந்தியருக்கு விரோதமாகப் புதிய சட்டம் ஏதாவது ஏற்படுத்தப்பட்டால், அதையும் சத்தியாக்கிரகத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பதை ஒரு குழந்தைகூட அறிய இயலும். ஆயினும், இந்தியக் குடியேற்றத்திற்குப் பாதகமாகப் புதிய தடைகள் விதிக்கப்பட்டு, போராட்டத்தை விரிவாக்குவது அவசியமென ஏற்பட்டபோது சர்க்கார், நாங்கள் புது தகராறுகளை எழுப்புவதாகக் கொஞ்சமும் காரணமில்லாமல் எங்கள் மேல் குற்றம் சாட்டினர். இந்தியாவிலிருந்து புதிதாக வருபவர்களுக்குப் புதுக் கட்டுப்பாடுகளை விதித்தால் அவர்களையும் போராட்டத்தில் சேர்த்துக்கொள்ள எங்களுக்கு உரிமை வேண்டும். ஆகவே, ஸோராப்ஜியும் மற்றவர்களும் டிரான்ஸ்வாலில் புகுந்ததை ஏற்கனவே பார்த்தோம். சர்க்கார் இதைச் சகிக்கவில்லை. ஆனால், எங்கள் நடவடிக்கையின் நியாயத்தைப் பற்றிப் பட்சபாதமற்றவர்களுக்கு எடுத்துக் காட்டுவதில் எனக்கு எவ்விதக் கஷ்டமும் உண்டாகவில்லை. கோகலே போன பிறகு, அப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பம் நேர்ந்தது.

மூன்று பவுன் வரி ஒரு வருடத்தில் நீக்கப்படும் என்றும், அதற்குத் தேவையான சட்ட நடவடிக்கைகளை அடுத்தபடியாக யூனியன் சட்டசபை கூடும்போது எடுத்துக்கொள்ளுவார்கள் என்றும் கோகலே நினைத்திருந்தார். அதற்கு மாருக ஜெனரல் ஸ்மட்ஸ், சட்டசபையில் பேசுகையில், நேட்டாலிலிருந்த ஐரோப்பியர்கள் அந்த வரி ரத்துக்கு ஆட்சேபணை செய்வதாகவும், அதனுல் யூனியன் சர்க்கார் அதன் நீக்கத்திற்காகச் சட்டத்தைக்கொண்டு வர முடியாது என்றும் கூறினர். ஆனல், அது உண்மையன்று. நான்கு காலனிகளிலிருந்தும் வந்த பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு சபையில், நேட்டாலிலிருந்து வந்த அங்கத்தினர்கள் மட்டும் ஒன்றும் செய்துவிடமுடியாது, மேலும் ஜெனரல் ஸ்மட்ஸ், அந்த மசோதாவை மந்திரிசபையின் சார்பாகச் சட்டசபையில் சமர்ப்பித்து அதை அதன் தலைவிதிக்கு விட்டிருக்க வேண்டும். அவர் அப்படி ஒன்றும் செய்யாமல், வெறுக்கத்தக்க இச்செய்கையையும் 'போருக்கு' ஒரு காரணமாக நாங்கள் கொள்ளுவதற்கு வாய்ப்பும் அளித்தார். நாங்கள் அப்படிச் செய்வதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, போராட்டத்தின்போது சர்க்கார் ஒரு வாக்குறுதி தந்து அதை மீறியும் விட்டனர். இதனுல் இயல்பாகவே அந்த வாக்கு மீறுதலையும் போராட்டத்தின் காரணங்களில் ஒன்ருகச் சேர்த்துக்கொள்ள வேண்டியதுதான். மற்ருென்று, கோகலேயைப் போன்ற ஓர் இந்தியப் பிரதிநிதிக்குத் தந்த வாக்குறுதியை மீறுவது, அவருக்கு மட்டுமல்லாமல், இந்தியா முழுவதற்குமே இழைத்த அவமானமாகும். ஆகவே, அதைச் சும்மா விட முடியாது. முதலில் சொன்ன காரணம் மட்டுமே இருந்திருந்து, சத்தியாக்கிரகிகள் போராட்டத்தை நீடிப்பதற்குப் போதிய சக்தி தங்களிடம் இல்லை என்று கருதி, மூன்று பவுன் வரியை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்யாமலிருந்தால், அவர்களை மன்னித்துவிடலாம். ஆனல், தாய்நாட்டிற்கு இழைத்த அவமானத்தைச் சகித்துக்கொண்டு இருக்கவே முடியாது. ஆகையால், மூன்று பவுன் வரியையும் தங்கள் திட்டத்தில் சேர்த்துக்கொள்ளுவது சத்தியாக்கிரகிகளின் கடமை யென்று நினைத்தோம். அந்த வரியையும் திட்டத்தில் சேர்த்தபொழுது, ஒப்பந்தக் குடிகளான இந்தியர்களுக்கும் போராட்டத்தில் கலந்துகொள்ளும் வாய்ப்புக் கிட்டியது. இதுவரையிலும் அவர்கள் இந்தப் போராட்டத்தில் இடம் பெறவில்லை என்பதை வாசகர்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். எங்கள் கொள்கையின் இந்தப் புது மாற்றம்,

ஒருபுறம் எங்கள் பொறுப்பின் சுமையை அதிகரித்தது. ஆனால், மற்றொரு புறம், எங்கள் 'படை'க்கு ஆட்களைத் திரட்டப் புதிய துறை ஒன்றையும் திறந்துவிட்டது.

குடியேறிய கூலிகள் மத்தியில் இதுவரையில் சத்தியாக்கிரகம் என்பதுபற்றிய பேச்சே கிடையாது. அதில் பங்கெடுத்துக்கொள்ள அவர்களுக்குக் கிடைத்த போதனையோ அதைவிடக் குறைவானது. எழுதப் படிக்கத் தெரியாத அவர்கள், 'இந்தியன் ஒப்பினியன்' அல்லது மற்றச் செய்தித்தாள்களை வாசிக்க முடியவில்லை. அப்படியிருந்தும், அந்த எளிய மக்கள் போராட்டத்தை நன்கு கவனித்து, அதன் தத்துவத்தை உணர்ந்து வந்ததையும், ஒரு சிலர் அதில் தாங்கள் சேரமுடியாமல் போனதற்கு வருந்தியதையும் கண்டேன். ஆனால், யூனியன் மந்திரிகள் தாங்கள் தந்த வாக்கைத் தவறியதால், மூன்று பவுன் வரி நீக்கத்தையும் நாங்கள் திட்டத்தில் சேர்த்துக் கொண்டபொழுது, அவர்களில் யாரெல்லாம் போராட்டத்தில் கலந்துகொள்ளுவார்கள் என்பதும் எனக்குத் தெரியாது.

கோகலே அவர்களுக்கு இந்த வாக்குறுதி மீறுதலைப்பற்றி எழுதினேன். அதைப்பற்றி அவர் மிகவும் வருந்தினார். அவர் அதைக் குறித்துக் கவலைப்படக் கூடாதென்றும், நாங்கள் சாகும்வரை போராடுவது நிச்சயம் என்றும், டிரான்ஸ்வால் சர்க்காரின் பிடியிலிருந்து வரி நீக்கத்தை எப்படியாவது வாங்குவோம் என்றும் தெரிவித்தேன். எனினும், நான் ஒரு வருடத்தில் இந்தியாவுக்குத் திரும்ப வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிட வேண்டியதாயிற்று. நான் எப்பொழுது திரும்பமுடியும் என்றும் சொல்ல முடியாமல் இருந்தது. கோகலே கணக்கு விவரங்களைக் கூர்ந்து கவனிப்பவர். எங்களுடைய சமாதானப் படைத் தொகுதியில், அதிகபட்சம் குறைந்த பட்சம் உள்ள எண்ணிக்கையையும், போராடுபவர்களின் பெயர்களையும் கொடுக்கும்படிக் கேட்டிருந்தார். அதிகபட்சமாக அறுபத்தைந்து அல்லது அறுபத்தாறு பெயர்களையும், பதினாறு பெயர்களைக் குறைந்த பட்சமாகவும் அனுப்பியதாக எனக்கு ஞாபகம். அதே சமயத்தில் இந்தச் சிறு எண்ணிக்கையுள்ளவர்களுக்கு எந்தவிதமான உதவியையும் இந்தியாவிலிருந்து எதிர்பார்க்கவில்லையென்றும் கோகலேக்கு அறிவித்தேன். அவருக்கு ஒரு பயமும் வேண்டாமென்றும், தம்முடைய

உடல்நலத்தைக் குறைத்துக்கொண்டு இச்சிறு தொகுதியி னருக்காக எங்களுக்குப் பணம் திரட்டி அனுப்ப வேண்டிய அவசியமில்லையென்றும் நான் கேட்டுக்கொண்டேன். கோகலே தென்னுப்பிரிக்காவிலிருந்து பம்பாய்க்குத் திரும்பியதும், அவர் பலவீனமாக நடந்துகொண்டு விட்டதாக அவர்மீது குற்றச் சாட்டுகள் பிறந்ததாக செய்தித்தாள்களின் மூலமாகவும் மற்றவர் மூலமாகவும் நான் அறிந்தேன். ஆகவே, அவர் எங்களுக்காக நிதி திரட்ட முயற்சி செய்யக்கூடாது என்று நான் விரும்பினேன். ஆனல், அவர் தந்த உறுதியான பதில் இதுவே : "தென்னுப் பிரிக்காவில் நீங்கள் உங்கள் கடமைகளை உணருவது மாதிரி, இந்தியாவில் இருக்கிற எங்களுக்கும் எங்கள் கடமையைப் பற்றி ஓரளவுக்குத் தெரியும். நாங்கள் செய்வதில் எது சரி, எது தவறு என்று எங்களுக்கு எடுத்துரைக்க உங்களை விடமாட்டோம். தென்னுப்பிரிக்காவின் நிலைமை எப்படி இருக்கிறது என்பதை மாத்திரமே நான் அறிந்துகொள்ள விரும்பினேன். நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி உங்கள் யோசனை தேவை யில்லை." கோகலேயின் அர்த்தத்தை நான் புரிந்துகொண்டு அதற்குப் பிறகு அந்த விஷயத்தைப்பற்றி எதுவும் சொல்லவோ எழுதவோ இல்லை. அதே கடிதத்தின் மூலமாக அவர் எனக்கு ஆறுதலையும் எச்சரிக்கையையும் அளித்திருந்தார். வாக்குத் தவறியதால் மூண்ட இந்தப் போராட்டம் நீடிக்கப்படுமா என்று தாம் அஞ்சுவதாகவும், ஒரு சிலர் எவ்வளவு காலத்திற்கு யூனியன் சர்க்காரின் முரட்டுத்தனமான மிருக சக்தியை எதிர்த்துப் போராட முடியுமென்று தாம் ஐயுறுவதாகவும் எழுதியிருந்தார். தென்னுப்பிரிக்காவில் நாங்கள் ஆயத்த வேலைகளில் முனைந் தோம். வரப்போகிற போராட்டத்தில் நிம்மதியாக இருந்துவிடுவ தென்பதே முடியாது. நீண்ட காலம் சிறையில் வைக்கப்படு வோம் என்பதை உணர்ந்தோம். டால்ஸ்டாய் பண்ணையை மூடி விடுவதென்று தீர்மானமாயிற்று. குடும்பத்திற்குச் சம்பாதித்துப் போடவேண்டியவர்களாக இருந்தவர்கள் விடுதலை பெற்றதும், சில குடும்பங்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பின. மற்றவர்களில் பெரும்பாலோர் போனிக்ஸைச் சேர்ந்தவர்கள். ஆகவே, சத்தி யாக்கிரகிகளின் நடவடிக்கைகளுக்கு அதையே எதிர்காலத்துக் களமாகத் தேர்ந்தெடுத்தோம். போனிக்ஸைத் தேர்ந்தெடுத்த தற்கு மற்றொரு காரணம் யாதெனில், ஒப்பந்தக் கூலிகளில் பலர் மூன்று பவுன் வரியை எதிர்த்துப் போராட்டத்தில் கலந்து கொண்டால் நேட்டாலில் ஓர் இடத்திலிருந்து அவர்களைச் சந்திப் பதே செளகரியமாகும்.

போராட்டத்தை மீண்டும் தொடங்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தபோது, ஒரு புதிய தொல்லையும் உண்டாயிற்று. பெண்களும் போராட்டத்தில் கலந்துகொண்டு தங்கள் பங்குச் சேவையைச் செய்யும் வாய்ப்பை அளித்தது அது. ஏற்கனவே சில வீரப் பெண்மணிகள் போராட்டத்தில் கலந்துகொள்ள முன் வந்திருக்கின்றனர். அனுமதிச் சீட்டு இல்லாமல் பொருள்களை விற்பனை செய்ததற்காகச் சத்தியாக்கிரகிகள் சிறை சென்ற போது அவர்களுடைய மனைவிமார், தாங்களும் பின் தொடரும் விருப்பத்தைத் தெரிவித்தனர். ஆனால், ஓர் அந்நிய நாட்டில் பெண்களைச் சிறைக்கு அனுப்புவது சரியென்று எங்களுக்குத் தோன்றவில்லை. போர்முனைக்கு அவர்களை அனுப்பப் போதிய காரணமும் இல்லை. அப்படி அவர்களைப் போர்முனையில் நிறுத்தி வைக்க எனக்கும் போதிய தைரியம் உண்டாகவில்லை. மற்றொரு வாதம் என்னவெனில், ஆண்களைமட்டுமே பாதித்த ஒரு சட்ட மறுப்பிற்காக நம் பெண்களைத் தியாகம் செய்யவைப்பது ஆண் மைக்கே இழிவு தருவதாகும் என்பதாகும். ஆனால், பெண் களுக்கு அவமானம் இழைக்கும் ஒரு தனிச் சம்பவம் இப்பொழுது நிகழ்ந்தது. ஆகவே, பெண்கள் தியாகம் செய்வதும் சரியென ஐயமற எங்கள் மனத்தில் பட்டது.

## முப்பத்தொன்பதாவது அத்தியாயம்

# பதிவாகாத மணம் சட்டப்படி மணமல்ல

கடவுள் ஒருவர் கண்ணுக்கும் எட்டாதவாறு இருந்து, இந்தியர்களுடைய வெற்றிக்காகத் துணைப் பொருள்களைத் தயாரித்துக்கொண்டிருந்தார். தென்னாப்பிரிக்காவில் ஐரோப்பியருடைய அநியாயங்களை இன்னும் அதிகத் தெளிவாகக் காட்டுவதற்கு, யாருமே எதிர்பார்த்திராத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. மணமான ஆண்கள் பலர் இந்தியாவிலிருந்து தென்னாப்பிரிக்காவுக்கு வந்திருந்தனர். ஒரு சில இந்தியர்கள்மட்டும் தென்னாப்பிரிக்காவிலேயே மணம் செய்துகொண்டனர். சாதாரண மணங்களைப் பதிவு செய்துகொள்ள இந்தியாவில் சட்டம் கிடையாது. அவற்றிற்குரிய சம்பிரதாயமான சடங்குகளே அவற்றைச் சட்டக்கிரமமாக்கிவிடும். அந்தச் சம்பிரதாயம் தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியருக்கும் செல்லுபடியாக வேண்டியதே. கடந்த நாற்பது வருடங்களாகத் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் குடியேறியிருந்தும், இந்தியாவிலுள்ள பல மதச் சடங்குகளின்படி நடந்தேறிய மணங்கள் சட்டப்படி செல்லுபடியானவை இல்லை என்ற பிரச்னை ஒருவருக்கும் எழுந்ததில்லை. ஆனால், இந்தச் சமயத்தில் கேப் சுப்ரீம் கோர்ட்டின் நீதிபதியான ஜஸ்டிஸ் சீயர்லே, *1913*-ஆம் ஆண்டு மார்ச்சு 14-ஆம் தேதி அளித்த தீர்ப்பில், தென்னாப்பிரிக்காவில் கிறிஸ்தவ சடங்குப்படியும், கலியாண ரிஜிஸ்தர் பதிவுப்படியும் நடக்காத மணங்களெல்லாம் சட்டத்திற்குப் புறம்பானவை என்று கண்டிருந்தது. இந்தக் கடுமையான தீர்ப்பு, தென்னாப்பிரிக்காவில் ஹிந்து, முஸல்மான், ஜொராஸ்டிரியன் சம்பிரதாயத்தில் நடந்தேறிய மணங்கள் அனைத்தையும் ஒரேயடியாக ரத்து செய்துவிட்டது. இந்தத் தீர்ப்பின்படி தென்னாப்பிரிக்காவில் மணமாகியிருந்த பல இந்தியப் பெண்கள், மனைவிகள் என்ற நிலையிலிருந்து வைப்பாட்டிகள் என்ற நிலைக்குத் தாழ்ந்தவர்களாயினர். பெற்றோரின் சொத்தை குழந்தைகள் அடைவதான உரிமைகளையும் இழக்கவேண்டியதாயிற்று. இது ஆண்களுக்கும் சரி, பெண்களுக்கும் சரி, பொறுத்துக் கொண்டிருக்க முடியாத ஒரு நிலைமை. இதனால் தென்னாப்பிரிக்காவிலிருந்த இந்தியர்களுக்கிடையே பெரும் கிளர்ச்சி மூண்டது.

என் வழக்கப்படி, நான் சர்க்காருக்கு எழுதினேன். அவர்கள் சீயர்லேயின் தீர்ப்பை ஒப்புக்கொண்டார்களா என்றும், அந்த நீதிபதி செய்த வியாக்யானம் சரிதானா என்றும், அப்படியாயின், இந்திய மதச் சடங்குகள்படி நடத்தப்பட்டு, இந்தியாவில் சட்ட பூர்வமாக ஏற்கப்பட்டிருந்த மணங்களும் செல்லக்கூடியவை என்றவாறு சட்டத்தை சர்க்கார் திருத்துவார்களா என்றும் கேட்டு எழுதினேன். எங்கள் வார்த்தைகளுக்குச் செவி கொடுக்கச் சர்க்காருக்கு மனமில்லாதபடியால் எங்கள் வேண்டுகோளை நிறைவேற்ற முன் வரவில்லை.

சீயர்லேயின் தீர்ப்புக்கு எதிராக கோர்ட்டில் அப்பீல் விண்ணப்பம் செய்யவேண்டுமா என்பதை யோசிக்கச் சத்தியாக்கிரகச் சங்கம் கூடியது. இந்த மாதிரி விஷயத்தில் உயர்நீதி மன்றத்தில் அப்பீல் போடுவதற்கில்லை என்ற முடிவிற்கு வந்தனர். அப்படி அப்பீல் போடுவதாயின் அது சர்க்காரால் போடப்பட வேண்டும் அல்லது, இந்தியரே மனுப் போடவேண்டும் என்று சர்க்கார் விரும்பினால், தாங்கள் இந்தியர் தரப்பிலிருப்பதாகத் தங்கள் அட்டர்னி ஜெனரல் மூலமாகப் பகிரங்கமாகத் தெரிவித்தால்தான் முடியும். இந்த இரண்டு நிபந்தனைகளையும் சர்க்கார் திருப்தி செய்யமுடியாத நிலைமையில் மனுப்போடுவது, சீயர்லேயின் தீர்ப்பை, அதாவது மணங்கள் சட்டபூர்வமாகச் செல்லுபடியாகாதென்பதை, ஒரு வகையில் இந்தியர்களை ஒப்புக்கொள்ளச் செய்வது போலாக்குகிறது. மனுப் போட்டாலும், அது நிராகரிக்கப்படுமானாலும், சத்தியாக்கிரகம் எப்படியும் செய்தாக வேண்டும். ஆகவே, இந்நிலையில் சொல்லவொண்ணாத இந்த அவமானத்திற்கெதிராக அப்பீல் போடுவதும் உசிதமில்லையென்றுதான் தோன்றியது.

நல்ல நாளுக்கோ, நேரத்திற்கோ காத்துக்கொண்டிருக்க முடியாதபடி நெருக்கடி வந்தது. நமது பெண்ணுலகத்திற்கு இழைத்த இந்த அவமானத்தின் முன்னால் பொறுமையுடன் இருக்கவும் முடியவில்லை. போராடுபவர்களின் தொகையையும் பொருட்படுத்தாமல், சத்தியாக்கிரகத்தைத் தீவிரமாக நடத்துவது என்று தீர்மானம் செய்தோம். போராட்டத்தில் பெண்கள் சேர்வதைத் தடுப்பது போய், இப்பொழுது அவர்களை ஆண்களுடன் சேர்த்து ஒன்றாகப் போர் செய்ய அழைத்தோம். முதலாவது, டால்ஸ்டாய் பண்ணையில் வசித்துவந்த சகோதரிகளைக் கூப்பிட்டோம். அவர்கள் மிகுந்த முகமலர்ச்சியுடன் முன் வந்தார்கள். போராட்டத்தில் கலந்துகொள்ளுவதில் இருக்கக்

கூடிய அபாயங்களை நான் அவர்களுக்கு எடுத்துரைத்தேன். உணவு, உடை, நடமாடுவது முதலிய விஷயங்களிலும் அவர்கள் கட்டுப்பாடுகளைச் சகிக்கவேண்டி வருமென்று கூறினேன். சிறையில் அவர்கள் கடுமையாக உழைக்கவேண்டியதாயிருக்கும்; துணி துவைக்க வேண்டியதாய் இருக்கும்; சில வேளைகளில் சிறை அதிகாரிகளிடம் அவமானப்பட வேண்டியதாயும் இருக்கும் என்றும் எச்சரிக்கை செய்தேன். ஆனுல், அந்தச் சகோதரிகள் எதற்கும் பயப்படாதவர்களாய்த் தைரியத்துடன் இருந்தனர். அவர்களில் ஒருவர் கர்ப்பமாய் இருந்தார். ஆறு பேர் கைகளில் இளங் குழந்தைகள் வைத்திருந்தனர். ஆனுல், அனைவரும் போராட்டத்தில் சேர ஆவலுடன் இருந்தனர். அவர்களுக்குக் குறுக்கே நிற்க என்னுல் முடியவில்லை. இந்தச் சகோதரிகளில் ஒருவரைத் தவிர மற்றவர்கள் யாவரும் தமிழர்கள். அவர்கள் பெயர்களாவன: (1) ஸ்ரீமதி. தம்பி நாயுடு (2) ஸ்ரீமதி. என். பிள்ளை (3) ஸ்ரீமதி. முருகேசப் பிள்ளை (4) ஸ்ரீமதி. எ. பெருமாள் நாயுடு (5) ஸ்ரீமதி. கே. நாயுடு (6) ஸ்ரீமதி. கே. சின்னப் பிள்ளை (7) ஸ்ரீமதி. என். எஸ். பிள்ளை (8) ஸ்ரீமதி. ஆர். அமுதலிங்கம் (9) ஸ்ரீமதி. பவானிதயாள் (10) குமாரி மீனுட்சி பிள்ளை (11) குமாரி வைக்கம் முருகேசப் பிள்ளை.

குற்றம் செய்துவிட்டு ஒருவர் சிறைக்குப் புகுவது எளிது. ஆனுல், களங்கமற்றவர்களாக இருந்தும் சிறைக்குச் செல்வது கடினம். குற்றவாளி தப்பித்து ஓட முயற்சி செய்வதால் போலீஸ் காரன் அவனைப் பின்தொடர்ந்து ஓடிப் பிடித்துக் கைது செய் கிறுன். ஆனுல், தாமாகவே சிறையை நாடிச் செல்லும் சத்தியாக் கிரகிகளை, தவிர்க்க முடியாது என்ற நிலைமை ஏற்படும்போது தான் கைது செய்கின்றனர். இந்தச் சகோதரிகளின் முதல் முயற்சிகள் வெற்றி பெறவில்லை. அவர்கள் வெரீனிகிங்கு வழியாக டிரான்ஸ்வாலில் அனுமதியின்றிப் புகுந்தனர். ஆனுல், கைது செய்யப்படவில்லை. அனுமதிச் சீட்டு இல்லாமல் தெருக்களில் விற்பனை செய்ய ஆரம்பித்தனர். அப்போதும் போலீஸார் அவர் களைப் பொருட்படுத்தவில்லை. ஆகவே, தாம் கைது ஆவது எப்படி என்ற பிரச்னை பெண்களுக்குள் மூண்டது. சிறைக்குச் செல்லத் தயாராக உள்ள ஆண்கள் பலர் இல்லை. அப்படித் தயாராக இருந்த ஒரு சிலருக்கும் அவர்கள் விருப்பப்படி நடக்கவில்லை.

கடைசியாகச் செய்வதற்காக வைத்திருந்த மற்றொரு நடவடிக் கையை இப்பொழுது எடுத்துக்கொள்ளுவதென்று தீர்மானித்

தோம். அது, அந்த நிலைமையில் நாங்கள் எதிர்பார்த்த அளவுக்கு மேலேயே பலன் அளித்தது. போனிக்ஸில் இருந்த அனைவரையும், நெருக்கடி மிகும் நிலைமையில் தியாகம் செய்வது என்று நான் நினைத்திருந்தேன். சத்தியமாகிய கடவுளுக்கு அதுவே நான் அளிக்கும் கடைசி காணிக்கை. போனிக்ஸில் குடியேறியிருந்தவர்கள் பெரும்பாலும் என்னுடைய உறவினரும் உடன் சகாக்களுமாக இருந்தனர். பதினாறு வயதிற்கு உட்பட்ட குழந்தைகளையும், 'இந்தியன் ஒப்பினியன்' நடத்துவதற்காகத் தேவையாயிருந்த ஒரு சிலரையும் தவிர மற்றவர்களையெல்லாம் சிறைக்கு அனுப்புவதென்பது யோசனை. அந்தச் சந்தர்ப்பத்தில் இதுதான் நான் செய்யக்கூடிய பெரிய தியாகம். நான் கோகலேக்கு ஏற்கனவே குறிப்பிட்டிருந்த பதினாறு திடசாலிகள், போனிக்ஸில் ஆதியில் குடியேறியவர்களில் முன்னோடிகளாக இருந்தவர்கள். அனுமதியின்றி டிரான்ஸ்வாலைக் கடந்து கைது செய்யப்படவேண்டுமென்பது திட்டம். இந்தத் திட்டத்தை முன்னரே அறிவித்துவிட்டால், சர்க்கார் இவர்களைக் கைதுசெய்யமாட்டார்கள் என்று நாங்கள் அஞ்சியதால், ஓர் இருவரைத் தவிர மற்றவர்களுக்கெல்லாம் இவை மறைத்தே வைத்திருந்தோம். அவர்கள் டிரான்ஸ்வாலில் நுழையும்போது போலீஸ் அதிகாரிகள் அவர்களுடைய பெயர், விலாசம் முதலியன கேட்டார்கள். என்னுடைய உறவினர்கள் என்று தெரியவந்தால் கைது செய்யமாட்டார்கள் என்று அஞ்சியேதான், போலீஸ்காரரிடம் இந்த விவரங்களைத் தரக்கூடாதென்று முடிவு செய்திருந்தோம். ஓர் அதிகாரியிடம் பெயரையும் விலாசத்தையும் தர மறுப்பது, மேலும் மற்றோர் குற்றமாகும். போனிக்ஸ் கோஷ்டி டிரான்ஸ்வாலுக்குப் போகும்போது, கைது செய்யப்படாத சகோதரிகள் நேட்டாலுக்குப் போகவேண்டுமென்பது திட்டம். நேட்டாலிலிருந்து டிரான்ஸ்வாலுக்குள் அனுமதியின்றிப் புகுவது எப்படிக் குற்றமாகுமோ அப்படியே டிரான்ஸ்வாலிலிருந்து நேட்டாலுக்குள் நுழைவதும் குற்றமாகும். நேட்டாலுக்குள் போகும்போது சகோதரிகள் கைது செய்யப்பட்டால் நல்லதுதான். ஆனால், அப்படி நிகழவில்லையென்றால், அவர்கள் மேற்கொண்டு நேட்டாலிலுள்ள பெரிய நிலக்கரிச் சுரங்க நிலையமாகிய நியூகாஸிலுக்குச் சென்று அங்கே தங்கியிருந்து, அங்கே குடியேறியுள்ள இந்தியக் கூலிகளையும் வேலை நிறுத்தம் செய்யச் சொல்லவேண்டுமென்று ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. அந்தச் சகோதரிகளுடைய தாய்மொழி தமிழ். கொஞ்சம் இந்துஸ்தானியும் அவர்களால் பேச முடியும். நிலக்கரிச் சுரங்கக் கூலியாட்களில் பெரும்பாலோர்

சென்னை மாகாணத்திலிருந்து வந்தவர்கள், தமிழ் அல்லது தெலுங்கு பேசுபவர்கள். பலர் வட இந்தியாவிலிருந்தும் வந்திருந்தார்கள். சகோதரிகளின் விண்ணப்பத்திற்குத் தொழிலாளிகள் இணங்கினால், சர்க்கார் அவர்களுடன் சகோதரிகளையும் சேர்த்துக் கைது செய்ய வேண்டியதாயிருக்கும். அதன் மூலமாகத் தொழிலாளிகளுடைய உற்சாகமும் அதிகரிக்கும். இந்தப் போர்த் தந்திரத்தை நன்றாக யோசனை செய்த பிறகு டிரான்ஸ்வால் சகோதரிகளுக்கு விளக்கினேன்.

நான் போனிக்ஸிற்குச் சென்று அங்குள்ளவர்களிடம் என் திட்டங்களைப் பற்றிப் பேசினேன். முதலாவது, அங்கே வசித்து வந்த சகோதரிகளுடன் கலந்துகொண்டேன். பெண்களைச் சிறைக்கு அனுப்புவதில் பெரிய அபாயம் இருப்பது எனக்குத் தெரியும். போனிக்ஸிலிருந்த சகோதரிகளில் பலர் குஜராத்தி மொழி பேசுபவர்கள். டிரான்ஸ்வால் சகோதரிகளுக்கு இருந்த அனுபவமும், பயிற்சியும் அவர்களுக்குக் கிடையா. மேலும் அவர்களில் பலர் எனக்கு உறவினராயிருந்தபடியால், அவர்கள் மீது எனக்கிருந்த செல்வாக்கின் பொருட்டே சிறைக்குச் செல்ல யோசித்திருக்கலாம். பிறகு உண்மையில் வழக்கு நடக்கும்போது அவர்கள் பின்வாங்கினாலும் அல்லது சிறைக் கொடுமையைச் சகிக்க முடியாது போனாலும், அவர்கள் மன்னிப்புக் கேட்கவேண்டியதாயிருக்கும். அது எனக்குப் பெரிய அதிர்ச்சியைத் தருவதோடல்லாமல் இயக்கத்திற்கும் பெரு நஷ்டத்தை விளைவிப்பதாக முடியும். ஆகவே, இவ்விஷயத்தைப்பற்றி என் மனைவியிடம் பேசுவதில்லையென்று தீர்மானித்திருந்தேன். ஏனென்றால், என் யோசனை எதற்கும் ''இல்லை'' என்று சொல்லுவதற்கு அவளால் முடியாது. அவள் "ஆம்" என்று சொன்னால், அந்தச் சம்மதத்திற்கு என்ன மதிப்புத் தருவதென்று எனக்குத் தெரியாது. ஆகவே, இவ்வித முக்கியமான விஷயத்தில் மனைவியை அவள் மனப் போக்கின்படி நடந்துகொள்ள கணவன் விட்டுவிட வேண்டும். அவள் எந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளாவிட்டாலும் அவன் கோபப்படக் கூடாது. மற்ற சகோதரிகளுடன் நான் பேசினேன். என் யோசனையை அவர்கள் உடனே ஒப்புக்கொண்டு சிறைக்குச் செல்லத் தாங்கள் தயாராகயிருப்பதாகவும் தெரிவித்தார்கள். என்ன நேரிடினும் சிறைவாசத்தை முழுவதும் முடித்த பின்பே வெளிவருவதாகவும் உறுதி அளித்தார்கள். அந்தச் சகோதரிகளிடம் நான் பேசியதை உற்றுக்

கேட்டுக் கொண்டிருந்த என் மனைவி, "நீங்கள் என்னிடம் இதைப்பற்றி ஒன்றுமே சொல்லாததைப்பற்றி எனக்கு வருத்தமே. சிறைக்குச் செல்ல நான் தகுதியற்றவள் என்பதற்கு என்னிடம் என்ன குறை இருக்கிறது?' நீங்கள் மற்றவர்களை அழைக்கும் பாதையில் நானும் செல்ல விரும்புகிறேன்" என்று சொன்னாள். நான் அதற்கு, "உன்னை ஒருபோதும் நான் வருத்தத்திற்கு உட்படுத்தமாட்டேன். எனக்கு உன்மேல் நம்பிக்கை இல்லையென்ற பிரச்னையே எழவில்லை. நீ சிறைக்குச் சென்றால் மிக மகிழ்ச்சியே அடைவேன். ஆனால், என்னுடைய தூண்டுதலின்பேரில் சிறைக்குச் செல்லக்கூடாது. இது மாதிரி விஷயங்களில் ஒவ்வொருவரும் தத்தம் தைரியத்திற்கும், சக்திக்கும் ஏற்றவாறு நடவடிக்கையில் இறங்க வேண்டும். நான் உன்னைக் கேட்டிருந்தால் என் வேண்டுகோளைத் திருப்தி செய்வதற்காகவே நீ போக இணங்கியிருக்கலாம். அதனால் பிறகு, நீதிமன்றத்தில் நீ நடுங்க ஆரம்பித்தாலும் அல்லது சிறையின் கொடுமைகளைக்கண்டு அஞ்சினாலும், நான் உன்னிடம் குற்றம் கண்டுபிடிக்க முடியாது. ஆனால், அது என்னை எங்கே கொண்டு போய்விடுமோ? அப்புறம் நான் எப்படி உன்னை அழைத்துக் கொள்ளுவது? உலகோர் முன் எப்படி என் முகத்தைக் காட்ட முடியும்? இது மாதிரி பயங்களே, சிறைவாசத்தை மேற்கொள்ளுமாறு உன்னிடம் சொல்லுவதைத் தடுத்தன" என்றேன். அவள், "நான் சிறைவாசத்தைச் சகிக்க முடியாமல் மன்னிப்புக் கேட்டு விடுதலை பெற்று வெளியே வந்தால், நீங்கள் என்னை ஒதுக்கி விடுங்கள். நீங்களும், என் குழந்தைகளும் துன்பங்களைச் சகிக்கும்போது என்னால் மட்டும் முடியாதோ? நான் போராட்டத்தில் கண்டிப்பாகச் சேரத்தான் வேண்டும்" என்று சொன்னாள். "அப்படியாயின் நானும் உன்னை அனுமதித்துத்தான் ஆகவேண்டும். என்னுடைய குணமும், நிபந்தனைகளும் உனக்குத் தெரியும். இப்பொழுது வேண்டுமானாலும் நீ மறுபடியும் யோசித்துப்பார். நன்றாக ஆலோசனை செய்த பின்பு இயக்கத்தில் சேரக்கூடாது என்ற முடிவுக்கு வந்தால் நீ தாராளமாக விலகிக் கொள்ளலாம். இப்போதுகூட உன் தீர்மானத்தை மாற்றுவதாயிருப்பினும் அதில் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை என்று தெரிந்துகொள்" என்று நான் சொன்னேன்.

"நான் யோசனை செய்வதற்கு ஒன்றுமில்லை. நான் பூரணமாகத் தீர்மானித்துவிட்டேன்" என்று பதில் அளித்தாள்.

அவரவர் தாமாகவே பிறர் உதவியில்லாமல் தீர்மானம் செய்ய வேண்டுமென்று மற்றவர்களுக்கும் யோசனை சொன்னேன். மீண்டும் மீண்டும் பலவாறாக வற்புறுத்திச் சொன்னேன். போராட்டம் நீடித்தாலும் குறுகினாலும், போனிக்ஸ் ஸ்தாபனம் வீழ்ந்தாலும் வாழ்ந்தாலும், உடல்நலம் குறைந்தாலும் சிறையில் நோயுற்றாலும், ஒருவரும் பின்வாங்கக் கூடாது என்ற இந்த நிபந்தனையை அவர்கள் மனத்தில் அழுத்தமாகப் பதியவைத்தேன். எல்லோரும் தயாராக இருந்தார்கள். இந்தக் கோஷ்டியில் ஒரே ஒருவர்தான் போனிக்ஸிற்கு வெளியிலிருந்து வந்தவர். அவர், 'காகாஜி' என்று நாங்கள் அன்புடன் அழைத்த ருஸ்தம்ஜி ஜீவான்ஜி கோர்க்கோடு என்பவர். அவரிடமிருந்து இந்தக் கூட்ட நடவடிக்கைகளை மறைத்து வைத்திருக்க முடியாது. இந்தமாதிரி சமயத்தில் அவரும் பின்வாங்கி நிற்பவர் அல்ல. அவர் ஏற்கனவே சிறைக்குச் சென்றிருந்தும் மீண்டும் ஒருமுறை தாம் செல்ல வேண்டுமென்று வற்புறுத்தினர். இந்தப் 'படையெடுப்'பில் பின்வருபவர்கள் சேர்ந்திருந்தனர்:

(1) ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தி (2) ஸ்ரீமதி ஜயகன்வர் மணிலால் டாக்டர் (3) ஸ்ரீமதி காசி சகன்லால் காந்தி (4) ஸ்ரீமதி சந்தோக் மகன்லால் காந்தி (5) பார்ஸி ருஸ்தம்ஜி ஜீவான்ஜி கோர்க்கோடு (6) சகன்லால் குஷல்சந்த் காந்தி (7) ராவ்ஜிபாய் மணிபாய் பட்டேல் (8) மகன்பாய் ஹரிபாய் பட்டேல் (9) சாலோமன் ராயப்பன் (10) ராஜு கோவிந்து (11) ராம்தாஸ் மோகன்தாஸ் காந்தி (12) சிவ்பூஜன் பதரி (13) வீ. கோவிந்தராஜுலு (14) குப்புசாமி மூன்லைட் முதலியார் (15) கோகுல்தாஸ் ஹன்ஸ்ராஜ் (16) ரேவாஷங்கர் ரத்தன்ஸி ஸோதா.

படையெடுப்பைத் தொடர்ந்ததன் விளைவுகளை இன்னொரு அத்தியாயத்தில் காண்போம்.

## நாற்பதாவது அத்தியாயம்

# சிறையில் பெண்கள்

இந்தப் 'படையெடுப்பினர்' டிரான்ஸ்வாலில் அனுமதியின்றி நுழைந்து எல்லையைக் கடந்ததற்குச் சிறையில் செல்லவேண்டியவர்கள். அவர்கள் பெயர் வரிசையைப் படித்த வாசகர் ஒன்றைக் கவனித்திருக்கலாம். அவர்களில் சில பெயர்களை முன்கூட்டியே தெரியப்படுத்தியிருந்தால் போலீஸார் ஒருவேளை அவர்களைக் கைது செய்திருக்கமாட்டார்கள். என் விஷயத்திலும் அப்படித்தான் நடந்தது. நான் இரண்டு, மூன்று தடவை கைதியான பிறகு எல்லையில் என்னைப் போலீஸார் பிடிப்பதைக் கைவிட்டார்கள். இந்த கோஷ்டி புறப்பட்டதை யாருக்கும் தெரிவிக்கவில்லை. இந்தச் செய்தி பத்திரிகைகளுக்கும் அறிவிக்கப்படவில்லை. மேலும் தங்கள் பெயர்களைப் போலீஸாருக்குத் தெரிவிக்காமல், அவற்றை நீதி மன்றத்தில் வெளிப்படுத்துவதாகக் கூறும்படி கோஷ்டியினருக்குப் போதிக்கப்பட்டிருந்தது.

இத்தகைய விஷயங்கள் போலீஸாருக்குச் சகஜமானவை. சிறையை நாடும் வழக்கம் இந்தியர்களுக்கு உண்டானபிறகு, அடிக்கடி விளையாட்டுக்காகவே அவர்கள் தங்கள் பெயர்களைப் போலீஸுக்குத் தெரிவிப்பதில்லை. ஆகவே போனிக்ஸ் கோஷ்டியினர் நடந்துகொண்டதில் விநோதமானது ஒன்றும் போலீஸாருக்குத் தோன்றவில்லை. அவர்கள் கைது செய்யப்பட்டனர். விசாரணையின் பிறகு, அவர்களுக்கு மூன்று மாதம் கடுங்காவல் சிறை தண்டனை விதிக்கப்பட்டது. (*1913*-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் *23*–ஆம் தேதி.)

டிரான்ஸ்வாலில் ஏமாற்றமடைந்த சகோதரிகள் இப்போது நேட்டாலுக்குள் பிரவேசித்தார்கள். ஆனல், அனுமதியின்றிப் பிரவேசித்ததாக அவர்கள் கைது செய்யப்படவில்லை. ஆகையால், அவர்கள் நியூகாஸிலுக்கு மேற்கொண்டு சென்று முன்னல் தீர்மானித்திருந்த திட்டப்படி, தம் வேலைகளைத் தொடங்கினர். அவர்களுடைய செல்வாக்கு காட்டுத்தீபோல் பரவியது. மூன்று பவுன் வரியினல் விளைந்த கொடுமைகளின் பரிதாபக் கதை, தொழிலாளிகளின் மனத்தைக் கிளறிவிட்டது. அவர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்கினர்கள். தந்திமூலம் எனக்குச் செய்தி கிடைத்த போது, ஒருபுறம் எனக்கு மகிழ்ச்சி

யும் ஒரு புறம் கலக்கமும் ஏற்பட்டன. இப்போது நான் என்ன செய்வது? இந்த அற்புதமான விழிப்புக்கு நான் தயாராக இருக்கவில்லை. என் முன்னுல் இருக்கும் வேலையைச் சமாளிக்க என்னிடம் போதிய பணமோ, ஆள் பலமோ கிடையாது. ஆனுல், என் கடமையை நான் தெளிவாக உணர்ந்தேன். நான் நியூகாஸிலுக்குச் சென்று என்னுல் இயன்றதைச் செய்ய வேண்டும். உடனே புறப்பட்டேன்.

டிரான்ஸ்வால் வீர சகோதரிகள் தங்கள் நடவடிக்கையைத் தொடர்ந்து செய்ய சர்க்கார் இனிமேல் விடமாட்டார்கள். போனிக்ஸ் கோஷ்டிக்குக் கிடைத்த அதே மூன்று மாதச் சிறைவாசம் அவர்களுக்கும் கொடுக்கப்பட்டு, அதே சிறையில் வைக்கப்பட்டனர் (அக்டோபர் 21, 1913).

இச்சம்பவங்கள், தென்னுப்பிரிக்காவில் மாத்திரமல்ல, தாய் நாட்டிலுள்ள இந்தியர்களின் உள்ளங்களையும் ஆழக் கலக்கி விட்டன. ஸர் பிரோஸ்ஷா இதுவரையில் அலட்சியமாகவே இருந்தார். தென்னுப்பிரிக்காவிற்குப் போகலாகாதென்று 1901-ஆம் ஆண்டில் அவர் எனக்குப் பலமாகப் புத்தி சொன்னுர். கடல்கடந்து அயல்நாட்டில் குடியேறியிருக்கும் இந்தியருக்கு, தாய்நாடு சுதந்திரம் அடையாதவரையில் ஒன்றுமே செய்யமுடியாது என்ற கருத்துக் கொண்டவர் அவர். சத்தியாக்கிரக இயக்கத்தின் ஆரம்பக் கட்டங்கள் அவரை அவ்வளவாகக் கவரவில்லை. ஆனுல், நம் பெண்கள் சிறைப்பட்டிருந்தது, வேறு எதுவுமே நடத்தியிராத ஓர் மனமாற்றத்தை அவருக்கு உண்டாக்கியது. பம்பாய் டவுன் ஹாலில் அவரே, நம் பெண்கள் சாதாரண குற்றவாளிகளுடன் அடைக்கப்பட்டுள்ளனர் என்ற செய்தி தம் ரத்தத்தைக் கொதிக்கச் செய்ததென்றும், இவ்விஷயத்தில் இந்தியா இனியும் வாளா இருக்க முடியாதென்றும் அறை கூவினுர்.

பெண்கள் காட்டிய வீரம் சொல்லுக்குள் அடங்காதது. அவர்களை மாரிட்ஸ்பர்க் சிறையில் அடைத்திருந்தனர்; பலவிதமாகத் துன்புறுத்தினர். மட்டரகமான உணவு தந்து, துணி துவைக்கும் வேலையும் அவர்களுக்கு இடப்பட்டது. அந்தச் சிறைவாசம் முடியும்வரையில் வெளியிலிருந்து அவர்களுக்கு உணவும் அனுமதிக்கப்படவில்லை. ஒரு சகோதரி, தன் மத வழக்கப்படி ஒருவகை உணவையே கொள்ளுவதாக விரதம் அனுஷ்டித்துக்கொண்டிருந்தார், மிகச் சிரமப்பட்டதன்பேரில் சிறை அதிகாரிகள் அவருக்கு அவ்வுணவை வழங்கினர்.

ஆனால், அவருக்குக் கொடுக்கப்பட்ட உணவு, மனிதர்கள் உட்கொள்ளத் தகுதியற்றதாகவே இருந்தது. அந்தச் சகோதரிக்கு ஆலிவ் எண்ணெய் மிகவும் அவசியமாக இருந்தது. அது கிடைக்கவில்லை. பின்னர் அவருக்குத் தரப்பட்ட எண்ணெய் நாள்பட்டுக் காரல் எடுத்துப்போயிருந்தது. தம் செலவிலேயே அதை வெளியில் வாங்கிக்கொள்ள அவர் முன்வந்தபோதும், 'சிறை உணவு விடுதியல்ல, கொடுத்ததையே சாப்பிட வேண்டும்'என்று கூறிவிட்டனர். இந்தச் சகோதரி விடுதலை யடைந்தபோது அவர் உடம்பு வெறும் எலும்புக்கூடாகி விட்டது. பெருமுயற்சியால் தான் அவர் உயிரைக் காப்பாற்ற முடிந்தது.

மற்றொரு சகோதரி சிறையிலிருந்து ஒரு பயங்கரக் காய்ச்சலுடன் திரும்பினாள். விடுதலையான சில தினங்களுக்குள் இறந்து விட்டாள் (பிப்ரவரி 22, 1914). நான் எப்படி அவளை மறக்க முடியும்?

வள்ளியம்மா ஆர். முனிசாமி முதலியார், ஜொஹன்னஸ் பர்க்கிலிருந்த பதினாறு வயதுள்ள ஒரு சிறு பெண். நான் அவளைப் பார்த்தபோது படுத்த படுக்கையாக இருந்தாள். உயரமானவளாகையால், மெலிந்து, நலிந்து இருந்த அவள் உடல் பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்தது.

"வள்ளியம்மா, நீ சிறை சென்றதற்காக வருந்துகிறாயா?" என்று கேட்டேன்.

"வருத்தமா? இப்போதுகூட, இன்னொரு தடவை கைது செய்யப்பட்டால் நான் சிறைக்குச் செல்லத் தயார்" என்று வள்ளியம்மா பதில் சொன்னாள்.

"அதனால் நீ இறந்து போவதாக இருந்தால் என்ன செய்வாய்?" என்று தொடர்ந்து கேட்டேன்.

"அதை நான் பொருட்படுத்தவே மாட்டேன். தாய் நாட்டிற்காக உயிரைக் கொடுக்க விரும்பாதவர்கள் யார் இருப்பார்கள்?" என்று பதில் வந்தது.

இந்தச் சம்பாஷணை நிகழ்ந்த சில நாட்களுக்குப் பிறகு, வள்ளியம்மாளின் உடம்பு எங்களுடன் இல்லையெனினும், அவளுடைய அழியாப் பெயர் என்னும் பெற்றியை எங்களுக்கு விட்டுச் சென்றாள். அவள் பிரிவு பற்றி இரங்கற் கூட்டங்கள் பல இடங்களில் நடந்தன. இந்தப் பாரத மகளின் உன்னத தியாகத்தை என்றும் நினைவுபடுத்த 'வள்ளியம்மா மண்டபம்'

நிறுவ இந்தியர்கள் தீர்மானித்தார்கள். இந்தத் தீர்மானம் இது வரையிலும் செயலாக மாறவில்லை என்பது வருந்தத்தக்கது. அதற்குத் தடையாகப் பல இடையூறுகள் குறுக்கிட்டன. சமூகத்தினரிடையே பல சச்சரவுகள் ஏற்பட்டன. முக்கிய மான ஊழியர்கள் ஒவ்வொருவராக விலகினர். ஆனுல், மண்டபம் கல்லினுலும், காரையினுலும் கட்டினுல்தான் என்ன, கட்டப்படா விட்டால்தான் என்ன? வள்ளியம்மாளின் தொண்டு அழியாதது. தன் கரங்களினுலேயே, சேவையென்னும் கோயிலை அவள் எழுப் பினுள். அவளுடைய மாண்புமிக்க உருவம் பலர் இதயத்திலே நிரந்தரமாகப் பதிந்து இருக்கிறது. இந்தியா உள்ளவரையில், தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரக சரித்திரத்தில் வள்ளியம்மாளின் பெயரும் நீங்கா இடம் பெற்றிருக்கும்.

சட்ட நுணுக்கங்களை எள்ளளவும் அறியாதவர்களும், நாட் டைப்பற்றிய அறிவு அதிகம் இல்லாதவர்களும், நம்பிக்கை ஒன்றையே அடிப்படையாகக்கொண்ட தேசபக்தியுள்ளவர்களு மான இந்தச் சகோதரிகளின் முயற்சி அனைத்தும் தூய்மையான தியாகமாகும். இவர்களில் சிலருக்கு எழுதப் படிக்கத் தெரி யாது. பத்திரிகையில் வருவதையும் அறியாதவர்கள். ஆனுல், இந்தியாவின் கௌரவத்தைத் தொலைக்க ஒரு பயங்கரத் தாக்குதல் தொடுக்கப்பட்டுள்ளது என்பதையும், தாங்கள் சிறை செல்வது, தங்கள் உள்ளத்தின் ஆழத்திலிருந்து எழும் வேதனைக்குரலும் பிரார்த்தனைகளுமாகும் என்பதையும் உணர்ந் திருந்தார்கள். உண்மையாகவே அதுதான் எல்லாவற்றிலும் மிகப் பரிசுத்தமான தியாகமாகும். இம்மாதிரி உள்ளத்தின் ஆழத்திலிருந்து தோன்றும் பிரார்த்தனைகளே எப்போதும் ஆண்டவனுக்கு உகந்தவையாகும். தியாகம் எவ்வளவுக்கெவ் வளவு தூய்மையாக இருக்கின்றதோ அந்த அளவுக்குத்தான் பயனை அளிக்கும். கடவுள் மனிதரிடம் விரும்புவது பக்திதான். தன்னலமின்றிப் பக்தியுடன் செலுத்தும் ஒரு சிறு காணிக்கை யைக்கூட மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு அதற்கு நூற்றத்தனையாகப் பரிசு அளிக்கிருர். கள்ளங்கபடமற்ற குசேலர் (சுதாமா) ஒரு கைப்பிடி அவலைத்தான் ஆண்டவ னுக்கு அளித்தார். ஆனுல், அச்சிறிய காணிக்கை, பல்லாண்டு களாக நீடித்த அவர் வறுமையையும் பட்டினியையும் நீக்கிற்று. பலருடைய சிறைவாசம் பயனற்றுப் போயிருக்கலாம். ஆனுல், ஒரு தூய்மையான ஆன்மாவின் பக்தியுள்ள தியாகம் ஒருபோதும் வீண் போகாது. தென்னுப்பிரிக்காவில் எவருடைய



வள்ளியம்மாளின் நினைவுச் சின்னத்தை 1914 ஜூலை 15-ல் காந்திஜி திறந்து வைத்தார்.



1914-ல் காந்திஜி
ஸ்ரீ ஸி. எப்.
ஆண்ட்ரூஸுடனும்
ஸ்ரீ பியர்ஸனுடனும்

தியாகம் ஆண்டவனுக்கு உகந்ததாய் இருந்து பயனளித்தது என்று ஒருவரும் சொல்லமுடியாது. ஆனல், வள்ளியம்மாளின் தியாகமும், மற்ற சகோதரிகளின் தியாகமும் பயனைப்பெற்றன என்பது நிச்சயம்.

எண்ணற்ற தொண்டர்கள் கடந்த காலத்திலும், இன்றும், தேச, சமூக சேவைக்காகத் தங்களையே கொடுத்திருக்கிறார்கள். இனி வருங்காலங்களிலும் அங்ஙனமே செய்துவருவார்கள். ஆகவே, அவர்களில் யார் யார் தூய்மையுள்ளவர்கள் என்று ஒருவருக்கும் தெரியாது; அது சரியே. சத்தியாக்கிரகிகள் நிச்சயமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றுண்டு அவர்களில் ஒருவராகிலும் பளிங்குபோல் தூய்மையுள்ளவராக இருப்பின், அது ஒன்றே அவர்கள் உள்ளத்திலிருக்கும் லட்சியத்தில் வெற்றியளிக்க வல்லது. சத்தியம் என்னும் வலிவான அஸ்திவாரத்தின் மேல்தான் உலகம் நிற்கிறது. அசத்தியம் என்பது ‘இல்லாதது’ பொய்மை என்றும், சத்தியம் என்பது ‘இருப்பது’ வாய்மை என்றும் பொருள்படும். ‘அசத்தியம்’ என்பது ‘இல்லாதது’; ஆகையால், அதன் வெற்றிக்கு இடமேயில்லை. சத்தியம் ‘இருப்பது’; ஆகையால் அதை அழிக்கவே முடியாது. இது தான் சத்தியாக்கிரகக் கொள்கையின் ரத்தினச் சுருக்கம்.

## நாற்பத்தோராவது அத்தியாயம்

# தொழிலாளர் திரண்டனர்

பெண்கள் சிறையிலிடப்பட்டது, நியூகாஸில் அருகிலுள்ள சுரங்கத் தொழிலாளர்களிடையே மந்திரம்போல் வேலை செய்தது. அவர்கள், தங்கள் வேலைகளை விட்டுத் தொகுதி தொகுதியாக நகரத்திற்குள் பிரவேசித்தார்கள். எனக்கு இச்செய்தி கிடைத்ததும் நானும் போனிக்ஸிலிருந்து நியூகாஸிலுக்குப் புறப்பட்டேன்.

இத்தொழிலாளர்களுக்குச் சொந்த வீடுகள் கிடையா. சுரங்க முதலாளிகள் இவர்களுக்கு வீடுகள் கட்டித்தந்து, ரஸ்தாக்களுக்கு விளக்குகள் போட்டு, தண்ணீர் வசதி முதலியனவும் செய்துகொடுக்கிறார்கள். ஆகவே, தொழிலாளர்கள், எல்லாவற்றிற்கும் அவர்களை எதிர்பார்த்திருக்கவேண்டிய நிலைமை ஏற்படுகிறது. ஸ்ரீ துளசிதாசர் சொல்லியிருப்பதுபோல், பிறரை நம்பி வாழ்பவன் கனவில்கூட சந்தோஷத்தைக் காண முடியாது.

வேலை நிறுத்தம் செய்யும் தொழிலாளிகள் என்னிடம் பல குறைகளைச் சொல்லி முறையிட்டார்கள். சிலர், சுரங்க முதலாளிகள், தண்ணீர், விளக்கு முதலியவற்றை நிறுத்தி விட்டதாகவும், வேறு சிலர், தங்களுடைய சாமான்களை வீட்டைவிட்டு வெளியே எறிந்து விட்டதாகவும் சொன்னார்கள். சையத் இப்ரஹீம் என்ற பட்டாணியர், தம் முதுகை என் பக்கம் திருப்பிக் காட்டி, "பாருங்கள், எப்படி நையப் புடைத்திருக்கிறார்கள் என்று. உங்கள் கட்டளைகளை மதித்து, உங்களுக்காக அக்கசடர்களைச் சும்மா விட்டேன். நான் ஒரு பட்டாணியன். பட்டாணியருக்கு அடிகொடுக்கத் தெரியுமே தவிர, அடி வாங்கத் தெரியாது" என்றார்.

"நல்லது தம்பி. நான் இப்படிப்பட்ட செய்கையைத் தான் சிறந்த வீரமாகக் கருதுகிறேன். உங்களைப் போன்றவர் மூலமாக நாம் நிச்சயம் வெற்றி பெறுவோம்" என்று பதில் சொன்னேன்.

இப்படி நான் அவரை வாழ்த்தினாலும் இந்தப் பட்டாணியருக்கு உண்டான அனுபவமே மற்றும் பலருக்கு ஏற்படுமாகில் வேலை நிறுத்தம் நீடிக்க முடியாது என்பதை நினைத்துக் கொண்டேன். அடி உதைகள் ஒரு பக்கம் இருக்கட்டும்,

சுரங்க முதலாளிகள் தொழிலாளர்களுக்குள்ள விளக்கு, நீர் போன்ற வசதிகளை நிறுத்தினாலும், அவற்றைப்பற்றிச் சட்டப் படி புகார் செய்வதற்கில்லை. புகார் செய்வது முறையோ இல்லையோ, இந்த நிலைமையைத் தொழிலாளர்கள் நீண்ட காலம் சகித்துக்கொண்டிருக்க முடியாது. ஆகவே இதற்கு ஒரு வழியை நான் கண்டுபிடிக்க வேண்டும். அப்படி முடியாதென்றால், தொழி லாளர்கள் தோல்வியை ஒப்புக்கொண்டு, உடனே வேலைக்குப் போவது, நெடுநாள் காத்திருந்து சலித்துவிட்டுப் போவதைவிட நல்லது. தோல்வித் தோரணையில் புத்தி சொல்லுவது என் வழி அல்ல. ஆகையால், தொழிலாளிகள் தங்கள் எஜமானர்களின் இல்லங்களைத் துறந்துவிட்டு யாத்திரிகர்கள்போல் வெளியேறு வது ஒன்றே வழி என்று யோசனை கூறினேன்.

தொழிலாளர்கள் பத்து, பன்னிருவர் அல்லர்; நூற்றுக் கணக்கில் இருந்தார்கள். அவர்களின் எண்ணிக்கை ஆயிரத் துக்கும் உயரலாம். இவ்வளவு பெரிய ஜனத்திரளை எங்கே வைத்துப் போஷிப்பது? பண உதவிக்காக இந்தியாவிடம் நான் முறையிட்டேன். தாய் நாட்டில் இருந்து பிற்காலத்தில் கிடைத்த பொற்களஞ்சியம் இன்னும் வர ஆரம்பமாகவில்லை. ஐரோப்பியருடனும், சுரங்க முதலாளிகளுடனும் தொடர்பு வைத்திருந்த இந்திய வியாபாரிகள், பகிரங்கமாக எனக்கு உதவி செய்ய முன்வர மிகவும் அஞ்சினார்கள். நான் நியூகாஸி லுக்குச் செல்லும்பொழுதெல்லாம் அவர்களுடனேயே தங்குவது வழக்கம். ஆனால், இம்முறை அவர்களுக்குக் கஷ்டமாக இருக்கும் என்று தெரிந்துகொண்டு வேறோர் இடத்தில் தங்கத் தீர்மானித்திருந்தேன்.

நான் ஏற்கனவே குறிப்பிட்டதுபோல் டிரான்ஸ்வால் சகோதரிகளில் பெரும்பாலானோர் தமிழர்கள். நியூகாஸிலிலிருந்த ஸ்ரீ டி. லாஸரஸ் என்ற ஒரு தமிழ்க் கிறிஸ்தவருடைய சொந்த வீட்டில் அவர்கள் தங்கியிருந்தார்கள். அந்த வீட்டில் இரண்டு மூன்று அறைகளும், வீட்டையடுத்துக் கொஞ்ச நிலமும் இருந் தன. அவர் மிகவும் சாதாரணமான நிலையில் குடும்பத்தை நடத்துபவர். நானும் அவர்களுடன் தங்கத் தீர்மானித்தேன். அவர்கள் மகிழ்ச்சியுடன் என்னை வரவேற்றார்கள். எளியவர் களுக்கு எவ்வித பயமும் கிடையாது. அவர்களும் குடியேறிய ஒப்பந்தத் தொழிலாளர் வகுப்பைச் சேர்ந்தவர்களாதலால் மூன்று பவுன் வரி செலுத்தக் கடமைப் பட்டவர்கள். ஆகவே, குடியேறிய தொழிலாளிகளின் துன்பங்கள் அனைத்தையும் அவர்

கள் நன்கு அறிந்திருந்தபடியால், அனுதாபம் காட்ட முடிந்தது. எப்பொழுதுமே தம் வீட்டில் எனக்கு அடைக்கலம் தருவது என் நண்பர்களுக்குச் சுலபமாக இருந்ததில்லை. ஆனால், இப்பொழுதோ, என்னை வரவேற்பதென்பது, பண நஷ்டத்தையும் சிறைவாசத்தையும் தேடிக்கொள்ளுவதாகும். அத்தகைய அபாயத்திற்குட்பட, ஒரு சில வியாபாரிகள்தான் முன்வருவார்கள். அவர்களுடைய வரம்புகளையும், என்னுடையவற்றையும் உணர்ந்திருந்த நான் அவர்களிடமிருந்து சற்று விலகியே நின்றேன். லாஸரஸோ, இதற்கு இடம் தந்தால் தம் சொற்ப ஊதியத்தையும் இழந்துவிட நேரிடும். சிறைக்குச் செல்லவும் தயாராக இருக்க வேண்டும். ஆனால் அவர், தம்மிலும் எளிய தொழிலாளிகளுக்கு ஏற்பட்டிருந்த அநியாயங்களை எப்படிச் சகித்துக் கொண்டிருப்பார்? தம்முடன் தங்கியிருந்த டிரான்ஸ்வால் சகோதரிகள், குடியேறிய ஒப்பந்தத் தொழிலாளிகள் உதவிக்காக முன் வந்து அதற்காகச் சிறைத் தண்டனையும் அடைந்திருந்ததைக் கண்டவர் அவர். தொழிலாளர்களுக்குத் தாமும் கடமைப்பட்டிருந்ததை உணர்ந்து, எனக்குத் தம் வீட்டில் தங்க இடம் தந்தார். இடம் தந்தது மாத்திரமல்ல; தமக்கிருந்த] அனைத்தையும் இயக்கத்திற்கு அளித்தார். நான் அங்கே தங்கியதால் அவர் வீடு ஒரு தருமசத்திரம் போலாகிவிட்டது. அங்கே பலதரப்பட்டவர்கள் வருவதும் போவதுமாக இருந்தனர். எந்த நேரத்திலும் அந்த வீடு மனித சமுத்திரம்போல் தோற்றம் கொண்டிருந்தது. சமையலறையில் அடுப்புக்கு இரவும் பகலும் ஓய்வு என்பதே கிடையாது. லாஸரஸின் மனைவியார் நாள் முழுவதும் உழைப்பில் ஈடுபட்டிருந்தாலும் எப்பொழுதும் அவரும், அவர் கணவரும் நிரந்தர சூரியப்பிரகாசம் போல் மலர்ந்த முகத்தினராய் இருப்பார்கள்.

ஆனால், நூற்றுக்கணக்கான தொழிலாளிகளைப் போஷிக்க லாஸரஸால் முடியாது. நான் தொழிலாளிகளுக்குக் கூறிய யோசனைகளாவன: அவர்களுடைய வேலை நிறுத்தம் முடிவின்றி நீடிக்கும் என்பதை உணர வேண்டும்; ஆதலால் தங்கள் முதலாளிகள் தந்த வீடுகளை விட்டுவிட வேண்டும்; விற்கக் கூடிய பொருள்களை விற்று, மற்றவைகளை வீட்டிலேயே வைத்துவிட்டு வெளியேற வேண்டும்; முதலாளிகள் சாதாரணமாக அவர்கள் வீட்டுக்கு வந்து சாமான்களைத் தொடமாட்டார்கள்; ஆனால், மேலும் வஞ்சம் தீர்த்துக்கொள்ளச் சாமான்களை அவர்கள் வீதியில் எறிய நேர்ந்தாலும் அதற்கும் தயாராக இருக்க வேண்டும்;

என்னிடம் வரும்போது, உடையும் கம்பளியும் தவிர வேறெதை யும் கொண்டு வரக்கூடாது. வேலை நிறுத்தம் நீடிக்கும் வரையில், அவர்கள் சிறைக்கு வெளியில் இருக்கும்வரையில், நான் அவர்களுடன் வசித்து, உணவு கொள்ளுவதாக உறுதி மொழி கூறினேன். இந்த நிபந்தனைகளின்பேரில் வந்தால்தான் அவர்கள் வேலை நிறுத்தத்தை நடத்தி வெற்றியைக் காணமுடி யும். இப்படிச் செய்ய தைரியம் இல்லாதவர்கள் வேலைக்குத் திரும்பிப் போய்விட வேண்டும். அப்படி வேலைக்கு மீண்டும் போகிறவர்களை ஒருவரும் துன்புறுத்தவோ, எள்ளி நகைக்கவோ கூடாது. நான் விதித்த நிபந்தனைகளைப்பற்றித் தொழிலாளர் கள் ஒருவரும் முணுமுணுக்கவில்லை. நான் இப்படி அறிவித்த தினத்திலிருந்து வீடுகளைத் துறந்து வீடற்றவர்களாய், தம் மனைவி மக்களுடன் தலை மேல் துணி மூட்டைகளைச் சுமந்து கொண்டு திரளாக யாத்திரிகர்கள் வந்தனர்.

அவர்களுக்கு ஓர் இடம் காண எனக்கு வழியே இல்லை. பரந்த வானம்தான் அவர்கள் தலைமேல் நிற்கும் கூரை. அதிர்ஷ்டவசமாக வானிலை, மழையோ, குளிரோ இல்லாமல் அனுகூலமாக இருந்தது. வியாபாரிகள் எங்களைப் போஷிக்கத் தவறமாட்டார்கள் என்று உறுதியாக நம்பியிருந்தேன். நியூ காஸிலிலிருந்த வியாபாரிகள், சமைக்கப் பாத்திரங்களும், மூட்டை மூட்டையாக அரிசி, பருப்பு முதலியனவும் தந்து உதவி னர். மற்ற இடங்களிலிருந்தும், அரிசி, பருப்பு, காய் வகைகள் முதலியன வந்து குவிந்தன. நான் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே கிடைத்தன. சிறைக்குச் செல்ல எல்லோரும் தயாராக இல்லையெனினும், அனைவரும் இயக்கத்திற்காகத் தம் மால் முடிந்ததைச் செய்ய முன் வந்தனர் பொருளாக ஒன்றும் கொடுக்க முடியாதவர்கள் சுயவிருப்பத்தின்பேரில் தொண்டர் களாக உழைக்க முன் வந்தனர். படிக்கத் தெரியாத இவர் களைக் கவனிப்பதற்கு, நாடறிந்தவரும் நல்ல படிப்பாளியுமான தொண்டர்கள் வேண்டியிருந்தது. அத்தகையோரும் முன் வந்தார்கள். அவர்கள் அருமையான உதவியைச் செய்தனர். அவர்களில் பலர் கைதும் செய்யப்பட்டனர். இவ்வாறு ஒவ் வொருவரும் தங்களால் இயன்றதைச் செய்து, எங்கள் பாதையைச் சுலபமாக்கினர்.

மக்கள் திரள் மேலும் மேலும் பெருகிக்கொண்டே வந்தது. அத்தனைப்பேரை ஒரே இடத்தில், அதிலும் அவர்களுக்கு வேலை யில்லாமலிருக்கும்போது, கவனிப்பது என்பது சக்திக்கு மீறிய

விஷயமாக இராது போனுலும், ஆபத்து நிறைந்ததாகும். சுகாதார விதிகளைப்பற்றி அவர்களுக்குப் பொதுவாக எதுவுமே தெரியாது. சிலர் கொள்ளை, கொலை, விபசாரம் போன்ற குற்றங்களுக்காக முன்னுல் சிறை சென்றவர்கள். ஆனுல், வேலை நிறுத்தம் செய்வோரின் குணத்தைப்பற்றித் தீர்ப்புக் கூறுவதற்கு நான் தகுதியுள்ளவனன்று. கூட்டத்தில் வெள்ளாடுகளையும், செம்மறியாடுகளையும் பிரித்துவைக்க முயற்சி செய்வது அசட்டுத்தனமாகும். வேலை நிறுத்த இயக்கத்தை நடத்துவதுதான் என் கடமை. அதை, மற்றவர்களைச் சீர் திருத்தும் வேலையோடு கலந்துவிடக்கூடாது. எங்கள் முகாமிற்குள் எல்லோருடைய நடத்தையும் சரியாக இருப்பதைக் கவனிப்பது என் கடமையே. ஆனுல், அவர்களுடைய வாழ்க்கையில் முன் நடந்த நிகழ்ச்சிகளைக் கிளறிப் பார்ப்பது என்னுடைய வேலையல்ல. அத்தனைப் பெரிய பலதரப்பட்டவர்களின் கூட்டம் ஓர் இடத்தில் வேலையில்லாமல் இருக்கும் பொழுது கட்டாயம் தவறுகள் ஏற்பட்டே தீரும். ஆனுல், நாங்கள் அங்கே தங்கியிருந்த அச்சில நாட்களில் யாதொரு சம்பவமும் நேராதது ஆச்சரியம்தான். நிலைமையின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தவர்கள்போல் அனைவரும் அமைதியுடன் இருந்தனர்.

என்னுடைய பிரச்னைக்கு ஒரு வழி தேடினேன். இந்தப் படையை டிரான்ஸ்வாலுக்கு அழைத்துச் சென்று, போனிக்ஸ் கோஷ்டியைப் போல் இவர்களையும் சிறையில் சுகமாகச் சேர்த்துவிட வேண்டும். படையைச் சிறு சிறு தொகுதிகளாகப் பிரித்து, அவை தனித்தனியாக எல்லையைக் கடக்க வேண்டும். ஆனுல், இந்த எண்ணம் மனத்தில் தோன்றியவுடனே, அதைக் கைவிட வேண்டியதாயிற்று. ஏனெனில், அப்படி முடிப்பதற்கு அதிக காலமாகும். சிறு சிறு கோஷ்டியினர் வரிசையாகச் சிறைப்படுவதால், மக்கள் இயக்கத்தில் பெரிய விளைவு எதையும் உண்டாக்காது.

படையில் சுமார் 5,000 பேரிருந்தனர். அவ்வளவு பேருக்கும் ரெயில் கட்டணம் தருவதற்கு என்னிடம் பணம் கிடையாது. ஆகவே, அவர்கள் அனைவரையும் ரெயிலில் அழைத்துச் செல்ல முடியாது. ரெயிலில் அழைத்துச் சென்ருலும் அவர்களுடைய மனவுறுதியைப் பரிசோதிக்க எனக்கு வாய்ப்பு இருக்காது. நியூகாஸிலிலிருந்து டிரான்ஸ்வால் எல்லை முப்பத்தாறு மைல்கள் இருக்கும். டிரான்ஸ்வாலிலுள்ள எல்லைக் கிராமங்கள்,

சார்லஸ் டவுன், வோல்க்ஸ்ரஸ்ட் என்பன. கடைசியாக நடந்தே செல்வது என்று தீர்மானித்தேன். இம்முடிவைத் தொழிலாளிகளுடன் கலந்து யோசித்தேன். மனைவி குழந்தையுடன் இருந்தவர் சிலர் இதற்குத் தயங்கினர்கள். நான் என் மனத்தைக் கடினப்படுத்திக்கொண்டு, நடந்துவர விருப்பமிராதவர்கள் சுரங்கங்களுக்குத் திரும்பிவிடலாம் என்று சொல்லுவதைவிட எனக்கு வேறு வழியில்லை. ஆனல், ஒருவரும் அப்படிச் செய்யவில்லை. நடக்கமுடியாதபடி அங்கயீனமுள்ளவர்கள் ரெயிலில் செல்வதென்று தீர்மானித்தோம். நடக்கமுடிந்தவர்களனைவரும் சார்லஸ் டவுனுக்கு நடந்து செல்லத் தாங்கள் தயார் என்று அறிவித்தார்கள். இரண்டு நாட்களில் அங்கே சேர்வதாகத் திட்டம். கடைசியில் எல்லோரும் இந்தத் தீர்மானத்தைப்பற்றிச் சந்தோஷப்பட்டார்கள். லாஸரஸுக்கும் அவர் குடும்பத்திற்கும் இதனல் சுமை கொஞ்சம் குறையும் என்று தொழிலாளிகள் உணர்ந்தனர். நியூகாஸிலிலுள்ள ஐரோப்பியர்கள், பிளேக் நோய் உண்டாகும் என்று எதிர்பார்த்து, அதைத் தடுக்க வழிகள் வகுத்துக் கொண்டிருந்தனர். இப்படி நகர்ந்துவிட்டதால் அவர்கள் மனத்திற்குச் சமாதானம் ஏற்பட்டதோடு அவர்கள் எங்களை உட்படுத்தி யிருக்கக்கூடிய சங்கடங்களிலிருந்து எங்களையும் காப்பாற்றிக்கொண்டோம்.

நடந்து செல்வதற்காகத் தயார் செய்துகொண்டிருந்த பொழுது, சுரங்க முதலாளிகளைச் சந்திக்கும்படி எனக்கு ஓர் அழைப்பு வந்தது. உடனே டர்பனுக்குச் சென்றேன். அந்தப் பேட்டியைப் பற்றியும், அதற்குப்பின் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றியும் அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

நாற்பத்திரண்டாவது அத்தியாயம்

# ஆலோசனைக் கூட்டமும் அதற்குப் பிறகும்

சுரங்க முதலாளிகளின் அழைப்பின்படி அவர்களை டர்பனில் போய்ப் பார்த்தேன். அவர்கள் வேலை நிறுத்தத்தைப் பற்றி ஓரளவுக்குப் பாதிக்கப்பட்டிருந்ததைக் கண்டேன். ஆனால், அந்தப் பேட்டியின் மூலமாக எதுவும் பெரிதாக விளையும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எனினும் சத்தியாக்கிரகியின் பணிவுக்கு எல்லை இல்லை; சமரசம் உண்டாவதற்கு எந்த வாய்ப்பையும் அவன் நழுவ விடமாட்டான். அதற்காக அவனைப் பயங்கொள்ளியென்று யாராகிலும் நினைத்தாலும் பொருட்படுத்த மாட்டான். தன்னிடத்தில் நம்பிக்கையும் அதன் மூலமாகப் பலத்தையும் பெறும் ஒருவன், மற்றவர்கள் தன்னை இழிவாக நினைப்பதைப்பற்றிக் கவலை கொள்ளமாட்டான். தன் உள்ளத்தில் ஊறும் சக்தி ஒன்றையே அவன் சார்ந்து இருக்கிறான். அதனால் யாரிடமும் மரியாதையுடன் பழகித் தன் கட்சியின் சார்பாக உலகத்தின் நன்மதிப்பைப் பெறுகிறான்.

ஆகவே, நான் சுரங்க முதலாளிகளின் அழைப்பை வரவேற்றேன். அவர்களைச் சந்தித்த பொழுது, ஆத்திரமும் கொதிப்பும் நிறைந்த சூழ்நிலையைக் கண்டேன். நான் நிலைமையை விளக்குவதைக் கேட்பதற்குப் பதிலாக, அவர்கள் பிரதிநிதி என்னைக் குறுக்கு விசாரணை செய்ய ஆரம்பித்தார்: நான் தகுந்த விடைகள் அளித்தேன்.

"இந்த வேலை நிறுத்தத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவது உங்கள் கையில் இருக்கிறது" என்று பதில் சொன்னேன்.

"நாங்கள் அதிகாரிகள் அல்லவே" என்று பதில் கிடைத்தது.

"நீங்கள் அதிகாரிகள் இல்லையெனினும் நீங்கள் செய்யக் கூடியது எவ்வளவோ உள்ளது. தொழிலாளர்களின் போராட்டத்தை அவர்களுக்காக நீங்களே நடத்தலாம். நீங்கள் மூன்று பவுன் வரியை எடுத்துவிடும்படிச் சர்க்காரைக் கேட்டுக்கொண்டால் அவர்கள் மறுப்பார்கள் என்று நான் நினைக்கவில்லை. நீங்கள் இது விஷயமாக ஐரோப்பியர்கள் கொண்டுள்ள தவறான எண்ணங்களையும் திருத்தலாம்" என்று சொன்னேன்.

''ஆனால் வேலை நிறுத்தத்திற்கும் இந்த மூன்று பவுன் வரிக்கும் என்ன சம்பந்தம் உள்ளது? சுரங்க முதலாளிகளிடம் தொழிலாளிகளுக்கு ஏதாவது குறை இருக்குமானால் அதற்குப் பரிகாரத்தைத் தகுந்த முறையில் அவர்களிடம் நாடுவதுதான் ஒழுங்கு.''

''வேலை நிறுத்தத்தைத் தவிர தொழிலாளிகளிடம் வேறு எந்த ஆயுதத்தையும் நான் காணவில்லை. இந்த மூன்று பவுன் வரிகூட, சுரங்க முதலாளிகளின் நலத்தைக் கோரியே அவர்கள் மீது சுமத்தப்பட்டிருக்கிறது. ஏனெனில், தொழிலாளர்கள் தங்களுக்கு உழைக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். ஆனால், அவர்கள் சுதந்திரத்துடன் இருக்கட்டும் என விரும்பவில்லை. ஆகவே, தொழிலாளர்கள் மூன்று பவுன் வரியை ரத்து செய்வதற்காக வேலை நிறுத்தத்தை மேற்கொண்டிருந்தால் அதில் வழுவோ, சுரங்க முதலாளிகளுக்கு விரோதமாக அநியாயமோ இருப்பதாக நான் கருதவில்லை.''

''அப்படியானால் நீங்கள் தொழிலாளிகளை வேலைக்குத் திரும்பும்படி புத்திமதி சொல்லமாட்டீர்களா?''

''என்னால் முடியாது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.''

''இதன் முடிவு என்னவாகும் தெரியுமா?''

''எனக்குத் தெரியும். என் பொறுப்பை நான் முழுதும் உணர்கின்றேன்.''

''ஆம். மிகச் சரி; இதில் உங்களுக்கு நஷ்டம் ஒன்றும் இல்லை. ஆனால், உங்கள் தவறான புத்திமதியின்படி நடக்கும் தொழிலாளிகளுக்கு ஏற்படப்போகும் நஷ்டத்திற்கு ஈடு செய்ய உங்களால் முடியுமா?''

''தொழிலாளிகள் நன்றாக யோசனை செய்து, தங்களுக்கு ஏற்படப்போகும் நஷ்டங்களை முற்றிலும் உணர்ந்தபின்னரே, வேலை நிறுத்தத்தை மேற்கொண்டிருக்கின்றனர். ஒரு மனிதனுக்குத் தன் சுயமரியாதையை இழப்பதைக் காட்டிலும் பெரிய நஷ்டம் ஒன்றுண்டென என்னால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. இந்த முக்கியமான கொள்கையைத் தொழிலாளிகள் உணர்ந்து இருக்கிறார்கள் என்பது எனக்கு மிகுந்த திருப்தியை அளிக்கிறது.''

இப்படிப் பேச்சு வார்த்தை நடந்தது. முழுப் பேச்சையும் நினைவுபடுத்திக்கொள்ள என்னால் இப்பொழுது முடியவில்லை. என் ஞாபகத்திற்கு வந்த சில குறிப்புக்களையே சுருக்கமாக

எழுதியிருக்கிறேன். சுரங்க முதலாளிகள் சர்க்காருடன் ஏற்கனவே கடிதத்தொடர்பு வைத்துக்கொண்டு இருந்தார்கள் என்பதிலிருந்து, அவர்கள் தங்கள் நிலேயிலுள்ள குறைபாடுகளே உணர்ந்திருந்தார்கள் என்பதைக் கண்டேன்.

நான் டர்பனுக்குப் போகும்போதும் திரும்பும்போதும், வேலேநிறுத்தமும் அதில் ஈடுபட்டு இருந்தோரின் அமைதியான நடத்தையும், ரெயில்வே கார்டுகள், மற்ற அதிகாரிகளின் மனத்தில் நல்ல எண்ணத்தை உண்டாக்கியிருந்தன என்பதைக் கண்டேன். நான் வழக்கம்போல் மூன்றும் வகுப்பில் பிரயாணம் செய்தேன். ஆனல், அங்குக்கூடக் கார்டும், மற்ற அதிகாரிகளும் என்னேச் சூழ்ந்துகொண்டு சாமர்த்தியமான பல கேள்விகளேக் கேட்டு, எனக்கு வாழ்த்துக்களேயும் கூறினர்கள். எனக்குப் பல வகையான சிறு செளகரியங்களேயும் செய்து தந்தார்கள். எனக்கும் அவர்களுக்கும் உள்ள நேர்மையான தொடர்புகளேப் பத்திரமாய் நான் காத்துக்கொண்டேன். ஒரு செளகரியத்திற்காகவும் எந்த ஆசையையும் நான் காட்டவில்லே. ஓரளவிற்கு அவர்கள் மரியாதை காட்டும்போது நான் மகிழ்ந்தேன். ஆனல், அந்த மரியாதையை நான் விலேக்கு வாங்க முயற்சி செய்யவில்லே. கல்லாத, எளிய, அறிவற்ற தொழிலாளிகள் காட்டிய உயர்ந்த மனவுறுதியைக் கண்டு அந்த அதிகாரிகள் வியந்தனர். உறுதியும் தைரியமும் எதிரியின் மனத்தில்கூட ஆழப் பதியும் குணங்களாகும்.

நான் நியூகாஸிலுக்குத் திரும்பினேன். எல்லாத் திசைகளிலிருந்தும் தொழிலாளிகள் வந்துகொண்டே இருந்தனர். அந்தப் ப்டைக்கு நிலேமை முழுவதையும் நான் தெளிவாக எடுத்துரைத்தேன். அவர்களுக்கு விருப்பமானல் இப்பொழுது கூட வேலேக்குத் திரும்பிப் போய்விடலாம் என்று கூறினேன். சுரங்க முதலாளிகளின் மிரட்டல்களே எடுத்துக்காட்டி எதிர்காலத்தின் ஆபத்துக்களேயும் அவர்கள் முன்னல் வரைந்தேன். போராட்டம் எப்பொழுது முடியுமென்று சொல்ல ஒருவராலும் முடியாது என்பதையும் காட்டினேன். சிறையின் கஷ்டங்களே எல்லாம் விளக்கினேன். ஆயினும் அவர்கள் பின்வாங்கவில்லே. நான் அவர்கள் பக்கம் இருந்து போராடும் வரையில் தங்களுக்குச் சோர்வே உண்டாகாது என்று பயமின்றிப் பதில் அளித்தார்கள். மேலும் தாங்கள் நெடுக கஷ்டங்களே அனுபவித்திருப்பதால், நான் அவர்களுக்காகக் கவலேப்படக்கூடாது என்றும் கேட்டுக் கொண்டார்கள்.

இப்போது நாங்கள் அணிவகுத்துச் செல்லவேண்டியது தான் பாக்கி. மறுநாள் காலை அவர்கள் அணிவகுத்துச் செல்ல வேண்டியதைப் பற்றியும் (*28* அக்டோபர், *1913*), அச்சமயம் அனுசரிக்க வேண்டிய விதிகளைப் பற்றியும் ஒரு நாள் மாலை தொழிலாளர்களுக்கு படித்துக் காட்டப்பட்டது. *5000—6000* தொழிலாளர்களைச் சமாளிப்பது விளையாட்டல்ல. சரியாக எத்தனைப் பேர்கள் இருந்தனர், அவர்கள் பெயர்கள், இருப்பிடம் என்ன முதலியனபற்றி எனக்கு அதிகம் தெரியாது. எத்தனை பேர் இருக்க விரும்பினார்களோ, அந்தத் தொகையைப் பற்றியே எனக்குத் திருப்தி ஏற்பட்டது. வழியில் ஒவ்வொரு 'சைநிக'னுக்கு தினசரி உணவாகிய ஒன்றரை பவுண்டு ரொட்டி, ஒரு அவுன்சு சர்க்கரையைத் தவிர வேறு ஒன்றும் கொடுக்க என்னால் முடியவில்லை. வழியில் உள்ள இந்திய வியாபாரிகளிடமிருந்து முடிந்தால் வேறு ஏதாகிலும் வாங்கித் தரலாம் என்று நினைத்தேன். ஆனால், என் முயற்சி பலிக்காவிடில் அவர்கள் ரொட்டி சர்க்கரையுடன் திருப்தி அடைய வேண்டியதே. போயர் யுத்தம், ஜூலு புரட்சி ஆகியவற்றில் ஏற்பட்டிருந்த என் அனுபவம் இந்தச் சந்தர்ப்பத்தில் மிகவும் உதவியது. 'படையெடுப்போர்' ஒருவராகிலும் தங்கள் தேவைக்கு அதிகமான உடுப்பை வைத்திருக்கக்கூடாது. ஒருவராகிலும் வழியில் மற்றவர்கள் சொத்தைத் தொடக்கூடாது. எந்த அதிகாரியாகிலும் அல்லது அதிகாரியல்லாத ஐரோப்பியனாகிலும் எதிர்ப்பட்டு அவர்களைத் திட்டினாலும் அல்லது அடித்தாலும் பொறுமையுடன் சகித்துக் கொள்ளவேண்டும். போலீஸார் கைது செய்ய முன்வந்தால் கைது ஆவதற்கு உட்படவேண்டும். இடையில், நான் கைது செய்யப்பட்டாலும் அணிவகுத்துச் செல்லுவதைத் தொடர்ந்து நடத்த வேண்டும். இந்த விவரங்கள் அனைத்தையும் அவர்களுக்கு நன்றாக எடுத்துரைத்தேன். மேலும் எனக்குப் பதிலாகப் 'படை'யை நடத்த வேண்டியவர்களின் பெயர்களையும் அறிவித்தேன்.

அந்த விதிகளை அவர்கள் உணர்ந்தார்கள். எங்கள் படை சுகமாகச் சார்லஸ் டவுனை அடைந்தது. அங்குள்ள வியாபாரிகள் பெரிதும் உதவினார்கள். அவர்கள் வீடுகளை நாங்கள் உபயோகிப்பதற்கும், மசூதியில் சமையல் செய்துகொள்ளுவதற்கும் அனுமதி கொடுத்தார்கள். முகாமைச் சேரும்போது பங்கீடு உணவு தீர்ந்து போய்விடும். ஆகவே எங்களுக்குச் சமையல் பாத்திரங்கள் தேவையாக இருந்தன. அவற்றை வியாபாரிகள் மகிழ்ச்சியுடன் தந்தார்கள். எங்களிடம் நிறைய அரிசி முதலா

னவை இருந்தன. அவற்றுடன் வியாபாரிகளும் தங்கள் பாகத்தைக் கொடுத்து உதவினர்.

சார்லஸ் டவுன் ஏறக்குறைய ஆயிரம் பேர் ஜனத்தொகை கொண்ட கிராமம். பல்லாயிரக்கணக்கான யாத்திரிகர்கள் தங்குவதற்கு அங்கே போதிய இடம் கிடையாது. ஆகவே, பெண்களையும் குழந்தைகளையும் மட்டும் வீடுகளில் இறக்கிவிட்டு மற்ற அனைவரும் வெட்டவெளியில் தங்கலாயினர்.

சார்லஸ் டவுனில் எங்கள் வாசத்தைப் பற்றி இனியவையும் கசப்புமான சில நினைவுகள் உள்ளன. இனிய நினைவுகள், அங்குள்ள சுகாதார இலாகாவையும் ஜில்லா சுகாதார அதிகாரி டாக்டர் பிரிஸ்கோவையும் பற்றியனவாகும். கண்டறியாத இத்தனைப் பெரிய ஜனக்கூட்டத்தைக் கண்டு சற்று அஞ்சிய டாக்டர் பிரிஸ்கோ, கடுமையான நடவடிக்கைகளை எடுப்பதற்குப் பதிலாக என்னைச் சந்தித்துச் சில யோசனைகளைக் கூறி எங்களுக்கு உதவி செய்ய முன் வந்தார். தண்ணீர், தெரு, மலஜலங்கழிக்கும் இடங்கள் இவற்றின் சுத்தம் பற்றிய மூன்று விஷயங்களைக் குறித்து ஐரோப்பியர்களுக்குச் சிரத்தை உண்டு; நமக்குக் கிடையாது. டாக்டர் பிரிஸ்கோ, தெருக்களில் தண்ணீர் ஊற்றக்கூடாது என்றும், இடங்களை அசுத்தப்படுத்தக் கூடாது என்றும், கழிவுகளைக் கண்ட இடத்தில் எறியக்கூடாது என்றும் பார்த்துக்கொள்ளச் சொன்னர். மேலும் அவர், எங்களுக்குக் கொடுத்த நிலப்பரப்பைத் தாண்டி நாங்கள் செல்லக்கூடாது என்றும், அந்த இடத்தைச் சுத்தமாக வைத்திருப்பது என் பொறுப்பென்றும் கூறினர். அவருடைய யோசனைகளை நான் நன்றியுடன் ஏற்றுக்கொண்டு நிம்மதியாக இருந்தேன்.

நம் மக்கள் சுகாதார விதிகளைப் பின்பற்றும்படிச் செய்வது வெகு சிரமமான காரியம். ஆனல், யாத்திரிகர்களும், என் சக ஊழியர்களும் என் வேலையை இலகுவாக்கினர். ஊழியர்கள், மற்றவர்களுக்குக் கட்டளையிடாமல் உண்மையாகவே தம் பணியில் ஈடுபட்டு இருந்தார்களேயானல், வேண்டிய காரியங்களைச் சாதிக்கலாம் என்பது என்னுடைய நெடுநாளைய அனுபவம். ஊழியர்கள் தாங்களே உடலுழைக்க முன்வந்தால் மற்றவர்களும் பின்பற்றுவார்கள். இந்தத் தடவையும் அதுவே என் அனுபவமாக இருந்தது. என் சக ஊழியர்களும் நானும் பெருக்குதல், மலஜலம் சுத்தம் செய்தல் போன்ற பணிகளைச் செய்யத் தயங்கவேயில்லை. இதன் பயனுக மற்றவர்களும்

அவ்வேலைகளை உற்சாகத்துடன் ஏற்றுக்கொண்டார்கள். அப்படியில்லாமல், வெறும் கட்டளைகள் மாத்திரம் இம்மாதிரி நல்ல பலனை விளைவித்திரா. தாங்களும் தலைவர்களாக இருந்து மற்றவர்களுக்கு உத்தரவு போட எல்லோரும் விரும்பியிருப்பார்கள்; கடைசியில் ஒன்றுமே நடக்காது. ஆனல், தலைவர்களாக இருப்பவர்கள் உண்மையில் சேவகர்களாக மாறினல் தலைமைப் பதவிக்குப் போட்டியிருக்காது.

உடனுழைத்தவர்களில் ஒருவரான ஸ்ரீ கால்லன்பாக், ஏற்கெனவே சார்லஸ் டவுனில் இருந்தார். கன்னி ஷிலெசினும் அங்கேதான் இருந்தார். கன்னி ஷிலெசினுடைய கடும் உழைப்பும், எதையும் பிழையின்றிச் செய்யுமாற்றலும், நேர்மையுமாகிய இந்தப் பண்புகளைப் பற்றி இவ்வளவுதான் என்று புகழ முடியாது. இந்தியர்களுக்குள் காலஞ்சென்ற ஸ்ரீ பி. கே. நாயுடு, ஸ்ரீ ஆல்பர்ட் கிறிஸ்டோபர் ஆகிய பெயர்களும் நினைவுக்கு வருகின்றன. இவர்களைத் தவிர, கஷ்டப்பட்டு உழைத்து அருமையான சேவைகள் புரிந்தவர்களுமுண்டு.

சாதமும் பருப்பும்தான் உணவு. எங்களிடம் நிறைய காய்கறிகள் இருந்தன. ஆனல், நேரமும் பாத்திரங்களும் இல்லாதபடியால் அவற்றைத் தனியாகச் சமைக்க முடியாமல், பருப்புடன் கலந்து சமைத்துக்கொண்டோம். நாள் முழுவதும், இருபத்துநான்கு மணி நேரமும், சமையலறையில் வேலை இருந்தது. ஏனெனில், இரவோ பகலோ எந்த வேளையிலும் ஜனங்கள் பசியுடன் வருவார்கள். நியூகாஸிலில் ஒரு தொழிலாளியும் தங்கக்கூடாது. எந்த வழியில் செல்ல வேண்டும் என்று எல்லோருக்கும் தெரியும். ஆகவே அவர்கள் சுரங்கங்களை விட்டபின்பு நேராக சார்லஸ் டவுனுக்கு வருவார்கள்.

அந்த மனிதர்களுடைய பொறுமையையும், சகிப்புத் தன்மையையும்பற்றி நான் நினைக்கும்போது, இறைவனுடைய பெருந்தகைமை பற்றிய உணர்ச்சி தோன்றி என்னை ஆட்கொள்ளுகிறது. சமையற்காரர்களில் தலைவன் நான். சில வேளைகளில் பருப்பில் நிறையத் தண்ணீரும், வேறு சில வேளைகளில் பருப்பு வேகாமலும் இருந்தது. காய்கறிகளும், சில வேளைகளில் அரிசிகூடச் சரியான வேக்காட்டில் இருக்கா. அத்தகைய உணவை உட்கொள்ளக் கூடியவர்களில் பலரை நான் உலகில் கண்டதில்லை. அதற்கு மாருக தென்னுப்பிரிக்க சிறையிலிருந்த படித்த பேர்வழிகள்கூட, உணவு கொஞ்சம் குறைவாக இருந்தாலும், சரியாகச் சமைக்கப்படாமலிருந்தாலும் அல்லது

சற்றுத் தாமதித்துப் பரிமாறப்பட்டாலும் கோபப்படுவதைக் கண்டிருக்கிறேன்.

சமைப்பதைவிடப் பரிமாறுவது இன்னும் கஷ்டமாக இருந்தது. அதற்கான முழுப் பொறுப்பும் என்னைச் சார்ந்திருந்தது. அதேமாதிரி உணவு பற்ருத சமயங்களிலும், எதிர்பார்த்ததைவிட சாப்பிடுவோர் தொகை அதிகரித்தாலும், அவரவருக்குக் கிடைக்கும் உணவின் அளவைக் குறைத்து அனைவரையும் திருப்திசெய்ய வேண்டியதும் என் கடமையாயிற்று. சில சகோதரிகளுக்கு உணவு குறைவாகக் கொடுத்தபோது உண்டான கோபப் பார்வை, நாளுகை எடுத்துப் போட்டுக்கொண்ட ஒரு கைம்மாறுமில்லாத பணியை அவர்கள் உணர்ந்தவுடனே, புன்சிரிப்பாகக் கணப்பொழுதில் மாறியதை என்னுல் ஒருபோதும் மறக்க முடியாது. ''நான் உதவியற்ற நிலையில் இருக்கிறேன். சமைத்த அளவு குறைவு. அதைக்கொண்டு பலருக்கும் உணவு பரிமாற வேண்டும். ஆகவே பகிர்ந்து தரவேண்டுவது அவசியம்'' என்று நான் சொல்லுவேன். இதைக் கேட்டவுடன் அவர்கள் நிலைமையைப் புரிந்துகொண்டு, மலர்ந்த முகத்துடன் தாங்கள் திருப்தி யுற்றதாகக் கூறிக்கொண்டு போய்விடுவார்கள்.

இதுவரையில் இனிய நினைவுகளைப் பற்றிச் சொன்னேன். இன்ஞ நினைவுகளும் உண்டு. சற்று ஓய்வு கிடைத்தபோது, அவர்கள் அதைத் தங்களுக்குள் சச்சரவிடுவதில் கழித்துவிடுவார்கள். அதைவிட வேதனை தருவது அங்கே நடந்த விபசாரமே. ஜன நெருக்கம் அதிகமாக இருந்தது. ஆதலால் ஆண்களும் பெண்களும் ஒன்ருக இருக்கவேண்டியது அவசியமாகிவிட்டது. மிருக உணர்ச்சியான காமத்திற்குக் கண்ணேது! இதைப் போன்ற நிகழ்ச்சிகள் நடந்தவுடனே நான் அந்த இடங்களுக்குப் போனேன். குற்றம் செய்தவர்கள் வெட்கத்தினுல் மட்கினர். அவர்கள் தனியாகப் பிரிக்கப்பட்டார்கள். ஆனுல், எனக்குத் தெரியாமல் நிகழ்ந்த கள்ளச் செயல்கள் எத்தனை இருந்தன என்று யாரால் சொல்ல முடியும்? இதைப்பற்றி அதிகம் சொல்லாமல் இருப்பதே நலம். எல்லாம் சீரிய முறையில் நடக்கவில்லை. அப்படிச் சிலர் தவறு இழைத்துவிட்டாலும் எவரும் துடுக்காக நடந்து கொள்ளவில்லை. முன்னுல் மிருக இச்சையுள்ளவர்களாகவும் நல்ல நடத்தையில்லாதவர்களாகவும் இருந்தவர்கள் நல்ல சூழ்நிலையில் எவ்வளவு ஒழுங்கானவர்களாகி விடுகிருர்கள் என்றும் இதேமாதிரி பல சந்தர்ப்பங்களில் பார்த்திருக்கிறேன். இந்த உண்மையைப் புரிந்துகொள்ளுவது மிக முக்கியப் பயன் உடையதாகும்.

## நாற்பத்து மூன்ருவது அத்தியாயம்

# எல்லையைத் தாண்டல்

நாம் இப்போது 1913-ஆம் ஆண்டு நவம்பர் மாதத் துவக்கத்திற்கு வந்திருக்கிருேம். ஆனல், மேற்கொண்டு சொல்லுவதற்குமுன்பு இரண்டு நிகழ்ச்சிகளைத் தெரிந்துகொள்ளுவது நலம். டர்பனிலிருந்த சகோதரி பாய்டட்மா மேத்தாபுக்கு, தமிழ்ச் சகோதரிகள் நியூகாஸிலில் சிறைத்தண்டனைகள் பெற்றதை அறிந்த பின்னர், இருப்புக்கொள்ளவில்லை. ஆகவே சிறையில் புக அவர், தம் தாயாகிய ஹானிபா, தம் ஏழு வயதான பையன் இவர்களுடன் வோல்க்ஸ்ரஸ்ட்டுக்குச் சென்ருர்கள். மகளையும், தாயையும் சர்க்கார் கைது செய்தனர், ஆனல், பட்மா மேத்தாபின் பையனைக் கைது செய்ய மறுத்தார்கள். பட்மா பாயை விரல் முத்திரைகளைத் தரும்படி அதிகாரிகள் கேட்டனர். ஆனல், அந்த அவமானத்திற்கு உட்பட அவர் தைரியமாக மறுத்துவிட்டார். கடைசியில் அவரையும் அவர் தாயையும், மூன்று மாதத் தண்டனை விதித்துச் சிறைக்கு அனுப்பினர்கள்.

இச்சமயத்தில் தொழிலாளர்களிடையே வேலை நிறுத்தம், உச்சநிலையில் இருந்தது. ஆண்களும் பெண்களும் சுரங்கங்கள் இருந்த இடத்திற்கும், சார்லஸ் டவுனுக்கும் மத்தியில் போவதும் வருவதுமாக இருந்தார்கள். அவர்களில் பெண்கள் இருவர், இளம் குழந்தைகளுடன் இருந்தார்கள். வழியில் ஒரு குழந்தை குளிரின் கடுமையால் இறந்துவிட்டது. மற்ருெரு குழந்தை, அதனுடைய தாய் ஒரு பாலத்தைக் கடக்கும்போது அவளுடைய கைகளிலிருந்து தவறி விழுந்து, நீரில் மூழ்கி மாண்டுவிட்டது. ஆனலும், அந்த வீரத் தாய்மார் சோர்வுக்கும், துக்கத்திற்கும் உட்பட மறுத்துத் தொடர்ந்து சென்றனர். அவர்களில் ஒருவர், ''நாம் இறந்து போனவர்களுக்காக ஏங்கக்கூடாது. நாம் எவ்வளவு அழுதாலும் அவர்கள் திரும்பி வரப்போவதில்லை. உயிருள்ளவர்களுக்காகத்தான் நாம் உழைக்கவேண்டும்'' என்று சொன்னர். இம்மாதிரி துணிவுடைய வீரத்தையும், அப்பட்டமான நம்பிக்கையையும், கலங்கா அறிவையும் எளியவர்களிடமே நான் அடிக்கடி கண்டிருக்கிறேன்.

சார்லஸ் டவுனிலிருந்த ஆண்களும் பெண்களும், தங்களுடைய கடினமான கடமையை, எதையும் சகிக்கும் வைராக்கிய

உணர்ச்சியுடன் கடைப்பிடித்தனர். சமாதானப் பேச்சிற்காக அந்த எல்லைக் கிராமத்திற்கு நாங்கள் போகவில்லை. யாராகிலும் அமைதியை நாடினுல் அதைத் தமக்குள்ளேதான் தேடிக்கொள்ள வேண்டும். வெளியில் எல்லா இடங்களிலும் 'இங்கே அமைதியே இல்லை' என்று எழுதி வைத்தமாதிரி இருந்தது. ஆயினும் இம்மாதிரிப் புயலின் மத்தியில்தான் மீராபாயைப் போன்ற ஒரு பக்தை, மலர்ந்த மனநிறைவுடன் விஷத்தைக்கூடப் பருக முடியும்; சாக்ரடீஸ் தனியான இருட்டுச் சிறையில் அமைதியாக மரணத்தைத் தழுவித் தம் நண்பர்களுக்கும் நமக்கும் ரகசியார்த்தத்தை உரைக்கிருர், சமாதானத்தைக் கோருபவன் அதைத் தன் உள்ளத்திலேயே காணவேண்டும் என்று. இத்தகைய, வருணிக்க முடியாத சமாதானச் சூழ்நிலையில் சத்தியாக்கிரகிகள் அடுத்த நாளைப்பற்றிய கவலை எதுவுமே இல்லாமல் தங்கள் முகாமில் தங்கி இருந்தனர்.

நான் சர்க்காருக்கு, வருமாறு எழுதினேன்: "நாங்கள் குடியேறும் எண்ணத்துடன் டிரான்ஸ்வாலுக்குள் புகவில்லை. வாக்குறுதியை மந்திரி மீறியதற்கு எங்கள் எதிர்ப்பைத் தெரிவித்துக்கொள்ளவும், அதனுல் எங்கள் சுயமரியாதை குறைந்தது பற்றி எங்கள் துன்பத்தைப் பகிரங்கமாகக் காட்டவுமே இங்ஙனம் செய்தோம். நாங்கள் எங்கிருந்தோமோ, அதாவது சார்லஸ் டவுனிலேயே சர்க்கார் எங்களைக் கைது செய்துவிட்டால் எங்கள் கவலைகளிலிருந்து விடுதலை பெற்றிருப்போம். ஆனுல், அவர்கள் அப்படிக் கைது செய்யாமல் போனுல், எங்களில் யாராவது திருட்டுத்தனமாக டிரான்ஸ்வாலில் புக நேரிட்டால், அந்தப் பொறுப்பு எங்களைச் சாராது. எங்கள் இயக்கத்தைப் பற்றி ரகசியம் எதுவும் இல்லை. அதில் ஒருவருக்கும் சுயநோக்கமும் இல்லை. யாரும் ரகசியமாக டிரான்ஸ்வாலுக்குள் புகுவதை நாங்கள் விரும்பவில்லை. ஆனுல், நாங்கள் மற்றவர்களுடைய செய்கைகளுக்காகப் பொறுப்பு வகிக்க முடியாது. ஏனெனில் நாங்கள் முன்பின் தெரியாத ஆயிரக்கணக்கான மக்களோடு பழகவேண்டியிருக்கிறது. அவர்களிடத்தில் அன்பைத் தவிர வேறு எந்த அதிகாரத்தையும் நாங்கள் பிரயோகிக்க முடியாது." நான் சர்க்காருக்கு ஒன்று குறிப்பிட்டேன். அவர்கள் மூன்று பவுன் வரியை ரத்து செய்துவிட்டால், வேலை நிறுத்தம் தீர்ந்துவிடுமென்றும், குடியேறிய தொழிலாளர்கள் தங்கள் வேலைக்கு மீண்டும் திரும்புவார்கள் என்றும், நாங்கள் மற்றக் குறைகளுக்காகத் தொடர்ந்து நடத்தும்



1914–கால்லென்பாக், காந்திஜி, ஸ்ரீமதி காந்தி, பார்ஸி ருஸ்தம்ஜியும் மற்ற சத்தியாக்கிரகிகளும். இப்படத்தில் உட்கார்ந்திருப்பவர்களில் இடது புறத்திலிருந்து முதலில் கால்லென்பாக்கும், அடுத்தபடி காந்திஜியும், கடைசியில் பார்ஸி ருஸ்தம்ஜியும் இருக்கின்றனர்,



சரித்திரப் புகழ்பெற்ற 1913 சத்தியாக்கிரக அணிவகுப்புக்கு முன்னல்
கன்னி ஷெலெஸினும், காந்திஜியும் கால்லென்பாக்கும்

போராட்டத்தில் கலந்துகொள்ளுமாறு அவர்களைக் கேட்க மாட்டோமென்றும் உறுதியும் தந்தேன்.

ஆதலால், நிலைமை கொஞ்சங்கூட நிச்சயமின்றி இருந்தது. சர்க்கார், எந்த நேரத்தில் எங்களைக் கைது செய்வார்கள் என்று தெரிந்துகொள்ளுவதற்கில்லாமலும் இருந்தது. ஆனால், இப்பேர்ப்பட்ட நெருக்கடியான சந்தர்ப்பத்தில், சர்க்காருடைய பதிலுக்காக, ஓரிரண்டு தினத் தபாலுக்கு மேல் பல நாட்கள் காத்திருப்பது முடியாத காரியம். ஆகவே, சர்க்கார் கைது செய்யாவிட்டால், நாங்கள் உடனே சார்லஸ் டவுனை விட்டு டிரான்ஸ்வாலுக்குள் போவது என்று தீர்மானித்தோம். வழியிலும் கைது செய்யாவிட்டால், 'சமாதானப் படை' ஒரு நாளுக்கு இருபது இருபத்துநான்கு மைல்கள் வீதம் எட்டு நாட்கள் தொடர்ந்து நடந்து டால்ஸ்டாய் பண்ணையை அடைந்து, போராட்டம் முடியும்வரை அங்கே தங்கி உணவு முதலியவற்றிற்காகப் பண்ணையில் உழைப்பது என்று திட்டம் செய்திருந்தோம். ஸ்ரீ கால்லன்பாக் அவசியமான எல்லா ஏற்பாடுகளையும் செய்திருந்தார். யாத்திரிகர்களின் உதவியைக் கொண்டே மண் குடிசைகளைக் கட்டுவதாக உத்தேசம். குடிசைகளைக் கட்டி முடியும்வரையில் வயதானவர்களையும் நோயாளிகளையும் சிறு கூடாரங்களில் இருக்க வைத்துவிட்டு மற்றவர்கள் வெட்ட வெளியில் தங்க வேண்டும். ஆனால், ஒரு கஷ்டம் இருந்தது. அது என்னவெனில், மழைக்காலம் மிக அருகில் இருந்தது. மழை பெய்யும்போது எல்லோருக்கும் தம்மைக் காத்துக்கொள்ள இடம் அவசியம். ஆனால், ஸ்ரீ கால்லன்பாக், எப்படியாகிலும் சமாளித்துக்கொள்ளலாம் என்று தைரியமான உறுதியுடன் இருந்தார்.

அணிவகுப்பின் யாத்திரைக்காக வேறு சில ஏற்பாடுகளும் செய்திருந்தோம். டாக்டர் பிரிஸ்கோ என்ற ஒரு நல்ல நண்பர், சிறு மருந்துப் பெட்டி ஒன்றைத் தயாரித்து அதில், வைத்தியம் தெரியாத என் போன்றவரும் கையாளக்கூடிய சில கருவிகளையும் வைத்திருந்தார். யாத்திரிகர்களிடம் எவ்வித வண்டியும் இல்லாமையால் மருந்துப் பெட்டியைக் கையிலேயே சுமக்கவேண்டியிருந்தது. ஆகவே, நாங்கள் பெட்டியில் குறைந்த அளவு மருந்துகளை, அதாவது, நூறு பேருக்கு ஒரே சமயத்தில் போதாத அளவே வைத்திருந்தோம். அதனால் பாதகமில்லை. ஒவ்வொரு நாளும் நாங்கள் ஏதாவது ஒரு கிராமத்திற்கருகிலேயே தங்க நினைத்திருந்தபடியால், குறையும் மருந்துகளை வாங்கிக் கொள்ளமுடியும். மேலும், நாங்கள் எங்களுடன் நோயாளி

களையோ அசக்தரானவர்களையோ அழைத்துக்கொண்டு போவதில்லை. வழியிலுள்ள கிராமத்திலேயே விட்டுவிடுவது என்றும் திட்டம் வகுத்திருந்தோம்.

ரொட்டியும் சர்க்கரையும் மாத்திரமே நாங்கள் சாப்பிடுவதற்கான உணவு. ஆனால், எட்டு நாள் வழிநடைக்குப் போதுமான ரொட்டியை எப்படிப் பெறுவது? யாத்திரிகர்களுக்குத் தினமும் ரொட்டி தரவேண்டும். ரொட்டியைப் பல நாட்கள் கைவசத்தில் வைத்துக்கொள்ள முடியாது. இந்தப் பிரச்னைக்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, ஒவ்வொரு கட்டத்திலும் யாராவது எங்களுக்கு ரொட்டியைக் கொண்டுவந்து தரவேண்டும். ஆனால், யார் அங்ஙனம் தருவார்கள்? இந்தியர்களில் ரொட்டி செய்பவர்கள் இல்லை. மேலும், கிராமங்களில் ரொட்டிக்காரர் இருப்பதில்லை. நகரங்களிலிருந்துதான் கிராமங்களுக்கும் ரொட்டி அனுப்பப்படுகிறது. ஆகவே, யாராவது ஒரு ரொட்டிக்காரர் ரெயில் மூலம் ஒவ்வொரு ஸ்டேஷனுக்கும் குறிப்பிட்ட தினங்களில் ரொட்டியை அனுப்ப வேண்டும். சார்லஸ் டவுனைப்போல் வோல்க்ஸ்ரஸ்ட்டு இருமடங்கு பெரியது. அங்கிருந்த பெரிய ஐரோப்பிய ரொட்டிக் கடைக்காரர் ஒருவர், ஒவ்வோர் இடத்திற்கும் ரொட்டியை அனுப்பிவைக்கச் சம்மதித்தார். எங்களுடைய கஷ்டமான நிலைமையைச் சாதகமாக்கிக் கொண்டு ரொட்டியின் விலையை மற்றக் கடைகளைவிட அதிகமாக்காமல் நல்ல மாவில் செய்த ரொட்டியை நியாயமான விலைக்கே தந்தார். சரியான வேளைக்கு அவற்றை ரெயிலில் அனுப்பினர். ஐரோப்பியர்களான ரெயில்வே அதிகாரிகளும் அவற்றை எங்களிடம் சரியாகச் சேர்ப்பித்தது மாத்திரமன்றி வழியிலும் அவற்றைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொண்டதோடு வேறு சில வசதிகளும் செய்து தந்தார்கள். எங்கள் மனத்தில் எவ்விதமான குரோதமும் இல்லை என்றும், எவர்க்கும் துன்பம் செய்ய நாங்கள் விழையவில்லை என்றும், எங்களுக்கு ஏற்பட்ட துன்பத்துக்கு நாங்கள் கஷ்டப்பட்டுக் கொள்ளுவதன் மூலமே நாங்கள் பரிகாரம் தேடினேம் என்றும் அவர்கள் உணர்ந்தார்கள். இவ்வண்ணமாக நாங்கள் இருந்த சூழ்நிலை களங்கமின்றி அப்படியே தொடர்ந்தும் இருந்து வந்தது. எல்லா மனிதர்களிடத்தும் இருந்து வருகிறது என்றாலும், அமைதியாக இருக்கும் அன்பு உணர்ச்சி செயலில் பரிணமிக்க எழுந்துவிட்டது. நாம் அனைவரும்-கிறிஸ்தவர்கள், யூதர்கள், ஹிந்துக்கள், முஸல்மான்கள், எவராயிருப்பினும் – சகோதரர்கள் தாம் என்று யாவரும் உணர்ந்தார்கள்.

அணிவகுப்பின் யாத்திரைக்கான ஏற்பாடுகள் அனைத்தும் பூர்த்தியானதும் சமரசம் ஏற்பட நான் இன்னுமொரு முயற்சி செய்தேன். ஏற்கெனவே கடிதங்களும் தந்திகளும் அனுப்பியிருந்தேன். இப்போது என் முயற்சிக்குப் பதில் அவமானந்தான் ஏற்படும் என்ற ஆபத்து இருந்தபோதிலும் டெலிபோனில் பேசிப் பார்ப்பது என்று தீர்மானித்தேன். பிரிட்டோரியாவிலிருந்த ஜெனரல் ஸ்மட்ஸுக்குச் சார்லஸ் டவுனிலிருந்து டெலிபோன் செய்தேன். அவருடைய காரியதரிசியைக் கூப்பிட்டு, "ஜெனரல் ஸ்மட்ஸிடம் நான் அணிவகுப்பின் யாத்திரைக்கு முற்றிலும் தயாராக இருப்பதாகச் சொல்லுங்கள். வோல்க்ஸ்ரஸ்டிலுள்ள ஐரோப்பியர் ஆத்திரம் மிகுந்து இருக்கிறார்கள். அவர்கள் ஒருவேளை எங்கள் உயிருக்கு ஆபத்து உண்டாக்கினாலும் உண்டாக்கலாம். அவர்கள் அப்படிப் பயமுறுத்தியும் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட அசம்பாவிதமான நிகழ்ச்சியை ஜெனரல்கூட விரும்பமாட்டார். மூன்று பவுன் வரியை எடுப்பதாக அவர் வாக்களித்தால், நான் அணிவகுப்பு யாத்திரையை நிறுத்திவிடுகிறேன். சட்டத்தை மீறவேண்டுமென்று நாங்கள் சட்டத்தை மீறவில்லை. தடுக்க முடியாத அவசியத்தால்தான் அப்படிச் செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே, இந்தச் சிறிய வேண்டுகோளுக்காவது ஜெனரல் இணங்கமாட்டாரா?" என்றேன். அரைநிமிடத்திற்குள் எனக்குப் பதில் கிடைத்தது. "ஜெனரல் ஸ்மட்ஸ் தங்களுடன் ஒன்றுமே வைத்துக்கொள்ள மாட்டார். உங்களுக்கு விருப்பம் எதுவோ அப்படிச் செய்து கொள்ளலாம்" என்ற இவ் வார்த்தைகளுடன் டெலிபோன் செய்தியும் முடிவுற்றது.

இந்த முடிவை நான் முழுவதும் எதிர்பார்த்தே இருந்தேன். ஆனால், பதிலில் தொனித்த அவமதிப்புக்கு நான் தயாராக இருக்கவில்லை. சத்தியாக்கிரகம் ஏற்பட்டதிலிருந்து ஆறு வருடகாலமாக எனக்கும் ஜெனரலுக்கும் அரசியல் தொடர்பு இருந்து வந்திருந்தபடியால், மரியாதையான விடையைத்தான் எதிர்பார்த்தேன். ஆனாலும் அவருடைய மரியாதையினால் நான் எவ்விதம் பெருமைப்பட்டிருக்க மாட்டேனோ அதேபோல் அவருடைய மரியாதையின்மையால் நான் தளரவுமில்லை. நான் செல்ல வேண்டிய குறுகியதும், ஒடுங்கியதுமான பாதை என் முன் தெளிவாய்த் தோன்றியது. அடுத்த நாள் (6-30 மணி) நாங்கள் பிரார்த்தனை செய்துவிட்டு ஆண்டவன் பெயரைச் சொல்லி அணிவகுத்துச் செல்ல ஆரம்பித்தோம். யாத்திரிகர் கூட்டத்தில் 2,037 ஆண்களும் 127 பெண்களும் 57 குழந்தைகளும் இருந்தனர்.

# நாற்பத்து நான்காவது அத்தியாயம்

# பெரிய யாத்திரை

இவ்வாறு யாத்திரிகர்களின் தொகுதி, குறிப்பிட்ட மணிப்படி அணிவகுத்துச் செல்லத் தொடங்கியது. சார்லஸ் டவுனிலிருந்து ஒரு மைல் தூரத்தில் ஒரு சிறு காட்டாறு உண்டு. அதைக் கடந்ததும் வோல்க்ஸ்ரஸ்டை அதாவது டிரான்ஸ்வாலை அடையலாம். குதிரையேறிய போலீஸ்காரரின் சிறு பட்டாளம் ஒன்று எல்லை வாசலில் காவல் இருந்தது. நான் சமிக்ஞை காட்டும் போது பாலத்தைத் தாண்டும்படி 'படையின'ருக்குக் கூறிவிட்டு நான் போலீஸ்காரரை அணுகினேன். ஆனால், நான் போலீஸாருடன் பேசிக் கொண்டிருக்கும் போதே யாத்திரிகர்கள் திடீரென்று வேகமாக வந்து எல்லையைக் கடந்தனர். போலீஸார் அவர்களைச் சூழ்ந்தனர். பொங்கி எழுந்த அக்கூட்டத்தை அடக்குவது எளிதாக இல்லை. எங்களைக் கைதுசெய்யும் நோக்கம் போலீஸுக்கு இல்லை. நான் யாத்திரிகர்களுக்குச் சமாதானம் கூறி, அவர்களை ஒழுங்கான வரிசையில் நிற்க வைத்தேன். ஒரு சில நிமிடங்களில் எல்லாம் சரியாகிவிட்டது; டிரான்ஸ்வாலுக்குள் நுழைவதும் ஆரம்பமாயிற்று.

இதற்கு இரு நாட்களுக்கு முன்பு வோல்க்ஸ்ரஸ்டிலிருந்த ஐரோப்பியர்கள் கூட்டங் கூடி இந்தியர்களைப் பயமுறுத்த எல்லா வழிகளையும் செய்தனர். சிலர், இந்தியர் டிரான்ஸ்வாலுக்குள் புகுந்தால் அவர்களைச் சுட்டுவிடுவதாகவும் சொல்லியிருந்தார்கள். அந்தக் கூட்டத்திற்கு ஐரோப்பியர்களுடன் வாதிப்பதற்காக ஸ்ரீ கால்லன்பாக் சென்றிருந்தார். ஆனால், அவர்கள் அவருக்குச் செவி கொடுக்கத் தயாராக இல்லை. சிலர் அவரைத் தாக்கவும் எழுந்தார்கள். ஸ்ரீ கால்லன்பாக் ஒரு பயில்வான். அவர் சாண்டோவிடம் உடற் பயிற்சி பெற்றிருந்தவர். ஆகவே, அவரைப் பயமுறுத்துவது சுலபமான காரியம் அன்று. தன்னுடன் மற்போருக்கு வரும்படி ஓர் ஐரோப்பியர் கால்லன்பாக்கை அழைத்தார். ஸ்ரீ கால்லன்பாக் கூறினர்: "நான் சமாதானம் என்னும் கொள்கையைப் பின்பற்றுவதால் இந்த அறைகூவலை ஏற்றுக்கொள்ளமாட்டேன். யாருக்கு விருப்பமோ அவர் வந்து என்னை வேண்டிய வரைக்கும் துன்புறுத்தட்டும். ஆனால், நான் மாத்திரம் இந்தக் கூட்டத்தில் என் பேச்சை நீங்கள் கேட்பதற்காகத் தொடர்ந்து மன்றாடிக்



சத்தியாக்கிரக அணிவகுப்பினரின் புகழ்பெற்ற யாத்திரை.



சத்தியாக்கிரக அணிவகுப்பினர் வால்க்ஸ்ரஸ்ட் வழியாக
டிரான்ஸ்வாலுக்குள் பிரவேசிக்கின்றனர்.

கொண்டிருப்பேன். எல்லா ஐரோப்பியர்களையும் வருமாறு நீங்கள் பகிரங்கமாக அழைத்திருக்கிறீர்கள். எல்லா ஐரோப்பியர்களுமே உங்களைப்போல் நிரபராதியான மக்களைக் கொடூரமாக நடத்தத் தயாராக இருந்துவிடவில்லை என்பதைச் சொல்லவே நான் இங்கே வந்து இருக்கிறேன். இந்தியர்மேல் நீங்கள் சாட்டும் குற்றங்கள் பொய் என்பதைத் தெரிவிக்க விரும்பும் ஐரோப்பியன் ஒருவன் இங்கிருக்கிறான். நீங்கள் நினைப்பதுபோல் அவர்கள் எதையும் செய்வதாக இல்லை. நாட்டை ஆளுவோர் என்ற உங்கள் ஸ்தானத்தை எதிர்க்க அவர்கள் முன்வரவில்லை. உங்களுடன் போராடவோ அல்லது இந்த தேசத்தில் நிரம்பிவிடவோ அவர்கள் விரும்பவுமில்லை. அவர்கள் நியாயத்திற்காகவே போராடுகிறார்கள். டிரான்ஸ்வாலில் புகுவதே அவர்கள் நோக்கம்; அங்கே குடியேறும் நினைப்பு அவர்களுக்கு இல்லை. தங்கள் மேல் அநியாயமாகச் சுமத்தப்பட்டிருக்கும் வரிக்குத் தங்களுடைய சரியான எதிர்ப்பைக் காட்டவே அங்கே செல்கிறார்கள். அவர்கள் தைரியசாலிகள்; அவர்கள் உங்கள் உயிருக்கோ, சொத்துக்கோ சேதம் விளைவிக்க மாட்டார்கள். உங்களுடன் போர் செய்ய மாட்டார்கள். ஆனால், உங்கள் துப்பாக்கிப் பிரயோகங்களைப் பொருட்படுத்தாமல் கண்டிப்பாக டிரான்ஸ்வாலுக்குள் புகுவார்கள். உங்கள் ஈட்டிகளையும், துப்பாக்கிக் குண்டுகளையும் கண்டு அஞ்சிப் பின்வாங்கக் கூடியவர்கள் அல்ல. அவர்கள் துன்பங்களுக்கு ஆளாவதன் மூலம் உங்கள் இதயங்களை இளக வைக்க முன்வந்திருக்கிறார்கள். கண்டிப்பாக இளகும்படியும் செய்வார்கள் என்பது எனக்குத் தெரியும். இவ்வளவுதான் நான் சொல்ல இருக்கிறது. நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். அதன் மூலம் உங்களுக்கு ஒரு சேவையும் செய்திருக்கிறேன் என்று நம்புகிறேன். எச்சரிக்கையாயிருந்து ஒரு பாபச் செயலிலிருந்து உங்களைக் காத்துக்கொள்ளுங்கள்." இந்த வார்த்தைகளுடன் ஸ்ரீ காலன்பாக் தம் இடத்தில் அமர்ந்தார். அவர் சொன்னதைக் கேட்டவர்கள் ஒருவாறு வெட்கினர். அவரை மல் யுத்தத்திற்கு அழைத்த குத்துச்சண்டைக்காரர் அவருக்கு நண்பரானார்.

நாங்கள் இந்தக் கூட்டத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தபடியால், வோல்க்ஸ்ரஸ்டிலிருந்த ஐரோப்பியரால் விளையக் கூடிய எந்தக் குறும்புக்கும், இடைஞ்சலுக்கும் தயாராக இருந்தோம். ஒருவேளை எல்லையிலிருந்த ஏராளமான போலீஸ்காரர்கள், அவர்கள் ஏதாவது விபரீதமாக செய்யக்கூடும் என்று அதைத் தடுக்கவே இருந்திருக்கலாம். அது எப்படியிருந்தாலும், எங்கள் ஊர்வலம் அந்த இடத்தைச் சமாதானமாகக்

கடந்து சென்றது. ஐரோப்பியன் ஒருவன்கூட ஏளனமாகக்கூடப் பேசியதாக எனக்கு நினைவில்லை. இந்த விந்தைக் காட்சியைக் காண அனைவரும் வெளியில் வந்திருந்தனர். சிலருடைய கண்களில் அன்பின் உருக்கங்கூடத் தென்பட்டது.

முதல் நாள் நாங்கள் வோல்க்ஸ்ரஸ்டிலிருந்து எட்டுமைல் தூரத்திலிருந்த பாம்போர்ட் என்ற இடத்தில் தங்க வேண்டி இருந்தது. அங்கே மாலை ஐந்து மணிக்குப் போய்ச்சேர்ந்தோம். யாத்திரிகர்கள் தங்கள் உணவாகிய ரொட்டியையும் சர்க்கரையையும் சாப்பிட்டுவிட்டு வெளியில் பரவலாக உட்கார்ந்திருந்தனர். சிலர் பேசிக்கொண்டும் சிலர் பஜனைகள் பாடிக்கொண்டும் இருந்தனர். பெண்களில் சிலர் நடையினுல் முழுவதும் களைத்துப்போய் இருந்தனர். தைரியமாகக் குழந்தைகளைத் தம் கைகளில் தூக்கிச் சுமந்து வந்தனர். ஆனுல் மேலும் தொடர்ந்து நடப்பது அவர்களால் முடியாது. ஆதலால் நான் என் முந்திய எச்சரிக்கையின்படி அவர்களை அங்கே ஒரு நல்ல இந்தியக் கடைக்காரரிடம் தங்கும்படி ஏற்பாடு செய்தேன். நாங்கள் டால்ஸ்டாய் பண்ணைக்குப் போக அனுமதிக்கப்பட்டால் அங்கும், அல்லது நாங்கள் கைது செய்யப்பட்டால் அவர்களுடைய வீடுகளுக்கும் அவர்களை அனுப்பி வைப்பதாக இந்தக் கடைக்காரர் வாக்களித்தார்.

இரவு வேளை ஏற ஏற எல்லா ஓசைகளும் அடங்கின. நானும் தூங்குவதற்குத் தயாரானேன். அப்போது யாரோ நடந்துவரும் சப்தம் கேட்டது. கையில் விளக்கு (லாந்தர்) பிடித்தவராய் ஓர் ஐரோப்பியர் வருவதைக் கண்டேன். அதன் அர்த்தத்தையும் புரிந்துகொண்டேன். ஆனுல், ஆயத்தம் செய்ய வேண்டியது எதுவுமில்லை. அங்கே வந்த போலீஸ் அதிகாரி, "உங்களைக் கைது செய்யும்படியான வாரண்டு என்னிடம் உள்ளது. உங்களைக் கைது செய்ய நான் விரும்புகிறேன்" என்ருர்.

"எப்போது?" என்று நான் கேட்டேன்.

"இப்பொழுதே."

"எங்கே என்னை அழைத்துச் செல்வீர்கள்?"

"தற்சமயம் அருகிலுள்ள ரெயில்வே ஸ்டேஷனுக்கும், பின்னர் அங்கிருந்து ரெயில் கிடைக்கும்போது வோல்க்ஸ்ரஸ்டிற்கும்."

"ஒருவருக்கும் தெரிவித்துக்கொள்ளாமல் நான் உங்களுடன் வருகிறேன். ஆனால், என் சக ஊழியர் ஒருவரிடம் சில குறிப்புக்கள் தந்துவிட்டுப் புறப்படுகிறேன்."

"நீங்கள் அப்படியே செய்யலாம்."

நான் என்னருகில் தூங்கிக்கொண்டிருந்த பி. கே. நாயுடுவை எழுப்பினேன். அவரிடம் நான் கைதானதைக் கூறி, விடிவதற்கு முன்பு யாத்திரிகர்களை எழுப்பவேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டேன். காலையில் அவர்கள் அணிவகுப்பு யாத்திரையை ஒழுங்காகத் தொடர்ந்து நடத்தவேண்டும். சூரிய உதயத்திற்கு முன்பு புறப்பட்டுச் செல்லவேண்டும். வழியில் உணவுக்காகத் தங்கும் சமயத்தில் அவர்களுக்கு நான் கைதான செய்தியைத் தெரிவிக்கவேண்டும். இடையில் என்னைப்பற்றி வினவுவோருக்கு இதைச் சொல்லலாம். யாத்திரிகர்களைக் கைது செய்யவந்தால் அவர்கள் அதற்கு உடன்படவேண்டும். இல்லையேல் திட்டப்படி அணிவகுப்பை நடத்திப் போகவேண்டும். நாயுடுவுக்கு எவ்விதமான பயமும் கிடையாது. ஒரு வேளை அவரும் கைது செய்யப்பட்டால் என்ன செய்யவேண்டும் என்பதையும் அவருக்குக் கூறினேன். அந்தச் சமயத்தில் ஸ்ரீ கால்லன்பாக்கும் வோல்க்ஸ்ரஸ்டில் இருந்தார்.

நான் போலீஸ் அதிகாரியுடன் சென்றேன். மறுநாட் காலையில் வோல்க்ஸ்ரஸ்ட் போகும் ரெயிலில் ஏறினோம். வோல்க்ஸ்ரஸ்டில் கோர்ட்டார் முன் நான் ஆஜரானேன். ஆனால், சாட்சியங்கள் தயாராக இல்லாதபடியால் பதினான்காம் தேதிவரைக்கும் என்னைக் காவலில் வைக்குமாறு சர்க்காருடைய வக்கீல் கேட்டுக்கொண்டார். அங்ஙனமே வழக்கு ஒத்திப் போடப்பட்டது. என் வசத்தில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட ஆண்களும், நூற்றிருபத்திரண்டு பெண்களும், ஐம்பது குழந்தைகளும் இருந்தபடியாலும், வழக்கு ஒத்திப்போட்ட காலத்திற்குள் போய்ச்சேரவேண்டிய இடத்திற்கு அவர்களைக் கூட்டிக்கொண்டு போய்விட விரும்பினபடியாலும் நான் என்னை ஜாமீனில் விடும்படி கேட்டேன். சர்க்கார் வக்கீல் என் மனுவை ஆட்சேபித்தார். கொலைக்குற்றம் செய்த கைதிகளைத் தவிர மற்றெல்லாக் கைதிகளுக்கும் சட்டப்படி ஜாமீன் விடுதலை தந்தாகவேண்டும். அந்த உரிமை எனக்கும் உண்டு. ஆகையால் இவ்விஷயத்தில் மாஜிஸ்டிரேட் ஒன்றும் செய்வதற்கில்லை. ஆகவே, ஐம்பது பவுன் ஜாமீன்பேரில் அவர் என்னை

விடுதலே செய்தார். ஸ்ரீ கால்லன்பாக் ஏற்கனவே ஒரு காரைத் தயாராக வைத்திருந்தார். 'படையெடுப்போர்' இருக்குமிடத்தில் சேருவதற்கு என்னை உடனே அழைத்துச் சென்ருர். 'டிரான்ஸ்வால் லீடர்' என்ற பத்திரிகையின் விசேஷ நிருபர் எங்களுடன் வர விரும்பினர். அவரையும் காரில் அழைத்துச் சென்ரும். வழக்குப் பற்றிய விவரம், அந்தப் பயணம், யாத்திரிகர்கள் என்னை உற்சாகத்துடன் வரவேற்று மிகுந்த மகிழ்ச்சியுற்ற அந்தச் சந்திப்பு முதலியனபற்றி விளக்கமாகச் செய்தியை வெளியிட்டார். ஸ்ரீ கால்லன்பாக் சார்லஸ் டவுனில் தங்கியிருந்த இந்தியர்களையும், புதிதாக வருபவர்களையும் கவனிக்கவேண்டி இருந்தபடியால் உடனே வோல்க்ஸ்ரஸ்டுக்குத் திரும்பினர்.

நாங்கள் அணிவகுத்துச் செல்வதைத் தொடர்ந்து நடத்தினேம். ஆனல், எதேச்சையாக என்னை விட்டுவைப்பது சர்க்காருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே ஸ்டாண்டர்டன்னில், 8-ஆம் தேதி நான் மீண்டும் கைது செய்யப்பட்டேன். ஸ்டாண்டர்டன், மற்ற இடங்களைவிடப் பெரியது. அங்கே என்னைக் கைது செய்த முறை ஒரு வகையில் விநோதமாக இருந்தது. யாத்திரிகர்களுக்கு நான் ரொட்டி விநியோகித்துக்கொண்டிருந்தேன். ஸ்டாண்டர்டன்னிலிருந்த இந்தியக் கடை முதலாளிகள் எங்களுக்குக் கொஞ்சம் பாகுமிட்டாய் என்ற பழத்திப்புச் சட்னி தந்திருந்தார்கள் அதனல் உணவைப் பங்கிட்டுத் தர வழக்கத்தைவிட அதிக நேரம் ஆகியது. அதற்குள் மாஜிஸ்டிரேட் வந்து என் பக்கத்தில் நின்ருர். உணவு விநியோகம் முடியும்வரையில் காத்திருந்து, பிறகு என்னை ஒரு பக்கமாக அழைத்தார். அவரை எனக்கு முன்பே தெரியும். அவர் ஒரு வேளை, என்னிடம் ஏதோ விஷயம் பேச விரும்புகிருரோ என்று நினைத்தேன். அவர் சிரித்துக்கொண்டு, "நீங்கள் என்னுடைய கைதி" என்று கூறினர். "வெறும் போலீஸ் அதிகாரிக்குப் பதிலாக என்னை மாஜிஸ்டிரேட்டே கைது செய்யும் சிரமத்தை மேற்கொண்டிருக்கிறபடியால் எனக்குப் பதவி உயர்ந்திருக்கிறமாதிரியல்லவா தோன்றுகிறது! ஆனல் நீங்கள் இப்போதே வழக்கு விசாரணையை நடத்துவீர்களா?" என்று கேட்டேன்.

"என்னுடன் வாருங்கள். வழக்கு மன்றங்கள் இன்னும் நடந்துகொண்டிருக்கின்றன" என்று மாஜிஸ்டிரேட் பதில் அளித்தார்.

யாத்திரிகர்களைத் தொடர்ந்து செல்லும்படிக் கூறிவிட்டு நான் மாஜிஸ்டிரேட்டுடன் சென்றேன். கோர்ட்டுக்குச் சென்றதும், என்னுடன் ஊழியர்கள் சிலரும் கைது செய்யப்பட்டிருப்பது தெரிந்தது. பி. கே. நாயுடு, பிஹாரிலால் மகராஜ், ராம்நாராயண் சின்ஹா, ரகுநரசு, ரஹீம்கான் இந்த ஐவரும் அங்கிருந்தார்கள். என்னை உடனே நீதி மன்றத்திற்குக் கொண்டு வந்தார்கள். வோல்க்ஸ்ரஸ்டில் செய்தது போலவே காவலில் வைப்பதற்குக் கோரிக்கையும், ஜாமீனில்விட மனுவும் செய்யப்பட்டன. இங்கும் சர்க்கார் தரப்பு வக்கீல் ஜாமீன் மனுவை பலமாக எதிர்த்தார். இங்கும் ஐம்பது பவுனுக்கு என் சொந்த ஜாமீனில் விடுதலை செய்தனர். வழக்கு 21-ஆம் தேதிவரை ஒத்திப்போடப்பட்டது. இந்திய வியாபாரிகள் ஒரு வண்டியைத் தயாராக வைத்திருந்தனர். யாத்திரிகர்கள் மேற்கொண்டும் மூன்று மைல்கள் போவதற்குள் அவர்களுடன் சேர்ந்துகொண்டேன். யாத்திரிகர்களும் நானும் இம்முறை ஒருவேளை டால்ஸ்டாய் பண்ணையை அடையக் கூடுமென்று நினைத்தோம். ஆனால், அப்படி நடக்கவில்லை. எனினும் ‘படையெடுப்போ’ருக்கு நான் கைதாவது பழக்கப்பட்டு விட்டது என்பது ஓர் அற்ப சொற்ப விஷயமன்று. சக ஊழியர்கள் ஐவரும் சிறையிலேயே கிடந்தனர்.

## நாற்பத்தைந்தாவது அத்தியாயம்

# அனைவரும் சிறையில்

நாங்கள் இப்போது ஜொஹன்னஸ்பர்க்குக்கு அருகில் இருந்தோம். யாத்திரையை எட்டுக் கட்டங்களாகப் பிரித்திருந்தது வாசகருக்கு ஞாபகம் இருக்கலாம். இதுவரை நாங்கள் போட்ட திட்டப்படியே யாத்திரையை நடத்திவந்தோம். இன்னும் நான்குநாள் நடைதான் பாக்கியிருந்தது. ஆனால், எங்கள் உற்சாகம் நாளுக்குநாள் பெருகியதைப் போலவே, சர்க்காருக்கு இந்தியப் 'படையெடுப்'பை எப்படி சமாளிப்பது என்ற கவலையும் அதிகரிக்கலாயிற்று. குறியில் கொண்ட இடத்தை அடைந்த பின்னர் எங்களைக் கைது செய்தால், திடமிராதவர்கள், சமயம் தெரிந்து செயலாற்றத் தகுதியற்றவர்கள் என்ற குற்றச்சாட்டுகள் அவர்கள்மீது ஏற்படும். எங்களைக் கைது செய்வதாயின், நாங்கள் குறித்திருந்த இடத்தைச் சேர்வதன் முன் கைது செய்தாக வேண்டும்.

என்னைக் கைது செய்தது, யாத்திரிகர்களை அதைரியத்திற்கோ, பயத்திற்கோ உட்படுத்தவில்லை, சமாதான முறைகளை மீறிச் செல்லவும் தூண்டவில்லை என்பதைச் சர்க்கார் கண்டனர். யாத்திரிகர்கள் மாத்திரம் கலகம் செய்துவிடுவார்களேயானால், அவர்களைத் துப்பாக்கிக்கு இரையாக்குவதற்குச் சிறந்த வாய்ப்பு சர்க்காருக்குக் கிடைத்திருக்கும். எங்களுடைய சமாதான முறைகளைக் கொண்டு தோன்றிய மனவுறுதிதான் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு அதிக வேதனையைத் தந்தது. அவர் அப்படிச் சொல்லியும் இருந்தார். சமாதானமாகச் செல்லும் ஒரு மனிதனை எத்தனை நாட்களுக்குத்தான் வதைக்க முடியும்? தாமாகவே இறப்பதற்கு முன்வந்தவர்களை எப்படிக் கொல்லமுடியும்? மரணத்தை வரவேற்பவரைக் கொல்வதில் உற்சாகம் தோன்றாது. ஆகையால்தான் போர்வீரர்கள் விரோதியை உயிருடன் பிடிப்பதில் மிகுந்த முயற்சி எடுக்கின்றனர். சுண்டெலி பூனையைக் கண்டதும் ஓடவில்லையானால், பூனை வேறு இரைச்சியைத்தான் தேடவேண்டியதாகக் கொள்ளவேண்டும். ஆடுகளனைத்தும் தாமாகவே சிங்கத்தின் எதிரே படுத்துக்கொண்டால், சிங்கம் அவற்றைச் சாப்பிடுவதை நிறுத்தவேண்டிய அவசியந்தான் எழும். சிங்கங்கள் சாத்விக எதிர்ப்பை மேற்கொண்டால்

பெரிய வேட்டைக்காரர்கள் சிங்க வேட்டையைக் கைவிட வேண்டியதுதான். அகிம்சை, மனத்திடம் ஆகிய இரண்டு பண்புகளையும் ஒருங்கே கொண்டுள்ள போராட்டத்தில் எங்களுக்கு வெற்றி கிடைப்பது திண்ணம்.

ஸ்ரீ போலக் இந்தியாவுக்குச் சென்று, இந்திய சர்க்கார் முன்பும் சாம்ராஜ்ய சர்க்கார் முன்பும் நிலைமையை விளக்குவதற்குத் தமக்கு உதவி செய்ய வேண்டுமென கோகலே தந்தி மூலம் தெரிவித்திருந்தார். எங்கே சென்றாலும் பிறருக்கு உதவியாளனாகும் தன்மை வாய்ந்தவர் ஸ்ரீ போலக். தாம் மேற்கொண்டுள்ள எந்த வேலையிலும் முழுவதும் ஆழ்ந்துவிடுவார். ஆகவே, அவரை இந்தியாவுக்கு அனுப்புவதற்காக ஆயத்தங்கள் செய்துகொண்டிருந்தோம். அவர் போகலாமென்று அவருக்கும் எழுதியிருந்தேன். ஆனால், என்னை நேரடியாகச் சந்தித்து, என்னிடமிருந்து யோசனைகள் பெறாமல் போக மனம் இல்லாதவராய் யாத்திரையின்போது என்னை வந்து பார்க்க விரும்பினார். அவர் விரும்பினால் வரட்டும்; ஆனால், அப்படி வருவதில் கைது செய்யப்படுவதற்கு ஏது இருக்குமென்று நான் தந்தி கொடுத்தேன். போராடுவோர், ஆபத்து நேரிட்டால் அதற்கு உட்பட ஒருபோதும் தயங்குவதில்லை. ஒவ்வொருவரும், சர்க்காரின் கவனம் அவர்கள்மேல் விழும்போது கைது செய்யப்படுவதற்குத் தயாராக இருக்க வேண்டும்; சர்க்கார் தம்மேல் கைவைக்கத் தயங்கும் வரையில் கைது செய்யப்படுவதற்கு எல்லாவிதமான, நேர்மையான, யோக்கியமான முயற்சிகளையும் செய்ய வேண்டும் என்பதே சத்தியாக்கிரக இயக்கத்தின் முக்கியமான கொள்கை. ஆகவே, கைதாகக்கூடிய ஆபத்தையும் எதிர்கொள்ள ஸ்ரீ போலக் விரும்பினார்.

ஸ்டாண்டர்டன்னுக்கும் கிரேய்லிங்ஸ்டாட்டுக்கும் இடையிலிருந்த டீக்ஸ்வொர்த் என்ற இடத்தில் ஸ்ரீ போலக் 9-ஆம் தேதி எங்களைச் சந்தித்தார். நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். பேச்சு முடிந்துகொண்டிருந்த சமயம், அப்போது பிற்பகல் மூன்று மணி இருக்கலாம். நானும் ஸ்ரீ போலக்கும் யாத்திரிகர்களுக்கு முன்னணியில் நடந்து போய்க்கொண்டிருந்தோம். சில சக ஊழியர்கள் எங்கள் சம்பாஷணைகளைக் கேட்டுக்கொண்டிருந்தனர். ஸ்ரீ போலக் அன்று மாலை ரெயிலில் டர்பனுக்குப் போவதாக இருந்தது. ஆனால், ஆண்டவன் மனிதனை அவன் திட்டப்படிச் செய்ய எப்பொழுதும் விட்டுவிடு

வதில்லை. ஸ்ரீராமர், தம் பட்டாபிஷேகத்திற்கென்று குறிக்கப் பட்டிருந்த தினத்தன்றே காட்டிற்குச் செல்ல நேர்ந்தது. நாங்கள் பேசிக்கொண்டிருக்கும்போது ஒரு கேப் வண்டி வந்து எங்கள் முன்னால் நின்றது. அதிலிருந்து டிரான்ஸ்வாலின் பிரதம குடியேற்ற அதிகாரியான ஸ்ரீ சாம்னியும் வேறு சில போலீஸ் அதிகாரிகளும் இறங்கினர். என்னை ஒரு பக்கமாக அழைத்துச் சென்று, அவர்களில் ஒருவர், "நான் உங்களைக் கைது செய்கிறேன்" என்று சொன்னார்.

இவ்வண்ணமாக நான்கு நாட்களுக்குள் நான் மூன்று முறை கைது செய்யப்பட்டேன்.

"யாத்திரிகர்களை என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று நான் கேட்டேன்.

"அதை நாங்கள் பார்த்துக் கொள்ளுவோம்" என்று விடை கிடைத்தது.

நான் மேற்கொண்டு ஒன்றும் சொல்லவில்லை. ஸ்ரீ போலக்கை பொறுப்பு எடுத்துக்கொண்டு யாத்திரிகருடன் போகச் சொன்னேன். போலீஸ் அதிகாரி, யாத்திரிகர்களிடம் நான் கைது செய்யப்பட்ட செய்தியை மாத்திரமே அறிவிக்க அனுமதி தந்திருந்தார். நான் அவர்களிடம், சமாதான நெறியைத் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளும் போது, போலீஸ் அதிகாரி குறுக்கிட்டு, "நீங்கள் இப்போது ஒரு கைதி, சொற்பொழிவு நிகழ்த்தக்கூடாது" என்று கூறினார்.

நான் என் நிலைமையை உணர்ந்துகொண்டேன். அது அவசியமாக இருக்கவுமில்லை. பேசுவதிலிருந்து என்னைத் தடுத்தவுடனேயே வண்டியை முழு வேகத்துடன் ஓட்டும்படி டிரைவருக்குக் கட்டளையிட்டார். ஒருகணத்தில் யாத்திரிகர்கள் என் பார்வையிலிருந்து மறைந்தனர்.

அந்த அதிகாரிக்கு, அந்தச் சமயத்தில் நான்தான் நிலைமைக்குக் காரணமானவன் என்பது தெரியும். எங்கள் அகிம்சையில் நம்பிக்கை இருந்தபடியால் இரண்டாயிரம் இந்தியர்களுக்கு இடையே அந்த வெட்டவெளியில் தனியாக நின்றார். எழுத்தால் சம்மன் அனுப்பப்பட்டிருந்தாலும் நான் பணிந்திருப்பேன் என்பதும் அவருக்குத் தெரியும். அப்படியிருக்க, நான் ஒரு கைதியென்று அவர் எனக்கு நினைப்பூட்ட அவசியமேயில்லை. நான் யாத்திரிகர்களுக்குப் புகட்டியிருக்கக்கூடிய நல்லுரைகள் எங்களுக்கு மாத்திரமேயன்றி சர்க்காருக்கும் சாதகமாகவே இருந்திருக்கும். ஆனாலும், ஓர்

அதிகாரி, தம் அதிகாரத்தைக் காட்டக்கூடிய சிறிது சந்தர்ப்பத்தைக்கூட எப்படி விட்டுக் கொடுக்க முடியும்? ஆயினும் இந்த அதிகாரியைவிட மற்ற அதிகாரிகள் பலர் எங்களை நன்ருகப் புரிந்துகொண்டிருந்தார்கள் என்பதை நான் சொல்லத்தான் வேண்டும். கைது செய்யப்படுவது எங்களைப் பயத்திற்குள்ளாக்கவில்லை; சுதந்திரத்திற்கு வழி காட்டும் வாயிற்படியாக அதை நாங்கள் வரவேற்ருேம் என்பதை அவர்கள் தெரிந்துகொண்டிருந்தார்கள். ஆகவே, அவர்கள் சட்டப்படி எங்களுக்கு நியாயமாகத் தரவேண்டிய சுதந்திரத்தை அளித்ததுடன், சௌகரியமாகவும் விரைவாகவும் கைது செய்வதற்கு அனுகூலமான உதவியை எங்களிடம் நன்றியுடன் நாடினர். இவ்விரு வகையான அதிகாரிகளைப் பற்றிய உதாரணங்களை இப்பகுதியில் வாசகர்கள் காணலாம்.

நான் கிரேய்லிங்ஸ்டாட்டுக்குக் கொண்டு போகப்பட்டு அங்கிருந்து பால்போர் வழியாக ஹைடல்பர்க்குக்குச்சென்று இரவை அங்கே கழித்தேன்.

ஸ்ரீ போலக்கைத் தலைவராகக்கொண்டு யாத்திரிகர்கள் நடையை மேற்கொண்டு தொடங்கி, கிரேய்லிங்ஸ்டாட்டில் அவ்விரவு தங்கினர். யாத்திரிகர்கள் அனைவரையும் கைது செய்ய ஏற்பாடுகள் பூர்த்தியாகி இருந்தன என்பதைக் கேள்வியுற்று அங்கே வந்திருந்த சேட் ஆமத் மாமத் காச்சலியாவும், சேட் ஆமத் பாயத்தும் அவர்களைச் சந்தித்தார்கள். ஆகவே, ஸ்ரீ போலக், யாத்திரிகர்கள் கைதானதும் அவர்கள்பாலுள்ள தம்முடைய பொறுப்புத் தீர்ந்துவிடும்; அதற்கு ஒருநாள் தாமதப்பட்டாலும், டர்பனுக்குச் சென்று இந்தியாவுக்குப் போகும் கப்பலில் ஏறிக்கொள்ளலாம் என்று நினைத்திருந்தார். ஆனல், ஆண்டவன் சித்தம் வேருக இருந்தது. பத்தாந்தேதி காலையில் சுமார் ஒன்பது மணிக்கு யாத்திரிகர்கள் பால்போரை அடைந்தார்கள். அங்கே ரெயில் அடியில் மூன்று பிரத்தியேகமான வண்டிகள் அவர்களை நேட்டாலுக்கு ஏற்றிச் செல்லக் காத்துக்கொண்டிருந்தன. அங்கே யாத்திரிகர்களுக்கு ஒருவிதமான பிடிவாதம் தோன்றியது. என்னை வரவழைக்க வேண்டும் என்றும், கைது செய்யப்படச் சம்மதிக்கும்படி நான் அவர்களுக்குச் சொன்னல்தான் ரெயிலில் ஏறவும் உடன்படவும் முடியும் என்றும் சொன்னர்கள். இந்தப் போக்குத் தவருனது; இது கைவிடப்பட்டாலன்றி போராட்டத் திட்டம் முழுவதும் கெட்டு இயக்கமே பின்வாங்குவதான நிலை ஏற்படும். யாத்திரிகர்கள்

சிறை செல்வதற்காக என்னை ஏன் தேடவேண்டும்? தாங்களே தலைவர்களை நியமித்துக்கொள்ளுவதோ, அல்லது தலைவருக்கே கீழ்ப்படிவோம் என்று சொல்லுவதோ வீரர்களுக்கு அழகு ஆகாது. ஸ்ரீமான் சாம்னி, ஸ்ரீ போலக்கையும் காச்சலியா சேட்டையும் அணுகி, யாத்திரிகர்களைக் கைது செய்வதில் தமக்கு உதவும்படிக் கேட்டுக்கொண்டார். யாத்திரிகர்களுக்கு நிலைமையை விளக்குவது இந்த நண்பர்களுக்குச் சிரமமாகவே இருந்தது. சிறைதான் யாத்திரிகர்களுடைய இலக்கு; ஆகவே, தம்மைக் கைது செய்வதற்குத் தயாராகச் சர்க்கார் முன் வந்ததைக் குறித்துப் பாராட்டவேண்டும்; அப்படிச் செய்தால்தான் சத்தியாக்கிரகிகள் தங்கள் பண்புகளைக்காட்டிப் போராட்டத்தை வெற்றியுடன் ஒரு முடிவுக்குக் கொண்டுவர முடியும்; வேறு எந்தச் செயல் முறைக்கும் நான் சம்மதிக்கமாட்டேன் என்பதை அவர்கள் நன்ருக உணரவேண்டும் என்றும் அவர்கள் எடுத்துரைத்தார்கள். கடைசியாக யாத்திரிகர்கள் வழிக்கு வந்து அனைவரும் அமைதியுடன் ரெயிலில் ஏறினர்கள்.

என்னை மீண்டும் மாஜிஸ்டிரேட் முன் கொண்டு வந்தார்கள். யாத்திரிகர்களைப் பிரிந்த பிறகு நடந்தது எதுவும் எனக்குத் தெரியாது. மீண்டும் ஒரு முறை நான் ஜாமீன் விடுதலைக்காகக் கேட்டேன். முன்பு இரண்டு நீதிமன்றங்கள் ஜாமீன் கொடுத்திருக்கின்றன என்றும், இம்முறை எங்கள் இலக்கிற்குப் போகவேண்டிய தூரம் அதிகமில்லை என்றும் சொன்னேன். ஆகவே, சர்க்கார் ஒன்று, யாத்திரிகர்களையாவது கைது செய்ய வேண்டும்; அல்லது நான் அவர்களைப் பத்திரமாக டால்ஸ்டாய் பண்ணையில் கொண்டுபோய்ச் சேர்க்க அனுமதியாவது தர வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். மாஜிஸ்டிரேட் என் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. ஆனல்,என் மனுவை உடனே சர்க்காருக்கு அனுப்புவதாக வாக்கு அளித்தார். இந்தத் தடவை டண்டீயிலிருந்து வந்த வாரண்டின்பேரில் நான் கைது செய்யப்பட்டேன். குடியேறிய தொழிலாளர்களை நேட்டால் மாகாணத்திலிருந்து வெளியேறச் சொல்லிக் கிளப்பிய பிரதானக் குற்றத்திற்காக என்மேல் வழக்குத் தொடர்வதாக இருந்தது. ஆகவே, என்னை அன்றே ரெயிலில் டண்டீக்குக் கொண்டு போயினர்.

பால்போரில் ஸ்ரீ போலக்கைக் கைது செய்யாமல் விட்டது மன்றி அதிகாரிகள் தங்களுக்கு அவர் செய்த உதவிக்காக நன்றியும் செலுத்தினர்கள். சர்க்காருக்கு அவரைக் கைதுசெய்

வதாக நோக்கம் இல்லை என்றுகூட ஸ்ரீ சாம்னி சொன்னார். ஆனால், அது ஸ்ரீ சாம்னியின் சொந்தக் கருத்தாக இருந்திருக்கலாம்; அல்லது அவருக்குத் தெரிந்த அளவில் சர்க்காரின் கருத்தாகவும் இருக்கலாம். சர்க்கார் நினைத்த போதெல்லாம் தங்கள் அபிப்பிராயங்களை மாற்றி வந்தனர். கடைசியாக ஸ்ரீ போலக்கை இந்தியாவுக்குப் போக விடக்கூடாதென்றும், இந்தியருக்காக முழுத் தீவிரத்துடன் உழைத்து வரும் ஸ்ரீ கால்லன்பாக்குடன் அவரையும் சிறைக்கு அனுப்பவேண்டும் என்றும் முடிவுக்கு வந்தார்கள். ஆகவே தாழ்வாரம் உள்ள ரெயில் வண்டிக்காக ஸ்ரீ போலக் சார்லஸ் டவுனில் காத்துக்கொண்டிருந்தபோது கைது செய்யப்பட்டார். ஸ்ரீ கால்லன்பாக்கும் கைது செய்யப் பட்டு, இரு நண்பர்களும் வோல்க்ஸ்ரஸ்டில் சிறையில் வைக்கப் பட்டனர்.

*11*-ஆம் தேதி டண்டீயில் என்னுடைய வழக்கு நடந்தது; ஒன்பது மாதக் கடுங்காவல் தண்டனை எனக்கு விதிக்கப்பட்டது. தடுக்கப்பட்டோருக்கு டிரான்ஸ்வாலில் நுழைய நான் உதவியாக நின்ற மற்றொரு குற்றத்திற்காக வோல்க்ஸ்ரஸ்டில் இரண்டாவது வழக்கு ஒன்று இருந்தது. ஆகவே, *13*-ஆம் தேதி நான் டண்டீயிலிருந்து வோல்க்ஸ்ரஸ்டுக்குக் கொண்டுபோகப்பட்டேன். அங்கே சிறையில் கால்லன்பாக்கையும், போலக்கையும் சந்திக்க முடிந்தது பற்றி மகிழ்ந்தேன்.

*14*-ஆம் தேதி வோல்க்ஸ்ரஸ்ட்டு நீதிமன்றத்தின் முன் கொண்டு வரப்பட்டேன். அந்த வழக்கில் விந்தை என்னவெனில், கிரோம்டிராயில் நான் விட்ட சாட்சிகளைக்கொண்டே என் மீதுள்ள குற்றச்சாட்டு நிரூபிக்கப்பட்டதேயாகும். போலீஸார் சாட்சியங்களைச் சம்பாதித்திருக்கலாம். ஆனால், அது கஷ்டமாகவே இருந்திருக்கும். ஆகவே அது விஷயத்தில் என் உதவியை நாடினார்கள். அங்குள்ள நீதிமன்றங்கள், தான் குற்றவாளி என்று கைதி ஒப்புக்கொள்ளுவதைக் கொண்டு மாத்திரம் தண்டனையை விதிப்பதில்லை.

என்னைப் பொறுத்தமட்டில், சாட்சிகளைச் சேகரிக்கும் ஏற்பாடு ஒருவாறு முடிந்தது. ஆனால், ஸ்ரீ கால்லன்பாக்குக்கும் ஸ்ரீ போலக்குக்கும் விரோதமாக யார் சாட்சி கூறுவார்கள்? தகுந்த சாட்சி இல்லாமல் அவர்களுக்குத் தண்டனை விதிப்பது முடியாத காரியம். அவர்களுக்கு விரோதமாகச் சாட்சிகளை

உடனே திரட்டுவதும் கடினம். ஸ்ரீ கால்லன்பாக் யாத்திரிகர்களுடன் இருக்க விரும்பினபடியால் குற்றத்தை ஒப்புக்கொள்ளுவது என்று நினைத்தார். ஆனால், ஸ்ரீ போலக் இந்தியாவுக்குப் போவதில் முனைந்திருந்தார். இந்தச் சமயத்தில் சிறை செல்வதை அவர் விரும்பவில்லை. நாங்கள் மூவரும் கலந்து ஆலோசனை செய்தபிறகு, ஸ்ரீ போலக் குற்றம் செய்தாரா, இல்லையா என்று எங்களைக் கேட்டால் நாங்கள் 'ஆம்', 'இல்லை' என்று எதுவும் சொல்லுவதில்லை என்ற தீர்மானத்திற்கு வந்திருந்தோம்.

அரசாங்கத்தார் சார்பாக ஸ்ரீ கால்லன்பாக்குக்கு விரோதமாக நான் சாட்சியம் கூறினேன். நானே ஸ்ரீ போலக்குக்குப் பாதகமாகச் சாட்சி கூற முன்வந்தேன். வழக்குகள் நீடிப்பதை நாங்கள் விரும்பாதபடியால், ஒரு தினத்திற்குள் அவை பைசலாகும்படி எங்களால் முடிந்ததைச் செய்தோம். எனக்கு விரோதமான நடவடிக்கைகள் 14-ஆம் தேதியும், ஸ்ரீ கால்லன்பாக்கின் வழக்கு 15-ஆம் தேதியும், ஸ்ரீ போலக்கின் விசாரணை 17-ஆம் தேதியும் முடிந்தன. மாஜிஸ்டிரேட் எங்கள் மூவருக்கும் மூன்று மாதச் சிறைத்தண்டனை விதித்தார். அந்த மூன்று மாதங்களையும் நாங்கள் ஒன்றாக வோல்க்ஸ்ரஸ்ட்டு சிறையில் கழிக்கக் கூடும் என்று நம்பி இருந்தோம். ஆனால், அப்படி அனுமதிப்பதற்குச் சர்க்காரால் முடியவில்லை.

இடையில் நாங்கள் வோல்க்ஸ்ரஸ்ட்டு சிறையில் சில நாட்களைச் சந்தோஷமாகக் கழித்தோம். தினமும் புதுக் கைதிகள் வந்துகொண்டிருந்தனர். வெளியில் நடப்பதை எங்களுக்கு அவர்கள் அறிவித்தார்கள். சத்தியாக்கிரகக் கைதிகளில் எழுபத்தைந்து ஆண்டு வயதான ஹர்பத் சிங் என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் சுரங்கத்தில் வேலை செய்யவில்லை. அவருடைய கூலி ஒப்பந்தம் பல வருடங்களுக்கு முன்பு பூர்த்தியாகியிருந்தபடியால், அவர் வேலை நிறுத்தம் செய்தவருமல்ல. நான் கைது செய்யப்பட்ட பின்பு, இந்தியர்கள் மிகவும் அதிகமான உற்சாகத்துடன், நேட்டாலிலிருந்து டிரான்ஸ்வாலுக்குள் மீறிப்போகும் போது பலர் கைது செய்யப்பட்டனர். அவர்களில் ஹர்பத் சிங்கும் ஒருவர்.

"நீங்கள் ஏன் சிறையில் இருக்கிறீர்கள்? உங்களைப் போல் வயதானவர்களைச் சிறை செல்லும்படி நான் அழைக்கவில்லையே" என்று நான் ஹர்பத் சிங்கைக் கேட்டேன்.

"எங்கள் பொருட்டு நீங்கள், உங்கள் மனைவி, ஏன், உங்கள் பிள்ளைகள்கூடச் சிறைக்குச் சென்றபோது நான் மாத்திரம் எப்படி போகாமல் இருக்கமுடியும்?" என்று பதில் அளித்தார் அவர்.

"ஆனால் நீங்கள் சிறை வாழ்க்கையின் கடுமைகளைச் சகிக்க முடியாது. நீங்கள் சிறையை விட்டுப் போகவேண்டும் என்று நான் யோசனை சொல்லுகிறேன். உங்கள் விடுதலைக்காக ஏற்பாடு செய்யட்டுமா?"

"தயை செய்து வேண்டாம். நான் சிறையைவிட்டு ஒரு போதும் போகமாட்டேன். எப்படியும் நான் ஒரு நாள் இறக்கத்தான் வேண்டும். நான் சிறையில் மரணம் அடைய நேர்ந்தால் அது எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்?"

அத்தகைய உறுதியை அசைக்க முயற்சி செய்வது முறையன்று; அதுவும் அசைந்திருக்காது. எழுத்து வாசனை அறியாத இந்த ஞானியின் முன்னிலையில், பக்தியினால் நான் தலை வணங்கினேன். ஹர்பத் சிங் தாம் விரும்பியபடியே டர்பன் சிறையில் 1914-ஆம் வருடம் ஜனவரி மாதம் 5-ஆம் தேதி மரணம் அடைந்தார். அவருடைய சடலம் நூற்றுக்கணக்கான இந்தியர்கள் முன்னிலையில், ஹிந்துமதச் சடங்குகளுடன், பெரிய கௌரவத்துடன் தகனம் செய்யப்பட்டது. சத்தியாக்கிரகப் போரில் ஒருவரல்ல பலர் ஹர்பத் சிங்கைப் போல் இருந்தனர். ஆனால், சிறையில் உயிர்விடும் பாக்கியம் அவருக்கு மாத்திரமே கிடைத்தது. ஆகவே, தென்னாப்பிரிக்கச் சத்தியாக்கிரக வரலாற்றில் அவர் பெயரைப் பெருமையுடன் குறிப்பது தகும்.

இங்ஙனம் ஜனங்களைச் சிறைக்குச் செல்லுமாறு ஈர்ப்பதும், விடுதலையான சிறைவாசிகள் வெளியில் இருப்பவர்களுக்கு என் செய்தியைச் சொல்லுவதும் சர்க்காருக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவர்கள் எங்கள் மூவரையும் (காலன்பாக், போலக், நான்) தனித்தனியாகப் பிரித்து வோல்க்ஸ்ரஸ்டிலிருந்து அனுப்பிவிடத் தீர்மானித்தார்கள். அதிலும் என்னை எந்த இந்தியனும் வந்து பார்க்க முடியாத ஓர் இடத்திற்கு அனுப்ப முடிவு செய்தார்கள். அதன்படியே ஆரஞ்சியாவின் தலை நகரான புளும்பாண்டினில் உள்ள சிறைக்கு என்னை அனுப்பினார்கள். அந்த ஊரில் ஐம்பதுக்கு மேற்பட்ட இந்தியர்கள் இல்லை. அவர்கள் அனைவரும் ஹோட்டல்களில் பரிசாரகர்களாக வேலை செய்து வந்தார்கள். அச்சிறையில் இருந்த கைதிகளில் நான் ஒருவன் மட்டுந்தான் இந்தியன்; மற்றவர்கள் ஐரோப்பியர்கள்,

நீக்ரோக்கள். இப்படி தனியாக இருப்பதைக் குறித்து நான் வருந்தவில்லே. அதற்கு மாருக அதை ஒரு பெரிய ஆசியாகக் கருதி வரவேற்றேன். என் கண்களேயும் காதுகளே யும் திறந்து வைத்துக்கொண்டிருக்க வேண்டிய அவசியம் இப்போது இல்லே. ஒரு புதிய அனுபவம் எனக்கு ஏற்படு மென்று சந்தோஷப்பட்டேன். வருடக்கணக்காக, அதிலும் 1893-ஆம் ஆண்டிலிருந்து, படிப்பதற்கே எனக்கு அவகாசம் கிடைக்காமலிருந்துவந்தது. ஆகவே எவ்வித இடையூறுமின்றிப் படிக்க ஒரு வருடம் கிடைத்ததே என்ற நினைப்பு என்னே மகிழ்ச் சியில் ஆழ்த்தியது.

நான் புளும்பாண்டின் சிறையை அடைந்தேன். அங்கே பல அசௌகரியங்கள் இருந்தன. ஆனல், அவை யனைத்தும் சகிக்கக்கூடியவையே. அவற்றை விவரித்து வாசகரை துன் புறுத்தமாட்டேன். ஆனல், சிறையின் வைத்திய அதிகாரி என்னுடைய நண்பரானுர் என்பதைமட்டும் நான் சொல்லித் தான் ஆகவேண்டும். சிறை அதிகாரி தம் அதிகாரங்களேப்பற்றி மாத்திரந்தான் நினைத்தார். ஆனல் டாக்டரோ கைதிகளின் உரிமைகள் குறையா வண்ணம் பாதுகாக்க விரும்பினுர். அந்த நாட்களில் வெறும் கனிகளே என் உணவு. பால், தானிய உணவு, நெய் போன்றவற்றை நான் சேர்த்துக்கொள்ளுவதில்லே. வாழைப்பழம், தக்காளிப்பழம், பச்சை நிலக்கடலே, எலுமிச்சம் பழம், ஆலிவ் எண்ணெய் ஆகியவற்ருல் ஆன உணவைக் கொண்டு நான் காலங்கழித்து வந்தேன். இவற்றில் ஏதாவது ஒன்று கெட்டு இருந்தாலும் அதன் முடிவு என்ன? நான் பட்டினி கிடக்க வேண்டியதுதான். ஆதலால் அவற்றைக் கடையிலிருந்து வாங்கும்போது டாக்டர் மிகவும் கவனமாக இருந்ததோடு, தாமாகவே என் உணவில் பாதாம் பருப்பு, அக்ரோட்டுப் பருப்பு, பிரேசில்நட் ஆகியவற்றையும் சேர்த்துக் கொடுத்தார். எனக்காகக்கொண்டுவரப்பட்ட உணவு அனேத்தை யும் தாமே நேரில் பரிசோதனே செய்தார். எனக்குக் கொடுக்கப் பட்ட அறையில் போதிய காற்ருேட்டம் கிடையாது. டாக்டர் என் அறையின் கதவுகளேத் திறந்தபடி வைப்பதற்குத் தம்மால் இயன்ற வரைக்கும் முயற்சி செய்தார். ஆனல், பயனில்லே. கதவுகள் திறந்து வைக்கப்பட்டால் தாம் ராஜீனுமாச் செய்து விடுவதாகச் சிறையதிகாரி மிரட்டினுர். அவர் அப்படி ஒன்றும் கெட்ட மனிதரல்ல. ஆனல் அவர் மனம் எப்போதும் ஒரே பாதையில் சென்றுகொண்டிருந்தபடியால் அதைவிட்டு விலகி

எதுவும் செய்ய முடியவில்லை. அவர் காவலுக்கு அடங்காத கைதிகளையும் கண்காணிக்க வேண்டி இருந்தது. ஆகவே என்னைப்போன்ற ஒரு சாதுவான கைதிக்கு அவர் கொஞ்சம் விட்டுக்கொடுத்தாலும் கொதிப்படைந்திருக்கும் மற்றச் சிறைவாசிகள் அவருக்கு அடங்காமல் அட்டகாசம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள். சிறை அதிகாரியின் இந்தப் போக்கை நான் முற்றிலும் உணர்ந்தேன். என் பொருட்டு அவருக்கும் டாக்டருக்கும் இடையே சச்சரவு உண்டாகும்போது எல்லாம், என் அனுதாபம், அனுபவம் வாய்ந்தவரும், நேர்மையுள்ளவரும், தம் நெறியைத் தெளிவாக உணர்ந்தவருமான சிறையதிகாரியின் பக்கமே இருந்தது.

ஸ்ரீ கால்லன்பாக் பிரிட்டோரியா சிறைக்கும், ஸ்ரீ போலக் ஜெர்மிஸ்டன் சிறைக்கும் கொண்டுபோகப்பட்டனர்.

ஆனால், சர்க்கார் இந்தத் தொந்தரவுகளை யெல்லாம் எளிதில் விலக்கியிருக்கலாம். ஸ்ரீமதி பார்டிங்க்டன், பொங்கிவரும் கடல் அலைகளைக் கையிலிருந்த துடைப்பத்தால் அடக்க முயன்ற கதைபோல்* இருந்தது அவர்கள் நிலைமை. நேட்டாலில் இருந்த இந்தியத் தொழிலாளர்கள் நன்றாக விழிப்புற்றனர். உலகத்தில் எந்தச் சக்தியும் அவர்களைத் தடுத்திருக்க முடியாது.

* அமெரிக்க ஆசிரியர் பி.பி. ஷில்லாபெர் இயற்றிய நூலில் வரும் ஒரு கதா பாத்திரமே ஸ்ரீமதி பார்டிங்க்டன். 'பார்டிங்க்டன் பாட்டியும் அவள் துடைப்பமும்' என்பது பின்னர் பேச்சு வழக்கில் புகுந்துவிட்டது. அந்த அம்மையாருக்குக் கடலோரமாக வீடு. ஒருநாள் கடல் பொங்கி, அலைகள் இவள் வீட்டினுள் புகுந்துவிட்டன. அவற்றைத் தன் துடைப்பத்தால் பெருக்கி அப்புறப்படுத்தப் பார்த்தும் முடியாமல்போய், மச்சுமேல் ஏறிக்கொண்டாள். முன்னேற்றத்தைக் குறிக்கும் எந்தக் கிளர்ச்சியையும் சிறு முயற்சிகளால் தடுத்துவிடவே முடியாது என்பதை 'பார்டிங்க்டன் பாட்டியும் அவள் துடைப்பமும்' என்ற இந்த வசனம் உணர்த்துகிறது. 1831–இல் பார்லிமெண்டு மேல்சபை, சீர்திருத்த மசோதாவைத் தள்ளிவிட்டபோது ஸிட்னி ஸ்மித், இந்த வசனத்தை உபயோகித்தாராம். 'வெள்ளத்துக்கு எதிரே ஒரு சிறு தடுப்பு என்ன செய்யும்?' என்ற பொருளே இதற்கு.

## நாற்பத்தாருவது அத்தியாயம்

# சோதனை

பொற் கொல்லர் பொன்னை உரைகல்லில் தேய்த்து மாற்றுப் பார்க்கிறுர். அதன் சுத்தத்தைப்பற்றித் திருப்தியில்லை யெனில் அதை நெருப்பிலிட்டுச் சுத்தியால் அடித்துக் கலப்பு உலோகத்தை அகற்றிவிடுகிறுர். அப்புறம் பசும்பொன்மாத்திரம் நிற்கிறது. தென்னுப்பிரிக்காவிலிருந்த இந்தியர்களும் இத்தகைய சோதனைகளுக்கு ஆளாகவேண்டி இருந்தது. அவர்கள் அடி பட்டார்கள்; துன்பப்பட்டார்கள். சோதனையில் எல்லா நிலை களையும் கடந்த பின்னரே அவர்கள் வெற்றியின் சின்னத்தைப் பெற்றனர்.

யாத்திரிகர்களைப் பிரத்தியேகமான ரெயிலில் அழைத்துச் சென்றது உல்லாசப் பிரயாணத்திற்காகவல்ல, நெருப்பின் மூலம் ஞானஸ்நானம் செய்விப்பதற்காகவே. வழியில் சர்க்கார் அவர்களுக்கு உணவு தருவதற்குக்கூட முயற்சி செய்யவில்லை. நேட்டாலை அடைந்தவுடன் விசாரணை நடத்தி நேராகச் சிறைக்கு அனுப்பிவிட்டார்கள். நாங்கள் எதிர்பார்த்ததும், விரும்பியதும் அதுவேதான். ஆனல், ஆயிரக்கணக்கான தொழிலாளர்களைச் சிறையில் வைப்பது சர்க்காருக்குச் செலவை அதிகரிப்பதுடன் இந்தியர்களின் தந்திரத்தில் சிக்கிக்கொள்ளுவது போலவும் ஆகி விடும். இதனல் இடைக்காலத்தில் நிலக்கரிச் சுரங்கங்களும் மூடப்பட்டிருக்கும். இந்த நிலைமை கொஞ்சகாலத்திற்கு நீடித் தால் சர்க்கார் மூன்று பவுன் வரியை ரத்து செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். ஆகவே, சர்க்காருக்கு ஒரு புது யுக்தி தோன்றியது. சர்க்கார், சுரங்கங்களைச் சுற்றிலும் இரும்புக் கம்பிகளால் வளைத்து அவற்றை டண்டீ, நியூகாஸில் சிறை களுக்குப் புற நிலையங்களென அறிவித்து, சுரங்க முதலாளி களுடைய ஐரோப்பியச் சிப்பந்திகளைச் சிறையதிகாரிகளாக நிய மித்தார்கள். இதன்மூலமாகத் தொழிலாளர்களை, அவர்கள் விருப்பத்திற்கு மாருகச் சுரங்கங்களுக்குள் அனுப்பிச் சுரங்க வேலையை மீண்டும் தொடங்க முடிந்தது. வேலைக்காரனுக்கும் அடிமைக்கும் ஒரு வேற்றுமை உண்டு. அதாவது, வேலைக்காரன் தன் வேலையைவிட்டு நீங்கினல்,அவன்மேல் ஒரு சிவில் வழக்கைத் தான் தொடரமுடியும். ஆனல், அடிமை தன் எஜமானனைவிட்டு ஓடினல், அவனை இழுத்துக்கொண்டு வந்து, வேலை செய்ய

வற்புறுத்த முடியும். ஆகவே, தொழிலாளர்கள் இப்போது முழு அடிமைகள் என்ற நிலைமைக்குக் கொண்டுவரப்பட்டனர்.

ஆனல், அத்துடன் தீர்ந்துவிடவில்லே. தொழிலாளர்கள், தைரியசாலிகள். சுரங்கங்களில் வேலே செய்ய ஒரேயடியாக மறுத்தார்கள். அதன் விளேவாக, இரக்கமின்றிக் கொடுமையாகச் சாட்டையால் அடிக்கப்பட்டார்கள். குறுகிய அதிகாரம் பெற்றிருந்த மரியாதை இல்லாத மனிதர், அவர்களே உதைத்து, வைது, ஒருபோதும் நடந்தறியாத பல குற்றங்களேயும் அவர்களிடம் செய்துவிட்டனர். ஆனலும் அந்த ஏழைத் தொழிலாளிகள், தங்கள் துன்பங்களேயெல்லாம் பொறுமையுடன் சகித்தனர். அந்தக் கொடுமைகளேப்பற்றி ஸ்ரீ கோகலே விலாசத்திற்கு இந்தியாவுக்குச் செய்திகள் தந்திமூலம் அனுப்பப்பட்டன. முழுதும் விவரமான செய்தி கிடைக்க ஒருநாள் தவறிவிட்டாலும், கோகலே உடனே அதைப்பற்றி விசாரித்துத் தந்தி அனுப்புவார். அந்தச் சமயத்தில் அவர் மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்தபடியால், தம் படுக்கையில் இருந்தபடியே, இந்த விவரங்களேயெல்லாம் எங்கும் பரவச்செய்தார். தம் நோயையும் பொருட்படுத்தாமல் தென்னப்பிரிக்க விஷயத்தைத் தாமே கவனிக்கவேண்டும் என்று பகலில் மாத்திரமல்ல, இரவிலுங்கூட அதில் ஈடுபட்டிருந்தார். கடைசியில் இந்தியா முழுவதிலும் பலத்த கிளர்ச்சியுண்டாகித் தென்னப்பிரிக்கப் பிரச்னே அந்த நாளில் முக்கியமான பெரிய பிரச்னேயாக இருந்தது எனலாம்.

அச்சமயந்தான் (டிசம்பர் *1913*), லார்டு ஹார்டிஞ்சு சென்னேயில் புகழ்பெற்ற சொற்பொழிவை நிகழ்த்தினர். அது, தென்னப்பிரிக்காவிலும் இங்கிலாந்திலும் பெரிய பரபரப்பை உண்டாக்கியது. வைசிராய், சாம்ராஜ்யத்தின் மற்ற அங்கத்தினரைக் குறை கூறி ஒரு பொதுக்கூட்டத்தில் பேசக்கூடாது. ஆனல், லார்டு ஹார்டிஞ்சோ, யூனியன் சர்க்காரைக் கடுமையாகக் குறை கூறியதோடல்லாமல், நியாயமற்றதும் துவேஷத்தை வளர்ப்பதுமான சட்டத்திற்கு எதிரே ஒத்துழையாமை இயக்கம் நடத்தின சத்தியாக்கிரகிகளின் செயலே முழுமனத்துடன் ஆமோதித்தும் பேசினர். லார்டு ஹார்டிஞ்சின் நடத்தையைக் கண்டித்து இங்கிலாந்தில் பேச்சுக்கள் எழுந்தன. ஆனல், அப்போதுகூட லார்டு ஹார்டிஞ்சு வருந்தவில்லே. ஆனல், அதற்குப் பதிலாகத் தாம் எடுக்கவேண்டியதாகி விட்ட நடவடிக்கை முழுவதும் நேரிது என்று அழுத்தமாகக் கூறினர். லார்டு ஹார்டிஞ்சின் உறுதி, எல்லா விதத்திலும் நல்ல விளேவை உண்டு பண்ணிற்று.

சுரங்கங்களில் சிறைப்பட்டிருந்த வீரம்மிக்கவரும், துன்பத்தில் உழல்பவருமான தொழிலாளர்களைச் சற்று விட்டுவிட்டு, நேட்டாலின் மற்றப் பகுதிகளில் என்ன நடக்கிறது என்று பார்ப்போம். சுரங்கங்கள், நேட்டாலின் வடமேற்குப் பாகத்தில் இருந்தன. ஆனல், இந்தியத் தொழிலாளர்களில் பெரும்பாலோர் வட, தென் கரையோரங்களில் வேலை செய்தனர். வட கரையிலிருந்த தொழிலாளர்களுடன் நான் சுமாராய்ப் பழகியிருக்கிறேன். அதாவது, போனிக்ஸிலும், அக்கம்பக்கமான வெருலம், டோங்காஸ்ட் முதலிய இடங்களிலும் எனக்குப் பரிச்சயம் உண்டு. அவர்களில் பலர் என்னுடன் போயர் யுத்தத்தில் பணியாற்றியிருந்தனர். தென் கரையில், டர்பனிலிருந்து இஸிபிங்கோ, உம்ஜிண்டோ வரையில் உள்ள தொழிலாளர்களை எனக்கு அவ்வளவு நன்ருகத் தெரியாது. அவ்விடத்தில் வெகு சில சக ஊழியர்தாம் இருந்தனர். ஆனல், வேலை நிறுத்தத்தையும் கைதிகளையும் பற்றிய செய்திகள் மின்வேகத்தைப்போன்று விரைவில் பரவிவிட்டன. ஆகவே, ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள், எதிர்பாராதபடி தாமாகவே தெற்கிலும், வட கரையிலும் வெளி வந்துவிட்டனர். போராட்டம் வெகு காலம் நீடிக்கும் என்ற எண்ணத்தில், தம் உணவுக்கும் மற்றவர்கள் கையை எதிர்பார்க்கக் கூடாது என்று கருதியவர்களாய், தங்கள் தட்டுமுட்டுச் சாமான்களை விற்றுவிட்டனர். நான் சிறைக்குச் சென்றபோது, உடனிருந்த ஊழியர்களிடம் இன்னும் அதிகமான தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்ய விடக்கூடாது என்று எச்சரித்திருந்தேன். சுரங்கத் தொழிலாளர்களைக்கொண்டே வெற்றி பெற முடியும் என்று நம்பியிருந்தேன். தொழிலாளர்கள் அனைவரும் மொத்தம் அறுபதாயிரம் பேர் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் அழைக்கப்பட்டுவிட்டால், அவ்வளவு பேரையும் பராமரிப்பது கஷ்டமாக இருந்திருக்கும். அத்தனை பேரை அணிவகுப்பில் சேர்த்துக்கொள்ள எங்களுக்குப் போதிய சௌகரியமில்லை; அவர்களைப் பார்த்துக்கொள்ளத் தலைவர்களுமில்லை. அவர்களுக்கு உணவு தரப் பணமுமில்லை. மேலும் அத்தனை பெரிய மனிதக் கூட்டத்தை வைத்துக்கொண்டு சமாதானத்திற்கு பங்கம் ஏற்படாமல் போராட்டத்தை நடத்துவதும் முடியாத காரியம்.

ஆனல், மடைகளைத் திறந்துவிட்டபின், வெள்ளத்தைத் தடுப்பது எங்ஙனம்? எல்லா இடங்களிலும் தொழிலாளர்கள்

தாமாகவே வேலை நிறுத்தம் செய்தனர். ஆங்காங்கு தொண்டர்களும் அவர்களைப் பார்த்துக்கொள்ளத் தயாராக முன்வந்தனர்.

சர்க்கார் இப்போது வன்மையும் கொடுமையும் நிறைந்த முறையைக் கையாண்டனர். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யாதபடி பலாத்காரமாகத் தடுத்தனர். குதிரையேறிய ராணுவப் போலீஸ்காரர்கள் வேலை நிறுத்தம் செய்வோரைத் துரத்திச் சென்று அவர்களைப் பிடித்து மீண்டும் வேலை செய்யக் கொண்டு வந்துவிட்டனர். தொழிலாளர்கள் செய்யும் ஒரு சிறு எதிர்ப்புக்கும் துப்பாக்கி வெடிதான் பதில். வேலை நிறுத்தம் செய்வோரின் கூட்டம் ஒன்று, தன்னை மீண்டும் வேலை செய்ய எடுத்துச் செல்லும் முயற்சியை எதிர்த்தது. சிலர் கற்களைக் கூட எறிந்தனர். உடனே துப்பாக்கிப்பிரயோகம் செய்யப்பட்டுச் சிலர் மாண்டு, வேறு பலருக்குக் காயங்கள் ஏற்பட்டன. ஆனாலும் தொழிலாளர்கள் பணிய மறுத்தனர். வெருலத்திற்கு அருகில் நடக்கவிருந்த வேலை நிறுத்தத்தைத் தொண்டர்கள் மிகச் சிரமத்துடன்தான் தடுக்க முடிந்தது. ஆனால், தொழிலாளர்கள் அனைவரும் வேலைக்குத் திரும்பவில்லை. சிலர் பயத்தால் மறைந்துகொண்டு வெளியே கிளம்பாமல் இருந்தனர்.

ஒரு நிகழ்ச்சி குறிப்பிடத் தகுந்தது. வெருலத்தில் பல தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்து வெளியே வந்துவிட்டார்கள். அதிகாரிகள் எவ்வளவு முயற்சி செய்தும் அவர்கள் திரும்ப மறுத்தனர். அவ்விடத்தில் ஜெனரல் லுக்கின் தம் சைனிகர்களுடன் வந்திருந்தார். துப்பாக்கிப் பிரயோகம் செய்யும்படி அவர் உத்தரவிடும் தறுவாயில் காலம்சென்ற பார்ஸி ருஸ்தம்ஜியின் மகனான தீரன் ஸோராப்ஜி, பதினெட்டு வயதுகூட நிரம்பாத இளைஞன், டர்பனிலிருந்து வந்திருந்தான். அவன் ஜெனரலின் குதிரையின் கடிவாளத்தைப் பற்றி, "துப்பாக்கிப் பிரயோகம் செய்யுமாறு நீர் உத்தரவிடக் கூடாது. எங்கள் ஜனங்கள் சமாதானமாக வேலைக்குத் திரும்புவதை நான் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்று கூவினான். அந்த வாலிபனின் ஆண்மையைக் கண்டு மயங்கிய ஜெனரல் லுக்கின், அவன் தன்னுடைய அன்பு வழியை உபயோகிக்கும் வாய்ப்பைத் தந்தார். ஸோராப்ஜி, தொழிலாளர்களிடம் காரணங்களை எடுத்துரைத்து, சமாதானம் செய்யவே, அவர்கள் வேலைக்குத் திரும்பினர். இப்படி ஒரு சிறுவனுடைய அன்பாலும், தைரியத்தாலும், சமயோசித புத்தியாலும் பெரும் படுகொலை தடுக்கப்பட்டது.

கடற்கரையோரத்தில், வேலை நிறுத்தம் செய்தவர்களின் மேல் சர்க்கார் நடத்திய துப்பாக்கிப் பிரயோகம் முழுவதும் சட்ட விரோதமானது என்பதை வாசகர்கள் கவனிக்கவேண்டும். சுரங் கத் தொழிலாளர்கள் விஷயத்தில் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை, வேலை நிறுத்தம் செய்த காரணத்திற்காக அல்ல என்றும், தகுந்த தஸ்தாவேஜுகள் இல்லாமல் டிரான்ஸ்வாலில் நுழைந்த குற்றத்திற்காகக் கைது செய்யப்பட்டனர் என்றும் கூறி யது, பார்வைக்குச் சட்டபூர்வமாகவே தோன்றும். ஆனல், வட கரையிலும், தென்கரையிலும் நடந்த வேலைநிறுத்தம், சட்ட ரீதி யாக இல்லாவிட்டாலும், சர்க்காரின் அதிகாரத்தினுலேயே குற்ற மெனக் கருதப்பட்டது. எந்தக் காரணமும் காட்டமுடியாதபோது கடைசி வழியாகச் சட்டத்தின் இடத்தை அதிகாரம் ஆக்கிரமித்துக் கொள்ளுகிறது. ஆங்கிலேய சட்டத்தில் 'அரசன் ஒருபோதும் தவறு இழைக்கமாட்டான்' என்ற ஒரு பழமொழி உண்டு. கடைசியாகப் பார்க்கப்போனல், அதிகாரத்தில் இருப்பவர் களுடைய சௌகரியங்கள்தாம் சட்டமாக மாறிவிடுகின்றன. இந்தக் குறையை எந்தச் சர்க்காரிடத்திலும் ஒரேவிதமாகக் காணலாம். சொல்லப்போனல், சாதாரணச் சட்டங்களை ஒதுக்கி விடுவது உண்மையில் எப்போதுமே தவறு என்று சொல்லிவிட முடியாது. சிலவேளைகளில் சாதாரணச் சட்டத்தை அனுசரித்துப் போவதே எதிர்ப்புக்குக் காரணமாகலாம். பொதுநலத்திற் காகப் பொறுப்பும் நிர்வாகமும் கொண்ட அதிகாரம், தனக்கு ஏற்பட்டுள்ள தடைகளால் அழிந்துபோகக்கூடிய ஆபத்து உண் டாகும்போது, அத்தடைகளைத் தன் அறிவைக் கொண்டு உதாசீனம் செய்ய உரிமையுண்டு. ஆனல், அப்படிப்பட்ட சந்தர்ப்பம் மிகமிக அரிதாக இருக்கவேண்டும். ஓர் அதிகாரம், அடிக்கடி தன் எல்லைகளை மீறும் பழக்கமுடையதாயின், அது பொதுநலத்திற்கு நன்மை பயப்பதாக இருக்கமுடியாது. இப் போது நாம் பார்த்துவரும் விஷயத்தில், ஆட்சி அதிகாரம் இப் படித் தம் விருப்பம்போல் நடந்துகொள்ளுவதற்கு எவ்விதமான காரணமும் இல்லை. நீண்ட காலம் தொட்டுத் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்யும் உரிமையை அனுபவித்து வந்திருக் கிருர்கள். வேலைநிறுத்தம் செய்தவர்கள் வெறும் குறும்புக்காக அங்ஙனம் செய்யவில்லை என்பதைக் காட்டச் சர்க்காரிடம் போதிய ஆதாரங்கள் இருந்தன. அதிகம் போனல், வேலை நிறுத்தம் மூன்று பவுன் வரியை ரத்து செய்வதில் முடியலாம். சமாதானத்துடன் இருப்போருக்கு எதிராகச் சமாதான முறை களைப் பிரயோகிப்பதுதான் நியாயம். மேலும், தென்னுப்பிரிக்

காவிலுள்ள ஆட்சி பொதுநலத்திற்காக இல்லாமல், பொது வாக இந்தியர்களிடம் பகைமை பாராட்டிய ஐரோப்பியர் களின் நன்மைக்காகவே இருந்தது. ஆதலால், அந்தப் பார பட்சமுள்ள அதிகாரம் எல்லா நியமங்களேயும் கட்டுப்பாடுகளே யும் மீறியது ஒருபோதும் சரியாகாது; மன்னிக்கமுடியாத குற்ற மும் ஆகும்.

ஆகவே, இந்நிகழ்ச்சி அதிகாரத்தைத் தவருகப் பயன்படுத் தியதாகும் என்பதுதான் எனது அபிப்பிராயம். அம்முறையால் தான் கோரிய முடிவை அது ஒருபோதும் அடையமுடியாது. அம்முறையால், சில வேளேகளில், தாற்காலிகமான வெற்றி கிடைக்கலாம். ஆனுல், அத்தகைய மாருன முறைகளின் மூல மாக நிரந்தரமான முடிவு உண்டாகாது. தென்னுப்பிரிக்காவில் எந்த வரியை நிலேநிறுத்துவதற்காக இத்தனேக் கொடுமைகளேச் செய்தார்களோ அந்த மூன்று பவுன் வரியைத் துப்பாக்கிப் பிரயோகமான ஆறு மாதங்களுக்குள் நீக்க நேர்ந்தது. துன்பம் பல சமயங்களில், பின்னர் இன்பம் வரக் காத்திருப்பதைக் காட்டுகிறது. தென்னுப்பிரிக்க இந்தியர்களின் வேதனேக் குரல் எல்லா இடங்களிலும் எதிரொலித்தது. ஓர் இயந்திரத்தில், ஒவ்வொரு பகுதிக்கும் அதற்கென்று ஒரு தனி இடம் இருப்பது போல், மனிதரால் ஆன இயக்கத்திலும் ஒவ்வோர் அம்சத்திற் கும் தனித்தனியான இடமுண்டு. எப்படி ஓர் இயந்திரம் துரு, தூசி முதலியவற்ருல் சிக்கப்படும்போது இயங்குவது கடின மாகுமோ அப்படியே, ஒரு மனித இயக்கத்தையும் தடுக்கக்கூடிய விஷயங்கள் பல உள. நாம் எல்லாரும் இறைவன் திருவுள்ளத் தின் கருவிகளாக மாத்திரம் இருக்கிரும். ஆதலால் நாம் முன் செல்வதற்கு எது உதவுகிறது, எது நமக்குத் தடையாக நிற்கிறது என்பதைப்பற்றி அடிக்கடி உணர முடிவதில்லே. ஆகவே நாம் கையாளும் முறைகளேப் பற்றிய அறிவோடு திருப்தி அடையவேண்டியதே. முறைகள் தூய்மையானவையாக அமைந் தால் நாம் அச்சமின்றி, முடிவை அதன் போக்கிற்கே விட்டு விடலாம்.

இந்தப் போராட்டத்தில் போராடுவோரின் துன்பம் அதி கரிக்க அதிகரிக்க, அவர்களுடைய குற்றமற்ற நிலேமை தெளி வாக ஆகிப் போராட்டத்தின் முடிவும் அணுகி வருவதைக் கண்டேன். மேலும், அத்தகைய பரிசுத்தமான, ஆயுதம் தாங் காத அகிம்சா போராட்டத்தில், அதை நடத்துவதற்குத் தேவை யான மனிதரோ, பணமோ, படையோ, உணவோ உரிய

வேளையில் கிடைப்பதையும் கண்டேன். இன்றுவரையிலும் நமக்கு முன்பின் தெரிந்திராத பல தொண்டர்கள் தாமாகவே உதவி அளித்திருக்கிருர்கள். அப்படிப்பட்ட தொண்டர்கள், சாதாரணமாகச் சுயநலத்தைப் பொருட்படுத்தாதவர்கள். தங்கள் சக்திக்கும் மீறிய, வெளிப்படையாகத் தெரிந்திராத சேவையை அமைதியுடன் செய்தனர். யாரும் அவர்களுடைய தொண்டைப் பற்றிப் பாராட்டி, அவர்களுக்குக் கௌரவப் பத்திரம் தரவில்லை. பேர் எடுக்காத, ஆனல் மதிக்கவொண்ணுத, எவருமே நினைவில் வைக்காத தங்கள் அன்பின் பணி, உறங்காது எதையும் கவனிக்கும் தெய்வத்தின் கண்ணுக்குத் தப்புவதில்லை என்ற விஷயம் அவர்களில் சிலருக்குத் தெரிந்திருக்காது.

தென்னுப்பிரிக்காவிலிருந்த இந்தியர், தம்மீது சுமத்தப்பட்ட சோதனைகளில் வெற்றியுடன் தேர்ந்து வந்தனர். அவர்கள் நெருப்பில் நுழைந்தும் பொசுங்காமல் வெளியேறினர். போராட்ட முடிவின் துவக்கம், மற்றோர் அத்தியாயத்தில் தனியாக விவரிக்கப்படும்.

## நாற்பத்தேழாவது அத்தியாயம்

# முடிவின் ஆரம்பம்

இந்தியர்கள் அமைதியான சக்தியை, தங்களால் முடிந்த அளவுக்கும் தங்களிடமிருந்து எதிர்பார்த்த அளவுக்கும் மேலாகவே உபயோகித்தார்கள் என்பதை வாசகர்கள் ஏற்கனவே பார்த்திருக்கிறார்கள். இந்தச் சாத்விக எதிர்ப்பாளரில் பெரும்பாலோர் ஏழைகள், ஒடுக்கப்பட்டவர்கள். இவர்களைக் கொண்டு எந்தவித நம்பிக்கையையும் வைக்க முடியாது என்பதையும் வாசகர்கள் பார்த்திருக்கிறார்கள். போனிக்ஸ் ஸ்தாபனத்தின் பொறுப்பு வாய்ந்த ஊழியர்களில் இரண்டு மூன்று பேர்களைத் தவிர மற்றவர்கள் அனைவரும், இப்போது சிறையில் இருந்தார்கள் என்பதும் வாசகர்களுக்கு நினைவிருக்கும். போனிக்ஸுக்கு வெளியே இருந்த ஊழியர்களில் காலஞ்சென்ற சேட் அகமத் முகம்மது காச்சலியா, ஸ்ரீ வெஸ்ட், கன்னி வெஸ்ட், மகன்லால் காந்தி ஆகியோர் இன்னும் சிறைபுகாமல் போனிக்ஸில்தான் இருந்தனர். காச்சலியா சேட், பொதுவாக யாவற்றையும் மேற்பார்த்து வந்தார். டிரான்ஸ்வாலின் கணக்கு வழக்கு முழுவதையும் கன்னி ஷிலெஸின் வைத்துக்கொண்டதுடன் எல்லையைத் தாண்டும் இந்தியர்களின் சௌகரியங்களையும் கவனித்து வந்தார். ஸ்ரீ வெஸ்ட் 'இந்தியன் ஒப்பினிய'னின் ஆங்கிலப் பகுதியையும், கோகலேயுடன் நடத்தும் தந்தித் தொடர்பையும் கவனித்து வந்தார். ஒவ்வொரு கணமும் புது மாறுதல்கள் தோன்றும். இந்தச் சமயத்தில் கடிதப் போக்குவரத்துப்பற்றி நினைப்பதற்கில்லை. கடிதங்களைப்போலவே நீண்ட தந்திகளைத்தான் அனுப்ப வேண்டியிருந்தது. அவற்றைப் பார்த்துக்கொள்ளும் நுட்பமான பொறுப்பை ஸ்ரீ வெஸ்ட் தாங்கினர்.

சுரங்க வட்டாரத்தில் நியூகாஸிலைப் போலவே வடகரையில் போனிக்ஸ், வேலைநிறுத்தம் செய்வோரின் நடுக்களமாயிற்று. அங்கே தங்குவதற்கும் யோசனை கேட்பதற்கும் நூற்றுக்கணக்கான வேலை நிறுத்தக்காரர்கள் வரலாயினர். ஆகவே, இயற்கையாகவே அது சர்க்காரின் கவனத்தைக் கவர்ந்து, அங்கிருந்த ஐரோப்பியர்களுடைய கோபத்தையும் தூண்டியது. போனிக்ஸில் வசிப்பதே சற்று ஆபத்தாக இருந்தது. ஆயினும், அங்கிருந்த குழந்தைகள்கூட ஆபத்து நேரக்கூடிய செயல்களைத் தைரியத்

துடன் சாதித்தனர். இதற்கு இடையில் ஸ்ரீ வெஸ்ட் கைது செய்யப்பட்டார். கூறப்போனுல், அவரைக் கைது செய்வதற்குக் காரணமே இல்லே. வெஸ்ட்டும், மகன்லால் காந்தியும் கைதாவதற்கு எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ளக்கூடாது என்பதும், கைதாகக் கூடிய எந்தச் சந்தர்ப்பத்தையும் விலக்கிக்கொள்ள வேண்டும் என்பதும் எங்கள் ஏற்பாடு. ஆகவே, சர்க்கார் தம்மைக் கைது செய்வதற்கு ஒருவிதமான ஏதுவையும் ஸ்ரீ வெஸ்ட் உண்டாக்கிக் கொள்ளவில்லே. ஆனுல், சத்தியாக்கிரகிகளுடைய சௌகரியத்தைப் பார்த்துச் சர்க்கார் காரியம்செய்யும் என்று எதிர்பார்க்க முடியாது. தங்களுக்குப் பிடிக்காதுபோனுல் சுதந்திரத்துடன் இருப்பவர்களேக் கைது செய்யத் தகுந்த சந்தர்ப்பத்திற்காக சர்க்கார் காத்திருக்க வேண்டிய அவசியமுமில்லே. அரசாங்கம் ஒரு நடவடிக்கை எடுக்க விரும்புவதே, அதை நடத்திக் காட்டத் தீர்மானித்து விட்டதென்று காட்டுகிறது. வெஸ்ட் கைதியான விஷயம் கோகலேக்குத் தந்திமூலம் தெரிந்தவுடனே அவர், இந்தியாவிலிருந்து திறமைவாய்ந்தவர்களே அனுப்பும் முறையை ஆரம்பித்தார். தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகிகளே ஆதரிப்பதற்காக லாகூரில் நடந்த கூட்டம் ஒன்றில், ஸ்ரீ. ஸி. எப். ஆண்ட்ரூஸ் தம்மிடமிருந்த பணத்தை எல்லாம் தென்னுப்பிரிக்கா இந்தியருக்காகத் தந்துவிட்டார். அப்பொழுதிலிருந்தே கோகலேக்கு அவர்மேல் கண். வெஸ்ட் கைதான செய்தியைக் கேள்விப்பட்டதும் ஆண்ட்ரூஸ் தென்னுப்பிரிக்காவிற்குச் செல்லத் தயாராக இருப்பாரா என்று தந்திமூலம் விசாரித்தார். ஆண்ட்ரூஸ் தாம் தயாராக இருப்பதாக உடனேயே பதில் கொடுத்தார். அவருடைய ஆப்த நண்பரான பியர்ஸனும் அவருடன் போக அதே சமயத்தில் தயாரானுர். இரு நண்பர்களும் தென்னுப்பிரிக்காவுக்குக் கிளம்பும் முதல் கப்பலில் இந்தியாவை விட்டுப் புறப்பட்டார்கள்.

ஆனுல், போராட்டம் முடியும் தருணம் இது. நிரபராதியானவர்களே ஆயிரக்கணக்கில் சிறையில் வைத்திருக்க யூனியன் சர்க்காருக்குச் சக்தியில்லே. வைசிராய் அதைச் சகிக்கவுமில்லே. அத்துடன், ஜெனரல் ஸ்மட்ஸ் என்ன செய்யப் போகிருர் என்று பார்க்க உலகமே காத்துக்கொண்டிருந்தது. அம்மாதிரி சந்தர்ப்பத்தில், சாதாரணமாக மற்ற சர்க்கார்கள் என்ன செய்வார்களோ அதையே இப்பொழுது யூனியன் சர்க்காரும் செய்யத் தீர்மானித்தது. எவ்விதமான விசாரணேயும் அவசியமாக இல்லே. சர்க்கார் இழைத்த தவறு எல்லாப் பக்கங்களிலும் அனேவருக்கும்

தெரிந்திருந்தது. அதை நிவர்த்திக்க வேண்டும் என்பதே அனே வரது கருத்தும் ஜெனரல் ஸ்மட்ஸ்கூட, அநியாயம் விளைவித்து விட்டதையும், அதற்கு நியாயம் செய்வது அவசியம் என்பதை யும் உணர்ந்தார். வாயில் எலியை வைத்துக்கொண்டு விழுங்கவும் முடியாமல் மெல்லவும் முடியாமலிருந்த பாம்பின் நிலை போன்ற ஒரு சங்கடத்தில் அவர் இருந்தார். அவர் கண்டிப்பாக நியாயம் செய்தாக வேண்டும். ஆனால், தாம் மூன்று பவுன் வரியை ரத்து செய்யப்போவதில்லை; வேறு எந்தச் சீர்திருத்தமும் கொண்டு வரப்போவதில்லை என்று அவர் தென்னாப்பிரிக்காவிலிருந்த ஐரோப்பியருக்கு வாக்குத் தந்திருந்தபடியால், நியாயத்தை நிலை நிறுத்தக்கூடிய சக்தியை இழந்துவிட்டார். ஆனால், இப்போதோ மூன்று பவுன் வரியை நீக்கி, வேறு பல நிவாரணச் சட்டங்களைக் கைக்கொள்ள வேண்டியதுமான நிர்ப்பந்தத்திற்கு ஆளானார். பொதுமக்களின் அபிப்பிராயத்தை முக்கியமாகக் கருதும் ராஜ் யங்கள், இப்படிப்பட்ட அவகேடான நிலைமையிலிருந்து தப்புவ தற்கு ஒரு கமிஷனை ஏற்படுத்துவதுண்டு. அக்கமிஷன் பேருக்கா வது ஒரு விசாரணை நடத்தி, முன்பே தீர்மானமாகியிருந்த முடிவு களைத் தம் சிபாரிசுகளாக வெளியிடுவதுண்டு. அப்படிப்பட்ட கமிஷனுடைய சிபாரிசுகளை ராஜ்யங்கள் ஏற்றுக்கொள்ளுவது மரபு. அந்தச் சிபாரிசுகளை நிறைவேற்றி வைப்பதுபோல,சர்க்கார் முன்பு தாம் மறுத்திருந்த நியாயத்தை வழங்குவதுண்டு. அங்ங னம் ஜெனரல் ஸ்மட்ஸும் மூன்று அங்கத்தினர் கொண்ட ஒரு கமிஷனை நியமித்தார். கமிஷன் விஷயமாகத் தங்கள் கோரிக்கை களைச் சர்க்கார் நிறைவேற்றாத வரைக்கும் அக்கமிஷனுடன் தாங்கள் எந்தவிதமான சம்பந்தமும் வைத்துக்கொள்ளுவதில்லை யென்று இந்தியர்கள் பிரதிக்ஞை செய்துகொண்டனர். அவர்கள் கோரியவற்றில் ஒன்று, சத்தியாக்கிரகக் கைதிகள் விடுதலை செய்யப்படவேண்டும் என்பது. மற்றொன்று, கமிஷனில் இந்தியர் ஒருவராவது அங்கத்தினராக இருக்கவேண்டும் என்பது. முதல் கோரிக்கை கமிஷனாலேயே ஓரளவுக்கு ஏற்றுக்கொள்ளப் பட்டது. தங்கள் விசாரணை சாத்தியமானவரை பூரணமான தாக இருக்கும்படி செய்வதை முன்னிட்டு ஸ்ரீ கால்லன்பாக், ஸ்ரீ போலக், நான் ஆகியோர் நிபந்தனையின்றி உடனே விடுதலை செய்யப்படவேண்டும் என்று கமிஷனே சர்க்காருக்குச் சிபாரிசு செய்தது. சர்க்கார், இந்தச் சிபாரிசை ஒப்புக்கொண்டு 1913-இல் டிசம்பர் 18-ஆம் தேதி, ஆறு வாரங்கூடப் பூர்த்தி யாகாத சிறைவாசத்திலிருந்து எங்கள் மூவரையும் ஒரே சமயத் தில் விடுதலை செய்தது. கைதியாக்கப்பட்ட ஸ்ரீ வெஸ்ட்டும்,

அவருக்கு விரோதமாக வழக்கு எதுவும் சர்க்காரிடம் இல்லாத படியால், விடுதலை செய்யப்பட்டார்.

ஆண்ட்ரூஸும் பியர்ஸனும் வருவதற்கு முன்பு இந்த நிகழ்ச்சிகளெல்லாம் நடந்தபடியால், அவர்கள் டர்பனுக்கு வந்து சேர்ந்தபொழுது அவர்களை நான் வரவேற்க முடிந்தது. கப்பல் பிரயாணத்திலிருந்தபோது, நடந்த எதையும் அவர்கள் அறியாம லிருந்தபடியால், என்னைக் கண்டதும் மகிழ்ந்ததோடு வியப்பும் அடைந்தனர். இந்த ஆங்கிலேய உத்தமர்களை நான் சந்தித்தது இதுதான் முதல் தடவை.

நாங்கள் விடுதலையானதைக் குறித்து நாங்கள் மூவருமே ஏமாற்றம் அடைந்தோம். வெளி நிகழ்ச்சிகள் ஒன்றும் எங்களுக் குத் தெரியாது. கமிஷனைப்பற்றிய செய்தி எங்களுக்கு அதிசய மாக இருந்தது. ஆனால் கமிஷனுடன் எந்தவிதத்திலும், முறை யிலும் நாங்கள் ஒத்துழைக்க முடியாததைக் கண்டோம். கமிஷ னுக்குத் தங்கள் பிரதிநிதியாக ஒருவரையாகிலும் நியமிக்க இந்தியர்களுக்குக் கண்டிப்பாக அனுமதியிருக்க வேண்டும் என்று நினைத்தோம். ஆகவே, நாங்கள் மூவரும் டர்பனை அடைந்த தும் ஜெனரல் ஸ்மட்ஸுக்கு *1913*-டிசம்பர் மாதம் *21*-ஆம் தேதி ஒரு கடிதம் எழுதினோம். அதன் சாராம்சமாவது:

'கமிஷன் நியமித்ததை நாங்கள் வரவேற்கிறோம். ஆனால், அதில் ஸ்ரீ எஸ்ஸெலெனையும், ஸ்ரீ வைலியையும் சேர்த்திருப்பதைக் கடுமையாக ஆட்சேபிக்கிறோம். தனித்த முறையில் அவர்களிடம் விரோதம் பாராட்டுவதற்கு எங்களுக்கு ஒன்றும் இல்லை. அனை வரும் அறிந்த நல்ல பிரஜைகள் அவர்கள். ஆனால், அவர்களிரு வரும் அடிக்கடி இந்தியர்களின் மேல் தங்களுக்குள்ள வெறுப் பைத் தெரிவித்துள்ளபடியால், தம்மை அறியாமலே அவர்கள் அநியாயம் செய்ய நேரிடலாம். மனிதன் தன் சுபாவத்தை திடீ ரென்று மாற்றிக்கொள்ள முடியாது. இன்று ஒருவிதமாக இருக் கும் இவர்கள் திடீரென வேறுவிதமாக மாறிவிடுவார்கள் என்று நினைப்பது இயற்கை நியதிக்கே முரணானதாகும். ஆயினும், கமிஷனிலிருந்து அவர்களை அகற்றிவிட வேண்டுமென்று நாங்கள் கேட்கவில்லை. அவர்களுடன் பாரபட்ச மற்றவர்கள் வேறு சிலரையும் நியமிக்க வேண்டுமென்றுதான் சொல்லுகிறோம். இது விஷயமாக, சர். ஜேம்ஸ் ரோஸ் இன்னஸ், கனம் டபிள்யூ. பி. ஷிரீனர் ஆகிய இருவரையும் குறிப்பிட விரும்புகிறோம்.

அவர்கள் நியாயமான தன்மை உள்ளவர்கள் என்று பெயர் வாங்கியவர்கள். இரண்டாவதாக, சத்தியாக்கிரகக் கைதிகள் அனைவரும் விடுதலை பெற வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளு கிறோம். அது செய்யப்படாவிட்டால் நாங்கள் சிறைக்கு வெளி யில் இருப்பது கஷ்டமாகும். சத்தியாக்கிரகக் கைதிகளை இன்ன மும் சிறையில் வைத்திருப்பதற்குக் காரணம் எதுவும் இல்லை. மூன்றாவதாக, நாங்கள் கமிஷனுக்கு முன்பாகச் சாட்சியம் கூற வேண்டுமாயின், ஒப்பந்தத் தொழிலாளர்கள் வேலை செய்யும் சுரங்கங்களுக்கும் தொழிற்சாலைகளுக்கும் போக எங்களை அனு மதிக்க வேண்டும். இந்த விண்ணப்பங்களுக்கு இணங்காவிட் டால், நாங்கள் சிறை செல்லுவதற்கான புதிய மார்க்கங்களை ஆராய வேண்டியிருக்கும் என்பதற்காக வருந்துகிறோம்.'

ஜெனரல் ஸ்மட்ஸ், கமிஷனில் மேற்கொண்டு புதிய உறுப் பினர்களை நியமிக்க மறுத்துவிட்டார். கமிஷன் எந்த ஒரு கட்சிக்காகவும் நியமிக்கப்படவில்லை என்றும், அது சர்க் காரின் திருப்திக்காகவே அமைக்கப்பட்டதென்றும் சொன்னார். டிசம்பர் 24-ஆம் தேதி, இந்தப் பதில் கிடைத்ததும், சிறைக்குச் செல்லத் தயாராவதைத் தவிர வேறு வழி எங்களுக்குத் தோன்றவில்லை. ஆகவே ஓர் இந்திய கோஷ்டி சிறையை நாடி டர்பனிலிருந்து அணிவகுத்துச் செல்வது, 1914-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி ஆரம்பமாகும் என்ற அறிவிப்பை இந்தியர்கள் தெரிந்துகொள்ளுவதற்காக நாங்கள் பிரசுரித் தோம்.

ஆனால், ஜெனரல் ஸ்மட்ஸ் எழுதிய கடிதத்தில் கண்ட ஒரு வாக்கியம் என்னை அவருக்கு மறுபடியும் எழுதும்படி தூண்டியது. அது இதுதான்: "நாங்கள் பாரபட்சமற்ற நீதிபதிகள் அடங்கிய ஒரு கமிஷனை நியமித்திருக்கிறோம். அதை நியமிக்கும்போது, நாங்கள் இந்தியர்களுடன் கலந்துகொள்ள வில்லை என்றால், சுரங்க முதலாளிகள், கரும்புத்தோட்ட முதலாளிகள் இவர்களுடனும் நாங்கள் கலந்துகொள்ளவில்லை." சர்க்கார் உண்மையாகவே நியாயம் வழங்க வேண்டும் என்று நினைத்தால், ஜெனரல் ஸ்மட்ஸை நான் சந்தித்து, அவரிடம் சில உண்மைகளைப் பற்றிப்பேச வேண்டுமென அவருக்குத் தனிப்பட எழுதினேன். பேட்டி கேட்ட என் வேண்டுகோளுக்கு ஜெனரல் ஸ்மட்ஸும் இணங்கினார். அதற்கேற்ப, அணிவகுத்துச் செல்லு தல் சில தினங்களுக்கு ஒத்திப்போடப்பட்டது,

நாங்கள் ஒரு புதிய அணிவகுப்பு யாத்திரைக்கு யோசனை செய்துகொண்டிருக்கிறோம் என்பதை கோகலே கேள்வியுற்ற போது, அத்தகைய நடவடிக்கை லார்டு ஹார்டிஞ்சையும், தம்மையும் ஒரு சங்கடமான நிலைமைக்குக் கொண்டுபோய் விடும் என்றும், ஆகையால் நாங்கள் அந்த எண்ணத்தைக் கைவிட்டுக் கமிஷன் முன் சாட்சியம் கொடுத்து உதவ வேண்டும் என்றும் ஒரு நீண்ட தந்தி மூலம் அவர் தெரிவித்திருந்தார்.

நாங்கள் இருதலைக் கொள்ளி எறும்பு போல் ஆனோம். கமிஷனுடைய அங்கத்தினர்களைத் தங்கள் விருப்பம்போல் அதிகரிக்காவிட்டால், கமிஷனைப் பகிஷ்காரம் செய்வதென்று இந்தியர் பிரதிக்ஞை செய்துகொண்டிருந்தார்கள். அது லார்டு ஹார்டிஞ்சை வருத்தப்படுத்தும், கோகலேக்கும் துன்பம் தரும். ஆனால், எங்கள் பிரதிக்ஞையிலிருந்து நாங்கள் எப்படிப் பின் வாங்க முடியும்? கோகலேயின் உணர்ச்சிகள், அவர்களுடைய நொவ்விய தேகநிலை, நாங்கள் கொண்ட தீர்மானம் அவருக்குக் கொடுக்கக்கூடிய அதிர்ச்சி ஆகியவற்றைத் தீர யோசித்துப் பார்க்கும்படி ஆண்ட்ரூஸ்* எங்களுக்குச் சொன்னார். ஆனால், உண்மையில் இந்த விஷயங்கள் என் மனத்துள்ளும் இருந்தன. தலைவர்கள் ஒரு கூட்டம் கூடி, முடிவாகக் கமிஷனில் வேறு அங்கத்தினர்களைச் சேர்க்காவிடில் பகிஷ்காரம் செய்துதான் ஆகவேண்டுமென்ற தீர்மானத்திற்கு வந்தார்கள். ஆகவே நாங்கள் நூறு பவுன் செலவு செய்து கோகலேக்கு ஒரு நீண்ட தந்தியை அனுப்பினோம். எங்கள் தந்தியின் சாராம்சத்தை ஆண்ட்ரூஸும் ஆமோதித்தார். அதன் கருத்து பின்வருமாறு:

'தங்களுக்கு எவ்வளவு வருத்தம் என்பதை நாங்கள் உணருகிறோம். நிறையத் தியாகம் செய்தாகிலும் உங்கள்

* ஆண்ட்ரூஸ், சார்லஸ் பிரீர் (1871–1940) பிரிட்டிஷ் பாதிரியார். இந்தியாவில் மதப் பிரசாரத்துக்காக வந்து நாற்பது ஆண்டுகள் இந்நாட்டின் நலத்துக்கெனப் பணியாற்றினார். 1913–இல் கவி ரவீந்திரர் அமைத்த சாந்திநிகேதன் குருகுலத்தில் சேர்ந்து போதகாசிரியராக இருந்தார். கவியின் பல சிறுகதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். காந்திஜி தென்னாப்பிரிக்காவில் நடத்திய சத்தியாக்கிரக இயக்கம் இவரை வெகுவாகக் கவர்ந்தது. அதற்குத் தம் பூரண ஆதரவைத் தந்தார். பிஜித் தீவுகள், கெனியா, பிரிட்டிஷ் கயானா முதலிய இடங்களில் ஒப்பந்தக் கூலிகளாகக் குடியேறியிருந்த பாரத மக்களின் நலன்களைப் பாதுகாக்க அவ்விடங்களுக்குச் சென்றார். இவர் எளிய வாழ்க்கையும் உயர்ந்த நோக்குமுடையவர். காந்திஜியிடம் இவருக்கிருந்த நட்புறவும் பக்தியும் இவரை ஓர் இந்தியராகவே நினைக்கும்படி செய்தன. 'தீனபந்து' (எளியவர் நண்பன்) எனப் பொருள் தரும் அடைமொழியால் இவர் எல்லோராலும் போற்றப் பட்டார். "காந்திஜியின் கருத்துக்கள்" என்று இவர் எழுதிய நூல், இவருக்கு மகாத்மாவிடம் இருந்த பெருமதிப்பை உணர்த்தும்.

யோசனையைப் பின்பற்ற விரும்புகிறோம். லார்டு ஹார்டிஞ்சு எங்களுக்கு செய்த உதவி மதிப்பிட முடியாதது. அது கடைசி வரையில் எங்களுக்குக் கிடைக்கவேண்டும் என்றும் விரும்பு கிறோம். ஆனால், எங்கள் நிலைமையை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டுமென்று ஆவலாக இருக்கிறோம். அது ஆயிரக்கணக்கான வர்கள் எடுத்துக்கொண்ட பிரதிக்ஞையைப் பற்றியது. அந்தப் பிரதிக்ஞைக்கு எவ்வித விதிவிலக்கும் போடமுடியாது. எங்கள் போராட்டம் முழுதும் பிரதிக்ஞைகளால் ஆன அஸ்தி வாரத்தின்மேல் நிற்பது. நாங்கள் மேற்கொண்ட பிரதிக்ஞை களில் கட்டுப்பாடென்ற சக்தி இல்லாமலிருந்தால், இன்று எங் களில் பலர் பின்வாங்கியிருப்போம். தங்கள் பிரதிக்ஞை களிலிருந்து ஆயிரக்கணக்கானவர்கள் தவறியிருந்தால், அது உடனே எல்லா தார்மிகக் கட்டுத்திட்டங்களையும் பாழாக்கி விடக்கூடும். நன்றாக, பூரணமாக ஆலோசனை செய்த பிறகே பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளப்பட்டது. அதில் தருமத்துக்கு முரணானது ஒன்றுமில்லை. பகிஷ்காரம் செய்வதற்குப் பிரதிக்ஞை எடுத்துக்கொள்ளச் சமூகத்துக்கும் பூரண உரிமை உண்டு. எது வரினும், இப்படிப்பட்ட பிரதிக்ஞையை அகிம்சா முறையில் தவறாமல் கடைப்பிடிக்கவேண்டும் என்று நீங்களும் எங்களுக் குப் புத்திமதி புகட்டவேண்டும் என்பதே எங்கள் விருப்பம். இந்தத் தந்தியைத் தயை செய்து லார்டு ஹார்டிஞ்சுக்குக் காட்டுங்கள். உங்களை எவ்விதத் தவறான நிலைமையிலும் கொண்டு விடாமலிருக்க நாங்கள் விரும்புகிறோம். கடவுளைச் சாட்சியாகவும், அவருடைய உதவி ஒன்றையே பற்றுக்கோடா கவும் கொண்டு இந்தப் போராட்டத்தை நாங்கள் ஆரம் பித்திருக்கிறோம். பெரியவர்கள், முதியவர்கள் இவர்களுடைய உதவியை நாங்கள் விரும்பித் தேடுகிறோம். அது கிடைக்கும் போது மகிழ்ச்சியடைகிறோம். அப்படிப்பட்ட உதவி கிடைத் தாலும் கிடைக்காவிட்டாலும், பிரதிக்ஞையை எப்படியும் காப் பாற்றவேண்டும் என்ற அபிப்பிராயத்தைத் தாழ்மையுடன் மேற்கொண்டிருக்கிறோம். அதைக் கடைப்பிடிப்பதில் உங்கள் உதவியும் ஆசியும் எங்களுக்கு வேண்டும்.'

இந்தத் தந்தி கோகலேக்குச் சேர்ந்ததும் அவருடைய தேக நிலையை அது மிகவும் பாதித்தது. ஆனாலும், அவர் குறையாத, ஏன் முன்னைவிட அதிகமான உற்சாகத்துடன் எங்களுக்குத் தொடர்ந்து உதவி செய்து வந்தார். இந்த விஷயத்தை உடனே லார்டு ஹார்டிஞ்சுக்குத் தந்தி மூலம்

தெரிவித்தார். ஆனால், அதில் அவர் எங்களை விட்டுக் கொடுக்காமல் நின்றதுடன் நாங்கள் பூண்டிருந்த உறுதியையும் ஆதரித்துப் பேசினர். லார்டு ஹார்டிஞ்சும் அசைந்து கொடுக்கவில்லை.

நான் ஆண்ட்ரூஸுடன் பிரிட்டோரியாவுக்குப் போனேன். இதே சமயத்தில் யூனியன் ரெயில்வேக்களிலுள்ள ஐரோப்பியத் தொழிலாளிகள் ஒரு பெரிய வேலை நிறுத்தம் செய்தனர். அது சர்க்காரின் நிலைமையை மிகவும் மோசமாக்கிற்று. அந்தச் சாதகமான சந்தர்ப்பத்தில் இந்திய அணிவகுப்பு யாத்திரையை ஆரம்பிப்பதற்கு என்னை அழைத்திருந்தனர். சர்க்காரைத் துன்புறுத்துவது இந்தியர்களது நோக்கமல்ல; அவர்களுடைய போராட்டம் முற்றிலும் வேருனது; வேறு உருவங் கொண்டது. அதனுல் இந்தியர்கள் ரெயில்வே வேலை நிறுத்தம் செய்தவர்களுக்குத் துணையாக இருக்கமாட்டார்கள் என அறிவித்தேன். நாங்கள் அணிவகுத்துச் செல்வதைத் தொடங்குவதாயிருப்பினும், அதை வேறொரு சந்தர்ப்பத்தில், ரெயில்வே சச்சரவுகள் எல்லாம் முடிந்தபின்பு துவங்குவதென முடிவு செய்தோம். எங்களுடைய இந்தத் தீர்மானம் எல்லோர் மனத்திலும் பதிய ஊன்றியது. ராய்ட்டரால் இங்கிலாந்திற்குத் தந்தி மூலம் பரவியது. லார்டு ஆம்ப்தில் இங்கிலாந்திலிருந்து தம் பாராட்டுகளைத் தந்தி மூலம் தெரிவித்தார். தென்னுப்பிரிக்காவிலிருந்த ஆங்கிலேய நண்பர்களும் எங்கள் தீர்மானத்தைப் புகழ்ந்தனர். ஜெனரல் ஸ்மட்ஸுடைய காரியதரிசிகளில் ஒருவர் தமாஷாக என்னிடம், "உங்கள் ஜனங்களைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை, அவர்களுக்கு உதவி செய்ய நான் துளியேனும் அக்கறை கொள்ளவில்லை. ஆனுலும், நான் என்ன செய்வது? எங்களுக்குச் சமயத்தில் நீங்கள் உதவுகிறீர்கள். நாங்கள் எப்படி உங்கள் மேல் கை வைக்க முடியும்? ஆங்கிலேய வேலை நிறுத்தக்காரரைப் போல் நீங்களும் இம்சை முறைகளைக் கையாளக்கூடாதா என்று நான் அடிக்கடி விரும்புவதுண்டு. அப்போது உங்களை அடியோடு தொலைத்து விடுவதற்கான வழி எங்களுக்குப் புலனுகும். ஆனுல், நீங்கள் சத்துருவைக்கூடத் துன்புறுத்தமாட்டீர்கள். துன்பத்தை அனுபவித்தே வெற்றி பெற விரும்புகிறவர்கள் நீங்கள். நீங்களாக வகுத்துக்கொண்ட வீரம், மரியாதை இவற்றின் வரம்புகளை ஒருபோதும் நீங்கள் மீறிச்செல்வதில்லை. அதுதான் எங்களை முழுவதும் உதவியற்ற நிலைக்குக் கொண்டு வந்து விடுகிறது"

என்று சொன்னர். இம்மாதிரியே தம் உணர்ச்சிகளை ஜெனரல் ஸ்மட்ஸும் வெளியிட்டிருந்தார்.

சத்தியாக்கிரகிகள் மற்றவர்களுடைய சௌகரியத்தைக் கருதி உண்மையான வீர உணர்ச்சியுடன் நடந்தது, இது முதல் தடவை அன்றென நான் வாசகருக்குத் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை. வட கரையிலிருந்த இந்தியத் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தபோது, மௌண்ட் எட்ஜ் கோம்பிலிருந்த முதலாளிகள், முன்னுள் வெட்டப்பட்டிருந்த கரும்பனைத்தும் ஆலைக்குக் கொண்டு வந்து சாறு பிழிந்திருக்காத பட்சத்தில் பெருத்த நஷ்டத்திற்கு ஆளாகியிருப்பார்கள். ஆதலால் அந்த வேலையை முடித்துத் தருவதற்கென்றே 1,200 தொழிலாளிகள் திரும்பிச் சென்று, அது முடிந்த பின்னரே தங்கள் சகாக்களுடன் கலந்து கொண்டனர். இதுவன்றி, டர்பன் முனிஸிபாலிடியின் இந்தியத் தொழிலாளிகள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டபோது, பேட்டைகளில் பொதுச் சுத்தம் செய்தல், ஆஸ்பத்திரியில் நோயாளிகளைக் கவனிப்பது போன்ற வேலைகளில் இருந்தவர்களைத் திருப்பி அனுப்பி விட்டோம். அவர்களும் மனம் இசைந்து தம் கடமைகளை ஆற்றத் திரும்பிச் சென்றனர். சுத்தம் செய்யும் வேலை தடைப்பட்டு, ஆஸ்பத்திரியிலுள்ள நோயாளிகளைக் கவனிக்க ஆள் இல்லாவிட்டால், நகரத்தில் தொற்று நோய் அல்லவா தோன்றும்? நோயாளிகளுக்குத் தேவையான வைத்திய உதவியும் கிடைக்காது. இம்மாதிரி விளைவுகளை எந்தச் சத்தியாக்கிரகியும் விரும்பமாட்டான். ஆதலால் இப்படிப்பட்ட தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்வதிலிருந்து விலக்கப்பட்டிருந்தார்கள். சத்தியாக்கிரகி, தான் எடுத்துவைக்கும் ஒவ்வோர் அடியிலும் தன் எதிராளியின் நிலையை யோசித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறுன்.

இந்த மாதிரியான சுத்த வீரமே சிறந்து நின்ற கணக்கற்ற சந்தர்ப்பங்கள் இருந்தன; கண்ணுக்குப் புலனுகாது போனுலும் அதன் சக்திமிகுந்த அடையாளம் எங்கும் இருந்தது. அதனுல் இந்தியர்க்குரிய மதிப்பும் உயர்ந்து, முடிவில் உடன்படிக்கை ஏற்படுவதற்கான சூழ்நிலையையும் உண்டாக்கியதை நான் பார்க்க முடிந்தது.

## நாற்பத்தெட்டாவது அத்தியாயம்

# தாற்காலிகமான ஒப்பந்தம்

இவ்வாறு ஒப்பந்தத்திற்கு அனுகூலமான சூழ்நிலை அமைந்து வந்தது. நானும் ஸ்ரீ ஆண்ட்ரூஸும் பிரிட்டோரியா சென்ற அதே சமயத்தில், லார்டு ஹார்டிஞ்சு ஒரு பிரத்தியேகமான கப்பலில் அனுப்பியிருந்த ஸர் பென்ஜமின் ராபர்ட்ஸன் வர இருந்தார். ஆனால், நாங்கள் ஜெனரல் ஸ்மட்ஸ் குறித்திருந்த தினத்தில் பிரிட்டோரியாவில் இருக்கவேண்டி வந்ததால், ஸர் பென்ஜமின் ராபர்ட்ஸனுக்காகக் காத்திராமல் புறப்பட்டு விட்டோம். இறுதி முடிவு, எங்கள் சக்தியைச் சார்ந்து இருந்தால், நாங்கள் அவருடைய வருகைக்காகக் காத்திருக்க வேண்டிய அவசியமுமில்லை.

நானும் ஸ்ரீ ஆண்ட்ரூஸும் பிரிட்டோரியாவை அடைந்தோம். ஆனால், ஜெனரல் ஸ்மட்ஸிடம் பேட்டிக்குப் போகவேண்டியவன் நான் மட்டுந்தான். ஜெனரல், ரெயில் வேலை நிறுத்தத்தை சமாளிக்கும் வேலையில் முற்றும் ஈடுபட்டிருந்தார். யூனியன் சர்க்கார், அவசரச் சட்டம் அமலுக்குக் கொண்டு வரவேண்டிய படுமோசமான நிலைமைக்கு ரெயில்வே வேலை நிறுத்தம் வந்துவிட்டது. ஐரோப்பிய ரெயில்வே தொழிலாளிகள் சம்பள உயர்வைக் கோரியதுடன் சர்க்காரின் அதிகாரத்தையே தங்கள் கைக்குப் பறித்துக்கொள்ளுவதற்கும் முயற்சி செய்தார்கள். ஜெனரல் ஸ்மட்ஸுடன் எனது முதல் பேட்டி வெகு குறுகியதாக இருந்தது. ஆனால், ஜெனரல் ஸ்மட்ஸ் முன்னர் பெரிய அணிவகுப்பு யாத்திரை ஆரம்பமான நாளில் நிமிர்ந்து மிடுக்காக இருந்ததைப்போல் இப்போது இருக்கவில்லை. அன்று ஜெனரல் ஸ்மட்ஸ் என்னுடன் பேசக்கூட விரும்பவில்லை. சத்தியாக்கிரகத்தின் பயமுறுத்தல் இன்று போலத்தான் அன்றும் இருந்தது. ஆயினும், அன்று எங்களுடன் கலந்து சமரசம் பேச மறுத்தார். இன்றோ, என்னுடன் கலந்து பேசத் தயாராக இருந்தார்.

தங்கள் நலன்களை எடுத்துக் காட்டும்பொருட்டு இந்திய அங்கத்தினர் ஒருவரைக் கமிஷனில் சேர்த்துக்கொள்ளும்படி இந்தியர் கேட்டிருந்தார்கள். ஆனால், இவ்விஷயத்தில் ஜெனரல் ஸ்மட்ஸ் விட்டுக்கொடுக்கவில்லை. "அது ஆகாத காரியம்.

அப்படிச் செய்வது சர்க்காரின் கௌரவத்தைக் குறைப்பதாகும். விரும்பும் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதற்கும் முடியாமற் போய்விடும். ஸ்ரீ எஸ்ஸெலென் எங்கள் ஆள். அவர் சீர்திருத்த விஷயத்தில் சர்க்காரின் விருப்பங்களுக்கு இணங்குவாரே தவிர எதிர்க்கமாட்டார் என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். கர்னல் வைலி, நேட்டாலில் செல்வாக்குள்ள ஒரு மனிதர். அவர் இந்தியருக்கு விரோதமானவர் என்றும் சொல்லலாம். ஆகவே, அவர்கூட மூன்று பவுன் வரியை ரத்து செய்வதற்கு இசைந்தால், சர்க்காரது வேலை எளிதாகிவிடும். எங்களுக்கு உள்ள உபத்திரவங்களோ பல. ஒரு கணங்கூட விட்டு வைப்பதற்கில்லை. ஆகவே, நாங்கள் இந்தியப் பிரச்னையைத் தீர்த்து வைக்க விரும்புகிறோம். உங்கள் கோரிக்கைகளை வழங்கத் தீர்மானித்திருக்கிறோம். ஆனால், அதற்குக் கமிஷனிலிருந்து சிபாரிசு வரவேண்டும். உங்கள் நிலைமையையும் நான் புரிந்து கொண்டுள்ளேன். கமிஷனில் இந்திய அங்கத்தினர் ஒருவர் அமரும்வரை அதன்முன் சாட்சியம் தருவதில்லை என்று நீங்கள் உறுதியை வெளியிட்டிருக்கிறீர்கள். நீங்கள் சாட்சியம் கூறாது போனாலும் நான் பொருட்படுத்தமாட்டேன். ஆனால், நீங்கள் சாட்சி கூற விரும்புகிறவர்களைத் தடுக்க எவ்விதமான பிரசாரமும் செய்யக்கூடாது. இடையே சத்தியாக்கிரகத்தையும் நிறுத்தி வைக்கவேண்டும். அப்படி செய்வதால் உங்களுக்கு நன்மையும் எனக்குச் சற்று ஓய்வும் கிடைக்கும் என்று நம்புகிறேன். நீங்கள் சாட்சி சொல்லப்போவதில்லையாகையால் இந்திய வேலை நிறுத்தக்காரருக்கு இழைத்திருக்கும் கொடூரங்களைப்பற்றிய உங்கள் குறைகளை நிரூபிக்க முடியாமல் போய்விடுமே! இதைப்பற்றி யோசனை செய்வது உங்கள் பொறுப்பு" என்று சொன்னார்.

ஜெனரல் ஸ்மட்ஸுடைய யோசனைகள் மேற்கண்டவாறு இருந்தன. அவற்றை மொத்தத்தில் சாதகமானவையாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்தேன். வேலை நிறுத்தம் செய்தவர்களைச் சிறை வார்டர்களும் சிப்பாய்களும் கொடூரமாக நடத்தியது பற்றி நாங்கள் நிறையப் புகார்கள் செய்திருந்தோம். ஆனால், சங்கடம் என்னவெனில், கமிஷனை நாங்கள் பகிஷ்கரித்து விட்டதால், எங்கள் குறைகளை நிரூபிக்க முடியாமல் போயிற்று. இவ்விஷயத்தில் இந்தியர்கள் இடையே அபிப்பிராயபேதம் இருந்தது. சிப்பாய்களுக்கு எதிராக இந்தியர்கள் செய்திருந்த குற்றச்சாட்டுகளை நிரூபித்துத்தான் ஆகவேண்டுமென்று சிலர் கருதினர். ஆதலால், கமிஷனுக்கு முன்பாகத் தங்கள் சாட்சி

களைத் தரமுடியாமற் போனலும், எங்கள் வசம் இருந்த உண்மையான சாட்சியங்களைப் பிரசுரித்து, மானநஷ்டமான அச்செயலுக்கு சவால்விட வேண்டும் என்றனர். அந்த நண்பர்களது அபிப்பிராயத்தை நான் ஒப்புக்கொள்ளவில்லை. சர்க்காருக்குப் பாதகமாகக் கமிஷன் தீர்மானம் தருவதான ஒரு நிலை ஏற்படவே ஏற்படாது. மானநஷ்டம் பற்றிய வழக்குத் தொடுப்பது, சமூகத்திற்கு முடிவில்லாத தொந்தரவையே தரும். அதன் மொத்த விளைவு, அவர்கள் புரிந்த அநீதிகளை நிரூபித்ததோடுமட்டும் நிற்கும்; அந்த ஒரு திருப்திதான் உண்டாகும். நான் வழக்கறிஞனபடியால், மான நஷ்டம் உண்டாக்கும் உரைகளின் உண்மையை நிரூபிப்பது எவ்வளவு கடினம் என்பது எனக்குத் தெரியும். ஆனல், என்னுடைய பலமான வாதம் யாதெனில், சத்தியாக்கிரகி துன்பப்படுவதற்கெனவே துணிந்திருக்கிருன் என்பது. சத்தியாக்கிரகம் ஆரம்பிப்பதற்கு முன்பே, தங்களுடைய சாவு பரியந்தங்கூடக் கஷ்டப்பட வேண்டி இருக்கும் என்று சத்தியாக்கிரகிகளுக்குத் தெரியும். அப்படிப்பட்ட துன்பத்தைச் சகிக்க அவர்கள் தயாராகவும் இருந்தனர். நிலைமை அப்படி இருக்க, அவர்கள் கஷ்டப்பட்டார்கள் என்று இப்பொழுது நிரூபிப்பதில் அர்த்தம் இல்லை. வஞ்சம் தீர்த்துக்கொள்ளுவது என்ற போக்கு சத்தியாக்கிரகத்திற்கு மாருனது. துன்பத்தைத் தரும் பெரிய சங்கடங்கள் ஏற்படும்போது அமைதியாக இருப்பதுதான் ஒரு சத்தியாக்கிரகிக்கு உகந்தது. அடிப்படைக் கொள்கைகளுக்காக மாத்திரமே சத்தியாக்கிரகி போராடுகிருன். அந்த அடிப்படையான கொள்கை என்னவெனில், ஆபாசமான சட்டங்கள் நீக்கப்படவாவது வேண்டும் அல்லது சரியாகத் திருத்தியாவது அமைக்கப்பட வேண்டும் என்பதே. இது கைக்கு எட்டுவது அண்மையில் இருக்கும்போது, மற்ற விஷயங்களைப்பற்றி அவன் கவலைப்படக்கூடாது. அதுவன்றி, அநியாயமான சட்டங்களை எதிர்த்துப் போராடும்போது இருந்த சத்தியாக்கிரகியின் மௌனம் அவனுக்கு ஒப்பந்தச் சமயத்திலும் உற்ற துணையாக இருக்கவேண்டும். இப்படிப்பட்ட அபிப்பிராயபேதம் கொண்டிருந்த நண்பர்களில் பலரை என் பக்கத்திற்கு வாதங்களால் நான் இழுக்க முடிந்தது. கொடுமையாக நடத்தப்பட்டது பற்றிய புகார்களை நிரூபிக்கவேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிடவும் தீர்மானித்தோம்.

## நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்

# கடிதப் பரிவர்த்தனை

பல தடவைகள் சந்தித்துப் பேசியதன் விளைவாக ஏற்பட்டிருந்த ஒப்பந்தத்தை எழுத்து மூலம் பதிவாக்கும் வண்ணம் எனக்கும் ஜெனரல் ஸ்மட்ஸுக்குமிடையே கடிதத் தொடர்பு இருந்து வந்தது. நான் 1914-ஆம் வருடம் ஜனவரி மாதம் 21-ஆம் தேதி எழுதின கடிதத்தின் சாராம்சம் பின்வருமாறு:

"கமிஷன் இப்போது அமைக்கப்பட்டிருக்கும் முறையில் அதன் முன்னிலையில் சாட்சியம் தருவதற்கு மனச்சாட்சி சம்பந்தமான ஆட்சேபங்கள் எங்களுக்கு இருக்கின்றன; தாங்களும் எங்கள் போக்கை ஒப்புக்கொண்டு அது கௌரவமானது என்று பாராட்டுகிறீர்கள். ஆனாலும், உங்கள் தீர்மானத்தை மாற்றிக் கொள்ள முடியாதவர்களாய் இருக்கிறீர்கள். எனினும் தாங்கள் இந்தியர்களைக் கலந்துகொள்ளுவது என்ற கொள்கையை ஒப்புக் கொண்டிருக்கிறபடியால், கமிஷனுடைய முடிவுகள் வெளியாகும் வரையிலும், அடுத்தபடி சட்டசபை கூடும் போது சட்டம் கொண்டு வரப்படும் வரையிலும் எவ்விதமான தீவிரப் பிரசாரத்திலும் இறங்கி கமிஷனுடைய வேலைக்குத் தடையை உண்டாக்கக்கூடாது என்றும், மீண்டும் சத்தியாக்கிரகத்தை ஆரம்பித்துச் சர்க்காரின் நிலையை மோசமாக்கக் கூடாதென்றும் என் நாட்டினருக்கு நான் யோசனை சொல்லுகிறேன். வைசிராயால் அனுப்பப்பட்ட ஸர் பென்ஜமின் ராபர்ட்சனுக்கும் இதனுல் நாங்கள் மேலும் உதவியாக இருக்கக்கூடும்.

"கமிஷனுடன் எந்தச் சம்பந்தமும் வைத்துக்கொள்ளுவதில்லை என்று நாங்கள் பிரதிக்ஞை செய்து கொண்டிருப்பதால், இந்தியரின் வேலை நிறுத்தம் நடந்துகொண்டிருந்தபோது நிகழ்ந்த கொடுமையான நிகழ்ச்சிகளைப்பற்றிய குற்றச்சாட்டுகளைப் பொறுத்தவரையில் நாங்கள் கமிஷன் முன்னுல் அவற்றை நிரூபிக்கவேண்டிய வழி அடைபட்டுவிட்டது. நாங்கள் சத்தியாக்கிரகிகளாக இருப்பதால், தனிப்பட்ட ஆளுக்கு இழைத்த கொடுமைகளைப்பற்றிய எங்கள் கோபங்களை முடிந்தவரையில் விலக்க முயற்சி செய்கிறோம். ஆனாலும், நாங்கள் மௌனமாக இருப்பது தவறான கருத்தை உண்டாக்காமல் இருப்பதை முன்னிட்டுத் தாங்கள், எங்கள் நோக்

கத்தை ஒப்புக்கொண்டு, சாட்டப்பட்ட புகாரைப்பற்றிக் கமிஷன் முன்னிலையில் மறுப்பதற்கான சாட்சியம் எதுவும் விடப் படாமல் இருக்குமாறு உங்களை நாங்கள் கேட்டுக்கொள்ளலாமா?

"மேலும் சத்தியாக்கிரகத்தை நிறுத்திவைப்பது என்பதில், சத்தியாக்கிரகக் கைதிகளை விடுவிக்க வேண்டும் என்ற வேண்டு கோளும் சேர்ந்திருக்கிறது.

"பரிகாரம் கோரப்பட்ட விஷயங்களைத் திரும்ப ஞாபகப் படுத்திக் கொள்ளுவது இங்கே பொருத்தமற்றதாகாது:—

1. மூன்று பவுன் வரியை ரத்து செய்வது.
2. ஹிந்து, இஸ்லாம் முதலிய மதச் சம்பிரதாயப்படி நடத் தப்பட்ட திருமணங்களைச் சட்டப்படி செல்லு மென்ருக்குவது.
3. கல்வி பெற்ற இந்தியர் புக அனுமதிப்பது.
4. ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டைப்பற்றிய வாக்குறுதியில் மாறுதல்.
5. இந்தியர்களைப் பாதிப்பதாக ஏற்கனவேயுள்ள சட்டங் களை, நியாயப்படி அவர்களுக்கு உரியதான நல வுரிமைக்குப் பாதகம் இல்லாத வகையில் அமலுக் குக் கொண்டு வருவதாக உறுதிமொழி.

"எனது கோரிக்கைக்குத் தாங்கள் சம்மதித்தால், இக் கடிதத்தில் கண்டிருப்பதற்கு ஏற்றபடி என் நாட்டினருக்கு யோசனை சொல்ல நான் தயாராக இருக்கிறேன்."

அதே தேதியில் ஜெனரல் ஸ்மட்ஸ் அனுப்பிய பதில் பின் வரும் தோரணையில் இருந்தது :

"நீங்கள் கமிஷன்முன் ஆஜராக முடியாமல் இருப்பதைக் குறித்து வருந்துகிறேன். ஆனல், அப்படிச்செய்வது உங்களால் முடியாமலிருப்பதையும் புரிந்துகொள்ளுகிறேன். மற்ருெரு நியாயக் குழுவினர் முன்பு மானநஷ்ட நடவடிக்கைக்காக வழக் குத் தொடர்ந்து மீண்டும் பழைய புண்களை நீங்கள் கிளற விரும் பாததன் நோக்கத்தையும் அறிகிறேன். இந்திய வேலை நிறுத்தக் காரர்களுக்குக் கொடுமைகள் இழைக்கப்பட்டன என்ற குற்றச் சாட்டை சர்க்கார் ஒப்புக்கொள்ள மறுக்கிறது. ஆனல், அந்தக் குற்றச்சாட்டுகளை நிரூபிக்க நீங்கள் சாட்சியங்களை விடப் போவதில்லையாதலால், சர்க்கார் தனது அதிகாரிகளின் நடத்தை சரியானதே என்று காட்ட மறுப்புச் சாட்சியங்

களை விடுவது வீணானது. சத்தியாக்கிரகக் கைதிகளைப் பொறுத்த வரையில் அவர்களை விடுதலை செய்யும்படி உங்கள் கடிதம் வருவதற்கு முன்னரே சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்கள். உங்கள் கடிதத்தின் கடைசி பாகத்தில் குறித்துள்ள குறைகளைப் பற்றி மேற்கொண்டு நடவடிக்கை எடுப்பதற்கு முன் சர்க்கார் கமிஷனின் சிபாரிசுகளுக்காகக் காத்திருப்பார்கள்.''

இந்தக் கடிதப் பரிவர்த்தனைக்கு முன்னர் ஸ்ரீ ஆண்ட்ரூஸும் நானும் ஜெனரல் ஸ்மட்ஸைப் பலமுறை கண்டு பேசி வந்தோம். ஆனால், இடையில் சர் பென்ஜமின் ராபர்ட்சனும் பிரிட்டோரியாவுக்கு வந்து சேர்ந்தார். அவர், எல்லோராலும் விரும்பப்பட்ட அதிகாரியாகக் கருதப்பட்டார். கோகலேயிட மிருந்து ஒரு சிபாரிசுக் கடிதமும் கொண்டுவந்திருந்தார். ஆனால், ஆங்கிலேய அதிகாரிகளுக்கு வழக்கமாக இருக்கும் குறை பாடுகளுக்கு அவர் முழுவதும் விலக்கானவராக இருக்க வில்லை என்று நான் கண்டேன். அவர் வந்து சேர்ந்த உடனேயே, இந்தியர்களுக்குள் பிரிவினைகளை உண்டாக்க ஆரம்பித்ததோடு சத்தியாக்கிரகிகளைப் பயமுறுத்தவும் தலைப்பட்டார். பிரிட்டோரியாவில் நான் அவரை முதல் தடவையாகச் சந்தித்தபோது, அவர் நல்லவரென்று முன்கூட்டி எதுவும் அதிகமாக நான் நினைக்க வில்லை. அவருடைய பயமுறுத்தல் நடவடிக்கைகளைப் பற்றி எனக்கு வந்திருந்த தந்திகளைக் குறித்து அவரிடம் கூறினேன். எல்லோரையும் போலவே, அவரையும் நான் மனம் விட்டுப்பேசி நேர்மையான முறையில் நடத்தினேன். ஆதலால், நாங்கள் நண்பர்களானோம். ஆனால், யார் தங்களுக்கு அடங்கிப் பணி கிறார்களோ அவர்களை அதட்டி மிரட்டுவதும், யார் தங்களிடம் பணியாமல் நடந்து கொள்ளுகிறார்களோ, பணியமாட்டார்களோ அவர்களிடம் சரியாக நடந்துகொள்ளுவதும் அதிகாரிகளுக்குரிய தன்மை என்று நான் அடிக்கடி கண்டிருக்கிறேன்.

இப்படி நாங்கள் ஒரு தாற்காலிகமான ஒப்பந்தத்திற்கு வந்தோம். சத்தியாக்கிரகப் போராட்டமும் கடைசித் தடவை யாக நிறுத்தி வைக்கப்பட்டது. அதைப்பற்றிப் பல ஆங்கி லேய நண்பர்கள் மகிழ்ச்சியுற்று, முடிவான ஒப்பந்தத்திற்குத் தாங்கள் உதவி செய்வதாகவும் வாக்களித்தார்கள். இந்த முடிவுகளை இந்தியர்கள் ஆமோதிக்கும்படிச் செய்வது கஷ்ட மாக இருந்தது. பொங்கி எழுந்திருந்த உற்சாகத்தை அடங்க விடுவது ஒருவருக்கும் பிடிக்காது. அதுவுமல்லாமல் ஜெனரல் ஸ்மட்ஸை யார்தாம் நம்புவார்கள்? 1908-ஆம் ஆண்டில்

நிகழ்ந்துவிட்ட குழப்பத்தை நினைவுறுத்திச் சிலர், ''ஜெனரல் ஸ்மட்ஸ் ஏற்கனவே ஒரு முறை நம்மை ஏமாற்றியிருக்கிறார். நீங்கள் புதுப் பிரச்னைகளை எழுப்புவதாக அடிக்கடி குற்றம் சாட்டியிருக்கிறார். அதனால் சமூகத்தை எல்லையில்லாத் துன்பத்திற்கு உட்படுத்தியிருக்கிறார். அப்படியிருந்தும், அவரை நம்பாமல் இருப்பதற்கு அவசியமான பாடத்தை நீங்கள் கற்காமல் போனது எவ்வளவு வருந்தத்தக்கது. இந்த மனிதன் உங்களை மறுபடியும் மோசம் செய்வார். பிறகு நீங்கள் மீண்டும் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்க நினைப்பீர்கள். ஆனால், அப்பொழுது யார் உங்கள் பேச்சைக் கேட்பார்கள்? நினைத்தபோதெல்லாம் மக்கள் சிறைக்குச் செல்லவும், ஒவ்வொரு தடவையும் தோல்வியை ஏற்றுக்கொள்ளவும் தயாராக இருக்கவும் முடியுமா? ஜெனரல் ஸ்மட்ஸ் போன்ற மனிதருடன் ஒப்பந்தத்திற்கு வழி ஏற்பட வேண்டுமாயின், தாம் சொன்னபடியே அவர் செய்தால்தான் முடியும். அவர் தரும் வாக்குறுதிகளை பெற்றுக்கொள்ளுவதால் மாத்திரம் பயனில்லை. ஒருவர் வாக்குத் தந்துவிட்டு உடனே மீறின பிறகு, அவரை எப்படி மீண்டும் நாம் நம்பமுடியும்?'' என்றனர்.

இவ்வாறான விவாதங்கள் வரும் என்று எனக்குத் தெரியுமாதலால் நான் அவற்றைக் கேட்டு ஆச்சரியப்படவில்லை. எத்தனை முறை சத்தியாக்கிரகி மோசம் பண்ணப்பட்டாலும், அவநம்பிக்கைக்குரிய சரியான காரணம் இராதவரையில், அவன் தன் எதிராளியை நம்பத்தான் செய்வான். ஒரு சத்தியாக்கிரகிக்கு இன்பத்தைப் போன்றதே துன்பம். ஆதலால், ஆதாரமற்ற அவநம்பிக்கையினால் துன்பத்தை எண்ணி அவன் வழி தவறமாட்டான். அதற்கு மாறாக, எப்போதும் போல் தன் சுயபலத்திலேயே நம்பிக்கையுடையவனாக இருப்பதால் தன் எதிராளியே துரோகம் பண்ணினாலும் பொருட்படுத்தாமல், பல தடவை மோசடி செய்யப்பட்டிருந்ததையும் எண்ணிப் பாராமல் தொடர்ந்து அவனை நம்பி, அதன் மூலமாகச் சத்தியத்தின் சக்திகளை வலுப்படுத்தி வெற்றியை விரைவில் கொண்டு வருபவனாகவே இருப்பான். ஆகவே, பல இடங்களில் கூட்டங்கள் நடத்தப்பட்டன. கடைசியாக ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை ஒப்புக்கொள்ளும்படி இந்தியரை நான் திருப்பமுடிந்தது. இந்தியர்களுக்கு இப்போது சத்தியாக்கிரகத்தின் தன்மையைப்பற்றி முன்னைவிட நன்றாகத் தெரிந்தது. தற்போதைய ஒப்பந்தத்திற்கு ஸ்ரீ ஆண்ட்ரூஸ்தான் மத்தியஸ்தராகவும் சாட்சியாகவும் இருந்தார். இந்திய சர்க்காரின் பிரதிநிதியான சர் பென்ஜமின் ராபர்ட்

சனும் இருந்தார். ஆகவே, பின்னால் ஒப்பந்தம் மறுக்கப்படக் கூடும் என்ற சாத்தியம் மிக மிகக் குறைவு. நான் அந்த ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளப் பிடிவாதமாக மறுத்திருந்தால், அது இந்தியர்களுக்கு விரோதமான குற்றச்சாட்டுக்கு ஒருகாரணமாகி, அடுத்த ஆறு மாதங்களில் கிடைத்த வெற்றிக்கும் பல வழிகளில் தடைகளை உண்டாக்கி இருக்கும். ‘மன்னித்து விடுவது ஒரு வீரனுக்கு அலங்காரம்’ என்ற வடமொழி வாக்கியத்தின் ஆசிரியர், சத்தியாக்கிரகிகள் ஒருபோதும், ஒருவருக்கும் தங்களிடம் குற்றங் கண்டுபிடிக்க வாய்ப்புத் தரமாட்டார்கள் என்று அனுபவ வாயிலாக நன்கு உணர்ந்ததிலிருந்துதான் கூறியிருக்கிறார். அவநம்பிக்கை பலவீனத்தின் சின்னம். சத்தியாக்கிரகத்தின் பொருள், எதிரியை அழிக்காமல், நம் பக்கம் திருப்புவதாகும். இதற்குக் கொஞ்சமும் பொருத்தமில்லாததான எல்லாப் பலவீனத்தையும் அகற்றுவதும் அவநம்பிக்கையை விட்டுவிடுவதும் அவசியமாகிறது.

ஒப்பந்தத்தை இவ்விதம் இந்தியர்கள் ஒப்புக்கொண்ட பின்னர், நாங்கள் யூனியன் பார்லிமெண்டின் அடுத்த கூட்டத்திற்காகக் காத்துக்கொண்டிருப்பதுதான் பாக்கியாக இருந்தது. இடையில் கமிஷன் தன் வேலையில் இறங்கியது. இந்தியர் சார்பாக ஒரு சில சாட்சிகளே அதற்கு முன்னால் ஆஜரானார்கள். அவர்கள் சமூகத்தினிடம் சத்தியாக்கிரகிகளுக்கு இருந்த மகத்தான செல்வாக்கைக் காட்டி வெட்ட வெளிச்சமான சாட்சியம் தந்தார்கள். பல பேர்களைச் சாட்சிக்காக வரும்படி ஸர் பென்ஜமின் ராபர்ட்சன் தூண்டிப் பார்த்தார். ஆனால், பலிக்கவில்லை. இந்தியரில் சத்தியாக்கிரகிகளுக்கு மிகவும் விரோதமாய் இருந்த ஒரு சிலர்தாம் முன்வந்தார்கள். கமிஷனைப் பகிஷ்காரம் செய்ததால் கெட்ட விளைவு ஒன்றும் இல்லை. கமிஷனின் வேலை குறைந்தது; அறிக்கையும் உடனே வெளியிடப்பட்டது. இந்தியர்கள் உதவி செய்யப் பின்வாங்கியதைக் கமிஷன் பலமாகக் கண்டித்ததோடு, சிப்பாய்கள் கொடுமைகளைச் செய்தார்களென்று கூறப்பட்டு வந்த குற்றச்சாட்டுகளை நிராகரித்தது. ஆனால், இந்தியச் சமூகத்தின் மீதிருந்த மூன்று பவுன் வரியை ரத்து செய்வது, இந்திய விவாகங்களைச் சட்டபூர்வமாக்குவது போன்ற கோரிக்கைகளனைத்திற்கும் தாமதமின்றி இணங்கவேண்டும் என்றும், மேலும் சிறு சலுகைகளும் தரவேண்டும் என்றும் சிபாரிசு செய்திருந்தது. இவ்வாறு ஜெனரல் ஸ்மட்ஸ் முன்னால் அறிவித்தபடி கமிஷனின் அறிக்கை இந்தியர்

களுக்குச் சாதகமாக இருந்தது. ஸ்ரீ ஆண்ட்ரூஸ் இங்கிலாந்திற்கும், ஸர் பென்ஜமின் ராபர்ட்சன் இந்தியாவிற்கும் புறப்பட்டனர். கமிஷனின் சிபாரிசுகளைக் காரியத்தில் நிறைவேற்றுவதற்குத் தேவையான சட்டங்களைச் செய்வதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று எங்களுக்கு வாக்குறுதியும் கிடைத்தது. அந்தச் சட்டம் என்ன என்றும், அது எப்படி கொண்டுவரப் பட்டதென்றும் அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.

## ஐம்பதாவது அத்தியாயம்

# போராட்டத்தின் முடிவு

அறிக்கை வெளிவந்த கொஞ்ச காலத்திற்குள், அரசாங்கம் தனது யூனியன் கெஜட்டில், இந்தியர்களுக்கும் தங்களுக்கும் உள்ள நீண்ட காலத் தகராறு தீர்வதற்கான சமரசத்தை உண்டாக்கும் வண்ணம், 'இந்தியர் பரிகார மசோதா'வை வெளியிட்டது. யூனியன் பார்லிமெண்ட் சபை கூடுமிடமாகிய கேப் டவுனுக்கு நான் உடனே சென்றேன். அந்த மசோதாவில், 'எங் இந்தியா' என்ற செய்தித்தாளின் இரண்டு பத்தியில் அடங்கிவிடக்கூடிய ஒன்பது பிரிவுகளே இருந்தன. ஒரு பிரிவு இந்திய மணங்களைப்பற்றியது. ஒருவருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிமார் இருந்தால், அவர்களில் ஒருத்தியே தென்னாப்பிரிக்காவில் சட்டப்படி அவருடைய மனைவியாகக் கருதப்படுவாள் என்பதைத் தவிர, இந்தியாவில் செல்லுபடியாகக் கூடிய மற்றத் திருமணங்களைத் தென்னாப்பிரிக்காவில் அது சட்ட பூர்வமாக்கிற்று. இரண்டாவது பகுதி, ஒப்பந்தக் கூலியாக வந்த இந்தியர் ஒப்பந்த காலம் முடிந்ததும் தாய்நாட்டுக்குத் திரும்பாமல் தென்னாப்பிரிக்காவிலேயே சுதந்திரப் பிரஜையாக நிலைத்துவிட்டால், ஆண்டுதோறும் அனுமதி வரியாகத் தரும் மூன்று பவுனை ரத்து செய்தது. மூன்றாவது பகுதி, சர்க்காரால் நேட்டாலிலுள்ள இந்தியர்களுக்கு அவர்களுடைய விரல் முத்திரையுடன் அளிக்கப்பட்ட குடியேற்றப் பத்திரங்களை, ஆள் அடையாளம் ஸ்தாபிக்கப்பட்டவுடன், யூனியனுக்குள் நுழைவதற்குத் தீர்மானமான அத்தாட்சிகளெனக் கருதவேண்டியது என்பது. யூனியன் பார்லிமெண்டில் இந்தச் சட்டத்தைப்பற்றி நீண்டதும் சந்தோஷகரமானதுமான விவாதம் நடந்தது.

இந்தியப் பரிகார மசோதாவில் இடம் பெறாத நிர்வாக விஷயங்களைக் கடிதங்கள்மூலம் நானும் ஜெனரல் ஸ்மட்ஸும் தீர்த்துக்கொண்டோம். உதாரணமாக, கேப் காலனிக்குள் படித்த இந்தியர் நுழைவதற்கான அவர்களது உரிமையைப் பாதுகாத்தல், 'தனிப்பட்ட விலக்குச்சலுகை' பெற்ற படித்த இந்தியர்கள் தென்னாப்பிரிக்காவில் புகும்படி அனுமதித்தல், கடந்த மூன்று ஆண்டுகளில் தென்னாப்பிரிக்காவுக்கு வந்துள்ள படித்த இந்தியரின் நிலைமையைச் சரிப்படுத்துவது, இப்பொழுதுள்ள ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் தென்னாப்பிரிக்

காவில் தம் கணவரிடம் வந்து சேர அனுமதித்தல் ஆகிய வற்றைக் கூறலாம். இந்த விவரங்கள் அனைத்தையும் முடித்த பின்பு, 1914-ஆம் வருடம் ஜூன் மாதம் 30-ஆம் தேதி ஜெனரல் ஸ்மட்ஸ் எனக்கெழுதிய கடிதத்தில் வருமாறு கூறியிருந்தார்:

"ஏற்கனவே இருக்கும் சட்டங்களை அமல் நடத்தும் விஷயத்தில் சர்க்காரின் விருப்பம், எப்போதும் போல இனி மேலும், அவை நியாயமான முறையில் உரிமைகளைப் பாதிக்காத வண்ணம் அமல் செலுத்தப்படவேண்டும் என்பதாகும்."

அந்தக் கடிதத்திற்கு நான் கீழ்வருமாறு பதிலளித்தேன்: "இன்று உங்கள் கடிதம் கிடைக்கப் பெற்றேன். நம் பேச்சுக்களின் போது நீங்கள் காட்டிய மரியாதைக்கும் பொறுமைக்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

"சத்தியாக்கிரகப் போராட்டம், 1906 செப்டம்பரில் ஆரம்பமாயிற்று. அதனால் இந்திய சமூகத்திற்குச் சரீர சம்பந்தமாக எவ்வளவோ துன்பங்களும் நஷ்டங்களும் ஏற்பட்டன. அரசாங்கத்திற்கும் மிகக் கவலையும் சங்கடங்களும் உண்டாயின. ஆனால், இந்தியர் பரிகார மசோதா நிறைவேறியதன் மூலமும் இக்கடிதப் போக்குவரத்தின் மூலமும் சத்தியாக்கிரகப் போராட்டம் கடைசியாக முடிவடைகிறது.

"உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்; நான் இன்னும் இழுத்துப் பார்க்கவேண்டும் என்று என் நாட்டினர் சிலர் விரும்பினார்கள் என்பது. பல மாகாணங்களில் அமலிலுள்ள வியாபார அனுமதிச் சட்டங்கள், டிரான்ஸ்வால் தங்கச் சட்டம், டிரான்ஸ்வால் நகர்ப்புறச் சட்டம், 1885-ஆம் வருடத்திய டிரான்ஸ்வால் மூன்றும் சட்டம் ஆகியவை சொத்து, நிலம், வியாபாரம், குடியிருப்பு முதலியவற்றில் தங்களுக்குப் பூரண உரிமை தரும்படியாக மாற்றியமைக்கப்படவில்லை என்ற அதிருப்தி அவர்களுக்கு. ஒரு மாகாணத்தை விட்டு இன்னொரு மாகாணம் செல்வதற்கு முழு அனுமதி கிடைக்கவில்லை என்று ஒரு சிலருக்கும், இந்திய பரிகாரச் சட்டம் விவாக விஷயத்தில் இருக்கும் நிலையைவிட வேறு எதுவும் சாதித்துவிடவில்லை என்று வேறு சிலருக்கும் அதிருப்தியே. மேற்கண்ட விஷயங்கள் அனைத்தும் சத்தியாக்கிரகப் போராட்டத்தின் நோக்கங்களாகச் சேர்க்கப்படவேண்டுமென்று என்னைக் கேட்டிருக்கிறார்கள். அவர்கள் விருப்பத்திற்கு இணங்க என்னால் முடியவில்லை. ஆதலால் சத்தியாக்கிரகத் திட்டத்தில் அவற்றைச் சேர்க்கவில்லையாயினும் என்றாவது ஒரு நாள் இதுபோன்ற விஷயங்களைச் சர்க்கார் அனுதாபத்துடன்

கவனிக்கும் வாய்ப்பு வரும் என்பதை மறுக்க முடியாது. தென்னுப்பிரிக்காவில் குடியேறியுள்ள இந்தியர்களுக்கு வாழ்க்கை உரிமைகள் முழுவதும் வழங்கும்வரை பூரண ஆறுதலை எதிர் பார்க்க முடியாது.

"பொறுமையைக் கடைப்பிடிக்கவேண்டும் என்றும், தங்களால் இயன்ற அளவு கௌரவமான வழிகளில் சர்க்கார் இந்த ஒப்பந்தத்தில் கண்டதற்கு மேற்கொண்டும் செல்லும் படிச் செய்ய பொதுஜன அபிப்பிராயத்தை வளர்த்து நிலையைப் பக்குவமாக்கவேண்டும் என்றும் நான் என் தேசத்தினரிடம் கூறியிருக்கிறேன். இப்பொழுது இந்தியாவிலிருந்து ஒப்பந்தத் தொழிலாளிகளை வரவழைப்பது தடுக்கப்பட்டிருப்பதால், கடந்த ஆண்டின் குடியேறுவோர் தடைச் சட்டம் மேலும் இந்தியர் சுதந்திரமாக இங்கே வருவதை நிறுத்திவிட்டது. என் தேசத்தினருக்கு அரசியல் ஆசை எதுவும் கிடையாது; இதன் உண்மையைத் தென்னுப்பிரிக்காவிலுள்ள ஐரோப்பியர் நன்கு அறிந்துகொள்ளுவதோடு, என் தேசத்தினருக்கு நான் குறித்துள்ள உரிமைகளை வழங்கவேண்டிய நியாயத்தையும், அவசியத்தையும் அவர்களே நிச்சயமாகக் காண்பார்கள் என்று நான் நம்புகிறேன்.

"இடையில், கடந்த சில மாதங்களாக எங்கள் பிரச்னையைத் தீர்ப்பதில் சர்க்கார் காட்டிய உதார மனப்பான்மை, உங்கள் கடிதத்தில் நீங்கள் வாக்களித்திருப்பதுபோல், ஏற்கனவே உள்ள சட்டங்களைப் பிரயோகிப்பதில் தொடர்ந்து நீடிக்குமேயானல், யூனியன் எங்குமுள்ள இந்தியச் சமூகம் ஓரளவுக்கு அமைதியை அனுபவிக்க முடிவதோடு இது, சர்க்காருக்கு ஒரு போதும் இடைஞ்சல் செய்வதற்குக் காரணமாக நிற்காது என்று நிச்சயமாகக் கூறுவேன்."

# முடிவுரை

இவ்வாறு எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு இப்பெரிய சத்தியாக்கிரகப் போராட்டம் முடிந்தது. தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் இப்போது அமைதியுடன் இருப்பதாகவும் தெரிந்தது. 1914-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 18-ஆம் தேதி நான் இந்தியாவுக்குத் திரும்பிப் போகும் வழியில் கோகலேயைச் சந்திப்பதற்காக இங்கிலாந்து நோக்கி, மகிழ்ச்சியும் துயரும் கலந்த மனத்துடன் கப்பல் பிரயாணத்தை மேற்கொண்டேன். பல ஆண்டுகளுக்குப் பின்னர், தாய்நாடு திரும்புவதாலும் கோகலே காட்டும் வழியில் என் நாட்டுக்குப் பணி செய்வதைப் பேராவலுடன் எதிர்நோக்கியிருந்ததாலும், எனக்கு மகிழ்ச்சி. என் ஆயுளில் இருபத்தொரு வருடங்கள், மனிதனுக்கு ஏற்படும் இனிமையும் கசப்பும் கலந்த அனுபவங்களைப் பூரணமாகப் பெற்று வாழ்க்கையின் பணியை உணர்வதற்கு எனக்கு வாய்ப்பளித்த தென்னுப்பிரிக்காவைத் துறந்து செல்வது, என்னையே பிய்த்துக் கொண்டு செல்வது போன்று துயரம் தந்தது.

சத்தியாக்கிரகப் போரின் மங்களகரமான முடிவுக்கும், இன்று தென்னுப்பிரிக்காவில் இந்தியரின் நிலைமைக்கும் இடையே உள்ள துன்பந் தரும் ஒரு வேற்றுமையை ஆலோசிக்கும் போது, பட்ட கஷ்டமெல்லாம் வீணுகப் போயினவே என்று வேதனை உண்டாகிறது. மனிதவர்க்கத்தின் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குச் சத்தியாக்கிரகத்திற்குள்ள ஆற்றலைக் குறித்தும் ஐயுற வேண்டி வருகிறது. இங்கே இந்த விஷயத்தைப்பற்றிச் சற்று ஆராய்வோம். ஒரு பொருளைச் சம்பாதித்த முறையைக் கொண்டே அதை நிலைத்து வைத்துக் கொள்ளவும் முடியுமென்பது இயற்கையின் விதிகளில் ஒன்று. பலாத்கார வழியில் பெற்ற பொருளை அதே வழியில்தான் காத்துக்கொள்ள முடியும். சத்தியத்தின் மூலம் பெற்றதைச் சத்தியத்தைக்கொண்டே காக்க முடியும். ஆகவே, தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் இன்றும் தங்கள் பாதுகாப்பைச் சத்தியாக்கிரக ஆயுதத்தைக் கையாண்டே நிச்சயமாக்கிக் கொள்ள முடியும். சத்தியத்தினுல் அடைந்ததைச் சத்தியத்தைக் கைவிட்ட பின்பும் வைத்துக் கொள்ள முடியுமென்பதற்குச் சத்தியாக்கிரகத்தில் மாயாசக்தி

எதுவும் இல்லை. அது சாத்தியமானதாக இருந்தாலும், அது விரும்பத்தக்கதல்ல. ஆகவே, இன்று தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களுடைய நிலைமை தாழ்வுபட்டிருக்கிறதென்றால், அவர்களிடையே சத்தியாக்கிரகிகள் இல்லை என்பதைத்தான் அது காட்டுகிறது. தற்காலத்தில், தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களிடம் குற்றம் கண்டுபிடிப்பதற்காக நான் இதைக் கூறவில்லை. விஷயத்தை எடுத்துக்காட்டுவதற்காகத்தான் சொன்னேன். தனி மனிதனோ அல்லது ஒரு கூட்டத்தினரோ, தங்களிடமில்லாத குணங்களை மற்றவர்களிடமிருந்து கடன் வாங்கமுடியாது. ஒருவர் பின் ஒருவராகச் சத்தியாக்கிரக வீரர்கள் மறைந்தனர். ஸோராப்ஜி, காச்சலியா, தம்பி நாயுடு, பார்ஸி ருஸ்தம்ஜி, இன்னும் மற்றவர்கள் இன்று இல்லை. சத்தியாக்கிரகத்தின் அக்கினிப் பரீட்சையில் தேர்ந்து வந்தவர்களில் மிகச் சிலரே இப்பொழுது இருக்கின்றனர். எஞ்சி நிற்பவருள் சிலர், இன்றும் போர்முனையில் இருக்கின்றனர் சத்தியாக்கிரகத்தின் ஒளி அவர்களிடத்தில் சுடர் விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருக்குமேயானால், அவர்கள்தாம் சோதனை வரும்போது சமூகத்தை உய்விப்பவராவார்கள் என்பதில் எனக்குத் துளியேனும் சந்தேகமில்லை.

கடைசியாக, இந்த மகத்தான போராட்டமும், இதனால் இந்தியர்கள் விரும்பித் தாமே ஏற்று அனுபவித்த துன்பங்களும் தோன்றியிராமல் போயிருந்தால், தென்னாப்பிரிக்காவை விட்டு இன்று இந்தியர்கள் விரட்டப்பட்டிருப்பார்கள் என்பதை இப் பக்கங்களைப் படித்த வாசகர்கள் பார்த்திருப்பார்கள். அதுமட்டுமல்ல. தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்கள் சாதித்த வெற்றி, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மற்றப் பாகங்களில் குடியேறிய இந்தியர்களுக்கு ஏறக்குறைய ஒரு தற்காப்பு மாதிரி ஆயிற்று. அப்படி அவர்கள் ஒடுக்கப்பட்டிருப்பின், அதற்குக் காரணம் சத்தியாக்கிரக ஆயுதத்தில் ஏற்பட்ட பழுதன்று; அவர்களிடையே சத்தியாக்கிரகக் கட்டுப்பாடு இராமையும், அவர்களைக் காக்க இந்திய நாட்டிற்கு வலிமை இன்மையுமே அதற்குக் காரணமாகும். சத்தியாக்கிரகம் மதிப்பிட முடியாத, ஈடு இணையற்ற ஆயுதம்; அதை ஏந்துவோர் தோல்வியையோ, ஏமாற்றத்தையோ அறியார் என்பதைக் காட்ட இந்நூல் ஓர் அளவு வெற்றி பெறும் எனின், நான் பயன் அடைந்தவனாவேன்.

# தென்னாப்பிரிக்கா பற்றி

## மகாத்மா காந்தியின் பேச்சுக்கள், கட்டுரைகள்

தமிழாக்கம் :

ரா. வேங்கடராஜுலு

# இப்பகுதியில் அடங்கியவை



---

# 1896-ல் சென்னையில் மகாத்மா சொற்பொழிவு

[தென்னாப்பிரிக்க இந்தியரின் துயரங்களைக் குறித்து மகாத்மா காந்தி 1896 அக்டோபர் 26-ஆம் தேதி சென்னை பச்சையப்பன் மண்டபத்தில் பேசினார். கனம் ஸ்ரீ அனந்தாச்சார்லு அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். தென்னாப்பிரிக்க இந்தியரின் கஷ்டங்களுக்கு அனுதாபம் தெரிவித்தும், அந்தச் சர்க்கார் நிறைவேற்றிய இந்தியக் குடியேற்றத் திருத்த மசோதாவுக்கு இந்திய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காரும் அங்கீகாரமளித்துவிட்டதைக் குறித்து வருத்தம் தெரிவித்தும் அக்கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேறின. அக் கூட்டத்தில் மகாத்மா காந்தி பேசிய விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. மகாத்மா அக்கூட்டத்தில் பேசுவதற்கு முன்னால், தங்கள் சார்பில் இந்திய மக்களிடம் முறையிட்டுக்கொள்ள, காந்திஜிக்கு நேட்டால் இந்தியர் அளித் திருந்த அத்தாட்சிப் பத்திரத்தைப் படித்தார்.]

மகாத்மா காந்தி பேசியதாவது :

தங்கம் நிறைந்ததும், காலஞ்சென்ற ஜேம்ஸன் ரெயிட் இருந்த நாடுமான தென்னாப்பிரிக்காவிலிருக்கும் ஒரு லட்சம் பிரிட்டிஷ் இந்தியரின் சார்பாக உங்களிடம் முறையிட்டுக்கொள் ளவே இன்று மாலை உங்கள் முன்பு பேச எழுந்திருக்கிறேன். இந்த ஒரு லட்சம் இந்தியரில் பெரும்பான்மையானவர்கள் சென்னையிலிருந்தும் வங்காளத்திலிருந்தும் போனவர்கள். ஆகை யால், அவர்கள் இந்தியர்கள் என்ற முறையில் நீங்கள் காட்ட வேண்டிய பற்றுதலைவிட இன்னும் அதிக சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டியவர்களாக நீங்கள் இருக்கிறீர்கள். தென்னாப் பிரிக்காவை நமது காரியத்திற்காக இரு வகையாகப் பிரிக் கலாம். அதில் ஒரு பகுதி, சுயாட்சி பெற்ற பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளான நேட்டாலையும், நன்னம்பிக்கை முனையை யும் கொண்டது. மற்றொன்று, பிரிட்டிஷாரின் நேர் நிர்வாகத் திற்குட்பட்ட ஜுலுலாந்து, டிரான்ஸ்வால் அல்லது தென்னாப் பிரிக்கக் குடியரசு, ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டு, டெலகோவா வளை குடா, பெய்ரா அடங்கிய போர்த்துகீசிய பிரதேசங்கள் ஆகிய இவற்றைக் கொண்டதாகும்.

இந்தியர் அந்நாட்டிலிருப்பதற்காக நேட்டால் காலனிக்குத் தென்னாப்பிரிக்கா மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. நேட்டால்

பார்லிமெண்டு அங்கத்தினரொருவர் அப்பொழுது (1860-இல்) சொன்னது போலவே, அக்காலனியே நிலைத்திருக்குமா என்பது சந்தேகமாயிருந்தது. அப்பொழுதே ஒப்பந்தக் கூலிகளாக இந்தியரை அங்கே அழைத்துச் செல்லும் முறையை அக்காலனி ஆரம்பித்தது. இவ்விதம் இந்தியர் வெளிநாடுகளுக்குப் போவது சட்டத்தின் மூலம் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. சில நாடுகளுக்கே இந்தியர் ஒப்பந்தக் கூலிகளாகப் போகும் சலுகை கொடுக்கப்பட்டிருந்தது, மொரிஷியஸ், பிஜி, ஜமெய்க்கா, ஸ்டிரெயிட்ஸ் ஸெட்டில்மெண்ட்ஸ் (மலாயா), டமாரா்ரா போன்ற நாடுகள் இச்சலுகையைப் பெற்றவை. சென்னையிலிருந்தும் கல்கத்தாவிலிருந்துமே அந்நாடுகளுக்குப் போக இந்தியர் அனுமதிக்கப்பட்டனர். இவ்விதம் இந்தியர் போனதனுல் ஏற்பட்ட நன்மையைக் குறித்து மற்ருெரு பிரபல நேட்டால்காரரான ஸ்ரீ சாண்டர்ஸ் பின் வருமாறு கூறினுர்: "இந்தியர் வந்ததனுல் நாடு சுபிட்சம் அடைந்தது; விலைகள் உயர்ந்தன; சாகுபடி செய்து, கேட்ட விலைக்கு மலிவாகக் கொடுத்துக்கொண்டிருக்கவேண்டிய நிலைமை போயிற்று; மேற்கொண்டும் விளைபொருள்களை உற்பத்தி செய்ய முடிந்தது." ஒப்பந்தத்தின் பேரில் சென்னையிலிருந்தும் கல்கத்தாவிலிருந்தும் சென்ற இந்தியரைக் கொண்டு சர்க்கரை, தேயிலை உற்பத்தி, சுகாதாரம், காலனிக்கு வேண்டிய மீன் சப்ளை இவற்றைக் காலனி பெற்று வந்தது. இவ்விதம் பதினுறு ஆண்டுகளுக்கு முன்னுல் ஒப்பந்தத்தின் பேரில் இந்தியர் சென்றதால், வர்த்தகர்களாகச் சுயேச்சையான இந்தியர் பலரும் அங்கே போனுர்கள். இவர்கள் முதலில் தங்கள் இனத்தினருக்கும் உற்ருர் உறவினருக்கும் தேவைப்படுபவைகளை விற்கவே சென்ருர்கள். ஆனுல், தென்னுப்பிரிக்கச் சுதேசிகளான ஜுலு அல்லது காபிர்கள், தங்கள் வியாபாரத்திற்குச் சிறந்த வாடிக்கைக்காரர்கள் என்பதைப் பிறகு கண்டனர். இந்திய வியாபாரிகளில் பெரும்பாலானவர் பம்பாய் மேமன் முகம்மதியர்கள். இவர்கள் மற்ற இந்தியரைப்போல அவ்வளவு கஷ்ட நிலையில் இல்லாததனுல் அந்நாட்டிலிருந்த இந்தியர் எல்லோருடைய நன்மைக்கும் பாதுகாப்பாளர்களாயினர். இந்தியாவின் மூன்று மாகாணங்களிலிருந்தும் போய் இவ்விதம் குடியேறிய இந்தியருக்கு, அவர்களுடைய கஷ்டங்களும் நன்மையும் ஒன்ருகவே இருந்ததால், ஒருமைப்பட்டு வாழ்ந்தனர். தங்களை மதராஸிகள், வங்காளிகள், குஜராத்திகள் என்று அவசியமான சில சமயங்களில் சொல்லிக்கொண்டபோதிலும் பொதுவாகத் தாங்கள் இந்தியர் என்று கூறிக்கொள்ளுவதில் அவர்கள் பெருமை கொண்டார்கள்.

அந்த இந்தியர்கள் இப்பொழுது தென்னுப்பிரிக்கா முழுவதும் பரவியிருக்கிருர்கள். தேர்தல் மூலம் வந்த முப்பத்தேழு அங்கத்தினர்களைக்கொண்ட ஒரு சட்டசபையால் நேட்டால் ஆளப்படுகிறது. இதற்குப் பதினொன்று பேரைக் கொண்ட கவுன்சிலும் உண்டு. இந்த அங்கத்தினர்கள், பிரிட்டிஷ் ராணியின் பிரதிநிதியான கவர்னரால் நியமிக்கப்படுகிருர்கள். இதற்கு ஐந்து பேர் அடங்கிய மந்திரி சபையும் உண்டு. சட்டசபை விரும்பினுல் மந்திரி சபையை நீக்கிவிட்டு வேறு ஒரு மந்திரி சபையை அமைத்துக்கொள்ளலாம். நேட்டாலில் மொத்தம் 50,000 ஐரோப்பியர் இருக்கிருர்கள். அங்கே நான்கு லட்சம் சுதேசிகள் இருக்கின்றனர். இந்திய ஜனத்தொகை 51,000. இந்த இந்தியரில் 16,000 பேர் இப்பொழுது தாங்கள் செய்து வந்த ஒப்பந்தப்படி கூலி வேலையையே செய்து வருகின்றனர். 30,000 இந்தியரின் ஒப்பந்தக் காலம் முடிந்துவிட்டது. இத்தகையவர்கள் வீட்டு வேலை செய்பவர்களாகவும், தோட்ட வேலைக்காரர்களாகவும், அங்காடிக்காரர்களாகவும், சிறு வியாபாரிகளாகவும் இருக்கின்றனர். ஐயாயிரம் இந்தியர்கள், தாமே சுயேச்சையாக வந்து குடியேறியிருப்பவர்கள். இவர்களில் பலர் வியாபாரிகள், கடைச்சிப்பந்திகள், அங்காடிக் கடைக்காரர்கள். சிலர் பள்ளி ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், குமாஸ்தாக்கள்.

சுயாட்சியுடனிருக்கும் நன்னம்பிக்கை முனை காலனியில், 10,000 இந்தியர் இருக்கிருர்கள் என நினைக்கிறேன். இவர்கள் வர்த்தகர்கள், அங்காடிக்காரர்கள், தொழிலாளர்கள் ஆவர். இந்தக் காலனியின் மொத்த ஜனத்தொகை பதினைந்து லட்சம். இதில் நான்கு லட்சம் பேர் ஐரோப்பியர்கள். மற்றவர்கள், அந்நாட்டு மக்களும் மலாயாக்காரர்களும்.

தென்னுப்பிரிக்கக் குடியரசு அல்லது டிரான்ஸ்வால், தேர்தல் மூலம் வந்தவர்களைக்கொண்ட வோல்க்ஸ்ராடு என்ற இரு சபைகளால் ஆளப்படுவது. ஒரு தலைவரின் கீழ் இதற்கு ஒரு நிர்வாகக் குழுவுமுண்டு. அங்குள்ள இந்தியரின் ஜனத்தொகை 5000. அவர்களில் 200 பேர் வர்த்தகர்கள். அவர்களுடைய சொத்துக்களின் தீர்மானமான மதிப்பு ஒரு லட்சம் பவுன். மற்ற இந்தியர் அங்காடிக்காரர்கள், பணியாட்கள், வீட்டு வேலைக்காரர்கள். வீட்டு வேலைக்காரர்களாக இருந்தவர்களில் பெரும்பாலோர் சென்னை மாகாணத்தைச் சேர்ந்தவர்கள். டிரான்ஸ்வாலின் வெள்ளையர் ஜனத்தொகை சுமார் 1,20,000. சுதேசிகளான காபிர்களின் தொகை சுமார் 6,50,000. இந்தக் குடியரசு, பிரிட்டிஷ்

ராணியின் மேலதிகாரத்திற்கு உட்பட்டது. பிரிட்டனுக்கும் இந்த ஜன ஆட்சிக்குமிடையே ஒரு சம்பிரதாயம் உண்டு. அதன் படி, தென்னுப்பிரிக்கச் சுதேசிகளைத் தவிர இக்குடியரசைச் சேர்ந்த எல்லாப் பிரஜைகளுக்கும் பொதுவான சொத்து, வர்த்தகம், சாகுபடி, நில உரிமை, பிரஜா உரிமை ஆகியவை வழங்கப் படுகின்றன.

போர்த்துகீசிய பிரதேசங்களில் இந்தியரின் தொகை அதிகம். அங்கே இந்தியருக்கு எந்தவிதக் கஷ்டங்களும் இல்லை. அசௌகரியங்களும் கஷ்டங்களும் இருப்பதால் மற்ற ராஜ்யங்களில் குறிப்பிடத்தக்க இந்தியரின் ஜனத்தொகை எதுவும் இல்லை.

தென்னுப்பிரிக்க இந்தியரின் குறைகள், இரு வகையானவை. இந்தியர்மீது இருக்கும் வெறுப்பினுல் ஏற்பட்ட குறை ஒன்று. இரண்டாவது வகை, சட்ட சம்பந்தமாக இந்தியருக்கு இழைக்கப்பட்ட கஷ்டங்கள். முதல் வகைபற்றிக் கூறுவதாயின், தென்னுப்பிரிக்காவில் அதிகமாக வெறுக்கப்படுகிறவர்கள் இந்தியர்கள் என்றே சொல்லவேண்டும். எந்தவிதப் பாகுபாடுமின்றி இந்தியர் எல்லோருமே 'கூலி' என்றுதான் அழைக்கப் படுகின்றனர். 'இந்தியர்' என்று மாத்திரம் சொல்லப்படுவதில்லையே தவிர 'சாமி', 'ராமசாமி' என்றெல்லாம் அழைக்கப்படுகிருர்கள். இந்தியப் பள்ளி ஆசிரியர்களை, 'கூலிப் பள்ளி ஆசிரியர்கள்' என்கின்றனர். இந்தியக் கடைக்காரர்கள், 'கூலிக் கடைக்காரர்'களே. பம்பாயிலிருந்து போயிருக்கும் ஸ்ரீ தாதா அப்துல்லா, ஸ்ரீ மூஸ் ஹாஜி காஸிம் ஆகிய இருவருக்கும் சொந்தமாகக் கப்பல்கள் இருக்கின்றன. இவர்களுடைய கப்பல்கள் 'கூலிக் கப்பல்கள்' என்றே சொல்லப்படுகின்றன.

'ஏ. குழந்தைவேலு பிள்ளை கம்பெனி' என்பது சென்னை வர்த்தகர்களுக்குச் சொந்தமான, கௌரவமான ஸ்தாபனம். இவர்கள் டர்பனில் பெரிய கட்டடங்களைக் கட்டியிருக்கிருர்கள். இந்தக் கட்டடங்களைக் 'கூலி ஸ்டோர்கள்' என்றே சொல்லுகிருர்கள். இவற்றின் சொந்தக்காரர்களையும் 'கூலி முதலாளிகள்' என்றுதான் கூப்பிடுகின்றனர். கனவான்களே! உங்களுக்கு ஒன்று உறுதியாகக் கூற விரும்புகிறேன். இந்த மண்டபத்தில் இருப்பவர்களுக்கும் கூலிகளுக்கும் எவ்வளவு பேதமிருக்கிறதோ அவ்வளவு பேதம் இருக்கிறது அந்தக் கம்பெனியின் முதலாளிகளுக்கும் ஒரு 'கூலி'க்கும். ரெயில்வே, டிராம் அதிகாரிகள் எங்களை மிருகங்களைப் போன்றே

நடத்துகின்றனர். அதிகார வட்டாரங்களில் இப்புகார் மறுக்கப் படுகிறது. இதைப்பற்றியே இங்கே விவரமாக எடுத்துக் காட்டப் போகிறேன். எந்தவித ஆபத்துக்கும் ஆளாகாமல் நடைபாதை யில், அங்கே நாம் பத்திரமாக நடந்துபோக முடியாது. தாம் அவமதிக்கப்படலாம் அல்லது பிடித்துத் தள்ளப்பட்டு விடலாம் என்ற பயத்தினால் தூய ஆடை அணிந்த மதராஸி கனவான்களும் டர்பன் தெருக்களின் நடைபாதைகளில் நடப்பதற்குப் பயந்து கொண்டு அதைத் தவிர்த்துக் கொள்ளுகிறார்கள்.

எங்களை 'ஆசிய ஆபாசங்கள்' என்று மனமாரத் தூற்று கின்றனர். நாங்கள் தீமை மலிந்தவராம்; அரிசியைத் தின்று வாழ் கிறோமாம். எங்களை 'நாற்றமெடுத்த கூலிகள்' என்கின்றனர். எண்ணெய் படிந்த கந்தலைக் கட்டிக்கொண்டு வாழ்கிறோமாம். நாங்கள் 'கறுப்பு விஷக்கிருமிக'ளாம். சட்டப் புத்தகங்களோ, 'பாதி காட்டுமிராண்டிகளான ஆசியாக்காரர்கள் அல்லது ஆசி யாவின் நாகரிகமற்ற இனத்தைச் சேர்ந்தவர்கள்' என்று எங்களை வருணிக்கின்றன. நாங்கள், 'வெள்ளை முயல்களைப்போல ஏராள மாகப் பிள்ளைகளைப் பெறுகிறோம்' என்கிறார்கள். டர்பனில் நடந்த ஒரு கூட்டத்தில் கனவான் ஒருவர், வெள்ளை முயல்களைக் கொல்வதுபோல் இவர்களைக் கொல்ல முடியவில்லையே என்று வருத்தப்பட்டாராம். டிரான்ஸ்வாலில் சில இடங்களில் வாடகைக் கோச்சு வண்டிகள் போகின்றன. நாங்கள் அதன் உள்ளே உட்காரக்கூடாது. டிரான்ஸ்வாலில் மழைக்காலத்தில் குளிர் மிக அதிகம். ஆகையால் கோச்சு வண்டிகளின் வெளியில் உட்காரு வது அவமதிப்பானது என்பது ஒருபுறம் இருக்க, குளிரைத் தாங் கவே முடியாது. நாம் இந்தியரேயாயினும் தாங்க முடியாத அவ் வளவு வெயில். ஹோட்டல்களில் நாம் அனுமதிக்கப்படுவதில்லை. வெள்ளைக்கார ஹோட்டல்களில் பெரிய மனிதர்களான இந்தியர் களுக்குக்கூட சிற்றுண்டி வழங்கவும் மறுக்கப்பட்டிருக்கும் சம்ப வங்கள் பல உண்டு. நேட்டாலில் டண்டீ என்ற கிராமத்தில் இந் தியரின் கடையொன்றை ஓர் ஐரோப்பியக் கூட்டத்தினர் சமீபத் தில் கொளுத்திவிட்டார்கள். ('வெட்கம்' என்ற முழக்கம்). இத னால் கொஞ்சம் நஷ்டம் உண்டாயிற்று. இன்னுமோர் ஐரோப்பியர் கூட்டம், டர்பனில் கடைத்தெருவில் வெடிகளைக் கொளுத்தி இந்தியர் கடைக்குள் போட்டது. இந்தியர் மீது இவ்விதம் இருந்துவரும் தீவிரமான பகை, தென்னாப்பிரிக்காவின் பல ராஜ்யங்களிலும் பல வழிகளிலும் இந்தியரின் உரிமைகளைக் கட்டுப்படுத்திவிடும் சட்டங்களாக உருவெடுத்து இருக்கின்றன.

"முதலாவதாக, இந்தியரைப் பொறுத்தவரையில் நேட்டால் மிக முக்கியமானது. இந்தியருக்கு எதிரான சட்டங்களைச் செய்வதில் கொஞ்ச காலமாக அங்கேதான் அதிகத் தீவிரம் இருந்து வருகிறது. இந்தக் காலனியின் பொதுவான வாக்குரிமைச் சட்டத்தை அனுசரித்து, 1894-ஆம் ஆண்டுவரையில் ஐரோப்பியருடன் இந்தியரும் சமமாக வாக்குரிமையைப் பெற்றிருந்தனர். வயது வந்தவராயிருந்து 50 பவுன் பெறுமானமுள்ள தாவரச் சொத்து இருந்தாலும் அல்லது 10 பவுன் வருட வாடகை தருவதானாலும் எந்த பிரிட்டிஷ் பிரஜைகளுக்கும் வோட்டுரிமை இருந்தது. 1894-இல் நேட்டால் சட்டசபை நிறைவேற்றிய ஒரு மசோதா ஆசியாக்காரர்களின் வோட்டுரிமையைப் பறித்தது. உள்ளூர்ப் பார்லிமெண்டில் இதை எதிர்த்தோம்; பயனில்லை. பிறகு பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டு மந்திரிக்கு மனுச் செய்துகொண்டோம். இதன் பலனாக அந்த மசோதா வாபஸ் வாங்கிக் கொள்ளப்பட்டு, அதற்குப் பதிலாகப் புதியதோர் மசோதா கொண்டுவரப்பட்டது. முதல் மசோதாவைப் போல இது அவ்வளவு படுமோசமானதல்ல. எனினும் இதுவும் மோசமானதே. ஐரோப்பிய நாடுகளைத் தவிர மற்ற நாடுகளிலிருந்து வந்திருப்பவர்களுக்கு, அவர்களுடைய நாடுகளில் ஜனநாயக ஆட்சி முறையை அனுசரித்த ஜனநாயக ஸ்தாபனங்கள் இல்லாதிருக்குமானால், வோட்டுரிமை கிடையாது என்று இந்த மசோதா விதிக்கிறது. ஆனால், கவுன்சிலோடு கூடிய கவர்னரின் அனுமதியைப்பெற்றால் மாத்திரமே இத்தகையவர்கள் வோட்டுரிமையைப் பெறலாம் என்றும் அம்மசோதா கூறியது. முன்னரே வோட்டர்கள் ஜாபிதாவில் பெயர் வந்துவிட்டவர்களுக்கு இம்மசோதா விதிவிலக்கு அளிக்கிறது. இம்மசோதாவைக் கொண்டு வருவதற்கு முன்னால் இதை ஸ்ரீ சேம்பர்லேன் முன்பு சமர்ப்பித்து அவருடைய அங்கீகாரத்தைப் பெற்றனர். இந்தியாவிலும் இத்தகைய ஸ்தாபனங்கள் இருப்பதால், ஆசியாக்காரர்களின் வோட்டுரிமையை இம்மசோதா ரத்து செய்துவிடுமாயின் அதன் நோக்கம் தவறிவிட்டதாகும் என்று கூறி இம்மசோதாவை ஆட்சேபித்தோம். இச்சட்டம் உபத்திரவம் விளைவிப்பதாக இருப்பதோடு, ஓயாது வழக்குகளை நடத்தி ஏராளமாகப் பணச் செலவுக்கும் கொண்டுவிடும் என்றும் கூறினோம். எங்கள் ஆட்சேபத்தின் காரணத்தை எல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். இந்த மசோதாவை ஆதரித்து வோட்டுப் போட்டவர்களும் அதையேதான் எண்ணினர். இதைக் குறித்து நேட்டால் சர்க்கார் பத்திரிகை கூறியதாவது:

"இந்தியாவில் இத்தகைய ஸ்தாபனங்கள் இருக்கின்றன என்பதை நாம் அறிவோம். ஆகையால் இந்தியரை இச்சட்டம் பாதிக்காது. ஆனல், இம்மசோதா இருந்தேயாகவேண்டும், வேறு எதுவும் வேண்டியதில்லை. இது இந்தியரின் வோட்டுரிமையைப் பறிக்கிறதென்ருல், இதைவிடச் சிறந்தது வேறு இருக்கமுடியாது. அப்படி அது செய்யாதுபோயினும் அஞ்சவேண்டியது எதுவுமில்லை. ஏனெனில் ராஜீய அதிகாரத்தை இந்தியர்கள் அடையவே முடியாது. அவசியமானல் வாக்காளர்களாவதற்குச் சொத்துத் தகுதிவேண்டும் என்ற பரீட்சையை நாம் கொண்டு வரலாம். சொத்துத் தகுதியையும் அதிகரிக்கலாம். இவை, இந்தியரை அடியோடு வாக்குரிமை இழக்கும்படிச் செய்வதோடு எந்த ஐரோப்பியரையும் வாக்குரிமையிலிருந்து தடுக்காது."

இந்தியருக்குத் துன்பத்தை விளைவிக்கும் வகையில் நேட்டால் சட்டசபை இத்தகைய சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறது. உடலைக் கீறி ஆராய்பவர் போல் இந்த நேட்டால் பரிசோதகர்களின் கொடிய கத்திக்கு இரையாக நாம் ஆகியிருக்கிரேம். மனிதரை அறுத்துச் சோதனை செய்பவர்களுக்கும் இவர்களுக்கும் முக்கியமாக ஒரு வித்தியாசம் உண்டு. ஆராய்ச்சிக்காரர்கள், மனிதவர்க்கத்தின் நன்மையை நோக்கமாகக் கொண்டு அறுத்துச் சோதனை செய்கின்றனர். ஆனல், நேட்டாலிலோ வேண்டுமென்று திமிரின் பேரில் இதை வேடிக்கை என்றெண்ணி நம்மைச் சோதிக்க முற்பட்டிருக்கின்றனர். இவ்விதம் செய்யப்படுவதில் ராஜீய நோக்கம் எதுவுமில்லை. நேட்டால் பார்லிமெண்டு உறுப்பினர் ஒருவர் கூறியதுபோல், 'நேட்டாலைவிடத் தங்கள் சொந்த நாட்டிலிருப்பதே இந்தியர்களுக்குச் சுகமென இந்தியர்கள் உணர்வதற்கென்றே' அவர்களை அவமானப்படுத்த இந்தக் காரியங்கள் செய்யப்படுகின்றன என்பது தெளிவு. 'இந்தியர், என்றுமே மார்பு உடைய உழைப்பவர்களாக ஆகவேண்டும்' என்று மற்ருெரு பிரபல நேட்டால்காரர் கூறுகிருர். ஐரோப்பிய வாக்காளர்கள் 10,000 பேர் இருக்கும்போது இந்திய வாக்காளர்களோ 250 பேர்தான். இதிலிருந்தே இந்தியர் வாக்குரிமை ஐரோப்பியரை ஒரு நாளும் அமிழ்த்திவிடப்போவதில்லை என்பது நிச்சயமாகிறது. அப்பிரச்னையின் முழுச் சரித்திரத்தையும் அறிவதற்குப் பச்சைப் பிரசுரத் தாளைக் குறித்து நான் உங்களுக்குக் கூற விரும்புகிறேன். எங்களுக்குத் துன்பம் மூண்ட சமயங்களில் லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை எங்களை ஆதரித்து வந்திருக்கிறது. நேட்டாலில் வாக்குரிமைப் பிரச்னை வந்தபோது அப்பத்திரிகை இவ்வாண்டு ஜூன் 27-ஆம் தேதி எழுதியிருப்பதாவது :

"ஸ்ரீ சேம்பர்லேனின் முன்பு வைக்கப்பட்டிருக்கும் பிரச்னை சாதாரணமானது அன்று. இது நிறபேதத்தைப்பற்றியதேயன்றி விவாதத்திற்கு உரியதன்று. நம் குடிகளுக்குள்ளே இனப் போராட்டத்தை நாம் பொறுத்துக்கொண்டிருக்க முடியாது. இந்தியர் பல ஆண்டுகளாக நேட்டாலில் சிக்கனத்தினுலும், நல்ல வேலை செய்திருப்பதனுலும் குடிகளாவதற்குவேண்டிய தகுதிக்குத் தங்களைத் தாங்களே உயர்த்திக்

கொண்டிருக்கின்றனர். அப்படி இருக்கும் போது பிரிட்டிஷ் இந்தியப் பிரஜைகளுக்குப் பிரஜாவுரிமையை அளிக்க மறுப்பது தவறு. அதேபோல நேட்டாலுக்குள் இந்தியர் குடியேறுவதை இந்திய அரசாங்கம் நிறுத்தி, நேட்டாலின் அபிவிருத்தியைத் திடீரெனத் தடுத்துவிடுவதும் தவறு.''

ஆசியாக்காரர்களின் வாக்குரிமை ஐரோப்பியர்களை நசுக்கி விடும் என்ற ஆபத்து உண்மையாகவே இருக்குமானுல் படிப்புச் சோதனையைப் புகுத்துவதைப் பற்றியோ, சொத்து மதிப்பை வாக்குரிமைக்காக உயர்த்துவதைக் குறித்தோ எங்களுக்கு ஆட்சேபம் இருந்திருக்காது. ஆனுல், இனத்தைக் குறிப்பாகக் கொண்டு இயற்றும் சட்டத்தையும், அதன் காரணமாக ஏற்படும் அவமதிப்பையுமே நாங்கள் ஆட்சேபிக்கிருேம். புதிதாக எந்தச் சலுகையும் பெறவேண்டும் என்பதற்காக நாங்கள் இம்மசோதாவை எதிர்க்கவில்லை. இதுவரை அனுபவித்து வருவதையே பறிப்பதாக இருப்பதனுல்தான் எதிர்க்கிருேம்.

'எதிர்காலத்தில் உருவெடுக்கப் போகும் தென்னுப்பிரிக்க தேசீயத்தின் ஒரு பகுதியாக அவன் (இந்தியன்) ஆகிவிடாதபடி தடுப்பதற்காகவே இச்சட்டம்' என்று நேட்டால் அட்டர்னி ஜெனரல் கூறினுர். அந்நாட்டுச் சுதேசிகளான அசல் காபிர்களின் நிலைக்கு இந்தியரை இழிவுபடுத்த வேண்டும் என்ற நோக்கத்திற்காகவே, இந்தியர் குடியேற்றச் சட்டத்தைத் திருத்தும் மசோதாவை நேட்டால் அரசாங்கம் சென்ற ஆண்டு கொண்டுவந்தது. நாங்கள் நம்பியிருந்ததற்கு நேர்மாருகப் பிரிட்டிஷ் மன்னரின் அனுமதியும் அதற்குக் கிடைத்திருக்கிறது என்பதை வருத்தத்துடன் உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இத்தகவல் பம்பாய்க் கூட்டத்திற்குப் பிறகு எனக்குக் கிடைத்தது. இதை முன்னிட்டும், இப்பிரச்னை இம்மாகாணத்தையே உடனடியாக பாதிக்கிறது என்பதனுலும், இதைக் குறித்து இங்கே சற்று விவரமாகவே கூற விரும்புகிறேன்.

''1894 ஆகஸ்டு 18-ஆம் தேதி வரையில் ஒப்பந்தத்தின்பேரில் சென்றவர்கள் ஐந்தாண்டுகளுக்கு அங்கிருப்பது என்று போனுர்கள். நேட்டாலுக்குப் போய்ச்சேர இவர்களுக்குக் கப்பல் செலவு இலவசம். இவர்களுக்கும் இவர்களுடைய குடும்பங்களுக்கும் அங்கே சாப்பாடும் வீட்டுவசதியும் இலவசமே. முதல் வருடத்திற்கு மாதம் பத்து ஷில்லிங் சம்பளம், பின்னர், ஆண்டுக்கு ஒரு ஷில்லிங் வீதம் சம்பள உயர்வு. ஒப்பந்தம் முடிந்த பிறகு மேலும் ஐந்து ஆண்டுகளுக்கு இவர்கள் அங்கே சுயேச்சையான கூலி

களாக இருப்பார்களானல், இவர்கள் இந்தியாவுக்குத் திரும்பி வரக் கப்பல் செலவு இலவசம். இந்தச் சலுகை யாவும் இப்பொழுது மாற்றப்பட்டுவிட்டன. ஒன்று, இவர்கள் என்றுமே ஒப்பந்தக் கூலிகள் என்ற முறையில் அங்கே இருந்து வர வேண்டும்; அல்லது இந்தியாவுக்குத் திரும்பிவிட வேண்டும். ஒப்பந்தக் கூலிகளாகவே அங்கே நீடித்து இருந்து வருவதென்ருல் அவ்விதம் ஒப்பந்தக் கூலிகளாயிருக்கும் ஒன்பதாவது ஆண்டில் அவர்களுடைய சம்பளம் மாதம் இருபது ஷில்லிங்குக்கு உயரும். ஆனல், இவர்கள் வருடத்திற்கு மூன்று பவுன் தலைவரி செலுத்த வேண்டும். ஒப்பந்தக் கூலி விகிதத்தில் இத்தொகை அவர்களுடைய அரை ஆண்டுச் சம்பளத்தின் மொத்தத் தொகைக்குச் சமம்.

தலைவரியைத் தவிர ஒப்பந்தத்தில் செய்யப்படும் மற்ற மாறுதல்களுக்கு இந்திய அரசாங்கத்தின் சம்மதத்தைப் பெறுவதற்காக நேட்டால் அரசாங்கம் 1893-இல் இருவரடங்கிய ஒரு கமிஷனை இந்தியாவுக்கு அனுப்பியது. இப்போது இருக்கும் வைசிராய் இந்த மாறுதல்களை ஏற்றுக்கொள்ளுவதற்குத் தமது தயக்கத்தைத் தெரிவித்த போதிலும், பிரிட்டிஷ் சர்க்கார் அனுமதித்தால் தாம் ஒப்புக்கொள்ளுவதாகச் சொன்னர். கொடிய குற்றஞ் செய்தவர்களைக் கட்டாயமாகத் திருப்பி அனுப்பிவிடுவது பற்றிய விதியில் நேட்டால் சர்க்கார் மாற்றம் செய்ய முற்பட்டதை வைசிராய் ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். ஆனல், நேட்டால் சர்க்கார், இதிலிருந்த சிரமத்தைத் தலைவரியின் மூலம் போக்கிக்கொண்டுவிட்டனர்.

இந்த விதியைக் குறித்து விவாதித்த அட்டர்னி-ஜெனரல், இந்தியாவுக்குத் திரும்பிவிட மறுப்பதற்காகவோ அல்லது தலைவரி கொடுக்க மறுப்பதற்காகவோ ஓர் இந்தியனைச் சிறைக்கு அனுப்ப முடியாவிட்டாலும், அவன் குடிசையில் ஏதாவது பொருள்கள் இருந்தால் அவற்றைப் பறித்துக்கொண்டு விடலாம் என்ருர். உள்ளூர் பார்லிமெண்டில் இம்மசோதாவைப் பலமாக எதிர்த்தோம். அங்கே வெற்றிபெற முடியாது போகவே, ஸ்ரீ சேம்பர்லேனுக்கு மனுச் செய்து கொண்டோம். இம்மசோதாவை நிராகரிக்கவேண்டும், இல்லையானல் நேட்டாலுக்கு இந்தியர் கொண்டு வரப்படுவதையாவது நிறுத்தவேண்டும் என்று கோரினேம்.

மேற்கண்ட முறை பத்து ஆண்டுகளுக்கு முன்பே சிந்திக்கப்பட்டது. நேட்டாலிலுள்ள பிரபலஸ்தர்கள் பலர் அதைப் பல

மாக எதிர்த்தார்கள். நேட்டாலில் இருக்கும் இந்தியர் சம்பந்த மான பல விஷயங்களையும் விசாரிப்பதற்கென்று ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது. அக்கமிஷனின் உறுப்பினர்களில் ஒருவ ரான ஸ்ரீ சாண்டர்ஸ் தமது தனிக் குறிப்பில் பின்வருமாறு கூறி யிருக்கிருர்:

“தங்களுடைய ஒப்பந்தக் காலம் தீர்ந்த பிறகு ஒப்பந்தத்தைத் திரும்பவும் புதுப்பித்துக்கொண்டாலன்றி இந்தியரைக் கட்டாயப்படுத்தி இந்தியாவுக்குத் திருப்பி அனுப்பிவிடுவதற்குச் சட்டம் செய்வது குறித்துக் கமிஷன் எவ்வித சிபாரிசையும் செய்ய வில்லை; என்ருலும், இத்தகைய எண்ணமிருப்பதையே நான் பலமாகக் கண்டிக்கிறேன். இத்திட்டம் அவசியம் என்று இன்று கூறுவோர், அதன் விளைவு என்ன என்பதை உணர்வார்களாயின், என்னைப்போன்றே அவர்களும் இதைத் தீவிரமாகத் தடுப்பார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். இந்தியர் குடியேற்றத்தை நிறுத்தி அதன் பலனை அனுபவிக்கத் தயாராயிருங்கள். ஆனுல், நான் எடுத்துக்காட்டப்போகும் தவற்றை மட்டும் செய்யாதீர்கள்.

“அவர்களுடைய வாழ்நாட்களில் சிறந்த காலத்தை எல்லாம் நம்முடைய நன்மைக்காகப் பயன்படுத்திக்கொண்டுவிட்டோம். அவர்களை இப்போது திரும்பிப் போய்விடவேண்டுமென்று கட்டாயப்படுத்துவதென்ருல், அவர்களிடமிருந்து நன்மை களையெல்லாம் பெற்றுக்கொண்டுவிட்டு அதன் வெகுமதியை அவர்கள் அனுபவிக்க முடியாதபடி மறுக்கிரேம் என்பதைத் தவிர இது வேறு என்னவாம்? எங்கே திரும்பி அனுப்ப விரும்புகிரேம்? அவர்கள் இளமையுடன் இருந்தபோதே எந்தப் பட்டினியி னின்று தப்பிப் பிழைக்க முற்பட்டார்களோ அதே பட்டினியில் வாட அவர்களைத் திருப்பி அனுப்பப்பார்க்கிரேம். இந்தியர் இங்கே குடியேறுவதை நாம் அடியோடு நிறுத்திவிட லாம். பொதுஜன செல்வாக்கைப் பெறப் பார்க்கிறவர்கள் விரும்புவதைவிட இதை இன்னும் எளிதாகவும் நிரந்தரமாகவும் செய்துவிடமுடியும். ஆனுல், ஒப்பந்தக்காலம் முடிந்ததும் அவர்களை ஒதுக்குவது என்பதை இந்தக் காலனி செய்யக் கூடாது. இதற் காக முனைந்து நம் நற்பெயருக்கு அவமதிப்பைத் தேடிக்கொள்ள வேண்டாம் என்று வற்புறுத்துகிரேம்.”

மசோதாவைப் பார்லிமெண்டில் கொண்டுவந்த அட்டர்னி-ஜெனரல், கமிஷன் முன்பு சாட்சியம் கூறுகையில் பின்வருமாறு சொன்னர்:

“ஒப்பந்தக் காலம் தீர்ந்த இந்தியர்கள் யாரும் கொடிய குற்றஞ் செய்ததற்காக நாடு கடத்தப்பட்டாலன்றி உலகத்தில் இன்ன பகுதியில்தான் போகவேண்டுமென்பது கட்டாயமானதாக இருக்கவேண்டும் என்று நான் கருதவில்லை. இப்பிரச்னைமீது எவ்வளவோ கூறப்படுவதைக் கேட்டுவருகிறேன். என் கருத்தை மாற்றிக்கொள்ளு மாறு அடிக்கடி எனக்குக் கூறுகிருர்கள். ஆனுல், அவ்விதம் மாற்றிக்கொள்ள என்னுல் முடியவில்லை. ஒருவர், சொல்லளவில் தம்முடைய சொந்தச் சம்மதத்தின் பேரில், ஆனுல் உண்மை நடைமுறையில் அவருடைய சம்மதமின்றியே இங்கே கொண்டுவரப்படுகிருர். தமது வாழ்க்கையின் சிறந்த பகுதியான ஐந்தாண்டுகளை இங்கே கழிக்கிருர். அவருக்கு இங்கே புது உறவுகள் ஏற்படுகின்றன. பழையவற்றை மறந்துவிடுகிருர். ஆனுல் அது சரியோ தவரே, என் கருத்துப்படி, அவரைத் திருப்பி அனுப்பிவிடுவது என்பது முடியாதது. இந்தியர்களிடமிருந்து வேலையையெல்லாம் வாங்கிக்கொண்டு விட்டு அவர் களைத் திரும்பிப் போகும்படிச் சொல்லுவதைவிட இந்தியர் மேற்கொண்டு இங்கே வராமல் இருக்கத் தடைசெய்வது எவ்வளவோ மேலானது. இந்தக் காலனியோ, அல்லது அதன் பகுதியோ, இந்தியர் அவசியம் என்றே விரும்புவதாகத் தோன்று கிறது. ஆனுல், அதே சமயத்தில் இந்தியர் குடியேற்றத்தின் விளைவுகளையும் தவிர்த் துக்கொள்ள விரும்புகிறது. நான் அறிந்தவரையில், இந்தியர் எந்தவிதத் தீங்கையும்

செய்யவில்லை. சில காரியங்களில் அவர்கள் எவ்வளவோ நன்மைகளைச் செய்திருக்கிறார்கள். ஐந்தாண்டுகள் யோக்கியமாக நடந்துகொண்ட ஒருவரை நாடு கடத்தி விடுவது நியாயமென்று வாதிப்பதற்குக் காரணம் தெரியவில்லை எனக்கு."

ஒப்பந்தத்தில் மேலே சொன்ன மாறுதல்களுக்கு இந்திய சர்க்கார் சம்மதிக்கும்படி செய்வதற்காக இந்தியாவுக்கு வந்த கமிஷனில் ஓர் உறுப்பினரான ஸ்ரீ பின்ஸ் பத்தாண்டுகளுக்கு முன்னால் பின்வருமாறு கூறியிருக்கிறார்:

"ஒப்பந்தக்காலம் தீர்ந்த பிறகு இந்தியாவுக்குத் திரும்பிவிட எல்லா இந்தியரையும் கட்டாயப்படுத்தவேண்டுமென்று எழுந்திருக்கும் யோசனை. இந்தியருக்கு இழைக்கும் அநீதியாகும். இந்திய சர்க்காரும் இதை அனுமதிக்காது. சுயேச்சையான இந்தியர், சமூகத்திற்கு அதிக நன்மை விளைவிப்பவர்கள் என்பதே என்னுடைய கருத்து.''

ஆனால், பெரிய மனிதர்கள் அடிக்கடி தங்களுடைய உடைகளை மாற்றிக்கொள்ளுவதைப் போலவே தங்களுடைய அபிப்பிராயங்களையும் மாற்றிக்கொண்டு விடுவார்கள். இதற்காக அவர்கள் கவலைப்படுவதில்லை. தங்களுடைய வசதி ஒன்றே அவர்களுக்குக் குறி. மனப்பூர்வமான முடிவின் பேரிலேயே இப்படி மாற்றிக் கொண்டதாகவும் கூறிவிடுவார்கள். ஆனால், இதில் பெரிய பரிதாபம் என்னவெனில், ஒப்பந்தத்தின் பேரில் வந்த இந்தியர்கள் பயந்தது சரி என்றாகிவிட்டதோடு இந்திய சர்க்கார் இந்த மாறுதல்களுக்கு ஒருகாலும் ஒப்புக்கொள்ளாது என்று அவர்கள் நம்பியிருந்ததும் நிறைவேறாது போனதேயாகும்.

இம்மசோதாவுக்குப் பிரிட்டிஷ் மன்னரின் அனுமதி கிடைத்து விட்டது என்று நேட்டாலிலிருந்து வந்திருக்கும் கடிதங்கள் கூறுகின்றன. அங்கே இந்தியர் குடியேற்றத்தை நிறுத்துவதற்கு உதவும்படி இந்திய மக்களைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென அறிவித்திருக்கின்றன. இந்தியர் அங்கே அனுப்பப்படுவதை நிறுத்திவிடுவதென்பது தீர யோசித்துச் செய்ய வேண்டிய காரியம் என்பதை நான் நன்கறிவேன். இந்தியர்களின் நன்மையைப் பொறுத்தவரையில் இதைவிடச் சாத்தியமான சிறந்த முடிவு வேறு எதுவுமில்லை என்பதே என்னுடைய தாழ்மையான கருத்து. இந்தியர்களை அனுப்புவது இங்கே சில ஜில்லாக்களிலிருக்கும் அதிக ஜன நெருக்கத்தைக் குறைப்பதுடன் அங்கே போகும் இந்தியருக்கும் நன்மையாக இருக்கும் என்று கருதப்படுகிறது. தலைவரியைக் கொடுப்பதற்குப் பதிலாக அங்கிருக்கும் இந்தியர் இங்கே திரும்பி வந்துவிடுவார்களாயின் ஜனநெருக்கம் குறைவது என்பது இல்லாது போய்விடும். அங்கிருந்து திரும்பிவிடும் இந்தியர்கள் இங்கே

வேலே தேடிக்கொள்ளுவது மிகவும் சிரமம். கிடைக்கும் வட்டியைக்கொண்டு வாழ்ந்துவிடலாம் என்பதற்கு அவர்கள் பெரிய நிதி எதுவும் கொண்டு வரப் போவதில்லே. தென்னுப்பிரிக்காவுக்கு அனுப்பப்படும் இந்தியர், தொழிலாளருக்குள்ளதைவிட மேலானதோர் அந்தஸ்தைப் பெறுவதற்கு அரசாங்கத்தினுல் உதவிசெய்ய முடியவில்லேயென்ருல், வெளிநாட்டுக் குடியேற்றம் குடியேறியவர்களுக்கு நல்லதல்ல. உண்மையில் இவர்கள் அவமரியாதையை அடைவதற்கே இவ்வாறு அனுப்பப்படுகின்றனர்.

ஆகையால் புதிய சட்டம் மாற்றப்படாவிடில், அல்லது ரத்து செய்யப்படாது போனுல், நேட்டாலுக்கு இந்தியரை அனுப்புவதை நிறுத்திவிடுமாறு உங்களேப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தியர் ஒப்பந்தத்திற்குட்பட்டவர்களாக இருக்கும்போது, அவர்கள் எவ்வாறு நடத்தப்படுகிருர்கள் என்பதை அறிய நீங்கள் ஆவல்கொள்ளுவீர்கள். அந்த வாழ்க்கை எந்த விதத்திலும் இன்பமுடையதாக இருக்கவே முடியாது. ஆனுல், உலகின் மற்றப் பகுதிகளில் இதே நிலேயில் இருக்கும் இந்தியரின் நிலேயைவிடப் பின்னும் மோசமானது என்று நான் கருதவில்லே. ஆயினும், அதே சமயத்தில் மோசமான நிறத்துவேஷம் அவர்கள் மீதும் நிச்சயமாக இருந்து வந்தது. இதுபற்றி இங்கே நான் சுருக்கமாகவே சொல்லமுடியும். முக்கியமானதான பச்சைப் பிரசுரத்தாளேக் கவனித்தால் அதில் இவ்விஷயம் முற்றிலும் விவாதிக்கப்பட்டிருக்கிறது. நேட்டாலில் சில தோட்டங்களில் துயர் மிகுந்த தற்கொலேச் சாவுகள் ஏற்பட்டிருக்கின்றன. கொடுமையாக, நடத்தப்படுகிருர்கள் என்ற காரணத்திற்காக, ஒப்பந்தக் கூலிகளாக வந்த இந்தியர் யாரும் வேறு வேலேக்குத் தங்களே மாற்றிக்கொள்ளவே முடியாது. ஒப்பந்தக் கூலியான இந்தியன், ஒப்பந்தக் காலம் தீர்ந்து சுயேச்சையானதும் சுயேச்சைச் சீட்டு ஒன்று பெறுவான். தப்பி ஓடி விடும் ஒப்பந்தக் கூலிகளேக் கண்டு பிடிப்பதற்காகவே இம்முறை அனுசரிக்கப்படுகிறது. இம்முறை அமலாக்கப்படும் விதத்தின் காரணமாக ஏழைகளான சுயேச்சை இந்தியருக்கு அடிக்கடி தொந்தரவுகள் ஏற்படுவதோடு கௌரவம் வாய்ந்த இந்தியரும் அடிக்கடி சங்கடமான நிலேக்குள்ளாக நேருகிறது. துவேஷம் இல்லாதிருக்குமானுல் இச்சட்டத்தினுல் சங்கடமே வந்திராது. குடியேறியவர்களின் பாதுகாவலராயிருக்கும் அதிகாரி, கொஞ்சம் அனுதாபமுள்ளவராகவும், மேலும், தமிழ், தெலுங்கு ஹிந்துஸ்தானி

தெரிந்த உயர் அந்தஸ்திலுள்ள ஓர் இந்தியராகவும் இருந்தால், ஒப்பந்தத்தின் பேரில் வந்தவர்கள் படும் துன்பங்களை நிச்சயமாக எவ்வளவோ குறைத்துவிடமுடியும். தன்னுடைய சுயேச்சை அடையாளச் சீட்டைக் கைதவறிவிட்டுவிட்ட இந்தியன், வேறு ஒரு சீட்டு வாங்க மூன்று பவுன் செலுத்த வேண்டும். இது வழிப்பறிக் கொள்ளையைத் தவிர வேறு எதுவுமில்லை.

நேட்டாலில் இரவு 9 மணி விதி என்று ஒன்று இருக்கிறது. இரவு 9 மணிக்குப் பிறகு இந்தியர் யாராவது வீட்டிற்கு வெளியே போகவேண்டுமாயின் ஓர் அனுமதிச் சீட்டை வைத்திருக்க வேண்டும். அந்தச் சீட்டு இல்லாது போய்விட்டால் அவர்கள் இருட்டறையில் போட்டு அடைத்துவைக்கப்படுவார்கள். இது இந்தியருக்கு, முக்கியமாக இந்த மாகாணத்திலிருந்து போயிருப்பவர்களுக்கு நெஞ்சை வதைக்கும் பெருந் தொல்லையாக இருந்து வருகிறது. ஒப்பந்தப்படி சென்றிருக்கும் இந்தியர் பலரின் குழந்தைகளுக்கு நல்ல படிப்பு வசதி கிடைக்கிறது என்பதை அறிந்து நீங்கள் திருப்தியடைவீர்கள். மேலும் பொதுவாக ஐரோப்பிய ரீதியான ஆடைகளையே அவர்கள் அணிந்து வருகிறார்கள். சிறு அவமதிப்பையும் சகிக்காத ஓர் இனத்தினர் இவர்கள். என்றாலும், இரவு 9 மணி விதியின் கீழ்க் கைதாகிவிடும் துன்பத்திற்கு ஆளாகின்றனர். நேட்டாலில் ஓர் இந்தியர், ஐரோப்பிய ஆடையை அணிவது எந்த விதத்திலும் அவர்களுக்குக் கண்ணியத்தைத் தருவதில்லை. இதற்கு நேர்மாறாக அவர்களுக்குத் துன்பத்தையே உண்டாக்குகிறது. மெமன் அணியும் ஆடையாவது சில சமயங்களில் அவர்களைத் தப்பித்துக் கொள்ள விடுவதுண்டு. பச்சைத் துண்டுப் பிரசுரத்தில் விவரிக்கப்பட்டிருந்த ஒரு சந்தோஷந் தரும் சம்பவம், இவ்விதம் ஆடை அணிந்திருந்த இந்தியரை இரவு 9 மணிக்குப் பிறகு டர்பனிலுள்ள போலீஸார் கைது செய்யாமல் இருந்ததுதான். தமிழ்ப் பள்ளிக்கூட ஆசிரியை ஒருத்தி, தமிழ்ப் பள்ளிக்கூட ஆசிரியர் ஒருவர்,ஞாயிற்றுக்கிழமைப் பள்ளிக்கூடத் தமிழாசிரியர் ஆகியவர்கள் இச்சட்டப்படி சில மாதங்களுக்கு முன்புதான் கைது செய்யப்பட்டு அடைத்து வைக்கப்பட்டனர். இவர்களுக்கெல்லாம் நீதி மன்றங்களில் நியாயம் கிடைத்தது என்பது சரி. ஆனால், இதுமாத்திரம் மன ஆறுதலைக் கொடுத்து விட முடியாது. இதன் பலன் என்ன? இத்தகைய இந்தியர் சட்டக் கோர்ட்டுகளில் விடுதலை பெற்றுத் தப்பித்துக்கொள்ள முடியாத வகையில் சட்டத்திலேயே மாறுதல்களைச் செய்ய

வேண்டுமென்று நேட்டால் கார்ப்பரேஷன்கள் கிளர்ச்சி செய்து வருகின்றன.

டர்பனில் இன்னுமொரு சட்டமும் இருக்கிறது. அதன்படி வெள்ளையரல்லாத வேலைக்காரர்கள் எல்லோரும் பதிவு செய்து கொள்ளவேண்டும். வேலை செய்யாத காலிகளுக்கு இத்தகைய சட்டம் இருக்கவேண்டியது அவசியமானதாய் இருக்கலாம். ஆனல், இந்தியரைப் பொறுத்தவரையில் இது சற்றும் பயனற்றது. ஆனல், சாத்தியமான இடங்களிலெல்லாம் காபிரிகளுடன் இந்தியரையும் சேர்த்து விடுவது என்பதே கொள்கை. நேட்டால் இந்தியருடைய குறைகளின் ஜாபிதா இத்துடன் தீர்ந்து விடவில்லை. மேற்கொண்டு விவரமறிய விரும்புவோர் பச்சைத் துண்டுப்பிரசுரத்தைக் கவனிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

நேட்டாலைப் போல வேறு எங்குமே இந்தியர் அவ்வளவு நன்ருக நடத்தப்படுவதில்லை என்று நேட்டால் ஏஜெண்டு ஜெனரல் இப்பொழுது சொல்லிக்கொண்டு வருவதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஒப்பந்தத்தின் பேரில் சென்ற இந்தியரில் பெரும்பாலானவர்கள், தாய்நாட்டுக்குத் திரும்பி விடுவதற்குத் தங்களுக்கு அளிக்கப்படும் வசதிகளைப் பயன்படுத்திக்கொண்டு திரும்பிவிடுவதில்லை என்பதே தாம் கூறுவதற்குச் சரியான ஆதாரம் என்கிருர் அவர். ரெயில்வே, டிராம் அதிகாரிகள் இந்தியரை மிருகங்களைப் போல நடத்துவது கிடையாது என்றும், நீதி மன்றங்கள் இந்தியருக்கு நீதியை மறுத்துவிடவில்லை என்றும் சொல்லுகிருர்.

ஏஜெண்டு-ஜெனரலிடம் எனக்கு அதிக மதிப்பு உண்டு. இந்தியர் அங்கே நன்ருக நடத்தப்படுகிருர்கள் என்பதே அவருடைய வாதமாயின், நன்ருக நடத்தப்படுவது என்பதைப் பற்றி அவருடைய கருத்து விசித்திரமானதாகவே இருக்க வேண்டும். இரவு '9 மணிக்கு மேல் அனுமதிச்சீட்டு இன்றி வெளியே போகக் கூடாது என்பதும், ஒரு சுதந்திர நாட்டில் மக்களுக்குள்ள சாதாரணமான உரிமைகள்கூட மறுக்கப்படுவதும், சுயேச்சைத் தொழிலாளிகளுக்கு, அடிமைக்கு இருப்பதைவிடச் சற்று உயர்வானதோர் அந்தஸ்து மறுக்கப்படுவதும், இன்னும் பல தடைகளுக்கெல்லாம் ஆளாக்கப்பட்டிருப்பதும், நன்ருக நடத்தப்படுகிருர்கள் என்பதற்கு உதாரணங்கள் போலும்! உலகமெங்கும் இந்தியர் நடத்தப்படும் விதத்தில் இதுவே மிகச் சிறந்தது என்ருல், உலகத்தின் மற்றப் பகுதிகளிலும், இங்குங்கூட, இந்தியனின் நிலை மிகவும் துயர்

மிகுந்தது என்றே நம் பகுத்தறிவுக்குத் தோன்றுகிறது. விஷயம் என்னவென்ருல், ஏஜெண்டு-ஜெனரலான ஸ்ரீ வால்டர் பீஸ், உத்தியோக நோக்கிலிருந்து இதைக் காண்கிருர். ஆகையால் உத்தியோக சம்பந்தமான எல்லாமே அவர் கண்ணுக்கு நன்ருக இருப்பதாகவே தோன்றுகிறது. சட்டப்படி செய்யப்பட்டிருக்கும் சங்கடங்கள் நேட்டால் அரசாங்கத்தின் நடத்தையைக் கண்டிக்கக் கூடியனவாக அமைந்திருக்கும்போது ஏஜெண்டு-ஜெனரல் தம்மைத் தாமே எப்படிக் குறைத்துக் கொள்ளுவார்? இந்தியருக்கு இழைக்கப்பட்டு வரும் இடையூறுகள் பிரிட்டிஷ் அரசியலின் அடிப்படைத் தருமத்திற்கே விரோதமானவை என்று அவரோ, அல்லது எந்த அரசாங்கத்தின் பிரதிநிதியாக இருக்கிருரோ அந்த அரசாங்கமோ ஒப்புக் கொள்ளுவதானல், இன்று மாலை நான் உங்கள் முன்பு நின்று பேச வேண்டியதே இல்லை. ஒரு குற்றவாளிக்குத் தான் செய்தது குற்றமாகவே படாது. ஏஜெண்டு-ஜெனரல் தெரிவித்துள்ள அபிப்பிராயத்திற்கு மதிப்பே இல்லை .என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஒப்பந்தத்தின் பேரில் போகும் இந்தியர், திரும்பிவிடுவதற்கு அளிக்கப்படும் சந்தர்ப்பத்தைப் பொதுவாகப் பயன்படுத்திக் கொள்ளுவதில்லை என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ளுகிருேம். ஆனல், நாங்கள் கூறும் குறைகளுக்கு இதுவே சிறந்த பதில் எனச் சொல்லப்படுவதை நாங்கள் நிச்சயமாக மறுக்கிருேம். சட்டரீதியான சங்கடங்களெல்லாம் இருந்து வருகின்றன என்பது சரியல்லவென்று எப்படி இது நிரூபிப்பதாகும்? திரும்பி விடுவதற்கான சந்தர்ப்பத்தை இந்தியர் உபயோகித்துக்கொள்ளுவதில்லை என்பது, இருக்கும் கஷ்டங்களை அவர்கள் பொருட்படுத்துவதில்லை, கஷ்டங்களிருந்தாலும் அங்கேயே இருந்துவிடுவார்கள் என்பதை வேண்டுமானல் நிரூபிப்பதாக இருக்கலாம். கஷ்டங்களையும் சகித்துக்கொண்டு அங்கேயே இருக்க இந்தியர் விரும்புகிருர்கள் என்பது உண்மையானல், அந்த இந்தியர் தங்களுடைய நிலைமையை அறிந்தும் கஷ்டங்களுக்கெல்லாம் உடன்பட்டுக்கொண்டிருப்பது அவமானகரமானது என்பதை அவர்கள் உணரும்படி செய்வது விஷயங்களை நன்கறிந்தவர்களின் கடமையாகிறது. கஷ்டங்களிருந்தும் இந்தியர் அக்காலனியில் இருந்துவருகிருர்கள் என்பதுதான் உண்மையெனில், டிரான்ஸ்வால் சமரசத்தின் சம்பந்தமாக ஸ்ரீ சேம்பர்லேன் அனுப்பிய அறிக்கையில் அவர் பாராட்டியிருக்கும் இந்தியரின் பொறுமைக்கும், இந்திய மக்களின் சகிப்புத்தன்மைக்கும்

இது மற்ருேர் ஆதாரமாகிறது. சகித்துக்கொண்டிருக்கிருர்கள் என்பது, இருக்கும் கஷ்டங்களை நீக்கக்கூடாது என்பதற்கோ அல்லது இந்தியர்கள் அங்கே நன்ருக நடத்தப்படுகின்றனர் என்பதற்கோ ஒரு காரணமாகிவிடாது.

மேலும், இந்தியாவுக்குத் திரும்பிவிடுவதற்குப் பதிலாக அக்காலனியிலேயே தங்கிவிடும் இம்மக்கள் யார்? இவர்கள், இந்தியாவின் பரம ஏழை வகுப்பினரிலிருந்தும், அதிக ஜன நெருக்கமுள்ள ஜில்லாக்களில் அநேகமாக அரைப்பட்டினி கிடந்தவர்களிலிருந்தும் அங்கே போனவர்கள். குடும்பம் என ஒன்று இருந்தால், இவர்கள் தம் குடும்பத்துடன் நேட்டாலுக்குப் போனவர்கள். முடிந்தால் அங்கேயே தங்கிவிடுவதென்ற நோக்கத்துடன் சென்றனர். இத்தகைய மக்கள் தங்கள் ஒப்பந்தக் காலம் முடிந்ததும், ஸ்ரீ சாண்டர்ஸ் சொன்னதுபோல், திரும்பவும் அரைப்பட்டினி நிலைக்கே திரும்பாமல், சிறந்த சீதோஷ்ண நிலைமையுடையதும், நல்ல ஊதியம் கிடைக்கக் கூடியதுமான ஒரு நாட்டிலேயே தங்கிவிட விரும்புவார்களானுல் அதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? பட்டினி கிடப்பவன், தனக்கு ஒரு கவளம் சோறு கிடைக்குமானுல், தான் எவ்வளவு மோசமாக நடத்தப்படுவதற்கும் சகித்துக்கொண்டிருப்பான்.

டிரான்ஸ்வாலில் உட்லாண்டர்கள், தங்களுக்கு இருக்கும் மோசமான குறைகளைக் குறித்துப் பெரிய பட்டியலை கொடுக்கவில்லையா? பழைய நாட்டைவிட டிரான்ஸ்வாலில் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டியதைச் சுலபமாகச் சம்பாதிக்கமுடியும் என்ற காரணத்தினுல், தாங்கள் எவ்வளவுதான் கொடுமையாக நடத்தப்பட்டாலும் டிரான்ஸ்வாலில் அவர்கள் ஏராளமாக வந்து குவியவில்லையா? ஸ்ரீ பீஸ் இன்னும் ஒன்றையும் மனத்தில் வைத்துப் பேசவேண்டும். சுயேச்சையான இந்திய வர்த்தகர்கள், அக்காலனியில் தங்களுக்கும் எத்தனையோ தொல்லைகளும் துன்பங்களும் இருந்த போதிலும், இஷ்டப்பட்டே அங்கே வந்துகொண்டிருக்கிருர்கள். அவமதிப்புக்களைச் சகித்துக் கொள்ள முடியவில்லையென்ருல், டிரான்ஸ்வாலுக்குப் போக வேண்டாமென்று உட்லாண்டர்களிடம் சொல்லமுடியாதெனில் இந்தியரிடமும் அதைச் சொல்லமுடியாது. நாம் தத்து வந்தவர்களாயிருக்கலாம். என்ருலும் நாமும் சாம்ராஜ்யத்தின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், அதன் குழந்தைகள். ஐரோப்பியக் குழந்தைகளுக்கு உள்ளன போலவே நமக்கும் அதே உரிமைகளும் சலுகைகளும் உண்டென உத்தரவாதம் அளிக்கப்பட்டிருக்

கிறது. இந்த நம்பிக்கையின் பேரிலேயே நாம் நேட்டால் காலனிக்குச் சென்றோம். நமது நம்பிக்கை நியாயமானது என்றும் கருதுகிறோம்.

ரெயில்வே, டிராம் வண்டி அதிகாரிகள் இந்தியரை மிருகங்களைப் போல நடத்துகிறார்கள் என்று துண்டுப் பிரசுரத்தில் கூறப்பட்டிருப்பதை ஏஜெண்டு-ஜெனரல் மறுக்கிறார். நான் கூறயிருப்பவை சரியானவையல்ல என்றே வைத்துக்கொண்டாலும், சட்டரீதியில் இந்தியருக்கு இருந்துவரும் இடையூறுகள் பொய் என்று ஆகிவிடமாட்டா. அக்குறைகளை நீக்கவேண்டும் என மனுக்கள் பல செய்துகொண்டிருக்கிறோம். அவற்றை நீக்குவதில் நேரடியாகத் தலையிட வேண்டுமென பிரிட்டிஷ், இந்திய அரசாங்கங்களையும் வற்புறுத்தி வருகிறோம். ஏஜெண்டு-ஜெனரல் தவறாக அறிவிக்கப்பட்டிருக்கிறார் என்றே எண்ணுகிறேன். ரெயில்வே டிராம் வண்டி அதிகாரிகள் இந்தியரை மிருகங்களைப் போலவே நடத்தி வருகின்றனர் என்று மீண்டும் கூறுகிறேன். இதையெல்லாம் மறுத்து இன்று கூறப்படும் இடத்திலேயே, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னாலேயே, இதே புகாரை நான் கூறியிருக்கிறேன். நேட்டால் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்குப் பகிரங்கக் கடிதம் எழுதும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. காலனி முழுதும் அது பரக்கப் பிரசுரமாயிற்று. தென்னாப்பிரிக்காவில் இருக்கும் எல்லா முக்கியமான பத்திரிகைகளும் அதை வெளியிட்டன. நான் கூறியதை அப்பொழுது யாருமே மறுக்கவில்லை. நான் கூறியது உண்மையென்று சில பத்திரிகைகளும் ஒப்புக்கொண்டன. இந்நிலைமையில், இதையே நான் இங்கே துண்டுப் பிரசுரத்திலும் வெளியிட்டேன். நான் எதையும் மிகைப்படுத்திக் கூறவில்லை. இதற்கு என் சார்பில் சாட்சியமும் கொடுக்கவேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். நான் கூறியதையும், நான் எந்த நியாயத்திற்காக வாதாடுகின்றேனோ அதையும் பொய்யாக்க முயற்சிகள் செய்யப்படுவதால், நான் வெளியிட்ட பகிரங்கக் கடிதத்தில் கூறியிருப்பதைக் குறித்து தென்னாப்பிரிக்கப் பத்திரிகைகள் என்ன கருதின என்பதையும் இங்கே குறிப்பிடுவது, நான் போராடும் ஒரு லட்சியத்திற்காக எடுத்துக்கொண்ட என் கடமையாகும்.

ஜொஹன்னஸ்பர்க்கில் பிரபலமான பத்திரிகையான 'ஸ்டார்' கூறியதாவது:

'ஸ்ரீ காந்தி ஆணித்தரமாகவும், நிதானத்தோடும், நன்றாகவும் எழுதுகிறார். இக்காலனிக்கு வந்த பிறகு அநீதியைச் சிறிதளவு அவரே அனுபவித்திருக்கிறார்.

ஆனால், உண்மையில் அவருடைய உணர்ச்சி பகையின் நிறம் கொண்டதாகத் தெரியவில்லை. பகிரங்கக் கடிதத்தின் தொனியைப் பற்றிய வரையில் நியாயமாக எந்தவித ஆட்சேபமும் கூறுவதற்கில்லை என்பதை ஒப்புக்கொள்ளவே வேண்டும். ஸ்ரீ காந்தி பிரச்னையை மிக நிதானத்துடனேயே விவாதித்திருக்கிறார்.'

நேட்டால் சர்க்கார் பத்திரிகையான 'நேட்டால் மெர்க்குரி' கூறுவதாவது:

'அமைதியோடும் நிதானத்தோடும் ஸ்ரீ காந்தி எழுதுகிறார். அவர் முதன் முதலில் காலனிக்கு வந்தபோது வக்கீல்களின் சங்கம் அவருக்கு இழைத்ததை நினைத்துப் பார்த்தால் எதிர்பார்க்கக்கூடிய அளவுக்கு மேலாகவே அவர் பாரபட்சமற்று இருக்கிறார்.'

நான் ஆதாரமற்றவைகளைச் சொல்லியிருப்பேனாயின், என்னுடைய பகிரங்க கடிதத்திற்கு இத்தகைய நற்சாட்சியைப் பத்திரிகைகள் கொடுத்திரா.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஓர் இந்தியர் நேட்டால் ரெயில்வேயில் இரண்டாவது வகுப்புப் பிரயாணச் சீட்டு வாங்கினார். ஒரே இரவுப் பிரயாணத்தின்போது அவர் மும்முறை தொந்தரவுக்கு உள்ளானார்; ஐரோப்பியப் பிரயாணிகளைத் திருப்தி செய்வதற்காக இரு முறை இறங்கி வேறு வண்டியில் அவர் ஏறவேண்டியதாயிற்று. இந்த வழக்கு கோர்ட்டு முன்பு வந்தது. அந்த இந்தியர் பத்துப் பவுன் நஷ்ட ஈடு பெற்றார். இவ்வழக்கில் வாதியின் வாக்குமூலம் வருமாறு:

'நான் இரவு 1-30 மணிக்கு சார்லஸ் டவுனில் ரெயிலில் இரண்டாவது வகுப்பில் ஏறினேன். இதே வண்டியில் மற்றும் மூன்று இந்தியரும் இருந்தார்கள். ஆனால், நியூகாஸிலில் அவர்கள் இறங்கிவிட்டனர். ஒரு வெள்ளைக்காரர் நானிருந்த வண்டியின் கதவைத் திறந்து, 'சாமி, வெளியே வா' என்றார். இதற்கு நான் 'ஏன்?' என்று கேட்டேன். உடனே அவர், 'பரவாயில்லை. வெளியே வா. இங்கே வேறு ஒருவரை நான் உட்கார வைக்கவேண்டும்' என்றார். இதற்கு நான், 'என் கட்டணத்தைச் செலுத்தியிருக்கும்போது நான் ஏன் வெளியே வரவேண்டும்?' என்றேன். வெள்ளைக்காரர் அங்கிருந்து போய் ஓர் இந்தியரை அழைத்து வந்தார்.'

"அந்த இந்தியர் ரெயில்வேயில் வேலை பார்க்கிறவர் என நினைக்கிறேன். நான் வண்டியை விட்டு இறங்கவேண்டும் என்று எனக்குச் சொல்லும்படி இந்தியர் அறிவிக்கப்பட்டார். அந்த இந்தியர் உடனே என்னிடம், "இந்த வெள்ளைக்காரர் உன்னை வண்டியை விட்டு இறங்கும்படி உத்தரவிடுகிறார். நீ வெளியே வந்துவிடவேண்டும்" என்றார். பிறகு அந்த இந்தியர் போய்விட்டார். வெள்ளைக்காரரைப் பார்த்து, "என்னை ஏன் இறங்கச் சொல்லுகிறீர்கள்? கட்டணத்தைக் கொடுத்திருக்கிறேன். ஆகையால் இங்கிருக்க எனக்கு உரிமையுண்டு" என்றேன். இதைக் கேட்டதும் வெள்ளைக்காரருக்குக் கோபம் வந்து

விட்டது. "நீ வெளியே வராவிட்டால் உன்னை என்ன பாடு படுத்துகிறேன், பார்" என்றார். வண்டிக்குள் ஏறினார். என் கையைப் பிடித்துக் கீழே என்னைத் தள்ள முயன்றார். உடனே, "என்னை விடுங்கள், நான் இறங்குகிறேன்" என்றேன். வண்டியிலிருந்து இறங்கினேன். வெள்ளைக்காரர் வேறு ஓர் இரண்டாம் வகுப்பு வண்டியைக் காட்டி அதில் போய் ஏறிக்கொள்ளும்படி சொன்னார். அப்படியே போய் ஏறிக்கொண்டேன். அவர் காட்டிய வண்டி யாரும் இல்லாமல் காலியாகவே இருந்தது. நான் விரட்டப்பட்ட வண்டியில் பாண்டு வாத்தியம் வாசிக்கும் சிலர் ஏறினார்கள் என நினைக்கிறேன். இந்த வெள்ளைக்காரர், நியூ காஸிலில் இருக்கும் ரெயில்வே ஜில்லா சூப்பரிண்டெண்டெண்டு. பிறகு தொந்தரவில்லாமல் மாரிட்ஸ்பர்க்கிற்குப் பிரயாணம் செய்தேன். நான் தூங்கிவிட்டேன். மாரிட்ஸ்பர்க்கில் விழித்துக் கொண்டபோது, ஒரு வெள்ளைக்காரர், ஒரு வெள்ளைக்காரி, ஒரு குழந்தை ஆகியவர்கள் என் வண்டியில் இருப்பதைப் பார்த்தேன். ஒரு வெள்ளைக்காரர் வண்டிக்கு வந்து, என் வண்டியில் இருந்த வெள்ளைக்காரரிடம், "இது உங்கள் குழந்தையா?" என்று கேட்டார். என்னுடன் இருந்த பிரயாணி சிறு குழந்தையைக் காட்டி, "ஆம்" என்றார். உடனே மற்ற வெள்ளைக்காரர், "நான் அதைக் கேட்கவில்லை. அங்கே மூலையிலிருக்கும் அந்தச் சனியன் பிடித்த கூலிக்காரப் பயலைப் பற்றிக் கேட்கிறேன்" என்றார். இந்த நல்ல வார்த்தைகளைப் பேசிய கனவான் ஒரு ரெயில்வே சிப்பந்தி, ஷண்டர். வண்டிக்குள்ளிருந்த வெள்ளைக்காரர், "அவனைப்பற்றிக் கவலையில்லை. அவன் இருந்து போகட்டும்" என்று பதில் சொன்னார். பிறகு வெளியிலிருந்த வெள்ளைக்காரர் (சிப்பந்தி), "ஒரு கூலிக்காரன் ஒரே வண்டியில் வெள்ளைக்காரருடன் இருக்க நான் விடப்போவதில்லை" என்றார். என்னைப் பார்த்து, "சாமி, வெளியே வந்துவிடு" என்று கூறினார். அதற்கு நான், 'ஏன்? நியூகாஸிலில் நான் இந்த வண்டிக்கு மாற்றப்பட்டேன்" என்றேன். வெள்ளைக்காரர், "நீ இறங்கியே ஆகவேண்டும்" எனச் சொன்னார். வண்டியிலும் ஏற வந்தார். நியூகாஸிலில் நடந்ததுபோல் நடந்துவிடப் போகிறது என்று எண்ணிக்கொண்டு இறங்கிவிடுவதாகக் கூறி நான் இறங்கியும் விட்டேன். அந்த வெள்ளைக்காரர் எனக்கு மற்றோர் இரண்டாம் வகுப்பு வண்டியைக் காட்டினார். நான் அதில் ஏறினேன். அப்பொழுது அதில் யாரும் இல்லை. ஆனால், வண்டி புறப்படுவதற்கு முன்னால் ஒரு வெள்ளைக்காரர் வந்து ஏறினார். மற்றொரு வெள்ளைக்காரர் (ரெயில்வே சிப்பந்தி)

வந்து, 'அந்த துர்நாற்றக் கூலிக்காரனுடன் பிரயாணஞ்செய்ய உங்களுக்கு விருப்பம் இல்லையானல் நான் உங்களுக்கு வேறு வண்டி பார்க்கிறேன்' என்ருர்.'' ('நேட்டால் அட்வர்டைஸர்' *1893* நவம்பர் 22-ஆம் தேதி)

உடனிருந்த வெள்ளைக்காரப் பிரயாணி இந்தியருடன் பிரயாணம் செய்யத் தயாராயிருந்தும் மாரிட்ஸ்பர்க்கிலிருந்த அதிகாரியே இந்தியப் பிரயாணியைத் தொந்தரவு செய்திருக்கிருர் என்பதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். அவமானத்தை உண்டாக்கும் இத்தகைய சம்பவங்கள் அடிக்கடி நடக்கின்றன. இது அக்கிரமச் செயல் அல்ல என்ருல், வேறு என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

பிரதிவாதியின் சாட்சிகளில் ஒருவர், பொய் சொல்லத் தயார் செய்யப்பட்டிருந்தார் என்பது வழக்கு விசாரணையின் போது வெளியாயிற்று. இந்தியப் பிரயாணிகள் வேறு விதமாக நடத்தப்படுகின்றனரா என்று கோர்ட்டு கேட்டதற்குச் சாட்சி, 'ஆம்' என்று பதில் சொன்னுர். அதன் பேரில் இந்த வழக்கை விசாரித்த மாஜிஸ்டிரேட் சாட்சியிடம், 'அப்படியானல் என் கருத்துக்கு மாருன கருத்து உமக்கு இருக்கிறது. உம்மைவிட ரெயில்வேயில் சம்பந்தமில்லாத மற்றவர்கள் நன்ருக நடந்துகொள்ளுவது விசித்திரமாகவே இருக்கிறது' என்று சொன்னதாகத் தெரிகிறது.

''இந்த வழக்கைக் குறித்து, 'நேட்டால் அட்வர்டைஸர்' என்ற ஐரோப்பியப் பத்திரிகை பின்வருமாறு எழுதியது :

"அந்த அரபு மோசமாக நடத்தப்பட்டிருக்கிருர் என்பது சாட்சியங்களிலிருந்து ஆட்சேபத்திற்கு இடமின்றித் தெளிவாகிறது. இத்தகைய இந்தியருக்கு இரண்டாம் வகுப்பு டிக்கெட்டுகள் கொடுக்கப்படுகின்றன என்று தெரிவதால் அனுவசியமாக அவர்கள் மனச்சஞ்சலமும் அவமானமும் அடையச் செய்தது நியாயமில்லை. ஐரோப்பியருக்கும், மற்ற நிறப் பிரயாணிகளுக்கும் இடையே ஏற்படும் தொல்லைகளைக் குறைப்பதற்கு கறுப்பு அல்லது வெள்ளை நிறத்தினர் யாருக்கும் எந்தச் சங்கடமும் ஏற்படாத வகையில் தக்க நடவடிக்கைகளை எடுத்தே ஆக வேண்டும்."

இதே வழக்கைக் குறித்து 'நேட்டால் மெர்க்குரி' பத்திரிகை கூறுவதாவது :

"படித்தவர்களாயிருந்தாலும் அல்லது சுத்தமாயிருந்தாலும் இல்லாது போனுலும் எல்லா இந்தியரையுமே ஒரேயடியாகக் கூலிகள் என்று பாவித்துவிடும் ஒரு போக்குத் தென்னுப்பிரிக்கா முழுவதிலும் இருந்துவருகிறது. வெள்ளையரல்லாத பிரயாணிகள் ரெயில்களில் மரியாதையாக நடத்தப்படுவதில்லை என்பதை அடிக்கடி பார்த்துவருகிரேம். என். ஜி. ரெயில்வே வெள்ளைக்கார சிப்பந்திகள் ஐரோப்பியப் பிரயாணிகளுக்குச் சமமாக இவர்களை மரியாதையாக நடத்தவேண்டுமென்று எதிர்பார்க்கக் காரணமில்லையானுலும் வெள்ளையரல்லாத பிரயாணிகளிடம் சற்று மரியாதையுடன் நடந்து கொள்ளுவது அவர்களுடைய கௌரவத்திற்கு எந்த விதத்திலும் குறைவானதாகிவிடாது என்று கருதுகிரேம்."

தென்னுப்பிரிக்காவின் பிரபல பத்திரிகையான ‘கேப் டைம்ஸ்’ கூறுவதாவது :

“எந்த மக்கள் இன்றி எந்தக் காரியமுமே நடக்காதோ, அத்தகையோருடன் பகைமை பாராட்டும் விசித்திரமான காட்சி நேட்டாலில் இருந்து வருகிறது. அந்தக் காலனியிலிருந்து இந்தியர் திரும்பி அழைத்துக்கொள்ளப்பட்டு விடுவார்களானுல், எந்தவிதமான பொருளாதார நெருக்கடி அங்கே ஏற்பட்டுவிடும் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால்தான் உணரமுடியும். எனினும் இந்தியரோ அங்கே மிகவும் வெறுக்கப்பட்டு வருகின்றனர். டிராம் வண்டிகளில் அவர்கள் ஏறக்கூடாது! ரெயில் வண்டிகளில் ஐரோப்பியர்களுடன் அமரக்கூடாது! ஹோட்டல்காரர்கள் உணவும், இருக்க இடமும் அவர்களுக்கு அளிக்க மறுக்கின்றனர்! எல்லோருக்கும் பொதுவான குளிக்கும் இடங்கள் அவர்களுக்கு அனுமதிக்கப்படுவதில்லை!”

நேட்டாலில் இந்தியருடன் நெருங்கிய தொடர்புடைய ஆங்கிலோ-இந்தியரான ஸ்ரீ டிரம்மண்டின் அபிப்பிராயத்தைக் கீழே தருகிறேன். ‘நேட்டால் மெர்க்குரி’ பத்திரிகையில் அவர் கூறுவதாவது :

“அவர்களும் பிரிட்டிஷ் பிரஜைகள் என்பதையும், அவர்கள் மகாராணியே நம் ராணி என்பதையும் இங்குள்ளவர்களில் பெரும்பாலானவர்கள் மறந்துவிடுவதாகத் தோன்றுகிறது. இந்தியரும் பிரிட்டிஷ் பிரஜைகள் என்ற காரணத்தை முன்னிட்டு கூலி என்று அவர்களைத் தாழ்வு படுத்தி அழைப்பது நிறுத்தப்படவேண்டும். இதை ஒவ்வொருவரும் உணர வேண்டும். வெள்ளையர்களே இந்தியரை “நிக்கர்” என்று ஏளனமாகச் சொல்லி எந்தவித மரியாதைக்கும் இந்தியர் தகுதியற்றவர்கள் என எண்ணி நடத்துகின்றனர். இந்தக் காலனியிலோ பலர் கண்களுக்கு ஓர் இந்தியன் வேண்டாத சுமையாகவோ, எப்பொழுதும் உழைக்கும் யந்திரமாகவோ தோன்றுகிறுன். ஒன்றும் தெரியாதவர்களும், அறிவில்லாதவர்களும் இந்தியரைக் குறித்து இழிவாகப் பேசுவது சர்வ சாதாரணமாக இங்கே இருப்பதோடு வருந்த வேண்டியதாகவும் இருக்கிறது. இதனுல் வெள்ளைக்காரர்களின் மதிப்புக் குறைகிறதேயன்றி உயர்வதில்லை.”

ரெயில்வே அதிகாரிகள் இந்தியரை மிருகங்களாக நடத்துகிருர்கள் என்று நான் கூறுவது உண்மையானது என்பதை நிரூபிப்பதற்குப் போதுமான வெளிச் சான்றுகளைக் காட்டியிருக்கிறேன் என்று நான் நினைக்கிறேன். டிராம் வண்டிகளில் இந்தியரை உள்ளே உட்கார அனுமதிக்க விடுவதில்லை. ‘மாடி’ என்று கூறப்படும் வண்டியின் மேல் தளத்திற்கே அனுப்பப்படுகின்றனர். உட்கார்ந்த இடத்திலிருந்து கிளப்பி, வேறு இடங்களில் போய் உட்காரும்படியும் விரட்டப்படுகிருர்கள். முன்னுல் இருக்கும் இடங்களில் உட்கார அனுமதிக்கப்படுவதில்லை. எனக்கு ஓர் இந்திய அதிகாரியைத் தெரியும்; அவர் தமிழ்க் கனவான். புதுத் தினுசு ஐரோப்பிய ஆடைகளையே அவர் அணிந்திருந்தார். அவர் உட்கார டிராம் வண்டியில் நிறைய இடமிருந்தும் டிராம் படிக்கட்டிலேயே நிற்க வைக்கப்பட்டார்.

இந்திய சமூகத்தின் சுபிட்சத்தை நிரூபிப்பதற்குப் புள்ளி விவரம் குறிப்பிடவேண்டிய அவசியமே இல்லை. துன்பங்கள் பல

இருந்தபோதிலும் நேட்டாலுக்குப் போகும் இந்தியர் நன்ருகச் சம்பாதிக்கிருர்கள் என்பதை யாரும் மறுக்கவில்லை.

டிரான்ஸ்வாலில் நாம் சொந்தமாக நிலம் வைத்துக்கொள்ள முடியாது. குறிப்பிட்ட இடத்தைத் தவிர மற்ற இடங்களில் நாம் வசிக்கவோ அல்லது வர்த்தகம் செய்யவோ கூடாது. இந்தியர் களுக்கென்று ஒதுக்கப்படும் இடத்தைப்பற்றி பிரிட்டிஷ் ஏஜெண்டு கூறுகையில் 'ஆபாசமான கழிவுநீரைத் தவிர வேறு தண்ணீரே கிடைக்காத குப்பை கொட்டுமிடமே இந்த இடம்' என்று சொல்லியிருக்கிருர். ஜொஹன்னஸ்பர்க்கிலும் பிரிட்டோரி யாவிலும் நடைபாதைகளில் நாம் உரிமையுடன் நடக்கமுடி யாது. இரவு 9 மணிக்குமேல் நாம் வெளியில் இருக்கவும் இய லாது. அனுமதிச் சீட்டுகளைப் பெருமல் நாம் பிரயாணஞ் செய்ய வும் கூடாது. ரெயில்வேக்களில் முதல், இரண்டாம் வகுப்புக் களில் நாம் பிரயாணம் செய்யக்கூடாது என்று சட்டம் தடுக் கிறது. டிரான்ஸ்வாலில் நாம் குடியேறவேண்டுமானுல் அதற்காக நம்மை விசேடமாகப் பதிவு செய்துகொள்ளுவதற்கு ஆளுக்கு 3 பவுன் வீதம் செலுத்தவேண்டும். நாம் அடிமையாகவே நடத் தப்பட்டு வந்த போதிலும், நமக்கு எந்தவித உரிமையுமே இல் லாதுபோயினும், கட்டாய ராணுவ சேவையைக் குறித்து நாம் ஸ்ரீ சேம்பர்லேனுக்கு அனுப்பியிருக்கும் கோரிக்கையை அவர் உதாசீனம் செய்து விடுவாராஞல், ராணுவ சேவை செய்ய வேண் டும் என நாம் கட்டாயப்படுத்தப்படலாம். டிரான்ஸ்வாலில் இருக்கும் இந்தியரைப் பாதிக்கும் விஷயங்களைப்பற்றிய சரித் திரமே வெகு சுவாரசியமானது. போதிய நேரம் இல்லாததனுல் அதைப்பற்றி விவரமாக எடுத்துக்கூற முடியாமல் இருப்பதற் காக வருந்துகிறேன். எனினும், பச்சைத்துண்டுப் பிரசுரத்தைப் படித்து அதைத் தெரிந்துகொள்ளுமாறு உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன். சுதேசித் தங்கத்தை ஓர் இந்தியர் வாங் கினுல் அது ஒரு குற்றம் என்று செய்யப்பட்டிருக்கிறது என் பதையும் நான் சொல்ல விரும்புகிறேன்.

ஆரஞ்சு பிரீ ஸ்டேட்டில், அங்குள்ள ஒரு முக்கியமான பத்தி ரிகை கூறியிருப்பதுபோல, காபிரிகளுடன் இந்தியரும் சேர்க்கப் பட்டுவிட்டதன் காரணத்தினுலேயே பிரிட்டிஷ் இந்தியர் அங் கிருக்க முடியாதபடி செய்யப்பட்டிருக்கின்றனர். எந்த வகை யிலும் நாம் அங்கே நிலம் வைத்துக்கொள்ளவோ, சாகுபடி செய் யவோ, வியாபாரம் செய்யவோ முடியாதபடி செய்யும் வகையில் அங்கே ஒரு தனிச்சட்டம் செய்திருக்கிருர்கள். அவமானம் தரும் இந்த நிபந்தனைகளுக்கு நாங்கள் உடன்படுவதா

யிருந்தால், சில மானக்கேடான சடங்குகளுக்கு உட்பட்ட பின்னரே அங்கே தங்க நம்மை அனுமதிப்பார்கள். அந்த மாகாணத்திலிருந்து நாங்கள் விரட்டப்பட்டோம், எங்கள் கடைகள் மூடப்பட்டன. இதனால் 9,000 பவுன் நஷ்டம் உண்டாயிற்று. குறைகளுக்கு இன்றளவும் எந்தவிதமான பரிகாரமும் கிடைக்கவில்லை. இந்தியர் நடைபாதைகளில் செல்வதைத் தடுக்கவும், ஒதுக்கப்பட்ட இடங்களிலேயே இந்தியர் வசிக்கவேண்டும் என்று செய்யவும், இதற்கான விதிகளைச் செய்துகொள்ள அந்தக் காலனியிலிருக்கும் கிழக்கு லண்டன் நகரசபைக்கு அதிகாரமளிக்கும் ஒரு மசோதாவை கேப் பார்லிமெண்டு நிறைவேற்றியிருக்கிறது. இந்தியருக்கு வியாபார அனுமதிச்சீட்டுக் கொடுக்கவேண்டாம் என்று கிழக்குக் கிரிபியூன்லாந்து அதிகாரிகளுக்கு அது அறிவித்தும் இருக்கிறது. ஆசியாக்காரர்கள் வருவதைத் தடுக்கச் சட்டஞ் செய்ய அனுமதி வேண்டும் என்று பிரிட்டிஷ் சர்க்காரைக் கேப் சர்க்கார் கேட்டுக்கொண்டுமிருக்கிறது. பிரிட்டிஷ் நிர்வாகத்திற்குட்பட்ட ஜூலுலாந்தில் எஷோவே, நாந்தவேனி ஆகிய பட்டணங்களில் நாங்கள் நிலம் வாங்கவோ, நிலத்தைச் சொந்தமாக வைத்துக்கொள்ளவோ முடியாது. இவ்விஷயம் இப்பொழுது ஸ்ரீ சேம்பர்லேனின் ஆலோசனையில் இருக்கிறது. டிரான்ஸ்வாலைப்போலவே இங்கும் சுதேசித் தங்கத்தை இந்தியர் வாங்குவது ஒரு பெரிய குற்றம்.

இவ்விதம் எல்லாப் பக்கங்களிலும் தடைகள் எங்களை நெருக்கிக் கொண்டிருக்கின்றன. இங்கும், இங்கிலாந்திலும் எங்களுக்காக எதுவுமே செய்யப்படாது போகுமானால், கௌரவமான இந்தியன் யாருமே தென்னப்பிரிக்காவில் இல்லாது அழிந்து போகவேண்டியதுதான்.

மேலும் இது அந்நாட்டைப்பற்றிய விஷயம் மாத்திரம் அல்ல. லண்டன் 'டைம்ஸ்' கூறுவதைப்போல, 'இந்தியாவுக்கு வெளியிலிருக்கும் பிரிட்டிஷ் இந்தியர் எல்லோரையும் பற்றிய விஷயம் இது.' 'தென்னப்பிரிக்காவில் இந்தியர் சமத்துவமான அந்தஸ்தை அடையாது போனால், மற்ற இடங்களிலும் அந்தச் சமத்துவ அந்தஸ்தை அவர்கள் அடைவது கஷ்டமாகிவிடும்' என்று 'தண்டரர்' என்ற பத்திரிகை கூறுகிறது. ஆஸ்திரேலியாவில் இந்தியர் குடியேறக்கூடாது என்று தடுக்கும் சட்டம் ஒன்றை அந்தச் சர்க்கார் செய்திருக்கிறது என்பதை நீங்கள் பத்திரிகையில் படித்திருப்பீர்கள் என்றே நம்புகிறேன். இவ்விஷயத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் என்ன செய்யப்போகிறது என்பது முக்கியமாகப் பார்க்கவேண்டியதாகும்.

இவ்விதம் இந்தியர்மீது இருந்து வரும் துவேஷத்திற்கெல்லாம் உண்மையான காரணம் என்ன? தென்னுப்பிரிக்காவில் பத்திரிகையாளரில் மிகச் சிறந்தவரான ஸ்ரீ செயின்ட் லெகர் என்பவர் ஆசிரியராக இருந்த சமயம் 'கேப் டைம்ஸ்' இதைப்பற்றி வருமாறு எழுதியது:

'இந்திய வர்த்தகர்களின் நிலைமையே இன்றளவும் இவ்வளவு அதிகம் விரோதத்தை உண்டாக்கியிருக்கிறது. வர்த்தகத்தில் போட்டியாக இருப்பவர்களுக்கு அரசாங்கத்தைக்கொண்டு இழைக்கப்பட்டிருக்கும் தீமைகளைக் கவனித்தால் சுய நலத்திற்காகச் செய்யப்படும் அநீதிகள் வெட்ட வெளிச்சமாகின்றன. இவர்கள் வர்த்தகத்தில் வெற்றி காணுகிருர்கள் என்ற காரணத்திற்காக இவர்கள் இத்தேச சுதேசிகளைப் போலவே நடத்தப்படுவதைக்கண்டு யாரும் வெட்கப்படாமலிருக்க முடியாது. ஆதிக்கம் பெற்று இருக்கும் இனத்தினரைவிட இவர்கள் தலை தூக்குகின்றனர் என்ற காரணத்தை முன்னிட்டே அவமதிக்கப்படும் நிலையிலிருந்து இவர்கள் உயர்த்தப்படவேண்டியது அவசியம் என்ருகிறது.'

இது 1889-இல் எழுதப்பட்டது. அப்பொழுது உண்மை இதுவே என்ருல், இப்பொழுதும் நிலை அதுவேதான். ஏனெனில், ராணியின் இந்தியப் பிரஜைகளுடைய உரிமைகளைக் கட்டுப்படுத்திவிடுவதற்கு வேண்டிய சட்டங்களைச் செய்வதில் தென்னுப்பிரிக்கச் சட்டசபையினர் மிகத் தீவிரத்தைக் காட்டி வருகிருர்கள். நாங்கள் அங்கே இருந்து வருவதைக் குறித்து மற்ற ஆட்சேபங்களையும் கிளப்பி இருக்கின்றனர். எனினும் அவை விவாதத்திற்கு நிற்கமுடியாதவை. பச்சைத் துண்டுப் பிரசுரத்தில் அவைகளைப்பற்றியும் விவரித்திருக்கிறேன். 'நேட்டால் அட்வர்டைஸர்' இவைகளில் ஒன்றைப்பற்றிக் கூறி அதற்குப் பரிகாரமும் சொல்லியிருக்கிறது. அதை மாத்திரம் கூறுகிறேன். ஆட்சேபம் சரியானதாக இருக்கும் அளவுக்கு 'அட்வர்டைஸ'ரின் யோசனையை ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிருேம். ஐரோப்பியரின் நிர்வாகத்திலிருக்கும் இப்பத்திரிகை ஒரு சமயம் எங்களைத் தீவிரமாக எதிர்த்து வந்தது. இப்பிரச்னை முழுவதையும் ஏகாதிபத்திய நோக்கோடு கவனித்து அது கூறி முடிப்பதாவது:

'பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளில் இந்தியர் குடியேறும்படி விடுவதிலுள்ள குற்றபாடுகளைப் போக்குவதற்கு வழி அவர்கள் வராதபடி செய்து விடுவதல்ல. குடியேறும் இந்தியர்களின் நிலையை உயர்த்துவதற்காக முன்னேற்றமான சட்டங்களைச் செய்வதே சரியானதாகும். ஐரோப்பிய விதிகளை அனுசரித்து அவர்கள் வாழ்வதில்லை என்பது இந்தியர்களைப்பற்றி முக்கியமாகக் கூறப்படும் ஆட்சேபம். நல்ல வீடுகளில் அவர்கள் வசிக்கும்படித் தூண்டி, அவர்களின் புதுத் தேவைகளுக்கு வசதிகள் செய்துகொடுத்து, அவர்களுடைய வாழ்க்கை முறை நாளாவட்டத்தில் மாறும்படி செய்வதே இதற்கு ஏற்ற பரிகாரம்.

மனித வர்க்கம் முன்னேறி வரும் ஓர் உண்மையைக் கவனிக்குங் கால், குடியேறி உள்ளவர்களை அடியோடு ஒதுக்கிக்கட்டிப் பழைய நிலையிலேயே கிடக்கச் செய்வதைவிட, புதிய சூழ்நிலைக்கு ஏற்ப அவர்களை உயர்த்துவதே எளிதான முறையாகும்.'

இந்தியாவிலிருக்கும் இந்தியரைப்பற்றித் தென்னுப்பிரிக்கா விலிருப்பவர்கள் சரியாக அறியாமலிருப்பதும் இத்தகைய மனக்கசப்புக்கு மற்றொரு காரணம் என்றும் நாங்கள் நம்புகிறோம். எனவே அவசியமான தகவல்களைக் கொடுத்து, தென்னுப் பிரிக்காவில் பொதுமக்கள் இந்தியாவைப் பற்றிச் சரியாகத் தெரிந்துகொள்ளும்படிச் செய்யவும் முயன்று வருகிறோம். எங்களுக்கு இருந்துவரும் சட்ட சம்பந்தமான இடையூறுகளைக் குறித்து இங்கிலாந்திலும் இங்கும் மக்கள் ஆதரவைத் தேடப் பாடுபட்டு வருகிறோம். இங்கிலாந்தில் 'கன்சர்வேடிவ்'களும் 'லிபரல்'களும் பாகுபாடின்றி எங்களை ஆதரித்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். லண்டன் 'டைம்ஸ்' எங்களை ஆதரித்து எட்டுத் தலையங்கங்களை எழுதியிருக்கிறது. தென் னுப்பிரிக்க ஐரோப்பியர்களிடம் இது ஒன்றே எங்கள் அந் தஸ்தை ஒரு படி உயர்த்தியிருப்பதோடு அங்குள்ள பத்திரிகை களின் தொனியையும் நல்ல நிலைமைக்கு மாற்றியிருக்கிறது. காங்கிரஸின் பிரிட்டிஷ் கமிட்டி, எங்கள் பொருட்டு நீண்ட கால மாகப் பாடுபட்டு வருகிறது. ஸ்ரீ பவ்நகரி, பார்லிமெண்டுக்குச் சென்றது முதல் எல்லாச் சமயங்களிலும் எங்கள் கட்சியை எடுத்துக் கூறி வருகிறார்.

இங்கும் அதே ஆதரவு இருந்து வருகிறது என்பதை நான் அறிவேன். ஆனால், எங்கள் நிலையில் நீங்கள் இன்னும் அதிக கவனம் செலுத்தவேண்டும் என்பதே என் தாழ்மையான அபிப்பிராயம். எங்கள் நிலைமையை இன்னும் கொஞ்சம் தெளி வாகக் கூற விரும்புகிறேன். எங்களுக்கு இருந்துவரும் அவமானங்களையும், துன்பங்களையும், பிரிட்டிஷ் அரசாங்கம் நேரடியாகத் தலையிடுவதன் மூலம் நீக்கிவிட முடியாது என் பதை நாங்கள் அறிவோம்; அப்படித் தலையிடவேண்டும் என்றும் நாங்கள் கோரவில்லை. எல்லாச் சமூகங்களிலும் உள்ள நியாய புத்தி வாய்ந்தவர்களும் பத்திரிகைகளும், எங்களுக்கு அங்கே இழைக்கப்பட்டு வரும் அநீதிகளைக் குறித்துத் தங்கள் வெறுப் பைத் தெரிவித்தால், அதன் மூலம் அந்த அநீதிகளின் வேகம் தணி யலாம்; அநேகமாக அடியோடு நீங்கவும் கூடும் என்பதற்காகவே இவற்றைப் பொதுமக்களிடம் முறையிட்டுக் கொள்ளுகிறோம். ஆனால், சட்டத்தில் இத்தகைய துவேஷங்கள் உண்டாக்கப்படு வதிலிருந்து எங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டும் என்று

நாங்கள் நிச்சயம் பிரிட்டிஷ் சர்க்காரைக் கோருகிரேும். அது அப்படிச் செய்யும் என்றும் நம்புகிரேும். எங்கள் சுதந்திரத்தைப் பாதிப்பதாயிருக்கும் எந்த வகையான சட்டங்களேக் காலனிச் சட்டசபைகள் நிறைவேற்றிஞலும் அவற்றை அனுமதிக்கக் கூடாது என்றும் பிரிட்டிஷ் சர்க்காரை வற்புறுத்துகிரேும். ஆனுல், பிரிட்டிஷ் சர்க்கார் எந்த அளவுக்குக் காலனிகளின் இத் தகைய நடவடிக்கைகளில் தலையிட முடியும் என்ற விஷயத் திற்குக் கடைசியாக வருகிறேன். ஜூலுலாந்தைப் பொறுத்த வரையில், அது பிரிட்டிஷ் சர்க்காரின் நேர் நிர்வாகத்தின் கீழ் ஒரு கவர்னரால் ஆளப்படுகிறது. ஆகையால், பிரிட்டிஷ் சர்க்கார் தலையிட முடியுமா என்ற கேள்வியே அவ்விஷயத்தில் எழுவதற் கில்லை. நேட்டாலையும் நன்னம்பிக்கை முனையையும் போல் அது சுயாட்சி பெற்றதோ அல்லது பொறுப்பாட்சியைக் கொண்டதோ அன்று. ஆனுல் நேட்டால், நன்னம்பிக்கை முனை சம்பந்தமாக அவற்றின் பார்லிமெண்டுகள் நிறை வேற்றி, கவர்னரின் அங்கீகாரத்தையும் பெற்றுவிட்ட எச் சட்டத்தையும், இரண்டு ஆண்டுகளுக்குள் பிரிட்டிஷ் சர்க்கார் நிராகரித்துவிடலாம் என்று அரசியல் அமைப்பு விதிக்கிறது. காலனிகளில் அடக்குமுறைச் சட்டங்கள் மிகுந்துவிடாமல் இருப் பதற்குள்ள ஒரு பாதுகாப்பு இது. முன்கூட்டியே பிரிட்டிஷ் சர்க் காரின் அனுமதியைப் பெருமல் சிலரகச் சட்டங்களுக்கு கவர்னர் அங்கீகாரம் அளிக்கக் கூடாது என்று மன்னர் ஆக்ஞையும், அர சியல் விதியும் இருக்கிறது. வாக்குரிமை மசோதா, குடியேற்ற மசோதா போன்ற இச்சட்டங்கள் அத்தகைய ரகச் சட்டங்கள். எனவே பிரிட்டிஷ் சர்க்கார் இதில் தலையிடுவது நேர்மையானது, அவசியமானது. காலனிச் சட்டசபைகள் நிறைவேற்றும் சட்டங் கள் சம்பந்தமாகக் குறுக்கிடுவதில் பிரிட்டிஷ் சர்க்கார் மிக மெது வாகவே இருப்பதுண்டு என்பது உண்மை. ஆனுல், இப்பொழுது இருப்பதைவிட அவ்வளவு அவசரமில்லாத சட்டங்கள் விஷயத் தில் தலையிடப் பிரிட்டிஷ் சர்க்கார் தயங்காத சம்பவங்களும் பல உண்டு. ஆகையால், பிரிட்டிஷ் சர்க்காரினுல் தடுக்க முடியும் என்பதே என் பணிவான கருத்து.

கனவான்களே! எவ்விதமான சந்தேகத்திற்கும் இடம் வைக்காத வகையில் பம்பாய் பேசிவிட்டது. நாங்கள் இன்னும் இளைஞர்களாக இருக்கிரேும். அனுபவமும் போதாது. மூத்தவர் களும் சுயேச்சையானவர்களுமான சகோதரர்களாகிய உங்களி டம் கோரிக்கையைத் தெரிவிக்க எங்களுக்கு உரிமை உண்டு. அடக்குமுறையில் கட்டுண்டு நசுங்கிக் கிடக்கும் நாங்கள், எங்கள் அவலக்குரலை எழுப்பத்தான் முடியும். எங்கள் கழுத்தில் இருக் கும் கட்டை நீக்காது போனுல் அந்தப் பழி உங்களையே சாரும்.''

# லார்டு செல்போர்னிடம் முறையீடு

[1905 நவம்பர் 22-ந் தேதி, பிரிட்டிஷ் இந்திய சங்கத் தலைவர் ஸ்ரீ அப்துல் கனியும் மகாத்மா காந்தியும் மற்ற மூவரும் அடங்கிய தூதுக் குழு ஒன்று, ஹை கமிஷனர் லார்டு செல்போர்னைக் கண்டு பேசியது. தூதுக் குழுவினர் தயாரித்திருந்த அறிக்கையை லார்டு செல்போர்னிடம் கொடுப்பதற்கு முன்னால் காந்திஜி அவரிடம் கூறிய விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

மகாத்மா காந்தி சொன்னதாவது:

நாங்கள் தயாரித்திருக்கும் அறிக்கையைத் தங்களிடம் கொடுப்பதற்கு முன்னால், தாங்கள் சமீபத்தில் டிரான்ஸ்வால் வழியாகப் பிரயாணம் செய்தபோது நடந்த இரு விஷயங்களை உங்களிடம் கூறும்படிக் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறேன். போட்செபஸ்ட்ராமில் தாங்கள் பேசுகையில், 'அகதிகளல்லாத பிரிட்டிஷ் இந்தியர் எவரும், அடுத்த ஆண்டு பிரதிநிதிகளின் சபை இவ்விஷயத்தைப் பரிசீலனை செய்வதற்கு முன்னால், காலனிக்குள் அனுமதிக்கப்படமாட்டார்கள்' எனக் கூறினீர்கள் என்று சொல்லப்படுகிறது. அது உண்மையானால், அவ்விதம் செய்வது இந்தியரின் நலவுரிமைக்கு மிகவும் பாதகம் அளிக்கக்கூடியதாகும் என்பதை நான் இப்போது காட்ட முடியும் என்று நம்புகிறேன். தாங்கள் எர்மெலோ என்ற இடத்தில் பேசியபோது, 'கூலிக்காரக் கடைக்காரர்கள்' என்ற சொற்பிரயோகம் செய்ததாகவும் சொல்லப்படுகிறது. இக் காலனியிலுள்ள பிரிட்டிஷ் இந்தியரை இது மிகவும் அவமதிப்பதாக இருக்கிறது. தாங்கள் அவ்விதம் சொல்லியிருக்கமாட்டீர்கள். அப்படியே ஒரு வேளை சொல்லியிருந்தாலும், பிரிட்டிஷ் இந்தியக் கடைக்காரர்களை அவமதிக்கும் எண்ணத்தோடு கூறியிருக்கமாட்டீர்கள் என்று பிரிட்டிஷ் இந்திய சங்கம், அவர்களுக்குச் சமாதானம் கூறியிருக்கிறது. 'கூலிக்காரன்' என்ற சொல் நேட்டாலில் எவ்வளவோ விஷமத்தைச் செய்திருக்கிறது. ஒரு சமயம் இது மிகவும் மோசமான நிலைமைக்கும் வந்துவிட்டது. கோர்ட்டுகளிலும் இது புகுந்துவிட்டதால் நீதிபதி சர். வால்டர் வாக் குறுக்கிட்டு, ஒப்பந்தத்தின்பேரில் கூலிகளாக வரும் இந்தியரைத் தவிர வேறு யாருக்கும் இந்தச் சொல்லை உபயோகிக்கக்கூடாது என்று உத்தரவிட்டார்.

'தொழிலாளி' அல்லது 'சுமை தூக்குகிறவன்' என்பதே இப் பதத்தின் பொருள். இது தங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஆகையால், இச்சொல்லே வர்த்தகர்களின் விஷயத்திலும் உபயோகிப்பது என்பது கொஞ்சமும் பொருத்தமில்லாதது என்பதோடு தவறுமாகும்.

பிரிட்டிஷ் இந்தியச் சங்கம் தங்களிடம் அளிக்கும் அறிக்கையில் கண்டுள்ள முதல் விஷயம், அமைதிப் பாதுகாப்பு அவசரச் சட்டத்தைப் பற்றியது. டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டின் ஒரு பகுதியாக ஆனதும், யுத்தத்தில் ஜார்ஜ் ஒயிட் டுடன் வந்த டோலி தூக்குவோர் செய்த சிறந்த சேவையைக் குறித்தும், நேட்டாலில் இந்திய மருத்துவப் படையினர் செய்த உதவியைக் குறித்துமே எல்லாரும் வியந்து பேசியவண்ணம் இருந்தனர். ஒரு மரத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டு, அம்புல்வான மலையிலிருந்து போயர்கள் பீரங்கி சுடும்போது, அதைத் தவருமல் மணியடித்து மக்களுக்கு அறிவித்து எச்சரிக்கை செய்து வந்த பாபூ சிங்கின் வீரத்தை, சர் ஜார்ஜ் ஒயிட் வெகுவாகப் பாராட்டிப் புகழ்ந்திருக்கிருர். மருத்துவப்படையின் சேவைகளேப் பாராட்டிய ஜெனரல் புல்லரின் அறிக்கைகள் அப்பொழுதுதான் வெளியாகிக் கொண்டிருந்தன. நிர்வாகமோ, இந்தியரை நன்கறிந்த ராணுவ அதிகாரிகளின் கையில் இருந்தது. ஆகையால், துறைமுகங்களில் காத்துக்கொண்டிருந்த அகதிகளின் முதல் தொகுதியினர் எந்தவிதக் கஷ்டமுமின்றி தேசத்திற்குள் வந்தார்கள். இதைக் கண்டு பொதுமக்கள் திகிலடைந்தனர். இதன் பலன் என்ன? அகதிகள் வருவதைத் தடுத்துவிட வேண்டும் என்றனர். ஆசிய அதிகாரிகள் நாடெங்கும் பரவி இருந்தனர். அன்று முதல் இன்றளவும் இந்திய சமூகம் அமைதி என்பதையே காணவில்லே. எல்லாவகையிலும் அன்னியர்களாக இருப்பவர்கள், மனுச் செய்துகொண்டதுமே துறைமுகங்களில் அனுமதிச் சீட்டுகளேத் தாமதமின்றிப் பெற்று வந்தனர் ஆனல், இந்தியரோ, அகதிகளாக இருந்தபோதிலும், ஆசியாக்காரர்களின் மேற்பார்வையாளர்களுக்கு மனுச் செய்துகொள்ள வேண்டும். அந்த அதிகாரிகள் அனுமதியைக் கொடுக்கும் முன்பு குடியேற்ற நாட்டுக் காரியாலயத்தின் சம்மதத்தைப் பெற வேண்டும். இச்சடங்குகளெல்லாம் முடிய இரண்டிலிருந்து ஆறு மாதங்கள் வரையில் ஆகும். சில சமயங்களில் ஓர் ஆண்டும் அதற்கும் அதிகமாகவும் ஆவதும் உண்டு. அப்புறம் வாரத்திற்கு இத்தனே பிரிட்டிஷ் இந்திய அகதிகளுக்குத்தான்

அனுமதிச் சீட்டுகளைக் கொடுக்கலாம் என்று குடியேற்ற நாட்டுக் காரியாலயம் ஒரு விதியைச் செய்தது. இத்தகைய முறைகளினால் லஞ்ச ஊழல் அதிகமாயிற்று. அனுமதிச்சீட்டு ஏஜெண்டுகள் என்ற கூட்டத்தார் தோன்றி, அப்பாவிகளான அகதிகளை உறிஞ்சி வந்தார்கள். டிரான்ஸ்வாலுக்குள் புக விரும்பும் ஒவ்வோர் அகதியும் பதினைந்து முதல் முப்பது பவுன் வரையிலும், அதற்கு மேலுங்கூடச் செலவு செய்ய நேர்ந்தது என்பது பகிரங்கமான விஷயம். இது பிரிட்டிஷ் இந்திய சங்கத்திற்குத் தெரிந்ததும், இடைவிடாது அது முறையிட்டுக் கொண்டதன் பேரில், முடிவாக ஆசியாக்காரர் காரியாலயமே ஒழித்துக் கட்டப்பட்டது. ஆனால், அனுமதிச் சீட்டுகளை வழங்கும் முறை மாத்திரம் துரதிருஷ்டவசமாக இன்னும் இருந்துகொண்டு வந்தது. அனுமதிச் சீட்டுகள் வழங்கும் பிரதம காரியதரிசி, குடியேற்ற நாட்டுக் காரியாலயம் அடிக்கடி விடும் தாக்கீதுகளின்படி நடக்கவேண்டியிருக்கிறது. இவ்விதம், ஆபத்தான பேர்வழிகளையும், ராஜீயக் குற்றவாளிகளையும் அடக்குவதற்கென்று ஏற்பட்ட அமைதிப் பாதுகாப்பு அவசரச் சட்டம், குடியேற்ற நாட்டுக் காரியாலயத்தின் தூண்டுதலின்பேரில், இந்தியக் குடியேற்றத் தடைச் சட்டமாகி விட்டதோடு இன்றளவும் அப்படியே இருந்தும் வருகிறது. ஆகையால் இன்று இருக்கும் ஆட்சியில்கூட, உண்மையான அகதிகளுக்குக்கூட அனுமதிச்சீட்டுக் கிடைப்பதென்பது முடியாததாக இருக்கிறது. சிலருக்கு மாத்திரமே, அதுவும் அதிக காலதாமதத்தின்பேரில், அனுமதி கிடைக்கிறது.

ஒருவருடைய அந்தஸ்து கவனிக்கப்படுவதில்லை; அனுமதி வேண்டுமானால் அவர் ஒரு குறிப்பிட்ட நமூனாவில் மனுச் செய்துகொள்ள வேண்டும்; சாட்சிகளாக இருவரைக் குறிப்பிட வேண்டும்; கட்டைவிரல் முத்திரையும் அதில் வைக்கவேண்டும். அதன்பேரில் பரிசீலனை நடத்தி அனுமதியைக் கொடுக்கிறார்கள். இதெல்லாம் போதாதென்று ஸ்ரீ லவ்டேயும் அவர் நண்பர்களும் குற்றஞ்சாட்டினார்கள் என்பதனால், ஐரோப்பியர்களின் சாட்சியம் வேண்டும் என்று வற்புறுத்தும்படி அனுமதிச்சீட்டுப் பிரதம காரியதரிசி அறிவிக்கப்பட்டார். இது பிரிட்டிஷ் இந்திய அகதிகள் நாட்டிற்குள் புகமுடியாதபடி தடுப்பதேயாகும். தங்களையும், தங்களுடைய பெயரையும் தெரிந்த முக்கியமான ஐரோப்பியர்கள் இருபது பேர் இந்தியர்களுக்குக் கிடைப்பர் என்பது சாத்தியம் இல்லை. இதைக் குறித்து அரசாங்

கத்துடன் பிரிட்டிஷ் இந்தியர் சங்கம் கடிதப் போக்குவரத்து நடத்த வேண்டியதாயிற்று. இதற்கு மத்தியில் அனுமதிச் சீட்டுகள் அளிப்பது நிறுத்தி வைக்கப்படும். ஐரோப்பியர்களைச் சாட்சிகளாகக் குறிப்பிட வேண்டும் என்பது பெரிய அநியாயம் என்பதைச் சமீபத்தில் உணர்ந்தார்கள்.

ஐரோப்பியர்களைச் சாட்சிகளாகக் குறிப்பிட வேண்டும் என்பது ஒருபுறம் இருக்க, மற்றக் கஷ்டங்களும் இருக்கின்றன. பதினறு வயதிற்குட்பட்ட ஆண் குழந்தைகளுக்கும், அவர்கள் காலனிக்குள் போக அனுமதிச் சீட்டுகள் வேண்டுமென்று இப்பொழுது கேட்கப்படுகிறது. இதனல் பெற்ருேர்கள், பத்து வயதும், அதற்குக் குறைந்த வயதுமுள்ள குழந்தைகளைப் பிரிய வேண்டியிருக்கும் பரிதாபம் எல்லைப் பட்டணங்களில் சர்வசாதாரணமான நிகழ்ச்சிகளாகிவிட்டன. இத்தகைய விதி ஏன் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று எங்களுக்கு விளங்கவில்லை.

ஹை கமிஷனர்: பெற்ருேர்கள் தங்களுடன் குழந்தைகளிருக்கின்றனர் என்பதை முன்கூட்டியே அறிவித்திருந்தும், அக்குழந்தைகள் உள்ளே வர அனுமதிக்க மறுக்கப்பட்டிருக்கிருர்கள் என்பதற்கு ஏதாவது ஒரு சம்பவத்தை நீங்கள் குறிப்பிட முடியுமா?

காந்திஜி: ஆம், குழந்தைகள் உள்ளே வர அனுமதிக்கப்படுவதற்கு முன்னல் அக்குழந்தைகளின் பெற்ருேர்கள் பிரமாண வாக்குமூலங்கள் எழுதித் தரும்படிச் செய்யப்பட்டனர். உள்ளே போகப் பெற்ருேருக்கு உரிமை இருக்குமானல், நான் அறிந்த வரையில், நாகரிக நாடுகள் யாவுமே அவர்களுடைய மைனர் குழந்தைகளுக்கும் அதே உரிமையை அளித்தே வந்திருக்கின்றன. பதினறு வயதுக்கு உட்பட்ட குழந்தைகள், தங்களுடைய பெற்ருேர்கள் இறந்துவிட்டனர் என்ருே அல்லது யுத்தத்திற்கு முன்னல் தங்கள் பெற்ருேர்கள் டிரான்ஸ்வாலில் வசித்து வந்திருக்கிருர்கள் என்ருே நிரூபிக்காது போனல், அவர்கள் அக்காலனிக்குள் பிரவேசிக்கவோ அன்றி இருக்கவோ அனுமதிக்கப்படுவதில்லை. இது மிகவும் தீவிரமாக கவனிக்க வேண்டிய விஷயமாகும். இந்தியா முழுவதிலுமே கூட்டுக் குடும்ப முறை இருந்து வருகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். சகோதரர்கள், சகோதரிகள், அவர்களுடைய குழந்தைகள் முதலிய யாவருமே

தலைமுறை தலைமுறையாக ஒரே வீட்டிலேயே வசித்து வருகிறார்கள். குடும்பத்தில் மூத்தவராக இருப்பவரே பொதுவாக, உண்மையில், அக்குடும்பத்தைத் தாங்குபவரும் சம்பாதித்துப் போடுபவருமாக இருக்கிறார். ஆகவே, தம் உறவினரின் குழந்தைகளையும் இந்நாட்டிற்குக் கொண்டு வருவதில், இந்தியரைப் பொறுத்தவரையில், அதிசயமே இல்லை. இப்படிப்பட்ட குழந்தைகள் இதுவரையில் தடுக்கப்படாமல் இருக்கும்போது, அவர்களை இப்பொழுது அனுமதிப்பதில்லை என்பதோ, நாடு கடத்திவிடுவது என்பதோ பெரிய அக்கிரமமாகும். ஆண்களைப் போலவே இங்கே குடியிருக்கும் இந்தியரின் பெண் உறவினர்களும் தங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்த அரசாங்கம் விரும்புகிறது. இதை வலுவாக ஆட்சேபித்துப் பிரிட்டிஷ் இந்திய சங்கம் முறையிட்டுக் கொண்டிருக்கிறது; இங்கே வசிக்கும் இந்தியரின் மனைவிகள், பதிவு அத்தாட்சிகளைப் பெற்று மூன்று பவுன் கொடுக்க வேண்டியதில்லை என்று சட்ட நிபுணர்கள் அபிப்பிராயம் தெரிவித்திருப்பதால், இதைக் குறித்துக் கோர்ட்டில் வழக்குத் தொடுத்து நீதியைப் பெறுவது என்றும் அச்சங்கம் துணிந்திருக்கிறது.

சில விஷயங்களில், என்னதான் முக்கியமும் அவசியமும் இருந்தபோதிலும், அரசாங்கம் புதிதாக யாருக்கும் அனுமதிச் சீட்டுகளை வழங்குவதில்லை. இத்தேசத்தில் முன்னாலேயே குடியேறிவிட்ட இந்தியரின் நலவுரிமைகள் எதையும் தொடக்கூடாது, அவற்றிற்கு இடையூறுகளைச் செய்யக்கூடாது என்று உறுதியாகத் தாங்கள் அறிவித்துள்ளதைப் பத்திரிகைகளில் படித்து மிகவும் திருப்தி அடைந்தோம். தம் வர்த்தகத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போக, இந்தியாவிலிருந்து நம்பிக்கை வாய்ந்த குமாஸ்தாக்களைத் தருவிக்கும் நிலையில் பல வியாபாரிகள் இருந்துவருகின்றனர். இங்கே வசிப்பவர்களிலேயே நம்பிக்கையுள்ள ஆட்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதென்பது எளிதான காரியமன்று. எங்குமே, எல்லா வகுப்பாரையும் சேர்ந்த வர்த்தகர்களின் அனுபவம் இதுவேயாகும். ஆகையால் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஆட்சி ஏற்படும் வரையில் புதிதாக இந்தியர் யாரும் இந்நாட்டுக்குள் வரமுடியாமல் தடுத்துவிடுவதானால், இது இந்தியரின் நலவுரிமையில் குறுக்கிடுவதேயாகும். அகதிகளிலோ மற்றவர்களிலோ, படிப்பும் திறமையும் உள்ளவர்கள் மனுச் செய்துகொண்டால் அவர்களுக்கு அனுமதிச் சீட்டுகளை ஏன் மறுக்கவேண்டும் என்பதுதான் விளங்கவில்லை.

இந்தியர் உள்ளே பிரவேசிப்பதற்கு இத்தனைக் கஷ்டங்கள் இருந்தும், எதிர்ப்பாளர்களான நம் நண்பர்களோ, டிரான்ஸ் வாலில் இதற்கு முன்னல் இல்லாத பிரிட்டிஷ் இந்தியர்கள் டிரான்ஸ்வாலில் நிறைந்துவிட்டார்கள் என்று ஓயாமல் புகார் சொல்லிக்கொண்டிருந்தனர். இதற்கு முன்னல் இத்தேசத்துக்கு வந்த ஒவ்வோர் இந்தியரும் பதிவு செய்யப்பட்டவர்கள் என்றும் சொல்லிக்காட்டினர். இந்தக் குற்றச்சாட்டுச் சம்பந்தமாகக் கூறப்படுவனவெல்லாம் தவருனவை என்று தங்களுக்கு எடுத்துக் கூறப்பட்டிருப்பதால் இதைக் குறித்து விவரமாக நான் எதை யும் சொல்ல விரும்பவில்லை. எனினும், 1893-இல் நடந்த ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிடுவதற்காக மன்னிக்கும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஷைரும், டூமாட்டும் தொழிலாளரைக் கொண்டு வரும் பெரிய கண்டிராக்டர்கள். இவர்கள் ஒரே சமயத்தில் 800 இந்தியத் தொழிலாளரை இந்நாட்டுக்குக் கொண்டுவந்தனர். இன்னும் எத்தனை பேரை இவர்கள் கொண்டுவந்தனர் என்பது எனக்குத் தெரியாது. அப்பொழுது அரசாங்க வக்கீலாக இருந்தவர், அத்தொழிலாளருக்கு ஆளுக்கு மூன்று பவுன் வீதம் வரி செலுத்திப் பதிவுச் சீட்டுகளை வாங்கவேண்டும் என்று வற்புறுத்தினர். இதை ஆட்சேபித்து ஷைரும் டூமாட்டும் உயர் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தனர். அப்பொழுது பிரதம நீதிபதியாக இருந்த ஸ்ரீ கோட்ஸே தமது தீர்ப்பில், இவர்கள், 'வர்த்தகத்தை முன்னிட்டு' இந்நாட்டுக்குள் வந்தவர்கள் அல்ல என்பதால் சட்டப்படி இவர்கள் ஆளுக்கு மூன்று பவுன்வீதம் செலுத்தவேண்டியதில்லை என்றும், ஒப்பந்தக்காலம் முடிந்தபிறகு இவர்கள் இந்நாட்டிலேயே தங்கிவிடுவார்களானல் அரசாங்கம் இவர்களை எதுவும் செய்யமுடியாது என்றும் கூறினர். இது குறிப்பிடத்தக்க ஓர் உதாரணம். நூற்றுக்கணக்கான இந்தியர் மூன்று பவுன் செலுத்தாமலேயே இந்நாட்டில் இருந்திருக்கி ருர்கள் என்பதை யாரும் மறுக்கமுடியாது. வர்த்தக அனுமதிச் சீட்டுப் பெருத நூற்றுக்கணக்கான இந்தியர், ஆளுக்கு மூன்று பவுன் வீதம் செலுத்தித் தங்களைப் பதிவு செய்துகொள்ளாம லேயே இந்நாட்டில் இருந்திருக்கிருர்கள் என்பது நேரில் அறிந்த அனுபவம். பிரிட்டிஷ் இந்திய சங்கம் இதை எப்பொழுதும் எடுத்துக் காட்டியும் வந்திருக்கிறது.

1885-ஆம் வருட 3-ஆம் சட்டத்தைப் பார்ப்போம். இந் நாட்டில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்ட பிறகு வர்த்தக அனுமதிச் சீட்டுகளை பற்றியவரையில் இந்தியருக்குப் பரிகாரம் கிடைத் திருக்கிறது என்று அடிக்கடி சொல்லப்படுகிறது. ஆனல், இதை

விடப் பொய் வேறு எதுவுமே இருக்கமுடியாது. அனுமதிச் சீட்டுக் கட்டணம் செலுத்தவேண்டும் என்பதைத் தவிர, யுத்தத்திற்கு முன்னுல் நாங்கள் விரும்பும் இடங்களிலெல்லாம் வியாபாரம் செய்ய எங்களுக்கு உரிமை இருந்தது. எங்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்கு வேண்டிய பலம் அப்பொழுது பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் இருந்தது. அப்பொழுதிருந்த அரசாங்கம், வியாபாரம் செய்துகொண்டிருந்த இந்தியரைக் கைது செய்வதாக மிரட்டிக்கொண்டிருந்தபோதிலும், அத்தகைய நடவடிக்கை எதையும் அது எடுத்துக்கொள்ளவில்லை. சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பின் காரணமாக இந்திய வர்த்தகத்திற்கு இப்பொழுது எந்தத் தடைகளுமில்லை என்பது உண்மை. ஆனுல், இது அரசாங்கத்தினுல் ஏற்பட்டுவிட்ட வசதி அன்று. கடைசி நேரம் வரையில் காப்பாற்ற முன்வர அரசாங்கம் மறுத்தே வந்தது. 'கடைத் தெருக்கள் நோட்டீஸ்' என்ற அறிவிப்பும் வெளியிடப்பட்டது. யுத்த ஆரம்ப காலத்தில் குறிக்கப்பட்ட இடத்திற்கும் வெளியிலும் வியாபாரம் செய்ய அனுமதிச் சீட்டுப் பெற்றிராத இந்தியர் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு, ஒதுக்கிய இடத்திற்குப் போய் விடுவதோடு அங்கேயே வியாபாரம் செய்யவேண்டும் என எதிர்பார்க்கப்படுகிறது என்று இந்த அறிவிப்பு கூறியது. இந்த அறிவிப்பு வெளியானதற்கு, ஒவ்வொரு டவுனிலும் ஒதுக்கப்பட்ட இடம் இன்னதென்று நிர்ணயிக்கப்பட்டது. இந்த அநீதி சம்பந்தமாக நீதியை அரசாங்கத்தினிடமிருந்து பெறுவதற்காக எல்லாவித முயற்சிகளும் செய்யப்பட்டன. கடைசிவரை முயன்றும் பயன் இல்லாதுபோய்விடவே இதற்காகக் கோர்ட்டில் வழக்குத் தொடுத்துப் பார்ப்பதென முடிவாயிற்று. அச்சமயம் சர்க்காரின் சக்திகள் முழுவதுமே எங்களுக்கு விரோதமாக வேலே செய்தன. யுத்தத்திற்கு முன்னுல் இதே போன்ற வழக்கு ஒன்று தொடரப்பட்டது. சட்டத்திற்கு விளக்கம் பெறுவதற்காகப் பிரிட்டிஷ் சர்க்கார் அப்பொழுது இந்தியருக்கு உதவி செய்தது. அந்த உதவியை இப்பொழுது சுப்ரீம் கோர்ட்டிடமிருந்து பெற்ருேம். பிரிட்டிஷ் சர்க்காரின் ஆட்சி ஏற்பட்டபிறகு, எல்லாச் சக்திகளும் எங்களுக்கு எதிராகத் திரும்பிவிட்டன. இது விதியின் கொடிய விளேயாட்டேயாகும். கஷ்டங்களே நாங்கள் அதிகமாக உணர நேர்ந்தது என்பது மறைக்கமுடியாத உண்மை. சட்டத்திற்கு அரசாங்கம் செய்ய முற்பட்டிருக்கும் விளக்கம் சரியானதல்ல என்றும், இவ்விஷயம் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போனுல், அதன் தீர்ப்பு

இந்தியருக்குச் சாதகமானதாகவே இருக்கும் என்றும் அப்பொழுது சர்க்கார் வக்கீலாக இருந்தவர் சொல்லியும் அரசாங்கம் எங்களுக்கு விரோதமாகக் காரியங்களைச் செய்தது. ஆகையால், பிரிட்டிஷ் இந்தியர் ஒதுக்கப்பட்ட இடங்களுக்கு அனுப்பப்பட்டு விடவில்லையென்றால், தங்களுக்கு இஷ்டமான இடத்தில் இருக்கவும், வர்த்தகம் செய்யவும் அவர்களுக்குச் சுதந்திரம் இருக்கிறதென்றால், இந்தச் சுதந்திரம் அரசாங்கத்தின் உண்மையான நோக்கத்திற்கு எதிராகவே இருந்துவருகிறது என நான் கூறுவேன். ஒவ்வொரு சமயத்திலும், *1885*-ஆம் வருட *3*-ஆம் சட்டம், இந்தியரைப் பொறுத்தவரையில், அவர்களுக்கு விரோதமாகவே விளக்கம் செய்யப்பட்டு வந்தது. அச்சட்டத்தில் எங்களுக்குச் சாதகமாக இருந்த புரைகளை நாங்கள் பயன் படுத்திக்கொள்ள அனுமதிக்கப்படவில்லை. எடுத்துக்காட்டாக, அரசாங்கம், 'தனியாக ஒதுக்கும் தெருக்களில், வார்டுகளில்' நிலச் சொத்துக்களைச் சொந்தமானதாக வைத்துக்கொள்ளுவதிலிருந்து இந்தியர் தடுக்கப்படவில்லை. 'தெருக்களும் வார்டுகளும்' என்ற சொற்கள் சட்டத்தில் இருப்பதைக் கவனிக்க அரசாங்கம் கண்டிப்பாக மறுத்துவிட்டது. 'ஒதுக்கப்பட்ட இடங்கள்' என்பதையே பலமாகப் பிடித்துக்கொண்டு வாதித்தது. இந்த ஒதுக்கப்பட்ட இடங்களும் பல மைல்கள் தூரத்திற்கப்பால் குறிப்பிடப்பட்டன. தெருக்களிலும், வார்டுகளிலும் நிலத்தைச் சொந்தமாக வைத்துக்கொள்ள எங்களுக்கு உரிமையளிக்கும் சக்தி அரசாங்கத்திற்கு இருக்கிறது எனக் கூறி அதனிடம் மன்றாடினோம். அந்த அதிகாரத்தை எங்களுக்குச் சாதகமாக உபயோகிக்குமாறும் கோரினோம். ஆனால், எங்களுடைய கோரிக்கைகளெல்லாம் வீணாயின. சுகாதாரத்தைப் பொறுத்தவரையில் மகுதிகள் எல்லாவகையிலும் சரியாகவே இருந்தபோதிலும், ஜொஹன்னஸ்பர்க், பிரிட்டோரியா, போட்செப்ஸ்டிராம் ஆகிய இடங்களில் செய்யப்பட்டதைப் போல மத சம்பந்தமான இடங்களை அவற்றின் டிரஸ்டிகளுக்கு மாற்றிவிடவும் அரசாங்கம் மறுத்துவிட்டது. புதுச் சட்டம் கொண்டுவருவதற்கு ஆலோசிக்கப்படும் இத்தருணமே எங்களுக்கு நிவாரணம் அளிப்பதற்கு ஏற்ற சமயம் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

*1885*-ஆம் வருட *3*-ஆம் சட்டத்திற்குப் பதிலாகப் புதிதாகக் கொண்டுவரப்பட்டிருக்கும் சட்ட சம்பந்தமாக, ஸர் ஆர்தர் லாவி வெளியிட்டிருக்கும் அபிப்பிராயம், எங்களுக்கு அதிக மன வேதனையை உண்டாக்கியிருக்கிறது.

பிரிட்டிஷ் இந்தியர்களை அல்லது ஆசியாக்காரர்களைப் பாதிக்கும் வகையில் சட்டம் செய்யவேண்டும் என்று அது வற்புறுத்துகிறது. அத்துடன் கட்டாயமாக இவர்களை ஒதுக்கி வைக்க வேண்டுமென்றும் அது வற்புறுத்துகிறது. இந்த இரண்டு காரியங்களும், பிரிட்டிஷ் இந்தியருக்கு அடிக்கடி கூறப்பட்டு வந்திருக்கும் உறுதி மொழிகளுக்கு முற்றிலும் மாறுபட்டவையாகும். ஸர் ஆர்தர் லாலியிடம் எனக்கு அதிக மதிப்பு உண்டு. என்றாலும் அவர் தாம் நேட்டாலில் கண்டதைக் கொண்டு தவறான வழியில் இறங்கிவிட்டார் என்றே நான் கூற விரும்புகிறேன். டிரான்ஸ்வால் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு நேட்டால் ஓர் உதாரணமாகக் கருதப்படுகிறது. ஆனால், நேட்டாலிலுள்ள பொறுப்பு வாய்ந்த ராஜீயவாதிகளெல்லாம், இந்தியர் அக்காலனிக்கு அவசியமானவர்கள் என்று கூறிவந்திருக்கிறார்கள். சுதேசிகள் காரியக் கமிஷன் முன்பு ஸர் ஜேம்ஸ் ஹ்யூலேட், 'ஓர் இந்தியர், வர்த்தகர் என்ற முறையிலும் விரும்பத்தக்க பிரஜையே. மொத்த வியாபாரம் செய்யும் வெள்ளைக்காரர்களுக்கும் சுதேசிகளுக்கும் இடையே நல்ல இணைப்பாக இந்தியர்கள் விளங்குகிறார்கள்' எனக் கூறியிருக்கிறார். ஸர் ஆர்தர் லாலியோ, இன்னும் ஒன்றும் கூறியிருக்கிறார். பிரிட்டிஷ் இந்தியருக்கு வாக்குறுதிகள் அளிக்கப்பட்டிருந்தாலும், இப்பொழுது ஏற்பட்டுள்ளது போல் ஒரு நிலைமையை அப்பொழுது உணராததனாலேயே அவ்வாறு வாக்குறுதிகள் அளிக்கப்பட்டன என்றும், ஆகவே அவைகளை நிறைவேற்றுவதைவிட மீறுவதே பெரிய கடமையாகிறது என்றும் சொன்னார். இது வாக்குறுதியைப்பற்றிக் கொள்ளும் ஒரு தவறான கருத்து என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். 1858-ஆம் ஆண்டுப் பிரகடனத்தை எங்கள் சுதந்திர சாசனமென்று கட்டாயமாக நம்பினாலும், ஐம்பது வருடங்களுக்குமுன்னால் அளிக்கப்பட்ட வாக்குறுதிகளைக் குறித்து நாங்கள் இப்பொழுது கவனிக்கவில்லை. இப்பிரகடனம் ஒரு தரத்துக்குப் பல தரம் உறுதிப்படுத்தியும் கூறப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வைசிராயும் இப்பிரகடனத்தின்படி நடந்திருப்பதாகவும் அழுத்தந் திருத்தமாகக் கூறியுள்ளனர். குடியேற்ற நாடுகளின் பிரதம மந்திரிகள் மகாநாட்டில் ஸ்ரீ சேம்பர்லேன் இந்தக் கொள்கையையே கூறினார். பிரிட்டிஷ் இந்தியரைப் பாதிக்கும் எந்தச் சட்டமும் மன்னர் சர்க்காரினால் அங்கீகரிக்கப்படாது என்றும், ராஜ விசுவாசமுள்ள பிரஜைகளில் லட்சக்கணக்கானவருக்கு எதிராக அனாவசியமாகத் தொடுக்கும் விரோதமான செயலாகும் இது என்றும், ஆகையால், நிறைவேற்றப்படும்

சட்டம் பொதுப்படையாக இருக்கவேண்டும் என்றும் அவர் சொன்னுர். இக்காரணத்தைக் கொண்டே ஆஸ்திரேலியக் குடியேற்றத் தடை சம்பந்தமான முதல் சட்டம் நிராகரிக்கப்பட்டது. இதே காரணத்தை முன்னிட்டே, நேட்டால் வோட்டுரிமை சம்பந்தமான முதல் சட்டமும் நிராகரிக்கப்பட்டது. இதே காரணத்தினுல் ஆசியாக்காரர்களைப் பாதிப்பதாயிருந்த நேட்டால் அரசாங்கத்தின் நகல் மசோதா மாற்றி அமைக்கப்பட்டது. இவை யாவும் நெடுநாட்களுக்கு முன்னுல் நிகழ்ந்தவையல்ல; சமீப காலத்தில் நடந்தவையே. இவைகளையெல்லாம் மாற்றிக்கொண்டு விடுவதற்கு வேண்டிய புதிய உண்மைகள் இன்று கிடைத்திருக்கின்றன என்றும் கூற முடியாது. யுத்தத்திற்கு முந்திகூட, பிரிட்டிஷ் இந்தியரின் உரிமைகளைப் பாதுகாப்பதே யுத்தத்தின் முக்கிய காரணங்களில் ஒன்று என மந்திரிகள் கூறினுர்கள். யுத்த சமயத்தில் தாங்கள் கூட இந்த அபிப்பிராயத்தையே தெரிவித்தீர்கள் என்பது இவற்றையெல்லாம்விட முக்கியமாகும். ஆகையால், ஸர் ஆர்தர் லாலி இப்பிரச்னையைக் கவனித்திருக்கும் முறை நியாயமற்றது, பிரிட்டிஷ் சம்பிரதாயத்திற்கே முரணுனது என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்ளுகிருேம். ஆயினும், குடியேறியிருக்கும் வெள்ளையருடன் ஒத்துழைக்கத் தயாராயிருக்கிருேம் என்பதைக் காட்டுவதற்கு, ஒன்றுக்கு உடன்பட்டுவிடத் தயாராயிருந்தோம். இதற்கு முன்னுல் இத்தகைய சட்டம் எதுவும் இருந்ததில்லையாயினும், கேப் அல்லது நேட்டாலில் இருப்பதைப் போன்ற குடியேற்றச் சட்டத்திற்குச் சம்மதிக்கிருேம். படிப்பு, பரீட்சை விஷயங்களுக்கு இந்திய மொழிகளை அங்கீகரிக்க வேண்டும். அதோடு நிலைத்துவிட்ட பிரிட்டிஷ் இந்திய வர்த்தகர்களுக்கு, தங்கள் வர்த்தகத்தை முன்னிட்டுத் தேவைப்படும் ஆட்களைத் தாற்காலிகமாக இந்தியாவிலிருந்து கொண்டுவர வசதி அளிக்கவேண்டும். அவ்வாறு செய்வதால், ஆசியாக்காரர் படையெடுப்பு என்று சொல்லப்படும் பயம் உடனே நீங்கிவிடும். இன்னும் ஒன்றும் கேட்டுக்கொண்டிருக்கிருேம். வர்த்தக அனுமதிச் சீட்டுகள் சம்பந்தமாக முணுமுணுப்பு இப்பொழுது அதிகமாக இருந்து வருகிறது. சுப்ரீம் கோர்ட்டின் நிர்வாகத்தின் கீழ்ப் புதிய அனுமதிச் சீட்டுகளை ஒழுங்காக வழங்குவதற்கு ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் டவுன் போர்டுகளுக்கும் அதிகாரம் கொடுக்க வேண்டும். சட்டங்கள் சுயநலம் வாய்ந்தவைகளாக இருப்பதால், இப்பொழுது இருந்து வரும் அனுமதிச் சீட்டுகளையெல்லாம் சட்ட நடவடிக்கைகளிலிருந்து விலக்கிவிடவேண்டும்.

இந்த இரு காரியங்களும் செய்யப்பட்டு, 1885-ஆம் ஆண்டு 3-ஆம் சட்டமும் ரத்துச் செய்யப்படுமானுல், அப்பொழுதுதான் இந்தியருக்குக் கொஞ்சமாவது நீதியைச் செய்ததாகும். நிலச் சொத்துக்களை வைத்துக்கொள்ளவும், சுகாதாரம், கட்டடங்களின் தோற்றம் ஆகியவைகளைக் குறித்து முனிசிபல் சட்ட திட்டங்களிலுள்ள பொதுவான விதிகளை அனுசரித்து நாங்கள் விரும்புகிற இடங்களில் வசிக்கவும் எங்களுக்குப் பூரணமான உரிமை வேண்டும். இதற்கான சட்டம் செய்யப்படுவதற்கு முன்னுல், அதற்கேற்ற வகையில் சமாதானப் பாதுகாப்பு அவசரச் சட்டத்தை ஒழுங்குபடுத்துவதுடன் 1885-ஆம் ஆண்டு 3-ஆம் சட்டத்திற்கும் தாராளமான வகையில் விளக்கம் செய்யப்படவேண்டும். எனது குழந்தைப் பருவத்திலிருந்தே பிரிட்டிஷ் அரசியலின் தன்மையைப் பற்றி எனக்குப் போதித்து இருப்பதைக்கொண்டு பார்த்தால், அந்நியரைப் பாதுகாக்கும் பிரிட்டிஷ் கொடியின்கீழ் ஒரு நிலம் அனுபவத்திலிருந்தும் அந்த நிலத்தைப் பிரிட்டிஷ் சொந்தப் பிரஜைகள் வைத்துக்கொள்ளக்கூடாது என்பது பிரிட்டிஷ் அரசியலின் தன்மைக்கே விரோதமானது என்று எனக்குத் தோன்றுகிறது. இக்காரியத்தை என் நாட்டு மக்களிலுைம் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகையால், இந்நிலைமையில், பிரிட்டிஷ் இந்தியரை அவமதிப்பவைகளாக இருக்கும் சட்டங்களைக் காலனியின் சட்டப் புத்தகத்திலிருந்து நீக்குவது அரசாங்கத்திற்குச் சாத்தியமாகவேண்டும் என்று எங்கள் சங்கம் கோருகிறது. வயிற்றுப் பாட்டையும், சாவதா வாழ்வதா என்பதையும்பற்றிய பிரச்னையையே கவனிக்கவேண்டியிருக்கும் போது, நடைபாதைகள் போன்ற சிறு விஷயங்களைப்பற்றி விவரித்துக்கொண்டிருக்க நான் விரும்பவில்லை. நாங்கள் விரும்புவது அரசியல் அதிகாரத்தை அல்ல. மற்ற பிரிட்டிஷ் பிரஜைகளுடனேயே அமைதியாகவும் ஒற்றுமையாகவும் கௌரவமாகவும் சுய மரியாதையுடனும் வாழ்வதைத்தான் விரும்புகிறோம். ஓர் இனத்திற்கும் மற்றோர் இனத்திற்கும் வேற்றுமைப்படுத்தும் சட்டத்தை இயற்றப் பிரிட்டிஷ் அரசாங்கம் முடிவு செய்த மாத்திரத்திலேயே, பிரிட்டிஷ் ஆட்சியின்கீழ் நாங்கள் விரும்பிப் போற்றிய அந்த விலை மதிக்கமுடியாத சுதந்திரத்திற்கு முடிவுகாலம் வந்து விட்டது என்றே நாங்கள் கருதுகிறோம்.

# மகாத்மாமீது வழக்கு - 1907

[ஆசியாக்காரர்களைப் பாதிப்பதற்கென்றே டிரான்ஸ்வாலில் கொண்டு வரப்பட்ட சட்டத்திற்குப் பிரிட்டிஷ் சர்க்காரின் அங்கீகாரம் கிடைக்காதபடி செய்துவிட மகாத்மா தலைமையில் இந்திய சமூகம் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. ஜொஹன்னஸ்பர்க் எம்பயர் தியேட்டரில் 3,000-க்கும் அதிகமான இந்தியர் கூடினர். என்னவானாலும் சரி அச்சட்டத்தை மீறிப் போராடி அதனால் ஏற்படக்கூடிய துன்பங்களுக்கும் தயாராவது என்ற முடிவுக்கு வந்தனர். 1907 டிசம்பர் 26-ஆம் தேதி அச்சட்டத்திற்குப் பிரிட்டிஷ் மன்னரின் அங்கீகாரம் கிடைத்ததுதான் தாமதம்; இரு ஆசியச் சமூகங்களையும் சேர்ந்த பல தலைவர்களுக்கு மாஜிஸ்டிரேட்டின் முன்பு ஆஜராகும்படி சம்மன்கள் வந்தன. சட்டப்படி பதிவு செய்துகொள்ள மனுப் போடாததனால், அவர்கள் டிரான்ஸ்வாலை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்று ஏன் உத்தரவு இடக் கூடாது என்பதற்குக் காரணம் காட்டும்படி அந்தச் சம்மன்களில் குறிப்பிடப் பட்டிருந்தது. குறிப்பிட்ட தேதிக்குள் காலனியை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்று அத்தலைவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தினருக்கும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அப்படிச் செய்யத் தவறினால் இரண்டு மாத வெறுங்காவல் தண்டனை என்றும் கண்டிருந்தது. இதன்படி கைது செய்யப் பட்டுக் கோர்ட்டு முன்பு கொண்டு வரப்பட்டவர்களில் காந்திஜியும் ஒருவர்.]

காந்திஜிமீது நடந்த வழக்கு விசாரணையைக் குறித்து 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையில் அப்பொழுது கீழ்க்கண்ட விவரம் வெளியாயிற்று:

"மறுநாள் காலை 10 மணிக்கு குறிப்பிட்ட மாஜிஸ்டிரேட்டுகள் முன்பு சம்பந்தப்பட்ட எல்லா எதிரிகளும் ஆஜராவார்கள் என்று ஸ்ரீ காந்தி வாக்குறுதி அளித்தார். இந்த வாக்குறுதியைக் கமிஷனர் ஏற்றுக்கொண்டார். மறுநாள் காலையில் ஸ்ரீ காந்தி கிரிமினல் கோர்ட்டுக்குச் சென்றதும், 1907-ஆம் வருட 2-ஆம் சட்டத்தின் பிரகாரம் பெற்ற பதிவு அத்தாட்சி அவரிடம் இருக்கிறதா என்று சூப்பரிண்டெண்டெண்டு கேட்டார். 'இல்லை' என்று ஸ்ரீ காந்தி கூறவே, அவர் உடனே கைது செய்யப் பட்டார். அச்சட்டத்தின் 8-ஆம் பிரிவின்படியே அவரைக் கைது செய்தனர். சட்டப்பிரகாரம் பதிவு அத்தாட்சியைப் பெறாமல் அவர் டிரான்ஸ்வாலில் இருந்தார் என்பது அவர்மீது சாட்டப்பெற்ற குற்றம். கோர்ட்டில் கூட்டம் ஏராளமாக இருந்

தது. குறுக்கே வைக்கப்பட்டிருந்த தடுப்புக்கள் தூக்கி யெறியப்படுமோ என்றும் தோன்றியது.

சர்க்கார் தரப்பில் ஸ்ரீ டி. ஜே. ஸூர்மன், பிராஸிகியூட்டராக ஆஜரானார். ஸ்ரீ காந்தி தாம் குற்றவாளியே என்று ஒப்புக்கொண்டார். தாம் கைது செய்ததைக் குறித்து ஸூப்பரிண்டெண்டெண்டு வெர்னன் சாட்சி சொன்னார்.

ஸ்ரீ காந்தி சாட்சியை ஒரு கேள்வியும் கேட்கவில்லை. தமது வாக்குமூலத்தைக் கூறுவதற்குக் கூண்டில் ஏறினார். தாம் கூற விரும்புவது சாட்சியம் அல்ல என்றும், தாமும் நீதிமன்றத்தோடு தொடர்புடையவர் என்பதைக் கொண்டு சுருக்கமானதோர் விளக்கம் கூறும் வாய்ப்பைக் கோர்ட்டு தமக்கு அளிக்கும் என்று எதிர்பார்ப்பதாகவும் சொன்னார். இந்தச் சட்டத்திற்கு தாம் ஏன் உடன்படவில்லை என்பதைச் சொல்ல விரும்புவதாகவும் கூறினார்.

மாஜிஸ்டிரேட் ஸ்ரீ ஜோர்டன்: அதற்கும் இதற்கும் எந்த விதமான சம்பந்தமும் இருப்பதாக நான் கருதவில்லை. சட்டம் இருக்கிறது. அதை நீங்கள் மீறியிருக்கிறீர்கள். இங்கே எந்த வித ராஜீய பிரசங்கங்களும் செய்யப்படுவதை நான் விரும்பவில்லை.

ஸ்ரீ காந்தி: ராஜீயப் பிரசங்கம் எதையும் செய்ய நான் விரும்பவில்லை.

மாஜிஸ்டிரேட்: நீங்கள் பதிவு செய்துகொண்டிருக்கிறீர்களா, இல்லையா என்பதுதான் இப்போது கேள்வி. நீங்கள் பதிவு செய்துகொள்ளவில்லையெனில் விஷயம் அதோடு முடிந்தது. உத்தரவைப்பற்றி நீங்கள் ஏதாவது விளக்கம் கூறுவதாயிருந்தால் அதை வேறு விஷயமாகக் கருதப் போகிறேன். இந்தச் சட்டம் டிரான்ஸ்வால் சட்டசபையினால் செய்யப்பட்டு பிரிட்டிஷ் சர்க்காரின் அனுமதியையும் பெற்றது. ஆகையால், அச்சட்டம் இருக்கும் வகையில் அதை அனுசரிக்க வேண்டுவதொன்றே நான் செய்யக்கூடியதும், செய்யவேண்டியதுமாகும்.

ஸ்ரீ காந்தி: குற்றத்தைக் குறைத்துக்கொள்ளுவதற்கு எந்தச் சாட்சியத்தையும் கூப்பிட நான் விரும்பவில்லை. சட்டப்படி நான் சாட்சியங் கூறவே முடியாது என்பதையும் நான் அறிவேன்.

மாஜிஸ்டிரேட்: நான் கவனிக்க வேண்டியதெல்லாம் சட்டப் படியுள்ள சாட்சியத்தையே யாகும். இச்சட்டத்தை நீங்கள் அங்கீகரிக்கவில்லை, மனச்சாட்சிப்படி அதை எதிர்க்கிறீர்கள் என்றே நீங்கள் கூற விரும்புகிறீர்கள் என ஊகிக்கிறேன்.

ஸ்ரீ காந்தி: உண்மையே.

மாஜிஸ்டிரேட்: மனப்பூர்வமாக எதிர்ப்பதாக நீங்கள் சொன்னுல் அதைச் சாட்சியமாக எடுத்துக்கொள்ளுகிறேன்.

டிரான்ஸ்வாலுக்குத் தாம் வந்தது எப்பொழுது என்பதையும், பிரிட்டிஷ் இந்திய சங்கத்திற்குத் தாம் காரியதரிசி என்றும் ஸ்ரீ காந்தி சொல்லிக்கொண்டிருந்தபோது மாஜிஸ்டிரேட் குறுக்கிட்டு இந்த வழக்கிற்கும் அதற்கும் யாதொரு சம்பந்தமும் இருப்பதாகத் தாம் நினைக்கவில்லை என்றுர்.

ஸ்ரீ காந்தி: நான் இதை முன்னுலேயே சொல்லியிருக்கிறேன். கோர்ட்டு எனக்கு ஐந்து நிமிடங்கள் தயை செய்ய வேண்டும் என்றே கோருகிறேன்.

மாஜிஸ்டிரேட்: கோர்ட்டு எந்தவிதத் தயையும் செய்வதற்குரிய வழக்கு இது என்று நான் கருதவில்லை. நீங்கள் சட்டத்தை மீறியிருக்கிறீர்கள்.

ஸ்ரீ காந்தி: ஐயா, அப்படியானுல் சரி. அதற்கு மேல் நான் சொல்லுவதற்கு ஒன்றுமில்லை.

பிறகு மாஜிஸ்டிரேட், "ஸ்ரீ காந்தி, 48 மணி நேரத்தில் நாட்டை விட்டும் வெளியேறிவிட வேண்டும்" என்று உத்தரவிட்டார்.

1908 ஜனவரி 11-ஆந் தேதி ஸ்ரீ காந்தி திரும்பவும் கோர்ட்டு முன்னுல் ஆஜராகி, 48 மணி நேரத்தில் காலனியை விட்டு வெளியேறிவிட வேண்டும் என்று பிறப்பிக்கப்பட்டிருந்த உத்தரவைத் தாம் மீறியிருப்பதாக ஒப்புக்கொண்டார்.

ஒரு வாக்குமூலம் கூறக் கோர்ட்டிடம் ஸ்ரீ காந்தி அனுமதி கேட்டார். அது கிடைக்கவே கோர்ட்டில் அவர் கூறியதாவது:

"என் வழக்கிற்கும் பின்னுல் வரப்போகிறவர்களின் வழக்கிற்கும் ஒரு வித்தியாசம் இருக்க வேண்டும் என்று நான் நினைத்தேன். பிரிட்டோரியாவிலிருந்து எனக்கு இப்பொழுது தான் தகவல் கிடைத்திருக்கிறது. அங்கே வழக்குத் தொடரப்பட்டு விசாரிக்கப்பட்ட என் சகாக்கள் மூன்று மாதக் கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டிருப்பதோடு அதிகத் தொகை அபராதமும் போடப்பட்டிருக்கிறுர்களாம். அபராதத்தைச்

செலுத்தத் தவறினல் மேற்கொண்டும் 3 மாதக் கடுங்காவல் தண்டனை என்றும் அங்கே தீர்ப்புக் கூறியிருக்கிறார்கள். அவர்கள் செய்தது குற்றமேயென்றால் நான் அதைவிட மிகப் பெரிய குற்றத்தைச் செய்திருக்கிறேன். ஆகையால் எனக்கு அதைவிட இன்னும் கடுமையான தண்டனை கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

மாஜிஸ்டிரேட்: சட்டம் அங்கீகரிக்கும் அதிக பட்ச தண்டனை உங்களுக்கு வேண்டும் என்று நீங்கள் கேட்கிறீர்களா?

ஸ்ரீ காந்தி: ஆம் ஐயா.

மாஜிஸ்டிரேட்: இச்சட்டப்படி அதிகபட்ச தண்டனை ஆறு மாதக் கடுங்காவலும் 500 பவுன் அபராதமுமாகும். ஆனால், அதிகப்பட்ச தண்டனை வேண்டுமென்று நீங்கள் கேட்பதை ஏற்றுக்கொள்ளும் விருப்பம் எனக்கு இல்லை. நீங்கள் செய்திருக்கும் குற்றத்தின் தன்மைக்கு அது பொருத்தமானதாகவும் எனக்குத் தோன்றவில்லை. 1907 டிசம்பர் 28-ஆந் தேதி கோர்ட்டு பிறப்பித்த உத்தரவை நீங்கள் மீறியிருக்கிறீர்கள். ஆகையால் நீங்கள் செய்தது கோர்ட்டை அவமதித்த குற்றமாகிறது. மேலும், இது ஏறக்குறைய ஒரு ராஜீயக் குற்றமும் ஆகும். சட்டத்திற்குச் செய்யப்பட்டிருக்கும் ராஜீய எதிர்ப்பாக இது இல்லாதிருக்குமாயின், சட்டப்படி எனக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கும் குறைந்தபட்சத் தண்டனையைக் கொடுப்பதே என் கடமை என எண்ணியிருப்பேன். இந்த நிலைமையில் இரண்டு மாத வெறுங்காவல் தண்டனையை விதிப்பதே நியாயமான தண்டனை என்று கருதுகிறேன்.

பிறகு ஸ்ரீ காந்தியைச் சிறைக்குக் கொண்டு போயினர்.

# மகாத்மா மீது வழக்கு-1913

மகாத்மா காந்தி மீது மூன்று குற்றங்களைச் சாட்டி 1913 நவம்பர் 11-ஆம் தேதி டண்டீ மாஜிஸ்டிரேட் ஸ்ரீ ஜே. டபிள்யூ. கிராஸ் முன்னால் ஒரு வழக்குத் தொடுத்தார்கள். இந்திய ஒப்பந்தக் கூலிகளை மாகாணத்தை விட்டுப் போய்விடும்படித் தூண்டினார் என்பது அவர் மீது கொண்டுவரப்பட்ட முக்கிய மான குற்றச்சாட்டு. அட்டர்னி-ஜெனரலின் நேர் ஆலோசனை யைப் பெற்று ஸ்ரீ டால்ஜல் டர்ன்புல், பிராசிகியூஷன் தரப்பிற்கு ஆஜரானார். வக்கீல் ஸ்ரீ ஜே. டபிள்யூ. காட்பிரே, மகாத்மா காந்திக்காக ஆஜரானார். தாம் குற்றவாளியே என்று காந்திஜி ஒப்புக்கொண்டார்.

சர்க்கார் தரப்பு வக்கீல், சம்பந்தப்பட்ட சட்டத்தின் பிரி வைப் படித்துக் காட்டிவிட்டு, முடிவுக்கு வருவதைக் கோர்ட்டுக்கு விட்டுவிட்டார். காந்திஜியின் வக்கீலான ஸ்ரீ காட்பிரே, குற் றத்தை எந்த விதத்திலும் குறைத்துக்கொள்ள வாதம் எதையும் தாம் செய்யாமலிருக்கப் பிரதிவாதி தம்மைக் கேட்டுக் கொண்டிருப்பதாகக் கூறினார். அவர் மேலும் சொன்னதாவது:

"எந்தவிதமான சந்தர்ப்பத்தின் காரணமாக ஸ்ரீ காந்தி கோர்ட்டு முன்பு கொண்டு வரப்பட்டிருக்கிறார் என்பது எல் லோருக்கும் தெரியும். மாஜிஸ்டிரேட் இதில் தமது கடமை யைச் செய்ய வேண்டியவராயிருக்கிறார். இவ்விதம் செய்வதில் எதற்கும் அஞ்சாமல் அவர் செய்ய வேண்டும் என்றே என் கட்சிக்காரர் விரும்புகிறார். இந்த வழக்குத் தொடரப்பட்டிருக் கும் நிலைமையில் நியாயமானது என்று தமக்குத் தோன்றினால் எதிரிக்கு அதிகப்பட்சமான தண்டனையை மாஜிஸ்டிரேட் விதிக்க வேண்டும் என்பதே என் கட்சிக்காரரின் கோரிக்கை. பிரதிவாதியின் இந்த விருப்பத்தையே நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்."

மாஜிஸ்டிரேட்டின் அனுமதியைப் பெற்று மகாத்மா காந்தி கோர்ட்டில் கீழ்வரும் வாக்குமூலத்தைக் கொடுத்தார்.

"நான் வக்கீல் தொழில் செய்கிறவன். நேட்டாலில் நீண்ட காலமாக வசித்து வந்திருப்பவன். எனக்கும் பொது மக்களுக் கும் நியாயத்தைச் செய்வதை முன்னிட்டு நான் ஒரு விஷயத்தைக் கூற வேண்டியது அவசியமாகிறது. என்மீது சாட்டப்பட்டிருக் கும் குற்றத்தின் தன்மையை முன்னிட்டே இப்பொறுப்பை

நான் ஏற்றுக்கொண்டேன். காலனிக்கு வெளியில் அம்மக்கள் கொண்டு போகப்பட்ட ஒரு காரியம், சிறந்ததொரு நோக்கத்தைக் கொண்டதேயாகும். முதலாளிகளின் பேரில் எனக்கு எந்தவிதமான விரோதமும் கிடையாது; இந்தப் போராட்டத்தினுல் அவர்களுக்கு அதிக நஷ்டம் ஏற்பட்டிருப்பதற்காகவும் வருந்துகிறேன் என்று நான் தெரிவித்துக்கொள்ள வேண்டியது அவசியம் எனக் கருதுகிறேன். முதலாளிகளை இன்னும் ஒன்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். விதிக்கப்பட்டிருக்கும் வரி என் நாட்டினருக்குத் தாங்க முடியாத பளு; அதை நீக்க வேண்டும் எனத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஸ்ரீ ஸ்மட்ஸுக்கும் பேராசிரியர் கோகலேக்குமிடையே இருக்கும் நிலைமையை முன்னிட்டுத் தெளிவாகக் காட்டக் கூடிய காரியம் ஒன்றைச் செய்தாக வேண்டியது என் கடமை என்றும் உணர்ந்தேன். பெண்களுக்கும், கைக்குழந்தைகளுக்கும் ஏற்பட்டிருக்கும் துன்பங்களை நான் அறிவேன். பொதுவாக, நான் எத்தொழிலில் ஓர் உறுப்பினனே அத்தொழிலின் கொள்கைகளுக்கும் கௌரவத்திற்கும் மாருன காரியம் எதையும் நான் செய்துவிடவில்லை என்றும் உணருகிறேன். என் நாட்டினருக்கு யோசனை கூறியதில் எனக்குள்ள கடமையையே செய்திருக்கிறேன். வரி நீக்கப்படும் வரையில் வேலைக்குப் போகவேண்டாம் என்றும், தானமாகக் கிடைக்கும் உதவிகளைக் கொண்டு வாழுமாறும் அவர்களுக்குத் திரும்பவும் ஆலோசனை கூறியாக வேண்டியதும் என் கடமை. கஷ்டப்படாமல் அவர்களுடைய குறைகளுக்குப் பரிகாரம் கிடைத்துவிடாது என்பதில் நான் நிச்சயமாயிருக்கிறேன்."

பிறகு மாஜிஸ்டிரேட் கூறியதாவது:

"இந்த வழக்கில் தம்மீது சாட்டப்பட்டிருக்கும் மூன்று குற்றச்சாட்டுகளின்படியும் தாம் குற்றவாளியே என்று எதிரி ஒப்புக்கொள்ளுகிருர். இவர் மீது குற்றஞ் சாட்டப்பட்டிருக்கும் சட்டத்தின் விதிகளின்படி, மாகாணத்தைவிட்டு வெளியேறும்படி இவர் தூண்ட முயற்சி செய்த அல்லது தூண்டப்பட்ட ஒவ்வொரு தொழிலாளிக்கும் 20 பவுன் வீதம் அபராதம் விதிக்கப்பட வேண்டியவராகிருர். ஸ்ரீ காந்தி, ஒரு படித்த கனவான்; வக்கீலாகவும் இருக்கிருர். ஆகையால், அவர் செய்த காரியத்தின் விளைவுகளை நன்ருக அறிந்தே செய்திருக்கிருர். இந்தியருக்கு ஸ்ரீ ஸ்மட்ஸ் வாக்குறுதி அளித்திருப்பதாக இந்தியர் கூறுகிருர்கள். பெண்களும் குழந்தைகளும் சம்பந்தப்பட்டவரையில் இவ்வரியை நீக்க நேட்டால் பார்லிமெண்ட் உறுப்பினர்கள்

ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆண்கள் மீதிருக்கும் வரியை நீக்க அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால், அரசாங்கம் இந்தியருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யவில்லை. இதை ஆதாரமாகக் கொண்டே வேலை நிறுத்தஞ் செய்ய ஸ்ரீ காந்தி இந்தியருக்கு ஆலோசனை கூறினர் என்று நான் நம்புகிறேன். வேலை நிறுத்தம் செய்வதென்பது சட்டத்தை மீறுவதாகும். இந்தியர் வேலை நிறுத்தம் செய்து வரும் காலம் வரையில், இச்சட்டத்தை மாற்றுவதைக் குறித்து அரசாங்கம் சிந்திப்பதற்கே முடியாது. இதுவே அரசாங்கத்தின் நிலைமை. பிரதிவாதி, தம்முடைய பயமுறுத்தல் போக்கினுல், அவர்களின் நாசத்திற்கும், அவர்களை அதிகக் கடுமைக்குமே ஆளாக்கியிருக்கிறார். இந்தச் சாத்விக எதிர்ப்பை விட்டொழித்து இந்தியர் சர்க்காரிடம் தகுந்த வழியில் முறையிடுவதுதான் நல்லது. மேலும் இந்த வரியை ரத்து செய்துவிடவேண்டும் என்பதில் இந்தியருக்கு ஆதரவாயிருந்த ஐரோப்பியரின் அனுதாபத்தையும் இதனுல் இந்தியர் இழந்துவிடுவார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது.

"ஸ்ரீ காந்தியைப் போன்ற ஒரு கனவான் வேண்டுமென்றே சட்டத்தை மீறி நடந்திருப்பதற்காகத் தண்டனை விதிப்பது மனவேதனை தரும் காரியமே யாகும். என்றாலும், என் கடமையை நான் நிறைவேற்றியாக வேண்டியிருக்கிறது. இவருடைய வக்கீல் ஸ்ரீ காட்பிரேயும் பயப்படாமல் என் கடமையைச் செய்யும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார். எதிரி தமது குற்றத்தை ஒப்புக்கொண்டிருப்பதால் அதை நான் அங்கீகரிக்கிறேன். ஆகவே, கீழ்க்கண்டவாறு அவருக்குத் தண்டனை விதிக்கிறேன். முதல் குற்றத்திற்கு 20 பவுன் அபராதம் அல்லது கடினமான வேலையுடன் கூடிய மூன்று மாத சிறைத்தண்டனை. இரண்டாவது குற்றத்திற்கு 20 பவுன் அபராதம் அல்லது கடினமான வேலையோடு கூடிய மூன்று மாத சிறைத்தண்டனை. முதல் குற்றத்திற்கான தண்டனையை அனுபவித்த பிறகு இத்தண்டனையை அனுபவிக்க வேண்டும். மூன்றாவது குற்றத்திற்கு 20 பவுன் அபராதம் அல்லது கடினமான வேலையுடன் கூடிய மூன்று மாதச் சிறைத்தண்டனை. இரண்டாவது குற்றத்திற்கான தண்டனையை அனுபவித்த பிறகு இத்தண்டனையை அனுபவிக்க வேண்டும்."

காந்திஜி, அமைதியும், தெளிவுமான குரலில், "அபராதம் செலுத்தப் போவதில்லை, நான் சிறைத்தண்டனையை வரவேற்கிறேன்" என்றார்.

கோர்ட்டிலிருந்து வரும் காந்தியைக் காண வெளியில் மக்கள் ஏராளமாகக் கூடியிருந்தார்கள். ஆனல், யாதோ காரணத்தினல் போலீஸார் வெகு ரகசியமாக அவரைக் கோர்ட்டிலிருந்து கொண்டு போய்விட்டார்கள். அவரை எப்படிக் கொண்டு போனுர்கள் என்பது யாருக்குமே தெரியாது.

பிறகு அவரை வக்கீல் போய்ப் பார்த்தார். தாம் சந்தோஷமாகவும் உறுதியுடனும் இருப்பதாகக் கூறும்படி காந்திஜி சொல்லியனுப்பியதோடு வேலே நிறுத்தம் செய்திருந் தோருக்கு ஒரு செய்தியையும் அனுப்பியிருந்தார். "3 பவுன் வரியை ரத்து செய்தாலன்றி வேலே நிறுத்தத்தைக் கைவிட வேண்டாம். என்னைச் சிறைப்படுத்தி விட்டதால் அரசாங்கம் இப்பொழுது வரி ரத்தைக் குறித்து கண்ணியமாக ஒரு பிர கடனம் வெளியிடலாம்" என்பதே காந்திஜி அனுப்பியிருந்த செய்தி.

# தென்னுப்பிரிக்காவிலிருந்து பிரிவு

## டர்பன் உபசாரத்திற்குப் பதில்

[மகாத்மா காந்தி தம்பதிகள் தென்னுப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு புறப்படுமுன்பு தென்னுப்பிரிக்க வாசிகளான ஹிந்துக்கள், முகமதியர்கள், பார்சிகள், ஐரோப்பியர் ஆகிய எல்லாச் சமூகத்தினரும் அவருக்கு எண்ணற்ற பிரிவுபசாரங்களை நடத்திப் பத்திரங்களையும் வாசித்தளித்தார்கள். டர்பனில் இந்தியரும் ஐரோப்பியரும் ஏராளமாக நகர மன்றத்தில் கூடிக் காந்தி தம்பதி களுக்குச் சிறப்பான பிரிவுபசாரம் ஒன்று நடத்தினர். இவ் வைபவத்திற்கு மேயர் ஸ்ரீ டபிள்யூ. ஹோம்ஸ் தலைமை வகித்தார். நேட்டால் பிஷப், ஜென ரல் போத்தா, ஸ்ரீமான்கள் ஸ்மட்ஸ், மெர்ரிமான், பர்டன் ஹாஸ்கின் முதலிய பல பிரமுகர்கள் செய்திகள் அனுப்பியிருந்தனர். மேயரும் மற்றும் பலரும் காந்திஜியின் ஒப்பற்ற சேவையைப் பாராட்டிப் பேசினர்.]

இந்த உபசாரத்திற்குப் பதிலளித்துப் பேசுகையில் மகாத்மா காந்தி கூறியதாவது:

எனக்கு இன்று அளிக்கப்பட்டிருக்கும் உபசாரப் பத்திரங்களை நான் அதிகமாக மதிக்கிறேன். ஆனால், இப் பத்திரங்களில் எங்கள்மீது காட்டியிருக்கும் அன்பையும் ஆதரவையும் நான் இன்னும் அதிகமாக மதிக்கிறேன். இதற்கெல்லாம் தக்க முறையில் ஈடு செய்ய எங்களால் முடியும் என்று எங்களுக்குத் தோன்றவில்லை. என்னைப் பாராட்டிப் புகழ்ந்திருக்கிறீர்கள். ஆனால், அத்தகைய புகழ்ச்சிகளுக்கு உரியவன் என்று நான் நினைக்கவில்லை. என் மனைவியைப் பற்றியும் வெகுவாகப் பாராட்டியிருக்கிறீர்கள். இவற்றிற்குரியவளாக அவளும் எண்ணிக்கொள்ளவில்லை. போராட்ட காலத்தில் என் மனைவியை விட மற்றும் பல இந்தியப் பெண்மணிகள் ஒப்பற்ற சேவைகளைச் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ கால்லன்பாக் என்னுடைய மற்றொரு சகோதரர். உபசாரப் பத்திரம் வாசித்தளித்ததற்காக அவர் சார்பில் சமூகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஸ்ரீ கால்லன்பாக்கின் பெருமையை அறிந்துகொண்டதில் சமூகம் சிறந்ததொரு காரியத்தையே செய்திருக்கிறது. பலனடையவே தாம் போராட்டத்திற்கு வந்ததாக அவர் உங்களிடம் கூறுவார். உங்கள் நியாயத்தை வற்புறுத்த முற்பட்டதனால் உண்மையில் அவர் அதிகப் பலனடைந்தே இருக்கிறார். நியூகாஸிலில் நடந்த வேலை நிறுத்தத்தின்போது அவர் அற்புதமான வேலைகளைச் செய்திருக்கிறார். சமயம் வந்தபோது, பல



1914 இல் காந்திஜிக்குப் பிரிவுபசாரம் செய்ய டர்பனில் நடந்த ஒரு கூட்டம். காந்திஜி உயரத்தில் நிற்கிறார்.



வெருலம் என்ற இடத்தில் காந்திஜிக்குப் பிரிவுபசாரம் செய்ய நடந்த பெரும் கூட்டம்; இக்கூட்டத்தில் காந்திஜி நிற்பதைக்காட்ட
× அடையாளமிடப்பட்டிருக்கிறது.

னடைகிறேனேயன்றி நஷ்டமடையவில்லை என்று எண்ணியே அவர் ஆனந்தமாகச் சிறைக்கும் சென்றார்.

1897-இல் நான் இங்கே வந்தபோது, ஆத்திரமடைந்திருந்த பொதுஜனக் கூட்டத்திற்கு எதிராக ஸ்ரீ லாப்டன் எனக்கு உதவியாக நின்றார். கோபாவேசத்துடனிருந்த கூட்டத்தினர் எறிந்த கற்களை டர்பனின் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்டின் மனைவி ஸ்ரீமதி அலெக்சாண்டர் தமது குடையினாலேயே தாங்கி என்னைப் பாதுகாத்ததை இன்றும் நன்றியறிதலுடன் நினைத்து வருகிறேன். சாத்விக எதிர்ப்புப் பரிசுத்தமானதோர் ஆயுதமாகும். அது பலவீனர்களின் ஆயுதமேயல்ல. உடல் வலிவால் எதிர்ப்பவர்களுக்கு வேண்டியதைவிட சாத்விக எதிர்ப்பாளர்களுக்குத் தீரம் அதிகமாகவேண்டும். அமைதியாகத் துன்பங்களைச் சகித்துக்கொண்டு இறக்கவும் துணிந்த ஓர் ஏசு, ஒரு டானியல், ஒரு லாடிமர், ஒரு ரிட்லே ஆகியோரின் தீரமும், ருஷிய ஜார் மன்னர்களை எதிர்த்து நின்ற டால்ஸ்டாயின் தீரமும் உயர்ந்து நின்றன.

இந்தியர்கள் கஷ்ட நிவாரண மசோதா திருப்தி அளிப்பதாக இல்லை என்று மேயருக்குச் சில தந்திகள் வந்திருக்கின்றன என்பதை நான் அறிவேன். இந்த உலகத்தில் எல்லோருக்குமே திருப்தி அளிக்கக்கூடிய காரியத்தைச் செய்துவிடுவது என்பது கொஞ்சமும் முடியாத காரியம். ஆனால், தென்னாப்பிரிக்காவில் இப்பொழுது இருந்துவரும் நிலையில் இதைவிடச் சிறந்தது எதையும் அவர்கள் அடைந்திருக்கவே முடியாது என்பதை நான் அறிவேன். அது, என்னால்தான் ஆயிற்று என்று அந்தக் கௌரவத்தை நான் எடுத்துக்கொண்டுவிட விரும்பவில்லை. நாகப்பன், நாராயணசாமி, வள்ளியம்மா போன்ற இளைஞர்களும், பெண்களும், லட்சியத்திற்காக உயிர் நீத்தார்கள். மற்றும் பலரும் தென்னாப்பிரிக்காவின் உணர்வைத் தட்டியெழுப்பினர். ஆகையால், இதற்கான பெருமை முழுதும் அவர்களுக்கே உரியதாகும். யூனியன் அரசாங்கத்திற்கும் எங்கள் நன்றி உரியது. ஆட்சியில் இருந்தாலும் வீழ்ந்தாலும் சரி, இந்த நடவடிக்கையில் சர்க்கார் உறுதியுடனிருந்தே தீரும் என்று சொன்னதன்மூலம் ஜெனரல் போத்தா சிறந்த ராஜ தந்திரத்தைக் காட்டியிருக்கிறார். சரித்திர பூர்வமான அந்த விவாதம், எனக்குச் சரித்திரப் புகழ் வாய்ந்ததோடு என் நாட்டினருக்கும் சரித்திரப்புகழ் தருவதாகும். தென்னாப்பிரிக்காவுக்கும், உலகம் முழுமைக்குமே அது சரித்திரப் புகழ் தருவதாகும்.

அரசாங்கம் எவ்விதம் நியாயத்தைச் செய்திருக்கிறது, எதிர்க்கட்சியினர் எவ்வித உதவி செய்திருக்கின்றனர் என்பது எல்லோருக்கும் தெரிந்தது. பிரிட்டிஷ், இந்திய அரசாங்கங்களிட மிருந்தும் நிறைய உதவியைப் பெற்றிருக்கிறோம். தயாளமுள்ள வைசிராயான லார்டு ஹார்டிஞ்சு சிறந்த ஆதரவை அளித்திருக் கிறார் (கை தட்டல்). தென்ஞப்பிரிக்காவில் இருக்கும் பல்லாயிரக் கணக்கான தங்கள் நாட்டினரின் அபயக்குரலைக்கேட்டு, ஒப்பற்ற தலைவரான ஸ்ரீ கோகலேயின் தலைமையில் இந்தியா உதவி புரிய முன் வந்தது. அந்த உதவியின் தன்மையும், சாத்விக எதிர்ப்பு இயக்கத்தின் தன்மையும், மனக்கசப்பின் சாயலையோ விரோத எண்ணங்களையோ விட்டுவைக்காது என்று நம்புகிறேன் (கை தட்டல்). இச்சமயத்தில் நான் ஒரு வாக்குறுதியை அளிக்க விரும்புகிறேன். எந்த ஒரு தனி ஐரோப்பியர்மீதும் சிறிதும் துவேஷம் இல்லாமலேயே நான் இந்தியாவுக்குத் திரும்புகிறேன். எனது வாழ்க்கையில் நான் எத்தனையோ கடுமையான துன்பங் களை அனுபவித்திருக்கிறேன். அதோடு அன்பு, அனுதாபம் என்ற வகையில் ஐரோப்பியர்களிடமிருந்து சிறந்த சன்மானத்தையும் நான் அடைந்தேயிருக்கிறேன் என்பதையும் இங்கே ஒப்புக் கொள்ளுகிறேன். (கை தட்டல்)

இந்தச் சமரசத்தை எட்டு ஆண்டுகள் போராடிய பிறகு நாம் அடைந்திருக்கிறோம். தென்ஞப்பிரிக்காவிலுள்ள இந்தி யரைப் பொறுத்தவரையில், ராஜீய ஆசைகளுக்காக அவர்கள் பாடுபட்டதேயில்லை. மேற்கும் கிழக்கும் ஒன்றுபடவே முடியாது என்பதை நான் கொஞ்சமும் ஒப்புக்கொள்ள முடியாது. கிழக்கை மேற்கு சந்தித்தாகவேண்டிய, அல்லது மேற்கைக் கிழக்கு நெருங்கியாகவேண்டிய ஒரு நாள் வந்தே தீரும் என்று நான் எண்ணுகிறேன். ஆனல், மேற்கத்திய சமூக அபிவிருத்தி ஒரு துறையில் இருந்து வருகிறது; கிழக்கத்திய சமூக அபி விருத்தி மற்றொரு துறையில் இருந்து வருகிறது. தென்ஞப்பிரிக் காவில் இருக்கும் ஐரோப்பியரின் சமூக ஸ்தாபனங்களில் குறுக் கிடவேண்டும் என்ற எண்ணம் இந்தியருக்கு இன்று கிடையாது. (கை தட்டல்) பெரும்பாலான இந்தியர்கள் இயல்பாகவே வர்த்தகர்கள். வர்த்தகப் பொருமைகளும், வியாபாரப் போட்டி யினல் உண்டாகும் மற்ற பல காரியங்களும் இருந்தே தீரும். இந்தச் சங்கடமான பிரச்னையைத் தீர்ப்பதற்கு உபாயத்தைக் காண என்னல் இயலவில்லை. விரிந்த மனப்பான்மையும், பல தரப்பட்டவர்களின் உரிமைபற்றிய விஷயத்தில் நீதியோடு

நடந்துகொள்ளவேண்டும் என்ற உறுதியும் தென்னுப்பிரிக்க அரசாங்கத்திற்கு இருப்பதும் இதற்கு முக்கியமான தேவைகள்.

நான் தென்னுப்பிரிக்காவில் பல ஆண்டுகள் வசித்து விட்டேன். இந்நாட்டைப்பற்றிய புனிதமான நினைவுகள் எனக்கு என்றும் இருந்துவரும். ஐரோப்பியர்களிடத்திலும், இந்திய ரோடும் நீடித்த நட்புக் கொள்ளும் பாக்கியத்தையும் நான் பெற்றிருக்கிறேன். புராதனப் பெருமையால் புனிதமும் தெய்விகமும் நிரம்பிய நாடான இந்தியாவுக்கு நான் திரும்புகிறேன். நான் இனி உலகின் எப்பகுதியிலிருப்பினும் தென்னுப்பிரிக்காவில் எனக்குக் கிடைத்த அன்பும் ஆதரவும் அங்கும் எனக்கு இருக்கும் என்று நம்புகிறேன். இந்தியர் கஷ்ட நிவாரண மசோதாவில் அடங்கியிருக்கும் சமரசம் பரந்த நோக்கத்தோடு நிறைவேற்றி வைக்கப்படுவதோடு இந்திய சமூகத்தின் காரியங்களில் சமீபத்தில் செய்யப்பட்டிருக்கும் சட்டங்களும் நீதியுடன் நிர்வகிக்கப்படும் என்று எதிர்பார்க்கிறேன். அப்படிச் செய்துவிட்டால் எனது தேசத்தவர் சமூக முன்னேற்றத்தில் உயர்வார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. இதுவே சமரசத்தின் ஒரு படிப்பினையாகும்.

# ஜொஹன்னஸ்பர்க் பிரிவுபசாரத்தில் பேச்சு

[ஹிந்துக்கள், பார்ஸிகள், முகம்மதியர்கள், ஐரோப்பியர்கள் முதலிய எல்லா முக்கியமான சமூகத்தினரும் ஜொஹன்னஸ்பர்க்கில் காந்திஜிக்கு ஒரு பிரிவுபசாரம் நடத்தினர்கள். முக்கியமான ஸ்தாபனங்களும், சமூகத்தினரும் மகாத்மாவுக்குத் தனித்தனி உபசாரப்பத்திரங்களை வாசித்தனர்.]

இவைகளுக்குப் பதிலளித்துக் காந்திஜி பேசியதாவது :

ஜொஹன்னஸ்பர்க் எனக்குப் புதிய இடமே அல்ல. எனக்கு நன்ருகத் தெரிந்த முகங்கள் பலவற்றை நான் இங்கே காண் கிறேன். ஜொஹன்னஸ்பர்க்கில் நடந்த பல போராட்டங்களில் அவர்கள் என்னுடன் இருந்திருக்கிருர்கள். வாழ்க்கையில் நான் எவ்வளவோ பார்த்துவிட்டேன். மனச்சோர்வும் சஞ்சலமும் என் கதியாக இருந்திருக்கின்றன. ஆனல், ஜொஹன்னஸ்பர்க் சுரங்க முகாமாக இருந்தபோதிலும் இவ்வூரை இத்தனை ஆண்டு களாக நான் நேசித்தும் வந்திருக்கிறேன். என்னுடைய மிகச் சிறந்த நண்பர்களை நான் முதலில் கண்டுகொண்ட இடம் ஜொஹன்னஸ்பர்க்கே. 1906 செப்டம்பரில் பெரும் போராட்ட மான சாத்விக எதிர்ப்பு ஜொஹன்னஸ்பர்க்கில்தான் பிறந்தது. எனக்கு நண்பரும், வழிகாட்டியும், என் வாழ்க்கை வரலாற்றை எழுதியவருமான காலஞ்சென்ற ஸ்ரீ டோக் எனக்கு அறிமுக மானது இந்த ஊரிலேதான். ஸ்ரீமதி டோக் எனக்கு மிக அருமை யான சகோதரி என்பதை நான் கண்டுகொண்டதும் இங்கேயே. என்னுடைய நோக்கத்தைத் தவருக எண்ணிக்கொண்டு, நான் செய்ததைத் தவருகக் கருதி, என் நாட்டின ரொருவர் என்னைத் தாக்கி அடித்தபோது, எனக்கு ஸ்ரீமதி டோக்தான் பணிவிடை செய்து உயிர் பெறச் செய்தார். ஜொஹன்னஸ்பர்க்கில்தான் காலன்பாக், போலக், குமாரி ஷிலெஸின் ஆகியவர்களும் மற்றும் பலரும் எனக்கு அறிமுகமானுர்கள். இவர்களெல்லோரும் எனக்கு உதவி செய்தனர். எனக்கும் என் நாட்டவருக்கும் உற்சாகமூட்டினர். ஆகையால், நானும் என் மனைவியும் இந்தியா வுக்குக் கொண்டு போகும் புனிதமான தொடர்புடைய ஜொஹன் னஸ்பர்க்கைப் பற்றிய நினைவே மிகவும் முக்கியமானதாகும். கசப்பான சம்பவங்களும் இருந்தபோதிலும், இந்தியாவுக்கு அடுத்தபடியாகத் தென்னுப்பிரிக்கா, எனக்கும் என் மனைவிக்கும் என் குழந்தைகளுக்கும் புண்ணிய நாடாக இருந்து வரும் என்று நான் பல இடங்களிலும் கூறி வந்திருக்கிறேன். இந்தியர் தங்களு

டைய சரித்திரத்தில் மிகக் கஷ்டமான நிலையில் இருந்த சமயத்தில் ஸ்ரீ ஹாஸ்கெனின் தலைமையில் ஐரோப்பியர்களின் கமிட்டி நியமிக்கப்பட்டதும் ஜொஹன்னஸ்பர்க்கிலேதான். எல்லாவற்றிலும் அதிக முக்கியமானது, வள்ளியம்மாள் பிறந்த இடம் ஜொஹன்னஸ்பர்க். நான் இங்கே பேசும்போது அந்த இளம் பெண்ணின் உருவம் என் கண் முன்னால் இருக்கிறது. சத்திய லட்சியத்திற்காக வள்ளியம்மாள் உயிரைத் தியாகம் செய்தாள். லட்சியத்தில் குருட்டு நம்பிக்கை கொண்டவள். எனக்குத் தெரிந்துள்ள அளவுக்கு அவளுக்கு விஷயங்கள் தெரியா. சாத்வீக எதிர்ப்பு என்ன என்பதை அவள் அறியாள். இதனால் தன் சமூகம் என்ன நன்மையை அடையும் என்பதும் வள்ளியம்மாளுக்குத் தெரியாது. தன் நாட்டு மக்களின் எல்லையற்ற உற்சாகத்தினால் பரவசம் அடைந்தாள்; சிறை புகுந்தாள். நோயுற்று உடல்நிலை பாழாகி வெளியே வந்தாள்; சில தினங்களில் மாண்டாள். இதே போலவே, இளவயதிலேயே உயிர்த் தியாகம் செய்துவிட்ட அழகான இளைஞர்களான நாகப்பனையும் நாராயணசாமியையும் பெற்ற இடம் ஜொஹன்னஸ்பர்க்குதான். இவர்களெல்லாம் மறைந்துபோயும் நானும் என் மனைவியும் உங்கள் முன்னால் உயிருடன் நிற்கிறோம். நானும் என் மனைவியும், எல்லோரும் அறிய முன்னாலிருந்து வேலை செய்தோம். ஆனால், அவர்களோ மறைவாயிருந்தே பணியாற்றினர். தாங்கள் செய்வது நியாயமானது, சரியானது என்பது ஒன்றைத்தவிர, தாங்கள் செல்லுவது எதை நோக்கி என்பதையும் அவர்கள் அறியார்கள். ஆகையால், புகழுக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்கள் யாராவது உண்டென்றால், போராட்டத்தில் உயிர் நீத்த அந்த மூவருமே அதற்குரியவராவர். ஹர்பத் சிங்கின் பெயரையும் நாம் மறந்துவிட முடியாது. அவருடன் சிறையில் இருக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஹர்பத் சிங்குக்கு வயது 75. ஒப்பந்தக் கூலியாக வந்து, ஒப்பந்தத்திலிருந்து விடுதலை பெற்ற இந்தியர் அவர். ஏன் சிறைக்கு வந்திருக்கிறீர் என்று அவரைக் கேட்டேன். அங்கே சாக வந்திருக்கிறீரா என்றும் வினவினேன். அதற்கு அந்த வீரர் பின்வருமாறு பதில் சொன்னார்: "நான் செத்தால் என்ன? நீங்கள் எதற்காகப் போராடிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். 3 பவுன் வரியை நீங்கள் கொடுக்க வேண்டியதில்லை. ஆனால், ஒப்பந்தத்திலிருந்து விடுபட்ட என் இந்தியத் தோழர்கள் அந்த வரியைச் செலுத்த வேண்டும். ஆகையால் இதற்காகப் போராடி மாள்வதைவிடச் சிறந்த மரணம் வேறு எனக்கு என்ன இருக்க முடியும்?" அவர்

டர்பன் சிறையிலேயே உயிரும் நீத்தார். சாத்விக எதிர்ப்புப் போராட்டம் தென்னுப்பிரிக்காவின் உள்ளத்தில் தீ மூட்டி மனச் சாட்சியை விரைவில் தட்டி எழுப்பி விட்டதில் வியப்பே இல்லே.

ஸ்ரீ டங்கன் சில ஆண்டுகளுக்கு முன்னுல் எழுதிய ஒரு கட்டுரையில், திட்டமான உரிமைகளே அடைவதற்காக நடத் தப்படும் இப்போராட்டத்தில் தெளிவான கொள்கையை வெளிப்படுத்தும் உன்னத உணர்ச்சியும் அடங்கியிருக்கிறது என்று கூறினுர். அதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். 1906-இல் நடந்த போராட்டம், ஒரு குறிப்பிட்ட சட்டத்தை எதிர்ப்பதற் கான போராட்டமேயெனில், தென்னுப்பிரிக்கா முழுவதையும் வளேத்து, மகத்தான பிரிட்டிஷ் அரசியல் அமைப்பையே பாழாக்கிவிடுவதாயிருந்ததோர் உணர்ச்சியை எதிர்க்கும் போராட்டமேயாகும். சரியோ, தப்போ, பிரிட்டிஷ் அரசியல் என்னே ஏகாதிபத்தியத்துடன் இணைக்கிறது என்பதே என் அபிப்பிராயம். அந்த அரசியலேச் சுக்கலாகக் கிழித்தெறிந்து விடுவதாயின், அப்படிக் கிழிப்பவர்கள் தங்கள் ராஜ விசுவாசத் தையும் கிழித்தெறிந்து விடுவதாகவே ஆகும். அரசியலே சிதைக்காமல் வைத்துவிட்டால் அவர்களே அந்த அரசியலுக்கு அடிமைகளாக்கியதாகிவிடும். நானும் என் நாட்டினரும், இந் நாட்டில் இரண்டில் ஒன்றையே செய்ய முடியும். பிரிட்டிஷ் அரசியலின் தத்துவத்திற்கு எதிரான போக்குத் தென்னுப்பிரிக் காவில் வளர்ந்து வந்தபோது, ஒன்று நாங்கள் அதற்கு உடன் பட்டு விடவேண்டும், அல்லது அரசியலின் தத்துவத்தை மாத் திரம் காப்பதற்காகப் போராடவேண்டும். ஸ்ரீ டோக்கின் புத்தகத்திற்கு முன்னுரை எழுதியிருக்கும் லார்டு ஆம்ப்தில், முந்திய சாம்ராஜ்யங்களெல்லாம் செய்த தவறுகளிலிருந்து பிரிட்டிஷ் அரசியலின் தத்துவம் எந்த வகையிலாயினும் பாது காக்கப்பட்டே ஆக வேண்டும் என்று கூறியிருக்கிருர். பழக்கம், ஒழுக்கப் பாதையிலிருந்து தாற்காலிகமாகச் சிறி தளவு மாறுபடுவதாயிருக்கலாம். அப்போதைய நிலேமைக்குக் கட்டுப்பட்டு, ஆனுல் நியாயமற்ற, காரணமில்லாத துவே ஷத்தை உண்டாக்குவதற்கு முன்னுல் அது திரும்பச் சரிப்பட்டு விடவேண்டும். ஆனுல், ஒரு முறை ஒப்புக்கொள்ளப்பட்டுவிட்ட தத்துவத்திலிருந்து எப்பொழுதுமே மாறக்கூடாது. எப்படியும் இக்கொள்கையை அனுசரித்தே ஆகவேண்டும். இந்த உணர்ச்சியையே இப்பொழுது யூனியன் அரசாங்கம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. மிகப் பெருந்தன்மையோடும் சிறந்த முறையிலும் ஒப்புக்கொண்டிருக்கிறது. ஜெனரல் ஸ்மட்ஸ்

அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கும் வார்த்தைகள் இன்னும் என் செவிகளில் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. “காந்தி, இந்தத் தடவை நமக்குள் எந்தத் தவருன அபிப்பிராயங்களும் வேண்டாம். மனத்தில் வேறு ஒன்றை வைத்துக்கொண்டு பேசுவது என்பதும் வேண்டாம். எல்லாவற்றையும் வெளிப் படையாக வைத்துப் பேசிவிடுவோம். ஏதாவது ஒரு வாக்கி யமோ அல்லது வார்த்தையோ நீங்கள் நினைப்பதற்கு மாருக உள்ளதா என்பதைச் சொல்லிவிடும்படியே உங்களைக் கேட் கிறேன்” என்ருர். இந்த உணர்ச்சியுடனேயே சமரசப் பேச்சை நடத்தினர்.* சில ஆண்டுகளுக்கு முன்னல் இதே ஜெனரல் ஸ்மட்ஸ், லார்டு கிரிவேயிடம், நிற வேற்றுமைக் கொள்கையிலிருந்து தென்னுப்பிரிக்கா விலகவே முடியாது என்ருர். இப்படிப் பாகுபாடு படுத்துவது இருக்கத்தான் வேண்டும் என்றும், குடியேற்றச் சட்டத்தில் இருக்கும் இந்த வித்தியாசத்தை நீக்கவே முடியாது என்றும் கூறினர். லார்டு ஆம்ப்தில் போன்ற நண்பர்கள், தாற்காலிகமாக இந்த நட வடிக்கைகளை நிறுத்தி வைக்கக்கூடாதா என்று கேட்டதற்கு ஜெனரல் ஸ்மட்ஸ், “முடியாது” என்று அப்பொழுது பதில் சொன்னர். அவர்கள் நிறுத்தி வைத்தால், அத்தகைய காரியம் தம்முடைய ராஜவிசுவாசத்தைக் குலைத்துவிடும் என்றும், தாம் ஒருவரே மிஞ்சினுலும் இதற்காகக் கடைசி வரையில் போராடிக்கொண்டிருக்கப் போவதாகவும் சொன்னர். அந்த ஜெனரல் ஸ்மட்ஸை, இன்று நினைத்துப் பார்க்கிறேன். லார்டு ஆம்ப்தில் அவரைப் பாராட்டினர். அந்த லட்சியத்திற்கு ஆதரவு குறைந்துவிட்ட சமயத்திலுங்கூட அப்பெரிய கனவான் அதைக் கைவிடவில்லை. இதன் முடிவை அவர்கள் இன்று காண்கிருர்கள். அடைந்திருக்கும் வெற்றிக்காக நாம் நம்மைப் பாராட்டிக்கொள்ளுவதற்கில்லை. வெற்றி பெறுவது என்பது முக்கியமில்லை. ஆனல், கொள்கையை ஸ்தாபிப்பது, தென்னுப் பிரிக்க யூனியனைப் பொறுத்த வரையிலாவது நிறைவேறியிருக் கிறது. அதன் சட்டங்களில் நிற வேற்றுமை இராது. நிறத் தின் காரணமாக இடைஞ்சல் என்பதும் இருக்காது. ஆனல், அனுபவத்தில் நடப்பதோ இதற்கு மாறுபட்டதாக நிச்சயம் இருக்கும். குடியேற்ற சம்பந்தமான சட்டம் இருக்கிறது. நிற வேற்றுமை காட்டுவதை அது அங்கீகரிக்கவில்லை. ஆனல், நடைமுறையிலோ குடியேற்றத்தில் அனுவசியமாக இந்தியா விலிருந்து அதிகம் பேர் வந்துவிடுவது என்பது இருக்காது

* காந்தி—ஸ்மட்ஸ் சமரசப் பேச்சு நடந்த விவரம் பற்றி காந்திஜி தம் கையா லேயே எழுதிய இரு குறிப்புக்களும் இப்பகுதியில் தனியே சேர்க்கப்பட்டிருக்கின்றன.

என்று வாக்குறுதி அளித்திருக்கிறோம். இப்பொழுது இருந்து வரும் துவேஷத்தை முன்னிட்டு விட்டுக்கொடுத்திருக்கும் காரியம் இது. இது சரியா, தப்பா என்பதைக் குறித்து விவாதிக்க இப்பொழுது தயாராயில்லை. ஆனால், இக்கொள்கையை ஸ்தாபித்திருப்பது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இப்போராட்டத்தை மிக முக்கியமானதாகச் செய்திருக்கிறது. இக்கொள்கையை உறுதிப்படுத்திவிட்டதனுல், போராட்டம் முற்றிலும் நியாயமானது, கௌரவமானது என்றும் ஆகிவிட்டது. இந்த நோக்கத்தோடு நமது போராட்டத்தைக் கவனித்தால், பிரிட்டிஷ் அரசியலின் கொள்கையை உறுதிப்படுத்திவிட்டதற்காக நம்மை நாமே பாராட்டிக்கொள்ளத் தகுதி பெற்றவர்கள் ஆகிறோம் என்றே நான் கருதுகிறேன்.

சமரசம் சம்பந்தமாக ஓர் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். தவருன அபிப்பிராயங்கள் உண்டாவதற்குக் கொஞ்சமும் இடமில்லையென்றே நான் கருதுகிறேன். ஒரு பெரும் போராட்டத்தை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்தாயிற்று என்ற வகையில் இது முடிவானதேயாகும். ஆனால், இந்தியருக்குள்ள உரிமைகளை யெல்லாம் இது அளித்துவிட்டதா என்பதைக் கொண்டு கவனித்தால் இது முடிவானதே அன்று. அதிக விஷமத்தன்மையைக் கொண்டதான தங்கச் சட்டம் அப்படியே இருந்துவருகிறது. லைசென்ஸ் கொடுப்பதற்கென்றிருக்கும் சட்டங்களும் யூனியன் முழுவதிலுமே இருக்கின்றன. அவற்றிலும் விஷமம் எவ்வளவோ அடங்கியிருக்கிறது. முக்கியமாக, இந்நாட்டிலேயே பிறந்த இந்தியர் அறிந்துகொள்ளவோ உணரவோ முடியாத மற்ருெரு விஷயமும் இருக்கிறது. வெளித்தொடர்பு இல்லாமல் அவர்கள் வாழவேண்டியிருப்பதே அது. ஐரோப்பியர் ஒரு மாகாணத்திலிருந்து மற்ருெரு மாகாணத்திற்குத் தாராளமாகப் போகலாம்; போய்க் குடியேறலாம். ஆனால், இந்தியரோ, தாங்கள் வசிக்கும் மாகாணத்திலேயே இருந்து தீர வேண்டும். அதோடு, அவர்கள் வியாபாரத்திற்கும் அனுவசியமான தடைகளெல்லாம் இருக்கின்றன. டிரான்ஸ்வாலில் சொந்தமாக நிலம் வைத்துக்கொள்ளுவதற்கு இருந்துவரும் தடை மானக்கேடானதாகும். இவைகளெல்லாம் இந்தியரை விரும்பத்தகாத துறைகளில் கொண்டு செல்கின்றன. இத்தகைய தடைகளெல்லாம் நீங்கியாகவேண்டும். என்ருலும், போதுமான பொறுமை இருந்தாக வேண்டியதும் அவசியம். காலம் நமக்குச் சாதகமானதாக இருக்கிறது. நிலைமையில் எவ்வளவோ அற்புதமான மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ ஆண்ட்ரூஸ் காட்டிய உணர்ச்சி, எல்லா ராஜதந்திரிகளிடமும், அவர் சந்தித்துப் பேசிய பிரமுகர்களிடமும் பரவியது என்று கேப் டவுனிலும் இங்கும் பலர் சொல்லக் கேட்டேன். இது உண்மை என்று நான் முற்றிலும் நம்புகிறேன். அவர், இங்கே வந்து கொஞ்ச காலம் இருந்துவிட்டுப் போய்விட்டார். ஆனால், சாம்ராஜ்யத்தில் ஓர் உறுப்பினராயிருக்கும் அவர்களும் அதற்கு ஆற்றவேண்டிய தம் கடமை இன்னதென்பதை உணர வேண்டும் என்ற உணர்ச்சியை, தாம் கண்டு பேசியவர்களின் உள்ளத்தில் ஆண்ட்ரூஸ் கிளப்பிவிட்டார். என்றாலும், இந்த நல்ல மாறுதல் எந்தச் சூழ்நிலையில் உண்டாயிற்று என்பதை நான் அறியாமற் போகவில்லை. கேப் டவுனில் நான் சந்தித்த ஐரோப்பிய நண்பர்களிடம் இதை நான் கண்டேன். டர்பனில் இதையே இன்னும் அதிகத் தெளிவாக நான் பார்த்தேன். இந்தத் தடவை அநேக ஐரோப்பியர்களைச் சந்திக்கும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. ரெயிலில் ஏறியபோது அவர்களில் பலர், எனக்கு முன் பின் தெரியாதவர்களாக இருந்தபோதிலும், ஆனந்தமாக முன் வந்து, நாம் அடைந்தது பெரிய வெற்றி என்று கூறி என்னைப் பாராட்டினார்கள். இதே நல்ல உணர்ச்சியை எல்லா இடங்களிலுமே நான் காண்கிறேன். ஐரோப்பியர் கமிட்டியின் மூலமோ, வேறு வகைகளிலோ, ஐரோப்பிய நண்பர்கள் இதே போல் தொடர்ந்து நடந்துகொள்ளுவதோடு தங்கள் சகோதர நாட்டினருக்கு உதவி செய்யுமாறும், அவர்கள் தங்கள் முன்னேற்றத்திற்கான வகையில் தாங்களே வேலை செய்துகொள்ளுவதற்கு அந்தச் சகோதர உணர்ச்சியைக் காட்டும்படியும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் நாட்டினருக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். நடக்கக்கூடியது, நியாயமானது என இந்தியர் எதிர்பார்க்கக் கூடியது இந்த ஒப்பந்தம். ஆகையால், இந்தியர்கள் பொறுமையுடன் ஒப்பந்தத்தைப் பேணி வளர்க்கவேண்டும். வாக்களிக்கப்பட்டிருப்பது நிறைவேற்றப்படுவதற்கும், இப்பொழுது இருக்கும் சட்டங்கள் நியாயமாக அமல் செய்யப்படுவதற்கும், ஐரோப்பிய நண்பர்களின் ஒத்துழைப்பின் பேரில் இந்தியர் வாழ முற்படவேண்டும். இக்காரியங்களைச் செய்துவந்தால், ஐரோப்பியப் பொதுஜன அபிப்பிராயம் ஆதரவானதாக வளரும்படியும் செய்துவிட்டால், இப்பொழுது என்ன என்ன உரிமைகள் பறிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளையெல்லாம் திருப்பியளித்துவிடும்படி அரசாங்கமும் செய்யப்பட்டுவிட்டால், எதிர்காலத்தைப் பற்றிப் பயப்படவே வேண்

டியதில்லே என்றே நான் கருதுகிறேன். பரஸ்பர ஒத்துழைப்பு இருந்து, பரஸ்பர நல்லெண்ணமும் இருந்து, இரு தரப்பாரிடமும் இதற்கு நல்ல ஆதரவு இருக்குமாயின், இந்த அரசாங்கத்திற்கோ, எந்த அரசாங்கத்திற்குமோ, இந்திய சமூகம் பலவீனத்திற்கு இடமானதாக இருப்பதற்கு இல்லே. நன்ருக நடத்தப்படுவார்களானுல், இந்தியர் இதை உணர்ந்து ஆட்சியில் இருக்கும் அரசாங்கத்திற்கு உதவி செய்வார்கள். என் தேசத்தினரைப் பொறுத்தவரை இந்த நம்பிக்கை எனக்கு உண்டு. தங்களுடைய உரிமைகளுக்காக இந்தியர் பன்முறை வற்புறுத்திவந்திருக்கிருர்களென்ருல், அதே சமயத்தில் தங்கள் முன்னுல் இருக்கும் பிரச்னைகளேச் சமாளிப்பதில் தங்கள் கடமையையும் நிறைவேற்றியும் இருக்கிருர்கள். இங்கிருக்கும் வெள்ளேக்கார நண்பர்களுக்கு இது ஞாபகம் இருக்கும் என்றே நம்புகிறேன்.

அபிப்பிராயம் கூறுவதை யெல்லாம் இனி நிறுத்திக்கொண்டு பிரிவுரையாகச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த வார்த்தைகளே எப்படிச் சொல்லுவது என்பதே எனக்கு விளங்கவில்லே. என் வாழ்நாளின் சிறந்த நாட்கள் தென்னுப்பிரிக்காவில் கழிந்துவிட்டன. என் நாட்டின் முக்கியமான தலேவரான ஸ்ரீ கோகலே குறிப்பிட்டதுபோல, இந்தியா எனக்குப் புதிதானதோர் நாடாகிவிட்டது. தென்னுப்பிரிக்காவை நான் நன்ருக அறிவேன்; ஆனுல், இந்தியாவைப்பற்றி அறியேன். இந்தியாவுக்குத் திரும்பும்படி என்னேத் தூண்டியது எது என்பது எனக்கே தெரியாது. ஆனுல், உங்களிடமிருந்து பிரிவது, என் கஷ்டங்களிலெல்லாம் எனக்கு உற்ற துணேயாக இருந்த ஐரோப்பிய நண்பர்களிடமிருந்து பிரிவது என்பது, அதிகக் கஷ்டமானது என்பதை அறிவேன். என்ருலும், பிரிந்தாக வேண்டியிருக்கிறது என்பதை உணர்கிறேன். உங்களிடமிருந்து விடை பெற்றுக்கொள்ளுகிறேன். ஆசீர்வதிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். நாங்கள் புகழ்ந்து பாராட்டப்பட்டிருப்பதனுல் கர்வங் கொண்டு எங்கள் தலே கனத்துவிடாமல், இன்னும் அதிகத் திறமையுடன் எங்கள் கடமையை நிறைவேற்றுவதை நாங்கள் நன்கு அறியவேண்டும்; முதலிலும் நடுவிலும் முடிவிலும் மனச் சாட்சியைப் பரிசுத்தமாக வைத்திருக்கவேண்டும்; எங்களுக்குக் கிடைக்கவேண்டியது உரிய காலத்தில்தானே வரும் என்பதை நாங்கள் உணர்ந்திருக்க அருளவேண்டும் என்று எங்களுக்காக ஆண்டவனேப் பிரார்த்தனே செய்யும்படி உங்களேக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[தென்னுப்பிரிக்கா 'சாத்விக எதிர்ப்பு' மலரிலிருந்து எடுக்கப்பட்டது.]

# தென்னுப்பிரிக்காவுக்குப் பிரிவுச் செய்தி

தென்னுப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்ப, காந்திஜி கப்பலேறுவதற்கு முன்னல், தென்னுப்பிரிக்காவிலுள்ள இந்திய, ஐரோப்பிய மக்களுக்குத் தமது பிரிவுச் செய்தி ஒன்றை கேப்டவுன் ராய்ட்டர் செய்தி ஸ்தாபன நிருபரிடம் கொடுத்தார். அச்செய்தியின் விவரம் வருமாறு:

நான் இந்தியாவுக்குப் புறப்படவிருக்கும் இச்சமயத்தில், தென்னுப்பிரிக்காவிலிருக்கும் எனது நாட்டினருக்கும், ஐரோப்பிய சமூகத்தினருக்குங்கூட, சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். ஐரோப்பிய, இந்திய நண்பர்கள், என்னிடம் காட்டியிருக்கும் அளவு கடந்த அன்பின் காரணமாக நான் அவர்களுக்குப் பெரிதும் கடன்பாட்டுடனேயே இந்தியாவுக்குத் திரும்புகிறேன். இந்தியாவில் இருந்துகொண்டு என்னல் செய்ய வல்ல சேவைகளைச் செய்வதன்மூலம் இக்கடனைத் தீர்க்க முயற்சி செய்வேன். தென்னுப்பிரிக்க இந்தியர் பிரச்னையைப் பற்றிப் பேசும்போது, என் நாட்டினர்களுக்கு இழைக்கப்பட்டிருந்த அநீதிகளைக் குறித்தும், இனிச் செய்யப்படும் தீமைகளைப்பற்றியும் சொல்லவேண்டியிருந்தது. நான் வேண்டுமென்றே எதையும் மிகைப்படுத்திக் கூறமாட்டேன். உண்மையைத் தவிர வேறு எதையும் சொல்லமாட்டேன் என்று உறுதி கூறுகிறேன்.

சமரச ஏற்பாட்டைக் குறித்தும், அது என்ன என்பதைக் குறித்தும் ஒரு வார்த்தை. இந்நாட்டில் நமது சுதந்திரத்திற்கு அது பெரிய சாசனம் என்பதே என்னுடைய தாழ்மையான கருத்து. சரித்திரப் பிரசித்தியானதொரு பெயரை அதற்கு நான் கொடுப்பதற்கு, நாம் என்றுமே அனுபவித்தறியாத உரிமைகளை அது நமக்கு அளிக்கிறது என்பதோ அல்லது அது கண்டறியாத புதுமை வாய்ந்தது என்பதோ காரணமல்ல. எட்டு ஆண்டுகள் எவ்வளவோ கஷ்டப்பட்டுப் போராடி, சொத்துக்களையும், ஒப்பற்ற உயிர்களையும் இழந்த பிறகு இதை அடைந்திருக்கிறோம். நம்மைப்பற்றிய அரசாங்கத்தின் கொள்கையில் இது மாறுதலை உண்டாக்கியிருக்கிறது; நாம் பாதிக்கப்படும் காரியங்களில் நம்மை அவர்கள் கலந்து ஆலோசிக்க வேண்டும், நமது நியாயமான கருத்துக்களை மதிக்கவேண்டும் என்ற உரிமையை அது நிலைநாட்டுகிறது.

இதனுலேயே இந்தச் சமரச ஏற்பாட்டை சுதந்திர சாசனம் என்று நான் கூறுகிறேன். அதோடு, ஆங்காங்குள்ள சந்தர்ப்பங் களுக்கு ஏற்ற வகையில், பழக்கங்களில் என்னதான் மாறுபாடு கள் இருந்தபோதிலும், பிரிட்டிஷ் பிரஜைகளான பலதரப் பட்ட இனத்தினரிடையே சட்டப்படி நிற வேற்றுமையை அனு சரிக்கக்கூடாது என்ற பிரிட்டிஷ் அரசியல் தத்துவத்தையும் அது உறுதிப்படுத்துகிறது. இவை எல்லாவற்றையும்விட இன்னுமொரு காரணத்தை முன்னிட்டும் இந்தச் சமரச ஒப்பந் தத்தை நமது சுதந்திர சாசனம் என்று கூறமுடியும். சாத்விக எதிர்ப்புப் போராட்டத்தைச் சட்ட ரீதியான, மாசற்ற ஓர் ஆயுதம் என்று அது வெளிப்படுத்தியிருக்கிறது. சாத்விக எதிர்ப்பின் மூலம் சமூகத்திற்குப் புதிய பலத்தையும் தந்திருக் கிறது. வாக்குரிமை, வாக்காளருக்கு விரோதமாகவே திரும்பிவிடு கிறது என்பதைச் சரித்திரம் காட்டுகிறது. ஆகையால், வாக் குரிமையைவிட உயர்ந்த சக்தி வாய்ந்தது சாத்விக எதிர்ப்பு என்பது என் கருத்து.

சாத்விக எதிர்ப்புக்குக் காரணமாயிருந்த எல்லா விஷயங் களையும் சமரச ஏற்பாடு முடிவாகத் தீர்த்துவிடுகிறது. அவ்விதம் செய்வதில் நீதியும் நியாயமும் நேர்மையும் வெளிப்படுகின்றன. இப்பொழுதுள்ள சட்டங்களை அமல் நடத்துவதில் அரசாங்கம் இதே உணர்ச்சியுடன் நடந்துகொண்டு வருமானல், என் நாட் டினருக்கு அமைதி ஏற்படுவதுடன், தென்னுப்பிரிக்காவில் தீவிர மான இந்தியப் பிரச்னை இருப்பதாகவே காதில் படாது.

இந்த ஒப்பந்தத்தை என் நாட்டவர்களில் சிலர் எதிர்த் திருக்கிருர்கள். இவ்விதம் எதிர்த்திருப்போரின் தொகை மிகக் குறைவு; அவர்களுக்கிருக்கும் செல்வாக்கும் அதிகமன்று. அளிக்கப்பட்டிருப்பதை அவர்கள் ஆட்சேபிக்கவில்லை; கிடைத் திருப்பது போதாது என்றே எதிர்க்கிருர்கள். இவர்களிடம் அனுதாபம் கொள்ளாமல் இருக்க முடியாது. இவர்களுடன் பேசும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. இன்னும் அதிக மாக நாம் கேட்டிருந்தால், சென்ற ஆண்டின் கடைசிப் பகுதி யில் பிரிட்டிஷ் இந்தியர்களின் சார்பாக அரசாங்கத்திற்கு ஸ்ரீ காச்சலியா எழுதிய கடிதத்தில் விண்ணப்பம் செய்த உடன் பாட்டிலிருந்து பிறழ்வதோடு, புதுக் கோரிக்கைகளைக் கொண்டு வருகிருேம் என்று நம்மீது குற்றஞ் சாட்டுவதற்கு இடம் தந்ததாகவும் ஆகும். இதை அவர்களுக்கு விளக்கிக் காட்டவும் முயன்றேன்.

அவர்களுக்கு இன்னுமொன்றும் உறுதி கூறுகிறேன். தங்கச் சட்டம், நகரக் குடியிருப்புச் சட்டம், 1885-ஆம் வருட டிரான்ஸ்வால் 3-ஆம் சட்டம், நேட்டால், கேப் வர்த்தக அனுமதிச் சீட்டுச் சட்டம் ஆகியவைகளினால் இந்திய சமூகத்திற்கு இன்னும் இருந்து வரும் துன்பங்களைப் போக்கிக் கொள்ளுவதற்காக மேலும் கிளர்ச்சி செய்வதை இந்த ஒப்பந்தம் எந்த விதத்திலும் அவர்களைத் தடுக்காது என்று அவர்களுக்கு உறுதி கூறினேன்.* இப்பொழுதுள்ள சட்டங்கள் நியாயமாகவும், உரிமைகளுக்குத் தீமை ஏற்படாதவாறும் அமல் செய்யப்படும் என்று ஜெனரல் ஸ்மட்ஸ் வாக்குறுதி அளித்திருப்பதால் இந்திய சமூகத்திற்குக் கொஞ்சம் அவகாசம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், இச்சட்டங்கள் மோசமானவையே. இதுவரை செய்யப்பட்டு வந்ததைப் போல, இந்தியரை ஒடுக்குவதற்கும், தென்னாப்பிரிக்காவிலிருக்கும் இந்தியரை விரட்டி விடுவதற்கும் மறைமுகமான ஆயுதங்களாகவும் இவை உபயோகிக்கப்படவும் கூடும். இந்தியர் யாரும் புதிதாக வந்து குடியேறிவிடுவதை அடியோடு தடுப்பதற்கான நிர்வாக ஏற்பாடுகளுக்கும் நாம் ஒப்புக்கொண்டிருக்கிறோம். நம்முடைய எல்லா ராஜீய அதிகாரங்களையும் பறித்து விடுவதற்கும் சம்மதித்திருக்கிறோம். நம்மை வெறுப்பவர்களுக்கு விட்டுக் கொடுப்பதற்கு, நியாயமாக நம்மிடமிருந்து அதிக அளவு எதிர்பார்க்கக்கூடியது என்றே இதை நான் கருதுகிறேன். இந்த இரண்டும் உறுதியாகிவிட்டதால், முழு வர்த்தக உரிமையையும், ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்திற்குச் சென்று குடியேறும் உரிமையையும், சொந்தமாக நிலம் வைத்துக் கொள்ளும் சுதந்திரத்தையும் நாம் சீக்கிரமே அடைந்தாக வேண்டும். தென்னாப்பிரிக்க ஐரோப்பிய சமூகத்தினரிடையே பரவியுள்ள நல்ல மனநிலை தொடர்ந்து இருந்து வரும். இவ்வளவு பணிந்துகொடுத்த நம் கோரிக்கைகளின் நியாயத்தை ஐரோப்பியர்கள் உணரும்படி அது செய்யும் என்ற நம்பிக்கையுடனேயே நான் தென்னாப்பிரிக்காவிலிருந்து புறப்படுகிறேன்.

சென்ற இரண்டு வாரங்களாக என் நாட்டினரின் கூட்டங்கள் பலவற்றில் பேசியிருக்கிறேன். இவற்றில் பல கூட்டங்களுக்கு ஆயிரக்கணக்கில் மக்கள் வந்திருந்தார்கள். அவர்களுக்கு நான் வருமாறு கூறினேன்: "ஒப்பந்தத்தைப் பராமரியுங்கள். அளிக்கப்பட்டிருக்கும் வாக்குறுதிகள் நிறைவேற்றி வைக்கப்படும்படியும் பாருங்கள். உள்ளுக்குள் அபி

* உள்நாட்டுக் காரியதரிசிக்கு எழுதிய கடிதப்படி.

விருத்தியையும் முன்னேற்றத்தையும் அடைவதைக் கவனியுங்கள். இந்தியருக்கு விரோதமான துவேஷங்களும் கிளர்ச்சிகளும் எழுவதற்கும், அவை வளர்வதற்கும் காரணமாக நம்மிடமிருக்கும் குறைகள் அகல்வதற்குத் தீவிரமாகப் பாடுபடுங்கள். அதிகாரத்திலிருக்கும் அரசாங்கமும் சட்டசபையும், நமது உரிமைகளை அளிப்பதற்கு ஐரோப்பியப் பொதுஜன அபிப்பிராயத்தைப் பெறவும், வளர்க்கவும் வேண்டும் நாம். சாத்விக எதிர்ப்புப் போராட்டத்தில் நம்மை அழுத்தும் மற்றுஞ் சில கஷ்டங்கள் பற்றிய விஷயங்கள் சேர்க்கப்படவில்லை. இந்தக் கஷ்டங்களைச் சரிக்கட்டிக்கொண்டு, உரிய வழியில் எந்தவிதச் சிக்கலோ அல்லது கடுமையான கிளர்ச்சியோ இல்லாமல், பரஸ்பர ஒத்துழைப்பினுலும் நல்லெண்ணத்தினுலுமே தீர்த்துக் கொள்ளமுடியும்.

நேட்டாலில் ஒப்பந்தத்தின் கீழ் இருப்பவர்களும், ஒப்பந்தத்திலிருந்து விடுபட்டவர்களும் ஏராளமாக இருப்பது திடுக்கிடச் செய்யும் பெரிய பிரச்னை. இவர்களைக் கட்டாயப்படுத்தி இந்தியாவுக்குத் திருப்பி அனுப்புவது என்பது, நடைமுறையிலும் சரி, ராஜீய வழியிலும் சரி நடக்காத காரியம். இனமாகக் கப்பல் கட்டணம், இதேபோன்ற சில வசதிகளைச் செய்து கொடுப்பதாகக் கூறித் தாமே இந்தியாவுக்குத் திரும்பிப் போய் விடச் செய்யலாம் என்றால், இதைப் பயன்படுத்திக் கொள்ள அதிகம் பேர் முன் வரப்போவதில்லை என்பதை நான் அனுபவத்தில் அறிந்திருக்கிறேன். இதற்கு இப்பெரிய ராஜ்யம், உண்மையாகவே, சரியானபடி செய்யக்கூடிய ஒரே பரிகாரம், தனது கடமையை நேர்மையாகவும் திடமாகவும் உணர்ந்து ஒப்பந்தக் கூலிமுறையின் எஞ்சியுள்ள சின்னத்தையும் அடியோடு போக்கிவிட்டு பிரஜைகளான இப்பகுதியினரையும் சமமாகப் பாவித்து யூனியனின் பொது நலத்துக்கு இவர்களைப் பயன்படுத்திக்கொள்ளுவதே யாகும். இந்த ஆண்களும் பெண்களும் பெருத்த அளவில் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள். பொதுவான லட்சியத்திற்காகக் கணக்கற்ற துன்பங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். தங்களுக்குள் அதிகக் கட்டுத் திட்டங்களில்லாதவர்களாயிருந்தும் பல நாட்கள் லட்சியத்திற்காகத் தியாகஞ் செய்து வந்திருக்கின்றனர். போலீஸ் காவலே இல்லாதிருந்தபோதிலும், சொத்துக்களுக்கோ அல்லது ஆட்களுக்கோ அவர்கள் எவ்விதச் சேதமும் விளைவிக்கவில்லை. சமயம் வந்தபோது தங்கள் மன்னருக்காகத் திறமையாகவும்

பக்தி விசுவாசத்துடனும் சேவை செய்யக் கூடியவர்கள். போன யுத்தத்தின்போது அமைக்கப்பட்ட மருத்துவப் படையே இதற்குச் சான்று. (அப்படையில் மற்ற இந்திய வகுப்பினருடன் 1,500 இந்திய ஒப்பந்தக் கூலிகளும் இருந்தனர்.) இத்தகைய மக்கள், வாழ்க்கைக்குரிய சாதாரண வாய்ப்புக்கள் தங்களுக்கு அளிக்கப்பட்டாலும், ஒரு நாட்டின் கௌரவமான மக்களாக விளங்குவார்கள்.

விசேஷச் சலுகைகளைப் பெறக்கூடிய ஒரு வகுப்பினர் யாராவது உண்டென்ருல், அவர்கள் ஒப்பந்தக் கூலிகளாக வந்திருக்கும் இந்தியரும் அவர்களுடைய குழந்தைகளுமே எனலாம். இவர்களுக்குத் தென்னுப்பிரிக்கா, நயந்து ஏற்றுக்கொண்ட நாடாகவும் பிறந்த நாடாகவும் இருக்கிறது. சாதாரணமாகச் சுயேச்சைக் குடிகளாக அவர்கள் யூனியனுக்குள் வரவில்லை. அழைப்பின் பேரில் வந்தவர்கள். தென்னுப்பிரிக்காவில் வேலைக்கு ஆள் தேடும் முதலாளிகளின் பிரதிநிதிகள், எவ்வளவோ ஆசை காட்டியதன் பேரில் இவர்கள் வந்தார்கள். இந்திய நிலைமையைக் குறித்தும், சென்ற மாதத்தில் பல ஐரோப்பிய நண்பர்கள் என்னிடம் காட்டியிருக்கும் அபாரமான அன்பையும் ஆதரவையும் குறித்தும், என் சக்திக்குரிய வகையில் உண்மையாகவும் நியாயமாகவும் எவ்வளவு எடுத்துக் கூற முடியுமோ அவ்வளவும் இக்கடிதத்தில் கூற முயற்சி செய்திருக்கிறேன். ஜெனரல் ஸ்மட்ஸ் உவந்து எனக்கு அளித்த பேட்டியில், மனம் விட்டுப் பேசித் தாராளமாகவும் நடந்துகொண்டார். பிரஸ்தாபப் பிரச்னைகளையும் ஆராய முன்வந்தார். பார்லிமெண்டின் இரு சபைகளையும் சேர்ந்த முக்கிய உறுப்பினர், சாம்ராஜ்ய அடிப்படையில் இப்பிரச்னைக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கவனித்தனர். இவற்றிலிருந்து தென்னுப்பிரிக்காவைத் தங்கள் தாயகமாகக் கொண்டுவிட்ட என் நாட்டினருக்கு முறைப்படி முழு நீதியும் கிடைத்து, யூனியனில் சுயமதிப்புடனும் கௌரவத்துடனும் வாழ முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது.

முடிவாகத் தென்னுப்பிரிக்காவிலிருந்து பிரியும் அவசரத்தில் ஒவ்வொரு நண்பரையும் நேரில் கண்டு நான் விடைபெற்றுக்கொள்ளாததற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறேன். இந்நாட்டில் நான் நீண்ட காலம் வசித்துவிட்டேன். அப்பொழுது நான் பல கஷ்டங்களையும் அனுபவித்திருந்தபோதிலும், நூற்றுக்கணக்கான ஐரோப்பிய நண்பர்கள், அனு

தாபம் காட்டினார்கள். இவர்கள் அன்பிற்கும் ஆதரவுக்கும் உரியவனாகும் பாக்கியத்தையும் பெற்றிருக்கிறேன் என்பதை மீண்டும் கூறிக்கொள்ள விரும்புகிறேன். பலரிடம் நான் நெருங்கிப் பழகியிருக்கிறேன். இந்த நட்பு, இக்காரணத்தினாலும் மற்றக் காரணங்களை முன்னிட்டும் என்றென்றும் நீடித்து நிற்கும். இதையெல்லாம்பற்றி எழுத வேண்டும் என்பதே என் ஆசையெனினும், பத்திரிகைகள் அளிக்கும் ஆதரவை அளவு கடந்து மீறி விடக்கூடாது என்பதற்காக நான் எழுதவில்லை. என் தாய் நாட்டுக்கு அடுத்தபடியாக இந்த உபகண்டம், எனக்குப் புனிதமான, பிரியமான நாடெனலாம். நான் மன வருத்தத்துடனேயே தென்னாப்பிரிக்காவிலிருந்து போகிறேன். தொலைவு இனி என்னைத் தென்னாப்பிரிக்காவிலிருந்து பிரித்தாலும், நான் அதை நெருங்கியே இருப்பேன். இந்நாட்டின் நலமே என்னுடைய முக்கிய கவனமாக இருந்து வரும். என் நாட்டினர் என்னிடம் காட்டிய அன்பும், ஐரோப்பியர் என்னிடம் காட்டிய தாராள மனமும் அன்பும் எனக்கு இன்பம் ஊட்டும் நினைவுகளாக என்றென்றும் இருந்து வரும்.

# தென்னுப்பிரிக்காவில் தமிழர் சேவை

[காந்தி தம்பதிகள் தென்னுப்பிரிக்காவிலிருந்து இந்தியா திரும்பியதும் சென்னைக்கும் வந்திருந்தனர். 1915 ஏப்ரல், 21-ந் தேதி இவர்களைப் பாராட்டுவதற்காகச் சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. இதற்கு டாக்டர் ஸர் சுப்பிரமணிய ஐயர் தலைமை வகித்தார். இந்திய—தென்னுப்பிரிக்கச் சங்கத்தின் சார்பில் ஸ்ரீ ஜி. ஏ. நடேசன், ஒரு வரவேற்புப் பத்திரத்தைக் காந்தி தம்பதிகளுக்கு வாசித்தளித்தார். அதற்குப் பதிலளித்துப் பேசிய மகாத்மா, தென்னுப்பிரிக்க போராட்டத்தில் சென்னை மாகானத்தைச் சேர்ந்தவர்கள், முக்கியமாகத் தமிழர்கள் செய்த சேவையைப் பாராட்டிப் பேசினர்.]

மகாத்மா காந்தி பேசியதாவது :

சென்னையிலுள்ள நீங்கள் எங்களுக்கு இப்பொழுது அளித்திருக்கும் பெரிய கௌரவத்திற்கும் - ஏன் இந்த மாகாணமே எங்களுக்கு இதைச் செய்திருக்கிறது எனலாம்—புகழும் அறிவும் மலிந்த இம்மாகாணம் எங்களிடம் காட்டிய அளவு கடந்த அன்பிற்கும், நானும் என் மனைவியும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த அழகான உபசாரப் பத்திரத்தில் நீங்கள் கூறியிருப்பவைகளுக்கு நாங்கள் கொஞ்சமேனும் தகுதியுடையவர்களாக இருந்தால், நான் நாடு கடந்து இத்தனை ஆண்டுகள் தென்னுப்பிரிக்காவில் யாருடைய தூண்டுதலின்பேரில் தொண்டு செய்து வந்தேனே அந்தக் குருநாதரின் பாதங்களில் அவற்றைச் சமர்ப்பிக்கிறேன். உபசாரப் பத்திரத்தில் கூறப்பட்டிருக்கும் உணர்ச்சிகளைப் பொறுத்தவரையில், அவை எங்கள் எதிர்காலத்தைக் குறித்துக் கூறுபவைகளாயிருப்பின், அவற்றை உங்களது வாழ்த்தாக ஏற்றுக்கொள்ளுகிறேன். எனக்கும் என் மனைவிக்கும் இதற்கு வேண்டிய சக்தியும் மனப்போக்கும் உண்டாகவும், எங்களுடைய இந்தத் தெய்விக நாட்டில் எங்களுக்கு ஏற்படும் அபிவிருத்திகளையெல்லாம், தாய்நாட்டின் சேவைக்காக அர்ப்பணமாக்கும் ஆற்றல் எங்களுக்கு ஏற்படவேண்டும் என்றும், நீங்களும் இப்பெரும் கூட்டத்தினரும் எங்களுக்காக ஆண்டவனைப் பிரார்த்திப்பதாகவும் கொள்ளுகிறேம். (மகிழ்ச்சி ஆரவாரம்) நாங்கள் சென்னைக்கு வந்திருப்பதில் அதிசயம் எதுவுமில்லை. நாங்கள் இதற்கு முன்னலேயே இங்கே வந்திருக்க வேண்டும் என்றும், நாங்கள் சென்னையை அலட்சியம் செய்துவிட்டோம் என்றும், ஒருவேளை என் நண்பர் ஸ்ரீ நடேசன் எங்களிடம்

சொல்லக்கூடும். ஆனால், நாங்கள் அப்படி எதுவும் செய்துவிட வில்லை. உங்கள் உள்ளத்தில் எங்களுக்கு இடமுண்டு என்பதை நாங்கள் அறிவோம். மற்ற மாகாணங்களுக்கும் நகரங்களுக்கும் போகுமுன் சென்னைக்கு விரைந்து வராததைக் குறித்து நீங்கள் எங்களைத் தவறாக நினைத்துவிடமாட்டீர்கள் என்பதை அறி வோம்.

இந்த உபசாரப் பத்திரத்தில் நீங்கள் கூறியிருக்கும் பாராட்டு களுக்குப் பத்தில் ஒரு பங்கு நாங்கள் தகுதியுள்ளவர்கள் என்று வைத்துக்கொண்டால், தங்களுடைய உயிரையே தியா கம் செய்து, அதன் காரணமாக தென்னாப்பிரிக்காவிலுள்ள உங் கள் நாட்டினரின் துன்பங்களைப் போக்கியவர்களைப்பற்றி நீங்கள் என்ன பாராட்டுரைகளைச் சொல்லப்போகிறீர்கள்? நாகப்பனும் நாராயணசாமியும் பதினேழு வயதும் பதினெட்டு வயதுமான இளைஞர்கள். இவர்கள் தாய்நாட்டின் கௌரவத்தைக் காப்ப தற்காக உறுதியுடன் கஷ்டங்களை யெல்லாம் அனுபவித்தார்கள்; துன்பங்களுக்கும் அவமதிப்புகளுக்கும் உட்பட்டார்கள். அவர் களுடைய ஒப்பற்ற சேவையை நீங்கள் என்ன சொல்லிப் பாராட்டப் போகிறீர்கள்? (மகிழ்ச்சிக் குரல்). வள்ளியம்மாளை என்ன புகழுரைகளோடு நீங்கள் போற்றப் போகிறீர்கள்? பதினேழு வயதான இந்தப் பெண்மணி, மாரிட்ஸ்பர்க் சிறையில் சுரத்தினால் பீடிக்கப்பட்டுக் கிடந்து, விடுதலையாகி எலும்புந் தோலுமாக வெளியே வந்தாள். வந்த ஒரு மாதத்திற்கெல்லாம் இறந்தும் போனாள் (அனுதாபக் குரல்).

நம்மை ஆட்கொள்ளும் ஆண்டவன், இந்தியருள் சென்னை மாகாணத்தவரையே இப்பெரும்பணிக்குத் தேர்ந்தெடுத்து அளித் தார். ஜொஹன்னஸ்பர்க் நகரில் இந்த எட்டு ஆண்டுகளில் உங்கள் நாட்டினர் அனுபவித்த கொடிய நெருக்கடிக் காலத்தில், ஒரு முறை அல்லது இரு முறையாவது சிறை செல்லாத சென்னை மாகாணவாசியை மானமில்லாதவன் என்று அங்குள்ள மற்ற சென்னை மாகாணத்தவர் கருதி வந்தார்கள் என்பது உங்களுக் குத் தெரியுமா? ஆண்களும் பெண்களுமான இச்சிறப்புடை யோருக்கு நானே உணர்ச்சியை மூட்டினேன் என்று உங்கள் உப சாரப் பத்திரத்தில் கூறியிருக்கிறீர்கள். ஆனால், இதை நான் ஒப்புக்கொள்ளவே முடியாது. ஒரே உறுதியுடன், லட்சியத்தில் முழு நம்பிக்கையுடன் வழியை வகுத்து, வெகுமதி என்பது எதை யுமே சிறிதும் எதிர்பாராமல் பாடுபட்ட எளிமை மிக்க அவர் களே எனக்கு உணர்ச்சியை உண்டாக்கியவர்கள். என்னைச் சரி

யான நிலையிலும் அவர்கள் வைத்தார்கள். தங்களுடைய பெரிய தியாகங்கள், திடமான நம்பிக்கை, கடவுளிடம் கொண்ட உறுதி யான பற்று இவற்றின் மூலம் எனக்கு உணர்ச்சியை ஊட்டி,நான் செய்யவேண்டிய வேலையை நான் செய்து முடிக்கும்படியும் உதவி புரிந்தனர். பகிரங்கமாகப் புலப்படும் வகையில் நானும் என் மனைவியும் பணியாற்ற நேர்ந்ததும், நாங்கள் செய்த இச் சிறு சேவையை அளவு கடந்து நீங்கள் மிகைப்படுத்திக் கூறி யிருப்பதும் என்னுடைய துர்ப்பாக்கியமாகும். என் அருமை நண்பர்களே! நான் சொல்லுவதை நம்புங்கள். உங்களைப் போன்ற சாதாரணமானவர்களே நாங்களும். உங்களுடைய உதவியில்லாமல், நாங்கள் செய்யத் தயாராயிருக்கும் அதே காரியத்தை நீங்கள் செய்யாமல் நாங்களே செய்துவிட முடியும், செய்து விட்டோம் என்று நீங்கள் நினைப்பதாயிருந்தால், நீங்கள் நினைப்பதும் வீணுகிப்போம்; நாங்களும் வீணுகி விடு வோம்; நமது சேவையும் வீணுகிவிடும். உணர்ச்சியை மூட்டியவர்கள் நாங்களே என்பதை நம்பவே மாட்டேன். அவர்களே எங்களுக்கு அந்த உணர்ச்சி அளித்தவர்கள். ஆளுவோர் என்று தங்களைக் கூறிக் கொண்டவர்களுக்கும், துன்பத்திலிருந்து மீள்வதற்குக் காத்திருந்த மக்களுக்கும் நடுவே விஷயங்களை எடுத்துக் கூறுவோராக இருக்கத்தான் எங்களால் முடிந்தது. அவ்விரு தரப்பினருக்கும் நடுவே ஓர் இணைப்பாக மாத்திரம் நாங்கள் இருந்தோமே யன்றி வேறு அல்ல. என் பெற்றோர்கள் எனக்கு அளித்திருந்த கல்வி யின் காரணமாக, எங்கள் நடுவே நடந்து வருவது என்ன என்பதைக் கபடமற்ற அம்மக்களுக்கு எடுத்துச் சொல்லுவது என் கடமையாயிற்று. நிலைமையை உணர்ந்து நடக்க அம் மக்களும் முன் வந்தார்கள். ஆன்ம சக்தியின் பலத்தையும் அவர்கள் உணர்ந்தார்கள். எனக்கு உணர்ச்சியை மூட்டிய வர்களும் அவர்களே. தங்கள் பணியைச் செய்து முடித்தவர் களும், உங்களுக்காகவும் எனக்காகவும் உயிர்த் தியாகம் செய் தவர்களுமான அவர்கள், உங்களுக்கும் எங்களுக்கும் உணர்ச் சியை உண்டாக்குவார்களாகுக. நாங்கள் இன்னும் உயிருடன் இருக்கிறோம். நாளைக்கு நாங்கள் வேறு விதமாக மாறிப் போனாலும் போகக்கூடும். புதிய ஆபத்து எதுவும் எங்கள் முன்பு ஏற்படும்போது நாங்கள் எங்களுடைய கடமையைச் செய்வதிலிருந்து வழுவி நடக்கமாட்டோம் என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆனல், அந்த மூவரோ, மறைந்தும் என்றும் அமரர்களாக இருப்பவர்கள்.

ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த 75 வயது கிழவரான ஹர்பத் சிங் தென்னுப்பிரிக்கா சிறையில் மாண்டார். எங்கள் தலையில் நீங்கள் வைக்க முற்படும் மணிமுடிக்குத் தகுதி வாய்ந்தவர் அவர். அதிக அன்போடு, ஆனல், கண்மூடித்தன மாக எங்களைக் குறித்து நீங்கள் உபயோகித்திருக்கும் அடை மொழிகளுக்கெல்லாம் உரியவர்கள் அந்த மூன்று இளைஞர்களே. அங்கே போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் ஹிந்துக்கள் மட்டு மல்ல; முகம்மதியர்கள், கிறிஸ்துவர்கள், பார்சிகள்; இந்தியா வின் எல்லாப் பகுதியைச் சேர்ந்தவர்களும் அப்போராட்டத்தில் பங்கு கொண்டிருந்தார்கள். எங்கள் எல்லோருக்குமே ஏற்பட் டிருந்த பொதுவான ஆபத்தை அவர்கள் உணர்ந்தார்கள். இந்தியர் என்ற வகையில் தங்கள் நிலை என்ன என்பதையும் அறிந்தார்கள். உடல் நன்மைக்கு எதிராக ஆன்ம பலத்தை நிறுத்தி வெற்றி கண்டவர்களும் அவர்களே.

# காலனிகளில் இந்தியர்

[1915 ஜூன் மாதம் சென்னை மாகாண மகாநாடு நெல்லூரில் நடந்தது. தென்னப்பிரிக்காவில் நடத்திய சரித்திரப் பிரசித்தி பெற்ற போராட்டத்தின் காரணமாகத் தாய்நாட்டிற்குச் செய்திருக்கும் ஒப்பற்ற சேவைக்காகக் காந்தி தம்பதிகளுக்கு மகாநாடு நன்றி தெரிவிக்கிறது என்ற தீர்மானத்தை ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் பிரேரேபித்தார். இந்நன்றியை ஏற்றுக்கொண்டு மகாத்மா காந்தி அம்மகாநாட்டில் பேசுகையில், காலனி நாடுகளில் குடியேறியிருக்கும் இந்தியரின் நிலைமையைப்பற்றிக் கூறினர். காந்திஜி செய்த பிரசங்கத்தின் அப்பகுதி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

மகாத்மா காந்தி பேசியதாவது :

கடல் கடந்த இந்தியர், தங்களுக்கு நியாயமான உரிமைகள் வேண்டும் என்று கேட்கும்போது, இப்பிரச்னையில் உணர்ச்சிகள் புகுந்துவிடுகின்றன. ஆகவே, இந்தியாவும் டொமினியன்களும் ஒரு பரஸ்பர ஏற்பாட்டுக்கு வந்துவிட்டால் இப்பிரச்னையிலுள்ள கஷ்டங்களைச் சமாளித்துக்கொண்டு விடுவது சாத்தியம் என்று தோன்றுகிறது. வெளி நாடுகளில் சென்று குடியேறும் இந்தியருக்குக் கிழக்கு ஆப்பிரிக்காவில் இடம் கொடுப்பதாயின், டொமினியன்கள் இந்தியரை எவ்விதம் ஒதுக்குகின்றனவோ அதே போலத் தொழிலாளர் வகுப்பைச் சேர்ந்த வெள்ளைக் காரரை ஒதுக்கி விட இந்தியாவுக்கு அதிகாரம் வேண்டும் என்று ஏற்பாடு செய்வது ராஜதந்திரத்தின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டதாக இருக்கக்கூடாது. அல்லது, சாம்ராஜ்யத்திலுள்ள வெள்ளைக்கார நாடுகளில் அனுமதிக்கும் இந்தியரின் தொகை, அந்த நாட்டில் இருக்கும் வெள்ளைக்காரர் தொகைக்கு ஏற்றாற்போல் எவ்வளவு இருப்பது என்பதையும் ஏற்பாடு செய்துகொள்ளவேண்டும். இவ்விதம் ஒப்புக்கொள்ளப்படும் விகிதாசாரம், டொமினியன்களில் இப்பொழுது இருந்துவரும் ஆசியாக்காரர்களில் சிலரை நீக்கிவிட வேண்டிய அவசியத்தை உண்டாக்காதிருக்கவேண்டுமானல், இந்தியாவின் ஜனத்தொகை விகிதாசாரத்திற்கு இந்தியாவிலிருக்கும் வெள்ளைக்காரர் தொகை எவ்வளவோ அதற்கு இரண்டு மடங்கு இந்தியர் டொமினியன்களில் இருப்பது என்று நிர்ணயிக்கவேண்டும். ராணுவத்தினர் உள்பட இந்தியாவில் இப்பொழுது இருக்கும் வெள்ளையர், 2,000 இந்தியருக்கு ஒருவர் வீதம் இருக்கிறார்கள். கானடாவில் இப்பொழுது இருக்கும் மொத்த ஜனத்தொகை

80,00,000. இந்தியர் 3,000 பேர் இருக்கிறார்கள். இது 1,000 வெள்ளையருக்கு ஓர் இந்தியராகிறது. மேற்கண்ட யோசனைப்படி செய்வதானால், இந்தியர் தொகை இன்னும் 5,000 அங்கே அதிகமாவதற்குக் கானடா அனுமதிக்கவேண்டும். ஆஸ்திரேலியாவில் இப்பொழுது 50,00,000 வெள்ளையர் இருக்கும்போது இந்தியர் 5,000-க்கு மேல் இருக்கிறார்கள். 1,000 வெள்ளையருக்கு ஓர் இந்தியர் என்ற விகிதத்திற்கு அதிகமாக இங்குள்ள இந்தியர் விகிதம் மிகச் சொற்பம். நியூஜிலாந்தில் 250 வெள்ளையருக்கு ஓர் இந்தியர் விகிதம் இருக்கின்றனர். இப்பொழுது இருக்கும் நிலைமைக்கு அங்கே இன்றிருக்கும் இந்த விகிதம் அநேகமாய்ப் பொருத்தமானதாக இருக்கிறது. தென்னாப்பிரிக்காவிலோ, 10 வெள்ளையருக்கு ஓர் இந்தியர் என்ற விகிதத்திற்கு அதிகமாக இருப்பதால் சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஆனால், மற்ற டொமினியன்களுக்கும் தென்னாப்பிரிக்காவுக்கும் வித்தியாசம் உண்டு. அலட்சியம் செய்துவிட முடியாத அளவுக்கு அங்கே சுதேசிகளின் தொகை அதிகமாக இருக்கிறது. தென்னாப்பிரிக்க யூனியன் கூறிவரும் இந்தக் கலப்பட இனப் பிரச்னையில் இந்தியரைப் பொறுத்தவரையில், அவர்கள் தாங்களே கிழக்கு ஆப்பிரிக்காவுக்குப் போகும்படி தூண்டுவதன் மூலம் இச்சங்கடத்தைத் தீர்த்துவிடலாம். பிறகு டொமினியன்களில் இருக்கும் சிறு தொகையினரான இந்தியருக்கு முழு ராஜீய உரிமைகளையும் அளித்து விடவேண்டும். இது ஒன்றே, இந்தியர் நியாயமாகக் கோரிவரும் சமத்துவத்தை அளிப்பதோடு பிரிட்டிஷ் பிரஜைகள் என்ற முறையில் அவர்களுடைய உரிமைகளை ஒப்புக்கொள்ளுவதுமாகும்.

# குடியேறும் இந்தியர், ஐரோப்பியர்

[1914-ஆம் ஆண்டு பம்பாயில் நடந்த காங்கிரஸில், இந்தியாவையும் காலனிகளையும்பற்றிய தீர்மானம் ஒன்றை மகாத்மா காந்தி கொண்டு வந்தார். அந்தத் தீர்மானமாவது: "நியாயமாகவும் சமத்துவமாகவும் நிர்வகிக்கப்படுவார்கள் என்று காலனிகளின் ராஜதந்திரிகள் கூறியிருந்தும், தென்னுப்பிரிக்காவிலும் கானடாவிலும் இந்தியரைப் பாதிக்கும் சட்டங்கள் இன்னும் இருந்து வருவதைக் குறித்துக் காங்கிரஸ் வருந்துகிறது. சுயாட்சி பெற்றிருக்கும் காலனி நாடுகள், இதேபோல் குடியேறியிருக்கும் ஐரோப்பியருக்கு அளித்திருப்பதைப் போன்ற சமமான உரிமைகளை அளிக்க வேண்டும் என்று காங்கிரஸ் எதிர்பார்ப்பதோடு, இந்தியருக்கு அது இதுவரையில் அநியாயமாக மறுக்கப்பட்டு வந்திருப்பதால் எங்கும் அதிருப்தியும் கொதிப்பும் உண்டாகியிருப்பதால், அந்த உரிமைகள் அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்வதற்காகப் பிரிட்டிஷ் அரசாங்கம் எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ளும் என்று நம்புகிறது."]

மேற்கண்ட தீர்மானத்தைப் பிரேரேபித்து மகாத்மா காந்தி பேசியதாவது :

நண்பர்களே! சுயாட்சி பெற்றுள்ள காலனிகள் இந்தியருக்கு விரோதமான போக்கை அனுசரித்து வருவதைக் குறித்து இப்பெரும் மகாநாடு வருத்தம் தெரிவிக்கும் இச்சமயத்தில், உங்கள் நாட்டினரைக் கொண்ட படையொன்று தென்னுப்பிரிக்காவில் நோயுற்றவர்களுக்கும் காயம்பட்டோருக்கும் உதவி செய்வதற்காகப் போர்க்களத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பது விதியின் விளையாட்டேயாகும். தென்னுப்பிரிக்காவில் அமைக்கப்பட்டிருக்கும் இப்படையைப் பற்றிய விவரங்கள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. எதிர்காலச் சுயாட்சி நாட்டினராக நடுத்தர வகுப்பினர் ஆகப் போகின்றனர் என்று 'டைம்ஸ் ஆப் இந்தியா' கூறும் அதே நடுத்தர வகுப்பினரைக் கொண்டது அப்படை. முன்னுல் ஒப்பந்தக் கூலிகளாக இருந்து விடுதலை பெற்றவர்களும், அவர்கள் குழந்தைகளும், சிறு அங்காடிக்காரர்கள், பாட்டாளிகள், வியாபாரிகள் ஆகியவர்களைக் கொண்டது அப்படை. என்றாலும், தங்கள் போக்கை மாற்றிக்கொள்ளவேண்டியது அவசியம் என்று காலனிகள் நினைக்கவில்லை. இதில் அவர்களின் தத்துவமும் எனக்கு விளங்கவில்லை. இந்தச் சமயத்தில் சேவையில் நமது பணிவான பங்கு, அரசாங்கத்துடன் விசுவாசமற்றதாக இல்லாததனுல், இதுவரையில் நமக்கு அளிக்கப்படாமலிருந்த

உரிமைகளுக்கு நாம் தகுதியுடையவர்களாகிறோம் என்று கூறுவது இக்கால நாகரிகமாக இருந்துவருகிறது. நமது விசுவாசத்தில் சந்தேகம் ஏற்பட்டதனுலேயே அந்த உரிமைகள் நமக்கு மறுக்கப்பட்டு வந்ததைப் போலவும் சொல்லுகிறுர்கள். உண்மை அதுவல்ல. உரிமைகள் நமக்கு அளிக்கப்படவில்லையெனினும் அதற்குக் காரணம் வேறு. அந்தக் காரணங்களே மாற்றப்படவேண்டும். மாருத துவேஷத்தினுலும், பொருளாதாரக் காரணங்களினுலுமே உரிமைகள் நமக்கு மறுக்கப்பட்டு வருகின்றன. இவற்றையே பரிசீலனை செய்யவேண்டும். ஆனுல், துவேஷத்தைக் குறைத்தாக வேண்டும். தென்னுப்பிரிக்கா, கானடா, சுயாட்சி பெற்றிருக்கும் மற்றக் காலனிகள் முதலியவைகளில் நம் நாட்டு மக்கள் அனுபவித்து வரும் துன்பங்கள் யாவை? தென்னுப்பிரிக்காவில் 1914-இல் ஏற்பட்ட சமரச ஏற்பாடு, சாத்விக சத்தியாக்கிரகிகள் எதற்காகப் போராடினுர்களோ அதற்குமேல் எதுவும் செய்வதாயில்லை. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து வந்து குடியேறியவர்களுக்குச் சட்டப்படி சமத்துவம் வேண்டும் என்பதற்காக அவர்கள் போராடினுர்களேயன்றி வேறு எதற்குமல்ல.

அந்தச் சட்ட ரீதியான சமத்துவம் கிடைத்தது. ஆனுல், உங்களுக்கிருந்த சங்கடங்கள் இன்னும் இருந்துவருகின்றன. இந்த மகாநாட்டில் பேசப்படும் மொழி முக்கியமாக ஆங்கிலமாகவே இருப்பது என்ற பழக்கம் சென்ற நாற்பது ஆண்டுகளாகத் துரதிருஷ்டவசமாகத் தொடர்ந்து வந்திராவிட்டால், நம் சென்னை நண்பர்கள் நம் வடநாட்டு மொழிகளில் ஒன்றைக் கற்றுக்கொண்டிருப்பார்கள். தென்னுப்பிரிக்காவில் சொந்தமாக நிலம் வைத்துக்கொள்ளுவதில் இன்றும் இருந்துவரும் தொல்லைகளைக் குறித்தும், தென்னுப்பிரிக்காவில் குடியேறி இருந்து விட்டு இங்கே வந்து திரும்பிப் போகும்போது அவர்களுடைய குழந்தைகளுக்கு அனுமதி பெறுவதில் இருக்கும் சங்கடங்கள், வியாபார அனுமதிச்சீட்டுகளை வைத்துக்கொள்ளுவதிலிருக்கும் கஷ்டங்கள் ஆகிய தம் துயரங்களைப்பற்றித் தென்னுப்பிரிக்க இந்தியர் எவ்வளவோ கூறுவர். இவையெல்லாம் வயிற்றுப் பாட்டைப் பற்றிய கஷ்டங்கள் என்றே நான் கூறுவேன். இவை அன்றி இன்னும் எத்தனையோ சங்கடங்கள் இருக்கின்றன. அவற்றையெல்லாம் நான் இப்பொழுது விவரித்துக் கொண்டிருக்கப் போவதில்லை. கானடாவில் குடியேறியிருக்கும் சீக்கியர்களுக்கோ, தங்கள் மனைவி மக்களை அழைத்துச் செல்ல முடியவில்லை. சட்டம் ஒரே மாதிரியானதே.

ஆனால், அதை நிர்வகிக்கும் விதத்தில்தான் இடத்திற்கு இடம் மாறுபாடு இருக்கிறது. யுத்தம் ஏற்பட்டுவிட்டது. சாம் ராஜ்யத்திற்கு இந்தியர் அற்புதமான உதவியைச் செய்து வருகிறார்கள் என்றும் கூறிக்கொள்ளுகிறார்கள். இதையெல்லாம் முன்னிட்டு நீதி வழங்கப்படும் என்கிறார்கள். என்றாலும், சட்டம் மாத்திரம் அப்படியேதான் இருந்து வருகிறது. இந்தியர் தங்கள் மனைவிகளையும் மக்களையும் அழைத்துச் செல்ல முடியாத வகையில் சட்ட நிர்வாகமும், எந்தவித மாறுதலும் இன்றி, எப்பொழுதும் போலவே இருக்கிறது. இந்தக் கஷ்டங்களையெல்லாம் எப்படி சமாளிப்பது? விவரங்களையெல்லாம் இப்பொழுது சொல்லிக்கொண்டிருக்க நான் விரும்பவில்லை. காலனி நாடுகளின் ராஜதந்திரிகளுக்கும், பிரிட்டிஷ் சர்க்காருக்கும் வேண்டுகோள் விடுவதன்மூலம் இச்சங்கடங்களைச் சமாளித்துக் கொண்டுவிடலாம் என்று காங்கிரஸ் கருதுகிறது. காங்கிரஸ் இவ்வளவுதான் செய்ய முடியுமென்று அஞ்சுகிறேன். ஆனால், தீர்மானத்தைப் பற்றியவரையில் அது ஒரு வகையில் இப்பொழுதுள்ள நிலைமைக்குப் போதுமானது அல்ல. லார்டு ஹார்டிஞ்சு சில மாதங்களுக்கு முன்னால்தான் இந்தியத் தலைவர்களுக்கும் இந்திய ராஜதந்திரிகளுக்கும் தீவிரமானதோர் கோரிக்கையை வெளியிட்டார். இந்தியாவின் கௌரவத்தை நிலை நிறுத்துவதற்காக ஒரு கௌரவமான ஏற்பாட்டுக்கு வருவதற்கு உதவும்படி லார்டு ஹார்டிஞ்சு கோரினார். பதிலுக்காக அவர் இன்னும் காத்துக்கொண்டிருக்கிறார். அவருக்குக் காங்கிரஸ் பதிலை அளிக்கவில்லை; அளிப்பதென்பது காங்கிரஸினாலும் முடியாது. அதில் இருப்போர் திறமை யுள்ளவர்கள் என்று கூறலாமெனின், அப்படிப்பட்ட திறமைசாலிகள் சேர்ந்தே பதிலை அனுப்பவேண்டும். காங்கிரஸ் அவர்களுக்கு வழி காட்டியிருக்கிறது. ஒவ்வொரு தரப்பினரும் கோரும் உரிமைகளையெல்லாம் பரிசீலனை செய்து, விவரங்களை அவர்கள் தயாரித்துப் பரிகார முறையை லார்டு ஹார்டிஞ்சுக்குத் தெரிவிக்கவேண்டும். அப்பரிகார முறையில் எல்லா விவரங்களும் இருப்பதோடு, காலனி அரசாங்கங்கள், இந்திய மக்கள் ஆகிய இரு தரப்பாருக்கும் திருப்தியளிப்பதாகவும், இத்தீர்மானம் கோரும் நியாயங்களில் எதையுமே எடுத்து விடாததாகவும் இருக்கவேண்டும். இதைக் கூறி நான் இத்தீர்மானத்தை ஆனந்தத்தோடு உங்கள் முன்பு கொண்டு வருகிறேன்.

# ஒப்பந்தக் கூலி முறை

[ஒப்பந்தக் கூலிகளை அனுப்பும் முறையை அடியோடு ஒழித்துவிட வேண்டுமென்று மகாத்மா காந்தி 1917–இல் இந்தியாவெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து பலமான கிளர்ச்சி செய்தார். இந்த ஒப்பந்தக் கூலி முறை எவ்வளவு மோசமானது என்பதைக் குறித்து அப்பொழுது மகாத்மா கூறியதே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

காந்திஜி கூறியதாவது:

நமது கௌரவத்தைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்காக நாம் ஒரு பெரும் போராட்டத்தில் இப்பொழுது ஈடுபட்டிருக்கிறோம் என்பதில் சந்தேகமே இல்லை. இவ்விஷயத்தில் நாம் சிரத்தையுடன் இல்லாதுபோனால், ஒப்பந்தக் கூலிகளை அனுப்பும் முறை இனி இல்லாமல் போகும் என்று லார்டு ஹார்டிஞ்சு அளித்திருக்கும் வாக்குறுதி ஒன்றுமில்லாது போய் விடும். இம்முறை இன்னும் ஐந்து ஆண்டுகளுக்கு நீடிக்கப் படக்கூடும் என்ற ஒரு பயம் ஏற்பட்டது. புனாவில் ஸர். ராமகிருஷ்ண பாண்டார்கார் எடுத்துக் காட்டியிருப்பதைப் போல, ஐந்து ஆண்டுகளுக்கு நீடிப்பு என்பது பத்து ஆண்டுகள் என்றே அர்த்தமாகிவிடும். ஆனால், சமீபத்தில் வைசிராய் பேசியிருப்பது அந்தப் பயத்தைக் கொஞ்சம் போக்குவதாக இருந்தது. நமக்கு அளித்திருக்கும் வாக்குறுதிக்காக லார்டு செம்ஸ்போர்டுக்கு நன்றியறிதல் உள்ளவர்களாவோம். இவ்விஷயத்தில் செய்திருக்கும் சிறந்த காரியத்திற்காக நல்லதோர் ஆங்கிலேயரான ஸ்ரீ சி. எப். ஆண்ட்ரூஸுக்குக் கடமைப்பட்டிருக்கிறோம். பிஜித் தீவில் இருக்கும் தோட்ட முதலாளிகள், இந்த முறை மேலும் ஐந்தாண்டுகளுக்கு நீடிக்கப்படும் என்று உறுதியுடன் இருக்கிறார்கள் என்பதை ஸ்ரீ ஆண்ட்ரூஸ் அறிந்ததும், தாம் நோயுற்றுச் சாந்திநிகேதனத்தில் ஓய்வில் இருந்ததையும் உதறித் தள்ளிவிட்டு முன்வந்து நமக்காகத் தமது கடமையைச் செய்ய முற்பட்டார்.

நம்மை அழித்துவிடுமோ என்ற வகையில் தோன்றிய ஒரு மேகம் மறைந்துவிட்டதாகத் தோன்றும் சமயத்தில், இதே போன்ற ஆபத்தான மற்றொரு மேகம் அடிவானத்தில் தென்படுகிறது. சென்ற மார்ச்சு மாதத்தில் இம்முறையை ரத்து செய்வதற்கு லார்டு ஹார்டிஞ்சு வருமாறு நிபந்தனைகளைக் கூறினார்:

"குடியேற்ற நாட்டுக் காரியாலயமும் சம்பந்தப்பட்ட பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட காலனிகளும் கலந்தாலோசித்து, தொழிலாளர்களைக் காலனிகளுக்கு அனுப்பிக்கொண்டிருப்பதற்கான புதிய வழிகளுக்குரிய ஏற்பாடுகளைச் செய்யும்வரையில், தொழிலாளரை அனுப்புவதற்கு இப்பொழுதுள்ள முறை தொடர்ந்து இருந்து வரவேண்டியதே என்பதைத் தெளிவு படுத்தும்படி பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பில் அவர் (இந்தியா மந்திரி) நம்மைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். காலனிகளில் ஏற்ற பாதுகாப்புக்கள் செய்யப்படும் வரையில் மாறுதலுக்கு ஏற்றவகையில் தங்கள் நிலைமையைச் சரிப்படுத்திக்கொள்ளுவதற்கு வேண்டிய நியாயமான அவகாசம் அவர்களுக்கு இருக்கவேண்டும். அந்த அவகாசம் எவ்வளவு என்பது, தற்சமயம் சரிவரத் தெரியாமல் இருக்கும் சந்தர்ப்பத்தையும் நிலைமையையும் பொறுத்திருக்கிறது."

தோட்ட முதலாளிகளுக்கு லாபகரமானதாக இருக்கக்கூடியதும், நம்மைப் பொறுத்தவரையில் நேர்மையானதுமாகிய புதிய நிலைமையைத் தேடுவது என்பது சற்றும் இயலாத காரியம். இப் பிரச்னையைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்தவர்களும் இதை நன்கு அறிவார்கள். அரசாங்கம் இதற்குத் தானே ஒரு முறையைக் காணும் என எண்ணினோம். இந்த ஒப்பந்தக் கூலி முறையை லார்டு ஹார்டிஞ்சு மனமார வெறுத்திருப்பதால், அதன் முடிவைக் குறித்து அவர் நினைத்திருக்கும் கால அளவு நாம் எண்ணுவதற்கு ஒத்ததாக இருக்கும் என்றும் கருதினோம். ஆனால், இப்பொழுது புதியதோர் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. ஓர் ஆண்டும் கடந்து விட்டது. ஆனால், இந்த முறை இன்னும் ஐந்தாண்டுகளுக்கு நீடிக்கப்படும் என்றும், அதற்குப் பிறகு ஏற்படும் புதிய நிலைமை, பெயரில்தான் மாறுபட்டதாக இருக்குமேயன்றிக் காரியத்தில் மாறுபட்டதாக இராது என்றும் பிஜித் தோட்ட முதலாளிகள் நம்பியிருக்கும்படி செய்யப்பட்டிருக்கின்றனர். ஸ்ரீ போனர் லாவின் அறிக்கை உண்மையை வெளிப்படுத்துகிறது. 1916 மார்ச் 4-ஆம் தேதி பிஜி தாற்காலிக கவர்னருக்கு அவர் எழுதியிருப்பதில் கூறுவதாவது:

"ஒப்பந்தக் கூலி முறையை ரத்து செய்துவிடவேண்டும் என்று தங்கள் சட்டசபையில் நிறைவேறிய தீர்மானங்களை இந்திய அரசாங்கம், அதிகாரிகளாலாகிய பெரும்பான்மை பலத்தைக் கொண்டு தொடர்ந்து தோற்கடித்துக்கொண்டிருப்பது சாத்தியமல்ல என்பதை இந்தியா மந்திரி ஆதரிக்

கிருர். இது சம்பந்தமாக இந்தியா எங்குமே இருந்துவரும் பலத்த எதிர்ப்பு, இதை அவசரமான பிரச்னையாக்குகிறது என்பதே அவர் கருத்து. ஒப்பந்தக் கூலிகளை அனுப்புவது என்பதை ரத்து செய்துவிடவேண்டும் என்ற முடிவை அவர் ஏற்றுக்கொண்டிருக்கிருர். இந்திய அரசாங்கமும், இந்தியா மந்திரியும் செய்திருக்கும் இம்முடிவு, காலனிகளின் அபிப்பிராயத்தைப் பொறுத்தவரையில் வருந்தத் தக்கதாகுமெனினும் இப்பிரச்னையில் ஒரு முடிவைச் செய்வது இந்திய அரசாங்கத்தையே பொறுத்ததாகும் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.''

இவ்விதம் இப்பிரச்னையிலடங்கிய மனிதத் தன்மைக்கும் காலனிகளுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாதது போலப் பாவிக்கப்பட்டிருக்கிறது.

அந்த விளக்கமான கடிதத்திலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்கண்ட வாக்கியங்களையும் கவனியுங்கள்:

''ஆகையால் ஒப்பந்தக் கூலி முறையை மேலும் ஐந்தாண்டுகளுக்கு அனுமதித்து, அதன்பிறகு இதற்குப் பதிலாக என்ன முறையை அனுசரிக்கலாம் என்பதைக் கவனிப்பதற்காகப் பல இலாகாவினரையும் கொண்ட ஒரு கமிட்டியை நியமிக்க ஒப்புக்கொண்டிருக்கிறேன். இம்முறையில் செய்யப்படும் மாறுதலை, காலனிகளின் பொருளாதார நன்மைக்கு எந்தச் சங்கடமும் இல்லாதவகையில் கொண்டுவரவேண்டும் என்பதில் இந்தியா மந்திரி அதிக சிரத்தையுடன் இருக்கிருர். தக்க பாதுகாப்புக்களுடன் கூடிய முறை ஒன்று கண்டுபிடிக்கப்படும் வரையில் இப்பொழுது இருக்கும் முறையே இருந்து வரவேண்டும் என்றும் அவர் தெளிவாகக் கூறியிருக்கிருர்.''

இந்த ஐந்தாண்டு நீடிப்பைக் குறித்துக் குறிப்பிட்டதற்காக ஸ்ரீ ஆண்ட்ருஸ்மீது ஆத்திரப்படுகிருர்கள். இவர்மீது குறைகூறுகிறவர்கள், பிஜிப் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும் ஸ்ரீ போனர்லாவின் சந்தேகத்திற்கிடமில்லாத கூற்றுதான் வேறு என்ன என்பதை விளக்கட்டும். சர்க்கார் தரப்பில் இவ்விதம் கூறப்பட்டிருப்பதோடு, தோட்ட முதலாளிகளின் நன்மையையே இந்தியா மந்திரியும் முக்கியமானதாகக் கருதியிருக்கிருர். ஆகையால், நாம் உஷாராக இல்லாதுபோனல் நமது லட்சியம் வெகு எளிதில் வீணுகிவிடும்.

வைசிராயின் பேச்சையும், ஸ்ரீ போனர்லாவின் அறிவிப்பையும் கவனித்தால் நமது கடமை என்ன என்பது தெளிவானதாகிறது. அவசியமாகும்போது நாம் அரசாங்கத்தின் கையைப் பலப்படுத்த வேண்டும். இலாகாக்காரர்களின் கூட்டுக் கமிட்டி நம் நம்பிக்கைகளைப் பாழாக்கிவிடாதபடி செய்வதற்காக அரசாங்கம் காரியத்தில் இறங்கும்படியும் உற்சாகம் அளிக்கவேண்டும். இலாகாக்காரர்களின் கூட்டுக்கமிட்டிக்குப் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட காலனிகள், குடியேற்ற நாட்டு மந்திரி காரியாலயம் ஆகியவற்றிற்கே அதிகச் செல்வாக்கு இருக்கும். இத்தகைய ஒரு கமிட்டியே, நாம் ஏற்றுக்கொள்ளக்கூடியதான ஒரு மாற்று முறையைக் கண்டு பிடிக்கப் போகிறது! தொழிலாளரின் உண்மை நலத்தை முக்கியமாகக் கவனிக்கவேண்டியதாயின், இதெல்லாம் வீண் ஆராய்ச்சி என்றே நான் கூறுகிறேன். தோட்ட முதலாளிகளின் இஷ்டம் போல்தான் நடக்கப் போகிறதென்ருல், சாத்தியமில்லாத ஒரு மாற்று யோசனையை அவர்கள் சொல்லுவார்கள் என்பதை நாம் அறிவோம், அதை நாம் நிராகரித்துவிட்டால் ஸ்ரீ போனர்லாவின் கடிதம் கூறுவதை அனுசரித்து, ஒப்பந்தக் கூலி முறை தொடர்ந்து அமலில் இருக்க வேண்டும் என்று கேட்பார்கள். ஆகையால், ஒப்புக்கொள்ளக் கூடிய மாற்று முறைபற்றி யோசனை கூறும் பொறுப்பு அவர்களுக்கு இருக்கிறதேயல்லாமல் நமக்கு இல்லை என்பதையும் நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். இப்பொழுதே அவர்களுக்கு ஓர் ஆண்டுக்குமேல் கிடைத்து விட்டது. இம்முறையை அடியோடு ரத்து செய்து விடவேண்டும் என்று லார்டு ஹார்டிஞ்சு எழுதியது 1915 அக்டோபர், 15-ஆந் தேதியில். கமிட்டி அடுத்த மே மாதம் கூடப்போகிறது. மனச்சாட்சிப்படி கவனித்தால், ஒரு மாற்று முறைக்கு இவ்வளவு காலமே மிக அதிகமானது. பிஜியிலிருக்கும் இந்தியருக்குள்ள பயங்கரமான நிலைமையைக் குறித்து ஸ்ரீ ஆண்ட்ரூஸ் கூறியிருப்பது ஒன்று உண்மையாக இருக்கவேண்டும்; இல்லையானுல் பொய்யாக இருக்க வேண்டும். அது உண்மையானது என்று நாம் நம்புகிரேம். அது பலமாக எதிர்த்துக் கூறப்படவுமில்லை. நாம் ஓராண்டு காத்திருந்துவிட்டோம். மாற்றுமுறையோ அல்லது இல்லையோ, நமது தூய்மையை முன்னிட்டும், நமது கௌரவத்திற்கும் கீர்த்திக்காகவும், சாம்ராஜ்யத்தின் கௌரவத்திற்காகவும், அடிமைத்தனத்தின் கடைசிச் சின்னமான அம்முறையை அடியோடு ஒழித்தே ஆகவேண்டும் என்று கேட்க நமக்கு உரிமை உண்டு. மாற்று முறை எதையும் வைத்துக்கொள்ளாமலேயே

கிருர். இது சம்பந்தமாக இந்தியா எங்குமே இருந்துவரும் பலத்த எதிர்ப்பு, இதை அவசரமான பிரச்னையாக்குகிறது என்பதே அவர் கருத்து. ஒப்பந்தக் கூலிகளை அனுப்புவது என்பதை ரத்து செய்துவிடவேண்டும் என்ற முடிவை அவர் ஏற்றுக்கொண்டிருக்கிருர். இந்திய அரசாங்கமும், இந்தியா மந்திரியும் செய்திருக்கும் இம்முடிவு, காலனிகளின் அபிப்பிரா யத்தைப் பொறுத்தவரையில் வருந்தத் தக்கதாகுமெனினும் இப்பிரச்னையில் ஒரு முடிவைச் செய்வது இந்திய அரசாங்கத் தையே பொறுத்ததாகும் என்பதை நான் ஒப்புக்கொள்ளு கிறேன்.''

இவ்விதம் இப்பிரச்னையிலடங்கிய மனிதத் தன்மைக்கும் காலனிகளுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாதது போலப் பாவிக்கப்பட்டிருக்கிறது.

அந்த விளக்கமான கடிதத்திலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க் கண்ட வாக்கியங்களையும் கவனியுங்கள்:

''ஆகையால் ஒப்பந்தக் கூலி முறையை மேலும் ஐந்தாண்டு களுக்கு அனுமதித்து, அதன்பிறகு இதற்குப் பதிலாக என்ன முறையை அனுசரிக்கலாம் என்பதைக் கவனிப்பதற்காகப் பல இலாகாவினரையும் கொண்ட ஒரு கமிட்டியை நியமிக்க ஒப்புக் கொண்டிருக்கிறேன். இம்முறையில் செய்யப்படும் மாறுதலை, காலனிகளின் பொருளாதார நன்மைக்கு எந்தச் சங்கடமும் இல்லாதவகையில் கொண்டுவரவேண்டும் என்பதில் இந்தியா மந்திரி அதிக சிரத்தையுடன் இருக்கிருர். தக்க பாதுகாப்புக் களுடன் கூடிய முறை ஒன்று கண்டுபிடிக்கப்படும் வரையில் இப்பொழுது இருக்கும் முறையே இருந்து வரவேண்டும் என்றும் அவர் தெளிவாகக் கூறியிருக்கிருர்.''

இந்த ஐந்தாண்டு நீடிப்பைக் குறித்துக் குறிப்பிட்டதற்காக ஸ்ரீ ஆண்ட்ருஸ்மீது ஆத்திரப்படுகிருர்கள். இவர்மீது குறை கூறுகிறவர்கள், பிஜிப் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கும் ஸ்ரீ போனர்லாவின் சந்தேகத்திற்கிடமில்லாத கூற்றுதான் வேறு என்ன என்பதை விளக்கட்டும். சர்க்கார் தரப்பில் இவ்விதம் கூறப்பட்டிருப்பதோடு, தோட்ட முதலாளிகளின் நன்மையையே இந்தியா மந்திரியும் முக்கியமானதாகக் கருதியிருக்கிருர். ஆகை யால், நாம் உஷாராக இல்லாதுபோனல் நமது லட்சியம் வெகு எளிதில் வீணுகிவிடும்.

வைசிராயின் பேச்சையும், ஸ்ரீ போனர்லாவின் அறிவிப்பையும் கவனித்தால் நமது கடமை என்ன என்பது தெளிவானதாகிறது. அவசியமாகும்போது நாம் அரசாங்கத்தின் கையைப் பலப்படுத்த வேண்டும். இலாகாக்காரர்களின் கூட்டுக் கமிட்டி நம் நம்பிக்கைகளைப் பாழாக்கிவிடாதபடி செய்வதற்காக அரசாங்கம் காரியத்தில் இறங்கும்படியும் உற்சாகம் அளிக்கவேண்டும். இலாகாக்காரர்களின் கூட்டுக்கமிட்டிக்குப் பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட காலனிகள், குடியேற்ற நாட்டு மந்திரி காரியாலயம் ஆகியவற்றிற்கே அதிகச் செல்வாக்கு இருக்கும். இத்தகைய ஒரு கமிட்டியே, நாம் ஏற்றுக்கொள்ளக்கூடியதான ஒரு மாற்று முறையைக் கண்டு பிடிக்கப் போகிறது! தொழிலாளரின் உண்மை நலத்தை முக்கியமாகக் கவனிக்கவேண்டியதாயின், இதெல்லாம் வீண் ஆராய்ச்சி என்றே நான் கூறுகிறேன். தோட்ட முதலாளிகளின் இஷ்டம் போல்தான் நடக்கப் போகிறதென்றால், சாத்தியமில்லாத ஒரு மாற்று யோசனையை அவர்கள் சொல்லுவார்கள் என்பதை நாம் அறிவோம், அதை நாம் நிராகரித்துவிட்டால் ஸ்ரீ போனர்லாவின் கடிதம் கூறுவதை அனுசரித்து, ஒப்பந்தக் கூலி முறை தொடர்ந்து அமலில் இருக்க வேண்டும் என்று கேட்பார்கள். ஆகையால், ஒப்புக்கொள்ளக் கூடிய மாற்று முறைபற்றி யோசனை கூறும் பொறுப்பு அவர்களுக்கு இருக்கிறதேயல்லாமல் நமக்கு இல்லை என்பதையும் நாம் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். இப்பொழுதே அவர்களுக்கு ஓர் ஆண்டுக்குமேல் கிடைத்து விட்டது. இம்முறையை அடியோடு ரத்து செய்து விடவேண்டும் என்று லார்டு ஹார்டிஞ்சு எழுதியது 1915 அக்டோபர், 15-ஆந் தேதியில். கமிட்டி அடுத்த மே மாதம் கூடப்போகிறது. மனச்சாட்சிப்படி கவனித்தால், ஒரு மாற்று முறைக்கு இவ்வளவு காலமே மிக அதிகமானது. பிஜியிலிருக்கும் இந்தியருக்குள்ள பயங்கரமான நிலைமையைக் குறித்து ஸ்ரீ ஆண்ட்ரூஸ் கூறியிருப்பது ஒன்று உண்மையாக இருக்கவேண்டும்; இல்லையானால் பொய்யாக இருக்க வேண்டும். அது உண்மையானது என்று நாம் நம்புகிறோம். அது பலமாக எதிர்த்துக் கூறப்படவுமில்லை. நாம் ஓராண்டு காத்திருந்துவிட்டோம். மாற்றுமுறையோ அல்லது இல்லையோ, நமது தூய்மையை முன்னிட்டும், நமது கௌரவத்திற்கும் கீர்த்திக்காகவும், சாம்ராஜ்யத்தின் கௌரவத்திற்காகவும், அடிமைத்தனத்தின் கடைசிச் சின்னமான அம்முறையை அடியோடு ஒழித்தே ஆகவேண்டும் என்று கேட்க நமக்கு உரிமை உண்டு. மாற்று முறை எதையும் வைத்துக்கொள்ளாமலேயே

நேட்டால் அம்முறையை நிறுத்திவிட்டது. மொரீஷஸும் அதே போல் செய்திருக்கிறது. சீனத் தொழிலாளரைத் திடீரென்று நிறுத்திவிட்டதை மட்டுமன்றிக் கப்பல் வசதி கிடைத்ததுமே வேகமாக எல்லாச் சீனத் தொழிலாளரும் அந்நாட்டிலிருந்து அழைக்கப்பட்டுவிட்டதன் அதிர்ச்சியை ஜொஹன்னஸ்பர்க் சுரங்கங்கள் தாங்கிச் சமாளித்துக் கொண்டிருக்கின்றன.

முதலாளித்துவத்திற்குத் தீரமும் உண்டு; கோழைத்தனமும் உண்டு. நாம் நமது கடமையைச் சரிவரச் செய்வோமானுல், இந்திய அரசாங்கம் மாத்திரம் பிஜி, மேற்கிந்தியத் தீவுத் தோட்ட முதலாளிகளின் ஆசை காட்டும் தந்திரத்திற்கு மயங்கிவிடாமல் தனது உள்ளத்தை உறுதியாக்கிக் கொண்டுவிடுமாயின், இந்தியா தங்களுடைய உதவிக்கு வராமலேயே லட்சக்கணக்கான தங்கள் மக்களை எப்படிப் பாதுகாத்துக்கொள்ளுவது என்பது அம்மக்களுக்கே தெரியும் என்பதில் சந்தேகமே இல்லை.

# காலனிகளில் இந்தியர் குடியேற்றம்

மகாத்மா காந்தி எழுதிய கீழ்க்கண்ட கட்டுரை 1917 செப்டம்பரில் 'இந்தியன் ரெவ்யூ' பத்திரிகையில் பிரசுரமாயிற்று:

சமீபத்தில் லண்டனில் நடந்த இலாகாக்காரர்களின் கூட்டு மகாநாட்டு அறிக்கையின்மீது 1-ஆந் தேதியன்று இந்திய அரசாங்கம் சிம்லாவிலிருந்து வெளியிட்டிருக்கும் தீர்மானத்தை நான் கவனமாகப் படித்தேன். சென்ற ஆண்டு வைசிராய் பேசிய போது, இந்த மகாநாட்டைப்பற்றியே அவர் குறிப்பிட்டார் என்பது ஞாபகத்தில் வைக்கவேண்டியதாகும். இந்த மகாநாட்டில் ஸர் ஜேம்ஸ் மெஸ்டனும் ஸர் எஸ்.பி. சின்ஹாவும் கலந்து கொண்டிருக்கவேண்டும். ஆனால், அம்மகாநாடு கூடிய தேதிக்கு முன்னாலேயே அவர்கள் இந்தியாவுக்குத் திரும்பிவிட்டதால் அவர்கள் அம்மகாநாட்டில் கலந்துகொள்ள முடியவில்லை என்பதையும் யாரும் மறந்துவிடக்கூடாது. இந்தக் கனவான்களில் சிலர், ஆங்கிலக் குடியேற்ற நாடுகளில் குடியேற்றத்தைக் குறித்து, இந்தியா மந்திரி, குடியேற்ற நாடுகள் மந்திரி ஆகியவர்களுடன் சாதாரணமாகப் பேச இருந்தனர் என்றும் இப்பொழுது நாம் விவாதிக்க எடுத்துக்கொண்டிருக்கும் அறிக்கை கூறுகிறது. லார்டு ஐலிங்டன், ஸர் ஸ்டீல் மெயிட்லண்டு, ஸ்ரீமான்கள் சேடன், கிரிண்டில், கரீன், மேனுப்டன் ஆகியவர்கள் அடங்கியதே அம் மகாநாடு. 'பிரிட்டிஷ் கயானா, டிரினிடாட், ஜமெய்க்கா, பிஜி ஆகிய நாடுகளுக்கு உதவிபெற்ற குடியேற்றத்திற்குப் பதிலாக புதிய முறை ஒன்றை யோசிப்பதற்காக இந்தக் கூட்டம் நடந்தது' என்று அறிக்கையின் வாசகம் கூறுகிறது. இந்த உதவிக் குடியேற்றம் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நேர் ஆட்சிக்குப்பட்ட நான்கு குடியேற்ற நாடுகளுக்கேயன்றி, தென்னாப்பிரிக்கா, கானடா, அல்லது ஆஸ்திரேலியா, அல்லது நேர் ஆட்சிக்குட்பட்ட மொரீஷஸ் ஆகியவைகளுக்கு அல்ல என்பதைப் பொதுமக்கள் கவனிக்கவேண்டும். பின்னால் கூறப்பட்டிருப்பவைகளிலிருந்து இந்த வித்தியாசத்தின் முக்கியத்துவம் நன்கு விளங்கும். "இந்திய அரசாங்கம் அறிக்கையைக் குறித்து இன்னும் ஆலோசனை செய்யவில்லை. அதில் கண்ட எல்லா விஷயங்களிலும் பின்னாலேயே முடிவு கூறப்படும்" என்று அறிக்கை கூறுவது நன்றி செலுத்தத் தக்கதாகும். இவ்விஷயம் அதிக முக்கிய

மானது. இது அநேகமாகச் சென்ற ஆண்டு இந்தியா முழுவதை யுமே அதிர்ச்சி அடையச் செய்திருக்கிறது. ஒரு வகையில் இல்லாவிடினும் இன்னுமொரு வகையில் 1895-ஆம் ஆண்டி லிருந்தே நாட்டிற்கு இது பெருங் கவலையாகவும் இருக் கிறது. ஆகையால் இந்திய அரசாங்கம் கூறியிருப்பது சரி யானதே.

'ஒப்பந்தக் கூலி முறையைத் திரும்பக்கொண்டு வருவதில்லை என்ற இந்திய அரசாங்கத்தின் கருத்துப்படி மன்னர் சர்க்கார் முடிவு செய்கிறது' என்று கூறப்பட்டிருப்பதும் வரவேற்கத் தக்க தாகும். 'காலனிகளில் இப்பொழுதுள்ள இந்தியரெல்லோரும் ஒப்பந்தக் கூலி முறையிலிருந்து விடுவிடுக்கப்பட்டாலன்றி எந்தக் காலனிக்கும் சுயேச்சையாகக் கூலிகள் போவது என்பதை அனு மதிக்க முடியாது' என்று கூறியிருப்பதும் வரவேற்கத் தக்கதே யாகும்.

இந்த அறிக்கையில் இவ்விதம் ஆனந்தப்படக்கூடிய அம்சங் கள் இருந்தபோதிலும், ஒப்பந்தக் கூலி முறைக்குப் பதிலான ஒரு முறையை வகுப்பதைப்பற்றிய முக்கியமான பகுதியைப் பொறுத்தவரை இந்த அறிக்கை ஏமாற்றத்தையே அளிக்கிறது என்ற முடிவுக்குத்தான் வரவேண்டியதாகிறது. திட்டத்திற்கு முக்காடிடப்பட்டிருக்கும் சொல்லலங்காரங்களையெல்லாம் நீக்கி விட்டுப் பார்த்தால், அதிக ஜீவகாருண்ய அடிப்படையில் அது இருக்கிறது. இதைப் பயன்படுத்திக்கொண்டு அங்கே போகிறவர் களுக்கு நன்மை பயக்கக்கூடிய சில நிபந்தனைகளும் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. எனினும், இத்திட்டமும் ஒப்பந்தக் கூலி முறையேயன்றி வேறன்று.

ஒரு முக்கியமான விஷயத்தை மனத்தில் வைக்கவேண்டும். அந்த மகாநாடு நடந்ததன் முக்கியமான நோக்கம், காலனிகளில் இருக்கும் முதலாளிகளின் நன்மையைக் கவனிப்பதற்கேயன்றி இந்தியத் தொழிலாளரின் நன்மையைக் கவனிப்பதற்காக அல்ல. ஆகையால், புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் முறை, சம்பந் தப்பட்ட காலனிகளுக்கு உதவி செய்வதற்கேயாகும். எப்படி யும் இப்பொழுதிருக்கும் நிலையில், நாட்டிற்கு வெளியில் போய் குடியேறியாகவேண்டிய போக்கிடம் தேவையில்லை. இருந் தாலும், இந்தியர் போய்க் குடியேறுவதற்கு அந்த நான்கு காலனிகள் ஏற்ற இடங்களா என்பதும் தர்க்கத்திற்குரியன வாகும். ஆகையால், இந்தியரின் நன்மையைப் பற்றிய வரை யில் சரியான காரியம், இந்தியா உதவி செய்து, இந்தியர்

யாரையும் தொழிலாளராக வெளிநாடுகளுக்கு அனுப்பாமல் இருப்பதேயாகும். அவ்விதம் உதவி செய்து அனுப்பாவிட்டால், வெளிநாடுகளுக்குச் செல்ல முற்படுகிறவர்கள் தங்கள் சொந்தப் பொறுப்பிலும், சொந்தச் செலவிலும் போகவேண்டியிருக்கும். அப்பொழுது, வெகு தூரத்திலுள்ள நாடுகளுக்குத் தாமே தொழிலாளர் செல்வதென்பது அதிகக் குறைவாகவே இருக்கும் என்பது முந்திய அனுபவம். அறிக்கையில் கூறப்படும் உதவி யுடன் வெளிநாடுகளுக்கு அனுப்புவது என்பதன் பொருள், சாதாரணமாகச் சொல்லுவதானல், உற்சாகமூட்டி அனுப்புவது என்பதே. இந்தியக் கைத்தொழில்களுக்கு ஆட்கள் கிடைப்ப தில்லை என்றிருக்கும்போது, இந்தியாவின் நியாயமான வசதிகளை அபிவிருத்தி செய்யாத நிலைமையில், நாட்டிலேயே இருந்துவிடக் கூடிய இந்தியரை உற்சாகப்படுத்தி வெளிநாடுகளுக்குப் போகச் செய்வதென்பது பைத்தியக்காரத்தனமாகும். பர்மாவுக்கோ அல்லது இலங்கைக்கோ செல்லும் இந்தியர், கெடுதலாகப் பயன் படுத்தப்பட்டுவிடுவதைத் தடுக்க அரசாங்கத்தினுலோ அல்லது தனிப்பட்ட ஸ்தாபனங்களினுலோ முடியாமலிருக்கும் நிலையில், இன்னும் அதிக தூரத்தில் இருக்கும் பிஜிக்கும் மற்ற மூன்று காலனிகளுக்கும் போகிறவர்களுக்குப் பாதுகாப்பு அளித்துவிட முடியாது. ஆகவே, எந்தக் காலனியாக இருந்தாலும் இந்தியத் தொழிலாளரை அனுப்புவதென்பதே வேண்டாம் என்பதை வற்புறுத்துவதில் இந்தியத் தலைவர்கள் உறுதியுடனிருப்பார்கள் என நம்புகிறேன். நாமும் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இருக்கும்போது, நம் பங்காளிகளின் தேவைகளைக் கவனிக்க நாமும் கடமைப்பட்டிருக்கிறோம் என்று விவாதிக்கப்படலாம். ஆனல், இந்தியாவில் கிடைக்கும் தொழிலாளரெல்லோரும் இந்தியாவுக்கே தேவையாய் இருக்கும்போது இப்படிக் கூறு வது கொஞ்சமும் நியாயமாகாது. ஆகையால், காலனிகளுக்கு இந்தியா உதவி செய்யவில்லையென்றுல், இதற்குக் காரணம் உதவி செய்யக்கூடாது என்பதல்ல; அதற்கு வேண்டிய சக்தி இந்தியாவுக்கு இல்லாததே. ஒரு ராஜீயவாதி சொல்லக்கூடிய மற்றொரு நியாயமான காரணமும் உண்டு. காலனிகளைப்போல இந்தியாவும் சமத்துவமான பங்காளி என்ற அந்தஸ்தை அடை யாமலிருக்கும் வரையில், ஆங்கிலேயராலும், இந்தியாவுக்கு அருகாமையிலேயே இருக்கும் ஆங்கிலேய முதலாளிகளாலும், வெறுங் கூலிகளாக இருப்பதற்கே இந்தியாவின் மக்கள் தகுதி யானவர்கள் என்று கருதப்பட்டுவரும் வரையில், காலனிகளுக்கு இந்தியரைக் கொண்டுபோவதற்கான திட்டம் எதுவும் யோக்கிய

மான வகையில் இந்தியாவுக்குச் சாதகமாகவே இருக்க முடியாது. தாழ்ந்தவர்கள் என்ற சின்னத்தை இந்தியர் என்றும் அணிந்து கொண்டிருக்க வேண்டுமென்ருல், முழு அந்தஸ்தையும் அவர்கள் அடைந்துவிடவே முடியாது; இதனுல் எந்தச் சுகத்தையும் அவர்கள் பெறவும் இயலாது. ஆகையால் வெளிநாடுகளுக்குப் போவது என்பதற்கு இடமில்லே.

புதிய முறைதான் என்ன என்பதையும் சிறிது கவனிப்போம்: ‘இனி அனுசரிக்க வேண்டிய புதிய முறை, உதவியுடன் வெளிநாடுகளில் குடியேறச் செய்வது. சில காலனிகளில், அந்தக் காலனிகளில் குறிப்பிட்ட காலம் இவர்கள் வேலே செய்து, அங்கிருக்கும் வாழ்க்கைக்கும் வேலேக்கும் ஏற்றபடி இவர்களேப் பழக்கி, காலனியில் குடியேறியிருப்பவர்களின் நன்மைக்கு அத்தியாவசியமான தொழிலாளர் கிடைப்பதற்காக இந்தியர் அங்கே குடியேறும்படி தூண்டுவது இம்முறையின் நோக்கம்’ என்று கூறப்படுகிறது. ஆகையால், நிரந்தரமாகக் குடியேற்றப்படுவதற்கு முன்னுல் ஒப்பந்தத்தின் பேரில் நிபந்தனேகள் இருக்கும் என்று ஏற்படுகிறது. இந்த ஒப்பந்தம், ஒப்பந்தக்கூலி முறையிலிருக்கும் ஒப்பந்தத்தைப் போலவே கட்டுப்படுத்துவதாயிருக்கும் என்பது நாம் பின்னுல் கவனிக்கப் போவதிலிருந்து நன்கு தெரியும். அறிக்கையில் கீழ்க்கண்ட வேடிக்கையான வாசகமும் இருக்கிறது: ‘தொழிலாளியின் சொந்தப் பாதுகாப்புக்காக முதல் ஆறு மாதங்களுக்கு ஒரு குறிப்பிட்ட முதலாளியிடம் இருக்க வேண்டும் என்று தேர்ந்தெடுக்கப்படுவதைத் தவிர, இன்ன முதலாளியிடமே வேலே செய்ய வேண்டும் என்ற கட்டுத்திட்டம் எதுவும் அத்தொழிலாளிக்கு இல்லே.’ பழைய ஒப்பந்த முறையின் வாசனேயே இதிலும் இருக்கிறது. அதைப் பற்றிக் கூறப்பட்ட ஒரு முக்கியமான தீமை, இன்ன முதலாளியிடந்தான் வேலே செய்ய வேண்டும் என்ற கட்டாயம் அதில் இருந்ததே யாகும். தனக்குப் பிடித்தமான முதலாளியிடம் வேலேக்குப் போக முடியாது. புதிய முறையிலோ, தொழிலாளியின் பாதுகாப்புக்காக இன்ன முதலாளி என்று தேர்ந்தெடுக்கப்படுகிறது! தொழிலாளியாக இருக்கப் போகிறவர், தமக்காகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் பாதுகாப்பை என்றும் உணரவே முடியாது என்பதை நான் கூறத் தேவையில்லே. மேலும், ‘தொழிலாளி, முதல் மூன்று ஆண்டுகள் விவசாயத் தொழிலில் வேலே செய்தால், பின்னுல் குடியேறி

யவர் என்ற முறையில் ஏராளமான, முக்கியமான நன்மைகளை அடையலாம் என்று அறிவித்து அவ்விதமே வேலை செய்யும் படி தூண்டப்படுவார்' என்று கூறப்படுகிறது. ஒப்பந்தக் கூலியாகும்படி செய்வதற்கு இது மற்றொரு தூண்டுதல். இத்தகைய திட்டங்களைப் பற்றியெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். ஆகையால், அரசாங்கத்திற்கும் பொது மக்களுக்கும் நான் ஒன்று நிச்சயமாகச் சொல்ல முடியும்: தூண்டுவது என்று சொல்லப்படுவதெல்லாம், தந்திரம் மிக்க முதலாளிகள் கையில், ஒரு பாவமும் அறியாத அப்பாவியான இந்தியத் தொழிலாளரைக் கட்டாயப்படுத்தும் முறையாகுமேயல்லாது வேறன்று. ஒப்பந்தத்தை மீறிய குற்றங்களுக்குள்ள தண்டனைகளையெல்லாம் நீக்கியிருக்கிறார்கள் என்பதை, இத்திட்டத்தைத் தயாரித்தவர்களை முன்னிட்டு நான் குறிப்பிட வேண்டியதாகிறது. இத்திட்டம் இந்தியாவிலேயே அனுசரிக்கப்படுமானால், பயத்தை மூட்டும் டிப்போக்கள், குடியேற்ற ஏஜெண்டுகள் முதலியவை, அதிக கௌரவமான அடிப்படையில் திரும்பவும் கொண்டு வரப்படும் என்றும் வாக்குறுதி அளிக்கப் படுகிறது. என்றாலும், சொல்லி முடியாத விஷமங்களுக்கெல்லாம் இடம் அளிக்கும் பழைய முறையாகவே அது இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

அறிக்கையின் மற்றப் பகுதிகளில் மக்களுக்கு அவ்வளவாகச் சிரத்தை இருப்பதற்கில்லை. ஆனால், அதையும் கவனிக்க விரும்புகிறவர்கள், என்னைப் போன்று ஒரே ஒரு முடிவுக்குத்தான் வர முடியும் என்பது நிச்சயம். அதாவது, மத்தியில் உள்ளே புகுந்து விட்ட பல ஊழல்களையெல்லாம் நீக்கப் புதிய முறையை வகுத்தவர்கள் தங்களால் ஆன வரையில் முயற்சி செய்திருக்கிறார்கள்; ஆனால், இந்திய மக்கள் ஒப்புக்கொள்ளக் கூடிய முறையை வகுப்பதில் அவர்கள் வெற்றி பெறவில்லை என்ற முடிவுக்கே வரமுடியும். அது முடியாத காரியம் என்றே கூறுவேன். தாற்காலிக அடிமைகளாக வைப்பது ஒப்பந்தக்கூலி முறை. அதைத் திருத்துவது என்பது சாத்தியமன்று. அதை ஒழித்துத்தான் ஆக வேண்டும். எந்த உருவிலோ அல்லது முறையிலோ அதைப் புதுப்பிப்பது என்பதற்கு இந்தியா என்றுமே சம்மதிக்காது என நம்புகிறேன்.

# ஒப்பந்தக்கூலி முறையின் தீமைகள்

[ஒப்பந்தக் கூலிமுறையின் கொடுமைகளைத் தென்னுப்பிரிக்காவில் அனுபவத்தில் கண்டறிந்த மகாத்மா காந்தி, அந்த முறையை அடியோடு ஒழிப்பதற்காக இந்தியா வந்த பிறகு அரும்பாடுபட்டார். இம்முறையின் தீமைகளைக் குறித்து நாடெங்கும் சுற்றிப் பிரசாரம் செய்தார். பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் பல எழுதினர். பம்பாயில் 1917 அக்டோபர் 30-ஆம் தேதி பம்பாய் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் ஆதரவில் ஒரு பொதுக்கூட்டம் எம்பயர் தியேட்டரில் நடந்தது. ஸர் இப்ராஹீம் ரஹீம்துல்லா அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். அதில் மகாத்மா காந்தி பேசிய விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

மகாத்மா காந்தி பேசியதாவது:

ஒப்பந்தக் கூலிகளைப்பற்றிய விஷயம் இப்பொழுது மிகவும் முக்கியமானது. ஏனெனில், இந்தியாவின் உண்மையான, சிறந்த நண்பர்களான ஸ்ரீமான்கள் ஆண்ட்ரூஸும், பியர்ஸனும், பிஜியில் இப்பொழுது இதைப்பற்றி விசாரணை நடத்தி வருகின்றனர். தற்சமயம் பிஜித் தீவுகளில்தான் இந்திய ஒப்பந்தக் கூலிகள் அதிகமாக இருந்து வருகின்றனர். இப்பிரச்னையில் இந்தியருக்குச் சிரத்தை ஏற்படும்படி முதன்முதலில் செய்தவர்கள் ஸ்ரீமான்கள் ஆண்ட்ரூஸும், பியர்ஸனுமல்ல. இப்பிரச்னையில் நமக்குள்ள கடமையைக் குறித்து இந்தியர் உணரும்படி முதன் முதலில் செய்தவர் காலஞ்சென்ற ராஜதந்திரி ஸ்ரீ கோகலேயே ஆவார். ஒப்பந்தக் கூலி முறையை ரத்து செய்துவிடவேண்டும் என்ற தீர்மானத்தை ஸ்ரீ கோகலே கவுன்சிலில் கொண்டுவந்தார். அதில் இருந்த உத்தியோகஸ்தர்கள் அல்லாதவர்கள் யாவரும் அம்முறையை ஒழிப்பதை ஆதரித்தும், பெரும்பான்மை வோட்டுகளால் அது தோல்வியடைந்தது. ஒரு நல்ல, அனுதாபமுள்ள வைசிராய், இந்த மோசமான ஒப்பந்தக்கூலி முறையை இந்தியச் சட்டப் புத்தகத்திலிருந்து நீக்கிவிட எவ்வளவு விரும்பியும், ஒரு பெரிய கஷ்டம் அதற்கு இடையூருக இருந்தது. லார்டு ஹார்டிஞ்சினுல் அனுப்பப்பட்ட இரு கமிஷனர்களாக ஸ்ரீ மாக்னீல், சிமன்லால் ஆகியவர்களின் அறிக்கையைக் கொண்ட இரு பெரிய புத்தகங்களே அந்த இடையூறு. அந்தப் புத்தகங்களின் சுவையற்ற பக்கங்களைப் புரட்டிப் படிக்கும் சிரத்தை எல்லோருக்கும் இராது. ஆனுல், ஒப்பந்தக்கூலி முறை என்பது இன்னது என்பதை அறிந்த எனக்கு அவை மிக முக்கியமானவையாகத்

தோன்றுகின்றன. சில நிபந்தனைகள் மாத்திரம் நிறைவேற்றப் படுமானால், ஒப்பந்தக்கூலி முறை இப்பொழுது இருக்கிறபடியே தொடர்ந்து இருந்துவரலாம் என்று அந்த அறிக்கை ஒப்புக் கொள்ளுகிறது என்று எல்லோரும் நம்பலாம். ஆனால், அந்த நிபந்தனைகளோ, நிறைவேற்றவே முடியாதவை. ஜமைகாவிலும் கயானாவிலும் மற்றக் காலனிகளிலும் இப்பொழுது இருந்துவரும் ஒப்பந்தக் கூலிமுறை, அவசியமாகும் காலத்திற்கு அதிகமாக ஒரு நிமிடங்கூடத் தொடர்ந்து இருந்து வரவேண்டுமென்று அவர்கள் விரும்பவில்லை என்றே இப்பெரிய இரு கமிஷனர்களின் அறிக்கை காட்டுகிறது. இதற்கு முன்னாலும் ஒரு கமிஷன் அனுப்பப்பட்டது. ஸ்ரீமான்கள் மாக்னீலும் சிமன்லாலும் என்ன ஏற்பாடுகளைக் கூறியிருக்கின்றனரோ அதையே எல்லோரும் கூறியிருக்கின்றனர். இவர்களுடைய அறிக்கையில் புதிதானது எதுவும் இல்லை. ஆனால், நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் இங்கிலாந்திலுள்ள ஒரு தரும ஸ்தாபனத்தின் சார்பாக இதைப் பற்றி உத்தியோகப் பற்றில்லாத முறையில் பரிசீலனை நடந்திருக்கிறது. இதன் மூலம் பிரசுரமான புத்தகத்தில் வேறு எதுவுமின்றி அங்குள்ள துன்பக் கதை அப்படியே சொல்லப்பட்டிருக்கிறது. இம்முறையினால் ஏற்படும் துன்பங்கள் யாவும் அப்படியே அதில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

இது சம்பந்தமாக நேட்டால் பிரதம மந்திரி கூறியதைக் குறிப்பிட விரும்புகிறேன். "ஒப்பந்தக் கூலி முறை கொஞ்சமும் விரும்பத் தக்கதன்று. அது எவ்வளவு சீக்கிரம் ரத்து செய்யப்படுகிறதோ அவ்வளவும் ஒப்பந்தக் கூலிகளுக்கும் முதலாளிகளுக்கும் நல்லது" என்று அவர் கூறியிருக்கிறார். தென்னாப்பிரிக்காவில் ஹை கமிஷனராக இருந்தபோது லார்டு செல்போர்னும் இதையேதான் கூறினார். இம்முறை கிட்டத்தட்ட அடிமை முறையாகவே இருப்பதால், தொழிலாளரைவிட முதலாளிகளுக்கே இது தீமையானது என்றும் அவர் சொன்னார். ஸர் வில்லியம் ஹண்டர், தாமே இம்முறையைப்பற்றி நேரில் பரிசீலனை செய்ய வந்தபோது 1895-இல் இதைப்பற்றித் தொடர்ந்து அழகான கடிதங்கள் பல எழுதினார். நன்றாக இதைப் பற்றிக் கவனித்த பிறகு, கிட்டத்தட்ட அடிமை முறைக்குக் கொண்டுவிடும் முறையே ஒப்பந்தக் கூலி முறை என்று ஒப்பிட்டார். இப்படியெல்லாம் கூறுவதில் நான் தவறு செய்கிறேனென்றால், லார்டு செல்போர்னுடன் சேர்ந்தே இப்படி தவறு செய்கிறேன். இந்த ஒரு முறையைக்

குறித்துத்தான், அந்த இரு கனவான்களான கமிஷனர்கள், நிறைவேற்றி வைக்கப்படவே முடியாத சில நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டும் என்று தங்கள் அறிக்கையில் ஆலோசனை கூற முற்பட்டிருக்கிறார்கள். கொண்டு போகப்படுபவரில் தகுதியில்லாதவர்களை நீக்கிவிடவேண்டும்; இத்தனை ஆண்டுகளுக்கு இத்தனை பெண்களை அனுமதிப்பது என்றிருக்கும் விகிதாசாரத்தை 40-இலிருந்து 50-க்கு உயர்த்தவேண்டும் என்பவையே நிபந்தனைகள். வெளிநாடுகளுக்குக் கொண்டுபோகப் படுபவர்களில் தகுதி இல்லாதவர்களை நீக்கிவிட வேண்டும் என்று அவர்கள் கூறுவதன் பொருள் என்ன என்பது எனக்கு விளங்கவில்லை. இந்தியாவில் தொழிலாளர் கிடைப்பது சுலபமல்ல என்று இக்கமிஷனர்களே அவர்களிடம் சொல்லியிருக்கிறார்கள். தன்னுடைய குழந்தைகளை வெளிநாடுகளுக்கு அரை அடிமைகளாக அனுப்ப இந்தியா தவித்துக்கொண்டிருக்கவில்லை. இந்தியாவில் அதிகப்படியாக இருக்கும் மக்கள், இந்தியாவில் இருக்கும் பொருளாதார நிலைமையில் அதிருப்தி கொண்டு வெளிநாடுகளுக்குப் போகிறார்கள் என்று லார்டு சாண்டர்ஸன் கூறினார். ஆனால், 1907-இல் ஆள் சேர்க்க 500 பேருக்கு லைசென்சுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்பது நினைவு இருக்கட்டும். இப்படி ஆள் சேர்ப்பவர்கள் 17 தொழிலாளருக்கு ஒருவர் வீதம் இருப்பதிலுள்ள முக்கியத்துவத்தை நீங்கள் அறிகிறீர்களா? ஒப்பந்தக் கூலிகளைத் திரட்டுவதற்காகக் காலனி அரசாங்கங்களின் உள் ஏஜண்டுகள் இந்தியாவில் இருக்கின்றனர். சேர்க்கும் ஒவ்வொரு கூலிக்கும் ரூ. 25 வீதம் இவர்களுக்குக் கொடுக்கிறார்கள். இந்த இருபத்தைந்து ரூபாயை ஆள் சேர்ப்பவரும் உள் ஏஜண்டும் பங்கிட்டுக் கொள்ளுகின்றனர். ஆள் சேர்க்கிறவர்கள், தங்கள் நாட்டு மக்களில் பலரை அரை அடிமைகளாக அனுப்புவதால் அவர்களுடைய மன நிலைமை மோசமாகவே இருக்க வேண்டும். இந்தக் கங்காணிகள் என்ன செய்கிறார்கள் என்பதைப் பார்த்திருக்கிறேன். இவர்கள் கூறும் அநேக புளுகுகளையும் படித்திருக்கிறேன். ஆகையால், நம் நாட்டு மக்களில் பல்லாயிரக்கணக்கானவர்கள் ஒப்பந்தக் கூலிகளாகிவிட்டதில் எனக்கு ஆச்சரியமே இல்லை.

தோட்டங்களில் இருந்துவரும் ஒழுக்கக் கேடான நிலைமைகளைக் குறித்துக் கமிஷனர்கள் பல பக்கங்கள் எழுதியிருக்கிறார்கள். அறுபது ஆண்களுக்கு நாற்பது பெண்கள் இருக்கிறார்கள் என்பதல்ல; இந்த ஆண்கள் இப்பெண்களை மணம் செய்து

கொள்ளுவதில்லை; வைப்பாட்டியாகவே வைத்துக்கொள்ளுகிறார்கள். இப்பெண்களில் அநேகர் விபசாரிகள் என்று சொல்லப்படுகிறது. நான் யோக்கியனாக இருந்தால், இந்த ஒப்பந்த முறையின் கீழ் என் குழந்தைகளை நாட்டைவிட்டு வெளியே அனுப்ப ஒருகாலும் ஒப்பேன். ஆனால், ஆயிரமாயிரம் ஆண்களும் பெண்களும் போயிருக்கிறார்கள். அதைப்பற்றி இந்தியாவில் இருப்போர் என்ன நினைக்கின்றனர்?

அவசரச் சட்டங்களில் இருக்கும் கடுமையான விதிகள் நீக்கப்படவேண்டும் அல்லது முதலாளிகளைத் தொழிலாளர் பாதுகாவலர் கட்டுத்திட்டங்களுக்கு உட்படுத்த வேண்டும் என்பவை நிபந்தனைகள். இத்தொழிலாளரைப் பாதுகாப்பதற்கென்று செய்யப்பட்டிருக்கும் சட்டதிட்டங்களில் எத்தனையோ குறைபாடுகளும் ஓட்டை (புரை)களும் இருக்கின்றன. ஆகையால் எதை வேண்டுமானாலும் செய்துவிட முடியும். முதலாளியையோ எல்லாவற்றிற்கும் முதன்மையாக வைப்பது விதிகளின் முக்கியமான நோக்கம். தொழிலாளருக்காக அல்லாமல் முதலாளிக்கு என்றே போலித்தனமாகச் செய்துவைக்கப்பட்டிருக்கும் விதிகள், தொழிலாளருக்கு எதிராக முதலாளிகளுக்குச் சாதகமாகின்றன.

வெளிநாடு செல்லுவோரின் 'பாதுகாவலர்கள்' என்று இருக்கும் அதிகாரிகளின் போக்கும் மிக மோசமானது. முதலாளிகள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்களோ அதே இனத்தினரே இந்த அதிகாரிகளும். இவர்கள் பழகுவதெல்லாம் முதலாளிகளுடனேயே. ஆகையால், இவர்களுடைய ஆதரவெல்லாம் முதலாளிகளின் பக்கமே இருப்பது இயற்கையல்லவா? அப்படி இருக்கையில், முதலாளிகளின் நன்மைக்கு விரோதமாகத் தொழிலாளருக்கு இவர்கள் எப்படி நியாயத்தைச் செய்வார்கள்? ஒப்பந்தக் கூலிகளுக்குச் சாதகமாக மாஜிஸ்டிரேட்டுகள் தீர்ப்புக் கூறிய சில சம்பவங்கள் எனக்குத் தெரியும். ஆனால், இதே நீதியைத் தொழிலாளரின் 'பாதுகாப்பாளர்கள்' என்போரிடமிருந்து எதிர்பார்ப்பது முடியாத காரியம். முதலாளிகளின் இஷ்டத்திற்குத் தொழிலாளர்கள் கையும்காலும் கட்டுண்டவர்களாகக் கிடக்கின்றனர். ஒரு தொழிலாளி முதலாளிக்கு விரோதமாக ஏதாவது தவறு செய்துவிட்டால் முதலில் அதற்காகச் சிறைத் தண்டனையை அனுபவிக்க வேண்டும். பிறகு அவன் எத்தனை நாட்கள் சிறையில் இருக்கிறானோ அத்தனை நாட்கள் அதிகமாக ஒப்பந்தக் கூலியாக இருந்தாகவும் வேண்டும். சிறையிலிருந்து

வந்ததும் திரும்ப வேலை செய்ய அதே எஜமானனிடம் கொண்டு போகின்றனர். இந்த விதிகளையெல்லாம் பற்றிக் கமிஷனர்கள் எதையுமே சொல்லக் காணோம். தொழிலாளர்களின் 'பாதுகாப் பாள'ராயிருக்கும் ஓர் அதிகாரி, தவறான தீர்ப்பைக் கூறிவிட் டால், அதைக் கேட்க யாருமே இல்லை. ஆனால், ஒரு மாஜிஸ்டிரேட் விஷயத்திலோ, அவர் தவறான தீர்ப்புக் கூறிவிட்டால் கண்டிக்க லாம். மேலும் இக்கைதிகளைத் தனிச் சிறைகளில் வைக்கவேண் டும் என்று கமிஷனர்கள் சொல்லுகிறார்கள். சிறைப்படுத்தப்படும் நூற்றுக்கணக்கான கைதிகளுக்குச் சிறைகளைக் கட்டுவதானால் காலனி அரசாங்கம் ஓட்டாண்டியாகிவிடும். சாத்விகச் சட்ட மறுப்பாளருக்குச் சிறைகளைக் கட்டவே அரசாங்கத்தினால் முடிய வில்லை. உத்தரவாதமான தொகையைக் கொடுத்துத் தங்களைக் கூலி ஒப்பந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்ளத் தொழிலாளரை அனுமதிக்க வேண்டும் என்று கமிஷனர்கள் கூறுகிறார்கள். தொழிலாளி சுயேச்சையானவன் என்று கமிஷனர்கள் நினைப் பதே தவறு. ஏமாற்றித் தந்திரமாகக் கொண்டுவரப்பட்டு விடும் ஆங்கிலப் பெண்களைப் பற்றி எனக்குத் தெரியும். இவர் கள் நன்றாகப் படித்தவர்கள்; ஒப்பந்தப்படி வந்தவர் களுமல்ல. என்றாலும், விடுபட்டுவிட அவர்களாலேயே முடிவ தில்லை. அப்படியிருக்க ஒப்பந்தக் கூலி மாத்திரம் எப்படி விடு பட்டுவிட முடியும்? ஒப்பந்தப்படி வரும் கூலியை ஒரு சிப்பாய்க்கு ஒப்பிட்டார் ஸ்ரீ பால்போர். சிப்பாய், பொறுப்பு வாய்ந்தவன்; உயர் பதவியையும் அடையலாம். ஆனால், ஒப்பந்தக் கூலியோ என்றும் தொழிலாளியே. அவனுக்கு எந்த உரிமைகளும் இல்லை. அவனுக்கு இருக்கும் கஷ்டங்கள்தாம் அவன் மனைவிக்கும் மகனுக்கும். நேட்டாலில் இவர்கள் வெறுப்போடு அவமதிக்கப் படுகின்றனர். ஒப்பந்தக் கூலியான ஓர் இந்தியன், தொழி லாளிக்கு மேற்பட்ட நிலையை அடையவே முடியாது. அத்தொழி லாளி இந்தியாவுக்குத் திரும்பும்போது என்ன கொண்டு வரு கிறான்? மனம், உடல் எல்லாம் சிதைந்து போய்த் திரும்புகிறான். நாகரிகத்தின் போலிச் சாயல்கள் சில அவனிடம் காணப்படு கின்றன. ஆனால், இவற்றைவிட மிக உயர்வான பலவற்றை அங் கேயே இழந்துவிட்டுத் திரும்புகிறான். சில பவுன்களையும் அவன் கொண்டு வரக்கூடும். ஒப்பந்தக் கூலி முறை இப்படிப்பட்டவர் களுடைய தேசீய சுயமரியாதையை அடியோடு அபகரித்துவிடுவ தால், வெறுக்கத்தக்க இந்த முறை தொடர்ந்து இருந்துவருவது என்பதற்கு உடன்பட நாம் மறுத்துவிடவேண்டும்.

நான் இதுவரை கூறியவைகளை ஆழ்ந்து சிந்திப்பீர்களானல், நீங்கள் பாடுபட்டு இம்முறையை ஓர் ஆண்டில் ஒழித்துவிடுவீர்கள். அப்படிச் செய்தால், நாட்டிற்குள்ள ஒரு தீமை தொலைந்த தாகும்; ஒப்பந்தக் கூலி முறை என்பது பழமையில் நடந்த ஒரு கதை ஆகிவிடும். காலனிகளில் இந்தியர் அக்கிரமமாக நடத்தப் படுவதற்குள்ள காரணத்தையே நீக்கிவிடவேண்டும் என்று நான் விரும்புகிறேன். இம்முறை எவ்வளவுதான் பாதுகாப்புக்களுடன் கூடியதாக இருந்தாலும், ஏறக்குறைய அடிமை முறைக்கு ஒத்த தாகவே இருந்து வருகிறது. அசல் அடிமை முறையின் அடிப் படையில்தான் இது இருந்து வரும். ஆகவே, இது தேசீய வளர்ச்சிக்கும் தேசீய கௌரவத்திற்கும் ஓர் இடையூறு.

# ஏகாதிபத்திய மகாநாடு தீர்மானங்கள்

[வெளிநாடுகளில் குடியேறியிருக்கும் இந்தியர்களைப் பற்றி ஏகாதிபத்திய மகாநாடு சில தீர்மானங்களைச் செய்தது. மகாத்மா காந்தி அவற்றை எதிர்த்துப் பேசினர்; கட்டுரைகள் எழுதினர். 'இந்தியன் ரெவ்யூ' 1918 ஆகஸ்டு வெளியீட்டில் காந்திஜி எழுதியது கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

மகாத்மா காந்தி எழுதியதாவது:

காலனிகளுக்குப் போய்க் குடியேறும் நம் நாட்டினரின் அந்தஸ்தைக் குறித்து ஏகாதிபத்திய மகாநாடு செய்திருக்கும் தீர்மானங்கள், மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் நன்ருயிருப் பவையாகவே தோன்றுகின்றன. ஆனல், அவை முற்றிலும் ஏமாற்றக்கூடியவைகளாகும். காலனிகளில் நமக்கு எதிராகச் செய்யப்படும் சட்டங்களைப் போலவே அக்காலனிக்காரர்மீது நாமும் சட்டம் செய்யலாம் என்பது நாம் அடைந்துவிட்ட பெரிய காரியம் என்று நாம் எண்ண வேண்டியதில்லை. பூதம் போல் இருக்கும் ஒருவன், சித்திரக்குள்ளனைப் பார்த்து, "அடிக்கு அடி திருப்பி யடிக்கும் உரிமை உனக்கும் இருக்கிறது" என்று சொல்லுவதைப் போன்றதே இது. இந்தியாவுக்கு வர விரும்பும் காலனிக்காரருக்கு அனுமதியையும் பிரயாணச் சீட்டை யும் மறுப்பது யார்? ஆனல், இந்தியருக்கோ அவர்களுடைய தகுதி என்னதான் இருந்தாலும், தாற்காலிகமாகக் கொஞ்ச காலத்திற்குக்கூடக் காலனிகளுக்குப் போக அனுமதி அடிக்கடி மறுக்கப்படுகிறது. சாத்விகச் சட்ட மறுப்பு இயக்கம், தென் னுப்பிரிக்கக் குடியேற்றச் சட்டத்திலிருந்த நிறவேற்றுமைத் தீமையைப் போக்கிவிட்டது ஆனல், அரசாங்க நிர்வாகக் கொள் கைகள் இன்னும் அப்படியே இருந்துகொண்டிருக்கின்றன. இந்தி யர், பெயரில் மாத்திரமன்றி உண்மையாகவும் பிறருக்கு அடிமை யாக இருந்துவரும் வரையில் அவ்விதமே இருந்தும் வரும்.

ஏற்கனவே குடியேறிவிட்டவர்களின் சம்பந்தமாக 1914-இல் ஏற்பட்ட முறைகளையே, இப்பொழுது செய்யப்பட்டிருக்கும் தீர்மானங்கள் அநேகமாகத் திரும்பக் கூறுகின்றன. இவை கானடாவுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும் பொருந்துவதானல் நிச்சயமாக அது லாபந்தான். ஏனெனில், கானடாவில் குடியேறி யிருக்கும் சீக்கியர்களின் மனைவிகளையும் குழந்தைகளையும் அனு

மதிக்க அந்தச் சர்க்கார் மறுத்து வந்ததனால் சமீப காலம் வரையில் பலத்த கிளர்ச்சிகள் இருந்து வந்தன. தென்னாப்பிரிக்காவுடன் வந்துள்ள சமரசத்தின்படி, இன்னும் ஒன்றையும் நான் கூறவேண்டும். இந்தச் சமரசத்திற்கு முன்னால் யாருக்காவது இரண்டு மனைவிகள் இருந்து, அப்படிப்பட்ட மனைவிமார் தென்னாப்பிரிக்காவுக்கு எப்பொழுதாவது வந்திருந்தால் அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கிறது. கிறிஸ்தவர்களையே அதிகமாகக் கொண்ட நாட்டில், ஒருவருக்கு ஒரே மனைவிதான் இருக்கவேண்டுமென்ற சட்டத்தை அனுசரிப்பது ஒருவேளை சரியாக இருக்கலாம். ஆனால், அந்த நாட்டுக்குக்கூட, காருண்யத்தை முன்னிட்டும், அந்நாடு நிர்வாக விஷயத்தில் எந்தச் சாம்ராஜ்ய பெடரேஷனில் இருக்கிறதோ அதன் மற்ற உறுப்பினரின் நட்பை உத்தேசித்தும், ஒருவருக்கு இருக்கும் இரண்டு மனைவிகளையும் அவர்களுடைய குழந்தைகளையும் அனுமதிப்பது அவசியமாகும்.

மற்றக் காரியங்களில் சமத்துவமான அந்தஸ்து இல்லாமல் இருப்பதைக் குறித்து எதுவும் கூறாமல் ஒப்பந்தம் மழுப்புகிறது. தென்னாப்பிரிக்கா முழுவதிலுமே இந்தியர் லைசென்சுகளை வாங்குவது முடியாததாக இருந்துவருகிறது. டிரான்ஸ்வாலிலும், பிரீ ஸ்டேட்டிலும் இந்தியர் சொந்தமாக நிலம் வைத்துக்கொள்ளக் கூடாது என்று தடை இருக்கிறது. யூனியனுக்குள்ளேயே பிரீ ஸ்டேட்டுக்குள் வரக்கூடாது என்று இந்தியர் தடுக்கப்படுகின்றனர். சாதாரண அரசாங்கப் பள்ளிக்கூடங்களிலும் இந்தியக் குழந்தைகளுக்குத் தடை இருக்கிறது. டிரான்ஸ்வாலிலும் பிரீ ஸ்டேட்டிலும் இந்தியருக்குள்ள முனிசிபல் வாக்குரிமையும் பறிக்கப்பட்டுவிட்டது. கேப் தவிரத் தென்னாப்பிரிக்கா முழுமைக்குமே வாக்குரிமையை ரத்து செய்துவிட்டனர். ஆகையால், ஏகாதிபத்திய மகாநாட்டுத் தீர்மானங்கள் நிச்சயமாகக் கண் துடைக்கும் காரியமே. காலனிகளிடம் எந்தவித மனமாற்றமும் இல்லை. இந்தியா சம்பந்தமாகச் சாம்ராஜ்யக் கடமைகளை மதிப்பது என்பதும் இல்லை. ஸ்ரீ ஆண்ட்ரூஸ் எடுத்துக் காட்டியிருக்கும் பிஜி அட்டூழியங்களைப் பார்த்தால், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நேர் நிர்வாகத்தில் இருக்கும் காலனிகளிலும் இதேபோல் நடப்பது சாத்தியம் என்பது புலனாகிறது.

# மகாத்மாவின் சிறை அனுபவங்கள்

## 1

[மகாத்மா காந்திக்கு முதன்முதலில் சிறை அனுபவம் ஏற்பட்டது தென்னுப்பிரிக்காவில்தான். அங்கே சிறையில் தாம் கண்ட அனுபவங்களை அவர் குஜராத்தியில் எழுதினர். பின்னர் அக்கட்டுரைகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுக் கல்கத்தா 'மாடர்ன் ரெவ்யூ' சஞ்சிகையில் பிரசுர மாயின. அதன் விவரமே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

கைதிகளைப் பரிசோதிப்பதற்கென்று பல இன்ஸ்பெக்டர்கள் வருவார்கள். அப்பொழுது எல்லாக் கைதிகளும் வரிசையாக நிற்கவேண்டும். அந்த இன்ஸ்பெக்டர்களை வணங்கத் தங்கள் தலையில் இருக்கும் தொப்பிகளைக் கைதிகள் கையில் எடுத்துக்கொள்ளவேண்டும். நாங்கள் எல்லோருமே ஆங்கிலத் தொப்பிகளையே வைத்திருந்ததால் இந்த விதியை அனுசரிப்பதில் கஷ்டம் ஏதும் இல்லை. எங்கள் தொப்பிகளைக் கழற்றிக் கொண்டுவிடவேண்டும் என்பது சட்டப்படியானதோடு சரியானதுமாகும். இதற்கு 'வரிசையாக நில்' என்ற சொற்களில் ஆக்ஞை பிறக்கும். சொல்லப்போனல் இந்த வார்த்தைகளே எங்களுக்குச் சாப்பாடுபோல் ஆகிவிட்டன. ஏனெனில், தினத்திற்கு நான்கு அல்லது ஐந்து தடவைகளாவது நாங்கள் 'வரிசையாக' நிற்கவேண்டும். இந்த அதிகாரிகளில் ஒருவர் பிரதம வார்டருக்கு உதவியாளர். இவர் கொஞ்சம் அகம்பாவமுள்ளவர். ஆகையால் இவருக்கு 'ஜெனரல் ஸ்மட்ஸ்' என்று இந்தியர் பெயர் வைத்துவிட்டார்கள். பொதுவாக இவர் காலையில் முதலில் வருவார்; திரும்ப மாலையிலும் வருவார். ஒன்பதரை மணிக்கு டாக்டர் வந்தார். இவர் மிகவும் நல்லவர்; அன்பாய் இருப்பார். விசாரிப்பதில் தவறுவதில்லை. சிறை விதிகளின்படி ஒவ்வொரு கைதியும் முதல்நாள் அன்று தத்தம் துணிகளையெல்லாம் கழற்றிவிட்டு உடம்பின் ஒவ்வொரு பாகத்தையும் டாக்டருக்குக் காண்பிக்க வேண்டும். ஆனல், அந்த விதியை டாக்டர் எங்கள் விஷயத்தில் வற்புறுத்தவில்லை. மேலும் பல இந்தியரும் சிறைக்குள் வந்துவிட்டதால் டாக்டர் எங்களிடம் ஒன்று சொன்னர்: யாருக்காவது சொறி, சிறங்கு முதலியன இருந்தால் அவரைத் தாம் ரகசியமாகச் சோதிக்க வேண்டுமாகையால் தம்மிடம் கூறும்படி எங்களிடம் சொன்னர். பத்தரை அல்லது பதினெரு

மணிக்குச் சிறைக் கவர்னரும் பிரதம வார்டரும் வந்தனர். கவர்னர் உறுதியானவர்; நியாயமானவர்; சாந்தமான சுபாவமுள்ள அதிகாரி. நாங்கள் சுகமாக இருக்கிறோமா, எங்களுக்கு ஏதாவது வேண்டுமா, சொல்லிக்கொள்ள ஏதாவது குறை உண்டா என்றுதான் அநேகமாக அவர் கேட்பது வழக்கம். எங்களுக்கு ஏதாவது குறை இருந்து சொன்னால், கவனமாகக் கேட்டுக்கொள்ளுவார்; அவரால் முடிந்தால் பரிகாரமும் அளிப்பார். இத்தகைய புகார்கள், குறைகளைப் பற்றிப் பின்னால் கூறுகிறேன். அவருக்கு உதவியாளரான அதிகாரியும் எப்பொழுதாவது வருவார்; அவரும் அன்பானவர். இவர்களிலெல்லாம் மிகச் சிறந்தவர் எங்கள் பிரதம வார்டர். இவர் கடவுளிடம் அதிக பக்தியுள்ளவர். இவர் எங்களிடம் அன்போடும் மரியாதையோடும் நடந்துகொண்டார். ஆகையால், ஒவ்வொரு கைதியும் இவரை வானளாவப் புகழ்வது வழக்கம். கைதிகளுக்கு, அவர்களுக்குரிய உரிமைகளெல்லாம் கிடைக்கும்படி பார்ப்பதில் இவர் அதிகக் கவனஞ் செலுத்துவார். கைதிகள் செய்துவிடும் அற்பத் தவறுகளையெல்லாம் கவனியாதுபோல் இருந்துவிடுவார். எங்களைப் பொறுத்தவரையில் நாங்கள் எல்லோருமே ஒரு குற்றமும் செய்யாதவர்கள் என்பதை அவர் அறிந்திருந்ததால், முக்கியமாக எங்களிடம் அதிக அன்புடன் இருந்தார். இந்த அன்பைக் காட்ட அடிக்கடி வந்து எங்களிடம் பேசுவார்.

## தொகை அதிகரித்தது

சாத்விக எதிர்ப்பாளர்களான நாங்கள் அச்சிறையில் முதலில் ஐந்து பேரே இருந்தோம். ஜனவரி 14-ஆந் தேதி செவ்வாய்க்கிழமை பிரதம மறியல்காரரான ஸ்ரீ தம்பி நாயுடுவும், சீனர் சங்கத் தலைவர் ஸ்ரீ குவின்னும் சிறைக்குள் வந்தனர். அவர்களைச் சந்தோஷமாக வரவேற்றோம். 18-ஆந் தேதி சாமுன்தார் கான் உட்பட 18 பேர் வந்து சேர்ந்தார்கள். அவர் இரண்டு மாதங்கள் உள்ளே இருந்தார். மற்றவர்கள் மதராஸிகள், குஜராத்தி ஹிந்துக்கள். இவர்களெல்லாம் லைசென்சு இல்லாமல் தெருக்களில் அங்காடி விற்றதற்காகக் கைதானவர்கள். 2 பவுன் அபராதம், கட்டத் தவறினால் 14 நாட்கள் சிறைவாசம் என்பது இவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்த தண்டனை. இவர்கள் அபராதம் கட்ட மறுத்துத் தீவிரமாகச் சிறைத் தண்டனைக்கு உட்பட்டனர். 21-ஆந் தேதி இன்னும் 66 பேர் வந்து சேர்ந்தனர். இந்தக் கோஷ்டி

யில் நவாப் கானுக்கு மாத்திரமே இரண்டு மாதம் காவல் தண்டனை. மற்றவர்களெல்லாம் இரண்டு பவுன் அபராதம், கட்டத்தவறினல் 14 நாட்கள் சிறைவாசம் என்ற தண்டனையைப் பெற்றவர்கள். இவர்களில் குஜராத்தி ஹிந்துக்களே அதிகம். சில குமையியாக்களும் மதராஸிகளும் இருந்தனர். 22-ஆந் தேதி 35 பேர்; 23-ஆந் தேதி 3 பேர்; 24-ஆந் தேதி ஒருவர், 25-ஆந் தேதி இருவர், 28-ஆந் தேதி ஆறு பேர்; அன்று மாலை மேலும் 4 பேர், 29-ஆந் தேதி 4 குமையியாக்கள். இவ்விதம் எங்கள் தொகை கூடியது. ஆகவே 29-ஆந் தேதிக்கெல்லாம் 155 சாத்விக எதிர்ப்பாளர்கள் சிறைப்பட்டனர். 30-ஆந் தேதி என்னைப் பிரிட்டோரியாவுக்குக் கொண்டு போய் விட்டனர். அன்றும் 5 அல்லது 6 பேர் சிறைக்குள் வந்தனர் என்பதை அறிவேன்.

## சாப்பாடு

எல்லா நிலைமைகளிலும் நம்மில் பலருக்குச் சாப்பாட்டுச் சங்கதியே முக்கியமானதாகிறது. ஆனல், சிறையில் இருந்தவர்களுக்கோ அதுதான் மிகமிக முக்கியமானதாயிற்று. நல்ல சாப்பாடு கிடைப்பதுதான் அவர்களுடைய தேவை. கைதி, சிறையில் கிடைக்கும் சாப்பாட்டைக்கொண்டு திருப்தி அடைய வேண்டியதே. வெளியிலிருந்து எதையும் தருவித்துக்கொள்ளக்கூடாது என்பது சிறை விதி. இதேதான் சிப்பாயின் விஷயத்திலும். ராணுவ விதிகளின்படி சாப்பிட்டுக் கொண்டிருக்கச் சிப்பாய் உடன்பட வேண்டும். எனினும் கைதிக்கும், சிப்பாய்க்கும் ஒரு வித்தியாசம் உண்டு. சிப்பாய்க்கு அவன் நண்பர்கள் வேறு ஆகாராதிகளை அனுப்பலாம்; அவன் அவற்றைச் சாப்பிடலாம். ஆனல், கைதி அப்படிச் செய்ய முடியாது. ஆகவே, இந்த உணவுத்தடை, ஒருவன் சிறையில் இருக்கிறன் என்பதற்கு ஓர் அடையாளம். சிறைச் சாப்பாட்டில் ருசியைப் பார்த்துக்கொண்டிருக்கக்கூடாது. ருசிக்கான சாமான்கள் எவையும் சிறைக்குள் அனுமதிக்கவும் படாது என்று, சாதாரணமாகப் பேசிக்கொண்டு இருக்கையில், சிறை அதிகாரிகள் கூறுவதைக் காணலாம். சிறை வைத்திய அதிகாரியுடன் நான் பேசிக்கொண்டிருந்தபோது, ரொட்டியுடன் சாப்பிடுவதற்கு எங்களுக்குத் தேநீரோ அல்லது நெய்யோ, இவை போன்றவைகளோ அவசியம் என்று சொன்னேன். அதற்கு அவர், "ருசியோடு சாப்பிட நினைக்கிறீர்களா? ருசிக்கானது எதுவும் சிறைக்குள் அனுமதிக்கப்படுவதில்லை" என்று பதில் சொன்னர்.

சிறைச்சாலை விதிகளின்படி, முதல் வாரத்தில் ஓர் இந்தியருக்குக் காலையில் 12 அவுன்ஸ் சோளக் கஞ்சி கிடைக்கும். அதில் சர்க்கரையோ, நெய்யோ இருக்காது. மத்தியானத்தில் 4 அவுன்ஸ் அரிசிச் சாதமும் ஓர் அவுன்ஸ் நெய்யும். மாலையில் 5 நாட்களுக்கு, 12 அவுன்ஸ் சோளக் கஞ்சி; மூன்று நாட்களுக்கு வேக வைத்த மொச்சையும் உப்பும். இந்த உணவு அளவு, சாப்பிடுபவர்களின் ஆகாரத்தை அனுசரித்துத் தயாரிக்கப்பட்டது. ஆனால். ஒரு மாறுதல் என்னவென்றால், காபிர்களுக்கு மாலையில் உடைத்த சோள மாவும் கொழுப்பும் கொடுப்பார்கள். இந்தியருக்கு அரிசிச் சோறு கொடுத்தார்கள். இரண்டாவது வாரத்திலும் அதற்குப் பிறகும், இரண்டு நாட்களுக்கு, வேக வைத்த உருளைக் கிழங்கு, இரண்டு நாட்களுக்கு, முட்டைக் கோஸ் அல்லது பரங்கிக்காய் அல்லது இவைபோன்ற காய்களுடன் சோளமா கொடுப்பார்கள். மாமிசம் சாப்பிடுகிறவர்களுக்கு ஞாயிற்றுக்கிழமைகளில் மாமிசமும் கறிகாயும் உண்டு.

சர்க்காரிடம் எந்தத் தயவுக்கும் தொங்கிக்கொண்டிருப்பதில்லையென்றும், மத சம்பந்தமான ஆட்சேபணைக்கு இடம் இல்லாதிருக்கும்வரை கொடுக்கிற சாப்பாடு எதுவாயினும் தின்றுகொண்டிருப்பது என்றும் முதல் கோஷ்டிக் கைதிகள் உறுதி செய்துகொண்டனர். உண்மையைச் சொல்லப்போனால், கொடுக்கப்பட்ட உணவில் போதுமான சத்து இருந்தாலும், இந்தியருக்கு அது கொஞ்சமும் பொருந்தாத உணவு. காபிர்கள் தினமும் சோளம் சாப்பிடுகிறார்கள். ஆகையால், அது அவர்களுக்கு ஒத்துக்கொள்ளும் என்பது மாத்திரமல்ல; சிறையில் அதைச் சாப்பிட்டு நன்றாகவும் வளர்ந்தார்கள். ஆனால் இந்தியர் சோளமா சாப்பிடுவதில்லை; அரிசிச் சாதமே அவர்களுக்கு ஒத்துக்கொள்ளும். மொச்சை மாத்திரம் தனியாகத் தின்றும் இவர்களுக்குப் பழக்கமில்லை. மேலும் காபிர்களுக்காக, காபிர்களால் சமைக்கப்பட்ட கறி காய்களையும் எங்களால் சாப்பிட முடியவில்லை. கறி காய்களை அவர்கள் சுத்தம் செய்வதே இல்லை; மசாலை போட்டு அவற்றை அவர்கள் சமைப்பதுமில்லை. அதோடு, வெள்ளைக்காரக் கைதிகளுக்குச் சமைப்பதற்காக உபயோகிக்கும் கறி காய்களிலிருந்த உரித்த தோல் முதலியவைகளே காபிர்களுக்குச் சமைக்கும் கறி காய்கள். மசாலாவுக்கு உப்பைத் தவிர வேறு எதுவுமே கொடுக்கப்படுவதில்லை. சர்க்கரையைக் கனவிலும் காணமுடியாது. இவ்விதம் எங்கள் எல்லோருக்குமே சாப்பாட்டு விஷயமே பெரிய சங்கடமானதா யிருந்தது. எனினும் சாத்விக எதிர்ப்பாளர்கள் சிறை அதிகாரிகளிடம் எந்த

தயவுக்கும் கெஞ்சிக் கொண்டிருப்பதில்லை என்று உறுதி கொண்டுவிட்டதால், கிடைத்த இத்தகைய ஆகாரத்தைக் கொண்டே திருப்தி அடைய முயன்று வந்தோம்.

சிறைக் கவர்னர் எங்களை விசாரித்தபோது, சாப்பாடு எங்களுக்கு ஒத்துக்கொள்ளவில்லை என்றும், எனினும் அரசாங்கத்தினிடம் எந்த விதமான சலுகைகளையும் கேட்பதில்லை என்று உறுதிகொண்டிருக்கிறோம் என்றும் சொன்னேம். அரசாங்கம் தானாகவே உணவில் மாறுதலைச் செய்ய விரும்பினல் சரி, இல்லையானல் சிறை விதிகளின்படி கொடுக்கும் உணவையே சாப்பிட்டுக்கொண்டிருப்பதென முடிவு செய்திருக்கிறோம் என்றோம்.

ஆனல், எங்களுடைய இந்த உறுதியை அதிக காலத்திற்கு நீடிக்க முடியவில்லை. மற்றும் பலரும் எங்களுடன் வந்து சேர்ந்துவிட்டதால், இக்கஷ்டங்களை எங்களுடன் அவர்களும் பகிர்ந்து கொள்ளும்படி செய்வது சரியல்லவென்று எண்ணினேம். சிறை வாழ்க்கையை எங்களுடன் அனுபவிக்க அவர்களும் வந்திருக்கிறார்களே அது போதாதா! ஆகையால் அவர்கள் சார்பாகச் சிறைக் கவர்னருடன் பேச ஆரம்பித்தோம். நாங்கள் எந்த உணவையும் சாப்பிடத் தயாராயிருக்கிறோம்; ஆனல், பின்னல் வந்து சேர்ந்திருப்பவர்களால் அது முடியவில்லை என்று சொன்னேம். இதைப்பற்றி அவர் யோசித்தார். மத விஷயத்தை அவர்கள் காரணமாகக் கூறுவதாயிருந்தால், அவர்களுடைய சாப்பாட்டை அவர்களே தனியாகச் சமைத்துக் கொள்ள அனுமதிக்கத் தாம் தயார் என்றார். ஆனல், உணவுக்கான சாமான் மாத்திரம் இப்பொழுது கொடுக்கப்படுவதேதான் என்றும், இதில் எந்த மாறுதலையும் செய்யத் தம்மால் முடியாது என்றும் கூறினர்.

இதற்கு மத்தியில் இன்னும் பதினன்கு பேரும் எங்களுடன் வந்து சேர்ந்தனர். இவர்களில் சிலர் சோளக் கஞ்சி குடிப்பதைவிடப் பட்டினியே கிடந்துவிடுவதென்ற முடிவுக்கு வந்துவிட்டனர். எனவே, சிறைச்சாலை விதிகளைப் படித்தேன்; இவை போன்றவைகளில் சிறைகளின் டைரக்டருக்கே மனுச் செய்ய வேண்டும் என்பதைக் கண்டேன். ஆகையால் அவருக்கு மனுச் செய்ய அனுமதிக்கும்படி சிறைக் கவர்னரைக் கேட்டு அதன்படி மனுச் செய்தோம். அம்மனு வருமாறு :

"கீழே கையொப்பமிட்டிருக்கும் கைதிகளாகிய நாங்கள் எல்லோரும் ஆசியாக்காரர்கள். 18 பேர் இந்தியர், 3 பேர் சீனர் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

"இந்த 18 இந்தியரும் தங்கள் காலை ஆகாரத்திற்குச் சோளக் கஞ்சியைப் பெறுகின்றனர்; மற்றவர்களுக்கு அரிசிச் சோறும் நெய்யும் கொடுக்கப்படுகின்றன. இவர்களுக்கு மும் முறை மொச்சையும் நான்கு முறை கஞ்சியும் கொடுக்கிறார்கள். எங்களுக்குச் சனிக்கிழமைகளில் உருளைக்கிழங்கும், ஞாயிற்றுக் கிழமைகளில் கீரையும் தருகிறார்கள். மத உணர்ச்சியை முன்னிட்டு நாங்கள் மாமிசம் சாப்பிட முடியாது. சிலர் மாமிசத் தைச் சாப்பிடுவதே இல்லை; மற்றவர்களோ, மதக் கோட் பாட்டை யொட்டிக் கசாப்புச் செய்யப்படாத மாமிசமானதால் சாப்பிட முடியவில்லை.

"அரிசிச் சோற்றுக்குப் பதில் சீனர்களுக்குச் சோளமா கிடைக்கிறது. எல்லாக் கைதிகளுமே பெரும்பாலும் ஐரோப்பிய உணவில் பழக்கப்பட்டவர்கள்; ரொட்டியையும் மாவினால் தயா ராகும் மற்றவைகளையும் சாப்பிடுபவர்கள். எங்களில் யாருக்கும் சோளக் கஞ்சி குடித்துப் பழக்கமில்லை; இதனால் சிலர் அஜீரணத் தினால் கஷ்டப்படுகிறார்கள்.

"எங்களில் சில பேர் காலை ஆகாரத்தைச் சாப்பிடுவதே இல்லை. சீனக் கைதிகளுக்கு ரொட்டி கிடைக்கும்போது, அவர்கள் அதில் இரண்டொரு துண்டுகளை இரக்கத்தினால் எங்களுக்குக் கொடுக்கிறார்கள். சில சமயங்களில் அதைச் சாப்பிடுகிறோம். அதைச் சிறைக் கவர்னரிடம் கூறியபோது, ரொட்டியை வாங்கிக் கொண்டதனால் சிறை விதிகளை மீறிய குற்றஞ் செய்தவர்களாகி றீர்கள் என்று அவர் சொல்லுகிறார்.

"இத்தகைய உணவு எங்களுக்குக் கொஞ்சமும் ஒத்துக் கொள்ளாது என்பதே எங்கள் கருத்து. ஆகவே, ஐரோப்பியக் கைதிகளுக்கு இருக்கும் விதிகளை அனுசரித்து எங்களுக்கு உணவளிக்கவேண்டும் என்றும், சோளக் கஞ்சி கொடுப்பதை அடியோடு நிறுத்திவிட வேண்டும் என்றும் மனுச் செய்து கொள்ளுகிறோம். இல்லையானால் எங்களுக்கு ஏற்றதும் எங்க ளுடைய பழக்க வழக்கங்களுக்கு உகந்ததுமான உணவை எங் களுக்கு அளிக்க வேண்டும்.

"இது அவசரமானதாகையால் பதிலைத் தந்திமூலம் அனுப் பக் கோருகிறோம்."

இந்த மனுவில் நாங்கள் இருபத்தொரு பேர் கையெழுத் திட்டோம். அம்மனு அனுப்பப்பட்ட சமயத்தில் மேலும் அறுபத் தாறு பேர் சிறைக்கு வந்து சேர்ந்தனர். இவர்களும் சோளக் கஞ்சியை வெறுத்தனர். எனவே, புதிதாக வந்தவர்களும்

உணவை ஆட்சேபிக்கிறார்கள் என்றும் மனுவில் எழுதினேம். இம்மனுவைத் தந்தி மூலம் அனுப்பும்படி சிறைச்சாலைக் கவர்னரைக் கேட்டுக்கொண்டேன். அவர் டெலிபோன் மூலம் மேலதிகாரிகளைக் கேட்டுவிட்டு, கஞ்சிக்குப் பதிலாக நான்கு அவுன்ஸ் ரொட்டியை எங்களுக்கு அனுமதித்தார். நாங்கள் எல்லோரும் திருப்தியடைந்தோம். 22-ஆந் தேதி முதல் காலையிலும் மாலையிலும் கஞ்சிக்குப் பதில் 4 அவுன்ஸ் ரொட்டி கிடைத்து வந்தது. மாலையில் 8 அவுன்ஸ் அதாவது பாதி ரொட்டி கிடைத்தது. ஆனல், இதெல்லாம் தாற்காலிகமான ஏற்பாடே. இதைப்பற்றி முடிவு செய்ய ஒரு கமிட்டி கூடி ஆலோசித்து வந்தது. மா, நெய், பருப்பு முதலியவைகளை அது சிபாரிசு செய்தது என்றும் கேள்விப்பட்டோம். ஆனல், இது அமலுக்கு வருவதற்கு முன்பே நாங்கள் விடுதலை யடைந்துவிட்டதால் அதற்குமேல் எதுவும் நடக்கவில்லை.

தொடக்கத்தில் நாங்கள் எட்டு பேர் மாத்திரமே இருந்த சமயத்தில் நாங்களே சமைத்துக்கொள்ளுவதில்லை. எங்களுக்கு அரிசியும், நன்ருக வேகாத சாதமும், கறி காயுமே கிடைத்து வந்தன. ஆகையால், நாங்களே சமைத்துக்கொள்ள அனுமதி பெற்ருேம். முதல் நாள் ஸ்ரீ கத்வா சமைத்தார். பிறகு ஸ்ரீ தம்பி நாயுடுவும், ஸ்ரீ ஜீவனும் இந்த வேலையை எடுத்துக்கொண்டனர். எங்களுடைய கடைசி நாட்களில் இவர்கள் 150 பேருக்குச் சமைக்க வேண்டியிருந்தது. கறி காய் உணவு, வாரத்தில் இரு தினங்கள். அந்த நாட்களில் இரண்டுவேளை சமைக்க வேண்டும். மற்றத் தினங்களில் ஒருவேளைச் சமையலே. ஸ்ரீ நாயுடு இதில் சிரமம் எடுத்துக்கொண்டார். நான் பரிமாறுவது வழக்கம்.

நாங்கள் மனுச் செய்துகொண்டது எல்லா இந்தியக் கைதிகளின் சார்பிலேயே யன்றி எங்கள் எட்டு பேருக்கு மாத்திரமல்ல என்பதை மனுவின் வாசகத்தைக் கொண்டு வாசகர்கள் கவனித்திருப்பார்கள். இதே முறையில்தான் சிறைக் கவர்னருடனும் பேசினேம். எல்லா ஆசியாக்காரக் கைதிகள் சம்பந்தமாகவும் இதைப்பற்றிக் கவனிப்பதாக அவர் வாக்களித்திருந்தார். சிறையில் இந்தியருக்குக் கொடுக்கப்படும் உணவில் அபிவிருத்தி செய்யப்படும் என்றே நாங்கள் இன்னும் நம்புகிருேம்.

மூன்று சீனக் கைதிகளுக்கும் அரிசிக்குப் பதிலாக மற்றவைகளைக் கொடுத்துவந்தார்கள். அவர்கள் தனியானவர்கள் என்றும் எங்களுக்குத் தாழ்ந்தவர்கள் என்றும் கருதப்படுகின்றனர் என்று தோன்றியதால் இது சங்கடமாகிவிட்டது. இதற்காகவே

அவர்கள் சார்பிலும் கவர்னருக்கும், ஸ்ரீ பிளேபோர்டுக்கும் மனுச் செய்துகொண்டேன். இவர்களையும் இந்தியரைப் போன்றே ஒரே மாதிரியாக நடத்த வேண்டுமென்று உத்தரவாயிற்று.

இந்தச் சாப்பாட்டுடன் ஐரோப்பியரின் சாப்பாட்டை ஒப்பிட்டுப் பார்ப்பது முக்கியமாகும். ஐரோப்பியக் கைதிகளுக்குக் காலை ஆகாரத்தில் கஞ்சியும், 7 அவுன்ஸ் ரொட்டியும் கிடைக்கின்றன. மத்தியானச் சாப்பாட்டுக்கு அவர்களுக்கு ரொட்டியும் 'சூப்பு'ம், அல்லது ரொட்டியும் மாமிசமும், அல்லது ரொட்டி, மாமிசம், உருளைக்கிழங்கும் கொடுக்கிறார்கள். மாலையில் ரொட்டியும் கஞ்சியும். இவ்விதம் அவர்களுக்குத் தினம் மூன்று வேளைகளிலும் ரொட்டி கிடைப்பதால் கஞ்சி இருக்கிறதா, இல்லையா என்பதைப்பற்றி அவர்களுக்குக் கவலையில்லை. அதோடு மாமிசமும் அல்லது 'சூப்பு'ம் அவர்களுக்குக் கிடைக்கிறது. இவையல்லாமல், அவர்களுக்குத் தேநீர் அல்லது கொக்கோ கொடுக்கின்றனர். வெள்ளையருக்கும், சுதேசிகளான காபிர்களுக்கும் ஏனையவர்களுக்கும் தகுதியான ஆகாரம் கிடைக்கிறது. ஆனால், ஏழை இந்தியரே கஷ்டப்படவேண்டியிருக்கிறது என்று இதிலிருந்து விளங்கும். இந்தியருக்கென்று அவர்களுக்கு ஏற்ற சாப்பாடு எதுவும் தனியாகக் கிடையாது. சாப்பாட்டு விஷயத்தில் இந்தியரை வெள்ளைக்காரரைப்போல் நடத்திவிட்டால், அந்த ஐரோப்பியர் தங்களுக்கு அது அவமானம் என்று நினைத்துவிடுவார்கள். இந்தியருக்கு ஏற்ற உணவு எது என்பதைக் கவனிக்கும் கவலையும் யாருக்கும் இல்லை. எனவே, காபிர்களுடன் இந்தியரும் சேர்க்கப்பட்டுவிட்டதால் இந்தியக் கைதிகள் வாய் திறவாமல் பட்டினி கிடக்கவேண்டியதாயிற்று. இத்தகைய நிலைமைக்கு நமது சாத்விக எதிர்ப்பாளர்களின் தவறுதான் காரணம் என்றே நான் கூறுவேன். சில இந்தியர்கள், தங்களுக்குத் தேவையான உணவைத் திருட்டுத்தனமாகப் பெற்றுவந்தார்கள். மற்றவர்களோ, தங்களுக்குக் கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடைய வேண்டியிருந்தது. தங்களுடைய துயரத்தின் கதையை வெளியில் சொல்ல வெட்கப்பட்டுக்கொண்டிருந்தார்கள் இவர்கள். அவர்களோ, மற்றவர்களைப்பற்றிச் சிந்திப்பதேயில்லை. எனவே வெளியில் இருந்தவர்களுக்கு இதைப்பற்றி ஒன்றுமே தெரியாமல் இருந்துவிட்டது. சத்தியத்தைக் கடைப்பிடித்து, அநீதி ஏற்படும்போது நாம் கிளர்ச்சி செய்வதானால், இத்தகைய சிரமங்களை யெல்லாம் அனுபவிக்க இடம் இருக்காது. சுயநலத்தை விட்டுவிட்டு மற்றவர்களின் நன்மையையும்

கவனிப்பதாயிருந்தால், குறைகளுக்குச் சீக்கிரமே பரிகாரம் கிடைத்துவிடும். இத்தகைய குறைகளுக்குப் பரிகாரம் பெற நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியது அவசியமாவதைப் போலவே, மற்றுஞ் சிலவற்றைப்பற்றி யோசித்தாகவேண்டியதும் அவசியமாகிறது. கைதிகள் என்ருல் சில அசௌகரியங்களையும் அனுபவித்துத்தான் ஆகவேண்டும். எந்தச் சிரமமுமே இல்லை யென்ருல் கைதி என்று சொல்லப்படுவானேன்? மனத்தை அடக்கக்கூடியவர்களாக இருப்பவர்கள், துன்பத்திலும் இன்பத்தை அடைகின்றனர்; சிறையிலும் ஆனந்தமாக வாழ்கிருர்கள். கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை அவர்கள் அறியாமல் இருந்துவிடுவதில்லை. தங்களுடன் துன்பங்களை அனுபவித்துக் கொண்டு மற்றவர்களும் இருப்பதால் அவர்கள் கஷ்டங்களே உணராமல் இருந்துவிடக்கூடாது.

நம்மிடம் மற்ருெரு கெட்ட பழக்கமும் இருக்கிறது. நமது பழக்கங்களிலும் வழக்கங்களிலும் நாம் விடாப்பிடியாக இருப்பதுதான் அது. ரோமாபுரியில் இருக்கிருேமென்ருல் ரோம் காரனைப்போலவே நாம் நடந்துகொள்ள வேண்டும். நாம் தென்னுப்பிரிக்காவில் வசிக்கிருேம். எனவே, இங்கே எந்தச் சாப்பாடு நல்ல சாப்பாடு என்று கருதப்படுகிறதோ அதை நாம் பழகிக் கொள்ள வேண்டும். நமது கோதுமையைப்போலவே சோளக் கஞ்சியும் எளிமையான, மலிவான நல்ல ஆகாரமே. அதில் ருசியில்லை என்று சொல்லிவிட முடியாது. சில சமயங்களில் ருசியில் அது நம் கோதுமையையும் மிஞ்சிவிடும். நாம் எந்த நாட்டில் குடியேறியிருக்கிருேமோ அந்த நாட்டிடம் மரியாதை செலுத்துவதற்காக, அங்கே என்ன விளைகிறதோ அதையே - அது நல்ல ஆகாரமல்ல என்று இருந்தாலன்றி - நாம் சாப்பிட வேண்டும் என்பது என் கருத்து. பல 'வெள்ளைக்காரர்கள்' அந்தக் கஞ்சியை விரும்புகிருர்கள்; காலையில் சாப்பிடுகிருர்கள். பால் அல்லது சர்க்கரை அல்லது நெய் கலந்து சாப்பிட்டால் அது ருசியானதே. இக்காரணங்களை முன்னிட்டும், நாம் திரும்பவும் சிறை செல்ல வேண்டியிருக்கும் என்பதைக் கருதியும், ஒவ்வோர் இந்தியரும் சோளத்தினுல் செய்யப்படும் இந்த ஆகாரத்தைச் சாப்பிட்டுப் பழகிக்கொள்ள வேண்டியது இனி நல்லது. இது பழகிவிட்டால், கொஞ்சம் உப்பு மாத்திரம்போட்டு அதைச் சாப்பிட்டாக வேண்டிய சமயம் வரும்போதும், இதைச் சாப்பிடுவது நமக்குச் சிரமமாக இராது. நமது நாட்டின் நன்மையை முன்னிட்டு நம் பழக்கங்களில் சிலவற்றை விட்டுவிட வேண்டியது அவசிய

மாகும். முன்னேற்றம் அடைந்திருக்கும் நாடுகளெல்லாம், இப் பழக்கங்களை விட்டுவிடுவதால் எந்தவித நஷ்டமும் இல்லாத போது அவற்றை விட்டொழித்திருக்கின்றன. ஆட்சேபிக்கக் கூடியவற்றைத் தவிர மற்ற விஷயங்களில் இந்நாட்டுச் சுதேசிகளின் பழக்கங்கள், உடை முதலியவைகளைத் தாங் களும் மேற்கொண்டு ரட்சண்ய சேனையினர் சுதேசிகளைக் கவர்ந் திருக்கின்றனர்.

## நோய்

நூற்றைம்பது கைதிகளில் யாருக்குமே நோய்வரவில்லை யென்றால் அதுதான் பெரிய் அதிசயமாக இருந்திருக்கும். ஸ்ரீ சாமுந்தர் கான் என்பவரே முதலில் நோயுற்றார்; பிணி யுடனேயே அவர் சிறைக்குக் கொண்டுவரப்பட்டார்; மறுநாள் மருத்துவச் சாலைக்குக் கொண்டுபோயினர். ஸ்ரீ கத்வாவுக்குப் பாரிச வாயு நோய் கண்டது. சிறையில் தமது கொட்டடியில் சிறை டாக்டர் சிகிச்சையே போதும் என்றுதான் சில தினங்கள் இருந்தார். பிறகு, இவரும் மருத்துவச் சாலைக்குப் போக வேண்டியதாயிற்று. மயக்கத்தோடு கூடிய இழுப்பு நோயால் பாதிக்கப்பட்ட மற்றும் இருவரும் அங்கே கொண்டு போகப் பட்டனர். இதற்குக் காரணம், வெயில் கடுமையாக இருந்த காலத்தில் கைதிகள் பகலெல்லாம் வெயிலில் இருக்கவேண்டி வந்ததே. இதனால் இழுப்பு கண்டு விழுந்தனர். எங்களால் முடிந்தவரையில் பணிவிடை செய்தோம். பிறகு ஸ்ரீ நவாப்கானும் பாதிக்கப்பட்டார். நாங்கள் விடுதலையான அன்று அவரை மெதுவாகப் பிடித்துக்கொண்டே வெளியில் கொண்டு வர வேண்டியதாயிற்று. இவருக்குப் பால் முதலியன கொடுக்கும்படி டாக்டர் உத்தரவிட்ட பிறகு இவர் சற்றுத் தேறினர். எனினும் மொத்தத்தில் சாத்விக எதிர்ப்பாளர்கள் பொது வாகச் சமாளித்துக்கொண்டு விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும்.

## போதிய இடமின்மை

நாங்கள் இருந்த சிறைக் கொட்டடி ஐம்பத்தொரு கைதிகள் இருப்பதற்கே போதுமானது; இடவசதியும் அவ்வளவு தான். பிறகு 51 பேருக்குப் பதிலாக 151 பேரும் அதில் இருந் தாக வேண்டும் என்று வந்தபோது பெரிய கஷ்டமாகிவிட்டது. சிறைக் கவர்னர் வெளியில் கூடாரம் அடித்துக்கொடுத்தார். பலர் அதில் போய் இருக்க நேர்ந்தது. நாங்களிருந்த கடைசி நாட்

களில் இரவில் தூங்குவதற்குச் சுமார் நூறுபேரை கொட்டடிக்கு வெளியே கொண்டுபோய்க் காலையில் திருப்பிக்கொண்டு வருவார்கள். இந்தத் தொகையினருக்குக் கொட்டடியில் இடம் கொஞ்சமும் போதாது. சங்கடப்பட்டுத்தான் அந்த நேரத்தைக் கழிக்க முடியும். போதாததற்கு கண்ட இடமெல்லாம், நம்முடன் பிறந்துவிட்டதான, துப்பி வைக்கும் கெட்ட பழக்கம் வேறு. இதனால் அந்த இடம் மிகவும் அசுத்தமானதோடு நோய் ஏற்படும் அபாயமும் உண்டாயிற்று. அதிர்ஷ்டவசமாக எங்களுடனிருந்தவர்கள் புத்திமதி சொன்னால் கேட்கக் கூடியவர்களாக இருந்தனர். நாங்கள் இருந்த இடத்தைச் சுத்தமாக வைத்துக்கொள்ளுவதற்கும் உதவி செய்தனர். இந்த இடத்தையும், மலம், நீர் கழிக்கும் இடத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்ளுவதில் அதிக அக்கறை கொண்டு வந்தோம். அங்கிருந்தவர்களுக்கு நோய் வராமல் இது காத்தது. இவ்வளவு குறுகலான ஓர் இடத்தில் இத்தனை பேரைச் சிறைப்படுத்திவைத்தது அரசாங்கத்தின் தவறு என்பதை யாரும் ஒப்புக்கொள்ளுவார்கள். சிறையில் இடம் போதாமல் இருக்கும் போது, இத்தனை பேரை அங்கே அனுப்பாமல் இருந்திருக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமை. போராட்டம் நீடித்து நடந்திருக்குமானால், மேற்கொண்டு யாரையும் சிறைக்கு அனுப்புவதென்பது அரசாங்கத்தால் முடிந்தே இராது.

## படிப்பு

ஒரு மேஜை, பேனா, மை இவற்றையெல்லாம் உபயோகித்துக் கொள்ள கவர்னர் எங்களை அனுமதித்திருந்தார். சிறைக்கூடப் புத்தகசாலைக்கும் நாங்கள் தாராளமாகப் போய்ப் படிக்கலாம். அதிலிருந்து கார்லைல் எழுதிய நூல்களையும் பைபிளையும் எடுத்து வந்தேன். அங்கே வந்து கொண்டிருந்த சீனமொழி பெயர்ப்பாளரிடமிருந்து ஆங்கில மொழிபெயர்ப்பான குரான்-இ-ஷரீப்; ஹக்ஸ்லியின் சொற்பொழிவுகள்; பர்ன்ஸ், ஜான்ஸன், ஸ்காட் ஆகியோரைப்பற்றி கார்லைல் எழுதிய வாழ்க்கை வரலாறுகள்; பேகனின் கட்டுரைகள் ஆகிய புத்தகங்களை இரவல் வாங்கினேன். மணிலால் தாதுபாய் எழுதிய வியாக்கியானத்துடன் கூடிய பகவத் கீதை, பல தமிழ் நூல்கள், மௌல்விசாகிபிடமிருந்து ஓர் உருதுப் புத்தகம், டால்ஸ்டாய், ரஸ்கின், சாக்ரடீஸ் ஆகியோரின் நூல்கள் முதலியன என்னிடமே இருந்தன. இவற்றில் பலவற்றைச் சிறையில் படித்தேன்; சில புத்தகங்களைத் திரும்பப் படித்தேன். தினம் தமிழும் கற்றுக் கொண்டு வந்தேன். காலையில் கீதையைப் படிப்பேன்; பகல்

வேளைகளில் பெரும்பாலும் குரானைப் படிப்பேன். மாலையில் சீனக் கிறிஸ்தவரான ஸ்ரீ போர்டூனுக்குப் பைபிள் போதிப்பேன். ஆங்கிலம் கற்றுக்கொள்ள அவர் விரும்பினர். பைபிள் மூலம் அவருக்கு ஆங்கிலம் போதித்தேன்.

என்னுடைய தண்டனைக் காலம் முழுவதையும் சிறையி லேயே கழிக்க நான் அனுமதிக்கப்பட்டிருந்தால், கார்லைல், ரஸ்கின் இவர்களுடைய புத்தகங்களை யெல்லாம் மொழி பெயர்த்து முடித்திருப்பேன். மேற்கண்ட புத்தகங்களைப் படிப் பதிலேயே நான் முழுதும் ஈடுபட்டிருந்தால், இரண்டு மாதங் களுக்கு மேல் எனக்குக் கிடைத்திருந்தாலும் சோர்ந்திருக்க மாட்டேன் என நம்புகிறேன். அது மாத்திரமல்ல; என்னுடைய அறிவையும் படிப்பையும் பயனுள்ள வகையில் அபிவிருத்தி செய்துகொண்டும் இருப்பேன். நல்ல புத்தகங்களைப் படிப்பதில் ஆர்வமுள்ளவர்கள், எந்த இடத்திலும் தனிமையில் சுகமாக இருந்துவிட முடியும் என்று நம்புகிறேன். ஆகையால், சிறையில் நான் ஆனந்தமாகவே இருந்திருப்பேன்.

## மத நூல்கள் ஆராய்ச்சி

மேற்கத்திய நாடுகளில், கைதிகளின் மத விஷயங்களையும் அரசாங்கம் கவனிக்கிறது என்பதைப் பார்க்கிறோம். இதனல் ஜொஹன்னஸ்பர்க் சிறையிலும் ஒரு 'சர்ச்' இருக்கிறது. இது வெள்ளைக்காரக் கைதிகளின் தேவைக்கென்றே வைக்கப்பட்ட தால் அவர்கள் மாத்திரம் அதற்குள் அனுமதிக்கப்படுவர். நானும் ஸ்ரீ போர்டூனும் மாத்திரம் அதற்குள் போக அனுமதி கேட்டேன். இந்த சர்ச் வெள்ளைக்காரக் கிறிஸ்தவக் கைதிகளுக்கு மாத்திரமே என்று கவர்னர் கூறினர். ஞாயிற்றுக்கிழமை தோறும் அவர்கள் சர்ச்சுக்குப் போவார்கள். பலதரப்பட்ட பாதிரிகள் வந்து அவர்களுக்கு மத போதனை செய்வார்கள்.

காபிர்களை மதம் மாற்றுவதற்காக விசேஷ அனுமதி பெற்றும் பல பாதிரிகள் சிறைக்கு வருகின்றனர். இவர்களுக் கென்று சர்ச் எதுவுமில்லை. திறந்த வெளியில் உட்கார்ந்து கொள்ளுவார்கள். யூதர்களை கவனித்துக் கொள்ளுவதற்கென்று அவர்களுடைய பாதிரிகள் வேறு தனியாக இருக்கிறார்கள். ஹிந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்குமே அவர்களுடைய ஆன்மிக காரியங்களைக் கவனிக்கச் சிறையில் யாருமே இல்லை. இந்தியக் கைதிகள் அதிகமில்லை என்பது உண்மை. ஆனல், இந்தியர்களுக்கென்று இதற்காக எந்த ஏற்பாடுமே இல்லை என்பது இந்தியருக்குக் கௌரவம் ஆகிவிடாது. ஆகையால்,

இரு சமூகங்களையும் சேர்ந்த தலைவர்கள் ஒன்று கூடி யோசித்து, சிறையில் தங்கள் சமூகங்களைச் சேர்ந்த கைதி ஒருவன் இருந்தாலும் அவனுக்குச் சிறையில் மதபோதனை செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியது அவசியம். இத்தகைய பிரசாரகர்கள் ஹிந்துக்களாயினும் மௌல்விகளாயினும், பரிசுத்த உள்ளம் படைத்தவர்களாக இருப்பதோடு கைதிகளுக்கு மேலும் துன்பம் உண்டாக்கி விடாதவர்களாக இருப்பதிலும் அவர்கள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்.

## முடிவு

பிறர் அறியத்தக்கவைகளை யெல்லாம் மேலே கூறிவிட்டேன். காபிர்களின் அந்தஸ்தில்தான் இந்தியர்களும் வைக்கப்பட்டிருக்கின்றனர் என்பது மேற்கொண்டும் சிந்திக்கவேண்டியதாகும். வெள்ளைக்காரக் கைதிகளுக்குப் படுக்கக் கட்டில் மெத்தை; பல் துலக்க பிரஷ்; முகம், கை துடைத்துக் கொள்ளத் துண்டு, கைக்குட்டை முதலியவைகள் உண்டு. ஆனல், இந்தியருக்கு எதுவுமே இல்லை. ஏன் இந்த வேற்றுமை?

நாம் தலையிடுவதற்கான சங்கதியல்ல இது என்று நாம் நினைத்துவிடவே கூடாது. இப்படிப்பட்ட சின்ன காரியங்கள் தாம் ஒன்று, நம் கௌரவத்தை உயர்த்துகின்றன அல்லது நம்மைத் தாழ்த்துகின்றன. சுயமரியாதை இல்லாதவனுக்கு எம்மதமும் இல்லை என்று ஓர் அரபு நூல் கூறுகிறது. சுயமரியாதை என்பது கர்வமோ அல்லது அகம்பாவமோ அல்ல. பயத்தினலோ அல்லது சோம்பேறித்தனத்தினலோ உரிமைகள் இழந்து போய்விட அனுமதிப்பதில்லை என்ற ஒரு மன நிலையே சுயமரியாதையாகும். கடவுளிடம் நம்பிக்கையுள்ளவன் சுயமரியாதையையும் அடைகிருன். கடவுளிடம் நம்பிக்கை இல்லாதவனுக்கு உரிமை என்பது இன்னதெனத் தெரியாது; நல்லது செய்வது எப்படி என்பதும் அவனுக்குத் தெரியாது என்பதே என்னுடைய திடமான நம்பிக்கை.

## 2

ஒவ்வொரு கைதியும் காலையில் படுக்கையை விட்டு எழுந்ததும், தங்கள் படுக்கையைத் தாங்களே சுற்றி அவற்றை வைக்கவேண்டிய இடத்தில் வைக்கவேண்டும். 6 மணிக்குள் காலைக் கடன்களையெல்லாம் முடித்துக்கொண்டு 6 மணி ஆனதுமே வேலைக்குத் தயார் ஆகிவிட வேண்டும். வேலை 7 மணிக்கு

ஆரம்பமாகும். பலவிதமான வேலைகள் கொடுக்கப்பட்டன. மண்ணைத் தோண்டும் வேலை மிகவும் சிரமமானது. மண்வெட்டிகளைக் கொண்டே தரையைத் தோண்ட வேண்டுமாகையால் அது மிகச் சிரமமாகவே இருந்தது. மேலும், வெயில் கடுமையாக இருந்த காலம். வேலை செய்ய நாங்கள் கொண்டு போகப்பட்ட இடம், சிறையிலிருந்து ஒன்று அல்லது ஒன்றரை மைல் தூரம் இருக்கும். நாங்கள் ஒவ்வொருவரும் முதலில் நன்றாகவே வேலை செய்துவந்தோம். இத்தகைய வேலை எங்களில் யாருக்குமே பழக்கம் இல்லாததனால் சீக்கிரத்திலேயே களைத்துப்போனோம். பொழுது ஏற ஏற, வேலை மேலும் மேலும் அதிகக் கடுமையான தாகத் தோன்றியது. வார்டர் அதிகக் கண்டிப்பாயிருப்பார். "நடக்கட்டும்" என்று அடிக்கடி அவர் அதட்டிக் கொடுத்துக் கொண்டிருப்பார். இது இந்தியருக்கு அதிகத் திகிலை உண்டாக்கியது. சிலர் அழுதுகொண்டிருப்பதையும் கண்டேன். இதில் ஒருவருக்குக் கால் வீங்கியிருந்தது. இவையெல்லாம் எனக்கு மனவேதனையை உண்டாக்கின. ஒவ்வொரு சமயம் அவர்களுக்கு அவர்களுடைய கடமையைக் குறித்து நினைவூட்டி வந்தேன். வார்டரின் வார்த்தைகளைக் குறித்துப் பொருட்படுத்தாமல், ஒவ்வொருவரும் நல்ல மனத்தோடு தங்களால் இயன்றவரையில் வேலையை நன்றாகச் செய்துவர வேண்டும் என்று புத்திமதி சொல்லி வந்தேன். நானும் களைத்துப் போய்விட்டேன். என் கையெல்லாம் கொப்புளங்கள்; அவற்றிலிருந்து ஊன் நீரும் வடிந்துகொண்டிருந்தது. மண்வெட்டியைத் தூக்கி வெட்டவும் என்னால் முடியவில்லை. அது ஒரு மணங்கு நிறை இருப்பதைப் போல எனக்குத் தோன்றியது. என் கை கால்களை நன்றாக வைத்து, எனக்கு அளிக்கப்பட்டிருக்கும் வேலையைச் செய்து முடிப்பதற்குப் போதுமான பலத்தை எனக்கு அளித்து, என் கௌரவத்தைப் பாதுகாக்கவேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்தேன். அவர்மீது நம்பிக்கை வைத்து என் வேலையைச் செய்துகொண்டு போனேன். களைப்பாற்றிக்கொள்ள கொஞ்சம் வேலையை எப்பொழுதாவது நிறுத்தினால் வார்டர் என்னைக் கடிந்துகொள்ளுவான். என் கடமையைப்பற்றி அவன் எனக்கு நினைவூட்ட வேண்டியதில்லை என்றும், என்னால் முடிந்தவரையில் எனக்கு இட்டுள்ள வேலையைச் செய்து முடிக்க நான் தயாராயிருக்கிறேன் என்றும் அவனிடம் கூறினேன். அப்பொழுதுதான் ஸ்ரீ ஜினபாய் மயக்கமுற்றுவிட்டதைக் கண்டேன். அவர் தலையில் தண்ணீரை நான் ஊற்றிக் கொண்டிருந்தபோது பின்வருமாறு எனக்குத் தோன்றியது: இந்தியரில் அநேகர் என் சொல்லை நம்பி

சிறைப்பட முன் வந்தார்கள். நான் அவர்களுக்குச் சொன்ன யோசனை தவருனதாக இருக்குமானல், இதை அவர்களுக்குக் கூறியதானல் கடவுள் முன்னிலையில் நான் எவ்வளவு பெரிய பாவத்தைச் செய்தவனகிறேன். என் யோசனையைக் கேட்டு அதனல் பலதரப்பட்ட துன்பங்களுக்கும் ஆளாகியிருக்கின்றனர். இதை எண்ணிக்கொண்டே பெருமுச்சுவிட்டேன். கடவுளையே சாட்சியாக வைத்து நான் மீண்டும் இதைப்பற்றி நினைத்துப் பார்த்தேன். உடனே நான் செய்ததெல்லாம் சரியானதே என்ற உறுதி ஏற்பட்டது. அச்சந்தர்ப்பத்தில் நான் அவர்களுக்குச் சொல்லக்கூடிய ஆலோசனை அது ஒன்றே என்பதை உணர்ந் தேன். எதிர்கால இன்பத்தை முன்னிட்டு, முதலில் எல்லாவிதத் துன்பங்களையும் சிரமங்களையும் அனுபவிக்க வேண்டியதே: இதற்காக வருந்தக் காரணமில்லை. சாதாரணமாக அவர் மயக்கமுற்றுத்தான் இருக்கிறுர், இறந்து விட்டார் என்றே வைத்துக்கொண்டாலும், நான் முன்பு அவர்களுக்குச் சொல்லி யிருந்த யோசனையைத் தவிர வேறு என்ன சொல்லியிருக்க முடியும்? நிரந்தர அடிமையாக வாழ்ந்து கொண்டிருப்பதைவிட இவ்விதம் துன்பங்களையெல்லாம் அனுபவித்து இறந்துபோய் விடுவது எவ்வளவோ மேல் என்று உடனே தோன்றியது.

ஒரு நாள், ஒரு வார்டர் என்னிடம் வந்து, மலங்கழிக்கும் இடங்களைச் சுத்தம் செய்வதற்கு எங்களில் இருவரை அனுப் பும்படி கேட்டான். அவற்றை நானே சுத்தம் செய்வதைவிடச் சிறந்தது வேறு எதுவுமில்லை என்று எண்ணினேன்; அவ் வேலையை நானே வந்து செய்வதாக அவனிடம் சொன்னேன். இப்படிப்பட்ட வேலையைச் செய்வதில் எனக்கு வெறுப்பு எதுவும் கிடையாது. இதற்கு மாருக, இதிலும், பழக்கம் இருக்க வேண்டியது நமக்கு அவசியம் என்பதே என் அபிப்பிராயம்.

காபிர் நோயாளிகளே அதிகம் இருந்த ஓர் இடத்தில் எனக்குப் படுக்க இடம் கொடுத்திருந்தார்கள். இரவு முழுதும் அங்கே மனவேதனையோடும் பயத்தோடும் கழித்து வந்தேன். மறுநாள் இந்தியக் கைதிகள் இருந்த மற்றொரு கொட்டடிக்கு என்னைக் கொண்டு போகப் போகிறுர்கள் என்பது எனக்குத் தெரியாது. அப்படிப்பட்ட நோயாளிகளுடனேயே என்னைச் சிறை வைக்கப்போகிறுர்கள் என்று எண்ணித் திகிலடைந்து போனேன். என்றுலும், என்ன துன்பங்கள் நேரினும் அனுப விக்கவேண்டியதே என்று என்னைச் சமாதானப்படுத்திக் கொள்ள முயன்றேன். அந்த நிலைமைக்குப் பொருத்தமான

தாக இருந்த சில சுலோகங்களை என்னிடமிருந்த பகவத் கீதையிலிருந்து படித்தேன். அதைப்பற்றி எண்ணியவாறே அப்போதைய நிலையைக் குறித்துச் சமாதானம் செய்துகொண்டேன். என்னை அடைத்திருந்த அதே அறையில், காட்டுமிராண்டித்தனமான, கொலை நோக்கே கண்ணில் தென்படும் மோசமான காபிர்களும் சீனர்களும் இருந்ததே நான் பயப்பட்டதற்குக் காரணம். அவர்களுடைய பாஷையும் எனக்குத் தெரியாது. காபிர்களில் ஒருவன் என்னைச் சரமாரியாக என்னென்னவோ கேள்விகளையெல்லாம் கேட்க ஆரம்பித்து விட்டான். அவன் ஆபாசமான முறையில் என்னை ஏளனம் செய்கிறுன் என்பது மாத்திரமே எனக்குத் தெரிந்தது. அவன் என்ன கேட்கிறுன் என்பது எனக்குத் தெரியவில்லை; மௌனமாக இருந்தேன். பிறகு அரை குறையாக ஆங்கிலத்தில், "உன்னை எதற்காக அவர்கள் இங்கே கொண்டு வந்திருக்கிறுர்கள்?" என்று கேட்டான். அவனுக்கு மிகச் சுருக்கமாகப் பதில் சொல்லிவிட்டு மீண்டும் மௌனமாக இருந்துவிட்டேன். அவனுக்குப் பிறகு ஒரு சீனுக்காரன் வந்தான். அவனைவிட இவன் இன்னும் அதிக மோசமாக நடந்து கொண்டான். இவன் என் படுக்கைக்கு அருகில் வந்து என்னை உற்றுப் பார்த்தான். நான் மௌனமாகவே இருந்தேன். பிறகு நான் முன்னுல் சொன்ன காபிரின் படுக்கையருகில் சென்றுன். இருவரும் ஒருவருக்கொருவர் ஆபாசமான முறையில் ஏளனம் செய்துகொண்டார்கள். உடைகளை அவிழ்த்து உடலை ஆபாசமாகக் காட்டியும் கொண்டனர். இந்த இரு கைதிகளும் கொலைக் குற்றத்திற்காகவோ அல்லது வழிபறிக் கொள்ளைக்காகவோ அங்கே சிறை வைக்கப்பட்டிருக்கக்கூடும். இந்தப் பயங்கரங்களையெல்லாம் பார்த்த பிறகு நான் எப்படி தூங்க முடியும்?

ஒரு சமயம் மலஜலம் கழிப்பதற்காக அதற்குரிய இடத்தில் நான் போய் உட்கார்ந்ததுமே மிருகத்தனமான ஒரு முரட்டுக் காபிர் அங்கே வந்தான். நான் உடனே எழுந்து வெளியே வந்துவிடவேண்டும் என்று கூறி என்னைத் திட்டினுன். எனக்கு அதிக நேரம் ஆகாது என்று அவனிடம் கூறினேன். உடனே என்னைப் பிடித்து இழுந்து வெளியில் தள்ளிவிட்டான். அதிர்ஷ்டவசமாகப் பக்கத்திலிருந்த ஒரு கதவைப் பிடித்துக்கொண்டேன். இல்லையானுல் விழுந்திருப்பேன். இதனுல் நான் பீதி அடைந்துவிடவில்லை. ஆனுல், நான் என்ன நிலைமையில் அங்கே இருக்கிறேன் என்பதைக் காண நேர்ந்த இரண்டொரு இந்தியக் கைதிகள் கண்ணீர் விட்டுவிட்டனர்.

## 3

பிப்ரவரி 25-ஆம் தேதி நான் மூன்று மாதக் கடுங்காவல் தண்டனையை அடைந்து, மீண்டும் என் சகோதர இந்தியரையும் என் மகனையும் வால்க்ஸ்ரஸ்டு சிறையில் தழுவிக் கொண்டேன். எனது மூன்ருவது சிறை யாத்திரையைக் குறித்துக் கூற வேண்டியது அதிகம் இருக்கும் என்று நான் அப்பொழுது எண்ணவே இல்லை. ஆனால்,மனிதன் எண்ணிக்கொள்ளுவதெல்லாம் பின்னல் தவருகிவிடுவதைப் போலவே இதுவும் ஆயிற்று. இத்தடவை எனக்கு ஏற்பட்ட அனுபவம் ஒப்பற்றது. பல ஆண்டுகள் படித்தும் அறிய முடியாத பல காரியங்களை நான் அங்கிருந்து அறிந்துகொண்டேன். இந்த மூன்று மாதங்களும் அதிக மதிப்புள்ளவை என்று நான் கருதுகிறேன். சாத்விக எதிர்ப்பின் பல சாட்சிகளை நான் அங்கே கண்டேன். எனவே, மூன்று மாதங்களுக்கு முன்னல் இருந்ததைவிட அதிக உறுதியுடைய எதிர்ப்பாளனுக ஆனேன். இதற்கெல்லாம் இந்த இடத்தின் (டிரான்ஸ்வால்) அரசாங்கத்திற்கு நான் நன்றி செலுத்த வேண்டும்.

இந்தத் தடவை குறைந்தது ஆறு மாதத் தண்டனையாவது எனக்குக் கிடைக்கும் என்று பல அதிகாரிகள் பந்தயங் கட்டிக் கொண்டார்கள். வயது முதிர்ந்தவர்களும் முக்கியமானவர்களுமான என் இந்திய நண்பர்களும், என் மகனும் ஆறு மாதத் தண்டனை அடைந்தார்கள். ஆகையால் பந்தயங் கட்டினவர்கள் வெற்றி பெறவேண்டும் என்றே நானும் விரும்பினேன். என்ருலும் எனக்கு ஒரு சந்தேகமும் இருந்தது. அதுவே உண்மையாகவும் ஆயிற்று. நான் மூன்று மாதச் சிறைத் தண்டனையையே அடைந்தேன்; சட்டப்படி அளிக்கக்கூடிய அதிகத் தண்டனையும் அவ்வளவே.

நானும் அங்கே சென்றதும், ஸ்ரீமான்கள் தாவூது முகம்மது ருஸ்தம்ஜி, ஸோராப்ஜி, பிள்ளை, ஹஜீரா சிங், லால்பகதூர் சிங் முதலிய ‘போர் வீரர்’களைச் சந்தித்து ஆனந்தம் அடைந்தேன். பத்து பேரைத் தவிர மற்றவர்களுக்கெல்லாம் கூடாரங்களில் இடம் அளித்திருந்தார்கள். சிறைக்குள் கைதிகள் தூங்குவதற்குக் கூடாரங்கள் அடிக்கப்பட்டிருந்தன. அங்கே ஒரு முகாம் போன்ற காட்சி இருந்ததேயன்றி சிறைக் காட்சியாகவே இல்லை. கூடாரத்தில் தூங்குவதற்கு ஒவ்வொருவரும் விரும்பினர். அங்கே சாத்விக எதிர்ப்பாளர்கள் மொத்தம் 77 பேர் இருந்தனர்.

வேலை செய்வதற்காக வெளியில் கொண்டு போகப்பட்டவர்களுக்கு அதிக சிரமம். மாஜிஸ்டிரேட் கோர்ட்டுக்கு அருகிலிருந்த சாலையைப் போடவேண்டும். இதற்குக் கற்கள் முதலியவைகளைத் தோண்டியெடுத்துச் சுமந்து வரவேண்டும். அந்த வேலை முடிந்ததும் பள்ளிக்கூடத் தோட்டத்திலிருந்த புல்லை எடுக்கச் சொன்னார்கள். ஆனால், பெரும்பாலும் தங்கள் வேலைகளை அனைவரும் உற்சாகமாகவே செய்தார்கள். மூன்று நாட்கள் என்னையும் இக்கூட்டத்துடன் வெளியில் வேலைக்கு அனுப்பினார்கள். ஆனால், வேலை செய்வதற்கு என்னை வெளியில் அனுப்பக்கூடாது என்று இதற்குள் தந்தி வந்துவிட்டது. வெளியில் போய் வேலை செய்வதால் என் தேக நிலை நன்றாயிருந்தது; உடற்பயிற்சியும் இருந்தது. ஆகையால் வெளியில் போவதை விரும்பினேன். இனி என்னை வெளியே கொண்டு போகமாட்டார்கள் எனத் தெரிந்ததும் மனச்சோர்வு அடைந்துவிட்டேன். வழக்கமாக நான் தினமும் சாப்பிடுவது இரண்டு வேளையே. ஆனால், வெளியே போய் வேலை செய்துவந்தால் எனக்கு மூன்று தடவை பசி எடுக்கும். இம்மாறுதலுக்குப் பிறகு எனக்குக் கூட்டியெடுக்கும் வேலை கொடுத்தார்கள். ஆனால், இது உருப்படா வேலை. கொஞ்ச காலத்திற்குப் பிறகு அந்த வேலையும் இல்லை.

## வால்க்ஸ்ரஸ்ட்டிலிருந்து போனது ஏன்?

என்னைப் பிரிட்டோரியாவுக்கு அனுப்ப உத்தரவிட்டிருக்கிறார்கள் என்று மார்ச் 2-ஆம் தேதி கேள்விப்பட்டேன். புறப்படத் தயாராயிருக்கும்படி கூறிவிட்டனர். கொட்டும் மழையில் என் சாமான்களைத் தலையில் தூக்கிக்கொண்டு, கரடுமுரடான வழியில் நடந்து நானும் என் வார்டரும் ஸ்டேஷனுக்குப் போக வேண்டும். மாலை வண்டியில் மூன்றும் வகுப்பில் ஏறி நாங்கள் புறப்பட்டோம்.

நான் அனுப்பப்பட்டு விட்டதால், பலவித ஊகங்கள் எழுந்தன. சமரசம் சமீபித்துவிட்டது என்று சிலர் எண்ணினர். வேறு சிலரோ, என்னை என் சகாக்களிடமிருந்து பிரித்துத் தனியாக வைத்து என்னை அதிகமாகக் கொடுமைப்படுத்த விரும்புகிறார்கள் என நினைத்தனர். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் விவாதங்கள் ஏற்படாதிருக்க வேண்டும் என்பதற்காக எனக்கு அதிகச் சுயேச்சையையும் வசதிகளையும் கொடுக்கக்கூடும் என்று மற்றும் சிலர் கருதினர்கள்.

இரவு பகல் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு ஆனந்தமாகக் காலங்கழித்து வந்ததால் வால்க்ஸ்ரஸ்ட்டிலிருந்து போக நான் விரும்பவில்லை. ஸ்ரீ கஜூரா சிங்கும், ஸ்ரீ ஜோஷியும் எப்போதும் எங்களை ஏதாவது கேள்வி கேட்டுக்கொண்டிருப்பார்கள். இக்கேள்விகள், பயனில்லாதவையோ, சாதாரணமானவையோ அல்ல. விஞ்ஞானம். வேதாந்தம் பற்றிய கேள்விகள் இவை. அப்படிப்பட்ட நண்பர்களையும், அப்படிப்பட்ட முகாமையும் விட்டுவிட்டுப் போக யார்தாம் விரும்புவார்கள்?

நாம் நினைக்கிறபடியெல்லாம் நடந்துவிடுவதென்ருல், நாம் மனிதப் பிறப்பு என்று சொல்லப்பட வேண்டியதே இல்லை. ஆகையால், பேசாமல் அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டேன். சாலையில் ஸ்ரீ காஜிக்குச் சலாம் செய்துவிட்டு நானும் வார்டரும் வண்டியில் ஏறிக்கொண்டோம். ஒரே குளிர்; இரவு முழுதும் மழையும் விடாமல் பெய்துகொண்டிருந்தது. என் மேல் குளிர்ச் சட்டை ஒன்று இருந்தது. அதை உபயோகித்துக்கொள்ள அனுமதித்தனர். வழியில் என் சாப்பாட்டுக்கு ரொட்டியும் பால் கட்டியும் கொடுத்தார்கள். ஆனல், புறப்படும் முன்பே நான் சாப்பிட்டு விட்டதால், அவற்றை என்னுடன் இருந்த வார்டருக்குக் கொடுத்துவிட்டேன்.

## பிரிட்டோரியா சிறை : ஆரம்பம்

3-ஆந் தேதி பிரிட்டோரியா போய்ச் சேர்ந்தோம். எல்லாம் புதிதாகத் தோன்றின. சிறை புதிய கட்டடம்; ஆட்கள் புதியவர்கள். சாப்பிடச் சொன்னர்கள்; ஆனல் ஒரு கரண்டி எடுத்து ருசி பார்த்துவிட்டு அப்படியே வைத்துவிட்டேன். இதைப் பார்த்து என் வார்டர் ஆச்சரியப்பட்டுவிட்டான். எனக்குப் பசி இல்லை என்று சொன்னேன்; அவன் சிரித்தான். பிறகு என்னை மற்ருெரு வார்டரிடம் ஒப்படைத்தான். அவன், "காந்தி, குல்லாயைக் கழற்றிக்கொள்ளும்," என்ருன். அப்படியே செய்தேன். பின்னர் அவன், "நீர் காந்தியின் மகனு?" என்று கேட்டான். "இல்லை. அவன் ஆறுமாதத் தண்டனை பெற்று வால்க்ஸ்ரஸ்ட்டுச் சிறையில் இருக்கிருன்" என்றேன். பிறகு என்னை ஒரு சிறை அறையில் அடைத்தான். அதனுள் நான் குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருந்தேன். உள்ளே பார்ப்பதற்காகக் கதவிலுள்ள துவாரத்தின் வழியே அவன் இதைப் பார்த்துவிட்டு "காந்தி, அப்படி நடக்காதீர்! தரை கெட்டுவிடும்" என்ருன். நடப்பதை நிறுத்தி ஒரு மூலையில் சும்மா நின்றுகொண்டேன். என்

புத்தகங்களும் எனக்கு இன்னும் கிடைக்கவில்லை. ஆகையால் படிக்கவும் எனக்கு எதுவும் கிடையாது. எட்டு மணிக்கு என்னை உள்ளே அடைத்தார்கள்; பத்து மணிக்கு டாக்டரிடம் என்னைக் கொண்டு போனார்கள். எனக்குத் தொற்று நோய் ஏதாவது உண்டா என்பதை மாத்திரமே டாக்டர் என்னைக் கேட்டார்; பிறகு என்னைப் போகச் சொல்லிவிட்டார். பிறகு 11 மணிக்கு ஒரு சிறு அறையில் என்னை அடைத்தார்கள். என் தண்டனைக்காலம் முழுவதையும் அதிலேயே கழித்தேன். ஒரு கைதியே இருப்பதற்கெனக் கட்டப்பட்ட அறையாகவே தோன்றியது. அதன் நீளம் 10 அடி, அகலம் 7 அடி. தரை ஒரே கறுப்பு. அந்தத் தரை பளபளப்பாக இருக்கச் செய்ய வார்டர் முயன்று வந்தான். வெளிச்சமும் காற்றும் வர இரும்புக் கம்பி போட்ட ஒரு சிறு கண்ணாடிச் சன்னல். இரவில் உள்ளே இருப்பவர்களைப் பார்க்க ஒரு மின்சார விளக்கு உண்டு. அந்த விளக்கு கைதிகளின் உபயோகத்திற்காக அல்ல. படிப்பதற்கு வேண்டிய வெளிச்சம் தரக்கூடியதும் அன்று அது. அதற்குப் பக்கத்தில் போய் நின்று பார்த்தால், பெரிய எழுத்துள்ள புத்தகங்களையே அந்த வெளிச்சத்தில் படிக்க முடியும். அதுவும் இரவு 8 மணிக்கெல்லாம் அணைக்கப்பட்டுவிடும். ஆனால், உள்ளிருக்கும் கைதியை வார்டர், கதவின் துவாரத்தின் வழியாகக் கவனிப்பதற்காக ஐந்து அல்லது ஆறு தடவை இரவில் அவ்விளக்கு ஏற்றப்படும்.

பதினொரு மணிக்குப் பிறகு சிறையின் உதவி கவர்னர் வந்தார். அவரிடம் சில கோரிக்கைகளைக் கூறினேன் : என் புத்தகங்களைத் தர வேண்டும்; நோயுற்று இருக்கும் என் மனைவிக்குக் கடிதம் எழுத அனுமதி வேண்டும்; உட்கார்ந்துகொள்ளுவதற்கு ஒரு சிறு பலகை தேவை. இவையே நான் கோரியவை. முதலாவது கோரிக்கைக்கு, கவனிப்பதாகச் சொன்னார். இரண்டாவதற்கு, கடிதம் எழுதலாம் என்றார். மூன்றாவது கோரிக்கைக்கு, 'இல்லை' என்று சொல்லிவிட்டார். பிறகு என் மனைவிக்கு குஜராத்தியில் கடிதம் எழுதித் தபாலில் அனுப்புவதற்காகக் கொடுத்தேன். அதை ஆங்கிலத்தில் எழுத வேண்டும் என்று அக்கடிதத்தின் பேரிலேயே எழுதித் திருப்பி அனுப்பிவிட்டார். என் மனைவிக்கு ஆங்கிலம் தெரியாது என்றும், என் கடிதங்கள் அவளுக்கு எவ்வளவோ மன ஆறுதலை அளிக்கும் என்றும், அதில் விசேடமாக நான் எழுதிவிடக் கூடியது எதுவுமில்லை என்றும் அவரிடம் சொன்னேன். என்றாலும், எனக்கு அனுமதி கிடைக்கவில்லை. ஆங்கிலத்தில் எழுதப் போவதில்லை என மறுத்து

விட்டேன். மாலையில் என் புத்தகங்களை எனக்குக் கொடுத்தார்கள்.

கதவு மூடப்பட்டிருக்கும் என் சிறை அறைக்குள் நின்றபடியே நான் என் மத்தியானச் சாப்பாட்டைச் சாப்பிட வேண்டியிருந்தது. மூன்று மணிக்குக் குளிக்க அனுமதி கேட்டேன். "சரி, உம் ஆடைகளை யெல்லாம் இங்கேயே கழற்றிப் போட்டுவிட்டுக் குளிக்கப் போம்" என்றான் வார்டர். (குளிக்கும் இடம் என் அறையிலிருந்து 125 அடி தூரத்தில் இருந்தது.) ஆட்சேபணை எதுவும் இல்லையென்றால் என் உடைகளை குளிக்கும் இடத்தில் இருக்கும் படுதாவின் பேரில் போட்டுவிட்டுக் குளிக்கிறேன் என்றேன். இதை அனுமதித்தான். ஆனால், ''காலதாமதம் செய்யக் கூடாது'' என்றான். என் உடம்பை அலம்புவதற்கு முன்பே, ''காந்தி! முடிந்துவிட்டதா?'' என்று கூச்சல் போட்டான். ''ஒரு நிமிடத்தில் முடித்து விடுகிறேன்" என்றேன். ஓர் இந்தியரின் முகத்தைக்கூட அங்கே காணமுடியவில்லை.

மாலையில் ஒரு துப்பட்டியும், படுத்துக்கொள்ளுவதற்கு ஒரு நார்ப் பாயும் கொடுத்தார்கள். தலையணையோ, பலகைக் கட்டையோகூடக் கிடையாது. மலஜலங்கழிக்கும்போதுகூட என்னை ஒரு வார்டர் பார்த்துக் கொண்டே இருப்பான். நான் இருப்பதைப் பார்க்க முடியாது போய்விட்டால், ''சாமி, வெளியில் வா'' என்று கத்துவான். ஆனால், சாமிக்கோ ஒரு கெட்ட பழக்கம். இப்படிப்பட்ட ஒரு நிலைமையில்கூட, வேண்டிய முழு நேரத்தையும் உபயோகித்துக்கொண்டு விடும் அவர், எப்படி உடனே எழுந்து வந்து விடுவார்? அவர் அப்படிச் செய்வதும் அவருக்குச் சுலபமான காரியமல்ல. சில சமயங்களில் வார்டர்களும், சில சமயங்களில் காபிர்களும் உள்ளே எட்டிப் பார்ப்பார்கள்; ''எழுந்திரு'' என்றும் சில சமயங்களில் கத்துவார்கள்.

அடுத்த நாள் எனக்குக் கொடுக்கப்பட்ட வேலை, தரைக்கும் கதவுகளுக்கும் மெருகு போடுவது. கதவு, வார்னிஷ் பூசப்பட்ட இரும்பு. அதைத் தேய்ப்பதால் என்ன மெருகு ஏறிவிடும்? ஒவ்வொரு கதவையும் மூன்று மணிநேரம் தேய்த்தேன். ஆனால், எந்த மாறுதலையும் நான் காணவில்லை. அவை முன்பு போலவே இருந்தன.

## உணவு

மேலே சொன்ன மற்ற நிலைமைகளுக்கு ஏற்றாற்போலவே உணவும் இருந்தது.

மாலையில் அரிசிச் சோற்றுக்கு நெய் கொடுக்கப்படுவதில்லை என்பதை நான் அறிவேன். இக்குறையைப் போக்கிக்கொள்ளு வதைக் குறித்து எண்ணினேன். தலைமை வார்டரிடம் இதைப் பற்றிப் பேசினேன். மாமிசத்திற்குப் பதிலாகப் புதன், ஞாயிறு மத்தியானத்திலேயே நெய் கொடுக்கப்படுகிறது என்றும், மேற் கொண்டும் நெய் வேண்டுமென்றால் நான் டாக்டரைப் பார்க்க வேண்டுமென்றும் அவர் சொன்னார். மறுநாள் டாக்டரைப் பார்க்கவேண்டும் என்று மனுச் செய்தேன். என்னை அவரிடம் அழைத்துச் சென்றார்கள்.

எல்லா இந்தியருக்கும் கொழுப்புக்குப் பதிலாக நெய் கொடுக்க உத்தரவிடும்படி கேட்டுக்கொண்டேன். தலைமை வார்டரும் உடன் இருந்தார். காந்தியின் கோரிக்கை சரியல்ல என்று அவர் சொன்னார். இது வரையில் இந்தியர் கொழுப்பை யும் மாமிசத்தையும் உண்டு வந்திருக்கின்றனர்; கொழுப்பை ஆட்சேபிக்கிறவர்களுக்கு வெறும் அரிசி மாத்திரமே கொடுக்கப் பட்டது. ஆட்சேபிக்காமல் அவர்கள் சாப்பிட்டு வந்திருக்கிறார் கள். சாத்விகச் சட்ட மறுப்பாளர்களும் அப்படியே செய்து வந்திருக்கின்றனர். சிறையிலிருந்து போகும்போது உடலில் அதிகக் கனம் ஏறிப் போயும் இருக்கிறார்கள் என்று தலைமை வார்டர் கூறினார். "இதற்கு நீர் என்ன சொல்லுகிறீர்?" என்று டாக்டர் என்னைக் கேட்டார். இந்தக் கதையை நான் அப்படியே நம்பிவிட முடியாது என்றேன். என்னைப் பொறுத்தவரையில், நெய் இல்லாமல் அரிசிச்சோறு சாப்பிடும்படி என்னைக் கட்டாயப் படுத்தினால் என் உடல் நிலை கெட்டுவிடும் என்றும் கூறினேன். இதற்கு டாக்டர், "உமக்கு மாத்திரம் ரொட்டி கொடுக்கும்படி உத்தரவிடுகிறேன்" என்றார். இதற்கு நான், "நன்றி, ஆனால், நான் கேட்டுக்கொண்டது எனக்காக மாத்திரமன்று. மற்றவர் களுக்கும் நெய் கொடுக்கப்படும் வரையில் எனக்கு மாத்திரம் ரொட்டியை நான் ஏற்றுக்கொள்ள முடியாது" என்றேன். "அப்படியானால் இனி நீர் என்பேரில் குறை சொல்ல முடியாது" என டாக்டர் கூறினார்.

மீண்டும் மனுச் செய்தேன். நேட்டாலில் இருப்பதைப் போலவே உணவு விதிகள் செய்யப்படும் என்று அறியலானேன். அதையும் நான் கண்டித்ததோடு, எனக்கு மாத்திரம் நெய் என் பதை நான் ஏன் ஏற்றுக்கொள்ளமுடியாது என்பதற்குக் காரணங் களையும் சொன்னேன். கடைசியாக, ஒன்றரை மாதங்கள் கழிந்த பிறகு, எனக்கு ஒரு பதில் வந்தது. எங்கெங்கு இந்தியக் கைதிகள்

அதிகமாக இருக்கிறார்களோ அங்கே அவர்களுக்கு அநேகமாக நெய் கொடுக்கவேண்டும் என்று உத்தரவிட்டிருப்பதாக அதில் கண்டிருந்தது. இவ்விதம் ஒன்றரை மாதங்களுக்குப் பிறகு என் உண்ணாவிரதத்தை நிறுத்தினேன் என்றே சொல்லவேண்டும். கடைசி மாதத்தில் நான் அரிசிச்சோறு, நெய், ரொட்டி சாப்பிட முடிந்தது. காலை ஆகாரத்தை நான் சாப்பிடுவதே இல்லை. மத்தியானத்தில் வரும் கஞ்சியின் தயாரிப்பு தினத்திற்கு ஒரு தினுசாக இருக்கும். ஆகையால் அதில் பத்துக் கரண்டிகூட நான் சாப்பிடுவதில்லை. என்றாலும் ரொட்டி, சாதம் சாப்பிட்டதில் எனக்கு நல்ல சத்துக் கிடைத்தது; என் தேகநிலையும் சீர்பட்டது. நான் ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், நான் தினம் ஒரு வேளை மாத்திரமே சாப்பிட்டு வந்தபோது என் உடல் தளர்ந்து விட்டது; பலத்தையெல்லாம் இழந்துவிட்டேன். என் நெற்றியில் பாதிப் பாகத்தில் கடுமையான வலியும் இருந்தது. பலவீனத்தின் அறிகுறி என் மார்பிலும் தெரிந்தது.

தேகநிலை கெட்டு, சிறைக்குள்ளிருந்து வெளியில் வந்தால், சரியான உணர்ச்சியுடன் அவர்கள் அங்கே இல்லை என்றே கருதப்படும் என்று நான் சாத்விகச் சட்டமறுப்பாளர்கள் பலரிடம் கூறியிருக்கிறேன். சிறைகளை அரண்மனைகளாகப் பாவித்துக் கொள்ளவேண்டும் என்றேன். ஆனால், என் தேக நிலை கெட்டு வருவதைக் கண்டதும் இதற்காக வெளியே போய்விட நேர்ந்து விடுமோ என்ற பயம் எனக்கு ஏற்பட்டது. எனக்கு மாத்திரம் நெய் கொடுப்பது என்ற சலுகையை ஏற்றுக்கொள்ள நான் மறுத்துவிட்டேன் என்பதை மறந்துவிடக்கூடாது. ஆகையால் என் தேகநிலை கெடுவதற்கு இடமுண்டு. ஆனால், இது மற்றவர்களுக்கும் பொருந்தாது. ஏனெனில், ஒவ்வொரு கைதியும் தான் சிறையில் இருக்கும்போது, தனக்குச் சில சலுகைகள் அளிக்கப்பட்டு அதன் மூலம் தனது தேகநிலையைப் பாதுகாத்துக் கொள்ளலாம்.

## மற்ற மாறுதல்கள்

என்னை என் வார்டர் கடுமையாக நடத்திவந்தான் என்று கூறியிருக்கிறேன். ஆனால், நீண்டகாலம் இவ்விதம் நடக்கவில்லை. உணவு முதலியவைகளுக்காக நான் அரசாங்கத்துடன் போராடிக் கொண்டிருந்தேன். என்றாலும், தன்னுடைய உத்தரவுக்கு மாத்திரம் தட்டாமல் படிந்து நடந்து வருகிறேன் என்பதைக் கண்டதும், அவன் தன் போக்கை மாற்றிக்கொண்டு நான் விரும்பியபடி நடந்துகொள்ள அனுமதித்துவிட்டான். குளிப்பது, ஜலமலம்

கழிப்பது போன்றவைகளில் எனக்கு இருந்த தொல்லைகளெல்லாம் இவனால் ஒழிந்தன. ஏதாவது செய்ய எனக்கு உத்தர விடுவதுபோல் காட்டாமல் அவ்வளவு மரியாதையாக என்னிடம் நடந்துகொண்டான். அவனுக்குப் பதிலாக வந்த மற்றோர் வார்டரோ ஒரு பாஷா போன்றவன். என் சௌகரியத்துக்கு வேலை செய்வதிலேயே இவன் எப்பொழுதும் ஆர்வத்துடன் இருப்பான். "தங்கள் சமூகத்திற்காகப் பாடுபடுகிறவரிடம் எனக்கு அதிக அன்பு உண்டு. நானே அப்படிப் போராடு கிறவன்தான். உங்களைக் கைதியாக நான் கருதவில்லை" என்றான். இவ்விதம் எனக்கு ஆறுதல் கூறினான்.

ஆரம்பத்தில் நான் உட்கார பெஞ்சுப் பலகை மறுக்கப்பட்ட போதிலும், சில தினங்களுக்குப் பிறகு தலைமை வார்டரே ஒரு பெஞ்சு அனுப்பினார். இதற்கு மத்தியில் நான் படிப்பதற்குச் சமய நூல்கள் இரண்டு, ஜெனரல் ஸ்மட்ஸிடமிருந்து வந்தன. அதிலிருந்து நான் ஒரு முடிவுக்கு வந்தேன். நான் சிறையில் அனுபவிக்க நேர்ந்த துன்பங்களெல்லாம் வேண்டுமென்றே ஜெனரல் ஸ்மட்ஸ் உத்தரவிட்டதனால் அல்ல; அவரும் மற்றவர் களும் அசிரத்தையாக இருந்ததனாலும், காபிர்களைப் போன்றவர் களே இந்தியரும் என்று கருதப்பட்டதனாலுமே என்று முடிவு செய்துகொண்டேன். என்னை மாத்திரம் தனியாகப் பிரித்து வைத்துவிட்டதன் ஒரே நோக்கம், மற்றவர்களுடன் நான் பேசுவதைத் தடுப்பதற்கே என்றும் தோன்றியது. கொஞ்சம் சிரமப்பட்டபிறகு ஒரு நோட்டுப் புத்தகத்தையும் பென்சிலையும் வைத்துக்கொள்ளவும் அனுமதி கிடைத்தது.

## டைரக்டரின் விஜயம்

என்னைப் பிரிட்டோரியாவுக்குக் கொண்டு போவதற்கு முன்னால், ஸ்ரீ லிச்சன்ஸ்டீன் விசேஷ அனுமதி பெற்று என்னைப் பார்த்தார். காரியாலய வேலையாக என்னைக் காணவே அவர் வந்தார். ஆனால், நான் எப்படி இருக்கிறேன் என்பதைப் பற்றி யெல்லாம் கேட்டார். அது சம்பந்தமாக அவருக்குப் பதில் சொல்ல நான் விரும்பவில்லை. எனினும், அவர் வற்புறுத்திக் கேட்டார். அதன்பேரில் நான், "எல்லாவற்றையும் நான் உங்க ளிடம் கூறமாட்டேன். ஆனால், ஒன்று மாத்திரம் சொல்லுகிறேன். என்னைக் கொடூரமாக நடத்தினார்கள். இதனால் நான் படிந்து விடவேண்டும் என்று ஜெனரல் ஸ்மட்ஸ் விரும்புகிறார். எனக்கு என்ன நேர்ந்தாலும் அவற்றையெல்லாம் அனுபவிக்கத் தயாரா யிருக்கிறேனாகையால் அவர் நினைப்பது மட்டும் நடக்காது.

என் மனம் அமைதியாக இருக்கிறது. ஆனல், இதை நீங்கள் பிரசுரித்துவிடக்கூடாது. நான் வெளியே வந்ததும் பிரசுரித்துக் கொள்ளுகிறேன்" என்றேன். இதை அவர் ஸ்ரீ போலக்குக்குச் சொன்னர். இதை அவர் மனத்தில் வைத்துக்கொள்ள முடியாமல் மற்றவர்களிடம் கூறினர். அதன்பேரில் ஸ்ரீ டேவிட் போலக், லார்டு செல்போர்னுக்கு எழுதினர். ஒரு விசாரணையும் நடந்தது. இதற்காகவே வார்டர் வந்தார். அவரிடம் மேலே சொன்னபடி அதே வார்த்தைகளையே சொன்னேன். நான் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருக்கிற குறைபாடுகளைப் பற்றியும் எடுத்துச் சொன்னேன். பின்னர் பத்து தினங்களில் தலையணை, இரவில் போட்டுக்கொள்ளும் சட்டை ஒன்று, கைக்குட்டை ஆகியவைகளை எனக்கு அனுப்பினர். நான் வாங்கிக்கொண்டேன். நான் அவருக்கு அனுப்பிய கோரிக்கையில் இந்த வசதிகளை எல்லா இந்தியருக்கும் அளிக்கும்படிக் கேட்டுக்கொண்டேன். உண்மையைச் சொல்லப்போனல், இவ்விஷயங்களில் வெள்ளைக்காரர்களைவிட இந்தியர்கள் மென்மையானவர்கள். தலையணை இல்லாமல் அவர்களால் முடியாது.

## கை விலங்குகள்

ஆரம்பத்தில் நான் சிறையில் நடத்தப்பட்ட விதத்தின் காரணமாக எனக்கு ஏற்பட்ட அபிப்பிராயத்தை இப்பொழுது நடப்பவைகள் ஊர்ஜிதம் செய்தன. நான்கு நாட்கள் கழித்து, ஸ்ரீ பிள்ளையின் வழக்கில் நான் சாட்சி கூறவேண்டும் என்று எனக்கு ஒரு சம்மன் வந்தது. எனவே, என்னைக் கோர்ட்டுக்குக் கொண்டு போனர்கள். இச்சமயத்தில் எனக்குக் கைவிலங்குகளைப் பூட்டினர்; வார்டர் சீக்கிரத்திலேயே விலங்குகளை மாட்டிவிட்டார். எவ்வித நோக்கமுமின்றிச் சாதாரணமாகவே இது செய்யப்பட்டது என்று நினைக்கிறேன். தலைமை வார்டரும் என்னைப் பார்த்தார். ஒரு புத்தகத்தையும் உடன் கொண்டுபோக அவரிடம் நான் அனுமதியும் பெற்றேன். கை விலங்கிடப்பட்டிருப்பதற்காக நான் வெட்கப்படுகிறேன் என்றும், அதை மறைத்துக்கொள்ளவே புத்தகத்தை வைத்துக்கொள்ள அனுமதி கேட்கிறேன் என்றும் அவர் நினைத்தாரெனத் தெரிகிறது. அதனல் அவர் கைவிலங்கை மறைத்துக்கொள்ளும் விதத்தில் புத்தகத்தைக் கையில் பிடித்துக் கொள்ளும்படி எனக்குக் கூறினர். கை விலங்கிடப்பட்டிருப்பதால் கௌரவிக்கப்பட்டிருக்கிறேன் என்ற உணர்ச்சியே எனக்கு இருந்து வந்ததால் அவர் சொன்னது எனக்குச் சிரிப்பை உண்டாக்கிவிட்டது.

என்னிடம் இருந்த புத்தகம், 'கடவுளின் நீதிஸ்தலம், அவரவர் உள்ளத்தில் இருக்கிறது' என்பதாகும். இது சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமுள்ள சந்தோஷமானதொரு சம்பவம் என்று எண்ணினேன். ஏனெனில், என் உள்ளத்தில் கடவுள் உறையும்படிச் செய்துகொண்டு விடுவேனுயின் புறத்தே இருக்கும் இன்னல்கள் எனக்கு என்ன துன்பங்களை விளைவித்துவிட முடியும், அந்த இன்னல்களைப் பற்றி எனக்கு என்ன கவலை என்று கருதினேன். இவ்விதம் எனக்குக் கைவிலங்கு போட்டு நடத்தியே கோர்ட்டுக்குக் கொண்டுபோனுர்கள்.

## சாத்விக எதிர்ப்பின் பாடங்கள்

மேலே கண்ட சில விவரங்களெல்லாம் அற்பமானவை என்று கருதப்படலாம். ஆனல், நான் அவற்றைக் கூறியிருப்பதன் காரணம், அற்ப விஷயத்திற்கும் முக்கியமான காரியங்களுக்கும் எதிர்ப்புத் தத்துவத்தை உபயோகிக்கமுடியும் என்பதைக் காட்டுவதற்கே யாகும். வார்டர், என் உடலுக்கு இழைத்த துன்பங்களையெல்லாம் பொறுமையுடன் சகித்து வந்தேன். இதனல் நான் பொறுமையும் அமைதியும் கொண்டிருக்க முடிந்ததோடு முடிவில் அவற்றை அவனே விலக்கிவிட வேண்டியதாயிற்று. அவனை எதிர்த்திருப்பேனுயின் என்னுடைய மன வலிமை உரனற்றுப் போயிருக்கும். மேலும், நான் செய்ய வேண்டிய முக்கியமான இந்தக் காரியங்களை நான் செய்ய முடியாமலும் போய் இருக்கும்; அவனை எனக்கு விரோதியாகவும் ஆக்கிக்கொண்டிருப்பேன்.

சாத்விக முறையில் நான் எதிர்த்து. ஆரம்பத்தில் கஷ்டங்களையும் அனுபவித்ததால் முடிவில் என்னுடைய உணவுச் சங்கடங்களும் விலகலாயின. இந்தத் துன்பங்களினுலெல்லாம் நான் அடைந்த மிகப் பெரிய நன்மை, உடல் சிரமம் அதிகமாகப் படவேண்டியிருந்ததேயாகும். என்னுடைய மனவலிமை தெளிவாக அதிகரித்துக்கொண்டு வந்ததை நான் காண முடிந்தது; அது இன்னும் அப்படியே இருந்துவருகிறது. சென்ற மூன்று மாதங்களின் அனுபவம், அத்தகைய துன்பங்களையெல்லாம் இன்னும் மிக எளிதில் அனுபவிப்பதற்கு என்னை நன்ருகவே பக்குவம் செய்துவிட்டது. இத்தகைய மனச்சாட்சியோடு கூடிய எதிர்ப்பாளர்களுக்கு இத்தகைய சோதனைகளை உண்டாக்கி அவர்கள் அனுபவிக்கட்டும் என்பதற்காகக் கடவுளே துன்பங்களையும் தந்து உதவுகிருர் என்று நான் உணருகிறேன்.

## நான் படித்தவை

என்னுடைய இன்பத்தின் அல்லது துன்பத்தின் கதை முடிகிறது. இந்த மூன்று மாதங்களில் நான் அடைந்த பல நன்மைகளில் ஒன்று, படிப்பதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்ததாகும். ஒன்றை நான் ஒப்புக்கொள்ள வேண்டும்; படிக்கும்போது, தொடக்கத்தில் எனக்கு மனச்சோர்வும் பலவிதமான சிந்தாகுலங்களும் இருந்து வந்தன. துன்பங்களையெல்லாம் அனுபவித்து அலுத்துப்போனேன். என் மனமும் ஒரு நிலையில் இராமல் குரங்காட்டம் காண்பித்தது. இத்தகைய மனநிலை பலரைப் பைத்தியம் ஆக்கிவிடுகிறது. ஆனால், என்னைப் பொறுத்தவரையில் என்னுடைய புத்தகங்கள் என்னைக் காப்பாற்றின. என் இந்திய சகோதரர்களுடன் கூடிப் பழக முடியாது போனதால் ஏற்பட்ட நஷ்டத்தில் பெரும் அளவை இவை ஈடு செய்துவிட்டன. எனக்குப் படிக்க மூன்று மணி நேரம் எப்பொழுதும் கிடைத்து வந்தது.

இதனல் சுமார் முப்பது நூல்களை நன்ருகப் படிக்கவும் மற்றவைகளை மேலெழுந்தவாரியாகப் பார்க்கவும் முடிந்தது. ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, சமஸ்கிருதம், தமிழ் நூல்கள் இவற்றுள் அடங்கியவை. இவற்றில் டால்ஸ்டாய், எமெர்ஸன், கார்லைல் ஆகியோரின் நூல்கள் குறிப்பிடத்தக்கவை எனக் கருதுகிறேன். முந்திய இருவரின் நூல்கள் சமய சம்பந்தமானவை. சிறையிலிருந்து பைபிளும் இரவல் வாங்கிக்கொண்டிருந்தேன். டால்ஸ்டாயின் நூல்கள் எளிய நடையில் உள்ளன. படிக்க அவ்வளவு சுலபமானவை; யாரும் அவற்றைப் படித்துப் பயன் அடைய முடியும். மேலும், தாம் போதிப்பதையே நடை முறையில் கையாண்டு வருபவர் அவர். ஆகவே, அவருடைய எழுத்துக்கள் அதிக நம்பிக்கையை ஊட்டுகின்றன.

கார்லைலின் 'பிரெஞ்சுப் புரட்சி' மிகச் சிறந்த நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இந்தியரின் துயரங்களை நீக்கிக்கொள்ளுவதற்குப் பரிகாரத்தை வெள்ளைக்கார நாட்டினரிடமிருந்து நாம் அறிந்துகொள்ள முடியாது என்று நான் எண்ணும்படி அந்த நூல் செய்தது. ஏனெனில், பிரஞ்சு மக்கள் தங்களுடைய புரட்சியினல் சிறப்பான நன்மை எதையும் அடைந்துவிடவில்லை என்பது என் கருத்து. மாஜினியின் கருத்தும் இதுவேதான். இதைக் குறித்துப் பலத்த அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன; அவற்றை இங்கே குறிப்பிடுவதும் சரியன்று.

அவற்றில்கூட, சாத்விக எதிர்ப்புச் சம்பவங்கள் சிலவற்றை நான் கண்டேன்.

சுவாமிஜி, எனக்கு குஜராத்தி, ஹிந்தி, சம்ஸ்கிருத நூல்களை அனுப்பினர். பட்ட கேசவராம், 'வேத சப்த சங்கலனம்' என்ற நூலை அனுப்பியிருந்தார். ஸ்ரீ மோதிலால் திவான் உபநிஷதங்களை அனுப்பினர். 'மனுஸ்மிருதி,' போனிக்ஸில் பிரசுரமான 'ராமாயண சாரம்', 'பதஞ்சலி யோக தரிசனம்', 'நாதுராம்ஜியின் 'ஆஹ்நிக பிரகாசம்', பேராசிரியர் பரமானந்தர் கொடுத்த 'சந்தியா குடிகா', 'பகவத் கீதை', காலஞ் சென்ற கவி ஸ்ரீ ராஜசந்திரரின் நூல்கள் ஆகியவைகளையும் படித்தேன். இவை சிந்தனைக்கு ஆக்கம் அளித்தன. உபநிஷதங்கள் என்னுள் அதிக சாந்தியை உண்டாக்கின. முக்கியமாக, அவற்றில் ஒரு வாக்கியம் என்னை அதிகமாகக் கவர்ந்தது. 'நீ எதைச் செய்தாலும், அதை நீ ஆன்மாவின் நன்மைக்காகவே செய்ய வேண்டும்' என்பது அதன் பொருள். இந்த வாக்கியங்கள் மிக மிக முக்கியமானவை, ஆழ்ந்து சிந்திக்கப்பட வேண்டியவை.

கவி ஸ்ரீ ராஜசந்திரரின் நூல்களைப் படித்தே நான் அதிகத் திருப்தியைப் பெற்றேன். எங்கும் நம்பிக்கையைப் பரப்பிப் பிரபலம் அடைவதற்கு உதவக்கூடிய நூல்கள் அவை என்பது என் அபிப்பிராயம். அவருடைய வாழ்க்கை அற்புதமானது; டால்ஸ்டாயின் வாழ்க்கையைப் போன்று உயர்வானது. அவற்றிலிருந்தும், சந்தியா நூலிலிருந்தும் சில பகுதிகளை மனப்பாடமாகச் செய்து கொண்டேன். இரவில் படுத்துக்கொண்டு தூங்காமல் இருக்கையில் அவற்றைக் கூறிக்கொள்ளுவேன். ஒவ்வொரு நாளும் காலையில் அவற்றைப்பற்றிச் சிந்தனை செய்து, மனப்பாடமாகியிருப்பதைச் சொல்லுவேன். இது, இரவு பகல் என் மனத்தை ஆனந்தமான நிலையில் இருக்கும்படிச் செய்தது. சமயங்களில் ஏமாற்றமோ அல்லது மனச்சோர்வோ ஏற்படுமானல் நான் படித்திருந்தவைகளைக் குறித்து அப்பொழுது எண்ணுவேன். உடனே என் உள்ளத்தில் இன்பம் ஏற்படும். கடவுள் கிருபையால், இந்த உலகத்தில் நல்ல தோழர்களில்லாத குறையை நல்ல நூல்கள் போக்கிவிடும். ஆகையால் எல்லா இந்தியர்களும் சிறையில் ஆனந்தமாக இருந்துவிட விரும்பினல், நல்ல புத்தகங்களைப் படிக்க அவர்கள் பழகிக் கொள்ள வேண்டும்.

## எனது தமிழ்ப் படிப்பு

இந்தப் போராட்டத்தில் தமிழர்கள் செய்திருப்பதைப் போல வேறு எந்த இந்திய சமூகத்தினரும் அவ்வளவு செய்து இருக்கவில்லை. ஆகையால், வேறு காரணங்களுக்காக அல்ல என்றாலும், தமிழர்களுக்கு எனது மனப்பூர்வமான நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுவதை முன்னிட்டாவது, தமிழ்ப் புத்தகங்களை நான் சரியாகப் படித்தாக வேண்டும் என்று நினைத்தேன். எனவே, சிறைவாசத்தின் கடைசி மாதத்தை அவர்களுடைய மொழியைக் கவனமாகக் கற்பதில் கழித்தேன். படிக்கப் படிக்க அந்த மொழியின் அழகை நன்றாக அறியலானேன். அது கவர்ச்சி தரும் இனிய மொழி; அதன் அமைப்பு, நான் அதில் படித்து அறிந்ததிலிருந்து பழங்காலத்தேயன்றி இன்றுங்கூட, அனேக அறிஞர்களும், திறமை மிக்கவரும் தமிழர்களிடையே இருந்தனர், இருக்கிறார்கள் என்பதைக் கண்டேன். மேலும், இந்தியா ஒரே தேசீய இனமாக இருக்கவேண்டுமானால், சென்னை மாகாணத்திற்கு வெளியில் இருப்போர் தமிழைக் கற்றுத் தெரிந்திருக்க வேண்டும்.

இந்த அனுபவங்களையெல்லாம் கவனிப்பதன் பலனாக தேசாபிமானம் என்பது இன்னதென்பதையே அறியாதவர்கள் அதை அறிந்துகொள்ளுவார்கள்: அப்படி அறிந்துகொண்டதும் சாத்விகச் சட்ட மறுப்பாளர்கள் ஆவார்கள். இப்பொழுதே அப்படி ஆகிவிட்டவர்கள், அதில் உறுதியுள்ளவராவார்கள் என்று ஆசைப்படுகிறேன். தனது உண்மையான கடமை இன்னது என்பதையோ அல்லது மதத்தையோ அறியாதவர், தேசாபிமானம் என்பது இன்னதென்பதையோ அல்லது தம்முடைய சொந்த நாட்டின் உணர்ச்சியையோ அறியவே முடியாது என்பதை நான் மேலும் உறுதியாகச் சொல்லுவேன்.

# சத்தியாக்கிரகம் பிறந்த விதம்

பூஜ்யர் ஜோசப் டோக், மகாத்மா காந்தியின் வாழ்க்கைச் சரித்திரத்தை எழுதினர். காந்திஜியைப் பொறுத்த வரையில் இந்தச் சத்தியாக்கிரகக் கொள்கை எவ்விதம் அவர் உள்ளத்தில் பிறந்தது, வளர்ந்தது என்பதைக் கூறும்படி ஸ்ரீ டோக் கேட்டார். இதற்குக் காந்திஜி கூறிய பதிலேக் குறித்து ஸ்ரீ டோக் கூறுவதாவது:

''நான் குழந்தையாக இருந்தபோது பள்ளிக்கூடத்தில் கற்ற குஜராத்திப் பாடல்களில் ஒன்று என் மனத்திலேயே எப்பொழுதும் இருந்து வந்தது. அதன் கருத்து வருமாறு:

'தாகத்திற்கு நீர் கொடுத்தவருக்கு நீ திரும்ப நீர்
கொடுத்துவிடுவதில் பெரிது எதுவுமில்லே.

ஆனல், தீமை செய்தவருக்கு நன்மை செய்வதிலேயே
உண்மைப் பெருமை உண்டு.'

''குழந்தையாக இருந்த காலத்திலேயே இப்பாட்டு என் மனத்தில் அதிக மாறுதலே உண்டாக்கியது; நடை முறையில் அதன்படி நடக்க முயன்று வந்தேன். பிறகு ஏசுவின் 'மலே உபதேசங்கள்' என் கவனத்திற்கு வந்தன" என்ருர் காந்திஜி.

''ஆனல், நிச்சயமாகப் பகவத்கீதை அதற்கு முன்னல் உங்கள் மனத்தில் வந்திருக்கக்கூடும்'' என்றேன். அதற்குக் காந்திஜி கூறியதாவது:

''இல்லே. சமஸ்கிருதத்தில் இருக்கும் பகவத்கீதையை நான் நன்ருகவே படித்திருக்கிறேன். ஆனல், அதன் போதனேகளே நான் அந்த வகையில் பயின்றதில்லே. பைபிளின் புதிய சித்தாந்தமே உண்மையில், நியாயமாக நடப்பதில் எனக்கு விழிப்பை உண்டாக்கியதோடு சாத்விக எதிர்ப்பின் மேன்மையையும் உணரும்படி செய்தது. 'மலே உபதேச'த்தில், 'தீயவனுயிருப்பவனே எதிர்க்காதே; உன்னே யாராவது வலது கன்னத்தில் அறைந்தால் இடது கன்னத்தையும் திருப்பிக் காட்டு' என்று கூறியிருந்ததையும், 'உன்னுடைய விரோதிகளிடமும் அன்பு செலுத்து. உன்னேத் துன்புறுத்துகிறவர்களும் பரலோகத்தில் இருக்கும் உன் பிதாவின் மக்களாக வேண்டுமென்று அவர்களுக்காகப் பிரார்த்தனே செய்' என்று சொல்லியிருப்பதையும் படித்துப் பேரானந்தம் கொண்டேன். நான் கொஞ்சமும் எதிர்

பாராத இடத்திலிருந்து என் கருத்துக்கள் உறுதி செய்யப்பட்டிருப்பதைக் கண்டுகொண்டேன். பகவத்கீதை என் எண்ணத்தை உறுதிப்படுத்தியது. டால்ஸ்டாயின் 'உன்னுள் இருக்கும் கடவுளின் ராஜ்யம்' என்ற நூல் அதற்கு நிரந்தரமானதோர் உருவை அளித்தது.

''டால்ஸ்டாய், ரஸ்கின், தோரோ, இங்கிலாந்தில் நடந்த சாத்விக எதிர்ப்பு இயக்கம் இவை உயர்ந்த சக்தியும் பற்றுதலும் உள்ள லட்சியப் படிப்பினைகளாக நிரூபணமாகியிருக்கின்றன. என்னுடைய லட்சியம், தீமையைச் சாத்விகத்தினால் எதிர்ப்பது என்பது மாத்திரமல்ல; தீமைக்குப் பதிலாக நன்மையையே செய்வதென்பதையும் தீவிரமாகக் கொண்டது. 'சாத்விக எதிர்ப்பு' என்று கூறப்படுவதை நான் விரும்பவில்லை. அதற்கு நான் கொண்டுள்ள பொருளை அது முழுவதும் வெளிப்படுத்துவதாயில்லை. அது ஒரு முறையை விவரிக்கிறது. ஆனால், அது எந்த ஒரு முறையின் பகுதியாயிருக்கிறதோ அதன் கிரமத்தைப் பற்றியது இதில் எதுவுமில்லை. தீமைக்கு எதிராக நன்மையையே செய்துவிடுவது என்பதிலேயே உண்மையான அழகு இருக்கிறது; அதுதான் என்னுடைய நோக்கம். என்றாலும், இச்சொற்களே இப்பொழுது எல்லோருக்கும் தெரிந்தவையாகவும் சுலபத்தில் புரியக்கூடியவையாகவும் இருப்பதோடு, என் மக்களில் பெரும்பாலானவர்கள் இச்சமயத்தில் இந்தக் கருத்தையே கொள்ளக்கூடியவர்களாயும் இருப்பதால் அதையே நான் மேற்கொள்ளுகிறேன். குஜராத்திப் பாடலிலும், ஏசுவின் மலை உபதேசத்திலும் இருக்கும் கருத்து, வாழ்க்கை முழுவதையுமே அடியோடு மாற்றிவிடவேண்டும் என்பதே என் கருத்து.''

## ஆன்மசக்தியும் மிருகபலமும்

மிருக பலத்திற்கு எதிராக வெற்றியடைய ஆன்மபலத்திற்குள்ள சிறப்புக்களைக் குறித்துத் தென்னாப்பிரிக்காவில் மற்றொரு சந்தர்ப்பத்தில் கூறுகையில் காந்திஜி சொன்னதாவது:

''சாத்விக எதிர்ப்பு, எல்லா முனையிலும் கூர்மையுடைய ஒரு வாள்; அதை எந்த விதமாகவும் உபயோகிக்கலாம். அது தன்னை உபயோகிப்பவரை வாழ்த்தும்; அது யாருக்கு எதிராக உபயோகிக்கப்படுகிறதோ அவரையும், ஒரு சொட்டு ரத்தத்தைக்கூடச் சிந்தவிடாமல் வாழ்த்தும். அது எவ்வளவோ பெரிய நன்மைகளையும் உண்டாக்கும். என்றுமே துருப்பிடித்து விடாதது''

அவ்வாள். அதைத் திருடிக்கொண்டு போய்விட முடியாது. சாத்விக எதிர்ப்பாளர்களிடையே ஏற்படும் போட்டியினால் களைப்பு ஏற்படுவதும் இல்லை. சாத்விக எதிர்ப்பு என்னும் வாளுக்கு உறை வேண்டியதில்லை. பலவந்தத்தினால் அதை யாரும் பறித்துவிடவும் முடியாது.”

## சாத்விக எதிர்ப்பின் உதயம்

டிரான்ஸ்வாலில் ஜெர்மிஸ்டன் இலக்கிய விவாத சபையில் ஐரோப்பியர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றில், *1908*-இல் மகாத்மா காந்தி பேசினார். அப்பொழுது அவர் கூறியதாவது :

“சாத்விக எதிர்ப்பு என்பது இதற்குச் சரியான பெயரல்ல. ஆனால், இப்பெயர் வெளியிடும் கருத்தையே பலர் நீண்ட காலமாக நிறைவேற்றி வந்திருப்பதாலும், இதுவே எல்லோருக்கும் தெரிந்து இருப்பதாலும், இச்சொற்றொடர் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இக்கருத்தைப் பூரணமாகவும் சரியாகவும் கூறுவதானால், ‘ஆன்ம சக்தி’ என்று சொல்வதே சரியானதாகும். மனித வர்க்கம் எவ்வளவு தொன்மையானதோ அவ்வளவு தொன்மையானது இதுவும். ஏசு கிறிஸ்து, டேனியல், சாக்ரடீஸ் ஆகியவர்கள் பரிசுத்தமான சாத்விக எதிர்ப்பு அல்லது ஆன்மசக்தி நிரம்பி விளங்கினார்கள். இந்த உபதேசகர்களெல்லோரும், ஆன்மாவோடு ஒப்பிட்டால் உடல் மிக மிக அற்பமானது என்று கருதினார்கள். இந்தத் தத்துவத்தை இக்காலத்தில் மிகப் பிரகாசமாகவும் சிறப்பாகவும் விளக்கியவர் டால்ஸ்டாயே. அவர் இதைக் கூறியதோடு நில்லாமல் அதன்படி அவர் நடந்தும் காட்டினார். இதைப்பற்றி ஐரோப்பா அறிவதற்கு வெகு காலத்திற்கு முன்பே இந்தியா இந்தத் தத்துவத்தை அறிந்து அனுசரித்தும் வந்திருக்கிறது. உடலின் சக்தியைவிட ஆன்ம சக்தி நிச்சயமாக உயர்வானது என்பதை அறிவதும் எளிதாயிருந்தது. தீய காரியங்களின் தொந்தரையிலிருந்து நிவாரணம் பெறுவதற்கு மக்கள் ஆன்ம சக்தியையே உபயோகிக்க முற்படுவதாயிருந்தால், இன்று இருந்து வரும் எத்தனையோ துன்பங்களைத் தவிர்த்துக் கொண்டுவிட முடியும். இந்தச் சக்தியை உபயோகிப்பதனால் மற்றவர்களுக்குத் துன்பங்கள் ஏற்படுவதே இல்லை. ஆகையால், இந்தச் சக்தி எப்பொழுதாவது தவறாக உபயோகிக்கப் பட்டுவிட்டாலும் அப்பொழுது இதை உபயோகித்தவர்களுக்குத்தான் சிரமம் இருக்குமேயன்றி இது யாருக்கு எதி

ராக உபயோகிக்கப்பட்டதோ அவர்களுக்குத் துன்பத்தை உண்டாக்குவதில்லை. நற்செய்கையைப்போல, இதற்கு ஏற்ற வெகுமதி என்றும் உண்டு. இத்தகைய சக்தியை உபயோகிப்பதில் தோல்வி என்பது வருவதே இல்லை. 'தீமையை எதிர்க்காதே' என்றால், தீமையைத் தீமையினால் எதிர்க்கக் கூடாது, நல்லது செய்வதனாலேயே எதிர்க்க வேண்டும் என்பது பொருள். அதாவது, மிருகபலத்தை, அதைப்போன்றதொரு பலத்தினால் எதிர்க்கக்கூடாது; ஆன்மபலத்தினால் எதிர்க்கவேண்டும். இந்தக் கருத்தே இந்திய வேதாந்தத்தில், 'எந்த ஜீவராசிக்கும் தீங்கிழைக்காத தன்மை' என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தத்துவத்தை மேற்கொள்ளுவதாயின், இதை அனுசரிப்பவர்கள் சரீர துன்பங்களை அனுபவிக்க நேரும். ஆனால், இந்தத் துன்பங்களையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், உலகத் துன்பங்களைவிடக் குறைவானதே என்பது தெரிந்த உண்மை. ஆகையால், ஆன்ம பலத்தின் அபார சக்தியை அறிந்தவர்களெல்லாம் சரீர துன்பங்களை அனுபவிப்பதே தங்கள் கடமை என்ற முடிவுக்கு மனமாரவும் திடத்துடனும் வந்துவிடுவது அவசியமாகும். இப்படி செய்தால், இந்தக் கஷ்டங்களே அவைகளை அனுபவிப்பவர்களுக்கு இன்பத்தின் ஊற்றாகிவிடும். சாத்விக எதிர்ப்பை இந்த வகையில் கொண்டு வந்து விட்டால், மிருக பலத்தை விட அது மிக உயர்ந்ததாகவே ஆகும்; இதற்கு மிருக பலத்திற்கு வேண்டியதைவிட அதிக தீரமும் வேண்டும் என்பது மிகவும் தெளிவானது. சாத்விக எதிர்ப்பு மிருகபலமாக மாறுவதற்கு சாத்தியமே இல்லை. இந்தச் சக்தியை வெற்றிகரமாக உபயோகிப்பதற்குள்ள ஒரு நிபந்தனை, உடலினின்று ஆன்மா வேறானது என்பதையும், அது நிரந்தரமானது, உயர்வானது என்பதையும் உணர்வதேயாகும். இந்த உணர்வானது வாழ்வின் லட்சியமாக இருக்க வேண்டுமேயன்றி வெறும் அறிவு ஆராய்ச்சியாக மாத்திரம் இருக்கக்கூடாது."

# துன்பங்களை அனுபவிப்பதன் தத்துவம்

[துன்பங்களை அனுபவிக்கத் தயாராயிருப்பது ஏன் என்பதை மகாத்மா காந்தி தென்னப்பிரிக்க சத்தியாக்கிரகப் போராட்ட காலத்தில் விளக்கினர். அதோடு சாத்விக எதிர்ப்பின் தத்துவத்தையும் விவரித்தார். காந்திஜி இவற்றைப் பற்றி அப்பொழுது எழுதிய ஒரு கட்டுரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

சிறைக்குப் போனல் அங்கே எத்தனையோ கட்டு திட்டங்களுக்கெல்லாம் உட்பட்டுக் கிடக்கவேண்டும், கொலைக் குற்றத்திற்குத் தண்டனை அடைந்தவனுக்குக் கொடுக்கப்படும் விகாரமான முரட்டு உடையை அங்கே நாமும் அணியவேண்டியிருக்கிறது. கொஞ்சமும் ஊட்டம் தராத உணவை அரை வயிறுதான் உண்ணவேண்டும். நாம் விரும்பினலும், வெறுத்தாலும், அங்கே நமக்கு இடப்படும் வேலைகளையெல்லாம் நாம் செய்தாக வேண்டியிருக்கிறது. நம் வீட்டு வேலைக்காரனைவிட எந்த விதத்திலும் சிறப்பு இல்லாத வார்டரின் கட்டளைப்படியெல்லாம் நாம் நடந்தாக வேண்டியும் இருக்கிறது. நண்பர்களும் உறவினர்களும் வந்து பார்த்துப் பேசவும் அனுமதிக்கப்படுவதில்லை. அவர்களுக்குக் கடிதமும் எழுத முடியாது. வாழ்க்கைக்கு வேண்டிய சாதாரணமான வசதிகளும் அங்கே மறுக்கப்படுகின்றன. சில சமயங்களில் திருடர்களும் கொள்ளைக்காரர்களும் இருக்கும் கொட்டடிகளிலேயே நாமும் இருந்து அங்கேயே தூங்கவும் வேண்டியிருக்கிறது. அப்படியிருக்கையில் நாம் ஏன் சிறை செல்ல வேண்டும்; நான் ஏன் இத்தகைய துன்பங்களை யெல்லாம் அனுபவிக்க வேண்டும் என்ற கேள்வி எழுகிறது. இத்தகைய துன்பங்களையெல்லாம் அனுபவிப்பதைவிடச் சாவதே மேல் என்பது இவர்களுடைய வாதம். இப்படிச் சிறையில் கிடப்பதைவிட அபராதத்தைச் செலுத்திவிடுவது எவ்வளவோ மேலானது என்கிறார்கள். சிறைகளில், இவ்விதம் துன்பப்படுவதிலிருந்து தாம் படைத்த மனிதரைக் கடவுள் காப்பாராக என்றும் எண்ணுகிறார்கள். உண்மையில், இத்தகைய எண்ணங்கள் ஒருவரைக் கோழை ஆக்கி விடுகின்றன. சிறை வாழ்க்கையைப்பற்றி ஒருவருக்கு இடைவிடாது இருந்துவரும் பயம், தேசத்தின் நன்மைக்காக ஒருவர் செய்தாகவேண்டிய ஒப்பற்ற சேவையைச் செய்ய முடியாதபடி தடுத்துவிடுகிறது.

தன்னுடைய நாட்டுக்காகவும் மதத்தின் பொருட்டும் ஒருவர் சிறையில் இருக்க நேருவது, ஒருவரின் சிறந்த அதிர்ஷ்டம் என்பது மற்றொரு கருத்து. அன்ருட வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டியிருக்கும் கஷ்டங்களில் மிகச் சிலவே அங்கே உள்ளன. சிறையில் ஒரு வார்டரின் உத்தரவுப்படி நடக்க வேண்டியிருக் கிறது. வெளியிலோ, பலருடைய கட்டளைப்படியே நடந்தாக வேண்டியவர்களாயிருக்கிருேம். அன்ருடச் சாப்பாட்டுக்குச் சம் பாதித்துச் சமையலும் செய்து கொள்ள வேண்டும் என்பது சிறையில் இல்லை. இவற்றையெல்லாம் அரசாங்கம் கவனித்துக் கொள்ளுகிறது; இத்தகையோரின் தேக நிலை குறித்தும் அர சாங்கம் கவனித்துக் கொள்ளுகிறது. இதற்காகக் கொடுக்க வேண்டியது எதுவுமில்லை. உடல் வலுப்பெறுவதற்குத் தேவை யான உடலுழைப்பும் சிறையில் கிடைக்கிறது. அவனுடைய கெட்ட பழக்கங்களுக்கெல்லாம் இடந் தருவதில்லை. இவ்விதம் ஆன்மா சுதந்திரத்துடன் இருக்கிறது. கடவுளைப் பிரார்த்திப்ப தற்கும் நிறைய நேரம் இருக்கிறது. கட்டுத்திட்டங்களுக்கு உட் படுத்தப்பட்டிருப்பது உடலேயன்றி, ஆன்மாவல்ல. காலாகாலங் களில் தன் காரியங்களைச் செய்துகொள்ளும் பழக்கமும் ஏற்படு கிறது. உடலைக் கட்டுப்பத்தி வைத்திருப்பவர்கள் அதைக் கவனித்துக்கொள்ளுகிருர்கள். சிறை வாழ்க்கையைப்பற்றி இத் தகைய கருத்துடன் இருப்பவர், தாம் சுயேச்சையுடன் இருப்ப தாகவே எண்ணுகிருர். தமக்கு ஏதாவது துரதிர்ஷ்டம் ஏற்பட் டாலோ அல்லது மோசமான ஒரு வார்டர் தம்மிடம் பலாத்கா ரத்தை உபயோகித்துவிட்டாலோ, அப்பொழுது பொறுமையின் முக்கியத்தை உணர்ந்து அதைக் கடைப்பிடிக்கவும் கற்றுக் கொள்ளுகிருர். தன்னைத்தானே அடக்கிக்கொள்ளுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்ததற்காகவும் திருப்தி அடைகிருர். இவ்வழியில் எண்ணுகிறவர்கள், சிறை வாழ்க்கையிலும் நன்மைகள் உண்டு என்பதை நிச்சயமாக உணர்ந்துகொள்ளுவர். இவைகளை நன்மை களாக எடுத்துக்கொள்ளுவதா இல்லையா என்பது அவரவர்களை யும், அவரவர்களின் மனோபாவங்களையுமே முக்கியமாகப் பொறுத்தது. என்ருலும், டிரான்ஸ்வால் சிறையில் என்னுடைய இரண்டாவது சிறை அனுபவத்தைக் குறித்துப் படித்தவர்கள், உண்மையான ஆனந்தத்திற்குச் சிறந்த வழி ஒருவருடைய நாட் டிற்காகவும் மதத்திற்காகவும் சிறைக்குச் சென்று அங்கே துன் பங்களையும் துயரங்களையும் அனுபவிப்பதுதான் என்ற முடிவுக்கு வந்திருப்பார்கள் என நம்புகிறேன்.

இதே போன்றதோர் நிலைமையில் தமக்கு விதிக்கப்பட்டிருந்த தலைவரியைக் கொடுக்க மறுத்த அமெரிக்க பிரஜையான தோரோ, 1849-இல் இதே கருத்தையே வெளியிட்டிருக்கிறார். தம்மை அடைத்து வைத்திருந்த சிறையின் சுவரை, இரண்டு அல்லது மூன்று அடி அகலக் கருங்கற்களால் கட்டியிருப்பதையும் அதன் கதவு மரத்தினாலும் இரும்பினாலும் ஓர் அடி கனத்தில் இருப்பதையும் பார்த்துவிட்டுத் தமக்குள்ளேயே வருமாறு சொல்லிக்கொண்டார்.

"எனக்கும் எங்களூர்க்காரர்களுக்குமிடையே ஒரு கற்சுவர் இருக்கிறதென்றால், நான் இருந்ததைப் போன்ற சுயேச்சையான நிலையை அவர்கள் அடைவதற்கு, அவர்கள் ஏறியாக வேண்டிய அல்லது உடைத்துக்கொண்டு வரவேண்டிய இன்னும் அதிகக் கஷ்டமான சுவர் இருக்கிறது என்பதைக் கண்டேன். நான் அடைபட்டுக்கிடப்பதாகவே கொஞ்சமும் உணரவில்லை. இந்தச் சுவரில் கல்லும் சாந்தும் பெரிதும் வீணாக்கப்பட்டிருப்பதாகவே காணப்படுகிறது. என் ஊரினரையெல்லாம்விட நான் ஒருவனே வரி செலுத்தியிருப்பதாகவும் எனக்குத் தோன்றுகிறது. என்னை எப்படி நடத்துவதென்பதே அவர்களுக்குத் தெரியவில்லை; ஆனால், நாகரிகமே இல்லாதவர்கள் போல் நடந்துகொண்டிருக்கிறார்கள். ஒவ்வொரு பயமுறுத்தலிலும், ஒவ்வொரு பாராட்டுதலிலும் ஒரு தவறு இருந்தே வருகிறது. ஏனெனில், கற்சுவருக்கு மறுபக்கத்தில் நான் இருக்கவேண்டும் என்பதே என்னுடைய முக்கியமான ஆர்வம் என்று எண்ணிவிட்டார்கள். என்னுடைய சிந்தனைகளுக்கு எவ்வளவு சிரமப்பட்டுக் கதவடைத்திருக்கிறார்கள் என்பதை நினைக்கும்போது என்னால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை. ஆனால், அச்சிந்தனைகளோ எந்தவிதமான தங்குதடைகளுமின்றி அக்கதவுகளையெல்லாம் தாண்டி வெளியில் பாய்ந்துகொண்டிருக்கின்றன. ஆபத்தானவையாயும் இருக்கின்றன. என் மனத்தை மாற்ற முடியாததனால் என் உடலைத் தண்டிக்கத் தீர்மானித்துவிட்டார்கள். தங்களுக்கு யார்மீது ஆத்திரம் இருக்கிறதோ அவர்களை நெருக்கி ஒன்றும் செய்யமுடியாமல் இருப்பது, சிறுவர்கள் தம் நாயைத் திட்டுவதைப் போலவே இருக்கிறது. இந்த நோய் அரசாங்கத்தைப் பிடித்துக்கொண்டு விட்டதெனக் காண்கிறேன். மடியில் கனத்துடன் தனி வழிப் போகும் ஒரு பெண்ணைப்போல அது திகிலடைந்திருக்கிறது. தனக்கு நண்பர்கள் யார், விரோதிகள் யாவர் என்பதே அதற்குப் புரியவில்லை. அதன்மீது எனக்குக் கொஞ்சநஞ்சம் இருந்த மதிப்பும் போய்விட்டது; அதன் நிலைகுறித்து நான் வருந்துகிறேன்."

# சாத்விகப் போராட்டத்தின் தத்துவமும் அனுபவமும்

1914-ஆம் ஆண்டு 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையின் பொன்மலருக்கு மகாத்மா காந்தி கீழ்வரும் கட்டுரையை எழுதியிருந்தார்:

இந்த ஞாபகார்த்த விழா மலர் வெளியாகும்போது நான் தாய்நாட்டில் இருப்பேன்; இல்லையானால் போனிக்ஸிலிருந்து வெகு தூரத்திலாவது இருப்பேன். என்றாலும், இந்த விசேட வெளியீட்டை எது அவசியமாக்கியதோ அதைப்பற்றிய என்னுடைய ஆழ்ந்த சிந்தனைகளை நான் இங்கே விட்டுச் செல்வேன். 'இந்தியன் ஒப்பினியன்' சென்ற பதினொரு ஆண்டுகளாக எந்த விதமான ஆடம்பரமுமின்றி எளிய முறையில் என் நாட்டு மக்களுக்கும் தென்னாப்பிரிக்காவுக்கும் சேவை செய்ய முயன்றிருக்கிறது. மிகவும் நெருக்கடியான காலம் அது. இதே நெருக்கடியை எப்போதுமே சமாளிக்க வேண்டியதாக இருப்பினும் இருக்கக் கூடும். ஆகையால், சாத்விக சட்ட மறுப்புப்பற்றிய கட்டுரை இல்லாமல் வேறு எதையும் கொண்ட அழகான 'இந்தியன் ஒப்பினிய'னின் சிறந்த விசேட வெளியீடு இருக்கவே முடியாது. உலகின் முழுதுள்ள கவனத்தையும் கவர்ந்திருக்கும் சாத்விக எதிர்ப்பின் ஆரம்பத்தையும் வளர்ச்சியையும் அது குறிப்பிடுகிறது.

சென்ற எட்டு ஆண்டுகளாக இந்திய சமூகம் செய்துள்ள காரியங்களுக்கு அப்பெயர் பொருத்தமானதாக இல்லை. அதற்கிருக்கும் சுதேச மொழிச் சொல்லை ஆங்கில மொழியில் கூறுவதாயின், சத்தியத்தின் சக்தி எனப் பொருள்படும். டால்ஸ்டாய் இதை ஆன்ம சக்தி அல்லது அன்பின் சக்தி என்று சொன்னார் என நினைக்கிறேன். அதுவாகவே அது இருக்கிறது. அதிக பட்ச அளவுக்கு அதை நிறைவேற்றுவதாயின், பண பலம் முதலிய மற்ற உதவிகளுக்குப் புறம்பாகச் சுயேச்சையானது இந்தச் சக்தி. ஆரம்பக் கட்டத்தில்கூட இது மிருகபலம் அல்லது பலாத்காரத்திற்குப் புறம்பானது என்பது நிச்சயம். இப்பெரும் ஆன்ம சக்திக்குப் பலாத்காரம் முற்றிலும் விரோதமானது. பலாத்காரத்தை அடியோடு போக்கிக் கொண்டவர்கள் மாத்திரமே இதை வளர்த்

துக் கையாளவும் இயலும். தனிப்பட்டவர்கள் மாத்திரமே யன்றிச் சமூகங்களும் மேற்கொள்ளக்கூடிய சக்தி இது. வீட்டுக் காரியங்களில் கையாளுவதைப் போலவே ராஜீய காரியங் களிலும் இதை உபயோகிக்கலாம்.

எல்லாவற்றிற்குமே இதை உபயோகிக்கலாம் என்பது அதனுடைய நிரந்தரத் ,தன்மையிலிருந்தும் தோல்வியே இராத ஒரு விசேடத் தன்மையிலிருந்தும் வெளியாகிறது. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகியோர் எல்லோருமே அதை உபயோகிக்கலாம். பலாத்காரத்தைப் பலாத்காரத்தினுல் சமா ளிக்க முடியாமல் இருக்கும்போது, வேறு வழியின்றிப் பலவீனர் களால் உபயோகிக்கப்படும் ஆயுதமே இது என்பது முற்றிலும் பொய்யானதாகும். அதைக் குறிக்கும் ஆங்கிலச் சொல், அதன் பொருளை முற்றிலும் உணர்த்துவதாக இல்லாததனுல் அந்த மூடநம்பிக்கை எழுகிறது. தங்களைப் பலவீனர்களாக எண்ணிக் கொள்ளுகிறவர்கள், இந்த ஆயுதத்தைக் கையாளுவது என்பது சாத்தியமே அல்ல. மனிதனிடம் இருக்கும் மிருக சுபாவத்தை விடச் சிறந்ததான வேறு ஒன்றும் அவனுள் இருக்கிறது. மிருக சுபாவம் அதனிடம் பணிந்துவிடும் என்பதை உணர்ந்து கொண்டவர்கள் மாத்திரமே சரியான சத்தியாக்கிரகிகளாக முடியும். இருளுக்கு வெளிச்சம் எப்படியோ அப்படியே இந்தச் சக்தி - பலாத்காரத்திற்கும் கொடுமைகளுக்கும் அநீதி களுக்கும்.

மனமார அறிந்தோ, அறியாமலோ, தாங்கள் ஆளப்படு வதற்கு மக்கள் சம்மதிக்கும் வரையில்தான் மக்களின் ஆட்சி சாத்தியம் என்ற அசைக்கவொண்ணுத தத்துவத்தின் அடிப் படையைக் கொண்டது, ராஜீயத்தில் இந்தச் சக்தியின் உபயோகம். டிரான்ஸ்வாலின் 1907-ஆம் வருட ஆசியாக்காரர் சட்டத்தினுல் ஆளப்பட நாம் விரும்பவில்லை. இந்த மகத்தான சக்தியின் முன்னுல் அது ஒழிந்தே ஆகவேண்டும். நமக்கு இரண்டே வழிகள்தாம் உண்டு. ஒன்று, அச்சட்டத்திற்கு நாம் உடன்பட்டாக வேண்டும் என்று வற்புறுத்தப்படும்போது அதை எதிர்த்துப் பலாத்காரத்தை உபயோகிப்பது. இல்லை யானுல், அச்சட்டத்தின்படி விதிக்கப்படும் தண்டனைகளாகிய துன்பங்களை அனுபவித்து, ஆளுவோர் அல்லது கஷ்டம் விளைவித்தோரின் உள்ளுக்குள் இருக்கும் அனுதாப உணர்ச்சி விழிப்படையும் காலம் வரையில், நம்முள் இருக்கும் ஆன்ம சக்தியை வெளியே கொண்டுவந்து காட்டவேண்டும். நாம்

எதை அடைய முன் வந்தோமோ அதை அடைந்தாவதற்கு நமக்கு அதிக காலம் பிடித்தது. இதற்குக் காரணம், நமது சத்தியாக்கிரகம் முற்றிலும் பூரணமானதாக இல்லாததுதான். எல்லாச் சத்தியாக்கிரகிகளுமே இந்தச் சக்தியின் முழு நன்மையையும் அறிந்தவர்களாக இருக்கவில்லை. பலாத்காரமே கூடாது என்ற உறுதியான லட்சியம் கொண்டவர்களாகவும் எல்லோருமே இருந்துவிடவுமில்லை. எளிமையை மேற்கொள்ளுவது இந்தச் சக்தியை உபயோகப்படுத்துவதற்கு அவசியமாகிறது. அதாவது, நமக்கு வேண்டிய சாப்பாட்டுக்கும் துணிக்கும் வேண்டியதெல்லாம் நமக்கு இருக்கிறதா என்ற கவலை இல்லாமலும் இருக்கவேண்டும். முந்திய போராட்டத்தின் போது, சத்தியாக்கிரகிகளில் அந்த அளவுக்கு யாரும் போகத் தயாராயில்லை. மேலும் சிலர், பேருக்குத்தான் சத்தியாக்கிரகிகளாக இருந்தார்கள். லட்சியத்தில் உறுதியின்றி, கலப்படமான நோக்கத்திற்காக, அதுவும் சுத்தமற்ற நோக்கத்தின் பேரில் வந்தவர்களே அவர்கள். உஷாரான கண்காணிப்பு மாத்திரம் இல்லாது இருந்தால், போராட்டத்தின் நடுவிலேயே சிலர் ஆனந்தமாகப் பலாத்காரத்திலும் இறங்கியிருப்பார்கள். இவ்விதம் போராட்டம் அதிக காலம் நடக்க வேண்டியதாகிவிட்டது. பரிசுத்தமான ஆன்ம சக்தி, சரியான முறையில் உபயோகிக்கப்படுமானால், உடனே நிவாரணத்தை அளிக்கும். இவ்விதம் உபயோகிக்கப்படுவதற்கு ஒவ்வொரு தனி ஆன்மாவும் நீண்ட காலம் பயிற்சி பெறவேண்டியது முற்றிலும் அவசியம். சரியான சத்தியாக்கிரகி, முற்றிலுமே இராதுபோனாலும் முடிந்தவரை, குற்றமற்ற சிறந்த மனிதனாகவும் விளங்கவேண்டும். நாம் எல்லோரும் திடீரென்று அத்தகைய மனிதர்கள் ஆகிவிட முடியாது. ஆனால், நான் நினைப்பது சரியானதாக இருந்தால் – அது சரி என்பதை நான் அறிவேனாகையால் – நம்முள் எவ்வளவுக்குச் சத்தியாக்கிரக உணர்ச்சி அதிகம் இருக்கிறதோ அவ்வளவுக்கு நாம் சிறந்த மனிதர்கள் ஆவோம். ஆகையால், இச்சக்தியின் பயன் ஆட்சேபிக்க முடியாதது என்று நான் கருதுகிறேன். இந்தச் சக்தி எங்கும் உபயோகிக்கப்படுவதாகிவிடுமாயின், சமூக லட்சியங்களிலேயே இது புரட்சிகரமான மாறுதல்களை உண்டாக்கி விடுவதோடு, வளர்ந்துவரும் எந்த ராணுவ பலத்தின்கீழ் மேற்கத்திய நாடுகள் துன்புற்று நசுங்கி அநேகமாகச் செத்துக் கொண்டும் வருகின்றனவோ அவைகளோடு கிழக்கத்திய நாடுகளையும் நசுக்கிவிடும் அபாயத்தை உண்டாக்கிவரும் அந்த

ராணுவ பலத்தையும் எதேச்சாதிகாரத்தையும் இந்தச் சக்தி ஒழித்துவிடும். சாத்தியமான அளவுக்காவது சரியான சத்தியாக் கிரகிகளாகும் பணியில் தங்களை அர்ப்பணம் செய்துகொள்ளும் ஒரு சில இந்தியரையாவது முந்திய போராட்டம் உண்டாக்கி இருக்குமானால், அவர்கள் முற்றிலும் உண்மையான வகையில் தங்களுக்குச் சேவை செய்துகொண்டதோடு மனித வர்க்கத் திற்கே சேவை செய்தவர்களும் ஆவார்கள். இதைக்கொண்டு கவனித்தால், சாத்விக எதிர்ப்பு மிகப் புனிதமான, மிகச் சிறந்த படிப்பு. குழந்தைகளுக்குச் சாதாரண எழுத்துப் படிப்புக்குப் பிறகு இது வரக்கூடாது, அதற்கு முன்னாலேயே இப்படிப்பு வரவேண்டும். ஒரு குழந்தை, எழுத்துக்களை எழுத ஆரம்பிப்ப தற்கு முன்னால்-உலக அறிவைப் பெற ஆரம்பிப்பதற்கு முன்பு-ஆன்மா என்பது என்ன, ஆன்மாவுக்கு இருக்கும் சக்திகள் யாவை என்பதை அறியவேண்டும் என்பதை யாரும் மறுக்க முடியாது. வாழ்க்கைப் போராட்டத்தில் பகைமையை அன்பினால் வெல்லலாம், பொய்யை மெய்யால் வெல்லலாம், துன்பங்களை அனுபவிக்கத் தயாராயிருப்பதன்மூலம் பலாத்காரத்தை வெற்றி கொள்ளலாம் என்பதைக் குழந்தைகள் அறிந்துகொள்ளுவதற்கு சரியான படிப்பு அத்தியாவசியமானதாக இருக்கவேண்டும். போராட்டத்தின் கடைசி நாட்களில் இந்த உண்மையின் சக்திகளை நான் அறிந்துகொண்டதனாலேயே, டால்ஸ்டாய் பண்ணையிலும், பிறகு போனிக்ஸிலும், இந்த வழியில் குழந்தை களுக்குப் பயிற்சியளித்து என்னால் இயன்றவரையில் முயன்றேன். சத்தியாக்கிரகி என்ற வகையில் என்னிடம் இருக்கும் குறைபாடு களில் ஒரு பகுதியை நான் இப்பொழுதே உணர்ந்திருந்தாலும், மேற்கொண்டும் அதை அறிந்தாக வேண்டும். பிறகு என்னை முற்றிலும் திருத்திக்கொள்ள வேண்டும் என்பது நான் இந்தியா வுக்குப் போகும் காரணங்களில் ஒன்று. இந்தியாவில்தான் குறைகளே இல்லாத நிலையைக் கிட்டத்தட்ட அடையமுடியும் என்பது என் நம்பிக்கை.

# தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகப் போராட்டத்தின் பலன்கள்

[1911-ஆம் ஆண்டில் தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகப் போராட்டத்தின் பலன்களைக் குறித்து மகாத்மா காந்தி குஜராத்தியில் ஒரு கட்டுரை எழுதினர். அது ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுச் சென்னை, 'இந்தியன் ரெவியூ' என்ற மாத வெளியீட்டில் 1911 நவம்பர், டிசம்பரில் வெளி வந்தது. அக்கட்டுரையே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

இந்நாட்டில் (தென்னுப்பிரிக்காவில்) நடந்த சத்தியாக்கிரகப் போராட்டத்தினுல் என்ன பலன் என்று இந்தியர் சிலர் அடிக்கடி கேட்கின்றனர். சிறைக்குள்ளும் வெளியிலும் கொடுமையான துன்பங்களையெல்லாம் அனுபவித்த பிறகு இதன் பலனுக நம் மக்கள் அடைந்ததெல்லாம், குடியேற்றச் சட்டத்தில் சில மாறுதல்களைச் செய்யும் யோசனைகள் வந்ததேயாகும். இதை நம் மக்கள் அறிந்துகொள்ளவும் முடியாது; இது நடைமுறையில் அவர்களுக்குப் பயனுள்ளதாகவும் இராது என்கின்றனர். இந்தப் போராட்டத்தின் அதிகப் பட்ச லாபம், இம் மக்களுக்கு எந்த விதத்திலும் பயன்படப் போகாததான, மிக உயர்ந்த படிப்புப் படித்த இந்தியர் ஒரு சிலர் இந்நாட்டுக்குள் வருவது சாத்தியமாயிற்று என்பதேயாகும்; இதுவும் அவர்களுடைய கருத்து. இத்தகைய கருத்துக் கொண்டிருப்போருக்கு விளக்கிச் சொல்லவேண்டும் என்பதற்காகவே அப்போராட்டத்தின் நன்மைகளைக் குறித்துச் சுருக்கமாகக் கீழே எடுத்துக் காட்டுகிறேம்.

இந்தப் போராட்டத்தினுல் இந்திய சமூகம் தன்னுடைய தேசீயச் சுயமரியாதையைக் காத்துக்கொள்ள முடிந்தது. தன்னுடைய சுயமரியாதையைக் காத்துக்கொள்ளக் கூடியவன் எல்லாவற்றையும் காத்துக்கொள்ள முடியும் என்று நம்முடைய பழமொழியும் கூறுகிறது,

போராட்டத்தினுல் *1907*-ஆம் வருடப் பதிவுச் சட்டம் சட்டப் புத்தகத்திலிருந்தே ஒழிக்கப்பட்டது.

நமக்கு இந்நாட்டிலிருக்கும் துயரங்கள் யாவை என்பதை இப்போராட்டத்தின் காரணமாக இந்தியா முழுவதுமே அறிந்து கொள்ள முடிந்தது.

இப்போராட்டத்தினுல் நம் குறைகளைக் குறித்து மற்ற நாடுகள் அறிய முடிந்ததோடு நம்மை நன்ருகப் பாராட்டவும் ஆரம்பித்தனர்.

இந்திய அரசாங்கம் நேட்டாலுக்கு இந்திய ஒப்பந்தக் கூலி களை அனுப்புவதற்கும் இதனுல் தடைவிதிக்கப்பட்டது.

நேட்டால் அனுமதிச் சீட்டுச் சட்டத்தில் விரும்பத்தக்க சில மாறுதல்கள் ஏற்படவும் இப்போராட்டம் உதவியாக இருந்தது.

டிரான்ஸ்வாலில் இருந்த சட்டத்தின் அடிப்படையிலேயே ரொடீஷியாவிலும் தயாரான பதிவுச்சட்டம் நிராகரிக்கப்படும் படியும் நமது போராட்டம் செய்தது.

மிக மோசமானதான நேட்டால் அனுமதிச்சீட்டுச் சட்டம் அங்கீகரிக்கப்படாதபடியும் நமது போராட்டம் செய்தது. நான் கூறும் இதைச் சந்தேகிக்கிறவர்கள், அச்சட்டத்தை அங்கீகரிக்க மறுத்துப் பிரிட்டிஷ் சர்க்கார் அனுப்பிய குறிப்பையும், அப்படி அனுமதி மறுத்ததற்குக் கூறப்பட்டிருக்கும் காரணங்களையும் கவனிக்க வேண்டும்.

நமது போராட்டம் மாத்திரம் இல்லாதிருக்குமாயின், டிரான்ஸ்வாலில் இருந்த சட்டத்தைப் போன்ற குடியேற்றக் கட்டுப்பாட்டு சட்டங்களைத் தென்னுப்பிரிக்காவின் மற்றக் காலனிகளும் நிறைவேற்றியிருக்கும்.

போராட்டம் இல்லாதிருக்குமானுல், குடியேற்றக் கட்டுப் பாட்டுச் சட்டத்தைப்போன்று அதிகக் கடுமையான, இந்தி யருக்கு விரோதமான சட்டங்கள் பலவற்றை டிரான்ஸ்வால் சட்டசபை நிறைவேற்றியிருக்கும்.

வெள்ளைக்காரர்களையும் மற்ற நிறத்தினரையும் பாகுபாடு படுத்தி நடத்துவதாயிருந்த ரெயில்வேச் சட்டதிட்டங்கள் ரத் தாகும்படி நமது போராட்டம் செய்ததோடு இப்போது எல் லோருக்கும் ஒரே விதமான சட்டதிட்டங்கள் இருக்கும்படி யும் செய்தது.

சட்டப் புத்தகத்தில் புகுத்துவதாயிருந்த ஆசியாக்காரர் களுக்கு விரோதமான பல சட்டங்களில், 1907-ஆம் வருட டிரான்ஸ்வால் பதிவுச் சட்டமே முதலாவது என்பது எல்லோருக்கும் தெரிந்தது. இந்தச் சட்டத்தை இந்தியர் ஏகோபித்து எதிர்த்ததனுல் மற்றச் சட்டங்களையும் டிரான்ஸ் வால் அரசாங்கம் கொண்டுவர முடியாதபடி தடுத்து விட்டோம்.

ஸ்ரீ ஹாஸ்கென் தலைமையில் ஐரோப்பியர்களடங்கிய ஒரு கமிட்டி ஏற்படும்படியும் அது செய்தது. நம் போராட்டம் இல்லாதிருந்தால் இக்கமிட்டியே தோன்றியிராது. எதிர்காலப் போராட்டங்களுக்கும் இக்கமிட்டி இந்தியருக்கு உதவியாக இருக்கக்கூடும்.

இக்கமிட்டியில் இப்பொழுதே சேர்ந்திருக்கிறவர்கள் அல்லாமல் மற்றும் ஏராளமான ஐரோப்பியர்களுக்கும் இந்தியரிடம் அனுதாபமும் மதிப்பும் ஏற்பட்டிருக்கின்றன.

இதனுல் இந்திய சமூகம் அதிக கௌரவத்தை அடைந்திருப்பதோடு, போராட்டத்திற்கு முன்னுல் இந்தியரை அலட்சியமாகப் பாவித்து வந்த ஐரோப்பியர்கள், இந்தியரிடம் மரியாதையும் மதிப்பும் வைக்கும்படியும் போதிக்கப்பட்டிருக்கிருர்கள்.

நம்மிடம் இருக்கும் பலம், வென்றுவிட முடியாதது என்பதை அரசாங்கம் இப்பொழுது உணருகிறது.

இந்நாட்டில் தங்கிவிட்ட இந்தியரில் பெரும்பாலானவர்கள் போராட்டத்திற்கு முன்னுல், தாங்கள் கோழைகள் என்பதைக் காட்டிக்கொண்டு வந்தனர், என்ருலும், போராட்டம் அவர்களுக்கு அதிக ஆண்மையையும் வீரத்தையும் அளித்தது. இதற்கு முன்னுல் முணுமுணுத்துக்கூட தங்கள் குறைகளைக் கூற அஞ்சியவர்கள், இப்பொழுது வீரத்துடன் தங்கள் மனத்தில் இருப்பதைப் பகிரங்கமாகக் கூறி வருகின்றனர்.

போராட்டத்திற்கு முன்பு ஜொஹன்னஸ்பர்க்கில் பெண்கள் இயக்கம் என்பதே இருந்ததில்லை. இப்பொழுது மேரி வோக்லேயின் தலைமையில் ஒரு வகுப்பு ஏற்பட்டிருக்கிறது. சமூகத்திற்கு இலவசமாகவே அவர் தமது சேவையை அளித்து வருகிருர்.

போராட்டத்திற்கு முன்னுல் இந்தியரை நடுங்கச் செய்து கொண்டிருந்த சிறை வாழ்க்கை, இப்பொழுதும் அவர்களை பயமுறுத்தி விடுவதாக இல்லை.

போராட்டத்தின் காரணமாக ஸ்ரீ காச்சலியாவும் மற்றவர்களும் தங்களுக்கு இருந்த சொத்துக்களெல்லாவற்றையுமே இழந்துவிட்டார்கள். ஆனுலும், இதன் பலனுக, எவ்வளவு பணம் கொடுத்தும் வாங்கியிருக்க முடியாத மனேதிடத்தையும் ஒழுக்கத்தையும் தாங்கள் அடைந்திருப்பதாகவும், இவற்றைத் தங்களுக்கு உண்டாக்கியது போராட்டத்தைத் தவிர வேறு எதுவுமல்ல என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

போராட்டம் இல்லாதிருந்தால், இந்திய சமூகத்திற்கே பெரும் பொக்கிஷம் போன்றவர்களும், எந்தச் சமூகத்திற்குமே பெரிய மதிப்பை உண்டாக்கக் கூடியவர்களுமான ஆண்களும் பெண்களும் தமிழரிடையே இருக்கிருர்கள் என்பதை இந்திய சமூகம் அறியாமலேயே இருந்திருக்கும்.

யுத்த காலத்தில் இந்நாட்டைவிட்டுப் போய்விட்ட நூற்றுக் கணக்கான இந்தியர் திரும்பவும் உரிமையைப் பெறும் வகையில் 1908-ஆம் வருட டிரான்ஸ்வால் சட்டத்தில் மாறுதல் உண்டாகும் படியும் போராட்டம் செய்தது.

இந்தச் சமரச முடிவு ஏற்படுவதற்கு முன்னுல், இந்தியர் மீது எவ்வளவோ மோசடிக் குற்றச்சாட்டுகள் கூறப்பட்டு வந்தன. அக்குற்றச்சாட்டுகளிலிருந்து எல்லாம் இன்று விடுதலை பெற்று இந்தியர் சமூகம் உலகத்தின் முன்பு மரியாதையுடன் நிற்கிறது.

நேட்டாலில் ஐரோப்பியர்கள் தலைவரி செலுத்தவேண்டிய தில்லையென்று விலக்கு அளிக்க யூனியன் பார்லிமெண்டில் கொண்டு வரப்பட்ட மசோதா வாபஸ் வாங்கப்பட்டிருப்பது, இந்தியர்கள் திரும்பவும் சட்ட மறுப்பில் இறங்கி விடுவார்களோ என்ற நடுக்கம் அதிகாரிகளுக்கு இருக்கிறது என்பதற்குப் புதிய தோர் எடுத்துக்காட்டாகும்.

ஜெனரல் ஸ்மட்ஸ், தம்முடைய உத்தரவுகளையே மும்முறை யும், பிரிட்டிஷ் அரசாங்கம் வெவ்வேருன சந்தர்ப்பங்கள் இரண்டில் தனது உத்தரவையும் ரத்து செய்துகொள்ளும்படி நம் போராட்டம் செய்திருக்கிறது.

போராட்டத்திற்கு முன்னுல் நமக்கு விரோதமாகச் செய்யப்பட்ட சட்டங்களெல்லாம், நம்மைப் பொருட்படுத்தா மலும், அவைகளைப்பற்றி நம் அபிப்பிராயம் என்ன என்பதை கவனிக்காமலேயும் நிறைவேற்றப்பட்டு வந்தன. ஆனுல், போராட்டத்திற்குப் பிறகோ, நம்முடைய கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் அதிகாரிகள் கவனிக்க வேண்டியவர்களாகி விட்டதோடு அவைகளைப் பற்றி அதிக மதிப்பும் செலுத்து கின்றனர்.

முன்பு இருந்தவையெல்லாம்விட இந்திய சமூகத்தின் மதிப்பு போராட்டத்துக்குப் பிறகு மிக அதிகமாக உயர்ந்திருக் கிறது. உலகத்தின் செல்வங்கள் எல்லாவற்றையும்விட இது மிகவும் மேலானது.

சத்தியம் அசைக்க முடியாதது என்பதை இந்திய சமூகம் உலகிற்கு எடுத்துக்காட்டியிருக்கிறது.

கடவுளிடம் முழு நம்பிக்கை கொண்டதால் மதத்தின் பெருமையையும் இந்திய சமூகம் நிரூபித்துக் காட்டியிருக்கிறது. "எங்கே சத்தியம் இருக்கிறதோ, எங்கே மத தருமமும் இருக்கிறதோ, அங்கே மாத்திரமே வெற்றியும் உண்டு."

இதைப்பற்றி அதிகமாகச் சிந்திக்கச் சிந்திக்க, பல வகைகளிலும் இதைக் கவனித்துப் பார்க்கப் பார்க்க, இப்போராட்டத்தினால் ஏற்பட்டதாக மேலே சொல்லப்பட்டிருக்கும் பலன்களைவிட இன்னும் ஏராளமான நன்மைகள் இதனால் ஏற்பட்டிருக்கின்றன என்பதையும் எவரும் காணமுடியும். மேலேயுள்ள ஜாபிதாவில் கடைசியாகக் கூறப்பட்டிருப்பது, மற்றெல்லாவற்றையும்விட மிகச் சிறந்ததாகும். கடவுளிடம் முழு நம்பிக்கை இல்லாமல் இத்தகைய பெரும் போராட்டத்தை வெற்றியுடன் நடத்தியிருக்கவே முடியாது. எல்லா நேரங்களிலும் நமக்கு வழிகாட்டியாக இருந்தவர் அவர் ஒருவரே. அவரிடம் திடமான நம்பிக்கையை வைத்துவிட்டவர்கள் லட்சியத்தை அடையாமல் போகமாட்டார்கள். இப்போராட்டத்தின் பலனாக அவரிடம் இன்னும் அதிக நம்பிக்கை கொள்ள நாம் கற்றுக்கொண்டிருப்போமானால், அது வீணுக்கு நடத்திய போராட்டமாகாது.

> "ஏழைகள் எந்த நிலையில் வாழ்கிறார்களோ அதைக் கொஞ்ச அளவுக்கு நாமும் அனுசரிப்போம். ஆப்பிரிக்காவில் எளிய வாழ்க்கைச் சோதனையைச் செய்ய முற்பட்டபோது, ஒரே அறையில் வசித்து வந்தேன். அந்த அறையே என் அடுப்பங்கரையாகவும், வருவோரை வரவேற்குமிடமாகவும், நான் குளிக்குமிடமாகவும், பாத்திரங்களைத் துலக்குமிடமாகவும், என் படுக்கை அறையாகவும் இருந்தது. என்றாலும் அது முற்றிலும் சுத்தமானதாக இல்லை என்று எவராலும் கூற முடியவில்லை."
>
> 1923 ஜனவரி 12-ஆம் தேதி காந்திஜி கூறியதாக 'மகாதேவ தேசாயின் தினக்குறிப்பில்' கூறப்பட்டிருக்கிறது.

# இந்தியாவுக்கு ஒரு பாடம்

மகாத்மாவின் வாழ்க்கைச் சரிதம் எழுதிப் பிரபலமானவர் ரெவரண்டு ஜோசப் டோக். 1909-இல் நடந்த கிளர்ச்சியின் சம்பந்தமாக இந்தியாவுக்கு ஒரு செய்தியை அனுப்பும்படி அவர் மகாத்மா காந்தியைக் கேட்டிருந்தார். அதன்பேரில் மகாத்மா அப்பொழுது அனுப்பியிருந்த செய்தியாவது :

டிரான்ஸ்வால் போராட்டம், இந்தியாவும் அக்கறையுடன் கவனிக்கவேண்டியதாகும். உலகத்தின் எப்பகுதியிலும் தங்களுடைய ஆற்றலைக் காட்டக்கூடிய ஆட்களைத் தயாரிக்கும் பணியில் நாங்கள் ஈடுபட்டிருக்கிறோம். கீழ்க்கண்ட முடிவுகளின் பேரில் இப்போராட்டத்தை நாங்கள் மேற்கொண்டிருக்கிறோம் :

1. மிருக பலத்தைவிடச் சாத்விக எதிர்ப்பு ஒன்றே நிச்சயமாக மேலானது.

2. ஐரோப்பியர்களுக்கும் இந்தியருக்குமிடையே எங்குமே இயற்கையான தடைகள் எவையும் இல்லை.

3. இந்தியாவில் ஆட்சி நடத்தும் பிரிட்டிஷாரின் நோக்கம் எதுவாயிருப்பினும் அந்தத் தேச மக்களைப் பொறுத்தவரையில் நியாயம் வழங்கவேண்டும் என்ற ஆர்வம் பொதுவாக இருந்து வருகிறது. பிரிட்டிஷ் மக்களுக்கும் அந்நிய மக்களுக்கும் இடையே இருந்துவரும் தொடர்பு அறுந்து போவது பெருந் துயர் தருவதாகும். சுதந்திர மக்களாக நாம் நடத்தப்பட்டால், இந்தியாவிலோ மற்ற இடங்களிலோ அப்படி நடத்தப்படுவதற்கு நமக்குள்ள உரிமையை நாம் வற்புறுத்தினால், பிரிட்டிஷ் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் இடையே இருக்கும் தொடர்பு பரஸ்பரம் இருவருக்கும் நன்மையளிப்பதோடு, மத சம்பந்தமாகவும் உலகிற்கும் பெரிய நன்மை உண்டாகும்; அதனால் சமூக, ராஜீய காரியங்களிலும் நல்லது ஏற்படும். ஒரு நாடு இன்னொரு நாட்டுக்கு உறுதுணை என்பது என் கருத்து.

இந்தக் காரியங்களையெல்லாம் முன்னிட்டு, டிரான்ஸ்வால் போராட்ட சம்பந்தமான சாத்விக எதிர்ப்பு முற்றிலும் நியாயமானது என்றே நான் கொள்ளவேண்டும். டிரான்ஸ்வாலில் எங்களுக்குள்ள துன்பங்கள் சம்பந்தமாகவேயன்றி இந்தியாவில் நம் மக்கள் அனுபவித்துவரும் ராஜீய, மற்றத் தொல்லைகளுக்கும் அது பொதுவான பரிகாரமாகவும் இருக்கலாம்.

# காங்கிரஸுக்குச் செய்தி

இந்திய தேசீய காங்கிரஸ் சம்பந்தமாக ஒரு செய்தியை அனுப்புமாறு 'இந்தியன் ரெவியூ' பத்திரிகை தென்னுப் பிரிக்காவில் இருந்த மகாத்மா காந்தியைக் கேட்டிருந்தது. அப் பத்திரிகையின் 1909 டிசம்பர் வெளியீட்டுக்கு காந்திஜி அனுப்பியிருந்த செய்தியில், காங்கிரஸும் சத்தியாக்கிரகப்போர் முறையைக் கையாள வேண்டும் என்று முதன் முதலாக யோசனை கூறியிருக்கிருர். அச்செய்தியாவது :

சமீபத்தில் நடக்கப்போகும் காங்கிரஸ் சம்பந்தமாக ஒரு செய்தி அனுப்புமாறு எனக்கு நீங்கள் தந்தி கொடுத்திருக் கிறீர்கள். எந்தச் செய்தியையும் அனுப்பும் தகுதி எனக்கு இருக்கிறதா என்று எனக்கே தெரியவில்லை. என்றுலும், மரி யாதையை முன்னிட்டு உங்கள் தந்திக்கு நான் ஏதாவது பதில் எழுதியாக வேண்டியது அவசியமாகிறது. இச்சமயத்தில் என் முன்னுல் இருந்து வருவதைத் தவிர, அதாவது டிரான்ஸ் வாலில் நடந்துகொண்டிருக்கும் போராட்டத்தைத் தவிர, வேறு எதையும் சிந்திக்கவும் என்னுல் இயலவில்லை. இப்போராட்டம் இந்தியாவின் மானத்தைக் காப்பதற்காகவே நடத்தப்படு வதால், இந்தியா முழுவதிலுமுள்ள நம் தேச மக்கள், இது, லட்சியத்தில் தேசீயமானது என்பதை உணர்கிருர்கள் என்றே நம்புகிறேன். நான் செய்வது தவருயிருக்கலாம். ஆனல், இக் காலத்தில் நடக்கும் போராட்டங்களில் இது மிகப் பிரமாத மானது என்று பகிரங்கமாகச் சொல்ல நான் தயங்கவே இல்லை. ஏனெனில் இது, தான் அடைய விரும்பும் லட்சியத் திலும், அனுசரிக்கப்படும் முறைகளிலும் மிகப் புனிதமானது. ஐரோப்பியர்களைப்போலவே நம்முடைய நாகரிகமுள்ள இந்தி யரும் டிரான்ஸ்வாலுக்குச் செல்ல உரிமை வேண்டும் என்பதற் காக டிரான்ஸ்வாலிலுள்ள நம் தேசத்தினர் போராடிக் கொண் டிருக்கிருர்கள். போராடிக் கொண்டிருப்பவர்களுக்கு இதில் சொந்த நன்மை எதுவுமே கிடையாது. மேற்கண்ட உரிமை இப்பொழுதுதான் முதல் தடவையாகக் காலனி சட் டத்தில் நீக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்த உரிமை திரும்பவும் கிடைப்பதனுல் யாருக்கும் அதிக நன்மை எதுவும் கிட்டிவிடப் போவதும் கிடையாது. புனிதமான, தெளிவான லட்சியத்திற்காகப் போராடும் தகுதி தங்களுக்கு உண்டு

என்பதை டிரான்ஸ்வாலில் இருந்து வரும் நமது இந்துஸ்தானத்தின் மக்கள் காட்டி வருகிறார்கள். பரிகாரத்தை அடைவதற்காக அனுசரிக்கப்படும் முறைகளும் அதே போல் புனிதமானவை, தெளிவானவை. பலாத்காரம், எந்த வகையிலும் இதிலிருந்து விலக்கப்பட்டிருக்கிறது. நிரந்தரமான சீர்திருத்தத்தை அடைவதற்குச் சரியான, உண்மையான மார்க்கம் துன்பங்களைத் தாமே அனுபவிக்கத் தயாராயிருப்பதுதான் என்று இங்குள்ள இந்தியர் நம்புகின்றனர். துவேஷத்தை அன்பைக்கொண்டு எதிர்த்து வெற்றி பெறப் பாடுபட்டு வருகிறார்கள். மிருக அல்லது உடல் பலத்தை ஆன்மபலத்தைக்கொண்டு எதிர்க்கின்றனர். பூமண்டல மன்னருக்கும் அரசியலமைப்புக்கும் விசுவாசம் தெரிவித்துக் கீழ்ப்படிவதைவிட, கடவுளுக்கும் அவருடைய சட்டங்களுக்கும் பணிவதே முக்கியம் என்று கருதுகின்றனர். கடவுளின் சட்டங்களைத் தங்கள் மனச்சாட்சியின் மூலம் பிரதிபலிப்பதில் ஒருவேளை தாங்கள் தவறிவிடவும் கூடும் என்பதையும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆகவே, கடவுளின் அழிவில்லாச் சட்டங்களுக்கு முரணானவை மனிதர் ஆக்கிய சட்டங்கள் என்று கருதி, அவற்றை எதிர்க்கும்போதோ அல்லது மதிக்க மறுக்கும் போதோ, அவை விதிக்கும் தண்டனையை, சற்றும் வருத்தப்படாமல் ஏற்றுக்கொள்ளுகின்றனர். தங்களுடைய துன்பங்களுக்கு நிவர்த்தி ஏற்படுவதற்குக் காலப் போக்கின்மீதும், மனித சுபாவத்தில் தென்படும் சிறந்த பண்பின் மீதும் நம்பிக்கை வைக்கின்றனர். தாங்கள் செய்தது தவறாக இருந்துவிடின் தாங்கள் மாத்திரமே துன்பத்தை அனுபவிக்கின்றனர்; இருக்கும் காரியங்கள் அப்படியே தொடர்ந்து இருந்து வருகின்றன. 2,500 இந்தியர், அதாவது இங்கே குடியிருக்கும் இந்தியரில் பாதிப் பேர், அல்லது டிரான்ஸ்வாலில் இருக்கக் கூடிய மொத்த இந்தியரில் ஐந்தில் ஒரு பகுதியினர் இப்பணியில் ஈடுபட்டு, இதற்காகச் சிறைத் தண்டனையையும் அனுபவித்து, கொடிய துன்பங்களையும் அடைந்திருக்கிறார்கள். இவர்களில் சிலர் திரும்பத் திரும்பச் சிறை சென்றிருக்கின்றனர். அவர்களின் குடும்பங்கள் பரம ஏழைகள் ஆகிவிட்டன. வியாபாரிகள், தங்களுடைய வீரத்தைப் பறிகொடுப்பதைவிடக் கஷ்டப்படுவதே மேல் என்று முன்வந்தனர். இதன் விளைவாகத் தென்னுப்பிரிக்காவில் ஹிந்து-முஸ்லிம் பிரச்னையும் தீர்ந்துவிட்டது. ஒருவர் இல்லாமல் மற்றொருவரால் எதுவும் ஆகாது என்பதை இங்கே நாங்கள் உணர்கிறோம். முஸ்லிம்கள், பார்ஸிகள், ஹிந்துக்கள், மாகாண ரீதியில் எடுத்துக்கொண்டால் வங்காளிகள், மதரா

ஸிகள், பஞ்சாபிகள், ஆப்கானிஸ்தானியர்கள், பம்பாய்க் காரர்கள் ஆகிய எல்லோரும் ஒன்றுபட்டு நின்று போரா டினர்.

இப்போராட்டத்தை மாத்திரமே காங்கிரஸ் கவனிக்க வேண்டும் என்று இராவிட்டாலும், காங்கிரஸ் கவனிக்கத் தக்கது இது என்று துணிந்து யோசனை கூறுவேன். அதிகப் பிரசங்கித்தனம் என்று கருதப்படாதிருந்தால், இதற்கும் காங்கிரஸின் மற்ற வேலைத் திட்டங்களுக்கும் அதிக வித்தியாசம் உண்டு என்றும் கூறுவேன். மற்ற இனங்களைப் பற்றியதான சட்டத்திற்கோ அல்லது கொள்கைக்கோ எதிர்ப்பு என்பதில் உருப்படியான கஷ்டம் எதுவுமே இல்லை. காங்கிரஸின் நடவடிக்கை, காரியத்திற்குப் பொருத்தமற்றதான மனப் போக்கைக் கொண்டதாக இருக்கிறது. டிரான்ஸ்வால் விஷயத் திலோ, அங்குள்ள சட்டமும் அதை உண்டாக்கும் கொள்கை யும் தவருயிருப்பதால் தவறு என்றே கருதுகிறோம். ஆகவே, மனமார, வேண்டுமென்றே உடல் விஷயத்திலும் பொருள் சம்பந்தமாகவும் துன்பங்களை அனுபவிக்கிறோம். மனப்போக்கை ஒத்துக் காரியமும் செய்யப்படுகிறது. இங்கே சமர்ப்பிக்கப்படும் கொள்கை சரியானதே என்ருல், டிரான்ஸ்வால் பிரச்னைக்குக் காங்கிரஸின் வேலைத் திட்டத்தில் சிறந்த இடத்தைக் கொடுக்கவேண்டும் என்று நான் கேட்பது நியாயமற்றதாகாது. இன்னும் ஒன்றும் சொல்லுவேன். மேலே விவரிக்கப்பட்டுள்ள படி சாத்விக எதிர்ப்பைக் குறித்துச் சிந்தித்து அதில் நமது முழுக் கவனத்தையும் செலுத்துவதாயின், இந்தியாவில் நாம் அனுபவித்து வரும் பல துன்பங்களை யெல்லாம் போக்கிக் கொள்ளுவதற்கு ஏற்ற சரியான மருந்து சாத்விக எதிர்ப்பே என்பதையும் ஒருவேளை நாம் கண்டுகொள்ளவும் கூடும். இது கவனமாக ஆராயத்தக்கதும் ஆகும். நம் நாடு பல புரா தன மதங்களுக்கெல்லாம் வளர்ப்பிடமாக இருந்திருக்கிறது. நவீன நாகரிகம், படுமோசமானதான பலாத்காரத்தை அடிப் படையாகக் கொண்டது, மனிதனிடம் இருக்கும் தெய்விகத் தன்மைக்கே விரோதமான இந்த நாகரிகம், அழிவை நோக்கி அதிக வேகமாகப் போய்க்கொண்டும் இருக்கிறது. ஆகையால், இந்த நாகரிகத்திடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியது எதுவுமே இல்லையாகையால் நம் மக்களுக்கும் நம் நாட்டின் பண்புக்கும் ஏற்ற சரியான ஆயுதம் சாத்விக எதிர்ப்பேயாகும்.

# கொள்கையில் உறுதி

[இந்தியாவிலிருந்த தம் நண்பர் ஒருவருக்கு 1909-இல் மகாத்மா காந்தி ஒரு கடிதம் எழுதினர். அதன் சாரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. தாம் வகுத்துக்கொண்டகொள்கையில் தமக்குள்ள உறுதியை இக்கடிதம் காட்டு கிறது. அதோடு, இந்தியாவின் எதிர்காலத்தின் நன்மைக்கு ஏற்றது இன்ன தென்பதைக் குறித்து மகாத்மாவின் உள்ளத்தில் உறுதிப்பட்டுவந்த எண் ணத்தையும் இக்கடிதம் பிரதிபலிக்கிறது. இக்கடிதம் எழுதப்பட்ட அதே 1909-ஆம் ஆண்டில் காந்திஜி எழுதிய 'இந்திய சுயராஜ்யம்'' இத் தொகுப்பில் அடுத்த பகுதியாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அந்நூலில் காந்திஜி வெளியிட்டிருக்கும் கருத்துக்களுக்கு ரத்தினச் சுருக்கமாக இக் கடிதம் இருப்பதும் கவனிக்கத்தக்கது. ஆகையால் 1909-இல் காந்திஜியின் உள்ளத்தில் ஊன்றிவிட்டகொள்கை, உறுதிப்பாடு ஆகியவைகளை அறி வதற்கு இக்கடிதமும் பயனுள்ளதாகும்.]

1. கிழக்கு நாடுகளையும் மேற்கு நாடுகளையும் இணைக்க முடியாத சுவர் குறுக்கே எதுவும் இல்லை.

2. மேற்கத்திய அல்லது ஐரோப்பிய நாகரிகம் என்ற ஒன்று இல்லை. ஆனல், முற்றிலும் உலக இன்பத்தையே அடிப்படையாகக் கொண்டதான நவநாகரிகம் என்பது உண்டு.

3. நவநாகரிகத்தினல் தீண்டப்படுவதற்கு முன்னல் ஐரோப்பிய மக்கள் பொதுவாக எல்லாவற்றிலும் கிழக்கத்திய மக்களைப் போலவே இருந்தார்கள். என்ருலும், இந்திய மக்க ளும், இன்றுகூட நவநாகரிகத்தினல் தீண்டப்படாமல் இருக்கும் ஐரோப்பியர்களும், அந்த நாகரிகத்தில் பிறந்தவர்களை விட இந்தியர்களுடன் கலந்துவிடக் கூடியவர்களாகவே இருக்கி ருர்கள்.

4. இந்தியாவை ஆண்டு கொண்டிருப்பது பிரிட்டிஷ் மக்கள் அல்ல. ஆனல், இக்கால நாகரிகம், அதனுடைய ரெயில்வேக்கள், தந்தி, டெலிபோன் ஆகியவைகளையும், புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருப்பவைகளில் எவை நாகரி கத்தின் வெற்றி என்று கூறப்படுகின்றனவோ அவைகளையும் கொண்டே ஆட்சி செய்து வருகிறது.

5. பம்பாய், கல்கத்தா போன்ற இந்தியாவின் முக்கிய மான நகரங்களே உண்மையில் தொற்றுநோய் இடங்களாகும்.

6. பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பதிலாக நாளைக்கு நவநாகரிக முறைகளை அடிப்படையாகக் கொண்ட இந்திய ஆட்சி ஏற்

படுமாயின், இங்கிலாந்துக்குக் கொண்டு போகப்பட்டு வந்த பணத்தில் கொஞ்சம் மிச்சமாகும் என்பதைத் தவிர எந்த விதத்திலும் இந்தியா மேம்பட்டு விடாது. ஆனுல், அப்பொழுது ஐரோப்பா அல்லது அமெரிக்காவைச் சேர்ந்த இரண்டாவது அல்லது ஐந்தாவது நாட்டைப் போன்ற ஒரு நாடாகவே இந்தியா இருக்கும்.

*7.* மேற்கு, நவநாகரிகத்தை முற்றிலும் அடியோடு விட்டொழித்தால்தான் கிழக்கும் மேற்கும் ஒன்றுபட முடியும். கிழக்கும் நவநாகரிகத்தை மேற்கொண்டு விடுமானுல், அவை ஒன்றுபடுவதாகப் பார்வைக்குத் தோன்றும். ஆனுல், அப்படி ஒன்றுபடுவதுகூட, இங்கிலாந்தும் ஜெர்மனியும், ஒன்றையொன்று விழுங்கி விடாமல் இருக்கவேண்டும் என்ற தீராத அச்சத்தால் செய்து கொள்ளும் ராணுவ ஒப்பந்தத்தைப் போன்றதாக இருக்கும்.

*8.* உலகம் முழுவதையுமே சீர்திருத்திவிட, ஒரு தனி நபரோ அல்லது ஒரு கூட்டத்தினரோ ஆரம்பிப்பதோ அல்லது எண்ணுவதோ வெறும் அதிகப்பிரசங்கித்தனமாகும். இதைச் சாதிக்கச் செயற்கையால் இயங்கும் விசையான யந்திர சக்தியைப் பயன்படுத்துவது ஆகாததொன்றைச் செய்ய முயற்சி செய்வதேயாகும்.

*9.* வாழ்க்கை வசதிகளை அதிகரிப்பதென்பது, எந்த விதத்திலும் ஒழுக்க வளர்ச்சிக்கு உகந்ததாகாது என்றே பொதுவாகக் கூறலாம்.

*10.* மருத்துவ சாஸ்திரம் என்பது, செப்படி வித்தையைப் பிழிந்தெடுத்த ரசமேயாகும்; உயர்ந்த வைத்தியத் திறமை என்று சொல்லிக் கொள்ளப்படுவதைவிட அரைகுறை வைத்தியமே மிகவும் மேலானது.

*11.* தன்னுடைய ஆட்சியின் பிடிப்பை விடாமல் இருப்பதற்காகப் பிசாசு தன்னுடைய நன்மைக்காக உபயோகிக்கும் ஆயுதங்களே வைத்தியசாலைகள். அவை, ஒழுக்கக் கேடான காரியங்களையும், துயரங்களையும், அவமானங்களையும் உண்மையான அடிமைத்தனத்தையும் உண்டாக்கி வருகின்றன. வைத்தியப் பயிற்சியைப் பெறவேண்டும் என்று நான் எண்ணியிருந்த போது, நான் முற்றிலும் புத்தி தடுமாறிப் போனேன். வைத்திய சாலைகளில் நடக்கும் அக்கிரமங்களில் எந்த வகையிலும் பங்கு கொள்ளுவது எனக்குப் பாபகரமான காரியம். பெண்கள் சம்பந்தமான தீய நோய்களுக்கும், க்ஷய ரோகத்திற்கும் வைத்

தியசாலைகள் இல்லையென்றால், நம்மிடையே க்ஷயரோகம் குறைவாக இருப்பதோடு நம்மிடம் ஆண்-பெண் சம்பந்தப்பட்ட ஒழுக்கக் கேடுகளும் குறைவாக இருக்கும்.

*12.* இந்தியாவின் விமோசனம், சென்ற ஐம்பது ஆண்டு களில் அது கற்றுக்கொண்டிருப்பதை மறப்பதில்தான் இருக் கிறது. ரெயில்வேக்களும், தந்திகளும், வைத்தியசாலைகளும், வக்கீல்களும், டாக்டர்களும், இப்படிப்பட்ட பிறவும் அறவே போகவேண்டும். மேல்தர வகுப்பினர் என்று கூறப்படுவோர், விவசாயியின் எளிய வாழ்க்கையே உண்மையில் ஆனந்தத்தைத் தரும் வாழ்க்கை என்பதை உணர்ந்து, அதையே விரும்பி மனமாரவும் நெறியோடும் வாழவேண்டும்.

*13.* ஐரோப்பிய ஆலைகளிலிருந்து வருவதாயினும் சரி, அல்லது இந்திய மில்களிலிருந்து வருவதாயினும் சரி, யந்திரங்களில் தயாரான துணிகளையே இந்தியா உடுத்தக் கூடாது.

*14.* இதைச் செய்ய இந்தியாவுக்கு இங்கிலாந்து உதவி செய்யலாம்; அப்பொழுதுதான் இந்தியாமீது அது கொண்டிருக் கும் ஆதிக்கம் நியாயமானதாகும். இதேபோல நினைப்பவர்கள் இங்கிலாந்தில் பலர் இருக்கிறார்கள் என்றும் தோன்று கிறது.

*15.* மக்களின் வாழ்க்கை முறைகளைக் கட்டுப்படுத்திச் சமூகத்தை நம் பண்டை முனிவர்கள் ஒழுங்குபடுத்தியிருப்பதில் உண்மையில் அறிவுடைமை தென்படுகிறது. ஐயாயிரம் ஆண்டு களாக வரும் முரட்டுக் கலப்பையே இன்றும் குடியானவனின் கலப்பையாக இருக்கிறது. விமோசனம் இதில்தான் அடங்கி யுள்ளது. இந்த நிலையில் நீண்ட காலம் வாழ்ந்து வந்திருக்கும் மக்கள், நாகரிக நடவடிக்கைகளில் ஈடுபட்ட பிறகு, ஐரோப்பா கண்டத்தைவிட, எவ்வளவோ அமைதியான வாழ்க்கையை அனுபவித்திருக்கிறார்கள். அறிவுள்ள ஒவ்வொருவரும், நிச்சய மாக ஒவ்வோர் ஆங்கிலேயரும், அவர் விரும்புவாராயின், இந்த உண்மையை அறிந்து அதன்படி நடக்கவேண்டும் என்றே நான் எண்ணுகிறேன்.

உண்மையான சத்தியாக்கிரக உணர்ச்சியே மேற்கண்ட திட்டமான முடிவுகளுக்கு வரும்படி என்னைச் செய்திருக்கிறது. இப்பொழுது இருந்துவரும் வெறிபிடித்த வேகத்தில் திருப்தி யடைந்துவிடும் மக்களிடையே அத்தகைய மகத்தானதோர் மாறுதலைக் கொண்டுவர முடியுமா என்பதைப் பற்றிச் சாத்விக

எதிர்ப்பாளனுகிய எனக்குக் கவலே இல்லே. இதன் உண்மையை நான் உணர்ந்துவிட்டால், இதன்படி நடந்து நான் ஆனந்தப்படுவேன். ஆகையால் எல்லோரும் ஆரம்பிக்கும் வரையில் நான் காத்திருக்கவேண்டியதில்லே. ஒரே மாதிரி நினேப்பு உள்ளவர்கள் இதற்கான காரியத்தில் இறங்கவேண்டும். நாம் செய்வது சரியானதாயிருந்தால் மற்றவர்களும் பின்பற்றுவார்கள். தத்துவம் இருந்து வருகிறது. முடிந்தவரையில் நமது பயிற்சி அதை ஒட்டி இருக்கவேண்டும். வேகத்தின் நடுவே நாம் வசித்து வருவதால், அதன் எல்லாத் தீமைகளிலிருந்துமே நாம் நம்மை உதறிக்கொண்டு விடமுடியாது. நான் ரெயிலில் ஏறும் ஒவ்வொரு சமயத்திலும், மோட்டார் பஸ்ஸில் ஏறும் ஒவ்வொரு வேளேயிலும், சரியானது இது என்பதைப் பற்றிய என் உணர்வுக்கு ஊறே நான் செய்கிறேன் என்பதை அறிவேன். அந்த அடிப்படையில் ஏற்படக்கூடியதான விளேவுகளேக் குறித்து நான் அஞ்சவில்லே. இங்கிலாந்துக்குப் போவது நல்லதன்று, தென்னுப்பிரிக்காவுக்கும் இந்தியாவுக்குமிடையே கப்பல்கள் மூலம் போக்குவரத்து வைத்துக்கொள்ளுவதும் நல்லதன்று; இப்படிப் பல. நீங்களும் நானும் இப்பொழுதுள்ள உடலுடன் இவற்றைப் பொருட்படுத்தாதிருக்கலாம். ஆனல், முக்கியமான விஷயம், நமது தத்துவம் சரியாக இருக்கப் பார்ப்பதேயாகும். அங்கே நீங்கள் பலதரப்பட்ட மனிதரையும் அவர்களுடைய நிலேமையையும் காண்பீர்கள். ஆகையால், மனத்தில் நான் மேற்கொள்ளும் முன்னேற்றமான காரியம் என்று நான் கூறுவதை உங்களிடமிருந்து அதிக காலம் தடுத்து வைக்கக்கூடாது என்று நான் கருதுகிறேன். நான் கூறுவதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவதாயின், புரட்சிக்காரர்களுக்கும் மற்றவர்களுக்கும் நீங்கள் ஒன்று சொல்லியாக வேண்டியது உங்கள் கடமையாகிறது. அவர்கள் விரும்பும் அல்லது விரும்புவதாக நினேக்கும் சுதந்திரத்தை, மனிதரைக் கொல்லுவதனுல் அல்லது பலாத்காரத்தினுல் அடையக்கூடாது. ஆனல், தங்களே ஒழுங்காக்கிக்கொண்டும், உண்மையான இந்தியராகி, இந்தியராக இருப்பதன் மூலமே அதை அடையவேண்டும் என்பதை அவர்களுக்கு நீங்கள் கூறவேண்டும். பின்னர், ஆளும் பிரிட்டிஷார் நமக்கு எஜமானர்களாக இல்லாமல் நமக்கு ஊழியர்களாக இருப்பர். அவர்கள் கொடுமைப்படுத்துகிறவர்களாக இல்லாமல் நமக்குத் தர்மகர்த்தாக்களாக இருப்பார்கள். அதோடு இந்தியாவில் இருக்கும் எல்லோருடனும் சமாதானத்துடனும் வாழ்வர். ஆகையால், இந்தியாவின் எதிர்காலம் இந்தியரிடந்தான்

இருக்கிறதேயன்றிப் பிரிட்டிஷ் சாதியாரிடம் இல்லை. இந்திய ரிடம் போதிய அளவுக்குத் தன்னலத் தியாகமும் ஆடம்பர மின்மையும் இருந்துவிடுமானால், இந்த நேரத்திலேயே தாங்கள் சுதந்திரம் அடைந்தவர்களாவர். சில ஆண்டுகளுக்கு முன்வரை நம்முடையதாகவே இருந்ததும், இப்பொழுதும் பெரும்பாலும் நம்முடையதேயாக இருந்து வருவதுமான எளிமையை இந்தியா வில் நாம் அடைந்துவிட்டால், சிறந்த இந்தியரும் சிறந்த ஐரோப் பியர்களும், இந்தியா முழுமைக்குமே ஒருவரையொருவர் நன்கு உணர்வதோடு ஒன்றுபட்டிருந்து வேலை செய்வதும் இன்றுகூடச் சாத்தியமேயாகும். துரிதமாகச் செல்வதற்கு வேண்டிய நீராவி ரெயில்கள் முதலியன இல்லாதிருந்த காலத்தில் போதகர்களும் பிரசாரகர்களும் நாட்டின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு, வழியில் ஏற்படக்கூடிய ஆபத்துக்களுக்கெல்லாம் துணிந்து நடந்தே சென்று வந்தனர். இவ்விதம் சென்று வந்ததால் அவர் களுக்குத் தேக சுகமும் ஆனந்தமும் ஏற்பட்ட போதிலும், மனித வர்க்கத்தின் நன்மைக்காகவே சென்றார்களேயல்லாமல் தங்கள் சுகத்திற்காகப் போகவில்லை. அப்பொழுது யாத்திரை செல்வ தற்குக் காசி போன்ற புண்ணிய ஸ்தலங்கள் இருந்தன. இன்றோ அவையெல்லாம் வெறுக்கப்படுபவைகள் ஆகிவிட்டன.

நான் என் குழந்தைகளிடம் குஜராத்தியில் பேசுவதைக் குறித்து என்னை நீங்கள் கண்டித்துக் கூறியது உங்களுக்கு நினை விருக்கும். குழந்தைகளிடம் ஆங்கிலத்தில் பேச நான் மறுத்து வந்தது முற்றிலும் சரி என்பதில் மேலும் மேலும் எனக்கு இப்பொழுது உறுதி ஏற்பட்டிருக்கிறது. ஒரு குஜராத்திக்காரர் இன்னும் ஒரு குஜராத்திக்காரருக்கு ஆங்கிலத்தில் எழுதுகிறார். அப்பொழுது அவர் சொற்களைச் சரியாக உச்சரிக்கவில்லை. இலக்கணப்படி எழுதவில்லை என்று நீங்கள் கூறுவீர்கள். ஆங்கிலத்தில் எழுதுவது அல்லது பேசுவதில் செய்யும் பெருந் தவறுகளைக் குஜராத்தியில் எழுதும்போது நான் நிச்சயமாகச் செய்யவே கூடாது. ஓர் இந்தியரிடமோ அல்லது ஒரு வெளி நாட்டினரிடமோ நான் ஆங்கிலத்தில் பேசும்போது, ஒரு வகையில் நான் அந்த மொழியைக் கற்றுக் கொள்ளாதவனே ஆகிறேன் என்பதாகவே நான் உணருகிறேன். நான் அதைச் சரியாகக் கற்றுக்கொள்ள வேண்டுமானால்—என் காதுகளையும் அதன் வழியில் வைத்துக்கொள்ள வேண்டுமாயின்—ஓர் ஆங்கிலேயரிடம் பேசுவதன் மூலமும், ஓர் ஆங்கிலேயர் பேசக் கேட்பதன் மூலமுமே அப்படிச் செய்யமுடியும்.

# சிறையிலிருந்து மகனுக்குக் கடிதம்

[வால்க்ஸ்ரஸ்டு சிறையிலிருந்து மகாத்மா தம் மகன் மணிலாலுக்கு எழுதிய கடிதம் இது. இன்றும் பத்திரப்படுத்தப்பட்டு வருகிறது. சிவப்பு மசிப் பென்சிலில் புல்ஸ்காப் அளவு வெள்ளைக் காகிதத்தில் இரு பக்கமும் கையால் வரைந்த ஆங்கிலக் கடிதமே இது. 25 மார்ச்சு, 1909 எனத் தேதியிட்டது. காந்திஜி சிறைக் கைதியாக இருந்தபோது அவருடைய இலக்கம் 777.]

காந்திஜி எழுதிய கடிதமாவது:

என் அன்பார்ந்த மகனே,

மாதம் ஒரு தடவை கடிதம் எழுதவும், ஒரு கடிதம் பெறவும் எனக்கு உரிமை உண்டு. இந்தக் கடிதம் நான் யாருக்கு எழுதுவது என்பதுபற்றி ஒரு கேள்வி பிறக்கிறது. ஸ்ரீ ரிட்சுக்கா ('இந்தியன் ஒப்பினிய'னின் ஆசிரியர்), ஸ்ரீ போலக்குக்கா, உனக்கா என்று நினைத்து உன்னையே தேர்ந்தேன். ஏனென்றால், நீயே என் சிந்தனையில் எப்போதும் இருக்கிறாய். என்னைப்பற்றி எதையும் சொல்லிக்கொள்ள நான் அனுமதிக்கப்படவில்லை. நான் நிம்மதியாகத்தான் இருக்கிறேன். என்னைப்பற்றிக் கவலைப்படவேண்டிய அவசியம் இல்லை.

இப்போது உன் அம்மாவுக்கு உடம்பு பூரண குணமென்று நம்புகிறேன். உன்னிடமிருந்து பல கடிதங்கள் வந்துள்ளன என்பது எனக்குத் தெரியும். ஆனால், அவை என்னிடம் சேர்ப்பிக்கப்படவில்லை. சிறை டெபுடி கவர்னர் மட்டும் நல்லவர். அவள் தேறி வருகிறாள் என்று என்னிடம் சொன்னார். சௌக்கியமாக நடமாடுகிறாளா? அவளும் நீங்களும் காலை வேளையில் தொடர்ந்து பாலும் சவ்வரிசியும் உட்கொள்ளுகிறீர்களென நம்புகிறேன்.

சாஞ்சி எப்படி இருக்கிறாள்? (ஹீராலாலின் மனைவியான குலாபின் செல்லப் பெயர்) நான் அன்றாடம் அவளைப்பற்றி நினைக்காமல் இருப்பதில்லை என்று அவளிடம் சொல்லு. அவள் உடலில் கண்டிருந்த சிரங்குகள் ஆறியிருக்கும், அவளும் ராமியும் உடல் நலத்துடன் இருப்பார்கள் என நினைக்கிறேன்.

ராமதாஸ், தேவதாஸ் சௌக்கியமென நினைக்கிறேன். பாடம் சரிவரப் படிக்கிறீர்களா? யாருக்கும் உபத்திரவம் தரவில்லையே? ராமதாஸுக்கு இருமல் குணமாகிவிட்டதா?

வில்லி உங்களிடம் தங்கியிருந்தபோது சரிவர உபசரித்தீர்களா? கோர்ட்டஸ் விட்டுச் சென்ற உணவுப் பொருள்கள் ஏதாவது மிகுதி இருந்தால் அவரிடமே அதைத் திருப்பித் தந்துவிட வேண்டுமென்பது என் விருப்பம்.

இப்பொழுது உன்னைப்பற்றி. நீ எப்படி இருக்கிறாய்? நான் உன்மீது சுமத்தியுள்ள குடும்ப பாரத்தை மகிழ்ச்சியுடனேயே சமாளித்து வருகிறாய் என்று நினைக்கிறேன். நான் உனக்குச் சொல்லியதைவிட நேர் வழி காட்ட ஒருத்தர் உன்னிடம் இருக்கவேண்டும் என்பதை உணர்கிறேன். உன் படிப்புபற்றிச் சரியான அக்கறை எடுத்துக்கொள்ளப் படவில்லை என்று சில சமயம் நீ குறைப்பட்டிருக்கக்கூடும். இப்போது சிறையில் நான் எத்தனையோ நூல்களைப் படித்து வருகிறேன். எமர்ஸன், ரஸ்கின், மாஜினி இவர்களுடைய நூல்களைப் படித்துக்கொண்டு வருகிறேன். உபநிஷத்துக்களையும் படிக்கிறேன். வெறும் எழுத்து அறிவுமட்டும் கல்வியாகிவிடாது. நன்னடத்தையை விருத்தி செய்துகொள்ளுவதுதான் உண்மையான கல்வி. கடமைபற்றிய அறிவென்பதே இதன் பொருள். நம் குஜராத்தி மொழியிலும் (கேளவணி) இந்தச் சொல்லுக்குப் பயிற்சி என்பது சரியான அர்த்தம். என்மனத்திற்கு இது உண்மையெனப் படுகிறது. கிடைக்கக்கூடிய நல்ல கல்விப் பயிற்சியே நீ பெற்று வருகிறாய். அன்னைக்குப் பணி செய்வது, அவள் கோபித்துக்கொண்டாலும் இன்முகத்துடன் சகித்துக்கொள்ளுவது, சாஞ்சியைக் கவனித்துக்கொள்ளுவது, அவளுடைய தேவைகளை முன்னதாக அறிந்து, ஹரிலாலை விட்டுப் பிரிந்திருக்கும் அவள் துயர்கொள்ளாமல் பார்த்துக்கொள்ளுவது, ராமதாஸ், தேவதாஸ், இவர்களைக் கவனிக்கும் பொறுப்பை அவளுக்கு விடாமல் நீயே கவனித்துக்கொள்ளுவது, இவற்றைவிட அரிய வாய்ப்புக்கள் வேறு என்ன வேண்டும்? இந்தக் கடமைகளைச் சரிவரச் செய்தாலே உண்மையான கல்வியைப் பாதிக்குமேல் அறிந்தவன் ஆவாய்.

உபநிஷத்துக்கு நாதுராம்ஜி வரைந்துள்ள முடிவுரையில் ஒரு பகுதி என்னை வெகுவாய்க் கவர்ந்துவிட்டது. பிரம்மசரிய ஆசிரமம் அதாவது வாழ்க்கையின் முதல் நிலை, கடைசி நிலையான சந்நியாசத்தைப் போலவே இருக்கிறது என்றார். இது முற்றிலும் உண்மை. வேடிக்கை விளையாட்டெல்லாம், ஒன்றும் அறியாத பன்னிரண்டு வயதுக்குட்பட்ட வாலிபப் பருவத்தில் தான். புத்தி தெரியும் வயதுவந்தவுடன் கடமை, பொறுப்

பெல்லாம் உணர்வதற்கான வழி போதிக்கப்படுகிறது. இந்தப் பிராயம் தொடங்கி மனத்திலும் செயலிலும் புலனடக்கம், உண்மையை அறிவதற்கு ஆவல், பிற உயிர்க்குத் தீங்கு நினையாமை இவற்றைப் பழக்கத்தில் கொண்டுவர வேண்டும். இந்த எண்ணமோ, பயிற்சியோ அத்தகையவனுக்குச் சள்ளையாக இருக்கவே கூடாது. இயல்பாகவே இருத்தல் வேண்டும். இவை அவன் மகிழ்வதற்குரியனவாக இருக்கவேண்டும். ராஜ்கோட்டிலிருந்த பல பிள்ளைகளைப் பற்றிய நினைவு வருகிறது. இப்போது நீ இருப்பதைவிட இன்னும் இளமையான வயது அப்பொழுது எனக்கு. தந்தைக்கும் பணிவிடைசெய்வதேஎனக்கு இன்பம் தரும் விஷயம். பன்னிரண்டு வயதுக்குமேல் வேடிக்கை, விளையாட்டு எதையும் நான் அறியேன். என்வரைக்கும் சொல்லுவேன்: நீ உன் கல்விப் பயிற்சியை இவ்வழிகளில் முடித்துக்கொள்ளுவாயானல்-நம்பு-இந்த உலகத்தில் எந்த இடத்திற்குச் சென்றாலும் உனக்கு ஒரு குறையும் வராது. ஆன்ம தத்துவத்தை அறிவதற்கும், உன்னையே நீ தெரிந்துகொள்ளுவதற்கும், கடவுளைப்பற்றிய உண்மையை ஆராய்வதற்கும் வழி ஏற்படும். இதனல், எழுதப் படிக்க வேண்டியதே இல்லை என்பது அர்த்தமல்ல. அதைத்தான் நீ செய்துகொண்டு இருக்கிருயே. நீ குறைப்பட்டு வருந்துவதே கூடாது. உனக்கு வேண்டிய பொழுது இருக்கிறது, இதையும் பூர்த்தி செய்துகொள்ள. நான் சொல்லுவது போன்ற நல்லுரைகள் உனக்கு மிக அவசியம். இதில் நீ அடையும் பக்குவம் பிறருக்கும் உதவியாக இருக்கும். கவனித்துக்கொள்.

இனிமேல் ஏழைமையே நமக்குள்ள நிலை என்பதைத் தயவு செய்து நினைவுபடுத்திக்கொள். இதைப் பற்றி எவ்வளவுக்கெவ்வளவு நான் சிந்திக்கிறேனே அவ்வளவுக்கவ்வளவு, பணக்காரனுக இருப்பதைவிட ஏழையாக இருப்பதே பாக்கியம் என்று நான் உணருகிறேன். செல்வத்தைவிட ஏழைமையின் உபயோகங்கள் இன்பமானவை.

நீ பூணூல் போட்டுக்கொண்டிருக்கிருய். அதற்கு ஏற்றாற்போல நீ வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று விரும்புகிறேன். பிரார்த்தனை சரியானபடி இருப்பதற்குச் சூரிய உதயத்திற்கு முன்னலேயே படுக்கையைவிட்டு எழ வேண்டியது முற்றிலும் இன்றியமையாதது என்று தெரிகிறது. ஆகையால் குறிப்பிட்ட நேரத்தில் அதைச் செய்வதற்கு முயற்சி செய். இதைப்பற்றி நான் அதிகம் சிந்தனை செய்திருப்பதோடு கொஞ்சம் படித்து

மிருக்கிறேன். சுவாமிஜி* செய்துவரும் பிரசாரத்தில் நான் மரியாதையுடனேயே மாறுபடுகிறேன். பூணூல் போடுவதை அநேக சந்ததிகளாகக் கைவிட்டுவிட்டவர்கள் திரும்பவும் பூணூல் போட்டுக்கொள்ள வேண்டும் என்பது தவறு என்று எண்ணுகிறேன். இப்பொழுது இருக்கிறபடியே, சூத்திரர்களுக்கும் மற்றவர்களுக்குமிடையே அதிகமான போலி வேற்றுமைகளைக் கொண்டிருக்கிறோம். ஆகையால் பூணூல் இன்று இடையூறாக இருக்குமேயல்லாமல் உதவியாக இராது. இந்தக் கருத்தை விவரமாக விளக்கிக் காட்ட விரும்புகிறேன்; ஆனால், இப்பொழுது முடியாது. தமது வாழ்நாளெல்லாம் இவ்விஷயத்தைப் பற்றி ஆராய்ந்த ஒருவர் முன்பு நான் இந்தக் கருத்துக்களைக் கூறுகிறேன் என்பதை அறிவேன். என்றாலும், என் சிந்தனையிலிருப்பதைச் சுவாமிஜிக்குத் தெரிவிக்க வேண்டும் என்று எண்ணுகிறேன். காயத்திரியைப்† படித்திருக்கிறேன். அதன் சொற்கள் நன்றாக இருக்கின்றன. சுவாமிஜி, எனக்குக் கொடுத்த புத்தகத்தையும் படித்தேன். அதைப் படித்ததனால் அதிக நன்மையையே அடைந்திருக்கிறேன். சுவாமி தயாநந்தரைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் அதனால் எனக்கு உண்டாகியிருக்கிறது. காயத்திரிக்கும், வாஜஸனேய உபநிஷத்தில் பல மந்திரங்களுக்கும் அவர் கூறியிருக்கும் வியாக்கியானம், வைதிகப் போக்குள்ளவர்கள் கூறியிருக்கும் வியாக்கியானங்களுக்கு முற்றிலும் மாறுபட்டது. இப்பொழுது எந்தப் பொருள் சரியானது? எனக்குத் தெரியாது. சுவாமி தயானந்தர் கூறியிருக்கும் புரட்சிகரமான வியாக்கியான முறையை, எடுத்த எடுப்பில் ஏற்றுக்கொண்டுவிட நான் தயங்குகிறேன். சுவாமிஜியின் வாய் மூலமே அதிகமாகத்தெரிந்துகொள்ள நான் விரும்புகிறேன். நான் சிறையிலிருந்து வெளிவருவதற்கு முன்னால் அவர் புறப்பட்டு விட்டாலும், முடிந்தவரை நூல்களைக் கொடுத்துவிட்டுப் போவார் என்றும் எண்ணுகிறேன். அல்லது இந்தியாவிலிருந்தும் அவர் அனுப்பலாம். சுவாமி தயானந்தரின் போதனைகளைப்பற்றி வைதீகப் போக்குடையவர்கள் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்பதையும் அறிய விரும்புகிறேன். கையினால் செய்யப்பட்ட மேசோடையும் கையுறையையும்எனக்குஅனுப்பியதற்காகச் சுவாமிஜிக்குஎன் நன்றியைக் கூறவும். இந்தியாவில் அவர் விலாசத்தையும் அறிந்து

---

* இதில் குறிப்பிடப்பட்டிருக்கும் சுவாமிஜி, ஆரிய சமாஜப் பிரசாரகர் சுவாமி சங்கரானந்தர். 1908–ஆம் ஆண்டு வாக்கில் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றிருந்தார்.

† 24 மாத்திரைகள் கொண்ட வேதத்தில் வரும் யாப்பு. மந்திரங்கள் இந்த யாப்பிலேயே அமைந்துள்ளன.

வைக்கவும். இக்கடிதம் முழுவதையும் சுவாமிஜிக்குக் காட்டி அவர் என்ன சொல்லுகிருர் என்பதை எனக்கு அறிவிக்கவும்.

மீண்டும் உனக்குச் சொல்லுகிறேன். தோட்டவேலையில் அதிகமாக ஈடுபடு. நீயே மண்ணை அகழ வேண்டும். மண் வெட்டியால் கொத்த வேண்டும். பிற்காலத்தில் இதை நம்பித் தான் நாம் ஜீவிக்க வேண்டியிருக்கிறது. குடும்பத்தில் நீயே கைதேர்ந்த தோட்டக்காரனுய் இருக்க வேண்டும். உன் கருவி களைத் துடைத்து அதன் அதனிடத்தில் நன்ருக வைத்துக்கொள். உன் பாடங்களுள் கணிதத்திலும் சம்ஸ்கிருதத்திலும் அதிக கவனம் செலுத்த வேண்டும். பின்னுல் சொன்னது உனக்கு மிகவும் அவசியம். வயதான பிறகு இவை இரண்டும் சுலபமாகக் கற்றுக்கொள்ளக்கூடிய விஷயங்களல்ல. சங்கீதத்தைப் புறக் கணித்துவிடாதே. ஆங்கிலத்திலோ, குஜராத்தியிலோ, ஹிந்தி யிலோ உள்ள நல்ல வாக்கியங்கள், தோத்திரங்கள். பாடல்கள் இவற்றை ஒரு நோட்டுப் புத்தகத்தில் நல்ல கையெழுத்தில் வரைந்து தொகுத்து வை. வருட இறுதியில் இந்தத் திரட்டு மிகவும் பயனுடையதாக இருக்கும். கிரமமாகச் செய்தால் இவை யெல்லாம் சுலபமாகவே அமையும். எப்போதும் பரபரப்படை யாதே. எவ்வளவோ காரியம் செய்ய வேண்டியிருக்கிறதே, எதை முன்னுல் செய்வது என்றெல்லாம் கவலைக்கு இடம் தராதே. பொறுமையுடன், ஒரு விநாடிகூட வீணுக்காமல் இருந் தால் நடைமுறையில் இது எவ்வளவு எளிதாக முடியும் என்ப தைக் காண்பாய். வீட்டுக்காகும் செலவுக் கணக்கில் தம்படிகூட விடாமல் சரியாகக் குறித்து வை.

எமர்ஸனின் கட்டுரைகளை நான் படிக்கச் சொன்னதாக மகன்லால்பாயிக்குச் சொல்லு. டர்ஹாமில் ஒன்பது பென்ஸுக்கு இப்புத்தகம் கிடைக்கும். இன்னெரு மலிவுப்பதிப்பும் வெளியாகி யிருக்கிறது. இக்கட்டுரைகள் ஆழ்ந்து ஆராய்வதற்கு உகந்தவை. இவற்றைப் படித்து முக்கியமான பகுதிகளைக் குறித்து வைத்துக் கடைசியாக ஒரு நோட்டில் இவற்றை எழுதிக் கொள்ளச் சொல். இந்தக் கட்டுரைகள், மேல் நாட்டு உடையில் இருந்த போதிலும் இந்திய ஞானிகளின் அறிவுரைகளே என்று என் மனத்திற்குத் தோன்றுகின்றன. முற்றிலும் வேருன பாணியில் அவற்றைப் பெறுவது அதிசயப்படக்கூடிய விஷயம். டால்ஸ்டாயின் ‘கடவு ளின் உலகு உன்னிடமே இருக்கிறது’ என்ற நூலையும் அவர் படிக்கவேண்டும். அது யுக்திவாதம் நிரம்பியதொரு நூல். அதன் ஆங்கில மொழிபெயர்ப்பு எளிதில் புரிந்து கொள்ளக்கூடியது.

இன்னும் என்ன, டால்ஸ்டாய் தாம் சொன்னதைச் செயலிலும் காட்டுகிறார்.

[இந்தக் கடிதத்தின் நகல்களை எடுத்துப் போலக்குக்கு ஒன்று, கால்லன்பாக்குக்கு ஒன்று, இந்தியாவுக்குத் திரும்பிய ‘சுவாமி’க்கு ஒன்றுமாக அனுப்பச் சொல்லுகிறார். போலக், கால்லன்பாக் இவர்களிடமிருந்து கிடைக்கும் பதில்களை அந்தக் கடிதத்துடன் அனுப்பச் சொல்லுகிறார். ‘ஆனால், போராட்டத்தைப் பற்றி யாதொரு விஷயமும் அதில் இருக்கக்கூடாது’ என்று குறிப்பிடுகிறார். தணிக்கை செய்வோர் இதை அனுமதிக்கவில்லை. கடைசியாக காந்திஜி, “எந்தப் பதிப்பானாலும் சரி, பீஜகணிதப் புத்தகம் ஒன்று வேண்டும்” என்று எழுதுகிறார்.]

இப்போது இதை முடித்துக்கொள்ளுகிறேன். ராமதாஸ், தேவதாஸ், ராமி இவர்களுக்கு என் அன்பும் முத்தங்களும்.

—அப்பாவிடமிருந்து

## மற்றோர் கடிதம்

*1909*-ஆம் ஆண்டு நடுவில் மணிலாலுக்குக் காந்திஜி எழுதிய கடிதமாவது :

அன்புள்ள மணிலால்,

இனி என்ன செய்யப் போகிறோம் என்பதை எண்ணி நீ மனச் சோர்வு அடைந்திருக்கிறாய். அக்கேள்விக்கு உனக்காக நான் பதில் சொல்லிவிடுவதாயின், உன் கடமை எதுவோ அதையே நீ செய்யவேண்டும் என்று சொல்லுவேன். உன்னுடைய பெற்றோரைக் கவனித்துக் கொள்ளுவதே இப்பொழுது உனக்குள்ள வேலை. அதற்கு மேல் நீ கவலைப்பட வேண்டியதே இல்லை. மற்றவைகளைப் பற்றி உன் பெற்றோர்கள் கவனித்துக் கொள்ளுவார்கள். அவர்கள் இல்லாது போய்விட்ட போதுதான் உனக்குப் பொறுப்பு ஏற்படும். வக்கீலாகவோ அல்லது டாக்டராகவோ நீ தொழில் நடத்தப்போவது கிடையாது; அதைப் பொறுத்தவரையில் நீ நிச்சயமாக இருக்கலாம். நாம் ஏழைகள்; ஏழைகளாகவே இருக்க விரும்புகிறோம். பணத்தின் அவசியம் சாப்பாட்டுக்கு மாத்திரமே. போனிக்ஸின் அபிவிருத்தி நமது கடமை. ஏனெனில், அதன் மூலமே நாம் நம்மை அறிந்து கொள்ள முடிவதோடு நம் நாட்டுக்கும் சேவை செய்ய முடியும்.

நீ நன்ருக இருக்க வேண்டும் என்பதே எப்பொழுதும் என் மனத்தில் இருந்து வருகிறது என்பதை நீ நிச்சயமாக நம்பு.

மனிதனின் உண்மையான தொழில், அவன் தன்னுடைய ஒழுக்கத்தை விருத்தி செய்துகொள்ள வேண்டும் என்பது. பணத்தைச் சம்பாதிப்பதற்காக விசேடமாக எதையும் படித்துக் கொள்ள வேண்டும் என்ற அவசியமே கிடையாது. ஒருவர் நேர்மையான மார்க்கத்தை மாத்திரம் பின்பற்றுவாராயின் அவர் பட்டினி கிடக்கவே நேராது. அப்படிப்பட்டதோர் நிலைமையே ஏற்பட்டுவிட்டாலும், அச்சமின்றி அதைச் சமாளிக் கவும் தயாராக இருப்பார்.

அமைதியான மனத்துடன் நீ எதைப் படிக்க முடியுமோ அதையெல்லாம் தொடர்ந்து படித்துக்கொண்டு வரவேண்டும். நான் உன்னைப் பார்க்க முடியாமலிருப்பதால் இதை எழுதும் போதே என் கண்களில் நீர் பெருகுகிறது. உன் தந்தை உன் னிடம் அன்பில்லாமல் என்றும் இருந்துவிடமாட்டார் என்று உனக்கு உறுதி கூற விரும்புகிறேன். நான் செய்வதெல்லாம் உன் நன்மைக்காகவே. பிறருக்கு நீ சேவை செய்து கொண் டிருக்கும்வரை திக்கற்றவனுக நீ இருக்கவே மாட்டாய். இதை உறுதியாக நீ உணர்ந்திருக்க வேண்டும்.

## இன்னுமொரு கடிதம்

முந்திய கடிதத்திற்குச் சற்றேறக்குறைய அதே சமயத்தில் மணிலாலுக்குக் காந்திஜி மற்ருேர் கடிதம் எழுதினர். அக்கடி தம் கூறுவதாவது :

அன்புள்ள மணிலால்,

அப்படியானல் எந்த வகுப்பில் படிக்கிருய் என்று நீ பதில் சொல்ல முடியவில்லையல்லவா? அடுத்த முறை இக்கேள்வியை உன்னிடம் கேட்டால், பாபுவின் வகுப்பில் இருக்கிறேன் என்று நீ சொல்லிவிடலாம். உன் படிப்பைப் பற்றி நீ ஏன் கவலைப் பட்டுக் கொள்ளுகிருய்? பிழைப்புக்குச் சம்பாதிப்பதற்காகப் படிக்க வேண்டும் என்று நீ விரும்பினல், அது சரியே அல்ல. ஏனெனில், ஒவ்வொருவருக்கும் படியளப்பவர் கடவுள். உடலை உழைத்து ஏதோ சிறு வேலை செய்து பிழைப்புக்கு நீ சம்பா தித்துக்கொள்ளலாம். ஆனல், பிழைப்புக்குச் சம்பாதிப்பதற்கு இடம் வைக்காத வகையில் போனிக்ஸுக்கோ அல்லது அது போன்ற வேலைக்கோ நாம் நம்மை அர்ப்பணம் செய்துகொள்ள

வேண்டியிருக்கிறது. உன் நாட்டின் நன்மைக்காக நீ படிக்க விரும்பினுல், இப்பொழுது நீ அதைத்தானே செய்துகொண்டிருக்கிருய். தன்னைத்தானே அறிந்துகொள்ளுவதற்காக நீ படிக்க விரும்பினுல், நல்லவனுக இருக்க நீ கற்றுக்கொள்ள வேண்டும். நீ நல்லவனுக இருக்கிருய் என்றே எல்லோரும் சொல்லுகிருர்கள். அதிக வேலை இருக்க வேண்டும் என்பதற்காக நீ படிக்க விரும்புகிருய் என்று இருக்கலாம். இதற்காக நீ அவசரப் படவே வேண்டியதில்லை. போனிக்ஸில் நீ செய்யக்கூடியதை யெல்லாம் தொடர்ந்து செய்துகொண்டு வா. மற்றதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம். நான் எப்பொழுதும் உன்னை நினைத்துக் கொண்டு இருக்கிறேன் என்பதில் உனக்கு நம்பிக்கை இருந்தால், கவலைப்பட்டுக்கொண்டிருப்பதை விட்டுவிடு.

[பிரபுதாஸ் காந்தி எழுதிய ‘காந்திஜியுடன் என் குழந்தைப் பருவம்’ என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.]

சிறையிலிருந்து காந்திஜி ஸ்ரீ போலக்குக்கும் ஸ்ரீ மகன்லாலுக்கும் எழுதிய கடிதங்கள் முதலியவற்றை இந்நூலில் பின் சேர்க்கைப் பகுதியில் பார்க்கவும்.

# காந்தி-ஸ்மட்ஸ் சந்திப்பு பற்றிய காந்திஜியின் குறிப்புகள்

[தென்னாப்பிரிக்க இந்தியர் போராட்ட சம்பந்தமாக ஜெனரல் ஸ்மட்ஸைத் தாம் சந்தித்துப் பேசிய இரு தடவைகளில், இருவருக்கும் நடந்த பேச்சின் விவரங்களைக் குறித்து காந்திஜி தாம் கையாலேயே குறிப்புக்கள் எழுதியிருக்கிறார். முதல் குறிப்பு-மகாத்மாவின் கையெழுத்திலேயே இன்று-பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது. இது, 1911 மார்ச்சு 27-ந்தேதி, ஜொஹன்னஸ்பர்க்கில் தமது காரியாலயத்திலிருந்த தமது காரியதரிசி கன்னி ஷிலேசினுக்கு எழுதிய 13 பக்கங்கள் கொண்ட கடிதத்தில் அடங்கியிருக்கிறது. அதில் முதல் இரு பக்கங்கள் காணப்படவில்லை. இரண்டாவது குறிப்பை, தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகப் போராட்டத்தில் தமது சகாவான ஸ்ரீ ரிட்சுக்கு, ஜொஹன்னஸ்பர்க்கிலுள்ள தமது காரியாலயத்திற்கு அனுப்பப்பட்ட ஒரு கடிதத்திற்கு உள்ளடக்கமாகக் காந்திஜி அனுப்பியிருந்திருக்கிறார். இந்த இரு குறிப்புக்களையும், ஜெனரல் ஸ்மட்ஸைத் தாம் சந்தித்துப் பேசிய பிறகு உடனேயே கேப் டவுனிலிருந்தபடி அவசரத்தில் எழுதி அனுப்பியிருக்கிறார் என்று தோன்றுகிறது.

இது சம்பந்தமான முதல் கடிதத்தில், "சந்தித்துப் பேசியதைப் பற்றிய இக்குறிப்புக்கள் பிரசுரிப்பதற்காக அல்ல. என்றாலும், நாசமாக்கி எறியப்பட்டுவிடக்கூடாது" என்று குறிப்பிட்டிருக்கிறார். இரண்டாவது குறிப்பின் பக்கத்து இடைவெளியில், "இது திருப்பிப் படித்துத் திருத்தப்படவில்லை. இதில் எதையும் பிரசுரிக்கவும் கூடாது. பின்னால் கவனிக்கப்படுவதை முன்னிட்டுப் பத்திரமாக வைக்கவும்" என்று எழுதியிருக்கிறார். இந்தப் பிந்திய கடிதம் கிடைத்ததும் காந்திஜிக்கு எழுதிய பதிலில் ஸ்ரீ ரிட்ச், "இது டைப் அடிக்கப்பட்டு இருக்கிறது. வருங்காலத்தில் ஒத்துப்பார்க்கச் சௌகரியமாக இருப்பதை முன்னிட்டுப் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கிறது" எனக் குறிப்பிட்டிருக்கிறார்.

ஜெனரல் ஸ்மட்ஸை இரண்டாவது முறை சந்தித்துப் பேசிய பிறகு இரு தினங்கள் கழித்து காந்திஜி, ஸ்ரீ ரிட்சுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதிலிருந்து காந்திஜிக்கு அப்பொழுது அங்கே வேலைகள் எவ்விதம் கடுமையாக, ஓய்வே இல்லாமல் இருந்து வந்தன என்பது நன்றாகத் தெரிகிறது. அக்கடிதத்தில் அவர், "பகல் 2-30 மணிக்கு ஸ்மட்ஸிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. 3 மணிக்கு லேனை (ஸ்மட்ஸின் காரியதரிசி)ப் பார்த்தேன். 4-45 மணிக்கே அவரிடமிருந்து திரும்பினேன். பிறகு அலெக்ஸாண்டரை (தென்னாப்பிரிக்க சட்டசபையில் இந்தியரிடம்

அனுதாபமுள்ள ஒரு மெம்பர்) போய்ப்பார்த்தேன். பின்னர் தந்தி நிலயத்திற்குச் சென்றேன். இப்பொழுது மணி மாலை 5-45. விவரமாக எழுதுவதற்கு அதிக அவகாசமில்லை."

சம்பாஷணைகளைப் பற்றிய இக்குறிப்புக்களைக் காந்திஜி பிறகு தமது ஞாபகத்தைக்கொண்டே எழுதியிருக்கிறார். இக்குறிப்புக்களில் ஸ்மட்ஸ் என்பதற்கு 'எஸ்' என்றும், காந்தி என்பதற்கு 'ஜி' என்றும் மாத்திரமே எழுதியிருக்கிறார். ஆனால், கீழே பிரசுரமாகியிருக்கும் இக்குறிப்பில் வாசகர்களுக்கு எளிதாயிருப்பதை முன்னிட்டு 'எஸ்' என்ற இடங்களில் 'ஸ்மட்ஸ்' என்றும், 'ஜி' என்ற இடங்களில் 'காந்தி' என்றும் விவரமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இக்குறிப்பு முதலிய விவரங்கள் "காந்தி மார்க்கம்" என்ற வெளியீட்டிலிருந்து எடுக்கப்பட்டன.]

## 1

எனக்கும் ஜே. ஸி. ஸ்மட்ஸுக்குமிடையே நடந்த பேச்சின் தோராயமான சாராம்சத்தைக் கீழே தருகிறேன்.

"காந்தி, பாருங்கள், எல்லாவற்றையும் உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன். விதிகளின் மூலமே நான் இப்படிச் செய்திருக்கமுடியும். ஆனால், மனைவிகளையும் குழந்தைகளையும் மசோதாவில் பாதுகாக்கிறேன். ஏன் என்று எனக்குத் தெரியாது; ஆனால், ஒவ்வொருவரும் என்னைச் சந்தேகிக்கிறார்கள். குடிபுகுவதையும் நான் அங்கீகரிக்கிறேன். ஆனால், நீங்கள் கேட்பது மிகவும் நியாயமில்லாதது. நீங்கள் குறிப்பிடுவது முற்றிலும் புதிதானது."

காந்தி: நீங்கள் அவ்வாறு எவ்விதம் கூறமுடியும், ஜெனரல் ஸ்மட்ஸ்? நீங்கள் நிறத்தடையை உண்டாக்கவில்லையா?

ஸ்மட்ஸ்: நான் உண்டாக்கவில்லை. நான் உண்டாக்குவதாக நீங்கள் காட்ட முடியுமா?

காந்தி: நிச்சயமாக முடியும். நான்கு ஆண்டுகள் முழுவதிலும் இன அல்லது நிறத்தடையை எதிர்த்தே நாங்கள் போராடிக் கொண்டு வந்திருக்கிறோம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களா?

ஸ்மட்ஸ் விழித்துப் பார்த்துவிட்டு கொஞ்சம் தயக்கத்திற்குப் பிறகு, "ஆம்" என்றார்.

காந்தி: டிரான்ஸ்வால் குடியேற்றச் சட்டத்தில் நிறத்தடை எதுவுமில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால், உப விதி 4-ஐயும் ஆசியாக்காரர் சட்டத்தையும் படியுங்கள். அதில் நிறத்தடை இருக்கிறது.

**ஸ்மட்ஸ்:** நீங்கள் இதில் நேர்மையாகக் கூறவில்லை.

**காந்தி:** அப்படியானல் அதைப்பற்றி உங்கள் வார்த்தைகளில்தான் நீங்கள் கூறவேண்டும்.

**ஸ்மட்ஸ்:** டிரான்ஸ்வாலில் முற்றிலும் ஒதுக்கிவிடவேண்டும் என விரும்பினேம். அது இரு சட்டங்களின் ஒன்றுபட்ட முறையினல் செய்யப்பட்டது.

**காந்தி:** இப்பொழுது அதையே பிரீ ஸ்டேட்டிலும் செய்ய விரும்புகிறீர்கள். பிரீ ஸ்டேட் சட்டங்கள், புதிய மசோதாக்களின் ஒன்றுபட்ட பலன் இதுவாக இருக்கும். நிஜாமை ஹைதராபாத்துக்குள்ளேயே இல்லாதபடிச் செய்துவிடுவது! சாத்விக எதிர்ப்பாளர்கள் இதை எதிர்த்தே தீருவார்கள் என்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன்.

**ஸ்மட்ஸ்:** இதில்தான் நீங்கள் நியாயமில்லாது நடந்து கொள்ளுகிறீர்கள்.

**காந்தி:** இக்குற்றச்சாட்டை நான் மறுக்கவே வேண்டும். பிரீ ஸ்டேட்டில் ஓர் இந்தியரேனும் பிரவேசிக்கவேண்டும் என்பதில் எனக்குச் சிறிதேனும் ஆர்வம் கிடையாது. உங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதிலேயே நான் சிரத்தையுடனிருக்கிறேன்.

**ஸ்மட்ஸ்:** என் கஷ்டங்கள் உங்களுக்குத் தெரியுமா?

**காந்தி:** அறிவேன். அறிவதனுல்தான், உயர்படிப்புள்ள ஓர் இந்தியர் பிரீ ஸ்டேட்டில் பிரவேசிப்பதற்கு விதிவிலக்கு அளிப்பதற்கான அளவுக்குப் பிரீ ஸ்டேட்டின் சட்டம் அடிப்படையாக இருக்கவேண்டுமென்று நான் யோசனை கூறுகிறேன். சட்டத்தைத் தருவிப்பீர்களானல், நான் கூறுவது என்ன என்பதைக் காட்டுகிறேன்.

**ஸ்மட்ஸ்:** (சட்டத்தைக் கொண்டுவரச் சொல்லிவிட்டு) ஆனல், பிரீ ஸ்டேட்டுகள் ஒருபோதும் ஒப்புக்கொள்ளமாட்டா.

**காந்தி:** அப்படியானல், குடியேறும் படித்தவர்கள் எந்த மாகாணத்திலும் பிரவேசிக்கமுடியும் என்று ஜெனரல் போத்தா ஏன் லார்டு கிரிவேக்கு எழுதினர்?

**ஸ்மட்ஸ்:** அனுப்பப்பட்ட அறிக்கைகளைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. அவற்றில் எதையும் நாங்கள் அச்சிடவில்லை என்பதை அறிவீர்கள். பிரீ ஸ்டேட்டுக்கு அவ்வித அதிகாரம் எதையும் கொடுக்க நாங்கள் விரும்பவில்லை என்பதை லார்டு கிரிவே அறிவார்.

**காந்தி:** ஆனல், இரண்டாவது தடவை விவாதத்தின்போது அதையே நீங்களும் சொன்னீர்கள்.

**ஸ்மட்ஸ்:** ஆம், பிரீ ஸ்டேட்காரர்களின் கருத்தை அறியவே அதைச் சொன்னேன். அவர்கள் அதை மிகவும் எதிர்க்கிருர்கள் என்பதைக் கண்டேன்.

**காந்தி:** அவர்கள் எதிர்க்கிருர்களென்ருல், அவர்களைத் திருப்ப முயற்சிக்க வேண்டியது உங்கள் கடமை. அவர்களைத் திருப்ப முடியவில்லையானல் டிரான்ஸ்வால் சட்டத்தை நீங்கள் திருத்தலாம்.

**ஸ்மட்ஸ்:** ஆனல், இம்மசோதாவை நிறைவேற்ற நான் பிரிட்டிஷ் சர்க்காருக்குக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஸ்மட்ஸ் சட்டத்தைப் படித்து, காந்தியைத் தம் அருகே வரும்படி அழைக்கிருர். எந்த விதியில் விலக்கு அளிக்க வேண்டும் என்பதைக் காந்தி குறிப்பிடுகிருர்.

**ஸ்மட்ஸ்:** ஆம், நீங்கள் கூறுவது இன்னது என்பதை இப்பொழுது காண்கிறேன்.

**காந்தி:** ஆம். படித்த ஆசியாக்காரர்கள், அப்பொழுது நிரந்தரமான சொத்து வைத்துக்கொள்ளவும், வியாபாரம் செய்யவும் தடுக்கப்படுவார்கள். அப்பிரச்னையை நான் கிளப்பவேயில்லை. *1885*–ஆம் ஆண்டு *3*-வது சட்ட விஷயத்தில் நாங்கள் உங்களுடன் இனியும் போராடவேண்டியிருக்கிறது. ஆனல், இதற்கும் சாத்விக எதிர்ப்புக்கும் சம்பந்தமேயில்லை. செல்வ லாபங்களுக்காகச் சாத்விக எதிர்ப்பை உபயோகிக்க நான் விரும்பவே மாட்டேன். ஆனல், நிறத்தடையை நாங்கள் ஏற்றுக்கொள்ளவே முடியாது.

**ஸ்மட்ஸ்:** என் கஷ்டங்கள் என்ன என்பதுபற்றி உங்களுக்குத் தெரியவேயில்லை.

**காந்தி:** இதைவிடப் பெரிய கஷ்டங்களையும் சமாளிக்க உங்களால் முடியும் என்பதை நான் அறிவேன்.

**ஸ்மட்ஸ்:** சரி, இப்பொழுது பிரீ ஸ்டேட் மெம்பர்களுடன் பேசுகிறேன். உங்கள் விலாசத்தை லேனிடம் கொடுத்துவிட்டுப் போங்கள். கேப், நேட்டால் இந்தியரை மௌனமாக வைத்திருப்பீர்கள் என்றே நம்புகிறேன்.

**காந்தி:** அவர்கள் நிச்சயமாக மௌனமாக இருக்கமாட்டார்கள். எனக்கு இப்பொழுதுதான் நேட்டாலிலிருந்து ஒரு தந்தி வந்திருக்கிறது. இப்பொழுதுள்ள உரிமைகளைப் பாது

காக்கவேண்டியது முற்றிலும் அவசியமானது. குடியிருப்பு பாத்தியதை விஷயம் மிகவும் சங்கடமானது. 25-வது பிரிவு விரும்பும் திருத்த அத்தாட்சிப் பத்திரங்கள் கேட்டமாத்திரமே கொடுக்கப்படவேண்டும்.

ஜே. ஸி. ஸ்மட்ஸ்: இதில் இஷ்டம் என்பது எப்பொழுதும் ஒதுக்கி வைத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

காந்தி: இப்பொழுதுள்ள சட்டங்களில் இல்லை. என்னை அனுமதித்தால் இதையெல்லாம் பற்றி உங்களுடன் பிறகு பேசுகிறேன்.

ஜே. ஸி. ஸ்மட்ஸ்: ஜொஹன்னஸ்பர்க் முதலிய இடங்களில் நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?

காந்தி: சாத்விக எதிர்ப்பாளர்களின் குடும்பங்கள் முதலியவைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறேன்.

ஜே. ஸி. ஸ்மட்ஸ்: இவர்களைச் சிறைப்படுத்துவது உங்களை விட எனக்கு அதிக மன வருத்தத்தை உண்டாக்கியிருக்கிறது. தங்கள் மனச்சாட்சிக்காகத் துன்பப்படுகிறவர்களைச் சிறைப் படுத்தியது என் வாழ்க்கையில் நேர்ந்திருக்கும் வருந்தத்தக்க சம்பவம். மனச்சாட்சிக்காக அதே காரியத்தை நான் செய்தாக வேண்டும்.

காந்தி: என்றாலும் ஸ்ரீமதி ஸோதாவை இன்னும் விடாது இருக்கிறீர்கள்.

## 2

இரவு 11-30 மணிக்கு ஜே. ஸி. ஸ்மட்ஸுக்கும் காந்திக்கும் நடந்த பேச்சு:

ஜெனரல் அதிகப்படியாகவே மரியாதை காட்டினார். கை குலுக்கிக் கொள்ளுவதையே விட்டுவிடும் அளவுக்கு ஸ்மட்ஸும் காந்தியும் அவ்வளவு நண்பர்களாகிவிட்டனர். ஆனால், இந்தச் சந்திப்பில் சந்தோஷமான கைகுலுக்கு இருந்தது.

“சரி, காந்தி. உமக்காக நான் வருத்தப்படுகிறேன். உங்களை அதிகக் காலதாமதப்படுத்திவிட்டேன். ஆனால், நான் என்ன செய்வது? கேப் டவுனில் ஆனந்தமாக நீங்கள் இருக்க வற்புறுத்துவீர்கள்” என்று சொல்லி ஜெனரல் ஸ்மட்ஸ் ஆரம்பித்தார். இப்படிப் பேசிக்கொண்டே தம் பக்கத்தில் ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டு அதில் காந்தியை உட்காரச் சொன்னார்.

"உங்கள் மாற்று யோசனையை நிறைவேற்றிவைப்பதென்பது கஷ்டமானது என்று நான் சொன்னால், நீங்கள் வக்கீலாகையால் உணர்ந்துகொள்ளுவீர்கள்."

ஜெனரல் ஸ்மட்ஸ், காந்தியிடமிருந்து வேறு பக்கம் திரும்பினார். அவர் கூடையிலிருந்த ஏதோ ஒன்றைப் பார்ப்பதாகத் தோன்றுகிறது. தொடர்ந்து பார்க்கிறார்.

"காந்தி, என் மகனே, உங்களுக்காக வருத்தப்படுகிறேன். நான் சமாதானத்தை விரும்புகிறேன் என்று நீங்கள் அறிவீர்கள்." (இதையெல்லாம் சொல்லும்போது நன்றாகச் சிரித்துக்கொண்டார் என நினைக்கிறேன்.) மீண்டும் காந்தியைப் பார்த்து, "ஆனால், உங்கள் யோசனை நிறைவேற்றி வைக்க முடியாதது என்று என் ஆலோசகர்கள் கருதுகிறார்கள். மற்ற மாகாணங்களிலிருந்து வெள்ளையரை எப்படி தடுத்துவைக்க முடியும்? அப்படிப்பட்ட மசோதாவைப் பார்லிமெண்டு நிறைவேற்றாது. ஆனால், நான் விரும்புவதும், நியாயமானதென்று நான் நினைப்பதுமான என் மசோதாவை நிறைவேற்ற நான் எண்ணுகிறேன், முயற்சிக்கிறேன். ஆனால், இக்கூட்டத்திலே நிறைவேற்றிவிட நான் தவறிவிடவும் கூடும். எல்லா மெம்பர்களும் போய்விட விரும்புகின்றனர். எந்த ஆசியாக்காரரையும் அனுமதிப்பதைப் பிரீ ஸ்டேட் மெம்பர்கள் இன்னும் எதிர்த்துக்கொண்டுதான் வருகிறார்கள். அசெம்பிளியில் அவர்களை நான் முறியடித்துவிட முடியும் என நினைக்கிறேன்; ஆனால், மசோதாவை செனேட் நிராகரித்துவிடும். இந்தக் கூட்டத்தில் மசோதாவை நிறைவேற்றிவிட முடியாவிட்டால் அடுத்த கூட்டத்தில் இதை நிறைவேற்றிவிட விரும்புகிறேன். ஆனால், இதற்கு மத்தியில் எனக்கு அமைதி வேண்டும். உங்கள் மக்களைக் கஷ்டப்படுத்த எனக்கு விருப்பமில்லை. இது உங்களுக்கும் தெரியும். போராட இந்தியாவிலிருந்தும் மற்ற இடங்களிலிருந்தும் ஆட்களை நீங்கள் கொண்டு வருவதை நான் விரும்பவில்லை. பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு உதவி செய்ய நான் விரும்புகிறேன், எனக்கு உதவி செய்ய அவர்கள் விரும்புகிறார்கள். உங்களுக்கு உதவி செய்ய நான் விரும்புகிறேன், எனக்கு உதவ நீங்கள் விரும்புகிறீர்கள். எங்கள் கருத்தை நீங்கள் அறிகிறீர்களா?"

"நிச்சயமாக அறிகிறேன்" என்று காந்தி குறுக்கிட்டுச் சொன்னார்.

ஸ்மட்ஸ் தொடர்ந்து சொன்னார் : "உங்களுக்குத் தலைவர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதை அறிவேன். நீங்கள் உயர்ந்த

உள்ளம் படைத்த யோக்கியமானவர் என்பதையும் அறிவேன். பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் இதைத்தான் சொன்னேன். உங்கள் வழியில் போராட உங்களுக்கு உரிமை உண்டு. ஆனல், இது காபிர்களின் நாடு; கொஞ்ச வெள்ளையரே இருக்கின்றனர். ஆசியா உள்ளே வந்துவிடுவதை நாங்கள் விரும்பவில்லை. இப்பொழுது நேட்டாலில் குடியேற்றம் இல்லையாகையால் இப்பிரச்னையைத் தீர்த்துவிட முடியும் என்று நம்புகிறேன். ஆனல், உங்களுக்கு எதிராக எப்படி நிற்பது? உங்கள் துண்டுப் பிரசுரத்தைப் படித்தேன். நீங்கள் எளிய வாழ்க்கை நடத்தும் சிக்கனமான இனத்தினர். பல வழிகளிலும் நீங்கள் எங்களைவிட புத்தி சாலிகளாகவும் இருக்கிறீர்கள். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் பழமையானதான ஒரு நாகரிகத்தைச் சேர்ந்தவர்கள் நீங்கள். எங்களுடையதோ, நீங்கள் கூறுவதுபோல, ஒரு பரீட்சையே. இதெல்லாம் சீக்கிரத்திலேயே அழிந்துபோனலும் போகும், யார் அறிவார்கள்? இங்கே ஆசியாவை நாங்கள் ஏன் விரும்பவில்லை என்பதை நீங்கள் கவனியுங்கள். நான் சொல்லுவதுபோல, நேட்டால் சங்கடம் இல்லாமலிருப்பதால் இங்கே பிரச்னையை நான் சமாளிப்பேன். ஆனல், எனக்கு அவகாசம் வேண்டும். பிரீ ஸ்டேட்டுக்காரர்களை இனியும் முறியடித்துவிடுவேன். ஆனல், நீங்கள் முரட்டுப் பிடிவாதத்துடன் இருக்கக் கூடாது. இப்பிரச்னை முழுவதுமே சாம்ராஜ்ய மகாநாட்டில் யோசிக்கப்படும் என்பதையும் அறிவீர்கள். ஆகையால், நீங்கள் பொறுக்க வேண்டும். இதைப் பற்றிச் சிந்தித்துச் சொல்லுங்கள்.''

கொஞ்சம் சும்மா இருந்துவிட்டுத் தொடர்ந்து சொன்னர்:

''நீங்கள் எப்படிப் பரவிவிட்டீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. இவர்கள் எங்கும் போய்விடுகிருர்கள். வியாபாரிகளைப் பற்றித்தான் என்னிடம் அதிகமான மனுக்கள் வந்திருக்கின்றன. எனக்கு எதிர்காலத்தில் கஷ்டமெல்லாம் இவர்களைப் பற்றியே இருக்கும். இவர்களை அல்லல்படுத்த நான் விரும்பவில்லை. இருப்பது அப்படியே இருந்து வர விட்டுவிடவே விரும்புகிறேன். ஆனல், என்ன நடக்கும் என்பது எனக்குத் தெரியாது. நீங்களும் அதிகக் கடினமானவராக இருக்கிறீர்கள்.''

ஸ்மட்ஸ் பிறகு விஷயத்தை மாற்றிக்கொண்டு, ''காந்தி, ஜீவனத்திற்கு நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?'' என்ருர்.

**காந்தி:** நான் இப்பொழுது வக்கீல் தொழில் நடத்தவில்லை.

**ஸ்மட்ஸ்:** அப்படியானல் ஜீவனத்திற்கு என்னதான் செய்கிறீர்கள்? உங்களிடம் பணம் ஏராளமாக இருக்கிறதா?

**காந்தி:** டால்ஸ்டாய் பண்ணையிலிருக்கும் மற்ற சாத்விக எதிர்ப்பாளர்களைப் போன்று நானும் பரம ஏழையாக வாழ்ந்து வருகிறேன்.

**ஸ்மட்ஸ்:** அது யாருடையது?

**காந்தி:** அது ஸ்ரீ கால்லன்பாக்குடையது. அவர் ஒரு ஜெர்மானியர்.

**ஸ்மட்ஸ்:** (சிரித்துக்கொண்டு) ஓ, பழைய கால்லன்பாக்! அவர் உங்களைப் போற்றுகிறவரல்லவா?

**காந்தி:** அவர் என்னைப் போற்றுகிறவரென எனக்குத் தெரியாது. உண்மையில் நாங்கள் சிறந்த நண்பர்கள்.

**ஸ்மட்ஸ்:** அந்தப் பண்ணையைப் போய்ப் பார்க்கவேண்டும். அது எங்கே இருக்கிறது?

**காந்தி:** லாலிக்கு அருகில்.

**ஸ்மட்ஸ்:** தெரியும். விரீனிகிங் ரெயில் பாதையில். ஸ்டேஷனிலிருந்து எவ்வளவு தூரம்?

**காந்தி:** சுமார் இருபது நிமிட நடை. உங்களை அங்கே காண ஆனந்தமடைவோம்.

**ஸ்மட்ஸ்:** ஆம். ஒருநாள் அங்கே போகவேண்டும்.

இவ்விதம் சொல்லிக்கொண்டு பிரிவு சொல்ல எழுந்தார். காந்தியும் அப்படியே செய்ததோடு, "டிரான்ஸ்வால் குடியேற்றச் சட்டத்தைத் திருத்த முடியாது என்று நீங்கள் கூறுகிறீர்கள். இதில் எந்தவித கஷ்டமுமிருப்பதாகத் தெரியவில்லை என்பதை நான் சொல்லியே ஆகவேண்டும்" என்ருர்.

**ஸ்மட்ஸ்:** கஷ்டமிருக்கிறது. என் யோசனையை நீங்கள் மேற்கொண்டாலன்றி வெள்ளையர் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

**காந்தி:** அதாவது.........

**ஸ்மட்ஸ்:** வெவ்வேறு ரகத்தினருக்கு வெவ்வேறு விதமான தகுதியை விதிப்பதான விதிகளைச் செய்ய கவர்னருக்கு அதிகாரம் கொடுப்பது. இந்த விதிகள் இந்தியரைப் பற்றி மாத்திரம் குறிப்பிட வேண்டும். இதை நீங்கள் விரும்பமாட்டீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனல், இதையெல்லாம் பற்றி நீங்கள்

திரும்பவும் சிந்தித்து, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதை எனக்குச் சொல்லுங்கள். உங்களுக்கு நான் உதவி செய்ய விரும்புகிறேன் என்பதை நீங்கள் அறிவீர்கள். தனிப்பட்ட சிலருக்கு ஏதாவது கஷ்டங்களிருப்பதாயின் எப்பொழுதும் நீங்கள் என்னிடம் வரலாம்.

**காந்தி:** எல்லாவற்றையும் குறித்து நான் சிந்திக்க வேண்டும். ஆனல், உங்களுக்கு அமைதி வேண்டுமாயின் ஸ்ரீமதி ஸோதாவைத் துன்பப்படுத்த விரும்புகிறீர்களா?

**ஸ்மட்ஸ்:** நான் விரும்பவில்லை.

**காந்தி:** அவரைச் சிறையிலடைக்க விரும்புகிறீர்களா?

**ஸ்மட்ஸ்:** இல்லை. உங்களுக்குத் தெரிந்தது போல அவ்விஷயத்தைப் பற்றி எனக்கு எதுவுமே தெரியாது.

**காந்தி:** சனிக்கிழமை அப்பீல் இருக்கிறது. இதில் நாங்கள் தோற்றுவிடக்கூடும். பிறகு அவர் சிறைக்குச் செல்ல வேண்டும் அல்லது 10 பவுன் செலுத்த வேண்டும். அவர் அபராதத்தைச் செலுத்தமாட்டார். ஆகையால் சிறைக்குச் செல்லுவார்.

**ஸ்மட்ஸ்:** அவர் சிறைக்குச் செல்ல நான் விரும்பவில்லை. ஆனல், நீங்கள் சட்ட விரோதமாக அநேகரை டிரான்ஸ்வாலுக்குள் கொண்டு வந்திருக்கிறீர்கள். இப்பொழுது செய்யமாட்டீர்கள்.

**காந்தி:** யாரையும் சட்ட விரோதமாகக் கொண்டுவந்ததாக நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஸ்ரீமதி ஸோதாவை நான் நிச்சயமாகச் சட்ட விரோதமாகக் கொண்டு வரவில்லை. ரிஜிஸ்டிராருக்கு முறைப்படி முன் அறிவிப்புச் செய்திருந்தேன். அநேக சாத்விக எதிர்ப்பாளர்களைப் போல இவருடைய கணவரும் குடும்பத்தைக் கலைத்துவிட நேர்ந்ததால் இவரைக் கொண்டு வந்தேன்.

**ஸ்மட்ஸ்:** சரி, அப்பீலின் முடிவு என்ன ஆகிறதென்று எனக்கு அறிவியுங்கள். அவர் கைதியாகாதபடி நான் பார்த்துக் கொள்ளுகிறேன். உடனே தெரியப்படுத்துகிறீர்களா?

**காந்தி:** நன்றி. அப்படியே செய்கிறேன்.

பேச்சின்போது பிரீ ஸ்டேட் விஷயம் அந்தரங்கமானது என்று சொன்னர். பேச்சு சுமார் நாற்பது நிமிடங்கள் நடந்தது.

1909இல் காந்திஜி குஜராத்தியில் எழுதிய 'இந்திய சுயராஜ்யத்தின்' கையெழுத்துப் பிரதியின் படம்.

முன் உள்ளது வலது கையால் எழுதியது அடுத்துள்ளது இடது கையால் எழுதியது



1914 இல் இந்தியாவுக்குத் திரும்பும் வழியில் காந்திஜி லண்டனுக்குச் சென்றிருந்தபோது, முதல் உலக யுத்தத்திற்காக இந்திய மருத்துவப் படையை லண்டனில் திரட்டினர். அச்சமயம் பிரிட்டிஷ் ராணுவ அதிகாரியுடன் காந்திஜி.

# ஹிந்த் ஸ்வராஜ்

அல்லது

# இந்திய சுயராஜ்யம்

மகாத்மா காந்தி
எழுதியது

தமிழாக்கம் :
ரா. வேங்கடராஜுலு

# இந்நூலின் வரலாறு

இந்நூல் முதன்முதலில் தென்னுப்பிரிக்காவில் 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையில் குஜராத்தி மொழியில் தொடர்ச்சியாக வெளிவந்தது. பின்னர் புத்தகமாக வெளியிடப்பட்டது. 1910 மார்ச்சில் பம்பாய் சர்க்கார் இப் புத்தகத்தைப் பறிமுதல் செய்துவிட்டனர். அச்சர்க்காரின் இச் செய்கைக்குத் தக்க பதிலாகக் காந்திஜி இதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டார்.

குஜராத்தி மூலநூல் 30,000 வார்த்தைகளைக் கொண்டது. 1909–இல் காந்திஜி இங்கிலாந்திலிருந்து தென்னுப்பிரிக்காவுக்கு 'கில்டோனன் காஸில்' என்ற கப்பலில் திரும்புகையில், அப்பிரயாண காலத்தில் கப்பலில் கிடைத்த காகிதத்தைக் கொண்டே இதை எழுதி முடித்தார். காந்திஜி நவம்பர் 13-ஆம் தேதி எழுத ஆரம்பித்து, நவம்பர் 22-ஆம் தேதி முடித்தார். இரவு பகல் முழுவதும் இவ்வேலையிலேயே ஈடுபட்டிருந்தார். அவருடைய கையெழுத்துப் பிரதி 271 பக்கங்களைக்கொண்டது. இதில் சுமார் 50 பக்கங்களைத் தமது இடது கையினுலேயே எழுதினுர்.

இந்த 271 பக்கக் கையெழுத்துப் பிரதியில் மூன்றே வரிகளை மாத்திரமே காந்திஜி அடித்திருக்கிறுர். அங்குமிங்கும் சில சொற்கள் மாற்றப்பட்டிருக்கின்றன. எழுதுவதால் வலது கை களைத்துப் போனபோது இடது கையாலே எழுதியிருக்கிறுர். இந்நூலின் கடைசிப் பக்கம் உட்பட ஐம்பது பக்கங்களை இடது கையினுலேயே எழுதியிருக்கிறுர், 'கில்டோனன் காஸில்' 22—11—1909 என்று தேதியிட்டு காந்திஜி இந்நூலுக்கு ஒரு முன்னுரை எழுதியிருக்கிறுர். அத்தேதியைக் கொண்டு கவனித்தால் அவர் ஒரே மூச்சில் பத்தே நாட்களில் இதை எழுதி முடித்திருக்கிறுர் என்று ஏற்படுகிறது.

இந்நூலை எழுதியாகவேண்டும் என்று காந்திஜிக்குத் தோன்றிய காரணம் முக்கியமானதாகும். இங்கிலாந்திலிருந்த தம் நாட்டினரிடையே பயங்கர பலாத்கார வாதப் போக்கு அதிகரித்துக்கொண்டு வருவதை அவர் கண்டார். இதனுல் திகிலடைந்தார். இந்தியாவின் துன்பங்களைப் போக்கிக்கொள்ளுவதற்குப் பலாத்காரம் ஒரு பரிகாரமே அல்ல என்று கருதினுர். ஆனுல், இந்தியரின் தற்காப்புக்கு, பலாத்காரத்துக்கு மாறுபட்

டதும், இந்திய நாகரிகத்திற்கு ஏற்றதுமான ஒன்று தேவை என்று உணர்ந்தார். பலாத்காரத்திலேயே நம்பிக்கை கொண்ட இந்தியர் பலர் அங்கே இருந்ததைப்போலவே தென்னுப்பிரிக்காவிலும் சிலர் இருந்தனர். இவர்களுக்கெல்லாம் ஏற்ற பதிலாக இருக்கவேண்டும் என்பதற்காகவே காந்திஜி இந்நூலை எழுதினர்.

இந்நூலின் குஜராத்தி மொழி முன்னுரையில் காந்திஜி கூறுவதாவது:

"இவ்விஷயமாக நான் இருபது அத்தியாயங்கள் எழுதியிருக்கிறேன். வாசகர்கள் முன்பு இதை வைத்துவிடுவது என்று துணிந்துவிட்டேன். இனியும் பொறுத்துக்கொண்டிருக்க முடியாது என்று ஏற்பட்டுவிட்ட பிறகே இவற்றை நான் எழுதினேன். இவ்விஷயமாக நான் எவ்வளவோ சிந்தித்திருக்கிறேன். படித்திருக்கிறேன். டிரான்ஸ்வால் தூது சம்பந்தமாக நான் இங்கிலாந்தில் தங்கியிருந்த நான்குமாத காலத்தில் நான் சந்திக்க முடிந்த இந்தியர், ஆங்கிலேயர்களிடமெல்லாம் இதைப் பற்றி விவாதித்து அவர்கள் கருத்தையும் அறிந்தேன். இப்பொழுது என்னுடைய உறுதியான கொள்கையாகிவிட்ட இக்கருத்துக்களை வாசகர்கள் முன்பு வைப்பது எனது கடமை என்று எண்ணுகிறேன்."

இந்நூலைக் குறித்து அப்பொழுது காந்திஜி எழுதுகையில், "தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம் இன்னும் சிசுவாகவே இருக்கிறது; இரண்டு வயதுகூட நிரம்பவில்லை. என்றாலும், அதைப் பற்றி நம்பிக்கையுடன் எழுதுவதற்கு வேண்டிய அளவு அது வளர்ச்சி அடைந்திருக்கிறது. 'இந்திய சுயராஜ்யம்' துவேஷத்திற்குப் பதிலாக அன்பு நெறியை உபதேசிக்கிறது. பலாத்காரத்திற்குப் பதில் தன்னலத் தியாகத்தை அளிக்கிறது; மிருக சக்திக்கு எதிராக ஆன்ம சக்தியை உண்டாக்குகிறது" என்றார்.

இந்நூலை எழுதியபோது காந்திஜிக்கு வயது நாற்பது. இப்புத்தகத்தின் ஆங்கிலப்பிரதி வெளியானதும் காந்திஜியின் ராஜீய குருவான ஸ்ரீ கோகலே இதைப் பார்த்துவிட்டு, அவசரத்தில் எழுதப்பட்டிருக்கும் அரைகுறையானது இது என்றார். காந்திஜி இந்தியாவில் ஓராண்டு இருந்தபிறகு அவரே இப்புத்தகத்தைக் கிழித்தெறிந்து விடுவார் என்றும் சொன்னர். ஆனல், காந்திஜியோ பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இந்நூலைப் பற்றி எழுதுகையில், "இதில் ஒரே ஒரு வார்த்தையை, அதுவும்

ஒரு பெண் நண்பருக்காக நீக்குவதைத் தவிர, வேறு எதையும் இதிலிருந்து நான் மாற்றவில்லை" என்ருர்

'இந்திய சுயராஜ்யம்' பிரதி ஒன்றை டால்ஸ்டாய்க்குக் காந்திஜி அனுப்பினர். இந்நூலைப் படித்துப் பார்த்துவிட்டு காந்திஜிக்கு டால்ஸ்டாய் எழுதிய கடிதத்தில், "உங்கள் புத்தகத்தை அதிக சிரத்தையுடன் படித்தேன். ஏனெனில், அதில் விவாதிக்கப்பட்டிருக்கும் விஷயமான சாத்விக எதிர்ப்பு இந்தியாவுக்கேயன்றி மனித வர்க்கம் முழுமைக்குமே மிகவும் முக்கியமானதாகும்" என்று குறிப்பிட்டிருக்கிருர்.

'இந்திய சுயராஜ்ய'த்தில் காணும் காந்திஜியின் ராஜீய அபிப்பிராயங்கள், லண்டனிலிருந்து கப்பலில் திரும்பிவரும் போது திடீரென்று அவருக்கு ஏற்பட்டவையல்ல. லண்டனில் பலதரப்பட்ட ராஜீய கருத்துடையவர்களுடனும், அதாவது தேசீயவாதிகள், அரசியல் வாதிகள், பயங்கரப் புரட்சி மனப் பான்மையுள்ளவர்கள் இவர்களுடன் அவர் விவாதித்தபோதே, இந்நூலில் காணும் எண்ணங்கள் அவருக்கு இருந்திருக் கின்றன. இந்த உண்மை, முன்னல் தரப்பட்டிருக்கும் இந்நூலின் குஜராத்தி முன்னுரையிலிருந்தேயன்றி லார்டு ஆம்ப்திலுக்கு அவர் வெஸ்ட் மின்ஸ்டர் பாலெஸ் ஹோட்டலிலிருந்து எழுதிய கடிதத்திலிருந்தும் தெளிவாகிறது. அக்கடிதத்தை 1909 அக் டோபர் 9-ஆம் தேதி லார்டு ஆம்ப்திலுக்கு எழுதியிருக்கிருர். அதில் காந்திஜி கூறியிருப்பதாவது:

"பிரிட்டிஷார்மீது இந்தியருக்குத் துவேஷம் வளர்ந்து கொண்டு வருவதைப் போலவே இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி மீதும் பொறுமையின்மை அதிகமாகிக்கொண்டு வருகிறது. பலாத்காரத்தை உபயோகிக்கவேண்டும் என்போர் பலம் பெற்று வருகிருர்கள். இதைச் சமாளிக்க அடக்குமுறை பயனில்லை. என்ருலும், பிரிட்டிஷார் தாராளமாகச் சீக்கிரத்தில் கொடுத்து விடமாட்டார்கள் என்றே அஞ்சுகிறேன். வர்த்தகச் சுயநலம் என்ற பூதம் பிரிட்டிஷ் மக்களை ஆட்கொண்டிருக்கிறது என்றே தோன்றுகிறது. தவறு, முறையினலேயன்றி மக்களால் அல்ல. அந்நிய முதலாளிகளின் நன்மைக்காக இந்தியா சுரண் டப்படுகிறது. நவீன நாகரிகம், கிறிஸ்தவ தருமத்திற்கே முர ணனது. ஆகையால் அதைக் கைவிடுவதுதான் உண்மை யான பரிகாரம் என்பது எனது தாழ்மையான கருத்து.

"ஆனல், இது பெரிய விஷயம். ரெயில்வேக்களும் யந்திர சாதனங்களும், அவற்றையொட்டி அதிகரித்து வளர்ந்திருக்கும்

சுகபோகம் தேடும் பழக்கங்களும், ஐரோப்பியரைப் போலவே இந்தியருக்கும் உண்மையாகவே அடிமைச் சின்னங்களாக இருந்து வருகின்றன. ஆகையால் ஆளுவோரைப் பற்றி எனக்கு எந்தவிதமான சச்சரவும் இல்லை. எனக்கிருக்கும் சண்டையெல்லாம், அவர்களுடைய முறையைக் குறித்தே. கல்கத்தா, பம்பாய் போன்ற நகரங்கள் வளர்ந்திருப்பது, பாராட்டப்படுவதற்குப் பதிலாக எனக்கு வருத்தந் தருவனவாகின்றன. இந்தியா தன்னுடைய கிராம முறையின் ஒரு பகுதியைச் சிதைத்துக் கொண்டிருப்பதன் மூலம் அதிக நஷ்டத்தை அடைந்திருக்கிறது.

"இக்கருத்துக்கள் எனக்கு இருப்பதோடு தேசீய உணர்ச்சியிலும் பங்குகொள்ளுகிறேன். ஆனால், தீவிரவாதிகளாயினும் அல்லது மிதவாதிகளாயினும், முடிவாகப் பலாத்காரத்தையே நம்பும் எந்தக் கட்சியினராயினும், அவர்களிடமிருந்து நான் மாறுபடுகிறேன். பலாத்கார முறை என்றால் நவநாகரிகத்தை ஒப்புக்கொள்ளுவது என்றாகிறது. ஆகவே இங்கும், நாம் கூறும் அதே நாசகரமான கலப்படமும், அதன் பலனாக ஒழுக்கத்தின் அழிவுந்தான் என்றாகிறது. யார் ஆளுகிறார்கள் என்ற உண்மையில் நான் சிரத்தை இல்லாதவனாகவே இருக்கவேண்டும். ஆளுவோர், என் விருப்பத்திற்கு ஆளவேண்டும் என்று நான் எதிர்பார்க்கவேண்டும். இல்லையானால், என்னை ஆளுவதற்கு அவர்களுக்கு உதவி செய்யாது இருந்துவிடுவேன். ஆளுவோருக்கு எதிராகச் சாத்விக எதிர்ப்பாளனாக ஆகிவிடுகிறேன்."

# ஒரு விளக்கம்

என்னுடைய இச்சிறு நூல் பலருடைய கவனத்தைக் கவர்ந்து வருவது நிச்சயமாக என் அதிர்ஷ்டமேயாகும். முதல் நூல் குஜராத்தியில் எழுதப்பட்டது. அதன் வரலாறு விசித்திர மானது. தென்னுப்பிரிக்காவில் 'இந்தியன் ஒப்பினியன்' பத்தி ரிகையில் இது முதலில் பிரசுரமாயிற்று. பலாத்காரத்தில் நம் பிக்கை கொண்ட இந்தியருக்கும், தென்னுப்பிரிக்காவில் இருந்த அதே ரகத்தினருக்கும் பதில் சொல்லுவதற்காக 1909–இல் நான் லண்டனிலிருந்து தென்னுப்பிரிக்காவுக்குத் திரும்பி வந்துகொண் டிருக்கும்போது இதை எழுதினேன். லண்டனில் இருந்த ஒவ் வோர் இந்திய அராஜகவாதியுடனும் எனக்குத் தொடர்பு ஏற் பட்டது. அவர்களுடைய வீரம் என்னைக் கவர்ந்தது. ஆனல், அவர்களுடைய உற்சாகம் தவருன வழியில் போவதை உணர்ந் தேன். இந்தியாவின் கஷ்டங்கள் தீருவதற்குப் பலாத்காரம் பரி காரம் ஆகாது. இதிலிருந்து, மாறுபட்டதும், உயர்வானதுமான ஓர் ஆயுதத்தைத் தற்காப்புக்காக உபயோகிப்பதே இந்தியப் பண்பாட்டிற்கு ஏற்றது என்பதை உணர்ந்தேன். தென்னுப் பிரிக்க சத்தியாக்கிரகம் இன்னும் பச்சிளங் குழந்தை. அதற்கு இரண்டு ஆண்டுகள் கூட நிரம்பவில்லை. ஆனல், அதைப்பற்றி ஓரளவு நம்பிக்கையுடன் நான் எழுதக்கூடிய வகையில் அது வளர்ந்துவிட்டது. நான் எழுதியதற்கு எவ்வளவோ பாராட்டுக் கள் வந்ததால், இது இச்சிறு புத்தகமாக வெளிவந்தது. இது இந்தியாவிலும் கொஞ்சம் கவனத்தைக் கவர்ந்தது. பம்பாய் அரசாங்கம் அதன் விநியோகத்தைத் தடுத்தது. அதற்கு ஒரு பதிலாக இதன் மொழிபெயர்ப்பை வெளியிட்டேன். இதில் அடங்கியுள்ள விஷயங்களை என் ஆங்கில நண்பர்கள் அறிய வேண்டியது அவசியமென நினைத்தேன்.

குழந்தையின் கையிலும் கொடுக்கக்கூடிய ஒரு புத்தகம் இது என்பதே என் கருத்து. துவேஷத்திற்குப் பதிலாக இது அன்பு நெறியைப் புகட்டுகிறது. பலாத்காரத்திற்குப் பதிலாக தன்னலத் தியாகத்தை இது உணர்த்துகிறது. மிருக பலத்திற்கு எதிரே ஆன்ம பலத்தின் உயர்வை இது வலியுறுத்து கிறது. இதுவரை பல பதிப்புக்கள் வெளியாகிவிட்டன. விரும்புகிறவர்கள் இதைப் படிக்க வேண்டும் என்று கூறுவேன். இப்புத்தகத்திலிருந்து ஒரு சொல்லைத் தவிர வேறு எதையுமே

நான் நீக்கவில்லை; அந்தச் சொல்லையும் ஒரு பெண் நண்பர் நிமித்தம் நீக்கினேன்.

இச்சிறு நூல் 'நவநாகரிக'த்தைப் பலமாகக் கண்டிக்கிறது. இது 1909-இல் எழுதப்பட்டது. அன்று நான் கொண்டிருந்த அபிப்பிராயமே இன்றும் இன்னும் பலமானதாக இருக்கிறது. 'நவ நாகரிக'த்தை இந்தியா கைவிடுமானல் அதனல் அதற்கு நன்மையே உண்டு என்று நான் எண்ணுகிறேன்.

இதில் விவரிக்கப்பட்டிருக்கும் சுயராஜ்யத்தை அடைவதற்கு நான் இன்று முயற்சி செய்து வருகிறேன் என்று நினைத்துவிட வேண்டாம் என வாசகர்களை எச்சரிக்கை செய்கிறேன். அதற்கு வேண்டிய பக்குவத்தை இந்தியா இன்னும் அடையவில்லை என்பதை [நான் அறிவேன். நான் அப்படி கூறுவது துடுக்குத்தனமாகக்கூடத் தோன்றலாம். ஆனல், அதுதான் என் சித்தாந்தம். இதில் கூறப்பட்டிருக்கும் சுயாட்சியை அடையத் தனிப்பட்ட முறையில் நான் பாடுபட்டு வருகிறேன். ஆனல், இன்ருே, மற்றவர்களுடனும் கூடிய என்னுடைய நடவடிக்கைகளெல்லாம், இந்திய மக்களின் விருப்பத்திற்கு இணங்கப் பார்லிமெண்டரி முறையான சுயராஜ்யத்தை அடைவதிலேயே ஈடுபட்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆஸ்பத்திரிகள், ரெயில்வேக்கள் ஆகியவற்றை அழித்துவிட வேண்டும் என்பது என் நோக்கம் அல்ல. ஆனல், அவை இயற்கையாகவே அழிந்துபோய் விடுவதை வரவேற்பேன். உயர்வானதும், தூயதுமான நாகரிகத்திற்கு ரெயில்வேக்களும், ஆஸ்பத்திரிகளும் எடுத்துக்காட்டுகளல்ல. இருந்து ஆகவேண்டிய தீமைகளாகவே அவைகளைக் கொள்ள வேண்டும். ஒரு நாட்டின் ஒழுக்க மேம்பாட்டை அவை இம்மியும் உயர்த்திவிடா. நீதிஸ்தலங்களை அடியோடு அழித்துவிட வேண்டும் என்றும் நான் முயற்சி செய்யவில்லை. விரும்பும் வகையில் அவை இருக்க வேண்டும் என்பதே என் கருத்து. எல்லா யந்திரங்களையும் மில்களையும் அழித்துவிடுவதற்கும் நான் முயற்சி செய்யவில்லை. இன்று மக்கள் எதிர்பார்ப்பதற்கு மேல் உயர்வானதோர் எளிமையும் தியாகமுமே அதற்குத் தேவை.

இப்பொழுது நிறைவேற்றப்பட்டு வரும் வேலைத் திட்டத்தின் ஒரே பகுதி, அகிம்சையைப் பற்றியதே. அதுகூட இந்நூலின் கருத்துக்கு இணங்க நிறைவேற்றப்படவில்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். அதன்படி நிறைவேற்றப்பட்டு வருமானல் இந்தியா ஒரே நாளில் சுயராஜ்யத்தை அடைந்துவிடும். இந்தியா, தன்னுடைய

தருமத்தின் தீவிரமான பகுதியாக அன்புத் தத்துவத்தை மேற்கொண்டு, தன்னுடைய ராஜீய காரியங்களிலும் அதைப் புகுத்தியிருக்குமானால், இந்தியாவுக்குச் சுயராஜ்யம் சுவர்க்கத்திலிருந்து தானே வரும். ஆனால், அப்படி ஏற்படும் சமயம் வெகு தொலைவில் இருக்கிறது என்பதை மனவேதனையுடன் அறிவேன்

இப்பொழுது நடந்துவரும் இயக்கத்தை இழிவுபடுத்துவதற்காக இச்சிறு நூலிலிருந்து மேற்கோள்கள் அதிகமாக எடுத்துக் காட்டப்படுவதை நான் காண்கிறேன். அதனாலேயே இந்த அபிப்பிராயங்களை நான் கூறவேண்டியதாயிற்று. நான் சூழ்ச்சி நிரம்பிய வேலை செய்துகொண்டிருக்கிறேன் என்றும், இந்தக் குழப்ப நிலைமையை உபயோகித்து இந்தியாவின்மீது என்னுடைய பித்தான போக்குகளைத் திணிக்கப் பார்க்கிறேன் என்றும், இந்தியாவின் கஷ்டங்களைப் பயன்படுத்திக்கொண்டு நான் மத சம்பந்தமான பரீட்சைகளைச் செய்துவருகிறேன் என்றும் கூறி எழுதப்படுகின்றன என்பதையும் பார்க்கிறேன். சத்தியாக்கிரகம் ஓர் உறுதிப்பொருள் என்று மாத்திரமே நான் பதில் சொல்ல முடியும். இதில் ஒதுக்கி வைக்கப்பட்டிருப்பதோ அன்றி ரகசியமானதோ எதுவும் இல்லை. 'இந்திய சுயராஜ்ய'த்தில் விவரிக்கப்பட்டிருக்கும் முழு வாழ்க்கைத் தத்துவத்தில் ஒரு பகுதியே சந்தேகத்திற்கிடமின்றி செயல் முறையில் நிறைவேற்றி வைக்கப்பட்டு வருகிறது. அதை முழுவதும் பின்பற்றுவதனால் எந்தவகையான ஆபத்தும் இராது. ஆனால், நாட்டின் முன் இருக்கும் பிரச்னைக்குப் பொருத்தமற்ற பகுதிகளை நான் எழுதியவற்றிலிருந்து எடுத்துக்காட்டி மக்களைத் திடுக்குறச் செய்வது நேர்மையன்று.

"எங் இந்தியா"
*1921*, ஜனவரி

மோ. க. காந்தி

## ஒரு செய்தி*

'இந்திய சுயராஜ்யம்' எந்தக் கொள்கைக்காக எழுதப்பட்டதோ அதே கொள்கைகளை நீங்கள் விளம்பரப்படுத்துவதை நான் வரவேற்கிறேன். இதன் ஆங்கிலப் பதிப்பு, குஜராத்தியில் எழுதப்பட்ட முதல் நூலின் மொழிபெயர்ப்பு. இச்சிறு நூலை நான் திரும்ப எழுதுவதானால், அதன் மொழி நடையில் இங்கும் அங்கும் சில மாறுதல்களை நான் செய்யக்

---

* 1939 செப்டம்பரில் வெளிவந்த "ஆரியன் பாத்"தின் 'ஹிந்த் சுயராஜ்யம்' விசேஷ மலரிலிருந்து எடுக்கப்பட்டது.

கூடும். ஆனல், இடையில் இந்த முப்பது ஆண்டுகளில் நான் எத்தனையோ கஷ்டங்களையெல்லாம் பார்த்த பிறகும், இதில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்களை மாற்றிக்கொள்ளுவதற்கான காரணம் எதுவும் எனக்குத் தோன்றவில்லை. ஊழியர்களுடன் நடத்திய சம்பாஷணையை இது அப்படியே குறிக்கிறது என்பது வாசகர்களுக்கு நினைவு இருக்கட்டும். அந்த ஊழியர்களில் ஒருவர் தீவிரமான அராஜகவாதி. தென்னுப்பிரிக்க இந்தியரில் சிலரிடையே தோன்றிவிட இருந்த அபாயத்தை இது நிறுத்தியது என்பதையும் வாசகர் அறியவேண்டும். இதையும், ஓர் அன்புள்ள நண்பர்-பாவம், அவர் இப்பொழுது இல்லை - இது ஒரு முட்டாளின் சிருஷ்டி என்று கூறிய அபிப்பிராயத்தையும் வாசகர் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ளட்டும்.

சேகான்,
*14, ஜூலை, 1938.* **மோ. க. காந்தி.**

[இதே "ஆரியன் பாத்" விசேஷ மலருக்கு இந்நூலைக் குறித்து காலஞ் சென்ற ஸ்ரீ மகாதேவ தேசாய் 2—2—38-இல் எழுதிய ஒரு கட்டுரையும் முன்னுரையும் கடைசியில் தனியாகச் சேர்க்கப்பட்டுள்ளன.]

## அத்தியாயம் 1

# காங்கிரஸும் அதன் நிர்வாகிகளும்

வாசகர்: இப்பொழுது இந்தியாவெங்கும் சுயாட்சி ஆர்வம் இருந்து வருகிறது. நமது தேச மக்கள் யாவரும் தேசீய சுதந்திர தாகங் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. தென்னுப்பிரிக்காவிலும் அவர்களிடம் இதே உணர்ச்சி இருந்துவருகிறது. உரிமைகளைப் பெற இந்தியர் ஆர்வத்துடன் இருக்கின்றனர். இதுபற்றி உங்கள் கருத்தை விளக்குவீர்களா?

ஆசிரியர்: சரியான கேள்வியையே கேட்டிருக்கிறீர்கள். ஆனல், இதற்குப் பதில் சொல்லுவது சுலபமல்ல. பத்திரிகையின் ஒரு நோக்கம், பொதுஜன அபிப்பிராயத்தை அறிந்து அதை வெளிப்படுத்துவதேயாகும். மக்களிடையே சில விரும்பத் தக்க உணர்ச்சிகளை உண்டாக்குவது, இரண்டாவது நோக்கம். மூன்ருவது நோக்கம், பொதுஜனக் குறைபாடுகளை அச்சமின்றிப் பகிரங்கப்படுத்துவது. உங்கள் கேள்விக்குப் பதில் சொல்லுவதில், மேற்சொன்ன மூன்று காரியங்களையும் செய்வது அடங்கியிருக்கிறது. ஓரளவுக்கு மக்களின் உறுதிப்பாட்டைக் கூறியாக வேண்டும்; சில உணர்ச்சிகளைப் புகுத்தியாக வேண்டும்; தவறுகளை அம்பலப்படுத்தியும் ஆக வேண்டும். ஆனல், இக் கேள்வியை நீங்கள் கேட்டுவிட்டதால் பதில் சொல்லியாக வேண்டியது என் கடமை.

வாசகர்: அப்படியானல் சுயாட்சி ஆர்வம் நம்மிடையே உண்டாக்கப்பட்டிருக்கிறது என்று நீங்கள் கருதுகிறீர்களா?

ஆசிரியர்: அந்த ஆர்வத்தினலேயே தேசீய காங்கிரஸ்* உண்டாயிற்று. 'தேசீய' என்ற வார்த்தையைத் தேர்ந்தெடுத்திருப்பதே இதைப் புலப்படுத்துகிறது.

---

* இந்திய தேசீய காங்கிரஸ் என்பது போன்ற ஸ்தாபனத்தை ஆரம்பிக்க வேண்டும் என்ற யோசனை முதன் முதலில் 1884–இல் ஸ்ரீ ஏ. ஓ. ஹியூமுக்கே பிறந்தது. அதிகாரிகளுக்கும் மற்ற முக்கியஸ்தர்களுக்கும் நல்லுறவு இருப்பதற்கு இத்தகைய ஸ்தாபனம் இருப்பது அவசியம் என அவர் நினைத்தார். ஆனல், 1885–இல் வைசிராயாக இருந்த லார்டு டப்பரின், ஸ்ரீ ஹியூமை அழைத்து, பிரிட்டனில் மன்னர் அரசாங்கத்திற்கு எதிர்க்கட்சி ஒன்று இருப்பதைப்போல, ஆண்டுதோறும் கூடி இந்திய அரசாங்க நிர்வாகத்திலிருக்கும் குறைகளை எடுத்துக்கூறுவதாக புது ஸ்தாபனம் இருக்கவேண்டும் என்று யோசனை கூறினர். அதோடு இந்த ஸ்தாபனத்தின் மகா நாடுகளுக்குக் கவர்னர்களைத் தலைமை வகிக்க அழைக்கக்கூடாது என்றும் ஆலோசனை சொன்னர். தாம் இவ்விதம் ஆலோசனை கூறியதைத் தாம் இந்தியாவிலிருக்கும் வரையில் ரகசியமாக

வாசகர்: உண்மையில் விஷயம் அதுவல்ல. வாலிப இந்தியா காங்கிரஸைப் பொருட்படுத்தவில்லை எனத் தெரிகிறது. பிரிட்டிஷ் ஆட்சியை நிரந்தரமாக்குவதற்கான ஆயுதம் அது என்றும் கருதப்படுகிறது.

ஆசிரியர்: அப்படி அபிப்பிராயப்படுவது நியாயமன்று. நம் மாபெருங்கிழவர் பண்படுத்தியிருக்காவிட்டால், நம் இளைஞர்கள் சுயாட்சி என்பதைப் பற்றிப் பேசியும் இருக்கமாட்டார்கள். காங்கிரஸ் தனது லட்சியத்தை அடைந்தாக வேண்டும் என்பதற்காக ஸ்ரீ ஹியூம் எழுதியிருப்பதையோ, நடவடிக்கையில் இறங்கும்படி அவர் நம்மைத் தட்டி எழுப்பியிருப்பதையோ, எவ்வளவு சிரமப்பட்டு நமக்கு விழிப்பை உண்டாக்கினர் என்பதையோ, நாம் எவ்வாறு மறந்துவிட முடியும்? இதே லட்சியத்திற்காக, ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் தமது உடல், பொருள், அறிவு யாவையுமே தத்தஞ் செய்திருக்கிருர். அவருடைய எழுத்துக்கள் இன்றும் கவனிக்க வேண்டியவை. நாட்டு மக்களைத் தயார் செய்ய வேண்டும் என்பதற்காகப் பேராசிரியர் கோகலே, வறுமையை ஏற்றுத் தமது வாழ்க்கையில் இருபது வருட காலத்தை நமக்கு அர்ப்பணஞ் செய்தார். இன்றும் அவர் வறுமையிலேயே வாழ்கிருர். காலஞ்சென்ற நீதிபதி பத்ருதீன் தயாப்ஜி, காங்கிரஸின் மூலம் சுயாட்சி விதையை விதைத்தார். இதேபோல வங்காளம், சென்னை, பாஞ்சாலம் முதலிய இடங்களில் இந்தியரிலும் ஆங்கி

---

வைத்திருக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார். இவருடைய யோசனையைப் பின்பற்றி இந்திய தேசீய காங்கிரஸின் முதல் கூட்டம் 1885 டிசம்பர் 27-ஆம் தேதி பம்பாயில் நடந்தது.

காங்கிரஸ் ஸ்தாபனமானது என்ன என்பதைக் குறித்து 1930-இல் லண்டனில் நடந்த இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டில் பேசியபோது மகாத்மா காந்தி ரத்தினச் சுருக்கமாக எடுத்துக்காட்டியதும் இச்சமயத்தில் குறிப்பிடத் தக்கது. அவர் கூறியதாவது:

"....நான் கூறுவது தவறல்லவாயின், காங்கிரஸே இந்தியாவிலிருக்கும் பழமையான ஸ்தாபனம். அதற்கு வயது சுமார் 50 ஆண்டுகளாகிறது. எவ்வித இடைவெளியுமின்றி ஆண்டுதோறும் அதன் மகாநாடு நடந்து வருகிறது. தேசீயம் என்பதற்கு ஏற்றவாறு அது இருந்தும் வருகிறது. எந்தக் குறிப்பிட்ட சமூகம், வர்க்கம் நலவுரிமைக்கும் அது பிரதிநிதியாக இல்லை. எல்லா வகுப்பினருக்கும் நலவுரிமைகளுக்கும் அது பிரதிநிதித்துவம் வகிக்கிறது. முதன்முதலில் ஓர் ஆங்கிலேயரின் மூளையில் உதித்ததே இந்த ஸ்தாபனம் என்பதை அதிக ஆனந்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆலன் ஆக்டேவியன் ஹியூமே காங்கிரஸின் தந்தை. இரு பார்ஸிகளான பெரோஜ்ஷா மேத்தாவும், தாதாபாய் நௌரோஜியுமே அதை வளர்த்தார்கள். ஆரம்பம் முதற்கொண்டே காங்கிரஸில் முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் இருந்து வந்திருப்பதோடு எல்லா மதத்தினரும் வகுப்பினரும் சாதியினரும் முற்றிலும் பிரதிநிதித்துவம் வகித்தும் வந்திருக்கிருர்கள் —"

லேயரிலும் இந்தியாவை நேசிப்பவர்களும், காங்கிரசின் அங்கத்தினர்களுமான பலர் இருக்கிறார்கள்.

வாசகர் : இருங்கள், இருங்கள். நான் கேள்வி கேட்கும் விஷயத்திலிருந்து நீங்கள் விலகிச் செல்கிறீர்கள். நம் ஆட்சி அல்லது சுயாட்சியைப்பற்றி நான் கேட்டேன். நீங்களோ அந்நிய ஆட்சியைப்பற்றி விவாதிக்கிறீர்கள். ஆங்கிலப் பெயர்களைப் பற்றிக் கேட்க நான் விரும்பவில்லை; நீங்களோ அந்தப் பெயர்களையே கூறிக்கொண்டிருக்கிறீர்கள். சுயாட்சியைப் பற்றி மாத்திரம் கூறுவதோடு நிற்பீர்களாயின் எனக்குப் போதும். மற்றப் பேச்செல்லாம் எனக்குத் திருப்தி அளிக்கப் போவதில்லை.

ஆசிரியர் : உங்களுக்குப் பொறுமையில்லை. நானும் பொறுமையை இழந்துவிடமுடியாது. சற்று நிதானமாக நான் கூறுவதைக் கேட்டுவந்தால், நீங்கள் கேட்க விரும்பியதைக் காண்பீர்கள். மரம் ஒரே நாளில் வளர்ந்து விடுவதில்லை என்ற பழமொழியை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். நான் சொல்லிக் கொண்டு வரும்போது இடைமறிப்பதும், இந்தியாவின் நன்மையை விரும்புகிறவர்களைப் பற்றிக் கேட்க நீங்கள் விரும்பவில்லை என்பதும், உங்களைப் பொறுத்தவரையிலாவது சுயாட்சி இன்னும் வெகு தூரத்திலேயே இருக்கிறது என்பதையே காட்டுகின்றன. உங்களைப் போன்றவர்கள் பலர் இருந்துவிட்டால், நாம் முன்னேறப் போவதே இல்லை. இதை நீங்கள் சிந்தித்துப் பார்ப்பது நல்லது.

வாசகர் : வளைத்து வளைத்துப் பேசி என்னை மடக்கப் பார்க்கிறீர்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. இந்தியாவின் நன்மையை நாடுகிறவர்கள் என்று நீங்கள் யாரைச் சொல்லுகிறீர்களோ அவர்கள் அப்படியல்ல என்பது என் அபிப்பிராயம். அப்படியிருக்க அவர்களைப்பற்றி நீங்கள் சொல்லிக்கொண்டிருப்பதை நான் ஏன் கேட்டுக் கொண்டிருக்கவேண்டும்? தேசத்தின் தந்தை என்று நீங்கள் எண்ணுகிறீர்களே, அவர் தேசத்திற்காக என்ன செய்துவிட்டார்? ஆங்கிலேய கவர்னர்கள் நீதியைச் செய்வார்களென்றும், ஆகையால் அவர்களுடன் நாம் ஒத்துழைக்கவேண்டும் என்றும் அவர் கூறுகிறார்.

ஆசிரியர் : அந்தப் பெரியாரைப்பற்றி இப்படி அவமதிப்பாக நீங்கள் பேசுவதென்பது, நாம் வெட்கப்பட வேண்டிய சங்கதி. இதைக் கண்ணியமாக உங்களுக்கு நான் சொல்லித்தான் ஆகவேண்டும். அவர் செய்திருக்கும் வேலையைப் பாருங்கள்.

இந்தியாவின் சேவைக்கென்றே அவர் தமது வாழ்க்கையைத் தத்தஞ் செய்திருக்கிருர். நாம் இப்பொழுது அறிந்திருப்பவைகளை அவரிடமிருந்தே நாம் கற்றுக்கொண்டிருக்கிரேம். நமது உயிர் ரத்தத்தை ஆங்கிலேயர்கள் உறிஞ்சிவிட்டனர் என்று நமக்கு எடுத்துக் காட்டியவர், மதிப்பிற்குரிய தாதாபாயே ஆவர். ஆங்கில மக்களிடம் அவருக்கு இன்னும் நம்பிக்கை இருந்து வருகிறது என்ருல் அதனல் என்ன? இளமையின் உற்சாகத்தினல் இன்னும் ஒரு படி மேலே போக நாம் தயாராக இருக்கிரேம் என்பதற்காகத் தாதாபாய், கௌரவக் குறைவாக நடத்தப்பட வேண்டியவரா? அப்படியாவது அவரைவிட நாம் அதிக புத்திசாலிகளா? நாம் எந்த ஏணியின் உதவியைக் கொண்டு மேலே போயிருக்கிரேமோ அந்த ஏணியையே உதைத்துத் தள்ளிவிடுவதென்பது புத்திசாலித்தனமான காரியம் ஆகாது. மாடிப்படியிலிருந்து ஒரு படியை நீக்கிவிட்டால் அது முழுதுமே கீழே விழுந்துவிடும். குழந்தைப் பருவத்திலிருந்த பிறகு இளமைப் பருவத்தை அடைகிரேம். ஆனல், இளைஞர் ஆகிவிட்டதும் குழந்தைப் பருவத்தை நாம் வெறுப்பதில்லை. அதற்கு மாருக குழந்தைப் பருவத்தை அன்போடு நினைவுபடுத்திக்கொண்டு இன்புறுகிரேம். பல ஆண்டுகள் படித்துத் தேர்ந்த ஓர் ஆசிரியர், எனக்கு ஏதோ ஒன்றைப் போதிக்கிருர். அந்த ஆசிரியரிடம் பெற்ற அடிப்படையின் பேரில் இன்னும் கொஞ்சம் அதிகமாகக் கற்றுக் கொள்ளுகிறேன். இதற்காக என்னை ஆசிரியரைவிடப் புத்திசாலி என்று கருதிவிட முடியாது. அவர் என்றும் என் மரியாதைக்கு உரியவராகவே இருந்து வருவார். இந்தியாவின் மிக முதியவரான இப்பெரியாரின் விஷயமும் அதேதான். தேசீயத்தின் கர்த்தாவே அவர்தாம் என்பதை நாம் ஒப்புக்கொண்டாக வேண்டும்.

வாசகர்: நன்ருகவே பேசினீர்கள். ஸ்ரீ தாதாபாயிடம் மரியாதை செலுத்தவேண்டும் என்பதை நான் இப்பொழுது அறிகிறேன். அவரும், அவரைப் போன்றவர்களும் இல்லாதிருந்தால், நமக்கு ஆர்வத்தை ஊட்டும் இந்த உணர்ச்சியே நமக்கு ஒருவேளை உண்டாகாமலும் இருக்கலாம். இதையே பேராசிரியர் கோகலே விஷயத்திலும் எப்படிச் சொல்லிவிட முடியும்? ஆங்கிலேயரின் சிறந்த நண்பராக அவர் தம்மை ஆக்கிக்கொண்டிருக்கிருர். அவர்களிடமிருந்து நாம் எவ்வளவோ கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது என்றும், சுயாட்சியைப்பற்றி நாம் பேசுவ

தற்கு முன்பு அவர்களுடைய ராஜீய ஞானத்தை நாம் அறிந்து கொள்ள வேண்டும் என்றும் அவர் கூறுகிறார். அவருடைய பேச்சுக்களைப் படித்து எனக்கு அலுத்துப்போய்விட்டது.

ஆசிரியர் : நீங்கள் அலுத்துப்போயிருந்தால், உங்களுக்குப் பொறுமையில்லை என்பதையே காட்டிக் கொள்ளுகிறீர்கள். தங்கள் பெற்றோர்கள் மெல்ல நகருவதாக அதிருப்தி அடைகிறவர்கள், குழந்தைகளுக்குச் சமமாக அவர்களால் ஓடமுடியவில்லை என்பதற்காகப் பெற்றோர்மீது கோபப்படுகிறவர்கள், பெற்றோர்களிடம் மரியாதை செலுத்தாதவர்கள் என்றே சொல்லுகிறோம். பேராசிரியர் கோகலே பெற்றோர் ஸ்தானத்தில் இருக்கிறார். நம்மோடு அவரால் ஓடி வர முடியவில்லையானால் அதனால் என்ன? சுயாட்சியை அடைய விரும்பும் ஒரு நாட்டு மக்கள், தங்களுடைய முன்னோர்களை அலட்சியமாகக் கருதிவிட முடியாது. முதியவர்களிடம் மரியாதையுடன் இருக்கத் தவறிவிடுவோமானால், நாம் ஒன்றுக்கும் உதவாதவர்கள் ஆகிவிடுவோம். தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளத் தகுதி வாய்ந்தவர்கள், முதிர்ந்த அறிவுள்ளவர்களேயன்றி அவசரப் புத்திக்காரர்கள் அல்ல. மேலும், இந்தியரின் கல்விக்காகப் பேராசிரியர் கோகலே தம்மையே அர்ப்பணம் செய்துகொண்டதுபோல் இந்தியரில் எத்தனை பேர் இருக்கின்றனர்? பேராசிரியர் கோகலே செய்வது எதுவானாலும், பரிசுத்தமான நோக்கத்தோடு செய்கிறார். இந்தியாவுக்குச் சேவை செய்யவேண்டும் என்பதற்காகச் செய்கிறார் என்று நான் உறுதியாக நம்புகிறேன். தாய்நாட்டிடம் அவருக்குள்ள பக்தி அபாரமானது; அவசியம் நேர்ந்தால் அதற்காக அவர் தம் உயிரையும் கொடுக்கத் தயாராயிருப்பார். அவர் எதைச் சொன்னாலும், அது இன்னொருவரைப் புகழ்வதற்காக அல்ல. உண்மை என்று தாம் நம்புவதைத்தான் அவர் சொல்லுகிறார். ஆகையால் அவரிடம் மிக உயர்ந்த மதிப்பு வைக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

வாசகர் : அப்படியானால், ஒவ்வொன்றிலும் நாம் அவரைப் பின்பற்றவேண்டுமா?

ஆசிரியர் : நான் அப்படி ஒன்றும் சொல்லவில்லை. அவருடைய கருத்திலிருந்து நாம் மனமார மாறுபடுவோமானால், தம்மைப் பின்பற்றுவதைவிட நம் மனச்சாட்சியின்படியே நடந்துகொள்ளும்படி, அந்த அறிவுமிக்கப் பேராசிரியரே நமக்குப் புத்திமதி சொல்லிவிடுவார். அவருடைய வேலையை அலட்சியப்படுத்திச் சொல்லுவது நமது வேலையன்று. நம்மைவிட அவர்

நிச்சயமாகப் பெரியவர் என்பதை நாம் நம்ப வேண்டும். இந்தியாவுக்கு அவர் செய்திருக்கும் வேலையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நாம் செய்திருப்பது மிகச் சொற்பம் என்பதைத் திடமாக நாம் உணர வேண்டும் என்பதே நமக்கு முக்கியம். பல பத்திரிகைகள் அவரைப்பற்றி மரியாதைக் குறைவாக எழுதி வருகின்றன. அப்படி எழுதப்படுவதை ஆட்சேபிப்பது நமது கடமை. பேராசிரியர் கோகலே போன்றவர்களைச் சுயாட்சியின் தூண்களாக நாம் கருத வேண்டும். இன்னொருவரின் எண்ணம் கெடுதலானது, நம் எண்ணமே நல்லது, நம் கருத்துக்கு மாறுபட்ட கருத்துடையவர்கள் தேசத்தின் விரோதிகள் என்று சொல்லிவிடுவதென்பது கெட்ட குணம்.

வாசகர்: நீங்கள் கூறுவதிலுள்ள பொருளை ஓரளவுக்கு இப்பொழுது அறிகிறேன். இதைப்பற்றி நான் மேலும் சிந்திக்க வேண்டியிருக்கிறது. ஆனால், ஸ்ரீ ஹியூமைக் குறித்தும் ஸர் வில்லியம் வெட்டர்பர்னைப் பற்றியும் நீங்கள் கூறுவதைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஆசிரியர்: இந்தியர் விஷயத்தில் உள்ள விதியே ஆங்கிலேயர் விஷயத்திலும் பொருந்தும். எல்லா ஆங்கிலேயர்களும் கெட்டவர்களே என்று கூறப்படுவதை நான் ஏற்றுக் கொள்ளவே முடியாது. இந்தியாவுக்குச் சுயாட்சி அளித்துவிட வேண்டுமென்று பல ஆங்கிலேயர்கள் விரும்புகின்றனர். மற்றவர்களை விட ஆங்கிலேயர்கள் சற்றுச் சுயநலக்காரர்கள் என்பது உண்மை. ஆனால், அதனால் எல்லா ஆங்கிலேயருமே கெட்டவர்களென்று கருதிவிடக் கூடாது. நீதியை விரும்புகிற நாம், மற்றவர்களிடமும் முறையாக நடந்துகொள்ள வேண்டும். ஸர் வில்லியம் இந்தியாவுக்குக் கெடுதலை விரும்பவில்லை. அதுவே நமக்குப் போதும். நாம் நியாயமாக நடந்துகொண்டால் இந்தியா சீக்கிரத்தில் சுதந்திரத்தை அடையும் என்பதைப் போகப்போக நீங்கள் காண்பீர்கள். ஒவ்வோர் ஆங்கிலேயரையும் விரோதியாக எண்ணிக்கொண்டு ஒதுக்கிச் சென்றால் சுயாட்சி தாமதப்படும் என்பதையும் காண்பீர்கள். ஆனால், நாம் அவர்களிடம் நியாயமாய் நடந்தால், லட்சியத்தை நோக்கி முன்னேறுவதற்கு அவர்களுடைய ஆதரவு நமக்கு இருக்கும்.

வாசகர்: இவையெல்லாம் பைத்தியக்காரத்தனமானவை என்றே எனக்கு இப்பொழுது தோன்றுகின்றன. ஆங்கிலேயரின் ஆதரவு என்பதும், சுயாட்சியை நாம் அடைவது என்பதும் ஒன்றுக்கொன்று முரணானவை. நாம் சுயாட்சி அடைவதென்பதை

ஆங்கில மக்கள் எப்படி சகித்துக்கொண்டிருப்பார்கள்? ஆனல், இவ்விஷயத்தில் எனக்காக நீங்கள் இப்பொழுதே முடிவுகட்டி விடவேண்டுமென நான் விரும்பவில்லை. இதில் காலத்தைச் செலவிடுவது வீணனது. நாம் எந்த விதத்தில் சுயாட்சியை அடையமுடியும் என்பதை நீங்கள் காட்டும்போது, உங்கள் கருத்தை ஒருவேளை நான் அறிந்துகொள்ளக்கூடும். ஆங்கிலேயரின் உதவியைப்பற்றிச் சொல்லி உங்கள் மீது எனக்குத் தவறெண்ணம் விழும்படி செய்து விட்டீர்கள். ஆகையால் இவ்விஷயத்தைத் தொடரவேண்டாமென்று உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆசிரியர்: அந்த விருப்பம் எனக்கு இல்லை. என்மீது தவறு எண்ணம் கொண்டு விட்டீர்கள் என்பது கவலைப்பட வேண்டிய விஷயமே அன்று. நீங்கள் விரும்பாத விஷயங்களை ஆரம்பத்திலேயே நான் சொல்லிவிடுவதுதான் நல்லது. உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் தவறெண்ணத்தை போக்கப் பொறுமையோடு முயற்சி செய்ய வேண்டியது என் கடமை.

வாசகர்: கடைசியாக நீங்கள் கூறியிருப்பதை நான் விரும்புகிறேன். எனக்குப் பிடித்ததைச் சொல்லும் தைரியத்தை அது எனக்கு அளிக்கிறது. ஒரு விஷயந்தான் எனக்கு இன்னும் புதிராக இருக்கிறது. சுயாட்சிக்குக் காங்கிரஸ் எவ்விதம் அடிகோலியது என்பதுதான் எனக்கு விளங்கவில்லை.

ஆசிரியர்: அதைப் பார்ப்போம். இந்தியாவின் பல பகுதிகளில் இருக்கும் இந்தியர்களைக் காங்கிரஸ் ஒன்று திரட்டி ஒரே நாட்டினர் என்ற எண்ணம் ஏற்பட நமக்கு உற்சாகம் அளித்தது. அரசாங்கம் அதை வெறுப்புடன் பார்த்தது. அரசாங்கத்தின் வருவாயையும் செலவுகளையும் நாட்டு மக்களே நிர்வகிக்க வேண்டுமென்று காங்கிரஸ் எப்பொழுதும் வற்புறுத்தி வந்திருக்கிறது. கானடாவுக்கு இருப்பதைப் போன்ற சுயாட்சி நமக்கும் வேண்டும் என்றும் காங்கிரஸ் எப்பொழுதுமே விரும்பி வந்திருக்கிறது. அதை நாம் விரும்புகிறேமோ, இல்லையோ, அதைவிட அதிகமாக விரும்பத் தக்கது ஏதாவது ஒன்று இருக்கிறதா என்பவையெல்லாம் வேறு விஷயங்கள். நான் இப்பொழுது காட்ட விரும்புவதெல்லாம், சுயாட்சி என்பதற்கான ஆரம்ப ருசியை உண்டாக்கியது காங்கிரஸ் என்பதேயாம். அந்தக் கௌரவத்தை அதற்குக் கொடுக்க மறுப்பது சரியல்ல. அதை நாம் செய்வது நன்றிகெட்ட காரியம் என்பது மாத்திரமன்று, நமது லட்சியத்தை நிறைவேற்றிக்கொள்ளுவதற்கு முட்டுக்கட்டை போட்டு விடுவதுமாகும். காங்கிரஸ், நாம் ஒரு தேசீய இனமாக வளர்ச்சி அடைவதற்கு விரோதமான ஸ்தாபனம் எனக் கொள்ளுவது அந்த ஸ்தாபனத்தை நமக்குப் பயனற்றதாகச் செய்துவிடும்.

## அத்தியாயம்-2

# வங்காளப் பிரிவினை

வாசகர்: நீங்கள் கூறுவதைக் கொண்டு கவனித்தால் சுயாட்சிக்கு அஸ்திவாரம் போட்டது காங்கிரஸே என்று சொல்லுவது சரியானதே என்று தோன்றுகிறது. ஆனல், இது உண்மையான விழிப்பு என்று கருதிவிடமுடியாது என்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள். உண்மையான விழிப்பு எப்பொழுது, எப்படி ஏற்பட்டது?

ஆசிரியர்: வித்து கண்ணுக்குத் தென்படுவதில்லை. அது மண்ணுக்குள்ளிருந்து வேலை செய்கிறது; அது மறைந்தாலும் பூமிக்கு வெளியிலே கிளம்பும் மரத்தை மாத்திரம் பார்க்கிறோம். காங்கிரஸின் சக்தியும் அதுதான். என்றாலும், உண்மையான விழிப்பு என்று நீங்கள் சொல்லுவது, வங்காளப் பிரிவினை*க்குப் பிறகு ஏற்பட்டது. இதற்காக லார்டு கர்ஸனுக்கும் நான் வந்தனம் கூறவேண்டும். பிரிவினை செய்யப்பட்டபோது, வங்காள மக்கள் அது கூடாது என்று லார்டு கர்ஸனுக்கு நியாயத்தை எடுத்துக் கூறினர்கள். ஆனல், அதிகார இறுமாப்பில் அவர்களுடைய கோரிக்கைகளை எடுத்துக்கொள்ள அவர் மறுத்து விட்டார். வெறும் பேச்சுப் பேசிக்கொண்டிருக்கத்தான் இந்தியர்களால் முடியுமேயன்றி உருப்படியான நடவடிக்கை எதையும் செய்ய அவர்களால் ஆகாது என்று நினைத்துவிட்டார்; அவமதித்தும் பேசினர். எல்லா எதிர்ப்புக்

---

* வைசிராயாக இருந்த லார்டு கர்ஸன் 1905 ஜூலையில் வங்காள மாகாணத்தை மேற்கு வங்காளம் என்றும், அஸ்ஸாமும் சேர்ந்த கிழக்கு வங்காளம் என்றும் இரண்டாகப் பிரிவினை செய்தார். லார்டு கர்ஸன் செய்த தவறுகளில் இது முதன்மையானதாயிற்று. இத்தவறு பிரிட்டிஷ்-இந்திய உறவையே அடியோடு கெடுத்துவிடும் சூழ்நிலையை உண்டாக்கிவிட்டது. 1905-இல் ஸ்ரீ கோகலே காசியில் பேசுகையில், "லார்டு கர்ஸன் இந்திய மக்களைப் புரிந்துகொள்ளவில்லை" என்றார். "இந்தியாவை ஆள்வதற்கு இங்கிலாந்து அனுப்பிய வைசிராய்களில் மிகத்திறமை வாய்ந்தவரான லார்டு கர்ஸன், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் அடிப்படையையே நாசப்படுத்திவிட்டார்" என்று முக்கியஸ்தர்களும் ஒப்புக்கொண்டனர்.

இப்பிரிவினையால் வங்காளத்தில் பெருங்கிளர்ச்சி எழுந்ததோடு பகிஷ்கார, சுதேசி இயக்கங்கள் தீவிரமாகத் தோன்றி நாடெங்கும் பரவின. தேசீய உணர்ச்சியும் விழிப்பும் மக்களுக்கு அதிகமாயின. தேசீய ஒற்றுமையைச் சிதைப்பதற்காகவே வங்காளப் பிரிவினை செய்யப்பட்டது என்று வங்காளிகள் ஆத்திர மடைந்தனர். இவ்விதம் பலத்த எதிர்ப்புக்கு இலக்கான வங்காளப் பிரிவினை 1911-இல் டில்லியில் நடந்த தர்பாரில் பிரிட்டிஷ் மன்னர் செய்த பிரகடனத்தின் மூலம் ரத்தாகி மீண்டும் வங்காளம் ஒன்றுக்கப்பட்டது.

களையும் அலட்சியம் செய்துவிட்டு வங்காளத்தைப் பிரித்தார். அந்நாளைப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையே பிரித்த நாளாகவே கருத வேண்டும். இப்பிரிவினையால் பிரிட்டிஷ் ஆட்சிக்கு ஏற்பட்ட அதிர்ச்சியைப் போல வேறு எதுவுமே அவ்வளவு அதிர்ச்சியை உண்டாக்கியதில்லை. இந்தியாவுக்குச் செய்யப்பட்டிருக்கும் மற்ற அநீதிகள், இப்பிரிவினையைவிடக் குறைவானவை என்பதல்ல. அப்படிப்பட்ட அக்கிரமங்கள் பலவற்றைக் குறித்துப்பின்னால் கவனிப்போம். ஆனால், வங்காளப் பிரிவினையை எதிர்க்க மக்கள் தயாராயிருந்தார்கள். அச்சமயம் உணர்ச்சி வேகம் பலமானதாகவே இருந்தது. பல பிரபல வங்காளிகள் தங்களுடைய அனைத்தையும் இழக்கத் தயாராயிருந்தார்கள். அவர்கள், தங்களுடைய சக்தியை அறிவார்கள். அதனாலேயே பெருந் தீயைப்போல் இந்தக் கிளர்ச்சி மூண்டது. அது, இன்று அணைக்க முடியாததாகியிருக்கிறது; அதை அணைக்க வேண்டிய அவசியமும் இல்லை. பிரிவினை போய்விடும்; வங்காளம் மீண்டும் ஒன்றாகிவிடும். ஆனால், பிரிட்டிஷ் படகில் ஏற்பட்டு விட்ட பிளவு மாத்திரம் இருந்து கொண்டிருக்கும்; நாளுக்கு நாள் அது பெரிதாகியும் தீரும். விழிப்புற்ற இந்தியா இனித் தூங்கப்போவதில்லை. பிரிவினையை ரத்து செய்ய வேண்டும் என்ற கோரிக்கை சுயாட்சிக் கோரிக்கைக்குச் சமமானது. வங்காளத்திலுள்ள தலைவர்கள் இதை அறிவார்கள். பிரிட்டிஷ் அதிகாரிகளும் இதை உணருகிறார்கள். இதனாலேயே பிரிவினை இன்னும் இருந்து வருகிறது. நாளாக ஆகத் தேசீய ஐக்கியம் உருவாகிறது. இந்தத் தேசீய ஐக்கியங்கள் ஒரே நாளில் அமைந்து விடுவதில்லை. இதற்குப் பல வருடங்களாகும்.

வாசகர்: பிரிவினையின் பயன்கள் என்ன என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

ஆசிரியர்: குறைகளை நிவர்த்தித்துக் கொள்ளுவதற்கு மன்னரிடம் முறையிட்டுக்கொள்ளவேண்டும்; பரிகாரம் கிடைக்கவில்லை என்றால், திரும்பவும் மனுச்செய்து கொள்ளலாம் என்பதைத் தவிர மற்றப்படி நாம் சும்மா இருக்க வேண்டியதே என்று இதுவரை நாம் நினைத்து வந்தோம். மனுக்களுக்கு ஆதரவாகப் பலமும் இருந்தாகவேண்டும், கஷ்டப்படுவதற்கும் தாங்கள் தயாராயிருக்கவேண்டும் என்பதைப் பிரிவினைக்குப் பிறகு மக்கள் கண்டார்கள். இந்தப் பிரிவினையால் ஏற்பட்ட முக்கியமான விளைவு ஒரு புத்துணர்வேயாகும் என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். பத்திரிகைகளில் மனம் விட்டு எழுதப்பட்டு

வருபவைகளிலிருந்து இந்த உணர்ச்சி புலப்படுகிறது. நடு நடுங்கிக்கொண்டு, முன்னல் மக்கள் எதை ரகசியமாகச் சொல்லிவந்தார்களோ அதையே இப்பொழுது பகிரங்கமாகச் சொல்லி, பத்திரிகைகளிலும் எழுதி வருகின்றனர். சுதேசி இயக்கம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. ஓர் ஆங்கிலேயனைக் கண்டதுமே இளைஞர்களும் கிழவர்களும் முன்பு ஓட்டம் எடுத்தனர்; இப்பொழுது அந்தப் பயமெல்லாம் போய்விட்டது. சச்சரவு ஏற்படுவதற்கோ, சிறைப்படுவதற்கோ அவர்கள் அஞ்சுவதில்லை. இந்தியாவின் மிகச் சிறந்த மக்கள் சிலர் இன்று நாடுகடத்தப்பட்டிருக்கிருர்கள். சாதாரணமாக மனுச் செய்து கொள்ளுவது என்பதற்கு இது, மாருனதொன்று. இவ்விதம் மக்கள் முன்னுக்கு வந்துவிட்டனர். வங்காளத்தில் மூண்டெழுந்த உணர்ச்சி, வடக்கில் பாஞ்சாலத்திற்கும், தெற்கில் கன்னியாகுமரி வரைக்கும் பரவி விட்டது.

வாசகர்: இதைத் தவிரக் குறிப்பிடத் தக்க வேறு பயனிருக்கிறதா?

ஆசிரியர்: பிரிவினை, பிரிட்டிஷ் படகில் பிளவை உண்டாக்கி விட்டதோடு நம்முடையதிலும் உண்டாக்கியிருக்கிறது. மகத்தான சம்பவங்கள் மகத்தான பலன்களை உண்டாக்கும். நம் தலைவர்கள், மிதவாதிகள், தீவிரவாதிகள் என இரு கட்சிகளாய்ப் பிரிந்திருக்கின்றனர். மெதுவாகச் செல்லும் கட்சி, பொறுமையில்லாத கட்சி என்று இவற்றைக் கருதலாம். மிதவாதிகள் கட்சி பயங்காளிகள் கட்சி என்றும், தீவிரவாதிகளின் கட்சி தைரியமான கட்சி என்றும் சிலர் சொல்லுகின்றனர். அவரவர் மனத்திற்கு ஏற்றுற்போல இவ்விரு கட்சிகளையும் பற்றி எல்லோரும் வியாக்கியானம் கூறுகின்றனர். ஆனால், ஒன்று மாத்திரம் நிச்சயம். இவ்விரு கட்சியாருக்கு மிடையே விரோதம் உண்டாகிவிட்டது. ஒரு கட்சி மற்றென்றை நம்பாமல், அதன் நோக்கத்தைப்பற்றிக் குறை கூறி வருகிறது. சூரத் காங்கிரஸின் முடிவில் அடி தடியே அநேகமாக ஏற்பட்டுவிட்டது.* இந்தப் பிளவு நாட்டிற்கு நல்லதல்ல

* 1907 டிசம்பர் 27–இல் சூரத்தில் நடந்த காங்கிரஸில் அடிதடியும் குழப்பமும் உண்டாகி காங்கிரஸில் பிளவு ஏற்பட்டதெனினும் காங்கிரஸின் போக்கில் சூரத் மகாநாடு புதிய மாறுதலையும் உண்டாக்கியது. இதற்கு முதலாண்டு கல்கத்தாவில் நடந்த காங்கிரஸில் மிதவாதிகளுக்கும் தேசீயவாதிகளுக்கும் தகராறு முற்றியது. இந்தத் தகராறும், இதனுல் ஏற்பட்ட சந்தேகங்களுமே சூரத் காங்கிரஸில் அடிதடியில் முடிந்தன எனலாம். பூனுவிலிருந்து காங்கிரஸை சூரத்திற்கு மாற்றியது, அங்கே தங்களுக்கு, அதிக பலம் இருக்கும் என மிதவாதிகள் எண்ணியதாலேயே என தேசீய வாதிகள்

என்றே நான் நினைக்கிறேன். அதே சமயத்தில் இப்பிளவுகள் நீண்ட காலம் நீடிக்கமாட்டா என்றும் எண்ணுகிறேன். இவை எவ்வளவு காலம் நீடிக்கும் என்பது தலைவர்களைப் பொறுத்திருக்கிறது.

---

கருதினர். மேலும் சுயாட்சி, பகிஷ்காரம், தேசீயக் கல்வி ஆகியவைகளைக் குறித்து கல்கத்தா காங்கிரஸில் நிறைவேறிய தீர்மானங்களை சூரத்தில் மிதவாதிகள் மழுப்பி விட்டுவிடக் கூடும் என்றும் தேசீயவாதிகள் சந்தேகித்தனர். மகா நாட்டில் வர இருந்த தீர்மானங்களின் நகலை அவர்களுக்குக் கொடுக்காதது சந்தேகத்தை மிகைப்படுத்தியது. அதோடு டாக்டர் ராஷ்பிகாரி கோஷை மகா நாட்டுத் தலைவராக வரவேற்புக் கமிட்டியே தேர்ந்தெடுத்துவிட்டதைத் தேசீயவாதிகள் ஆட்சேபித்தனர். சூரத் காங்கிரஸ் 27–ஆம் தேதி பகல் 2–30 மணிக்குக் கூடி தலைவர் பெயர் பிரேரேபிக்கப்பட்டபோது தேசீயவாதிகள் எதிர்த்தனர். கூட்டத்தில் கூச்சல் அதிகரித்ததால் மேற்கொண்டு கூட்டம் நடக்காமல் ஒத்திவைக்கப்பட்டது. மறுநாள் திரும்பக் கூட்டம் நடந்தபோது தேசீயவாதிகளின் கோஷ்டிக்குத் தலைவரான லோகமான்ய திலகர் பேச எழுந்து மேடைக்குச் சென்றபோது அவரை அனுமதிக்க மறுக்கவே, கூச்சலும் குழப்பமும் அதிகமாகி செருப்பு வீச்சும் அடிதடியும் நடந்துவிட்டன; மேஜை நாற்காலிகளும் நொறுங்கின.

## அத்தியாயம் 3

# அதிருப்தியும் அமைதியின்மையும்

வாசகர்: அப்படியானல் விழிப்பிற்குப் பிரிவினையே காரணம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இதன் பலனுக ஏற்பட்ட அமைதியின்மையை நீங்கள் வரவேற்கிறீர்களா?

ஆசிரியர்: ஒருவர் தூக்கத்திலிருந்து எழும்போது கை கால்களை முறுக்கிக் கொள்ளுகிருர்; அமைதி இல்லாமலும் இருக்கிருர். முற்றிலும் விழிப்பை அடைவதற்குக் கொஞ்ச நேரம் ஆகிறது. அதே போல, பிரிவினை விழிப்பை உண்டாக்கியிருந்தபோதிலும் தூக்கக் கலக்கம் இன்னும் மறைந்துவிடவில்லை. இன்னும் கை கால்களை நெளித்துக்கொள்ளுவதுடன் அமைதி இல்லாமலும் இருக்கிறோம். தூக்கத்திற்கும் விழிப்பிற்கும் இடையான ஒரு நிலை இருப்பது அவசியமெனக் கருதப்படுவதைப் போலவே இந்தியாவில் இப்பொழுது இருந்துவரும் அமைதி இல்லாத நிலையும் அவசியமே என்றும், சரியான நிலையே என்றும் கருதப்படவேண்டும். அமைதியின்மை இருக்கிறது என்பதை அறிந்திருப்பதே, அதிலிருந்து சமாளித்துக்கொண்டு வருவதற்கு நமக்குச் சாத்தியமாகலாம். தூக்கத்திலிருந்து எழுந்ததும் மயக்கத்தோடு கூடிய நிலையிலேயே நாம் தொடர்ந்து இருந்துவிடுவதில்லை. ஆனல், நமது சக்திக்கு ஏற்றபடி உடனேயோ அல்லது சிறிது நேரங்கழித்தோ நாம் முழுப் புலன் உணர்வுகளை அடைந்துவிடுகிறோம். அதேபோல, யாரும் விரும்பாத இப்பொழுதுள்ள அமைதியின்மையிலிருந்து நாமும் விடுபடுவோம்.

வாசகர்: மற்ெருரு வகையான அமைதியின்மை என்ன?

ஆசிரியர்: அமைதியின்மை என்பது உண்மையில் அதிருப்தியே யாகும். இந்த அதிருப்தியையே இப்பொழுது அமைதியின்மை என்று கூறி வருகிறோம். காங்கிரஸ் காலத்தில் இதற்கு அதிருப்தி என்று பெயர் இடப்பட்டிருக்கிறது. இந்தியாவில் அதிருப்தி பரவுவது அவசியமானது என்று ஸ்ரீ ஹியூம் எப்பொழுதும் கூறி வந்திருக்கிருர். இந்த அதிருப்தி மிகவும் பலன் உள்ளது. இப்பொழுது இருக்கும் தனது நிலையில் ஒருவன் திருப்தி கொண்டிருந்தால் அதிலிருந்து வெளியேற அவனைத் தூண்டுவது கடினம். ஆகையால், எந்தச் சீர்திருத்தத்திற்கும் முன்னல் இந்த அதிருப்தி இருந்தாகவேண்டும். வெறுப்

படையும்போதுதான் நாம் வைத்திருக்கும் பொருள்களைத் தூக்கி எறிந்துவிடுகிறோம். இந்திய, ஆங்கிலப் பெரியார்களின் சிறந்த நூல்களைப் படித்த பிறகு அத்தகையதோர் அதிருப்தி நம்மிடம் தோன்றி இருக்கிறது. அதிருப்தியிலிருந்து அமைதியின்மை உண்டாகிறது. அமைதியின்மையால் பலர் சாவது, பலர் சிறைப் படுவது, பலர் நாடு கடத்தப்படுவது ஆகியவையெல்லாம் உண்டாகின்றன. இத்தகைய நிலைமையே இன்னும் தொடர்ந்து இருந்து வரும். அவ்வாறு இருக்கத்தான் வேண்டும். இவை யெல்லாம் நல்ல அறிகுறிகள் என்றே கருதப்படும். ஆனால், இவை கெடுதலான பலனுக்கும் வழி செய்துவிடும்.

## அத்தியாயம் 4

# சுயராஜ்யம் என்பது என்ன?

வாசகர்: இந்தியாவை ஒரே தேசீய இனமாக்குவதற்குக் காங்கிரஸ் என்ன செய்திருக்கிறது, பிரிவினை எவ்விதம் விழிப்பை உண்டாக்கியிருக்கிறது, நாடு முழுதும் அதிருப்தியும் அமைதியின்மையும் எவ்விதம் பரவியிருக்கின்றன என்பவற்றை நான் இப்பொழுது அறிந்துகொண்டேன். சுயராஜ்யத்தைப் பற்றி உங்கள் கருத்து இன்னதென்பதை இப்பொழுது அறிய விரும்புகிறேன். இதைக் குறித்து நாங்கள் கொள்ளும் விளக்கம் உங்கள் கருத்துக்கு ஒத்திருக்குமா என அஞ்சுகிறேன்.

ஆசிரியர்: அதற்கு நாம் கொள்ளும் பொருள் ஒன்றாக இல்லாதிருப்பது சாத்தியமே. சுயராஜ்யத்தை அடைந்துவிட வேண்டும் என்பதில் நீங்களும் நானும், எல்லா இந்தியர்களுமே, பொறுமை இழந்தவர்களாக இருக்கிறோம். ஆனால், அது என்ன என்பதில் நாம் இன்னும் ஒரு முடிவுக்கு வந்துவிடவில்லை என்பது நிச்சயம். ஆங்கிலேயரை இந்தியாவிலிருந்து விரட்டிவிட வேண்டும் என்பது ஒரு கருத்து என்பதைப் பலர் வாயாலும் கேட்கிறோம். ஆனால், அப்படி ஏன் விரட்டிவிட வேண்டும் என்பதைக் குறித்து பலர் தீர யோசித்திருப்பதாகத் தோன்றவில்லை. உங்களை ஒன்று கேட்கிறேன். நாம் விரும்புவதெல்லாம் கிடைப்பதாயிருந்தாலும் ஆங்கிலேயர்களை விரட்டிவிட வேண்டியது அவசியம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

வாசகர்: அவர்களை ஒன்றே ஒன்றுமாத்திரம் கேட்பேன். ‘தயை செய்து எங்கள் நாட்டை விட்டுப் போய்விடுங்கள்’ என்பதே அது. இந்த வேண்டுகோளுக்கு உடன்பட்டுவிட்டால், அவர்கள் இந்தியாவிலிருந்து போய்விடுவதென்பது அவர்கள் இன்னும் இந்தியாவில் இருக்கிறார்கள் என்றாகும். எனக்கும் எவ்வித ஆட்சேபமும் இல்லை. பிறகு அவர்கள் மொழியில், ‘போய்விட்டார்கள்’ என்ற சொல், ‘இருக்கிறார்கள்’ என்பதற்கு நேர் என நாம் அறிய முடியும்.

ஆசிரியர்: சரி, ஆங்கிலேயர்கள் போய்விடுகிறார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அதன் பிறகு நீங்கள் என்ன செய்வீர்கள்?

வாசகர்: அந்தக் கேள்விக்கு இந்தக் கட்டத்தில் பதில் சொல்லிவிட முடியாது. அவர்கள் போய்விட்ட பிறகு ஏற்படும் நிலைமை, எந்த விதத்தில் போகிறார்கள் என்பதையே பெரும்

பாலும் பொறுத்திருக்கிறது. நீங்கள் ஊகிக்கிறபடி அவர்கள் வெளியேறிவிடுவார்களானல், அவர்கள் அரசியலேயே நாம் தொடர்ந்து வைத்துக்கொண்டு ஆட்சியை நடத்தி வருவோம் என்றே எனக்குத் தோன்றுகிறது. சொன்ன மாத்திரத்திலேயே அவர்கள் போய்விடுவதாயிருந்தால், நாம் ராணுவம் முதலிய வைகளைத் தயாராக வைத்துக்கொள்ள வேண்டும். எனவே, ஆட்சியை நடத்திக்கொண்டு போவதில் நமக்கு எந்தவிதமான சிரமமும் இருக்காது.

ஆசிரியர்: நீங்கள் அப்படி நினைக்கலாம்; ஆனல், நான் அவ்வாறு எண்ணவில்லை. எனினும், இதைப்பற்றி இச்சமயம் விவாதிக்கப் போவதில்லை. உங்கள் கேள்விக்கு நான் பதில் சொல்லி ஆகவேண்டும். ஆகவே, உங்களுக்கு பல கேள்விகளைப் போடுவதே சரி. ஏன் ஆங்கிலேயர்களை விரட்டிவிட விரும்பு கிறீர்கள்?

வாசகர்: ஏனெனில், அவர்களுடைய ஆட்சியினல் இந்தியா வறுமை அடைந்துவிட்டது. ஆண்டுதோறும் நம் பணத்தை அவர்கள் கொண்டுபோய் விடுகிருர்கள். முக்கியமான பதவிகளை அவர்கள் தமக்கென வைத்துக் கொள்ளுகின்றனர். நம்மை அடிமை நிலையிலும் வைத்திருக்கின்றனர். நம்மிடம் அலட்சிய மாக நடந்து கொள்ளுவதுடன் நம்முடைய உணர்ச்சிகளையும் அவர்கள் மதிப்பதில்லை.

ஆசிரியர்: நம்முடைய பணத்தை அவர்கள் எடுத்துக் கொண்டு போகாமல் இருக்கிருர்கள்; மரியாதையுடனும் நடக் கிருர்கள்; நமக்குப் பொறுப்புள்ள பதவிகளையும் கொடுக்கி ருர்கள் என்று வைத்துக்கொண்டால், அவர்கள் இங்கிருப்பது தீமையே என்று அப்போதும் நீங்கள் கருதுவீர்களா?

வாசகர்: இக்கேள்வி பயனற்றது. புலி தன்னுடைய சுபாவத்தை மாற்றிக்கொண்டுவிட்ட பிறகு அதனுடன் பழகு வதில் தீமையுண்டா என்று கேட்பதைப் போன்றதே இது. இத்தகைய கேள்வி, நேரத்தை வீணுக்குவதேயாகும். புலி தன் னுடைய சுபாவத்தை மாற்றிக்கொள்ளும்போது ஆங்கிலேயரும் தங்கள் சுபாவத்தை மாற்றிக்கொள்ளுவார்கள். இது நடக்கக் கூடியதல்ல; நடக்கும் என்று நம்புவதும் மனித அனுபவத்திற்கு மாறுபட்டது.

ஆசிரியர்: கானடாக்காரர்களும், தென்னுப்பிரிக்காக்காரர் களும் அடைந்திருப்பதைப் போன்ற சுயாட்சியை நாம் அடை கிருேம் என்று வைத்துக்கொள்ளுவோம். அது போதுமா?

வாசகர்: இதுவும் பயனற்ற கேள்வியே. அதே போன்ற அதிகாரம் நமக்கு இருக்கும்போது நாம் அதை அடைவோம்; பிறகு நாம் நம் கொடியை ஏற்றிக் கொள்ளுவோம். ஜப்பான் எப்படி இருக்கிறதோ அப்படி இருக்கவேண்டும் இந்தியாவும். நமக்குச் சொந்தமாகக் கடற்படை, ராணுவம் இருக்கவேண்டும். நமக்கென்றே தனிச்சிறப்பும் இருக்கவேண்டும். அப்பொழுது இந்தியாவின் சொல் உலகெல்லாம் ஒலிக்கும்.

ஆசிரியர்: உங்கள் வருணனை சரியாகவே இருக்கிறது. காரியத்தில் அதன் பொருள் இதுதான்: ஆங்கிலேயர்கள் இல்லாமலேயே ஆங்கிலேய ஆட்சியை நாம் விரும்புகிறோம் என்பதே. புலி இருக்கக்கூடாது; ஆனால், புலியின் சுபாவம் இருக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள். அதாவது, இந்தியாவை ஆங்கில மயமாக்குவீர்கள் என்றே தொனிக்கிறது. ஆங்கிலேயர் மயமாகி விடும்போது அதை ஆங்கிலஸ்தான் என்றழைக்க வேண்டுமேயல்லாமல் ஹிந்துஸ்தான் என்றல்ல. நான் விரும்பும் சுயராஜ்யம் இதுவல்ல.

வாசகர்: சுயராஜ்யம் இப்படித்தான் இருக்கவேண்டும் என்பதைப்பற்றி என் கருத்தை உங்களிடம் சொன்னேன். நாம் பெற்ற கல்வியினால் ஏதாவது பயனுண்டு என்றால், ஸ்பென்ஸர்*, மில்† முதலானவர்களின் நூல்களினால் ஏதாவது முக்கியத்துவம் உண்டென்றால், ஆங்கிலப் பார்லிமெண்டே பார்லிமெண்டுகளுக்கெல்லாம் தாயாக இருப்பின், நாம் ஆங்கில மக்களைப் பின்பற்றியே நடக்கவேண்டும் என்று நான் நிச்சயமாக எண்ணுகிறேன். தங்கள் நாட்டில் மற்றவர்கள் இருக்க அவர்கள் அனுமதிப்பதில்லை; அதேபோல நம் நாட்டில் மற்றவர்கள் இருக்க நாம் அனுமதிப்பதில்லை என்ற அளவுக்கு நாம் அவர்களைப்போல் நடக்க வேண்டும். அவர்கள் தங்கள் சொந்த நாட்டில் என்ன செய்திருக்கிறார்களோ அது, வேறு எந்த நாட்டிலும் செய்யப்படவில்லை.

---

* ஸ்பென்ஸர், ஹெர்பர்ட் (1820—1903) டெர்பியில் இருந்த ஒரு பள்ளி ஆசிரியரின் மகன். சில வருடங்கள் சிவில் பொறியியல் வல்லுனராக வேலை பார்த்தார். 1851–இல் அவருடைய முதல் நூலான 'சமூகப் புள்ளி விவரம்' வெளியாகியது. பின்பு 'மனத்தத்துவம் பற்றிய கோட்பாடுகள்' என்ற அவரது நூல் 1853–இல் பிரசுரமாகியது. டார்வின் பரிணும வாதத்தை அது முற்கூட்டியே அறிவித்தது. 'சமஷ்டி தத்துவத்தின் முறை' என்ற நூல் பத்துத் தொகுதிகளாக 1860–இல் வெளியாகி 1896-இல் முடிவுற்றது.

† மில், ஜான் ஸ்டுவர்ட் (1806—1873) தத்துவ விஷயமாகப் பிரச்னைகளை ஆராய்ந்த நூல்கள் பலவற்றின் ஆசிரியரெனப் புகழ் பெற்றவர். இவர் எழுதியுள்ள நூல்களுள் சிறப்பானவை: 'பொருளியல் பற்றிய கோட்பாடுகள்', 'சுதந்திரம் பற்றிய கட்டுரை', 'உபயோக வாதம்.'

ஆகையால் நாம் அவர்களுடைய ஸ்தாபனங்களை இங்கே புகுத்துவது சரியானதே யாகும். ஆனால், இப்பொழுது உங்கள் கருத்தை அறிய விரும்புகிறேன்.

ஆசிரியர் : பொறுமையுடன் இருப்பது அவசியந்தான். விவாதத்தின் போக்கிலேயே என்னுடைய கருத்துக்களும் ஒவ்வொன்றாக வெளிப்படும். சுயராஜ்யத்தின் உண்மையான தன்மையை அறிவது உங்களுக்கு எவ்வளவு எளிதாயிருக்கிறதோ அவ்வளவு அதை அறிந்துகொள்ளுவது எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. ஆகையால், நீங்கள் எதைச் சுயராஜ்யம் என்கிறீர்களோ அது உண்மையான சுயராஜ்யம் அல்ல என்பதைக் காட்ட முயல்வதுடன் நான் தற்சமயம் திருப்தியடைகிறேன்.

# அத்தியாயம் 5

# இங்கிலாந்தின் நிலைமை

வாசகர்: அப்படியானால் நாம் பின்பற்றுவதற்கு ஆங்கில அரசாங்க முறை விரும்பத்தக்கதோ, தகுதியானதோ அல்ல என்று நீங்கள் கூறுவதிலிருந்து அனுமானிக்கிறேன்.

ஆசிரியர்: உங்கள் அனுமானம் நேரிதே. இங்கிலாந்தின் இன்றைய நிலைமை இரங்கத்தக்கது. அந்த நிலை இந்தியாவுக்கு என்றுமே ஏற்பட்டுவிடக் கூடாது என்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன். பார்லிமெண்டுகளுக்கெல்லாம் அன்னை என்று நீங்கள் கருதும் பார்லிமெண்டு, ஒரு மலடி போன்றும், விபசாரி போன்றும் இருக்கிறது. இது சற்றுக் கடுமையான சொற் பிரயோகமே; ஆனாலும், அதற்கு முற்றிலும் பொருந்தும். அந்த பார்லிமெண்டு, தானாகவே ஒரு நல்ல காரியத்தைக்கூட இதுவரை செய்ததில்லை. இதனாலேயே அதை ஒரு மலட்டுப் பெண்ணுக்கு ஒப்பிட்டேன். வெளியிலிருந்து வரும் வற்புறுத்தலினாலல்லாது அது ஒன்றுமே செய்ய முடியாது என்பது அந்தப் பார்லிமெண்டின் இயற்கையான நிலைமையாக இருந்து வருகிறது. அடிக்கடி மாறும் மந்திரிகளின் ஆதிக்கத்தின்கீழ் அது இருந்து வருவதால் அது ஒரு விபசாரியைப் போன்றது. இன்று அது ஸ்ரீ ஆஸ்குவித்தின்*கீழ் இருக்கும். நாளைக்கு ஸ்ரீ பால்போரின்† கீழ் இருக்கும்.

வாசகர்: இதை நீங்கள் ஏளனக் குறிப்பாகக் கூறியிருக்கிறீர்கள். 'மலட்டுப் பெண்' என்று கூறுவது பொருத்தமானதல்ல. மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் பார்லிமெண்டு, மக்களின்

---

* ஆஸ்குவித், ஹெர்பர்ட் ஹென்றி (1852—1928)-முதலாவது ஆக்ஸ்போர்டு எர்ல். லிபரல் கொள்கையுடைய அரசியல்வாதி. 1892—1895 வரை கிளாட்ஸ்டனின் மந்திரி சபையில் உள்நாட்டு மந்திரியாக இருந்தார். காம்பெல்–பான்னர்மன் ஆட்சியில் பொக்கிஷ மந்திரியாக இருந்தார். முதிய வயதினருக்குப் பென்ஷன் வழங்கும் முறையின் முதல் கட்டத்தை ஆரம்பித்தவர். 1808-இல் பிரதம மந்திரியாக ஆனார். 1916-வரை அந்தப் பதவியிலேயே இருந்தார். லிபரல் கட்சியின் தலைவர் பதவியை 1926-இல் ராஜிநாமா செய்தார்.

† பால்போர், ஆர்தர் ஜேம்ஸ் (1848—1930) பிரிட்டிஷ் அரசியல் நிபுணர்; அறிஞர்; தத்துவஞானி. 1874-இல் கன்ஸர்வெடிவ் கட்சியின் அங்கத்தினராகப் பார்லிமெண்டில் இருந்தார். 1902-லிருந்து 1907 வரை முதன் மந்திரியாக இருந்தார். அயர்லாந்தின் முக்கிய மந்திரியாகவும், கடற்படையின் முதல் லார்டாகவும், வெளிநாட்டு மந்திரியாகவும், பிரிட்டிஷ் கௌன்ஸிலின் தலைவராகவும் இருந்தார். பாலஸ்தீனம் பற்றிய பால்போர் அறிக்கைக்கு இவரே காரணகர்த்தா.

வற்புறுத்தலுக்கு இணங்கியே வேலை செய்து வரவேண்டும்; இதுவே அதன் தன்மை.

ஆசிரியர் : நீங்கள் நினைப்பது தவறு. இன்னும் கொஞ்சம் உட்புகுந்து அதைப் பரிசீலனை செய்து பார்ப்போம். சிறந்தவர்களையே மக்கள் தேர்ந்தெடுக்கிறார்கள் எனக் கருதப்படுகிறது. உறுப்பினர்கள், சம்பளமின்றி வேலை செய்கின்றனர்; ஆகையால், பொது மக்களின் நன்மைக்காகவே சேவை செய்கிறார்கள் என்று கொள்ளவேண்டும். தேர்ந்தெடுக்கும் வாக்காளர்கள் படித்தவர்கள் எனக் கருதப்படுகிறார்கள்; ஆகையால் அவர்கள் தேர்ந்தெடுப்பதில் பொதுவாகத் தவறு செய்துவிட மாட்டார்கள் என்றும் நாம் ஊகித்துக்கொள்ள வேண்டும். அத்தகைய பார்லிமெண்டைத் தூண்டுவதற்கு மகஜர்களோ அல்லது வேறு பலவகைத் தூண்டுதல்களோ அவசியமே இல்லை. அது செய்யும் காரியங்களின் தன்மை நாளுக்கு நாள் மிகத் தெளிவாய் இருக்கும் வகையில் அதன் வேலை இலகுவாய் இருக்கவேண்டும். ஆனால், உண்மையில், அதன் உறுப்பினர்கள் கபடமுள்ளவர்களாயும் சுயநலக்காரர்களாயும் இருக்கிறார்கள் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்படும் சங்கதி. ஒவ்வொருவரும் தம் சிறு நலன்களிலேயே கருத்துடன் இருக்கின்றனர். பயமே அவர்களை நடத்திச் செல்வதற்கு ஏதுவாக இருக்கிறது. முந்திய நாள் உருவாக்குவதை மறுநாள் வேறுவிதமாக அழித்து மாற்றியாகிவிடும். அதன் வேலையில் இது முடிவானது என்று ஒன்றை எடுத்துக்காட்டுவது முடியாத காரியம். பெரிய பிரச்னைகள் விவாதிக்கப்படும்போது அதன் உறுப்பினர் காலை நீட்டிக்கொண்டு தூங்கியும் விடுகின்றனர். சில சமயங்களில் கேட்பவர்கள் சலித்துப் போகும் அளவுக்கு உறுப்பினர்கள் பேசிக்கொண்டே போகிறார்கள். கார்லைல்* அதை, 'உலகத்தின் பேச்சுக்கடை' என்றார். உறுப்பினர்கள் சிந்தித்துப் பாராமலேயே தங்கள் கட்சிக்குச் சாதகமாக வோட்டுப் போடுகிறார்கள். கட்டுப்பாட்டிற்கு இணங்கி அவர்கள் இப்படிச்

---

*கார்லைல், தாமஸ் (1795—1881) எடின்பரோ பல்கலைக் கழகத்தில் கல்வி பயின்றவர். சில ஆண்டுகள் தொல்லை மிகுந்த பள்ளி ஆசிரியராக இருந்துவிட்டு, 1824-இல் லண்டன் வந்து எழுத்துத் துறையில் தீவிரமாக இறங்கினர். ஜேன் வெல்ஷ் என்ற மாதை 1826-இல் மணந்து ஸ்காட்லாந்திற்குத் திரும்பி, சில ஆண்டுகள் கிரேய்கன்புட்டாக்கில் வசித்துவிட்டு 1838-இல் மீண்டும் லண்டன் திரும்பினர். அவருடைய முதல் நூல் 'ஸார்டர் ரிஸார்டஸ்', 1833-இல் வெளியாகியது. 1837-இல் லண்டனில் பல பிரசங்கங்கள் செய்தார். அவருடைய 'பிரெஞ்சுப் புரட்சி', 'அன்றும் இன்றும்', 'ஆலிவ் க்ராம்வெல்லின் வாழ்க்கையும் கடிதங்களும்', 'பிரடரிக் தி கிரேட்' என்ற நூல்கள் சிறப்பு மிக்கவை.

செய்யவேண்டி இருக்கிறது. எவரேனும் ஓர் உறுப்பினர் தப்பித் தவறி, சுயேச்சையாக வோட்டுப் போட்டுவிட்டாரானல், கட்சியைவிட்டுப் பிரிந்தவராக அவர் கருதப்படுகிருர். பார்லிமெண்டு வீணுக்கி வரும் பணத்தையும் நேரத்தையும் சில நல்லவர்களிடம் ஒப்படைத்தால், ஆங்கில நாடு இன்னும் அதிக உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கும். அந்த தேச மக்கள் அதிகச் செலவு செய்து நடத்தும் ஒரு பொம்மைக் கூத்து இந்தப் பார்லிமெண்டு. இக்கருத்துக்கள், எந்தவிதத்திலும் என்னுடைய சொந்தக் கருத்துக்கள் மாத்திரம் அல்ல. சில ஆங்கில அறிஞர்களும் இதையே கூறியிருக்கிருர்கள். உண்மையான கிறிஸ்தவர் எவரும் அதில் உறுப்பினராக இருக்கமுடியாது என்று சமீபத்தில் ஒரு பார்லிமெண்டு உறுப்பினரே கூறியிருக்கிருர். மற்றுமொருவர், அது ஒரு குழந்தை என்ருர். எழுநூறு ஆண்டுகளாக இருந்து வந்தும் அது இன்னும் குழந்தையாகவே இருக்கிறதென்ருல், அது என்றுதான் குழந்தைப் பருவத்திலிருந்து மாறப்போகிறதோ?

வாசகர் : என் சிந்தனை வேலை செய்யும்படி நீங்கள் தூண்டிவிட்டீர்கள். நீங்கள் கூறுவதையெல்லாம் உடனே ஒப்புக்கொண்டு விடுவேன் என என்னை நீங்கள் எதிர்பார்க்க முடியாது. முற்றிலும் புதுமையான கருத்துக்களை நீங்கள் தெரிவித்திருக்கிறீர்கள், அவற்றை நான் ஜீரணித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. 'விபசாரி' என்ற அடைமொழியை இனி நீங்கள் விளக்குகிறீர்களா?

ஆசிரியர் : என்னுடைய கருத்துக்களை நீங்கள் உடனே ஒப்புக்கொண்டுவிட முடியாது என்பதுதான் சரி. இப்பிரச்னையைப் பற்றிய நூல்களைப் படித்தால் இதைப்பற்றி நீங்கள் கொஞ்சம் அறிந்துகொள்ள முடியும். பார்லிமெண்டுக்கு உண்மையான யசமானன் கிடையாது. பிரதம மந்திரியின்கீழ் அதன் நடவடிக்கை நிலையானதன்று. ஆனல், ஒரு விபசாரியைச் செய்வதுபோல் அதை அலக்கழிக்கின்றனர். பிரதம மந்திரிக்கோ, பார்லிமெண்டின் நன்மையைவிட தமது அதிகாரத்தில்தான் அதிக சிரத்தை. அவருடைய சக்தியெல்லாம் தம்முடைய கட்சிக்கு வெற்றியைத் தேடுவதிலேயே ஈடுபட்டிருக்கிறது. பார்லிமெண்டு நியாயமானதையே செய்ய வேண்டும் என்பதிலும் அவருக்கு எப்பொழுதுமே அக்கறை கிடையாது. தம் கட்சிக்கு அனுகூலமாகவே பார்லிமெண்டுகள் காரியங்களைச் செய்யும்படி பிரதம மந்திரிகள் செய்திருக்

கிறார்கள் என்பது தெளிவு. இவையெல்லாம் சிந்திக்கத்தக்கவை யாகும்.

வாசகர்: அப்படியானால் இதுவரை நாம் யாரைத் தேச பக்தர்கள் என்றும், யோக்கியமானவர்கள் என்றும் கருதி வந்திருக்கிறோமோ அவர்களையெல்லாம் நீங்கள் உண்மையில் தாக்குகிறீர்கள் அல்லவா?

ஆசிரியர்: ஆம், அது உண்மையே. பிரதம மந்திரிகள் மீது எனக்கு எந்தப் பகைமையும் இல்லை. ஆனால், நான் பார்த்திருப்பவைகளிலிருந்து அவர்களைத் தேசாபிமானிகள் என்று எண்ணமுடியாமல் இருக்கிறது. லஞ்சம் என்று பொதுவாகச் சொல்லப்படுவதை அவர்கள் வாங்குவதில்லை என்பதற்காக அவர்களை யோக்கியர்கள் என நினைப்பதாயின், அவர்கள் யோக்கியர்கள்தாம். ஆனால், வெளிக்கு வராத பல தூண்டுதல்களுக்கு இவர்கள் உடன்பட்டுவிடுகிறார்கள். தங்கள் காரியங்களைச் சாதித்துக்கொள்ளுவதற்காகக் கௌரவப் பட்டங்களை மக்களுக்கு லஞ்சமாகக் கொடுக்கின்றனர். அவர்களிடம் உண்மையான நேர்மையோ அல்லது மனச்சாட்சியோ கிடையாது என்று சொல்ல நான் தயங்கமாட்டேன்.

வாசகர்: பார்லிமெண்டைக் குறித்து நீங்கள் இவ்வித அபிப்பிராயம் கூறுவதால், ஆங்கில மக்களின் ஆட்சியைப் பற்றியும், உங்கள் கருத்தை அறிவதற்காக அம்மக்களைப் பற்றியும் நீங்கள் சொல்லுவதைக் கேட்க விரும்புகிறேன்.

ஆசிரியர்: ஆங்கில வாக்காளர்களுக்கு, அவர்களுடைய பத்திரிகைகள்தான் வேதவாக்கு. அப்பத்திரிகைகளைக் கொண்டே அவர்கள் ஒரு முடிவுக்கு வருகின்றனர். அப்பத்திரிகைகளோ. எப்பொழுதுமே யோக்கியமானவையல்ல. ஒரே விஷயத்தைக் குறித்து, பல பத்திரிகைகளும், அவை எந்தக் கட்சியின் சார்பாக நடத்தப்படுகின்றனவோ, அதற்கு ஏற்றபடி, வெவ்வேறு விதமாக வியாக்கியானம் செய்கின்றன. ஒரு பெரிய ஆங்கிலேயரைக் குறித்து ஒரு பத்திரிகை, யோக்கியப் பொறுப்புக்கு உதாரண புருஷர் என்று கூறும். மற்றொரு பத்திரிகையோ, அவரையே அயோக்கியர் என்று சொல்லும். இந்த வகைப் பத்திரிகைகளைப் படிக்கும் மக்களின் நிலை எப்படி இருக்கும்?

வாசகர்: இதை நீங்கள் விவரிக்க வேண்டும்.

ஆசிரியர்: இம்மக்கள் அடிக்கடி தங்கள் கருத்தை மாற்றிக்கொண்டு விடுகிறார்கள். ஏழு ஆண்டுகளுக்கு ஒரு முறை

மாற்றிக்கொண்டு விடுகிருர்கள் என்று சொல்லப்படுகிறது. இக் கருத்துக்கள் கடிகாரத்தின் பெண்டுலம்போல அப்பக்கமும் இப்பக்கமுமாக ஊசலாடிக்கொண்டே இருக்கும்; எப்பொழுதும் நிலைத்து இருப்பதில்லை. நல்ல பேச்சாளர் அல்லது தங்களுக்கு விருந்துகள், வரவேற்புக்கள் அளிப்பவர் களின் பின்னுலேயே அம்மக்கள் போய்க்கொண்டிருப்பார்கள். அம்மக்கள் எவ்வாருே அவ்வாறே அவர்கள் பார்லிமெண்டும். ஆனல், அவர்களிடம் பலமாக ஊன்றிப்போன ஒரு குணம் மாத்திரம் நிச்சயமாக இருந்துவருகிறது. தங்கள் நாடு அழிந்து போவதற்கு இடம் தரவே மாட்டார்கள். எவரேனும் கெட்ட எண்ணத்துடன் தங்கள் நாட்டை நோக்கிவிட்டால், அவனுடைய கண்களைப் பிடுங்கிவிடுவார்கள். ஆனல், இதனல் அம்மக்களிடம் எல்லா உயர் குணங்களும் இருக்கின்றன என்ருே, அவர் களைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்ருே ஆகிவிடாது. இந்தியா, இங்கிலாந்தைப்போல நடப்பதென்று ஆரம்பித்து விட்டால் இந்தியா அழிவுறும் என்பது என்னுடைய உறுதியான அபிப்பிராயம்.

வாசகர்: இங்கிலாந்தின் இந்த நிலைக்கு என்ன காரணம் என்கிறீர்கள்?

ஆசிரியர்: ஆங்கில மக்களிடம் இருக்கும் எந்த ஒரு குறிப் பிட்ட தவறும் இதற்குக் காரணமல்ல. ஆனல், இந்த நிலைமைக் குக் காரணம், நவநாகரிகம். அந்த நாகரிகம் என்பது பெயரள வில்தான். இதனல் ஐரோப்பிய நாடுகள் நாளுக்கு நாள் உயர்வை இழந்து நாசம் அடைந்து வருகின்றன.

## அத்தியாயம் 6

# நாகரிகம்

வாசகர்: நாகரிகம் என்று எதைச் சொல்லுகிறீர்கள் என்பதை இப்பொழுது நீங்கள் விளக்கிக் கூறவேண்டியிருக் கிறது.

ஆசிரியர்: நான் என்ன நினைக்கிறேன் என்பதல்ல இதில் விஷயம். நாகரிகம் என்ற பெயரில் இருக்கும் அதை, நாகரிகம் என்று சொல்லவே பல ஆங்கில எழுத்தாளர்கள் மறுக்கின்றனர். இது சம்பந்தமாகப் பல நூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன. நாகரிகத்தின் தீமைகளிலிருந்து தேசமக்களை உய்விக்கச் சங்கங் களும் அமைக்கப்பெற்றிருக்கின்றன. ஒரு பெரிய ஆங்கில எழுத் தாளர், 'நாகரிகம், அதன் காரணமும் பரிகாரமும்' என்ற நூல் ஒன்றை எழுதியிருக்கிறார். இதை ஒரு நோய் என்று அந்நூலில் சொல்லுகிறார்.

வாசகர்: பொதுவாக இதை நாம் ஏன் அறிவதில்லை?

ஆசிரியர்: இதற்குப் பதில் மிக எளிதானது. தங்களுக்கு எதிராகவே விவாதித்துக்கொள்ளும் மக்களையே நாம் காண்ப தில்லை. நவநாகரிக போதையில் இருப்பவர்கள் அதற்கு விரோத மாக எழுதமாட்டார்கள். அவர்களுக்கு அக்கறையெல்லாம் அதற் குச் சாதகமான ஆதாரங்களையும் வாதங்களையும் கண்டுபிடிப்ப திலேயே இருக்கும். தங்களையும் அறியாமல், அது உண்மை என்று நம்பிக்கொண்டே இதைச் செய்கிறார்கள். ஒருவர் கனவு கண்டுகொண்டிருக்கும்போது தம் கனவை உண்மையென்று நம்புகிறார். தூக்கத்திலிருந்து விழித்து எழுந்த பிறகே அவருக்கு இந்த ஏமாற்றம் போகிறது. நாகரிகத்தின் மயக்கத்தில் உழன்று கொண்டிருப்பவர், கனவு கண்டுகொண்டிருப்பவரைப் போன் றவர். நாம் சாதாரணமாகப் படிப்பவையெல்லாம், நவநாகரிகத் தின் கட்சியை ஆதரிப்பவர் எழுதியவை. சிறந்த அறிவாளி களும், மிக நல்லவர்களில் சிலருங்கூட, இவர்களில் இருக்கிறார் கள் என்பதில் சந்தேகமில்லை. இவர்களுடைய எழுத்துக்கள் நம்மை மயக்கிவிடுகின்றன. இவ்விதம் நாம் ஒவ்வொருவராக அந்தச் சுழலில் சிக்கிக்கொண்டுவிடுகிறோம்.

வாசகர்: இது சரியாயிருக்கலாம் என்றே தோன்றுகிறது. இந்த நாகரிகத்தைப்பற்றி நீங்கள் என்ன படித்திருக்கிறீர்கள்,

எண்ணுகிறீர்கள் என்பதைப்பற்றி எனக்குக் கொஞ்சம் கூறு வீர்களா?

ஆசிரியர்: 'நாகரிகம்' என்ற சொல்லைக் கொண்டு எந்தவித மான நிலைமைகள் விவரிக்கப்படுகின்றன என்பதை நாம் முதலில் கவனிப்போம். இதில் வாழ்கிறவர்கள் உடலின்பம் ஒன்றையே வாழ்க்கையின் லட்சியமாகக் கருதுகிறார்கள் என்பதில்தான் இதன் உண்மையான பரீட்சை இருக்கிறது. சில உதாரணங் களைக் கவனிப்போம். இன்று ஐரோப்பிய மக்கள், நூறு ஆண்டு களுக்கு முன்னால் இருந்ததைவிட நேர்த்தியான வீடுகளில் வசிக் கிறார்கள். இது நாகரிகத்தின் ஒரு சின்னமாகக் கருதப்படுகிறது. இதுவும் உடல் இன்பத்தை வளர்ப்பதற்கான காரியமே. தொன் மையில் இவர்கள் தோலாடைகளே அணிந்து இருந்தனர்; ஈட்டி களை ஆயுதங்களாகக் கொண்டிருந்தனர். இன்றோ, நீளமான கால்சட்டைகளை உடுத்துகின்றனர். தங்கள் உடலை அழகுபடுத் திக்கொள்ளுவதற்காகப் பலவகையான உடைகளை அணிகின் றார்கள். ஈட்டிகளுக்குப் பதிலாக, ஐந்து அல்லது அதற்கு அதிக மான தோட்டாக்கள் வைக்கக்கூடிய கைத்துப்பாக்கிகள் வைத் திருக்கின்றனர். இத்தகைய ஆடைகளையும் பூட்ஸுகளையும் அணிந்து பழக்கமில்லாத ஒரு நாட்டினர், ஐரோப்பிய உடையை அணிய ஆரம்பித்துவிட்டால், அவர்கள் காட்டுமிராண்டித்தனத்தி லிருந்து நாகரிகத்தை அடைந்துவிட்டதாகக் கருதப்படுகிறது. முன்பெல்லாம் ஐரோப்பாவில் மக்கள் உடலுழைப்பைக் கொண்டே உழுது வந்தார்கள். இப்பொழுதோ, பெரும் பரப் பான நிலத்தை நீராவி இயந்திரத்தைக் கொண்டு உழுது ஒரு மனிதன் பெருநிதி திரட்டிவிடலாம். இது நாகரிகத்திற்கு அடை யாளம் என்று சொல்லப்படுகிறது. முன்பெல்லாம் ஒரு சிலரே உயர்ந்த நூல்களை எழுதினர். இப்பொழுதோ, எவரும் எதை யும் எழுதி அச்சடித்து மக்கள் மனத்தில் விஷத்தைப் புகட்டிவிடு கின்றனர். அந்தக் காலத்தில் வண்டிகளில் பிரயாணஞ் செய்து வந்தனர். இன்றோ, நானூறுக்கும் அதிகமான மைல் வேகத்தில் ரெயிலிலும் ஆகாயத்திலும் பறக்கிறார்கள். இதுவே நாகரிகத் தின் உச்சம் என்று எண்ணப்படுகிறது. மனிதன் முன்னேற்றம் அடைய ஆகாயக் கப்பல்களில் பிரயாணம் செய்ய முடியும், சில மணி நேரத்தில் உலகத்தின் எப்பகுதிக்கும் போய்விடலாம் என் கிறார்கள். மனிதன் தன்னுடைய கைகளையும் கால்களையும் உபயோகிக்க வேண்டியதில்லை. ஒரு பித்தானை அழுத்தினால் போதும்; அவர்களுக்கு வேண்டிய ஆடைகள் பக்கத்தில் வந்து

நிற்கும். இன்னும் ஒரு பித்தானை அழுத்தினுல் அவர்களுக்குப் படிக்கப் பத்திரிகைகள் வரும். இன்னும் ஒன்றை அழுத்தினுல், ஒரு மோட்டார் வண்டி வந்து காத்துக்கொண்டிருக்கும். பல ரகச் சுவைமிக்க உணவும் வந்துவிடும். எல்லாவற்றையும் இயந்திரமே செய்துவிடும். முன்பெல்லாம் ஒருவருக்கொருவர் சண்டையிடும்போது, தங்களுக்குள் இருக்கும் உடல் வலுவின் அளவைக் கவனிப்பார்கள். இன்ருே, ஒருவன் ஒரு குன்றின்மீது பீரங்கியுடன் இருந்துகொண்டு சுட்டு ஆயிரக்கணக்கானவர்களைக் கொன்றுவிட முடியும். இதுதான் நாகரிகம். முன்பு மனிதர் தங்களுக்குப் பிரியமான வரையில் திறந்த வெளியில் இருந்து வேலை செய்துவந்தனர். இப்பொழுதோ, தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும் வேலை நடப்பதற்காக ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் ஒன்று கூடுகிருர்கள். இவர்கள் நிலைமை மிருகங்களினும் மோசமாக இருக்கின்றது. இவர்கள் ஆபத்தான வேலைகளில் தம் உயிருக்கு நேரும் ஆபத்துக்களையும் பொருட்படுத்தாமல், லட்சாதிபதிகளின் நன்மைக்காக உழைக்கவேண்டியவர்களாக இருக்கிருர்கள். முன்ணுலெல்லாம் உடல் பலத்தைக் கொண்டு கட்டாயப்படுத்தி மனிதர் அடிமையாக்கப்பட்டனர். இப்பொழுதோ பணம்; பணத்தினுல் வாங்கக்கூடிய ஆடம்பர வாழ்க்கை ஆசையைக் காட்டி இப்பொழுது அடிமைகளாக்கப்படுகின்றனர். மக்கள் கனவில்கூடக் கண்டறியாத நோய்களெல்லாம் இப்பொழுது இருக்கின்றன. இந்த நோய்களுக்குப் பரிகாரங்களைக் கண்டுபிடிக்க ஒரு பட்டாளமே போல் டாக்டர்கள் நியமிக்கப்பட்டிருக்கின்றனர். இதனுல் வைத்திய சாலைகளும் அதிகமாயின. இதுவே, நாகரிகத்திற்கு அடையாளம்! முன்பெல்லாம் கடிதங்களைக் கொண்டுபோக ஆட்களை அமர்த்த வேண்டியிருந்ததோடு இதற்குச் செலவும் அதிகமாயிற்று. இன்ருே ஓர் அணுச் செலவில் ஒரு கடிதம் எழுதி எவனும் தன் தோழனைத் திட்டிவிடலாம். இதே செலவில் ஒருவர் தமது வந்தனத்தையும் அனுப்பமுடியும் என்பதும் உண்மையே. வீட்டில் தயாரித்த ரொட்டி, காய்கறி அடங்கிய இரண்டு அல்லது மூன்று வேளை சாப்பாடே முன்பெல்லாம் மக்களுக்கு உண்டு. இப்பொழுதோ, இரண்டு மணி நேரத்திற்கு ஒரு முறை ஏதாவது அவர்களுக்குச் சாப்பிட வேண்டியிருக்கிறது. இதனுல் அவர்களுக்கு வேறு வேலை செய்வதற்கு நேரமே கிடையாது. இதற்கும் அதிகமாக நான் என்ன கூறவேண்டும்? இவையெல்லாம் சில ஆதாரபூர்வமான நூல்களிலிருந்து நிச்சயமாகத் தெரிந்துகொள்ளலாம். இவையே நாகரிகத்திற்கு உண்மையான பரீட்சைகள். இவற்

றிற்கு எதிரிடையாக யாராவது பேசினல், அவர்கள் அறிவிலிகள் என்று தெரிந்துகொள்ளுங்கள். ஒழுக்கத்தைப் பற்றியோ அல்லது மதத்தைக் குறித்தோ நாகரிகம் அக்கறை கொள்ளுவது இல்லே. இந்த நாகரிகத்திற்காகப் பரிந்துகொண்டு பேசுகிறவர்கள், மதத்தைப் போதிப்பது தங்கள் வேலேயல்ல என்று அமைதியோடு கூறுகின்றனர். மூட நம்பிக்கையின் வளர்ச்சியே மதம் என்றும் சிலர் கருதுகின்றனர். மற்றவர்களோ, மத வேஷம் போட்டுக்கொண்டு ஒழுக்கத்தைப்பற்றிப் பிதற்றுகிருர்கள். ஆனல், ஒழுக்கத்தின் பெயராலேயே ஒழுக்கக்கேடு போதிக்கப் படுகிறது என்ற முடிவுக்கு இருபது ஆண்டு அனுபவத்திற்குப் பிறகு வந்திருக்கிறேன். நான் மேலே விவரித்திருப்பவற்றில் ஒழுக்கத்திற்குத் தூண்டுவது எதுவும் இல்லே என்பதை ஒரு குழந்தைகூட அறிந்துகொள்ளலாம். உடலுக்குச் சௌகரியங்களேப் பெருக்குவதற்கே நாகரிகம் முற்படுகிறது. ஆனல், இதைச் செய்வதில்கூட அது முழு மோசமாகத் தவறிவிடுகிறது.

இந்த நாகரிகம் மதத்திற்கு எதிரானது. ஐரோப்பிய மக்களிடையே அதன் பிடிப்பு அதிகம் இருப்பதால், அதில் இருப்பவர்கள் அரைப் பைத்தியங்களாகவே தோன்றுகின்றனர். உண்மையான உடல் வன்மையோ அல்லது தைரியமோ அவர்களுக்குக் கிடையாது மயக்கந் தரும் மதுபானங்களேக் கொண்டு வலிவை வைத்துக்கொண்டிருக்கின்றனர். தனிமையில் அவர்களால் சந்தோஷமாகவே இருக்கமுடியாது. குடும்பங்களில் ராணிகளாக இருக்கவேண்டிய பெண்கள், தெருக்களில் அலேகிருர்கள் அல்லது தொழிற்சாலேகளில் அடிமைகள் ஆகிவிடுகின்றனர். அற்பவருமானத்திற்காக இங்கிலாந்தில் மாத்திரம் ஐந்து லட்சம் பெண்கள் தொழிற்சாலேகளிலும், அவை போன்ற மற்ற ஸ்தாபனங்களிலும் சங்கடமான நிலேமையில் உழன்று வருகிருர்கள். பெண்களுக்கு வாக்குரிமை வேண்டும் என்ற போராட்டம் நாளுக்கு நாள் வலுவடைந்துகொண்டு போவதற்கு இந்த மோசமான நிலேமையும் ஒரு காரணமாகும்.

பொறுத்துக்கொண்டிருந்தால் போதும், இந்த நாகரிகம் தன்னேத்தானே அழித்துக்கொண்டுவிடும். அத்தகைய தன்மை உண்டு இதற்கு. முகம்மது நபியின் உபதேசங்களின்படி, இதை ஒரு சைத்தான் நாகரிகம் என்றே கருதவேண்டும். இதைப் பாவம் நிறைந்த யுகம் என்கிறது, ஹிந்து மதம். இதைப்பற்றிய சரியான விளக்கத்தைக் கூற என்னல் முடியாது. இது ஆங்கில மக்களின் ஜீவ உறுப்பையே அரித்துக் கொண்டிருக்கிறது.

இதை எப்படியாவது தடுத்துவிட வேண்டும். உண்மையில் பார்லி மெண்டுகள் அடிமைத்தனத்தின் சின்னங்களாக இருக்கின்றன. இதைப்பற்றிப் போதிய அளவு நீங்கள் சிந்திப்பீர்களானால், நீங் களும் இதே கருத்துக்கு வருவதோடு ஆங்கில மக்கள் மீது குறை கூறுவதையும் விட்டுவிடுவீர்கள். அவர்களிடம் நாம் அனுதாபப்படவே வேண்டும். அவர்கள் புத்திசாலித்தனமுள்ள மக்கள். எனவே, தீமைகளைப் போக்கிக்கொண்டு விடுவார் கள் என்றே நம்புகிறேன். எதையும் துணிவுடன் செய்யும் இயல்புள்ளவர்கள்; சிரமப்பட்டு உழைக்கக் கூடியவர்கள். அவர்களுடைய சிந்தனைப் போக்கு இயல்பாகவே ஒழுக்கக் கேடானது அன்று. அவர்கள் கெட்ட உள்ளம் படைத்தவர் களும் அல்ல. ஆகையால், அவர்களை நான் மதிக்கிறேன். நாகரி கம், போக்கமுடியாத ஒரு நோய் அல்ல. ஆனால், ஆங்கில மக்களுக்கு இப்பொழுது அந்நோய் பீடித்திருக்கிறது என்பதை மறந்துவிடக்கூடாது.

## அத்தியாயம் 7

# இந்தியாவை இழந்தது ஏன்?

வாசகர்: நாகரிகத்தைப்பற்றி வெகுவாகக் கூறினீர்கள். நான் சிந்திக்கும்படி செய்வதற்கு அது போதுமானது. ஐரோப்பிய நாடுகளிலிருந்து நான் அனுசரிக்கவேண்டியவை யாவை, நான் தவிர்க்க வேண்டியவை யாவை என்பவைகளை நான் அறியேன். ஆனால், ஒரு கேள்வி மாத்திரம் என் உதட்டில் உடனே எழுகிறது. நாகரிகம் ஒரு நோய் என்றால், அது இங்கிலாந்தைப் பற்றியிருக்கிறதெனின், இந்தியாவைக் கைப்பற்றிக் கொள்ள அதனால் எப்படி முடிந்தது? கைப்பற்றிய இந்தியாவை வைத்துக் கொண்டிருக்கவும் அதனால் எப்படி முடிகிறது?

ஆசிரியர்: உங்கள் கேள்விக்குப் பதில் சொல்லுவது அவ்வளவு கஷ்டமானதல்ல. சுயராஜ்யத்தின் உண்மையான தன்மை இன்னதென்பதைக் குறித்து இப்பொழுது நாம் பரிசீலனை செய்யமுடியும். ஏனெனில், அந்தக் கேள்விக்கு நான் இன்னும் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது என்பதை நான் அறிவேன். என்றாலும், உங்களுடைய முந்திய கேள்வியை இப்பொழுது எடுத்துக்கொள்ளுகிறேன். ஆங்கிலேயர்கள் இந்தியாவை எடுத்துக்கொள்ளவில்லை; நாமே அதை அவர்களுக்குக் கொடுத்திருக்கிறோம். அவர்கள், தங்களுடைய பலத்தின் காரணமாக இந்தியாவில் இருந்து வரவில்லை; ஆனால், நாம் அவர்களை வைத்துக் கொண்டிருப்பதனாலேயே இருக்கிறார்கள். இப்படி சொல்லுவதற்கு ஆதாரங்கள் இருக்கின்றனவா என்பதையும் கவனிப்போம். அவர்கள் ஆரம்பத்தில் நம் நாட்டிற்கு வியாபாரம் செய்வதற்காகவே வந்தார்கள். கம்பெனி பகதூரின்* அதிகாரத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். அதைப் பகதூராக்கியது யார்? தங்கள் ஆட்சியை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் அச்சமயத்தில் அவர்களுக்குக் கொஞ்சங்கூட இல்லை. கம்பெனி அதிகாரிகளுக்கு உதவியவர்கள் யார்? அவர்களுடைய காசைப் பார்த்து மயங்கி விட்டவர்கள் யார்? அவர்களுடைய சாமான்களை வாங்கியவர் யார்? இவற்றையெல்லாம் செய்தது

---

* கம்பெனி பஹதூர்: கிழக்கு இந்திய கம்பெனிக்கு வழங்கும் ஒரு கௌரவப் பெயர்; கம்பெனி ஆட்சி என்பது இதன் பொருள்.

நாமே என்று சரித்திரம் சாட்சியங் கூறுகிறது. திடீரென்று பணக்காரர்கள் ஆகிவிடுவதற்காகக் கம்பெனியின் அதிகாரிகளை நாம் தாராளமாக வரவேற்றோம். அவர்களுக்கு உதவியும் செய்தோம். பங்க் உட்கொள்ளும் வழக்கம் எனக்கு உண்டென்று வைத்துக்கொள்ளுவோம். அதை விற்பவர் அதை எனக்குக் கொடுத்தால், குற்றம் என்னுடையதா அல்லது அவருடையதா? விற்பவர்மீது குற்றங் கூறுவதனால் என் பழக்கத்தை விட்டுவிட என்னால் முடியுமா? ஒரு குறிப்பிட்ட சில்லறை வியாபாரியை விரட்டிவிட்டால் அந்த இடத்தை மற்றொரு வியாபாரி பிடித்துக் கொள்ள மாட்டாரா? இந்தியாவின் உண்மையான ஊழியராகவுள்ள ஒருவர், இவ்விஷயத்தின் அடிப்படையைக் கவனிக்க வேண்டும். அதிகமாகச் சாப்பிட்டு விட்டதனால் எனக்கு அஜீரணம் ஏற்பட்டதென்றால், தண்ணீரின்மீது குற்றம் கூறினால் அது நிச்சயமாகத் தீர்ந்துவிடுமா? நோய்க்குக் காரணம் என்ன என்பதை ஆராய்பவனே சரியான வைத்தியன். இந்தியாவின் நோயைத் தீர்க்க வேண்டிய வைத்தியர் நீங்களே என்று வைத்துக்கொண்டால், அந்த நோயின் உண்மையான காரணத்தை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும்.

வாசகர்: நீங்கள் சொல்லுவது சரி, உங்கள் முடிவுகளை நான் உணரும்படி செய்வதற்கு நீங்கள் அதிகமாக விவாதிக்கவேண்டிய அவசியம் இல்லை என்றே நான் இப்பொழுது நினைக்கிறேன். மேற்கொண்டும் உங்களுடைய கருத்துக்களை அறிய நான் அதிக ஆர்வத்துடன் இருக்கிறேன். நாம் இப்பொழுது மிகவும் சுவையான விஷயத்தைக் கவனித்து வருகிறோம். ஆகையால் உங்கள் கருத்தைப் புரிந்துகொள்ள முயற்சி செய்வேன். எனக்குச் சந்தேகம் இருக்கும் இடங்களில் உங்களைத் தடுத்துக் கேட்பேன்.

ஆசிரியர்: உங்களுக்கு அதிக உற்சாகம் இருந்தபோதிலும் மேலும் போகப் போக நமக்குள் அபிப்பிராய பேதங்களும் ஏற்படும் என்று அஞ்சுகிறேன். என்னைத் தடுத்துக் கேட்கும் போது மாத்திரமே நான் விவாதிப்பேன். ஆங்கிலேய வியாபாரிகளை நாம் உற்சாகப்படுத்தியதனாலேயே இங்கே ஆதிக்கம் பெற அவர்களால் முடிந்தது என்பதை முன்பே கவனித்தோம். நம் ராஜாக்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு கம்பெனி பகதூர்களின் உதவியை நாடினார்கள். அந்த வர்த்தக ஸ்தாபனம், வாணிபம், போர் இரண்டிலும் திறமை வாய்ந்தது. ஒழுக்கத்தைப்பற்றிய தடை என்பது எதுவும் அதற்குக் கிடை

யாது. அதன் லட்சியமெல்லாம் வியாபாரத்தைப் பெருக்கிப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்பதே. அது நமது உதவியை ஏற்றுக்கொண்டு பண்டகசாலைகளைப் பாதுகாப்பதற்கென்று ஒரு ராணுவத்தையும் வைத்திருந்தது. நாமும் அதை உபயோகித்துக் கொண்டோம். அப்படியிருக்க, அச்சமயத்தில் நாம் செய்துவிட்ட காரியத்திற்காக ஆங்கிலேயர்கள்மீது குற்றங்கூறிப் பயனில்லை அல்லவா? ஹிந்துக்களுக்கும் முஸல்மான்களுக்கும் சச்சரவும் இருந்து வந்தது. இதுவும் கம்பெனியாருக்குச் சந்தர்ப்பத்தை அளித்தது. இவ்விதம் இந்தியாவின்மீது ஆதிக்கத்தைச் செலுத்தும் வாய்ப்பை நாம் கம்பெனியாருக்கு அளித்துவிட்டோம். ஆகையால் இந்தியா பிடிபட்டுப் போயிற்று என்பதற்குப் பதிலாக ஆங்கிலேயருக்கு நாமே இந்தியாவைக் கொடுத்துவிட்டோம் எனக் கூறுவதே உண்மையானதாகும்.

வாசகர் : இந்தியாவின்மீது ஆதிக்கத்தை வைத்திருக்க அவர்களுக்கு எப்படி முடிகிறது என்பதை இனிக் கூறுவீர்களா?

ஆசிரியர் : எந்தக் காரணங்கள் இந்தியாவை அவர்களுக்குக் கொடுத்தனவோ அவை, இந்தியாமீது அவர்கள் ஆதிக்கத்தை வைத்திருக்கவும் செய்கின்றன. இந்தியாவைத் தம் வாளால் வென்று, அதனாலேயே வைத்துக்கொண்டிருப்பதாகச் சில ஆங்கிலேயர்கள் சொல்லுகின்றனர். இந்த இரு கூற்றுக்களும் தவறானவை. இந்தியாவை வைத்திருப்பதற்கு வாள் முற்றும் பயனற்றது. நாமே அவர்களை வைத்துக் கொண்டிருக்கிறோம். கடைக்காரச் சமூகம் இந்த ஆங்கிலேயர்கள் என்று நெப்போலியன்* வருணித்ததாகச் சொல்லப்படுகிறது. அது

---

* நெப்போலியன் போனபார்ட் (1760—1821)-பிரபலமான பிரெஞ்சு வீரர். கார்ஸிகாவில் பிறந்தவர். ராணுவப் பயிற்சி பெற பிரான்சுக்கு வந்து, தம் இருபதாவது வயதில் தளபதியானார். 1794–ஆம் வருடம் இத்தாலியப் போரில் பெயரும் புகழும் எடுத்து ஜெனரல் பதவிக்கு உயர்த்தப்பட்டார். அதற்கு மறு வருடமே சேனாதிபதியாக நியமிக்கப்பட்டார். வெற்றிக்கு மேல் வெற்றி இவருக்குக் கிடைத்தது. ஆஸ்திரியர்களை 1797–இல் முறியடித்து, சிரியாவுக்கும் எகிப்துக்கும் 1798–இல் படை திரட்டிச் சென்று, 1799–இல் பிரெஞ்சு நாட்டிலேயே புகழ் நிரம்பியவராக விளங்கினார். முதல் கான்ஸல் எனத் தம்மையே பிரகடனம் செய்துகொண்டார். 1800-இல் மீண்டும் இத்தாலியில் வெற்றி கிடைத்தது. 1804-இல் பிரெஞ்சு சக்கரவர்த்தியானார். அதற்கு மறு ஆண்டே இங்கிலாந்து, ருஷியா, ஆஸ்திரியா இந்நாடுகளுக்கு எதிராக நின்று ஆஸ்டர்லிட்ஸ், மற்ற இடங்களிலும் அதிசய வெற்றியைக் கண்டார். அதன் பின் அவரே ஐரோப்பாவின் சர்வாதிகாரி என்றும் சொல்லலாம். தம் உடன் பிறந்தவர்களை அரசுப் பதவியில் வீற்றிருக்கச் செய்தார். ருஷியாமீது இவர் படையெடுத்துச் சென்றது படுதோல்வியாக முடிந்தது. துவீபகற்பப் போரும் இவருக்குப் பிரதிகூலமாக இருந்

பொருத்தமான வருணனையே. தங்களிடம் இருக்கும் குடியேற்ற நாடு எதுவாயினும், அதைத் தங்களுடைய வியாபாரத்திற்காகவே வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அதைப் பாதுகாப்பதற்கென்று இருப்பவையே அவர்களுடைய ராணுவமும் கடற்படையும். அப்படிப்பட்ட கவர்ச்சி எதுவும் டிரான்ஸ்வாலிடம் இல்லாது போகவே, ஆங்கிலேயர் அதைத் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக் கொண்டிருப்பது சரியல்ல என்பதைக் காலஞ் சென்ற ஸ்ரீ கிளாட்ஸ்டன்* கண்டார். அது லாபகரமானதாகி விடவே, எதிர்ப்பானது போரில் முடிந்தது. டிரான்ஸ்வால் மீது இங்கிலாந்துக்கு ஆதிபத்திய அதிகாரம் இருக்கிறது என்று ஸ்ரீ சேம்பர்லேன் உடனே கண்டுபிடித்தார். யாரோ ஒருவர், சந்திரனிலும் தங்கம் இருக்கிறதா என்று காலஞ் சென்ற பிரஸிடெண்டு குருகரைக் கேட்டதாகச் சொல்லப்படுகிறது. "சந்திரனில் தங்கம் இருக்கிறது என்று எண்ணுவதற்கேயில்லை; ஏனெனில் அப்படி அதில் தங்கம் இருக்குமானால் ஆங்கிலேயர் அதைப் பிடித்துக் கொண்டிருப்பார்கள்" என்று அவர் பதில் சொன்னாராம். பணம் ஒன்றே அவர்களுக்குத் தெய்வம் என்பதை நினைவில் வைத்துக்கொண்டுவிட்டால் பல பிரச்னைகள் தீர்ந்துவிடும்.

---

தது. 1814-இல் நேச தேசத்தினர் பாரிஸைக் கைப்பற்றியபோது அவர் எல்பா தீவுக்கு ஓடிவிட்டார். மீண்டும் ஒரு படை திரட்டி ஆங்கிலேயர், பிரஷியர்கள் இவர்களுக்கு எதிரே நின்றார். கடைசியில் வாடர்லூ என்ற இடத்தில் 1815-இல் அவர் தோல்வியுற்று, செயின்ட் ஹெலினா என்ற தீவில் ஆறு வருடம் இருந்து உயிர் நீத்தார். 1840-ல் அவருடைய சடலம் பாரிஸுக்குக் கொண்டுவரப்பட்டு பெரியதோர் கல்லறைக்குள் அடக்கம் செய்யப்பட்டது.

* கிளாட்ஸ்டன், வில்லியம் எவார்ட் (1809-1898) – பிரபலமான பிரிட்டிஷ் லிபரல் கட்சி ராஜதந்திரி. லிவர்பூல் வர்த்தகரின் மகனான இவர் 1832-இல் கன்சர்வெடிவ் கட்சி மெம்பராக பார்லிமெண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். லார்டு பீலின் மந்திரிசபையில் 1834-ல் உதவி நிதி மந்திரியானார். அடுத்த ஆண்டு காலனிகள் உதவி மந்திரி பதவி வகித்தார். 1841-இல் உதவி வர்த்தக மந்திரியாக இருந்தார். பிறகு வர்த்தக மந்திரியாக இருந்தார். 1852-இல் பீல் கட்சியிலிருந்து விலகி, கூட்டு மந்திரிசபையில் நிதி மந்திரியானார். 1859-இல் லார்டு பாமர்ஸ்ட்னின் மந்திரி சபையில் நிதி மந்திரியாக இருந்து அவர் இறந்ததும் பார்லிமெண்டில் சர்க்கார் கட்சித் தலைவரானார். 1874-க்குப் பிறகு சிறிது காலம் பதவியிலிருந்தார். பின்னர் பல்கேரிய அட்டுழியங்களைக் குறித்து நாட்டில் பெருங் கிளர்ச்சி செய்து 1880-இல் பெரும்பான்மை பலத்துடன் அதிகாரத்திற்கு வந்து இரண்டாவது முறையாகப் பிரதம மந்திரியானார். 1885-இல் பதவியில் இல்லையாயினும் அடுத்த ஆண்டு மூன்றும் முறையாகப் பிரதம மந்திரியானார். அப்பொழுது அயர்லாந்து சுயாட்சி மசோதாவைக் கொண்டுவந்து பார்லிமெண்டில் தோல்வியுற்றார். பார்லிமெண்டும் கலைக்கப்பட்டுக் கன்சர்வெடிவ்கள் அதிகாரத்திற்கு வந்தனர். 1893-இல் அயர்லாந்து சுயாட்சி இரண்டாவது மசோதாவைக் கொண்டுவந்தார். அது காமன்ஸில் நிறைவேறியது; ஆனால் லார்டுகள் சபை நிராகரித்துவிட்டது. பிறகு ராஜிநாமாச் செய்துவிட்டு பார்லிமெண்டு நடவடிக்கைகளிலிருந்து விலகி 1898 மே 19-ம் தேதி காலமானார்.

இந்தியாவில் ஆங்கிலேயர்களை நாம் வைத்துக்கொண்டிருப்பது, இழிவான நமது சுயநலத்தின் காரணமாகவே என்பதும் உடனே ஏற்படுகிறது. அவர்களுடைய வியாபாரத்தை நாம் விரும்பு கிறோம். தங்களுடைய தந்திரமான முறைகளைக்கொண்டு நமக்கு அவர்கள் திருப்தியளித்து விடுகிறார்கள்; நம்மிடமிருந்து அவர் களுக்கு என்ன வேண்டுமோ அவற்றையும் அடைகின்றனர். இதற்காக அவர்கள் மீது குறைகூறுவது, அவர்களுடைய வலிவை நீடிக்கச் செய்வதாகும். நமக்குள்ளேயே சச்சரவிட்டுக் கொள்ளுவதால் அவர்களுடைய ஆதிக்கத்தை மேற்கொண்டும் பலப்படுத்துகிறோம். மேலே சொன்னதை நீங்கள் ஒப்புக்கொள் ளுவதாயின், ஆங்கிலேயர்கள் வியாபாரத்திற்காகவே இந்தியா வுக்கு வந்தார்கள் என்பது உண்மையாகிறது. அதே காரியத்திற் காகவே இந்தியாவில் இருந்து வருகிறார்கள். அவ்விதம் இருந்து வர நாம் அவர்களுக்கு உதவி செய்து வருகிறோம். அவர்களுடைய துப்பாக்கிகளும் தோட்டாக்களும் முற்றிலும் பயனற்றவை. இந் தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கு ஒன்றை நினைவூட்டுகிறேன். ஜப்பானில் பறந்து கொண்டிருப்பது பிரிட்டிஷ் கொடியேயன்றி ஜப்பானியர் கொடியன்று. தங்களுடைய வியாபாரத்திற்காக ஆங்கிலேயர் ஜப்பானுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு இருக் கின்றனர். முடிந்தால், தங்கள் வியாபர்ரத்தை அந்த நாட்டில் அதிகரித்துக்கொண்டு விடுவார்கள் என்பதையும் நீங்கள் பார்க் கலாம். உலகம் முழுவதையுமே தங்கள் சாமான்களை விற்பதற்கு மார்க்கெட்டாகச் செய்து கொண்டுவிட வேண்டும் என்றே விரும்புகிறார்கள். அப்படிச் செய்துகொண்டுவிட அவர்களால் முடியாது என்பது உண்மையே. ஆனால், இதில் தவறு அவர்களு டையதாக இராது. அந்த லட்சியத்தை அடைவதற்குத்தங்களால் இயன்ற எல்லா வழிகளையும் அவர்கள் பார்த்தே தீருவார்கள்.

## அத்தியாயம் 8

# இந்தியாவின் நிலைமை

வாசகர்: ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஏன் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது இப்பொழுது புரிகிறது எனக்கு. நம் நாட்டின் நிலைமை என்ன என்பதைப்பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தையும் அறிய விரும்புகிறேன்.

ஆசிரியர்: அது வருந்தத்தக்க ஒரு நிலைமை. இதை நினைக்கும்போது என் கண்களில் நீர் வருகிறது; என் தொண்டையும் உலர்ந்துவிடுகிறது. என் உள்ளத்தில் இருப்பதைப் போதிய அளவு விவரித்துச் சொல்ல என்னால் இயலுமா என்பதில் எனக்கே ஐயம் தோன்றுகிறது. பிரிட்டிஷ் காலின் கீழல்ல, ஆனால், நவநாகரிகத்தின் கீழ் இந்தியா நசுக்கப்பட்டுக் கிடக்கிறது என்பதே என்னுடைய திடமான கருத்து. அந்த அரக்கனின் பயங்கரமான பளுவைத் தாங்க முடியாமல் இந்தியா அலறிக்கொண்டிருக்கிறது. அதிலிருந்து தப்பித்துக் கொள்ள இன்னும் சிறிதுகாலம் பிடிக்கும். ஆனால் நாள் செல்லச் செல்ல இது கடுமையாகிக்கொண்டு வருகிறது. சமயக் கொள்கையில் எனக்குப் பற்று உண்டு. இந்தியா, மத விரோதமானதாகிக் கொண்டு வருகிறது என்பதே என்னுடைய முதல் முறையீடு. ஹிந்து முஸ்லிம் அல்லது ஜோராஸ்த்ரியம் என்ற வகையில் நான் சிந்திக்கவில்லை. எல்லா மதங்களுக்கும் அடிப்படையான மதத்தைப் பற்றியே எண்ணுகிறேன். கடவுளிடமிருந்து விலகிக்கொண்டு வருகிறோம்.

வாசகர்: அது எப்படி?

ஆசிரியர்: நாம் சோம்பேறிகள், ஐரோப்பியர்களோ கஷ்டப்பட்டு உழைப்பவர்கள், தைரியமாக எதையும் செய்பவர்கள் என்று நம்மீது ஒரு குற்றம் சாட்டுகிறார்கள். இக் குற்றச்சாட்டை நாம் ஒப்புக்கொண்டுவிட்டோம். ஆகவே நம் நிலைமையை மாற்றிக்கொள்ள விரும்புகிறோம். உலக விருப்பங்களில் பற்றற்று இருக்கவேண்டும், கடவுளை அடைவதிலேயே கவனஞ் செலுத்த வேண்டும், பேரவாவைக் கட்டுப்படுத்திக்கொள்ள வேண்டும், மத சம்பந்தமான ஆர்வம் மட்டும் எல்லையற்று இருக்க வேண்டும் என்றே ஹிந்து தருமம், இஸ்லாம், கிறிஸ்தவம், ஜோராஸ்த்ரியம் ஆகிய எல்லாச் சமயங்களுமே போதிக்கின்றன. இவற்றை அனுசரித்தே நம் நடவடிக்கைகளும் இருத்தல் வேண்டும்.

வாசகர்: மதப் புரட்டர்களை நீங்கள் ஆதரிப்பதாகத் தோன்றுகிறது. இத்தகைய வேஷதாரிகள் பலர், இதே தோரணையில் பேசி மக்களைக் கெடுத்திருக்கிறார்கள்.

ஆசிரியர்: நீங்கள் மதத்தின் மீது அநியாயமானதோர் குற்றத்தைச் சாட்டுகிறீர்கள். எல்லா மதங்கள் விஷயத்திலும் ஏமாற்றுகிறவர்கள் இருந்துகொண்டுதான் வருகிறார்கள்; அதில் சந்தேகமே இல்லை. எங்கே வெளிச்சம் இருக்கிறதோ அங்கே இருளும் இருந்தே தீரும். மத விஷயங்களில் நம்மை ஏமாற்றுகிறவர்களைவிட உலக விஷயங்களில் ஏமாற்றுவோர் மிக மோசமானவர்கள் என்று வற்புறுத்திச் சொல்ல நான் தயார். நான் உங்களுக்கு எடுத்துக்காட்ட முயன்றுவரும் நாகரிகத்தின் மோசடி போல அவ்வளவு மோசடி மத விஷயத்தில் இல்லை.

வாசகர்: அதை நீங்கள் எப்படி கூறிவிட முடியும்? மதத்தின் பெயரால் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவருக்கொருவர் போரிட்டுக்கொண்டனர். இதே காரணத்திற்காகக் கிறிஸ்தவர்கள் கிறிஸ்தவர்களுடனேயே போரிட்டுக்கொண்டனர். அதன் பெயரால் ஒரு பாவமும் அறியாத ஆயிரக்கணக்கானவர்கள் கொலையுண்டனர்; ஆயிரக்கணக்கானவர்கள் உயிருடன் எரிக்கப்பட்டுச் சித்திரவதையும் செய்யப்பட்டனர். நிச்சயமாக எந்த நாகரிகத்தையும்விட இது படுமோசமானதாகும்.

ஆசிரியர்: மேலே சொன்ன கொடுமைகள், நாகரிகத்தால் ஏற்படும் கொடுமைகளைவிட சகித்துக் கொள்ளக்கூடியவை என்று நான் நிச்சயமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நீங்கள் எடுத்துக்காட்டிய கொடுமைகள் மதத்தின் பெயரால் செய்யப்பட்டன என்றாலும் அவை மதத்தைச்சேர்ந்தவை அல்ல என்பதை எவருமே உணருகின்றனர். ஆகையால் இக்கொடுமைகளுக்குப் பின் விளைவுகள் எவையுமில்லை. அறியாமையும், எதையும் எளிதில் நம்பிவிடும் சுபாவமும் உள்ள மக்கள் இருக்கும் வரையில், இக்காரியங்கள் எப்பொழுதும் நடந்துகொண்டுதான் இருக்கும். ஆனால், நாகரிகத்தின் தீயில் மக்கள் நாசமாகிக் கொண்டு வருவதற்கு ஒரு முடிவே கிடையாது. அதன் பயங்கரப் பலன் என்னவெனின், அது நன்மை தரும் என்று நம்பி அதன் சுவாலைக்குள் புகுவதுதான். முற்றிலும் மத விரோதமானவர்கள் ஆகிவிடுகிறார்கள் மக்கள்; உண்மையில் உலகத்தில் அவர்கள் பெறும் இன்பம் ஏதும் இல்லை. சுண்டெலி அரிக்கும் சப்தம் நம் காதுக்கு இனிமையாயிருந்தாலும் அது செய்வது நாசமே. அதைப் போன்றதே நாகரிகமும். அதன் முழு விளைவுகளையும் நாம்

உணர்ந்துகொண்டால், இக்கால நாகரிகத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது மத மூட நம்பிக்கையால் தீமை அவ்வளவு இல்லை என்பது விளங்கும். மத மூடநம்பிக்கை தொடர்ந்து இருந்து கொண்டுதான் வரவேண்டும் என்று நான் சொல்லவில்லை. அத்துடன் முழுமூச்சுடன் போராடி அதை ஒழித்தேயாக வேண்டும். ஆனால், மதத்தை அவமதிப்பதனல் அதைச் செய்து விட முடியாது. மதத்தை மதித்து, அதைப் பாதுகாப்பதன் மூலமே அதைச் செய்ய முடியும்.

*வாசகர்:* அப்படியானல், சமாதானத்திற்காகப் பிரிட்டனுடன் இருப்பதென்பது பயனற்ற சுமை என்கிறீர்களா?

*ஆசிரியர்:* சமாதானம் இருப்பதாக நீங்கள் வேண்டுமானல் நினைக்கலாம்; ஆனல், அப்படி எதையும் நான் காணவில்லை.

*வாசகர்:* தக்குகள்,* பிண்டாரிகள், பில்லர்கள் ஆகியோர் நாட்டிற்குச் செய்த அட்டூழியங்கள் அற்பமானவை என்கிறீர்கள்.

*ஆசிரியர்:* இவ்விஷயத்தில் நீங்கள் ஆழ்ந்து சிந்தித்தால் அந்த அட்டூழியங்கள் அவ்வளவு பிரமாதமானவையல்ல என்பதை நீங்களே காண்பீர்கள். அவை மிகப் பலமானவையாக இருந்திருக்குமானல், ஆங்கிலேயர் வருவதற்கு முன்னலேயே மற்றவர்கள் மடிந்து போயிருப்பார்கள். மேலும், இப்பொழுது இருக்கும் சமாதானம் பெயரளவில்தான். ஏனெனில், அதனல் நாம் அடிமைகளாகவும் கோழைகளாகவும் ஆகியிருக்கிரோம். பிண்டாரிகள், பில்லர்கள் ஆகியவர்களது இயல்பை ஆங்கிலேயர்கள் மாற்றிவிட்டார்கள் என்று நாம் கருதிவிட முடியாது. ஆகையால், பிண்டாரி அபாயத்திலிருந்து நம்மை இன்னெருவர் பாதுகாத்து அதனல் நாம் பேடிகள் ஆகிவிடுவதைவிட பிண்டாரி அபாயத்தின் துன்பங்களை அனுபவிப்பதே மேலானது. மனிதத் தன்மை இல்லாத பாதுகாப்பைத் தேடிக்கொள்ளுவதை விட பில்லசாதியினரின் அம்புபட்டுச்சாகவே நான் தயாராயிருப்பேன். இத்தகைய பாதுகாப்பு இல்லாத இந்தியா, வீரம் நிறைந்த இந்தியாவாக இருந்தது. இந்தியரெல்லோரும் கோழைகள்

---

* தக்குகள் என்போர் கொலை பாதகங்களில் ஈடுபட்ட மதவெறிகொண்ட கூட்டத்தினர்; இந்தியாவிலிருந்த இக்கொடிய கூட்டத்தினர் 1825-ஆம் ஆண்டு வாக்கில் அடக்கி ஒடுக்கப்பட்டனர்.

பிண்டாரிகள் என்பவர்களும் இந்தியாவில் 17, 18-ஆம் நூற்ருண்டுகளில் இருந்ததாகக் கூறப்படும் குதிரை ஏறி வந்த கொள்ளைக் கூட்டத்தினர்.

என்று மெக்காலே* இழிவுபடுத்திச் சொன்னபோது அவர் முழு அறியாமையையே காட்டிக்கொண்டு விட்டார். இந்தக் குற்றச் சாட்டே அவர்களுக்கு ஏற்புடையதன்று. முரட்டு மலைச்சாதி யினரையும், புலி, ஓநாய் முதலிய மிருகங்களையும் கொண்ட நாட்டில் வாழும் கோழைகள் முன்னரே கட்டாயம் மாண்டு போயிருப்பார்கள். வயல் பக்கம் எப்பொழுதாவது போயிருக் கிறீர்களா? இன்றுகூட நம் விவசாயிகள் தங்களுடைய கழனி களிலேயே தூங்குகிறார்கள் என்று உறுதியாக உங்களுக்குக் கூறு கிறேன். ஆனால் அவர்கள் தூங்கும் இடத்தில் தூங்க ஆங்கி லேயர்களும் நீங்களும் நானுமே தயங்குவோம். பயமின்மையி லேயே பலம் இருக்கிறதேயல்லாமல் நம் உடலின் சதைப் பற்றிலும், எலும்புத் திரட்சியிலும் அல்ல. மேலும், பில்லர்களும் பிண்டாரிகளும் தக்குகளும், நம் நாட்டினரே. அவர்களுமே சுயாட்சி கேட்கிறார்கள் என்பதையும் உங்களுக்கு நினைவூட்டு கிறேன். அவர்களை வெல்வது உங்கள் வேலையும் என் வேலையு மாகும். நாம் நம் சகோதரருக்கே பயந்துகொண்டிருக்கும் வரையில் லட்சியத்தை அடைய நாம் தகுதியற்றவர்கள் ஆவோம்.

---

* பிரிட்டிஷ் ஆட்சிக்கு உதவியாக இருப்பதற்காக இந்தியரில் ஒரு பகுதியின ருக்கு ஆங்கிலப் படிப்பு அளித்து, இந்தியரில் குமாஸ்தாக்கள் வகுப்பு ஒன்றை உண் டாக்க ஆதியில் திட்டமிட்டவர் லார்டு மெக்காலேயே ஆவார். 1828—இல் லார்டு பெண் டிங்க் இந்தியாவில் கவர்னர் ஜெனரலான பிறகு லார்டு மெக்காலே சட்டமெம்பராக வும் கல்வி போர்டு தலைவராகவும் இருந்தார். அப்பொழுது அவர், இந்தியப் பொது மக்களிடையே மேனாட்டு எண்ணங்களைப் பரப்புவதற்கு ஒரு சிலருக்கு ஆங்கிலப் படிப்பு அளிப்பது அவசியம் என்று எண்ணினார். இதைப்பற்றி மெக்காலே எழுதிய குறிப்பில், "நமக்கு வசதிகள் போதா என்பதனால் இந்தியர் எல்லோருக்குமே கல்வி அளிப்பதென்பது நம்மால் முடியாது. ஆனால், நமக்கும் ஆளப்படுபவரான கோடிக் கணக்கான மக்களுக்கும் இடையே துவிபாஷிகளாக இருக்கக்கூடிய ஒரு வகுப்பை உண் டாக்குவதற்கு நம்மால் இயன்றதைச் செய்தே ஆகவேண்டும்" என்றார்.

லார்டு மெக்காலே (1800—1859) விக்டோரியா ராணி ஆட்சிக் காலத்திலிருந்த சிறந்த சரித்திராசிரியர். அவர் தாம் எழுதிய கட்டுரைகளால் புகழ் பெற்றார். அவர் எழுதிய சரித்திரம் புகழை இன்னும் அதிகரித்தது. சில ஆண்டுகள் பார்லிமெண்டு மெம்பராக இருந்துவிட்டு, கல்கத்தாவில் சுப்ரீம் கவுன்ஸில் மெம்பராக ஐந்தாண்டுகள் இருந்தார். அங்கிருந்து திரும்பி பார்லிமெண்டு மெம்பராகி தமது பேச்சுக்களால் கீர்த்தி பெற்றார். சில காலம் மந்திரியாகவும் இருந்தார்.

## அத்தியாயம் 9

# இந்தியாவின் நிலைமை (தொடர்ச்சி)-ரெயில்கள்

வாசகர்: இந்தியாவில் சமாதானம் நிலவுகிறதென்று நான் கொண்டிருந்த ஆறுதலைப் போக்கிவிட்டீர்கள்.

ஆசிரியர்: மத விஷயத்தைக் குறித்து என் அபிப்பிராயத்தை மாத்திரமே நான் உங்களுக்குக் கூறினேன். ஆனால், இந்தியாவின் ஏழ்மையைக் குறித்து என் கருத்தை உங்களுக்குக் கூறும்போது நீங்கள் ஒருவேளை என்னை வெறுக்கவும் கூடும். ஏனெனில், இந்தியாவுக்கு நன்மையானவை என்று எவற்றை இதுவரையில் எண்ணி வந்தோமோ அவை அப்படி நன்மையானவையாக இப்பொழுது எனக்குத் தோன்றவில்லை.

வாசகர்: அவை யாவை?

ஆசிரியர்: ரெயில்கள், வக்கீல்கள், டாக்டர்கள் நாட்டை அவ்வளவு ஏழ்மை நிலைக்குக் கொண்டுவந்து விட்டனர். நாம் சீக்கிரமாகவே விழித்துக்கொள்ளாது போனால் அழிந்தே போவோம்.

வாசகர்: நம் கருத்துக்கள் சிறிதளவும் ஒத்துப்போக முடியாதென்றே அஞ்சுகிறேன். நன்மையானவை என்று நாம் இதுவரை கருதியவற்றையே நீங்கள் தாக்குகிறீர்கள்.

ஆசிரியர்: பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியம். நாகரிகத்தின் தீமைகளைப் பற்றிய உள் உண்மைகளை நீங்கள் உணர்ந்துகொள்ளுவது சற்றுக் கடினமாக இருக்கும். காச நோயாளி சாகும் தறுவாயில்கூட உயிரைப் பிடித்துக்கொண்டிருப்பான் என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். காசம், அது செய்துவிட்ட தீம்பை வெளிப்படுத்துவதில்லை. அந்நோய்ப் பட்டவர் நலத்துடன் இருக்கிறார் என்று நம்மை ஏமாற்ற ஒரு நல்ல நிறத்தையும் முகத்தில் தோற்றுவிக்கிறது. நாகரிகமும் அத்தகையதோர் நோய்; அதனிடம் நாம் உஷாராகவே இருக்க வேண்டும்.

வாசகர்: சரி, அப்புறம் ரெயில்வேயைப் பற்றியும் உங்கள் கருத்தைக் கேட்க விரும்புகிறேன்.

ஆசிரியர்: ரெயில்வேக்கள் இல்லாதிருந்தால், இந்தியாவின் மீது இப்பொழுது ஆங்கிலேயருக்கு உள்ளதோர் ஆதிக்கம்

அவர்களுக்கு இருந்திராது என்பது உங்களுக்குத் தெளிவாக லாம். ரெயில்களே பயங்கரமான பிளேக் நோயையும் பரப்பி விட்டன. அவை இல்லாதிருந்தால், மக்கள் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குத் தாராளமாகப் போய்க்கொண்டிருக்க முடியாது. அவைகளே பிளேக் கிருமிகளையும் தூக்கிச் செல்கின் றன. முன்பெல்லாம் ஒதுங்கி வாழ்வதென்பது இயற்கையாகவே அமைந்து இருந்தது. ரெயில்வேக்கள் அடிக்கடிப் பஞ்சங்கள் உண்டாவதற்குக் காரணமாகின்றன. ஏனெனில், ரெயில் வசதிகள் இருப்பதால், மக்கள் தங்களிடம் இருக்கும் தானியங்களை விற்று விடுகின்றனர். அவை கிராக்கியுள்ள இடங்களுக்கு அனுப்பப் பட்டு விடுகின்றன. மக்கள் சிரத்தையற்றவர்கள் ஆகிவிடு கிறார்கள்; இதனால் பஞ்சத் தொல்லைகள் அதிகமாகின்றன. மனித னிடம் இருக்கும் கெட்ட சுபாவத்தை ரெயில்வேக்கள் கிளறி விடுகின்றன. கெட்டவர்கள், தங்களுடைய தீய நோக்கங்களை மிகத் துரிதமாகச் செய்ய எளிதாக்குகிறது ரெயில். இந்தியாவி லுள்ள புண்ணியத்தலங்கள் புனிதத்தன்மையை இழந்துவிட்டன. முன்னாட்களில் இந்த இடங்களுக்கு மக்கள் எவ்வளவோ சிரமப்பட்டுப் போய்வந்தார்கள். எனவே, அந்த இடங்களுக்கு உண்மையில் பக்தி உள்ளவர்கள் மாத்திரமே பெரும்பாலும் போனார்கள். இக்காலத்திலோ, அயோக்கியர்கள் தம் தீய காரியங்களைச் செய்வதற்காகவே அந்தத் தலங்களுக்குப் போய் விடுகின்றனர்.

வாசகர்: நீங்கள் ஒருதலைப்பட்சமான விவரங்களைக் கூறி வந்திருக்கிறீர்கள். தீயோரைப் போலவே அந்தப் புனிதத் தலங்களுக்கு நல்லோரும் போகமுடியும். ரெயில்வே வசதியை அவர்கள் ஏன் முற்றிலும் பயன்படுத்திக் கொள்ளக்கூடாது?

ஆசிரியர்: நல்லது, எப்போதும் நத்தையைப் போலத்தான் மெல்ல நகர்ந்து பிரயாணம் செய்யும். ஆகையால், அதற்கு ரெயில்வேக்களைப் பற்றிய அவசியமே இல்லை. நல்லதைச் செய்ய விரும்புகிறவர்கள் சுயநலம் உள்ளவர் அல்ல; அவர்களுக் குப் பரபரப்பில்லை; மக்களிடம் நன்மை தோன்றும்படி செய் வதற்கு நாளாகும் என்பதும் அவர்களுக்குத் தெரியும். ஆனால், தீமைக்கு இறக்கை உண்டு. ஒரு வீட்டைக் கட்டி முடிக்க நாளாகும். ஆனால், அதை இடிக்க நேரம் ஆகாது. எனவே, ரெயில்வேக்கள் கெடுதலைப் பரப்பும் இயல்புடையனவாக மாத்திரமே இருக்க முடியும். ரெயில்வேக்கள்தாம் பஞ்சத்தைப்

பரப்புகின்றன என்பது விவாதத்திற்குரிய விஷயமாக இருக்கலாம். ஆனால், அவை தீமையைப் பரப்புகின்றன என்பதை மட்டும் மறுக்கமுடியாது.

வாசகர்: அப்படியே இருக்கட்டும். ஆனால், இன்று இந்தியாவில் நாம் காணும் புதிய தேசீய உணர்ச்சி, ரெயில்கள் வந்ததனால் ஏற்பட்டதேயாகும் என்ற உண்மை, அவற்றினால் ஏற்படக்கூடிய கெடுதல்களுக்கெல்லாம் அதிகப்படியாகவே ஈடு செய்வதாக இருக்கிறது.

ஆசிரியர்: இது தவறான கருத்து என்றே நான் நினைக்கிறேன். இதற்கு முன்னால் நாம் ஒன்றுபட்ட ஒரே தேசீய இனமாக இருந்ததில்லை; அப்படி ஒரே தேசீய இனமாவதற்கு இன்னும் பல நூற்றாண்டுகளாகும் என்று ஆங்கிலேயர் நமக்குப் போதித்திருக்கிறார்கள். இது முற்றிலும் ஆதாரமற்றது. அவர்கள் இந்தியாவுக்கு வருவதற்கு முன்னால் நாம் ஒரே தேசீய சமுதாயமாகவே இருந்தோம். ஒருமை எண்ணம் நமக்கு உத்வேகம் அளித்து வந்தது. நமது வாழ்க்கையின் தன்மை ஒரே மாதிரியானதாக இருந்தது. நாம் ஒரே தேசீயச் சமுதாயமாக இருந்ததனாலேயே ஒரே ஆட்சியை அவர்களால் அமைக்க முடிந்தது. பின்னால் நம்மைப் பிளவுபடுத்தி விட்டார்கள்.

வாசகர்: இதற்கு விளக்கம் வேண்டும்.

ஆசிரியர்: நாம் ஒரே தேசீயச் சமுதாயமாக இருந்ததனால் நமக்குள் வேறுபாடுகளே இருந்ததில்லை என்று சொல்ல நான் விரும்பவில்லை, ஆனால், நம் பெரியவர்கள், கால்நடையாகவோ அல்லது மாட்டு வண்டிகளிலோ இந்தியா முழுவதிலும் பயணம் செய்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஒருவர் மொழியை இன்னொருவர் கற்றுக்கொண்டார். அவர்களுக்குள் வேறுபாடு என்பது இல்லை. தெற்கில், சேதுபந்தமும் (ராமேசுவரம்), கிழக்கு திசையில் ஜகந்நாதமும், வடக்கில் ஹரித்துவாரமும் யாத்திரைத் தலங்களாக அமைவதற்கு, முன்யோசனையோடு கூடிய நமது மூதாதைகளின் நோக்கம் எதுவாக இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? அவர்கள் முட்டாள்களல்ல என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள். கடவுளை வழிபடுவதை வீட்டில் இருந்தபடியே செய்துகொள்ளலாம் என்பதையும் அவர்கள் அறிவார்கள். நேர்மையின் ஒளி யாருடைய உள்ளத்தில் பிரகாசிக்கிறதோ அவர்களுடைய

வீட்டிலேயே கங்கையும் இருக்கும் என்பதையும் அவர்கள் நமக்குப் போதிக்கிறார்கள். இந்தியாவைப் பிரிக்கமுடியாத ஒரே நிலப்பரப்பாக இயற்கை அமைந்திருக்கிறது என்பதையும் கண்டார்கள். இவ்வாறு கூறி இந்தியாவின் பல பகுதிகளிலும் புண்ணிய க்ஷேத்திரங்களை அமைத்தார்கள். இதன் மூலம் உலகத்தின் வேறு எந்தப் பகுதியும் கண்டறியாத வகையில் ஒன்றுபட்ட தேசீய இன உணர்ச்சியை மக்கள் உள்ளங்களில் எழுப்பினார்கள். எந்த இரண்டு ஆங்கிலேயரிடமும் வேற்றுமை இருப்பதுபோல இந்தியர்களாகிய நம்மிடமும், நாகரிகமானவர்களென்றும் மேலானவர்களென்றும் கருத்துடைய நாம் பலதரப்பட்ட தேசீய சமூகத்தினர் என்று நினைத்துக்கொள்ளுகிறோம். ரெயில்கள் வந்த பிறகே நாம் வேற்றுமையில் நம்பிக்கை கொள்ளத் தலைப்பட்டோம். இந்த ரெயில்களினாலேயே அந்த வேற்றுமைகளைப் போக்கிக்கொள்ள நாம் ஆரம்பித்திருக்கிறோம் என்று இப்பொழுது நீங்கள் தாராளமாகச் சொல்லிக்கொள்ளலாம். அபினி தின்கிறவன்-அதைத் தின்ற பிறகே, அதைத் தின்பதனால் வரும் கெடுதல்களைத் தெரிந்துகொண்ட பின்பே-அபினி தின்பதிலுள்ள நன்மைகளைப்பற்றிப் பேச ஆரம்பிக்கலாம். ரெயில்களைப்பற்றி நான் கூறியவற்றைச் சரியாக யோசிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

வாசகர்: மகிழ்ச்சியுடன் யோசிக்கிறேன். ஆனால், இப்பொழுதுகூட என் மனத்தில் ஒரு கேள்வி எழுகிறது. முஸ்லிம்களின் வருகைக்கு முந்திய காலத்து இந்தியாவைப்பற்றி எனக்கு விவரித்தீர்கள். ஆனால், இப்பொழுதோ முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகியோரும் நம்முடன் இருக்கிறார்கள். அவர்களும் ஒரே தேசீயச் சமுதாயமாக எப்படி ஆக முடியும்? ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பழைய விரோதிகள். நமது பழமொழிகளே அதை நிரூபிக்கின்றன. முகம்மதியர்கள் பிரார்த்தனை செய்ய மேற்கு முகமாகத் திரும்பிக்கொள்ளுகின்றனர்; ஹிந்துக்களோ கிழக்கு முகமாகத் திரும்புகின்றனர். விக்கிரகங்களை வழிபடுவோர் என ஹிந்துக்களை முஸ்லிம்கள் அவமதிப்பாக எண்ணுகின்றனர். ஹிந்துக்கள் பசுக்களைப் போற்றுகின்றனர். முஸ்லிம்கள் பசுக்களைக் கொல்லுகின்றனர். ஹிந்துக்களுக்குக் கொல்லாமையில் நம்பிக்கை உண்டு; முஸ்லிம்களுக்கோ அது இல்லை. இவ்விதம் ஒவ்வொரு கட்டத்திலும் நமக்குள் வேறுபாடுகள் இருக்கின்றன. அப்படியிருக்க, இந்தியா ஒரே தேசீயச் சமுதாயமாக எப்படி ஆகமுடியும்?

அத்தியாயம் 10

# இந்தியாவின் நிலைமை (தொடர்ச்சி)-ஹிந்துக்களும் முஸ்லிம்களும்

ஆசிரியர் : உங்களுடைய கடைசிக் கேள்வி கடினமானதே யாகும். ஆனால், தீர யோசித்தால், அதற்கு விடை தருவது எளிது என்பது தெரியும். ரெயில்களும், வக்கீல்களும், டாக்டர் களும் இருப்பதனாலேயே இக்கேள்வி எழுகிறது. கடைசியான இரண்டையும் இப்பொழுது கவனிப்போம். ரெயில்களைப் பற்றி முன்னாலேயே கவனித்திருக்கிறோம். இன்னும் ஒன்றும் சொல்ல விரும்புகிறேன். மனிதன், தன்னுடைய கைகளையும் கால்களையும் கொண்டு செலுத்தும் அளவுக்குத் தன் நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்திக் கொள்ளவேண்டிய வகையில் இயற்கையினால் அமைக் கப்பட்டிருக்கின்றான். ரெயில்களையும், வெறிமூட்டும் மற்ற வசதி களையும் கொண்டு ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நாம் விரைவாகப் போகாமலிருந்தால், எத்தனையோ குழப்பங்கள் இல் லாமல் இருக்கும். நாமே நம் சங்கடங்களை உண்டாக்கிக்கொண் டிருக்கிறோம். மனிதனின் உடல் அமைப்பிலேயே, அவன் இயங் கும் ஆசைக்கு ஒரு வரம்பை கடவுள் வகுத்திருக்கிறார். அந்த வரம்பை மீறிப் போவதற்கான சாதனங்களைக் கண்டுபிடிக்க மனி தன் உடனே துணிந்தான். படைத்த இறவனை அறிவதற்கே மனிதனுக்கு அறிவைத் தந்தார் கடவுள். ஆனால், மனிதனோ, படைத்தவனையே மறந்துவிடும் வகையில் தனது அறிவைத் துஷ் பிரயோகம் செய்யலானான். என்னைச் சுற்றி இருப்பவர்களுக்கு மட்டுமே சேவை செய்யக்கூடிய வகையில் நான் ஆக்கப்பட்டிருக் கிறேன். ஆனால், எனது அகந்தையின் காரணமாக, என் உடலைக் கொண்டு இப்பிரபஞ்சத்தில் இருக்கும் ஒவ்வொருவருக்கும் சேவைசெய்ய வேண்டும் என்று பாசாங்கு செய்கிறேன். இவ் விதம் அசாத்தியமானதைச் செய்துவிட முயலுவதால், பலதரப் பட்ட சுபாவங்கள், மதங்கள் இவற்றுடன் தொடர்பு கொண்டு அடியோடு தோல்வி அடைகிறான். இந்த நியாயத்தைக் கொண்டு கவனித்தால், ரெயில்கள் மிகவும் ஆபத்தானவை என்பது உங்க ளுக்குத் தெளிவாகும். இவைகளினால் மனிதன் கடவுளைவிட்டு விலகியே சென்றுவிட்டான்.

வாசகர் : என் கேள்விக்கு உங்களுடைய பதிலை அறிய வேண்டும் என்பதில் நான் பொறுமையை இழந்தவனாக இருக்

கிறேன். முகம்மதியம் புகுத்தப்பட்டது, ஒரே தேசீய இனம் என்பதைச் சிதைத்துவிட்டதல்லவா?

ஆசிரியர் : பலதரப்பட்ட மதங்களைச் சேர்ந்தவர்கள் இந்தியாவில் வாழ்கிறார்கள் என்பதனால் ஒரே தேசீயச் சமுதாயமாக இந்தியா இல்லாது போய்விடாது. அயலார் வந்ததனால் தேசீயச் சமுதாயம் பாழாகிவிடவேண்டும் என்பதுமில்லை. அவர்கள் இதில் ஐக்கியமாகிவிடுகின்றனர். இத்தகைய நிலைமை இருக்கும் போதுதான் ஒரு நாடு ஒரே தேசீயச் சமுதாயம் ஆகிறது. அந்த நாட்டிற்கு ஐக்கியப்படுத்திக் கொள்ளும் சக்தி இருக்கவேண்டும். அப்படிப்பட்ட ஓர் நாடாகவே இந்தியா என்றும் இருந்து வந்திருக்கிறது. உண்மையில் மனிதர் எத்தனையோ, அத்தனை மதங்களும் இருக்கும். ஆனால், தேசீய உணர்ச்சியை உணர்ந்திருப்பவர்கள், ஒருவர் மற்றொருவரின் மதக் கோட்பாடுகளில் குறுக்கிடுவதில்லை அவர்கள் குறுக்கிடுவார்களானால், ஒரு தேசீய இனம் என்று கருதப்படுவதற்கு அவர்கள் தகுதியற்றவர்கள் ஆவார்கள். இந்தியாவில் ஹிந்துக்கள் மாத்திரமே இருக்கவேண்டும் என்று ஹிந்துக்கள் நம்புவதாயின், அவர்கள் கனவு உலகத்தில் வசிப்பவர்களே ஆவர். இந்தியாவைத் தங்கள் நாடாக்கிக்கொண்டிருக்கும் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லாரும் இந்நாட்டு மக்களே. இவர்கள் யாவரும் தங்களுடைய சொந்த நன்மையை முன்னிட்டாவது ஒன்றுபட்டிருந்து வாழ்ந்தாக வேண்டும். உலகத்தின் எப்பகுதியிலும் ஒரே தேசீயச் சமுதாயம் என்பது ஒரே மதம் என்று பொருள் கொண்டிருந்ததில்லை. இந்தியாவிலும் இவ்விதம் இருந்ததில்லை.

வாசகர் : ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே உடன் பிறந்ததான பகையைக் குறித்து என்ன கூறுகிறீர்கள்?

ஆசிரியர் : அந்தச் சொற்றொடர் நம் பரஸ்பர விரோதியினால் சிருஷ்டிக்கப்பட்டதாகும். ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவருக்கொருவர் சச்சரவிட்டுக்கொள்ளும்போது அதே ஆவேசத்தில்தான் பேசினார்கள். தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொள்ளுவதை நீண்ட காலமாகவே நிறுத்திவிட்டார்கள். அப்படி இருக்கும்போது, உடன்பிறந்ததான பகைமை என்பது எப்படி இருக்கமுடியும்? பிரிட்டிஷார் இந்தியாவைப் பிடித்துக்கொண்ட பிறகுதான் அவர்கள் சச்சரவிட்டுக் கொள்ளுவதை நிறுத்தினார்கள்

என்பதல்ல. இதைத் தயைசெய்து நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். முஸ்லிம் மன்னர்களின் ஆட்சியில் ஹிந்துக்கள் சௌகரியமாகவே இருந்திருக்கிறார்கள்; ஹிந்து மன்னர்களின் ஆட்சியில் முஸ்லிம்களும் சுகமாக இருந்திருக்கின்றனர். ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்ளுவது தற்கொலைக்குச் சமம் என்று ஒவ்வொரு தரப்பினரும் உணர்ந்தார்கள். இதில் எந்தத் தரப்பினரும் ஆயுத பலத்தினால் தங்கள் மதத்தை விட்டுவிட மாட்டார்கள். ஆகவே, இரு தரப்பாரும் சமாதானமாக வாழ்வது என்ற முடிவுக்கு வந்தனர். ஆங்கிலேயர்கள் வந்து சேர்ந்ததும் திரும்பவும் சச்சரவு ஆரம்பமாகிவிட்டது.

நீங்கள் கூறிய பழமொழிகள், இரு தரப்பாரும் சச்சரவிட்டுக்கொண்டிருந்தபோது உண்டாக்கப்பட்டவை. அவற்றை இப்பொழுது குறிப்பிடுவதென்பது நிச்சயம் தீங்கு விளைவிப்பதாகும். பல ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் மூதாதையர் ஒருவரே என்பதும், அதே ரத்தமே அவர்கள் உடலில் ஓடிக்கொண்டு இருக்கிறது என்பதும் நமக்கு நினைவிருக்கவேண்டாமா? ஹிந்துக்களின் கடவுள் வேறு, முஸ்லிம்களின் கடவுள் வேறு? ஒரே இடத்திற்குப் போய்ச் சேருவதற்கான பல வழிகளே மதங்கள். அடையப் போகும் லட்சியம் ஒன்றாக இருக்கும்போது பல தரப்பட்ட சாலைகளின் வழியாகக் குறிக்கோளை அடைவதில் என்ன தவறு இருக்கிறது? இதில் சச்சரவிட்டுக் கொள்ளுவதற்கு என்ன இருக்கிறது?

சைவர்களுக்கும் வைணவர்களுக்குமிடையே பயங்கரமான வசைமொழிகள் வழங்கிவருகின்றன. எனினும், இவ்விருவரும் ஒரே தேசீயச் சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல என்று யாரும் சொல்லவில்லை. வேத வழி வந்த மதத்திற்கும் ஜைன சமயத்திற்கும் அதிக மாறுபாடு உண்டு என்று சொல்லப்படுகிறது. இதனால் இவ்விரு மதத்தினரும் வெவ்வேறு தேசீயச் சமுதாயங்களைச் சேர்ந்தவர்களாகார். உண்மை என்னவெனின், நாம் அடிமைப்பட்டிருக்கிறோம்; இதனால் சச்சரவிட்டுக்கொள்ளுவதோடு மூன்றாமவர் நம் சச்சரவில் தீர்ப்புக் கூறவேண்டும் என்றும் விரும்புகிறோம். முஸ்லிம்களைப் போலவே விக்கிரக வழிபாடு கூடாது என்பவர்கள் ஹிந்துக்களிலும் இருக்கிறார்கள். உண்மையான அறிவில் நாம் அபிவிருத்தி அடைய அடைய, நாம் பின்பற்றாத மதத்தைச் சேர்ந்தவர்களுடன் சண்டை இடவேண்டியதே இல்லை என்பதை நாம் நன்றாக உணர்ந்துகொள்ளுவோம்.

வாசகர்: பசுப் பாதுகாப்பைப்பற்றி இப்பொழுது உங்கள் கருத்தை அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

ஆசிரியர்: நான் பசுவுக்கு மரியாதை செலுத்துகிறேன். அதாவது, அதனிடம் அன்பு கலந்த ஒரு மதிப்பு வைத்திருக்கிறேன். இந்தியாவை பாதுகாப்பது பசு. ஏனெனில், இந்திய நாடு விவசாய நாடாக இருப்பதால் அது பசுவை நம்பி வாழ வேண்டியிருக்கிறது. நூற்றுக்கணக்கான வழிகளில் பசு மிகவும் பயன் அளிக்கும் மிருகம். நம் முஸ்லிம் சகோதரர்களும் இதை ஒப்புக்கொள்ளுவார்கள்.

ஆனல், நான் பசுவுக்கு மதிப்பளிப்பதைப் போலவே என் நாட்டிலுள்ள சகோதரர்களுக்கும் மதிப்பளிக்கிறேன். ஒருவர் ஹிந்துவானுலும் சரி, முஸ்லிமாகயிருந்தாலும் சரி, பசுவைப் போன்றே மனிதரும் பயன் உள்ளவரே. அப்படி இருக்கும்போது ஒரு பசுவைப் பாதுகாப்பதற்காக ஒரு முஸ்லிமுடன் சண்டையிடுவதோ அல்லது அவரைக் கொல்லுவதோ சரியா? அப்படிச் செய்வதனல் ஒரு முஸ்லிமுக்கும் ஒரு பசுவுக்கும் விரோதியாவேன். ஆகையால், பசுவைப் பாதுகாப்பதற்கு எனக்குத் தெரிந்த ஒரே வழி, நாட்டின் நன்மையை முன்னிட்டு அதைப் பாதுகாப்பதற்கு என்னுடன் ஒத்துழைக்கும்படி என் முஸ்லிம் சகோதரர்களைக் கேட்டுக்கொள்ளுவதேயாகும். நான் கூறுவதற்கு அவர் இணங்கவில்லையாயின், இவ்விஷயம் என் சக்திக்குப் புறம்பானது என்ற காரணத்தினல், பசு எப்படியாவது போகட்டும் என்று நான் விட்டுவிடவேண்டும். பசுவிடம் பச்சாத்தாபம் எனக்கு மிக அதிகமாக இருக்குமானல், அதைக் காப்பாற்ற நான் என் உயிரையே தியாகம் செய்யவேண்டுமேயல்லாமல் என் சகோதரனின் உயிரைப் போக்கிவிடக்கூடாது. இதுவே நமது தருமம் என்று நான் கொள்ளுகிறேன்.

மனிதர் பிடிவாதக்காரர்கள் ஆகிவிடும்போது நிலைமை சங்கடமானதாகிவிடும். நான் ஒரு வழிக்கு இழுத்தால், என் முஸ்லிம் சகோதரர் வேறு வழிக்கு இழுப்பார். நான் உயர்ந்தவன் என்ற அகம்பாவத்துடன் இருந்தால் அவரும் பதிலுக்கு அப்படியே செய்வார். நான் கௌரவமாக அவருக்குப் பணிந்தால், அவர் மேலும் அப்படியே பணிந்து விடுவார். அப்படிச் செய்யாது போனலும், நான் பணிந்துபோனதில் நான் தவறு செய்துவிட்டதாகக் கருத முடியாது. ஹிந்துக்கள் பிடிவாதம் காட்டக்காட்ட பசுக்களைக் கொல்வதும் அதிகமாகிறது. பசுப் பாதுகாப்பு சங்கங்களைப் பசுக்கொலைச் சங்கங்கள் என்று சொல்லலாம் என்று

நான் கருதுகிறேன். இத்தகைய சங்கங்கள் நமக்குத் தேவைப் படும் என்பதே வெட்கக்கேடானதாகும். பசுக்களை எப்படி பாதுகாப்பது என்பதை நாம் மறந்துவிட்டபோதே இத்தகைய சங்கங்கள் அவசியமாயின என எண்ணுகிறேன்.

ரத்தக் கலப்புள்ள ஒரு சகோதரன், ஒரு பசுவைக் கொல் லும் தறுவாயில் இருக்கும்போது நான் என்ன செய்வது? நான் அவனைக் கொன்றுவிடுவதா அல்லது அவன் காலில் விழுந்து கொல்லவேண்டாம் என்று மன்றாடிக் கேட்டுக்கொள்ளுவதா? பிந்திய முறையையே நான் கைக்கொள்ளவேண்டும் என்று நீங்கள் ஒப்புக்கொண்டால், எனது முஸ்லிம் சகோதரனிடமும் நான் அதையேதான் செய்ய வேண்டும்.

ஹிந்துக்கள் பசுக்களைக் கொடுமையாக நடத்தும்போது அவை அழியாமல் பாதுகாக்கிறவர் யார்? பசு வம்சத்தை ஹிந்துக்கள் தடிகளால் போட்டு அடிக்கும்போது அது நியாய மல்ல என்று அவர்களிடம் யார்தாம் வாதாடுகிறார்கள்? ஆனால். இவையெல்லாம் நாம் ஒரே தேசீயச் சமுதாயமாக இருப்பதைத் தடுக்கவில்லை.

கடைசியாக, ஹிந்துக்கள் கொல்லாமையில் நம்பிக்கையுள்ள வர்கள், முஸ்லிம்கள் அப்படியல்ல என்பது உண்மையாக இருக்குமானால், ஹிந்துக்களின் கடமை என்ன? கொல்லாமை மதத்தைப் பின்பற்றும் ஒருவர், இன்னொருவரைக் கொல்லலாம் என்று விதிக்கப்பட்டிருக்கவில்லை. அவர் செய்ய வேண்டிய காரியம் நேரானது. ஓர் உயிரைக் காப்பதற்காக இன்னொரு வரைக் கொன்றுவிடக்கூடாது. கொல்ல வேண்டாம் என்று வேண்டிக்கொள்ளலாம்; அவருடைய முழுக்கடமையும் அவ்வளவு தான்.

ஆனால், ஒவ்வொரு ஹிந்துவுக்கும் அகிம்சையில் நம்பிக்கை இருக்கிறதா? விஷயத்தை ஆழ்ந்து கவனித்தால், இந்த அகிம் சைக் கொள்கையை ஒருவர்கூட அனுசரிக்கவில்லை; உயிரினங் களை அழித்துக்கொண்டுதான் வருகிறோம். ஓர் உயிரைக் கொல் லும் பாபத்திலிருந்து தப்பவே இந்தக் கொள்கையைப் பின்பற்று கிறோம் என்று சொல்லப்படுகிறது. பொதுவாகப் பார்த்தால் ஹிந்துக்களில் பலர் மாமிசம் சாப்பிடுகிறார்கள். இதனால் அவர்கள் அகிம்சையைக் கடைப்பிடிக்கவில்லை என்றாகிறது. அகிம்சையில் நம்பிக்கை வைக்கும் ஹிந்துக்களும், அந்த நம்பிக்கையில்லா முகம் மதியர்களும் ஒன்றாக வாழ முடியாது என்று சொல்லுவது அபத்த மானதாகும்.

சுயநலமிகளும் போலிகளுமான மதப்பிரசாரகர்கள் இத்தகைய எண்ணங்களையெல்லாம் நம் புத்தியில் உண்டாக்கியிருக்கிறார்கள். ஆங்கிலேயர்கள் இதற்கு மெருகு கொடுத்திருக்கிறார்கள். சரித்திரம் எழுதும் வழக்கம் அவர்களுக்கு இருக்கிறது. எல்லா மக்களின் பழக்க வழக்கங்களையும் ஆராய்வதாகவும் பாசாங்கு செய்கிறார்கள். கடவுள் நமக்கு ஓர் அளவுக்குத்தான் புத்தியைக் கொடுத்திருக்கிறார். ஆனால் அவர்களோ, தாங்களே கடவுளாக எண்ணிக்கொண்டு விசித்திரப் பரீட்சைகளிலெல்லாம் ஈடுபடுகிறார்கள். தங்களுடைய ஆராய்ச்சிகளையெல்லாம் உயர்வாகப் புகழ்ந்து, அவர்களை நம்பும்படியும் நம்மை மயக்குகிறார்கள். நாமும் நமது அறியாமையால் அவர்களுக்கு அடிபணிகிறோம்.

விஷயங்களைத் தவறாகப் புரிந்து கொள்ளாதிருக்கவேண்டும் என விரும்புகிறவர்கள் குரானைப் படிக்கலாம். அதில் நூற்றுக்கணக்கான விஷயங்கள் ஹிந்துக்கள் ஒப்புக்கொள்ளக் கூடியவையாக இருப்பதைக் காணலாம். எந்த ஒரு முஸ்லிமும் ஆட்சேபிக்க முடியாத உண்மைகளும் பகவத் கீதையில் உள்ளன. எனக்குப் புரியாதவையும், நான் விரும்பாதவையும் குரானில் இருக்கின்றன என்பதற்காக ஒரு முஸ்லிமை நான் வெறுப்பதா? இரண்டு பேர் சச்சரவுக்குத் தயாராக இருந்தால்தான் சச்சரவுக்கே இடம் ஏற்படுகிறது. ஒரு முஸ்லிமுடன் சண்டையிட நான் விரும்பவில்லையென்றால், என்னிடம் சண்டைக்கு வருவதற்கு அவருக்குச் சக்தியே இல்லாது போகும். அதே போல, என்னுடன் சச்சரவுக்கு வர ஒரு முஸ்லிம் மறுத்துவிடுவாரானால் நானும் சக்தியற்றவன் ஆகிவிடுவேன். வெறும் கையை ஓங்கினால் சுளுக்கிக்கொள்ளத்தான் செய்யும். ஒவ்வொருவரும் தங்களுடைய மதத்தின் தத்துவத்தை நன்கு அறிந்து அதைக் கடைப்பிடிப்பார்களானால்—போலிப் போதகர்கள் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்துவதற்கும் அனுமதி தராமல் இருந்தால்—சண்டை சச்சரவுக்கு இடமே இராது.

வாசகர் : இந்த இருவரும் ஒன்றுவதற்கு ஆங்கிலேயர்கள் எப்பொழுதாவது அனுமதிப்பார்களா?

ஆசிரியர் : இக்கேள்வி நம்முடைய கோழைத்தனத்திலேயே எழுகிறது. இது நமது விவேகமின்மையையும் வெளிப்படுத்துகிறது. சமாதானமாக வாழ்வது என்று இரு சகோதரர்கள் முடிவு செய்துகொண்டு விட்டால், மூன்றும் ஆள் அவர்களைப் பிரித்துவிட முடியுமா? கெட்டவர்களின் பேச்சை

அவர்கள் கேட்பதாயின், அவர்களை முட்டாள்கள் என்று கருதுவோம். அதே போல நம்மைப் பிரித்து வைப்பதற்கு ஆங்கிலேயருக்கு நாம் இடங்கொடுத்துக் கொண்டிருந்தால், அவர்கள்மீது குறைகூறுவதை விட, ஹிந்துக்களும் முஸ்லிம்களுமாகிய நாம் நம்மீதே குறை கூறிக்கொள்ள வேண்டும். ஒரு மண் பாண்டம் உடைவதற்கு, அது ஒரு கல்மீது மோதவே வேண்டியதில்லை. ஒன்றின்மேல் ஒன்று சற்று வலுவாகப் பட்டாலும் போதும். இப்பண்டம் பத்திரமாக இருக்கும்படிச் செய்வதற்குச் சரியான வழி, ஆபத்தான இடத்தை விட்டு அதைத் தூரத்தில் வைத்து விடுவதன்று; கல்லில் பட்டாலும் அது உடையாதிருக்கும் வகையில் அதை நன்றாகச் சூளையிலிட வேண்டும். ஆகவே, நாம் நம் மனத்தைச் சரியானபடி சுட்ட மண் போல் ஆக்கிக்கொள்ள வேண்டும். பிறகு எல்லா ஆபத்துக்களையும் சமாளிக்கும் இரும்பான உறுதியை நாம் அடைந்துவிடுவோம். இதை ஹிந்துக்கள் மிகச் சுலபமாகச் செய்யலாம். தொகையில் இவர்கள் அதிகம்; தாங்கள் அதிகம் படித்தவர்கள் என்றும் பாசாங்கு செய்கிறார்கள். ஆகையால், முஸ்லிம்களுடன் தங்களுக்குள்ள நேச உறவை எந்தத் தாக்குதலிலிருந்தும் காப்பாற்றிக் கொள்ளக்கூடிய தகுதி இவர்களுக்கே அதிகம் உண்டு.

இவ்விரு சமூகத்தினருக்குள்ளும் பரஸ்பர அவநம்பிக்கை இருந்து வருகிறது. ஆகையால், முஸ்லிம்கள், தங்களுக்குச் சில சலுகைகள் வேண்டுமென்று லார்டு மார்லியிடம்* கேட்கிறார்கள். ஹிந்துக்கள் இதை ஏன் எதிர்க்க வேண்டும்? ஹிந்துக்கள் ஆட்சேபிக்காதிருந்தால், ஆங்கிலேயர் இதைக் கவனித்துக்கொள்ளுவார்கள். நாளாவட்டத்தில் முஸ்லிம்கள் ஹிந்துக்களை நம்ப ஆரம்பிப்பார்கள். இதன் பலனாக சகோதரத்துவமும் வளரும். நம் சச்சரவுகளை ஆங்கிலேயரிடம் கொண்டு போவதைக் குறித்து நாம் வெட்கப்பட வேண்டும். ஆட்சேபணை செய்யாமல் இருப்பதால் ஹிந்துக்களுக்கு எதுவும் நஷ்டமாகிவிடாது என்பதை ஒவ்வொருவரும் தமக்குத்தாமே உணரவேண்டும். மற்றொருவர் உள்ளத்தில் நம்பிக்கையை உண்டாக்கியவர் இவ்வுலகத்தில் எதையும் இழந்துவிட்டதில்லை.

---

* லார்டு மார்லி (1838–1923) லிபரல் கட்சி ராஜீயவாதி; நூலாசிரியர். பிறகு 1892 முதல் 1885 வரை பிரிட்டிஷ் அயர்லாந்து மந்திரியாக இருந்தார். 1905 முதல் 1910 வரை இந்திய மந்திரியாகவும் இருந்தார். அக்காலத்திலேயே மிண்டோ–மார்லி அரசியல் சீர்திருத்தங்கள் இந்தியாவில் கொண்டு வரப்பட்டன. கிளாட்ஸ்டன், வால்டயர், ரூஸோ, பர்க், வால்போல் முதலிய பலருடைய வாழ்க்கை வரலாறுகளை எழுதியிருக்கிறார்.

ஹிந்துக்களும் முஸ்லிம்களும் என்றுமே சண்டையிட்டுக் கொள்ள மாட்டார்கள் என்று நான் சொல்லவில்லை. சேர்ந்து வாழும் இரு சகோதரர்கள் அடிக்கடி சண்டையிட்டுக்கொள்ளு வார்கள். சில சமயங்களில் நாம் மண்டைகளையும் உடைத்துக் கொள்ளுவோம். இத்தகைய காரியங்களுக்கு அவசியம் இல்லை தான். ஆனால், எல்லோருமே ஒரே மாதிரியாக இருந்துவிட வில்லை. கோபத்தில் இருக்கும்போது எத்தனையோ முட் டாள்தனமான காரியங்களைச் செய்துவிடுகின்றனர். இவைகளை யெல்லாம் சகித்துக்கொள்ள வேண்டும். ஆனால், நாம் சண்டை யிட்டுக்கொள்ளும்போது, வக்கீல் வைக்கவோ, ஆங்கிலேயரிடம் செல்லவோ, கோர்ட்டுக்குப் போகவோ நாம் நிச்சயமாக விரும்புவதில்லை. இருவர் சண்டை போட்டுக் கொள்ளுகிறார் கள்; அவர்கள் மண்டைகள் உடைகின்றன; அல்லது ஒருவரின் மண்டையாவது உடைகிறது. மூன்றாமவர் அவர்களுக்குள் நியாயத்தை எப்படித் தீர்த்துவிட முடியும்? சண்டை போடு கிறவர்கள் காயம் அடையக்கூடும் என்றே எதிர்பார்க்க வேண்டும்.

## அத்தியாயம் 11

# இந்தியாவின் நிலைமை (தொடர்ச்சி)- வக்கீல்கள்

வாசகர் : இருவர் சண்டை போட்டுக்கொள்ளும்போது நீதிமன்றங்களுக்கும் போகக் கூடாது என்கிறீர்கள். இது வியப்பாகவே இருக்கிறது.

ஆசிரியர் : வியப்பாக இருக்கிறது என்று நீங்கள் சொன்னாலும் சரி, சொல்லாவிட்டாலும் சரி, இதுதான் உண்மை. உங்கள் கேள்வி, வக்கீல்களைப்பற்றியும், டாக்டர்களைப்பற்றியும் ஆராய நம்மைத் தூண்டுகிறது. வக்கீல்களே இந்தியாவை அடிமைப் படுத்திவிட்டார்கள்; ஹிந்து-முஸ்லிம் வேற்றுமைகளை அதிகரித்து விட்டார்கள். ஆங்கிலேய ஆட்சியையும் உறுதிப்படுத்தி விட்டனர் என்பது என்னுடைய திடமான அபிப்பிராயம்.

வாசகர் : இத்தகைய குற்றச்சாட்டுகளைக் கூறிவிடுவது எளிது. ஆனால், இவற்றை நீங்கள் நிருபிப்பது கடினம். வக்கீல்கள் இல்லாவிட்டால் வேறு யார் நம் சுதந்திரத்திற்கு வழி காட்டியிருப்பார்கள்? ஏழைகளை வேறு யார் காப்பாற்றியிருப்பர்? நீதியை யார் தேடித் தந்திருக்க முடியும்? உதாரணமாக, காலஞ்சென்ற மனமோகன கோஷ் பல ஏழைகளுக்காகப் பணமின்றிக் கோர்ட்டில் வாதாடினர். நீங்கள் பிரமாதமாகப் புகழ்கிறீர்களே அந்தக் காங்கிரஸ், அது இருந்து வருவதும், அதன் நடவடிக்கைகளும் வக்கீல்களின் உழைப்பினாலேயேயாகும். மதிப்பிற்குரிய அத்தகையதொரு வகுப்பினரைக் கண்டிப்பது நியாயமற்றதாகும். வக்கீல்களைத் தூஷிப்பதன் மூலம் பத்திரிகைச் சுதந்திரத்தை நீங்கள் தூக்கி எறிந்து விடுகின்றீர்கள்.

ஆசிரியர் : ஒரு சமயத்தில் உங்களைப் போலவேதான் நானும் எண்ணிக்கொண்டிருந்தேன். ஒரு நல்ல காரியத்தைக் கூட அவர்கள் என்றுமே செய்ததில்லை என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும் என்ற விருப்பம் எனக்கு இல்லை. ஸ்ரீ கோஷின் நினைவையும் அவர் செய்த காரியத்தையும் நான் போற்றுகிறேன். ஏழைகளுக்கு அவர் உதவி செய்தார் என்பது முற்றிலும் உண்மை. வக்கீல்களுக்குக் காங்கிரஸ்

கொஞ்சம் கடமைப்பட்டிருக்கிறது என்பதும் நம்பக்கூடியதே. வக்கீல்களும் மனிதர்களே. ஒவ்வொரு மனிதரிடமும் நல்ல குணம் ஏதாவது இருக்கும். வக்கீல்கள் ஒரு நல்ல காரியம் செய்ததாக ஏதாவது சம்பவங்கள் எடுத்துக் கூறப்படுமாயின் அந்த நன்மை, வக்கீல்கள் என்பதைவிட மனிதர்கள் என்ற வகையில் அவர்கள் செய்ததாகும். அந்தத் தொழில், ஒழுக்கக்கேட்டைப் போதிக்கிறது. அதன் கவர்ச்சியிலிருந்து காக்கப்பட்டிருப்பவர்கள் மிகச் சிலரே என்பதை உங்களுக்கு எடுத்துக்காட்ட வேண்டும் என்பதுதான் என் சிரத்தையெல்லாம்.

ஹிந்துக்களும், முஸ்லிம்களும் சச்சரவிட்டுக் கொண்டார்கள். அதையெல்லாம் மறந்துவிடுமாறே சாதாரண மனிதன் அவர்களைக் கேட்டுக் கொள்ளுவான்; இரு தரப்பாரும் ஏதேதோ தவறு செய்திருக்கலாம் என்று அவர்களிடம் சொல்லி இனியும் சச்சரவிட்டுக் கொள்ள வேண்டாம் என்று அவர்களுக்குப் புத்திமதி கூறுவான். ஆனால், அவர்கள் வக்கீலிடம் போகிறார்கள். தங்கள் கட்சிக்காரர்களுக்கு உதவியாயிருந்து, அந்தக் கட்சிக்காரர்களுக்குப் புலப்படாத புதியதான வழிகளையும் வாதங்களையும் கண்டுபிடிப்பது வக்கீல்களின் வேலை. அவர்கள் அப்படிச் செய்யாவிட்டால் தங்கள் தொழிலின் கௌரவமே குறைந்தவர்களாக அவர்கள் கருதப்படுவார்கள். ஆகையால், வக்கீல்கள், சச்சரவைக் குறைப்பதற்குப் பதிலாகச் சச்சரவை வழக்கமாக அதிகரிக்கிறார்கள். மேலும் இத்தொழிலுக்கு வருகிறவர்கள் பணம் சம்பாதிக்க வருகிறார்களேயன்றித் துன்பப்படும் மற்றவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதற்காக வருவதில்லை. பணக்காரர்கள் ஆவதற்கான வழிகளில் இது ஒன்று. தகராறுகள் அதிகரிப்பதனாலேயே இவர்களுக்கு நன்மை உண்டு. மனிதருக்குள் தகராறு ஏற்படும்போது அவர்கள் மகிழ்ச்சியடைகிறார்கள் என்பதை நானே அறிவேன். சின்ன வக்கீல்கள் உண்மையிலேயே தகராறுகளை உண்டுபண்ணுகின்றனர். எத்தனையோ அட்டைகளைப் போல இவர்களுடைய தரகர்கள் ஏழை மக்களின் ரத்தத்தை உறிஞ்சுகின்றனர். வக்கீல்களுக்கு வேலை என்பதே இல்லை. அவர்கள் சோம்பேறிகளாக இருப்பவர்கள். ஆடம்பர வாழ்க்கையை நடத்துவதற்காக இத்தகைய தொழிலுக்கு வருகின்றனர். இது முற்றிலும் உண்மை. இதற்கு எதிரான எந்தக் கூற்றும் பாசாங்காகும். தம் தொழில் மிகவும் கௌரவமானது என்று வக்கீல்கள் தாங்களே கண்டுபிடித்துக்கொண்டிருக்கிறார்கள். தம் பெருமையைத் தாமே உண்டாக்கிக்கொள்ளுவதைப்

போலவே அவர்கள் சட்டங்களையும் உண்டாக்குகின்றனர். என்ன கட்டணம் வாங்குவது என்பதை அவர்களே முடிவு செய்து கொள்ளுகின்றனர். அவர்கள் தெய்வப் பிறவியோ என்று ஏழை மக்கள் எண்ணும் வகையில் ஆடம்பரத்தையும் மேற்கொள்ளு கின்றனர்.

சாதாரண தொழிலாளியைவிட அவர்கள் அதிகக் கட்டணம் விரும்புவானேன்? அவர்களுடைய தேவை அதிகமாக இருப் பானேன்? தொழிலாளரைவிட அவர்கள் நாட்டிற்கு எந்த வகையில் அதிக உதவியுள்ளவர்கள்? நல்லதைச் செய்கிறவர் கள் நாட்டிற்கு அதிக ஊதியம் பெறுவதற்கு உரிமை பெற்றிருக் கிறார்களா? நாட்டிற்கு ஏதாவது நன்மையைப் பண ஆசைக்காக அவர்கள் செய்திருந்தால், அதை நல்லதென்று எப்படிக்கொள்ள முடியும்?

ஹிந்து - முஸ்லிம் சச்சரவுகள், அடிக்கடி வக்கீல்கள் தலை யிடுவதாலேயே ஏற்படுகின்றன என்பதை இச்சச்சரவுகளைப் பற்றி நன்கு அறிந்தவர்கள் உணர்வர். இவர்களால் குடும்பங்கள் அழிந்து போயிருக்கின்றன. இவர்கள் சகோதரர்களை விரோதி களாக ஆக்கியிருக்கிறார்கள். வக்கீல்களின் உபதேசங்களுக்குட் பட்ட சமஸ்தானங்கள் கடன் சுமை மிகுந்தவைகளாக ஆகி விட்டன. பலர் தம் உடைமைகளை இவர்களாலேயே பறி கொடுத்து நிற்கின்றனர். இவை போன்ற உதாரணங்களைப் பெருக்கிக்கொண்டே போகலாம்.

ஆனால், அவர்கள் நாட்டிற்குச் செய்திருக்கும் பெரிய தீங்கு ஆங்கிலேயரின் பிடிப்பை இங்கே அவர்கள் பலப்படுத்தியிருப் பதேயாம். நீதிமன்றங்கள் இல்லாமல் தங்கள் அரசாங்கத்தை ஆங்கிலேயர் இங்கே நடத்திக்கொண்டு போவது சாத்தியம் என்று நினைக்கிறீர்களா? மக்களின் நன்மைக்காக நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன என்று நினைப்பது தவறு. தங்கள் ஆட்சியை நிரந்தரமாக்கிக் கொள்ள விரும்புகிறவர்கள், இந்த நீதிமன்றங்கள் மூலம் அதைச் செய்து வருகின்றனர். தங்கள் தகராறுகளை மக்கள் தங்களுக்குள்ளேயே தீர்த்துக்கொள்ளுவ தாயிருந்தால், அவர்கள் மீது மூன்றாம் ஆள் எந்தவித ஆதிக்கத் தையும் செலுத்த முடியாது. சண்டையின் மூலமோ அல்லது தங்களுக்காக முடிவு செய்யும்படி தங்களுடைய உறவினரைக் கேட்டுக்கொள்ளுவதன் மூலமோ மனிதர், தகராறுகளைத் தீர்த் துக் கொண்டு வந்த காலத்தில் அவர்கள், மனிதத்தன்மையின் வரம்பை மீறிச் சென்றதில்லை. கோர்ட்டுகளுக்குப் போகத்தலைப்

பட்ட பிறகே அவர்கள் மனிதத்தன்மையில் குறைந்தவர்களாயும் கோழைகளாகவும் மாறினர். சண்டையிட்டு அதன் மூலம் தகராறில் ஒரு முடிவுக்கு வந்தார்களென்பது நிச்சயமாகக் காட்டுமிராண்டித்தனத்திற்கு ஓர் அறிகுறியேயாகும். எனக்கும் உங்களுக்கும் மத்தியில் மூன்ருமவரை அழைத்துத் தகராறைத் தீர்க்கச் சொல்லுவது மிருகத்தனத்தைத் தவிர வேறு என்ன? மூன்ரும் ஆள் கூறும் தீர்ப்பு எப்பொழுதுமே நியாயமானதாக இருந்து விடப்போவதில்லை என்பது நிச்சயம். எது நியாயம் என்பது தகராறில் சம்பந்தப்பட்டவர்களுக்கு மட்டுமே தெரியும். நம் அறியாமையாலும், எதையும் நம்பும் தன்மையாலும் முன்பின் தெரியாத ஒருவர், பணத்தை வாங்கிக்கொண்டு நமக்கு நீதியை வழங்குகிருர் என்று நாம் எண்ணுகிரும்.

வக்கீல்கள் இல்லாவிட்டால் கோர்ட்டுகளை அமைத்திருக்கவோ அல்லது அவற்றை நடத்தியிருக்கவோ முடியாது; கோர்ட்டுகள் இல்லாமல் ஆங்கிலேயரால் ஆளமுடிந்திராது என்பது முக்கியமாக நாம் நினைவில் கொள்ளவேண்டிய விஷயமாகும். ஆங்கிலேய நீதிபதிகள், ஆங்கிலேய வக்கீல்கள், ஆங்கிலேய போலீஸ்காரர்கள் ஆகியவர்கள் மட்டுமே இருக்கிருர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அப்பொழுது ஆங்கிலேயரை மட்டுமே அவர்களால் ஆள முடியும். இந்திய நீதிபதிகள், இந்திய வக்கீல்கள் இல்லாமல் ஆங்கிலேயரால் எதுவும் முடியாது. முதன் முதலில் வக்கீல்கள் எவ்விதம் தோன்றினர், அவர்களுக்கு எவ்விதம் சலுகைகள் அளிக்கப்பட்டன என்பவைகளை நீங்கள் சரியாகத் தெரிந்துகொள்ள வேண்டும். பிறகு, இத்தொழிலைக் குறித்து எனக்கு இருந்து வரும் வெறுப்பே உங்களுக்கும் ஏற்படும். வக்கீல்கள் தம் தொழிலைக் கைவிட்டு விட்டால், விபசாரத்தைப் போல் இத் தொழிலும் இழிவானது என்று கருதிவிட்டால், ஒரே நாளில் ஆங்கில ஆட்சி சிதைந்துவிடும். மீன் நீரை விரும்புவது போல் நாம் சச்சரவுகளையும் கோர்ட்டுகளையும் விரும்புவோர் என்று நம்மைப் பற்றிக் குற்றங் கூறப்படுவதற்குக் காரணகர்த்தர்களாக இருப்பவர்கள் வக்கீல்களே. வக்கீல்களைப்பற்றி நான் கூறியன யாவும் நீதிபதிகளுக்கும் பொருந்தும். இவர்கள் முதல் சிற்றப்பன் பிள்ளைகளைப் போன்றவர்கள்; ஒருவருக்கொருவர் பக்கபலமாக இருப்பவர்கள்.

அத்தியாயம் 12

# இந்தியாவின் நிலைமை (தொடர்ச்சி)-டாக்டர்கள்

வாசகர்: வக்கீல்களைப்பற்றி நான் இப்பொழுது தெரிந்து கொண்டேன். அவர்கள் செய்திருக்கக்கூடிய நன்மை தற்செயலாக ஏற்பட்டது. அந்தத் தொழில் நிச்சயமாக வெறுக்கத் தகுந்தது என்றே உணர்கிறேன். நீங்களோ, டாக்டர்களையும் இதில் சேர்த்துச் சொல்லுகிறீர்கள். அது எப்படி?

ஆசிரியர்: உங்களிடம் நான் கூறும் கருத்துக்கள், நான் அனுசரிப்பவையேயாகும். அவை என் சொந்தக் கருத்தல்ல. வக்கீல்களையும் டாக்டர்களையும் குறித்து மேனுட்டு எழுத்தாளர்கள் மிகக் கடுமையான சொற்களை உபயோகித்திருக்கின்றனர். ஒரு நூலாசிரியர் இக்கால வைத்திய முறை முழுவதையும் உபாஸ்* மரத்திற்கு ஒப்பிட்டிருக்கிருர். பிறரை உறிஞ்சி வாழும் வக்கீல் தொழிலையும், வைத்தியத் தொழிலையும் அம்மரத்தின் கிளைகளோடு ஒப்பிட்டிருக்கிருர். அதன் அடி மரத்தின்மீது உண்மையான மதம் என்ற கோடரி உயர்த்தப்பட்டிருக்கிறது. ஒழுக்கக் கேடு என்பதே அந்த மரத்தின் வேர். இந்த அபிப்பிராயங்கள் என் மனத்திலிருந்து நேரே வந்தவையல்ல என்பதையும், பலருடைய ஒன்றுபட்ட அனுபவமே இது என்பதையும் இதன்மூலம் நீங்கள் காணலாம். வைத்தியத் தொழிலைக் குறித்து எனக்கு ஒரு சமயம் அதிக ஆர்வம் இருந்தது. நாட்டின் நன்மைக்காக ஒரு டாக்டராக வேண்டும் என்பது என்னுடைய நோக்கம். அந்த எண்ணம் இப்பொழுது எனக்குக் கிடையாது. நம்மிடையே வைத்தியர்கள் ஏன் கௌரவமான அந்தஸ்தை அடைவதில்லை என்பதை நான் இப்பொழுது அறிகிறேன்.

நம்மை அடிமைகளாக வைத்திருப்பதற்கு ஆங்கிலேயர்கள் வைத்தியத்தொழிலைச் சரியானபடி உபயோகித்துக் கொண்டிருக்கிருர்கள். ஆங்கில வைத்தியர்கள், பல ஆசிய மன்னர்களிடம் தம் தொழிலை ராஜீய லாபங்களுக்காக உபயோகித்திருக்கிருர்கள் என்பது நன்ருகத் தெரிந்தது.

---

*உபாஸ் என்பது ஜாவா பகுதியிலுள்ள ஒரு நச்சு மரம். அதிலிருந்து வரும் பாலை எடுத்துக் காட்டு மக்கள் அம்புகளின் முனையில் தடவுவார்களாம். அந்த அம்பு பட்டவர்கள் கட்டாயம் இறந்து போவார்கள். அதன் நிழலில் எந்தச் செடியும் நசித்துப் போகும். அவ்வளவு கொடியது அம் மரத்தின் விஷம்.

டாக்டர்கள் நம்மை முற்றிலும் நிலை தவறிப் போகும்படி செய்துவிட்டனர். பெரிய பட்டங்களைப் பெற்ற டாக்டர்களை விடப் போலி வைத்தியர்களே மேல் என்று சில சமயங்களில் நான் எண்ணுகிறேன். இதைச் சற்று கவனிப்போம்: ஒரு டாக்டரின் வேலை, உடம்பைச் சரியாகக் கவனித்துக்கொள்ளுவது; சரியாகச் சொன்னால், அதுகூட இல்லை. உண்மையில் அவர்களுடைய வேலை, உடலைப் பற்றும் நோய்களைப் போக்கவேண்டியது. இந்த நோய்கள் எவ்விதம் உண்டாகின்றன? நிச்சயமாக நமது அசட்டையினாலோ அல்லது மித மிஞ்சிய போகங்களினாலோ நோய்கள் உண்டாகின்றன. அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுகிறேன்; எனக்கு அஜீரணம் உண்டாகிறது; நான் டாக்டரிடம் போகிறேன்; அவர் ஒரு மருந்து கொடுக்கிறார்; நான் குணம் அடைகிறேன்; நான் மீண்டும் அதிகப்படியாகச் சாப்பிடுகிறேன்; டாக்டரின் மாத்திரையையும் உட்கொள்ளுகிறேன். முதல் தடவையிலேயே மாத்திரை சாப்பிடாதிருந்தேனாயின் எனக்கு உரிய தான தண்டனையை அனுபவித்திருப்பேன்; திரும்பவும் அதிகப்படியாகச் சாப்பிட்டிருக்கவும் மாட்டேன். டாக்டர் குறுக்கிட்டு, நான் மிதமிஞ்சி நடந்து கொள்ளுவதற்கு உதவி செய்தார். இதனால் என் உடல் சிரமமின்றி இருந்தது உண்மையெனினும் என் மனம் பலவீனப்பட்டுவிட்டது. ஆகையால், தொடர்ந்து மருந்து சாப்பிடுவதன் பயனாக மனத்தை அடக்கும் திறனை இழந்து விடுகிறோம்.

கெட்ட செய்கைகளில் ஈடுபட்டுவிட்டேன், இதனால் எனக்கு நோய் ஏற்படுகிறது; டாக்டர் குணப்படுத்துகிறார். இதில் விசித்திரம் என்னவெனில், நான் திரும்பவும் கெட்ட காரியத்தைச் செய்வதே. டாக்டர் தலையிடாதிருந்தால் இயற்கை தன்னுடைய வேலையைச் செய்திருக்கும். என்னை நானே அடக்கியாளும் ஆற்றலும் எனக்கு உண்டாகியிருக்கும். கெட்ட காரியங்களிலிருந்தும் விடுபட்டு ஆனந்தமாக இருந்திருப்பேன்.

பாபங்களைப் பரப்பும் ஸ்தாபனங்களே ஆஸ்பத்திரிகள். தங்கள் உடம்பைப்பற்றி மனிதர் அதிக சிரத்தை எடுத்துக் கொள்ளுவதில்லை. ஒழுக்கமின்மை அதிகரிக்கிறது. எல்லோரிலும் படுமோசமானவர்கள் ஐரோப்பிய டாக்டர்கள். மனித உடலைக் குறித்துச் சரியான அக்கறை எடுத்துக்கொள்ளாத தவறுக்காக, வருடந்தோறும் பல்லாயிரக் கணக்கான மிருகங்களைக் கொல்கின்றனர். அவற்றை உயிரோடு அறுத்துச் சோதிக்

கின்றனர். எந்த மதமும் இதை அனுமதிக்கவில்லை. நம் உடலுக்காக இத்தனை உயிர்களை மாய்க்கவேண்டிய அவசியமே இல்லை என்று எல்லோரும் கூறுகிறார்கள்.

இந்த டாக்டர்கள் நம்முடைய மத உணர்ச்சியையே மீறி நடக்கிறார்கள். இவர்கள் உபயோகிக்கும் மருந்துகள் பலவற்றில் மிருகக் கொழுப்போ அல்லது மதுத்திராவகங்களோ கலந்திருக் கின்றன. இவை இரண்டுமே ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக் கும் விலக்கானவை. நாம் நாகரிகம் அடைந்திருப்பதாகப் பாசாங்கு செய்து, தடுக்கப்பட்டிருப்பவைகளை மூட நம்பிக்கை கள் என்று கூறி, நமக்கு இஷ்டமானவைகளில் நாம் ஈடுபடலாம். இப்படி நாம் ஈடுபடுவதற்கு டாக்டர்கள் தூண்டுகிறார்கள். இதன் பலனாக நமக்குள்ள புலனை அடக்கும் ஆற்றல் இல்லாமற் போகிறது. ஆண்மையற்றவர்களாகவும் ஆகிவிடுகிறோம் என்பது உண்மையாகிறது. இந்த நிலைமையில் நாட்டிற்குத் தொண்டு செய்ய நாம் தகுதியற்றவர்கள். ஐரோப்பிய வைத்திய முறை யைக் கற்றுக்கொள்ளுவது நமது அடிமைத்தனத்தைப் பலப் படுத்துவதாகும்

நாம் மருத்துவத் தொழிலை ஏன் மேற்கொள்ளுகிறோம் என்பது முக்கியமாகக் கவனிக்க வேண்டியதாகும். மனித வர்க்கத்திற்குச் சேவை செய்வதற்காக மேற்கொள்ளப்பட வில்லை. நிச்சயமாக கௌரவத்தையும் செல்வத்தையும் அடைய லாம் என்பதற்காக டாக்டர்கள் ஆகிறோம். இத்தொழிலில் மனித வர்க்கத்திற்குப் பணி செய்வது என்பது எதுவுமில்லை. மனித வர்க்கத்திற்கு இதனால் தீமையே என்பதை எடுத்துக்காட்ட முயன்றிருக்கிறேன். டாக்டர்கள், தாங்கள் அறிவு மிக்கவர்கள் போல் காட்டி அதிகப்படியான கட்டணமும் விதிக்கின்றனர். அவர்களுடைய மருந்துகள், உண்மையில் சில தம்படிகளே பெறுமானவை. அவைகளுக்கு ரூபாய்க்கணக்கில் விலை வாங்கப் படுகிறது. பொதுமக்களும் தங்களுடைய அறியாமையினாலும், எப்படியோ நோய் நீங்கும் என்ற நம்பிக்கையினாலும் தங்களை ஏமாற்ற அவர்களுக்கும் வாய்ப்புத் தருகின்றனர். ஆகவே, மனித வர்க்கத்தினிடம் அன்பு காட்டுவது போன்று வேஷம் போடும் டாக்டர்களைவிட நன்கு அறிந்த போலி மருத்துவர்கள் மேல் அல்லவா?

## அத்தியாயம் 13

# உண்மையான நாகரிகம் எது?

வாசகர் : ரெயில்களேயும், வக்கீல்களேயும், டாக்டர்களேயும் நீங்கள் கண்டித்துக் கூறுகிறீர்கள். எல்லா யந்திரங்களேயுமே நீங்கள் வெறுப்பீர்கள் என்பதை நான் அறிவேன். அப்படியானல் உண்மையான நாகரிகந்தான் எது?

ஆசிரியர் : இதற்கு விடை அவ்வளவு கடினமானதன்று. இந்தியா உருவாக்கியிருக்கும் நாகரிகம் உலகத்தில் இணையற்றது என்பது என் நம்பிக்கை. நம் மூதாதைகள் போட்ட விதைக்கு மிஞ்சியது எதுவும் இல்லே. ரோம் அழிந்தது; கிரேக்கமும் அதே கதியை அடைந்தது. பாரோக்களின் மகிமை சிதைந்தது; ஜப்பான் மேற்கு நாகரிகத்தை அபிநயிக்கிறது; சீனவைப் பற்றி எதுவும் சொல்லுவதற்கில்லே. ஆனல், இந்தியா மாத்திரம், எப்படியோ அடிப்படையில் சரியானபடி இருந்துவருகிறது. பழைய கீர்த்தியெல்லாம் மழுங்கிப்போன கிரேக்கர் அல்லது ரோமர்கள் எந்தக் காலத்திலோ எழுதி வைத்திருந்தவற்றைக் கொண்டு ஐரோப்பிய மக்கள் பாடங் கற்றுக்கொண்டு வருகிருர்கள். அவர்களிடமிருந்து பாடங் கற்றுக் கொள்ளுவதில், கிரேக்கரும் ரோமன்களும் செய்துவிட்ட தவறுகளேத் தாங்கள் தவிர்க்கமுடியும் என்று ஐரோப்பியர் எண்ணுகிருர்கள். இதுவே அவர்களுடைய பரிதாபகரமான நிலேமை. இவைகளுக்கெல்லாம் மத்தியில் இந்தியா அசையாமல் தன்னுடைய பழம் புகழுடனேயே இருந்துவருகிறது. இந்தியர் நாகரிகமற்றவர்களாகவும், அறியாமை மிகுந்தவர்களாகவும், உணர்ச்சி ஆவேசம் இல்லாதவர்களாகவும் இருப்பதால், எந்த மாறுதலேயும் மேற்கொள்ள இவர்களேத் தூண்ட முடியாதவாறு இருக்கிறது என்பது இந்தியா மீது கூறப்படும் குற்றச்சாட்டு. இது உண்மையில் நமது ஆற்றலுக்கு விரோதமாகக் கூறப்படும் குற்றச்சாட்டாகும். அனுபவத்தின் வாயிலாகச் சோதித்து உண்மையெனக் கண்டுகொண்டிருப்பவைகளே மாற்றிக்கொண்டுவிட நாம் துணிவதில்லே. பலர், தம் போதனேகளே இந்தியாவின் மீது திணிக்கிருர்கள்; ஆனல், இந்தியா தன் நிலே தவருமல் இருந்துவருகிறது. இதுவே இந்தியாவின் அழகு; இதுவே நமக்கு நம்பிக்கை ஊட்டும் சிறந்த பாதுகாப்பு.

மனிதனுக்குக் கடமையின் மார்க்கத்தைக் காட்டும் ஒழுக்க முறையே நாகரிகம். கடமையைச் செய்வதும், ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பதும் ஒன்றுக்கொன்று பொருத்தமானவை. ஒழுக்கத்தை அனுசரிப்பதென்பது நம் மனத்தையும் நமது விருப்பங்களையும் அடக்கி ஆள்வதாகும். அப்படி செய்வதில் நம்மையே நாம் அறிந்தவராவோம். நாகரிகம் என்ற சொல்லுக்கு குஜராத்தியில், 'நல்ல நடத்தை' என்பதுதான் பொருள்.

இந்த விளக்கமே சரியானது என்ருல், பல நூலாசிரியர்கள் எடுத்துக் காட்டியிருப்பதைப் போல, பிறரிடமிருந்து இந்தியா கற்றுக்கொள்ளவேண்டியது எதுவுமில்லே; எவ்விதம் இருக்க வேண்டுமோ, அவ்விதம் இந்தியா - இருந்து வருகிறது. அமைதியற்றதோர் பறவையே மனம் என்பதைக் காண்கிரும். அதிகம் கிடைக்கக் கிடைக்க அது மேலும் அவாவுகிறது; அப்பொழுதும் திருப்தி அடையாமல் இருக்கிறது. ஆசாபாசங்களில் நாம் உழல உழல அவை, எல்லேயற்றுப் பெருகிக்கொண்டே போகின்றன. ஆகவே, நம் மூதாதைகள் நாம் அப்படி போகத்தில் உழல்வதற்கு ஒரு வரம்பைக் கோலியிருக்கின்றனர். இன்பம் என்பதெல்லாம் பெரும்பாலும் மனநிலேயைப் பொறுத்ததே என்று கண்டார்கள். பணக்காரனுக இருக்கிருன் என்பதற்காக ஒருவன் ஆனந்தமாகவோ அல்லது ஏழை என்பதனுல் இன்னெருவன் ஆனந்தம் இல்லாமலோ இருந்துவிடுவதில்லே. கோடிக்கணக்கானவர்கள் எப்பொழுதும் ஏழைகளாகவே இருப்பார்கள். இவற்றையெல்லாம் கவனித்தே நம் மூதாதைகள் ஆடம்பரங்களும் இன்பங்களும் வேண்டாம் என்று நமக்கு உபதேசித்தனர். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னுல் இருந்த அதே கலப்பையைக் கொண்டே நாம் சமாளித்துக் கொண்டுவருகிரும். முற்காலத்தில் இருந்த குடிசைகளேயே இன்னும் நாம் வைத்துக்கொண்டிருக்கிரும். நம் சுதேசப் படிப்பு முன்னுல் இருந்ததைப்போன்றே இப்பொழுதும் இருக்கிறது. உயிரையே சிதைத்துக்கொள்ளும் வகையிலான போட்டி முறை எதுவும் நமக்குக் கிடையாது. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தொழில்களேயோ வியாபாரத்தையோ கவனித்து வருகின்றனர். கட்டுப்பாடுள்ள ஊதியமும் பெறுகின்றனர். யந்திரங்களேக் கண்டுபிடிப்பது எப்படி என்பது நமக்குத் தெரியாது என்பதல்ல. ஆனுல், இத்தகைய காரியங்களில் கவனத்தைச் செலுத்திவிட்டால், நாம் அடிமைகளாகி, ஒழுக்க உறுதியையும் இழந்துவிடுவோம் என்பது நமது மூதாதையருக்கு நன்ருகத்

தெரியும். ஆகையால், அவர்கள் தீரச் சிந்தித்துவிட்டு, நம் கையினுலும் காலினுலும் செய்யக்கூடியன மட்டுமே நாம் செய்யவேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள். நம்முடைய கால்களையும் கைகளையும் சரியானபடி உபயோகிப்பதிலேயே உண்மையான ஆனந்தமும் உடல் நலமும் பெறமுடியும் என்பதைக் கண்டார்கள். பெரிய நகரங்களெல்லாம் நம்மை அமுத்திக்கொள்ளும் கண்ணிகள் போன்றவை; வீண் தொல்லைகளை உண்டாக்கும் இடம். அங்கே மக்கள் ஆனந்தமாக வாழ முடியாது. கொள்ளை, விபசாரம் போன்ற தீமைகள் மலிந்த இடம் அவை. வறியவர்களைப் பறித்து, அங்கே பணக்காரர்கள் வாழ்வர் என்றும் அவர்கள் கருதினர். ஆகையால், சிறு கிராமங்களோடு திருப்தியடைந்து இருந்தனர். அரசர்களும் அவர்களுடைய வாள் பலமும் ஒழுக்கமென்னும் வலிமைக்குக் குறைவானவை என்று கண்டனர். ஆகையால், பூமண்டலாதிபதிகளும், ரிஷிகளுக்கும் பக்கீர்களுக்கும் தாழ்வானவர்களே என்று கருதினர். இதைப்போன்றதோர் அமைப்பைக்கொண்ட நாட்டினர், மற்றவர்களிடமிருந்து கற்றுக்கொள்ளுவதைவிட அவர்களுக்குப் போதிக்கத் தகுதி வாய்ந்தவர்கள். அந்த மக்களுக்கு நீதி மன்றங்களும், வக்கீல்களும், வைத்தியர்களும் இருந்தனர். ஆனல், அவர்கள் எல்லோரும் ஓர் எல்லைக்குக் கட்டுப்பட்டவர்கள். இந்தத் தொழில்கள் அப்படி உயர்வானவையல்ல என்பதை ஒவ்வொருவரும் அறிவார்கள். மேலும், அந்த வக்கீல்களும் வைத்தியர்களும் மக்களைக் கொள்ளை அடிப்பதில்லை. அவர்கள் மக்களை நம்பிப் பணியாற்றுபவரெனக் கருதப்பட்டனரேயன்றி எஜமானர்களாகக் கருதப்படவில்லை. நீதிபரிபாலனமும் கூடியவரை நேர்மையாகவே இருந்தது. கோர்ட்டுகளைத் தவிர்ப்பதே சாதாரணமாயிருந்த பழக்கம். மக்களை மயக்கிக் கோர்ட்டுகளுக்குக் கொண்டுபோய்விடத் தரகர்களும் இல்லை. இந்தத் தீமை, நகரங்களிலும், அவற்றின் சுற்றுவட்டாரங்களிலுமே தென்படுகின்றன. பொது மக்கள் சுயேச்சையாக வாழ்ந்து தங்களுடைய விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். உண்மையான சுய ஆட்சியையும் அனுபவித்து வந்தார்கள்.

இந்தப் பாழான நவநாகரிகம் எட்டாத இடங்களில், இந்தியா முன் இருந்தபடியே இருந்து வருகிறது. இந்தியாவின் அப்பகுதிகளில் இருக்கும் மக்கள், புதுமையாகப் புனையும் உங்களுடைய எண்ணங்களைப் பார்த்துச் சிரிக்கத்தான் சிரிப்பார்கள். ஆங்கிலேயர்கள் அவர்கள்மீது என்றும் ஆட்சி நடத்தவுமில்லை,

நீங்கள் அவர்கள் மீது என்றும் ஆட்சி நடத்தவும் முடியாது. நாம் எவர்கள் பெயரால் இவ்வளவு பேசுகிறோமோ, அவர்களை அறியோம்; நம்மையும் அவர்கள் அறியார். தாய் நாட்டை நேசிக்கும் உங்களுக்கும் உங்களைப் போன்றவர்களுக்கும், ரெயில் உட்புகுந்து பாழாக்காத பிரதேசங்களுக்குப் போய் அங்கே ஆறுமாத காலம் வசிக்க வேண்டும் என்றே நான் நிச்சயமாக ஆலோசனை கூறுவேன். பிறகு நீங்கள் தேசாபிமானிகள் ஆவதோடு சுய ஆட்சியைப்பற்றியும் பேசலாம்.

நான் கருதும் உண்மையான நாகரிகம் எது என்பது இப்பொழுது தெரியும். உங்களுக்கு நான் விவரித்திருந்த நிலைமையை மாற்ற விரும்புகிறவர்கள், நாட்டின் விரோதிகளும் பாவிகளும் ஆவர்.

வாசகர் : நீங்கள் விவரித்துள்ளபடியே இந்தியா இருக்குமாயின் எல்லாம் சரிதான். ஆனால், நூற்றுக்கணக்கான இளம் விதவைகள் இருப்பதும், இரண்டு வயது குழந்தைகளுக்கு விவாகஞ் செய்யப்படுவதும், ஒரு பெண்ணுக்குப் பல கணவர்கள் இருப்பதும், நியோக முறையை* அனுசரிப்பதும், மதத்தின் பெயரால் பெண்களை விபசாரத்திற்குத் தத்தஞ் செய்வதும், மதத்தின் பெயரால் ஆடுகள் வெட்டப்படுவதுமான இந்தியாவும் இருக்கிறது. நீங்கள் வருணனை செய்த நாகரிகத்தின் சின்னங்களாக இவைகளையும் நீங்கள் கருதுகிறீர்களா ?

ஆசிரியர் : நீங்கள் ஒரு தவறு செய்கிறீர்கள். நீங்கள் குறிப்பிடும் முறைகள் யாவும் குறைகளே. இவையெல்லாம் புராதன நாகரிகம் என்று யாரும் தவறாக எண்ணிக்கொள்ளவில்லை. அந்நாகரிகம் இருந்தும் இவைகளும் இருந்துவருகின்றன. இவற்றையெல்லாம் நீக்குவதற்கு எப்பொழுதும் முயற்சிகள் செய்யப்பட்டு வந்திருக்கின்றன; இனியும் செய்யப்படும். இத்தீமைகளையெல்லாம் ஒழிப்பதற்கு நம்மில் பிறந்திருக்கும் உணர்ச்சியைப் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால், புதிய நாகரிகம் என்று நான் எதை உங்களுக்கு விவரித்தேனோ அதன் ஆதரவாளர்கள் அப்படியே ஒப்புக்கொள்ளுகிறார்கள். நான் விவரித்த வகையில் இந்திய நாகரிகம், அதன் ஆதரவாளர்களால் அப்படியே விவரிக்கப்பட்டிருக்கிறது. உலகில் எந்தப் பகுதியிலுமே எந்த நாகரிகத்தின் காரணத்தாலும், மனிதர் எவரும்

* நியோக மணமுறை—பிள்ளைப்பேறு இல்லாமல் கைம்பெண்ணானவள் தன் கணவனின் உடன்பிறந்தவனை மணம் செய்துகொள்ளுவதான முறையே நியோக முறை என்பது.

நிறைவை அடைந்ததில்லை. இந்திய நாகரிகத்தின் தன்மை, ஒழுக்கமுடைமையை உணர்த்துவதேயாகும். மேல் நாட்டு நாகரிகத்தின் தன்மையோ, ஒழுக்கக் கேட்டைப் பரப்புவதாகும். பின் சொன்னது கடவுளைப் புறக்கணிப்பது; முன் சொன்னது கடவுள் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது. அவ்விதம் உணர்ந்து, அவ்விதம் நம்பி, குழந்தை தனது தாயின் மார்பகத்தைப் பற்றிக் கொள்ளுவதைப்போல, இந்தியாவை நேசிக்கும் ஒவ்வொருவரும் பழைய இந்திய நாகரிகத்தைப் பற்றிக்கொள்ளுவது நலமாகும்.

## அத்தியாயம் 14

# இந்தியா விடுதலையடைவது எப்படி?

வாசகர் : நாகரிகத்தைப்பற்றிய உங்கள் கருத்தைப் பாராட்டுகிறேன். இவைகளைப்பற்றி நான் சிந்திக்க வேண்டியிருக்கிறது; அப்படியே எடுத்துக்கொள்ளமுடியாது. உங்கள் கருத்தின்படி இந்தியா விடுதலை அடைவதற்கு என்னதான் யோசனை கூறுகிறீர்கள்?

ஆசிரியர் : என்னுடைய கருத்துக்கள் உடனேயே ஒப்புக்கொள்ளப்பட்டுவிடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆயினும் உங்களைப்போன்ற வாசகர்களிடம் என் கருத்தைக் கூறியாக வேண்டியது என் கடமை. மற்றதைக் காலம் செய்யும் என்று நம்பியிருக்கவேண்டியதே. இந்தியாவை விடுவிப்பதற்குள்ள நிலைமையைக் குறித்து முன்னடியே கவனித்திருக்கிறோம். ஆனல், மறைமுகமாகவே கவனித்திருக்கிறோம். இப்பொழுது நேரடியாகவே கவனிப்போம். நோய்க்குக் காரணமாயிருப்பதை நீக்கிவிட்டால் நோய் தானே நீங்கிவிடும் என்பது உலகம் அறிந்த உண்மை. அதே போல இந்தியா அடிமையாயிருப்பதற்கான காரணத்தை நீக்கிவிட்டால் இந்தியா சுதந்திரம் அடைந்துவிடும்.

வாசகர் : நீங்கள் கூறியபடி இந்திய நாகரிகம் எல்லாவற்றிலும் சிறந்ததாக இருக்குமானல், இந்தியா அடிமைப்பட்டதற்கு என்ன காரணம் கூறுகிறீர்கள்?

ஆசிரியர் : இந்த நாகரிகம் சிறந்தது என்பதில் ஆட்சேபணையே இல்லை. ஆனல், எல்லா நாகரிகங்களுக்குமே சோதனைகளும் இருந்திருக்கின்றனஎன்பதையும் ஒப்புக்கொள்ளவேண்டும். நிரந்தரமானதான நாகரிகம் மாத்திரமே நிலைத்து நிற்கும். இந்தியாவின் மக்கள் அதற்கு ஏற்புடையவர்களாக இராததால் அதன் நாகரிகம் ஆபத்திற்குள்ளாகிவிட்டது. ஆயினும், இந்த அதிர்ச்சியையும் அது சமாளித்து நிற்பதைக்கொண்டே அதன் பலத்தைக் கவனிக்கவேண்டும். மேலும் இந்தியா முழுவதிலும் இந்த அதிர்ச்சி பரவவில்லை. மேல் நாட்டு நாகரிகத்தினல் பீடிக்கப்பட்டிருப்பவர்கள் மாத்திரமே அடிமைகள் ஆகிவிட்டார்கள். நம் அளவுகோலைக் கொண்டு நாம் பிரபஞ்சத்தை அளக்கிறோம். நாம் அடிமைகளாக இருக்கும்போது பிரபஞ்சம் முழுவதுமே அடிமையாகத்தான்

இருக்கிறது என்று எண்ணுகிறோம். நாம் மோசமான நிலைமையில் இருப்பதால், இந்தியா முழுவதுமே இந்த நிலையிலேயே இருக்கிறது என்று நினைக்கிறோம். உண்மையில் அப்படியல்ல என்றாலும் நமது அடிமைத்தனத்தைக்கொண்டு இந்தியா முழுவதுமே அவ்வாறு இருப்பதாகச் சொல்லுகிறோம். ஆனால், மேற்கண்ட உண்மையை மனத்தில் வைத்தால், நாம் சுதந்திரம் பெற்றால் இந்தியா சுதந்திரம் அடையும் என்பது தெரியும். இந்த எண்ணத்திலேயே சுயராஜ்யத்தைப் பற்றிய விளக்கம் உங்களுக்குக் கிடைக்கும். நம்மை நாமே ஆளத் தெரிந்துகொள்ளுவதே சுயராஜ்யம். ஆகையால் அது நம் கையில்தான் இருக்கிறது. இந்தச் சுயராஜ்யம், ஒரு கனவைப் போன்றது என்று நினைக்கவேண்டாம். சும்மா உட்கார்ந்திருப்பதால் அது வரும் என்பதல்ல. அதை அடைந்து விட்டபிறகு, மற்றவர்களும் அப்படியே செய்யும்படி நம் ஆயுள் இறுதிவரை பாடுபட வேண்டும்; இதுவே நான் சித்திரிக்க விரும்பும் சுயராஜ்யம். ஆனால், அத்தகைய சுயராஜ்யத்தை ஒவ்வொருவரும் தனக்குத்தானே அனுபவிக்கவேண்டும். நீரில் மூழ்கிச் சாகும் நிலையில் இருப்பவன் இன்னொருவரைக் காப்பாற்றவே முடியாது. நாமே அடிமைகளாக இருக்கும்போது, மற்றவர்களை விடுவிப்பதாக நினைப்பது வெறும் பாசாங்கேயாகும். ஆங்கிலேயரை விலக்குவதை லட்சியமாக நாம் கொள்ளவேண்டிய அவசியமில்லை என்பதை இப்பொழுது நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஆங்கிலேயர் இந்திய மயமாகிவிடுவார்களானால் அவர்கள் நம்முடன் இருக்க இடங்கொடுக்கலாம். இந்தியாவில் தங்களுடைய நாகரிகத்துடன் இருந்துவர விரும்புவார்களானால், அவர்களுக்கு இங்கே இடமில்லை. அத்தகைய நிலைமையை உண்டாக்குவது நம்மிடந்தான் இருக்கிறது.

வாசகர்: ஆங்கிலேயர்கள் எப்பொழுதாவது இந்திய மயமாவார்கள் என்பது நடக்காத காரியம்.

ஆசிரியர்: அப்படிச் சொல்லுவது, ஆங்கிலேயருக்கு மனிதத்தன்மையே கிடையாது என்று சொல்லுவதைப் போன்றதாகும். அவர்கள் அப்படி ஆகிறார்களா, இல்லையா என்பது உண்மையில் முக்கியமானதன்று. நாம் நம் வீட்டைச் சரியாக வைத்துக்கொண்டால், அதில் வசிக்கத் தகுதியுள்ளவர்கள் மாத்திரமே தங்குவார்கள். மற்றவர்கள் தங்கள் இஷ்டம் போல் போய்விடுவார்கள். இவ்விதம் நடப்பதுண்டு என்பது நம் எல்லோர் அனுபவத்திலும் பார்க்கலாம்.

வாசகர் : ஆனால், அது சரித்திரத்தில் நிகழ்ந்ததில்லை.

ஆசிரியர் : சரித்திரத்தில் நிகழாதது எப்பொழுதுமே ஏற்படாது என்று நம்புவது, மனிதனுடைய கண்ணியத்தில் அவநம்பிக்கைகொண்டு விவாதிப்பதாகும். என்றாலும், நமக்குச் சரியெனத் தோன்றுவதை முயற்சி செய்யவேண்டியது நம் பொறுப்பு. இதே போன்ற நிலைமை எல்லா நாடுகளிலும் இருந்து வரவில்லை. இந்தியாவின் நிலைமை தனிச் சிறப்பு வாய்ந்தது. அதற்குரிய வன்மை அமோகமானது. ஆகவே மற்ற நாட்டின் சரித்திரத்தைப் பற்றி நாம் குறிப்பிடவேண்டிய அவசியமில்லை. மற்ற நாகரிகங்கள் செத்துவிட்ட போதிலும் இந்திய நாகரிகம் பல அதிர்ச்சிகளையும் தாங்கிக்கொண்டு உயிருடன் இருந்துவருகிறது என்ற உண்மையை நான் எடுத்துக் காட்டியிருக்கிறேன்.

வாசகர்: இதை நான் அறிந்துகொள்ள முடியவில்லை. ஆங்கிலேயர்களை ஆயுத பலங்கொண்டு விரட்டியாக வேண்டும் என்பதில் சந்தேகமே இருப்பதாகத் தோன்றவில்லை. அவர்கள் இந்நாட்டில் இருக்கும் வரையில் நாம் அயர்ந்திருக்கமுடியாது. அடிமைகள், மகிழ்ச்சி என்பதைக் கனவிலும் காண இயலாது என்று நம் கவிகளில் ஒருவர் கூறுகிறார். ஆங்கிலேயர்கள் இங்கிருப்பதால் நாளுக்கு நாள் நாம் பலவீனர்களாகி வருகிறோம். நமது பெருமையெல்லாம் போய்விட்டது. நம் மக்கள் நடுங்கிக் கிடப்பவர்களாகக் காணப்படுகின்றனர். நாட்டில் ஆங்கிலேயர் ஒரு நோய் போன்று இருக்கிறார்கள். ஆகையால் எந்த வகையிலும் அவர்களை நாம் ஒழித்தாகவேண்டும்.

ஆசிரியர் : உங்களுடைய துடிதுடிப்பில் இதுவரை நாம் கவனித்து வந்ததையெல்லாம் மறந்துவிட்டீர்கள்; ஆங்கிலேயர்களை நாமே அழைத்தோம்; அவர்களை நாமே வைத்துக்கொண்டும் இருக்கிறோம். நாம் அவர்களுடைய நாகரிகத்தை மேற்கொள்ளுவதொன்றே இந்தியாவில் அவர்கள் இருப்பதை சாத்தியமானதாக்குகிறது. இதை நீங்கள் ஏன் மறந்துவிடுகிறீர்கள்? அவர்கள்மீது உங்களுக்கிருக்கும் வெறுப்பை அவர்களுடைய நாகரிகத்தின்மீது மாற்றவேண்டும். போராடியே ஆங்கிலேயரை நாம் துரத்த வேண்டும் என்று வைத்துக் கொள்ளுவோம். அதைச் செய்வது எப்படி?

வாசகர் : இத்தாலி எப்படி செய்ததோ அதே வழியில் தான். மாஜினிக்கும் கரிபால்டிக்கும் சாத்தியமானது நமக்கும் சாத்தியமேயாகும். அவர்கள் மிகச் சிறந்தவர்கள் என்பதை நீங்கள் மறக்கமுடியாது.

## அத்தியாயம் 15

# இத்தாலியும் இந்தியாவும்

ஆசிரியர்: இத்தாலியை உதாரணமாக நீங்கள் காட்டியது நல்லதே. மாஜினி மிகப் பெரிய மனிதர், நல்லவருங்கூட. கரிபால்டி சிறந்த போர்வீரர். இருவரும் போற்றத்தக்கவர்கள். அவர்களுடைய வாழ்க்கையிலிருந்து நாம் எவ்வளவோ அறியமுடியும். ஆனால், இத்தாலியின் நிலைமைக்கும் இந்தியாவின் நிலைமைக்கும் மாறுபாடு உண்டு. முதலாவதாக மாஜினிக்கும் கரிபால்டிக்குமுள்ள பேதமும் கவனிக்க வேண்டியதாகும். இத்தாலி சம்பந்தமாக மாஜினி* கொண்டிருந்த ஆசைகள் நிறைவேறவே இல்லை. மாஜினி, மனிதனுடைய கடமையைப் பற்றி எழுதியிருப்பவைகளில் தன்னைத்தானே எப்படி ஆள்வது என்பதை ஒவ்வொருவரும் அறிந்துகொள்ளவேண்டும் என்கிறார். இத்தாலியில் இது நடைபெறவில்லை. மாஜினியின் இக்கருத்து கரிபால்டிக்கு†

---

* குயிசெப் மாஜினி (1805—1872)—சிறந்த இத்தாலிய தேசீயத் தலைவர். இத்தாலியின் சுதந்திரத்திற்காக இவர் பாடுபட்டதனால் அதிகாரிகளின் வெறுப்புக்கு ஆளானார். இதனால் நாட்டைவிட்டே இவர் வெளியேறிவிட வேண்டியதாயிற்று. இவர் மார்ஸேல்ஸில் 'எங் இத்தாலி' என்ற பத்திரிகையை ஆரம்பித்து இத்தாலியருக்குச் சுதந்திர ஆர்வத்தை மூட்டினார். பிறகு 1837—இல் லண்டனுக்குச் சென்று அங்கிருந்தபடியே இத்தாலியில் ஆட்சியிலிருந்த அரசாங்கத்தை எதிர்த்தார். 1848—இல் இவர் இத்தாலிக்குத் திரும்பினார். ரோமர் குடியரசில் சர்வாதிகாரியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். இதற்குள் பிரான்ஸ், இத்தாலியைப் பிடித்துக்கொண்டு விட்டதால் மாஜினி நீடித்து ஆட்சி நடத்த முடியவில்லை. இவர் இங்கிலாந்துக்கு மீண்டும் விரட்டப் பட்டுவிட்டார். மாஜினி கூறிவந்ததற்கு மாறான வழிகளில் இத்தாலிய நாடு ஒன்றாக்கப்பட்டது. என்றாலும், ஒன்றுபட்ட இத்தாலியின் மன்னராக விக்டர் எமானுவல் ஆட்சி அதிகாரத்திற்கு வந்ததைப் பார்த்துவிட்டே மாஜினி காலமானார்.

† கரிபால்டி (1807—1882)—பிரபலமான இத்தாலிய தேசத் தலைவரும் பக்தருமாவார். அரசாங்கக் கப்பலொன்றைக் கைப்பற்றும் சதியில் ஈடுபட்டிருந்தார் என்ற குற்றத்திற்காக 1834—இல் தூக்குதண்டனை அடைந்தார். ஆனால், தென்னமெரிக்காவுக்குத் தப்பி ஓடிவிட்டார். புரட்சி இயக்கங்கள் மிகுந்திருந்த அந்நாட்டில் சுதந்திரத்திற்காகச் சில ஆண்டுகள் போராடினார். பின்னர் 1848—இல் இத்தாலிக்குத் திரும்பி, ரோமர் குடியரசு அரசாங்கத்தில் சேர்ந்தார். ஆனால், இவர் உயிருக்காகத் தப்பி நாட்டைவிட்டு ஓடிவிட நேர்ந்தது. அப்பொழுது அமெரிக்காவுக்குப் போய் குடிபுகுந்தார். 1854—இல் மீண்டும் இத்தாலிக்குத் திரும்பினார். 1859—இல் போர் மூளவே இவரை ஒரு படைக்குத் தளபதியாக்கினர். ஆஸ்திரியர்களை எதிர்த்துப் பல போர்களில் வெற்றி கண்டார். அடுத்த ஆண்டு மக்களின் ஒரு பெரிய படைக்குத் தளகர்த்தரானார். இத்தாலியின் விடுதலைக்கென்று எழுந்த இப்படையின் தளபதியாயிருந்து வெற்றி கொண்டார். இவருடைய போர்த்திறமையையும் சிறந்த தேசபக்தியையும் கண்டு உலகமே இவரைப் போற்றிப் புகழ்ந்தது.

இல்லை. கரிபால்டி கொடுத்தார்; ஒவ்வொரு இத்தாலியரும் ஆயுதம் ஏந்தினர். இத்தாலியும், ஆஸ்திரியாவும் ஒரே நாகரிகத்தைச் சேர்ந்தவை. இவ்விஷயத்தில் அவர்கள் சகோதரர்களின் மக்களைப் போன்றவர்கள். பதிலுக்குப் பதில் என்பதே இவர்களது விஷயம். ஆஸ்திரியாவின் விலங்கிலிருந்து இத்தாலி விடுதலை பெற வேண்டும் என்று கரிபால்டி கருதினர். மந்திரி காவோரின் சூழ்ச்சிகள், இத்தாலிய சரித்திரத்தின் அப்பகுதிக்கே பெரிதும் இழுக்கைத் தந்தன. இதன் விளைவு என்ன? இத்தாலியை இத்தாலியர் ஆளுவதால் இத்தாலிய மக்கள் சுகமாக இருப்பதாக நீங்கள் நம்புவதாயின், நீங்கள் இருளில் தடுமாறுகிறீர்கள் என்றுதான் சொல்ல முடியும். இத்தாலி சுதந்திரம் அடைந்து விடவில்லை என்பதை முடிவாக மாஜினி காட்டியிருக்கிருர். விக்டர் எமானுவல் அந்தக் கருத்துக்கு ஒரு பொருள் கூறினர்; மாஜினி வேறு பொருள் கூறினர். எமானுவல், காவோர் ஆகியோரின்படியும், கரிபால்டியின் படியுங்கூட, இத்தாலி என்ருல் இத்தாலிய மன்னரும் அவருடைய ஆட்களும் என்றே பொருள். மாஜினியின் கருத்துப்படி, இத்தாலி என்பது இத்தாலிய மக்கள் எல்லோரையும், அதாவது அதன் விவசாயிகளையும் குறிக்கும். எமானுவல் அதன் ஊழியரே யாவர். மாஜினி கருத்தில் கொண்ட இத்தாலி இன்னும் அடிமை நிலையிலேயே இருந்து வருகிறது. தேசீய யுத்தம் என்று கூறப்பட்ட போர்க்காலத்தில், ஒருவருக்கொருவர் போட்டியான இரு மன்னர்கள் இத்தாலிய மக்களைக் காய்களாக வைத்துச் சதுரங்கம் ஆடினர். அந்நாட்டுத் தொழிலாளர் வகுப்பினர் இன்னும் துன்ப நிலையிலேயே இருக்கின்றனர். ஆகையால், அவர்கள் படுகொலைகளில் ஈடுபடுவதோடு அவர்கள் அளவில் புரட்சியும் கலவரமும் எப்பொழுதும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆஸ்திரியப் படைகள் வெளியேறிய பிறகு உருப்படியாக இத்தாலி அடைந்த பலன்கள் யாவை? பலன் பெயரளவிலேதான். எந்தச் சீர்திருத்தங்களுக்காகப் போரை மேற்கொண்டார்கள் என்று கருதப்பட்டதோ அவை இன்னும் அளிக்கப்படவில்லை, பொதுவாக மக்கள் நிலை பழைய நிலையாகவே இருந்து வருகிறது. அத்தகையதோர் நிலைமையையே இங்கும் உண்டாக்க நீங்கள் விரும்பவில்லை என்றே நான் நிச்சயமாக எண்ணுகிறேன். அரசாங்கத்தின் கடிவாளம் உங்கள் கைக்கு வரவேண்டும் என்று நீங்கள் எண்ணவில்லை, கோடிக்கணக்கான இந்திய மக்கள் இன்புற்று வாழ விரும்புகிறீர்கள் என்றே நம்புகிறேன். அப்படித்தான் என்ருல், நாம் ஒன்றை மாத்திரமே கவனிக்க

வேண்டும்; கோடிக்கணக்கான மக்கள் சுயாட்சி அடைவது எப்படி? பல இந்திய மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருக்கும் மக்கள் ஒடுக்கப்பட்டிருக்கின்றனர் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளுவீர்கள். பச்சாத்தாபமின்றி அவர்களை நசுக்கி வருகிறார்கள் இம்மன்னர்கள். இவர்கள் செய்யும் கொடுமை ஆங்கிலேயரின் அட்டுழியங்களைவிட அதிகம். இத்தகைய அக்கிரமங்களையே நீங்கள் இந்தியாவில் விரும்புவதாயின் நாம் ஒத்துப்போகவே முடியாது. பிரிட்டிஷார் மாத்திரம் வெளியேறி விடுவதாயின் இந்திய மன்னர்களின் காலடிகளில் மக்கள் நசுக்கப்படுவதை நான் அனுமதிக்க வேண்டும் என்று எனக்கு என் தேசாபிமானம் போதிக்கவில்லை. எனக்குச் சக்தி மாத்திரம் இருக்குமானால், ஆங்கிலேயரின் கொடுமைகளை எப்படி எதிர்ப்பேனோ அதே போலவே இந்திய மன்னர்களின் கொடுமைகளையும் எதிர்ப்பேன். தேசாபிமானம் என்றால் மக்கள் நல்வாழ்வு என்றே நான் கருதுகிறேன். ஆங்கிலேயரின் கையால் நான் அதைப் பெறுவதாயிருந்தால், அவர்களுக்கு நான் தலைவணங்குவேன். இந்தியாவின் சுதந்திரத்தை அடைவதற்காகவும், கொடுமையை எதிர்க்கவும், நாட்டிற்குச் சேவை செய்யவும், ஆங்கிலேயர் யாராவது தம் வாழ்க்கையை அர்ப்பணஞ் செய்வாரானால், அந்த ஆங்கிலேயரை ஓர் இந்தியராகவே நான் வரவேற்பேன்.

மேலும், ஆயுதங்கள் இருந்தால் இத்தாலியைப் போல இந்தியா போராட முடியும். இந்தப் பிரச்னையைப் பற்றி நீங்கள் சிந்திக்கவேயில்லை. ஆங்கிலேயர்கள் அற்புதமான ஆயுதபாணிகளாக இருக்கின்றனர். அது என்னைப் பயமுறுத்திவிடவில்லை. ஆனால், ஆயுதத்தில் அவர்களுக்கு இணையாக நாம் ஆவதற்கு ஆயிரக் கணக்கான இந்தியர் ஆயுதபாணிகளாகவே வேண்டும். அத்தகைய காரியம் சாத்தியம் என்றால், அதற்கு எத்தனை ஆண்டுகள் பிடிக்கும்? மேலும், பெருமளவில் இந்தியாவை ஆயுதபாணிகளாக்குவதென்பது இந்தியாவை ஐரோப்பியமயமாக்கி விடுவதேயாகும். பிறகு இந்தியரின் நிலை ஐரோப்பிய நிலையைப்போல இரங்கத்தக்கதாகவே ஆகும். சுருங்கச் சொன்னால், இந்தியா ஐரோப்பிய நாகரிகத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்கிறது. நாம் விரும்புவதெல்லாம் அதுவேயெனின், அந்த நாகரிகத்தில் நல்ல தேர்ச்சி பெற்றவர்களை நம்மிடையே வைத்திருப்பதுதான் அதற்குச் சரியான வழி. பிறகு நாம் சில உரிமைகளுக்காகப் போராடலாம்;

நம்மால் முடிந்ததை நாம் அடையலாம். இவ்விதம் நாளைக் கடத்திக்கொண்டு போகலாம், ஆனால், உண்மை என்னவென்றால், இந்திய சமூகம் ஆயுதங்களை மேற்கொள்ளாது; அப்படி மேற்கொள்ளாததும் நல்லதே.

வாசகர்: உண்மை நிலையை அதிகப்படுத்திக் கூறுகிறீர்கள். எல்லோரும் ஆயுதபாணிகள் ஆகவேண்டிய அவசியமில்லை. முதலில் ஒரு சில ஆங்கிலேயரைப் படுகொலை செய்து திகில் அடையச் செய்வோம்; பின்னர் ஆயுதபாணிகளான சிலர் பகிரங்கமாகப் போராடுவார்கள். ஏறக்குறைய இரண்டரை லட்சம் பேரை நாம் இழக்க நேரும். ஆனால், நம் நாட்டை நாம் திரும்ப அடைந்துவிடுவோம். பதுங்கியிருந்து போராடும் முறையை நாம் மேற்கொண்டு ஆங்கிலேயரைத் தோற்கடித்துவிடலாம்.

ஆசிரியர்: அதாவது, தெய்விக நாடான இந்தியாவைத் தெய்விகமற்ற நாடாக்கிவிட விரும்புகிறீர்கள். படுகொலையின் மூலம் இந்தியாவை விடுவிக்க எண்ணுவதைக் குறித்து நீங்கள் நடுக்கமுறவில்லையா? நாம் செய்ய வேண்டியதெல்லாம் நம்மை நாமே தியாகம் செய்துகொள்ளுவதேயாகும். மற்றவர்களைக் கொல்ல நினைப்பதே கோழைத்தனமான செய்கை. படுகொலை மூலம் நீங்கள் யாரை விடுவிக்க உத்தேசிக்கிறீர்கள்? இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள் இதை விரும்பவில்லை. பாழான நவநாகரிக போதையில் இருப்பவர்களே இவைகளையெல்லாம் எண்ணுகிறார்கள். கொலையின் மூலம் அதிகாரத்திற்கு வருகிறவர்கள், நாட்டு மக்களை இன்பமயமாக்கவே முடியாது. திங்கராவின்* செய்கையினாலும் இந்தியாவில் இதுபோன்ற வேலைகளினாலும்

---

* மதன்லால் திங்கரா: 1909 ஜூலை 1-ஆம் தேதி லண்டனில் ஸர் கர்ஜான் வில்லி என்பவரைக் கொன்றுவிட்டார். திங்கரா, முதலில் போலீஸ் கோர்ட்டில் தமது குற்றத்தை ஒப்புக்கொண்டதோடு, தேசபக்தன் என்ற முறையில் இத்தகைய காரியத்தைச் செய்ய தமக்கு உரிமை உண்டு என்றார். பின்னர் ஓல்டு பெய்லி கோர்ட்டில் இவ் வழக்கில் தமக்குத் தண்டனை விதிக்க பிரதம நீதிபதிக்கு உரிமை கிடையாது என்றார். கோர்ட்டில் திங்கரா கூறியதாவது: "தேசாபிமானம் மிக்க இந்திய இளைஞர்களைத் தூக்கிலிட்டு, நாடு கடத்தப்படும் மிருகத்தனமான செய்கைக்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ளுவதற்காக ஆங்கிலேயர் ரத்தத்தைச் சிந்த அன்று முயன்றேன் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இம்முயற்சியில் நான் எனது மனச்சாட்சியைத் தவிர வேறு யாரையும் கலந்தாலோசிக்கவில்லை. என் கடமையைத் தவிர வேறு யாருடனும் சேர்ந்து நான் சதியாலோசனை செய்யவுமில்லை. அந்நியரின் துப்பாக்கி முனை கொண்டு அடக்கி வைக்கப்பட்டிருக்கும் ஒரு நாட்டு மக்கள், நிராயுதபாணிகளான ஓர் இனத்தினருக்குப் போராடுவது என்பது அடிக்கடி மறுக்கப்பட்டிருப்பதால், நிரந்தரமான போர் நிலையிலேயே இருக்கிறார்கள் என்று நான் நம்புகிறேன். திடீரெனத் தாக்கினேன்; எனக்குத் துப்பாக்கி மறுக்கப்பட்டதால் என் கைத்துப்பாக்கியால் சுட்டேன். ஹிந்து என்ற முறையில், நாட்டுக்கு இழைக்கப்படும் தீமையைக் கடவுளுக்குச் செய்யப்

இந்தியா நன்மை அடைந்திருக்கிறது என்று எண்ணுகிறவர்கள், மகா மோசமான தவறே செய்கின்றனர். திங்கரா ஒரு தேச பக்தர். ஆனால், அவருடைய ஆசை கண்மூடித்தனமானது. தவறான வழியில் அவர் தன் உடலைக் கொடுத்துவிட்டார். அதன் முடிவான பலன் விஷமத்தனமானதாகவே இருக்க முடியும்.

வாசகர்: ஆனால், இந்தக் கொலைகளினால் ஆங்கிலேயர் பயம் அடைந்துவிட்டனர் என்பதையும், அந்தப் பயத்தின் காரணமாகவே லார்டு மார்லியின் சீர்திருத்தங்கள் தோன்றின என்பதையும் நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள்.

ஆசிரியர்: ஆங்கிலேயர், பயமும் தீரமும் கொண்ட தேசத்தவர். வெடி மருந்தின் உபயோகத்தினால் இங்கிலாந்து சுலபத்தில் மாறிவிட்டது என்று நான் நம்புகிறேன். லார்டு மார்லி, பயத்தின் காரணமாகச் சீர்திருத்தங்களை அளித்திருக்கக்கூடும். ஆனால், பயத்தின் காரணமாக அளிக்கப்பட்டது எதுவும் அந்தப் பயம் இருந்துவரும் வரையில்தான் நீடிக்கும்.

---

படும் அவமதிப்பாக நான் கருதினேன். அவளுடைய (தாய்நாட்டின்) லட்சியம் ஸ்ரீ ராமரின் லட்சியம்; அவளுக்குச் செய்யும் சேவை ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் செய்யும் சேவை. செல்வத்திலும் அறிவிலும் ஏழையான என்னைப் போன்ற ஒரு மகன், தன் தாய்க்கு அர்ப்பணம் செய்யக்கூடியது, தனது சொந்த ரத்தத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை. எனவே அதையே அவளுடைய பாதங்களில் அர்ப்பணஞ் செய்கிறேன். இந்தியாவுக்கு இப்பொழுது தேவைப்படும் படிப்பினை, எப்படிச் சாவது என்பதை அறிந்துகொள்ளுவதே. இதைப் போதிப்பதற்குள்ள ஒரே வழி நாமே சாவதுதான். ஆகையால், நான் உயர்ந்த லட்சியத்திற்கு உயிரைக் கொடுத்துக் கீர்த்தியுடன் சாகிறேன்.''

தாம் செய்த காரியம் முற்றிலும் சரியானது என்று திங்கரா கோர்ட்டில் தீரமாக, ஆணித்தரமாகச் சொன்னார். தமது வாக்குமூலத்தின் இறுதியில் அவர் கூறியதாவது: "கடவுளிடம் ஒன்றே ஒன்றுக்காகப் பிரார்த்தனை செய்கிறேன். என் தாய்நாடு தன்னுடைய லட்சியத்தில் வெற்றியடைந்து, மனித வர்க்கத்தின் நன்மைக்காகவும் கடவுளின் கீர்த்திக்காகவும் சுதந்திரத்துடன் நிற்கும் வரையில், நான் இதே தாய்நாட்டிற்கு மகனாகப் பிறந்து, இதே தெய்வீக லட்சியத்திற்காக திரும்பவும் சாக அருள வேண்டும் என்பதே என் பிரார்த்தனை.'' "வந்தேமாதரம்" என்பதே அவர் உச்சரித்த கடைசிச் சொல்.

அச்சம்பவம் நடந்துவிட்ட கொஞ்ச காலத்திற்கெல்லாம் காந்திஜி லண்டனுக்குச் சென்றிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

திங்கரா கோர்ட்டில் கொடுத்த வாக்குமூலம் அநேகருக்கு அதிக உணர்ச்சியை ஊட்டியது. அப்பொழுது பிரிட்டிஷ் காலனிகளின் உதவி மந்திரியாக இருந்த ஸ்ரீ வின்ஸ்டன் சர்ச்சில், "தேசாபிமானத்தின் பெயரால் இதுவரையில் செய்யப்பட்டிருக்கும் சொற்பொழிவுகளிலெல்லாம் இது மிகச் சிறந்தது'' என்று குறிப்பிட்டார்

## அத்தியாயம் 16

# மிருக பலம்

வாசகர்: பயத்தின் மூலம் அடைந்தது, பயம் இருந்து வரும்வரையில்தான் நீடித்து வரும் என்பது ஒரு புதிய தத்துவம். உண்மையில் கொடுக்கப்பட்டுவிட்டது திரும்பி எடுத்துக் கொள்ளப்படாதல்லவா?

ஆசிரியர்: அப்படியல்ல. ஒரு புரட்சியின் முடிவில், சமாதானத்தை உண்டாக்குவதற்காக 1857-ஆம் வருடப் பிரகடனம்* அளிக்கப்பட்டது. சமாதானம் ஏற்பட்டு விட்டதும், மக்கள் மனத்தில் அமைதி நிலவியதும் அதன் முழுப்பலனும் குறைக்கப் பட்டுவிட்டது. தண்டனைக்கு அஞ்சி நான் திருடுவதைக் கைவிட் டேனுயின், எனக்கு அந்தப் பயம் நீங்கியதுமே நான் திரும்பவும் திருட ஆரம்பித்து விடுவேன். இதுதான் அநேகமாக எங்கும் காணும் அனுபவம். பலாத்காரத்தினுல் காரியங்களைச் செய்ய ஆட்கள் கிடைப்பார்கள் என்று எண்ணிக்கொள்ளுகிருேம். ஆகையினுல், நாம் பலாத்காரத்தை உபயோகிக்கிருேம்.

வாசகர்: உங்களுடைய விவாதம் உங்களுக்கு எதிரிடையாகவே இருப்பதை நீங்கள் ஒப்புக் கொள்ளுவீர்களா? தம் சொந்த நாட்டில் ஆங்கிலேயர் அடைந்துள்ளவை யாவும் மிருக பலத்தை உபயோகித்தே அடைந்தவையாகும் என்பதை நீங்கள் அறிவீர்கள். அவர்கள் அடைந்த விஷயங்கள் பயனற்றவை என்று நீங்கள் விவாதிக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனுல், அது என் வாதத்தைப் பாதிக்கவில்லை. அவர்கள் பயனில்லா காரியங்களை விரும்பினுர்கள்; அவற்றை அடைந்தார்கள்; அவர்கள் விருப்பம் என்னவோ நிறைவேறியது என்றே நான் குறிப்பிடுகிறேன். எந்த முறையை அவர்கள் உபயோகித்தால் என்ன? நல்லதான ஒரு லட்சியத்தை, எந்த வழியிலாவது, பலாத்காரத்தைக் கொண்டாகிலும், ஏன் நாம்

---

* 'சிப்பாய்க் கலகம்' என்று ஆங்கிலேயரால் கூறப்பட்ட இந்தியாவின் முதல் சுதந்திரப் போராட்டமான 1857-ஆம் வருடப் புரட்சிக்குப் பிறகு கிழக்கிந்தியக் கம்பெனியிடமிருந்து இந்திய நிர்வாகத்தைப் பிரிட்டிஷ் சர்க்காரே நேரிடையாக எடுத்துக் கொண்டு விக்டோரியா மகாராணி ஒரு பிரகடனம் பிறப்பித்தார். மதம், பழக்க வழக்கம் காரணமாக யாரும் துன்புறுத்தப்படமாட்டார்கள்; சட்டத்தின் கீழ் எல்லோருக்கும் பாரபட்சமற்ற பாதுகாப்பு உண்டு; குடிகளின் மத விஷயத்தில் அரசாங்கம் குறுக்கிடாது; எல்லா மதத்தினருக்கும் பாரபட்சமின்றி உத்தியோகங்கள் வழங்கப்படும் என்பதே அப்பிரகடனத்தில் கண்ட முக்கியமானவை.

அடையக் கூடாது? வீட்டுக்குள்ளே இருக்கும் ஒரு திருடனைச் சமாளிக்கவேண்டியிருக்கும்போது, கையாள எந்த முறை நல்லது என்று நான் சிந்திக்க வேண்டுமா? எப்படியாவது அவனை வெளியே விரட்டியாகவேண்டியது என் கடமை. மனுச் செய்து கொள்ளுவதனால் எதையுமே நாம் அடைந்து விடவில்லை, எதையுமே அடைந்துவிடவும் முடியாது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவதாகத் தோன்றுகிறது. அப்படி இருக்க மிருகபலத்தை உபயோகித்து நாம் ஏன் அப்படிச் செய்யக்கூடாது? மேலும் நாம் அடையப்போவதைக் காத்துக்கொள்ளுவதற்கு அவசியமான அளவுக்குப் பலத்தை உபயோகிக்க முடியும் என்ற பயம் இருக்கச் செய்யவேண்டும். ஒரு குழந்தை தீயில் காலை விட்டு விடாமல் தடுப்பதற்குத் தொடர்ந்து பலவந்தத்தை அனுசரிப்பது குறித்து நீங்கள் குற்றங் கூறமுடியுமா? எப்படியாவது நமது லட்சியத்தை நாம் அடைந்தாக வேண்டும்.

ஆசிரியர்: உங்கள் நியாயம் வெளிக்கு நன்றாகவே தோன்றுகிறது. இது பலரைத் தப்பான வழியில் செலுத்தியிருக்கிறது. இதற்கு முன்னால் நானும் இந்த வாதத்தையே உபயோகித்து வந்தேன். ஆனால், இப்பொழுது நன்றாகப் புரிந்துகொண்டிருக்கிறேன் என நினைக்கிறேன்; உங்களை நான் ஏமாற்றாமல் இருக்கவும் முயல்வேன். ஆங்கிலேயர் தங்கள் லட்சியங்களை மிருக பலத்தை உபயோகித்தே அடைந்திருக்கிறார்களாகையால் நாமும் அதே முறையை உபயோகித்து நமது லட்சியத்தை அடைவது நியாயமே என்ற வாதத்தை முதலில் எடுத்துக்கொள்ளுவோம். அவர்கள் மிருக பலத்தை உபயோகித்தார்கள். அதே மாதிரி நாம் செய்வதும் சாத்தியமே என்பது முற்றிலும் உண்மை. ஆனால், அதே போன்ற முறையை உபயோகிப்பதனால், அவர்கள் அடைந்ததைப் போன்றதையே நாமும் அடைய முடியும். நாம் அதை விரும்பவில்லை என்பதை நீங்களும் ஒப்புக்கொள்ளுவீர்கள். லட்சியத்திற்கும், அதை அடைவதற்காகக் கையாளும் முறைக்கும் சம்பந்தமே கிடையாது என்று நீங்கள் நம்புவது பெரிய தவறு. தெய்வபக்தியுள்ளவர்கள் என்று கருதப்பட்டவர்கள்கூட அந்தத் தவறினால் மகா மோசமான குற்றங்களைச் செய்திருக்கிறார்கள். விஷப்பூண்டை நட்டு விட்டு அதிலிருந்து ரோஜா மலரை அடையலாம் என்பதைப் போன்று இருக்கிறது, உங்கள் நியாயம். சமுத்திரத்தைக் கடக்கவேண்டுமானால் கப்பலைக் கொண்டே நான் கடக்க முடியும். ஆனால், இதற்கு நான் வண்டியை உபயோகிப்பதென்றால், வண்டியும் நானும்

உடனே பாதாளத்தில் போக வேண்டியதே. "கடவுளைப் போலவே பக்தனும் இருப்பான்" என்ற கோட்பாடு சிந்திக்கத்தக்கதாகும். அதனுடைய பொருள் சிதைக்கப்பட்டு விட்டதோடு மனிதரும் தவறான வழிகளில் போய் விட்டார்கள். அனுசரிக்கும் முறையை விதைக்கும், மரத்தை லட்சியத்திற்கும் ஒப்பிடலாம். விதைக்கும், மரத்திற்கும் இருப்பதைப் போன்றே, அனுசரிக்கும் முறைக்கும் லட்சியத்திற்கும் மீற முடியாத தொடர்பு உண்டு. சைத்தானின் முன்பு நான் அடிபணிந்து கொண்டு, கடவுளைப் பிரார்த்திப்பதால் பொழியப்படும் பலனை நான் அடையவே முடியாது. ஆகையால், எவராயினும் ஒருவர், "நான் கடவுளைப் பிரார்த்தனை செய்ய விரும்புகிறேன். சைத்தானை வழிபடுவதன் மூலம் அதைச் செய்தாலும் பரவாயில்லை" என்று சொன்னால், அதை அறியாத்தனமான தவறு என்றே கொள்ளவேண்டும். எதை விதைக்கிறோமோ அதையேதான் அறுவடை செய்யமுடியும். ஆங்கிலேயர்கள் 1833-இல் பலாத்காரத்தினால் அதிக வாக்குரிமையைப் பெற்றார்கள். மிருக பலத்தை உபயோகிப்பதனால் தங்கள் கடமையை அவர்கள் அதிகமாக உணர்ந்து கொண்டார்களா? வாக்குரிமை வேண்டும் என விரும்பினார்கள்; உடல் பலத்தை உபயோகித்து அதைப் பெற்றார்கள். ஆனால், உண்மையான உரிமைகள், கடமையைச் செய்வதன் பலனாக ஏற்படுபவை. இந்த உரிமைகளை அவர்கள் அடையவே இல்லை. ஆகையால், இங்கிலாந்தில் ஒவ்வொருவரின் சக்தியும் தனது உரிமையை விரும்புவதோடு அதை வற்புறுத்தி வருவதையும், தமது கடமையைப்பற்றி யாருமே சிந்திப்பதில்லை என்பதையும் நாம் பார்க்கிறோம். ஒவ்வொருவரும் உரிமையைக் கேட்டால், அதை யார், யாருக்கு வழங்குவது? இதனால் அவர்கள் கடமையையே செய்யவில்லை என்று சொல்லிவிட நான் விரும்பவில்லை. அந்த உரிமைகளுக்கு ஏற்றபடி அவர்கள் கடமைகளை நிறைவேற்றுவதில்லை; தகுதி அடைவது என்ற அந்தக் குறிப்பிட்ட கடமையை அவர்கள் நிறைவேற்றிக் கொள்ளாததனால், அவர்களுடைய உரிமைகளே அவர்களுக்குச் சுமையாய் இருக்கின்றன. அதாவது, அவர்கள் என்ன முறையை உபயோகித்தார்களோ அதற்குரிய சரியான பலனையே அவர்கள் அடைந்திருக்கிறார்கள். லட்சியத்திற்கு ஏற்றதான முறையை அவர்கள் உபயோகித்தார்கள். உங்களிடமிருந்து உங்கள் கடிகாரத்தைப் பறித்துவிட நான் விரும்பினால், அதற்காக உங்களிடம் நான் போராடித்தான் ஆகவேண்டும். உங்கள் கடிகாரத்தை நான்

விலைக்கு வாங்க விரும்பினல், அதற்குரிய விலையை நான் கொடுக்க வேண்டும். எனக்கு அது இனமாக வேண்டுமாயின், அதற்காக உங்களைக் கெஞ்சியாகவேண்டும். இதற்கு நான் கையாளும் முறையையொட்டி அந்தக் கடிகாரம் திருட்டுச் சொத்தாகவும் ஆகலாம், என் சொந்தப் பொருளாகவும் மாற லாம். அல்லது இனமாகக் கிடைத்ததாகவும் ஆகலாம். இவ் விதம் வெவ்வேறு மூன்று வகையான முறைகளினல் வெவ்வேறு மூன்று வகையான பலன்களைக் காண்கிறோம். முறையைப் பற்றி அவசியமில்லை என்றுதான் இனியும் நீங்கள் கூறுவீர் களா?

திருடனை விரட்டியாகவேண்டும் என்ற உதாரணத்தைக் கூறினீர்களே, அதை இப்பொழுது எடுத்துக்கொள்ளுவோம். எந்த முறையைக்கொண்டும் திருடனை விரட்டியடிக்கலாம் என்று நீங்கள் கூறுவதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. திருட வந்தது என் தந்தையாக இருந்தால், ஒருவித முறையை உபயோகிக்கவேண்டும்; தெரிந்தவராக இருப்பின் இன்னொரு முறையை அனுசரிக்கவேண்டும்; முன் பின் தெரியாத புதியவராயிருந்தால் மூன்ருவதான மற்ருெரு முறையைக் கையாளவேண்டும். திருட வந்தது வெள்ளைக்காரனுக இருந் தால், ஓர் இந்தியத் திருடனிடம் உபயோகிக்கும் முறைக்கு வேருனதை உபயோகிப்பீர்களென நீங்கள் ஒருவேளை சொல் லக்கூடும். அவன் பலவீனனுக இருப்பின், அவனைச் சமா ளிக்க உபயோகிக்கும் முறை, சம உடல் வலிமையுள்ளவனிடம் உபயோகிப்பதைவிட 'வேறுபட்டதாக இருக்கும். திருடன், உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையில் ஆயுதபாணியாக இருப்பானுனல், நான் எதுவும் செய்யாமல் சும்மா இருந்து விடுவேன். இவ்விதம் தந்தையிலிருந்து ஆயுதபாணிவரையில் இவர்கள் விஷயமாக உபயோகிக்க நம்மிடம் பலதரப்பட்ட முறைகள் இருக்கின்றன. மேலும், திருடன் என் தந்தையாகவே இருந்தாலோ அல்லது பலமுள்ள ஆயுதபாணியாக இருந் தாலோ, தூங்குவதாகக்கூட நான் பாசாங்கு செய்யவும் கூடும். இதற்குக் காரணம், என் தந்தையும் ஆயுதபாணியாக இருக் கக்கூடுமாகையால் இவர்களில் ஒருவரின் பலத்திற்கு நான் பலியாகி சாமான்கள் பறிபோவதற்கு இடம் கொடுத்ததாகும். என் தந்தைக்குள்ள வலிமை என்னை அழத்தூண்டும்; ஆயுத பாணியாக இருப்பவனின் பலமோ, எனக்குக் கோபத்தை உண் டாக்கும்; நாங்கள் விரோதிகளாவோம். நிலைமை இவ்விதம் விசித்

திரமானது. இந்த உதாரணங்களிலிருந்து ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எந்தவிதமான முறையைக் கையாள்வது என்பதில் நமக்குள் ஒரே வித அபிப்பிராயம் ஏற்பட முடியாமலிருக்கலாம். இந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் செய்யவேண்டியது என்ன என்பதை நான் தெளிவாகக் காண்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆனல், இதற்கான பரிகாரம் உங்களைத் திடுக்கிடச் செய்யும். ஆகையால், அதை உங்களிடம் சொல்லத் தயங்குகிறேன். நீங்களே அதை ஊகித்துக்கொள்ள விட்டுவிடுகிறேன். அப்படி ஊகித்துக்கொள்ள உங்களால் முடியவில்லையென்ருல், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நீங்கள் வெவ்வேருன வழியைக் கைக்கொண்டாகவேண்டும் என்பது தெளிவாகிறது. திருடனை விரட்ட எல்லாவித உபாயங்களுமே கிடைத்துவிடா என்பதையும் நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஒவ்வொரு சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற முறையையே நீங்கள் அனுசரிக்க வேண்டும். எனவே, திருடனை நீங்கள் விரும்பும் எந்த முறையினுலும் துரத்திவிடுவது என்பது உங்கள் கடமை அல்ல என்ருகிறது.

இன்னும் சற்று மேற்கொண்டு கவனிப்போம். முற்றிலும் ஆயுதபாணியாக இருக்கும் ஒருவன் உங்கள் சொத்துக்களைத் திருடிவிடுகிருன்; அவன் செய்த காரியம் உங்கள் நினைவில் அப்படியே இருக்கிறது; உங்களுக்குக் கோபம் மூள்கிறது; உங்களுடைய நன்மைக்காக அல்ல, அக்கம் பக்கத்தில் இருப்போரின் நன்மைக்காக அந்தப் போக்கிரியைத் தண்டிக்கவே நீங்கள் விரும்புகிறீர்கள்; ஆயுதபாணிகளான பலரைத் திரட்டிக்கொண்டுவிடுகிறீர்கள்; அவனை, அவன் வீட்டிலேயே தாக்க வருவது அவனுக்குத் தெரிந்துவிடுகிறது; அவன் ஓடிவிடுகிருன்; அவனும் கோபம் அடைகிருன்; தன் துணைவரான கொள்ளைக்காரர்களையெல்லாம் திரட்டிக் கொள்ளுகிருன்; பட்டப் பகலிலேயே கொள்ளையிடப் போவதாக உங்களுக்கு எதிர்ப்பாக ஒரு செய்தியையும் அனுப்புகிருன்; நீங்கள் பலத்துடன் இருக்கிறீர்கள்; அவனுக்கு நீங்கள் அஞ்சவில்லை; அவன் வரட்டும் என்று நீங்கள் தயாராகவும் இருக்கிறீர்கள். இதற்கு மத்தியில் திருடன், உங்களுக்கு அக்கம் பக்கத்தில் இருப்பவர்களுக்கெல்லாம் தொந்தரவு கொடுக்கிருன். அவர்கள் உங்களிடம் முறையிடுகிருர்கள். அவர்களுக்காகவே நீங்கள் எல்லாம் செய்துவருவதாகவும், உங்கள் சாமான்கள் திருட்டு போவதைக் குறித்துக்கூட நீங்கள் கவலைப்படவில்லை என்றும் அவர்களிடம் கூறுகிறீர்கள். உங்கள் அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்களோ, திருடன்

இதற்கு முன்னால் தங்களுக்குத் தொந்தரவு செய்து வந்ததில்லை என்றும், அவனுக்கு விரோதமாகக் காரியங்களைச் செய்ய நீங்கள் ஆரம்பித்த பிறகே அவன் அட்டூழியம் செய்யத் தலைப் பட்டுவிட்டான் என்றும் உங்களுக்குப் பதில் சொல்லுகிறார்கள். நீங்கள் இருதலைக்கொள்ளி எறும்புபோல் ஆகிறீர்கள். ஒன்றும் அறியாத அவர்களிடம் உங்களுக்கு முழு அனுதாபமும் உண்டு. அவர்கள் சொல்லுவதும் உண்மையே. நீங்கள் செய்யவேண்டியது என்ன? திருடனை ஒன்றும் செய்யாமல் இப்பொழுது விட்டு விட்டால் உங்களுக்கு அவமானம். எனவே, எளியவரான அக் கம் பக்கத்தாரிடம் நீங்கள் கூறுகிறீர்கள்: ''பரவாயில்லை, வாருங்கள். என் சொத்தே உங்களுடையது. நான் உங்க ளுக்கு ஆயுதங்களைக் கொடுக்கிறேன். அவற்றை உபயோகிப் பது எப்படி என்பதையும் சொல்லிக்கொடுக்கிறேன். அந்தப் போக்கிரிப் பயலை நன்றாக உதைக்கவேண்டும்; அவனை மாத் திரம் விட்டுவிடாதீர்கள்.'' இவ்விதம் போர் வளர்கிறது; திரு டர்கள் தொகை அதிகமாகிறது; உங்கள் அண்டையில் இருப் பவர்கள் தாமே சங்கடங்களை வரவழைத்துக்கொள்ளுகின்றனர். இவ்விதம் திருடன் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளவேண்டும் என்று விரும்பியதன் பயனாக நீங்கள் உங்களுடைய அமைதி யையே கெடுத்துக்கொண்டீர்கள். எங்கே கொள்ளையடிக்கப் படுவோமோ, தாக்கப்படுவோமோ என்ற திகில் உங்க ளுக்கு இடைவிடாமல் இருந்துகொண்டே இருக்கிறது. உங்களுக்கிருந்த தைரியம் போய்க் கோழைத்தனம் உண்டாகிறது. இந்த வாதத்தைப் பொறுமையுடன் ஆராய்வீர்களானால், நான் நிலைமையை மிகைப்படுத்திக் கூறி விடவில்லை என்பதைக் காண்பீர்கள். இது, முறைகளில் ஒன்று. மற்றதையும் கவனிப்போம். ஆயுதபாணியான இத்திருடன், அறிவுகெட்ட உங்கள் உடன்பிறந்தவன் என்று வைத்துக்கொள் ளுங்கள். உரிய சமயத்தில் அவனுக்கு நியாயத்தை எடுத்துச் சொல்ல விரும்புகிறீர்கள். எப்படியானாலும் அவனும் நம்மைப் போன்ற மனிதனே என்று நீங்கள் விவாதிக்கிறீர்கள். அவனைத் திருடும்படி தூண்டியது என்ன என்பதும் உங்களுக்குத் தெரியாது. எனவே, முடியும்போது அவனுடைய திருட்டு நோக் கத்தைப் போக்கி விடவேண்டும் என்ற முடிவுக்கு வருகிறீர் கள். இவ்வாறு நீங்கள் நினைக்கும்போது அவன் மீண்டும் திருடவே வருகிறான்; அவன் மீது கோபங்கொள்ளுவதற்குப் பதிலாக அவனிடம் பச்சாத்தாபப்படுகிறீர்கள். அவனிடம் திருடும் பழக்கம் ஒரு நோயாக இருக்கலாம் என்று எண்ணு

கிறீர்கள். ஆகவே, அவன் எளிதில் கவர்ந்துசெல்ல, நீங்கள் உங்கள் கதவுகளையும் சன்னல்களையும் திறந்து வைத்துக் கொள்ளுகிறீர்கள். நீங்கள் தூங்குமிடத்தை மாற்றிக்கொள்ளு கிறீர்கள். அவன் சுலபமாக வந்து எடுத்துக்கொண்டு போகக் கூடிய இடத்தில் உங்கள் சாமான்களையும் வைத்திருக்கிறீர்கள். திருடன் வருகிறான்; இதெல்லாம் அவனுக்குப் புதிதாக இருப்ப தால் குழப்பம் அடைகிறான்; என்றாலும், உங்கள் சாமான்களை எடுத்துக்கொண்டு போய்விடுகிறான். ஆனால், அவனுடைய மனம் பரபரப்படைகிறது. உங்களைப் பற்றி கிராமத்தில் விசா ரிக்கிறான். உங்களுடைய பரந்த அன்புள்ளத்தைப் பற்றி அறி கிறான்; செய்துவிட்ட குற்றத்திற்காக வருந்துகிறான்; உங்க ளிடம் மன்னிப்புக் கோருகிறான்; உங்கள் சாமான்களைத் திருப் பிக்கொண்டு வந்து கொடுத்துவிடுகிறான்; திருட்டுப் பழக்கத்தை யும் விட்டுவிடுகிறான்; உங்களுக்கு வேலைக்காரனாகிறான்; அவ னுக்கு நீங்கள் கௌரவமான வேலையை அளிக்கிறீர்கள். இது இரண்டாவது முறை. இவ்விதம் வெவ்வேறு விதமான முறை கள் வெவ்வேறு விதமான பலனை அளிப்பதைக் காண்கிறீர் கள்; இதிலிருந்து திருடர்கள், மேற்கண்ட வகையில் நடந்து கொள்ளுவார்கள் என்றோ அல்லது உங்களைப்போலவே எல்லா ருக்கும் பச்சாத்தாபமும் அன்பும் இருக்கும் என்றோ முடிவுக்கு வந்துவிட நான் விரும்பவில்லை. ஆனால், நியாயமான முறைகள் மாத்திரமே நியாயமான பலனை அளிக்க முடியும். எல்லோருடைய விஷயத்தில் இல்லாவிட்டாலும் பெரும்பாலானவர்கள் விஷயம் வரைக்குமாவது ஆயுதபலத்தைவிட அன்பு, அனுதாபம் இவற் றிற்குரிய சக்தி நிச்சயமாகப் பெரிது என்பதைக் காட்டுவதே என் விருப்பம். மிருக பலத்தை உபயோகிப்பதில் தீமையுண்டு. அனுதாபத்தில் அது இல்லை.

மனுச் செய்துகொள்ளும் விஷயத்தை இப்பொழுது கவ னிப்போம். பலத்தின் ஆதரவில்லாத முறையீடு பயனற்றது என்பது ஆட்சேபிக்க முடியாத உண்மை. என்றாலும், காலஞ் சென்ற நீதிபதி ரானடே, முறையிட்டுக்கொள்ளுவதில் மக்களுக் குப் போதிப்பதற்கான உபாயமாயிருப்பதால் முறையீட்டிலும் பயன் உண்டு என்று கூறி வந்தார். இது, தங்கள் நிலையைப் பற்றி மக்கள் அறிந்துகொள்ளும்படி செய்வதோடு, ஆட்சி செலுத்துவோருக்கும் எச்சரிக்கை செய்கிறது. இதைக் கொண்டு பார்த்தால் முறையீடு முற்றிலும் பயனற்றதாகாது. சமமானவர்களுக்குள் முறையீடு, கண்ணியத்தின் சின்னமாகும்.

அடிமையின் முறையீடோ, அடிமைத்தனத்தின் சின்னம் பலத்தின் ஆதரவோடு செய்து கொள்ளும் முறையீடு, சம மானவர் செய்துகொள்ளும் மனுவாகும். தனது தேவைகளை மனுவின் மூலம் தெரிவிக்கும்போது அது அவருடைய பெருந் தன்மையை நிரூபிக்கிறது. முறையீடுகளுக்கு இரு வகையான பலம் ஆதரவளிக்கக் கூடும். ''இதைக் கொடுக்காவிட்டால் உங்களைத் துன்புறுத்துவோம்'' என்பது ஒரு வகையான பலம். இது ஆயுதத்தின் பலம்; அதன் தீய பலன்களைக் குறித்து இது வரை ஆராய்ந்திருக்கிறோம். இரண்டாவது வகையான பலம், இவ் விதம் கூறப்படுகிறது: ''எங்கள் கோரிக்கைகளுக்கு உடன்படா விட்டால், மேற்கொண்டும் உங்களுக்கு மனுச்செய்து கொள்ளு பவர்களாக நாங்கள் இருக்கமாட்டோம். ஆளப்படுவோராக நாங்கள் இருந்துவரும் வரையில்தான் நீங்கள் எங்களை ஆண்டு வர முடியும்; அதற்குப் பிறகு உங்களுடன் எந்தவித தொடர்பும் வைத்துக்கொள்ளமாட்டோம்.'' இதில் அடங்கிய பலத்தை அன் பின் பலம், ஆன்ம பலம் என்று சொல்லலாம்; அவ்வளவு சரியான தல்ல எனினும், எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்ததான சாத் விக எதிர்ப்பு என்றும் விவரிக்கலாம். இந்தப் பலம் அழிக்கப் பட முடியாதது. இதை உபயோகிப்பவன் தன் நிலைமையைச் சரியானபடி அறிந்திருக்கிறான். ''ஒரு மாத்திரை முப்பத்தாறு நோய்களைக் குணப்படுத்துகிறது'' என்பதே நம் பழமொழி ஒன்றின் நேரான பொருள். அன்பு அல்லது ஆன்மாவின் சக்திக்கு முன்னால் ஆயுதபலம் குன்றிப்போய் விடுகிறது.

குழந்தை தீயில் காலை நீட்டுகிறது என்று நீங்கள் சொன்ன கடைசி உதாரணத்தை இப்பொழுது எடுத்துக்கொள்ளுவோம். இதுவும் உங்களுக்குப் பயன்படாது. உண்மையில் குழந்தையை நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்களால் ஒன்றும் செய்ய முடி யாத அளவுக்கு அது தன் உடல் பலத்தை உபயோகித்துத் தீக் குள் போய்விடுவதாக வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது உங்களால் அதைத் தடுக்க முடியாது. இதில் உங்களுக்குள்ள பரிகாரங்கள் இரண்டேயாகும். ஒன்று, தீயில் அது நாசமாவதைத் தடுப்பதற்காக அதை நீங்கள் கொன்றுவிட வேண்டும்; அல்லது, உங்கள் கண் முன்னாலேயே அது சாவது சகிக்கவில்லையானால், நீங்கள் உங்கள் உயிரையே கொடுக்க வேண்டும். குழந்தையைக் கொல்ல மாட்டீர்கள். உங்கள் உள்ளம் முற்றிலும் அனுதாபம் நிறைந்ததாக இல்லாவிட்டால், குழந்தையை முந்திக்கொண்டு நீங்களே தீயில் விழுந்து அதற்கு இரையாக மாட்டீர்கள் என்பதும்

சாத்தியம். ஆகையால், நீங்கள் ஒன்றும் செய்ய இயலாது குழந்தை தீக்கு இரையாக இடம் தருகிறீர்கள். இவ்விதம் எப்படியும் உடல் பலத்தை உபயோகிக்கவில்லை. உங்களால் முடிந்தால், நெருப்பை நோக்கிக் குழந்தை வேகமாகப் போவதைப் பலவந்தமாக நீங்கள் தடுப்பது சற்றுத் தாழ்ந்த ரகமானாலும் அது உடல் பலத்தினாலேயே என்று இன்னும் நீங்கள் கருதிக்கொண்டிருக்கமாட்டீர்கள் என்றே நம்புகிறேன். அந்தப் பலம் வேறு வகையானது. அது என்ன என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

இவ்விதம் குழந்தையைத் தடுப்பதில், அதன் சொந்த நன்மை ஒன்றையே நீங்கள் கவனிப்பதால், அதன் நன்மைக்கென்றே உங்கள் முழு அதிகாரத்தையும் உபயோகிக்கிறீர்கள் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் உதாரணம் ஆங்கிலேயருக்குப் பொருந்தாது. ஆங்கிலேயருக்கு எதிராக மிருக பலத்தை உபயோகிப்பதில் முற்றிலும் உங்களுடைய, அதாவது தேசீய நன்மையையே கவனிக்கிறீர்கள்; அதில் அனுதாபம் அல்லது அன்புக்கு இடமே இல்லை. ஆங்கிலேயரின் காரியங்கள் தீயனவாகையால் அவை தீ போன்றனவாகின்றன. அறியாமையால் அவர்கள் செயல் புரிகின்றனர்; எனவே, அவர்கள் அக்குழந்தையின் நிலைமையில் இருக்கிறார்கள். அத்தகைய குழந்தையை நீங்கள் காப்பாற்ற விரும்புகிறீர்கள் என்று நீங்கள் சொல்லுகிறீர்களா? அப்பொழுது நீங்கள் குழந்தையின் விஷயத்தில் செய்வதைப்போல், இத்தகைய தீய காரியங்களை யார் செய்வதாயினும் தீமையையும் நீங்கள் மேற்கொள்ள வேண்டி வருவதோடு உங்களையே தியாகம் செய்யவேண்டியும் வரும். அளவில் அடங்காத வகையில் அவ்வளவு இரக்கம் உங்களுக்கு இருக்குமாயின், அதைக் காட்டும் உங்களை வாழ்த்துகிறேன்.

# அத்தியாயம் 17
# சாத்விக எதிர்ப்பு

**வாசகர்:** ஆன்ம பலம் அல்லது சத்தியத்தின் பலம் என்று நீங்கள் சொல்லுகிறீர்களே, அதன் வெற்றிக்குச் சரித்திர பூர்வமான ஆதாரம் ஏதாவது உண்டா? ஆன்ம சக்தியைக் கொண்டு ஒரு நாடு உயர்ந்தது என்பதற்கு எந்தச் சம்பவமும் நிகழ்ந்ததாகக் காணப்படவில்லை. சரீர தண்டனை இல்லாவிட்டால் தீய செய்கையுடையவர்கள் தீயன செய்வதை நிறுத்தமாட்டார்கள் என்றே நான் இன்னும் நம்புகிறேன்.

ஆசிரியர்: கவி துளசிதாசர்*, "அகந்தையே சரீரத்தின் வேராவது போல அனுதாபம் அல்லது அன்பு மதத்திற்கு வேர். ஆகவே, நாம் உயிரோடிருக்கும் வரையில் அனுதாபத்தை மாத்திரம் கைவிட்டு விடக்கூடாது" என்று கூறியிருக்கிறார். இது விஞ்ஞான ரீதியான உண்மை என்று எனக்குத் தோன்றுகிறது. இரண்டும் இரண்டும் நான்கு என்று நம்புகிற அளவுக்கு நான் இதையும் நம்புகிறேன். ஆன்ம அல்லது சத்தியத்தின் பலத்தைப் போன்றது, அன்பின் பலமும். ஒவ்வொரு கட்டத்திலும் அது வேலை செய்கிறது என்பதற்குச் சாட்சியம் நமக்கு இருக்கிறது. அந்தப் பலம் இல்லாவிட்டால் ஜகமே மறைந்துவிடும். ஆனால், சரித்திர பூர்வமான ஆதாரம் வேண்டுமென்று நீங்கள் கேட்கிறீர்கள். ஆகையால், சரித்திரம் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. குஜராத்தில் சரித்திரம் என்பதற்கு 'இதி ஹாஸ' (அவ்வாறு நிகழ்ந்தது) என்பதே நேரான சொல். சரித்திரம் என்பதற்கு அதுதான் பொருளென்றால், போதுமான ஆதாரங்களை நாம் கொடுக்கலாம். மன்னர்களும் சக்கரவர்த்திகளும் செய்திருப்பதுதான் சரித்திரம் என்பதாயின், அப்படிப்பட்ட சரித்திரத்தில் ஆன்மபலம் அல்லது சாத்விக எதிர்ப்புக்கு ஆதாரமே இராது. ஈயச் சுரங்கத்தில் வெள்ளி இருக்கும் என நீங்கள் எதிர்பார்க்க முடியாது. உலக யுத்தங்களின் வரலாறுகளே சரித்திரம் என்பதை

---

* துளசிதாசர்—'ராமசரித மானஸ' (ராமன் வரலாறு என்னும் ஏரி) என்ற பக்திச் சுவை மிளிரும் ராம காதையை மக்கள் பேசும் ஹிந்தி மொழியில் செய்தவர், இவர். வட இந்தியாவெங்கும் இந்த நூலை ஒரு தெய்விகப் பனுவலென மக்கள் போற்றிப் பாராயணம் செய்கின்றனர். 16–ஆம் நூற்றாண்டில் காசியில் வாழ்ந்தவர் இவர்.

நாம் அறிவோம். இதனாலேயே சரித்திரம் இல்லாத, அதாவது யுத்தங்கள் இராத நாடே ஆனந்தமான நாடு என்று ஆங்கிலேயரிடையே ஒரு பழமொழியும் உண்டு. மன்னர்கள் எப்படி நடந்தார்கள்; ஒருவருக்கொருவர் எவ்விதம் விரோதிகளானார்கள்; ஒருவரை யொருவர் எவ்வாறு மாய்த்துக்கொண்டார்கள்; இந்த வரலாறுகளே சரித்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. உலகத்தில் நடந்தவையெல்லாம் இவையே என்றால், வெகு காலத்திற்கு முன்பே உலகம் முடிந்துபோயிருக்கும். உலகின் கதை போரிலேயே தொடங்கியிருப்பின், இன்று ஒரு மனிதனைக்கூட உயிரோடு பார்க்க முடியாது. ஆஸ்திரேலியாவின் உள்ளே புகுந்தவர்கள், அதன் சொந்த மக்கள் ஒருவரைக் கூட உயிரோடு வைக்காததைப்போல, சண்டையிட்டுக் கொண்டவர்களும் மறைந்துபோயிருப்பார்கள். குறிப்பாக ஒன்றைக் கவனத்தில் வைத்துக்கொள்ளுங்கள். இந்தப் பழங்குடிகள் தற்காப்புக்கு ஆன்ம பலத்தை உபயோகிக்கவில்லை; இவர்களைப் போன்ற கதியே ஆஸ்திரேலியருக்கும் ஏற்படும் என்பதை அறியத் தீர்க்கதரிசனம் தேவையில்லை. "வாளெடுத்தவன் வாளாலேயே அழிவான்." "நீச்சலையே பிழைப்பாக்கிக் கொண்டவர்களுக்கு நீரிலேயே சாவு" என்று நம்மிடையே ஒரு பழமொழி வழங்குகிறது.

உலகத்தில் எத்தனையோ மனிதர்கள் இன்னும் உயிரோடு இருக்கிறார்கள் என்ற உண்மை, ஆயுத பலத்தை அடிப்படையாகக்கொண்டு அவ்வாறு அமையவில்லை. சத்தியம் அல்லது அன்பின் அடிப்படையில் உலகம் இருக்கிறது என்பதையே காட்டுகிறது. ஆகையால் உலகத்தில் யுத்தங்கள் எவ்வளவோ இருந்தும் உலகம் இன்னும் உயிருடன் இருக்கிறது என்ற உண்மை ஒன்றே இந்தச் சக்தியின் வெற்றிக்கு மிகப் பெரிய ஆட்சேபிக்க முடியாத சாட்சியமாகும்.

ஆயிரக்கணக்கானவர், பத்தாயிரக் கணக்கானவர்கள் கூடத் தாங்கள் உயிருடன் வாழ்வதற்கு இந்தச் சக்தி தீவிரமாக வேலை செய்வதையே நம்பியிருக்கின்றனர். தங்களுடைய அன்றாட வாழ்க்கையில் லட்சக்கணக்கான குடும்பங்களின் சிறு சச்சரவுகள் இந்தச் சக்தி பிறக்கும்போது மறைந்துவிடுகின்றன. நூற்றுக்கணக்கான நாடுகள் சமாதானமாகவே வாழ்கின்றன. இந்த உண்மையைச் சரித்திரம் கவனிப்பதில்லை; கவனிக்கவும் முடியாது. அன்பு அல்லது ஆன்ம சக்தி வேலை செய்வதில் கூட இருந்துவரும் ஒவ்வோர் இடை

யூறு பற்றிய வரலாற்றைக் கொண்டதே உண்மையில் சரித்திரம். இரு சகோதரர்கள் சச்சரவிட்டுக் கொள்ளுகிறார் கள்; இவர்களில் ஒருவன் தான் செய்துவிட்ட தவறுக்காக வருந்தி, தன்னுள் தூங்கிக் கிடந்த அன்பைத் திரும்ப எழுப்பி விடுகிறான். இருவரும் மீண்டும் சமாதானமாக வாழ ஆரம் பிக்கிறார்கள். இதைக் குறித்து யாருமே கவனிப்பதில்லை. ஆனால், இரு சகோதரர்கள், வக்கீல்களின் குறுக்கீட்டினாலோ அல்லது வேறு காரணங்களினாலோ, சண்டைக்கு ஆயுதங்களை எடுத்துக்கொண்டாலோ அல்லது கோர்ட்டுக்குப் போனாலோ -இது மிருக பலத்தைக் காட்டிக்கொள்ளும் மற்றோர் வகை- இவர்களுடைய காரியங்கள் உடனேயே பத்திரிகைகளில் பிர சுரமாகும். அண்டையில் இருப்பவர்கள் இவர்களைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பார்கள். ஒரு வேளை இவர்கள் செய்கை சரித்திரத்தில் இடம் பெற்றாலும் பெறும். குடும்பங்கள், சமூகங் கள் ஆகிய இவைபற்றிய உண்மை எதுவோ அதுவே நாடுகளின் உண்மையும். குடும்பங்களுக்கு ஒரு சட்டம், நாடுகளுக்கு மற்றொரு சட்டம் என்று எண்ணுவதற்குக் காரணமே இல்லை. ஆகவே, இயற்கையின் போக்கில் ஏற்படும் இடையூறுகளைக் குறிப்பிடுவதே சரித்திரம். ஆன்ம சக்தி இயற்கையானதால் அது சரித்திரத்தில் குறிப்பிடப்படவில்லை.

வாசகர்: நீங்கள் கூறுவதிலிருந்து சாத்விக எதிர்ப்பைப் பற்றிய இவ்வகையான நிகழ்ச்சிகள் சரித்திரத்தில் காணப் படுவதில்லை என்பது தெளிவாகிறது. இந்தச் ச்ாத்விக எதிர்ப்பைப்பற்றி இன்னும் அதிகமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியம். ஆகையால், இதைப்பற்றியே நீங்கள் விவரமாகக் கூறுவது நல்லது.

ஆசிரியர்: துன்பத்தைத் தானே ஏற்றுக்கொண்டு அதன் மூலம் உரிமைகளைப் பெறும் முறையே சாத்விக எதிர்ப்பு. ஆயுதங்களைக்கொண்டு எதிர்ப்பதற்கு இது நேர்மாறானது. என் மனச்சாட்சிக்கு வெறுப்புத் தரும் ஒரு காரியத்தைச் செய்ய நான் மறுத்துவிடும்போது, நான் ஆன்ம பலத்தை உபயோ கிக்கிறேன். உதாரணமாக, ஆட்சியில் இருக்கும் அரசாங்கம், என்னைப் பாதிக்கும் அளவிற்கு ஒரு சட்டத்தை இயற்றுகிறது. நான் அச்சட்டத்தை விரும்பவில்லை. பலாத்காரத்தை உபயோ கிப்பதன் மூலம் அச்சட்டத்தை ரத்து செய்யுமாறு நான் அரசாங் கத்தைக் கட்டாயப்படுத்தினால், நான் உடல் பலம் என்பதான சக்தியை உபயோகிக்கிறேன். அச்சட்டத்திற்கு உடன்பட

நான் மறுத்து, அதை மீறியதற்குள்ள தண்டனையை ஏற்றுக் கொண்டால், நான் ஆன்ம சக்தியை உபயோகிக்கிறேன். தன்னையே தியாகம் செய்வதென்பது இதில் அடங்கியிருக் கிறது.

மற்றவர்களின் தியாகத்தைவிடத் தானே தியாகஞ் செய்து கொள்ளுவதென்பது நிச்சயமாக உயர்வானது என்பதை ஒவ் வொருவரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். மேலும், நியாயமற்றதான ஒரு காரியத்திற்கு இந்தச் சக்தி உபயோகிக்கப்படுமானால், அதை யார் உபயோகிக்கிறாரோ அவர் மட்டுமே கஷ்டப்படுகிறார். தம் தவறுகளுக்காக மற்றவர்கள் கஷ்டப்படும்படி அவர் செய்துவிடவில்லை. மனிதர் முன்னால் செய்திருக்கும் பல காரியங்கள் தவறானவை என்று பின்னர் தெரியலாயின. தான் செய்வதே முற்றிலும் சரியானது அல்லது தவறு என்று ஒருவன் நினைப்பதால் ஒரு குறிப்பிட்ட காரியம் தவறானதே என்று யாரும் சொல்லிக்கொள்ள முடியாது. ஆனால், அதுவே அவனுடைய திட்டமான முடிவாக இருக்குமானால் அவனுக்கு அது தவறானதே. ஆகையால், தனக்குத் த்வறு என்று பட்டதை அவன் செய்யக்கூடாது. இதன் விளைவாக என்ன கஷ்டம் வந்தாலும் அவன் அனுபவிக்கவே வேண்டும். ஆன்ம சக்தியை உபயோகிப்பதற்கு இதுவே முக்கியமான மந்திரம்.

வாசகர்: அப்படியானால் சட்டங்களை நீங்கள் மதிக்கமாட் டீர்கள்—இது அரசியல் துரோகம். நாம் சட்டத்திற்குக் கட்டுப் பட்ட மக்கள் என்று எப்பொழுதும் மதிக்கப்பட்டு வந்திருக் கிறோம். தீவிரவாதிகளையும் மிஞ்சுவீர்களெனத் தோன்றுகிறது நிறைவேற்றப்பட்டிருக்கும் சட்டங்களுக்கு நாம் உடன்பட வேண்டும் என்று கூறுகிறார்கள். ஆனால், சட்டங்கள் மோசமானவையாக இருந்தால், அத்தகைய சட்டங்களைச் செய்த வர்களைப் பலாத்காரத்தைக் கொண்டாயினும் விரட்டிவிட வேண்டும் என்று சொல்லுகிறார்கள்.

ஆசிரியர்: நான் அவர்களையும் மிஞ்சிவிடுகிறேனா இல் லையா என்பது உங்களுக்கோ அல்லது எனக்கோ அவ்வளவு முக்கியமானதல்ல. எது சரியானது என்பதைக் கண்டு பிடித்து அதன்படி நடக்க மாத்திரமே நான் விரும்புகிறேன். நாம் சட்டத்திற்குக் கட்டுப்பட்ட மக்கள் என்று கூறப்படு வதற்கு உண்மையான பொருள், நாம் சாத்விக எதிர்ப்பாளர் கள் என்பதே. சில சட்டங்களை நாம் விரும்பாதபோது, சட்டம் செய்தவர்களின் மண்டைகளை நாம் உடைத்துவிடுவ

தில்லை. நாம் கஷ்டப்படுகிறோம். அத்தகைய சட்டங்களுக்கு நாம் அடங்கிப் போவதில்லை. நல்லதாக இருந்தாலும், கெட்டதாக இருந்தாலும், சட்டமென்றால் நாம் உட்பட்டேயாகவேண்டுமென்பது ஒரு புதுமையான போக்கு. முன் காலங்களிலெல்லாம் அப்படி எதுவும் இருந்ததில்லை. தாங்கள் விரும்பாத சட்டங்களை மக்கள் மதிப்பதில்லை; இவ்விதம் மீறியதற்கு விதிக்கப்படும் தண்டனைகளை அனுபவிப்பார்கள். நமது மனச்சாட்சி வெறுக்கும் சட்டங்களுக்கு உடன்படுவதென்றால் அது மனிதத் தன்மைக்கே விரோதமானதாகும். அத்தகைய போதனை மதத்திற்கே விரோதமானதாவதோடு அடிமைத்தனமுமாகும். உடம்பில் துணியில்லாமலேயே நடமாடவேண்டும் என்று அரசாங்கம் நமக்கு உத்தரவிடுவதாயின், அப்படியே செய்யவேண்டுமா? நான் சாத்விக எதிர்ப்பாளனாக இருந்தால், அவர்களுடைய சட்டத்திற்கும் எனக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. என்று அவர்களிடம் சொல்லிவிடுவேன். ஆனால், நம்மை நாமே மறந்துவிட்டதாலும், பணிந்து விடுபவர்கள் ஆகிவிட்டதாலும், மானக்கேடான எந்தச் சட்டத்தைக் குறித்தும் நாம் கவலைப்படுவதில்லை.

தன்னுடைய மனிதத் தன்மையை உணர்ந்துவிட்ட ஒரு மனிதன், கடவுளுக்கு மாத்திரமே பயப்படுவான்; வேறு யாருக்குமே அஞ்சமாட்டான். மனிதன் செய்த சட்டங்கள் அவனைக் கட்டுப்படுத்தவேண்டும் என்ற அவசியமில்லை. அரசாங்கங்கூட அத்தகைய காரியம் எதையும் நம்மிடமிருந்து எதிர்பார்க்கவில்லை. "இந்தக் காரியத்தை நீ செய்யவேண்டும்" என்று அவர்கள் சொல்லவில்லை. ஆனால், "நீ அதைச் செய்யாதுபோனால் தண்டிப்போம்" என்கிறது. நாம் கீழான நிலைக்கு வந்திருப்பதால் சட்டம் என்ன விதிக்கிறதோ அதைச் செய்தாகவேண்டியது நம் கடமை. அது நம் மதம் என்று நினைக்கிறோம். நீதியில்லாத சட்டங்களுக்குக் கீழ்ப்படிவது மனிதத்தன்மையற்றது என்பதை மாத்திரம் மனிதன் உணர்ந்து கொண்டு விடுவானாயின், எந்த மனிதனின் கொடுமையும் அவனை அடிமைப்படுத்திவிட முடியாது. சுய ஆட்சி அல்லது நம் ஆட்சிக்கு இதுவே வழிகாட்டி.

பெரும்பான்மையோர் செய்யும் ஒரு காரியம் சிறுபான்மையினரைக் கட்டுப்படுத்துகிறது என்று நம்புவது மூடநம்பிக்கையோடு தெய்வத்தன்மையற்றதுமாகும். பெரும்பான்மையினர் செய்த காரியங்கள் தவறானவை, சிறுபான்மையினரின் காரியங்

கள் சரியானவை என்பதைக் காட்ட அநேக உதாரணங்களைக் கொடுக்க முடியும். பெரும்பான்மையினருக்கு எதிராயிருந்த சிறு பான்மையினரின் முயற்சியே பல சீர்திருத்தங்களுக்குக் காரண மாகியிருக்கிறது. ஒரு கொள்ளைக் கூட்டத்தினரிடையே திருடுவ தைப்பற்றிய அறிவு அவசியம் என்றால், அந்த அவசியத்தைத் தெய்வபக்தியுள்ள ஒருவர் ஒப்புக்கொள்ள வேண்டுமா? அநி யாயமான சட்டங்களுக்கு மனிதர் பணிய வேண்டும் என்ற மூடநம்பிக்கை இருக்கும்வரையில் அவர்களுடைய அடிமைத் தனமும் இருந்துகொண்டுதான் வரும். சாத்விக எதிர்ப்பா ளர் ஒருவர் மட்டுமே அத்தகைய மூடநம்பிக்கையை நீக்க முடியும்.

மிருக பலத்தை உபயோகிப்பது, துப்பாக்கி மருந்தை உபயோகிப்பது என்பவை சாத்விக எதிர்ப்புக்கு முரணானவை. ஏனெனில், நாம் விரும்புவதை நம் எதிரி பலாத்காரத்தைக் கொண்டு செய்யும்படி விடுகிறோம் என்றாகிறது. ஆனால், அவன் அப்படிச் செய்வதில்லை. அத்தகைய பலாத்காரத்தின் உப யோகம் நியாயம் என்றால், அவன் அதே மாதிரி செய்ய நம்மால் உரிமை பெற்றவனாகிறான். குருட்டுக் குதிரை. ஆலையைச் சுற்றிச் சுற்றி ஓடி வந்துகொண்டிருப்பதைப் போல நாம் முன்னேறிக்கொண்டு வருவதாகச் சாதாரணமாக நினைத்துக்கொள்ளுகிறோம். தங்கள் மனச்சாட்சிக்கு ஏற்ப இராத சட்டங்களுக்குப் பணியத் தாங்கள் கடமைப்பட்டிருக்க வில்லை என்று நம்புவோருக்கு உள்ள ஒரே பரிகாரம் சாத் விக எதிர்ப்புத்தான். மற்றவை அழிவுக்கே கொண்டுபோய் விடும்.

வாசகர் : நீங்கள் கூறுவதிலிருந்து, பலவீனர்களாக உள்ள வர்களுக்குச் சாத்விக எதிர்ப்பு அற்புதமான ஆயுதம்; ஆனால், அவர்கள் பலத்துடன் இருக்கையில் ஆயுதத்தை உபயோகிக்க லாம் என்ற முடிவுக்கு நான் வருகிறேன்.

ஆசிரியர் : இது முற்றிலும் அறியாமையாகும். சாத்விக எதிர்ப்பு, அதாவது ஆன்ம பலம் இணையில்லாதது; ஆயுத பலத்தைவிட அது உயர்ந்தது. அப்படியிருக்க அதைப் பலவீனர் களின் ஆயுதம் என்று எப்படிக் கருத முடியும்? சாத்விக எதிர்ப்பினருக்கு உள்ள தீரத்தைச் சரீர பலத்தை நம்புகிற வர்கள் அறியார். தான் விரும்பாத ஒரு சட்டத்தை ஒரு கோழை எப்பொழுதாவது மீற முடியும் என்று நம்புகிறீர்களா? தீவிரவாதிகள், மிருக பலத்தையே ஆதரிப்பவர்களெனக் கருதப் படுகிறது. அப்படியானால், சட்டங்களுக்குப் பணிவதைப்பற்றி

அவர்கள் ஏன் பேசுகிறுர்கள்? அவர்கள்மீது நான் குறை கூற வில்லே. அதைத் தவிர அவர்கள் வேறு எதுவும் சொல்ல முடியாது. ஆங்கிலேயர்களே விரட்டிவிடுவதில் வெற்றி பெற்று அவர்களே கவர்னர்களாகி விடும்போது, நீங்களும் நானும் அவர் களுடைய சட்டங்களுக்கு உடன்படவேண்டும் என்று எதிர் பார்ப்பார்கள். அவர்களுடைய அரசியலுக்கு அதுவே பொருத்த மானது. ஆனல், ஒரு சாத்விக எதிர்ப்பாளரோ, தம்மைப் பீரங்கி வாயில் வைத்துச் சுட்டுச் சுக்குச் சுக்காக்கிச் சிதற அடித் தாலும், தம் மனச்சாட்சிக்கு எதிரான சட்டத்தை எதிர்த்தே தீருவேன் என்பார்.

பீரங்கிக்குப் பின்னல் இருந்துகொண்டு சுட்டு, மற்றவர் களேச் சிதற அடிப்பது வீரமா அல்லது புன்முறுவல் பூத்த முகத்துடன் பீரங்கியை அணுகி சுக்கலாகிச் சிதறுண்டு போவது வீரமா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? உண்மையான போர் வீரன் யார்—சாவை எப்பொழுதும் தனது ஆப்த நண்பனுக வைத்துக் கொண்டிருப்பவனு அல்லது மற்றவர்களின் மரணத் திற்கு வழி செய்கிறவனு? வீரமோ அல்லது மனிதத்தன்மையோ இல்லாதவன் என்றுமே சாத்விக எதிர்ப்பாளனுக இருக்க முடியாது. இதை நம்புங்கள்.

என்றுலும், ஒன்றை நான் ஒப்புக்கொள்ளுவேன். உடலில் ஒருவர் பலவீனமாயிருந்தாலும் இந்த எதிர்ப்பை அளிக்க அவரால் முடியும். லட்சக்கணக்கானவர்களேப் போலவே தனிப் பட்ட ஒருவராலும் இந்த எதிர்ப்பைச் செய்யமுடியும். ஆண்களும் பெண்களும் இதில் ஈடுபடலாம். ராணுவத்திற்கு வேண்டியதைப் போன்ற பயிற்சி இதற்குத் தேவையில்லே. ஜப்பானிய மல் யுத்தத்தைப் போன்றது எதுவும் இதற்கு வேண்டியதில்லே. மனத்தைக் கட்டுப்படுத்துவது ஒன்றே இதற்கு வேண்டும். இதை அடைந்துவிட்டால் காட்டு ராஜன் (சிங்கம்) போல் மனிதன் சுயேச்சையாளனுகிவிடுவான்; அவனுடைய பார்வை பட்ட மாத்திரத்தில் எதிரி குலேந்து போவான்.

சாத்விக எதிர்ப்பு எல்லாப் பக்கங்களிலும் கூர்மை உடையதோர் வாள்; எப்படி வேண்டுமானுலும் அதை உபயோகப் படுத்தலாம். உபயோகித்தவரை அது வாழ்த்துகிறது; யார் மீது அது பிரயோகிக்கப்படுகிறதோ அவரையும் அது வாழ்த்தும். ஒரு சொட்டு ரத்தத்தையும் சிந்தாமல் எவ்வளவோ பெரிய பலன்களே உண்டாக்கும். அது துருப் பிடித்துவிடுவதே இல்லே; அதைத் திருடிவிடவும் முடியாது. சாத்விக எதிர்ப்பாளர்க ளிடையே போட்டி, களேப்பை உண்டாக்குவதில்லே. சாத்விக

எதிர்ப்பான வாளுக்கு உறை தேவையில்லை. இத்தகையதோர் ஆயுதத்தைப் பலவீனர்களின் ஆயுதமே என்று நீங்கள் எண்ணியது விசித்திரமேயாகும்.

வாசகர்: சாத்விக எதிர்ப்பு இந்தியாவுக்கு விசேடமான தொன்று என்று நீங்கள் கூறினீர்கள். பீரங்கிகள் இந்தியாவில் என்றும் உபயோகத்தில் இருந்ததில்லையா?

ஆசிரியர்: இந்தியா என்றால் சில ராஜாக்கள் என்றே உங்கள் அபிப்பிராயம் போல் இருக்கிறது. ஆனால், இந்த ராஜாக்களும் நாமுங்கூட இருந்து வருவதற்குப் பொறுப்பானவர் களான கோடானுகோடி மக்களே இந்தியா என்பது என் அபிப்பிராயம்.

மன்னர்கள் எப்பொழுதும் அவர்களுக்கு ஏற்ற ஆயுதங் களையே உபயோகிப்பார்கள். பலாத்காரத்தை உபயோகிப்பதி லேயே அவர்கள் வளர்ந்திருக்கிறார்கள். அவர்கள் அதிகாரம் செலுத்த விரும்புகிறார்கள். அதிகாரத்திற்குப் பணிய வேண்டிய வர்களுக்குத் துப்பாக்கி தேவையில்லை. உலகம் முழுவதுமே இப்படிப்பட்டவர்களே பெரும்பான்மையினராக இருக்கின்றனர். உடல் வலிவையோ அல்லது ஆன்ம பலத்தையோ இவர்கள் கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. உடல் பலப் பிரயோகத் தைக் கற்றுக்கொள்ளும்போது ஆள்வோரும் ஆளப்படுவோரும் பைத்தியக்காரர்களைப் போன்றே ஆகிவிடுகின்றனர். ஆனால், ஆன்ம பலத்தை உபயோகிக்கக் கற்றுக்கொள்ளும்போது ஆட்சி யாளரின் ஆக்ஞைகள் வாள்முனைக்கு அப்பால் போய் விடுவ தில்லை. ஏனெனில், உண்மையான மனிதர்கள் அக்கிரமமான ஆக்ஞைகளை அலட்சியஞ் செய்துவிடுகின்றனர். விவசாயிகள் வாளினால் ஒடுக்கப்பட்டுவிட்டதே இல்லை; என்றும் அது முடியவே முடியாது. வாளை உபயோகிக்க அவர்களுக்குத் தெரியாது; மற்றவர்கள் அதை உபயோகிக்கும்போதும் அவர்கள் மிரண்டுவிடுவதில்லை. மரணத்தையே தம் மெல்லணையாக நினைத்துத் துயில் கொள்ளும் மக்களை உடைய நாடே சிறந்த நாடாகும். சாவுக்கு அஞ்சாதவனை எந்தப் பயமும் எதுவும் செய்யமுடியாது. மிருக பலத்தின் பிரமையில் மயங்கிக் கிடப்ப வர்களுக்கு அந்தச் சித்திரம் மிகைப்பட்டதன்று. உண்மை என்னவென்றால், இந்தியாவில் மக்கள் எல்லோருமே தங்கள் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும், பொதுவாகச் சாத்விக எதிர்ப்பையே அனுசரித்து வருகின்றனர். நமக்கு அதிருப்தியை உண்டாக்கிவிடும் ஆட்சியாளருடன் நாம் ஒத்துழைக்க மறுத்து விடுகிறோம். இதுதான் சாத்விக எதிர்ப்பு.

ஒரு சம்பவம் எனக்கு நினைவிருக்கிறது. ஒரு சிறு சமஸ்தானத்தில் கிராமவாசிகளுக்கு மன்னரின் ஆக்ஞையொன்று அறிவிக்கப்பட்டது. கிராமவாசிகள் உடனே கிராமத்திலிருந்து வெளியேற ஆரம்பித்தனர். மன்னர் பயந்துவிட்டார். தமது குடிகளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தமது ஆக்ஞையையும் ரத்து செய்தார். இந்தியாவில் இத்தகைய சம்பவங்கள் பல நடந்திருப்பதைக் காணலாம். சாத்விக எதிர்ப்பு எங்கே மக்களுக்கு வழிகாட்டும் சக்தியாக இருக்கிறதோ அங்கேதான் உண்மையான ஆட்சி கைகூடும். மற்ற ஆட்சி எதுவுமே அந்நிய ஆட்சியே.

வாசகர்: அப்படியானால், உடம்புக்குப் பயிற்சி அளிக்க வேண்டிய அவசியமே இல்லை என்கிறீர்களா?

ஆசிரியர்: நிச்சயமாக நான் அப்படி எதையும் சொல்லவேயில்லை. உடற்பயிற்சி பெற்றிருந்தாலன்றிச் சாத்விக எதிர்ப்பாளராவது கஷ்டம். பொதுவாக, பருத்துவிட்டதனால் பலவீனமாகிவிட்ட உடலில் இருக்கும் மனமும் பலவீனமானதாகவே இருக்கும். மன வலிமை இல்லாதபோது ஆன்ம பலமும் இருக்கமுடியாது. குழந்தைக் கல்யாணம், ஆடம்பர வாழ்க்கை ஆகியவைகளை ஒழித்து நாம் நமது உடல் பலத்தை விருத்தி செய்துகொள்ளவேண்டும். சிதைந்த உடலோடு கூடியவனை பீரங்கி வாயில் நிற்கும்படி நான் கூறுவேனாயின், என்னை உலகம் எள்ளி நகைக்கும்.

வாசகர்: அப்படியானால், சாத்விக எதிர்ப்பாளனாவது சின்ன விஷயமே அல்ல என்றே நீங்கள் கூறுவதிலிருந்து தெரிகிறது. அப்படித்தான் என்றால், ஒருவர் சாத்விக எதிர்ப்பாளராக எப்படி ஆகலாம் என்பதை நீங்கள் விளக்கவேண்டும்.

ஆசிரியர்: சாத்விக எதிர்ப்பாளராவது எளிதானதே. ஆனால், இது கஷ்டமானதுங்கூட. பதினான்கு வயதுடைய ஓர் இளைஞன் சாத்விக எதிர்ப்பாளனானதை அறிவேன். உடலில் வலிவிருந்து, மற்ற வகையிலும் இன்பம் அனுபவிப்பவர், சாத்விக எதிர்ப்பைக் கையாள முடியாததையும் அறிவேன். நாட்டின் சேவைக்காகச் சாத்விக எதிர்ப்பாளராக விரும்புவோர் சரியான கற்பை அனுசரிக்கவேண்டும், எளிமையை மேற்கொள்ளவேண்டும், சத்தியத்தைக் கடைப்பிடிக்கவேண்டும், அஞ்சாமையை வளர்க்கவேண்டும் என்று எவ்வளவோ அனுபவத்திற்குப் பிறகு எனக்குத் தோன்றுகிறது.

கற்பு, கட்டுப்பாடுகளில் மிகப் பெரியது. அது இல்லாது போனல் வேண்டிய உறுதியை மனம் அடையாது. கற்பில்லாதவன் தாக்குப் பிடிக்கும் சக்தியை இழந்துவிடுகிருன்; ஆண்மை இழந்து கோழையும் ஆகிவிடுகிருன். மிருக உணர்ச்சிகளில் ஈடுபட மனத்தைச் சிதற விடுபவனல் பெரிய காரியங்களைச் செய்யவே இயலாது. எத்தனையோ சம்பவங்களைக்கொண்டு இதை நிரூபிக்க முடியும். அப்படியாயின், விவாகமான ஒருவர் என்ன செய்வது என்ற கேள்வி இயற்கையாகவே எழுகிறது. என்ருலும், இக் கேள்வி எழ வேண்டியதே இல்லை. கணவனும் மனைவியும் தங்களுடைய இச்சைகளைத் தீர்த்துக்கொள்ளுவார்களானல், அந்த அளவில் அதுவும் மிருக உணர்ச்சியில் ஈடுபடுவதேயாகும். இன விருத்திக்காக அல்லாமல் மற்றதற்காக இத்தகைய நுகர்வுகளில் ஈடுபடுவது கண்டிப்பாகத் தடுக்கப்படுகிறது. ஆனல், ஒரு சாத்விக எதிர்ப்பாளர் குறைந்த அளவிலும் இத்தகைய நுகர்ச்சிக்கு இடம் தரவே கூடாது. ஆகையால், கல்யாணமான ஒருவர் பிரம்மசரியத்தை முற்றிலும் அனுசரிக்கலாம். இந்த விஷயமே விவரமாக ஆராய்ச்சிக்கு உட்பட்டதென்று பல கேள்விகள் எழுகின்றன. ஒருவர் தன்னுடைய மனைவியுடன் எப்படி நடந்து கொள்ளுவது, அவளுடைய உரிமைகள் யாவை என்பனவெல்லாம் எழுகின்றன. என்ருலும், ஒரு பெரிய வேலையில் ஈடுபட விரும்புகிறவர்கள் இந்தப் புதிர்களைத் தீர்த்துக்கொண்டே ஆகவேண்டும்.

பிரம்மசரியம் எப்படி அவசியமோ அதே போல வறுமையும் அவசியம். பண ஆசையும், சாத்விக எதிர்ப்பும் சேர்ந்திருக்க முடியாது. பணம் படைத்தவர்கள், அதை வீசி எறிந்துவிடுவார்கள் என எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனல், அது சம்பந்தமாக அவர்கள் சிரத்தை எடுத்துக்கொள்ளக் கூடாதென எதிர்பார்க்கப்படுகிறது. சாத்விக எதிர்ப்பைக் கைவிடுவதைவிட கடைசி காசுவரை இழந்துவிடத் தயாராக இருக்கவேண்டும்.

நமது விவாதத்தின்போது சாத்விக எதிர்ப்பு, சத்தியத்தின் பலம் என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால், சத்தியத்தை, அது எப்படியும் கடைப்பிடித்தாகவேண்டும். ஓர் உயிரைக் காப்பாற்றுவதற்காகப் பொய் சொல்லலாமா என்பதைப் போன்ற சாதாரணமான கேள்விகளெல்லாம் எழுகின்றன. ஆனல், இக்கேள்விகளெல்லாம் பொய் சொல்லுவதும் நியாயம் என்று விவாதிக்க விரும்புகிறவர்களுக்கே எழும். ஒவ்வொரு சமயத்திலும் சத்தியத்தையே பின்பற்ற விரும்புகிறவர்களுக்கு இத்தகைய குழப்பமில்லை. அப்படி அவர்கள் இருந்தாலும்,

தவறான நிலைமையிலிருந்து அப்பொழுதும் அவர்கள் காப்பாற்றப் படுகிறார்கள்.

அஞ்சாமையின்றி சாத்விக எதிர்ப்பு ஒருபடிகூட முன்னால் போகமுடியாது. தங்களுடைய சொத்துக்கள், போலி கௌரவம், தங்கள் உறவினர், அரசாங்கம், உடலுக்கு ஏற்படக்கூடிய காயம் அல்லது சாவு இவற்றில் பற்றுத் துறந்தவர் மட்டுமே சாத்விக எதிர்ப்பைப் பின்பற்ற முடியும்.

இவைகளையெல்லாம் அனுசரிப்பது சிரமம் என்ற எண்ணத்தில் இவைகளை அனுசரிப்பதை விட்டுவிடக் கூடாது. தன் செய்கையாலன்றித் தானே வரும் எந்தச் சிரமங்களையும் துன்பங்களையும் சமாளித்துக் கொள்ளுவதற்கான ஆற்றலை மனித உள்ளத்திற்கு இயற்கை அளிக்கிறது. நாட்டிற்காகச் சேவை செய்ய விரும்பாதவர்களுக்கும் இக் குணங்கள் இருக்க வேண்டியவை. ஆயுதங்களை உபயோகிப்பதில் பழகிக் கொள்ளவேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கும் ஏறக்குறைய இக்குணங்கள் இருந்தாக வேண்டும் என்பதில் சந்தேகமே இல்லை. போர் வீரனாக இருக்கப் போகிறவன், பிரம்மசரியத்தை அனுசரிப்பதோடு, வறுமையே தனது கதி என்பதிலும் திருப்தி அடைய வேண்டும். அச்சம் கொண்டவனைப் போர் வீரனாகவே கருத முடியாது. உண்மையில் அவன் சத்தியத்தைக் கடைப்பிடிப்பவனாக இருக்கவேண்டும் என்பதில்லை எனக் கருதப்படலாம். ஆனால், அந்தத் தன்மை, உண்மையான அஞ்சாமையைத் தொடர்ந்து ஏற்படுகிறது. ஒருவன் சத்தியத்தைக் கைவிடுகிறான் என்றால், ஏதோ ஒரு வகையில் அல்லது உருவத்தில் பயத்தினாலேயே அப்படிச் செய்கிறான். அப்படியானால், மேற்கண்ட நான்கு குணங்களும் யாரையும் பயமுறுத்திவிட வேண்டியதில்லை. உடல் பலத்திலேயே நம்பிக்கை வைத்திருப்பவனுக்கும் சாத்விக வீரனுக்கும் தேவைப்படாத பயனற்ற சில குணங்களும் வேண்டியிருக்கும் என்பதையும் இங்கே குறிப்பிட வேண்டும். வாள் ஏந்துபவனுக்கு வேண்டியிருக்கும் அதிகப்படியான முயற்சிகளெல்லாம் அச்சத்தினாலேயே ஏற்படுகின்றன என்பதை நீங்கள் காணலாம். அவன், அஞ்சாமையே உருவாக இருப்பானாயின், அவன் கையிலிருந்து வாள் அத்தருணத்திலேயே விழுந்துவிடும். அதன் உதவி அவனுக்குத் தேவையில்லை. துவேஷமில்லாதவனுக்கு வாள் வேண்டியதே இல்லை. கையில் ஒரு கோலுடன் இருந்தவனுக்கு எதிரே திடீரென ஒரு சிங்கம் வந்துவிடுகிறது. அவன் தற்காப்புக்காக இயல்பாகவே கோலை ஓங்குகிறான். அஞ்சாமை என்பது தன்னிடத்தில் கொஞ்சமும் இல்லாதிருந்தும், தான் அதைப் பற்றிப் பிதற்றிக் கொண்டு இருப்பதை அவன் காண்கிறான். அப்பொழுதே கோலைப் போட்டுவிட்டு அச்சம் ஒழிந்தவனாகத் தன்னை உணர்கிறான்.

# அத்தியாயம் 18

# கல்வி

வாசகர்: நமது விவாதத்தில் எங்கும் கல்வியின் அவசி யத்தைப் பற்றி நீங்கள் காட்டவே இல்லே. நமக்குக் கல்வி இல் லாததைக் குறித்து நாம் எப்போதும் புகார் சொல்லிக் கொண்டி ருக்கிருேம். கட்டாயக் கல்வி வேண்டும் என்ற ஓர் இயக்கமும் நம் நாட்டில் இருப்பதைக் காண்கிருேம். கெய்க்வார் மகாராஜா அதை தமது பிரதேசத்தில் அமலுக்குக் கொண்டு வந்திருக்கிருர். நம் கவனமெல்லாம் அப்பக்கம் திரும்பியிருக்கிறது. இதற்காக மகாராஜாவை வாழ்த்துகிருேம். இம்முயற்சியெல்லாம் வீண்தானு?

ஆசிரியர்: நமது நாகரிகமே உயர்வானது என்று நாம் கருதுவதாயிருந்தால், நீங்கள் விவரிக்கும் முயற்சியெல்லாம் வீண் என்றே வருத்தத்துடன் நான் கூற வேண்டியிருக்கிறது. இவ்வழி யில் வேலே செய்துவரும் மகாராஜா, மற்றப் பெருந் தலேவர்கள் ஆகியவர்களின் நோக்கம் புனிதமானதே. ஆகையால் அவர்கள் பாராட்டப்பட வேண்டியவர்கள் என்பதில் சந்தேகமில்லே. ஆனல், அவர்கள் முயற்சியினல் ஏற்படக்கூடிய பலனே நாம் மறைத்துவிட முடியாது.

கல்வி என்பதன் பொருள்தான் என்ன? எழுத்தறிவு என் பதே அதன் சாதாரணப் பொருள். அது கருவி மாத்திரம். ஒரு கருவியை நல்வழியிலும் உபயோகிக்கலாம், தீய வழியிலும் உப யோகிக்கலாம். ஒரு நோயாளியைக் குணப்படுத்த உபயோ கிக்கும் அதே கருவியை அவருடைய உயிரைப் போக்கவும் உப யோகிக்கலாம். எழுத்தறிவும் அப்படியே ஆகலாம். பலர் அதைத் தவருக உபயோகித்துவிடுகிருர்கள் என்பதையும், மிகச் சிலரே நல்வழியில் உபயோகிக்கின்றனர் என்பதையும் தினமும் நாம் காண்கிருேம். இப்படிச் சொல்லுவது சரியாக இருந்தால், இதனல் நன்மையைவிடத் தீமையே அதிகம் செய்யப்பட்டிருக் கிறது என்பதை நாம் நிருபித்துவிட்டோம்.

படிப்பு என்பதற்குச் சாதாரணப் பொருள், எழுத்தறிவு என்பதே. சிறுவர்களுக்குப் படிக்கவும் எழுதவும், கணக்குச் சொல்லிக் கொடுப்பதும் ஆரம்பக் கல்வி எனப்படுகிறது. ஒரு விவசாயி, யோக்கியமாகச் சம்பாதித்துப் பிழைக்கிருன். உலகத் தைப் பற்றிய சாதாரண ஞானமே அவனுக்கு உண்டு. தன்னு

டைய பெற்ருேர்கள், தன் மனைவி, குழந்தைகள், கிராமத்தில் இருக்கும் மற்றவர்கள் ஆகியவர்களிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது அவனுக்கு நன்ருகத் தெரியும். ஒழுக்க நியதிகளை அவன் அறிவதோடு அவைகளை அனுசரிக்கிருன். ஆனல், தன் பெயரை எழுதக்கூட அவனுக்குத் தெரியாது. அவனுக்கு எழுத்தறிவை அளித்து அவனை என்ன செய்ய விரும்புகிறீர்கள்? அவனுடைய இன்பத்தைக் கொஞ்சமாவது அதிகரித்துவிட முடியுமா? தன்னுடைய குடிசையைப் பற்றி அல்லது தன் நிலையைக் குறித்து அவனுக்கு அதிருப்தியை உண்டாக்க விரும்புகிறீர்களா? இதைத்தான் செய்ய விரும்புகிறீர்களென்ருலும் அவனுக்கு அத்தகைய படிப்புத் தேவையில்லை. மேனுட்டுச் சிந்தனை வெள்ளத்தில் மிதந்து செல்வதால், எது அனுகூலம், எது பிரதிகூலம் என்பதைக்கூடச் சீர்தூக்கிப் பாராமல் இத்தகைய படிப்பை மக்களுக்கு அளிக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டோம்.

மேல் படிப்பை எடுத்துக்கொள்ளுவோம். பூகோளம், வான சாஸ்திரம், பீஜ கணிதம், ஜியோமிதி ஆகியவைகளைப் படித்திருக்கிறேன். அதனல் என்ன? அதனல் நானே அல்லது என்னைச் சுற்றியுள்ளவர்களோ அடைந்துவிட்ட நன்மை யாது? இவைகளை ஏன் கற்றுக்கொண்டேன்? கல்வியைக் குறித்துப் பேராசிரியர் ஹக்ஸ்லி* வருமாறு விளக்கியிருக்கிருர். "தம் இஷ்டத்திற்கெல்லாம் உடன்படும் வேலைக்காரனுக இருக்கும் வரையில் யாரொருவர் இளமையில் தம் உடலைப் பயிற்சி செய்து வைத்திருக்கிருரோ, யந்திரம் போல அதனல் முடிந்ததையெல்லாம் இலகுவாகவும் சந்தோஷமாகவும் செய்கிருரோ, யாருடைய அறிவு தெளிவாகவும், நிதானமாகவும், பகுத்தறியும் யந்திரமாகவும், அதன் எல்லாப் பகுதிகளும் ஒரே விதமான பலத்துடனும் ஒழுங்காக வேலை செய்யும் நிலையிலும் இருக்கிறதோ அப்படிப்பட்டவரே சரியான கல்வியைப் பெற்றிருப்பதாக நான் கருதுகிறேன். அவருடைய புத்தி இயற்கையின் அடிப்படை உண்மைகளைப் பற்றிய அறிவின் களஞ்சியமாக இருக்க வேண்டும். மனத்திட்பமும் மெல்லுணர்வான மனச்சாட்சியும் கூடியதாகவும் இருக்க வேண்டும். தீயவைகளையெல்லாம் வெறுத்து, தம்மைப் போல் மற்றவர்களையும் நேசிக்கக் கற்றிருக்க வேண்டும். தாமே

* தாமஸ் ஹென்றி ஹக்ஸ்லி (1825—1895) பிரபலமான விஞ்ஞானி; ஆராய்ச்சியாளர். ஆராய்ச்சி நூல்கள் பல எழுதினர். 'இயற்கையில் மனிதனுக்குள்ள ஸ்தானம்' என்று இவர் எழுதிய நூலும் பல கட்டுரைகளும் அவரைப் பிரபலமாக்கின.

இயற்கையோடு இயைந்திருப்பதால் அவரே சரியான கல்வியைப் பெற்றவராவாரேயன்றி மற்றவரல்ல என்று நான் கருதுகிறேன். இயற்கை அன்னையை அவரே சரியானபடி பயன்படுத்திக் கொள்ளுவார்; அவளும் அவரைப் பயன்படுத்திக் கொள்ளுவாள்."

இதுதான் உண்மையான படிப்பு என்ருல், மேலே நான் குறித்திருக்கும் சாஸ்திரங்களினுலெல்லாம் என்னுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்துவதற்கு முடிந்ததேயில்லே என்று நான் உறுதியாகக் கூறுவேன். ஆகையால், ஆரம்பக் கல்வியை எடுத்துக்கொண்டாலும், மேல் படிப்பை எடுத்துக்கொண்டாலும், முக்கியமான காரியத்திற்கு அவை வேண்டியதேயில்லே. அவை நம்மை மனிதனுக ஆக்கவில்லே. நாம் நம் கடமையைச் செய்வதற்கு அவை உதவியாக இல்லே.

வாசகர் : அப்படியானல், நான் உங்களே இன்னும் ஒரு கேள்வி கேட்கவேண்டியிருக்கிறது. இவற்றையெல்லாம் நீங்கள் என்னிடம் கூறும்படிச் செய்வது எது? உங்களுக்கு மேல் படிப்பு இல்லாது போயிருக்குமானல், இப்பொழுது என்னிடம் விளக்கியதைப் போல இவற்றைக் குறித்து நீங்கள் எப்படி விளக்கியிருக்கமுடியும்?

ஆசிரியர் : சரியாகச் சொன்னீர்கள். ஆனல், என் பதில் சாதாரணமானது. உயர்ந்த படிப்போ அல்லது கீழ்ப்படிப்போ இல்லாதிருந்தால் என் வாழ்க்கை வீணுகியிருக்கும் என்று நான் கொஞ்சமேனும் நம்புவதே இல்லே. பேசுவதனுல்தான் நான் சேவை செய்கிறேன் என்றும் நான் எண்ணவில்லே. ஆனல் சேவை செய்ய நான் ஆசைப்படுகிறேன். அந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள முயலுவதில் எனக்கிருக்கும் படிப்பை நான் பயன்படுத்திக் கொள்ளுகிறேன். அதை நல்லபடி பயன்படுத்திக் கொள்ளுவதாயிருந்தாலும், அதை உங்களேப் போன்றவர்களுக்கே பயன்படுத்த முடியுமேயன்றி கோடிக்கணக்கான மக்களுக்கல்ல. இதுவே என் கருத்திற்கு ஆதாரமானதாகிறது. நீங்களும் நானும் பொய்யானதொரு படிப்பின் தீமையில் சிக்கிக்கொண்டிருக்கிருேம். அத்தீமையிலிருந்து நான் விடுபட்டுவிட்டதாகக் கூறிக்கொள்ளுகிறேன். என்னுடைய அனுபவத்தின் பலனே உங்களுக்கு அளிக்க முயற்சி செய்வதோடு, இதற்காக இப்படிப்பின் ஊழலேயும் உங்களுக்கு எடுத்துக் காட்டுகிறேன்.

மேலும், எழுத்தறிவு எல்லாச் சந்தர்ப்பங்களிலுமே கூடாது என்று நான் சொல்லவில்லை. இப்பொழுது உங்களுக்குக் காட்டிய தெல்லாம் எதற்கு? அதை நாம் பிரமாதப்படுத்தக்கூடாது என்பதற்கே. அது நம்முடைய காமதேனு அன்று. அதன் விஷயத்தில் அது பயனுள்ளதாக இருக்கக்கூடும்; நம் உணர்ச்சி களை அடக்கி, நமது கோட்பாட்டையும் நாம் உறுதியான அடிப் படையில் அமைத்துக்கொண்டு விட்டோமானால், அதற்குரிய இடம் அதற்கு உண்டு. அதன் பிறகு அக்கல்வியைப் பெற வேண்டும் என்ற எண்ணம் நமக்கிருந்தால், அதை நாம் நன்ருகப் பயன்படுத்திக்கொள்ள முடியும். ஓர் ஆபரணத்தைப் போல அது நமக்கு அழகு செய்யவும் கூடும். ஆகையால் இக்கல்வியைக் கட்டாயமானதாக்க வேண்டிய அவசியமில்லை என்ருகிறது. நமது பழங்காலப் பள்ளிக்கூட முறையே போதுமானது. ஒழுக் கத்தை வளர்த்துக்கொள்ளுவதற்கே அதில் முதல் இடம்; அது தான் ஆரம்பக்கல்வி. அந்த அடிப்படையின்மீது கட்டப்படும் கட்டடம் நீடித்தும் இருக்கும்.

வாசகர் : அப்படியானல், சுய ஆட்சி பெறுவதற்கு ஆங்கிலப் படிப்பு அவசியம் என்று நீங்கள் கருதவில்லை என்று நான் அறிந்துகொள்ள வேண்டுமா?

ஆசிரியர் : ஆம் என்பதும், இல்லை என்பதுமே இதற்கு நான் தரும் விடை. லட்சக்கணக்கானவர்களுக்கு ஆங்கிலப் படிப்பு அளிப்பது அவர்களை அடிமைப்படுத்துவதாகும். படிப் புக்கு மெக்காலே போட்ட அஸ்திவாரம் நம்மை அடிமைப்படுத்தி விட்டது. அவ்வித நோக்கம் அவருக்கு இருந்தது என்று நான் கூறவில்லை. ஆனல், பலன் அதுவே ஆயிற்று. சுய ஆட்சியைப் பற்றி ஓர் அந்நிய மொழியில் பேசவேண்டியிருப்பது வருந்தத் தக்க விஷயமல்லவா?

ஐரோப்பியர்கள் வெறுத்துத் தள்ளிவிட்ட முறையே நம்மிடம் அனுசரிக்கப்பட்டு வருகிறது என்பதும் கவனிக்கத்தக்க தாகும். அவர்களுடைய அறிஞர்கள் தொடர்ந்து மாறுதல் களைச் செய்துவருகிருர்கள். அவர்கள் உதறித் தள்ளிவிட்ட முறைகளையெல்லாம் நாம் அறியாமையோடு பின்பற்றி வரு கிரும். ஒவ்வொரு பகுதியிலும் அதன் அந்தஸ்தை உயர்த்த முயற்சி செய்துவருகிருர்கள். இங்கிலாந்தின் ஒரு சிறிய பகுதியே வேல்ஸ். வேல்ஸ்காரர்களிடையே வெல்ஷ் மொழி யறிவைத் திரும்பவும் உயிர்ப்பிக்கப் பெரு முயற்சிகள் செய்யப் பட்டு வருகின்றன. வேல்ஸ் குழந்தைகள் வெல்ஷ் மொழியி லேயே பேசும்படிச் செய்வதற்கென்று ஏற்பட்ட இயக்கத்தில்

ஆங்கிலச் சான்ஸலரான ஸ்ரீ லாயிட் ஜார்ஜ்* முக்கியமான பங் கெடுத்துக் கொண்டிருக்கிறுர். ஆனல், நமது நிலைமை என்ன? நாம் ஒருவருக்கொருவர் தவருன ஆங்கிலத்தில் எழுதிக்கொள்ளு கிறோம்; நமது எம். ஏ-க்களும் இதே தவறு செய்கிறார்கள். நம் சிறந்த எண்ணங்களெல்லாம் ஆங்கிலத்திலேயே எடுத்துக் கூறப்படுகின்றன; நம் காங்கிரஸின் நடவடிக்கைகள் ஆங்கிலத்திலேயே நடக்கின்றன; நம் சிறந்த செய்திப் பத்திரிகைகள் ஆங்கிலத்திலேயே பிரசுரமாகின்றன. இதே நிலைமை நீண்ட காலத்திற்கு நீடிப்பதாயின், எதிர்காலம் நம்மைக் கண்டித்துச் சபிக்கும் என்பது என்னுடைய திடமான கருத்து.

ஆங்கிலக் கல்வி பெற்றதால் நாட்டை நாம் அடிமைப் படுத்திவிட்டோம் என்பது கவனிக்கத்தக்கதாகும். நயவஞ்சகம், கொடுமை முதலியன அதிகரித்துவிட்டன. ஆங்கிலம் அறிந்த இந்தியர் மக்களை ஏமாற்றி, மிரட்டுவதற்குத் தயங்குவதேயில்லை. இப்பொழுது நாம் மக்களுக்கு ஏதாவது செய்து கொண்டிருக் கிறோமென்றால், அவர்களுக்குரிய கடனில் ஒரு சிறு பாகத்தை மாத்திரம் செலுத்திவருகிறோம்.

நான் நீதி மன்றத்திற்குப் போகவேண்டுமென்றால் ஆங்கில மொழியையே அங்கே உபயோகிக்கவேண்டும். நான் பாரிஸ்டர் ஆனதும் என் தாய்மொழியில் பேச முடிவதில்லை. நான் கூறுவதை என் மொழியிலேயே இன்னொருவருக்காக மொழி பெயர்க்கவேண்டும் என்பது வருந்தத்தக்கதல்லவா? இது முற்றிலும் வெட்கக்கேடானதல்லவா? இது அடிமைத்தனத்திற்கு அடையாளமல்லவா? இதற்கு நான் ஆங்கிலத்தின்மீது குற்றங் கூறுவதா, என்மீது குற்றங் கூறிக்கொள்ளுவதா? ஆங்கிலம் அறிந்த இந்தியராகிய நாமே இந்தியாவை அடிமைப்படுத்தி யிருக்கிறோம். நாட்டின் சாபம் நம்மீதுதான் விழுமேயன்றி ஆங்கிலத்தின் மீதல்ல.

உங்களுடைய கடைசிக் கேள்விக்கு ஆம் என்பதும், இல்லை என்பதும் என் விடை என்று சொன்னேன். ஆம் என்பது என்ன என்பதை உங்களுக்கு விளக்கிச் சொல்லிவிட்டேன். இல்லை என்பது என்ன என்பதை இனி விளக்குகிறேன்.

---

* லாயிட் ஜார்ஜ்: 1915-இல் முதல் உலக யுத்த காலத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தார். யுத்தகாலத்தில் இவர் காட்டிய திறமையும் மக்களிடையே மூட்டிய உற்சாகமும் அந்த யுத்தத்தில் ஜெர்மனியை முறியடிக்கப் பெரும் உதவியாக இருந்தன. இவருடைய லிபரல் கட்சி சீர்குலைந்து வந்தாலும் கடைசிவரையில் அக் கட்சியின் தலைவராக இருந்துவந்தார்

நாகரிகம் என்ற நோயினல் நாம் அதிகமாகப் பீடிக்கப் பட்டுவிட்டதால் ஆங்கிலப் படிப்பு இல்லாமல் நாம் முற்றிலும் இருந்துவிடுவதற்கில்லை. அதுவரை அப்படிப்பைப் பெற்றிருப் பவர்கள், எங்கெங்கே அவசியமோ அங்கெல்லாம் அதை நன் ருகப் பயன்படுத்திக்கொள்ளலாம். ஆங்கில மக்களிடம் தொடர்பு கொள்ளுவதற்கும், அவர்களுடன் அந்த மொழியி லேயே கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ள முடியும் என்று இருக்கும்போதும், ஆங்கில மக்கள் தங்களுடைய நாகரிகத் தைக் குறித்து எவ்வளவு வெறுப்பை அடைந்திருக்கிருர்கள் என் பதை அறிவதற்கும், நமக்கு ஏற்றவாறு ஆங்கிலத்தை உப யோகிக்கலாம், அல்லது அதைக் கற்றுக்கொள்ளலாம். ஆங்கி லம் படித்திருப்பவர்கள், தங்களுடைய குழந்தைகளுக்குத் தங் கள் தாய்மொழி மூலம் ஒழுக்கத்தைப் போதிக்கவேண்டும்; மற்ருேர் இந்திய மொழியையும் அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கவேண்டும். ஆனல், அவர்கள் வளர்ந்துவிட்ட பிறகு அவர்கள் ஆங்கிலம் கற்றுக்கொள்ளலாம். அது நமக்குத் தேவையில்லை என்பதே முடிவான நோக்கமாக இருக்கவேண் டும். அதைக் கொண்டு பணம் சம்பாதிப்பது என்பதை ஒழித்துவிடவேண்டும். இவ்விதம் குறிப்பிட்ட அளவுக்கு நாம் ஆங்கிலம் படிக்கும்போதுகூட அதன்மூலம் கற்றுக்கொள்ள வேண்டியது என்ன, கற்கவேண்டாதது என்ன என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஆங்கிலப் படிப்பு, பட்டங்களை மதிப்பதை நாம் விட்டுவிட்டோம் என்றதுமே ஆளுவோர் விழித்துக்கொண்டு விடுவார்கள்.

வாசகர்: அப்படியானல், நாம் எந்தக் கல்வியைக் கொடுப்பது?

ஆசிரியர்: இதைப்பற்றி மேலேயே கொஞ்சம் கவனித் திருக்கிருேம். ஆனல், இதைக் குறித்து இன்னும் கொஞ்சம் அதிகமாகக் கவனிப்போம். நம் எல்லா மொழிகளையுமே விருத்தி செய்யவேண்டும் என எண்ணுகிறேன். அம்மொழி களைக்கொண்டு என்ன விஷயங்களைக் கற்கவேண்டும் என் பதைக் குறித்து இங்கே விவரிக்க வேண்டியதில்லை. சிறந்தவை யான ஆங்கிலப் புத்தகங்களைப் பல இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்க வேண்டும். பல சாத்திரங்களையும் கற்றுக் கொள்ளுவதான பாசாங்கை நாம் விட்டுவிடவேண்டும். மத அதாவது ஒழுக்க சம்பந்தமான படிப்புக்கு முதல் இடம் அளிக்க வேண்டும். படித்த ஒவ்வோர் இந்தியரும், தம்முடைய மாகாண மொழியுடன், ஹிந்துவாயிருந்தால் சம்ஸ்கிருதம்

முஸ்லிமாக இருப்பின் அரபு, பார்ஸியானல் பாரசீகம் — எல்லோருமே ஹிந்தியும் கற்கவேண்டும். சில ஹிந்துக்கள் அரபு, பாரசீக மொழிகளை அறியவேண்டும்; சில முஸ்லிம்களும் பார்ஸிகளும் சமஸ்கிருதம் படிக்கவேண்டும். வடநாட்டினரும் மேற்குப் பிரதேசத்தவர் பலரும் தமிழ் கற்கவேண்டும். இந்தியா முழுமைக்கும் ஹிந்தியே பொது மொழியாயிருப்பதோடு அதை இஷ்டம்போல் பாரசீக அல்லது நாகரி லிபியில் எழுதலாம். ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் நெருங்கிய உறவு இருப்பதை முன்னிட்டு இரு லிபிகளையும் அறிந்திருப்பது அவசியம். இதை நாம் செய்ய முடிந்தால் ஆங்கிலத்தைச் சிறிது காலத்திலேயே விரட்டிவிட முடியும். அடிமைகளாகிய நமக்கு இவையெல்லாம் அவசியம். நமது அடிமைத்தனத்தினுல் நாடே அடிமை ஆகிவிட்டது. நாம் சுதந்திரம் பெற்ருல் நாடும் சுதந்திரம் அடைந்துவிடும்.

வாசகர்: மதக் கல்வி விஷயம் அதிக கஷ்டமானது.

ஆசிரியர்: என்ருலும், அது இல்லாமல் முடியாது இந்தியா, கடவுள் தன்மையற்றதாக என்றுமே இராது. அசல் நாஸ்திகம் இந்நாட்டில் ஓங்காது. இவ்வேலை கஷ்டமானதே. மதக் கல்வியைப்பற்றிச் சிந்திக்கும்போது எனக்குத் தலை சுற்றுகிறது. நம் மத போதகர்கள், நயவஞ்சகர்களாகவும் சுயநலமிகளாகவும் இருக்கின்றனர். அவர்களை அணுகவேண்டியிருக்கிறது. முல்லாக்கள், தஸ்தூர்கள், பிராம்மணர்கள் ஆகியோரின் கையிலிருக்கிறது விசை. அவர்களுக்கு நல்ல புத்தி இல்லாது போகுமானல், ஆங்கிலப் படிப்பினுல் நாம் பெற்றிருக்கும் சக்தியை மதப் படிப்புக்காக நாம் உபயோகிக்கவேண்டும். இது அதிகக் கஷ்டமானதல்ல. சமுத்திரத்தின் ஒரு சிறு பகுதி மாத்திரமே அசுத்தமாகியிருக்கிறது; அந்தச் சிறு பகுதிக்குள் இருப்பனவற்றை மாத்திரமே சுத்தப்படுத்தவேண்டியிருக்கிறது. இந்த ரகத்தைச் சேர்ந்த நாம் — நான் சொல்லுவது கோடிக்கணக்கானவர்களுக்குப் பொருந்தாதாகையால் - நம்மைக்கூடச் சுத்தப்படுத்திக்கொள்ளலாம். பழமையாக இருந்த நிலையை இந்தியா அடையும்படி செய்வதற்கு நாமும் அதற்குத் திரும்பவேண்டும். நமக்குச் சொந்தமான நாகரிகத்தில் ஏற்றம், தாழ்வு, சீர்திருத்தங்கள், விளைவுகள் ஆகியவை இயற்கையாகவே இருக்கும். ஆனல், ஒரு முயற்சி தேவை; அதுதான் மேல்நாட்டு நாகரிகத்தைத் துரத்துவது; மற்றவையெல்லாம் தொடர்ந்து தாமே வரும்.

## அத்தியாயம் 19

# இயந்திரம்

வாசகர்: மேற்கத்திய நாகரிகத்தை விரட்டவேண்டும் என்று நீங்கள் சொல்லுவதால், நமக்கு இயந்திரங்கள் தேவையில்லை என்று கூறுவீர்கள் என நினைக்கிறேன்.

ஆசிரியர்: இக்கேள்வியைக் கிளப்பியதன் மூலம் எனக்கு ஏற்பட்டிருந்த புண்ணையும் கிளறிவிட்டீர்கள். ஸ்ரீ தத் எழுதியிருக்கும் 'இந்தியாவின் பொருளாதார சரித்திரம்' என்ற புத்தகத்தைப் படித்ததும் அழுதுவிட்டேன். அதைக் குறித்துத் திரும்பவும் நினைக்கும்போது என் மனம் வேதனை அடைகிறது. இயந்திரமே இந்தியாவை வறுமைப்படுத்திவிட்டது. மான்செஸ்டர் நமக்குச் செய்திருக்கும் தீமையை அளவிடுவது கஷ்டம். மான்செஸ்டரினாலேயே இந்தியக் கைத்தொழில்களெல்லாம் மறைந்துவிட்டன.

ஆனால், நான் சொல்லுவது தவறு. மான்செஸ்டரை எப்படி குறைகூற முடியும்? நாம் மான்செஸ்டர் துணிகளை உடுத்திக் கொண்டோம்; அதனால் மான்செஸ்டர் அவற்றை நெய்தது. வங்காளத்தின் வீரத்தைப்பற்றிப் படித்தபோது நான் ஆனந்தம் அடைந்தேன். அந்த மாகாணத்தில் ஜவுளி மில் எதுவும் இல்லை; ஆகையால் முன்னால் இருந்த கைத்தறி நெசவுத் தொழிலைப் புதுப்பித்துக்கொள்ள அவர்களால் முடிந்தது. பம்பாயின் மில் தொழிலுக்கு வங்காளம் ஆதரவு அளிக்கிறது என்பது உண்மை. இயந்திரங்களில் தயாரான எல்லாப் பொருள்களையும் பகிஷ்கரிப்பதென்று வங்காளம் பிரகடனம் செய்திருக்குமானால் அது எவ்வளவோ சிறப்பாக இருந்திருக்கும்.

இயந்திரங்கள் ஐரோப்பாவைப் பாழாக்க ஆரம்பித்துவிட்டன. அழிவு, இங்கிலாந்தில் காலை வைத்துக்கொண்டிருக்கிறது. நவநாகரிகத்தின் முக்கியமான சின்னமே இயந்திரம். பெரிய பாவத்தை அது பிரதிபலிக்கிறது.

பம்பாய் மில்களிலுள்ள தொழிலாளர்கள், அடிமைகள் ஆகிவிட்டனர். மில்களில் வேலை செய்துவரும் பெண்களின் நிலைமை திடுக்கிடும்படி இருக்கிறது. மில்கள் இல்லாதபோது இப்பெண்கள் பட்டினி கிடக்கவில்லை. நம் நாட்டில் இயந்திரப் பித்து அதிகரித்துவிடுமானால், இது துயர் மிகுந்த நாடாகிவிடும்.

இந்தியாவில் மில்களை அதிகரித்துக் கொண்டு போவதைவிட மான்செஸ்டருக்கு நம் பணத்தை அனுப்பி, மான்செஸ்டரின் மோசமான துணியை நாம் உபயோகிப்பதே மேல். இது ஒப்புக் கொள்ளக்கூடியதல்ல என்று கருதப்பட்டாலும் இதைச்சொல்லி யாகவேண்டியது என் கடமை. மான்செஸ்டர் துணிகளை உப யோகிப்பதால் நம் பணத்தை மாத்திரமே பாழாக்குகிறோம். ஆனால், மான்செஸ்டரையே இந்தியாவில் திரும்ப உற்பத்தி செய்வதால், நமது ரத்தத்திற்கு விலையாக நம் பணத்தை நாம் வைத்துக்கொண்டிருக்கலாம். ஏனெனில், ஒழுக்கம் என்பதே அடியோடு அழிந்துவிடும். நான் இப்படி கூறுவது சரியானது என்பதற்கு மில் தொழிலாளரையே சாட்சியம் ஆக்க முடியும். தொழிற்சாலைகளின் மூலம் பணத்தைக் குவித்துக்கொண்டிருப் பவர்கள், மற்றப் பணக்காரரைவிட சிறந்தவராக இருந்துவிட முடியாது. அமெரிக்க ராக்பெல்லரைவிட* இந்திய ராக்பெல்லர் சிறந்தவராயிருப்பார் என எண்ணுவது தவறு. வறுமையுற்ற இந்தியா சுதந்திரம் அடைந்துவிடக்கூடும். ஆனால், ஒழுக்கக்கேட் டின் மூலம் பணத்தை அடைந்த இந்தியா என்றுமே சுதந்திரம் அடைய முடியாது. பணம் படைத்தவர்கள் பிரிட்டிஷ் ஆட்சியை ஆதரிக்கிறார்கள் என்று நாம் ஒப்புக்கொள்ளவே வேண்டியிருக் கிறதென அஞ்சுகிறேன். அந்த ஆட்சி நிலைபெற்றிருப்பது அவர் களுடைய நன்மைக்கு அவசியமாகிறது. பணம், ஒருவனைத் திக் கற்றவனாக ஆக்கிவிடுகிறது. இதைப் போன்றே தீமை விளைவிக் கக்கூடியதான மற்றொன்று விபசாரம். இரண்டுமே விஷங்கள். பாம்புக்கடி விஷங்கூட இந்த இரண்டைப் போல அவ்வளவு கொடியதல்ல. ஏனெனில், பாம்புக்கடி விஷம் உடலை மாத்திரமே அழிக்கிறது. ஆனால், பிந்திய விஷமோ, உடலையும் உள்ளத் தையும் ஆன்மாவையும் அழித்துவிடுகிறது. ஆகையால், மில் தொழில் வளர்ச்சி அடைவதைக் கண்டு நாம் திருப்தி அடைவ தற்கில்லை.

---

* ஜான் டேவிட்ஸன் ராக்பெல்லர் (1839—1937)— இவரே உலகத்தில் பெரும் பணக்காரர் என்று கருதப்படுகிறவர். நியூயார்க் மாகாணத்தில் ஒரு சிறிய விவசாயப் பண்ணையில் பிறந்த இவர், தமது 16-வது வயது வரையில் அங்கே வேலை செய்து வந்தார். பிறகு கிளீவ்லாண்டுக்குப் போய் அங்கே சில ஆண்டுகள் ஓர் ஆபீஸில் வேலைக்கு இருந்தார். அச்சமயம் எண்ணெய் உற்பத்தித் தொழில் ஒழுங்கான நிலையில் இல்லாது இருந்ததோடு சிறந்த சுத்தி முறையும் கிடையாது. இதிலிருக்கும் கோளாறை அறிந்த ராக்பெல்லர், அத்தொழில், மேம்பாடு அடையும்படி செய்யத் திட்டமிட்டார். பிறகு எண்ணெய் சுத்தித் தொழிலில் தீவிரமாக ஈடுபட்டுப் பல அபிவிருத்திகளைச் செய் தார். சில ஆண்டுகளில் பெரும் பணக்காரர் ஆனார். இவர் தம்முடைய வாழ்நாளில் கல்விக்கும் மற்ற தருமங்களுக்கும் 75 கோடி டாலர் கொடுத்தார்.

வாசகர்: அப்படியானல், ஆலைகளையெல்லாம் மூடிவிட வேண்டுமா?

ஆசிரியர்: அது சிரமமானது. அமைந்துவிட்டதை அழித்துவிடுவது என்பது சுலபமான வேலையன்று. இதனால்தான் ஒரு காரியத்தைத் தொடங்காமல் இருப்பதே சிறந்த புத்திசாலித்தனம் என்று கூறுகிறோம். ஆலை முதலாளிகளை நாம் கண்டிக்க முடியாது; அவர்களுக்காகப் பச்சாத்தாபப்படலாம். ஆலைகளை அவர்கள் கைவிட்டுவிடுவார்கள் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனல், அவைகளை அதிகரிக்க வேண்டாம் என்று அவர்களிடம் நாம் முறையிட்டுக் கொள்ளலாம். அவர்கள் நல்லவர்களாக இருந்தால், நாளடைவில் தங்களுடைய தொழிலைக் குறைத்துக்கொள்ளுவார்கள். பல்லாயிரக்கணக்கானவர்களின் வீடுகளில் புராதனமானவையும், தெய்விகமுள்ளவையுமான கைத்தறிகளை அவர்கள் ஏற்படுத்தலாம். இவ்விதம் நெய்யப்படும் துணிகளை அவர்கள் வாங்கிக்கொள்ளலாம். ஆலை முதலாளிகள் இதைச் செய்தாலும், செய்யாது போயினும், இயந்திரத்தில் தயாரானவைகளை மக்கள் வாங்காமல் இருக்கலாம்.

வாசகர்: இயந்திரத்தில் உற்பத்தியாகும் துணியைப்பற்றி இதுவரையில் கூறினீர்கள். ஆனல், இயந்திரத்தில் தயாராகும் சாமான்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. இவைகளை ஒன்று, வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டும்; இல்லையானல், நம் நாட்டில் இயந்திரங்களை வைக்கவேண்டும்.

ஆசிரியர்: உண்மையே. நமக்கு வேண்டிய சாமான்கள் ஜெர்மனியில் கூட தயாராகின்றன. தீக்குச்சிகள், குண்டூசிகள், கண்ணாடிச் சாமான்கள் ஆகியவைகளைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? இதற்கெல்லாம் என் பதில் ஒன்றே ஒன்றுதான். இந்தச் சாமான்களெல்லாம் வருவதற்கு முன்னல் இந்தியா என்ன செய்தது? அதையே இப்பொழுதும் செய்யலாம். இயந்திரம் இல்லாமல் நாம் குண்டூசிகளைச் செய்ய முடியாதென்றால் குண்டூசிகளை உபயோகிக்காமலேயே இருந்துவிடுவோம். பளபளப்பான கண்ணாடிச் சாமான்களும் நமக்கு வேண்டாம். முன் காலத்தில் செய்ததைப் போல நாம் பயிரிடும் பருத்தியால் திரி செய்து, கையால் செய்த மண் அகல் விளக்குகளில் அதைப் போட்டு விளக்குகளாக உபயோகித்துக் கொள்ளுவோம். இப்படிச் செய்வதால் நம் கண்ணுக்கும் கெடுதி இல்லை; பணத்திற்கும் விரயமில்லை. சுதேசியை ஆதரித்து நாம் சுய ஆட்சியையும் அடைய முடியும்.

இவைகளையெல்லாம் எல்லோரும் ஒரே சமயத்தில் செய்து விடுவார்கள் என்றோ அல்லது இயந்திரங்களில் தயாரான சாமான்களைச் சிலர் உடனே கைவிட்டு விடுவார்கள் என்றோ எதிர்பார்க்க முடியாது. ஆனால், எண்ணம் மாத்திரம் சரியானபடி இருக்குமானால், நாம் அவைகளைக் கைவிட்டு நாளடைவில் உபயோகிக்காமலும் இருந்துவிட முடியும் என்பதைக் காணலாம். சிலர் செய்வதை மற்றவர்களும் பின்பற்றுவார்கள். கணக்குக் கேள்விகளில் வரும் தேங்காயைப்போல இயக்கமும் வளரும். தலைவர்கள் செய்வதை மக்களும் தாமே செய்வர். இதில் சிக்கலும் இல்லை; கஷ்டமும் இல்லை; மற்றவர்களையும் நம் வழிக்குத் திருப்புகிற வரையில் நாம் இதில் காத்துக்கொண்டிருக்க வேண்டியதுமில்லை. இதைச் செய்யாதவர்கள் நஷ்டம் அடைந்தவர்கள் ஆவார்கள். உண்மையை அவர்கள் ஒப்புக்கொண்டாலும் கோழைகள் என்று சொல்லப்பட வேண்டியவர்கள் ஆவர்.

வாசகர்: அப்படியாயின் டிராம் வண்டிகள், மின்சாரம் ஆகியவற்றைப்பற்றி என்ன?

ஆசிரியர்: இக்கேள்வி அதிகத் தாமதமாகக் கேட்கப்படுவதாகும். இதில் முக்கியத்துவம் எதுவும் இல்லை. நமக்கு ரெயில்களே வேண்டாம் என்றால், டிராம் வண்டிகளும் இல்லாமலேயே இருக்க வேண்டும். இயந்திரம், பாம்பின் வளையைப் போன்றது; அதில் ஒரு பாம்பும் இருக்கலாம், நூறு பாம்புகளும் இருக்கலாம். இயந்திரங்கள் இருக்கும் இடங்கள் பெரிய நகரங்களாகவும் இருக்கின்றன. பெரிய நகரங்கள் இருக்கும் இடங்களில் டிராம் வண்டிகளும், ரெயில்களும் இருக்கின்றன. அங்கேதான் மின்சார விளக்குகளையும் பார்க்கிறோம். இங்கிலாந்தின் கிராமங்களில் இவைகளெல்லாம் இல்லை. இயந்திரப் போக்குவரத்துச் சாதனங்கள் எங்கெங்கே அதிகமாயிருக்கின்றனவோ அங்கெல்லாம் மக்களின் தேகநிலை கெட்டிருக்கிறது என்பதை யோக்கியமான வைத்தியர்கள் ஒப்புக்கொள்ளுவார்கள். ஓர் ஐரோப்பியப் பட்டணத்தில் பணத்தட்டு ஏற்பட்டுவிட்டபோது, டிராம்கம்பெனியார், வக்கீல்கள், டாக்டர்கள் ஆகியவர்களுக்கு வருமானம் குறைந்து விட்டபோது, ஜனங்களுக்கு நோய் அதிகமில்லை என்பது எனக்கு நினைவிருக்கிறது. இயந்திரங்களைப்பற்றிய நல்ல அம்சம் எதுவுமே என் நினைவுக்கு வரவில்லை. அதன் தீமைகளை எடுத்துக்காட்டப் புத்தகங்களையே எழுதிவிடலாம்.

வாசகர்: நீங்கள் கூறுவதையெல்லாம் இயந்திரத்தின் மூலமே அச்சிட வேண்டியிருக்கிறது என்பது நல்ல ஆதாரமா, அல்லது கெட்ட ஆதாரமா?

ஆசிரியர் : விஷத்தைக் கொல்ல விஷம் உபயோகிக்கப்படு கிறது என்பதை எடுத்துக்காட்டும் சம்பவங்களில் இதுவும் ஒன்று. என்றாலும், இயந்திரங்கள் சம்பந்தப்பட்ட வரையில் இது நல்லதோர் ஆதாரமன்று. அது முடியும்போது இயந்திரமே நம் மிடம் வருமாறு கூறும்: "உஷார். என்னைத் தவிர்த்துக் கொள் ளுங்கள். என்னால் நீங்கள் எந்த நன்மையையும் அடைய முடி யாது. இயந்திரப் பித்தினால் பாதிக்கப்பட்டிருக்கிறவர்களுக்கு மாத்திரமே அச்சிடுவதனால் ஏற்படும் நன்மையும் கிடைக்கும்."

ஆகையால், முக்கியமான விஷயத்தை மறந்துவிடாதீர்கள். இயந்திரங்கள் தீமையானவை என்பதை அறிய வேண்டும். அப் பொழுதுதான் நாளடைவில் அவற்றைத் தவிர்க்க முடியும். விரும்பும் லட்சியத்தைத் திடீரென்று அடைந்துவிடுவதற்கான எந்த வழியையும் இயற்கை அளித்திருக்கவில்லை. இயந்திரங் களை வரப்பிரசாதம் என்று வரவேற்பதற்குப் பதிலாக, அவை தீமை என்றே நோக்குவோமானால் முடிவில் அவை ஒழிந்துவிடும்.

## அத்தியாயம் 20

# இறுதியுரை

வாசகர்: உங்களுடைய கருத்துக்களிலிருந்து நீங்கள் மூன்ருவதானதோர் கட்சியாக அமைவீர்கள் என்று கருது கிறேன். நீங்கள் தீவிரவாதியுமல்ல; மிதவாதியுமல்ல.

ஆசிரியர்: நீங்கள் எண்ணுவது தவறு. மூன்ருவதான ஒரு கட்சியைக் குறித்தே நான் எண்ணவில்லை. நாம் எல்லோரும் ஒரே மாதிரியாக எண்ணுவதில்லை. மிதவாதிகளெல்லோரும் ஒரேமாதிரியான கருத்துடனேயே இருக்கிருர்கள் என்று சொல்ல முடியாது. சேவை செய்ய மாத்திரமே விரும்புகிறவர் கள், ஒரு கட்சியாக எப்படி இருக்கமுடியும்? மிதவாதிகள், தீவிரவாதிகள் ஆகிய இருவருக்கும் நான் சேவை செய்வேன். அவர்களுக்கும் எனக்கும் கருத்து வேறுபாடு இருந்தால் அதை மரியாதையுடன் அவர்களுக்குத் தெரிவித்துவிட்டு என் சேவையை நான் தொடர்ந்து செய்துவருவேன்.

வாசகர்: அப்படியானல் இரு கட்சியாருக்கும் நீங்கள் என்ன சொல்லுவீர்கள்?

ஆசிரியர்: தீவிரவாதிகளுக்குக் கூறுவேன்: "இந்தியாவுக் குச் சுயாட்சி வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதை நான் அறிவேன்; நீங்கள் கேட்டதும் அது கிடைத்துவிடக் கூடி யதுமன்று. ஒவ்வொருவரும் தமக்குத்தாமே அதைத் தேடிக் கொள்ளவேண்டும். எனக்காக மற்றவர்கள் அடைவது அந்நிய ஆட்சியேயன்றிச் சுய ஆட்சியல்ல. ஆகையால், ஆங்கிலேய ரைத் துரத்திவிட்டோம் என்பதற்காகச் சுய ராஜ்யத்தை நீங்கள் அடைந்துவிட்டதாகக் கூறுவது சரியானதாகாது. சுய ஆட்சி யின் உண்மையான இயல்பை முன்பே விவரித்துக் கூறியிருக்கி றேன். இதை ஆயுத பலத்தைக் கொண்டு நீங்கள் அடையவே முடியாது. மிருகபலம் இந்திய மண்ணுக்கு இயற்கையானதே அல்ல. எனவே, முற்றிலும் ஆன்மபலத்தை நீங்கள் நம்பியிருக்க வேண்டும். நமது லட்சியத்தை அடைவதற்குப் பலாத் காரம் எந்தக் கட்டத்திலும் அவசியம் என்று நீங்கள் கருதக் கூடாது."

மிதவாதிகளுக்கு நான் கூறுவதாவது: "மனுச் செய்து கொள்வதென்பது அவமதிப்பான விஷயம். இதன் மூலம் நமது இளப்பத்தை ஒப்புக்கொள்ளுவோர் ஆகிருேம். பிரிட்டிஷ்

ஆட்சி அத்தியாவசியமான ஒன்று எனக் கூறுவது, கடவுள் இருக்கிறார் என்பதையே மறுப்பதைப் போன்றதாகும். கடவுளைத் தவிர வேறு யாரும், எதுவும், இன்றியமையாததாக இருப்பதாக நாம் சொல்லமுடியாது. இப்பொழுதுள்ள நிலைமையில் இந்தியாவில் ஆங்கிலேயர் இருந்து வரவேண்டியது அவசியமானது என்று கூறுவது, அவர்கள் அகம்பாவம் அடையும்படி செய்வதாகும் என்பதை நம் பகுத்தறிவே நமக்குச் சொல்லும்.

"ஆங்கிலேயர்கள் மூட்டை முடிச்சுடன் இந்தியாவைவிட்டுப் போய்விட்டால் நாம், எல்லாம் இழந்தவர்கள் ஆகிவிடுவோம் என்று நாம் நினைத்துக்கொள்ளக்கூடாது. அவர்கள் அடக்கி ஆண்டதனால் அமைதியாக இருந்தவர்கள், அவர்கள் போனதும், சண்டை போட்டுக்கொள்ளக்கூடும் என்பது சாத்தியமே. பொங்கி வெளிவருவதை அமுத்தி வைப்பதில் நன்மை எதுவும் இல்லை; அது வெளியில் வர இடம் இருக்கவேண்டும். ஆகையால் நாம் அமைதியாக இருப்பதற்கு முன்னால், நாம் நமக்குள் சண்டையிட்டுக் கொண்டுதான் ஆகவேண்டுமென்றால், அப்படிச் செய்துவிடுவதே நல்லது. பலவீனர்களை மூன்றாமவர் ஒருவர் பாதுகாப்பது என்பதற்கு இடமில்லை. பாதுகாப்பு என்று சொல்லப்படும் இதுதான் நம்முடைய தைரியத்தைப் போக்கிவிட்டது. இத்தகைய பாதுகாப்பு பலவீனமானவர்களை இன்னும் அதிக பலவீனர்களாகவே ஆக்கிவிடும். இதை நாம் உணர்ந்து கொள்ளும்வரையில் நாம் சுய ஆட்சியை அடையவே முடியாது. அமைதி இருக்கும் அந்நிய ஆட்சியைவிடச் சுய ஆட்சியின் கீழ் இருக்கும் அராஜகமே மேல் என்று பக்திமானான ஓர் ஆங்கிலேயர் கூறிய வண்ணமே நானும் கூறுவேன். ஆனால், அறிவாளியான அந்த பக்தர் சுய ஆட்சிக்குக் கூறிய பொருள் மாத்திரம், என் எண்ணத்தில் இருக்கும் இந்திய சுய ஆட்சிக் கருத்துக்கு மாறுபட்டதாக இருக்கிறது. ஆங்கில ஆட்சியின் அல்லது இந்திய ஆட்சியின் கொடுமையே நமக்கு வேண்டாம் என்பதை நாம் கற்றுக்கொள்ளவேண்டும்; மற்றவர்களுக்கும் போதிக்க வேண்டும்."

இந்தக் கருத்து நிறைவேற்றப்படுமானால், மிதவாதிகளும், தீவிரவாதிகளும் இதில் ஒன்றுபட முடியும். ஒருவரைக் கண்டு மற்றவர் பயப்படவோ அல்லது அவநம்பிக்கை கொள்ளவோ இடமே இல்லை.

வாசகர்: அப்படியாயின் ஆங்கிலேயருக்கு என்ன கூறுவீர்கள்?

ஆசிரியர்: அவர்களுக்கு நான் மரியாதையுடன் பின்வருமாறு கூறுவேன்: "நீங்கள் என்னை ஆளுகிறவர்கள் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். நீங்கள் இந்தியாவை வைத்துக்கொண்டிருப் பது, வாளினுலா அல்லது என் சம்மதத்தினுலா என்ற விஷயத் தைக் குறித்து விவாதிக்கவேண்டிய அவசியமில்லை. என் நாட் டில் நீங்கள் இருந்து வருவதைப் ப்ற்றி எனக்கு ஆட்சேபணை யில்லை. ஆனுல், ஆளுபவர் நீங்களேயென்ருலும், மக்களின் ஊழியர்களாகவே நீங்கள் இருக்கவேண்டும். உங்கள் இஷ்டப் படி நடக்கவேண்டியவர்கள் நாங்களல்ல. ஆனுல், எங்கள் இஷ்டப்படி நடந்தாக வேண்டியவர்கள் நீங்கள். இதுவரை எங்களிடம் சுரண்டிச் சென்ற பணத்தை எடுத்துக்கொள்ளுங் கள். இனிமேல் அப்படிச் செய்யாமல் இருங்கள். நீங்கள் அவ்வாறு இருக்க விரும்புவதாயிருந்தால் இந்தியாவைப் பாது காப்பதொன்றே உங்கள் வேலையாகும். எங்களிடமிருந்து எந்த வித வர்த்தகலாபங்களையும் அடைவதென்ற கருத்தை விட்டு விட வேண்டும். நீங்கள் ஆதரிக்கும் நாகரிகம், எங்கள் நாகரிகத் திற்கு மாறுபட்டது என்று நாங்கள் கருதுகிருேம். உங்களுடைய நாகரிகத்தைவிட எங்களுடைய நாகரிகம் எவ்வளவோ மேன்மை யானது என்றும் எண்ணுகிருேம். இதை நீங்கள் உணர்ந்தால், அது உங்களுக்கே நல்லது; நீங்கள் உணரவில்லையானுல், உங்க ளுடைய முதுரைப்படி, எங்கள் நாட்டில் நீங்களும் எங்களைப் போலவேதான் வாழவேண்டும். எங்களுடைய மதங்களுக்கு மாறுபட்ட காரியங்கள் எவற்றையும் நீங்கள் செய்யக்கூடாது. ஆளுபவர்கள் என்ற வகையில் நீங்கள் ஹிந்துக்களுக்காக மாட்டு மாமிசத்தையும், முஸ்லிம்களுக்காகப் பன்றி மாமிசத்தையும் சாப்பிடுவதை விட்டுவிடவேண்டும். நாங்கள் ஒடுக்கப்பட்டிருந்த தால், இதுவரையில் ஒன்றும் சொல்லாமலிருந்தோம்; ஆனுல், உங்கள் நடத்தையால் நீங்கள் எங்கள் மனத்தைப் புண்படுத்த வில்லை என்று நினைத்துவிடக் கூடாது. கேவலமான சுயநலத்தி னுலோ அல்லது பயத்தினுலோ நாங்கள் எங்கள் உணர்ச்சியை வெளியிடவில்லை; ஆனுல், தைரியமாக இப்பொழுது சொல்லி யாக வேண்டியது எங்கள் கடமையாகிறது. உங்கள் பள்ளிக் கூடங்களும் கோர்ட்டுகளும் பயனற்றவை என்று எண்ணுகிருேம். எங்களுடைய பழைய பள்ளிக்கூடங்களும் நீதி ஸ்தலங்களும் திரும்ப ஏற்படவேண்டும் என்று விரும்புகிருேம். இந்தியாவின் பொது மொழி ஹிந்தியேயன்றி ஆங்கிலமல்ல. அதை நீங்கள் கற்றுக்கொள்ளவேண்டும். எங்களுடைய தேசீய மொழி மூலமே உங்களிடம் தொடர்பு வைத்துக்கொள்ளுவோம்.

"ரெயில்வேக்களுக்காகவும் ராணுவத்திற்காகவும் நீங்கள் பணம் செலவழிப்பதை நாங்கள் சகித்துக்கொண்டிருக்க முடியாது. இந்த இரண்டுக்கும் அவசியமே இல்லை. ரஷ்யாவிடம் உங்களுக்குப் பயம் இருக்கலாம்; எங்களுக்குப் பயமில்லை. ரஷ்யா வந்தால் நாங்கள் பார்த்துக்கொள்ளுவோம். நீங்கள் எங்களுடன் இருந்தால், அப்பொழுது நாம் இருவரும் சேர்ந்து அதைப் பார்த்துக்கொள்ளுவோம். ஐரோப்பிய துணி எதுவும் எங்களுக்கு வேண்டியதில்லை. உள்நாட்டில் தயாரான சாமான்களைக் கொண்டு நாங்கள் சமாளித்துக்கொள்ளுகிறோம். மான்செஸ்டர் மீது ஒரு கண்ணையும், இந்தியாவின்பேரில் ஒரு கண்ணையும் நீங்கள் வைத்திருக்க முடியாது. நமது நன்மைகள் ஒரே மாதிரியாக இருந்தால்தான் நாம் ஒன்றாயிருந்து வேலை செய்வதென்பது முடியும்.

"இது, அகம்பாவத்தினால் உங்களிடம் கூறப்படுவதல்ல. உங்களிடம் ராணுவ பலம் அதிகமாக இருக்கிறது. உங்கள் கடற்படை பலம் ஒப்பற்றது. எல்லா வசதிகளும் இருக்கும் உங்களுடன் போராடுவது எங்களால் ஆகாத காரியம். ஆனால், மேலே கண்ட எங்கள் கோரிக்கைகளை நீங்கள் ஏற்றுக்கொள்ளாவிட்டால், ஆளப்படுவோராக நாங்கள் இருக்கவே மாட்டோம். நீங்கள் விரும்பினால் எங்களைத் துண்டு துண்டாக வெட்டிவிடலாம். பீரங்கியின் வாயில் வைத்து எங்களைச் சிதற அடித்துவிடலாம். எங்கள் உறுதிக்கு எதிராக நீங்கள் நடந்தால் நாங்கள் உங்களுக்கு உதவி செய்யோம்; எங்களுடைய உதவி இல்லாமல் நீங்கள் ஓர் அடிகூட முன்னே எடுத்து வைக்கமுடியாது என்பதை நாங்கள் அறிவோம்.

"உங்களுடைய அதிகார போதையில், இதையெல்லாம் கேட்டு நீங்கள் சிரிக்கக்கூடும். உங்களுடைய மயக்கத்தை உடனே போக்க எங்களால் முடியாதிருக்கலாம். ஆனால், எங்களிடம் ஆண்மையும் இருக்குமானால், உங்களுடைய போதை தற்கொலைக்குச் சமமானது, எங்களைத் துச்சமாக எண்ணி நீங்கள் சிரிப்பது புத்திக்கோளாறு என்பதை நீங்கள் சீக்கிரத்திலேயே காண்பீர்கள். நீங்கள் உள்ளத்துள் மத ஒழுக்கமுடைய ஒரு நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று நாங்கள் நம்புகிறோம். மதங்களுக்குப் பிறப்பிடமானதோர் நாட்டில் நாங்கள் வாழ்கிறோம். நாம் எப்படி ஒன்றாக இருக்க நேர்ந்தது என்பதை யோசிக்க வேண்டியதில்லை; ஆனால், நமது உறவை நாம் ஒருவருக்கொருவர் நன்றாகப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

"இந்தியாவுக்கு வந்திருக்கும் ஆங்கிலேயரான நீங்கள், ஆங்கில நாட்டுச் சமுதாயத்தின் சிறந்த மாதிரிகள் அல்ல. பாதி ஆங்கிலமயமாகிவிட்ட இந்தியர்களான நாங்களும் உண்மையான இந்திய மக்களின் மாதிரியுமல்ல. நீங்கள் செய்திருப்பவைகளையெல்லாம் ஆங்கில மக்கள் அறிய நேர்ந்தால், உங்களுடைய செய்கையில் பலவற்றை அவர்கள் எதிர்ப்பார்கள். இந்தியப் பொதுமக்களுக்கு உங்களுடன் இருக்கும் சம்பந்தம் மிகக் குறைவு. நாகரிகம் என்று சொல்லப்படும் உங்கள் நாகரிகத்தைக் கைவிடுவீர்களானால், உங்கள் வேதங்களிலேயே தேடிப் பார்ப்பீர்களாயின், எங்களுடைய கோரிக்கை நியாயமானவை என்பதைக் காண்பீர்கள். எங்களுடைய கோரிக்கைகள் முழுவதும் திருப்திகரமாக நிறைவேற்றப்படும் என்ற நிபந்தனையின் பேரிலேயே நீங்கள் இந்தியாவில் இருக்கமுடியும். இந்த நிபந்தனைகளின் பேரில் நீங்கள் இங்கிருந்தால், உங்களிடமிருந்து பலவற்றை நாங்கள் அறிந்துகொள்ளமுடியும்; எங்களிடமிருந்து நீங்களும் பலவற்றைக் கற்றுக்கொள்ள முடியும். இவ்விதம் செய்வதில் நாம் ஒருவருக்கொருவர் நன்மை அடைவதோடு உலகமும் நன்மை அடையும். ஆனால், நம் உறவின் வேர், சமயக் கொள்கையின் ஆழத்தில் ஊன்றினால்தான் அதெல்லாம் நடக்கமுடியும்."

வாசகர்: நாட்டு மக்களுக்கு என்ன சொல்லுவீர்கள்?

ஆசிரியர்: நாட்டு மக்கள் என்பது யாரைக் குறிப்பிடும்?

வாசகர்: நமது காரியத்திற்கு, நாட்டு மக்கள் என்போர், யாரைப்பற்றி நீங்களும் நானும் எண்ணிக்கொண்டிருக்கிறோமோ, ஐரோப்பிய நாகரிகத்தினால் யார் பாதிக்கப்பட்டிருக்கிறோமோ, யார் சுய ஆட்சி பெறவேண்டுமென ஆவலுடன் இருக்கிறார்களோ, அவர்களேயாவர்.

ஆசிரியர்: அவர்களுக்கு நான் பின்வருமாறு கூறுவேன்: "இந்தியரில் யார் உண்மையான அன்பு நிறைந்தவர்களாக இருக்கிறார்களோ, அப்படிப்பட்டவர்கள் மாத்திரமே மேலே கண்ட தோரணையில் பயப்படாமல் ஆங்கிலேயர்களிடம் பேசமுடியும். இந்திய நாகரிகம் ஒன்றே சிறந்தது, ஐரோப்பிய நாகரிகம் எல்லாம் சில நாட்களில் மறைந்துவிடுவதானதோர் விந்தை என்று மனமார நம்புகிறவர்களை மாத்திரமே அத்தகைய அன்பு நிறைந்தவர்களெனச் சொல்லமுடியும். வெகு சீக்கிரத்தில் அழிந்துவிடக்கூடிய இத்தகைய நாகரிகங்கள் பல, வந்து மறைந்தும் போயிருக்கின்றன. அவ்விதம் வந்து போய்க்கொண்டுதான்

இருக்கும். தங்களுக்குள் இருக்கும் ஆன்ம சக்தியை அனுபவித்து, மிருக பலத்திற்குப் பணிந்து போகாததோடு, எக்காரணத்தைக்கொண்டும் மிருக பலத்தை உபயோகிக்க விரும்பாதவர்களைமட்டுமே அன்பில் ஊறிப்போனவர்களென்று கருத முடியும். முன்னடியே இந்த விஷத்தைப் பருகிவிட்டதால், இப்பொழுது இருந்துவரும் பரிதாபகரமான நிலைமையைக் குறித்துத் தீவிரமாக அதிருப்தி கொண்டிருப்பவர்களே அப்படி ஊறிப்போனவர்களெனக் கருதப்படுவோர்.

"அப்படிப்பட்ட இந்தியர் ஒருவர் இருந்தாலும், அவர் மேலே கண்டவாறு ஆங்கிலேயரிடம் பேசுவார்; ஆங்கிலேயரும் அவர் கூறுவதைக் கேட்டாக வேண்டும்.

"இவை கோரிக்கைகள் அல்ல, ஆனல், நமது மனநிலையை அவை காட்டுகின்றன. கேட்டு நாம் எதையும் அடைந்துவிட முடியாது; நமக்கு வேண்டியதை நாமே எடுத்துக்கொள்ள வேண்டும். இம்முயற்சிக்கு வேண்டிய பலம் நமக்கு வேண்டும். கீழே குறிக்கும் வழியில் நடப்பவருக்கு மாத்திரமே அந்தப் பலம் கிடைக்கும்:

1. அரிதாய்ச் சில சமயங்களில் மாத்திரமே அவர் ஆங்கில மொழியை உபயோகிக்கவேண்டும்.

2. அவர் ஒரு வக்கீலாயின், தமது தொழிலை விட்டுவிட்டுக் கைத்தறி வேலையை மேற்கொள்ளவேண்டும்.

3. அவர் ஒரு வக்கீலானல், தம் மக்களும் ஆங்கிலேயரும் விஷயங்களை அறியும்படி செய்வதற்குத் தமது அறிவை உபயோகிக்கவேண்டும்.

4. ஒரு வக்கீலானல், இரு தரப்பினருக்கும் இடையே இருக்கும் சச்சரவில் அவர் குறுக்கிடக்கூடாது. ஆனல், தாம் கோர்ட்டுக்குப் போவதைக் கைவிட்டு, மக்களும் அதே மாதிரி செய்ய தமது அனுபவத்தைக்கொண்டு அவர்களைத் தூண்ட வேண்டும்.

5. வக்கீலானல், தமது தொழிலை விட்டுவிடுவதைப் போலவே நீதிபதியாக இருப்பதற்கும் மறுத்துவிடவேண்டும்.

6. அவர் டாக்டரானல், மருந்து கொடுப்பது என்பதை விட்டுவிட்டு, உடம்பைச் சரிப்படுத்துவதைவிட ஆன்மாவைச் சீர்ப்படுத்த வேண்டும் என்பதை உணர வேண்டும்.

7. ஒரு டாக்டரானல், அவர் எந்த மதத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும், ஐரோப்பிய வைத்திய முறையில் அனு

சுரிக்கப்படுவதான, உயிருடன் இருக்கும்போதே அறுத்துச் சோதனை செய்வதன் மூலம் உடல் குணம் அடைவதைவிட, அவ்வுடல் நோயுற்றிருப்பதே மேல் என்பதை அவர் அறிய வேண்டும்.

*8.* அவர் டாக்டராக இருந்தாலும் கைத்தறியை அவர் மேற்கொள்ளுவதோடு, அவரிடம் யாரேனும் நோயாளிகள் வந்தால், அவர்களுக்கு இருக்கும் நோயின் காரணத்தைக்கூறி, பயனில்லாத மருந்தைக் கொடுப்பதற்குப் பதிலாக நோயின் காரணத்தைப் போக்கும்படி புத்திமதி கூற வேண்டும். மருந்து உட்கொள்ளாது ஒரு வேளை நோயாளி இறந்துவிட்டாலும் உலகம் இதனால் வருத்தப்பட்டுவிடப் போவதில்லை; அவரிடம் இவர் கருணையுடனேயே இருந்திருக்கிறார் என்பதையும் அவர் உணர வேண்டும்.

*9.* ஒருவர் பணக்காரராக இருந்தாலும், தம் செல்வத்தைப் பொருட்படுத்தாமல், தம் மனத்தில் இருப்பதைப் பகிரங்கமாகச் சொல்லுவதோடு யாருக்கும் பயப்படவும் கூடாது.

*10.* பணக்காரராயிருந்தால், கைத்தறிகளை அமைப்பதிலும், கையினால் தயாரானவைகளைத் தாமே அணிவதுடன் மற்றவர்களும் உபயோகிக்கும்படி தூண்டுவதிலும் தம் பணத்தைச் செலவிட வேண்டும்.

*11.* எல்லா இந்தியரையும் போலவே, தாம் செய்த தவறுக்காக வருந்தி, அதற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டிய சமயம் இது என்பதை இவர் அறிய வேண்டும்.

*12.* எல்லா இந்தியரையும் போலவே இவரும், ஆங்கிலேயர்மீது குற்றஞ் சொல்லிப் பயனில்லை, நம்மால்தான் அவர்கள் வந்தார்கள், அதே காரணத்தினாலேயே இருக்கிறார்கள், நாம் நம்மைச் சீர்திருத்திக்கொண்டால்தான் அவர்கள் போவார்கள் அல்லது தங்கள் போக்கை மாற்றிக்கொள்ளுவார்கள் என்பதை அறியவேண்டும்.

*13.* துக்கப்படவேண்டிய சமயத்தில் சுகம் அனுபவிப்பது என்பது கூடாது. நாம் கேவலமான நிலையில் இருக்கும்போது, சிறையிலிருப்பதோ, நாடு கடத்தப்பட்டிருப்பதோ எவ்வளவோ மேல் என்பதை மற்றவர்களைப்போல் இவரும் உணர வேண்டும்.

*14.* மக்களுடன் சம்பந்தம் வைத்திருக்க வேண்டும் என்பதை முன்னிட்டுச் சிறைப்பட்டு விடுவதிலிருந்து தப்ப

வேண்டும் என எண்ணுவது மூடநம்பிக்கை என்பதை மற்றவர்களைப் போலவே இவரும் அறிய வேண்டும்.

*15.* பேச்சைவிடக் காரியமே மிகச் சிறந்தது; என்ன எண்ணுகிறோமோ அதைக் கூறி அதன் விளைவுகளைச் சமாளிக்க வேண்டியது நம் கடமை. அப்பொழுதுதான் நம் பேச்சைப் பிறர் உணரும்படி செய்ய முடியும் என்பதை மற்றவர்களைப் போலவே இவரும் அறிய வேண்டும்.

*16.* கஷ்டப்படுவதன் மூலமே நாம் சுதந்திரத்தை அடைய முடியும் என்பதை மற்றவர்களைப் போலவே இவரும் அறிய வேண்டும்.

*17.* தீவாந்தர தண்டனையை ஏற்று, அந்தமானுக்குச் செல்வது ஐரோப்பிய நாகரிகத்தை ஆதரித்த பாவத்திற்குப் போதுமான தண்டனையல்ல என்பதை மற்றவர்களைப் போலவே இவரும் உணர வேண்டும்.

*18.* துன்பப்படாமல் எந்த நாடும் உயர்வு அடைந்ததில்லை; சாதாரண உடல் பற்றிய சண்டையில்கூட உண்மையான பரீட்சை, அனுபவிக்கும் துன்பமேயன்றி மற்றவர்களைக் கொல்வதன்று. சாத்விக எதிர்ப்புப் போரில் இது இன்னும் அதிகமாகப் பொருந்தும் என்பதை மற்றவர்களைப் போல இவரும் உணர வேண்டும்.

*19.* ஒரு காரியத்தை, மற்றவர்களும் செய்தால் நாமும் செய்வோம் என்பது சோம்பேறித்தனமான சாக்குப்போக்கு சரியென அறிந்ததை நாம் செய்யவேண்டும்; மற்றவர்களுக்கும் சரியெனப்படும்போது அப்படியே செய்வார்கள்; ஒன்று ருசியாக இருக்கும் என்று நான் எண்ணும்போது, மற்றவர்கள் ருசி பார்க்கும் வரையில் நான் காத்திருப்பதில்லை; ஒரு தேசீய முயற்சியில் ஈடுபட்டு அதற்காகக் கஷ்டங்களை அனுபவிப்பதென்பது ருசியைப் போன்றது; வற்புறுத்தலுக்காகக் கஷ்டப்படுவது என்பது துன்பத்தை அனுபவிப்பதே ஆகாது என்பதை மற்றவர்களைப் போலவே இவரும் அறிய வேண்டும்.

வாசகர் : இது பெரிய கட்டளை. இதை எல்லோரும் எப்பொழுது நிறைவேற்றுவார்களோ?

ஆசிரியர் : நீங்கள் தவறு செய்கிறீர்கள். நீங்களும் நானும் மற்றவர்களைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அவரவர் கடமையைச் செய்யட்டும். நான் என் கடமையைச் செய்தால், அதாவது, எனக்கு நான் செய்துகொண்டால், மற்றவர்களுக்கும்

நான் சேவை செய்ய முடியும். உங்களை அனுப்பிவிடுவதற்கு முன்பு நான் திரும்பவும் சொல்லுகிறேன் :

*1.* உண்மையான சுயராஜ்யம் என்பது தன்னை அடக்கி ஆள்வது அல்லது தன்னடக்கமேயாகும்.

*2.* சாத்விக எதிர்ப்பே அதற்கு வழி; அதுதான் ஆன்ம பலம் அல்லது அன்பின் சக்தி.

*3.* இந்தச் சக்தியை உபயோகிப்பதற்கு ஒவ்வோர் அம்சத்திலும் சுதேசி அவசியமாகும்.

*4.* ஆங்கிலேயரை ஆட்சேபிக்கிறோம் அல்லது பதிலுக்குப் பதில் செய்ய விரும்புகிறோம் என்பதற்கல்ல; கடமை என்பதற்காக நாம் செய்ய விரும்புவதைச் செய்துதான் ஆகவேண்டும். ஆங்கிலேயர்கள் உப்பு வரியை நீக்கிவிடுகிறார்கள், நம் பணத்தைக் கொடுத்துவிடுகின்றனர், பெரிய உத்தியோகங்களை இந்தியருக்குக் கொடுக்கின்றனர், ஆங்கிலத் துருப்புகளை வாபஸ் செய்கின்றனர் என வைத்துக்கொள்ளுவோம். இதற்காக, அவர்களுடைய இயந்திரச் சரக்குகளை நாம் நிச்சயம் உபயோகிக்கவே கூடாது. ஆங்கில மொழியையோ அல்லது அவர்களுடைய பல தொழில்களையோ நாம் உபயோகிக்கக்கூடாது. அவைகளின் தன்மையிலேயே அவை தீமை விளைவிப்பனவாக இருப்பதால் அவை சிறிதும் பயனற்றவை; ஆகையால், அவை நமக்கு வேண்டாம். ஆங்கிலேயர்மீது எனக்கு எந்தவிதப் பகைமை எண்ணமும் கிடையாது; ஆனால், அவர்களுடைய நாகரிகத்தின்மீதே எனக்கு விரோதம்.

‘சுயராஜ்யம்’ என்ற சொல்லை, அதன் உண்மையான அர்த்தத்தை உணராமலேயே உபயோகித்து வருகிறோம் என்பது என் கருத்து. அதைப்பற்றி நான் அறியும் வகையில் விளக்கிக் கூற முயன்றிருக்கிறேன். அதை அடைவதற்கே இனி என் வாழ்வு அர்ப்பணம் செய்யப்பட்டிருக்கிறது என்பதற்கு என் மனச்சாட்சியே சான்றாக இருக்கிறது.

# ஸ்ரீ மகாதேவ் தேசாயின் கட்டுரை

['இந்திய சுயராஜ்யம்' நூலைக் குறித்து, மகாத்மாவுடன் பல்லாண்டுகள் இருந்து, அவருடைய உள்ளத்தை நன்கு அறிந்தவரும், அவருடைய காரிய தரிசியாகத் தம் ஆயுள் முடிவுவரை இருந்தவருமான ஸ்ரீ மகாதேவ தேசாய், 'ஆரியன் பாத்' விசேட மலருக்கு எழுதிய ஒரு கட்டுரையே கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது. இந்நூலைக் குறித்துப் பல அறிஞர்கள் என்ன அபிப்பிராயங் கொண்டிருந்தார்கள் என்பதை இக்கட்டுரையில் ஸ்ரீ தேசாய் விளக்கியிருக் கிறார். காந்திய தருமத்தைப் புரிந்துகொள்ளுவதற்கு 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூல் எவ்விதம் மிகவும் முக்கியமானதாகிறது என்பதை அறியவும் இக் கட்டுரை அவசியமாகிறது.]

'ஆரியன்பாத்' (ஆரிய வழி) யின் 'ஹிந்த் ஸ்வராஜ்' விசேஷ மலர், சிறப்பான சிந்தனைக் கோப்புடனும், அழகிய வகை யிலும் வெற்றியுடன் வெளியாகியிருக்கிறது. இவ்வாறு தோன்றுவ தற்கு முக்கிய காரணம், அறிவாளியான சகோதரி ஸ்ரீமதி சோபியா வாடியாவின் பற்றோடு கூடிய முழு உழைப்பேயாகும். 'ஹிந்த் ஸ்வராஜ்' (இந்திய சுயராஜ்யம்)பிரதிகளை வெளிநாடுகளி லுள்ள பல நண்பர்களுக்கும் அனுப்பி அவர்களுடைய கருத்தைக் கேட்டிருக்கிறார். இவரே இப்புத்தகத்தைப் பற்றி விசேஷக் கட்டுரைகளை எழுதியிருக்கிறார். இந்தியாவின் எதிர் காலத்திற் கான நம்பிக்கை இதில் அடங்கியிருக்கிறது என்று இவர் கண் டார். ஐரோப்பாவையும் குழப்பத்திலிருந்து காப்பதற்கு உதவக் கூடிய சக்தி இதில் அடங்கியிருக்கிறது என்று ஐரோப்பிய அறி ஞர்களும், எழுத்தாளர்களும் சொல்ல வேண்டும் என்றும் விரும் பினர். இதற்காகவே இக்காரியத்தைச் செய்தார். இதன் பலன் அற்புதமானது. விசேஷ வெளியீட்டில் பேராசிரியர் ஸாட்டி, ஜி. டி. எச். கோல், சி. டெலிஸ்லி பர்ன்ஸ், ஜான் மிடில்டன் மர்ரி, ஜே. டி. பெரஸ்போர்டு, ஹியூ பாஸட், கிளாட்ஹூடன், ஜெரால்டு ஹேர்டு, ஐரீன் ராத்போன் ஆகியவர்கள் கட்டுரைகளை எழுதியிருக் கிறார்கள். இவர்களில் சிலர் யுத்தத்தைவெறுப்பவர்களும் சோஷிய லிஸ்டுகளுமான பிரமுகர்கள். யுத்தம் வேண்டுவோர், சோஷி யலிஸ்டுகளல்லாதார்களின் கட்டுரைகளும் அதில் சேர்க்கப்பட் டிருக்குமானால் கட்டுரைகளின் எண்ணிக்கை இன்னும் எத்தனை இருக்குமோ! 'ஆரம்பக் கட்டுரைகளில் கூறப்பட்டிருக்கும் குறைகள், ஆட்சேபங்களுக்கு அநேகமாய்ப் பதில் சொல்லிவிடும் முறையில் பின்னால் கட்டுரைகள் அமையும் வகையில் இக்கட்டு

ரைகள் ஒழுங்குபடுத்திப் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. கட்டுரையாளர்கள் எல்லோருமே, பொதுவாக, இரண்டொரு குறைபாடுகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவற்றைக் குறித்து இங்கே கவனிப்பது அவசியமாகிறது. சில விஷயங்களை உடனே கவனிப்பது நல்லது. பேராசிரியர் ஸாட்டி, இந்தியாவுக்கு வந்துவிட்டு இப்பொழுதுதான் திரும்பியிருக்கிறார். இந்நூலில் காணும் தத்துவம் அதிக அளவுக்கு வெற்றியை அடைந்திருக்கிறது என்பதற்கான அறிகுறி எதுவுமே மேலீடாகத் தென்படவில்லை என்று அவர் கூறுகிறார். இது முற்றிலும் உண்மையே. அதே சமயத்தில் ஸ்ரீ ஜி. ஹெச். டி. கோல் கூறியிருப்பதும் உண்மையானதே. "காந்திஜியைப் பொறுத்தமட்டில் சுயராஜ்யத்திற்கு ஒருவர் எவ்வளவு அருகில் இருக்க முடியுமோ அவ்வளவு கிட்டத்தில் அவர் இருக்கிறார். ஆனால், மற்றப் பிரச்னைகளை அவருக்கே திருப்தி அடையும் வகையில் அவர் தீர்த்துவிடவில்லை. தன்னந்தனியே காரியம் செய்வதற்கும், தங்களுக்குச் சரியெனத் தோன்றும் காரியங்களைச் செய்துகொண்டு போவதற்கு மற்றவர்களுக்கு உதவுவதற்கும், ஒரே சமயத்தில் தாமாகவும் இன்னும் ஒருவராகவும் இருந்து, அவர்களில் ஒருவனாகி அவர்களுடன் வேலை செய்வதற்கும், அதே சமயத்தில் தாமாகவும் இன்னும் ஒருவராகவும் இருந்து எண்ணி, குணதோஷங்களைக் கூறி மதிப்பறிய முயல்வதற்கும், ஒருவருக்கும் மற்றொருவருக்குமிடையே இருக்கும் பாகுபாடுகளை நீக்குவதற்குமான முறையை அவர் வகுத்துவிடவில்லை." மேலும், ஜான் மிடில்டன் மர்ரி கூறுவதுபோல, "ராஜீய நிர்ப்பந்தத்திற்காக ஓர் உபாயமாக மாத்திரம் உபயோகிக்கப்படும் போது அகிம்சை தன்னுடைய சக்தியைச் சீக்கிரத்தில் இழந்துவிடுகிறது. அப்பொழுது, அகிம்சை - அதைவிடச் சிறந்த தொன்று இல்லாததால் - உண்மையிலேயே அகிம்சைதானா என்ற கேள்வியும் பிறக்கிறது."

ஆனால், இம்முறை முழுவதுமே ஒரு முடிவற்ற பரிணாமமேயாகும். லட்சியத்தை அடைவதற்காக மனிதன் பாடுபடும்போது அதற்கான உபாயத்தைச் சிறந்ததாக்கிக்கொள்ளவும் பாடுபடுகிறான். அகிம்சை, அன்புக் கொள்கையைப் புத்தரும் கிறிஸ்துவும் பல நூற்றாண்டுகளுக்கு முன்னாலேயே உபதேசித்திருக்கிறார்கள். அதற்குப் பின்னால் பல நூற்றாண்டுகளாகத் தனிப்பட்டவர்கள், தெளிவான பிரச்னைகளில் அதை வெற்றியுடன் அனுசரித்து வந்திருக்கிறார்கள். "ஸ்ரீ காந்தியின் சோதனையைக் குறித்து உலகமெங்குமே நீண்ட காலமாகச் சிரத்தை இருந்து வருவதற்குக்

காரணம், பெருமளவில் - நாடு முழுமைக்கும் என்று கூறப்படும் வகையில் - அம்முறையை வேலை செய்ய அவர் முயற்சி செய்து வருவதேயாகும்'' என்று ஜெரால்டு ஹேர்டு கூறுகிறார். இது ஒப்புக்கொள்ளப்படுகிறது. இதை அனுசரிப்பதிலுள்ள கஷ்டங்கள் அளவுகடந்தவை. ஆனால், அவை சமாளித்துவிட முடியாதவையல்ல என்று காந்திஜி நம்புகிறார். இந்தியாவில் இப்பரீட்சை அசாத்தியமானது என்று 1921-இல் காணப்பட்டது. அதைக் கைவிடவும் நேர்ந்தது. ஆனால், அதே பரீட்சை 1930-இல் சாத்தியமானதாயிற்று. இப்பொழுதுங்கூட அடிக்கடி ஒரு கேள்வி எழுகிறது. 'அகிம்சை முறை என்பதுதான் என்ன?' என்பதே கேள்வி. இதற்குரிய பொருளும், இச்சொல்லின் விளக்கமும் இன்னவைதாம் என்று அளவிடுவதற்கு அதிக காலப் பயிற்சி வேண்டும். ஆனால், இதற்கு இருக்கும் உபாயம், ஆன்ம சுத்தி செய்துகொள்ளுவதும், மேன்மேலும் ஆன்மசுத்தி செய்துகொள்ளுவதுமேயாகும். அகிம்சைக்கு அடிப்படையாக வேண்டியது அன்பு; மனமும் உடலும் மாசற்ற தூய்மையுடன் இருந்தாலன்றிப் பரிசுத்தமான, சுயநலமற்ற அன்பு அசாத்தியம். மேனாட்டு அறிஞர்கள் இதைக் கண்டறிய அடிக்கடித் தவறிவிடுகிறார்கள்.

## யந்திரங்கள்மீதும் நாகரிகத்தின்மீதும் எதிர்ப்பு

இந்நூலைப் பாராட்டி விமரிசனம் செய்திருக்கும் மற்றவர்கள் எல்லோரும், காந்திஜி அனாவசியமாக யந்திரங்களை வெறுக்கிறார் என்று அபிப்பிராயப்படுகின்றனர். எல்லோரும் பொதுவாக இதைத்தான் கூறுகின்றனர். ''அவர் எந்த ராட்டையின்மீது அன்பு காட்டுகிறாரோ அதுவும் ஒரு யந்திரமே. இயற்கையோடு ஒவ்வாத பொருள் என்பதைச் சிந்தனையின் தீவிரத்தில் மறந்துவிடுகிறார். ஆகவே, அவருடைய கொள்கையின்படி ராட்டினமும் ஒழிக்கப்படவேண்டும்'' என்று மிடில்டன் மர்ரி கூறுகிறார். பேராசிரியர் டெலிஸ்லி பர்னஸ், ''ஓர் அடிப்படையான தத்துவத் தவறு இது. தவறான காரியத்திற்கு உபயோகப்பட்டு விடக்கூடிய எந்தக் கருவியையும், நீதி முறைப்படி தீமையானதாக நாம் கருதிவிடவேண்டும் என்று ஏற்படுகிறது. ஆனால், நூற்கும் ராட்டினமும் ஒரு யந்திரமே; மூக்கின்மீது இருக்கும் கண்ணாடியும் 'உடலில் பார்வை'க்கான யந்திர சாதனமே. கலப்பையும் ஒரு யந்திரம். மனிதரின் வாழ்க்கையில் முன்னேற்றத்தை உண்டாக்குவதற்காகப் பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதன் முயன்று தண்ணீர் இறைப்பதற்குத் தொன்

மையில் கண்டுபிடித்துக் கையாண்ட யந்திரங்களே, ஒருவேளை பின்னர் எஞ்சி நின்றனவாக இருக்கலாம். எந்த யந்திரமும் தவறான வழியில் உபயோகிக்கப்பட்டு விடக்கூடும். ஆனால், இதில் இருக்கும் நெறிமுறையான தவறு, அதைத் தவறான வழியில் உபயோகிக்கும் மனிதனைச் சாருமே அன்றி யந்திரத்தினுடையதல்ல'' என்கிறார். ஒன்றை ஒப்புக்கொள்ளுகிறேன். காந்திஜி, தம்முடைய 'சிந்தனையின் தீவிரத்தில்' யந்திரங்களைப் பற்றிச் சற்று பக்குவமற்ற சொற்களை உபயோகித்துவிட்டார். அவரே இந்நூலைத் திரும்பத் திருத்துவாரானால் அதை மாற்றி விடுவார். நான் இங்கே எடுத்துக் கூறியிருக்கும் எல்லாருடைய கூற்றையும் காந்திஜி ஒப்புக் கொள்ளுவார் என்பது நிச்சயம். யந்திரங்களை உபயோகிக்கும் மனிதருக்குரிய நீதி நெறியை யந்திரங்களுக்கும் அவர் கற்பித்ததில்லை என்பதும் நிச்சயம். ஆகவே, நான் குறிப்பிட்டிருக்கும் இரண்டு எழுத்தாளரின் மொழி நடையைக் காந்திஜி 1924-ல் உபயோகித்தார். டில்லியில் நடந்த ஒரு சம்பாஷணையைக் கீழே தருகிறேன். எல்லா யந்திரங்களையுமே அவர் எதிர்க்கிறாரா என்று கேட்டதற்குக் காந்திஜி கூறியதாவது:

''இந்த உடல்கூட மிகவும் நுட்பமான யந்திரமே என்பதை நான் அறிந்திருக்கும்போது எல்லா யந்திரங்களையுமே எதிர்ப்பவனாக நான் எப்படி இருக்கமுடியும்? நூற்கும் ராட்டினமும் ஒரு யந்திரம். பல் குத்தும் சிறு துரும்பும் யந்திரந்தான். நான் ஆட்சேபிப்பதெல்லாம் யந்திரத்தைப் பற்றிய வெறியையே; வெறும் யந்திரங்களை அல்ல. உழைப்பைக் குறைக்கும் யந்திரங்கள் என்பவைமீது அந்தப் பித்து அதிகமாக இருக்கிறது. மனிதர், பல்லாயிரக்கணக்கில் வேலையற்று நடுத்தெருவில் நின்று பட்டினியால் சாகும் வகையில் மனிதரின் 'உழைப்பைக் குறைத்துக் கொண்டே' போகிறார்கள். மனித வர்க்கத்தில் ஒரு சிறு பகுதியினருக்கு மாத்திரமல்லாமல் எல்லோருக்குமே நேரத்தையும் உழைப்பையும் குறைக்க நான் விரும்புகிறேன். செல்வம் ஒரு சிலருடைய கையில் குவிந்துவிடாமல் எல்லோரிடமும் அது இருக்கும்படி செய்ய விரும்புகிறேன். இன்று யந்திரங்கள், கோடானுகோடி மக்களை வருத்தி ஒரு சிலர் மாத்திரமே இன்புற்றிருக்க உதவி செய்கின்றன. இதற்கெல்லாம் பின்னாலிருந்து ஊக்குவது பேராசையே தவிர உழைப்பைக் குறைக்கவேண்டும் என்ற தரும சிந்தையல்ல. காரியங்கள் இவ்விதம் அமைந்திருப்பதை எதிர்த்தே

என்னுடைய முழுச் சக்தியையும் கொண்டு போராடிக்கொண்டிருக்கிறேன். இதிலெல்லாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது மனிதனையே. உதாரணமாக, புத்திசாலித்தனமான சில விதி விலக்குகளைப் பற்றியும் கூறுகிறேன். சிங்கரின் தையல் யந்திரத்தை எடுத்துக்கொள்ளுவோம். மனித சக்தியால் உருவெடுத்த உபயோகமான சிலவற்றில் அதுவும் ஒன்று. அதனுடைய அமைப்பிலேயே ஒரு ரசமான விஷயமும் இருக்கிறது.''

கேள்வி கேட்டவர், ''அப்படியானால், இந்தத் தையல் யந்திரங்களைத் தயாரிப்பதற்கு ஒரு தொழிற்சாலை இருக்க வேண்டும். அதில் நீராவி, மின்சாரம் போன்ற சக்திகளைக் கொண்டு இயக்கும் சாதாரண யந்திரங்கள் இருக்கவேண்டும்'' என்றார்.

இதற்கு மகாத்மா கூறியதாவது: ''ஆம். இத்தகைய தொழிற்சாலைகளைத் தேச உடைமையாக்கிவிடவேண்டும், சர்க்காரே நிர்வகிக்கவேண்டும் என்று சொல்லும் அளவுக்கு நான் சோஷியலிஸ்டு......தனிப்பட்டவரின் உடல் உழைப்பைக் குறைப்பதே நோக்கமாக இருக்கவேண்டுமேயன்றிப் பேராசை காரணமாக இருந்துவிடக்கூடாது. உதாரணமாக வளைந்து போய்விடும் நூற்புக் கதிரை நிமிர்த்துவதற்கு ஒரு யந்திரம் இருக்கவேண்டும் என்பதை நான் வரவேற்பேன். கதிர்கள் செய்வதைக் கொல்லன் விட்டுவிடவேண்டும் என்பதல்ல. கதிர்களைக் கொல்லர்களே செய்து கொடுக்கவேண்டும். ஆனால், கதிர்கள் பழுதாகிவிட்டால் அவற்றை நேராக்க நூற்பவர் ஒவ்வொருவரிடமும் ஒரு யந்திரம் இருக்கவேண்டும். ஆகையால், பேராசை இருக்கும் இடத்தில் அன்பு இருக்கும்படி செய்துவிட்டால் எல்லாம் சரியாகி விடும்.''

''சிங்கரின் தையல் யந்திரத்திற்கும், உங்கள் கதிருக்கும் நீங்கள் விதிவிலக்குச் செய்வதானால், இந்த விதிவிலக்கு எங்கே போய் முடியும்?'' என்றார் கேள்வி கேட்டவர்.

''தனிப்பட்டவருக்கு உதவியாயிருப்பது நின்று, ஒருவரது தன்மையையே அது ஆக்கிரமித்துக்கொள்ளும் வரையில்தான். மனிதனுடைய கையையும் காலையும் முடக்கும் அளவிற்கு யந்திரங்களுக்கு இடந் தரக்கூடாது'' என்றார் காந்திஜி.

''ஆனால், கொள்கையை முன்னிட்டு எல்லா யந்திரங்களையுமே நீங்கள் தள்ளிவிட மாட்டீர்களா? தையல் யந்திரத்தை நீங்கள் அனுமதித்தால், சைக்கிள், மோட்டார்கார் முதலியவைகளையும் நீங்கள் அனுமதிக்க வேண்டி வரும்.''

"இல்லை. நான் அனுமதிக்கமாட்டேன். ஏனெனில், அவை மனிதனின் முதன்மையான தேவைகளைப் பூர்த்தி செய்யவில்லை. ஒரு மோட்டாரில் அதிவேகமாகச் சென்று தூரத்தைக் கடக்க வேண்டும் என்பது மனிதனின் முதன்மையான தேவையன்று. இதற்கு நேர்மாருக ஓர் ஊசி, வாழ்க்கைக்கு அத்தியாவசிய மானதாக இருப்பதோடு முதன்மைத் தேவையாகவும் இருக் கிறது."

காந்திஜி மேலும் கூறியதாவது:

"முக்தி அடைவதற்கும், ஆன்மாவின் பூரணமான விடுதலையை அடைவதற்கும் உதவியாக இல்லாத இச்சடலத்தையே நான் எப்படி நிராகரித்து விடுவேனே அதே போல கொள்கையளவில் எல்லா யந்திரங்களையுமே நான் நிராகரிப்பேன். ஆனால், உடலைப் போலவே யந்திரங்களும் தவிர்க்க முடியாதவையாகையால் யந்திரங்கள் இருக்கவேண்டியதுதான். நான் உங்களுக்குச் சொன்னதுபோல, உடலே ஒரு சரியான யந்திரந்தான். ஆனால், ஆன்மா மேன்மையை அடைவதற்கு இவ்வுடல் இடையூருக இருக்குமானல் இதையும் நிராகரித்துவிட வேண்டியதே."

குறைகூறும் எவரும், காந்திஜியின் இந்தத் துணிபைக் குறித்து அடிப்படையில் அபிப்பிராய பேதம் கொள்ளுவதற் கில்லை என்றே நான் நினைக்கிறேன். உடலைப்போலவே யந்திர மும் ஆன்ம வளர்ச்சிக்கு உகந்ததாக இருக்கும் வரையில்தான் பயன்படக்கூடியது.

இதேதான் மேற்கத்திய நாகரிக விஷயத்தைப் பற்றியும். "மனிதனுடைய ஆன்ம வளர்ச்சிக்குப் பகையாக மேலை நாகரிகம் இருக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறது" என்ற கருத்துக்கு ஸ்ரீ ஜி. டி. ஹெச். கோல் ஆட்சேபம் தெரிவிக்கிருர்: "ஸ்பெயி னிலும் அபிஸீனியாவிலும் ஏற்பட்ட பயங்கரக் கொடுமைகள், நம்மை இடைவிடாது கவிந்து கொண்டிருக்கும் பீதி, ஏராள மான சுபிட்சத்திற்கிடையே வறுமை இவை எங்கள் மேற்கத்திய நாகரிகத்திலுள்ள பெரிய, மோசமான குறைகள். ஆனால், அக் குறைபாடுகளே அநாகரிகத்தின் சாரமல்ல... எங்கள் நாகரிகத்தைத் திருத்திக் கொள்ளுவோம் என்று நான் சொல்லவில்லை. ஆனால், திருத்தும் காலம் கடந்து விட்ட தென்று நான் நம்பவில்லை. மனித ஆன்மாவுக்கு என்ன அவ சியமோ அதை மறுப்பது ஒன்றையே இந்நாகரிகம் அடிப்படை யாகக் கொண்டிருக்கிறது என்று நான் நம்பவுமில்லை" என்கிருர்

ஸ்ரீ கோல். அது சரி. காந்திஜி குறிப்பிட்ட குறைபாடுகள், அதற்கு இயல்பான குறைபாடுகள் அல்ல; அதன் போக்கில் இருக்கும் குறைபாடுகளையே குறிப்பிட்டார். இந்நூலில் காந்திஜியின் நோக்கம், இந்திய நாகரிகத்திற்கும் மேனுட்டு நாகரிகத்திற்கும் உள்ள பேதங்களை எடுத்துக் காட்டுவதேயாகும். மேற்கத்திய நாகரிகம் திருந்தக்கூடிய கட்டத்தைக் கடந்துவிடவில்லை என்று ஸ்ரீ ஜி. டி. ஹெச். கோல் கூறுவதைக் காந்திஜி முற்றிலும் ஒப்புக் கொள்ளுவார்.

''காந்தியைப் போலத் தம்மைத் தாமே உணர்ந்து உண்மையைக் கண்ட தலைவர்கள் உருவாக்கிய 'சுய ஆட்சி' மேற்கு நாடுகளுக்கும் தேவை; அது அவர் கருத்தில் கொண்டிருப்பது போலவும், இந்தியாவுக்கு ஏற்றது போலவும் இராமல் நமது மேலை நாகரிகத்தை ஒட்டியதாக இருக்கும் என்பதைக் காந்திஜி முற்றிலும் அங்கீகரிப்பார்'' என்கிருர் அவர்.

## தத்துவத்தின் குறைபாடுகள்

ஸ்ரீ ஜி. டி. ஹெச். கோல் கீழ்வரும் திகைக்க வைக்கும் கேள்வியையும் போடுகிருர். ''ஜெர்மன், இத்தாலிய ஆகாய விமானிகள் ஸ்பெயினின் மக்களைப் படுகொலை செய்துகொண்டிருக்கும்போதும், சீன நகரங்களில் பல்லாயிரக் கணக்கான சீன மக்களை ஜப்பானிய ஆகாய விமானிகள் கொன்று குவித்துக் கொண்டிருக்கும்போதும், ஜெர்மன் ராணுவங்கள் ஆஸ்திரியாவுக்குள் புகுந்து, ஜெக்கஸ்லோவியாவுக்குள்ளும் புகுந்துவிடுமோ என்ற அபாயம் இருந்து வரும்போதும், அபிஸீனியா அக்கிரமமாகக் குண்டு வீசப்பட்டுத் தோல்வியடையும்படி செய்யப்பட்டு வரும்போதும், அப்படித்தானு? இரண்டு வருடங்களுக்கு முன்னல் வரையில் யுத்தத்தையும், எந்தச் சந்தர்ப்பத்திலும் மரணத்தை உண்டாக்கும் பலாத்காரத்தையும் நானே எதிர்த்துத் தான் வந்தேன். அந்த எதிர்ப்பில் நம்பிக்கையும் வைத்திருந்தேன். ஆனல், இன்ரே, நான் யுத்தத்தை வெறுக்கிறேனென்ருலும், மேலே கண்டதைப் போன்ற கொடூரங்களை நிறுத்துவதற்கு யுத்த அபாயத்திற்கும் தயாராயிருக்கிறேன்" என்கிருர்.

அவர் உள்ளத்திலேயே போராட்டம் எவ்வளவு கடுமையாக இருக்கிறது என்பதைக் கீழ்வரும் அவருடைய வாக்கியங்களே தெளிவாகக் காட்டுகின்றன:

"யுத்த அபாயத்திற்கும் நான் தயார். என்ருலும், ஒரு மனிதனைக் கொல்லுவது என்ற நினைவு வரும்போது இப்பொழுது

கூட என் உள்ளத்தின் ஒரு பகுதி பின்னுக்கடைகிறது. என்னைப் பொறுத்தவரையில், இன்னொருவரைக் கொல்லுவதைவிட நானே முன்னால் செத்துவிடுவேன். ஆனால், சாவதைவிடக் கொல்ல முயலுவது அல்லவோ என் கடமையாகிவிடும்? ஆன்மா வரைக்கும் சுயராஜ்யத்தை அடைந்தவனுக்கு இத்தகைய மனக்குழப்பமே உண்டாகாது'' என்று காந்தி பதில் சொல்லக்கூடும். நான் என்னுடைய ஆன்ம சுயராஜ்யத்தை அடைந்துவிட்டதாகச் சொல்லிக்கொள்ளவில்லை. ஆனால், இங்கேயும் சரி, இப்பொழுது மேற்கு ஐரோப்பாவிலும் சரி, அத்தகைய குழப்பம் ஏற்படுமாகிலும் என் மனம் குழம்பிவிடும் என்பதை மாத்திரம் நான் ஒப்புக்கொள்ள முடியாது.''

ஸ்ரீ கோல் குறிப்பிட்டிருப்பதைப் போன்ற சந்தர்ப்பங்கள் ஒருவருடைய நம்பிக்கையைப் பரிசோதிக்கின்றன. ஆனால், இதற்குத் தகுந்த விடையைப் பல தடவை காந்திஜி கூறியிருக்கிறார். மற்ற மக்களுக்கும் சுயராஜ்யம் இல்லாதிருக்கும் வரையில், காந்திஜியைப் பொறுத்தவரையில், அவருக்குச் சுயராஜ்யம் பூர்த்தியானதன்று. இக்காரணத்தைக் கொண்டு அவரும் சுயராஜ்யத்தை முழுதும் அடையாதவராயிருந்தும், இதற்குக் காந்திஜி பன்முறை பதில் கூறியிருக்கிறார். ஆனால், அவர் நம்பிக்கையில் வாழ்கிறார். அகிம்சையில் அவர் கொண்டிருக்கும் நம்பிக்கை, இத்தாலிய, ஜப்பானிய காட்டுமிராண்டித்தனங்களைப் பற்றிச் சொன்ன மாத்திரத்தில், நடுங்க ஆரம்பித்துவிடுவதில்லை. ஏனெனில், பலாத்காரத்திலிருந்து பலாத்காரத்தின் பலன்களே பிறக்கின்றன. இப்படி ஒருமுறை ஆரம்பித்துவிட்டால் அதற்கு ஒரு முடிவே கிடையாது. சீனாவின் சார்பில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தியிருக்கும் ஒரு சீன நண்பருக்கு, பிலிப் மம்ப்போர்டு 'யுத்த எதிர்ப்பாளர்' என்ற சஞ்சிகையில் பின்வருமாறு பதில் சொல்லியிருக்கிறார்.

''உங்கள் எதிரி ஜப்பானிய சர்க்காரேயன்றி ஜப்பானிய விவசாயிகளும் சிப்பாய்களுமல்ல. கல்வி அறிவில்லாதவரும், துர்ப்பாக்கியர்களுமான அவர்கள், எதற்காகத் தங்களைச் சண்டை செய்ய அழைக்கிறார்களென்பதையே அறியார்கள். அப்படியிருந்தும், உங்கள் நாட்டைப் பாதுகாப்பதற்குச் சாதாரண ராணுவ முறைகளையே நீங்கள் உபயோகிப்பதாயிருந்தால், உண்மையில் உங்களுடைய எதிரிகளல்லாத அந்தக் குற்றமற்ற மக்களையே நீங்கள் கொல்லவேண்டியிருக்கும். காந்திஜி இந்தியாவில் கையாண்டுவரும் முறையே பெரிய மதத்தலைவர்கள் உப

தேசித்த முறைக்கு மிகவும் பொருத்தமானதாகும். சீன, காந்திஜியின் அகிம்சை முறையைப் பரீட்சித்துத் தன்னையும் காத்துக் கொள்ளுமானல், ஐரோப்பாவின் ராணுவ முறையைப் பின்பற்றுவதைவிட அதிகமான பலனை அடைய முடியும் என்று தைரியமாகக் கூறுவேன். இவ்வுலகில் இருக்கும் மக்களில் அதிக சமாதானத்தோடு கூடிய சீன மக்கள், போர்க்கோலம் கொள்ளும் மக்களைவிட, சரித்திரத்தில் தங்களையும் தங்களுடைய நாகரிகத்தையும் இன்னும் அதிக காலத்திற்குப் பாதுகாத்து நீடித்தவர்கள் ஆவார்கள். இது பொதுவாக மனிதவர்க்கத்திற்கே ஒரு படிப்பினையாகவும் இருக்கும். தங்கள் நாட்டைப் பாதுகாப்பதற்காக வீரத்தோடு போராடிக் கொண்டிருக்கும் சீனரை நாம் போற்றவில்லை என்று எண்ணிவிட வேண்டாம். அவர்களுடைய தியாகத்தைப் போற்றுகிறோம். நாம் கொண்டிருப்பதற்கு மாறுன கொள்கையை அவர்கள் கொண்டிருக்கிறார்கள் என்பதையும் உணருகிறோம். என்றாலும், எந்தச் சந்தர்ப்பத்திலும் கொல்லுவது என்பது தீமையானது. அதிலிருந்து நன்மை உண்டாகவே முடியாது என்று நாங்கள் நம்புகிறோம். யுத்தம் வேண்டாமை, எல்லாக் கஷ்டங்களிலிருந்தும் உங்களைத் தவிர்த்துவிடாது. என்றாலும், உங்களுடைய போர்ப் படைகளெல்லாவற்றையும் விட, உங்களை வெற்றி கொண்டுவிடக் கூடிய எதிரியைச் சமாளிக்க நாளாவட்டத்தில் இதுவே சரியான ஆயுதம் என்று நாங்கள் நம்புகிறோம். எல்லாவற்றையும் விட இதில் அதிக முக்கியமானது, உங்கள் இனத்தின் குறிக்கோள்களை இது அழியாமல் பாதுகாக்கும் என்பதே.”

மிஸ் ஐரீன் ராத்போனும் இதுபோன்ற கேள்வியையே கேட்கிறார்: “கொடியனுக்குப் பணிந்து கொடுத்து, தம் மனச்சாட்சியையும் புறக்கணித்து, சிறுவர்களும் பெண்களும் அழிந்துவிடுவார்களானல், சாதாரணமான மனிதனே, மகானே, இவ்வுலகத்திலுள்ள எவர்தாம் அதைச் சகிப்பார்கள்? இக்கேள்விக்குக் காந்திஜி பதில் சொல்லவில்லை. இது அவருக்கு எழவே இல்லை. கிறிஸ்து இங்கே அதிகத் தெளிவாகக் கூறுகிறார். இவை தாம் அவருடைய சொற்கள்: ‘ஆனல், என்னை நம்பும் இச்சிறுவர்களில் ஒருவருக்கு யார் துன்பம் இழைக்கிறார்களோ அவருடைய கழுத்தில் கல்லைக் கட்டி ஆழமான சமுத்திரத்தில் அவரை மூழ்கடிப்பதே மேல்.’ காந்தியை விடக் கிறிஸ்துவே நம் உதவிக்கு வருகிறார்.”

கிறிஸ்துவின் வார்த்தைகள், அவருக்கு இருக்கும் கோபத்தைத் தவிர வேறு எதையும் அதிகமாகக் காட்டுவதாக நான் நினைக்கவில்லை. எடுத்துக்கொள்ளவேண்டிய நடவடிக்கையைக் குறித்து அவர் கூறியிருப்பது, குற்றஞ் செய்கிறவருக்கு மற்றவர்கள் தண்டனையாகச் செய்ய வேண்டியதைப் பற்றியன்று. தனக்குத்தானே செய்துகொள்ள வேண்டிய தண்டனையைப் பற்றியே அவர் சொல்லியிருக்கிறார். கிறிஸ்துவின் வழி என்று மிஸ் ராத்போன் எதை நம்புகிறாரோ அதைக்கொண்டே குழந்தையைப் பாதுகாத்துவிடமுடியும் என்று அவர் நம்புகிறாரா? காந்திஜி இக்கேள்வியைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை என்று அவர் நினைப்பது தவறு. 300 வருடங்களுக்கு முன்னால் முஸ்லிம் மத வீரத்தியாகிகள், கொடியனுக்குப் பணிந்து தங்கள் மனச்சாட்சியை மறுப்பதற்குப் பதிலாகத் தம் பெண்டிரையும் மக்களையும் பசியாலும் தாகத்தாலும் மடியவிட்டு இப்பிரச்னைக்கு நடைமுறையில் பதில் சொல்லியிருக்கின்றனர். அதுபோலவே காந்திஜியும், இக்கேள்வியைக் கேட்டுக்கொண்டு பன்முறை திடமாகப் பதிலும் சொல்லியிருக்கிறார். ஏனெனில், கொடியவனுக்குப் பணிந்து உங்கள் மனச்சாட்சியை மறுப்பது, கொடியவனுக்கு இன்னும் அதிக அக்கிரமங்களைச் செய்ய உற்சாகம் தந்ததாகும்.

என்றாலும், மிஸ் ஜரீன் ராத்போனும், "'ஹிந்த் ஸ்வராஜ்' மகத்தான சக்தி வாய்ந்த நூல்" என்றே சொல்லுகிறார். அதன் குண விசேஷத்தால், "எனக்குள்ள நேர்மை யாதென சோதித்துக்கொள்ளும்படி அதன் அற்புதமான நேர்மை என்னைத் தூண்டுகிறது. மக்கள் இதைப் படிக்க வேண்டும் என்று கோருகிறேன்" என்கிறார்.

'ஹிந்த் ஸ்வராஜ்' விசேஷ மலரை பிரசுரித்ததன் மூலம் 'ஆரிய வழி' ஆசிரியர்கள் சமாதானம், அகிம்சை இந்த லட்சியங்களுக்கு மிகச் சிறந்த தொண்டு ஆற்றியுள்ளனர்.

## முன்னுரை*

லார்டு லோதியன் சேகானுக்கு வந்திருந்தபோது, 'ஹிந்த் ஸ்வராஜ்' புத்தகப் பிரதி ஒன்று கிடைக்குமா என்று என்னைக் கேட்டார். காந்திஜி இப்பொழுது உபதேசித்து வருவனவெல்லாம் அந்நூலில் ரத்தினச் சுருக்கமாக அடங்கியிருக்கின்றன என்றும், காந்திஜியைச் சரிவர புரிந்துகொள்ளுவதற்கு இப்

* நவஜீவன் பிரசுராலயத்தார் 1938-இல் பிரசுரித்த "ஹிந்த் ஸ்வராஜ்" நூலுக்கு ஸ்ரீ மகாதேவ தேசாய் எழுதிய முன்னுரையே இது.

புத்தகத்தைத் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டியது அவசியம் என்றும் அவர் சொன்னர்.

இதில் ஓர் ஆச்சரியம் என்னவென்ருல், அதே சமயத்தில் தான் ஸ்ரீமதி சோபையா வாடியா இந்நூலைக் குறித்து ஒரு கட்டுரை எழுதிக்கொண்டிருந்தார். நம் மந்திரிகள், எம். எல். ஏக்கள், பிரிட்டிஷ், இந்திய அதிகாரிகள், ஜனநாயகத்தில் இப் பொழுது செய்யப்பட்டுவரும் அகிம்சைப் பரீட்சை வெற்றி பெற வேண்டும் என்று விரும்புகிறவர்கள் ஆகிய எல்லோருமே இப் புத்தகத்தைத் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும் என்று அக் கட்டுரையில் ஒவ்வொருவரையும் அவர் கேட்டுக்கொண்டார். அகிம்சையைப் பன்பற்றி நடக்கிறவர், தம் வீட்டிலேயே எப்படி சர்வாதிகாரியாக இருக்க முடியும் என்று அவர் கேட்கிருர். "அவர் எப்படிப் பெருங்குடிகாரராக இருக்க முடியும்? தம் கட்சிக்காரரைக் கோர்ட்டுக்குப் போய்ச் சண்டை போடும்படி ஒரு வக்கீல் எப்படி யோசனை சொல்லித்தரமுடியும்? இக்கேள்வி களுக்குரிய பதில்கள் அனுபவத்தை ஒட்டிய முக்கியமான பிரச்னை களையெல்லாம் கிளப்புகின்றன. இப்பிரச்னைகளெல்லாம் கொள் கையை அனுசரித்து 'ஹிந்த் ஸ்வராஜ்ய'த்தில் எடுத்துக் கூறப் பட்டிருக்கின்றன. அது மக்களுக்குக் கல்வி. அவற்றை முற்றி லும் நிறைவேற்றியாக வேண்டும்" என்கிருர்.

சரியான சமயத்திலேயே அவர் வேண்டுகோளை வெளியிட் டிருக்கிருர். இந்நூல் 1909-இல் எழுதப்பட்டது. இந்தியரில் பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்டிருந்தோருக்குப் பதில் அளிக்கக் காந்திஜி இதை லண்டனிலிருந்து திரும்பி வரும் பய ணத்தின்போது எழுதினர். இது காந்திஜி நடத்திக்கொண் டிருந்த 'இந்தியன் ஒப்பினியன்' என்ற பத்திரிகையில் தொடர்ச் சியாக வெளியாயிற்று. பிறகு புத்தக உருவில் வெளிவந்தது. ஆனல், பம்பாய் சர்க்கார் இதைப் பறிமுதல் செய்துவிட்டது. ஸ்ரீ காலன்பாக்குக்காகக் காந்திஜி இந்நூலை மொழிபெயர்த் தார். பம்பாய் சர்க்காரின் நடவடிக்கைக்கு ஒரு பதில் தர அவர் ஆங்கில மொழிபெயர்ப்பை வெளியிட்டார். கோகலே 1912-இல் தென்னப்பிரிக்காவுக்குச் சென்றிருந்தபோது இந்த மொழி பெயர்ப்பைப் பார்த்தார். 'இப்புத்தகம் பக்குவமற்றது, பரபரப் பில் எழுதியது; காந்திஜி இந்தியாவில் ஒரு வருடம் இருந்து விட்ட பிறகு அவரே இப்புத்தகத்தைக் கிழித்தெறிந்து விடுவார்' என்று நினைத்து ஒரு ஜோசியம் கூறினர். அப்பெரிய ஆசாரியரி டத்தில் எனக்கு மதிப்பு உண்டு. என்ருலும், அவர் சொன்ன

ஜோசியம் பலிக்கவில்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்நூலைக் குறித்து 1921-இல் காந்திஜி பின் வருமாறு எழுதினர்: "துவேஷத்திற்குப் பதிலாக அன்பின் மகத்துவத்தை இந்நூல் போதிக்கிறது. பலாத்காரத்திற்குப் பதிலாக தன்னலத் தியாகத்தை இது அளிக்கிறது. மிருக பலத்திற்குப் பதிலாக ஆன்ம பலத்தை இது வற்புறுத்துகிறது. இப்புத்தகத்தில் இருக்கும் ஒரு வார்த்தையைத் தவிர வேறு எதையுமே நான் நீக்கவில்லை. அந்த வார்த்தையையும் நண்பரான ஒரு பெண்மணியின் பொருட்டு நீக்கினேன். இப்புத்தகம், 'நவநாகரிக'த்தைப் பலமாகக் கண்டிக்கிறது. இது 1909-இல் எழுதப்பட்டது. அன்று எனக்கு இருந்த அபிப்பிராயம் இப்பொழுது இன்னும் பலமாகியிருக்கிறது. ஆனல், இதில் விளக்கப்பட்டிருக்கும் சுயராஜ்யத்தை அடைவதற்கே நான் இன்று முயற்சி செய்து வருகிறேன் என்று நினைத்துவிட வேண்டாம் என வாசகர்களை எச்சரிக்கை செய்கிறேன். இந்தியா, அதற்கு வேண்டிய பக்குவத்தை இன்னும் அடைந்து விடவில்லை என்பதை நான் அறிவேன். அப்படி நான் கூறுவது துடுக்குத்தனமாகத் தோன்றலாம். ஆனல், அதுதான் என் அபிப்பிராயம். நான் தனிப்பட்ட முறையில், இதில் கூறப்பட்டிருக்கும் சுய ஆட்சியை அடையப் பாடுபட்டு வருகிறேன். ஆனல் இன்றோ மற்றவர்களுடனும் கூடிய என்னுடைய நடவடிக்கைகளெல்லாம், இந்திய மக்களின் கருத்தை அனுசரித்துப் பார்லிமெண்டரி முறை சுயராஜ்யத்தை அடைவதிலேயே ஈடுபட்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை." 1938-இல் கூட, இப்புத்தகத்தில் சில பகுதிகளில் சொல்நடையைத் தவிர, வேறு எதையும் அவர் மாற்றவில்லை. சுருக்காமல் இது வாசகர்களுக்கு அளிக்கப்படுகிறது.

ஆனல், இதற்கு வேண்டிய பக்குவத்தை இந்தியா அடையுமோ அடையாதோ; ஆழ்ந்த கருத்தைப் பரப்பும் இந்நூல், இரட்டைக்கொள்கையான சத்தியம், அகிம்சை ஆகியவைகளை ஏற்பதையே முடிவான லட்சியமாகக் கொண்டது. இதைப் படித்துவிட்டு இக்கொள்கைகளை ஏற்பதா அல்லது நிராகரிப்பதா என்ற முடிவுக்கு இந்தியரே வரவேண்டும்.

வர்தா
2-2-38

—மகாதேவ தேசாய்

# பின் சேர்க்கைப் பகுதி

---

1. தென்னுப்பிரிக்கப் போராட்ட நிகழ்ச்சிகளின் காலக் குறிப்பு.
2. டால்ஸ்டாய்க்குக் காந்திஜியின் கடிதங்கள்.
3. ஸ்ரீ போலக்குக்கு எழுதிய கடிதம்.
4. ஸ்ரீ மகன்லாலுக்கு எழுதிய கடிதங்கள்.
5. ஸ்ரீ ஜி. ஏ. நடேசனுக்கு எழுதிய கடிதங்கள்
6. தென்னுப்பிரிக்காவுக்குக் கோகலே அறிமுகம்.
7. "என் வாழ்வில் கோகலே பெற்ற இடம்."
8. அனுபவித்த மற்ருேர் அவமதிப்பு.
9. போனிக்ஸ் குடியிருப்புத் திட்டம்.

# 1
# தென்னாப்பிரிக்கப் போராட்ட நிகழ்ச்சிகளின் காலக் குறிப்பு

*1893—*ஏப்ரல் —காந்திஜி, தாதா அப்துல்லா கம்பெனியாரின் வழக்குச் சம்பந்தமாக முதன் முதல் தென்னாப்பிரிக்காவுக்குப் பிரயாணம்; டர்பனை (நேட்டால் துறைமுகம்) அடைதல்; மாரிட்ஸ்பர்க் போன்ற இடங்களில் அவருக்கு ஏற்பட்ட கடுமையான அனுபவங்கள்.

*1894—* —நேட்டால் உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞராகச் சேரக் காந்திஜி கொடுத்த மனுவுக்கு எதிர்ப்பு; முடிவில் மேல் கோர்ட்டின் தீர்ப்புப்படி அனுமதிக்கப்பட்டார்; வக்கீலாகச் சேர்ந்த முதல் இந்தியர் இவரே.

*1894—*மே —நேட்டால் இந்தியர் காங்கிரஸ் உருவாகியது.

*1896—* —காந்திஜி இவ்வருட மத்தியில் தென்னாப்பிரிக்க இந்திய சமூகத்தினர் அனுமதியின் பேரில் ஆறுமாத காலத்திற்கு இந்தியா திரும்பியது; இந்தியாவின் பல நகரங்களில் பெரிய தலைவர்களைச் சந்தித்து, தென்னாப்பிரிக்க இந்தியரின் பரிதாபகரமான நிலையைக் குறித்து இந்தியப் பெருமக்களின் ஆதரவை அவர் பெற முயன்றது.

*1896—*நவம்பர் —நேட்டால் இந்தியர்களிடமிருந்து உடனே திரும்பிவருமாறு தந்தி வரவே, காந்திஜி தம் மனைவி மக்களுடன் தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்பியது.

*1897—*ஜனவரி–*13* —காந்திஜி டர்பனில் கப்பலைவிட்டு இறங்குவதைத் தடுக்க, வெள்ளையர் செய்த முயற்சி; இந்தியாவில் அவர் நடத்திய பிரசாரத்திற்காக கொதிப்படைந்த அம்

மக்கள், அவர் இறங்கி வருகையில் அவரைத் தாக்கியது; போலீஸ் அதிகாரியின் தந்திரத்தால் காந்திஜி உயிர் தப்பியது.

*1899*— —போயர் யுத்தம் மூண்டது; காந்திஜி இந்திய மருத்துவப் படையைத் திரட்டியது; யுத்த அறிக்கையில் அவரைப் பற்றிய பாராட்டு; பணியாற்றியதற்குச் சர்க்காரின் பதக்கம்; லேடிஸ்மித் என்ற இடத்தில் பிரபுசிங்கின் தீரச்செயல்; வைசிராய் லார்டு கர்ஸன் அவ்வீரனுக்குத் தந்த பரிசு.

*1900*— —போயர் யுத்தத்தின் இறுதிக் கட்டம்.

*1901*— —காந்திஜி மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பி, பம்பாயில் பாரிஸ்டர் தொழிலை நடத்த உத்தேசித்தது; கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில் காந்திஜி கொண்டு வந்த தீர்மானம் நிறைவேற்றப் பட்டது; கோகலே வீட்டில் தங்கி அவருடன் பழகியது.

*1902*—மே —பம்பாயில் தம் அலுவலகத்தைத் திறந்தது.

*1902*—இறுதி —டிரான்ஸ்வாலில் ஆசியாக்காரர்களுக்கு விரோதமாக இயற்றப்பட்ட சட்டங்களைக் கண்டித்துக் கிளர்ச்சி செய்வதற்கு மீண்டும் அழைக்கப்பட்டு அவர் தென்னுப்பிரிக்கா சென்றது.

*1903*— —டிரான்ஸ்வால் உயர்நீதி மன்றத்தில் காந்திஜி அட்டர்னியாகச் சேர்ந்தது; ஜொஹன்னஸ்பர்க்கில் தம் தொழிலை நடத்தியது; டிரான்ஸ்வால் பிரிட்டிஷ் இந்தியக் கழகத்தின் மூலம் ஆசியா இலாகாவின் ஊழல்களை நீக்க அவர் முயற்சி செய்தது.

*1904— 1905* —ஜொஹன்னஸ்பர்க்கில் இந்தியர் குடியிருப்புக்களில் பிளேக் நோய்; காந்திஜி, காட்பிரே மற்றவர்களும் மக்களுக்குச் சிகிச்சை செய்ய உழைத்தது, டர்பனில்

போனிக்ஸ் குடியிருப்பை நிறுவியது; ரஸ்கினின் 'கடையனுக்கும்கதிமோட்சம்' என்ற நூலில் அவருக்கு இருந்த ஈடுபாடு; உணவு பற்றிய பல கட்டுரைகள் குஜராத்தி மொழியில் எழுதியது; வாழ்வு முழுவதும் பிரம்மசரிய விரதம் பூண்டது. தென்னுப்பிரிக்க இந்தியரின் கொள்கைகளையும் குறைகளையும் எடுத்துக் கூறும் ஒரே பத்திரிகையான 'இந்தியன் ஒப்பினிய'னைத் தொடர்ந்து நடத்தியது; ஜுலு கலகம். இந்திய மருத்துவ உதவிப் படையொன்றைக் காந்திஜி திரட்டியது.

*1906* — ஆகஸ்டு *22* — டிரான்ஸ்வால் கெஜெட்டில் ஆசியத் திருத்தச் சட்ட அவசர மசோதா பிரசுரம். இந்திய சமூகத்தினருக்கு அகௌரவம் இழைக்கும் அதன் ஷரத்துக்கள்.

*1906*—செப்டம்பர் *11*— இந்தக் 'கறுப்பு'ச் சட்டத்தை எதிர்த்து, ஜொஹன்னஸ்பர்க் எம்பயர் அரங்கில் இந்தியர்கள் கூடி நிறைவேற்றிய தீர்மானம்; முகம்மது காச்சலியாவின் சபதம். சத்தியாக்கிரக உதயம். சாத்விக எதிர்ப்பினின்று அது வேறுனது.

*1906* — அக்டோபர் — இங்கிலாந்துக்குச் சென்ற முதல் இந்திய தூதுகோஷ்டி.

*1906* — நவம்பர் *8* — காலனி மந்திரி லார்டு எல்ஜின், இந்தியா மந்திரி (லார்டு) ஸ்ரீ மார்லி இவர்களுடன் பேட்டி; தாதாபாய் நவ்ரோஜியின் வாயிலாக இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் பிரிட்டிஷ் கமிட்டியுடன் தொடர்பு; அக்கமிட்டி செய்த உதவி. தென்னுப்பிரிக்கா இந்தியக் கமிட்டியை நிறுவியது.

*1906* — நவம்பர் *29* — தூதுகோஷ்டிக்கு மிகவும் துணைபுரிந்த ஆங்கில இளைஞர் ஸைமண்ட்ஸின் மரணம்.

*1906* — டிசம்பர் *2* — தூதுகோஷ்டி தென்னுப்பிரிக்காவுக்கு நம்பிக்கையுடன் திரும்பியது.

1907 — மார்ச்சு 21 — டிரான்ஸ்வாலில் பொறுப்பாட்சி ஏற்பட்டு, புதிய பார்லிமெண்டில் ஆசியாக்காரர் பதிவுச் சட்டம் நிறைவேற்றம்; பழைய சட்டத்தின் புதிய உருவமே இது. அதன்படி ஜூலை இறுதிக்குள் இந்தியர்கள் தம்மைப் பதிவு செய்து கொள்ளவேண்டும்.

1907 — ஜூலை 1 — இந்தச் சட்டம் அமலுக்கு வந்தது; பிரிட்டோரியாவில் முதன்முதல் பதிவு ஆவணங்கள் திறக்கப்பட்டன.

1907 - அக்டோபர் 25 - 'கறுப்பு'ச் சட்டத்தை எதிர்த்து டிரான்ஸ்வாலில் சத்தியாக்கிரக இயக்கம் ஆரம்பம்.

1907 — நவம்பர் 11 — சத்தியாக்கிரகிகள் கைது; ஜெர்மிஸ்டனில் பண்டித ராமசுந்தரர் முதல் சத்தியாக்கிரகக் கைதி.

1907 — டிசம்பர் 25 — நீதி மன்றத்தில் ஆஜராகும்படி காந்திஜிக்குச் சம்மன்.

1907 — டிசம்பர் 28 — டிரான்ஸ்வால் எல்லையைவிட்டுப் போகவேண்டுமென்று காந்திஜிக்கு மாஜிஸ்ட்ரேட் ஜார்டனின் உத்தரவு.

1908 — ஜனவரி 10 — அவர் மறுத்தது; அதற்காக அவருக்கு இரண்டு மாதச் சிறைவாசம்.

1908 — ஜனவரி 30 — ஜெனரல் ஸ்மட்ஸைச் சந்தித்துப் பேசக் காந்திஜிக்கு அழைப்பு. முதல் ராஜி ஒப்பந்தம்; சத்தியாக்கிரகக் கைதிகள் விடுதலை. இந்தியர் தம்மைப் பதிவு செய்துகொண்டால் சட்டத்தை ரத்து செய்வதாக டிரான்ஸ்வால் சர்க்கார் தந்த உறுதி.

1908 — பிப்ரவரி 10 — விரல் முத்திரை தருவது இந்தியர்களைக் காட்டிக் கொடுப்பதாகுமென்று பட்டாணியர்களின் வஞ்சினம்; மீர் ஆலம் காந்திஜியை அடித்துக் கொல்ல முயன்றது; ஸ்ரீ டோக்கின் வீட்டில் காயத்துக்கு அவர் சிகிச்சை பெற்றது. தீங்கிழைத்தவர் மீது எந்த நடவடிக்கையும் அவர் தொடராமல் இருந்தது.

1908 — ஜூன் 24 — சர்க்கார், கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத் தவறியது.

1908 — ஜூலை 8 — ஜொஹன்னஸ்பர்க்கில் எல்லையைத் தாண்டி வந்ததற்காக ஸோராப்ஜி கோர்ட்டில் ஆஜரானர்.

1908 — ஜூலை 9 — காந்திஜி அவருக்காக வாதாடியது; ஸோராப்ஜி விடுவிக்கப்பட்டார்.

1908 — ஜூலை 10 — ஏழு திங்களுக்குள் ஸோராப்ஜி டிரான்ஸ்வாலை விட்டுச் செல்ல மாஜிஸ்டிரேட் உத்தரவு.

1908 — ஜூலை 22 — சாம்ராஜ்ய சர்க்காருக்கும் லார்டு செல்போர்னுக்கும் முறையிடத் தந்தி; வர இருக்கும் கடுமையான ஆசியா மசோதாவுக்கு அரசர் அனுமதி தரக்கூடாதென விண்ணப்பம்.

1908 — ஆகஸ்டு 8 — சத்தியாக்கிரகப் படையுடன் தாவூத் சேட் டிரான்ஸ்வால் எல்லைக்கு வந்தது; எல்லோரும் கைதியானது.

1908 — ஆகஸ்டு 22 — இந்தியர் மறுபடியும் தம்மைப் பதிவு செய்துகொள்ளவேண்டுமென டிரான்ஸ்வால் சட்டசபையில் சட்டம் அமலாகியது.

1908 — ஆகஸ்டு 28 — சத்தியாக்கிரகிகள் மீண்டும் பிரிட்டோரியாவில் கைது

1908 — ஆகஸ்டு 30 — பிரிட்டோரியாவில் நடந்த ஒரு கூட்டத்தில் 200 பதிவுப் பத்திரங்கள் தீக்கிரை.

1908 — ஆகஸ்டு 31 — மீண்டும் டிரான்ஸ்வால் எல்லைக்குள் புகுதல்.

1908—செப்டம்பர் 7 — காந்திஜி வால்க்ஸ்ரஸ்ட்டில் கைது; ஒரு வாரம் பொறுத்து வழக்கு விசாரணை. இரண்டு மாதம் சிறைத்தண்டனை.

1908—நவம்பர் 6-14— இந்தியர்கள் பல இடங்களில் கைது.

1908 — டிசம்பர் 23 — காந்திஜி விடுதலையானர்.

1909 — ஜனவரி 9 — டர்பனில் ‘மெர்க்குரி’ பத்திரிகை நிருபருடன் காந்திஜி பேட்டி.

1909 — ஜனவரி 15 — காந்திஜி நேட்டாலிலிருந்து வால்க்ஸ் ரஸ்ட்டுக்குப் போகும்போது மூன்று தடவை கைதானது; மீண்டும் மூன்று மாதச் சிறைத் தண்டனை; ஹமீதியா, உமர்ஜி ஸாலே, டேவிட் எர்னஸ்ட் முதலியோருக்கும் மூன்று மாதச் சிறைத் தண்டனை.

1909 — ஜனவரி 29 — குருகர்ஸ்டார்ப்பில் மீண்டும் சிறை புகுவதான தீர்மானத்தை இந்தியர்கள், ஒரு கூட்டத்தில் நிறைவேற்றியது.

1909 — பிப்ரவரி 6 — மிஸ்டர் ஹோஸ்கன் லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையில் எழுதிய கடிதம்.

1909 — பிப்ரவரி 10 — ரொடீஷியாவில் ஆசியச் சட்டம் அரசர் சம்மதம் பெற்றது.

1909 — பிப்ரவரி 12 — பார்ஸி ருஸ்தம்ஜிக்கு மீண்டும் ஆறு மாதம் சிறை.

1909 — மார்ச்சு 6 — புளும்பாண்டீன், மற்றும் பல இடங்களில் இந்தியர் குடியேற்றத்தைக் குறித்து வெள்ளையரின் கிளர்ச்சி.

1909 — மார்ச்சு 12 — பிரிட்டோரியாவில் காந்திஜியின் கைகளுக்கு விலங்கிட்டு நீதி மன்றத்தில் ஆஜர் செய்யப்பட்டது.

1909 — மார்ச்சு 20 — டெலகோவா விரிகுடாவில் சத்தியாக்கிரகிகளை நாடு கடத்தத் தீவிர முயற்சி.

1909 — ஏப்ரல் 5 — சாம்ராஜ்ய சர்க்காரின் 'ப்ளூ புக்' அறிக்கை.

1909 — ஏப்ரல் 30 — காச்சலியாவும் மற்றவரும் விடுதலையாதல்.

1909 — மே 24 — காந்திஜிக்கு நான்காவது தடவை மூன்று மாதச் சிறைத்தண்டனை.

1909 — ஜூன் 7 — ஜெர்மிஸ்டன் வெள்ளையரின் இலக்கியப் பேச்சரங்கில் காந்திஜி ஆற்றிய 'சத்தியாக்கிரக நெறி' என்ற சொற்பொழிவு.

1909 — ஜூன் 16 — ஜொஹன்னஸ்பர்க்கில் இந்திய சமூகத்தினர் கூடிக் காச்சலியா முதலானவர்களை இந்தியாவுக்கு அனுப்பப் பிரஸ்தாபம்.

1909 — ஜூன் — இங்கிலாந்துக்குச் சென்ற இரண்டாவது தூதுகோஷ்டியில் காந்திஜி.

1909 — ஜுலை 7 — சிறையிலிருந்து விடுதலையானதும் நாகப்பனுடைய மரணம்.

1909 — செப்டம்பர் 16 — தூது கோஷ்டி லார்டு குருவுடன் பேட்டி.

1909 — நவம்பர் — தூதுகோஷ்டி தென்னுப்பிரிக்கா திரும்புதல்; கடல் பிரயாணத்தின்போது 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலைக் காந்திஜி குஜராத்தியில் இயற்றியது.

1909 — டிசம்பர் 1 — சத்தியாக்கிரக இயக்கத்தினருக்கு வள்ளல், சர் ரத்தன் டாட்டா தந்த 25,000 ரூபாய் நன்கொடை.

1910 — மே 30 — ஜொஹன்னஸ்பர்க்குக்கு அருகில் டால்ஸ்டாய் பண்ணையை காந்திஜி அமைத்தது.

1910 — அக்டோபர் 16 — வெளியேற்றப்பட்ட சமயம் டெலகோவா விரிகுடாவில் கப்பலில் நாராயணசாமி மரணம்.

1910 — நவம்பர் — டீப்க்லூப் சிறை அதிகாரிகள் கொடுமையாக நடத்தியதால் சத்தியாக்கிரகிகள் உண்ணுவிரதம் கொண்டது.

1912 — — ஐரோப்பிய உடை பூணுவதையும் பால் அருந்துவதையும் காந்திஜி விட்டொழித்து 'நீதி தருமம்' என்ற நூலை எழுதியது.

1912 — பிப்ரவரி — குடியேற்ற நிறுத்த மசோதா யூனியன் கெஜெட்டில் வெளியாதல்.

1912 — ஏப்ரல் 25 — அந்த மசோதா பார்லிமெண்டில் நிறுத்தி வைக்கப்பட்டது.

1912 — அக்டோபர் 22 - தென்னுப்பிரிக்காவில் ஸ்ரீ கோகலே. ஜொஹன்னஸ்பர்க்கில் அவர் நிகழ்த்திய பிரசித்திபெற்ற சொற்பொழிவு. மராட்டியில் அவர் பேசியது. டிரான்ஸ்வால் அரசாங்கத்து மந்திரிகளை அவர் சந்தித்தல். இந்தியர்களுக்குக் கோகலே தந்த நம்பிக்கை. டர்பனில் அவரைக் கௌரவிக்க ஐரோப்பியர் நடத்திய விருந்து உபசாரம்.

1912 — நவம்பர் 17 — கோகலே இந்தியாவுக்குத் திரும்புதல்.

*1913*— —உள்ளத் தூய்மைக்காகக் காந்திஜி ஒரு வாரம் பட்டினி இருத்தல்; பண்ணையில் எவரோ நெறி தப்பியதற்காக நான்கு மாதம்வரை அவர் ஒரு வேளை உணவு கொள்ளுதல்.

*1913*—மார்ச் *14* —இந்தியரின் மணமுறை செல்லாதென நீதிபதி ஸெயர்ஸ், கேப் உயர்நீதி மன்றத்தில் தந்த தீர்ப்பு; இதனால் இந்திய சமூகத்திற்குப் பெரிய அதிர்ச்சி. இதை எதிர்த்துப் பெண்களும் சிறை புக உறுதிகொண்டது.

*1913*—செப்டம்பர் *23*-போனிக்ஸ் கோஷ்டியைச் சேர்ந்த பெண்களுக்கு மூன்று மாதச் சிறைத் தண்டனை. கஸ்தூரிபாய் காந்தியும் சிறை புகுந்தார்.

*1913*—அக்டோபர் *21*—டிரான்ஸ்வாலைச் சேர்ந்த பெண்களுக்கும் மூன்று மாதச் சிறைத் தண்டனை; போனிக்ஸ் கோஷ்டியுடன் சிறையில் வைக்கப்பட்டனர். சுரங்கத் தொழிலாளர்களிடையே இந்தக் கிளர்ச்சி பரவியது.

*1913* — நவம்பர் *6* —மூன்று பவுன் தலை வரியை ரத்து செய்வதான உறுதிமொழியை அரசாங்கம் மீறவே, மீண்டும் சத்தியாக்கிரகம் ஆரம்பம்; *2,073* ஆண்கள், *127* பெண்கள், *57* சிறுவர்களைக்கொண்ட இந்தியர்கள் எல்லையைத் தாண்டுவதற்கான ஓர் அணிவகுப்பு யாத்திரையைக் காந்திஜி நடத்தியது. அவர் கைதாகி ஜாமீனில் தண்டனை விடுபட்டது.

*1913* — நவம்பர் *8* —வேறு குற்றங்களுக்காகவும் காந்திஜி மீண்டும் கைது: ஜாமீனில் விடுதலை.

*1913* — நவம்பர் *9* —மீண்டும் காந்திஜி கைது.

*1913* — நவம்பர் *11* —அவருக்கு ஒன்பது மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

*1913* — நவம்பர் *14* —மீண்டும் மூன்று மாதச் சிறைத் தண்டனை; சிறையில் அவருக்கு ஏற்பட்ட கடினமான அனுபவங்கள்.

1913 — நவம்பர் 15 — கால்லன்பாக்குக்கும் போலக்குக்கும் சிறைத் தண்டனை.

1913 — டிசம்பர் 18 — மூவரும் நிபந்தனையின்றி விடுவிக்கப் பட்டனர். காந்திஜி சிறை மீண்டதும் ஒரே வேளை உணவு கொள்ளுதல்; கூலி யாளின் உடையை அணிதல்.

1913 — இறுதி — லார்டு ஹார்டிஞ்சு தென்னாப்பிரிக்க சத் தியாக்கிரகிகளின் உறுதியைப் பாராட் டிப் பேசியது; தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் இது பரபரப்பை மூட் டியது.

1914 — ஜனவரி 5 — டர்பன் சிறையில் வயதான சத்தியாக் கிரகி ஹர்பத் சிங்கின் மரணம்.

1914 — ஜனவரி 21 — ஜெனரல் ஸ்மட்ஸுடன் காந்திஜியின் கடிதத் தொடர்பு; ஸ்ரீ ஆண்ட்ரூஸும் காந்திஜியும் பன்முறை ஸ்ரீ ஸ்மட்ஸைச் சந்தித்து, செய்துகொண்ட உடன்படிக் கையின்படி சத்தியாக்கிரக இயக்கம் நிறுத்தம்.

1914—பிப்ரவரி 22 — கடுங்காய்ச்சலுடன் மாரிட்ஸ்பர்க் சிறை யிலிருந்து வெளிவந்த, வீரம்மிகுந்த தமிழ் பெண்மணி வள்ளியம்மாளின் மரணம்.

1914 — ஜூலை 18 — காந்திஜி தம் மனைவியுடன் தென்னாப் பிரிக்காவைவிட்டு இந்தியாவுக்குச்செல்ல இங்கிலாந்து மார்க்கமாகப் பயண மாதல்.

# 2

# டால்ஸ்டாய்க்குக் காந்திஜியின் கடிதங்கள்

## (1)

வெஸ்ட்மின்ஸ்டர் பாலேஸ் ஹோட்டல்,
4, விக்டோரியா ஹாஸ்டல்,
லண்டன் - W. C.
*10—11—1909.*

அன்புள்ள ஐயா,

'ஹிந்துவுக்கு எழுதிய ஒரு கடிதம்' என்பதைப் பற்றியும், தங்களுக்கு நான் எழுதிய கடிதத்தில் கண்டிருந்த விஷயங்களைப் பற்றியும் ரிஜிஸ்தர் தபாலில் எனக்கு வந்த தங்கள் பதிலுக்காக என் வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். தங்களுக்கு உடல்நலக் குறைவென்று கேள்விப்பட்டு, தங்கள் கடிதத்தை நான் பெற்றுக்கொண்டதைக் குறித்து ஒரு பதில் எழுதித் தொந்தரவு தர விரும்பவில்லை. என் நன்றியைத் தெரிவிப்பது வெறும் உபசாரமே தவிர வேறில்லை. ஆனால், மிஸ்டர் அயில்மர் மாட், தாங்கள் இப்போது உடல் நலத்துடன் இருப்பதாகவும், வழக்கப்படி கடிதப் போக்குவரத்தைக் காலை நேரங்களில் கவனித்து வருவதாகவும், நான் அவரைச் சந்தித்தபோது கூறினார். இது எனக்கு ஒரு நல்ல செய்தி. தங்கள் போதனையின்படி மிக முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களைக் குறித்து மேலும் எழுதுவதற்கு இது எனக்குத் துணிவைத் தருகிறது. இப்போது தென்னாப்பிரிக்காவில் இருக்கும் என் நண்பரான ஆங்கிலேயர் ஒருவர், என் வாழ்க்கைபற்றி எழுதியுள்ள நூலின் ஒரு பிரதியை இத்துடன் தங்களுக்கு அனுப்பி இருக்கிறேன். அது, நான் ஈடுபட்டிருக்கும் ஒரு போராட்டத்தைப் பற்றியதாகும். அதற்காக என் வாழ்வையே அர்ப்பணம் செய்துவிட்டேன். அதற்குத் தங்களுடைய தீவிர அக்கறையையும் ஆதரவையும் பெற எப்போதும் காத்திருக்கும் நான் இதை அனுப்புவதால் தவறொன்றும் செய்யவில்லை என்று நினைக்கிறேன்.

டிரான்ஸ்வால் இந்தியர்கள் முனைந்துள்ள இப்போராட்டம், இன்று உலகத்திலேயே பெரிதென்பது என் கருத்து. அதன் இலக்கும்,அந்த இலக்கை அடையும் வழிகளும் உன்னதமானவை என்பதாலேயே, இதில் பங்குகொண்டிருப்பவர் பாதி பேருக்கு

மேல் தம் சுகத்தைப் பாராமல், தம் கொள்கையைக் கடைப் பிடிக்க எத்தனையோ கஷ்டங்களுக்கும், எத்தனையோ சோதனை களுக்கும் உள்ளாகி இருக்கின்றனர். நான் விரும்புவது போல் இந்தப் போராட்டத்திற்குப் பெரியதோர் விளம்பரம் செய்ய என்னால் இயலவில்லை. தாங்கள் இன்று உலகம் போற்றும் பெருந்தகையானதால், ஸ்ரீ டோக்கின் நூலில் கண்டிருக்கும் உண்மைகளைக் குறித்துத் திருப்தி ஏற்பட்டிருக்குமானால், அந்த உண்மைகளைக் கொண்டு நான் வந்துள்ள முடிவுகள் நியாய மானவையென்று தங்களுக்குத் தோன்றினால், இந்தக் கிளர்ச் சியை நாடறியச் செய்யத் தங்களுக்குள்ள செல்வாக்கை உப யோகிக்க முடியுமா? தங்களுக்குத் தோன்றும் முறையில் இது கைகூடுமாயின் தருமம் வெற்றி பெறுவதோடு, அதருமம், துவேஷம், பொய்ம்மை இவற்றை அன்பும் உண்மையும் வெல்லும் என்பதைக் காட்டும். இந்தியாவின் கோடிக்கணக்கான மக்க ளுக்கும், உலகில் மற்றப் பகுதியில் உள்ள ஒடுக்கப்பட்டோ ருக்கும் இது சிறந்த படிப்பினையாக அமையும். வேறு இடத்தில் இராது போனாலும், இந்தியாவிலாவது இது பலனைத் தரும் என்று எண்ணுகிறேன். பலாத்காரச் சக்திகளை முறியடிக்கக் கடைசிவரை விடாமல் இப்போராட்டத்தை நடத்தினால் - அது முடியுமென்றுதான் எனக்குப் படுகிறது–வெற்றியைக் குறித்து எனக்குத் துளியேனும் ஐயம் இல்லை. தாங்கள் கூறியவாறு எங்களுக்கு அளிக்கும் ஒரு தைரியம் எங்கள் உறுதிப்பாட்டை எவ்வளவோ வலுவாக்கும்.

இந்தப் பிரச்னைக்கு முடிவு காண நடந்த ஒப்பந்தப் பேச்சு, நடைமுறையில் பலன் அளிக்காது போயிற்று. என் சகாவுடன் நான் இந்த வாரமே தென்னாப்பிரிக்காவுக்குத் திரும்புகிறேன். சிறைவாசம் அனுபவிக்கவேண்டியதுதான் நான். இந்தப் போராட் டத்தில் கலந்துகொண்டு என் மகன் ஆறு மாதக் கடுங்காவல் சிறைவாசம் செய்யும் நற்செய்தியைத் தங்களுக்குக் கூறுகிறேன். இது நான்காவது முறை அவன் சிறை சென்றது. இதற்குத் தாங் கள் தயை கூர்ந்து பதில் கடிதம் போடுவதாக இருந்தால் பெட்டி நெ. 6522 ஜொஹன்னஸ்பர்க் தெ. ஆ. என்ற விலாசத்திற்கே போடவும்.

தாங்கள் உடல் நலத்துடன் இருப்பீர்களென நம்புகிறேன்.

கௌன்ட் லியோ டால்ஸ்டாய்,
யாஸ்னா போல்யானா,
ருஷியா.

இப்படிக்கு,
தங்கள் பணிவுள்ள ஊழியன்,
மோ. க. காந்தி.

(2)

மோ. க. காந்தி,
அட்டர்னி.

21-24, கோர்ட்டு விடுதி,
4-ஆம் ஏப்ரல், 1910,
டிரான்ஸ்வால்-தென்னுப்பிரிக்கா.

கௌன்ட் லியோ டால்ஸ்டாய்,
யாஸ்ஞ போல்யாஞ.
ருஷியா.

அன்புடையீர்,

நான் லண்டனில் தாற்காலிகமாகத் தங்கியிருந்தபோது தங்களுடன் கடிதத் தொடர்பு வைத்துக்கொண்டிருந்தது தங்களுக்கு நினைவிருக்கும். தங்கள் கொள்கையைப் பின்பற்றும் எளியனுன நான் எழுதிய ஒரு சிறு நூலை இத்துடன் அனுப்பியுள்ளேன். இது என் குஜராத்தி மூல நூலிலிருந்து என்னுடைய சொந்த மொழிபெயர்ப்பாகும். எதிர்பாராத வகையில் மூலநூல் இந்திய அரசாங்கத்தால் பறிமுதல் செய்யப்பட்டது. ஆகவே, நான் இந்த மொழிபெயர்ப்பை வெளியிடத் துரிதப்பட்டேன். தங்களுக்கு யாதொரு தொந்தரவையும் கொடுக்கக்கூடாதென்பது என் எண்ணம். உடல் நலத்துடன் இருந்து, பொழுதும் இருப்பின் இச் சிறு நூலைப் படிக்கவும். இதைக் குறித்துத் தங்கள் மதிப்புரை எனக்குக் கிடைக்குமாஞல், அதை நான் பெரிதும் போற்றுவேன். தாங்கள், எனக்கு வெளியிட அனுமதி தந்த தங்கள் கடிதத்தின் அச்சுப் பிரதிகளில் சில அனுப்பியிருக்கிறேன். இந்திய மொழிகளில் ஒன்றில் அது ஆக்கப்பட்டிருக்கிறது.

இப்படிக்கு,
தங்கள் ஊழியன்,
மோ. க. காந்தி.

(3)

21-24, கோர்ட்டு விடுதி,
ஜொஹன்னஸ்பர்க்,
15 ஆகஸ்ட், 1910.

அன்புடையீர்,

எனக்கு உற்சாகமும், உளமார்ந்த அன்பும் தரும் தங்கள் மே எட்டாம் தேதிக் கடிதத்திற்காக நான் மிகவும் கடப்பாடுடையேன். எனது சிறு நூலான 'இந்திய சுயராஜ்யம்' என்பதைப்

பொதுப்படையாகத் தாங்கள் உவப்பதைப் பெரிதாக மதிக்கிறேன். சமயம் வாய்க்கும்போது இந்நூலுக்கு விரிவானதொரு மதிப்புரை தருவீர்களென எதிர்பார்க்கிறேன். அவ்வாறு செய்வதாகத் தங்கள் கடிதத்திலும் எனக்கு உறுதி கூறியிருக்கிறீர்கள்.

டால்ஸ்டாய் பண்ணையைக் குறித்து ஸ்ரீ கால்லன்பாக் தங்களுக்கு எழுதியிருக்கிறார். அவரும் நானும் பல வருடங்களாக நண்பர்கள். 'மை கன்பஷென்' (நான் ஒப்புக்கொள்ளுவது) என்ற தங்கள் நூலில் மிகத் தெளிவாக விவரித்துள்ள அனுபவங்களை அவர் தம் வாழ்வில் கண்டவரென நான் கூற முடியும். வேறு எந்த நூலும், இவ்வளவு அவர் உள்ளத்தில் பதியவில்லை. உலகிற்குத் தாங்கள் காட்டிய லட்சியத்தை இன்னும் கடைப் பிடிக்கவே, என்னுடன் கலந்து ஆலோசனை செய்த பிறகு, தம் பண்ணைக்குத் தங்கள் பெயரை வைக்கத் துணிந்தார் அவர்.

சாத்விக எதிர்ப்பாளர்கள் உபயோகித்துக்கொள்ளத் தம் பண்ணையில் இடம் தந்த அவருடைய தாராள மனப்பான்மையைப் பற்றி, இத்துடன் நான் அனுப்பும் 'இந்தியன் ஒப்பினியன்' பத்திரிகையின் இதழ்கள் பூரணமான தகவலைத் தரும்.

தங்களுக்குப் பெருஞ்சுமையாக இதுபோன்ற விஷயங்களை நான் கூறி இருக்கக்கூடாது; ஆனால் டிரான்ஸ்வாலில் இப்போது நடைபெறும் சாத்விகப் போராட்டத்தில் தாங்கள் விசேஷ அக்கறை எடுத்துக் கொண்டிருப்பதால் இவ்வாறு செய்தேன்.

இங்ஙனம்,

கௌன்ட் லியோ டால்ஸ்டாய் — தங்கள் நம்பகமான ஊழியன்,

யாஸ்னு போல்யானு. — (ஒப்பம்) மோ. க. காந்தி.

# 3

# ஸ்ரீ போலக்குக் காந்திஜி எழுதிய கடிதம்

[தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரக காலத்தில் போனிக்ஸ் ஆசிரமத்தைக் காந்திஜி மிக முக்கியமாகக் கருதினர். அவர் தாம் சிறைப்பட்டிருந்த காலத்தில் தம் மகனுக்கு எழுதிய கடிதத்திலும் போனிக்ஸை நிர்வகித்து வருவதே முக்கியமான வேலை என்று குறிப்பிட்டார். ஸ்ரீ ஹெச். எஸ். எல். போலக்குக்குக் காந்திஜி 1909 ஏப்ரல், 26ஆம் தேதி எழுதிய கடிதம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. போனிக்ஸைப் பற்றி அவர் கொண்டிருந்த சிரத்தையையும், அதற்காக எந்தத் தியாகத்திற்கும் தயாராகயிருந்தார் என்பதையும் இக்கடிதம் காட்டுகிறது]

கைதி எண் : 777,
பிரிட்டோரியா சிறை,
*26—4—1909*

எனது அன்புள்ள ஹென்ரி (போலக்),

பணப் பிரச்னையைத் தவிர வேறு எதுவும் எனக்கு அவ்வளவாகக் கவலை தரவில்லை. போனிக்ஸ் கடன்பட்டிருப்பது என்பதையே நான் வெறுக்கிறேன். ஆபீஸ் கடன் என்பதும் அதேதான். நகைகள் மாத்திரமேயன்றி, இங்கிலாந்திலிருந்து நான் வாங்கி வந்தவையான சில சட்டப் புத்தகங்கள், ரிபோர்டுகள் ஆகியவைகளையும் தியாகஞ் செய்துவிடவேண்டியதே. இதே போல ஆபீஸிலிருக்கும் பெரிய இரும்புப் பெட்டி, சுழலும் அலமாரியிலிருக்கும் (ஆங்கிலக்) கலைக்களஞ்சியப் புத்தகங்கள் ஆகியவைகளையும் தியாகஞ் செய்துவிட வேண்டும். சட்ட புத்தகங்களை ஸ்ரீ பிளேபோர்டு, பென்ஸன் அல்லது உடல் நலத்துடன் இருந்தாரானல் காட்பிரே ஆகியவர்களிடம் காட்டவும். இவைகள் எல்லாவற்றையுமோ அல்லது இவற்றில் சிலவற்றையோ இவர்களில் யாருமே வாங்கிக்கொள்ள முடியாவிட்டால், ஒரு ஜாபிதாவை எல்லோருக்கும் நீங்கள் அனுப்பலாம். வாங்கிய விலையில் 10 சத விகிதம் குறைத்து அவற்றை விற்க வேண்டும். இரும்புப் பெட்டி குறைந்தது 15 பவுனுக்காவது விற்கும். (கர்ட்டிஸின்) கலைக்களஞ்சியத்திற்குக் காட்பிரே பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. கர்ட்டிஸ் என்னிடம் 5 பவுன் வாங்கியிருந்தார் என்பது உங்களுக்குத் தெரியும். கணக்கில் இத்தொகை காணப்படவில்லை. இதை இப்பொழுது வசூலித்தாகவேண்டும்.

மணிலாலிடமிருந்து எனக்கு ஒரு நீண்ட கடிதம் வந்தது; அதன் நடை மோசமாக இல்லை. ஸ்ரீமதி பைவெல் (ஸ்ரீமதி வெஸ்டின் தாயார்), தம் பேத்தியைக் குறித்துப் பெருமைப்படுகிறார் எனக் காண்கிறேன். அவளே மிகுந்த அழகானவள் என்று கருதுகிறாள்....போனிக்ஸிலேயே இருப்பவன் என்று கூறவேண்டியவனான வால்டோ (ஸ்ரீ போலக்கின் மகன்) மற்றவர்கள் பின்பற்றுவதற்கு ஓர் உதாரணமானவன். ஆனால், அப்படிப் பின்பற்றுவது என்பது கஷ்டமான சாதனையே. கர்ட்டிஸின் சொற்பொழிவு எப்படி நடந்தது, எங்கே நடந்தது என்பதை அறிய விரும்புகிறேன். பம்பாயிலிருந்து ஏதாவது புத்தகங்கள், அச்சு எழுத்துக்கள் கொண்டு வந்திருக்கிறாரா? டக்கர் தம்பதிகள் சகன்லாலுடன் தங்கியிருக்கிறார்கள் என அறிகிறேன். வாய் பேசாமல் கஷ்டத்தைச் சகித்துக்கொள்ளுவதில் மில்லி (ஸ்ரீமதி போலக்) போன்ற பழக்கமுடையவர் அவர். ஆனால், கஷ்டம் இருவரையுமே பாதிக்கிறது. ஆகையால், அவர்கள் நண்பர்களின் நிலைமையைச் சங்கடத்திற்குள்ளாக்கிவிடுகின்றனர். இதனாலேயே தமது சக்திக்கு மிஞ்சி சகன்லால் காரியங்களைச் செய்து விடக்கூடாது என்பது என் கவலை. அவருடைய தாயார் கூறுவதுபோல, பசுமையான மரத்தின் நிழலில்கூட வெந்து போய்விடுவது அவர் சுபாவம். வளர்ந்த பையனாக நான் முதன் முதலில் அவரைப் பார்த்தது முதற்கொண்டே இதுவே அவருடைய குணமாக இருந்து வந்திருப்பதைக் காண்கிறேன். என் கருத்தை மாற்றிக் கொள்ளுவதற்கு எந்தவிதக் காரணமும் இருப்பதாகவும் தெரியவில்லை. ஆகையால், அதிக சிரமப்படுத்திக்கொள்ள வேண்டாம் என்று அவரிடம் தயை செய்து சொல்லுங்கள். போனிக்ஸில் இருப்பவர்கள் எல்லோருமே டால்ஸ்டாயின் 'வாழ்க்கையையும் சுவானுபவத்தையும்' படிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். இவை இரண்டும் ஆன்மாவைக் கிளறிவிடும் நூல்கள். இவற்றை இரண்டே நாட்களில் சுலபமாகப் படித்துவிடலாம். நான் வாங்கி வந்த கவியின் (ஸ்ரீ ராமசந்திராவின்) இருபகுதிகளையும் குஜராத்திகள் படிக்கவேண்டும். மாலையில் நடக்கும் அரைமணிப் பிரார்த்தனை நேரத்தில் 10 நிமிடங்களையும், ஞாயிற்றுக்கிழமை நடக்கும் ஒரு மணிப் பிரார்த்தனையில் அரை மணியையும் இதற்காகச் செலவிடலாம். அவருடைய வாழ்க்கையையும் அவர் எழுதியிருப்பவைகளையும் பற்றி நான் சிந்திக்கச் சிந்திக்க, அவர் காலத்தில் அவரே சிறந்த இந்தியர் எனக் கருதுகிறேன். மத நோக்கோடு பார்க்கும்போது டால்ஸ்டாயைவிட மிக உயர்வாக இவரை நான் கருதுகிறேன். நான் படித்த புத்தகங்கள் எனக்கு அதிக மன ஆறுதலை

அளித்தன. அவைகளைத் திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். ஆங்கில நூல்களைப் பொறுத்தவரையில் எண்ணத்தின் தூய்மையில் டால்ஸ்டாயின் நூல்கள் இணையற்றவை என்பது என் அபிப்பிராயம். வாழ்க்கையின் லட்சியத்தைக் குறித்துக் கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கம் பதில் சொல்ல முடியாததாவதோடு அறிவதற்கும் எளிதானது. கவியும், டால்ஸ்டாயும் தாங்கள் போதித்தபடியே நடந்தும் வந்தனர். கவி தமக்குள்ள சிறந்த அநுபவங்களைக்கொண்டு எழுதுகிறார்.

ரவிசங்கர் ஜகஜீவன் கம்பெனிக்கு எழுதி, அவர்களுக்கு நான் எவ்வளவு பாக்கி தரவேண்டும், மாதந்தோறும் என் சகோதரிக்கு எவ்வளவு அனுப்புகிறார்கள் என்பதை எனக்குத் தெரிவிக்கும்படி சகன்லாலிடம் அறிவிக்கிறீர்களா?

இயற்கையாகவே தன் படிப்பு விஷயத்தில் மணிலால் ஏதோ அதிருப்தியுடன் இருக்கிறான். இது தவிர்க்க முடியாதது. பரீட்சிக்கும் கட்டத்திலேயே நாம் இப்பொழுது இருக்கிறோம்; இதில் கஷ்டப்படக்கூடியவர்கள் முதலில் மாணவர்களே. என்றாலும் அவனுக்குக் கொடுக்கப்பட்டிருப்பவற்றை அவன் கற்றுக் கொள்ளட்டும். ஒரு நாளைக்கு அவனைப் பரீட்சை செய்து பார்க்க வேண்டும் என்று இருக்கிறேன். க்ஷேத்திர கணிதப் பாடத்தை நன்றாகப் படித்திருப்பதாகவே எண்ணியிருந்தான். ஆனால், அதில் அவனுக்குத் தேர்ச்சி போதாது. ஒழுங்கான, விடாமுயற்சியோடு கூடிய பழக்கங்களில் அவன் பழகட்டும்; பிறரை எதிர்பார்க்காமல் தானே வாழவும் கற்றுக்கொள்ளட்டும். நானே கொஞ்சம் பாடங்களை அவனுக்குச் சொல்லிக் கொடுக்க என்னால் இனி முடியும் என்று நம்புகிறேன். தமிழ்ப் பாடங்களை மாணிக்கத்தினிடம் சிறுவர்கள் கற்றுக்கொள்ளவேண்டும். போனிக்ஸில் கிட்சன் ஒருநாள் இருந்தது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். அங்கே தங்கியது குறித்து அவருக்கு மகிழ்ச்சிதானா என்பதைப் பற்றி மணிலால் எழுதவில்லை. அவர் அங்கே சுகமாக இருப்பதற்கு எல்லா வசதிகளும் செய்துகொடுக்கப்பட்டன என்றே நம்புகிறேன். மகன்லால் இப்பொழுது ஆங்கிலத்தில் பல செய்யுட்களை மனப்பாடஞ் செய்துகொண்டிருக்கிறார். இனிப் பல தமிழ் வாக்கியங்களையும் அவர் மனப்பாடம் செய்துகொள்ள வேண்டுமென அவருக்கு யோசனை கூறுகிறேன். சாஞ்சி சந்தோஷமாக இருக்கிறாளா? அல்லது ஹரிலாலிடமிருந்து பிரிந்துவிட்டதைக் குறித்துக் கவலைப்பட்டுக் கொண்டே இருக்கிறாளா? ஸ்ரீமதி காந்தி இப்பொழுது வீட்டு வேலைகளைக் கவனிக்கிறாளா? போனிக்

ஸில் இருப்பவர்களைக் கவனித்துக் கொண்டதற்காக டாக்டர் நாஞ்சிக்கு என் நன்றியைத் தெரிவிக்கக் கோருகிறேன். அவருக்கு நான் கடமைப்பட்டிருப்பதை அவர் அதிகரித்துக் கொண்டே போகிருர். பள்ளிக்கூடக் கட்டட வேலை எதுவரை நடந்திருக்கிறது? இந்நாட்டில் இன்னும் சிறிது காலம் இருப்ப தெனச் சுவாமிஜி (சங்கரானந்தஜி) முடிவு செய்திருப்பது குறித்து மகிழ்ச்சி. அவரைச் சந்திக்கும்போது பூணூலைக் குறித்து அவ ரிடமிருந்து தெரிந்துகொள்ளலாம் என நம்புகிறேன். ரெயிலில் அவருக்கு நான் பீட்டர்மாரிட்ஸ்பர்க் விலாசத்திற்கு எழுதிய கடிதம் அவருக்குக் கிடைத்திருக்கும். ஹிந்துக்களுக்கும் முஸ் லிம்களுக்கும் இடையே இப்பொழுது இருந்துவரும் நல்லெண் ணத்தை வளர்க்க அவர் எல்லா முயற்சிகளையும் செய்யவேண்டும் என்பதே எனது ஆர்வம். ஆனந்தலால் தாம் அளித்த வாக்குப் படி நடந்து, படிப்பைக் கைவிடாமல், தோட்டத்தையும் புன்முறு வல் பூக்கச் செய்வார் என எதிர்பார்க்கிறேன். ஏதாவது இடை யூறு இருந்தாலும் பொருட்படுத்தாமல் ஞாயிறு பிரார்த்தனை யைத் தொடர்ந்து நடத்துமாறு வெஸ்டிடம் கூறுங்கள். ஸ்ரீமதி வெஸ்ட் நோயுற்றிருக்கையில் வேரூர் இடத்தில் நடத்தலாம்; சாத்தியமானவரையில் நிறுத்தி விடவே கூடாது. தயை செய்து போனிக்ஸ் சம்பந்தமானதை நகல் எடுத்து வெஸ்டுக்கு அனுப்பு கிறீர்களா? அப்பொழுது எல்லோரும் படிக்க முடியும். அனுப்ப விரும்புகிறவர்களுடைய செய்திகளையெல்லாம் சேர்த்து சகன் லால் எனக்கு விவரமாகப் பதில் எழுதட்டும். அவருடைய கடி தத்தை மே 7-ஆம் தேதிக்குள் எதிர்பார்க்கிறேன். இதற்குப் போதுமான அவகாசம் அவருக்கு இருக்கும்.

# 4

# ஸ்ரீ மகன்லாலுக்கு எழுதிய கடிதங்கள்

[1909 நவம்பரில் இங்கிலாந்திலிருந்து கப்பலில் திரும்பி வந்துகொண்டிருக்கும்போது 'இந்திய சுயராஜ்யம்' என்ற நூலைக் காந்தி எழுதினர். இரவு பகல், அந்த வேலையில் ஈடுபட்டிருந்தபோதிலும் கடிதங்களும் பல அதே சமயத்தில் எழுதி வந்திருக்கிறர் என்பது ஸ்ரீ மகன்லால் காந்திக்கு அவர் எழுதிய கடிதங்களிலிருந்து வெளியாகிறது. அதோடு அந்நூலில் கண்ட முறையில் தாம் வாழ்வதென்பதையும் காந்திஜி அப்பொழுதே முடிவு கட்டி விட்டார் என்பதையும் இக்கடிதங்கள் காட்டுகின்றன.]

கில்டோனுன் காஸில் கப்பல்,
*24—11—1909.*

அன்புள்ள மகன்லால்,

நாம் எப்பொழுது சந்திக்க முடியும் என்பது தெரியவில்லை. அதனுலேயே நான் சொல்ல வேண்டிய பதிலையெல்லாம் இப்பொழுதே எழுதிவிடுகிறேன். இந்தத் தடவை கப்பல் யாத்திரையின்போது இடைவிடாது வேலை செய்துகொண்டு வருகிறேன். ஸ்ரீ வெஸ்டுக்கும் மற்றவர்களுக்கும் அனுப்பியிருக்கும் கடிதங்களிலிருந்து எனக்கிருந்த வேலையை நீங்கள் அறியலாம். எவ்வளவோ சொல்ல வேண்டும் என்று விரும்புகிறேன். ஆனல், அதெல்லாம் நாம் சந்திக்கும்போதே சாத்தியம். அவசரமானதை மாத்திரமே இப்பொழுது எழுதுகிறேன்.

போனிக்ஸுக்கு வேறு எந்தப் பெயரையும் வைக்கவே கூடாது. எதனுடனும் என் பெயர் சம்பந்தப்படுத்தப்படுவதை நான் விரும்பவில்லை. என் வேலை மாத்திரமே மிஞ்சவேண்டும். என் பெயர் மறந்து போய்விடும்போது மாத்திரமே என் வேலை நிற்கும். எந்தப் பெயர் வைப்பது என்பதைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பதற்கு இது சமயமும் அல்ல. நாமோ இப்பொழுது சோதனை செய்துகொண்டிருக்கிறேம். அப்படியிருக்க, பெயர்களைப்பற்றி நாம் இப்பொழுது எப்படி சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்க முடியும்? ஒரு பெயரைப் பற்றி எண்ணும் போது, ஹிந்து-முஸ்லிம் பிரச்னையை உண்டாக்காத ஒரு நடுநிலையான பெயரை நாம் கண்டுபிடிக்க வேண்டும். போனிக்ஸ் என்ற பெயர் யதேச்சையாக வைக்கப்பட்டது; அது பொருத்தமானதாகவும் இருக்கிறது. அது ஓர் ஆங்கிலச் சொல்லாக இருந்தாலும் நாம் யாருடைய பிரதேசத்தில் இருக்கிறேமோ அவர்க

ளுக்குக் கௌரவம் அளிப்பதாகவும் இருக்கிறது. எந்த விதமான தனிப்பட்ட உறவுடனும் சம்பந்தப்படாததாகவும் இருக்கிறது. அச்சொல்லின் பொருளைப் பொறுத்தவரையில், போனிக்ஸ் என்ற பறவை என்றுமே சாகாத வகையில் அது அதனுடைய சாம்பலிலிருந்தே திரும்பப் பிறந்துவிடுகிறது என்பதே கதை. போனிக்ஸ் போலவே நாமும் சாம்பலாவோம்; அப்படியானல் நாமும் சாகாமலிருப்போம். இதுவே நமது நம்பிக்கை. ஆகையால், இப்போதைக்குப் போனிக்ஸ் என்ற பெயரே போதுமானது. எதிர்காலத்தில் அதைப்பற்றித் திரும்பவும் யோசித்துக்கொள்ளலாம். இப்பொழுதோ, நமது நிலைமையும் வழியும் போனிக்ஸைப் போன்றே இருக்கின்றன.

—மோகன்தாஸிடமிருந்து வாழ்த்துக்கள்.

(2)

கில்டோனன்காஸில் கப்பல்,
*27—11—1909*

அன்புள்ள மகன்லால்,

ஜொஹன்னஸ்பர்க்கில் இருந்துவரும் செல்வ நிலைமையைக் குறித்து ஸ்ரீ மாக்கின்டைரேயின் கடிதத்தைப் படித்த பிறகும், ஸ்ரீ வெஸ்டுக்கு ஒரு கடிதம் எழுதிய பிறகும், என் மனத்தில் முக்கியமானவையாக இருந்து வரும் கருத்துக்களை எடுத்துக் கூறிவிட வேண்டும் என எண்ணுகிறேன். தயை செய்து இக் கடிதத்தைப் புருஷோத்தமதாஸுக்குக் காண்பியுங்கள்.

போனிக்ஸுக்கு இப்பொழுது சோதனை ஏற்பட்டிருக்கிறது. ஜொஹன்னஸ்பர்க்கிலிருந்து இனிப் பணம் வராது. போனிக்ஸில் ஒருவர் மாத்திரமே உயிரோடு இருந்து வரும்வரையில், வேறு எதுவுமே இல்லாது போனலும், பத்திரிகையின் ஒரு பக்கத்தையாவது நாம் பிரசுரித்து மக்களிடையே அதைப் பரப்புவது என்பது நமது பிரதிக்ஞை. அங்கே எந்தவிதமான குழப்பமும் உண்டாகிவிட விட்டுவிடாதீர்கள். யாராவது ஏதாவது சொல்லிவிட்டாலும் அதை நீங்கள் சகித்துக்கொள்ள வேண்டும். முக்கியமானதற்காக வேலை செய்தாக வேண்டும் என்பதை மனத்தில் வைப்பீர்கள்; இதற்காக மற்ற எதையாவது தியாகம் செய்ய வேண்டியிருந்தால், அப்படி செய்தேயாக வேண்டும். போனிக்ஸைக் கைவிட்டுவிடக்கூடாது. பத்திரிகையும் பிரசுரிக்கப்பட்டு வரவேண்டும் என்பதே முக்கியமானது. இது நடந்தாவதற்கு வேறு எதையாவது கைவிட வேண்டியிருந்தாலும்

கைவிட்டாக வேண்டியதே. பத்திரிகையை விக்கிரகமாக்கி ஆராதித்துக் கொண்டிருக்க நாம் விரும்பவில்லை. நாம் நமது பிரதிக்ஞைப்படி நடந்தாகவேண்டும். "நமது வெற்றி, பிரதிக்ஞையை நிறைவேற்றுவதில் இருக்கிறதேயன்றிப் பத்திரிகையைப் பிரசுரிப்பதில் அல்ல. டிரான்ஸ்வால் சட்டம் ரத்தாகும்படி பார்ப்பதில் அற்புதம் எதுவும் இல்லை. எல்லாம் நம் பிரதிக்ஞையைக் கடைப்பிடிப்பதிலேயே இருக்கிறது. பிரதிக்ஞைப்படி நடந்து தீருவதிலேயே நமது ஆன்மா தூய்மை அடைவதும் இருக்கிறது. உற்சாகம் மூட்டியாக வேண்டிய விஷயம் இது ஒன்றே. ஸ்ரீ வெஸ்ட், டர்பனுக்குப் போகக்கூடும். ஆனால், காரியாலயம் தொடர்ந்து நடக்கவேண்டும். நீங்கள் விரும்பினால் மணிலாலை அனுப்பலாம்.

உங்கள் இரண்டு பேரைப்பற்றியே நான் சொல்லுகிறேன் மணிலால் விரும்பினால், பா அனுமதித்தால், மணிலாலைச் சத்தியாக்கிரகப் போரில் நாம் ஈடுபடுத்தவேண்டும். அமைதியற்றிருக்கும் அவன் மனத்தை இது சாந்தப்படுத்தும். இதையே அவனும் என்னைக்கேட்டிருக்கிறான். இது சாத்தியமில்லை என்றால், அவன் டர்பனுக்குப் போகவேண்டும். பிறகு நீங்கள் போனிக்ஸிலேயே இருக்கலாம். ஆனால், அவசியமானால் மாத்திரமே இந்த ஏற்பாட்டைச் செய்யுங்கள். எங்கிருந்தும் பணம் வந்து சேராவிட்டாலும், உதவியற்றிருப்பதாக எண்ணிக்கொள்ளுவதில்லை, உற்சாகம் இழந்துவிடுவதில்லை என்று நீங்கள் மனத்தைத் திடப்படுத்திக்கொள்ள வேண்டும். பணமே வராதுபோனாலும், எப்படியாவது உங்கள் பணத்தைச் சம்பாதித்துப் போனிக்ஸின் வேலை தொடர்ந்து நடந்துவருமாறு செய்யப்போவதாக ஒவ்வொருவரிடமும் நீங்கள் கூறவேண்டும். போனிக்ஸில் வேறு யாருமே இல்லாது போனாலும், நீங்கள் மாத்திரமே சாகும்வரை அங்கே இருந்தே தீருவீர்கள் என்பதை மற்றவர்கள் அறியும்படியும் செய்யுங்கள். உங்களுடைய இந்தத் தீரம் மாத்திரம் அகந்தையோ அல்லது தற்பெருமையோ அற்றதாக இருக்குமாயின், ஆன்மபலத்துடன் உறுதியாகவும் இருக்குமானால், வீரமான எங்கள் உதாரணத்தை மற்றவர்களும் பின்பற்றி நடப்பார்கள். அது வெளிக்காட்சியாக மாத்திரமே இருந்து விடாமல் உண்மையான தீரமாகவும் இருக்கவேண்டும். அது வெறும் வீறாப்பாக இல்லாமல் வீரமாகவே இருக்கவேண்டும். இத்தகைய வீரம் கவனிப்பாரற்றுப் போய்விடுவதே இல்லை என்பதை நீங்கள் நிச்சயமாக நம்பலாம். அதற்கு என்றுமே பலன் உண்டு.

அவசியம் என்று உங்களுக்குத் தோன்றும்போது மாறுதல்களைச் செய்துகொள்ளுங்கள். சில மாறுதல்கள் சரியானவை அன்று எனத் தோன்றினாலும் அம்மாறுதல் ஏற்பட நீங்கள் அனுமதிக்கலாம். லாப நஷ்ட எண்ணத்தில் ஒருவர் தம்மை ஈடுபடுத்திக்கொண்டு, தன் கருத்துப்படி நடந்தாகவேண்டும் என்று வற்புறுத்துவது வீணானது. நமது முயற்சியாலேயே நமக்கு உணவு கிடைக்கிறது என்று நாம் திடமாக நம்புகிறோம். படைத்த கடவுள், நாம் வாழவும் வழி செய்வார் என்பதை நீங்கள் உணர்ந்துகொண்டால் அதுவே மேலானது.

—மோகன்தாஸிடமிருந்து வாழ்த்துக்கள்.

[பிரபுதாஸ் காந்தி எழுதிய "காந்திஜியுடன் என் குழந்தைப் பருவம்" என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டது.]

# 5

# ஸ்ரீ ஜி. ஏ. நடேசனுக்கு காந்திஜி எழுதிய கடிதங்கள்

(1)

டால்ஸ்டாய் பண்ணை,
லாலி ஸ்டேஷன்,
டிரான்ஸ்வால்,
9—12—'10

அன்புள்ள ஸ்ரீ நடேசன்,

தங்களுக்கு விரிவான பதில் கடிதம் எழுதவேண்டியவன் நான். அங்குமிங்கும் சுற்றுவதாலும், ஒரு போராட்டத்தில் ஈடுபட்டிருப்பதாலும் தங்களுக்குக் கடிதம் வரையச் சிறிது நேர ஓய்வைக்கூட என்னால் தேடிக்கொள்ள முடியவில்லை.

தந்தி மூலம் தாங்கள் அனுப்பிய 400 பவுனைப் பெற்றுக்கொண்டதற்கு என் வந்தனம். சமயத்தில் செய்த உதவியாகும் இது. நாடு கடத்தப்பட்டவர்களை இறக்கும்போதுமூண்ட எதிர்பாராத கஷ்டங்களினாலும் ஏற்கனவே 500 பவுனுக்கு மேற்கொண்டே செலவாகிவிட்டது. முக்கியமான காரியங்களுக்கு இப்போது செலவு செய்யக் கையில் மிச்சம் எதுவுமே இல்லை. ஆகையால், மேலும் நிதி வசூல்செய்யத் தங்களுக்குத் தந்தி கொடுக்க நேர்ந்தது. இதைப்போலவே ஒரு தந்தி, பெடிட்டுக்கும் அனுப்பப்பட்டது. தங்களிடமிருந்து தந்தி கிடைத்த அதே தினம் ஸ்ரீ ரத்தன்ஜி டாடாவிடமிருந்து ரூபாய் 25,000-க்கு ஒரு செக் அடங்கிய கடிதமும் வந்தது. தற்சமயம் பணத்தைப் பற்றிய கவலை இல்லை. ஸ்ரீ டாடா எழுதியிருக்கும் கடிதத்தின் நகலைத் தங்களுக்கு இத்துடன் அனுப்புகிறேன்.

நாடு கடத்தப்பட்டுத் திரும்பிய தொழிலாளிகள், தங்கள் உதாரகுணத்தை மெச்சுகின்றனர். அவர்களுடைய விஷயத்தைக் கவனிப்பதில் தாங்கள் சிறிதும் சலிப்படையாதவரென்றும் சொல்லுகிறார்கள். அவர்கள் சார்பிலும் தாங்கள் செய்த இந்த உதவிக்கு நான் நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். நாடு கடத்தப்பட்டவர் எவரும் இந்தியாவுக்குச் செல்லவேண்டிய அவசியம் ஏற்படவில்லை; அதாவது, இரண்டாவது தொகுதியில்

வந்தவர்கள், இதைத் தாங்கள் கவனித்து இருப்பீர்களென்று நினைக்கிறேன். துரதிருஷ்டவசமாய் 14 சீனர்களே தம் நாட்டிற்குச் செல்லவேண்டியிருந்தது. சீனர்கள் சங்கம் செய்த தவறே இதற்கு ஓரளவு காரணமெனலாம். சட்டென மூண்ட இந்த நிலைமையைச் சமாளிக்க அந்த ஸ்தாபனத்தால் முடியவில்லை. திரும்பிய தொழிலாளிகள் இப்போது டிரான்ஸ்வால் சிறைகளில் தம் தண்டனைக் காலம் முடிந்து விடுதலையாகி வந்திருக்கிறார்களோ, அல்லது இன்னும் சிறைவாசத்தில் இருக்கிறார்களோ. 'கேப்'பைச் சேர்ந்த ஐவர், இவர்கள் எண்ணிக்கையில் சேராதவர்கள். சீக்கிரத்திலேயே அவர்களும் எல்லையைத் தாண்டிவிடுவார்களென எதிர்பார்க்கிறேன்.

இங்குள்ள குடும்பத்தவர்களுக்குச் சரியாகப் பணம் கிடைக்கிறதா என்று தாங்கள் கவலைக்குள்ளாவது யாருக்கும் சகஜந்தான். ஆனால், இப்படி நினைப்பதற்கு ஏது ஒன்றும் இல்லை. உள்ளூறத் தங்களுக்குப் பெருமை தரும் விஷயம் அது. நான் பணம் தருவதை நிறுத்தியிருக்கிறேன். தங்களுக்கும் தெரியும். நான் இப்போது இந்தக் குடும்பங்களின் தலைவர்களை இதுபற்றி தந்தி மூலம் விசாரித்துக் கொண்டிருக்கிறேன். தம் குடும்பங்களைப் பண்ணைக்கு அனுப்புவதைக் குறித்து அவர்கள் சம்மதம் தெரிவிப்பரென நம்பிக்கை கொண்டிருக்கிறேன். ஒரு பண்ணை அமைப்பதற்கான நடவடிக்கைகள் நடந்துகொண்டிருக்கின்றன என்றும், குடும்பங்களைச் சம்ரட்சிக்கப் பண்ணையே சிறந்த இடமென்றும் அவர்களும் அறிவார்கள்.

இதற்கு அவர்கள் சம்மதிக்கவில்லையென்று தெரிந்தவுடனே, பண்ணைக்குப் போக விரும்பாத குடும்பத்தினருக்கு அக்டோபர் 7-ஆம் தேதி வரைக்கும் பணம் கொடுத்தாகிவிட்டது. டர்பனிலுள்ளவர்களுடன் நான் கலந்து ஆலோசித்த பிறகு இதுவே கடைசித் தேதியென குறிப்பிடப்பட்டது. அவர்கள் முன்னிலையில் எல்லா விஷயங்களையும் வைத்து, ஒன்று அவர்களுடைய குடும்பங்கள் பண்ணைக்காவது போகவேண்டும், அல்லது தாமே பிழைக்கும் வழியைத் தேடிக்கொள்ள வேண்டும் என்று தெளிவுபடுத்தியாகிவிட்டது. பண்ணைக்கு வெளியே அந்தக் குடும்பங்களைச் சம்ரட்சணை செய்வதற்குக் கையிலுள்ள தொகை போதாதெனவும் அவர்களிடம் கூறிவிட்டேன். குடும்பத்தைச் சேர்ந்த ஆண்கள் மட்டும் சிறை செல்லும் யோசனையை ஏற்றுக்கொண்டனர். சில குடும்பங்களே பண்ணைக்கு வந்தன.

பெரும்பாலானோர் ஜொஹன்னஸ்பர்க்கிலேயே தாம் பிழைக்க வழி தேடிக்கொண்டனர். பண்ணை இரு வழிகளிலும் மிக உபயோகமாக இருக்கிறது. சிக்கனமாகக் குடும்பங்களைப் போஷிப்பதற்கும்—இதனால் போராட்டம் நீடித்து நடப்பதற்கும் அனுகூலமாக இருக்கிறது-மோசடிகளையும் பித்தலாட்டங்களையும் தடுப்பதற்கு வகை செய்கிறது. போராட்டத்தில் கலந்து கொள்ளும் சிலர் கபடமற்றவர்களைப் பயன்படுத்திக்கொண்டு இம்மாதிரி காரியங்களைச் செய்யக்கூடியவர்களாயும் இருக்கின்றனர். ஆனால், பண்ணையில் இதுமாதிரி காரியங்களை நடத்தவே முடியாது. பிழைப்புக்கு வழிதேடிக்கொள்ள முடியாதவர் பண்ணைக்கே வந்தாகவேண்டும். வராதவர்கள், ஏதாவது ஒரு வழியில் தம்மைக் கவனித்துக்கொள்ளத் திறமையுள்ளவர்களெனத் தெரிகிறது.

இந்தப் போராட்டம் முக்கியமான பல பாடங்களைக் கற்றுத் தருகிறது. மனிதரைத் தகுதியுள்ளவர்களாகச் செய்வதே இதன் நோக்கம். சமூகத்தில் தென்படும் சில மாசுகளை அறவே அகற்றினால்தான் இது கைகூடும். பண்ணையில் உள்ளவர்களுக்குக் கல்வி போதனை செய்யும் வாய்ப்பு இருக்கிறது.

இவர்களுக்குத் திருப்தி ஏற்பட எவ்வளவு செய்தாலும் முணுமுணுப்பு இருந்து கொண்டுதான்வருகிறது. அங்கே இருப்பவர்களையும், நமக்குள்ள வசதிகளையும் பார்த்தால், இப்படி இருந்துதான் ஆகும். இதில் வியப்பு என்னவெனில், உண்மையான குறைகளைப் பற்றி அதிக முணுமுணுப்பு இல்லாததே. இதற்கான பெருமை யாவும், தீரத்துடன் பல துன்பங்களைச் சகித்துக்கொண்டு, பெருந்தன்மையுடன் போராட்டத்தில் இறங்கியவர்களுக்கே உரித்தாகும்.

நல்ல தன்மை மிக்க இவர்கள் செய்ததுபோல் அரைக் கல்வி கற்ற நம் நாட்டினரால் செய்திருக்கவே முடியாது. இந்தப் போராட்டம் நீடிக்குமானால், கடைசிச் சோதனை ஏற்படும்போது இவர்களால் அதற்கு ஈடு கொடுக்க முடியுமா என்பது போகப் போகத்தான் தெரியும்.

அடுத்த ஆண்டு முற்பகுதியிலேயே இந்தக் கிளர்ச்சி ஒரு முடிவுக்கு வருமென்பதற்குச் சூசகங்கள் தெரிகின்றன. இந்தத் தடவை சமூகத்தினருடன் கலந்து ஆலோசனை செய்ய முடியாதெனத் தெரிகிறது. எப்படி இருப்பினும் விஷயம் என்னவோ

தெளிவாகவே இருக்கிறது. நாம் கோருவன யாவும் வந்து பூர்த்தியானால்தான் இந்தப் போராட்டம் நிற்கும்.

ஸ்ரீ ரிட்ச் இங்கே சில நாட்களே தங்கி இருந்துவிட்டு லண்டனுக்குத் திரும்பிவிட்டார். ஸ்ரீ போலக் 'கேப்'பில் தொடரப்பட்ட அப்பீல் வழக்கின் கடைசிக் கட்டத்தைக் கவனிக்கப் போயிருக்கிறார். மைசூர், பிக்கானீர் அரசர்கள், நிஜாம் இவர்களிடமிருந்து நன்கொடையாகத் தாங்கள் பெற்றது நல்ல அதிருஷ்டமெனக் கூறவேண்டும்.

'இந்தியன் ஒப்பினியன்' வாயிலாகத் தாங்கள் அறிந்திருப்பீர்கள்; ஸோதாவின் விஷயம் இன்னும் ஒரு குதிர்ப்பாட்டிற்கு வரவில்லை. அந்த வழக்கு மேற்கொண்டு தொடராமல் நின்று போகக்கூடும். அது தொடருமானால் ஒருகால் அவள் சிறை செல்ல நேரிடும். அதனால், அவளைப் பின்பற்றி அவளுடைய சகோதரிகளும் சிறை புகக்கூடும். வயது நிரம்பாத இளைஞர்களைக் குறித்துத்தான் பெருங் கவலையாக இருக்கிறது. இந்தக் கதையை வளர்த்திக்கொண்டே போய்த் தங்களுக்குச் சலிப்பு மூட்டுவதை இத்துடன் நிறுத்திவிடலாமென்று நினைக்கிறேன்.

இதை நான் எழுதும்போது, ஸ்ரீ தம்பி நாயுடுவும், கோபால நாயுடுவும் என் பக்கத்திலேயே இருக்கின்றனர். நாடு கடத்தப்பட்ட எளியவர்களுக்குத் தாங்கள் புரிந்த பேருதவிக்காக மீண்டும் ஒருமுறை இவர்களுடன் சேர்ந்து தங்களுக்கு என் நன்றியைச் செலுத்துகிறேன்.

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள
**மோ. க. காந்தி**

இன்னுமொரு விஷயம் நான் விடுவதற்கில்லை. தாங்கள் அனுப்பிய அழகிய போட்டோக்கள், அரிச்சந்திரன் படம், இவற்றிற்காகச் சாத்விக எதிர்ப்பாளர்கள் தம் வந்தனத்தைத் தெரிவிக்கின்றனர். இவற்றை அவர்களிடம் சேர்த்துவிட்டேன். ஸ்ரீ ருஸ்தம்ஜியின் வீட்டில்தான் இது நடந்தது. எனக்கு அனுப்பிய படத்திற்கும் மொத்தமாக உட்கார்ந்து பிடித்துக் கொண்ட போட்டோவுக்கும், அரிச்சந்திரனின் சித்திரத்திற்கும், பரிசே போல் நான் போற்றும் தங்கள் கடிதத்திற்குமாகச் சேர்த்து என் வந்தனம்.

**மோ. க. காந்தி**

(2)

டால்ஸ்டாய் பண்ணை,
லாலி ஸ்டேஷன்,
டிரான்ஸ்வால்,
*31, மே, 1911*

அன்புள்ள ஸ்ரீ நடேசன்,

தாற்காலிகமான உடன்படிக்கையைக் குறித்து நான் ஸ்ரீ கோகலேக்கு அனுப்பிய தந்தியில், அதில் அடங்கியுள்ள விஷயங்களைத் தங்களுக்கு அறிவிக்குமாறும் அவரைக் கேட்டுக்கொண்டேன். அவ்வாறே அவர் அந்தத் தந்தியில் இருப்பதன் நகலைத் தங்களுக்கு அனுப்பி இருப்பாரென நம்புகிறேன். நாங்கள் எதிர்பார்த்ததைவிட உடன்படிக்கை சாதகமாகவே முடிந்திருக்கிறது. தனிப்பட்ட உரிமைகளையும் பெறுவோமென நான் நினைக்கவே இல்லை. இப்போது அவையும் முற்றிலும் காக்கப்பட்டிருக்கின்றன. இருந்தும், நாங்கள் இன்னும் கஷ்டங்களிலிருந்து விடுபடவில்லை. ஜெனரல் ஸ்மட்ஸ் தாம் தந்த உறுதிமொழியைச் சட்டமாக மாற்றவேண்டியிருக்கிறது. தம் கௌரவம் இதனால் குறைந்து போமென்று அவர் விட்டுக் கொடுக்காது போனால் ஒரு பலனும் ஏற்படாது. அவர் தாம் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றாமல் போவதைவிடக் குடியேறி இருப்பவர்களுக்கு விரோதமாக வேறு ஏதாவது சட்டம் இயற்றக்கூடுமோ என்ற ஆபத்தைத் தான் யோசிக்கவேண்டி யிருக்கிறது. அவருடைய நடவடிக்கைகளைச் சற்று ஊன்றியே கவனிக்கவேண்டி வருகிறது. தாங்கள் அங்கே நடத்தும் அற்புதமான வேலைகளுக்காக நாங்கள் எப்போதும் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை. தென்னாப்பிரிக்காவில் குடியேறியிருக்கும் இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள ஒரு நிலைமையைச் சரிப்படுத்தத் தாங்கள் கிளர்ச்சி செய்வதை நீடித்து நடத்துவீர்களென நம்புகிறேன். சமீபத்தில் தாங்கள் 'இந்தியன் ஒப்பினியன்' இதழ்களைப் பார்த்திருப்பீர்கள்; சாம்ராஜ்ய சர்க்காருக்கு நாங்கள் அனுப்பியுள்ள மனுக்கள் அதில் வெளியாகி உள்ளன.

தாங்கள் செய்திருக்கும் வேலையைக் குறித்துத் தென்னாப்பிரிக்க இந்தியர் தங்களிடம் பெருமதிப்பு வைத்திருக்கின்றனர். இந்த ஒப்பந்தக் கூலி முறையைப்பற்றி எனக்கு பலத்த ஆட்சேபணை. எஜமானர்கள் தம்மிடம் உழைப்பவர்களை நல்ல வழியில் நடத்துவதாயிருந்தாலும் (அதுதான் இல்லையே) அடிப்படையில் இந்த முறையினால் தீமையே உண்டாகிறது. ஒப்பந்தத் தொழி

லாளிகள் நெறிகெட்டுப் போகின்றனர். மிருகசுபாவம் அவர்களுக்கு அதிகரிக்க அதிகரிக்க மனிதத் தன்மையையே இழந்துவிடுகின்றனர். வறுமையைப் போக்க இம்முறை பயன்படுகிறதென்பது, முடிவில் பார்க்கும்போது நல்ல பயனையே அளிக்கவில்லை. நம் ஏழை எளிய சகோதரர்களை இவ்வாறு வெறும் அடிமைத் தொழில் புரிய அனுப்புவதால் நம் நாட்டின் கௌரவமே குறைந்து போகிறது. சுதந்திர நாட்டினர் எவரும் சற்றும் இதைப் பொறுத்துக்கொள்ளவே மாட்டார். முதலில் இந்தியாவுக்கு வெளியிலும், பிறகு நம் நாட்டின் எல்லைக்குள்ளும் இந்த முறையை அடியோடு ஒழித்துக் கட்டத் தீவிர முயற்சி எடுத்துக்கொண்டு கிளர்ச்சி செய்வீர்களென நம்புகிறேன். அஸ்ஸாம் போன்ற இடங்களுக்குக்கூட ஓர் இந்தியனை ஒப்பந்தத் தொழிலாளியாக அனுப்ப நான் ஒப்பவே மாட்டேன்.

இந்தப் போராட்டம் இப்போது நிறுத்தப்பட்டிருக்கிறது. டால்ஸ்டாய் பண்ணை நடந்துகொண்டுதான் இருக்கிறது; ஆனல், பல மாறுதல்களுடன், நவம்பர் மாதத்தில் ஸ்ரீ போலக்கும் ஸ்ரீமதி போலக்கும் இந்தியாவில் தங்கியிருப்பார்கள். அடுத்த ஆண்டு ஜெனரல் ஸ்மட்ஸ் கொண்டு வரப்போகும் மசோதா ஒரு முடிவுக்கு வரும்வரை இருப்பார்கள்.

எங்கள் சார்பில் தாங்கள் செய்துள்ள பல உதவிகளுக்காக மீண்டும் வந்தனம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,
உண்மையுடன்
**மோ. க. காந்தி**

# 6

# தென்னுப்பிரிக்காவுக்குக் கோகலே அறிமுகம்

ஸ்ரீ கோகலேயைத் தென்னுப்பிரிக்காவுக்கு அறிமுகப்படுத்துவதற்காக காந்திஜி 1912-இல் 'இந்தியன் ஒப்பினியன்' என்ற தம்முடைய பத்திரிகையில் ஸ்ரீ கோகலேயின் வாழ்க்கை வரலாற்றைக் குறித்து எழுதியதே கீழே தந்திருக்கும் கட்டுரை :

கோபால கிருஷ்ண கோகலே, 1866-ஆம் ஆண்டில் கோலாப்பூரில் ஓர் ஏழை மகாராஷ்டிரப் பிராம்மணக் குடும்பத்தில் பிறந்தார். அந்த ஊரிலேயே காலேஜில் படித்து எப்.ஏ., பரீட்சையில் தேறினர். பின்னர், பம்பாய் எல்பின்ஸ்டன் கல்லூரியில் சேர்ந்து அங்கே 1884-இல் பி. ஏ., பரீட்சையில் தேறினர்.

இந்த அளவுக்குக் கல்வியைப் பெற்றதும் வாழ்க்கைக்குச் சம்பாதிக்க அவர் வேலைக்குப் போக வேண்டியதாயிற்று. தமது விருப்பப்படியே உபாத்தியாயர் தொழிலை மேற்கொண்டார். அச்சமயம் தக்காணக் கல்விச் சங்கம் நல்ல வேலைசெய்துவந்தது. கோகலே அதில் சேர்ந்தார். அச்சங்கம் புனவில் நடத்திய பெர்குஸன் கல்லூரியில் அவரை மாதம் 70 ரூபாய் சம்பளத்தில் சரித்திர, ராஜீயப் பொருளாதாரப் பேராசிரியராக நியமித்தார்கள். கல்வி போதிக்கும் பணியில் இருபது ஆண்டுகள் ஈடுபட்டிருப்பது என்று கோகலே பிரதிக்ஞை செய்துகொண்டார். அந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றியும் வைத்தார். இத்தகைய உணர்ச்சியுள்ளவர்கள் தங்கள் வாழ்க்கையைக் கல்வியில் ஈடுபடுத்தும்போதுதான் கல்வி பயனுள்ளதாக ஆவதோடு மாணவர்களின் ஒழுக்கமும் சீர்படுகிறது. கோகலே இருபது ஆண்டுகளைப் பெர்குஸன் கல்லூரியில் கழித்தார். அவரைப் பொதுக்கூட்டங்களில் யாரும் அதிகமாகக் காணுவிட்டாலும், அவரைப் பற்றிப் பத்திரிகைகளில் அதிகம் படிக்காவிட்டாலும், அந்த ஆண்டுகளில் பல இளைஞர்கள் அவரிடமிருந்து நல்லுணர்வைப் பெற்றனர்.

கல்லூரியில் சேர்ந்த சமயம், காலஞ் சென்ற மகாதேவ கோவிந்த ரானடேயுடன் இவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இவருடைய ஒழுக்கத்தை உருவாக்கியதற்கு அவரே

முக்கியமான பொறுப்பாளியாவார். நீதிபதி ரானடேயின் திறமையான மேற்பார்வையில் பன்னிரண்டு ஆண்டுகளுக்குமேல் ராஜீயப் பொருளாதாரத்தைக் கற்றுவந்தார் கோகலே. இதன் பலனுக, பொருளாதாரப் பிரச்னைகளில் கோகலேயின் கருத்துக்கள் ஆதாரம் வாய்ந்தவை என்று இப்பொழுதுங் கூடக் கருதப்படுகின்றன. ரானடேயிடம் கோகலேக்கு அதிக பக்தி உண்டு; அவரைத் தமது குருநாதராகக் கருதினர். ரானடேயின் விருப்பத்தின் பேரில் புனு சர்வ ஜனிக் சபை நடத்திப் பிரசுரித்து வந்த மும்மாதப் பத்திரிகையான 'க்வார்டர்லி ஜர்னல்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் பதவியைக் கோகலே ஏற்றுக்கொண்டார். பின்னர், தக்காண சபைக்கு இவர் கௌரவக் காரியதரிசியாகவும் நியமிக்கப்பட்டார். புனுவில் வெளியான ஆங்கில-மராட்டிப் பத்திரிகையான 'சுதாரகா' வுக்கும் இவரே ஆசிரியர். பம்பாய் மாகாண மகாநாட்டுக்கு நான்கு ஆண்டுகள் செயலாளராக இருந்தார். 1895-இல் புனுவில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டுக்குக் காரியதரிசியாகவும் நியமிக்கப்பட்டார். சேவையில் இவருக்கு இருந்த ஆர்வமும், பொது வேலைகளில் இவருக்கு இருந்த ஆற்றலும் இதற்குள் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டதால், இவர் 'தக்காணத்தின் உதய தாரகை' என்று சொல்லப்பட்டு வந்தார். இவருடைய படிப்பின் திறமை, நேர்மை ஆகியவைகளைப் போற்றும் அறிகுறியாக, இந்தியாவின் அரசாங்கச் செலவுப் பிரச்னையைப் பரிசீலனை செய்ய நியமிக்கப்பட்டிருந்த வெல்பி கமிஷன் முன்பு சாட்சியங் கூற, ஸ்ரீ வாச்சாவுடன் கோகலேயும் நியமிக்கப்பட்டார். அக்கமிஷன் முன்பு இவர் அளித்த சாட்சியம் மிகச் சிறந்ததாக இருந்தது என்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

இவர் இங்கிலாந்தில் இருந்தபோது இந்தியாவின் காரியங்களைக் குறித்துச் சில சொற்பொழிவுகளை ஆற்றினர். பிளேக் சமயத்தில் பம்பாய் மாகாணத்தில் நிர்வாகம் நடத்தப்பட்டு வந்த விதத்தைக் குறித்தும், இதற்காக நியமிக்கப்பட்ட சிப்பாய்கள் செய்த அட்டூழியங்களைப்பற்றியும் கடுமையான கண்டனங்களை இவர் பிரசுரித்தார். 1907-ஆம் ஆண்டில் 25 ரூபாய் பென்ஷனுடன் பெர்குஸன் கல்லூரி வேலையிலிருந்து கோகலே விலகினர். இச்சமயத்தில் உடல் நலமின்மை காரணமாக விலகிய சர். பிரோஜ்ஷா மேத்தாவுக்குப் பதிலாக மத்திய சட்டசபைக்குப் பம்பாயின் பிரதிநிதியாக இவரைத் தேர்ந்தெடுத்தனர். பிரதிநிதி என்ற முறையில் தமது கடமையை

மிகத் திறம்பட இவர் நிறைவேற்றி வந்ததால் திரும்பத் திரும்ப இன்றளவும் இவரே தேர்ந்தெடுக்கப்பட்டு வருகிறார்.

மத்திய சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டதிலிருந்து கோகலேயின் பொதுஜன சேவை வாழ்வில், புதியதோர் அத்தியாயம் ஆரம்பமாயிற்று. நாட்டின் நன்மைக்கான சேவையில் அது மிகவும் பயனுள்ளதாக ஆயிற்று. சட்டசபையில் அரசாங்க வரவு செலவு திட்டத்தின்மீது அவர் செய்த முதல் பிரசங்கமே எல்லோராலும் பாராட்டப் பெற்றது. அது முதல் சம்பந்தப்பட்ட ஒவ்வொருவரும் வரவு செலவுத் திட்ட சம்பந்தமான அவருடைய பேச்சைக் கேட்பதில் ஆர்வங்கொண்டனர். வரவு செலவுத் திட்டத்தில் காட்டப்படும் மிச்சம் எவ்விதம் தவறான அபிப்பிராயத்தை உண்டாக்குவதாக இருக்கிறது, மக்கள் சுபிட்சம் அடைந்திருக்கிறார்கள் என்பதைக் காட்ட அதனால் எவ்விதம் முடியவில்லை என்பதை ஆண்டுதோறும் இவர் எடுத்துக்காட்டினார். சர்க்கார் இலாகாக்களில் இந்தியரை அதிகமாக நியமிக்க வேண்டியதன் அவசியத்தை ஒவ்வோர் ஆண்டும் வற்புறுத்தினார். ராணுவச் செலவைக் குறைக்கவேண்டும் என்றும் எடுத்துக் காட்டினார். உப்பு வரியை ரத்து செய்ய வேண்டும், பாசன வசதியை அதிகரிக்க வேண்டும், தொழில் நுணுக்கக் கல்விக்கான வாய்ப்புக்களை அதிகப்படுத்தியாக வேண்டும் என்று ஒவ்வோர் ஆண்டும் வற்புறுத்தி வந்தார். ஒவ்வோர் ஆண்டும் கட்டாய இலவச ஆரம்பக்கல்வி வேண்டும் என்றும், மற்றச் சீர்திருத்தங்களுக்காகவும் போராடினார். உப்பு வரி குறைக்கப்பட்டதற்கு இவருடைய சிறந்த போராட்டமே முக்கியமான காரணம்.

இந்தியாவில் உயர்பதவிகளிலுள்ள அதிகாரிகளில் சிலர் கோகலேயைத் தங்கள் நண்பரெனக் கூறிக்கொள்ளுகின்றனர். அகம்பாவம் பிடித்த லார்டு கர்ஸானுங்கூட, போரில் தமக்குச் சளைக்காதவர் இவர் என்று கருதினார். விவாதத்தில் இவருடன் தருக்கம் செய்வதே ஒரு தனி இன்பம் என்று அவர் கூறினார். தாம் கண்டவர்களில் அதிக திட சித்தமுள்ளவர் கோகலே என்றும் லார்டு கர்ஸான் கூறினாராம். சட்டசபையில் லார்டு கர்ஸானுக்கு விட்டே கொடுக்காத ஓர் எதிரியாகக் கோகலே இருந்துவந்தபோதிலும், இவருடைய ஒப்பற்ற திறமையையும், சிறந்த ஒழுக்கத்தையும் பாராட்டுவதற்கு அறிகுறியாக இவருக்கு ஸி. ஐ. ஈ. பட்டம் கிடைக்கச் செய்தார். இந்தப்

பட்டம் பெற்றதற்காகப் பாராட்டிக் கோகலேக்குத் தாமே நேரில் கடிதமும் எழுதினார்.

ஆரம்பம் முதற்கொண்டே கோகலே காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்துவிட்டார். எல்லா காங்கிரஸ் மகாநாடுகளுக்கும் இவர் போய்ச் சொற்பொழிவுகளும் ஆற்றினார். 1904-ஆம் ஆண்டு பம்பாயில் நடந்த காங்கிரஸில் இந்திய கஜானாவில் இருந்த மிச்சத்தைப்பற்றி இவர் நிகழ்த்திய உரை மிகப் பிரபலமானதாகும். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஆற்றப்பட்ட அற்புதமான உரைகளுக்கு இணை அது என்று ஸர். ஹென்ரி காட்டன் கூறினார்.

இந்தியாவில் இருந்துவரும் ராஜீய நிலைமையைக் குறித்துப் பிரிட்டிஷ் பொதுமக்களுக்கு எடுத்துக் கூறுவதற்காக இங்கிலாந்துக்கு அனுப்பிய தூது கோஷ்டியின் ஓர் உறுப்பினராக இவரை பம்பாய் மாகாணம் தேர்ந்தெடுத்தது. இவ்வகையில் இவர் தமது கடமையை வெகு திருப்திகரமாக நிறைவேற்றினார். இந்தியாவில் நடந்துவந்த பிரிட்டிஷ் நிர்வாகத்தைப்பற்றி இந்திய மக்களுக்கு இருந்த கருத்தைக் குறித்து எடுத்துச் சொல்லுவதில் இவர் காட்டிய திறமையையும் புத்திசாலித்தனத்தையும் கண்டு திறமைசாலிகளான பிரபல ஆங்கிலேயரும் திகைத்துப் போயினர். இவர் இங்கிலாந்தில் இருந்தபோதே, தெய்விகமான காசி நகரில் நடக்கவிருந்த காங்கிரஸுக்குத் தலைவராக இவரைத் தேர்ந்தெடுத்தார்கள். காசி காங்கிரஸில் தலைமை வகித்து இவர் ஆற்றிய தலைமை உரை, விஷயங்களைத் தெளிவாகவும் திறமையாகவும் எடுத்துக் கூறியதில் மிகச் சிறப்பானதெனலாம். காசி காங்கிரஸுக்குப் பிறகு இவர் இங்கிலாந்துக்குச் சென்று லார்டு மார்லியுடன் பல ஆலோசனைகளை நடத்தினார். 1908-ஆம் ஆண்டில் லார்டு மிண்டோ தயாரித்த புதிய அரசியல் சீர்திருத்தத் திட்ட சம்பந்தமாகத் திரும்பவும் இங்கிலாந்துக்குச் சென்றார்.

இந்தியாவின் ஒவ்வொரு மாகாணத்திலும் தங்கள் வாழ்க்கையை ராஜீய வேலைகளுக்காக அர்ப்பணஞ் செய்யச் சில இளைஞர்களாவது முன்வரவேண்டியது அவசியம் என்று கோகலே அடிக்கடி வற்புறுத்தி வந்தார். நாட்டுக்குச் சேவை செய்வது என்ற ஒன்றையே குறியாகக் கொண்டு வாழ்க்கை நடத்தும் ராஜீயத் துறவிகளை உண்டாக்கவேண்டும் என்பது இவருடைய நீண்டகால ஆவல். இவருடைய இந்த ஆர்வம், இவர் ஆரம்

பித்திருக்கும் 'இந்திய ஊழியர் சங்க'த்தின் மூலம் திட்ட மான உருக்கொண்டிருக்கிறது. இச்சங்கத்தின் நோக்கங்கள் உயர்வானவை. எதிர்காலத்தில் நாட்டிற்கு மேன்மேலும் அதிக சேவை செய்வதற்கான பலத்தையும் ஆற்றலையும் அது வளர்ப்பதாயிருக்கட்டும் என்று நாம் விரும்புவோமாக.

கூட்டங்களில் கோகலே பேசும் முறையைப்பற்றி இரண் டொரு வார்த்தைகள் கூறவேண்டியது அவசியம். பேச்சாளர் என்ற வார்த்தைக்குள்ள சாதாரணப் பொருளின்படி பார்த்தால், இவர் பெரிய பேச்சாளரே அல்ல. தம் பேச்சைக் கேட்பவர் களின் உணர்ச்சியைக் கிளறிவிட இவர் முயற்சி செய்வதில்லை. இவருடைய ஒரே நோக்கம், தாம் சொல்லுவதில் நியாயம் இருக்கிறது என்பதை அவர்கள் உணரும்படி செய்ய முயற்சிப் பதேயாகும். வேகமாகப் பேசுவார். விஷயங்களும் புள்ளி விவ ரங்களும் இவரிடம் ஏராளமாக இருப்பதே இவருக்குள்ள ஆயு தங்கள். இவருடைய வாதங்கள், விஷயத்தை உணரும்படிச் செய்வனவாயிருக்கும்; உற்சாகமும் நிறைந்திருக்கும். இவ ருடைய பேச்சு நடை எளிமையானது; எனினும், சீரியதாயும் உறுதியானதாயும் இருக்கும்.

கோகலே உற்சாகமான சீர்திருத்தவாதி. புனாவிலிருந்து வெளிவரும் 'ஞானப்பிரகாச' என்ற தினப்பத்திரிகையை இவர் நடத்திவருகிறார். அதன் மூலம் ராஜீய, சமூக சீர்திருத்த சம்பந்தமான தம் கருத்துக்களைப் பிரசாரஞ் செய்து வரு கிறார். இவருடைய வாழ்க்கை முறை எளிமை மிக்கது; சிக்கன வாழ்க்கை என்றே சொல்லலாம். பிரபல பத்திரிகையாளரான ஸ்ரீ நெவின்ஸன் கூறியதுபோல, கோகலே தமது வாழ்நாள் முழு வதையும் வறுமைக்கும் அறிவை வளர்ப்பதற்குமே அர்ப்பணஞ் செய்துவிட்டார் என்றே நாமும் கூறலாம். உயர்ந்த எண்ணங் களையும் செய்கைகளையும் கொண்ட பண்டைக்கால ஹிந்து வின் சிறந்த எளிய வாழ்க்கைக்குக் கோகலேயின் வாழ்க்கை யைத் தவிர இக்காலத்தில் வேறு உதாரணம் காணமுடியாது.

மக்களின் சேவைத்துறையில் கடைசியாக இவர் செய்த பெரிய காரியங்களில் கல்வி மசோதாவும், இந்திய ஒப்பந்தக் கூலி முறையை ஒழித்துவிட எடுத்துக்கொண்ட முயற்சியும் சேர்ந்தவைகளாகும். வைசிராய் கவுன்சிலில், பொதுஜன ஆதர வைப் பெற்ற மசோதாக்கள் அடையும் கதியையே கல்வி மசோதாவும் அடைந்தது. ஆனால், இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் சமூகங்களிலிருந்தும் இவருக்கு அமோக

மான ஆதரவு கிடைத்திருப்பதால், ஒருமித்த இந்தப் பலத்தை நீண்டகாலத்திற்கு அரசாங்கம் எதிர்த்து நின்றுவிட முடியாது.

இந்த நாட்டிலிருந்து ஒப்பந்தக் கூலி முறை ஒழிக்கப்பட்டிருப்பதற்குக் கோகலேக்கு நன்றி செலுத்த நாம் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறோம். இந்திய சட்டசபையில் இதைப்பற்றி இவர் நிகழ்த்திய உரையிலிருந்து, இவருக்கு எவ்வளவோ வேலைகள் இருந்தும், உடல்நிலையும் சரியாக இல்லாதிருந்தும், இப்பிரச்னையை எவ்வளவு நன்ருக இவர் பரிசீலனை செய்திருக்கிருர் என்பது தெளிவாக விளங்குகிறது.

ஒப்பந்தத் தொழிலாளர் சம்பந்தமான விஷயத்தில் இவர் தமது நேரத்தையும் கவனத்தையும் செலுத்தி வந்ததோடு (தென்னுப்பிரிக்காவில்) நமக்கிருந்த பல இன்னல்கள் சம்பந்தமாகவும் உன்னிப்பாகக் கவனித்து, நமது சத்தியாக்கிரகப் போராட்டத்திற்கும் சிறந்த உதவி செய்து வந்தார். இந்நாட்டுக்குத் (தென்னுப்பிரிக்காவுக்கு) தாமே நேரில் வந்து இங்கிருக்கும் நிலைமையை நேரில் அறிந்துகொள்ளும் அளவிற்கு நம்மிடை அனுதாபம் கொண்டிருந்தார்.

தமது வாழ்நாள் முழுவதையுமே தாய்நாட்டுக்குத் தத்தஞ் செய்துவிட்ட கோகலேக்குள்ள ஞானத்தையும் பிரகாசத்தையும் நாம் எல்லோருமே அடைந்துவிடுவதென்பது சாத்தியமல்லாததாக இருக்கலாம். ஆனல், தம் வேலைகள் சம்பந்தமாக இவர் செய்ததைப்போலவே, நாம் மேற்கொள்ளும் பணிகளில் நாம் முற்றிலும் ஈடுபடுவதென்பது சாத்தியமானதே. தம்முடையதாக்கிக் கொண்டுவிட்ட லட்சியங்களில் கோகலே முற்றிலும் ஈடுபட்டிருந்தார். நாடு முழுதும், அதன் நண்பர்களும் இவரைப் போற்றுவதற்கு இதுதான் காரணம். இவருடைய வரலாற்றைப்பற்றிய இச்சிறு குறிப்பைப் படித்தபிறகு, இவர் நீண்டகாலம் வாழவேண்டும், நம் உள்ளங்களில் இவர் விட்டுச் செல்லும் எண்ணங்கள் என்றும் மங்காமல் இருக்கவேண்டும் என நாம் எல்லோரும் விரும்புவோமாக!

# 7

# "என் வாழ்வில் கோகலே பெற்ற இடம்"

1921 ஜூலை 13-ஆந் தேதி வெளியான, 'எங் இந்தியா' இதழில் மகாத்மா காந்தி கோகலேயைக் குறித்து எழுதியிருந்தார். தாம் எழுதியிருக்கும் 'தென்னுப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூலில் 7-ஆம் அத்தியாயம் 170-ஆம் பக்கத்தில் காந்திஜி இக்கட்டுரையைப்பற்றிக் குறிப்பிடுகிருர். எனவே, இக்கட்டுரை கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

"விசித்திரமான ஊர் பெயர் இராத கடிதம் ஒன்று எனக்கு வந்திருக்கிறது. லோகமான்யரின் உள்ளத்திற்கு இனியதான லட்சியத்திற்காகப் பாடுபட நான் முன்வந்திருப்பது குறித்து அக்கடிதம் என்னைப் பாராட்டுவதோடு, அவருடைய ஆவி என்னுள்ளிருந்து வருகிறது என்றும், அவரைப் பின்பற்றத் தகுதியுடையவன் நான் என்பதை நிரூபிக்க வேண்டும் என்றும் கூறுகிறது. சுயராஜ்ய வேலைத் திட்டத்தை நிறைவேற்றுவதிலுள்ள கஷ்டங்களுக்காகச் சோர்வை அடைந்துவிட வேண்டாம் என்று அக்கடிதம் எனக்குப் புத்திமதி சொல்லுவதோடு, ராஜீயத்தில் கோகலேயின் சீடன் என்று கூறிக்கொண்டு நான் வேஷம் போடுவதாகவும் அது என் மீது குற்றஞ்சாட்டி முடிக்கிறது. கடிதம் எழுதுகிறவர்கள் ஊர், பெயர் குறிப்பிடாமல் எழுதும் அடிமைப் பழக்கத்தை விட்டொழிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். சுயராஜ்ய உணர்ச்சியை விருத்தி செய்து கொண்டிருக்கும் நாம், நம் மனத்தில் உள்ளதைப் பயமின்றிப் பேசும் தைரியத்தையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். கடிதத்தில் கண்ட விஷயம் பொது முக்கியத்துவம் வாய்ந்ததாகையால் அதற்குப் பதில் சொல்ல வேண்டியதாகிறது. காலஞ்சென்ற லோகமான்யரைப் பின்பற்றுபவன் என்ற மதிப்புக்குரியவனுக நான் கூறிக்கொள்ள முடியாது. அவருடைய அசைக்க முடியாத உறுதிக்கும், அவருடைய பரந்த கல்வி அறிவுக்கும், அவருடைய சிறந்த தேச பக்திக்கும், எல்லாவற்றையும்விட அவருடைய தனிப்பட்ட வாழ்க்கையின் தூய்மைக்காகவும், தியாகத்திற்காகவும் கோடிக்கணக்காக அவருடைய நாட்டு மக்கள் அவரைப் போற்றுவதைப் போலவே நானும் அவரைப் போற்றுகிறேன். இக்கால மனிதர் எல்லோரையும்விட அவர் மக்களின் மனத்தை அதிகமாகக் கவர்ந்தார். நமக்குச் சுயராஜ்ய உணர்ச்சியை உண்டாக்கினுர்-

இப்பொழுதுள்ள அரசாங்க ஆட்சி முறையிலுள்ள தீமைகளைத் திலகரைப்போலவேறு யாரும் அவ்வளவு அதிகமாக உணர்ந் திருக்க முடியாது. அவருடைய சிறந்த சீடர்களைப் போலவே நானும், உண்மையாக நாட்டிற்கு அவர் செய்தியைப் பரப்பியும் வருகிறேன் என்பதைப் பணிவுடன் சொல்லிக்கொள்ளுகிறேன். ஆனால், திலகர் முறையல்ல என் முறை என்பதை நான் மனமார அறிவேன். இதனாலேயே மகாராஷ்டிரத் தலைவர்கள் சிலருடன் எனக்கு இன்னும் சங்கடங்கள் இருந்து வருகின்றன. ஆனால், என் முறையில் திலகருக்கு நம்பிக்கை இல்லை என்று நான் உண் மையாகவே எண்ணுகிறேன். அவருடைய நம்பிக்கைக்குப் பாத் திரனாயிருக்கும் பாக்கியத்தையும் பெற்றிருந்தேன். அவர் உயிர் துறப்பதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்னாலேயே, பல நண்பர் களின் முன்னிலையில் அவர் கடைசியாக என்னிடம் கூறினார். மக்கள் அதை மேற்கொள்ளும்படிச் செய்துவிட்டால், என் னுடைய முறை மிகச் சிறந்த முறையே என்று அவர் சொன்னார். என்றாலும், தமக்குச் சந்தேகங்கள் இருக்கின்றன என்றார். எனக்கு வேறு முறை எதுவும் தெரியாது. நாடு அகிம்சை, ஒத் துழையாமைக் கொள்கையையே ஏற்றுக்கொண்டிருக்கிறதென் பதை, முடிவான சோதனை ஏற்படும்போது நிரூபிக்கும் என்று நான் நம்பிக்கொண்டிருக்கவே முடியும். எனக்குள்ள மற்றக் குறை பாடுகளையும் நான் அறியாமல் இல்லை. சிறந்த படிப்பாளி என்று நான் கூறிக்கொள்ளுவதற்கில்லை. மக்களைத் திரட்டுவதில் அவருக் குள்ள சக்தி எனக்குக் கிடையாது. நடத்திச் செல்வதற்குக் கட்டுப்பாடான சிறு கட்சியும் எனக்கு இல்லை. நான் நாடு கடந்து இருபத்து மூன்று ஆண்டுகள் இருந்துவிட்டதால், இந்தியாவைப் பற்றி லோகமான்யருக்கு இருந்த அனுபவம் எனக்கும் உண்டு என்பதற்குமில்லை. இரு விஷயங்கள் மாத்திரம், முழு அளவும் எங் களிருவருக்கும் ஒரே மாதிரியாக அமைந்திருந்தன. நாட்டுப் பற்றும், சுயராஜ்யத்திற்காக உறுதியாகப் பாடுபடுவதுமே அவை. ஆகையால், ஊர், பெயர் குறிப்பிடாது கடிதம் எழுதிய வருக்கு நான் ஒன்று உறுதி கூறுவேன்: காலஞ்சென்ற பெரியா ரிடத்தில் மதிப்புக் கொண்டிருப்பதில் நான் யாருக்கும் சளைத்தவன் அல்ல. சுயராஜ்யத்தை நாடி லோகமான்யரின் தேர்ந்த சீடருக்குச் சமமாகவே நானும் செல்வேன். சீக்கிரத்தில் இந்தியா சுயராஜ்யம் அடையும்படி செய்வது ஒன்றே அவர் ஏற்றுக்கொள்ளக்கூடியது என்பதையும் அறிவேன். இதைத் தவிர வேறு எதுவுமே அவருடைய ஆன்மாவுக்குச் சாந்தியை அளிக்காது.

எனினும் சீடனுக இருப்பது என்பது ஒருவருடைய புனித மான சொந்த விஷயம். 1888–இல் தாதாபாயின் பாதங்களில் விழுந்தேன். ஆனல், எனக்கு வெகு தொலேவிலேயே அவர் இருப் பதாக எனக்குத் தோன்றியது. நான் அவருக்கு மகனுக இருக்க முடியும். ஆனல், சீடனுக முடியாது. மகனுக இருப்பதைவிட மேலானது சீடனுக இருப்பது. சீடனுக இருப்பது இரண்டா வது பிறப்பு. வலியச் சரணடைவதே அது. 1896–இல் என்னு டைய தென்னுப்பிரிக்க தூது சம்பந்தமாக இந்தியாவில் தெரிந் திருந்த எல்லா இந்தியத் தலேவர்களேயுமே கண்டேன். நீதிபதி ரானடே என் மனத்தில் பயத்தோடு கூடிய பக்தியை உண்டாக் கினுர். அவர் முன்னிலேயில் பேசவும் என்னுல் முடிவதில்லே. பத்ருத்தீன் தயாப்ஜி எனக்குத் தந்தையைப்போல் விளங்கிய தோடு ரானடேயும், பிரோஜ்ஷாவும் காட்டும் வழியில் நடக்கும் படி என்னிடம் கூறினுர். பிரோஜ்ஷா போஷகரானுர். அவர் நினேத் தது நடந்தாக வேண்டும். "செப்டம்பர் 28–ஆம் தேதி நீங்கள் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசவேண்டும். குறிப்பிட்ட நேரத்திற் குச் சரியாக நீங்கள் வந்திருக்க வேண்டும்" என்ருர். அதன்படி நடந்தேன். 25–ஆம் தேதி அவரைச் சந்திக்க வேண்டும் என்று ஆக்ஞை; அப்படியே செய்தேன்.

"உமது பிரசங்கத்தை எழுதிவிட்டீரா?" என்று அவர் கேட்டார்.

" இல்லே, ஐயா."

" இளேஞரே! அது சரியல்ல, அதை இன்று எழுதி விடு வீரா? "

" முன்ஷி, ஸ்ரீ காந்தியிடம்போய் அவரிடமிருந்து கையெழுத் துப் பிரதியை வாங்கிக்கொள்ளும். இன்று இரவே அதை அச் சிட்டு ஒரு பிரதியை எனக்கு அனுப்ப வேண்டும்." என் பக்கம் திரும்பி அவர், "காந்தி, நீங்கள் நீளமான பிரசங்கத்தை எழுதக் கூடாது. பம்பாயில் பொதுக்கூட்டங்களுக்கு வருகிறவர்கள் நீண்ட பிரசங்கத்தைச் சகித்துக்கொண்டிருக்க மாட்டார்கள் என்பது உமக்குத் தெரியாது" என்ருர். நான் பணிந்தேன்.

பம்பாயின் சிங்கமான அவர் தீக்ஷை பெற்றுக்கொள்ள என்னே ஊக்கினுர். என்னே அவர் தம் சீடராகக்கொள்ளவில்லே. இதற்காக அவர் முயற்சி செய்யவும் இல்லே.

பின்னர் நான் புனவுக்குச் சென்றேன். அவ்வூருக்கு நான் முற்றிலும் புதியவன். நான் யாருடன் தங்கினேனோ அவர் என்னை முதலில் திலகரிடம் அழைத்துச் சென்றார். அவருடைய சகாக்கள் புடைசூழ இருக்க நான் அவரைச் சந்தித்தேன். நான் கூறியதைக் கேட்டுக்கொண்டு அவர் சொன்னார்: "உங்களுக்காக நாங்கள் பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். ஆனால், துரதிருஷ்டவசமாக நாங்கள் இரு கட்சிகளாக இருக்கிறோம் என்பது உங்களுக்குத் தெரியாது. எக்கட்சியையும் சேராத ஒருவரை நீங்கள் கூட்டத்திற்குத் தலைவராகக் கொள்ளவேண்டும். டாக்டர் பாண்டார்க்கரைப் பார்க்கிறீர்களா?" இதற்கு ஒப்புக் கொண்டுவந்தேன். திலகர் அன்போடு சகஜமாகப் பழகியதால் எனக்கிருந்த பயத்தைப் போக்கிவிட்டார் என்பதைத் தவிர அவரைப்பற்றி எனக்குத் தெளிவான எண்ணங்கள் எவையும் ஏற்பட்டனவாக நினைவில்லை. பின்னர், கோகலேயிடம் சென்றேன் என நினைக்கிறேன். பிறகு டாக்டர் பாண்டார்க்கரிடம் போனேன். ஆசிரியன் மாணவனை வரவேற்பதுபோல் என்னை அவர் வரவேற்றார்.

"உற்சாகமும் தீவிரமுமுள்ள இளைஞராக இருக்கிறீர். இந்த வெயில் நேரத்தில் என்னைப் பார்க்க யாரும் வருவதில்லை. இப்பொழுதெல்லாம் பொதுக்கூட்டங்களுக்கு நான் போவதில்லை. நீங்களோ, பரிதாபகரமான கதையைக் கூறுகிறீர்கள். ஆகையால் உங்கள் விஷயத்தில் என் தீர்மானத்தை நான் மாற்றிக்கொள்ள வேண்டும்" என்றார்.

முகத்தில் அறிவின் பொலிவு தோன்றும் மதிப்பிற்குரிய அந்த அறிஞரைத் தொழுதேன். ஆனால், இச்சிறு சிம்மாதனத்தில் அவர் வீற்றிருக்க ஓர் இடந் தேட என்னால் முடியவில்லை. யாரும் அமராமல் அது வெற்றிடமாகவே இருந்தது. எனக்கு வீரர்கள் பலர் இருந்தார்கள்; ஆனால் விறல் வேந்தன்தான் இல்லை.

கோகலே விஷயத்திலோ நிலைமை வேறு. ஏன் அப்படி என்று என்னால் கூற முடியாது. கல்லூரி மைதானத்தில் அவருடைய ஜாகையில் அவரைப் பார்த்தேன். ஒரு பழைய நண்பரை, அல்லது நீண்ட காலப்பிரிவுக்குப் பிறகு ஒரு தாயைத் திரும்பவும் சந்திப்பது போல இருந்தது. அவரைப் பார்த்த மாத்திரத்தில், சாந்தமான அவர் முகம் எனக்கு அமைதியைத் தந்தது. என்னைக் குறித்தும், தென்னாப்பிரிக்காவில் நான் செய்து வந்த வேலைகளைக் குறித்தும் விவரமாக அவர் விசாரித்தது, அவரை என் உள்ளத்தில் கோயில் கொள்ள வைத்தது. அவரிடமிருந்து வெளியே வந்ததும்,

'நீரே என் மனிதர்' என்று எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன். அப்பொழுதிலிருந்து கோகலே என்னை மறந்ததே இல்லை. 1901-இல் தென்னாப்பிரிக்காவிலிருந்து இரண்டாம் முறையாக நான் திரும்பியபோது நாங்கள் மேலும் நெருங்கியவர்களானோம். அவர் சாதாரணமாக என்னைத் தம் கையில் ஏற்றுக்கொண்டு என்னை உருவாக்க ஆரம்பித்தார். நான் எப்படிப் பேசுகிறேன், உடுத்துகிறேன், நடக்கிறேன், சாப்பிடுகிறேன் என்பவைகளிலெல்லாம் சிரத்தை கொண்டார். கோகலேயைவிட என் தாயாருக்கு என்னிடம் அதிகப் பரிவு இருந்ததில்லை. எனக்குத் தெரிந்தவரையில் எங்களுக்குள் எந்தவிதமான ஒளிவு, மறைவுமே இருந்ததில்லை. உண்மையில், கண்டதுமே காதல் கொண்டதைப் போன்றது இது. 1913-இல் மிகுந்த சங்கடத்தையும் இது சமாளித்து நின்றது. ராஜீய ஊழியன் என்ற முறையில் அவரிடம் நான் எதிர்பார்த்த பளிங்குபோன்ற தூய்மை, ஆட்டுக்குட்டிக்குரிய அடக்கம், சிங்கத்தைப் போன்ற வீரம், சிறு பிழைக்கும் நாணும் தன்மை இவை எல்லாம் அவரிடம் இருந்தன எனத் தோன்றியது. இவைகளில் எதைப் போன்றதும் அவரிடம் இல்லாமல் இருந்தாலும் குற்றம் காண்பதற்கு எந்தக் குறைபாட்டையும் நான் அவரிடம் காண முடியாமல் இருந்ததொன்றே எனக்குப் போதும். ராஜீயத் துறையில் முற்றிலும் சரியானவராகவே எனக்கு அவர் இருந்து வந்தார். ஆகையால், எங்களுக்குள் அபிப்பிராய வேறுபாடுகளே இல்லை என்பதல்ல. சமூகப் பழக்கவழக்கங்களில், அதாவது விதவா விவாக சம்பந்தமாக 1901-ஆம் ஆண்டிலேயே நாங்கள் மாறுபட்ட கருத்துக் கொண்டிருந்தோம். மேற்கத்திய நாகரிகத்தை மதிப்பிடுவதிலும் எங்களுக்குள் கருத்து மாறுபாடு இருப்பதையும் கண்டோம். அகிம்சையில் நான் கொண்டிருந்த தீவிரமான அபிப்பிராய சம்பந்தமாகத் தமது மாறுபட்ட கருத்தை அவர் மனம் விட்டுச் சொன்னார். ஆனால், எனக்கோ அல்லது அவருக்கோ இந்தக் கருத்து வேற்றுமைகள் ஒரு பொருட்டே அல்ல. எங்களைப் பிரிக்க எதனாலும் முடியாது. இன்று அவர் உயிரோடு இருப்பின் என்ன ஆகியிருக்கும் என்று நினைப்பது தெய்வ நிந்தனைக்குச் சமமாகும். அவருக்குக் கீழ் நான் வேலை செய்துகொண்டிருப்பேன் என்பதை நான் அறிவேன். நான் அன்னாரின் ராஜீயச் சீடனாக வேஷம் போடுவதாக ஊர், பெயரில்லாத கடிதம் ஒன்று என்மீது குற்றஞ் சாட்டுவதாலேயே நான் இதை மனம் விட்டுச் சொல்லுகிறேன். அவர் இன்றில்லை என்பதற்காக அவரைப் போற்றாமல் நான் சும்மா இருந்து விட முடியுமா? அவருக்கு எதிரிடையானது

என்று இந்திய உலகம் கூறும் ஒரு கட்சியில் நான் இன்று இருந்து வருவதாகத் தோன்றுவதனாலேயே முக்கியமாகக் கோகலேக்கு என் நன்றியறிதலை நான் தெரிவித்தாக வேண்டும் என்று நினைத்தேன்.

## கோகலே பற்றிப் பேச்சு

ஸ்ரீ கோகலே தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றிருந்தபோது அவரைப் பாராட்டுவதற்காகக் கிம்பர்லியிலிருந்த இந்தியர் அவ்வூர் நகர மண்டபத்தில் அவருக்கு ஓர் உபசார விருந்து நடத்தினார்கள். *1912* அக்டோபர் *26*-ஆம் தேதி நடந்த அந்த விருந்தில் காந்திஜி பேசினார். அதுவே இங்கே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

''நமது விருந்தினரை அவருடைய சகாக்களுடன் ஸ்ரீ ஓட்ஸ் தமது பெரிய சுரங்கத்திற்கு அன்போடு அழைத்துச் சென்று காட்டினார். அவர்களை மிகப் பெரிய யந்திரங்கள் இருந்த இடத்திற்கு அவர் அழைத்துச் சென்றபோது, யந்திரங்கள் எவ்வளவு பெரிய விஷயம் என்று எண்ணாமல் என்னால் இருக்கமுடியவில்லை. பெரிய யந்திரங்களின் அவசியத்தில் எனக்கு நம்பிக்கை கிடையாது என்பதை இந்த வைபவத்தில் கலந்து கொண்டிருக்கும் என் நண்பர்களில் சிலர் நன்கு அறிவார்கள். கிம்பர்லியில் வயிரங்களும் யந்திரங்களுமே இல்லாவிட்டாலும் கிம்பர்லி இருந்தாக வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ள நான் தயாராயிருக்கிறேன். லட்சோப லட்சத்திலும் வயிரங்களிலும் நம்பிக்கையுள்ளவன் அல்லன் நான் என்றாலும், இப்பொழுது வயிர மன்னர்களின் முன்னிலையில் நான் இருப்பதை உணருவதால் அவர்கள் முன்பு தலை வணங்குகிறேன். இந்த யந்திரங்களைப் பார்த்துக்கொண்டிருந்த போது என் மனத்தில் ஒரு விஷயம் பலமாகத் தோன்றியது. இந்த அற்புதமான யந்திரங்களைப் போல மனிதர்களாகிய நாம் எல்லோரும் ஒன்றுபட்டு வேலை செய்தோமானால், நாம் எவ்வளவு ஆனந்தம் நிரம்பிய குடும்பமாக இருக்க முடியும் என்று எண்ணினேன். அப்பொழுது நம்முடைய வாள்களெல்லாம் கலப்பைக் கொழுக்களாக மாறுவதோடு ஆடுகள் பக்கத்தில் சிங்கங்களும் நிச்சயமாகப் படுத்துக்கொள்ளும். இந்த யந்திரங்களின் ஒரு திருகு தளர்ந்துவிடுமானால் யந்திரம் முழுவதுமே கலகலத்துப் போய்விடும் என்பதையும் நான் உணருகிறேன். இந்த ஒப்புமையை மனிதர் வரைக்கும் பார்த்தால், ஆர்ப்பாட்டக்காரன் ஒருவன் ஒரு கூட்டத்தையே கலைத்துவிட முடியும்; ஒரு குடும்

பத்தில் இருக்கும் போக்கிரி அக்குடும்பத்தின் நற்பெயரையே அழித்துவிட முடியும் என்பதை நாம் அடிக்கடி காண்கிறோம். அதேபோல இதையே திருப்பிப் பார்த்தால், யந்திரத்தின் முக்கிய பாகம் அதன் வேலையைச் சரியாகச் செய்துகொண்டு போனால் அதற்கு ஏற்றாற்போல மற்றப் பாகங்களும் வேலை செய்கின்றன என்பதையும் காண்கிறோம்.

ஸ்ரீ கோகலே வந்திருக்கும் காரியம் தெய்விகமானது என்று நான் கருதுகிறேன். ஐரோப்பியர், இந்தியர் ஆகியோரின் பிரதிநிதிகள் எல்லோருமே கிம்பர்லியில் ஒரே வைபவத்தில் கூடும்படியான ஒரு காரியத்தை உண்டாக்குவதற்கு ஸ்ரீ கோகலே காரணராயிருந்ததற்காகப் பெருமையடைகிறேன். இத்தகைய கூட்டங்கள் மேன்மேலும் பெருகும் என்றும் நம்புகிறேன். டால்ஸ்டாயின் வாழ்க்கையையும் உபதேசங்களையும் பின்பற்றும் பணிவுள்ள மாணவன் என்ற முறையில், இத்தகைய வைபவங்களுக்கு அவசியமில்லை என்றும், ஒருவருடைய ஜீரண சக்தியைக் கெடுக்கும் வகையில் சில சமயங்களில் இவை அதிக விஷமங்களைச் செய்துவிடுகின்றன என்றும் நான் கருதுகிறேன். (சிரிப்பு); ஆனால், நான் டால்ஸ்டாயின் மாணவனாக இருந்தபோதிலும், இத்தகைய வைபவங்கள் நம்மை ஒன்று சேர்க்குமானால், நாம் ஒருவரை யொருவர் சரியாகத் தெரிந்துகொள்ளுவதற்கு உதவி செய்யுமானால், இவை சம்பந்தமாகத் தற்போதுக்காவது என் மனத்தைச் சமாதானப்படுத்திக்கொள்ளத் தயாராயிருக்கிறேன். ஓர் அழகிய தோத்திரப் பாடலின் நினைவு வருகிறது இங்கே:

'மூடுபனி அகன்று விலகுங்கால்
நன்கறிவோம் நாம் ஒருவரையொருவர்.'

இச்சந்தர்ப்பத்தில் நமக்குள் வித்தியாசங்கள் இருக்கலாம்; அறியாமை என்ற மூடுபனி விலகிவிடும்போது நாம் ஒருவரையொருவர் நன்றாக அறிந்துகொள்ளுவோம். அறியாமையாகிய அந்த மூடுபனியைப் போக்குவதற்காகவே என் நாட்டின் பெருந்தலைவர் இங்கே வந்திருக்கிறார். இந்தியா நமக்கு அளிக்கும் மிகப் பிரகாசமான ரத்தினமாகவே இவர் வந்திருக்கிறார். இவர் செய்திருப்பவைகளைப் பற்றி நான் குறிப்பிடும்போது இவருடைய உணர்ச்சியை அதிகமாகப் புண்படுத்தி விட்டவனாவேன் என்பதை நான் அறிவேன். ஆனால் இவருக்கு வருத்தம் அளிக்கக்கூடியதெனினும் நான் எனது கடமையைச் செய்தாக வேண்டியிருக்கிறது. இந்தியாவின் ராஜீய அரங்கத்தில் கோகலேயினுடைய

வாழ்க்கையைக் குறித்து என்னைப்போல அவ்வளவு எடுத்துச் சொல்லக்கூடியவர்கள் என்னைத் தவிர வேறு யாரும் இல்லை. மிகச் சொற்ப தொகை பெற்றுக்கொண்டு தமது வாழ்நாளில் இருபது ஆண்டுகளை இவர் கல்வி வளர்ச்சிக்காக அர்ப்பணஞ் செய்திருக்கிறார். செல்வத்தை இவர் அனுபவிக்க முடியுமெனினும் இன்றுகூட ஸ்ரீ கோகலே வறுமையில் வாழ்கிறார். பொது ஸ்தாபனங்களுக்கு இவர் விரும்பும்போது நூற்றுக்கணக்கான பவுன்கள் எந்த நேரத்திலும் இவருக்குக் கிடைக்கின்றன. இந்தியாவின் ஒரு வைசிராய், சாம்ராஜ்யத்தின் பாரத்தை ஐந்து ஆண்டுகளுக்குத் தம் தோள்களில் சுமக்கிறார் (லார்டு கர்ஸன் மாத்திரம் ஏழு ஆண்டுகள் அப்பதவியில் இருந்திருக்கிறார்). அப்படியிருந்தும் அவருக்கு உதவியாக எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். ஆனால், எனது நாட்டில் பிரபலமான இத் தலைவரோ, பிறர் உதவியின்றி, விருதுகள் எவையுமே இல்லாமல், சாம்ராஜ்யத்தின் பாரத்தைத் தம் தோள்களில் சுமந்துகொண் டிருக்கிறார். ஸி. ஐ. ஈ., பட்டம் பெற்றிருக்கிறார் என்பது உண்மை. ஆனால், இதைவிடச் சிறந்த விருதுக்குரியவர் இவர் என்பது என் அபிப்பிராயம். ஸ்ரீ கோகலே அதிகமாக ஆசைப்படும் விருது, தம் நாட்டு மக்களின் அன்பும், தம்முடைய மனச்சாட்சியின் சம்மதமுமேயாகும். மேனாட்டு முறையில் கல்வியைப் பெற்றிருக் கும் இந்தியருக்குப் பணிவிலும் கண்ணியமாக நடப்பதிலும் இவர் நல்ல போதனையை அளித்திருக்கிறார். (கரகோஷம்.)

# 8

# அனுபவித்த மற்றோர் அவமதிப்பு

[தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றிருந்த ஸ்ரீ கோகலேயைத் தாமும் ஸ்ரீ கால்லன்பாக்கும் ஜான்ஜிபார் வரையில் போய் வழியனுப்பிவிட்டுத் திரும்பியதாகக் காந்திஜி, 'தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகம்' என்ற நூலில் (351–ஆம் பக்கம் பார்க்கவும்) கூறுகிறார். ஆனால், ஜான்ஜிபாரிலிருந்து திரும்பியபோது வழியில் கப்பலிலிருந்து டெலகோவா விரிகுடாவில் இறங்கிய போது, தமக்கு வெள்ளை அதிகாரிகளால் ஏற்பட்ட அவமதிப்பைக் குறித்து அந்நூலில் காந்திஜி குறிப்பிடவில்லை. எனினும், 1912 டிசம்பர் 28–ஆம் தேதி பிரசுரமான 'இந்தியன் ஒப்பினியன்' குஜராத்திப் பதிப்பில் அச்சம்பவத்தைப் பற்றி விவரித்திருக்கிறார். காந்திஜி எழுதிய அக்கட்டுரையின் மொழி பெயர்ப்பே கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

கேள்வி : நீர் இந்தியரா ?

பதில் : ஆம், ஐயா.

கேள்வி : நீர் இந்தியாவில் பிறந்தவரா ?

பதில் : ஆம், ஐயா.

கேள்வி : இது சம்பந்தமாக உம்மிடம் தஸ்தாவேஜிகள் இருக்கின்றனவா ?

பதில் : இல்லை, ஐயா. நான் டிரான்ஸ்வால் கோர்ட்டு வக்கீல். ஜொஹன்னஸ்பர்க்கிற்குத் திரும்புவதற்கு ஒரு டிக்கெட்டும் வைத்திருக்கிறேன். அங்கே போக இன்றே புறப்படவேண்டும்.

அதிகாரி : அது விஷயமல்ல ; உட்காரும். உம்மைப் பிறகு பார்க்கிறேன்.

மேற்கண்ட கேள்விகளைக் குடியேற்ற அதிகாரி அவமதிக்கும் தொனியில் எனக்குப் போட்டார். ஜான்ஜிபார் வரையில் ஸ்ரீ கோகலேயை வழியனுப்பிவிட்டு நாங்கள் திரும்பிக்கொண்டிருந்தோம். நேரமாகாதிருக்கட்டும் என்பதற்காகப் பெய்ராவில் கப்பல் மாறினோம். எங்களைப்போல டெலகோவா விரிகுடாவில் இறங்கச் சுமார் அறுபது டெக் பிரயாணிகள் இருந்தனர். சோதித்துவிட்டுக் குடியேற்ற அதிகாரி அவர்களையெல்லாம் இறங்க அனுமதித்துவிட்டார். ஜொஹன்னஸ்பர்க்குக்கு ரெயில் மூலம் போகவிரும்பிய பிரயாணிகளையும் சோதித்து அனுமதித்து விட்டார்.

எங்களுடனிருந்த பிரயாணிகளில் பலர் கிரேக்கர்கள் ; அவர்கள் ஏழைகள். அவர்களைச் சோதித்தபோது நானும் உடனிருந்தேன். சோதித்து முடியச் சுமார் ஒன்றரை மணி நேரமாயிற்று. அவர்களுடைய பெயர், இருக்கும் இடம், தொழில் முதலியவைகளைக் குறித்துக் கேட்ட பிறகு, அவர்கள் இறங்குவதற்கு அதிகாரி அனுமதிச்சீட்டுக் கொடுத்தார். அவர்களில் ஜொஹன்னஸ்பர்க்கிற்கும் போக விரும்பியவர்கள் பலர். அவர்களிடம் சில தஸ்தாவேஜிகளிருந்ததாகத் தோன்றியது. தங்களிடம் சுமார் இருபது பவுன் இருப்பதாகவும் அவர்களில் பலர் தெரிவித்தனர். என்னைச் சோதிக்கவேண்டிய கட்டம் வந்தபோது அந்த அதிகாரி நான் மேலே குறிப்பிட்ட வகையில் கேள்வி கேட்டார்.

எனக்குப் பிறகு ஸ்ரீ கால்லன்பாக்கை அழைத்தார். "உங்களிடம் ஏதாவது தஸ்தாவேஜி இருக்கிறதா?" என்று அதிகாரி அவரைக் கேட்டதற்கு, அவர் தம்மிடம் எதுவுமில்லை என்ருர். அதோடு என்னை அதிகாரிக்கு அறிமுகப்படுத்தி நாங்கள் இருவரும் ஸ்ரீ கோகலேயை வழியனுப்ப ஜான்ஜிபார் வரையில் சென்றதாகவும் சொன்னர். என்னைப்பற்றி அவர் கூறியதை அதிகாரி காதில் வாங்கிக்கொள்ளவும் இல்லை என்பதைக் கவனித்தேன். "அவர் விஷயத்தைப் பிறகு பார்க்கிறேன். அவருக்கு அனுமதிச்சீட்டுக் கொடுக்க முடியாது. அவர் ஓர் இந்தியர்" என்று சொன்னர். ஸ்ரீ கால்லன்பாக் உதட்டைக் கடித்துக்கொண்டார். இதைப் பெரிய அவமதிப்பாகக் கருதினர். தமக்கு மாத்திரம் வெகு சுலபத்தில் அனுமதிச் சீட்டு கிடைத்துவிட்டது என்பது அவருக்கு அதிக மனவேதனையை உண்டாக்கியது. என்னை வீட்டுவிட்டு அவர் மாத்திரம் எப்படி கப்பலிலிருந்து இறங்குவார்? அது முடியாத காரியம். தம்முடைய அனுமதிச்சீட்டைப் பெற்றுக்கொள்ளவும் வெட்கப்பட்டார். கோபத்தோடு அதை வாங்கிக்கொண்ட போதுகூட, அதிகாரிக்கு நன்ருகக் காதில் விழும்படி என்னிடம், "பாருங்கள், நீங்கள் ஆசியாக்காரர்! உங்களுக்குக் கறுப்புத்தோல் இருக்கிறது! நீங்கள் இங்கே தடுத்துவைக்கப்பட்டிருக்கவேண்டும்" என்ருர். இதற்கெல்லாம் நான் சிரித்துக்கொண்டே இருந்தேன். ஆனல், என் உள்ளமோ தகித்துக் கொண்டிருந்தது. ஏன்? நானே இந்தியன். அதிகாரிக்கு என்ன அகம்பாவம்? வெள்ளைக்காரர்களால் இந்தியருக்கு இன்னும் எவ்வளவு அவமதிப்பு வரும்? எவ்வளவு துரதிருஷ்டசாலிகள் நாம்?

இதில் வெள்ளையரின் தவறு எவ்வளவு? அதிகாரி என்ன செய்யமுடியும்? நமது வாழ்க்கை முறையையும் ஒழுக்கத்தையும் கொண்டு வெள்ளைக்காரர்கள் என்ன கருத்தைக் கொள்ளுகின்றனரோ அதற்கேற்றபடி நாம் வெற்றியோ, தோல்வியோ அடையவேண்டும். இன்று நாம் துன்பப்படலாம்; ஆனல், நாளை வெற்றியை அடைவோம். தென்னுப்பிரிக்காவிலிருக்கும் இந்தியரை ஏன் குறைகூற வேண்டும்? அதே இந்தியாவைச் சேர்ந்தவர்கள் அல்லவா அவர்களும்? அப்படியானல், என் கடமை என்ன? நான் கோபங்கொண்டு அதிகாரி மீது குற்றஞ் சொல்லலாமா? கூடவே கூடாது. அதிகார வர்க்கம் குருட்டுத்தனமாக இருக்கிறது. அப்படியாயின் நான் சும்மா இருந்துவிடலாமா? கூடாது; இந்த விஷயம் நடந்துவிடாமலிருப்பதற்கு நான் முயற்சி செய்யவேண்டும். அதை நான் எப்படி செய்வது? இதில் என் கடமையை நான் செய்தாகவேண்டும். என் நன்மையை மாத்திரமே நான் கவனித்துக்கொண்டிருக்கக் கூடாது. தங்கள் நிலையை ஒழுங்குபடுத்திக்கொள்ள என் இந்திய சகோதரர்களுக்கு நான் ஓர் உதாரணமாக நடந்து கொள்ளவேண்டும். சுகாதாரத்திற்கு விரோதமான தங்கள் பழக்கங்கள் தங்களுக்கே விரோதமாகிவிடுகின்றன என்பதை அவர்கள் அறியும்படி செய்யவேண்டும். டெக்கில் நானும் அவர்களுடனிருக்கும் ஒரு பிரயாணி என்ற முறையில், சுயமரியாதையை அறிந்து அதைப் பேணும்படி அவர்களை நான் கேட்டுக் கொள்ளவேண்டும். சுத்தமற்ற பழக்கங்களை அவர்கள் விட்டுவிடவேண்டும். மற்றவர்கள் மதிப்பில் அவர்கள் உயர்வார்கள். எளிதான – வெகுளியான – வெள்ளையரின் சட்டத்தை மதிப்பதோடு, அநியாயமான நிறவேற்றுமைச் சட்டங்களைப் பொறுமையாகவும் தீரத்தோடும் எதிர்த்துப் போராடவேண்டும்.

கடைசியான இந்த அனுபவத்திற்குப் பிறகு, அந்தஸ்திலுள்ளவர்கள் முடிந்தவரையில் டெக்கிலேயே பிரயாணம் செய்வதென்ற முடிவுக்கு வந்துவிடவேண்டும். இது ஒன்றே உண்மையான நிலைமையை அறிந்துகொள்ளச் செய்யும். இவ்வழியில் கஷ்டத்திலிருப்பவர்களுக்கு அவர்கள் உதவி செய்யலாம். நான் செய்யவேண்டியது என்ன என்பதை உணர்ந்தேன். இவ்வித யோசனைகளெல்லாம் என் மூளையில் சில நிமிடங்களே இருந்தன.

இவ்விதக் கனவு நிலையிலேயே பிறகு நான் உட்கார்ந்தேன். ஸ்ரீ கால்லன்பாக் அமைதியின்றி முன்னுக்கும் பின்

னுக்குமாக நடந்துகொண்டே இருந்தார். கூண்டில் அடைபட்ட சிங்கம்போல் அவர் தோன்றினர். எங்களை வரவேற்கத் துறை முகத்தில் சில இந்தியர் இருந்தனர். என்னைப்பற்றி அவர் களுக்கு ஸ்ரீ கால்லன்பாக் அறிவித்தார். நான் இறங்கு வதற்கு முந்திய நாளே தாங்கள் ஏற்பாடு செய்திருந்ததாக அவர்கள் என்னிடம் கூறினர். எனக்கு அனுமதிச்சீட்டைக் கொண்டு வரப்போனவர் எந்த நேரத்திலும் வந்துவிடக் கூடும். என்றாலும், திரும்பவும் யாரையாவது அனுப்புவதாக வும் கூறினர். இத்தகவலை ஸ்ரீ கால்லன்பாக் எனக்குக் கொண்டு வந்தார். அதற்கு மேலும் காத்துக்கொண்டிருக்க அவருக்குப் பொறுமையில்லை; திரும்பவும் அதிகாரியைப் பார்க்கச் சென்றார். ஆனால், தாம் எதுவும் செய்வதற்கில்லை என்று அதிகாரி பதில் சொல்லிவிட்டார். மீதமிருந்தவர்களைப் பற்றியெல்லாம் கவனித்துவிட்டு அதிகாரி போய்விட்டார். என் விஷயத்தைக் கவனிக்க இன்னும் நேரமாகும் என்றும் சொல்லி விட்டுப் போனார். அதிகாரிகள் போய்விட்ட கொஞ்ச நேரத்திற் கெல்லாம் டெலகோவா விரிகுடா இந்தியரின் முயற்சி பயன் பட்டுவிட்டது. என் அனுமதிச் சீட்டைக்கொண்டு வந்து விட் டார். அது அதிகாரியின் குமாஸ்தாவுக்குக் காட்டப்பட்டது. பிறகு நான் கப்பலிலிருந்து இறங்க அனுமதிச் சீட்டைக் கொடுத்தார்கள். ஸ்ரீ கால்லன்பாக்கும் நானும் இறங்கினோம். இந்திய சமூகத்தினர் எங்களுக்கு ஒரு வரவேற்பை அளித்த பிறகு அன்று மாலையே ஜோஹன்னஸ்பர்க்குக்குப் புறப்பட்டு விட்டோம்.

மேற்கண்ட சம்பவம் எனக்கு ஒரு நல்ல பாடமாயிற்று. நிலைமை எப்படி இருக்கிறது என்பதை வாசகர்கள் அறிந்து அதன் மூலம் பயனடைய வேண்டும் என்பதற்காகவே இதை 'இந்தியன் ஒப்பினியன்' வாசகர்களுக்கு அறிவிக்கிறேன். இத் தகைய அனுபவம் அவர்களுக்கும் புதியதல்ல. ஆகையால் மேற் கொண்டும் அதிகமாகக் கூறிக்கொண்டிருக்க நான் விரும்ப வில்லை. டெலகோவாவிலும் மற்றத் துறைமுகங்களிலும் இந்தியர் இத்தகைய, இன்னும் அதிகக் கசப்பான அனுபவங்களை அடைய நேருகிறது என்பதை அறிவேன். இக்கஷ்டங்களை நான் அறிந்தது எனக்கு மேலும் அதிக துக்கத்தை உண் டாக்கியது; இதுவே என் அனுபவத்தைக் கூறும்படியும் தூண் டியது. நான் படித்தவனாகக் கருதப்படுவேன்; கஷ்டங்களிலும் சமாளித்துக்கொள்ளுவேன்; பல ஐரோப்பியருக்கு என்னைத்

தெரிந்திருக்கும்; பெரிய மனிதனைகவும் கருதப்படுவேன்; எனக்கு உதவி செய்யப் பலர் முன் வருவார்கள்; அப்பொழுதுங் கூட நிறவேற்றுமையின் இத்துன்பத்தை அனுபவித்தே நானும் வெளிவர வேண்டும். "ஒன்றும் தெரியாத, படிப்பில்லாத, உதவியற்ற இந்தியரின் கதி என்ன?" என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

என்னுடன் டெக்கில் பிரயாணஞ் செய்த ஓர் இந்தியர் தம் மனத்தில் இருந்ததை என்னிடம் கூறினர். நாம் எறும்புகள் போல நடத்தப்படுவதாகவும், கஷ்டங்களிலிருந்து விடுபடுவதற்குத் துன்பப்படுவது ஒன்றே வழி என்றும் அவர் கூறினர். இதை அறியாமை என்றே சொல்லுவேன். நமது தன்மானத்தை எப்படிக் காத்துக்கொள்ளுவது என்பது நமக்குத் தெரியவில்லை. செல்வத்தைத் திரட்டிவிட வேண்டும் என்பதொன்றே நம் குறியாக இருக்கிறது. இம்முயற்சியில் ஈடுபட்டுவிடுவதால் வெள்ளையர் நம்மைக் கூலிகள் என்று அழைப்பது குறித்தோ, கப்பல்களில் காப்டன்களும் மற்றவர்களும் நம்மை உதைத்துத் தள்ளுவதுபற்றியோ, முனிசிபாலிடிகள் தனி இடத்திற்கு நம்மை விரட்டியடிப்பது குறித்தோ, நமக்கு நிலமில்லாமல், நம்மை நாய்களைப் போல நடத்துவதைக் கண்டோ நாம் கவலைப்பட்டுக் கொள்ளுவதில்லை. இதுவே சாதாரணமாக நமக்கு இருந்துவரும் மனப்போக்கு. இதனாலேயே வெள்ளையர் நம்மை இழிவாக மதிக்கின்றனர். ஆனால், நம் விதியை நிர்மாணித்துக்கொள்ளும் சிற்பிகள் நாமே என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. மேலே கண்ட சம்பவத்திலிருந்து நாம் கற்றுக்கொள்ளவேண்டிய பாடம் இதுவே. இதை அறிந்துகொண்டு அவசியமான மாறுதல்களை நம் வாழ்க்கையில் புகுத்திக்கொள்ளவேண்டும். மாறுதல் இரண்டு வகையில் இருக்கவேண்டும். முதலாவது, நமது நிலையை உயர்த்திக்கொள்ளவேண்டும்; இரண்டாவதாக, நாம் ஒன்றுபட்டு வெள்ளையரிடம் நீதியை வற்புறுத்திக் கேட்டாக வேண்டும்.

# 9

# போனிக்ஸ் குடியிருப்புத் திட்டம்

[போனிக்ஸ் குடியேற்ற சம்பந்தமாகவும், அதுவும் 'இந்தியன் ஒப்பீனியன்' பத்திரிகையையும் எந்தத் தியாகம் செய்தும் நடத்தியாக வேண்டும் என்பதிலும் காந்திஜி எவ்வளவு சிரத்தை கொண்டிருந்தார் என்பதை ஸ்ரீ போலக்குக்கும், ஸ்ரீ மகன்லால் காந்திக்கும் எழுதிய கடிதங்கள் காட்டுகின்றன. போனிக்ஸ் குடியேற்ற சம்பந்தமாக ஆரம்பத்திலேயே காந்திஜி ஒரு திட்டம் வகுத்திருந்தார். போனிக்ஸுக்கு மாற்றப்பட்டதும் முதன் முதலில் வெளியான 'இந்தியன் ஒப்பீனியன்' இதழில் கண்ட தலையங்கம் அத்திட்டத்தைக் காட்டுகிறது. எனவே, அத்தலையங்கம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.]

'இந்தியன் ஒப்பீனியன்' ஆரம்பமாகிப் பதினெட்டு மாதங்களே ஆகின்றன. அதன், இக்குறுகிய கால வாழ்வில் அது மூன்றாவது கட்டத்தை இன்று ஆரம்பிக்கிறது. அதன் சொந்தக்காரர், தேசாபிமான நோக்கத்தின்பேரில் சொற்ப வசதிகளைக் கொண்டு அதை ஆரம்பித்தார். அப்பத்திரிகைக்கு எழுதி, ஆசிரியராக இருப்பதற்கு வலிய ஊதியமின்றி வருபவரையே நம்பியிருக்கவேண்டிய நிலையில் அது இருக்கிறது. இந்த உதவி அவருக்குத் தட்டின்றிக் கிடைத்தது. பொதுவான அச்சுக்கூலி மூலம் கிடைக்கும் பணத்தை, பத்திரிகைக்கு எதிர்பாராதவிதமாக ஏற்படும் நஷ்டத்தை ஈடுசெய்ய உபயோகித்து, இப்பத்திரிகை தனக்குத்தானே நடந்துவருவதாக இருக்கும்படி செய்யவேண்டும் என்பது அவர் எண்ணம். ஆனால், அப்படி முடியவில்லை. உண்மையான தேவையை இப்பத்திரிகை பூர்த்தி செய்தபோதிலும், வர்த்தகத் தேவை என்பதான ஒன்றை உண்டாக்கவேண்டியதாகிறது. அதாவது, இப்பத்திரிகைக்குச் சமாசாரங்களைத் தேடவேண்டியிருப்பதோடு படிப்போரையும் தேடியாக வேண்டியிருக்கிறது. மேலும், 500-க்கும் மேற்பட்ட பிரதிகளை இனாம் பிரதிகளாக அனுப்பிக்கொண்டிருக்க வேண்டியிருப்பதும் கஷ்டமாக இருக்கிறது. ஆகையால், பொருளுதவியைக் கோரவேண்டியதாகிறது. நேட்டால் இந்தியர் காங்கிரஸும் (டிரான்ஸ்வால்) பிரிட்டிஷ் இந்தியர் சங்கமும் உதவிக்கு வந்தன. இனாம் பிரதிகளை அச்சிட்டுத் தபாலில் அனுப்புவதற்காகும் செலவுக்கென்று ஒரு தொகையைக் கொடுப்பதென அவை தீர்மானித்தன.

என்றாலும், இப்பத்திரிகை அகப்பட்டதையெல்லாம் விழுங்கிக்கொண்டிருப்பதோடு மேற்கொண்டும் இதற்கு வேண்டியிருக்கிறது. தீரமான நடவடிக்கைகளினாலேயே நிலைமையைச் சமாளிக்க முடியும். எந்த ஒட்டு வேலையும் பயனில்லை. நோயைக் குணப்படுத்தாமல் சமாதானம் கூறிக்கொண்டிருப்பது ஆபத்தானது. அப்படியானால், ஒரு புதிய, புரட்சிகரமான வேலைத் திட்டத்தை அனுசரிக்கும்படி உண்மையான ஊழியர்களுக்கும் நண்பர்களுக்கும் வேண்டுகோள் வெளியிடும் வழி ஒன்றே மீதமாக இருக்கிறது. இப்பொழுது இருப்பதை அவர்கள் கவனிக்கக்கூடாது; எதிர்காலத்தையே பார்க்கவேண்டும். தங்கள் சட்டைப் பைகளைப் பாராது பத்திரிகையைக் கவனிக்கவேண்டும். ஏன் செய்யக்கூடாது? 'இந்தியன் ஒப்பினிய'னின் நோக்கம், மன்னர் எட்வர்டின் ஐரோப்பிய இந்தியப் பிரஜைகளை நெருக்கத்திற்குக் கொண்டுவருவதே; தப்பான கருத்துக்களுக்கான காரணத்தைப் போக்குவதற்கான பொதுஜன அபிப்பிராயத்தை வளர்த்து, இந்தியருக்கு அவர்களுடைய குறைகளை எடுத்துக் கூறி, தங்கள் உரிமைகளைப் பெற வற்புறுத்திக்கொண்டிருக்கும் அதே சமயத்தில் அவர்களுக்குத் தங்களுடைய கடமை வழியையும் கூறுவதே இதன் வேலை. இது உயர்ந்த, புனிதமான லட்சியம். ஆகையால், இதற்காக யாரும் தன்னலமற்ற சேவை செய்யலாம். எனவே, புதிய திட்டத்தை ஏற்றுக்கொண்டு அதில் சேர்ந்த ஊழியர்களை அது கேட்டுக்கொள்ளுவது இதுவே.

சுருக்கமாகத் திட்டம் இதுவே: போதுமான அளவு பெரிதாய் பட்டணத்தின் சந்தடிக்குத் தொலைவில் யந்திரம் முதலியவைகளை வைப்பதற்கு இடம் கிடைக்குமானால், ஒவ்வோர் ஊழியருக்கும் அவர் வசிப்பதற்கு வேண்டிய இடம் கிடைக்கும். அதிகச் செலவு இல்லாமல் ஆரோக்கியமாகவும் சுகாதாரத்தோடும் வசிப்பதற்குள்ள பிரச்னையை இது தீர்த்துவிடும்.

ஊழியர்கள், அவசியமான செல்வுகளுக்கு வேண்டியதை மாதந்தோறும் முன் பணமாகப் பெறுவார்கள். பிறகு ஆண்டு முடிவில் லாபத்தைத் தங்களுக்குள் பிரித்துக்கொள்ளலாம். வாரத்திற்கு வாரம் பணம் தேடியாக வேண்டிய அவசியமும் நிர்வாகத்தினருக்கு இல்லாது போகும். தங்கள் நிலத்தைத் தாங்களே அடக்க விலைக்கு வாங்கிக்கொள்ளும் வசதியும் ஊழியருக்கு இருக்கும். (நிலத்தை விற்கும் இந்த யோசனை

பின்னல் கைவிடப்பட்டது) இத்தகைய நிலைமையில், நேட்டாலுக்குத் தோட்டக் குடியேற்றம் என்ற பெயரை அளித்திருப்பதைப் போன்ற அழகான சூழ்நிலையில் வசிப்பதால், அதிக எளிமையான இயற்கை வாழ்வை ஊழியர்கள் நடத்த முடிவதோடு ரஸ்கின், டால்ஸ்டாய் கருத்துக்களும், கண்டிப்பான வியாபாரக் கொள்கைகளும் அடங்கிய வாழ்க்கையும் நடத்த முடியும். இல்லாவிடில் ஊழியர்கள் விரும்பினல் செய்கைமுறையில் பட்டணவாசத்தையும் அங்கே உண்டாக்கிக்கொள்ளலாம். இந்தத் திட்டத்தின் தன்மையும், சூழ்நிலையும் அவர்களுக்குப் போதனையை அளிப்பவையாக இருக்கும் என்றும் நம்பலாம். ஐரோப்பிய, இந்தியத் தொழிலாளரிடையே நெருங்கிய சகோதரத்துவ ஒற்றுமையும் ஏற்படும். அன்ருட வேலை நேரம் குறைக்கப்படுவதற்கும் சாத்தியம் உண்டு. ஒவ்வொருவரும் அவரவரின் விவசாயி ஆகிவிட வேண்டும். தென்னுப்பிரிக்காவிலுள்ள ஆங்கிலேயர்கள் நிலத்தில் விவசாயம் செய்யமாட்டார்கள்; தங்கள் கைகளால் வேலை செய்யமாட்டார்கள் என்றிருப்பதை ஆங்கிலேய ஊழியர்கள் பொய்யாக்கிவிட வேண்டும். எந்தவிதமான குறைபாடுகளுமின்றி அத்தகைய வேலை செய்ய அவருக்கு இங்கே எல்லா வசதிகளும் உண்டு. இந்திய ஊழியர், தனது ஐரோப்பிய சகோதரரைப் பின்பற்றி மோசமான லாபத்திற்காக இடைவிடாது அடிமையாக உழைப்பதைவிட தேகாரோக்கியத்தை அளிக்கும் விளையாட்டுக்களின் அவசியத்தையும் கௌரவத்தையும் அறியலாம்.

எல்லோருக்கும் ஊக்கம் மும்மடங்காகும். 'இந்தியன் ஒப்பினியன்' வகையில் வேலை செய்ய உகந்தது; வசிப்பதற்கு ஆரோக்கியமான சூழ்நிலை. அதோடு அதிக சாதகமான முறையில் நிலம் சொந்தமாவதற்கு வசதியும் உண்டு. இத்திட்டத்தில் ஈடுபட நேரிடையான அக்கறையும் உண்டு.

பொதுவாக விவாதிக்கப்பட்டது இதுவே. இது காரியத்தில் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. வடக்குக் கடலோர ரெயில் பாதையில் (டர்பனுக்கு 12 மைல்) போனிக்ஸ் ஸ்டேஷனுக்கு அருகில் ஒரு பெரிய நிலத்திற்கு (100 ஏக்கர்) அச்சகம் மாற்றப்பட்டிருக்கிறது. இத்திட்டத்தின்படி இப்பொழுதே ஆங்கிலேயரும் இந்தியரும் இங்கே வேலை செய்து வருகின்றனர். பலனைக் குறித்து இதற்குள் சொல்லிவிட முடியாது. இது தைரியமான ஒரு சோதனை; முக்கியமான விளைவுகளை உண்

டாக்கக் கூடியது. மேற்கண்ட முறைகளில் நடத்தப்பட்ட மத சம்பந்தமில்லாத ஒரு ஸ்தாபனத்தையோ அல்லது அது நிர்வகிக்கப்பட்டதையோ நாம் அறிவோம். இது வெற்றியடைந்தால் இதே போலச் செய்வதற்கு ஏற்றது இது என்றே நாம் நினைக்க வேண்டும். எந்த நபரையும் குறிப்பிடாமலேயே இதை எழுதுகிறோம்; இப்பத்திரிகையில் இருக்கும் யாரும் இதன் கீர்த்தியைத் தங்களுடையதெனக் கொள்ளவில்லை. ஆகவே, பொதுஜனங்களுக்கும் இதை அறிவித்துவிட வேண்டியதே நியாயம் என்று எண்ணுகிறோம். அவர்கள் உதவி எங்களை அதிக அளவுக்கு உற்சாகப்படுத்துவதோடு இத்திட்டம் வெற்றி பெறவும் உதவியாகும். தென்னாப்பிரிக்காவில் வசிக்கும் இரு சமூகத்தினரையும் நாம் கேட்டுக்கொள்ளுவதோடு, இத்திட்டத்திற்கு வெற்றி உண்டு என்று நாங்கள் நம்புவதால், நிர்வாகத்தினருக்கு அவர்கள் உதவி செய்வார்கள் என எதிர்பார்க்கிறோம்.

# பொருட் குறிப்பு அகரவரிசை

(எண்-பக்கத்தைக் குறிக்கும்)


ஹிந்துமதாபிமான சங்கம்
ஓம்
காரைக்குடி